ந்தானைகண்டேறுகையன்றிக்கே சிலர் தரக்கொள்ளவேணும் என்கையும், தருமவர்களும் "உங்களதான அடிமையை நீங்கள் ஸ்வீகரியுங்கோள்" என்று சீரிதாகக்கொடுக்கக் கடவர்களென்கையுமாகிற சாஸ்த்ரார்த்தத்தையும் வெளியிடுகிறது.

(கூழாளித்யாதி) இவர் அழைத்தவாசியறியாதே ப்ரயோஜநாந்தரபரரடையப் புகுரத் துடங்கிற்று; அவர்களை (க) நிஷேதிக்கிறார். "கூழாள்" என்று - சோற்றுக்காக ஆரோனுக்கும் தன்னை யெழுதிக்கொடுக்கை; இது (௨) ப்ரயோஜநாந்தரபரர்க்குமுபலக்ஷணம். தன்னை "(௩) பகவத்தாஸ்யைகபோகன்" என்னுமிடமறியாதே, ப்ரயோஜநாந்தரங்களைக்குறித்து அவன்றன்னையே (௪) ஆச்ரயிக்கிறார்களிறே. "கூழாள்" என்று - அநந்ய ப்ரயோஜநராயிழிந்து, ப்ரயோஜநாந்தரங்களை வேண்டிக்கொள்ளும் (௫) இருகரையரைச்சொல்லுகிறதென்றுமாம். "பட்டு" என்கிறது - அகப்பட்டென்றபடி. அதாவது - பந்தகமாகையாலே ஸ்வரூபவிரோதியாய் (௬) அநர்த்தத்தைப் பண்ணுமென்னுமத்தாலே சொல்லுகிறது. (நின்றீர்களை) பஹுவசநத்தாலே "உள்ளீரேல்" என்று தேடவேண்டாதே பார்த்தபார்த்தவிடமெங்கும் ப்ரயோஜநாந்தரபரராயிருக்கை. "எங்கள்குழு" என்று இத்திரளுக்குண்டான வ்யாவ்ர்த்தி தோற்றவருளிச்செயகிறார். தேஹாத்மாபிமாநிகள், தேவதாந்தரப்ரவணர், இவ்விஷயந்தன்னிலே புகுந்து ப்ரயோஜநாந்தரங்களை (௭) அபேக்ஷிப்பார், அநந்யப்ரயோஜநராய் ஸாதநாந்தரங்களிலே அந்யபரராயிருப்பாராகிற திரள்களெல்லாவற்றிலும் வ்யாவ்ர்த்தமாயன்றோ எங்கள் திரளிருப்பதென்கிறார். (புகுதலொட்டோம்) "ஆரேபுகுவார்" என்று ப்ரார்த்திக்கிற விவர், (௮) நிர்த்தயரைப்போலே "புகுரவொட்டோம்" என்பானென்னென்னில்; வஸிஷ்டன் (௯) பரமதயாளுவானாலும் சண்டாளனை அக்நிகார்யத்திலேகூட்டிக்கொள்ளானிறே. இத்தால்-அநந்யப்ரயோஜநர்க்கு ப்ரயோஜநாந்தரபரரோட்டை ஸஹவாஸம் (௧௦) அஸஹ்யமாயிருக்குமென்றதாய்த்து.

எங்கள்திரளிற்காட்டிலும் உங்கள்திரளுக்கு வாசியென்னென்னில் (ஏழாள்காலும் பழிப்பிலோம்நாங்கள்) என்கிறார். "ஏழாள்" என்று - தமக்குக்கீழே ஒருமூன்றும், மேலே ஒருமூன்றும்,

(க) நிஷேதிக்கிறார் - தடுக்கிறார். (௨) ப்ரயோஜநாந்தரபரர் - ப்ரயோஜநத்தை விரும்புமவர்கள். (௩) பகவத்தாஸ்யைகபோகன் - எம்பெருமானுக்கடிமைசெய்கையையே தொழிலாகவுடையவன். (௪) ஆச்ரயித்தல் - அடைதல். (௫) இருகரையர்-இரண்டுஉத்தேச்யத்தையுடையவர்கள். (௬) அநர்த்தம்-தீங்கு. (௭) அபேக்ஷித்தல்-விரும்புதல். (௮) நிர்த்தயர் - தயையில்லாதவர்கள். (௯) பரமதயாளு - மிக்கதயையுள்ளவன். (௧௦) அஸஹ்யம் - பொறுக்கக்கூடாமை.

தாமுமாக ஏழுபடியைச்சொல்லுகிறது. இஸ்ஸமுதாயத்தைப்பற்றி சாஸ்த்ரங்கள் "सप्त सप्त च सप्त च" "ஸப்த ஸப்த ச ஸப்த ச" என்று - இந்த ஏழையும், இதுக்குக்கீழே யோரேழையும், இதுக்குமேலேயோரேழையும்; ஆக, இருபத்தொருபடிகாலைச் சொல்லுகிறது. "दश पूर्वान् दशापरानात्मानञ्चैकविंशकं पङ्क्तिं पुनाति" "தஸ பூர்வாந் தஸாபராநாத்மாநஞ்சைகவிம்ஸதிம் பங்க்திம் புநாதி" என்று முகபேதேந சாஸ்த்ராந்தரஞ் சொல்லிற்று. "ஏழாட்காலும்" என்கிற சப்தம் இவ்வளவைநினைக்கிறது. இத்தால் - (க) ஒருஸந்தாநத்திலே ஒருவன் அநந்யப்ரயோஜநனானால், அவனைப்பற்ற, பகவத்ப்ரபாவம், ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் செல்லக் கிழும்மேலும் வெள்ளமிடுமென்கிறது. (பழிப்பிலோம்) (உ) விஷயாந்தரப்ராவண்யமென்ன, (ங) தேவதாந்தரபஜநமென்ன, இவை (ச) தூரதோநிரஸ்தமாகையாலே, பதர்கூட்டித்தூற்றவேண்டா. இனி அநந்யப்ரயோஜநராய் அநந்யஸாதநரா யிருப்பார்க்குப் பழிப்பாவது - ப்ரயோஜநாந்தரபரதையும் ஸாதநாந்தர பரதையுமிறே; அவற்றை யுடையோமல்லோமென்கிறார். (நாங்கள்) "எங்கள்குழுவு" என்றபோதைச்செருக்குப்போலே, பகவத்விஷயீகாரத்தால் வந்த செருக்குத்தோற்றச் சொல்லுகிறார்.

உங்கள் ஸ்வரூபம் நீங்கள்சொன்னவளவிலே விச்வஸித்திருக்குமத்தனை யளவுடையோமல்லோம், உங்கள் வ்ர்த்தி விசேஷத்தைக்கொண்டு உங்களையறியவேணுமென்ன; அது நீங்களறியும்புடையல்ல, எங்ஙனேயென்னில்; ஒருகார்யப்பாடாக உள்ளஅமங்களங்கள்போக மங்களாசாஸநம் பண்ணும்படியாதல், இல்லாத மங்களங்களுண்டாகவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணுதல் செய்யுமளவிறே நீங்களறிவது; முன்பு வ்ர்த்தமாய்க்கழிந்த செயலுக்கு இன்றிருந்து (ரு) வயிறுபிடிக்கும் திரள்காணெங்களது(இராக்கதர்வாழிலங்கை) துர்வர்க்கம் களித்து வர்த்திக்கும் தேசம். புறம்பேபோய் பரஹிம்ஸைபண்ணி, குளவிக்கூடுபோலே திரண்டு கடலையும் மதிளையும் அரணாக்கி, (சு) அமணக்கூத்தடிக்கும் தேசமென்கை. (இலங்கைபாழாளாக) லங்கையில்ஆள், பாழாம்படியாக. இலங்கைதான் விபீஷண (எ) விதேயமிறே. இனி, "ननर्द रावणः" "நநர்த ராவண:" என்ற ராவணனையும் அவனுடைய (அ) அதிக்ரமத்துக்குத் துணை

(க) ஒருஸந்தாநம்-ஒருவம்சம். (உ) விஷயாந்தரம்-ஸர்வேச்வரனொழிந்த விஷயம். (ங) தேவதாந்தரம் - ஸர்வேச்வரனொழிந்ததேவர்கள். (ச) தூரதோநிரஸ்தம் - தூரத்திலே தள்ளப்பட்டது. (ரு) வயிறுபிடித்தல் - து[illegible]கப்படுதல். (சு) அம்மணக்கூத்து - லஜ்ஜையின்றிக்கே நிர்வாணமாய் ஆடுகிற கூத்து. (எ) விதேயம் - ஸ்வாதீநம். (அ) அதிக்ரமம் - அளவுக்குமீறுதல்.

யான ராக்ஷஸனையு மழியச்செய்து "[illegible]" "ஹூஶா நூ ஸ்ஹுஸீஹவெசு" என்று பிராட்டியருளிச்செய்தபடியே அவ்வூரை (க) மூலையடியே போம்படிபண்ணினன். (படைபொருதானுக்கு) இப்படிசெய்தது ஈச்வரத்வப் (உ) பிடாரான ஸங்கல்பத்தாலன்றிக்கே, எதிரிகளம்பு மார்விலே தைக்கும்படி பொருதவனுக்கு. (பல்லாண்டுகூறுதுமே) அப்போது கையும்வில்லுமாய்ச் சீறிச்சிவந்து எதிரிகள்மேலே வ்யாபரிக்கும்போதை (ந) ஆகர்ஷகமான வடிவழகுக்கு மங்களாசாஸநம்பண்ணிப் போருவோம் சிலர்காண் நாங்களென்கிறார். "[illegible]" "ராவணாஞுவரா கூாஞா நவூாணைகூசாசெதஷயாழ" என்கிறபடியே அக்காலத்தில் முதலிகளுக்கு (ச) அம்புக்கு இருய்க்கப் பணிபோருகையாலே அக்காலத்திலே மங்களாசாஸநம் பண்ணுவாரைப் பெற்றதில்லை; "பிராட்டிபிரிந்தபோதே நம்குடியிருப்புப்பெற்றோம்" என்கிற ப்ரீதியாலே ப்ரஹ்மாதிகள் அந்யபரரானார்கள்; அக்காலத்தில் மங்களாசாஸநம்பண்ணப்பெறாத குறைதீர இன்றுஇருந்து மங்களாசாஸநம் பண்ணுவோம் சிலர்காண் நாங்களென்கிறார். (ந)

அ.—நாலாம்பாட்டு. (ஏடித்யாதி) கீழே - அநந்யப்ரயோஜநரை யழைத்தார்; அவர்கள் மங்களாசாஸநத்துக்கு (ரு) ப்ரத்யாஸந்நராகையாலே, நீரிலேநீர்சேர்ந்தாப்போலே சேர்ந்திருக்குமிறே. அவ்வளவிலும் (சு) பர்யாப்திபிறவாமையாலே, "ஈச்வரன்கை பார்த்திருக்குமவர்கள்" என்னு மிவ்வளவைக்கொண்டு, ஆத்மப்ராப்திகாமரையும் ஐச்வர்யகாமரையும் அழைக்கக்கோலி, அதில்முந்துற ஆத்மப்ராப்திகாமரை யழைக்கிறார். ஐச்வர்யத்திற் காட்டில் (எ) ஆத்மப்ராப்தி (அ) உத்க்ர்ஷ்டமென்னும் நினைவாலே யழைக்கிறாரல்லர், அந்தமோக்ஷத்தை இவர் அநர்த்தமென்றிருக்கையாலே. இனி எத்தாலே முற்பட அழைக்கிறதென்னில்; பகவத்ஸம்பந்தத்துக்கு உபகரணமான (கூ) சரீரமோக்ஷம்அணித்தாகையாலும், அம்மோக்ஷத்தை (க0) ப்ராபித்தால் மீளவொண்ணாமையாலும், ஐச்வர்ய காமனுக்கு காலாந்தரத்திலேயாகிலும் பகவத்ஸம்பந்தம்பண்ண யோக்யதையுண்டாகையாலும்; இவனுக்கு அந்தயோக்யதையு மழிகையாலே துர்க்கதியைக்கண்டு முற்படவழைக்கிறார். ப்ரயோஜ

(க) மூலையடியேபோம்படி - ஸ்வதந்த்ரமாம்படி. (உ) பிடார் - பெருமை. (ந) ஆகர்ஷகம் - ஸ்வாதீநப்படுத்துமது. (ச) அம்புக்கிருய்க்கப்பணிபோருகை - அம்புக்குப் பின்வாங்குகைக்கே காரியம்போருகை. (ரு) ப்ரத்யாஸந்நராகையாலே - கிட்டினராகையாலே. (சு) பர்யாப்தி - த்ர்ப்தி. (எ) ஆத்மப்ராப்தி - கைவல்யப்ராப்தி. (அ) உத்க்ர்ஷ்டம்-உயர்ந்தது. (கூ) சரீரமோக்ஷம் - சரீரம்நீங்குகை. (க0) ப்ராபித்தால் - அடைந்தால்.

நாந்தரபரர், "மங்களாசாஸநம்பண்ண வாருங்கோள்" என்றால் வருவர்களோவென்னில்; பகவத்ப்ராப்தியி லுத்கர்ஷத்தையும், அத்தைப்பற்ற கைவல்யத்தினுடைய நிகர்ஷத்தையு மறிவித்தால், "விட்டுப்பற்றவேணும்" என்னும் (க) ஆத்மகுணோபேதராயிறே இவரழைக்கிறது.

மூ.—ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்தெங்கள்குழாம்புகுந்து
கூடுமநமுடையீர்கள்வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ
நாடுநகரமுநன்கறியநமோநாராயணாயவென்று
பாடுமநமுடைப்பத்தருள்ளீர்வந்துபல்லாண்டுகூறுமினே.

ப-ரை.—ஏடு - பொல்லாங்கான, நிலத்தில் - மூலப்ரக்ருதியிலே, இடுவதன் முன்னம் - சேர்ப்பதற்குமுன்னே, வந்து—, எங்கள்குழாம் - அநந்யப்ரயோஜநரான வெங்கள்திரளிலே, புகுந்து—, கூடுமநமுடையீர்கள் - கூடவேணுமென்கிற நினைவுடையவர்களா யிருப்பீராயின், வரம்பொழி - வரம்பொழிய, ஒல்லை - விரைவாக, வந்து—, கூடுமினோ - சேருங்கோள்; நாடும் - நாட்டிலுள்ள அவிசேஷஜ்ஞரும், நகரமும்-நகரத்திலுள்ள விசேஷஜ்ஞரும், நன்கறிய-நன்றாகவறியும்படி, நமோநாராயணாயவென்று—, பாடும் - பாடத்தக்க, மநமுடை - மநஸ்ஸுண்டாம்படியான, பத்தருள்ளீர் - ப்ரேமத்தை யுடையீராகில், வந்து—, பல்லாண்டுகூறுமின் - பல்லாண்டு பாடுங்கோளென்கிறார்.

வ்யா.—(ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்) ஏடு என்பது-பொல்லாங்கு. "உங்களைப் பொல்லாநிலத்திலே யிடுவதற்குமுன்னம்" என்று பிள்ளையமுதனார். "ஏடு" என்கிறது - ஸூக்ஷ்மசரீரத்தை. ஸ்தூலசரீரத்திற்காட்டில் ப்ரதாநமாய் அதினுடைய ப்ரயோஜநரூபமாய் நிற்கையாலே, "பாலில் ஏடு" என்னுமாப்போலே சொல்லுகிறது. (நிலத்திலிடுவதன்முன்னம்) ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே (உ) லயிப்பதற்குமுன்னே. இது நிர்வஹித்துப்போரும்படி;—"ஏடு" என்று - உடம்புக்குப்பேராய், ஸ்தூலஸூக்ஷ்மரூபமான சரீரம், ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே லயிப்பதற்குமுன் என்னவுமாம். இவ்வாக்யத்தால் - அவர்களுடைய அநர்த்தத்தைக் கண்டழைக்கிறாரென்னுமிடந் தோற்றவிருக்கிறதிறே. (வந்து) ஸ்வதந்த்ரரா யிருப்பார்க்குத் தம்மளவில் வருமிடத்திலுண்டான தூரத்தைச் சொல்லுகிறது. (எங்கள் குழாம்புகுந்து) கேவலரும் ஒரு ஸமஷ்டியாயிறே யிருப்பது; அது ஸ்வதந்த்ர மாகையாலே அந்யோந்யம் சேர்த்தியற்றிருக்கும். ஒருத்தருடையஸம்ருத்தி ஒருத்தரதாயிறே யித்திரளிருப்பது. "[illegible]" [illegible] வெ?" என்னக்கடவதிறே. இத்திரளில்புகுவார்க்கு எவ்வளவதிகாரம்வேணுமென்னில் (கூடுமநமுடையீர்கள்) "புகுருவோம்" என்

(க) ஆத்மகுணோபேதர் - ஆத்மகுணமுடையவர்கள். (உ) லயித்தல் - நசித்தல்.

னும் நினைவே வேண்டுவது. அவிலக்ஷணங்களான புருஷார்த்தங்களுக்கு (க) புரச்சரணங்கள் கனக்கவேண்டியிருக்க, அதில்விலக்ஷணமான இத்திரளிலே புகுருகைக்கு புரச்சரணம் வேண்டாதிருப்பதென்னென்னில்; அவை அப்ராப்த புருஷார்த்தங்களாகையாலே புரச்சரணாதிகள் அபேக்ஷிதங்களாயிருக்கிறன; இது ஸ்வரூபப்ராப்தமாகையாலே வேண்டா. மாதாபிதாக்களை யநுவர்த்திக்கைக்கு இச்சையேயிறே வேண்டுவது. (உடையீர்கள்) இந்த இச்சையால்வந்த ப்ரயோஜநாதிசயத்தாலே "வைச்ரவணன்"என்னுமாப்போலே யருளிச்செய்கிறார். கூடநினைப்பார்க்குச் செய்யவேண்டுவது, முன்பு நின்ற சிறுமையைக்குலைத்துவரவேணும். (வரம்பொழிவந்து) "வரம்பொழிய" என்கிறவிது, "வரம்பொழி" என்றுகிடக்கிறது. ஸர்வேச்வரனுக்கு ப்ரகாரபூதனாய், அவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை அநுபவிக்க இட்டுப்பிறந்தவன், "ஜ ஓர்க:சேஷோ ஹ்யஹம்" "ஜாஜாதிஶேக்ஷாய" என்று (உ) ஸ்வாநுபவத்தளவிலே ஒரு வரம்பையிட்டுக்கொண்டானிறே; அத்தையொழிந்து வாருங்கோளென்கிறார். (ஒல்லைக்கூடுமினோ) பற்றுகிற புருஷார்த்தத்தினுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்தால் பதறிக்கொண்டுவந்து விழவேண்டாவோ. "ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்" என்றது-சரீரத்தில் அஸ்தைர்யத்தைப்பற்ற; இங்கு "ஒல்லை" என்கிறது - பற்றுகிறவிஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தைப்பற்ற. "கூடுமநமுடையீர்கள்" என்றும், "கூடுமினோ" என்றும் அருளிச்செய்கிறாரிறே யோக்யதையைப்பற்ற. அத்திரளில்நின்றும் பிறிகதிர்ப்பட்டார் சிலரிவர்களென்று தோற்றுமிறே ஸ்வரூபம் (௩) வெளிச்செறித்தக்கால்.

(நாடுநகரமும்நன்கறிய) இத்திரளிலே புகுருகைக்குவேண்டுவன வருளிச்செய்தார்; இதுக்குமேல் மங்களாசாஸநத்துக்கு வேண்டுவன வருளிச்செய்கிறார். "நாடு" என்று-அவிசேஷஜ்ஞரைச்சொல்லுகிறது; "நகரம்" என்று - விசேஷஜ்ஞரைச்சொல்லுகிறது. ராஜாவுக்கு ப்ரத்யாஸந்நரிறே நகரஸ்தர்; நாட்டார் தூரஸ்தரிறே: ஆகையாலே யருளிச்செய்கிறார். (நன்கறிய) நன்றாகவறிய. பகவத்ப்ரத்யாஸத்தியாலே அவிசேஷஜ்ஞர்விடும்படியாகவும், அதுதானேஹேதுவாக விசேஷஜ்ஞர் பரிக்ரஹிக்கும்படியாகவும். (நன்கறிய) இந் நன்மையை யறியவென்றுமாம். (நமோநாராயணாயவென்று) இவ்வளவும்போராது, "தன்ஸ்வரூபத்தை உள்ளபடியறிந்து ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப்பெறவேணும்" என்று வைஷ்ணவனாய் வரவேணுமென்று. "அஹமஸ்மி" "ஸுஹவேதி" "க

(க) புரச்சரணம் - அங்கம். (உ) ஸ்வாநுபவம் - தன்னுடையஅநுபவம். (௩) வெளிச்செறித்தல் - விளங்கநிற்றல்.

வதீவாஹமஸ்மி" "ஹமவசுவனவாஹஸி" என்றிறே நமச்சப்தத்துக்கு அர்த்தமிருப்பது. ஸ்வாமிபக்கல் பண்ணும் அநுகூலவ்ர்த்தியேயி றே புருஷார்த்தமாவது. (பாடுமநமுடைப்பத்தருள்ளீர்) நினைத் திருக்கு மவ்வளவுபோராது, ப்ரீதிக்குப்போக்குவிட்டுப் பாடுவோ மென்னும் நெஞ்சுண்டாம்படியான ப்ரேமத்தை யுடையீராகில். (வந்து பல்லாண்டுகூறுமினே) வந்து, திருப்பல்லாண்டு பாடுங்கோ ள். இத்திரளிலே புகுரவேணுமென்றிருப்பீர்! அத்தைச்செய்யுங் கோள்; அவ்வளவுபோராது, உங்களுடைய வ்ர்த்திவிசேஷமும் பெறவேணுமென்றிருப்பீர்! திருப்பல்லாண்டு பாடுங்கோளென்று (க) க்ரியையைஇரண்டாக்கி நிர்வஹிக்கவுமாம். (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. (அண்டமித்யாதி) முற்பட அநந்யப்ர யோஜநரையழைத்தார்; கேவலரும் ஐச்வர்யார்த்திகளும் ப்ரயோஜ நாந்தரபரரா யிருக்கச்செய்தேயும், கேவலருடைய துர்க்கதியைக் கண்டு முந்துற வழைத்தார்; இப்பாட்டிலே - ஐச்வர்யார்த்திகளை யழைக்கிறார்.

மூ.—அண்டக்குலத்துக் கதிபதியாகி யசுர ரிராக்கதரை, யிண்ட க்குலத்தை யெடுத்துக்களைந்த விருடீகேசன் றனக்குத், தொ ண்டக்குலத்தி லுள்ளீர்வந்தடிதொழு தாயிரநாமஞ் சொல் லிப், பண்டைக்குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்லாயி ரத்தாண் டென்மினே.

ப தா.—அண்டக்குலத்துக்கு-அண்ட ஸமூஹத்துக்கு, அதிபதியாகி-தலைவ னாய், அசுரரிராக்கதரை-அஸுரராக்ஷஸர்களுடைய, இண்டக்குலத்தை-நெருங்கி னதிரளை, எடுத்து - சேரத்திரட்டி, களைந்தநிர்மூலமாகப்போக்கின, இருடீகே சன்றனக்கு - இந்த்ரியங்களைத் தன்வசமாகநடத்துமவனுக்கு, தொண்டக்குலத் தில் - அடிமைசெய்யுங்குலத்திலே, உள்ளீர் - உளரானநீங்கள், வந்து—, அடி - ஸர்வேச்வரன்திருவடிகளை, தொழுது—, ஆயிரநாமம் - அவன்திருநாமங்களை யெல்லாம், சொல்லி - வாயாரச்சொல்லி, பண்டைக்குலத்தை - பகவத்விமுக ராயிருந்தகாலமான பழையஜாதியை, தவிர்ந்து - "நான், எனக்கு" என்கிறநிலை யோடுவிட்டு, பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்மின்-அநேகமாயிரம் ஸம்வத் ஸரங்கள் நித்யமாய்ச் செல்லவேணுமென்றுமங்களாசாஸநம்பண்ணுங்கோள்.

வ்யா.—(அண்டக்குலத்துக் கதிபதியாகி) தேவதைகளுடைய ஐச்வர்யத்துக்கெல்லாம் மேலான (உ) அண்டாதிபத்யமிறே ஐச்வர் யத்துக்கு மேலெல்லை; அந்த ப்ரஹ்மா ஈச்வரனை ஆச்ரயிக்கும் ப்ரகா ரஞ்சொல்லுகிறது. "ப்ரஹ்மாணம் ..." "சுணாயிவை தயெநமஃ" என்றி றே இப்பதப்ராப்திக்கு ஸாதநமந்த்ரம்; அந்த அண்டைச்வர்யவிசிஷ்

(க) க்ரியை-பயனிலை. (உ) அண்டாதிபத்யம் - அண்டங்களுக்குத்தலைவ னாகுகை.

டனாகவிறே ஸர்வேச்வரனை யநுஸந்திப்பது. "வ்யாஹரந் நாமஸஹஸ்ரகம்" "வ்யாஹர நாமதேயாநு" என்கிறபடியே இம்மந்த்ரத்தைச்சொல்லவும், நெஞ்சாலே ஐச்வர்யவிசிஷ்டனாக அநுஸந்திக்கவுமாயிறே ஆச்ரயணப்ரகாரமிருப்பது. * அண்டக்குலத்துக்கு அதிபதியான ஆகாரமேயன்றோ இச்சப்தத்திலுள்ளது, ஆச்ரயணப்காரம் தோற்றவிருந்ததில்லையே என்னில்; (௧) உதாரனாயிருப்பானொருவன் கையிலே எலுமிச்சம்பழமிருந்தால் "இதிருந்தவழகென்!" என்று சொன்னவளவிலே, (௨) பாவஜ்ஞனாயிருக்குமவன் "கொள்ளலாகாதோ" என்று கருத்தறிந்துகொடுக்குமிறே; அப்படியே, அண்டாதிபத்யத்திலே அபேக்ஷையுண்டென்று தங்களபேக்ஷையை (௩) ஆவிஷ்கரிக்கிறார்கள். இத்தால் - ப்ரயோஜநாந்தரபரரைக்குறித்து "தாதா:" "உதாரா:" என்னுமவனுடைய ஔதார்யம் ப்ரகாசிக்கிறது. (அண்டக்குலத்துக்கு) "அண்டாநாம் து ஸஹஸ்ராணாம்" "ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராணாம்" என்றுதுடங்கி, "ஸஹஸ்ராண்யயுதாநிச" "கோடிகோடி ஶதாநிச" என்று (௪) அஸங்க்யாதமான அண்டங்களுக்குநிர்வாஹகனாகையாலே அபேக்ஷித்தாரபேக்ஷித்த அண்டங்களைக்கொடுக்கைக்கு உடைமைசொல்லுகிறது. (அதிபதியாகி) உபயவிபூதிக்கும் நிர்வாஹகனாகை. (ஆகி) ஆச்ரிதர் தன்னையநுஸந்தித்தவளவிலேயாயிருக்கை. ஐச்வர்யார்த்தி, ஐச்வர்யவிசிஷ்டனாக அநுஸந்தித்தால் அவ்வளவாயிருக்கும்; கைவல்யார்த்தி, (௫) அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தனாக அநுஸந்தித்தால் அவ்வளவாயிருக்கும்.

(அசுரரிராக்கதரை) இப்பதத்துக்கு அஸுரர்களாலே *வேதாபஹாராத்யாபத்துக்களில் களையறுத்துக்கொடுக்கையும் ரக்ஷகனுக்கு பரமிறே. "ஆர்த்தன்" என்றும், "அர்த்தார்த்தி" என்றும் ஐச்வர்யபுருஷார்த்தம் இரண்டு (௬) முகமாயிறேயிருப்பது. அதில் (௭) அர்த்தார்த்தியைக் கீழேசொல்லி, இவ்வம்சத்தாலே ஆர்த்தனைச் சொல்லுகிறது. (௮) ஜந்மப்ரப்ருதி பராநர்த்தமே பண்ணிப்போருவது இரண்டு வர்க்கமிறே. ஸம்பந்தமொத்திருக்க நிரஸநத்திலே யிழிகிறது, ஆச்ரிதவிரோதிகளென்றிறே. (இண்டக்குலத்தை) மிகவும்நெருங்கினதிரளை. "இண்டர்" என்று - சண்டாளர். இவர்களை சண்டாளரென்று சொல்லுகிறது - (௯) நிஹீநரென்னும் நினைவாலே. உத்கர்ஷத்துக்கெல்லை - பரஸம்ருத்த்யைகப்ரயோஜநனா

(௧) உதாரன் - கொடையாளி. (௨) பாவஜ்ஞன் - நினைவறியுமவன். (௩) ஆவிஷ்கரித்தல் - ப்ரகாசிப்பித்தல். (௪) அஸங்க்யாதம் - எண்ணில்லாதது (௫) அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தன் - ஸம்ஸாரஸம்பந்தம் சற்றுமில்லாதவன். (௬) முகம் - வகை. (௭) அர்த்தார்த்தி - பொருளைவிரும்புமவன். (௮) ஜந்மப்ரப்ருதி - பிறப்புமுதல். (௯) நிஹீநர் - தண்ணியர்.

யிருக்கை; நிகர்ஷத்துக்கெல்லை-பராநர்த்தமே யாத்ரையாயிருக்கை. இவ்வாபத்துக்களிலே "[illegible]" "[illegible]" என்றிறே இவர்களுடைய ஆச்ரயண ப்ரகாரமிருப்பது. (எடுத்துக்களைந்த) "பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" என்னுமாப்போலே, ஆச்ரிதர்பக்கல் அழல்தட்டாதபடி நிரஸிக்கை. "இலங்கைபாழாளாக" என்றதும் (க) விபீஷணபரிக்ரஹத்துக்கு ஒரு நோவுவாராதபடியிறே; விபீஷணக்ர்ஹத்துக்கு அழல்தட்டாதபடியிறே லங்காதஹநம்பண்ணிற்றுத் (உ) திருவடியும். (இருடீகேசன்) ப்ரயோஜநாந்தரபரர்க்கு ஐச்வர்யாதிகளிலே கர்மாநுகூலமாக ருசியைப்பிறப்பிக்கும்; தன்பக்கலிலே (௩) ந்யஸ்தபரராயிருப்பார்க்கு ஸ்வரூபாநுரூபமாக ருசியைப்பிறப்பிக்கும். ஐச்வர்யார்த்தமாக அவன்பக்கலிலே கண்வைக்கும்போதே அவன் வடிவழகிலே உறைக்கவையுங்கோள்; அவன் (௪) "மமேதம்" என்கிற அபிஸந்தியைக் குலைத்துத் தன்பக்கலிலே ருசியைப்பிறப்பிக்கும்; அத்தாலே, அபேக்ஷித்த ஐச்வர்யத்தை (௫) விஸ்மரித்து அவன்றன்னையே பற்றலாம்.

(தனக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்) இப்படி ஐச்வர்யத்தில் ப்ரேமம்போய் பகவத்ப்ரேமயுக்தருடைய திரளிலேயுளரான நீங்கள். "தொண்டக்குலம்" என்று - தனியே ஒருஸந்தாநம்போலே காணும். "தேஹமே ஸ்வரூபம்" என்றிருப்பார்க்கும், "சேஷத்வமே ஸ்வரூபம்" என்றிருப்பார்க்கும் இத்தனைவாசியுண்டிறே. இனி, அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு (௬) க்ர்த்யம் இன்னதென்கிறார் மேல் (வந்தடிதொழுது) திருவடிகளே ப்ரயோஜநமாகவந்து, அநுகூலவ்ர்த்திகளைப்பண்ணி. ஐச்வர்யமே ப்ரயோஜநமாய் விஷயாநுபவமே யாத்ரையாயிருக்கைதவிர்ந்து, திருவடிகளே ப்ரயோஜநமாய் அநுகூலவ்ர்த்தியே யாத்ரையாயிருக்கும்படி பாருங்கோள். (ஆயிரநாமஞ்சொல்லி) இரண்டு திருநாமத்தையே நிர்ப்பந்திக்கவேண்டுவது "மமேதம்" என்றிருக்குமன்றிறே; "தவேதம்" என்கிற புத்தி பிறந்தால், பகவத்குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களெல்லாம் போக்யமாயிறே யிருப்பது; அவற்றை வாயாரச்சொல்லி. (பண்டைக்குலத்தைத்தவிர்ந்து) தொண்டக்குலத்திலே வந்தந்வயித்தவாறே "மமேதம்" என்றிருந்தகாலம் (௭) ஜந்மாந்தரமாய்த் தோற்றுமிறே. ஒருஜந்மத்திலே (௮) த்விஜந்மனுகிறானிறே:-ராஜர்ஷியான விச்வாமித்ரன், அந்த ஜந்மத்திலே (௯) ப்ரஹ்மர்ஷியா

(க) விபீஷணபரிக்ரஹம் - விபீஷணஸம்பந்திகள். (உ) திருவடி - ஹநுமான். (௩) ந்யஸ்தபரர் - வைக்கப்பட்டசுமையுளளவர். (௪) மமேதம்-இது என்னுடையது. (௫) விஸ்மரித்து - மறந்து. (௬) க்ர்த்யம் - செய்கை. (௭) ஜந்மாந்தரம் - முன்பிறப்பு. (௮) த்விஜந்மன் - இருபிறப்பாளன். (௯) ப்ரஹ்மர்ஷி - ப்ராஹ்மணரிஷி.

ஞனிறே. அங்கு தபஸ்ஸாலே வர்ணபேதம் பிறந்தது; இங்கு பக வத்ப்ரஸாதத்தாலே ஸ்வரூபபேதம்பிறந்தது. "உனக்குநான்" என்ற வநந்தரம், முன்பு "நான் எனக்கு" என்றிருந்தவிது வ்யதிரேகமாய்த் தோற்றுமிறே.

(பல்லாண்டு) இப்படி அநந்யப்ரயோஜநரான நீங்கள் மங்களா சாஸநம்பண்ணுங்கோள். "ப்ரயோஜநாந்தரபரனாய்ப் போந்தவன் நமக்கு ஸம்ருத்தியை ஆசாஸிக்குமத்தனை பரிவனாகப்பெற்றோமே!" என்று அவன்குளிரநோக்கும்; (பல்லாயிரத்தாண்டென்மின்) பின்னை, பல்லாயிரத்தாண்டு என்னுங்கோள். அந்நோக்கழகு நித்யஸ்ரீயா ய்ச்செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுங்கோள். உங்க ளுக்கு இம்மாத்ரத்தாலே ஸ்வரூபமும், அத்தாலே ஈச்வரனுக்கு ஸம்ருத்தியு முண்டாகப்பெற்றால் ஆறியிருக்கிறதென்? சடக்கென மங்களாசாஸநம் பண்ணுங்கோளென்கிறார். (௫)

அ.—ஆறும்பாட்டு. (எந்தையித்யாதி) அநந்யப்ரயோஜநர்க் கும் ப்ரயோஜநாந்தரபரர்க்கு முண்டான நெடுவாசியறிந்திருக்கச் செய்தேயும், அநந்யப்ரயோஜநரையழைத்த (க) ஸமநந்தரம் இவர் களையழைக்கைக்கடி - "ఉదారాస్సర్వ ఏవైతే" "𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌮𑍍" என்னுமவன்சீலத்தாலும், அவனோடு இவர்களுக்குண்டான (உ) அவர்ஜநீயஸம்பந்தத்தாலும், இவர்களுக்கும் அவற்றையேநினை த்துத்தேங்காதே (௩) புகலாம்படியாயிறே யிருப்பது. ஆகையாலே, அநந்யப்ரயோஜநரை யழைத்தவோபாதி இவர்களையும் அழைத்தா ராய்நின்றார் கீழ்; இதில், *வாழாளிலழைத்த அநந்யப்ரயோஜநர், தங்கள் ஸ்வரூபத்தையும் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும் சொல்லிக்கொண்டு வந்துபுகுர, அவர்களைக்கூட்டிக்கொள்ளுகிறார். "ஏழாட்காலும் பழிப்பிலோம்" என்று ப்ரயோஜநாந்தரபரரைக் குறித்துத் தாமருளிச்செய்த தம்முடைய திரளுக்குண்டான வேற் றத்தை, புகுருகிறவர்கள், தங்களுக்குண்டாகச் சொல்லிக்கொண்டு வந்து புகுருகிறார்கள். தந்தாமேற்றஞ்சொல்லிக்கொண்டுவந்து புகு ருகை (ச) ஸாத்விகர்க்கு (௫) யுக்தமோவென்னில்; ஆழ்வாரு டைய திருவுள்ளம் பயங்கெடுகைக்காகச் சொல்லுகிறார்களாகை யாலே யுக்தம். "పస్యాగారసమం దేశే పత్రం పుష్పం నివేదితే। వైనతేయమహాంశక్తః పరిగృహ్య స్రజః" "𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌾𑌲𑍍𑌯𑌾𑌨𑍁𑌲𑍇𑌪𑌨𑌂 𑌦𑌦𑍌 𑌸𑌵𑌿𑌤𑍇। 𑌵𑍈𑌨𑌤𑍇𑌯𑌸𑌮𑌾𑌸𑌕𑍍𑌤𑌂 𑌪𑌰𑌿𑌮𑌤𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌃" என்று - திருவடி,

(க) ஸமநந்தரம் - பின்பு. (உ) அவர்ஜநீயஸம்பந்தம் - விடக்கூடாத உறவு. (௩) புகலாம்படி - ப்ரவேசிக்கலாம்படி. (ச) ஸாத்விகர் - ஸத்த்வ குண முள்ளவர்கள். (௫) யுக்தமோ - தகுதியோ.

(க) ஸ்வசக்தியைச் சொன்னானிறே முதலிகளுடைய பயம் (உ) சமிக்கைக்காக.

மூ.—எந்தைதந்தை தந்தைதந்தைதம் மூத்தப்பனேழ்படி காலே தொடங்கி, வந்துவழிவழி யாட்செய்கின்றோந் திருவோணத் திருவிழவி, லந்தியம்போதி லரியுருவாகி யரியை யழித்தவனைப், பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பாடுதுமே.

ப - ரை.—எந்தை - நானும் என்னப்பனும், தந்தை - அவனுக்கப்பனும், தந்தை - அவனுக்கப்பனும், தந்தை - அவனுக்கப்பனும், தம்மூத்தப்பன் - அவனுக்கு அப்பனும் பாட்டனுமாகிய, ஏழ்படிகால்தொடங்கி - ஏழுதலைமுறைமுதற்கொண்டு, வந்து - மங்களாசாஸநம்பண்ணுகைக்கு யோக்யமான ஸமயங்களில் வந்து, வழிவழி - முறைமுறையாக, ஆட்செய்கின்றோம் - தப்பாமேஅடிமைசெய்கிறோம்; திருவோணத்திருவிழவில்-திருவோணமென்கிற திருநாளிலே, அந்தியம்போதில் - அஸுரர்க்கு பலம்வர்த்திக்கத்தக்க அந்திப்பொழுதிலே, அரியுருவாகி - ந்ருஸிம்ஹரூபியாய்க்கொண்டு, அரியை - ஆச்ரிதனான ப்ரஹ்லாதாழ்வானுக்கு சத்ருவான ஹிரண்யனை, அழித்தவனை - உருவழித்துப்பொகட்டவனுக்குண்டான, பந்தனைதீர - அனுக்கம்தீரும்படி, பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று—, பாடுதும் - பாடுவோம்.

வ்யா.—(எந்தை) தானும் தமப்பனுமாக இருவர். (தந்தை தந்தைதந்தை) என்று-ஒருமூவர். (தம்மூத்தப்பன்) "தம்" என்று-முடிந்தவனை (௩) அநுபாஷிக்கிறது. (மூத்தப்பன்) "அப்பன்" என்று - தமப்பனார்; "மூத்தப்பன்" என்று - பாட்டனார்; ஆகையாலே அங்கே யிருவர்; ஆக, எழுவரையுஞ் சொல்லுகிறது. ஆழ்வார் "ஏழாட்காலும் பழிப்பிலோம்" என்று திரளவருளிச்செய்தார்; இவர்களும், (ஏழ்படிகால்) என்று திரளச் சொல்லாநின்றார்கள். பிரித்துச்சொல்லுகிற விதுக்கு பலமென்னென்னில்; (ச) ஸ்வஸந்தாநத்தில் மங்களாசாஸநம்பண்ணிப் போந்தவர்களிபக்கலுண்டான ப்ரீத்யதிசயத்தாலே சொல்லுகிறார்கள். "[illegible]" "ஸஹிவித்யாதஸ்தம்ஜநயதி தச்ச்ரேஷ்டம் ஜந்ம [illegible]" என்று வித்யாஸந்தாநத்தைக்கொண்டாடுமாப்போலே "[illegible]" "[illegible]" என்று த்யாஜ்யமான யோநிஸந்தாநத்தைக் கொண்டாடுகை யுக்தமோவென்னில்; யுக்தம்; கொண்டாடுகைக்கு ப்ரயோஜநம் பகவத்ஸம்பந்தமாகையாலே. வித்யாஸந்தாநத்திலும் பகவத்விமுகன் (ரு) த்யாஜ்யனல்லனோ. (ஏழ்படிகால்தொடங்கி) அர்த்தக்ரமத்தாலே

(க) ஸ்வசக்தியை - தன்வல்லமையை. (உ) சமிக்கை - தணிக்கை. (௩) அநுபாஷிக்கிறது - அநுவதிக்கிறது. (ச) ஸ்வஸந்தாநம் - தன்னுடையவம்சம். (ரு) த்யாஜ்யன் - விடத்தக்கவன்.

ஏழையுஞ் சொல்லச்செய்தேயும் திரளச்சொல்லுகிறது - (க) ஸ்வ ஸந்தாநத்திலுண்டான (உ) ஆதராதிசயத்தாலே. (வந்து) மங்களாசாஸநம்பண்ணுகைக்கு யோக்யமான (௩) தசைகளிலே வந்து. (வழிவழியாட்செய்கின்றோம்) முறைமுறையாகத்தப்பாமேஅடிமை செய்கிறோம். இத்தால் - இஸ்ஸந்தாநத்துக்கு மங்களாசாஸந (ச) விச்சேதம் பிறந்ததில்லையென்கை. (௫) யாஜ்ஞிகஸந்தாநத்துக்கு த்ரிபுருஷ(சு)விச்சித்தியாலே அப்ராஹ்மண்யஞ் சொல்லுமாப்போலே, மங்களாசாஸநவிச்சித்தியால் வைஷ்ணவத்வஹாநி சொல்லுங் குறை எங்கள் ஸந்தாநத்தில் இல்லையென்கிறார்கள். "యస్య వేదశ్చ వేదీ చ విచ్ఛిద్యేతే త్రిపూరుషమ్ । స వై దుర్బ్రాహ్మణో జ్ఞేయ స్సర్వకర్మబహిష్కృతః" "யஸ்ய வேதஶ்ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம் । ஸ வை துர்ப்ராஹ்மணோ ஜ்ஞேய ஸ்ஸர்வகர்மபஹிஷ்க்ருத:" என்னக்கடவதிறே. "வழிவழி" என்று - சாஸ்த்ரமார்க்கத்தாலும் சிஷ்டாசாரத்தாலுமென்றுமாம். "శాన్తిశ్శాన్తిశ్శాన్తిః" "ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்தி:" என்றும், "పశ్యేమశరదశ్శతమ్" "பஶ்யேமஶரதஶ்ஶதம்" என்றும், "సర్వాన్ దేవాన్ నమస్యన్తి" "ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி" என்றும், "మఙ్గళాని ప్రయుఞ్జానాః" "மங்களாநி ப்ரயுஞ்ஜாநா:" என்றும் சொல்லக்கடவதிறே. (ஆட்செய்கின்றோம்) ஆட்செய்கையாவது - திருப்பல்லாண்டு பாடுகையிறே.

மேலே "பந்தனைதீரப்பல்லாண்டு" என்றத்தை வ்ர்த்தியாகச் சொல்லுகையாலே, இதுக்குக்கீழ் - தங்களுடையஸந்தாநத்திலேற்றஞ்சொன்னார்களாய், மேல் - தங்களுடைய வ்ர்த்திவிசேஷஞ்சொல்லுகிறார்கள் (திருவோணத்திருவிழவில்) விசேஷித்துத் திருநக்ஷத்ரஞ்சொல்லாத விடத்துக்கெல்லாம் இதுவே திருநக்ஷத்ரமாகக் கடவது. "திருவோணம்" என்கிறது ஜந்மநக்ஷத்ரமென்னில் உகவாதாரறிந்து (எ) அபிசரிப்பர்களென்று அஞ்சி, திருவோணமென்கிற திருநாளிலேயென்று மறைத்துச்சொல்லுகிறார். (அந்தியம் போதில்) தேவர்களுக்கு பலம் க்ஷீணமாய் அஸுரர்க்கு பலம் வர்த்திக்கும் ஸமயத்திலே. (அரியுருவாகி) ஒரு காலவிசேஷம் வேண்டாதே ஸர்வகாலமும் மங்களாசாஸநம் பண்ணவேண்டும்படியான வடிவையுடையனாய். "నారసింహవపుః శ్రీమాన్" "நாரஸிம்ஹவபு: ஸ்ரீமாந்" என்றும், "அழகியான்றானே யரியுருவன்றானே" என்றும், "நரங்கலந்தசிங்கமாய்" என்றும் சொல்லக்கடவதிறே. (அரியை

(க) ஸ்வஸந்தாநம் - தன்னுடையவம்சம். (உ) ஆதராதிசயம் - அன்பின் மிகுதி. (௩) தசை-ஸமயம். (ச) விச்சேதம்-இடைவீடு. (௫) யாஜ்ஞிகஸந்தாநம் - யாகம்செய்யும் ஸந்ததி. (சு) விச்சித்தி - விட்டிருக்கை. (எ) அபிசரித்தல் - சூந்யம்வைத்தல்.

யழித்தவனை) "அரி" என்று-சத்ரு. (க) ஸஹஜசத்ருவான ஹிரண்யனைக் குற்றுயிராக்கிவிடாதே உருவழித்தவனை. "சுகிர்ந்தெங்கும் சிந்தப்பிளந்த" என்னக்கடவதிறே. அவனை யழியச்செய்தது பயஸ்தாநமாகிறது பின்புள்ளார் பகைகொண்டாடுவ தொன்னுமத்தாலே. (பந்தனைதீர) துஷ்ப்ரக்ர்தியான ஹிரண்யனுடலைக் கீண்டு பொகடுகையால்வந்த அனுக்கம்தீர. திருவவதரித்ததிவஸத்திலுண்டான (உ) அபதாநமாகையாலே "அனுக்கம்" என்கிறதிறே. (பல்லாண்டு) அநுகூலர்வாயாலே ஒருக்கால் மங்களாசாஸநம்பண்ண, அவ்வஸ்துவினுடைய அனுக்கம்போய், நித்யமாய்ச்செல்லுமென்றிறே இவர்கள்நினைவு. (பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே) ஒருக்கால் "பல்லாண்டு" என்றத்தால் (௩) பர்யாப்திபிறவாமையாலே காலதத்த்வமுள்ளதனையும் நித்யமாய்ச்செல்லவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணுகையே எங்களுக்கு வ்ர்த்தியென்கிறார்கள். (சு)

அ.—ஏழாம்பாட்டு. (தீயிற்பொலிகின்ற) * ஏடுநிலத்திலே இவராலே (ச) ஆஹூதரான கைவல்யார்த்திகள், தங்கள் ஸ்வபாவத்தைச் சொல்லிக்கொண்டுவர, அவர்களோடே ஸங்கதராகிறார். இவர்களையழைத்தபோது, "வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ" என்று - நீங்கள்பற்றின புருஷார்த்தத்தைவிட்டு வாருங்கோளென்றும், "நமோநாராயணாய" என்று - அநந்யப்ரயோஜநராய் வாருங்கோளென்றும், "நாடுநகரமும்நன்கறிய" என்று - விசேஷஜ்ஞர் பரிக்ரஹிக்கும்படியாகவும் அவிசேஷஜ்ஞர் (ரு) உபேக்ஷிக்கும்படியாகவும் வாருங்கோளென்றிறே அவர்களையழைத்தது. அதில் (சு) க்ஷுத்ரபுருஷார்த்தத்தை விடுகையும் அநந்யப்ரயோஜநராகையும் நம்முடையக்ர்த்யம். அநுகூலர் பரிக்ரஹிக்கைக்கும் ப்ரதிகூலர் கைவிடுகைக்கும் செய்யவடுப்பதென் என்று பார்த்து, வைஷ்ணவ (எ) சிஹ்நமான திருவிலச்சினையை தரிக்கவே (அ) த்யாகோபாதாநங்களிரண்டும் ஸித்திக்குமென்று பார்த்து, அத்தை தரித்துக்கொண்டுவந்தோமென்கிறார்கள்.

மூ.—தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச் சக்கரத்தின், கோயிற் பொறியாலேயொற்றுண்டுநின்று குடிகுடியாட் செய்கின்றோம், மாயப்பொருபடை வாணனை யாயிரந்தோளும் பொழிகுருதி, பாயச்சுழற்றிய வாழிவல்லானுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

---

(க) ஸஹஜசத்ரு - இயல்பானசத்ரு. (உ) அபதாநம் - செயல். (௩) பர்யாப்தி - த்ர்ப்தி. (ச) ஆஹூதர் - அழைக்கப்பட்டவர்கள். (ரு) உபேக்ஷித்தல் - அசட்டைசெய்தல். (சு) க்ஷுத்ரம்-தண்ணிமை. (எ) சிஹ்நம் - அடையாளம். (அ) த்யாகோபாதாநம் - விடத்தக்கதும் பற்றத்தக்கதும்.

ப - ரை.—தீயில் - சந்த்ராதித்யர்களைக்காட்டிலும், பொலிகின்ற - மிக விளங்காநின்ற, செம் - சிவந்த, சுடர் - ஜ்யோதிஸ்ஸையுடைத்தாய், திகழ் - ப்ரகாசியாநின்றுள்ள, திருச்சக்கரத்தின் கோயில் - திருவாழியாழ்வானெழுந்தருளியிருக்கிறகோயிலாய், ஆழி - மண்டலாகாரமான, பொறியாலே - சிஹ்நத்தாலே, ஒற்றுண்டுநின்று - சிஹ்நிதராய்நின்று, குடிகுடி - எங்கள் ஸந்தாநமெல்லாம், ஆள்செய்கின்றோம் - அடிமைசெய்வோமாய்வந்தோம்; மாயம் - க்ருத்ரிமமாக, பொரு - போர்செய்யாநின்றுள்ள, படை - ஸேநையையுடையனான, வாணனை - பாணாஸுரனுடைய, ஆயிரந்தோளும் - ஆயிரந்தோள்களினின்றும், குருதி - ரக்தமானது, மதகுதிறந்தாப்போலே, பொழிபாய - புறப்பட்டோடும்படி, சுழற்றிய - சுழற்றின, ஆழி - திருவாழியாழ்வானை நியமிப்பதில், வல்லானுக்கு - ஸமர்த்தனானவனுக்கு, பல்லாண்டுகூறுதும் - திருப்பல்லாண்டு பாடுவோம்.

வ்யா.—(தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழியென்று) வைஷ்ணவ கோஷ்டியிலே புகுரப்பண்ணின (க) உபகாரஸ்ம்ருதியாலே ஆழ்வானைக்கொண்டாடுகிறார்கள். (தீயிற்பொலிகின்ற) "தீ" என்கிறசப்தம் சந்த்ராதித்யாதி தேஜ:பதார்த்தங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். அதிற்காட்டில் தேஜஸ்ஸு வர்த்திக்கையாகிறது- "அத்யர்க்காநலதீப்தம் தத் ஸ்தாநம்" "க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே" என்கிற பரமபதத்தில் தேஜஸ்ஸு மிக்கிருக்கக்கடவது ஆதித்யாதி தேஜஸ்ஸுக்களிற்காட்டில்; அதிற்காட்டில் அவனுடைய திவ்யமங்களவிக்ரஹ தேஜஸ்ஸு மிக்கிருக்கக்கடவது; அதுக்கும் ப்ரகாசகமாயிறே திருவாழியாழ்வானுடையதேஜஸ்ஸிருப்பது. "வடிவார்சோதிவலத்துறையுஞ்சுடராழி" என்னக்கடவதிறே. "தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி" "தஸ்ய ஹ ஸாஹஸ்ரம் விபாதி" என்கிறபடியே அவனுடைய தேஜஸ்ஸாலே ஸர்வமும் விளங்காநின்றதென்னுநிற்க, திவ்யமங்களவிக்ரஹத்துக்கு இவன் ப்ரகாசகனும்படியென்னென்னில் (செஞ்சுடர்) * காளமேகநிபச்யாமமான வடிவுக்கு இருட்டறையில் விளக்கேற்றினாப்போலே பரபாகரூபத்தாலேவந்த ப்ரகாசகத்வத்தைச்சொல்லுகிறது. (ஆழிதிகழ்திருச்சக்கரம்) (உ) இட்டளத்தில் பெருவெள்ளம்போலே புறம்புபோக்கற்று, தன்னிலே (௩) மண்டலாகாரமாய்க்கொண்டு விளங்காநின்றுள்ள திருவாழியாழ்வானென்கை. (சக்கரத்தின்கோயில்) ஆழ்வானெழுந்தருளியிருக்கிற மண்டலாகாரமான வாஸஸ்தாநம். (பொறியாலே ஒற்றுண்டுநின்று) அதாகிறது - சிஹ்நத்தாலே சிஹ்நிதராய்நின்று. திருவிலச்சினையை தரித்தபின்பிறே, இவன் ஜந்மாந்தரத்திற்போகாதே மோக்ஷாந்தரத்திற்போகாதே ஸுஸ்திரனாகப்பெற்றது. பகவதங்கீகாரமும் இதுண்டானுலிறே அதிசயிப்

(க) உபகாரஸ்ம்ருதி - நன்றிநினைக்கை. (உ) இட்டளம் - நெருங்கினவிடம். (௩) மண்டலாகாரம் - வட்டவடிவு.

பது. ஸ்ரீமத்த்வாரகையில்நின்றும் ஆச்ரிதவிரோதி நிரஸநார்த்தமாக எழுந்தருளுகிறபோது திருவாசல்காக்கின்ற முதலிகள், "மீள வெழுந்தருளுமளவும் இங்குப்புகுரக்கடவாரார், அல்லாதாரார்?" என்று விண்ணப்பஞ்செய்ய; [चक्राङ्कितास्तु प्रवेष्टव्याः यावदागमनं मम । नामुद्रिताः प्रवेष்टव्याः यावदागमनं मम- சக்ராங்கிதாஸ்து வைஷ்ணவா: யாவதாகமநம் மம । நாசக்ராங்கிதாஸ்து வைஷ்ணவா: யாவதாகமநம் மம] என்று இந்தலக்ஷணமுடையார் யாவர்சிலர், அவர்கள் (௧) நிச்சங்கமாகப்புகுரக்கடவர்கள்; அல்லாதாரை (௨) பாவபரீக்ஷைபண்ணிப்புகுரவிடக்கடவது என்றானிறே க்ர்ஷ்ணன். இதுதான் ஈச்வராங்கிகாரத்துக்கு முடலாய், தானும் "நாமவனுடைமை" என்று நிர்ப்பரனாயிருக்கைக்கு முடலாய், தான்பண்ணினபாபத்தை யநுஸந்தித்து க்ரூரமாகப்பார்க்கக்கடவ யமாதிகளு மஞ்சும்படியாயிருப்பதொன்றிறே. "चक्रादिधारणं पुंसां परसम्बन्धवेदनम् । पतिव्रतानिमित्तं हि वलयादिविभूषणम्" "சக்ராதிதாரணம் பும்ஸாம் பரஸம்பந்தவேதநம் । பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதிவிபூஷணம்" என்று பகவத்ஸம்பந்தத்துக்கு ஜ்ஞாபகமாயிறேயிருப்பது. (குடிகுடியாட்செய்கின்றோம்) "सपुत्रपौत्रस्सगणः" "ஸபுத்ரபௌத்ரஸ்ஸகண:" என்கிறபடியே ஸந்தாநமாக அடிமை செய்யக்கடவோமாய்வந்தோம்.

இப்படி அநந்யார்ஹராயிருப்பார் செய்யுமடிமையாவது - திருப்பல்லாண்டுபாடுகையிறே; எந்த அபதாநத்துக்கு நீங்கள் மங்களாசாஸநம் பண்ணுகிறதென்னில் (மாயப்பொருபடையித்யாதி) எங்களைப்புகுரநிறுத்தின ஆழ்வானுடைய வீரப்ரகாசகமான துறையிலே திருப்பல்லாண்டு பாடக்கடவோமென்கிறார்கள். (மாயப்பொருபடைவாணனை) ஆச்சர்யமாகப் பொரும்ஸேனையையுடைய வாணனென்னுதல். ஆச்சர்யமாகப்பொரும் ஆயுதத்தையுடைய வாணனென்னுதல். "மாயம்" என்று - க்ர்த்ரிமமாய், க்ர்த்ரிமமான யுத்தத்தையுடையவனென்னவுமாம். (ஆயிரந்தோளும் பொழிகுருதிபாய) ஆயிரம்தோள்களாலும் மதகுதிறந்தாப்போலே ரக்தவெள்ளம் குதிகொண்டு பூமிப்பரப்படையப் பரம்பும்படி. பொழிதல் - சொரிதல். இதுக்கு இவன்பண்ணின வ்யாபாரத்தளவேதென்னில் (சுழற்றிய) திருவாழியை விடவேண்டிற்றில்லை, சுழற்றினவித்தனை. அவன் ஒருக்கால் திருவாழியைச்சுழற்ற, வாணனுடைய தோள்களாயிரமும் ஒருக்காலே மலைக் (௩) கொடுமுடிகள்போலே முறிந்துவிழுந்தன. வாணனுடையதலையை அறாதொழிந்தது குற்றம்

(௧) நிச்சங்கமாக - ஸந்தேஹமில்லாமல. (௨) பாவபரீக்ஷை - மநப்பரீக்ஷை. (௩) கொடுமுடி - சிகரம்.

போராமையன்று, உஷை பித்ர்ஹீநையாகாமைக்காகவும், தேவதாந்தரபஜநம் பண்ணுவார்க்கு பலமிது என்னுமிடத்துக்கு மச்சமாகவும். அதாவது-*பரிவின்றிவாணனைக்காத்துமென்றுப்ரதிஜ்ஞை பண்ணி, யுத்தத்திலே இவனைக்காட்டிக்கொடுத்து, ஸபரிகரனாய்க் கொண்டு முதுகுகாட்டிப்போனான் ரக்ஷகன்; ரக்ஷ்யபூதன் தோள் துணியுண்டான். "உன்னை ரக்ஷிக்கப் புக்கு நான்பட்டதோ!" என்றும், "உன்னை ஆச்ரயித்து நான்பட்டதோ!" என்றும் இருவருங் கூடக்கட்டிக்கொண்டு கதறுகையிறே பலமாய்விட்டது. (ஆழிவல்லானுக்கு) "வில்வல்லான், வாள்வல்லான், தோள்வல்லான்" என்னுமாப்போலே. "யஸ்ய ஸா ஜநகாத்மஜா" "யஸ்யஸாஜநகாத்மஜா" என்கிறபடியே பிராட்டியை எனக்கென்ன இட்டுப்பிறத்தல், திருவடி தோளிலே நல்தரிக்கவிருத்தல், கைபேராமல் திருவாழியைப்பிடித்தல் செய்யுமதாய்த்து ஸர்வாதிகத்வத்துக்கு லக்ஷணம். (பல்லாண்டுகூறுதுமே) அத்தசையிலே அடிமைசெய்த ஆழ்வானுடைய வீரஸ்ரீக்கும், அடிமைகொண்ட க்ர்ஷ்ணனுடைய வீரஸ்ரீக்கும் மங்களாசாஸநம் பண்ணுவாரைப்பெற்றதில்லை; அவ்விழவுதீர இன்றிருந்து திருப்பல்லாண்டு பாடுகிறோமென்கிறார்கள். (எ)

அ.—எட்டாம்பாட்டு. (நெய்யிடையித்யாதி) *அண்டக்குலத்திலேயழைத்த ஐச்வர்யார்த்திகள் இசைந்துவர, அவர்களைக் கூட்டிக்கொள்ளுகிறார். *வாழாளிலழைத்த அநந்யப்ரயோஜநர் தங்களேற்றத்தைச் சொல்லிக்கொண்டு புகுந்தார்கள் *எந்தைதந்தை தந்தையிலே; *ஏடுநிலத்திலழைத்த கைவல்யார்த்திகள் தாங்கள் திருந்திப் புகுந்தமை சொன்னார்கள் *தீயிற்பொலிகின்றவிலே; இவர்கள் தாங்கள் க்ஷுத்ர புருஷார்த்தத்தை அபேக்ஷிக்க, அநந்யப்ரயோஜநர்க்கு முகங்கொடுத்தாப்போலே முகம் தந்து, அந்த ஐச்வர்யத்தைத் தந்த ஔதார்யத்துக்குத் தோற்று, ஐச்வர்யத்தை விட்டு சுத்த ஸ்வபாவராய் இவ்வுதாரனை மங்களாசாஸநம் பண்ணுவோமென்று புகுருகிறார்கள். *அண்டக்குலத்திலே - அண்டாத்யக்ஷத்வம் ஐச்வர்யத்துக்கு மேலெல்லையாகப் பேசிற்று; அவ்வைச்வர்யார்த்திகள் பேச்சான இந்தப்பாட்டிலே - சரீரத்துக்கு தாரக போஷக போக்யங்களை இரந்தார்களாய், அத்தை அவன் தந்தானாகப் பேசிற்று; இதுக்கு நிபந்தநம் - இன்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்து புகுருகிறவர்களாகையாலே அதினுடைய க்ஷுத்ரதை தோற்றப் பேசுகிறார்கள். அண்டாத்யக்ஷனான ப்ரஹ்மாவுக்கும் தாரகபோஷக போக்யங்களேயிறே ப்ரயோஜநம்; அதற்கு மேற்பட்ட பகவத் விபூதியை எனக்கு என்கிற அபிமாநத்தால் வந்த ஸ்வரூபஹாநியேயிறே பலம்.

மூ.—நெய்யிடை நல்லதோர்சோறு நியதமுமத்தாணிச் சேவகமும், கையடைக்காயுங் கழுத்துக்குப் பூணொடுகாதுக்குக் குண்டலமும், மெய்யிட நல்லதோர்சாந்தமுந் தந்தென்னை வெள்ளுயிராக்கவல்ல, பையுடைநாகப் பகைக்கொடியானுக்குப் பல்லாண்டு கூறுவனே.

ப-ரை.—இடை - ஒத்தநிறையான, நெய் - நெய்யோடுகூடினதாய், நல்லது - நல்லதாய், ஓர் - விலக்ஷணரஸோபேதமான, சோறும் - ப்ரஸாதத்தையும், நியதமும் - எப்போதும், அத்தாணிச்சேவகமும் - பிரியாதஸேவையையும், கை - திருக்கையாலேயிட்ட, அடைக்காயும் - வெற்றிலைப்பாக்கையும், கழுத்துக்குப் பூணொடு - கழுத்துக்கிடும் ஆபரணமான கண்டியையும், காதுக்குக் குண்டலமும் - செவிக்கிடும் ஆபரணமான குண்டலத்தையும், மெய்யிட - உடம்பிலேபூசுகைக்கு யோக்யமான, நல்லது - நல்ல பரிமளத்தாலே, ஓர் - ஒப்பற்றிருந்துள்ள, சாந்தமும் - சந்தநத்தையும், தந்து - கொடுத்து, என்னை - தாஸபூதனான வென்னை, வெள்ளுயிர் - சுத்தஸ்வபாவனாக, ஆக்கவல்ல - செய்யவல்லனாய், பையுடை - படத்தையுடைய, நாகம் - ஸர்ப்பத்துக்கு, பகை - விரோதியான கருடனை, கொடியானுக்கு - கொடியாக வுடையவனுக்கு, பல்லாண்டு கூறுவன் - மங்களாசாஸநம் பண்ணுகிறேன்.

வ்யா.—(நெய்யிடை) "இடை" என்று - நிறையாய், நெய்யோடொத்த சோறென்னுதல். "இடை" என்று - நடுவாய், நெய்யினிடையிலே சிலசோறு முண்டென்னுதல். இத்தால் - போஷகப்ரசுரமான தாரகத்ரவ்யத்தைத் தருமென்கை. (நல்லதோர் சோறும்) சோற்றுக்கு நன்மையாவது - இட்டவன் "இட்டோம்" என்றிருத்தல், உண்டவன் "இதுக்கென்செய்வோம்!" என்றிருத்தல் செய்யாதசோறு. அதாவது - தாய் இட, புத்ரனுண்ணும் சோற்றுக்கு இவ்விரண்டுமில்லையிறே. (ஓர்சோறு) இப்பாவசுத்தியேயன்றிக்கே, விலக்ஷண ரஸோபேதமா யிருக்கை; அங்ஙனன்றிக்கே, சேஷபூதன் சேஷிக்குஇடும் சோறுபோலே யிருக்கை. அதாகிறது - அஹங்காரோபேத மன்றிக்கே பக்த்யுபஹ்ர்தமாயிருக்கை. ஈச்வரனும், "[grantha]" "[grantha]" என்கிற நினைவாலேயும் வத்ஸலனுமிறே யிடுவது. அநந்யப்ரயோஜநன் ஸ்வாமிவிஷயத்திலிடும் சோறு எங்ஙனே யிருக்குமென்னில்; "[grantha]" "விதுராந்நாநிபுபுஜே சுசீநி குணவந்தி ச" என்னும்படி பாவநமுமாய் போக்யமுமாயிருக்கை. "சுசீநி" என்றது - சுத்தங்களா யிருக்கை. சோற்றுக்கு சுத்தியாவது-துர்யோதநன், தன் ஐச்வர்யத்தைப்பற்ற அபிமாநித்தான்; பீஷ்மன், ஜ்ஞாநாதிகனென்று அபிமாநித்தான்; த்ரோணன், வர்ணத்தாலதிகனென்றுஅபிமாநித்தான்; இவையொன்றுமின்றிக்கே பக்த்யுபஹ்ர்தமாயிருக்கை.

(நியதமும்) அதாகிறது - ஐச்வர்யம் ஈச்வரனே கொடுக்கிலும் அஸ்திரமாயிருக்கக் கடவது; அதுஅழிந்தவன்றும் அவ்வைச்வர்ய

த்தை ஸமாதாநம் பண்ணிக்கொடுக்குமவனாகையாலே "நியதமும்" என்கிறது. இத்தாலேயிறே "அர்த்தார்த்தி" என்றும், "ஆர்த்தன்" என்றும் ஐச்வர்யத்துக்கு இரண்டுவகை சொல்லிற்று. அங்ஙன்றிக்கே, தேவதாந்தரங்களைப்பற்றி ஈச்வரனை யில்லைசெய்யுமன்றும் தந்முகேந சோறிடுமவனென்கை. ஸர்வேச்வரனிட்ட சோற்றைத் தின்று அவனை யில்லைசெய்யும் க்ர்தக்நரிறே ஸம்ஸாரிகள்; தன்னை யில்லைசெய்யு மன்றும் ரக்ஷிக்கும் உதாரனிறே ஸர்வேச்வரன். (அத்தாணிச் சேவகமும்) "அத்தாணி" என்று - பிரியாமை; "சேவகம்" என்று - ஸேவை. ஐச்வர்யார்த்திக்கும் அநவரதபாவனையும், அந்திமஸ்ம்ர்தியும் அநந்ய ப்ரயோஜநனோபாதி கர்த்தவ்யமிறே. ஆனால் ஐச்வர்யஸாதநத்தையும், "தந்து" என்று ப்ரயோஜநத்தோடொக்கச் சொல்லுவானென்னென்னில்; ✻ வெள்ளுயிரானபின்பு சொல்லுகிறார்களாகையாலே அந்த ஸாதநமும் ஸ்வயம்ப்ரயோஜநமாயிறே யிருப்பது. அநந்ய ப்ரயோஜநனுக்கு ஸ்வயம் ப்ரயோஜநமானஸேவை ஸாதநமாகக் கிடீர் க்ஷுத்ரமான ஐச்வர்யத்தைத் தந்ததென்கை.

(கைஅடைக்காயும்) தாரகபோஷகங்கள் கீழே சொல்லிற்றாய், மேல் - போக்ய பதார்த்தங்களைத் தந்தபடி சொல்லுகிறது. திருக்கையாலே யிட்ட வெற்றிலைப்பாக்கென்று இவர்கள்பக்கல் கௌரவத்தாலே யிட்ட சீர்மையைச் சொல்லுகிறது. சேஷபூதன் சேஷியைக் குறித்து இடும் ப்ரகாரத்தாலேயிறேசேஷியானவன் சேஷபூதனுக்கு இடுவது. (கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்) தேஹத்தை உத்தேச்யம் என்றிருக்குமவனாகையாலே தன்னுடம்பையலங்கரித்து, அத்தை யநுபவித்திருக்குமவனிறே ஐச்வர்யார்த்தி; பகவத்பரனாய் ஈச்வரனை யலங்கரித்து, ஸதாதர்சநம் பண்ணியிருக்கிறானல்லனே; ஸ்வரூபத்தை யுணர்ந்து ஜ்ஞாந வைராக்ய பக்திகளை ஸ்வரூபத்துக்கு ஆபரணமாக நினைத்திருக்கிறானல்லனே. "கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்" என்று விசேஷிப்பானென்னென்னில்; தன் கண்ணுக்கு அவிஷயமாய், நாட்டார் கொண்டாடுமதுவே தனக்கு ப்ரயோஜநமா யிருக்கையாலே. அவயவாந்தரங்களில் அங்குலீயகாத்யாபரணங்கள் தன் கண்ணுக்கு விஷயமா யிருக்குமிறே. பெருமாள் மீண்டெழுந்தருளின வளவிலே இந்த்ரன் வரக்காட்டின ஹாரத்தைப் பிராட்டியும் தாமுமிருந்து திருவடிக்குப் பூட்டினாப்போலே, ஈச்வரன் பரிந்து "இது கழுத்துக்காம், இது காதுக்காம்" என்று திருக்கையாலே பூட்டின ஆபரணமும். "ప్రదదౌ [illegible]" "ஹ்ரு[illegible] யஸ்ய [illegible]" என்கிறபடியே இந்த்ரன் கொடுத்துவரக்காட்டின ஹாரத்தைப் பெருமாள்வாங்கிப் பார்த்தருளி,

பிராட்டிக்குக் கொடுக்கிறபோது, அத்தை வாங்குகிறவள், பெருமாளை ஒரு திருக்கண்ணாலும் திருவடியை ஒரு திருக்கண்ணாலும் பார்த்து வாங்கினாள். "ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்ஸு கோஸலா:" என்று-பார்வையிற் கருத்தறியுமவ ராகையாலே, அவனுக்குக் கொடுக்கலாகாதோ! என்றருளினர். [த்வதீய-உன்னுடைய] அடியாரோற்றமறிந்துகொண்டாடுகைக் கீடானஸௌபாக்ய முள்ளது உனக்கேயன்றோவென்ன; "உம்முடைய திருவுள்ளத்தாலே யன்றோ நான் கொடுக்கிறது" என்று பிராட்டி விண்ணப்பஞ்செய்ய; நான் முற்பாடனாகப் பெறுமையாலே, உன்னுடைய உகப்பின் கார்யத்தைக் கொடுக்கலாகாதோ என்றார். இப்படி அநந்யப்ரயோஜநனுக்கு ஆதரித்துப் பூட்டினாப்போலே யாய்த்து க்ஷுத்ரனான வென்னை ஆதரித்துப் பூட்டிற்றும்.

(மெய்யிட) திருவடிகளில் ருசிபிறந்தபின்பாகையாலே "உடம்பு த்யாஜ்யம்" என்கிற நினைவு தோன்ற குத்ஸித்துச் சொல்லுகிறபடி. (நல்லதோர் சாந்தமும்) சாந்துதான் இதுக்குத் தர்மாகப் பெற்றதோ!. "ஸர்வகந்த:" "வாஸுதேவ:" என்கிற வடிவுக்கு ஸத்ர்சமாக, குப்ஜை ஆதரித்துச் சாத்தின சாந்துபோலே யிருக்கும் சாந்தையன்றோ எனக் கிட்டது. [ஸுகந்தம் - ஸுகந்தமான] குப்ஜை, கம்ஸனுக்குப் பரணியோடே சாந்து கொண்டுபோகாநிற்க, "வாரீர் பெண்பிள்ளாய், நமக்கும் நம்மண்ணற்கும் சாந்திடவல்லீரோ" என்ன; அவ்வடிவையும் இருப்பையுங் கண்டு, ஸ்த்ரீத்வப்ரயுக்தமான சாபல்யத்தாலே மறுக்கமாட்டிற்றிலள்; "இவர்கள் இடைப்பிள்ளைகள், சாந்தின்வாசி யறியமாட்டார்கள்" என்று ஆக்கனாயிருப்பதொன்றை யிட்டாள்; அத்தைப்பார்த்து, "நாற்றம் கொளுத்தினபடி அழகியது, தளமழகிதன்று" என்ன; அதுக்குமேலே யொரு சாந்தையிட [ராஜார்ஹம் - ராஜார்ஹம்] 'இது கம்ஸனுக்குச் செருக்கிலே பூசலாமித்தனை, வாசியறிந்து பூசுவார்க்குஸத்ர்சமல்ல. அன்றியே, வழக்கனான சாந்தென்னவுமாம். [ருசிரம் - ருசிரம்] ஸௌகந்த்யம் கிடக்க, நிறமழகியதா யிருந்ததென்ன; "இவர்கள் இடைப்பிள்ளைகள் என்றிருந்தோம், சாந்தின்வாசி யறிந்தபடியென்!" என்று ஆதரித்துப்பார்க்க [ருசிராநநே - ருசிராநநே] உன்முகத்திலாதரத்துக்கு ஸத்ர்சமாயிருக்கவேண்டாவோ நீயிடும் சாந்தும் என்ன; அவளும் தலையான சாந்தையிட [உபயோரநுரூபம் - உபயோரநுரூபம்] எங்களுடம்புக்கு ஸத்ர்சமான மேதகவஸ்துவையிட்டு மர்த்தித்துத்தாஎன்றான். அதாவது - "பூசுஞ்சாந்து" என்கிறப்படியே உன்னுடைய ஆதரத்தாலே ஸம்ஸ்க்ர்தமாக்கித்தாவென்றபடி. இப்படி இவள் ஆதரித்துச் சாத்தின மாளிகைச் சாந்தைக் கிடீர் தம் திருக்கையாலே யென்னுடம்பிலே பூசிற்று.

(தந்து) தந்தபோதைத் திருமுகத்தில் கௌரவத்திலும் ஔதார்யத்திலும் தோற்று ஐச்வர்யத்தை விட்டு, அவன்றனே யமையுமென்னும்படி யாய்த்துத் தந்தது. (என்னை வெள்ளுயிராக்கவல்ல) "சோரேணாத்மாபஹாரிணா" "வொரேணாத்மாபஹாரிணா" என்கிறபடியே ஆத்மாபஹாரம் பண்ணி, அதினாலே க்ஷுத்ர ப்ரயோஜநகாமனாய் ஸம்ஸாரியாய்ப் போந்த வென்னை. (வெள்ளுயிராக்கவலல) முன்பு க்ஷுத்ரனாய்ப் போந்தானொருவன் சுத்த ஸ்வபாவனானானென்று தெரியாதபடி "அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரிலே யொருவன்" என்னலாம்படி யாய்த்து விஷயீகரித்தது. (வல்ல) தன்னதொரு ஸ்வபாவ விசேஷத்தாலே வஸ்துவை வஸ்த்வந்தரமாக்க சக்தனென்கை.

(பையுடையித்யாதி) மங்களாசாஸநத்துக்கு விஷயமேதென்ன; அவ்விஷயத்தைச் சொல்லுகிறார். தன்னோட்டை ஸ்பர்சஸுகத்தாலே விகஸிதபணமான நாகத்தினுடைய பகையுண்டு - பெரியதிருவடி, அவனைக் கொடியாக வுடையவனுக்கு. அநந்தசாயியாய் கருடத்வஜனானவனுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறேனென்கை. தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே திருவநந்தாழ்வானோட்டைச் சேர்த்தியால் வரும் அழகு நித்யஸ்ரீயாகவேணுமென்றும் ஏதேனுமொன்றை யபேக்ஷித்து வந்தவர்களையும் எனக்காக்கிக்கொள்ள வல்லேன் என்று கொடிகட்டி யிருக்கிற சக்தி நித்யஸ்ரீயாய்ச் செல்லவேணுமென்றும் திருப்பல்லாண்டு பாடுகிறேனென்கிறார். அநந்யப்ரயோஜநரும் கைவல்யார்த்திகளும் ஸங்கதராகிறவிடத்தில் ஸமூஹமாகப் பேசினார், இதில் ஐச்வர்யார்த்தியை ஏகவசநத்தாலே பேசுவா னென்னென்னில்; அவர்கள் திரள் பரிச்சிந்நமாய் ஐச்வர்யார்த்திகள் திரள் அபரிச்சிந்நமாகையாலே ஒருருக்கு ஒருத்தன் வார்த்தை சொல்லுமாப்போலே சொல்லுகிறார். (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. (உடுத்தித்யாதி) * வாழாளிலேயழைத்து * எந்தை தந்தையிலே வந்து கூடின அநந்யப்ரயோஜநர் பாசுரத்தாலே அவர்களோடே கூடித் திருப்பல்லாண்டு பாடுகிறாரிதில்.

மூ.—உடுத்துக்களைந்த நின்பீதகவாடை யுடுத்துக் கலத்ததுண்டு, தொடுத்ததுழாய்மலர் சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம், விடுத்ததிசைக்கருமந் திருத்தித் திருவோணத் திருவிழவில், படுத்தபைந்நாகணைப் பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டு கூறுதுமே.

ப-ரை.—உடுத்து - திருவரையிலேயுடுத்து, களைந்த - கழித்த, நின் - தேவரீருடைய, பீதகவாடை - திருப்பீதாம்பரத்தை, உடுத்து - உடுத்தும், கலத்தது - அமுதுசெய்து கலத்தில் மிகுந்திருப்பதை, உண்டு - ஸ்வீகரித்தும், சூடிக்களைந்தன - முடித்துக்களையப்பட்டும், தொடுத்த - தொடுத்துமிருந்துள்ள, துழாய்மலர் - துழாய்மலர்களை, சூடும் - சூடிப்போருகிற, இத்தொண்டர்களோம்-

இப்படிப்பட்ட அடியாரிறே நாங்கள்: விடுத்த - ஏவின், திசைக்கருமம் - திக்கி லுள்ள கார்யங்களை, திருத்தி - நன்றாகச்செய்து, திருவோணத்திருவிழவில் - திருவோணமாகிற திருநாளிலே; படுத்த-படுக்கப்பட்டு, பை - ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள, நாகணை - திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே, பள்ளிகொண்டானுக்கு - கண்வளர்ந்தருளுமவனுக்கு, பல்லாண்டுகூறுதும்-மங்களாசாஸநம்பண்ணுகிறோம்.

வ்யா. -- (உடுத்து) திருவரையிலே ஸுஸங்கதமாகச் சாத்துகையாலும் திருவரையிலே முசிகையாலும் தத்ஸம்பந்தம் தோற்றும்படி ஒற்று மஞ்சளாலும் மாளிகைச் சாந்தாலும் சிஹ்நிதமாம்படி யுடுத்து. இவை யித்தனையும் ப்ரார்த்தநீயமாம்படியிருப்பார் சிலர் நாங்கள். சேஷிக்கு மங்களாவஹமாகையும் தத்ஸம்பந்தங்கள் தோற்றின சிஹ்நங்களை யுடைத்தாகையும் சேஷபூதனுக்கு ஸ்மர்தி விஷயமாய்க் கொண்டு ஸர்வகாலமும் ப்ரியகரமாயிறே யிருப்பது. (களைந்த) ஆஸநபேதத்திலே கழித்தால் பொகடும் ஸ்தலம் தங்கள் தலையாம்படியிருக்கை. இதுவும் சேஷபூதனுக்கு ப்ரார்த்தநீயமிறே.

இங்ஙன் ப்ரார்த்தநீயமாக வேண்டுகிறதுக்கு ஹேது சொல்லுகிறது மேல் (நின் பீதகவாடை) வகுத்த சேஷியதாகையாலே சாத்தும் திருப்பரியட்ட மடையத் திருப் பீதாம்பரத்தினுடைய ஆவேசாவதாரமாகை. (நின் பீதகவாடை) "ப்ரக்ருத்யா ஸ்வர்ண வர்ணம் ஸ்வாங்க ஸம்ப்ரவேசே: । விஷ்ணு ஸ்வாங்கத்ய ஏகஸ்யாத் அபரஸ்ய ரூபதாரிணே:" "ஸுமவஸ்த்ர மாஹாம் ரக்தம் பீதாம்பரம் வஸிதம் । விஷ்ணுர்வஸ்த்ரகா ஸம்வ்ருதாஸ்ரித:" என்று சேதநகோடியிலேயிறே திருப்பீதாம்பரத்தைச் சொல்லுகிறது. (உடுத்து) இதிறே அநந்யப்ரயோஜநர்க்கு ஆபரணம். அங்ஙனன்றியே "த்ரைலோக்ய" "ஹஸ்தாநி" என்றிருக்குமவ னுடையாலே இதுதான் சேஷியளவிலே வந்தவாறே ப்ரதிபத்தி வேறுபட்டிருக்கும். ராஜாக்களுக்கு இரட்டைப்பிடித்துக் கொடுக்குமவர்கள் வாக்காகப் பிடித்துத் தங்களரையிலே யுடுத்திருந்து யோக்யமாம்படி பண்ணிக் கொடுப்பர்கள்; அதுவாய்த்து இவனுக்கு நினைவு.

(கலத்ததுண்டு) அமுதுசெய்து கைவாங்கின தளிகை மாற்றினால் ப்ரஸாதம் போஜ்யம். "த்வதீயபுக்தோஜ்ஜிதசேஷபோஜிநா" "த்வதீயஸுக்தாஜ்ஜி தஸேஷபோஜிநா" என்னக்கடவதிறே. ப்ரஸாதமே தாரகமாயிருப்பார் சிலர் நாங்கள். "ஸர்வோச்சிஷ்டம் புஞ்ஜீத" "மஹோராத்ரோ ஷ்டம் ஸுஞ்ஜீத" என்று விதிப்ரேரிதராய்க்கொண்டு ப்ரதிபத்தி பண்ணுவர்கள் ஸ்வரூபஜ்ஞாநமில்லாதார்; ஸ்வரூபஜ்ஞாநமுடையார், தத்ஸித்யர்த்தமாக ப்ரதிபத்திபண்ணுவர்கள்; பகவத்ப்ரேமயுக்தர், ஸ்வயம்ப்ரயோஜநமென்றிருப்பர்கள். இச்சேஷத்வகாஷ்டையான ததீயருடைய ப்ரஸாதம் "தருவரேல்" என்கிறபடியே அதிக்ராதி

காரமாயிருக்கும். ஸர்வஸாதாரணன்தாகையாலே, ப்ரயோஜநாந்தர பரனுக்கும் யோக்யமாயிறே பகவத்ப்ரஸாதமிருப்பது.

(தொடுத்தவித்யாதி) திருத்துழாய் பறிக்கும்போதும் தொடுக்கும்போதும் "அவன் சாத்தியருளப்புகுகிறான்" என்னும் ஆதரத்தாலே ஸம்ஸ்கர்தமாய்ச் சாத்திக்கழித்தால் சூடுமது எங்களுக்கு உத்தேச்யம். சுவடர் பூச்சூடும்போது புழுகிலே தோய்த்துச் சூடுமாப்போலே, தத்ஸ்பர்சத்தாலே விலக்ஷணமாயிருக்குமென்கை. அவன்றானும், சிலர்*சூடிக்கொடுத்த மாலையின் சுவடறியுமவனுகையாலே சூடிக்கொடுக்கிறானிறே. (இத்தொண்டர்களோம்) இப்படிப்பட்ட அடியார்களிறே நாங்கள். எமக்கென்று உடுத்தல் ஜீவித்தல் சூடுதல் செய்யுமவர்க ளன்றிக்கே, அவன் கழித்தவை கொண்டு தேஹயாத்ரையாம்படி யிருக்குமவர்களிறே நாங்கள்.

ஸ்வரூபஸித்த்யர்த்தமாக அத்தலையில் உச்சிஷ்டங்களை ஆகாங்க்ஷித்து, புகையிலுண்பன் என்றிருக்கு மத்தனையோ வென்னில் (விடுத்தவித்யாதி) ஸ்வாமிஸந்தேசகாரிகளாய்க்கொண்டு, இப்படி தேஹயாத்ரை நடத்துமவர்களிறே நாங்கள். (விடுத்ததிசைக்கருமம்திருத்தி) "దేయతాం" "క్రియతాం" என்கிற ஸந்தேசமே தாரகமாக ஏவினகார்யத்தைச் செய்து தலைக்கட்டுகை. திசைக்கருமந்திருத்துகையாவது - அத்திக்குக்கு வேறொருவனை ஏவவேண்டாதபடிசெய்து தலைக்கட்டுகை. ஸ்வாமி யேவினகார்யத்தைக்குறையச்செய்யுமவன் அதமன்; அத்தைக்குறையாமல் தலைக்கட்டுமவன் மத்யமன்; அதுக்குமேலே, அதுக்கு அவிருத்தமான கார்யங்களையும் விசாரித்துச்செய்து தலைக்கட்டுமவன் உத்தமன். "కార్యే కర్మణి నిర్దిష్టే యో బహూన్యపి సాధయేత్। పూర్వకార్యావిరోధేన స కార్యం కర్తుమర్హతి" "கார்யே கர்மணி நிர்திஷ்டே யோ பஹூந்யபி ஸாதயேத் । பூர்வகார்யாவிரோதேந ஸ கார்யம் கர்த்துமர்ஹதி" என்கிற திருவடியிறே அவனுகிறான். "பிராட்டியிருந்தவிடமறிந்துவா" என்றுவிட, இருந்தவிடமுமறிந்து, "அவன்பலமிருந்தபடியென்?" என்று பெருமாள் கேட்டருளினால், "அறிந்திலேன் என்னவொண்ணாது" என்று அத்தலையில் பலபரீக்ஷையும் பண்ணி, ஊரிலரணையும் தலையழித்து, மூலையடியே போம்படி பண்ணிவந்தானிறே. (திருவோணத்திருவிழவில்) ஏவினகார்யத்தைக் குறையறச்செய்தவளவிலும் பர்யாப்திபிறவாமையாலே, திருவவதரித்தருளின திருவோணமாகிற மங்கள திவஸத்திலே என்னதீங்கு வருகிறதோவென்று மங்களாசாஸநம்பண்ணி வர்த்திக்குமவர்கள்.

(படுத்தவித்யாதி) அத்தாலும் பர்யாப்தி பிறவாமையாலே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தபோதை அழகுக்குக் கண்ணெச்சில் வாராமைக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார்கள். படுக்கப்பட்டு ஸ்வஸம்ச்லேஷத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள பணத்

தையுடையனாய், மென்மை குளிர்த்தி நாற்றம் என்கிறவற்றை ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிறவழகுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறோம். ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனையும் மயங்கப்பண்ணும் படுக்கை. அவன் ஸ்வஸ்பர்சத்தாலே விக்ருதனாகப்பண்ணும்; இவனுடைய வடிவும் அவனுடைய வடிவும்; "கிடந்ததோர்கிடக்கை" என்கிறபடியே பரிச்சேதிக்கவொண்ணாத வழகிறே கண்வளர்ந்தருளுகிறபோதை யழகு. ஒரு வெள்ளிமலையிலே காளமேகம் சாய்ந்தாப்போலே கண்வளர்ந்தருளுகிறபோதை பரபாகரஸத்தை அநுஸந்தித்தால் மங்களாசாஸநமொழியச் செல்லுமோவென்கிறார்கள். (கூ)

அ.—பத்தாம்பாட்டு. (எந்நாளித்யாதி) கீழிற் பாட்டில் புகுந்த அநந்யப்ரயோஜநர், தேஹயாத்ரையிலும் தங்கள்பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருக்கிற வேற்றத்தைச் சொல்லிக்கொண்டு புகுந்தார்கள்; இதில், ப்ரயோஜநாந்தரபரர் புகுருகிறார்களாகையாலே, தங்கள்பக்கல் அங்குனிருப்பதோரேற்றம் காண விரகில்லாமையாலே பகவத்ப்ரபாவத்தால் தங்களுக்குப்பிறந்த ஏற்றத்தைச் சொல்லிக்கொண்டுவந்து புகுருகிறார்கள். ஐச்வர்யார்த்தியும் ஸங்கதனாகிறபோது "சாந்தமும்தந்தென்னைவெள்ளுயிராக்கவல்ல" என்று பகவத்ப்ரபாவத்தைச் சொல்லிக்கொண்டுவந்திறேபுகுந்தது. அவன்றான் நானபேக்ஷித்த க்ஷுத்ர புருஷார்த்தத்தைத தந்துவைத்து என்னை சுத்தஸ்வபாவனாக்கினானென்று ஆச்சர்யப்பட்டான்; கைவல்யார்த்திகள், தங்கள் க்ஷுத்ர புருஷார்த்த ஸம்பந்தம் யாவதாத்மபாவி விநாசகரமாகையாலே ஆச்ரயணவேளையிலே மீட்ட ஆச்சர்யத்தைக்கொண்டாடுகிறார்கள்;

மூ.—எந்நாளெம்பெருமா னுன்றனக்கடியோ மென்றெழுத்துப்பட்ட, வந்நாளேயடியோங்க ளடிக்குடில் வீடுபெற்றுய்ந்தது காண், செந்நாள்தோற்றித்திருமதுரையுட்சிலைகுனித் தைந்தலைய, பைந்நாகத்தலைப் பாய்ந்தவனே யுன்னைப் பல்லாண்டு கூறுதுமே.

ப-ரை.—எம்பெருமான் - எம்முடைய ஸ்வாமியே, உன்றனுக்கு - ஸர்வசேஷியான வுனக்கு, அடியோமென்று - சேஷபூதரென்று, எழுத்துப்பட்ட - அடிமைச்சீட்டெழுதிக்கொடுத்த நாள், எந்நாள் - எந்தநாள், அந்நாளே - அந்த நாளே, அடியோங்கள் - தாஸபூதரான நாங்களும், அடிக்குடில் - எங்கள் க்ரஹங்களிலுள்ள புத்ரபௌத்ராதிகளும், அஹங்காரத்தையும் அஹங்காரகார்யமான ஐச்வர்ய கைவல்யங்களையும், வீடுபெற்று - விடப்பெற்று, உய்ந்தது - உஜ்ஜீவிக்கப்பெற்றோம்; செம் - அழகிதான, நாள் - ரோஹிணிநக்ஷத்ரத்திலே, தோற்றி - திருவவதரித்து, திருமதுரையுள்-ஸ்ரீவடமதுரையிலே, கம்ஸனுடைய ஆயுதசாலையிலேபுக்கு, சிலைகுனித்து - வில்லைமுறித்தும், ஐந்தலைய - ஐந்து தலைகளையுடையனாய், பை - பரந்தபடத்தையுடைய, நாகத்தலை - காளியனென்னும் பாம்பின்தலையிலே, பாய்ந்தவனே - குதித்தவனே, உன்னை - உனக்கு, பல்லாண்டுகூறுதும் - மங்களாசாஸநம்பண்ணுகிறோம்.

வ்யா:—(எங்நாள்!)"அந்நாள்" என்னவமைந்திருக்க, "எங்நாள்!" என்கிறது, வகுத்தசேஷிபக்கலிலே க்ஷுத்ரபுருஷார்த்தத்தை அபேக்ஷித்தகாலமா யிருக்கச்செய்தேயும், "ஸுப்ரபாதாச மே நிஶா" "ஸுவ்யுஷ்டாஸ்ய ரஜநீ" என்கிறபடியே மங்களாசாஸநம் பண்ணுகைக்கு யோக்யமாம்படி புகுரநிறுத்தின திவஸமென்று அந்நாளைக்கொண்டாடுகிறார்கள். பகவத்ப்ரபாவந்தான், விஷயீகரித்த திவஸத்தையும் கொண்டாடும்படியா யிருக்குமிறே. அவதாரத்திலேற்றஞ்சொல்லுகிறவளவில் தஜ்ஜந்மதிவஸமென்று அந்நாளும் கொண்டாடப்பட்டதிறே.

ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷித்து வந்தவன், அதுவொழிந்து அநந்யப்ரயோஜந னுகைக்கு அடியென்னென்னில் (எம்பெருமான்) க்ஷுத்ரப்ரயோஜநத்தை அபேக்ஷித்து நிருபாதிக சேஷியான உன் பக்கலிலே வருகையாலே ஸ்வரூப ப்ராப்தமாய் வந்த சேஷத்வமே பலித்துவிட்டது. வகுத்த சேஷியானாலும் அபேக்ஷிதங்களை யொழிய புருஷார்த்தாந்தரங்களைக் கொடுக்கும்போது, அர்த்தி பக்கலிலே ஒரு கைம்முதல் வேண்டாவோ வென்னில் (உன்றனக்கடியோமென் றெழுத்துப்பட்ட) அடியோமென்கிற அர்த்தத்துக்கு வாசகமான சப்தத்திலே எங்களுக்கு அந்வயமுண்டு; நெஞ்சிலின்றிக்கே யிருக்கிலும் வாயிலுண்டான மாத்ரங்கொண்டு தரவல்ல சக்தி யுண்டிறே யுனக்கு. அடிமைக்கு வாசகமான சப்தம் கைவல்யார்த்தி யுடைய உபாஸநத்திலே யுண்டிறே. "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்" 'ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்' என்னக்கடவதிறே. அதவா, ஆரேனும் பக்கலிலே ஏதேனுமொன்றை வேண்டிச் செல்லிலும் நமச்சப்த ப்ரயோகம் பண்ணக்கடவதாயிறே யிருப்பது; அதுவும் ஆத்மயாதாத்ம்ய வாசகமிறே. அதுவே எங்கள் பக்கல் கைம்முதலென்கிறார்கள். "எம்பெருமான்" என்கிற ப்ராப்தியாலும், "உன்றனக்கு" என்கிற சக்தியாலும், "எழுத்துப்பட்ட" என்கிற சப்தமாத்ரத்தாலும் பலிக்கக்கண்டோமென்கிறார்கள். "பட்ட" என்கிறது - "முத்துப்பட்ட" என்கிறாப்போலே. "வாழாட்பட்டு" என்கிறவிடத்திலே அர்த்தத்தினுடைய துர்லபத்வம் சொல்லிற்று; வாசக சப்தத்தினுடைய துர்லபத்வம் சொல்லுகிறது இங்கு. அஹங்கார க்ரஸ்தமான ஸம்ஸாரத்துக்குள்ளே தாஸ்ய ப்ரகாசம் அலப்யலாப மானப்போலே, பஹுஜல்பம்பண்ணிப் போருகிற வாயிலே நமச்சப்தமுண்டாகை அலப்ய லாபமிறே. (அந்நாள்) "எம்பெருமான் உன்றனக் கடியோமென்று எழுத்துப்பட்ட நாள், எங்நாள் - அந்நாள்" என்றந்வயம். "அந்நாளே" என்கிற அவதாரணத்தாலே - அதொழிய எங்கள்பக்கல் ஆநுகூல்ய லேசமுமில்லை யென்று கருத்து.

அத்தால்பெற்றதென்னென்ன; தாங்கள்பெற்ற ப்ரயோஜந பரம்பரைகளைச் சொல்லுகிறார்கள் (அடியோங்களித்யாதி) அடியோங்களாகப்பெற்றோம்; குடிலும் அடிக்குடிலாகப் பெற்றது; வீட்டைலபிக்கப்பெற்றோம்; உஜ்ஜீவிக்கப்பெற்றோம். (அடியோங்கள்) என்கிறார்கள் - அஹங்காரக்ரஸ்தராய் தததநுகூலமான க்ஷுத்ரபுருஷார்த்தத்தை அபேக்ஷித்து உன் திருவடிகளிலேவந்து ஒதுங்கின நாங்கள், அதுபோய் தாஸ்யைகரஸராகப்பெற்றோம். (அடிக்குடில்) "குடில்" என்று - க்ர்ஹம். அத்தாலே-க்ர்ஹஸ்தரான புத்ர பௌத்ராதிகளும் அடியாரரக்ப்பெற்றோம். "நல்லபதத்தால் மனைவாழ்வர்" என்னக்கடவதிறே. எழுத்துப்பட்டது தங்களளவிலேயாகில் புத்ரபௌத்ராதிகள்ளவில் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபடியென்னென்னில்; முத்துப்பட்டதுறையைக் காவலிடுமவன் அசல் துறையையும் காவலிடுமாப்போலே, ஸம்பந்திஸம்பந்திகளளவும் அஹங்கார மமகாரங்கள் புகுராதபடி விஷயீகரித்தானென்கை. இவர்கள் ஸங்கதராகிறபாட்டிலும், "குடிகுடியாட்செய்கின்றோம்" என்றார்களிறே. சேஷிஸந்நிதியிலே சேஷபூதர் க்ர்ஹத்தை "குடில் வளைக்க" என்று சொல்லக்கடவதிறே. (வீடுபெற்று) வீட்டைலபித்து. அதாகிறது-அஹங்கார மமகார கார்யமான ஐச்வர்யகைவல்யங்களாகிற த்யாஜ்யங்களை விடப்பெற்று. ப்ராப்யஸித்தியோபாதி த்யாக ஸித்தியும் ப்ராப்யாந்தர்க்கதமிறே. (உய்ந்ததுகாண்) தாஸ்யம் என்றும் உஜ்ஜீவநம் என்றும் பர்யாயம்போலேகாணும்.

"உய்ந்ததுகாண்" என்று - அறியாதாரை அறிவிப்பாரைப் போலே சொல்லுகிறவிதுக்குக் கருத்தென்னென்னில்; உபகரித்து விஸ்மரித்துப்போவது நீ; நீ பண்ணின உபகாரம் நாங்களுபதேசிக்கக் கேளாயென்கிறார்கள் (செந்நாளித்யாதி) ப்ரயோஜநாந்தரங்களைக் கைவிட்டு அநந்யப்ரயோஜநரானிகோளாகில் இனி க்ர்த்யமென்னென்னில்; உனக்கு மங்களாசாஸநம்பண்ணுகையே க்ர்த்யமென்கிறார்கள்; விஷயமேதென்ன (செம்நாள்) அவதாரத்துக்கு ஏகாந்தமான நாளாகையாலே, அழகிய நாளென்கிறார்கள். (தோற்றி) அதீந்த்ரியமான விக்ரஹத்தை "సకలమనుజనయనవిషయతాంగతః" "ஸகலமநுஜநயநவிஷயதாங்கத:" என்கிறபடியே உகவாதார்கண்ணுக்கும் விஷயமாம்படி தோற்றுவித்து. (திருமதுரையுள்) அதுதானும் நிர்ப்பயமான அயோத்யையிலன்றிக்கே, சத்ருவான கம்ஸன் வர்த்திக்கிறவூரிலே. (சிலைகுனித்து) அவ்வூரில் தங்கவொண்ணாமையாலே திருவாய்ப்பாடியிலேபோய் மறையவளருகிற நீ, மறுத்தும் அவ்வூரிலே புகுந்து கம்ஸனுடைய ஆயுதசாலையிலே புக்கு வில்லை முறித்துப் பூசலைவிளைத்தாய். அநுகூலரடைய "என்வருகிறதோ" என்று வயிறுபிடிக்க வேண்டும்படியான தசையிலே கம்ஸனுக்கு மறம்பிறக்கும்படி சிலுகுபடுத்துவதே!.

(ஐந்தலையவித்யாதி) அதுகிடக்க, நிர்ப்பயமாய் வர்த்திக்கிற காலத்திலே பிறந்த ப்ரமாதமே போராதோ வயிறெரிகைக்கு என்கிறார்கள். (ஐந்தலையபைந்நாகத்தலைப்பாய்ந்தவனே) கடிக்கைக்கு அஞ்சுவாயையுடைத்தாய், க்ரோதத்தாலே விஸ்தீர்த்தமான பணத்தை யுடைத்தான ஸர்ப்பாஸ்யத்திலேயன்றோ புக்கது. "ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ" "ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ வ்ருந்தாவநம் யயௌ" என்று - தமையன் ஒருநாள் போரநிற்க பாம்பின்வாயிலே புகும்படியிறே தீம்பு. "க்ருஷ்ணாவதாரமென்றால் ஆழ்வார்களெல்லாரும் ஒக்கப்பரிவராயிருப்பர்கள், இதுக்கடியென்?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க; "ராமாவதாரத்தில் பிள்ளைகள் தாங்கள் மிடுக்கராய் குணாதிகருமாய், பிதா சம்பராந்தகனுமாய், மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளுமாய், ஊர் அயோத்யையுமாய், காலம் நல்ல காலமுமாயிருக்கையாலே அங்குத்தைக்கு ஒருபயமில்லை; இங்கு, வந்து பிறந்தவிடம் சத்ருக்ருஹமாய், கம்ஸன் இடம்பார்த்துநலியும் துஷ்ப்ரக்ருதிகளை வரக்காட்டும் க்ரூரனுமாய், தமப்பன் இடையனுமாய், ஊர் இடைச்சேரியுமாய், பிள்ளைகள்தாங்கள் தீம்பருமாய், காலம் கலிகாலத்தோடு தோள்தீண்டியாயிருக்கையாலே என்வருகிறதோ! என்று பரிகைக்கு ஆழ்வார்களல்லதில்லைகாணும்" என்றருளிச்செய்தார்.

(உன்னைப்பல்லாண்டுகூறுதுமே) இப்படிப்பட்ட வுன்னை அநுஸந்தித்தால் மங்களாசாஸநமொழியத் தரிக்க விரகுண்டோவென்கிறார்கள். (௧0)

அ.—பதினோராம்பாட்டு. (அல்வழக்கித்யாதி) *அண்டக்குலத்திலே ஆஹூதராய், "நெய்யிடை" என்கிற பாட்டிலே (௧) ஸங்கதரான ஐச்வர்யார்த்திகள் பாசுரத்தாலே திருப்பால்லாண்டு பாடுகிறார்.

மூ.—அல்வழக்கொன்று மில்லாவணிகோட்டியர்கோ னபிமாநதுங்கன், செல்வனைப்போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன், நல்வகையால் நமோநாராயணாவென்று நாமம் பலபரவிப், பல்வகையாலும் பவித்திரனே யுன்னைப் பல்லாண்டு கூறுவனே.

ப-ரை.—திருமாலே - ஸ்ரீய:பதியானவனே, அல்வழக்கு - தப்பானவழக்குகள், ஒன்றும்—, இல்லா - இல்லாததாய், அணி - ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, கோட்டியர் - திருக்கோட்டியூரிலுள்ளார்க்கு, கோன் - தலைவராய், அபிமாநதுங்கன் - "நான்எம்பெருமானுக்கடியேன்" என்கிற அபிமாநத்திலுயர்ந்தவரான, செல்வனைப்போல - செல்வநம்பியைப்போல, நானும் - சேஷபூதனானானும், உனக்கு - சேஷியானவுனக்கு, பழவடியேன்-பழையவடியேனாகையாலே, நல்வகையால் - விலக்ஷணோபாயத்தால், நம: - நான் எனக்குரியேனல்லேன், நாராயணா - ஸர்வஸ்வாமியே, பல்வகையாலும் - ஸர்வப்ரகாரத்தாலும், பவித்திரனே - பரிசுத்தனானவனே, என்று—, நாமம்பல - உன்னுடைய திருநாமங்களையெல்லாம், பரவி - வாயில்வந்தபடி சொல்லி, உன்னை - உனக்கு, பல்லாண்டுகூறுவன் - மங்களாசாஸநம் பண்ணுகிறேன்.

வ்யா.—(அல்வழக்கொன்றுமில்லா) வழக்கல்லாதவை அநேகமிறே; தேஹத்தில் ஆத்மபுத்திபண்ணுகை வழக்கல்ல; * ப்ரக்ருதே:பரமான ஆத்ம வஸ்துவை ஸ்வதந்த்ரமென்று அநுஸந்திக்கை வழக்கல்ல; தேவதாந்தரங்களில் பரத்வபுத்தி பண்ணுகை வழக்கல்ல; பகவத்பஜநத்துக்கு பலம் ப்ரயோஜநாந்தரமென்றிருக்கை வழக்கல்ல; அநந்ய ப்ரயோஜநமானாலும் உபாயாந்தர ஸாத்யமென்றிருக்கை வழக்கல்ல; பகவதநுபவத்தை "மமேதம்" என்றிருக்கை வழக்கல்ல; இனி, "வழக்காவது-சேஷிக்கு மங்களாசாஸநம்பண்ணுகை" என்றிறே யிவரிருப்பது. (அணிகோட்டியர்கோன்) இவையொன்று மின்றிக்கே, "அத்தலைக்கு மங்களாசாஸநம் பண்ணுமதொன்றுமே வழக்கு" என்றுய்த்து அவ்வூரிலுள்ளாரிருப்பது. இதுக்கடியிவர் என்று தங்களுக்கு நிர்வாஹகராக வாய்த்து நினைத்திருப்பது. "அணி" என்று - ஆபரணமாய், ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான வூரென்கை.

(அபிமாநதுங்கன்) அபிமாநம் சேஷத்வ விரோதியாயிருக்க, அத்தால் மிக்கிருப்பனென்பானென்னென்னில்; கர்மத்தால்வந்த துர்மாநமாய்த்து த்யாஜ்யம்; "தாஸோஹம்" என்கிற வைஷ்ணவாபிமாநம் உபாதேயமாகையாலே அத்தால் பூர்ணராயிருப்பனென்கிறது. அதாகிறது-உகந்தருளின நிலங்களிலுண்டான குறைவு நிறைவுகளும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தேஹயாத்ரையில் குறைவு நிறைவுகளும் தம்மதாயிருக்கை. "செல்வன்" என்று - ஸ்வரூப ப்ராப்தமான ஐச்வர்யத்தால் குறைவற்றவனென்கை. அதாகிறது - ஜ்ஞாந பக்தி வைராக்யங்களால் குறைவற்றிருப்பனென்கையும், "లక్ష్మణో లక్ష్మిసమ్పన్నః" "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" என்கிறபடியே "అహం సర్వం కరిష్యామి" "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்றிருக்கையும். (போல) "ఉపమానమశేషాణాం సాధూనాం" "உபமாநமசேஷாணாம் ஸாதூநாம்" என்கிறபடியே ஸாத்விகர்க்குஉபமாநபூமியாயிருக்குமவர்.

இவரை த்ர்ஷ்டாந்தமாக்கிக்கொண்டு, "பழவடியேன்" என்று முன்பு ஐச்வர்யார்த்தியாய் இன்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவன் சொல்லுகை அநுபபந்நமன்றோவென்னில்; கர்மத்தால் வந்த அஹங்காரம்போனால் தாஸ்யம் ஸர்வாத்மாக்களுக்கும் ஸத்தாப்ரயுக்தமாகையாலே சொல்லுகிறார்கள். அதவா, நைஸர்க்கிகமான ஜ்ஞாந முடையார்க்கும் இன்றாச்ரயிக்குமவனுக்கும் வாசிவையாதே விஷயீகரிக்கும் ஈச்வராபிப்ராயத்தாலே சொல்லவுமாம். (திருமாலே) "இவ்வாத்மவஸ்து ஒரு மிதுநசேஷம்" என்று சேஷத்வ ப்ரதி ஸம்பந்தியைச் சொல்லுகிறார்கள். இத்தால்-மாதா

பித்ர்சேஷத்வமும் தேவதாந்தர சேஷத்வமும் கர்மோபாதிகமெ ன்கை. அதவா, தேவரீருக்குப் பிராட்டி நிரூபகபூதையா யிரு க்கிறுப்போலே, எங்களுக்கும் தாஸ்யம் நிரூபக மென்கிறுர்கள் என்றுமாம்.

(நானும்) ப்ரயோஜநாந்தர பரதையாலே அநாதிகாலம் அந்யா ர்ஹனுப் போந்த ந்ானும். சேஷிபக்கலிலே ப்ரயோஜநாந்தரத் தை யபேக்ஷிக்கையாவது - பதிவ்ரதை பர்த்தாவின் பக்கலிலே வ்யிசாரத்தை அபேக்ஷித்தவோபாதியிறே. (உனக்குப் பழவடி யேன்) உனக்கு சேஷித்வம் அநாதியான வோபாதி எனக்கும் சே ஷத்வம் அநாதியென்கை. (உனக்கு) ப்ரயோஜநாந்தரத்தை அபே க்ஷித்துத் திருவடிகளிலே கிட்டினதுவே ஹேதுவாக அநந்யப்ர யோஜநனுக்கவல்ல வுனக்கு.

இந்த ஸ்வரூபஜ்ஞாநம் எவ்வழியாலே பிறந்ததென்னில்; ஸகல வேதாந்ததாத்பர்யமான மந்த்ர ரஹஸ்யத்தாலே பிறந்த தென்கிறுர் மேல் (நல்வகையால்நமோநாராயணு வென்று) நாராயணனுக்கேயுரி யேன், எனக்குரியேனல்லே னென்கை. (நல்வகையால்) முன்பு அர் த்தவிதுரமாக ஜபஹோமாதி முகத்தாலே பிறந்த அந்வயமடையத் தீவகை யென்றிருக்கிறுர்கள்; இதுதான் ஸர்வார்த்த ஸாதகமிறே. "నమో నారాయణాయేతి మన్త్రస్సర్వార్థసాధకః" "നമോ നാരായണായേതി ഉച്ചസ്സര്വാര്ത്ഥസാധകഃ" என்னக்கடவதிறே. (நாமம் பலபரவி) இவர் இவர்களை யழைக்கிறபோது, "அடிதொழு தாயிரநாமம்சொல்லி" என்றுரிறே; அத்தையிறேயிவர்களும் சொல்லுகிறது. (பரவி) அக்ரமமாகச்சொல்லி. ஸாதநமானபோதிறே க்ரமாபேக்ஷை யுள் ளது. முன்பு "மமேதம்" என்றிருந்தவர்களுக்கு மங்களாசாஸந யோக்யராம்படி புகுர நிற்கைக்கு இசைவே வேண்டுவது.

(பல்வகையாலும் பவித்திரனே) ப்ரயோஜநாந்தர பரனை அசுத்தியைப் போக்கி, அதுக்கடியான அஹங்கார மமகாரங்களாகிற அசுத்தியைப்போக்கி, சேஷத்வந் தன்னிலும், மாதா பித்ர் சேஷத் வமென்ன இவ்வோ அசுத்தியைப் போக்கிப் புகுர நிறுத்தினவனே. ஸ்வரூபரூப குணவிபூதிகளைப் ப்ரத்தாலும் பாபஹர னென்னவு மாம். (உன்னைப் பல்லாண்டு கூறுவனே) ஸௌந்தர்யாதிகுண யுக்தனை வுன்னை மங்களாசாஸநம் பண்ணுகிறேன். ஏகவசநத்தா லே - கீழ்ச்சொன்ன புருஷார்த்திகள் மூவர் முகத்தாலும் தாமே திருப்பல்லாண்டு பாடுகிறு ரென்னுமிடந் தோற்றுகிறது. ஐச்வர் யார்த்தி ஸங்கதனுகிற வளவிலும் ஏகவசந மாகையாலே இங்கும் அதுவேயாகிற தென்னவுமாம். (௧௧)

அ.—நிகமம் (பல்லாண்டென்றித்யாதி) இப்ப்ரபந்தத்தை அதிகரித்தார்க்கு பலஞ் சொல்லுகிறதாய், ப்ரேமபரவசராய்க் கொண்டு மங்களாசாஸநம் பண்ணுகிறார். அநந்ய ப்ரயோஜநர்க்கும் தம்மோபாதி பகவத் ப்ரத்யாஸத்தி யுண்டாகையாலே அவர்களையழைத்தார்; ஐச்வர்ய கைவல்யங்களைப் பற்றி ஆச்ரயித்தவர்களும் பகவத் ப்ரபாவத்தாலே மங்களாசாஸநத்துக் காளாவ ரென்று அவர்களை யழைத்தார்; அவ்வளவு மில்லாத ஸம்ஸாரிகளும் தம்முடைய பாசுரத்திலே யிழியவே யாவதாத்மபாவி மங்களாசாஸநார்ஹ ராவர்களென்று இப்ப்ரபந்தத்தின் வைபவத்தை யருளிச் செய்கிறார்.

மூ.—பல்லாண்டென்று பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்க
மென்னும், வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்
தன் விரும்பியசொல், நல்லாண்டென்று நவின்றுரைப்பார்
நமோநாராயணாயவென்று, பல்லாண்டும் பரமாத்மனைச்
சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே.

ப-ரை.—பவித்திரனை - பரிசுத்தனானவனாய், பரமேட்டியை - பரமபதத்தைக் கலவிருக்கையாகவுடையனாய், சார்ங்கமென்னும் - ஸ்ரீசார்ங்கமென்கிற, வில் - வில்லை, ஆண்டான்றன்னை-ஆளுமவன்விஷயமாக, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரி லவதரித்த, விட்டுசித்தன் - பெரியாழ்வார், பல்லாண்டென்று—, விரும்பிய - ப்ரேமத்தாலேயருளிச்செய்த, சொல் - பாட்டுக்களை, நல்லாண்டென்று - சொல்லுகைக்கு ஏகாந்தகாலமென்று நினைத்து, நவின்றுரைப்பார்-இடைவிடாமல் சொல்லுமவர்கள், நமோநாராயணாயவென்று—, பரமாத்மனை - சேதநாசேதநங்களை சரீரமாகவுடையவனை, சூழ்ந்திருந்து - சூழவிருந்து, பல்லாண்டும் - காலமுள்ளதனையும், பல்லாண்டேத்துவர் - மங்களாசாஸநம் பண்ணப் பெறுவர்கள்.

வ்யா.—(பவித்திரனை) ஒருபாதியாலன்றிக்கே ஸ்வதச்சுத்தனானவனை. "[illegible]" "[illegible]" என்னக் கடவதிறே. இத்தால்-அசுசி பதார்த்த ஸம்யோகத்தாலே தத்கததோஷாரஸம்ஸ்பர்ஷ்டனாகையும், ஸ்வஸம்பந்தத்தாலே அசுத்தன் சுத்தனாகையுமாகிற பரமபாவநத்வம் சொல்லுகிறது. அதாகிறது - சேதநாசேதநங்களில் வ்யாபித்தாலும் தத்கததோஷம் ஸ்பர்சியாதொழிகையும், நிர்ஹேதுகமாக நித்யஸம்ஸாரியை நித்ய ஸூரிகளோடே ஒரு கோவை யாக்குகையும். (பரமேட்டியை) பரமே ஸ்தாநே ஸ்திதனானவனை.

(சார்ங்கமென்னு மித்யாதி) இது மஹிஷீபூஷணாயுத பரிஜநங்களுக்கு முபலக்ஷணம்; அங்குள்ளாரையிட்டுத் தன்னை நிரூபிக்க வேண்டும்படியிறே அவர்களுக்குத் தன்னோடுண்டான ப்ரத்யாஸத்தி. (சார்ங்கமென்னும் வில்லாண்டான் றன்னை) சார்ங்கமென்னும்

வில்லென்றேயாய்த்து அதுக்கு ப்ரஸித்தி; மத்தகஜத்தை யாளுமவ னென்னுமாப்போலே, அத்தை யாளுமவ னென்றாய்த்து இவனுக் கேற்றம். "𑌆𑌲𑌿𑌖𑌨𑍍𑌤𑌮𑌿𑌵𑌾𑌕𑌾𑌶 𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯𑌮𑌹𑌦𑍍𑌧𑌨𑌃" "𑌶𑍍𑌰𑍀𑌵𑌜𑍍𑌞𑌶𑌿𑌵𑌾𑌕𑌾𑌣 𑌵𑍇𑌷𑍍𑌟𑌹𑍃𑌹𑍇𑌸𑌨𑌃" என்னக்கடவதிறே. இத்தால்-"மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா" என்கிற விடத்திலே பவித்ரதையை நினைத்து, "பரமேட்டியை" இத்யாதியாலே-இரண்டாம்பாட்டிற் சொன்ன நித்யவிபூதியோகத்தை நினைக்கிறது.

(வில்லிபுத்தூர் விட்டுசித்தன் - பல்லாண்டென்று-விரும்பிய சொல்) இப்போது, பகவத்ப்ராப்திகாமர்,ப்ரயோஜநாந்தர பரர்என்று அடைவடைவே வந்து நின்றாரில்லையிறே; . அவ்வவருடைய பாசுரங்களாலே தாமே யருளிச்செய்தாரொன்னுமிடம் தோற்றுகிற திறே, தம்முடைய வார்த்தையாகத் தாம் தலைக்கட்டுகையாலே. அவர்கள் பாசுரமாக அங்குச் சொல்லிற்று ; ப்ரயோஜநாந்தரபரர்க் கும் பகவத் ப்ரபாவத்தாலே மங்களாசாஸநம் பண்ணுகைக்கு யோக்யதை யுண்டென்னு மிவ்வர்த்தத்தினுடைய ஸ்தைர்யத்துக்காகவும் மங்களாசாஸநத்தில் தமக்குண்டான ஆதராதிசயம் தோற்றுகைக் காகவும். (வில்லிபுத்தூர் விட்டுசித்தன்) அவ்வூரிற் பிறப்பாலே யாய்த்து பகவத் ப்ரத்யாஸத்தி; பகவத் ப்ரத்யாஸத்தியாலே யாய்த்து மங்களாசாஸந யோக்யமான ப்ரேமாதிசயம். "விட்டுசித்தன்" என்கிற திருநாம முண்டாய்த்து - ஆழ்வார் விடிலும் தான்விடமாட்டாதே தன்பேறாக விவர் திருவுள்ளத்தே நித்யவாஸம் பண்ணினபடியாலே. "விட்டுசித்தன்மநத்தே கோயில்கொண்ட கோவலன்" என்னக்கடவதிறே.

(நல்லாண்டென்று)இப்பாசுரஞ்சொல்லுகைக்கு ஏகாந்தமான காலமென்று காலத்தைக் கொண்டாடி. "𑌅𑌦𑍍𑌯𑌮𑍇𑌸𑌫𑌲𑌂𑌜𑌨𑍍𑌮" "𑌸𑍁𑌪𑍍𑌰𑌜𑍇𑌸𑌸𑌹𑌮𑌂𑌜𑌨𑍍𑌮" என்னக்கடவதிறே. கண்டதடைய "மமேதம்" என்றுபோந்த அநாதிகாலம்போலன்றிக்கே,பகவத்ஸம்ர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணக்கடவதாம்படி வந்ததொருகாலம் சேதநனுக்கு ஸுதுர்லபமிறே. (நவின்றுரைப்பார்) நவிலுகை - பயிலுகை. இடைவிடாதே யுரைக்கை.

(நமோநாராயணாயவென்று) அநாதிகாலம் "மமேதம்" என்றத்தைத் தவிருகையும், "தவேதம்" என்கையும். இத்தால் - மங்களாசாஸந யோக்யதை சொல்லுகிறது. (பல்லாண்டும்) காலமெல்லாம். யாவதாத்மபாவி யென்கிறது. காலக்ர்த பரிணாமமில்லாத தேசத்தில் ஆண்டையிட்டுச் சொல்லுகிறது-அந்த பரிணாமமுள்ள தேசத்தில் வர்த்திக்கிறவராகையாலே. (பரமாத்மனை)

தனக்குமேலின்றிக்கே, தன்னையொழிந்தாரடங்க ஸ்வாதீநமாம்படி யிருக்கிறவனை. இத்தால் - அமங்களங்களுக்கு அவகாசமின்றிக்கே யிருக்கையாலே, ஒருவனுடைய மங்களாசாஸநத்தால் ஓரேற்றமுண்டாக வேண்டாதே யிருக்குமவனை.

(சூழ்ந்திருந்தேத்துவர்) "నమఃపురస్తాదథపృష్ఠతస్తేనమోస్తుతే" "நாந்தம் நமத்யம் நபுநஸ்தவாதிம்" என்கிறபடியே-முன்பேநில்லா முறுவலை யநுபவித்து அதிலே யீடுபடும்; பின்பேநில்லா பின்பும் பிறகுவாளியுமான வழகை யநுபவித்து அதிலே யீடுபடும்: இப்படி சுழியாறுபடாநிற்கச்செய்தே, கால்வாங்க வொண்ணாத வடிவழகு அதிசங்கையை விளைத்து மங்களாசாஸநத்திலே மூட்டுமென்கை.

"பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும் வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன் - பல்லாண்டென்று - விரும்பியசொல் நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று - பரமாத்மனைச் சூழ்ந்திருந்து - பல்லாண்டும்-பல்லாண்டு - ஏத்துவர்" என்றந்வயம். (கஉ)

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேச்சரணம்.

அடிவரவு.—பல்அடி வாழ் ஏடு அண்டம் எந்தை
தீ நெய் உடுத்து எந்நாள் அல்வழக்குப்
பல்லாண்டு வண்ணம்.

ஆதிகூறுதும், அநந்தரம் கூறுமின், அண்டம் என்மின், எந்தை பாடுதும், தீ உடுத்து எந்நாள் கூறுதும், நெய்யும் அல்லும் கூறுவனே.

திருப்பல்லாண்டு
ப்ரதிபதவ்யாக்யாநங்கள்
ஸம்பூர்ணம்.





    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

பெரியாழ்வார்திருவடிகளேசரணம்.



## முதலாயிரம்,—பெரியாழ்வார் திருமொழி,

### பெரியஜீயர் வ்யாக்யாநாவதாரிகை:



ஸ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ்வரன், தமக்கு ஸந்நிஹிதனானவளவிலே, ப்ரணவத்தில் சொல்லுகிறபடியே அவனைத்தமக்கு ரக்ஷகனாகவும், தம்மை அவனுக்கு ரக்ஷ்யபூதராகவும் அநுஸந்தித்து, ஸ்வஶேஷத்வாநுரூபமான வ்ருத்திவிஶேஷங்களை அவன்திருவடிகளிலே செய்ய வமைந்திருக்க, அவனுடைய ஸர்வரக்ஷகத்வாதிகளை அநுஸந்திப்பதற்குமுன்னே, முகப்பிலுண்டான ஸௌந்தர்யாதிகளிலே ஆழங்காற்பட்டு அவனைக்குழைச்சரக்காக நினைக்கையாலும், காலாதீதமானவஸ்து காலம் ஸாம்ராஜ்யம்பண்ணும் தேசத்திலேவந்து ஸந்நிஹிதமாவதே! இவ்வஸ்துவுக்கு என்னதீங்கு வருகிறதோ! என்னும்பயத்தாலும், அவனை ரக்ஷ்யபூதனாகநினைத்து, தாம் ரக்ஷகராய்நின்று மங்களாஶாஸநம்பண்ணுகிறவளவில், உபயவிபூதி யுக்தனானநிலையிலே மங்களாஶாஸநம் பண்ணினவளவன்றிக்கே, அவன் ஸம்ஸாரிஸம்ரக்ஷணார்த்தமாக ப்ரதிகூலபூயிஷ்டமான இத்தேசத்திலேவந்து அவதரித்துச் செய்தருளின சேஷ்டிதங்களை அநுஸந்தித்து, அதீதகாலங்களில் அபதாநங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரியும் ப்ரேமஸ்வபாவராகையாலே திருவவதார விஶேஷங்களுக்கு மங்களாஶாஸநம் பண்ணியருளினார் திருப்பல்லாண்டிலே. அதுதன்னிலும் "அந்தியம்போதி லரியுருவாகி யரியையழித்தவனைப் பந்தனைதீரப் பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்று பாடுதும்" என்றும், "இராக்கதர்வாழிலங்கைபாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதும்" என்றும், ஸ்ரீந்ருஸிம்ஹ ப்ராதுர்ப்பாவத்துக்கும் ராமாவதாரத்துக்கும் மங்களாஶாஸநம் பண்ணினவளவன்

றிக்கே; "மாயப்பொருபடைவாணனை ஆயிரந்தோளும் பொழி குருதிபாயச்சுழற்றிய ஆழிவல்லானுக்குப்பல்லாண்டுகூறுதும்" என்றும், "ஐந்தலையபைந்நாகத்தலைப்பாய்ந்தவனே யுன்னைப்பல்லாண்டு கூறுதும்" என்றும், இவர் ப்ராசுர்யேண மங்களாசாஸநம் பண்ணிற்றுக்ருஷ்ணாவதாரத்துக்கேயிறே. ஆழ்வார்களெல்லாரும் "க்ருஷ்ணாவதாரம்" என்றவாறே போரமண்டி யிருப்பர்கள். அதுக்கடி - அல்லாதவவதாரங்கள்போலன்றிக்கே, ஸமகாலமாகையாலே "*ஒரு செவ்வாய்க்கிழமை முற்படப்பெற்றிலோம்! பாவியேன்பல்லிலே பட்டுத்தெறிப்பதே!"என்னும் இழவாலும், பரிவர்தேட்டமான அவதாரமாகையாலே, அத்தை அநுஸந்திக்கையால் வந்தவயிற்றெரிச்சலாலும். ராமாவதாரத்திலே தமப்பனார் சம்பராந்தகனாய் ஏகவீரனா யிருப்பானொருவன், பிள்ளைகள்தாங்களும் ஆண்புலிகள், குடிதானே † வன்னியமறுத்திருப்பதொருகுடி; இவையெல்லாம் ‡ மிகையாம்படி, குணத்தாலே நாட்டையெல்லாம் § ஒருமார்வெழுத்தாக்கிக்கொண்டு இருப்பர்கள்; ஆகையாலே எதிரிகள் என்கிறசப்தமில்லை. இங்ஙனன்றிக்கே, தமப்பனொருஸாது வ்ருத்தன், பிறந்ததும் கம்ஸன்சிறைக்கூடத்திலே, வளர்ந்ததும்அவன்அகத்தருகே; ஸ்ரீப்ருந்தாவநத்திலே எழும்பூண்டுகளகப்படஅஸுரமயமாயிருக்கும். ¶ ரக்ஷகரானவர்கள் ஓரடி தாழநிற்கில் பாம்பின்வாயிலே விழும்படியாயாய்த்து அவன்றன்படி யிருப்பது. இப்படி யானால் வயிறெரியாதிரார்களே இவர்கள். அவர்களெல்லாரையும் போலல்லவிறே க்ருஷ்ணாவதாரத்தில் இவர்க்குண்டான ப்ராவண்யம். அதாவது - "விட்டுசித்தன்மனத்தே கோயில்கொண்ட கோவலன்" என்கிற படியே தான் பிறந்தபடியும் வளர்ந்தபடியும் இவரைக்கொண்டுகொள்கைக்காக, அவன், இவர் திருவுள்ளத்திலே குடிகொண்டிருக்க; "போகத்தில்வழுவாதபுதுவையர்கோன்" என்னும்படி அவதாராநுபவமாகிற

---

* செவ்வாய்க்கிழமை-செவ்வாயினுடையசாரம்; இவ்விடத்திலே - "[Grantha text] என்றதநுஸந்தேயம். † வன்னியமறுத்திருப்பதொருகுடி - குறும்பரான சத்ருக்களைசேதித்திருப்ப தொருகுடி. ‡ மிகையாம்படி - அதிகமாம்படி. § ஒருமார்வெழுத்தாக்கிக்கொண்டிருப்பர்களென்றது - எல்லாரையு மடிமையாக்கிக்கொண் டிருப்பர்களென்றபடி. ஒருமார்வெழுத்தென்றது - மார்வெல்லா மோரெழுத்தென்றபடி. இவ்விடத்திலே, "[Grantha text]" என்கிறதநுஸந்தேயம். ¶ ரக்ஷகரானவர்களென்றது-நம்பிமூத்தபிரானை.

போகத்தில் ஒன்றும் நழுவாதபடி "கண்ணன்கேசவன் நம்பிபிறந்தினில்" என்று அவதார ஸமயமேதுடங்கி அதிலுண்டான ரஸமெல்லாம் தாமேமுற்றூட்டாக அநுபவித்தாரிறே. இனி, இவ்விஷயத்தில் பரிவிலும்வந்தால், அவர்களுக்கு அதுகாதாசித்கமாய் இவர்க்கு நித்யமாயிறே யிருப்பது. ஆக, இப்படி க்ருஷ்ணாவதாராநுபவாதிகளிலே ப்ரவ்ருத்தரான இவர், இவ்வவதாரத்துக் கடிசொல்லுகிற விடத்தில், திருக்கோட்டி யூரினின்றும் வந்து பிறந்தா னென்பானென், "ఏష నారాయణశ్శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః । నాగపర్యఙ్కముత్సృజ్య హ్యాగతో మధురాం పురీమ్" 'ஏஷ நாராயணஸ்ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:। நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்" என்று க்ஷீராப்திநாதன், இவர்கள்கோஷ்டியிலே யெழுந்தருளி இவர்களுடைய ரக்ஷணசிந்தை பண்ணினமை தோற்றும்படி * உரகமெல்லணையானைப் பள்ளிகொண்டருளின ஸ்தலமாகையாலே அந்த ஐக்யத்தைப்பற்றவும், "அல்வழக்கொன்றுமில்லாவணிகோட்டியர்கோன்" என்றும் தமக்குமங்களாசாஸநத்துக்கு ஸஹகாரியானசெல்வநம்பியோடே திருக்கோட்டியூர் ப்ரஸ்துதமாகையாலே அவ்வுகப்பைப் பற்றவும், திருக்கோட்டியூரைத் திருவவதாரகந்தமாக வருளிச்செய்த விதில்விரோதமில்லை. இப்படி க்ருஷ்ணாவதாரரஸத்தை அநுபவிக்கிறவளவில் ருஷிகளைப்போலே கரையிலேநின்று அவதார குணசேஷ்டிதங்களைச் சொல்லிப்போகையன்றிக்கே, பாவநா ப்ரகர்ஷத்தாலே கோபஜன்மத்தை ஆஸ்தாநம்பண்ணி, யசோதாதிகள் சொல்லும் பாசுரத்தை, தாம் அவளாகப்பேசி அநுபவித்துச் செல்லுகிறார்.

---

அவதாரிகை.—திருவவதரித்தருளினவளவில் திருவாய்ப்பாடியிலுள்ளார்பண்ணின உபலாளநாதிகளை அநுஸந்தித்து இனியராகிறார் இத்திருமொழியில்.

மூலம்.—வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பிபி றந்தினில்
எண்ணெய் சுண்ண மெதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தள றாயிற்றே.

வ்யாக்யாநம்.—முதற்பாட்டு. (வண்ணமாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்) "வண்ணநன்மணியும் மரதகமுமழுத்தி நிழலெழும் திண்ணைசூழ் திருக்கோட்டியூர்" என்கிறபடியே-நாநாவிதமான ரத்நங்களைபழுத்திச்சமைக்கையால்வந்த அழகையுடைத்தான மாடங்களாலே சூழப்பட்ட திருக்கோட்டியூரில். (கண்ணன்கேசவன்நம்பி)

ப்ரசஸ்தகேசனாய் பரிபூர்ணகுணனான க்ருஷ்ணன். (பிறந்தினில்) இன் - இல் - பிறந்து; ஸ்ரீமதுரையில் சிறைக்கூடம்போலே பிறந்த விடம் தோன்றாமல்போகவேண்டாதே, எல்லாவுபலாளநத்துக்கும் யோக்கியமான ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகிற இனியஇல்லிலே பிறந்து. அதவா,ப்ரம்ஹ ருத்ராதிகளுக்குக்காரணபூதனாய் பரிபூர்ண குணனானவன் க்ருஷ்ணனாய் வந்தவதரித்த வளவிலென்னவுமாம். (எண்ணெய்சுண்ணம் எதிரெதிர்தூவிட) எண்ணெயையும் மஞ்சள் பொடியையும் ஹர்ஷத்தாலேகளித்து ஒருவர்க்கொருவர்எதிர்த்துத் தூவ. (கண்ணன்முற்றம்) க்ருஷ்ண னவதரித்தபோதே க்ருஹநிர் வாஹகன் பிள்ளையாக ஸ்ரீநந்தகோபர்நினைத்திருக்கையாலே கண்ண னுடைய முற்றமென்னுதல். (கண் நல் முற்றம்) இடமுடைத்தாய் தர்சநீயமான முற்றமென்னுதல். (கலந்தளறாயிற்றே) இவைஇரண் டும் துகையுண்டு தன்னிலேசேர்ந்து சேறாய்விட்டது. (க)

மூ.—ஓடுவார் விழு வாருக ந்தாலிப்பார்
நாடுவார் நம்பி ரானெங்குற் றானென்பார்
பாடுவார் களும் பல்பறை கொட்டநின்
றாடுவார் களு மாயிற்றாய் ப்பாடியே.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (ஓடுவார்) பிள்ளைபிறந்தப்ரீதிப்ரகர் ஷத்தாலே ஸம்ப்ரமித்துஓடுவார். (விழுவார்) ஓடச்செய்தே அளற் றிலேவழுக்கிவிழுவார். (உகந்துஆலிப்பார்) ப்ரீதராய் அந்தப்ரீதிப்ர கர்ஷத்தாலே ஆர்த்துக்கொள்ளுவார். (நாடுவார்)பிள்ளையெங்கே பிள் ளையெங்கேயென்றுதேடுவார். (நம்பிரானெங்குற்றானென்பார்) கண் டிருக்கச்செய்தேயும் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, தங்களுக்கு நிர்வாஹக ரான ஸ்ரீநந்தகோபர்மகனை முதன்மைதோற்றநமக்கு ஸ்வாமியான வன் எங்கேயென்பார். (பாடுவார்களும்) ப்ரீதிக்குப்போக்குவிட்டுப் பாடுவார்களும். (பல்பறைகொட்டநின்று ஆடுவார்களும்) பலவாத் யங்களும் கொட்ட அதுக்கு ப்பொருந்தநின்று ஆடுவார்களும். அங்ஙனன்றிக்கே, சிலர் தங்களுக்குத் தோற்றினபடியே கொட்ட, நிரந்வயமாகக் கூத்தாடுவார்களும் என்னுதல். "பாடுவார்களும்" இத்யாதிக்கு ஒக்க,கீழ்ச்சொன்னவையெல்லாவற்றையும்,ஓடுவாரும் விழுவாரும் என்று இங்ஙனே ஸமுச்சயித்துக்கொள்வது. (ஆயிற் றாய்ப்பாடியே) இப்படி திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம்குடியிலுள் ளாரில் ஒருத்தரும் விக்ருதராகாம லிருந்தாரில்லையென்றபடி. (உ)

மூ.—பேணிச் சீருடைப் பிள்ளைபி றந்தினில்
காணத் தாம்புகு வார்புக்குப் போதுவார்
ஆணொப் பாரிவ னேரில்லை காண்திரு
வோணத் தானுல காளுமென் பார்களே.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பேணிச்சீருடைப் பிள்ளைபிறந்தினில்) சீருடைய பிள்ளை பேணிப்பிறந்தினில். அவதரித்தபோதே மாதாபிதாக்கள் சொல்லிற்றுச் செய்கையாலே சீருடைய பிள்ளை யென்கிறது. சீர்-குணம். அதாவது-சிறைக்கூடத்தில்திருவவதரித்த போதை திவ்யவேஷத்தைக்கண்டு கம்ஸன் நிமித்தமாக பயப்பட்ட மாதாபிதாக்கள் "உபஸம்ஹர" "உபஸம்ஹர" என்றுஅபேக்ஷிக்க,அப்போதே அந்த திவ்யவேஷத்தை மறைத்தானிறே. இப்படி உகவாதார் கண்படாதபடி தன்னைப் பேணிக்கொடுவந்து திருவாய்ப்பாடியிலே பிறந்தவளவில். கம்ஸனுக்குப் பிழைத்துத் திருவாய்ப்பாடியிலே புகுந்தபின்புகாணும் இவர் பிறந்தானாக நினைத்திருக்கிறது. (காணத்தாம்புகுவார்) பிள்ளையைக்காண வாசைப்பட்டுத் தாங்கள் புகுவார். (புக்குப்போதுவார்)புக்குக்கண்டுபுறப்படுவார். (ஆணொப்பாரித்யாதி) ஸாமுத்ரிக லக்ஷணம்போவார் இவனைப் பார்த்து, பும்ஸ்த்வஸாம்யமுடையவர்களில் 'இவனுக்கு ஸத்ருசரில்லைகாண் என்பாரும், இவனுடையலக்ஷண மிருந்தபடியால் திருவோணத்தானான ஸர்வேச்வரனுடைய லோகமெல்லாம் இவன் ஆளும் என்பாருமாய், இப்படி ப்ரீதிவ்யவஹாரம்பண்ணினார்களென்கை. அன்றிக்கே, "ஆணொப்பான் இவன் நேரில்லை" என்று பாடமானபோது, ஆணொப்பென்றது - ஆண்படி; அதாவது - பும்ஸ்த்வலக்ஷணம். ஒப்பானென்றது - ஒப்பாமென்றபடியாய், பும்ஸ்த்வலக்ஷணத்தால் இவனுக்கு எதிரில்லையென்று பொருளாகக்கடவது. புகுவாரும், போதுவாரும், உலகாளும் என்பார்களுமானார்கள். (ங)

மூ.—உறியை முற்றத்து ருட்டிநின் றாடுவார்
நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்
செறிமென் கூந்த லவிழத்தி ளைத்தெங்கும்
அறிவ ழிந்தன ராய்ப்பாடி யாயரே.

வ்யா.—நாலாம்பாட்டு. (உறியைமுற்றத்துருட்டிநின்றாடுவார்) நறுவிதான நெய்யும் பாலும் தயிரும் இருக்கிற உறிகளை, த்ரவ்ய கௌரவம் பாராமல் அறுத்துக்கொடுவந்து ப்ரீதிபாரவச்யத்தாலே முற்றத்திலேயுருட்டி நின்றாடுவார். (நறுநெய்பால்தயிர் நன்றாகத் தூவுவார்) க்ருத க்ஷீர தத்யாதிகளை "பிள்ளைக்கு நன்மை உண்டாக வேணும்" என்றுதானம்செய்வார். (செறிமென்கூந்தலவிழத்திளைத்து) செறிந்துமெத்தென்ற மயிர்முடி யவிழும்படி ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி. (எங்குமறிவழிந்தனர் ஆய்ப்பாடியாயரே) திருவாய்ப்பாடியிலுள்ள கோபரானவர்கள் எங்குமொக்க உகவைதலைமண்டையிட்டு க்ருத்யாக்ருத்ய விவேகசூன்யரானார்கள். சிலர் உறியை முற்றத்துருட்டிநின்றாட, சிலர் நறுநெய்பால்தயிர் நன்றாகத்தூவ, சிலர்

செறிமென்கூந்தலவிழத்திளைத்து, இப்படி ஆய்ப்பாடியாயர் - எங்கும் அறிவழிந்தனரென்றுக்ரியை. (ச)

மூ.—கொண்ட தாளுறி கோலக் கொடுமழுத்
தண்டி னர்பறி யோலைச்ச யனத்தர்
விண்ட முல்லை யரும்பன்ன பல்லினர்
அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாடினர்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கொண்டதாளித்யாதி) கால்நெருக்கத்தையுடைத்தானஉறிகளையும்,*பரிசுஉண்டாய்க்கூரியதானமழுக்களையும் ஜாத்யுசிதமான தடிகளையுமுடையராய், § மடலில்நின்றும் பறிக்கப்பட்ட ஓலையாலேகோத்துச்சமைத்தசையையுமுடையராய்க்கொண்டு, ஹர்ஷம்தோற்றஸ்மிதம் பண்ணுகையாலே முல்லையரும்புவிண்டாற்போலே யிருக்கிற பல்லையுடையரான கோபரானவர்கள், நெருங்கிப்புகுந்து நெய்யாடலாடினர்களென்கை. "விண்டின்முல்லை" என்று பாடமானபோது, விண்டென்று - குன்றாய், குன்றின் முல்லைநெருங்கப்பூத்தாற்போலே யிருக்கிற பல்லரென்னவுமாம். இடைக்கூத்தாடுவார் தோற்றுப் பல்லராயாயிற் றிருப்பது. அண்டர் - தேவரும், இடையரும். இவ்விடத்தில் - இடையனைச் சொல்லுகிறது. (ரு)

மூ.—கையும் காலும் நிமிர்த்துக் கடாரநீர்
பைய வாட்டிப் பசும்சிறு மஞ்சளால்
ஐய நாவழித் தாளுக்கங் காந்திட
வைய மேழும் கண்டாள்பிள்ளை வாயுளே.

வ்யா.—ஆறும்பாட்டு. (கையும்காலும்நிமிர்த்து)திருமஞ்சனம் செய்கைக்குடலாகத் திருக்கைகளையும் திருவடிகளையும் நீட்டி, திருமேனியின் மார்த்தவத்துக் கநுகுணமாக நிமிர்த்து. (கடாரநீர்பையவாட்டி) திருமேனிக்கு அநுகுணமான ஔஷதிங்களும் ஸுகந்தத்ரவ்யங்களும்கூட்டிக் காய்ச்சினகடாரத்தில் திருமஞ்சனத்தாலே திருமேனி யலையாமல் மெள்ளத்திருமஞ்சனம் செய்து. (பசும்சிறு மஞ்சளால்) இது - கீழும்மேலும் அந்வயித்துக்கிடக்கிறது. குறும் கண்ணை பசுமஞ்சளைச்சாத்தியாய்த்து நீராட்டிற்றும். (ஐயநாவித்யாதி)அப்படியிருந்துள்ள மஞ்சளாலேமெல்லிதான திருநாவை வழித்தவளுக்கு அதுக்கு உடலாக அங்காந்திட, பிள்ளையுடைய வாயுள்ளே ஸகலலோகங்களையும் கண்டாளென்கை. அதுக்கடி-அர்ஜுநனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்து வைச்வரூப்யம் காட்டினாற்போலே, இவளுக்கும்திவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்து தன் வைபவத்தைக்காட்டுகையிறே. (சு)

*பரிசு - அழகு. § மடலில் - தாழைமடலில்.

மூ.—வாயுள் வையகம் கண்ட மடநல்லார்
ஆயர் புத்திர னல்லன ருந்தெய்வம்
பாய சீருடைப் பண்புடைப் பாலகன்
மாய னென்றும கிழ்ந்தனர் மாதரோ.

வ்யா.—ஏழாம்பாட்டு. (வாயுள்வையகம் கண்டமடநல்லார்) இப்படி திருப்பவளத்தினுள்ளே லோகங்களைக்கண்ட பவ்யதையையும்ஸ்நேஹத்தையுமுடையவர்கள். "வையமேழும்கண்டாள்பிள்ளை வாயுள்" என்று-கீழ் ஒருத்தியாகச்சொல்லிற்றேயாகிலும், அநுபாஷணத்திலே பலராகச்சொல்லுகையாலே, பின்னையும் கூடக்கண்டவர்களுண்டென்று கொள்ளவேணும். அதாவது - இவள்கண்டவநந்தரம், அருகு நின்றவர்களுக்கும் காட்ட, அவனும், தன் வைபவம் எல்லாரும் அறிகைக்காக அவர்களுக்கும் திவ்யசக்ஷுஸ்ஸைக் கொடுத்துக்காட்டக்கூடுமிறே. (ஆயர்புத்திரனல்லனரும்தெய்வம்) ஸ்ரீநந்தகோபர்மகனல்லன், பெறுதற்கரிய ஸர்வேச்வரன். (பாயசீருடைப் பண்புடைப்பாலகன்) பரம்பின கல்யாணகுணங்களையுடையனாய் † நீர்மையுடையனான சிறுப்பிள்ளை. (மாயன்) ஆச்சரியசக்தியுக்தன். (என்றுமகிழ்ந்தனர் மாதரோ) இப்படிசொல்லி மிகவும் ப்ரீதைகளானார்கள் ஸ்த்ரீகளென்கை. வாயுள்வையகம்கண்ட மடநல்லாரான - மாதர்-பாயசீருடைப்பண்புடைப்பாலகன் - ஆயர்புத்திரனல்லன் அரும்தெய்வம்-மாயனென்றுமகிழ்ந்தனர் என்றந்வயம்.(எ)

மூ.—பத்து நாளும் கடந்தவி ரண்டாநாள்
எத்தி சையும் சயமரம் கோடித்து
மத்த மாமலை தாங்கிய மைந்தனை
உத்தா னம்செய் துகந்தன ராயரோ.

வ்யா.—எட்டாம்பாட்டு. (பத்துநாளும்கடந்தவிரண்டாநாள்) பத்துநாளும்கடந்த விரண்டாம்நாளான நாமகரண திவஸத்திலே. (எத்திசையும் சயமரம் கோடித்து) எல்லா திக்குக்களிலும் ஜயஸூசகமானதோரணம் நாட்டி அலங்கரித்து. (மத்தமாமலைதாங்கிய மைந்தனை) வர்ஷாபத்ரக்ஷணார்த்தமாக, மத்தகஜங்களையுடைத்தான பெரியமலையை தரித்துக்கொண்டுநின்றமிடுக்கனை. பிற்பாடராகையாலே, தத்காலத்திலன்றிக்கே, பிற்காலத்திலுள்ள சேஷ்டிதங்களையும் அவ்வஸ்துவுக்கு நிரூபகமாக்கி அருளிச்செய்பலாமிறே ஆழ்வார்க்கு. (உத்தானம்செய்து உகந்தனர் ஆயரே) இடையரெல்லாரும் ஸ்நேஹாதிசயத்தாலேதனித்தனியேதந்தாம்கைகளிலே யெடுத்துக் கொண்டு ப்ரீதரானார்களென்கை.　(அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. திருவவதரித்தவளவில் ஊரடங்கலும் செய்த உபலாளநவிசேஷங்களை அநுஸந்தித்து இனியரானார் - கீழ்;

† நீர்மை - சீலகுணம்.

இப்பாட்டில் - பருவத்துக்குத் தகுதியல்லாத சேஷ்டிதங்களை யநுஸந்தித்து, திருத்தாயார், ஸந்நிஹிதரானவர்களுக்குச்சொன்ன பாசுரத்தை, அவளானபாவனையாலே தாம் அநுபவித்து இனியராகிறார்.

மூ.—கிடக்கிற் றொட்டில் கிழியவு தைத்திடும்
எடுத்துக் கொள்ளின் மருங்கையி றுத்திடும்
ஒடுக்கிப் புல்கிலு தரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால் நான்மெலிந் தேன்நங்காய்.

வ்ய.—(கிடக்கிலித்யாதி)தொட்டிலிலேவளர்த்தினால்அதிலே கிடந்தானாகில் தொட்டில் கிழியும்படி உதையாநிற்கும். (எடுத்துக் கொள்ளில் மருங்கையிறுத்திடும்) "திருவடிகளின்மார்த்தவத்துக்கு இதுபோராது" என்று அஞ்சி ஒக்கலையிலே எடுத்துக்கொள்ளில், புடைபெயர்ந்து ஒக்கலையை முறியாநிற்கும். (ஒடுக்கிப்புல்கில் உதரத்தேபாய்ந்திடும்) "இது அத்திருமேனியின் மார்த்தவத்துக்குப் போராது" என்றுவ்யாபாரக்ஷமனல்லாதபடி ஒடுக்கிமார்விலே இட்டுக்கொள்ளில்,திருவடிகளாலேவயிற்றிலேபாயாநிற்கும்.(மிடுக்கிலாமையால் நான்மெலிந்தேன்நங்காய்) இந்தசேஷ்டிதங்களையெல்லாம் பொறுக்கவல்லசக்திபிள்ளைக்குப்போராது என்றுநான்போர இளைத்தேன். நங்காயென்று - ஜாத்யேகவசநமாய், நங்கைமீ ரென்றபடி. நீங்களெல்லாரும்பருவத்துக்குத்தக்கசேஷ்டிதங்களையுடையபிள்ளையைப்பெற்று வளர்க்கையாலே பூர்ணைகளாயிருக்கிறீர்க ளித்தனை.

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—செந்நெ லார்வயல் சூழ்திருக் கோட்டியூர்
மன்னு நாரண னம்பிபி றந்தமை
மின்னு நூல்விட்டு சித்தன்வி ரித்தவிப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே.

வ்ய.— (செந்நெலித்யாதி) செந்நெலாலே நிறைந்திருக்கிற வயல்களாலே சூழப்பட்ட திருக்கோட்டியூரிலே,அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனாய்க்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிற, நாராயண சப்தவாச்யனாய் கல்யாணகுணபூர்ணனானவன் திருவவதரித்த ப்ரகாரத்தை. (மின்னுநூல்விட்டு சித்தன்விரித்த) பட்டர்பிரா னென்கையாலே விளங்காநின்றுள்ள திருயஜ்ஞோப வீதத்தை யுடையராய், ஸர்வவ்யாபகனான ஸர்வேச்வரனைத் தம்திருவுள்ளத்திலே வைத்துக் கொண்டிருக்கையாலே விஷ்ணுசித்தரென்னும் திருநாமத்தையுடையரான பெரியாழ்வார், திருவவதரித்த காலத்தில் உபலாளநாதிகளோடேகூட விஸ்தரேண அருளிச்செய்த. (இப்பன்னுபாடல்

வல்லார்க்கில்லை பாவமே) ரஸ்யதையாலே விசேஷஜ்ஞரானவர்கள் எப்போதும் சொல்லும்படியான இப்பாடலை ஸாபிப்ராயமாக வல்லவர்களுக்கு பகவதநுபவ விரோதியான பாபமில்லை. (க0)

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

---

அடிவரவு—வண்ணமோடு பேணியுறிகொண்டகைவாய்ப்பத்துக் கிடக்கில் செங்கெல் சீத.

ஆக - திருமொழி, க-க்கு பாட்டு-க0.

---

அ.—கீழிற்றிருமொழியிலே, "திருக்கோட்டியூர்கண்ணன்கேசவன்நம்பிபிறந்தினில்" என்றுதுடங்கி, "திருக்கோட்டியூர்மன்னுநாரணன் நம்பிபிறந்தமை" என்று தலைக்கட்டுகையாலே திருவவதரித்தருளின ப்ரகாரத்தை தத்காலோபலாளநங்களோடேகூட அநுபவித்து ஹ்ருஷ்டராயருளிச்செய்தார்; இனிமேல், இப்படி திருவவதரித்தருளினவனுடைய திவ்யவிக்ரஹ வைலக்ஷண்யத்தை தத்தத்காலத்தில் யசோதைப்பிராட்டி அநுபவித்தாற்போலே, தத்பாவயுக்தராய்க்கொண்டு திருவடிகளில்நின்றும் திருமுடியளவாக அநுபவித்த ப்ரகாரத்தை, அப்போது அவள்பேசின பாசுரத்தாலே ஆதரம்தோற்ற வருளிச்செய்கிறார்.

மூ.—சீதக் கடலுள் ளமுதன்ன தேவகி
　　கோதைக் குழலாள சோதைக்குப் போத்தந்த
　　பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
　　பாதக் கமலங்கள் காணீரே பவளவா யீர்வந்து காணீரே.

வ்யாக்யானம்.— முதற்பாட்டு. (சீதக்கடல் உள்ளமு தன்ன தேவகி)அகாதமாகையாலே குளிர்த்திமாருதஸமுத்ரத்திலே தேவபோக்யமாகப் பிறந்த அம்ருதம் புறவமுதாம்படி, "அமுதில்வரும் பெண்ணமுது" என்கிறபடியே உள்ளமுதாகப்பிறந்த பிராட்டியோடொத்த தேவகிப்பிராட்டி. அதாவது - அவள் பரோபகாரசீலையானாற்போலே, இவளும் பரோபகார சீலையென்றபடி. (கோதைக் குழலா ளசோதைக்குப்போத்தந்த) பூமாலையாலே அலங்க்ருதமான குழலையுடைய யசோதைப்பிராட்டிக்கு, போகவிட்ட - வரவிட்டவென்றபடி. போத்தந்தவென்று - ஒருமுழுச்சொல்லு. (பேதைக் குழவி) "ಮುಗ್ಧಃ" "ಶಿಶುಃ" என்னுமாபோலே. பேதை - பருவத்துக்குத் தக்கவறிவில்லாமை. குழவி - பருவம். (பிடித்துச் சுவைத்துண்ணும்) திருக்கையாலே பிடித்துத் திருப்பவளத்திலே

வைத்து ஆஸ்வாதித்துபுஜிக்கும். இத்தால்—“விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:” “விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:” என்றும், “தேனேமலரும் திருப்பாதம்”என்றும்சொல்லக்கேட்டிருக்கையாலே திருவடிகள்தன்னின் போக்யதைதன்னை பரீக்ஷிக்கைக்காக, பருவத்துக்கு அநுகுணமான வ்யாபாரம் செய்வாரைப்போலே செய்தானுதல்; “வையமேழும் கண்டாள்” என்னும்படி திருவயிற்றிற்கிடக்கிற லோகங்களுக்கு, சிறைச்சோறுக்கினு னுதல். (பாதக்கமலங்கள் காணீரே) இப்படியிருந்துள்ளதிருவடித்தாமரைகளைவந்து காணுங்கள். கமலமென்கையாலே - திருவடிகளிலுண்டான நிறத்தையும், சைத்ய மார்த்தவ ஸௌரப்யாதிகளையும் சொல்லுகிறது. (பவளவாயீர்வந்துகாணீரே) பவளம்போலே சிவந்தஅதரத்தையுடையீர்வந்துகாணுங்களென்று, யசோதைப்பிராட்டி, தான்அநுபவித்த அம்சத்தை ஸஜாதீயைகளாய் அநுபுபூஷுக்களா யிருப்பாரையும் ச்லாகித்துக் கொண்டு அழைத்துக்காட்டின பாசுரத்தாலே அருளிச்செய்தாராய்த்து. (க)

அ.—இரண்டாம்பாட்டு. திருவடிகளின் அகவாயை அநுபவித்தாராய் நின்றார்கீழ்; இப்பாட்டில் - திருவடிகளின் திருவுகிருடனே திருவிரற்களை யநுபவிக்கிறார்.

மூ.—முத்து மணியும் வயிரமு நன்பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற் போலெங்கும்
பத்து விரலு மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட் டிருந்தவா காணீரே யொண்ணுதலீர்வந்து காணீரே.

வ்யா.—(முத்துமித்யாதி) திருவடிகளுக்குச் செம்பஞ்சுசாத்துகிறபோது ஒன்பதுவிரலுக்கும் நவரத்நவர்ணத்தையும், மற்றொரு விரலுக்கு ஸ்வர்நவர்ணத்தையும் பரபாகம்தோற்ற மாறிமாறிச்சாத்துகையாலே நீலரத்நம்போன்றவடிவையுடையவனுடைய திருவடிகளில்பத்துவிரலும்,முத்துமாணிக்கம்வயிரம்முதலான நவரத்நங்களையும் நல்லபொன்னையும்மாறிமாறிப்பதித்துச்சேர்த்தாற்போலேயாய், திருவிரல்களினுடைய லக்ஷணத்தில் ஒன்றும் குறைவின்றிக்கே எங்கும் தன்னில்சேர்ந்திருந்தபடியைக் காணுங்கள்; ஒள்ளியநுதலையுடையநீங்கள் வந்துகாணுங்களென்கை. முத்தும் மணியும் வயிரமுமென்றவிது-அல்லாதரத்நங்களுக்கும் உபலக்ஷணம். நுதல்-நெற்றி.

அ.—மூன்றாம்பாட்டு. திருவடிகளை அநுபவித்த வநந்தரம், திருக்கணைக்காலினழகை யநுபவிக்கிறார்.

மூ.—பணைத்தோளி ளவாய்ச்சி பால்பாய்ந்த கொங்கை
அணைத்தார வுண்டு கிடந்த விப்பிள்ளை

இணைக்காலில் வெள்ளித் தளைநின் றிலங்கும்
கணைக்கா லிருந்தவா காணீரே காரிகை யீர்வந்துகாணீரே.

வ்யா.—(பணைத்தோ ளிளவாய்ச்சி) பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேய்போலேயிருந்துள்ள தோளையுடையளாய், பருவத்தால் இளையளுமான ஆய்ச்சியுடைய. இப்போது இவளை வர்ணிக்கிறது, அழகுக்கும் பருவத்துக்குமீடாக போகபரவசையா யிருக்கையன்றிக்கே, பிள்ளையை ஸ்நேஹித்து நோக்கிக்கொண்டு போருமவளென்னுமிடம்தோற்றுகைக்காக.(பால்பாய்ந்த கொங்கை) ஸ்நேஹத்தாலே நெறித்துப் பால்சொரிகிற முலையை. (அணைத்தாரவுண்டுகிடந்தவிப்பிள்ளை) திருக்கைகளாலேஅணைத்து வயிறாரவுண்டு அத்தாலே ஹ்ருஷ்டனாய்க்கிடந்த விப்பிள்ளையுடைய. (இணைக்காலிலித்யாதி) அந்யோந்யம் சேர்த்தியழகையுடைய திருவடிகளில் வெள்ளித்தண்டைநின்று விளங்காநிற்கிற கணைக்காலின் அழகிருந்தபடியை, அநுபவ யோக்யரானவர்கள் வந்துகாணுங்கள். (காரிகையீர்வந்துகாணீரே) அழகுடையவர்களாகையாலே அழகின் வாசியறியும்நீங்கள் வந்து காணுங்கள். (ரு)

அ.—நாலாம்பாட்டு. திருக்கணைக்காலினழகையநுபவித்தவநந்தரம், திருமுழந்தாளினழகை யநுபவிக்கிறார்.

மூ.—உழந்தா ணறுநெய் யோரோத டாவுண்ண
இழந்தா ளெரிவினு லீர்த்தெழில் மத்தின்
பழந்தாம் பாலோச்சப் பயத்தாற் றவழ்ந்தான்
முழந்தா ளிருந்தவா காணீரே முகிழ்முலையீர்வந்து காணீரே.

வ்யா.—(உழந்தாள்)ஆயாஸித்தவள்.கறந்துகாய்த்துத்தோய்த்துக்கடைந்து வெண்ணெயாக்கி யுருக்கித் தடாக்களிலே சேர்த்துவைத்த வருத்தத்தையெல்லாம் சொல்லுகிறது. (நறுநெய் ஓரோதடாவுண்ண) நறுவிதான நெய்யை ஒவ்வொருதடாவாக ஒன்றும் சேஷியாதபடியுண்ண. (இழந்தாள் எரிவினுல் ஈர்த்து) "உண்டநெய் பிள்ளைக்கு ஸாத்மியாது" என்று பிள்ளையை இழந்தாளாக நினைத்து, பயப்படுகையால்வந்த வயிற்றெரிச்சலாலே கையைப்பிடித்திழுத்து. (எழில்மத்தின்பழம்தாம்பாலோச்ச) அழகியமத்திலே சுற்றிக்கடைந்து பழகின தாம்பாலே அடிப்பதாக ஓங்க. (பயத்தால்தவழ்ந்தான்) பயத்தாலே அத்தைத்தப்புவதாகத் தவழ்ந்தவனுடைய. (முழந்தாளிருந்தவாகாணீரே) முழந்தாளின் அழகிருந்தபடியைக்காணுங்கள். (முகிழ்முலையீர் வந்துகாணீரே) முகிழ்த்தமுலையையுடையீர் வந்து காணுங்கள். (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. முழந்தாளினழகை யநுபவித்த வநந்தரம், திருத்துடையினழகை யநுபவிக்கிறார்.

மூ.—பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத் துண்டிட்
டுறங்குவான் போலே கிடந்தவிப் பிள்ளை
மறங்கொ ளிரணியன் மார்வைமுன் கீண்டான்
குறங்குகளைவந்து காணீரே குவிமுலை யீர்வந்து காணீரே.

வ்யா.— (பிறங்கியபேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு) க்ரௌர்யத்தால்வந்த ப்ரகாசத்தையுடையளான பூதனையுடைய முலையைப் பசையறச்சுவைத்து புஜித்து. உண்டிட்டு என்று - ஒருமுழுச்சொல்லு. (உறங்குவான்போலே கிடந்தவிப்பிள்ளை) செய்த பராக்ரமம் ஒன்றும் தெரியாதபடி உறங்குமவன்போலக் கிடந்த விப்பிள்ளை. (மறங்கொளித்யாதி) ப்ரஹ்லாதவிஷயமான சீற்றத்தையுடையனான ஹிரண்யனுடைய மார்வை முற்காலத்திலே பிளந்து பொகட்டவனுடைய அச்சுவடுதோற்றும்படி யிருக்கிற திருத்துடைகளைவந்து காணுங்கள். (குவிமுலையீர்வந்துகாணீரே) குவிகிறமுலையையுடைய நீங்கள் வந்து காணுங்கள். (ரு)

அ.—ஆறும்பாட்டு. திருத்துடையினழகை யநுபவித்தவநந்தரம், திருக்கடிப்ரதேசத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—மத்தக் களிற்று வசுதேவர் தம்முடை
சித்தம் பிரியாத தேவகி தன்*வயிற்றி
லத்தத்தின் பத்தாநாட் டோன்றிய வச்சுதன்
முத்த மிருந்தவா காணீரே முகிழ்நகையீர்வந்து காணீரே.

வ்யா.—(மத்தவித்யாதி) மத்தகஜங்களை யுடையரான ஸ்ரீவஸுதேவர் தம்முடைய ஹ்ருதயத்துக்குத்தகுதியாகப்பரிமாறுகிற தேவகிப்பிராட்டிதன் வயிற்றிலே. (அத்தத்திணித்யாதி) அத்தத்துக்குப் பத்தாநாளிலே. மங்களாசாஸந பரராகையாலே விரோதிகள் அறிந்து அபிசரிக்கைக்கு அவகாசமில்லாதபடி திருவவதரித்த நாளை மறைத்தருளிச் செய்கிறார். (தோன்றிய வித்யாதி) "అచ్యుతభానునా-దేవకీపూర్వసంధ్యయా మావిర్భూతమ్" "சுவு)ஹ தஹா நஹநா- ஷெவகீவஹஹ ஷாஜாஹாவி தஃ" என்கிறபடியே-கர்ப்பவாஸதோஷமறஆவிர்ப்பவித்து, ஆச்ரிதரை ஒருகாலமும் நழுவவிடாதவனுடைய முத்தமிருந்தபடியைக் காணுங்கள். (முகிழ்நகையீர் வந்துகாணீரே) முகிழாநின்றுள்ள நகையையுடைய நீங்கள் வந்து காணுங்கள். முத்தம்-சண்ணம். முகிழ்நகை - மந்தஸ்மிதம். (சு)

அ.—ஏழாம்பாட்டு. திருக்கடிப்ரதேசத்தினழகை யநுபவித்தவநந்தரம், திருமருங்கினழகை யநுபவிக்கிறார்.

---

* "தன்வயிற்றத்தத்தின்" என்றிருக்கில் இசைக்குச்சேரும்.

மூ.—இருங்கை மதகளி றீர்க்கின்ற வனைப்
பருங்கிப் பறித்துக் கொண்டோடும் பரமன்றன்
நெருங்கு பவளமும் நேர்நாணு முத்தும்
மருங்கு மிருந்தவா காணீரே வாணுதலீர் வந்து காணீரே.

வ்ா்.— (இருங்கையித்யாதி) பெரிய துதிக்கையை யுடைய மத்தகஜமான குவலயாபீடத்தைத் தன்வசமாக நடத்தா நின்றுள்ள பாகனைக்கொன்று. பருங்குதல் - கொல்லுதல். (பறித்தித்யாதி) அதின்கொம்புகளைப்பறித்துக்கொண்டு கம்ஸனிருந்த வுயர்ந்தநிலத்திலே ஓடிச்சென்று குதித்தபரமனுடைய. அன்றிக்கே,ஊரில்இடைப்பிள்ளைகள் விளையாடுகிறவர்களிலே லீலோபகரணங்களிலே ஆனையாகப்பண்ணி, பெரியகையையுடைய மத்தகஜமென்று இழுத்துக்கொண்டு திரிகிறவனை, அடர்த்துப்பறித்துக்கொண் டோடாநிற்கும் பரமனென்னுதல். (நெருங் கித்யாதி) செறியக்கோத்த பவளவடமும், நேரியதான பொன்னும், முத்தமும், இவற்றோடே சேர்ந்த திருமருங்கு மிருந்தபடியைக் காணுங்கள். (வாணுதலீர் வந்துகாணீரே) ஒளிவிடாநின்ற நெற்றியையுடையநீங்கள் வந்துகாணுங்கள். ()

அ.—எட்டாம்பாட்டு. திருமருங்கினழகை யநுபவித்த வநந்தரம், திருவுந்தியினழகை யநுபவிக்கிறார்.

மூ.—வந்தமதலைக்கு ழாத்தை வலிசெய்து
தந்தக் களிறுபோற் றானே விளையாடும்
நந்தன் மதலைக்கு நன்று மழகிய
உந்தியிருந்தவா காணீரே யொளியிழையீர்வந்துகாணீரே.

வ்ா்.—(வந்தவித்யாதி)தன்னோடே விளையாடவந்த *தன்னோராயிரம் பிள்ளைகளான மதலைக்குழாத்தை, தானும்மதலையாயிருக்கச் செய்தே,அத்தனைபேரும் ஒருதலை, தானொருதலையாகநின்று பலாத்கரித்து, கொம்புமுகிழ்த்த இளவானைபோலே தானே ப்ரதாநனாய் விளையாடும். (நந்தனித்யாதி)இப்படி திரியாநிற்கச்செய்தே, ஸ்ரீநந்தகோபர்ஸந்நிதியில் ஸவிநயமாக வர்த்திக்கும் பிள்ளைத்தனத்தை யுடையவனுக்கு. (நன்றுமித்யாதி) மிகவும் அழகியதான திருவுந்தியிருக்கிறபடியைக் காணுங்கள். (ஒளியிழையீர்வந்துகாணீரே) ஒளியையுடைத்தான ஆபரணங்களையுடையநீங்கள் வந்து காணுங்கள். இழை - ஆபரணம். (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. திருவுந்தியினழகை யநுபவித்த வநந்தரம், திருவுதரத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—அதிருங் கடல்நிற வண்ணனை யாச்சி
மதுர முலையூட்டி வஞ்சித்து வைத்துப்

பதரப் படாமே பழந்தாம்பா லார்த்த
உதர மிருந்தவா காணீரே யொளிவளையீர்வந்து காணீரே.

வ்யா.— (அதிரும்கடல்நிறவண்ணனை) கோஷிக்கிற கடலின் நிறம்போலே ச்ரமஹரமான நிறத்தையுடையவனை. "கடல்நிறவண்ணன்" என்னவமைந்திருக்கச்செய்தே, "அதிரும்கடல்" என்றுவிசேஷிக்கையாலே - இவனுடைய அடங்காமை தோற்றுகிறது. (ஆச்சி மதுரமுலையூட்டி வஞ்சித்துவைத்து) பெற்றதாயானவள் மதுரமான முலைப்பாலையூட்டி, மேல், தான் இவனைக்கட்டத்தேடுகிறதறியாதபடி வஞ்சித்துவைத்து. (பதறவித்யாதி) தன்நினைவு தப்பாதபடி, கன்றுகளும்பசுக்களும்கட்டிப்பழகி †ஒழிஞ்சானமுட்டாய்க்கிடந்ததொரு தாம்பாலே கட்டினகயிற்றில்தழும்புகாணலாம்படியிருக்கிற வயிற்றினழகிருக்கிறபடியைக் காணுங்கள். (ஒளிவளையீர்வந்து காணீரே) ஒளியையுடைத்தானவளையையுடையநீங்கள் வந்துகாணுங்கள். (கூ)

அ.—பத்தாம்பாட்டு. திருவுதரத்தினழகை யநுபவித்த வநந்தரம், திருமார்வினழகை யநுபவிக்கிறார்.

மூ.—பெருமா வுரலில் பிணிப்புண் டிருந்தங்
கிருமா மருத மிறுத்த விப்பிள்ளை
குருமா மணிப்பூண் குலாவித் திகழும்
திருமார் விருந்தவா காணீரே சேயிழையீர்வந்து காணீரே.

வ்யா.—(பெருமாவித்யாதி) மிகவும் பெரியவுரலோடுகட்டுண்டிருந்து அத்தசையிலே அத்தையு மிழுத்துக்கொண்டு தவழ்ந்துபோய், தன்னை நலிவதாகச் சேர்ந்துநின்ற இரண்டு பெரியமருதுகளின்நடுவேசென்றுபுக்கு அவற்றைமுறித்த முக்தனானவிவனுடைய. (குருமாவித்யாதி)ச்ரேஷ்டமாய் ச்லாக்யமான ஸ்ரீகௌஸ்துபமாகிற ஆபரணம் அசைந்துவிளங்காநின்றுள்ள திருமார்வினழகிருந்த படியைக்காணுங்கள். (சேயிழையீர்வந்துகாணீரே) சிவந்த ஆபரணங்களையுடையநீங்கள் வந்து காணுங்கள். (கo)

அ.—பதினொராம்பாட்டு. திருமார்வினழகை யநுபவித்தவநந்தரம், திருத்தோள்களினழகை யநுபவிக்கிறார்.

மூ.—நாள்களோர் நாலைந்து திங்கள ளவிலே
தாளைநி மிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்
வாள்கொள் வளையெயிற் றாருயிர் வவ்வினான்
தோள்க ளிருந்தவா காணீரே சுரிகுழ லீர்வந்து காணீரே.

வ்யா.— (நாள்களோரித்யாதி) திருவவதரித்தபின்பு சென்ற நாள்கள் ஒருநாலைந்துமாஸத்தளவிலே. மாஸம் நாலென்றும், அஞ்

† ஒழிஞ்சானமுட்டு - ஒன்றுக்கும் உபயுக்தமில்லாதகயிறு.

சு என்றும் ஒன்பதென்றும் இருபதென்றும் தெரியாதபடி. இப்படி (க) மயக்கி யருளிச்செய்தது (உ) மங்களாசாஸந பரராகையாலே. த்ருஷ்டிதோஷ (ங) பரிஹாரார்த்தமாக. (தாளையித்யாதி) தனித்துக் கண்வளர்ந்தருளுகிற விடத்தே (ச) அஸுராவேசத்தாலே (ரு) நலிவதாகவந்து கிட்டுகிறசகடத்தை முலைவரவுதாழ்த்துச் சீறி நிமிர்த்து, திருவடிகளாலே கட்டழியவுதைத்து. இவன் (சு) அந்யார்த்தமாகத் திருவடிகளை நிமிர்த்தாலும் ப்ரதிகூலித்து வந்துகிட்டுகையாலே சகடம் (எ) பக்நமாகத் தட்டில்லையிறே. சாடிப்போயென்றது-சாடிவிட்டென்றபடி. (வாள்கொளித்யாதி) ஒளியையுடைத்தாய் வளைந்திருக்கிற எயிறுகளையுடையளான பூதனையுடைய முடித்தற்கரியவுயிரை (அ) அபஹரித்தவனுடைய. "பேய்ச்சி பெருமுலையூடுயிரைவற்றவாங்கியுண்டவாயான்" என்னக்கடவதிறே. சகடாஸுர (கூ) நிரஸநத்துக்குமுன்னே (க0) பூதநாதிநிரஸநமாயிருக்க, மாறியருளிச்செய்தது க்ரம (கக) விவக்ஷயாவன்று; (கஉ) ஹர்ஷாதிசயத்தாலே இன்னபடி சொல்லவேணுமென்றறியாமை. எயிற்றையுடையவளை எயிறு என்கிறது, (கங) "ஒண்டொடி" என்னுமாபோலே. (தோள்களித்யாதி) அவள் முலைப்பாலோடே * உயிரை வற்ற வாங்குகிறபோது நெறித்த தோள்களினுடைய அழகிருக்கிறபடியைக் காணுங்கோள்; சுருண்ட குழலையுடையரான நீங்கள்வந்து காணுங்கோள். (கக)

அ.—பன்னிரண்டாம்பாட்டு. திருத்தோளினழகையநுபவித்தவநந்தரம் திருக்கைத்தலத்தினழகை யநுபவிக்கிறார்,

மூ.—மைத்தடங்கண்ணியசோதைவளர்க்கின்ற
செய்த்தலைநீலநிறத்துச்சிறுப்பிள்ளை
நெய்த்தலைநேமியுஞ்சங்குநிலாவிய
கைத்தலங்கள்வந்துகாணீரேகநங்குழையீர்வந்துகாணீரே.

பதவுரை.—மை - கறுத்து, தடம் - பெருத்திருந்துள்ள, கண்ணி - கண்ணையுடையவளான, அசோதை - யசோதைப்பிராட்டியானவள், வளர்க்கின்ற - வளர்க்கிற, தலை - சிறந்த, செய் - வயலிலே, நீலம் - கருநெய்தல்பூவின் நிறம் போன்ற, நிறத்து - நிறத்தையுடையனான, சிறுப்பிள்ளை - சிறுப்பிள்ளையுடைய, நெய் - நெய்யணிந்த, தலை - தலையையுடைய, நேமியும் - திருவாழியும், சங்கும்-

(க) மயக்கி - ஒன்றை மற்றொன்றாக்கி. (உ) மங்களாசாஸநம் - வாழ்த்துதல். (ங) பரிஹாரம் - நீக்குதல். (ச) அஸுராவேசம் - அஸுரன் உட்புகுதல். (ரு) நலிதல் - வருத்துதல். (சு) அந்யார்த்தமாக - வேறொன்றின்பொருட்டு. (எ) பக்நமாக - முறிய. (அ) அபஹரித்தவன் - போக்கினவன். (கூ) நிரஸநம் - அழிக்கை. (க0) பூதநாதி - பூதனைமுதலியவர்களின். (கக) விவக்ஷயா - சொல்ல விரும்புகையாலே. (கஉ) ஹர்ஷாதிசயம்-களிப்பின்மிகுதி. (கங) ஒண்டொடி - ஒளிபொருந்திய தோள்வளையையுடையவள்.

ஸ்ரீபாஞ்சசந்யமும், நிலாவிய - பொருந்தியிருக்கிற, கைத்தலங்கள் - திருக்கைத்தலத்தினழகை, வந்து - வந்து, காணீர் - பாருங்கள்; கநம் - பொன்னாற் செய்த, குழையீர் - காதணியையுடையவர்களே, வந்து - வந்து, காணீர் - பாருங்கள்.

வ்யா.—(மைத்தடங்கண்ணி) கறுத்துப் பெருத்திருந்துள்ள கண்ணையுடையவளென்னுதல்; (க) அஞ்சநாலங்க்ருதமாய் (உ) விஸ்த்ருதமாயிருந்துள்ள கண்ணையுடையவளென்னுதல். (அசோதைவளர்க்கின்ற) இப்படியிருந்துள்ள கண்ணழகையுடைய யசோதைப்பிராட்டி வைத்தகண்வாங்காமல்நோக்கிவளர்க்கிற. வளர்ப்பார் பலருண்டாயிருக்கச்செய்தேயும், அவர்கள்கையிற் காட்டிக்கொடாதே தானே யிறே வளர்ப்பாள். (செய்த்தலையித்யாதி) பூஸாரமுள்ள (ங) க்ஷேத்ரத்திலே அப்போதலர்ந்த குவளைப்பூவின் நிறம்போலிருக்கிற நிறத்தையுடையனான சிறுப்பிள்ளையினுடைய. அவள் சீராட்டிவளர்த்த (ச) முசுமுசுப்பெல்லாம் திருநிறத்திலே தோன்றும்படி யிருக்குமாயிற்று.

(நெய்த்தலைநேமியும் சங்கும்நிலாவிய) கூரியநுதியை யுடைத்தான திருவாழியென்னுதல். ஆயுத ஸாமாந்யத்தாலே நெய்யணிந்திருக்கும்திருவாழியென்னுதல். "கையெல்லாம்நெய்" என்கிறதிருக்கையின் (ரு) ஸ்பர்சத்தாலே நெய்ச்சுவடுமாறாத திருவாழியென்னுதல். இப்படியிருக்கிற திருவாழியும், இதுபோலே * கருதுமிடம் பொருதுவந்து கையில்நிற்கவும் வேண்டாதே, கைவிடாதேயிருந்து தன்னோசையாலே எதிரிகளை அழிக்கவல்ல ஸ்ரீபாஞ்சஜந்யமும் (சு) நிரந்தரமாக (எ) வர்த்தியா நின்றுள்ள கையும்ஆழ்வார்களுமான சேர்த்தியை (அ) ஓரோதசைகளிலே இவன்றான் இவளுக்கும் காட்டக்கூடுமிறே. (கைத்தலமித்யாதி) திருக்கைத்தலத்தினழகைவந்து காணுங்கோள்; கநவிதான காதில் பணியையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். கநமென்று - பொன்னுகவுமாம். (கஉ)

அ.—பதின்மூன்றாம்பாட்டு. திருக்கைத்தலத்தினழகை யநுபவித்த வநந்தரம் திருக்கழுத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—வண்டமர்பூங்குழலாய்ச்சிமகனைக்
கொண்டுவளர்க்கின்றகோவலர்குட்டற்கு
அண்டமுநாடுமெடங்கவிழுங்கிய
கண்டமிருந்தவாகாணீரோகாரிகையீர்வந்துகாணீரே.

---

(க) அஞ்சநாலங்க்ருதம் - மைதீட்டப்பட்டது. (உ) விஸ்த்ருதமாய் - விசாலமாய். (ங) க்ஷேத்ரம் - இடம். (ச) முசுமுசுப்பு - பளபளப்பு. (ரு) ஸ்பர்சம் - தொடுகை. (சு) நிரந்தரம் - எப்பொழுதும். (எ) வர்த்தித்தல் - இருத்தல். (அ) ஓரோதசை - ஓவ்வொருஸமயம்.

ப - ரை. வண்டு - வண்டுகள், அமர் - படிந்திருக்கிற, பூ - பூவோடுகூடின, குழல் - குழலையுடைய, ஆய்ச்சி - யசோதைப்பிராட்டி, மகனாக - தன்மகனாக, கொண்டு-ஸ்நேஹித்துக்கொண்டு, வளர்க்கின்ற-வளர்க்கிற, கோவலர் - ஸ்ரீநந்த கோபருடைய, குட்டற்கு - மகனுக்கு, அண்டமும் - அண்டங்களையும், நாடும் - சேதநாசேதநங்களையும், அடங்க - திருவயிற்றிலே ஒருபக்கத்தில் அடங்கும்படியாக, விழுங்கிய - விழுங்கின, கண்டம் - திருக்கழுத்தினழகு, இருந்தவா - இருக்கிறபடியை, காணீர் - பாருங்கள்; காரிகையீர் - அழகுடையஸ்த்ரீகளே, வந்து - வந்து, காணீர் - பாருங்கள்.

வ்யா.—(வண்டமரித்யாதி) பிள்ளைகள் (க) அனுங்காமைக்காகத் தாய்மார் தங்களை யலங்கரித்துக்கொண் டிருப்பர்களாய்த்து; அப்படியே இவளும் காலபுஷ்பங்களைப் பலகாலும் முடிக்கையாலே (உ)மதுபாநம்பண்ணும் வண்டுகளுக்கு (ந) வஸ்தவ்யபூமி இவள் குழலிறே. ஆகையாலே வண்டுகள்படிந்துகிடக்கிறபூவோடே கூடின (ச) குழலை யுடையளான யசோதைப்பிராட்டி, தன்மகனாக ஸ்நேஹித்துக்கொண்டு வளர்க்கிற ஸ்ரீநந்தகோபர்மகனுக்கு. இவர் அடியறிந்தவராகையாலே, "மகனாகக் கொண்டு" என்கிறார்; அவள், "தன்மகன்" என்றிறே நினைத்திருப்பது.

(அண்டமித்யாதி) அண்டத்தையும் (ரு) அண்டாந்தர்வர்த்திகளான (சு) சேதநாசேதநங்களையும் திருவயிற்றில் (எ) ஒருபுடையிலே அடங்கும்படி விழுங்கின வென்னுதல். ஒன்றும் பிறிகதிர்ப்படாதபடி எல்லாவற்றையும் சேரவிழுங்கின வென்னுதல். (கண்டமித்யாதி) இப்படி யிருந்துள்ள திருக்கழுத்தி னழகிருந்தபடியைக் காணுங்கோள்; (அ) அபிரூபைகளான நீங்கள்வந்து காணுங்கோள். காரிகையார் - அழகுடையஸ்த்ரீகள். (கந)

அ.—பதினாலாம்பாட்டு. திருக்கழுத்தினழகை யநுபவித்தவநந்தரம் திருப்பவளத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—என்தொண்டைவாய்ச்சிங்கம்வாவென்றெடுத்துக்கொண்டு
அந்தொண்டைவாயமுதாதரித்தாய்ச்சியர்
தந்தொண்டைவாயாற்றருக்கிப்பருகுமிச்	[ரே.
செந்தொண்டைவாய்வந்துகாணீரே சேயிழையீர்வந்துகாணீ

ப - ரை.—தொண்டை - ஆதொண்டங்கனியையொத்த, வாய் - திருப்பவளத்தையும், சிங்கம் - ஸிம்ஹக்கன்றுபோலேசெருக்கையுமுடையனாயிருக்கிறவிவனை, என் - என்னுடையவனென்றுஅபிமாநித்து, வாவென்று - வாவென்றழைத்து, எடுத்துக்கொண்டு—, ஆய்ச்சியர் - இடைப்பெண்களெல்லாரும்,

(க) அனுங்கல் - நலிதல். (உ) மது - தேன். (ந) வஸ்தவ்யபூமி - வாஸம் செய்யுமிடம். (ச) குழல் - மயிர்முடி. (ரு) அண்டாந்தர்வர்த்திகள் - அண்டத்துக்குட்பட்டவைகள். (சு)சேதநாசேதநங்கள் - உயிருள்ளவைகளும், இல்லாதவைகளும். (எ) ஒருபுடை - ஒருபக்கம், (அ) அபிரூபைகள் - அழகியவடிவையுடையவர்கள்.

அம் - அழகிய, தொண்டை - தொண்டைபோலேயிருக்கிற, வாய் - திரு அத ரத்தில்ஊறுகிற, அமுது - அம்ருதத்தை, ஆதரித்து - விரும்பி, தம் - தங்கள், தொண்டைவாயால் - கோவைவாயாலே, தருக்கி - நெருக்கி, பருகும் - பாநம் பண்ணுகிற, இ - இப்படிஅவர்கள்பருகப்பருக, செம் - சிவப்புமாறாத, தொண் டை - தொண்டையையொத்த, வாய் - திருப்பவளத்தை, வந்து - வந்து, காணீர் - பாருங்கள்; சே - சிவந்த, இழையீர் - ஆபரணத்தையுடையீங்கள், வந்து - வந்து, காணீர் - பாருங்கள்.

வ்யா.— (என்தொண்டை யித்யாதி) ஆ தொண்டைபோலே யிருக்கிற திருப்பவளத்தையும் ஸிம்ஹக் கன்றுபோலே செருக் கையுமுடையனு யிருக்கிறவிவனே யென்னுடையவனென்று (க)அபி மாநித்து வாவென்று அழைத்து எடுத்துக்கொண்டு இடைப்பெண்க ளெல்லாரும் அழகிய தொண்டைபோலே யிருக்கிற திருவதரத்தி லூறுகிற அம்ருதத்தை (உ) ஆதரித்துத் தங்கள் கோவைவாயாலே நெருக்கிப் பாநம்பண்ணுகிற. தருக்கிப் பருகுமென்றது - செருக் கிப் பருகுமென்னவுமாம். (இச்செந்தொண்டையித்யாதி) இப்படி அவர்கள் பருகப்பருகப் பின்னையும் சிவப்புமாறாதேயிருக்கிற திருப் பவளத்தைவந்து காணுங்கோள்; சிவந்த ஆபரணங்களை யுடைய நீங்கள் வந்துகாணுங்கோள். (கச)

அ.—பதினைந்தாம்பாட்டு. திருப்பவளத்தினழகை யநுபவித்த வநந்தரம் திருமுகமண்டலத்தின் (ங) ஸமுதாய சோபையை யநுப விக்கிறார்.

மூ.—நோக்கியசோதைநுணுக்கியமஞ்சளால்
நாக்குவழித்துநீராட்டுமிந்நம்பிக்கு
வாக்குநயநமும்வாயுமுறுவலும்
மூக்குமிருந்தவாகாணீரேமொய்குழலீர்வந்துகாணீரே.

ப - ரை.—அசோதை - யசோதைப்பிராட்டி, நோக்கி - திருமேனிக்குத் தகுதியாம்படிபார்த்து, நுணுக்கிய - அரைத்த, மஞ்சளால் - மஞ்சள்காப்பா லே, நாக்கு - திருநாவை, வழித்து - வழித்து, நீராட்டும் - திருமஞ்சநம்செய் யும்படி, இந்நம்பிக்கு - பூர்ணனைவிவனுக்கு, வாக்கும் - வாக்கும், நயநமும்- திருக்கண்களும், வாயும் - திருவதரமும், முறுவலும் - புன்சிரிப்பும், மூக்கும்- திருமூக்குமாகிற இச்சேர்த்தியழகு, இருந்தவா - இருக்கிறபடியை, காணீர் - பாருங்கோள்; மொய் - செறிந்த, குழலீர் - குழலையுடையீங்கள், வந்து - வந்து, காணீர் - பாருங்கள்.

வ்யா.—(நோக்கியித்யாதி) திருமேனியின் (ச) ஸௌகுமார்ய மறியும் யசோதைப்பிராட்டி அதுக்குத் தகுதியாம்படி பார்த்து நேராகவரைத்தமஞ்சள் காப்பாலே திருநாவைவழித்துத் திருமஞ்ச

(க) அபிமாநித்து - ஆதரித்து. (உ) ஆதரித்து - விரும்பி. (ங) ஸமுதாயம்- பொது. (ச) ஸௌகுமார்யம் - மென்மைத்தன்மை. (ரு) விதேயதயா - ஏவற் படிகையாலே.

நம் செய்யும்படி (ரு) விதேயதயாபூர்ணனான விவனுக்கு. (வாக்கு மித்யாதி) மாதாமுதலானோரை (க) நாமக்ரஹணம் பண்ணுகிற வாக்கும், என்னைப்பாரீர் என்னை பாரீரென்ன அவர்களைக் (உ)கடாக்ஷிக்கிற (ங) திருநயநங்களும் (ச) மந்தஸ்மிதம்செய்ய (ரு) உபக்ரமிக்கிற திரு (சு) அதரஸ்புரணமும் அந்தஸ்புரணத்தோடே கூடின மந்தஸ்மிதமும். "மாட்டுயர் கற்பகத்தின்வல்லியோ கொழுந்தோவறியேன்" என்று (எ) நித்ய ஸந்தேஹஜநகமான திருமூக்குமாகிற விச்சேர்த்தி யழகிருந்தபடி காணுங்கோள்; செறிந்த குழலையுடைய நீங்கள்வந்து காணுங்கோள். (கரு)

அ.—பதினாறும்பாட்டு. ஸமுதாய சோபையின்நடுவே அநுபவித்ததிருக்கண்களின் அழகுபின்னாட்ட, அத்தை யநுபவிக்கிறார். அதுதன்னில் எல்லாவற்றுக்கும் பின்பநுபவித்தது திருமூக்கினழகிறே. திருமூக்குக்கும் திருக்கண்களுக்கும் ஒருசேர்த்தியுண்டே; அத்தாலும், பாதாதிகேசமநுபவித்து வருகிற அடைவுக்குச்சேர்ந்ததாகையாலும் திருக்கண்களிலே சுழியாறுபட்டு அநுபவிக்கிறார்.

மூ.—விண்கொளமரர்கள்வேதனைதீரமுன்
மண்கொள்வசுதேவர்தம்மகனாய்வந்து
திண்கொளசுரரைத்தேயவளர்கின்றான்
கண்களிருந்தவாகாணீரேகனவளையீர்வந்துகாணீரே.

ப-ரை.—விண் - ஸ்வர்க்கம்முதலானலோகங்களை, கொள் - இருப்பிடமாகவுடைய, அமரர்கள் - இந்திரன்முதலியதேவர்களுக்கு, வேதனை - அஸுரர்களால்வந்ததுன்பம், தீர - போம்படியாக, முன் - முன்னே, மண் - பூமியை, கொள் - இருப்பிடமாகவுடைய, வசுதேவர்தம் - ஸ்ரீவஸுதேவருக்கு, மகனாய் - புத்ரனாய், வந்து - வந்தவதரித்து, திண்கொள் - சரீரவலிமையும் மநவலிமையுமுடையரான, அசுரர்-அஸுரரானவர்கள், தேய-க்ஷயித்துச்செல்லும்படியாக, வளர்கின்றான் - வளராநிற்கிறவனுடைய, கண்கள் - அநுகூலர்தழைக்கவும்ப்ரதிகூலர்க்ஷயிக்கவும் கடாக்ஷிக்கிற திருக்கண்களினழகு, இருந்தவா - இருக்கிறபடியை, காணீர் - பாருங்கோள்; கநம் - பொன்னாற்செய்த, வளையீர் - வளையையுடைவர்களே, வந்து - வந்து, காணீர் - பாருங்கோள்.

வ்யா.—(விண்கொளித்யாதி) அவதாரப்ரயோஜநம் (அ) ஸாதுபரித்ராணாதிகளாகையாலே ஸ்வர்க்காதி லோகங்களையிருப்பிடமாகவுடைய இந்த்ராதி தேவர்களுக்கு (கூ) ஆஸுரப்ரக்ருதிகளால் வரும் துக்கம் போம்படியாக முன்னே பூமியை யிருப்பிடமாகவுடைய

(க) நாமக்ரஹணம்பண்ணுகிற - அழைக்கிற. (உ) கடாக்ஷிக்கிற - கடைக்கணிக்கிற. (ங) திருநயநம் - திருக்கண். (ச) மந்தஸ்மிதம் - புன்சிரிப்பு. (ரு) உபக்ரமிக்கிற - ஆரம்பிக்கிற. (சு) அதரஸ்புரணம் - உதடசைகை. (எ) நித்யஸந்தேஹஜநகம் - எப்பொழுதும் ஸந்தேஹத்தை உண்டாக்குமது. (அ) ஸாதுபரித்ராணம் - நல்லோரைரக்ஷிக்கை. (கூ) ஆஸுரப்ரக்ருதிகள் - அஸுரத்தன்மையுடையவர்கள்.

ஸ்ரீவஸுதேவருக்குப் புத்ரனாய்வந்தவதரித்து, தன்னைப்பற்றச்சிறைப்பட்டிருக்கிற ஸ்ரீவஸுதேவர் துக்கத்தைத் தீர்த்து, பின்னைதேவர்கள் துக்கம் தீர்க்கைக்காக முன்னே யிங்கேவந் தவதரித்தானாய்த்து. "நந்தைகாலில்விலங்கறவந்து தோன்றிய தோன்றல்" என்னக்கடவதிறே. (திண்கொளித்யாதி) (௧) காயபலமும் மநோபலமுமுடையரான அஸுரர்களானவர்கள் (௨) க்ஷயித்துச் செல்லும்படியாகத் தான்வளரா நிற்கிறவனுடைய. இவன் கால் நெடுக நெடுக (௩) அஸுரவர்க்கம் (௪) க்ஷீணமாய்விட்டதிறே. (கண்களித்யாதி) இப்படி (௫) அநுகூலரக்ஷணமும் (௬) ப்ரதிகூல நிரஸநமும் பண்ணுமிடத்தில் இவர்கள் தழைக்கவும் அவர்கள் க்ஷயிக்கவும் கடாக்ஷிக்கும் திருக்கண்களினழகிருக்கிற படியைக் காணுங்கோள்; பொன்னாலே செய்தவளையையுடைய நீங்கள் வந்துகாணுங்கோள். (௧௬)

அ.—பதினேழாம்பாட்டு. திருக்கண்களினழகை யநுபவித்தவநந்தரம் திருப்புருவத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—பருவநிரம்பாமேபாரெல்லாமுய்யத்
திருவின்வடிவொக்குந்தேவகிபெற்ற
உருவுகரியவொளிமணிவண்ணன்
புருவமிருந்தவாகாணீரேபூண்முலையீர்வந்துகாணீரே.

ப-ரை.—பருவம் - வயது, நிரம்பாமே - நிரம்புவதற்குமுன்னே, பாரெல்லாம் - லோகமெல்லாம், உய்ய - உஜ்ஜீவிக்கும்படியாக, திருவின் - பெரியபிராட்டியாரையொத்த, வடிவொக்கும் - ஸ்வபாவத்தையுடையளான, தேவகி - தேவகிப்பிராட்டி, பெற்ற - நோற்றுப்பெற்ற, உருவு - ரூபத்தாலே, கரிய - கரியதாய், ஒளி - ஒளியையுடைய, மணி - நீலமணிபோன்ற, வண்ணன் - வடிவையுடையவனுடைய, புருவம் - திருப்புருவங்களினழகு, இருந்தவா - இருக்கிறபடியை, காணீர் - பாருங்கோள்; பூண் - ஆபரணம்பூண்ட, முலையீர் - முலையையுடையவர்களே, வந்து - வந்து, காணீர் - பாருங்கோள்.

வ்யா.—(பருவமித்யாதி) சக்ரவர்த்தித்திருமகனைப்போலேபருவம்நிரம்பினபின்பு விரோதிகளை (௭) நிரஸித்துலோகத்தை (௮) உஜ்ஜீவிப்பிக்கையன்றிக்கே, பருவம் நிரம்புவதுக்குமுன்னே * திண்கொள் அசுரரைத் தேயவளருகையாலே லோகமெல்லா முஜ்ஜீவிக்கும்படியாக, பூதநாசகடயமளார்ஜுநாதிகளைத் தொட்டில்பருவமேபிடித்திறே நிரஸித்துச்சென்றது. (திருவின்வடிவொக்கும்தேவகிபெற்ற) லக்ஷ்மீதுல்யஸ்வபாவையான தேவகிப்பிராட்டி இப்படிக்கீடாக

(௧) காயம் - சரீரம். (௨) க்ஷயித்தல் - அழிதல். (௩) அஸுரவர்க்கம் - அசுரக்கூட்டம். (௪) க்ஷீணமாய் - நசித்து. (௫) அநுகூலரக்ஷணம் - நல்லோரைக் காப்பாற்றுகை. (௬) ப்ரதிகூலநிரஸநம் - தீயோரைசிக்ஷிக்கை. (௭) நிரஸித்து - போக்கி. (௮) உஜ்ஜீவிப்பிக்கை - பிழைப்பிக்கை.

நோற்றுப்பெற்ற. திருவின்வடிவொக்குமென்கையாலே - கீழ் *உள்ளமுதன்ன தேவகியென்றது இங்கே (க) ஸ்பஷ்டமாயிற்றிறே.

(உருவித்யாதி) ரூபத்தால் கரியதாய் (உ) உஜ்ஜ்வலமாயிருந்துள்ள மணிபோன்ற வடிவையுடையவனுடைய. (புருவமித்யாதி) மதநன் கருப்புச்சிலைபோலேயிருக்கிற திருப்புருவங்களினழகைக் காணுங்கோள்; ஆபரணலங்க்ருதமான முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். (கஎ)

அ.—பதினெட்டாம்பாட்டு. திருப்புருவத்தினழகை யநுபவித்த வநந்தரம் திருமகரக்குழையி னழகை யநுபவிக்கிறார்.

மூ.—மண்ணுமலையுங்கடலுமுலகேழும்
உண்ணுந்திறத்துமகிழ்ந்துண்ணும்பிள்ளைக்கு
வண்ணமெழில்கொண்மகரக்குழையிவை
திண்ணமிருந்தவாகாணீரேசேயிழையீர்வந்துகாணீரே.

ப-ரை.—மண்ணும் - எல்லாவற்றுக்கும் ஆதாரமானபூமியையும், மலையும்-பூமிக்காதாரமான பர்வதங்களையும், கடலும் - ஸமுத்ரங்களையும், உலகேழும் - மற்றுமுண்டான ஸகலலோகங்களையும், உண்ணும்திறத்து - திருவயிற்றிலேவைக்கிறவளவிலே, மகிழ்ந்து - ஸந்தோஷித்து, உண்ணும் - திருவயிற்றிலேவைத்த, பிள்ளைக்கு - பாலனுக்கு, வண்ணம் - திருநிறத்தையும், எழில்கொள் - அழகையுமுடைய, மகரக்குழை - திருமகரக்குழைகளான, இவை - இவற்றினுடைய, திண்ணம் - கண்டவர்கள் நெஞ்சையும் கண்ணையும் கவரும்படியானதிண்மை, இருந்தவா - இருக்கிறபடியை, காணீர் - பாருங்கோள்; சே - அழகிய, இழையீர் - ஆபரணங்களாலே அலங்க்ருதைகளானநீங்கள், வந்துகாணீர் - வந்து பாருங்கோள்.

வ்யா.—(மண்ணுமித்யாதி) (ங) ஸர்வாதாரமான பூமியும், பூமிக்காதாரமான பர்வதங்களும், பூமிக்கு ரக்ஷகமான ஸமுத்ரங்களும், மற்றுமுண்டான ஸகலலோகங்களும் ப்ரளயங் கொள்ளாதபடி திருவயிற்றிலே வைக்கிறவளவில், "இவற்றை ரக்ஷிக்கப்பெற்றோமே" என்னும் உகப்பாலே இதுவே தாரகமாகத் திருவயிற்றிலே வைத்த பாலனுக்கு. (வண்ணமித்யாதி) திருமேனிக்கு (ச) பரபாகமான திருநிறத்தையும் (ரு) ஸ்வஸம்ஸ்தாந வைசித்ரியால் வந்தவழகையுமுடைய திருமகரக்குழைகளான விவற்றினுடைய, கண்டவர்கள் கண்ணையும் நெஞ்சையும் கவரும்படியான திண்மையிருக்கிற படியைக் காணுங்கோள்; அழகிய ஆபரணங்களாலே அலங்க்ருதைகளான நீங்கள்வந்து காணுங்கோள். (கஅ)

(க) ஸ்பஷ்டம் - வெளிப்படை. (உ)உஜ்ஜ்வலம் - விளங்குகை. (ங)ஸர்வாதாரமான - எல்லாவற்றிற்கும் ஆதாரமான. (ச) பரபாகம் - பசைத்தொடை. (ரு) ஸ்வஸம்ஸ்தாநவைசித்ரி - தன்னிருப்பின்ஆச்சரியம்.

அ.—பத்தொன்பதாம்பாட்டு. திருமகரக் குழையி னழகை யநுபவித்தவநந்தரம் திருநெற்றியினழகை யநுபவிக்கிறார்.

மூ.—முற்றிலுந்தூதையுமுன்கைமேற்பூவையும்
சிற்றிலிழைத்துத்திரிதருவோர்களைப்
பற்றிப்பறித்துக்கொண்டோடும்பரமன்றன்
நெற்றியிருந்தவாகாணீரேநேரிழையீர்வந்துகாணீரே.

ப-ரை.—சிறு - சிறிய, இல் - வீடுகளை, இழைத்து - செய்து, திரிதருவோர்களை - திரிகிற பெண்களுடைய, முற்றிலும் - மணல்கொழிக்கிற சிறு சுளகையும், தூதையும் - மணற் சோறாக்குகிற சிறுபானையையும், முன்கைமேல் - முன்கைமேல் வைத்துப் பேச்சுக்கொண்டு விளையாடும், பூவையும் - நாகணவாய்ப்புள்ளையும், பற்றி - கையைப்பிடித்து, பறித்துக்கொண்டு - வன்மையாலேபறித்துக்கொண்டு, ஓடும் - பிடிகொடாமல் ஓடுகிற, பரமன்றன் - தீம்பில் தலைவனானவனுடைய, நெற்றி - நெற்றியானது, இருந்தவா - இருந்தபடியை, காணீர் - பாருங்கோள்; நேர் - திருத்தமான, இழையீர் - ஆபரணங்களையுடைய நீங்கள், வந்துகாணீர் - வந்துபாருங்கள்.

வ்யா.—(முற்றிலுமித்யாதி) (க) கொட்டகமிட்டுவிளையாடித் திரிகிறபெண்களை, மணல்கொழிக்கிறசிறுசுளகையும் மணற் சோறாக்குகிற சிறுபானையையும், முன்கைமேல்வைத்துப் பேச்சுக்கொண்டு விளையாடும் பூவையையும். பூவை - நாகணவாய்ப்புள். (பற்றியித்யாதி) கையைப்பிடித்து, வன்மையாலே பறித்துக்கொண்டு பிடிகொடாமல்ஓடும் தீம்பிற்றலைவனானவனுடைய. (நெற்றியித்யாதி) அந்த ஆயாஸத்தாலே குறுவெயர்ப்பு அரும்பின திருநெற்றியி னழகைக் காணுங்கோள்; நுண்ணியதான ஆபரணங்களையுடைய நீங்கள்வந்து காணுங்கோள். ஆபரணத்துக்கு நுட்பமாவது - தொழிலினுடைய ஸௌக்ஷ்ம்யமாதல்; ஸௌகுமார்யாநுகுணமான லாகவமாதல். ()

அ.—இருபதாம்பாட்டு. திருநெற்றியினழகை யநுபவித்த வநந்தரம் திருக்குழலினழகை யநுபவிக்கிறார்.

மூ.—அழகியபைம்பொன்னின்கோலங்கைக்கொண்டு
கழல்கள்சதங்கைகலந்தெங்குமார்ப்ப
மழகன்றினங்கண்மறித்துத்திரிவான்
குழல்களிருந்தவாகாணீரேகுவிமுலையீர்வந்துகாணீரே.

ப-ரை.—அழகிய - கண்டவர்கண்ணுக்கு அழகியதாய், பைம்பொன்னின் - பசும்பொன்னாற்செய்யப்பட்ட, கோல் - கோலை, அம் - அழகிய, கை - திருக்கையிலே, கொண்டு - பிடித்துக்கொண்டு, கழல்கள் - திருவடிகளிற் சாத்தியிருக்கிற வீரக்கழல்களும், சதங்கை - சதங்கைகளும், கலந்து - தன்னிலே கலந்து, எங்குமார்ப்ப - எங்கும்சப்திக்க, மழம் - இளமைதங்கிய, கன்றினங்கள்-கற்றுத்திரள்களை, மறித்து - மடங்குவித்து, திரிவான் - திரிகிறவனுடைய,

(க) கொட்டகம் - சிற்றில்.

குழல்கள் - திருக்குழலினழகு, இருந்தவா - இருக்கிறபடியை, காணீர் - பாருங்கோள்; குவி - குவிகிற, முலையீர் - முலையையுடையநீங்கள், வந்துகாணீர் - வந்துபாருங்கோள்.

வ்யா.—(அழகியவித்யாதி) கண்டவர்கள்கண்ணுக்கழகியதாய், பசும்பொன்னாலே (க) சமைந்திருப்பதான கோலை, கன்றுகளை மறிக்கைக்கு (உ) உபகரணமாக (ங) வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டும்படி அழகியதான கையிலே பிடித்துக்கொண்டு. (கழல்களித்யாதி) கன்றுகளைமறிக்கைக்காக அதிரவோடுகையாலே திருவடிகளிலே சாத்தியிருக்கிற வீரக்கழல்களும் சதங்கைகளும் தன்னிலே கலந்து எங்குமொக்க(ச)த்வநிக்க.(மழகன்றித்யாதி)இளங்கன்றுகளினுடைய திரள்களைக் கைகழியப்போகாமல் மடங்குவித்து (ரு)ஸஞ்சரியாநின்றுள்ளவனுடைய. (குழல்களித்யாதி) "நெறித்தகுழல்களை நீங்கமுன்னோடி" என்கிறபடியே அதிரவோடுகையாலே அசைந்து நீங்கிச்செல்லும்திருக்குழலின் அழகிருக்கிறபடியைக்காணுங்கோள்; குவிகிற முலையையுடைய நீங்கள்வந்து காணுங்கோள். (உ0)

அ.—(சு) நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்கு பலஞ்சொல்லித்தலைக்கட்டுகிறார்.

மூ.—சுருப்பார்குழலியசோதைமுன்சொன்ன
திருப்பாதகேசத்தைத்தென்புதுவைப்பட்டன்
விருப்பாலுரைத்தவிருபதோடொன்றும்
உரைப்பார்போய்வைகுந்தத்தொன்றுவர்தாமே.

ப-ரை.—சுரும்பு - வண்டுகள், ஆர் - படிந்துகிடக்கிற, குழலி - குழலையுடைய, அசோதை - யசோதைப்பிராட்டி, முன் - அவதார ஸமகாலத்திலே, சொன்ன - பிறரை யழைத்துக்காட்டிச்சொன்ன, திருப்பாத கேசத்தை - திருவடிமுதல் திருக்குழலளவும், தென் - அழகிய, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்குத்தலைவராய், பட்டன் - ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார், விருப்பால்- அன்பினால், உரைத்த - அருளிச்செய்த, இருபதோடொன்றும் - இருபதொரு பாசுரங்களையும், உரைப்பார்தாம் - சொல்லவல்லவர்கள், வைகுந்தத்து - ஸ்ரீவைகுண்டத்திலே, போய் - சென்று, ஒன்றுவர் - பொருந்தி இருக்கப்பெறுவர்.

வ்யா.— (சுருப்பார்குழலியித்யாதி) மெல்லொற்று வல்லொற்றாய், சுரும்பாரென்கிறவிது, சுருப்பாரென்று கிடக்கிறது. குழலில் முடித்த பூக்களின் மதுவை பாநம்பண்ணுகைக்காக வண்டுகள் எப்போதும்படிந்துகிடக்கும்படியான குழலையுடைய யசோதைப்பிராட்

(க) சமைதல்-அமைதல். (உ) உபகரணம் - ஸாதநம்; கருவி. (ங) வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கை - இயற்கையிலே த்ருஷ்டிதோஷம் போக்குகை. (ச) த்வநிக்க - ஒலிக்க. (ரு) ஸஞ்சரித்தல் - திரிதல். (சு) நிகமம் - முடிவு,

மூ.—மாணிக்கங்கட்டிவயிரமிடைகட்டி
ஆணிப்பொன்னாற்செய்தவண்ணச்சிறுத்தொட்டில்
பேணியுனக்குப்பிரமன்விடுதந்தான்
மாணிக்குறளனேதாலேலோவையமளந்தானேதாலேலோ.

ப - ரை.—மாணிக்கம் - இரண்டருகும் மாணிக்கத்தை, கட்டி - கட்டியும், இடை - நடுவே, வயிரம் - வைரத்தை, கட்டி - கட்டியும், ஆணி - மாற்றுயர்ந்த, பொன்னால் - பொன்னாலே, செய்த - சமைத்த, வண்ணம் - அழகிய, சிறு - சிறிய, தொட்டில் - தொட்டிலை, பேணி - விரும்பி, உனக்கு—, பிரமன் - நான் முகனானவன், விடுதந்தான் - கொடுத்தனுப்பினான்; மாணி - பிஹ்மசாரியாய்க் கொண்டு, குறளனே - வாமநனானவனே, தாலேலோ—; வையம்-லோகத்தை, அளந்தானே - அளந்தவனே, தாலேலோ—.

(மாணிக்கமித்யாதி) இரண்டருகும்மாணிக்கத்தையும் நடுவே வைரத்தையும் பகைத்தொடையாகக் கொண்டு ஒழுங்குபடக் கட்டி, "இதுக்குமேலேமாற்றில்லை" என்னும்படியானபொன்னாலே சமைத்த தாகையாலே அழகியதாய்ப், பருவத்துக்குத் தகுதியாம் படி சிறியதாயிருந்துள்ள தொட்டிலை. (பேணியித்யாதி) ஆதரித்து உனக்கு ப்ரஹ்மாவரவிட்டான். (மாணியித்யாதி) உன்னுடைமை பெறுகைக்காக இரப்பிலேதழும்பேறின ப்ரஹ்மசாரியாய்ச்சென்று இரந்த வாமநரூபி யானவனே தாலேலோ; இரப்புப்பெற்ற (க) ஹர்ஷத்தாலேவளர்ந்து லோகத்தை யளந்த (உ) த்ரிவிக்ரம னான வனே தாலேலோ. (க)

அ.—இரண்டாம்பாட்டு. ப்ரஹ்மாவுக்கநந்தரம் (ங.)பரிகணித னான ஈச்வராபிமாநியான ருத்ரன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லு கிறது.

மூ.—உடையார்கநமணியோடொண்மாதளம்பூ
இடைவிரவிக்கோத்தவெழிற்றெழ்கினோடு
விடையேறுகாபாலியீசன்விடுதந்தான்
உடையாயழேலழேலேலோவுலகமளந்தானேதாலேலோ.

ப - ரை.—உடை - திருவரைக்கு, ஆர் - பொருந்தின, கநமணியோடு - பொன்மணியோடு, இடை - நடுநடுவே, விரவி - கலந்து, கோத்த - கோக்கப் பட்ட, எழில் - அழகிய, தெழ்கினோடு - இடைச்சரியோடுகூட, ஒண் - அழகிய, மாதளம்பூ - மாதுளம்பூக்கோவையான அரைவடத்தை, விடையேறு - ரிஷப வாஹநனும், காபாலி - கபாலத்தையுடையோனும், ஈசன் - தன்கூட்டத்துக்குத் தலைவனுமான ருத்ரன், விடுதந்தான் - கொடுத்தனுப்பினான்; உடையாய் - எல்லாவற்றையு முடையவனே, அழேல் அழேல் - அழாதேகொள் அழாதேகொள், தாலேலோ—; உலகம் - லோகங்களை, அளந்தானே - அளந்தருளினவனே, தாலேலோ—.

---

(க) ஹர்ஷம் - ஸந்தோஷம். (உ) த்ரிவிக்ரமன் - மூன்றடியிட்டவன். (ங) பரிகணிதன் - எண்ணத்தக்கவன்.

வ்யா.—(உடையித்யாதி) திருவரைக்குச் சேர்ந்திருப்பதான பொன்மணியோடுநடுநடுவே (க)கலசிக்கோத்த அழகிய(௨)இடைச்சுரிகையோடும் கூடியிருந்துள்ளஅழகிய மாதளம்பூக்கோவையான அரைவடத்தை. (விடையித்யாதி) ரிஷபவாஹநனாய் கபால நிரூபகனாய் (௩)ஸ்வகோஷ்டிக்கு (௪)நியந்தாவா யிருக்கிற ருத்ரன்வரவிட்டான். (உடையாயித்யாதி) ஒருவர் "என்னது" என்று வரவிடாத போதும் அவர்களோடு அவர்களுடைமையோடுவாசியற எல்லாவற்றையு முடையவனே அழாதேகொள் அழாதேகொள் தாலேலோ. (உலகமித்யாதி) திருவுலகளந்தருளின (௫) வ்ருத்தாந்தத்தாலே உன்னுடையஸர்வ (௬)ஸ்வாமித்வத்தை அடிப்படுத்திவைத்தவனே தாலேலோவென்று தாலாட்டினதாயிருக்கிறது. தாலாட்டாவது-நாவசைத்தல். (௨)

அ.—மூன்றாம்பாட்டு. ப்ரஹ்மருத்ரர்களையெண்ணினால்,பின்பு தன்னை யெண்ணும்படியான முதன்மையையுடையனான இந்த்ரன் கிஞ்சித்கரித்தபடியைச்சொல்லுகிறது.

மூ.—என்தம்பிரானாரெழிற்றிருமார்வர்க்குச்
சந்தமழகியதாமரைத்தாளர்க்கு
இந்திரன்றானுமெழிலுடைக்கிண்கிணி [லோ.
தந்துவனாய்நின்றான்றாலேலோ தாமரைக்கண்ணனேதாலே

ப-ரை.—என் - எனக்கு, தம்பிரானார் - ஸ்வாமியான, எழில் - அழகிய, திருமார்வர்க்கு - திருமார்வையுடையவர்க்கு, அழகிய - அழகான, சந்தம் - நிறத்தையுடைய, தாமரை - தாமரைப்பூவையொத்த, தாளர்க்கு - திருவடிகளையுடையவர்க்கு, இந்திரன்றான் - இந்திரனானவன், எழிலுடை - அழகையுடைய, கிண்கிணி - கிண்கிணியை, தந்து - கொடுவந்துஸமர்ப்பித்து, உவனாய்நின்றான் - பின்புறத்தானாய்நின்றான்; தாலேலோ—; தாமரை - தாமரைப்பூவையொத்த, கண்ணனே - திருக்கண்களையுடையவனே; தாலேலோ—.

வ்யா.—(என்னித்யாதி) (என் தம்பிரானார் எழில்திரு மார்வர்க்கு) எழில் - அழகு. என் தம்பிரானாரென்கிறவிது - திருமார்பினழகுக்குத் தோற்றுச்சொன்னவார்த்தை. (சந்தமித்யாதி) சிவப்பாலும் (௭) விகாஸாதிகளாலும் நிறமழகிய தாமரைப் பூப்போலேயிருக்கிற திருவடிகளையுடையவர்க்கு. (இந்திரனித்யாதி) (அ) த்ரைலோக்ய நிர்வாஹகனான முதன்மையையுடைய இந்த்ரன்றானும், அழகை யுடைத்தான கிண்கிணியைக் கொடுவந்து ஸமர்ப்பித்து

(க)கலசி-கலந்து. (௨)இடைச்சுரி - இடையில்சொருகுகிறகத்தி. (௩)ஸ்வகோஷ்டி - தன்னுடையஸபை. (௪) நியந்தா - கட்டளையிடுமவன். (௫) வ்ருத்தாந்தம் - சரித்ரம். (௬) ஸ்வாமித்வம் - தலைவனாயிருக்கை. (௭) விகாஸம் - மலருகை. (அ) த்ரைலோக்ய நிர்வாஹகன் - மூன்றுலோகங்களையும் ஆளுமவன்

(க) ஸ்வநைச்யம் தோற்ற (உ) அதூரவிப்ரக்ருஷ்டனாய்நின்றான் தாலேலோ. (தாமரையித்யாதி) கிஞ்சித்கரித்தவர்களைக் குளிர கடாக்ஷிக்கும் தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனே தாலேலோ.

அ.—நாலாம்பாட்டு. இந்த்ரனுக்குக்கீழாய், தனித்தனி (௩) ப்ரதாநரான தேவர்கள் (ச) ஸமுதாயேநபண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

மூ.—சங்கின்வலம்புரியுஞ்சேவடிக்கிண்கிணியும்
அங்கைச்சரிவளையுநாணுமரைத்தொடரும்
அங்கண்விசும்பிலமரர்கள்போத்தந்தார்
செங்கட்கருமுகிலேதாலேலோ தேவகிசிங்கமேதாலேலோ.

ப-ரை.—சங்கின் - சங்குகளினுயர்ந்த, வலம்புரியும் - வலம்புரிச்சங்கமும், சே - சிவந்த, அடி - திருவடிகளில்சாத்தத்தக்க, கிண்கிணியும் - சதங்கையும், அம் - அழகிய, கை - திருக்கைக்கு ஆபரணமான, சரியும் - முன்கைவளைகளும், வளையும் - திருத்தோள்வளைகளும், நாணும் - திருமார்புக்கு அலங்காரமாகச் சாத்தத்தக்கநாணும், அரைத்தொடரும் - திருவரைநாணும், அம்-அழகிய, கண்- இடமுடைத்தான, விசும்பில், ஸ்வர்க்கம்முதலிய லோகங்களிலிருந்து, அமரர்கள் - தேவர்கள், போத்தந்தார் - கொடுத்தனுப்பினார்கள்; செம் - சிவந்த, கண் - கண்களையும், கரு - கறுத்த, முகிலே - மேகத்தையொத்த வடிவையுமுடையவனே, தாலேலோ—; தேவகி - தேவகிப்பிராட்டிவயிற்றில் பிறந்ததனால், சிங்கமே - சிங்கக்குட்டிபோலே யிருக்கிற செருக்கையுடையவனே, தாலேலோ—.

வ்யா.—(சங்கித்யாதி) சங்குகளில் வைத்துக்கொண்டு (௫) உத்க்ருஷ்டமாய் (௬) மங்களாவஹமான வலம்புரியும், சிவந்த திருவடிகளிலேசாத்தத்தக்க சதங்கையும். சேவடிக்கிண்கிணியென்கையாலே, கிண்கிணியென்று – பாதச்சதங்கையைச் சொல்லுகிறது. (அங்கைச்சரியித்யாதி) அழகிய திருக்கைக்கு ஆபரணமான முன்கைச்சரிகளும், திருத்தோள்வளைகளும், திருமார்புக்கலங்காரமாகச் சாத்தத்தக்க நாணும், அரைவடமும். அன்றிக்கே, அரைத்தொடரோட்டைச் சேர்த்தியாலே, நாணென்றது - அரைநாணாகவுமாம். (அங்கணித்யாதி) அழகியதாய் இடமுடைத்தான ஸ்வர்க்காதிலோகங்களில் தேவர்கள்வரவிட்டார்கள். (செங்கணித்யாதி) ஓராபரணமும் வேண்டாதபடி தாமரைபூத்த (எ) காளமேகம்போலே சிவந்த திருக்கண்களோடே சேர்ந்த (அ) ச்யாமளமான வடிவையுடைய

---

(க) ஸ்வநைச்யம் - தன்னுடைய தாழ்ச்சி. (உ) அதூரவிப்ரக்ருஷ்டன்-கிட்டத்திலும் தூரத்திலுமின்றியேநடுவேயிருக்குமவன். (௩) ப்ரதாநம்-முதன்மை. (ச) ஸமுதாயேந - பொதுவாக. (௫) உத்க்ருஷ்டம் - உயர்வு. (௬) மங்களாவஹம் - மங்களத்தைச்செய்யுமது. (எ) காளமேகம் - கறுத்தமுகில். (அ) ச்யாமளம் - கறுப்பு.

வனே தாலேலோ. (தேவகியித்யாதி) தேவகிப்பிராட்டி வயிற்றில் பிறப்பாலே ஸிம்ஹக்கன்றுபோலே யிருக்கிற செருக்கையுடைய வனே தாலேலோ. (௪)

அ.—அஞ்சாம்பாட்டு. (௧)உத்தரதிக்பாலனாய் (௨)உதாரனான வைச்ரவணன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—எழிலார்திருமார்வுக்கேற்குமிவையென்று
அழகியவைம்படையுமாரமுங்கொண்டு
வழுவில்கொடையான்வயிச்சிராவணன் [லேலோ.
தொழுதுவனாய்நின்றான்றாலேலோதூமணிவண்ணனேதா

ப-ரை.—எழில் - அழகு, ஆர் - மிகுந்த, திரு - அழகிய, மார்வுக்கு - திரு மார்வுக்கு, இவையேற்குமென்று - இவைபொருந்துமென்று, அழகிய - அழகா யிருந்துள்ள, ஐம்படையும் - பஞ்சாயுதமாகிற ஆபரணமும், ஆரமும் - முக்தா ஹாரமும், கொண்டு - கைக்கொண்டு, வழு - குற்றம், இல்-இல்லாத, கொடை யான் - கொடுக்கையை யுடையனான, வயிச்சிராவணன் - வைச்ரவணன், தொழுது - அஞ்சலிபண்ணிக்கொண்டு, உவனாய்நின்றாய் - பிற்புறத்தானாய்நின் றான், தாலேலோ—; தூ - குற்றமற்ற, மணி - நீலரத்நம்போலேயிருக்கிற, வண்ணனே - வடிவையுடையவனே, தாலேலோ—.

வ்யா.— (எழிலித்யாதி) வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டும்படி அழகுமிக்கிருந்துள்ள திருமார்புக்குச் சேருமிவை யென்று. (அழகியவித்யாதி) அழகியதாயிருந்துள்ள ஸ்ரீபஞ்சாயுத மாகிற ஆபரணமும் * கோலமாமணியாரமும் கொண்டு. (வழுவி லித்யாதி) கொடுத்துக்கொள்ளுதல், கொடுக்கமுசித்தல் செய்கை யாகிற குற்றமில்லாத கொடையையுடையனான வைச்ரவணன். அரவை, "அரா" என்னுமாபோலே, "வைச்ரவணன்" என்கிறத்தை, வயிச்சிராவணனென்கிறது. (தொழுதித்யாதி) இத்தை யங்கீகரிக்க வேணுமென்று (௩) அஞ்சலிபண்ணிக்கொண்டு அதூரவிப்ரக்ருஷ் டனாய் நின்றான் தாலேலோ. (தூமணியித்யாதி) ஓராபரணமும் வேண்டாதபடி பழிப்பற்ற நீலரத்நம்போலே யிருக்கிற வடிவை யுடையவனேதாலேலோ. (௫)

அ.—ஆறாம்பாட்டு. (௪) பச்சிமதிக்பாலனாய் ஸமுத்ராதிபதி யானவருணன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—ஓதக்கடலினொளிமுத்தினாரமும்
சாதிப்பவளமுஞ்சங்கச்சரிவளையும்
மாதக்கவென்றுவருணன்விடுதந்தான் [லோ.
சோதிச்சுடர்முடியாய்தாலேலோசுந்தரத்தோளனேதாலே

(௧) உத்தரதிக்கு - வடதிசை. (௨) உதாரன் - கொடையாளி. (௩) அஞ் சலி - கைகூப்பல். (௪) பச்சிமதிக்கு - மேற்றிசை.

ப-ரை.—ஓதம் - திரைகளையுடைய, கடலில் - கடலிலேயுண்டான, ஒளி - ஒளியையுடைய, முத்தின் ஆரமும் - முத்துக்களாலே சேர்க்கப்பட்ட ஆரமும், சாதி - ஜாதியான, பவளமும் - பவளப்படியும், சந்தம் - அழகிய, சரியும் - முன்கைவளைகளும, வளையும் - தோள்வளைகளும், மா - பெருவிலையதாய், தக்க வென்று - தகுதியாயிருந்துள்ளவையென்று, வருணன் - வருணனானவன், விடு தந்தான் - கொடுத்தனுப்பினான்; சோதிச்சுடர் - மிக்கவொளியை யுடைத்தான, முடியாய்-முடியையுடையவனே, தாலேலோ—; சுந்தரம்-அழகிய, தோளனே- தோள்களையுடையவனே, தாலேலோ—.

வ்யா.—(ஓதமித்யாதி) திரைக்கிளப்பத்தை யுடைத்தான கடலிலே யுண்டாய் ஒளியோடேகூடின முத்துக்களாலே சேர்க்கப் பட்ட ஆரமும். அதுக்கு பரபாகமாம்படி (க) ஆக்கனன்றிக்கேஜாதி யான பவளப்படியும். (சந்தச்சரிவளையும்) திருக்கைக்குத்தகுதியாம் படி அழகியதாயிருந்துள்ள சரிகளும்வளைகளும். (மாதக்கவித்யாதி) பெருவிலையனாய் அங்குத்தைக்குத் தகுதியாயிருந்துள்ளவை இவை யென்று வருணன் வரவிட்டான். (சோதியித்யாதி) (உ) ஆதிராஜ்ய ஸூசகமாய் மிக்கதேஜஸ்ஸை யுடைத்தான (ங) திருவபிஷேகத்தை யுடையவனே தாலேலோ. (சுந்தரந்தோளித்யாதி) ஆபரணங்கள் மிகையாம்படி அழகிய திருத்தோள்களையுடையவனே தாலேலோ.

அ.—ஏழாம்பாட்டு. (ச) திவ்யமஹிஷிகளில் (ரு) ப்ரதானை யான பெரியபிராட்டியார் வரவிட்ட (சு) உபஹாரத்தைச்சொல்லு கிறது.

மூ.—கானார்நறுந்துழாய்க்கைசெய்தகண்ணியும்
வானார்செழுஞ்சோலைக்கற்பகத்தின்வாசிகையும்
தேனார்மலர்மேற்றிருமங்கைபோத்தந்தாள் [லோ.
கோனேயழேலழேலுலேலோகுடந்தைக்கிடந்தானேதாலே

ப-ரை.—கான் - காட்டிலே, ஆர் - உண்டான, நறு - நல்ல, துழாய் - திருத்துழாயாலே, கைசெய்த - கைத்தொழில் தோன்றப்பண்ணின, கண்ணி யும் - மாலையும், வான் - ஆகாசப்பரப்படங்கலும், ஆர் - நிறையும்படி, செழும்- அழகியதாய்,சோலை - சோலைசெய்து நிற்கிற, கற்பத்தின் - கற்பகப்பூவாலே செய்த, வாசிகையும்-திருநெற்றிமாலையும், தேன்ஆர் - தேன்மாறாத, மலர்மேல்- செந்தாமரை மலரின்மேலே நித்யவாஸம்செய்கிற, திருமங்கை - பெரியபிராட் டியார், போத்தந்தாள் - வரவிட்டாள்; கோனே - எல்லாருக்கும் ஸ்வாமி யானவனே, அழேல்அழேல் - அழாதேகொள் அழாதேகொள், தாலேலோ;— குடந்தை - திருக்குடந்தையிலே, கிடந்தானே - கண்வளர்ந் தருளினவனே, தாலேலோ—.

---

(க) ஆக்கன் - செய்தது. (உ) ஆதிராஜ்யஸூசகம் - அரசுத்தலைமையின் குறிப்பு. (ங) திருவபிஷேகம் - திருமுடி. (ச) திவ்யமஹிஷி - இராசாத்தி. (ரு) ப்ரதானை - முதலவள். (சு) உபஹாரம் - உனுப்பை.

வ்யா.—(கானுரித்யாதி) தன்நிலத்திலே வளருகையாலேதழைத்து பரிமளோத்தரமா யிருந்துள்ள திருத்துழாயாலே கைத்தொழில் தோன்றப்பண்ணின திருமாலையும். (வானுரித்யாதி) ஆகாசப் பரப்படங்கலும் நிறையும்படி அழகியதாய்ச் சோலைசெய்து நிற்கிற கற்பகப்பூவாலே செய்த திருநெற்றி மாலையும். (தேனுரித்யாதி) தேன்மாறாத செந்தாமரை மலரின்மேலே (க) நித்யவாஸம்செய்யாநிற்பாளாய் "ஶ்ரீ" "ஶ்ரீ" என்னும் பருவத்தை யுடையளான பெரியபிராட்டியார் வரவிட்டாள். (கோனேயித்யாதி) எல்லாரும் கிஞ்சித்கரிக்க வேண்டும்படி (உ) ஸர்வசேஷியா யுள்ளவனே அழாதேகொள் அழாதேகொள் தாலேலோ. (குடந்தையித்யாதி) அந்தமேன்மைக் கெதிர்த்தட்டான (௩)நீர்மை தோன்றத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளினவனே தாலேலோ. (எ)

அ.—எட்டாம்பாட்டு. பெரிய பிராட்டியாருக்கு அநந்தரம் பரிகணிதையான ஸ்ரீபூமிப்பிராட்டி வரவிட்ட உபஹாரவிசேஷத்தைச் சொல்லுகிறது.

மூ.—கச்சொடுபொற்சுரிகைக்காம்புகநகவளை
உச்சிமணிச்சுட்டியொண்டாணிரைப்பொற்பூ
அச்சுதனுக்கென்றவநியாள்போத்தந்தாள்
நச்சுமுலையுண்டாய் தாலேலோ நாராயணுவழேறுலேலோ.

ப-ரை.—கச்சொடு - திருப்பரிவட்டத்தின்மேலே கட்டுமதான கச்சோடே, பொன் - அழகிய, சுரிகை - உடைவாளும்; காம்பு - சிறுக்காம்பன்சேலையும், கநகம் - பொன்னாற்செய்த, வளை - தோள்வளையும், உச்சி - திருமுடியிலேசாத்தத்தக்க, மணி - ரத்நமிழைத்த, சுட்டி - திருநெற்றியில்அணியும்சுட்டியும், ஒண் - ஒள்ளிய, தாள் - தாளையுடைய, நிரை - ஒழுங்கான, பொற்பூ - பொற்பூவும், அச்சுதனுக்கென்று - தன்னை ரக்ஷகமாக அடைந்தவர்களை ஒருகாலமும் நழுவ்விடாதவனுக்கென்று, அவநியாள் - ஸ்ரீபூமிப்பிராட்டி, போத்தந்தாள் - கொடுத்தனுப்பினாள்; நஞ்சு - விஷமேற்றின, முலை-முலையை, உண்டாய் - உண்டவனே, தாலேலோ—; நாராயணா - நாராயணனே, அழேல்-அழாதேகொள், தாலேலோ—.

வ்யா.—(கச்சித்யாதி) திருவரையில்சாத்தின பரிவட்டத்தின் மேலே கட்டுமதான கச்சோடே அதிலே சொருகத்தக்க அழகிய சுரிகையாகிற ஆயுதமும், திருவரைக்கு அநுகுணமாகச் சாத்தும் சிறுக்காம்பன்சேலையும், திருத்தோள்களுக்குஅலங்காரமான பொன் வளையும், திருமுடியிலே சாத்துகைக்கு (ச) ரத்நாலங்க்ருதமான

(க) நித்யவாஸம் - என்றும் வஸிக்கை. (உ) ஸர்வசேஷி - எல்லாராலும் சூழப்படுதக்கவன். (௩) நீர்மை - எல்லார்க்கும் எளியனாயிருக்கை. (ச) ரத்நாலங்க்ருதமான - ரத்நமிழைத்த.

சுட்டியும், ஒள்ளியதாளையுடைத்தாய் த்திருமுடியிலே ஒழுங்குபடச் சாத்துகைக்கிடான பொற்பூவும். (அச்சுதனித்யாதி) (க)ஆச்ரிதரை ஒருகாலமும் நழுவவிடாதவனுக்கென்று ஸ்ரீபூமிப்பிராட்டிவரவிட்டாள். (நச்சுமுலையித்யாதி) (உ) பூபாரநிரஸநம் பண்ணுகைக்கு அடியிட்டு, பூதநையை முடிக்கைக்காக அவளுடைய (௩) நஞ்சேற்றின முலையையுண்டவனே தாலேலோ. (நாராயணுவித்யாதி) (௪) உபயவிபூதியிலுள்ளாரும் கிஞ்சித்கரிக்க வேண்டும்படி உபயவிபூதி (௫)நாதத்வஸூசகமான நாராயண சப்தவாச்யனானவனே அழாதே கொள் தாலேலோ. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. அவதாரகாலத்திலே ஒக்கப்பிறந்து இத்தலையைப் (௬) பேணிப்போன (எ) பாந்தவவிசேஷத் தாலே கீழ்ச்சொன்னவர்க ளெல்லாரிலும் (அ)வ்யாவ்ருத்தையான துர்க்கை, தன்னுடைய ஸ்நேஹாநுகுணமாகப் பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

மூ.—மெய்திமிருநானப்பொடியோடுமஞ்சளும்
செய்யதடங்கண்ணுக்கஞ்சநமுஞ்சிந்துரமும்
வெய்யகலைப்பாகிகொண்டுவளாய்நின்றாள் [லோ.
அய்யாவழேலழேருலேலோவரங்கத்தணையானேதாலே

ப-ரை.—மெய் - திருமேனியிலே, திமிரும் - திமிர்க்கைக்கிடான, நானப் பொடியோடு - கஸ்தூரி கற்பூரம் சந்தநமுதலிய வாஸனைப் பொடியோடுகூட, மஞ்சளும் - மஞ்சள்பொடியும், செய்ய - சிவந்து, தடம் - பரந்துநீண்ட, கண்ணுக்கு - திருக்கண்களுக்குத் தகுதியான, அஞ்சநமும் - மையும், சிந்துரமும் - திருநெற்றியில் சாத்துகைக்குச் சிந்துரமும், வெய்ய - வெவ்விதான, கலைப்பாகி-ஆண்மானைவாகநமாகவுடையதுர்க்கை, கொண்டு -கையில்கொண்டு, உவளாய்நின்றாள் - பிற்புறத்தாளாய் நின்றாள்; அய்யா - ஸர்வஸ்வாமியான வனே,அழேலழேல்-அழாதேகொள் அழாதேகொள், தாலேலோ—;அரங்கத்து- கோயிலிலே, அணையானே - திருவரவணையிலே பள்ளிகொண்டருளுகிறவனே, தாலேலோ—.

வ்யா.—(மெய்யித்யாதி) திருமேனியிலே (௯) மர்த்திக்கைக்கிடான சந்தந கஸ்தூரீ கர்ப்பூராதி ஸுகந்தத்ரவ்ய ஸமுதாய (௧௦) சூர்ணத்தோடே நிறம்பெறச் சாத்தத்தக்க மஞ்சள் பொடியும்,

---

(க) ஆச்ரிதர் - தன்னை அடைந்தவர்கள். (உ) பூபாரநிரஸநம் - பூமியின் பளுவைநீங்கப்பண்ணுகை. (௩) நஞ்சேற்றின - விஷமூட்டின. (௪) உபயவிபூதி - நித்யவிபூதியும், லீலாவிபூதியும். நித்யவிபூதி - பரமபதம். லீலாவிபூதி- பூலோகம்முதலியன. (௫) நாதத்வஸூசகம் - யஜமாநனுகையைக்குறிக்கை. (௬)பேணி - விரும்பி. (எ) பாந்தவவிசேஷம் - சம்பந்தத்தினுயர்த்தி. (அ) வ்யாவ்ருத்தை - வேறுபாடுடையாள். (௯) மர்த்திக்கை - திமிர்க்கை. (௧௦) சூர்ணம் - தூள்.

சிவந்து புடைபரந்து நீண்ட திருக்கண்களுக்குச் சாத்துகைக்குத் தகுதியான அஞ்சநமும், திருநெற்றி அழகுபெறச் சாத்துகைக்குச் சிந்துரமும். (வெய்யவித்யாதி) வெவ்விதான (க) கலையை வாகநமாகவுடைய துர்க்கையானவள் கொண்டுவந்து அதூரவிப்ரக்ருஷ்டையாய் நின்றாள். (அய்யாவித்யாதி)ஸர்வஸ்வாமியானவனே அழாதேகொள் அழாகோள் தாலேலோ. (அரங்கத்தித்யாதி) அந்தஸர்வஸ்வாமித்வத்தை (உ) நிர்வஹிக்கைக்கீடாகக் கோயிலில் திருவரவணையிலேபள்ளிகொண்டருளுகிறவனே தாலேலோ. அன்றிக்கே, வெய்யகலைப்பாகி என்கிறது, வெம்மை - விருப்பத்துக்கு வாசகமாகையாலே (௩)ஸ்ப்ருஹணீயமான (௪) கலைகளை நாவிலே நின்று நடத்துகிற ஸரஸ்வதியைச்சொல்லுகிறதாய், அடியிலே எல்லாருக்கும் ப்ரதாநனாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மாவுக்கு ப்ரதாநமஹிஷியானவள் பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறதென்று வாக்யார்த்தமாக்கி, மேலடைய, அதுக்குச்சேர(௫)நிர்வஹிக்கவுமாம்.()

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வஞ்சனையால்வந்தபேய்ச்சிமுலையுண்ட
அஞ்சநவண்ணனையாச்சிதாலாட்டிய
செஞ்சொன்மறையவர்சேர்புதுவைப்பட்டன்சொல்
எஞ்சாமைவல்லவர்க்கில்லையிடர்தானே.

ப - ரை.—வஞ்சனையால்வந்த - பேய்வடிவைமறைத்துத் தாய்வடிவு கொண்டுவந்த, பேய்ச்சி - பூதனையுடைய, முலை - முலையை, உண்ட - அவள் முடியும்படியாகவுண்ட, அஞ்சநம் - கறுத்த, வண்ணனை - வடிவை யுடையவனை, ஆச்சி - மாதாவான யசோதைப்பிராட்டி, தாலாட்டிய - தாலாட்டினபடிகளை, செம் - செவ்விய, சொல் - சொல்லையுடைத்தான, மறையவர் - வேதியர், சேர் - சேர்ந்து வர்த்திக்கிற, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூரில், பட்டன் - ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரருளிச்செய்த, சொல் - சொல்லை, எஞ்சாமை - குறையாமல், வல்லவர்க்கு-ஓதவல்லவர்களுக்கு, இடர்தான் - துக்கமானது, இல்லை- உண்டாகாது.

வ்யா.—(வஞ்சனையித்யாதி) "தாயாய்வந்தபேய்" என்கிறபடியே பேயான தன்வடிவைமறைத்துத் தாய்வடிவைக்கொண்டு வஞ்சித்துவந்தபூதனையுடையமுலையை, அவள் தாயாய்வந்தாற்போலே, தானும் பிள்ளையாய்க்கொண்டு, தாய்முலையுண்ணுமாபோலே உண்ணா நிற்கச்செய்தே அவள் முடியும்படியாகவுண்ட. (அஞ்சநவண்ணனை) விரோதி போகப் பெற்றோமென்னும் ஹர்ஷத்தாலே திரு

(க) கலை - ஆண்மான். (உ) நிர்வஹிக்கை - மேற்கொள்ளுகை. (௩) ஸ்ப்ருஹணீயம் - ஆசைப்படத்தக்கது. (௪) கலை - சாஸ்திரம். (௫) நிர்வஹித்தல் - ஏற்படுத்தல்.

மேனியிற்பிறந்தபுகரைச் சொல்லுகிறது. (ஆச்சியித்யாதி) மாதா வான யசோதைப்பிராட்டி தாலாட்டினபடிகளை. (செஞ்சொலித்யாதி) (க) யதாபூதவாதியாகையாலே செவ்வியசொல்லை யுடைத்தான வேதத்தைத் தங்களுக்கு நிரூபகமாக வுடையவர்கள் சேர்ந்து வர்த்திக்கிற ஸ்ரீவில்லிபுத்தூரில் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரருளிச்செய்த சப்தத்தை. (எஞ்சாமையித்யாதி) (உ) ஸங்கோசமற (௩) அதிகரிக்கவல்லவர்களுக்கு ஒருதுக்கமில்லை. (௧௦)

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு.—மாணி உடை என்சங்கின் எழிலோதக்காளுர் கச்சுமெய்வஞ்சனைதன்.

---

ஆ திருமொழி ௩-க்கு, பாட்டு-௪௧.

அ.—கீழ்த்திருமொழியிலே - யசோதைப் பிராட்டி அவனுடைய (௪) சைசவாநுகுணமாக அழுகையை மாற்றிக் கண்வளரப் பண்ணுகைக்காகச் சிராட்டிக்கொண்டு தாலாட்டின ப்ரகாரத்தை (௫)தத்பாவயுக்தராய்க்கொண்டு தாமும் அப்படிஅருளிச்செய்தார்; இனிமேல், தொட்டில் பருவம்போய், தவழ்ந்து விளையாடத்தக்க பருவமானபின்புஅவன்*நீணிலாமுற்றத்தேபோந்துதவழ்ந்து புழுதியளைவது, சந்த்ரனையழைப்பதான ப்ரகாரத்தை, அவள் அநுபவித்து அவனுக் குகப்பாகச் சந்த்ரனை வரச்சொல்லித் தான் பலகாலும் அழைத்தப்ரகாரத்தை,தாமும்(௬)அநுபவபூர்வகமாகப்பேசியினியராகிறார். பரமபதத்தில் "அவாக்யநாதர:" "[illegible]" என்கிறபடியே பெருமதிப்பனாய் ஒருவார்த்தைசொல்லக்கட வனன்றிக்கே, தன்னோடொக்கமுகம்பார்த்து வார்த்தை சொல்லுகைக்கு (எ) ஒரு தத்வாந்தர மில்லாமையாலே (அ) அநாதரித்திருக்குமவன், லீலாவிபூதியிலே ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகத் தன்னிச்சையாலே (௯)இதரவிஸஜாதியனாய் வந்தவதரித்து அவதாரத்தின் மெய்ப்பாடு தோற்ற (௧௦) சைசவாத்யவஸ்தைகளை அடைந்து தத்ததவஸ்தாநுகுணமாகச்செய்த சேஷ்டிதாதிகளை அநுஸந்தித்தால் *மயர்வறமதி

---

(க) யதாபூதவாதி - உண்மைபேசுமவன். (உ) சங்கோசம் - குறைவு. (௩) அதிகரித்தல் - கற்றல். (௪) சைசவம் - குழவித்தன்மை. (௫) தத்பாவயுக்தர்- அந்தக்கருத்தை யுடையவர். (௬) அநுபவபூர்வகமாக - அநுபவத்தை முன்னிட்டுக்கொண்டு. (எ) ஒருதத்வாந்தரம் - வேறோருண்மை. (அ) அநாதரித்தல்- அசட்டைசெய்தல். (௯) இதரவிஸஜாதீயன் - பிறரைஒவ்வாதவன். (௧௦) சைசவாத்யவஸ்தைகள் - குழவிமுதலிய அவஸ்தைகள்.

நலமருளப்பெறுகையாலே அவன் மேன்மையையும் நீர்மையையும் தெளியக்கண்டவர்கள் அதிலே வித்தராய் அநுபவிக்கச் சொல்ல வேண்டாவிறே. மற்றுள்ள வாழ்வார்களையும்போ லன்றிக்கே இவ் வவதார விசேஷத்தில் (க) ப்ரேமாதிசயத்தாலே (உ) கோபஜந்ம த்தை (௩) ஆஸ்தாநம்பண்ணி, இவ்வவதார ரஸமெல்லாம் அநுப விப்பதாக இழிந்தவிவர், அவனுடையபாலசேஷ்டிதங்களில் ஒன்றும் நழுவவிடாரிறே; ஆகையாலே, அவன் புழுதியளைவது சந்த்ரனை அழைப்பதான சேஷ்டிதங்களை தத்காலத்தில் யசோதைப்பிராட்டி அநுபவித்தாற்போலே தாமும் அநுபவித்துப் பேசுகிறார்.

மூ.—தன்முகத்துச்சுட்டித்தூங்கத்தூங்கத்தவழ்ந்துபோய்ப்
பொன்முகக்கிண்கிணியார்ப்பப்புழுதியளைகின்றான்
என்மகன்கோவிந்தன்கூத்தினையிளமாமதீ
நின்முகங்கண்ணுளவாகினீயிங்கேநோக்கிப்போ.

ப-ரை.—தன் - தன்னுடைய, முகத்து - திருமுகத்திலே, சுட்டி - சுட்டி யானது, தூங்கத்தூங்க-பலகாலுமசையும்படியாகவும், பொன்-அழகிய, முகம்-முகத்தை யுடைத்தான, கிண்கிணி - கிண்கிணியானது, ஆர்ப்ப - சப்திக்கும்படி யாகவும், தவழ்ந்துபோய் - தவழ்ந்துசென்று, புழுதி - புழுதியை, அளைகின் றான் - அளையாநின்றான்; என் - என்னுடைய, மகன் - பிள்ளையான, கோவிந்தன் - கோவிந்தனுடைய, கூத்தினை - அழகியசெய்கைகளை, மா - மிகவும், இளம் - இளமைபொருந்திய, மதி - சந்திரனே, நின் - உன்னுடைய, முகம் - முகத்தில், கண் - கண்கள், உளவாகில் - உண்டாமாகில், நீ—, இங்கே—, நோக்கிப்போ- பார்த்துப்போ.

வ்யா.—முதற்பாட்டு. (தன்னித்யாதி) வெறும்புறத்திலே ஆல த்தி வழிக்கவேண்டும்படியான தன்திருமுகத்திலே அழகுக்கு உட லாக (ச) நாலும்படிகட்டின சுட்டியானது, தவழுகைக்காகத் திரு முடியை (ரு) நாற்றுகையாலே பலகாலும் அசையும்படி யாகவும் திருவாயிலே சாத்திக்கிடக்கிற அழகிய முகத்தை யுடைத்தான கிண்கிணியானது த்வநிக்கும்படியாகவும் தவழ்ந்துபோய்ப் புழுதி யளையாநின்றான். பொன்முகக் கிண்கிணியென்றது - சேவடிக்கிண் கிணியாகிற பாதச்சதங்கையாகவுமாம். அதிறேதவழும்போது மிக வும் சப்திப்பது. (என்மகனித்யாதி) என்னுடைய பிள்ளையான கோவிந்தனுடைய, (சு) மநோஹாரிசேஷ்டிதத்தை. (இளமாமதி) இத்தைக்கண்டு (எ) கால்தாழ்ந்து நிற்கவேண்டியிருக்க, அதுசெய் யாதேபோகிற (அ) அதிமுக்தனான சந்த்ரனே. இளமாமதியென்றது-

(க) ப்ரேமாதிசயம் - அன்பின்மிகுதி. (உ) கோபஜந்மம் - இடைப்பிறப்பு. (௩) ஆஸ்தாநம்பண்ணி - அடைந்து. (ச) நாலும்படி - தொங்கும்படி. (ரு) நாற்றுகை - தொங்கவிடுகை. (சு) மநோஹாரிசேஷ்டிதம் - மநதைக்கவரத் தக்கசெய்கை. (எ) கால்தாழ்ந்து - ஊன்றி. (அ) அதிமுக்தன் - மிகவும்இளைஞன்.

இளமையால்மிக்க மதியென்றபடி. (நின்முக மித்யாதி) உன்னு டையமுகத்தில் கண்ணுண்டாமாகில் கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி நீ இங்கேபார்த்துப்போ.

மூ.—என்சிறுக்குட்டனெனக்கோரின்னமுதெம்பிரான்
தன்சிறுக்கைகளாற்காட்டிக்காட்டியழைக்கின்றான்
அஞ்சநவண்ணனோடாடலாடவுறுதியேல்
மஞ்சின்மறையாதேமாமதீமகிழ்ந்தோடிவா.

ப - ரை.—என் - என்னுடைய, சிறுக்குட்டன்-சிறுப்பிள்ளையாய், எனக்கு-எனக்கு, ஓர் - ஒப்பற்ற, இன் - இனிதான, அமுது - அமிர்தத்தை யொத்தவனாய், எம்பிரான் - எனக்கு உபகாரகனானவன், தன் - தன்னுடைய, சிறுக்கைகளால் - சிறியகைகளாலே, காட்டிக்காட்டி-உன்னையேபலகால்காட்டி, அழைக்கின்றான் - அழையாநின்றான்; அஞ்சநம் - கறுத்த, வண்ணனோடு - திருநிறத்தையுடைய இவனோடும்கூட, ஆடலாட - விளையாடலாட, உறுதியேல் - வேண்டுதியாகில், மஞ்சில் - மேகத்திலேசொருகி, மறையாது - மறைந்துவிடாமல், மா-வடிவாலும் குளிர்த்தியாலும் உயர்ந்த, மதி - சந்திரனே, மகிழ்ந்து - உகந்து, ஓடிவா - கடுநடையிட்டுவா.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (என்சிறுக்குட்டன்) என்னுடைய சிறுப்பிள்ளை. (எனக்கோரின்னமுது) பருவத்தாலும் சேஷ்டிதங்களாலும் (க) அத்விதீயமாய் இனிதான அம்ருதம்போலே எனக்கு ரஸாவஹனானவன். (எம்பிரான்)எனக்கு புத்ரனாய்வந்தவதரித்தும், தன் சேஷ்டிதங்களையெல்லாம் அநுபவிப்பித்தும், இப்படியே எல்லாப்படியாலும் எனக்கு உபகாரகனானவன். (தன்னித்யாதி) தனக்குத்தகுதியான சிறுக்கைகளாலே பலகாலும் உன்னையேகாட்டி அழையாநின்றான். (அஞ்சநமித்யாதி) * கண்டவர்கள் கண்குளிரும்படி அஞ்சநம்போலே யிருக்கிற திருநிறத்தை யுடையனான இவனோடே விளையாடலாடவேண்டுதியாகில். (மஞ்சில்த்யாதி) மேகத்திலே சொருகி மறையாதே வடிவாலும் குளிர்த்தியாலும் (உ) ச்லாக்யனான சந்த்ரனே, “நம்மையழைக்கப்பெற்றோமே” என்று உகந்து ஆதரந்தோற்றக் (௩) கடுநடையிட்டுவா. (உ)

மூ.—சுற்றுமொளிவட்டஞ்சூழ்ந்துசோதிபரந்தெங்கும்
எத்தனைசெய்யிலுமென்மகன்முகநேரொவ்வாய்
வித்தகன்வேங்கடவாணனுன்னைவிளிக்கின்ற
கைத்தலநோவாமேயம்புலீகடிதோடிவா.

ப-ரை.—ஒளி - ஒளியையுடைத்தான, வட்டம் - மண்டலமானது, சுற்றும்-நாற்புறமும், சூழ்ந்து - சூழ்ந்துகொண்டு, எங்கும் - எல்லாத்திசைகளிலும்,

(க) அத்விதீயம் - ஒப்பற்றது. (உ) ச்லாக்யன் - உயர்ந்தவன். (௩) கடுநடை - விரைவானநடை.

சோதி - தேஜஸ்ஸாலே, பரந்து - பரவி, எத்தனைசெய்யிலும் - எல்லாம் செய்தாலும், என்—, மகன் - மகனுடைய, முகம் - ஒள்ளியமுகத்துக்கு, நேரொவ்வாய் - எல்லாப்படியாலும் ஒப்பாகமாட்டாய்; வித்தகன் - ஆச்சரியப் படத்தக்கவனாய், வேங்கடவாணன் - திருமலையிலே எழுந்தருளி யிருக்கிறவன், உன்னை—, விளிக்கின்ற - ஆதரித்தழைக்கிற, கைத்தலம் - திருக்கைத்தலம், நோவாமே - நோவாதபடி, அம்புலீ - சந்திரனே, கடிது - விரைவாக, ஓடிவா- ஓடிவா.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (சுற்றுமித்யாதி) ஒளியை யுடைத்தான மண்டலமானது (க) அக்ஷயமாய்க்கொண்டு சுற்றும் சுழன்று (உ) அகளங்கமாய்க்கொண்டு எங்கும் தேஜஸ்ஸாலே (௩)வ்யாப்தமாய் எல்லாம்செய்தாலும். (என்மகனித்யாதி)என்மகனுடைய (ச) ஸுவ்ருத்தமாய் (ரு)ஜ்யோதிர்மயமானமுகத்துக்கு (சு)ஸர்வதாஸத்ருசமாகமாட்டாய். (வித்தகனித்யாதி) அழகாலும் குணசேஷ்டிதங்களாலும் (எ)விஸ்மயநீயனாய் துர்மாநிகளான உன்போல்வாரை அநாதரித்து *கானமும்வாநரமுமான வற்றை ஆதரித்துக்கொண்டு திருமலையிலேவர்த்திக்கிறவன், உன்னை ஆதரித்து அழைக்கிற திருக்கைத்தலம் நோவாதபடியாக அம்புலீ மிகவும்விரைந்தோடிவா. (௩)

மூ.—சக்கரக்கையன்றடங்கண்ணான்மலரவிழித்து
ஒக்கலைமேலிருந்துன்னையேசுட்டிக்காட்டுங்காண்
தக்கதறிதியேற்சந்திராசலஞ்செய்யாதே
மக்கட்பெறாதமலடனல்லையேல்வாகண்டாய்.

ப-ரை.—சக்கரம் - திருவாழியை, கையன் - கையிலேயுடையவன், தடம்- விசாலமான, கண்ணால் - திருக்கண்களாலே, மலரவிழித்து - மலரப்பார்த்து, ஒக்கலைமேல் - என்னுடைய மருங்கிலே, இருந்து—, உன்னையே—, சுட்டி - குறித்து, காட்டுங்காண் - காட்டாநிற்குங்காண்; தக்கது - உனக்குத்தகுதியானது, அறிதியேல் - அறிவாயாகில், சந்திரா - சந்திரனே, சலம்செய்யாதே - வெறுப்புச்செய்யாதே; மக்கள் - பிள்ளைகளை, பெறாத—, மலடனல்லையேல் - மலடனல்லவாகில், வாகண்டாய் - வந்துநில்கிடாய்.

வ்யா.—நாலாம்பாட்டு. (சக்கரக்கையன்) (அ) *கருதுமிடம் பொருதும் திருவாழியைக்கையிலேயுடையவன். இத்தால் - நீவாராதொழிந்தால் உன்னைசிக்ஷிக்கைக்கீடான (௯) பரிகரமுடையவனென்கை. (தடங்கணித்யாதி) இடமுடைத்தான திருக்ககண்களாலே உன்னளவில் ப்ரீதிதோற்ற மலரப்பார்த்து. (ஒக்கலைமேலிருந்து)

(க) அக்ஷயம் - குறைவில்லாமை. (உ) அகளங்கம் - அழுக்கற்றது. (௩) வ்யாப்தமாய் - பரவி. (ச) ஸுவ்ருத்தம் - நல்லவட்டம், அழகியவட்டம். (ரு) ஜ்யோதி - ஒளி. (சு) ஸர்வதாஸத்ருசம் - எல்லாப்படியாலும் ஒப்பு. (எ) விஸ்மயநீயன் - ஆச்சரியப்படத்தவன் (அ) கருதுமிடம் பொருதும் - நினைத்தவிடத்தில்சென்று போர்செய்கிற. (௯) பரிகரம் - கருவி.

என்னுடையமருங்கிலே யிருந்து. (உன்னையித்யாதி) வேறொன்றில் கண்வையாதே உன்னையே குறித்துக்காட்டா நிற்குங்காண். (தக்க தறிதியேல்) உனக்குத்தகுதியானது அறிதியாகில். (சந்திராசலம் செய்யாதே) எல்லார்க்கும் (௧) ஆஹ்லாதகரனு யிருக்கிறநீ இவனுக்கு வெறுப்புச்செய்யாதே. (மக்களித்யாதி) பிள்ளைகள் பெறாத (௨) வந்த்யனல்லவாகில் வந்துகொடுநில்கிடாய். (௪)

மூ.—அழகியவாயிலமுதவூறற்றெளிவுறா
மழலைமுற்றாதவிளஞ்சொல்லாலுன்னைக்கூவுகின்றான்
குழகன்சிரீதரன்கூவக்கூவநீபோதியேல்
புழையிலவாகாதேநின்செவிபுகர்மாமதீ.

ப - ்ரை.—அழகிய - அழகான, வாயில் - திருப்பவளத்திலே, ஊறல்-ஊறாநிற்கிற, அமுதம் - ஜலமாகிற அம்ருதத்தோடே, தெளிவுறா - உருத்தெரியாததாய், மழலை - மழலைத்தனத்துக்குள்ள, முற்றாத - முற்றுதலில்லாத, இளம் - இளமைதங்கிய, சொல்லால் - சொல்லாலே, உன்னை—, கூவுகின்றான்-அழையாநிற்கிறான்; குழகன் - எல்லாரோடும்கலந்திருப்பவனும், சிரீதரன் - பெரியபிராட்டியாரைத் திருமார்பிலே உடையனுமானவிவன், கூவக்கூவ - பலகால் அழையாநிற்க, நீ—, போதியேல் - போவாயேயாகில், புகர்-ஒளியையும், மா - பெருமையையு முடைய, மதீ - சந்திரனே, நின் - உன்னுடைய, செவி - காதுகள், புழையிலவாகாதே - துளையிலவாகாதோ.

வ்ய.—அஞ்சாம்பாட்டு. (அழகியவித்யாதி) அழகிய திருப்பவளத்திலே ஊறாநின்ற ஜலமாகிற அம்ருதத்தோடேகூடி உருத்தெரியாததாய் மழலைத்தனத்துக்குள்ள முற்றுதல்தானு மின்றிக்கேயிருக்கிற இளஞ்சொல்லாலே உன்னை யழையாநின்றான். (குழகன்) கொடுத்தார் கொடுத்தார் முலைகளெல்லாமுண்டு, எடுத்தாரெடுத்தாரோ டெல்லாம் பொருந்தியிருக்கும் கலப்புடையவன். (சிரீதரன்) கீழ்ச்சொன்னநீர்மைக்கு எதிர்த்தட்டான மேன்மையையுடையவன். (௩) ஸ்ரீதரத்வம் (௪) ஸர்வாதிகத்வ ஸூசகமிறே. (கூவக்கூவநீபோதியேல்) ஒருகால்போலே பலகாலும் அழையாநிற்க, கேளாதாரைப்போலே நீபோவுதியாகில். (புழையித்யாதி) உன்னுடைய செவிதுளையிலவாகாதே. புழை - ஸுஷிரம். உன்னுடைய (௫) ச்ரவணேந்த்ரியத்துக்கு ப்ரயோஜநமில்லை யாகாதோ வென்கை. (புகர்மாமதீ) உன்னுடையதேஜஸ்ஸுக்கும் பெருமைக்கும் போருமோவிது. (௫)

---

(௧) ஆஹ்லாதகரன் - சந்தோஷத்தை உண்டாக்குமவன். (௨) வந்த்யன்- மலடன். (௩) ச்ரீதரத்வம் - பெரியபிராட்டியாரை தரிக்கை. (௪) ஸர்வாதிகத்வ ஸூசகம் - எல்லாவற்றுக்கும் குறிப்பு. (௫) ச்ரவணேந்த்ரியம் - காது.

மூ.—தண்டொடுசக்கரஞ்சார்ங்கமேந்துந்தடக்கையன்
கண்டுயில்கொள்ளக்கருதிக்கொட்டாவிகொள்கின்றான்
உண்டமுலைப்பாலறாகண்டாயுறங்காவிடில்
விண்டனின்மன்னியமாமதீவிரைந்தோடிவா.

ப - ரை.—தண்டொடு - கதையோடு, சக்கரம் - சக்கரத்தையும், சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கமென்னும் தநுஸ்ஸையும், ஏந்தும் - தரித்த, தடம் - விசாலமான, கையன் - திருக்கைகளையுடைய விவன், கண்துயில்கொள்ள - திருக்கண் வளர்ந்தருளுவதாக, கருதி-நினைத்து, கொட்டாவி கொள்கின்றான் - அதுக்குக் குறிப்பாகக் கொட்டாவிவிடுகிறான்; உறங்காவிடில் - கண்வளராவிட்டால், உண்ட - அமுதுசெய்த, முலைப்பால்—, அறாகண்டாய் - ஜரியாதுகிடாய்; ஆகையால், விண்டனில் - ஆகாசத்திலே, மன்னிய - பொருந்தியிருப்பவனும், மா - வடிவில் பெருமையையுடையனுமாயிருக்கிற, மதீ - சந்த்ரனே, விரைந்து - சீக்கிரமாக, ஓடிவா—.

வ்யா.—ஆறாம்பாட்டு. (தண்டித்யாதி) கதையும் திருவாழியும் ஸ்ரீசார்ங்கமும் மற்றவிரண்டுக்கும் உபலக்ஷணம். (ஏந்தும்தடக்கையன்) இவற்றை, பூவேந்தினாற்போலே ஸர்வகாலமும் தரித்துக்கொண்டிருக்கும் இடமுடைத்தான திருக்கைகளையுடையவன். இவைதான் ஆபரண (க) கோடியிலும் ஆயுதகோடியிலுமா (உ) யிறே யிருப்பது. இத்தால் - இவ்வழகையநுபவித்து வாழலாயிருக்க, இவற்றின் (ந) வீர்யத்துக்கிலக்காய் முடிந்துபோகாதேகொள்ளென்கை. (கண்டுயிலித்யாதி) கண்வளர்ந்தருளுவதாகநினைத்து, அதுக்கு (ச)ஸூசகமாகக் கொட்டாவிகொள்ளாநின்றான். (உண்டவித்யாதி) கண்வளராதொழியில், அமுதுசெய்த முலைப்பால் ஜரியாதுகிடாய். ஆனபின்பு (விண்டனில்மன்னியமாமதீவிரைந்தோடிவா) (ரு) உச்சஸ்தலத்திலே வர்த்தியாநிற்பானாய் வடிவிற் பெருமையையுடையனாயிருக்கிறசந்த்ரனே, உன்னுடைய உயர்த்திக்கும்பக்வதைக்குமீடாக (சா) ஸத்வரனாய்க் கொண்டு ஓடிவா. (சா)

மூ.—பாலகனென்றுபரிபவஞ்செய்யேற்பண்டொருநாள்
ஆலினிலைவளர்ந்தசிறுக்கனவனிவன்
மேலெழப்பாய்ந்துபிடித்துக்கொள்ளுமவெகுளுமேல்
மாலைமதியாதேமாமதீமகிழ்ந்தோடிவா.

ப - ரை.—பாலகனென்று - சிறுபிள்ளையென்று, பரிபவம்செய்யேல் - இகழ்த்தகுந்தவனாக நினையாதே; பண்டொருநாள்-முன்பொருகாலத்திலே, ஆலின் இலை - ஆலந்தளிரிலே, வளர்ந்த - கண்வளர்ந்த, சிறுக்கனவன் - சிறுபிள்ளையானவவன், இவன் - இவன்காண்; வெகுளுமேல் - இவன்சீறுமாகில், மேலெழ பாய்ந்து - மேலேஎழ குதித்து, பிடித்துக்கொள்ளும் - உன்னைப்பிடித்துக்கொள்

(க)கோடி - வர்க்கம்; வகை. (உ)இறே - ப்ரஸித்தியைக்குறிக்கும்சொல். (ந)வீர்யம் - பராக்ரமம். (ச)ஸூசகம் - குறிப்பு. (ரு)உச்சஸ்தலம் - உயர்ந்தவிடம். (சா) ஸத்வரனாய் - விரைவோடுகூடினவனாய்.

ளுவான்; ஆகையால், மாலே - இப்படி பெரியனானவனே, மதியாது - சிறியனென்று நினையாமல், மா - பெருமையையுடைய, மதீ - சந்திரனே, மகிழ்ந்து - இவன் நம்மை அழைக்கப் பெற்றோமேயென்னும் ஸந்தோஷத்தை யுடையனாய்க்கொண்டு, ஓடிவா—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பாலகனித்யாதி) இவன் சிறுபிள்ளையன்றோவென்று பருவத்தைப்பார்த்துக் குறையநினைக்கை யாகிற (க) பரிபவத்தைப் பண்ணாதே கொள். (பண்டொருவித்யாதி) முன்பொருகாலத்திலே ஜகத்தையடையத்திருவயிற்றிலேவைத்து, ஒருபவனா ஆலந்தளிரிலேகண்வளர்ந்த சிறுபிள்ளையானவவன் இவன்காண். அந்த (உ) அகடிதகடநா ஸாமர்த்யமெல்லா முடையவனென்கை. (மேலெழவித்யாதி) இவன்சீறுமாகில் மேலே எழக்குதித்து உன்னைப்பிடித்துக்கொள்ளும். (மாலேயித்யாதி) ஆனபின்பு இப்படிபெரியனானவனைச்சிறியனென்று(ங)பரிச்சேதியாதே, பெருமையையுடைய சந்த்ரனே உன்பெருமைக்கீடாக இவன் நம்மை ஆதரித்து அழைக்கப்பெற்றோமேயென்னும் உகப்புத்தோற்றவோடிவா.

மூ.—சிறியனென்றென்னிளஞ்சிங்கத்தையிகழேற்கண்டாய்
சிறுமையின்வார்த்தையைமாவலியிடைச்சென்றுகேள்
சிறுமைப்பிழைகொள்ளினீயுமுன்றேவைக்குரியைகாண்
நிறைமதீநெடுமால்விரைந்துன்னைக்கூவுகின்றான்.

ப - ரை.—என் - என்னுடைய, இளம்சிங்கத்தை - இளமைதங்கிய சிங்கத்தைப்போலே செருக்கையும் வீர்யத்தையுமுடையனாயிருக்கிறபிள்ளையை, சிறியனென்று - சிறுபிள்ளையென்று, இகழேல்கண்டாய் - அவமதியாதேகிடாய்; சிறுமையின் - இவனுடைய பால்யத்தின், வார்த்தையை - விசேஷத்தை, மாவலியிடை - மஹாபலியிடத்தில், சென்று - போய், கேள்-கேட்டுக்கொள்; சிறுமை- சிறுமையாக நினைத்தவிது, பிழை - குற்றமென்று, கொள்ளில் - நினைத்தாயாகில், அப்போது, நீயும்—, உன்தேவைக்கு - அவன் விஷயத்தில் அடிமைக்கு, உரியைகாண் - தகுந்தவன்காண்; நிறை - பரிபூர்ணனான, மதீ - சந்திரனே, நெடுமால் - ஸர்வாதிகனானவன், விரைந்து - பெரியத்வரையோடே, உன்னை—, கூவுகின்றான் - அழைக்கிறான்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (சிறியனித்யாதி) பால ஸிம்ஹம் போலே செருக்கையும் வீர்யத்தையு முடையனாயிருக்கிற என்னுடைய பிள்ளையை, பருவத்தைப்பார்த்துச் சிறுபிள்ளையென்று அநாதரியாதேகிடாய். (சிறுமையித்யாதி) இவனுடைய பால்யத்தினுடைய விசேஷத்தை வாமநனாய்ச்சென்று, தன்னை (ச) வசீகரித்து "மூவடி" என்று இரந்து, இரண்டடியாலே ஜகத்தையடையவளந்து,

(க) பரிபவம் - அவமதிப்பு. (உ) அகடிதகடநா ஸாமர்த்தியம் - செய்யக்கூடாததைச்செய்துமுடிக்கும் வல்லமை. (ங) பரிச்சேதித்தல் - அளவிடுதல். (ச) வசீகரித்தல் - தன்வசமாக்குகை.

ஓரடிக்குத் தன்னைச் சிறையிலேவைக்கப்பட்ட மஹாபலிபக்கலிலே சென்று கேட்டுக்கொள். (சிறுமையித்யாதி) இப்படி யிருக்கிறவன் விஷயத்தில் சிறுமையை நினைத்தவிது நமக்கு (க) அபராதமென்று புத்திபண்ணுவுதியாகில் அப்போது நீயும் அவன்திறத்தில் அடிமைக்கு (உ) ப்ராப்தன்காண். (நிறையித்யாதி) பரிபூர்ணனான சந்த்ரனே ஸர்வாதிகனான வவன், பெரிய (ங) த்வரையோடே உன்னை யழையாநின்றான். ஆனபின்புஉன்(ச)பூர்த்திக்கீடாக ஓடிவாவென்று கருத்து. (அ)

மூ.—தாழியில்வெண்ணெய்தடங்கையாரவிழுங்கிய
பேழைவயிற்றெம்பிரான்கண்டாயுன்னைக்கூவுகின்றான்
ஆழிகொண்டுன்னையெறியுமையுறவில்லைகாண்
வாழவுறுதியேன்மாமதீமகிழ்ந்தோடிவா.

ப - ரை.—தாழியில் - சட்டியிலே சேர்த்திருக்கிற, வெண்ணெய் - வெண்ணெயை, தடம் - பெரிய, கையார - கைநிறையும்படியள்ளி, விழுங்கிய-அமுது செய்த, பேழை - விசாலமாய்ப் பருத்த, வயிறு - வயிற்றை யுடையனாய், எம்- எங்கள்குலத்துக்கு, பிரான்கண்டாய் - உபகாரகனா யிருக்கிறவன்காண், உன்னை—, கூவுகின்றான் - அழையாநிற்கிறான்; நீவாராதிருக்கில் உன்தலையைஅறுக்கைக்காக, உன்னை—, ஆழிகொண்டு - திருவாழியைக்கொண்டு, எறியும் - எறிவான்; ஐயுறவு - இதில் ஒருஸந்தேகம், இல்லைகாண் - இல்லை; வாழவுறுதியேல்- பிழைக்கவேண்டி யிருந்தாயாகில், மா - பெருமையையுடையனான, மதீ - சந்த்ரனே, மகிழ்ந்து - ஸந்தோஷசித்தனாய்க்கொண்டு, ஓடிவா.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தாழியித்யாதி) தாழியிலேசேர்த்திருக்கிற வெண்ணெயை (ரு) அபிநிவேசாதிசயத்தாலே பருவத்துக்குத்தக்க கையன்றே வென்னும்படி வெண்ணெயைக் கண்டவாறே (சு) விஸ்த்ருதமான கைநிறையும்படி அள்ளி அமுதுசெய்த. (பேழையித்யாதி) உள்ளுப்புக்கத்ரவ்ய (எ) கௌரவத்தாலே (அ) விசைத்துப்பெருத்திருக்கிற திருவயிற்றையுடையனாய் எங்கள்குலத்துக்கு உபகாரகனாயிருக்கிறவன்காண் உன்னையழையா நிற்கிறான். இத்தால் - தன்பருவத்துக்கீடாக வெண்ணெயை விரும்பிவிழுங்கினாற்போலே யிருப்பதொன்றுகாண் உன்னையழைக்கிறது மென்கை. (ஆழியித்யாதி) அவ்வெண்ணெய்த் (கூ) தாழியை எட்டாதபடி வைக்கில் கல்லைக்கொண்டு எறிந்து உடைக்குமாபோலே, நீயும் வாராதிருக்கில் தலையையறுக்கைக்காகத் திருவாழியைக் கொண்டு உன்னையெறியும், இதில் ஒருஸம்சய மில்லைகாண். (வாழவித்யாதி) அப்படி அவன் (க0)க்ரோதத்துக்கு விஷயமாய் முடிந்துபோகாதே ஜீவிக்கவேண்டி யிருந்தாயாகில், பெருமையையுடைய சந்த்ரனே உன்பெருமைக்கீடாம்படி ப்ரீதனாய் ஓடிவா. (கூ)

(க) அபராதம் - குற்றம். (உ) ப்ராப்தன் - தகுந்தவன்; அடையப்பட்டவன். (ங)த்வரை - விரைவு. (ச)பூர்த்தி - நற்குணநிறைவு. (ரு) அபிநிவேசம்- ஆசை. (சு) விஸ்த்ருதம் - பரப்பு. (எ)கௌரவம் - பெருமை. (அ)விசைத்து- பலத்து. (கூ) தாழி - சட்டி. (க0) க்ரோதம் - கோபம்.

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்ருர்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிருர்.

மூ.—மைத்தடங்கண்ணியசோதைதன்மகனுக்கிவை
ஒத்தனசொல்லியுரைத்தமாற்றமொளிபுத்தூர்
வித்தகன்விட்டுசித்தன்விரித்ததமிழிவை
எத்தனையுஞ்சொல்லவல்லவர்க்கிடரில்லையே.

ப - ரை.—மை - கறுத்து, தடம் - பெருத்திருந்துள்ள, கண்ணி - கண்ணையுடையளான, அசோதை - யசோதைப்பிராட்டியானவள், தன் - தன்னுடைய, மகனுக்கு - புத்ரனுன விவனுக்கு, ஒத்தன - நினைவுக்கும் சொல்லுக்கும் சேர்ந்தவையாயிருக்கிற, இவைசொல்லி - இவற்றைச் சொல்லி, உரைத்த - சந்த்ரனைக்குறித்துச்சொன்ன, மாற்றம் - பாசுரத்தை, ஒளி - தேஜஸ்ஸை யுடைத்தான, புத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரில், வித்தகன் - மங்களாசாஸந ஸமர்த்தரான, விட்டுசித்தன் - பெரியாழ்வார், விரித்த - விஸ்தரித்தருளிச்செய்ததாய், தமிழ் - த்ராவிடரூபமாயிருக்கிற, இவை - இவை பத்துப்பாட்டையும், எத்தனையும் - ஏதேனுமொருபடியாக, சொல்லவல்லவர்க்கு - சொல்லவல்லவர்களுக்கு, இடர்- துக்கம், இல்லை - ஒன்றுமில்லை.

வ்யா.—(மைத்தடங்கண்ணி அசோதை) கறுத்துப் பெருத்திருந்துள்ள கண்ணையுடையளான யசோதை. அஞ்சநத்தாலே அலங்க்ருதமாய்ப் பரந்திருந்துள்ள கண்ணையுடையவளென்னுதல்; *அஞ்சநவண்ணனுன விவனை (க) அநவரதம் பார்த்துக்கொண் டிருக்கையாலே,இவனுடையதிருமேனிநிறம் ஊறி,அத்தாலேமைத்து, இவன் பக்கல் ஸ்நேஹத்தாலே (உ) விகஸிதமான கண்ணையுடையவ ளென்னுதல். (தன்னித்யாதி) தன்னுடைய புத்ரனுன விவனுக்கு நினைவுக்கும் சொல்லுக்கும் சேர்ந்தவையாயிருக்கிற இவற்றைச்சொல்லி மேன்மையும் வண்மையும் தோன்றும்படியாகச்சந்த்ரனைக்குறித்துச் சொன்ன பாசுரத்தை. (ஒளியித்யாதி) (ங) நிலமிதிதானே ஜ்ஞாநப்ரேமங்களைவிளைக்கும் தேஜஸ்ஸை யுடைத்தான ஸ்ரீவில்லிபுத்தூரில் மங்களாசாஸந ஸமர்த்தரான பெரியாழ்வார் விஸ்தரித்தருளிச் செய்ததாய் த்ராவிடரூபமாயிருக்கிற இவை பத்துப்பாட்டையும் ஏதேனுமொருபடி சொல்லவல்லவர்களுக்கு துக்கமென்பது ஒன்றுமில்லை. (க0)

---

(க) அநவரதம் - எப்பொழுதும். (உ) விகஸிதம் - அகலல்; மலருதல். (ங) நிலமிதி - பூமியின் உயர்த்தி.

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—தன் என்சுற்றுச்சக்கரம் அழகியதண்டு பாலகன் சிறியன் தாழ்மை யுய்ய.

---

ஆ திருமொழி ரு-க்கு, பாட்டு-சுக.

அ.—கீழ்த்திருமொழியிலே, அவன் நிலாமுற்றத்திலே யிருந்து புழுதியளைவது, அம்புலியை யழைப்பதானபடியை, யசோதைப் பிராட்டி, தானநுபவித்து, அவைதன்னைச்சந்த்ரனைப் பார்த்துச்சொல்லி, இவனோடே விளையாடவேண்டி யிருந்தாயாகில் விரைந்துவா வென்று பலஹேதுக்களாலும் அவனையழைத்த (க) ப்ரகாரத்தை, தாமும்பேசி, பிற்காலமா யிருக்கச்செய்தே தத்காலம்போலே அவனுடைய அந்தசேஷ்டிதத்தை யநுபவித்தாராய நின்றார்; இனிமேல் அவனுடைய பருவத்துக்கீடாக அவன் செங்கீரையாடுகிறது காணவேணுமென்று ஆசைப்பட்டு, அவனைப் பலபடியாகப் புகழ்ந்து "எனக்கு ஒருகால் செங்கீரை ஆடவேணும்" என்று பலகாலும் (உ) அபேக்ஷித்து அந்த (ந) சேஷ்டிதரஸத்தை அவளநுபவித்த படியைத், தாமும் தத்காலம்போலே அநுபவித்து, அவள் பேசினாற் போலேபேசி இனியராகிறார்.

அவனை ஸ்தோத்ரபூர்வகமாகச் செங்கீரை யாடவேணுமென்று பலகாலு மபேக்ஷிக்கிறதும் அந்தசேஷ்டிதாநுபவம் பண்ணுகிறதுமே அவளோடு இவர்க்குஸாம்யம். * மயர்வறமதிநலம் பெற்றவராகையாலே அவன்படிகளடங்கலும் ப்ரகாசிக்கையாலே (ச) தர்மைக்யத்தாலே (ரு) அவதாராந்த்ரசேஷ்டிதங்களையும் இவ்வவதாரந் தன்னில் (சு) உத்தரகாலசேஷ்டித விசேஷங்களையும் பரத்வாதிகளிலுண்டானபடிகளையும், (எ) உகந்தருளின நிலங்களில் நிலையால் தோற்றுகிற குணவிசேஷங்களையு மெல்லாம் தம்முடைய ப்ரேமாதிசயத்தாலே இவ்வஸ்துவுக்கு விசேஷணமாக்கிக்கொண்டு புகழ்ந்து, அந்த சேஷ்டிதரஸத்தை அநுபவிக்கிறவிது இவர்க்கு விசேஷம்.

மூ.—உய்யவுலகுபடைத்துண்டமணிவயிறு
ஊழிதோறூழிபலவாலினிலையதன்மேல்
பையவுயோகுதுயில்கொண்டபரம்பரனே
பங்கயநீணயநத்தஞ்சநமேனியனே
செய்யவளின்னகலஞ்சேமமெனக்கருதிச்
செல்வுபொலிமகரக்காதுதிகழ்ந்திலக
ஐயவெனக்கொருகாலாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறேயாடுகவாடுகவே.

ப - ரை.— உய்ய - ஆத்மாக்கள் உஜ்ஜீவிக்கைக்காக, உலகு - லோகங்களை, படைத்து - ஸ்ருஷ்டித்து, உண்ட - உள்ளேவைத்து ரக்ஷித்த, மணி - அழகிய, வயிறு - வயிற்றையுடையவனே, பலஊழியூழிதோறு - பலகல்பங்கள்தோறும்,

(க) ப்ரகாரம் - வகை. (உ) அபேக்ஷித்து - விரும்பி. (ந) சேஷ்டிதரஸம்-செய்கையின் ஆநந்தம். (ச) தர்மைக்யம் - பொருளின் ஒற்றுமை. (ரு) அவதாராந்தரம் - மற்றவவதாரங்கள். (சு) உத்தரகால் - பிற்காலம். (எ) உகந்தருளினநிலங்கள் - ஸ்ரீரங்கம்முதலிய நூற்றெட்டுத்திருப்பதிகள்.

ஆலினிலையதன்மேல் - ஒரு ஆலிலையின்மேலே, பைய - மெள்ள, உயோகுதுயில் கொண்ட - யோகநித்ரையைப்பண்ணின, பரம்பரனே - பராத்பரனாய், பங்கயம் - தாமரைமலரையொத்த, நீள் - நீண்டிருக்கிற, நயனத்து - திருக்கண்களையுடையனாய், அஞ்சநம் - மைபோலிருக்கிற, மேனியனே - திருமேனியையுடையவனே, செய்யவள் - செந்தாமரை மலரில் வாஸம்செய்கிற பெரியபிராட்டியாருக்கு இருப்பிடமான, நின் - உன்னுடைய, அகலம் - திருமார்வானது, சேமம்என - ரக்ஷையையுடைத்தாக வேணுமென்று, கருதி - நினைத்து, செல்வுபொலி - செல்வமிகுதிக்குக்குறிப்பான, மகரம் - திருமகரக்குழைகளோடு கூடின, காது - திருக்காதுகளானவை, திகழ்ந்திலக - மிகவும் விளங்க, ஐய - ஐயனே, எனக்கு—, ஒருகால்—, செங்கீரையாடுக-செங்கீரைஆடியருளவேணும்; ஆயர்கள் - ஆயர்கள் என்னுடையவ னென்னும்படி கீழ்ப்படிந்தவனாய், போர் - யுத்தத்திற்குரிய, ஏறே - ரிஷபம்போலே செருக்கியிருக்கிறவனே, ஆடுக ஆடுக - ஆடியருளவேணும் ஆடியருளவேணும்.

வ்யா.—முதற்பாட்டு. (உய்யவித்யாதி) (க) கரண களேபர விதுரராய் (உ) போகமோக்ஷசூந்யராய்க்கிடக்கிற ஆத்மாக்கள்உஜ்ஜீவிக்கைக்கு (ங) உறுப்பாக லோகத்தை ஸ்ருஷ்டித்து, பின்பு (ச) அவாந்தரப்ரளயம்வர, அதில் அழியாதபடி உள்ளேவைத்து நோக்கின அழகிய திருவயிற்றை யுடையவனே. (ஊழிதோ றித்யாதி) (ரு) ப்ரவாஹரூபேண வருகிற (சு) பலகல்பங்கள்தோறும் ஜகத்தை யடங்கவிழுங்கினதிருவயிற்றோடே ஒருபவனான ஆலிலையின்மேலே அதுஅசையாதபடிமெள்ளயோகநித்ரைபண்ணின (எ) பராத்பரனானவனே. (பங்கயமித்யாதி) அந்தஸர்வஸ்மாத்பரத்வஸூசகமாய் விகாஸாதிகளால் தாமரையை ஒருபோலியாகச் சொல்லலாம்படியாய், அவ்வளவன்றிக்கே நீண்டிருக்கிற திருக்கண்களை யுடையனாய், அதுக்கு பரபாகமாய் அஞ்சநம்போலே யிருக்கிற திருமேனியையுடையவனே. (செய்யவளித்யாதி) பெரியபிராட்டியாருக்கு வாஸஸ்தாநமான உன்னுடைய திருமார்வானது இந்தந்ருத்தத்தால் அசையாதே ரக்ஷையையுடைத்தாக வேணுமென்று நினைத்துக்கொண்டு (அ) ஐச்வர்ய ஸம்ருத்திக்கு ஸூசகமான திருமகரக்குழைகளோடு கூடின திருக்காதுகளானவை உஜ்ஜ்வலமாய்க்கொண்டு விளங்க. (ஐயவித்யாதி) ஐயனே என்பொருட்டாக ஒருகால் செங்கீரையாடி யருளவேணும். (ஆயர்களித்யாதி) ஆயர்களுக்கு என்னுடையவனென்னும்படி பவ்யனாய், அத்தாலே (கூ) யுத்தோந்முகமான ரிஷபம்போலே

(க) கரணகளேபரவிதுரர் - பதினொருகரணங்களும், சரீரமுமற்றவர்கள். (உ) போகமோக்ஷசூந்யர் - ஸ்வர்க்கமுதலிய போகமும் மோக்ஷமுமில்லாதவர்கள். (ங) உறுப்பாக - ஹேதுவாக. (ச) அவாந்த்ரப்ரளயம் - நடுவேயுண்டான ப்ரளயம். (ரு) ப்ரவாஹரூபேண - இடைவிடாமல். (சு) கல்பங்கள் - ஊழிகள். (எ) பரத்பரன் - மேலானதற்கு மேலானவன். (அ) ஐச்வர்யஸம்ருத்தி - செல்வமிகுதி. (கூ) யுத்தோந்முகமான - போர்செய்ய எதிர்த்துவந்த.

செருக்கியிருக்கிறவனே ஆடியருளவேணும் ஆடியருளவேணும். செங்கீரையாவது - தாய்மார் முதலானோர், பிள்ளைகளைத் தாங்களே அசை தாடுவிப்பதொரு ந்ருத்தவிசேஷம். (க)

மூ.—கோளரியினுருவங்கொண்டவுணனுடலங்
குருதிகுழபியெழக்கூருகிராற்குடைவாய்
மீளவவன்மகனைமேன்மைகொளக்கருதி
மேலையமரர்பதிமிக்கவெகுண்டுவரக்
காளநன்மேகமவைகல்லொடுகால்பொழியக்
கருதிவரைக்குடையாக் காலிகள்காப்பவனே
ஆளவெனக்கொருகாலாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறேயாடுகவாடுகவே.

ப - ரை.—கோள் - மிடுக்கையுடைய, அரியின் உருவம் - ந்ருஸிம்ஹவேஷத்தை, கொண்டு - மேற்கொண்டு, அவுணன் - ஹிரண்யனுடைய, உடலம் - சரீரமானது, குருதி - ரத்தம், குழம்பி—, எழ - கிளரும்படியாக, கூர் - மிகவும் கூர்மையான, உகிரால் - திருவுகிர்களாலே, குடைவாய் - குடைந்தவனாய், மீள - மறுபடியும், அவன் - அந்தஹிரண்யன், மகனை - தன்பிள்ளையான ப்ரஹ்லாதாழ்வானை, மேன்மைகொள - மேன்மையை யுடையவனாக நினைக்க, கருதி - திருவுள்ளம்பற்றி, மேலை - செல்வத்தாலும் ஆயுஸ்ஸாலும் மேலாயிருக்கிற, அமரர்பதி - தேவர்களுக்கு அரசனான இந்த்ரன், மிக்க - மிகவும், வெகுண்டுவர - கோபித்துவர, காளம் - கறுத்த, நல் - நன்மையையுடைய, மேகமவை - மேகங்களானவை, காலொடு - பெருங்காற்றோடே, கல் - கல்மழை, பொழிய - பெய்ய, கருதி - "இம்மலையே உங்களுக்கு ரக்ஷகம், இச்சோற்றையிதுக்கிடுங்கோள்" என்று அடியில் அருளிச்செய்தத்தை நினைத்து, வரை - அம்மலைதன்னையே, குடையா - குடையாகக்கொண்டு, காலிகள் - பசுக்கூட்டங்களை, காப்பவனே - ரக்ஷித்தவனே, ஆள - என்னையாளும்படியாக, எனக்கு - எனக்காக, ஒருகால்—, செங்கீரையாடுக - செங்கீரையாடி யருளவேணும்; மற்றது முன்போலே.

வ்யா.— இரண்டாம்பாட்டு. (கோளரியினுருவம் கொண்டு) தேவர்கள்கொடுத்த வரத்துக்கு விரோதமற அவனை நிரஸிக்கைக்காக மிடுக்கையுடைத்தான நரஸிம்ஹவேஷத்தை பரிக்ரஹித்துக்கொண்டு. (அவுண னித்யாதி) பாபிஷ்டனான ஹிரண்யாஸுரனுடையவரபலபுஜபலங்களாலுண்டான செருக்காலேமிடியறவளர்ந்த சரீரமானது ரத்தம்குழம்பிக்கிளரும்படியாகவும் "ஸர்வத்ராஸ்தி" "ஸத்யவாதீ"என்றுசொன்னவார்த்தையைப் பொய்யென்று, *இங்கில்லையென்று தான் * அளந்திட்ட தூணைத்தட்டின அவன் மநஸ்ஸு புரிந்து (க) ஸ்வபுத்ரனானவனை. (உ) "ஸத்யவாதி" என்று கொள்ளும்படியாகவும் திருவுள்ளம்பற்றி ஆயுதம் எடுக்கவொண்ணாதது கொண்டு முழுக்கூர்மையான திருவுகிர்களாலே * ஒள்ளியமார்பு

(க) ஸ்வபுத்ரன்-தன்னுடையபிள்ளை. (உ) ஸத்யவாதி-உண்மைபேசுமவன்.

உறைக்கும்படி குடைந்தவனே. மீளவென்றது - "இல்லை" என்ற மநஸ்ஸு (க) புரிந்தென்றபடி. மேன்மைகொளவென்றது - மேன்மையை யுடையவனாக நினைக்கவென்றபடி. (மேலையித்யாதி) ஐச்வர்யத்தாலும் ஆயுஸ்ஸாலும் இவ்வருகுள்ளாரில் காட்டில் மேலாயிருக்கிற தேவர்களுக்கெல்லா மதிபதியான இந்த்ரன் "எனக்கிட்ட சோற்றையுண்டவரார்"என்றுபசியாலேமிகவும்கோபித்துவர,கடலை (உ)வறளாக்கப்பருகுகையாலே கறுத்து, ஸ்வாமிசொன்ன கார்யம் செய்கையாகிற நன்மையையுமுடைய மேகங்களானவை, பெருங்காற்றோடே கல்வர்ஷமாகவர்ஷிக்க. அன்றிக்கே, "கார்" என்று பாடமானபோது - கல்லோடேகூட வர்ஷத்தைச் சொரியவென்று பொருளாகக்கடவது. (கருதியித்யாதி) "இம்மலையே உங்களுக்கு ரக்ஷகம், இச்சோற்றை இதுக்கு இடுங்கோள்" என்று அடியில் அருளிச்செய்தத்தை நினைத்து அம்மலைதன்னையே குடையாகக்கொண்டு பசுக்களைரக்ஷித்தவனே."இடையரையும்இடைச்சிகளையும்ரக்ஷித்த" என்னாதே, காலிகள் காப்பவனேயென்றது - ரக்ஷ்யவர்க்கத்தில் ப்ரதாநம் இவையென்று தோற்றுகைக்காக. பண்ணின உபகாரமறிவதும் இவையேயிறே. (ஆள) இப்படிரக்ஷித்த ஆண்மையை யுடையவனேஎன்னுதல்; என்னுடையஅபேக்ஷிதம்செய்து என்னையாளும்படியாக வென்னுதல். (எனக்கித்யாதி)எனக்காக ஒருகால்செங்கீரையாடி யருளவேணும். (ஆயர்களித்யாதி) பூர்வவத். (உ)

மூ.—நம்முடைநாயகனேநான்மறையின்பொருளே
நாபியுணற்கமலநான்முகனுக்கொருகால்
தம்மனையானவனேதரணிதலமுழுதுந்
தாரகையின்னுலகுந்தடவியதன்புறமும்
விம்மவளர்ந்தவனேவேழமுமேழ்விடையும்
விரவியவேலைதனுள்வென்றுவருமவனே
அம்மவெனக்கொருகாலாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறேயாடுகவாடுகவே.

ப - ரை.—நம்முடை - எங்களுக்கு, நாயகனே - தலைவனானவனே, நால் - நாலுவகைப்பட்ட, மறையின் - வேதங்களினுடைய, பொருளே - பொருளாயிருப்பவனே, நாபியுள் - திருநாபியிலே யுண்டாய், நல் - அழகிய, கமலம் - தாமரைமலரைப் பிறப்பிடமாகவுடைய, நான்முகனுக்கு - சதுர்முகனுக்கு, ஒருகால் - ஒருகாலத்திலே, தம்மனையானவனே - தாய்போலே பரிவனானவனே, தரணிதலம்முழுதும் - பூதலமடங்கலும், தாரகையின் உலகும் - நக்ஷத்ரலோகமும், தடவி - திருவடிகளாலே தடவி, அதன்புறமும் - அதுக்குப்புறம்பாயுள்ள தேசமெங்கும், விம்ம - நிறையும்படி, வளர்ந்தவனே—, வேழமும் - குவலயாபீடமும், ஏழ்விடையும் - ஏழுரிஷபங்களும், விரவிய-உன்னோடேகலந்த, வேலை

(க) புரிந்து - திரும்பி. (உ) வறளாக்க - வறண்டுபோகும்படி.

தனுள் - ஸமயத்திலே, வென்று - அவற்றைஜயித்து, வருமவனே - வரும்வனாய், அம்ம - ஸ்வாமியானவனே; மற்றதுமுன்போலே.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (நம்முடைநாயகனே) எங்களுக்கு (க) நிர்வாஹகனானவனே. (நான்மறையின்பொருளே) நாலுவகைப்பட்ட வேதங்களுக்கும் (உ) ப்ரதாநப்ரதிபாத்யனானவனே. “వేదైశ్చ సర్వై రహమేవ వేద్యః” “வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய꞉” என்றானிறே. (நாபியுளித்யாதி) (ங) திருநாபியிலே (ச) உத்பந்நமாய் விலக்ஷணமாயிருந்துள்ள தாமரையைப் பிறப்பிடமாக வுடைய சதுர்முகனுக்கு ஒருகாலத்திலே தாய்போலே பரிவனானவனே. தம்மனை - தாய். மதுகைடபர்கள்கையிலே வேதத்தைப்பறிகொடுத்து, “వేదా మే పరమం చక్షుః వేదా మే పరమం ధనమ్” “வேதா மே பரமம் சக்ஷு꞉ வேதா மே பரமம் தநம்” என்று அவன்கண்ணிழந்தேன், தநமிழந்தேன் என்று (ரு) க்லேசப்பட, அவற்றை மீட்டுக்கொடுத்து ரக்ஷித்தபடியாலே “ஒருகால்தம்மனையானவனே” என்கிறது. (தரணிதலமித்யாதி) பூதலமடங்கலும் நக்ஷத்ரலோகமும் நிலாத்தென்றல்போலே திருவடிகளாலே ஸ்பர்சித்து, அதுக்குப்புறம்புள்ளதேசமெங்குமொக்க பரிபூர்ணமாம்படி வளர்ந்தவனே. இத்தால் - ஆச்ரிதனான இந்த்ரனுடைய (சு) அபேக்ஷிதஸம்விதாநம் தலைக்கட்டுகைக்காகச் செய்த வ்யாபாரம் சொல்லிற்று. (வேழமுமித்யாதி) குவலயாபீடமும் ஸப்தரிஷபங்களும் நலிவதாக உன்னோடேவந்து கலசினவளவிலே அவற்றை ஜயித்து வருமவனே. வேழத்தையும் ரிஷபத்தையும்ஜயித்தது (எ) பிந்நகாலத்திலே யாயிருக்கசெய்தேயும், ஏககாலத்திற்போலே யருளிச்செய்தது, விரோதிநிரஸநத்தில் த்வரையாலே. இத்தால் - ஸ்ரீமதுரையில் பெண்களுக்கும் நப்பின்னைப்பிராட்டிக்கும் ப்ரியகரமாம்படிசெய்த (அ) வ்யாபாரங்கள் சொல்லப்பட்டன. அம்ம - ஸ்வாமீ. (எனக்கித்யாதி) (கூ) பூர்வவத். (ங)

மூ.—வானவர்தாமகிழவன்சகடமுருள
வஞ்சமுலைப்பேயினெஞ்சமதுண்டவனே
கானகவல்விளவின்காயுதிரக்கருதிக்
கன்றதுகொண்டெறியுங்கருநிறவென்கன்றே
தேநுகனும்முரனுந்திண்டிறல்வெந்நரக
னென்பவர்தாமடியச்செருவதிரச்செல்லும்
ஆனையெனக்கொருகா லாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறேயாடுகவாடுகவே.

(க) நிர்வாஹகன் - தலைவன். (உ) ப்ரதாநப்ரதிபாத்யன் - முக்கியமாகச் சொல்லப்படுமவன். (ங) திருநாபி - தொப்புள். (ச) உத்பந்நமாய் - உண்டாய். (ரு) க்லேசம் - துக்கம். (சு) அபேக்ஷிதஸம்விதாநம் தலைக்கட்டுகை - இஷ்டத்தைச்செய்து முடிக்கை. (எ) பிந்நகாலம் - வெவ்வேறுகாலம். (அ) வியாபாரங்கள் - தொழில்கள். (கூ) பூர்வவத் - முன்போலே.

ப - ரா.—வானவர்தாம் - தேவர்களானவர்கள், மகிழ - ஸந்தோஷிக்கும்படியாகவும், வன் - வலியையுடைய, சகடம் - சகடமானது, உருள-உருளும்படியாகவும், வஞ்சம்-வஞ்சனையையுடைத்தான, பேயின் - பூதனையுடைய, முலை-முலையிலிருக்கிற, அது - அந்தக்கொடிதான, நெஞ்சம் - மநதை, உண்டவனே-உண்டவனாய், கானகம் - காட்டிலேநிற்கிற, வல் - வலிய, விளவின் - விளாவினுடைய, காய் - காய்களானவை, உதிர - உதிரும்படியாக, கருதி - நினைத்து, கன்றது - கன்றாய்வந்த அஸுரனை, கொண்டு—, எறியும் - எறிந்த, கருநிறம் - கறுத்தநிறத்தையுடைய, என் - என்னுடைய, கன்றே - கன்றுபோலேசெருக்கனானவனாய், தேநுகனும் - தேநுகனென்கிற அஸுரனும், முரனும் - முராஸுரனும், திண் - திண்ணிய, திறல் - வலிமையையும், வெம் - கொடுமையையுமுடைய, நரகன் - நரகாஸுரனும், என்பவர்தாம் - என்றுசொல்லப்படுகிறவர்கள் தாங்களுடைய, மடிய - நசித்துப்போம்படியாக, செரு - யுத்தத்திலே, அதிரச்செல்லும் - முடுகிச்சென்ற, ஆனை - ஆனையானவனே; மற்றதுமுன்போலே.

வ்யா.—நாலாம்பாட்டு. (வானவரித்யாதி) பூபார நிரஸநார்த்தமாக (க) அர்த்தித்து அவதரிப்பித்த தேவர்கள், பருவம் நிரம்புவதுக்குமுன்னே துடங்கி ஆஸுரப்ரக்ருதிகளை நிரஸிக்கிற படியைக் கண்டு ப்ரீதராம்படியாக,அஸுராவிஷ்டமாய்க்கொண்டு, கண்வளருகிற விடத்திலே நலியவந்த ப்ரபலமான சகடத்தை, (உ)முலைவரவு தாழ்த்துச் சீறிநிமிர்த்த திருவடிகளாலே கட்டழிந்து சிதறி யுருளப்பண்ணி, ⁕ பெற்றதாய்போல் வஞ்சித்துவந்த பேய்ச்சியுடைய முலையில் அந்தக்கொடிதானநெஞ்சை(ஈ)ப்ராணஸஹிதமாகஉண்டவனே. "நஞ்சமுதுண்டவனே" என்று பாடமானபோது - நஞ்சை அமுதாக வுண்டவனேயென்று பொருளாகக்கடவது. "𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷 𑌸𑌮𑍍𑌮𑌿𑌶𑍍𑌰𑌂 𑌰𑌸𑍍𑌯𑌮𑌾𑌸𑍀𑌜𑍍𑌜𑌗𑌦𑍍𑌗𑌰𑍋𑌃" "𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌸𑌮𑍍𑌮𑌿𑌶𑍍𑌰𑌂 𑌰𑌸𑍍𑌯𑌾𑌸𑍀𑌜𑍍𑌜𑌗𑌦𑍍𑌗𑌰𑍋𑌃" என்னக்கடவதிறே. (கானகமித்யாதி) காட்டில் கன்றுகள் மேய்க்கப்போனவிடத்திலே விளாவானவடிவைக்கொண்டும் கன்றான வடிவைக்கொண்டும் சிலவஸுரர்கள் தன்னைநலிவதாகவந்துநிற்க, அவற்றிலே ஒன்றையிட்டு ஒன்றையெறிந்து இரண்டையும்முடித்தபடியைச் சொல்லுகிறது. காட்டிலேநிற்கிற வலிய விளாவினுடைய காய்களானவை யுதிரும்படியாகக்கருதி, கன்றானவத்தைக் கொண்டு எறிந்து கறுத்தநிறத்தையுடைய என்னுடைய கன்றாய் நின்றவனே. இத்தால் - விரோதிநிரஸநம் பண்ணுகையாலே திருமேனி (ச)புகர் பெற்றபடியும், எல்லாத்தசையிலும் ஆச்ரிதர்க்கு பவ்யனா யிருக்கும்படியும் சொல்லுகிறது. என்கன்றேயென்றது - உகப்பின்கார்யமான அஃறிணைச்சொல்லு. அஃறிணைச் சொல்லு - அசேதந வாசியான சொல்லு. (தேநுகனித்யாதி) (ரு)தேநுகனென்கிற அஸுரனும், முரா

(க)அர்த்தித்து - ப்ரார்த்தித்து. (உ) முலைவரவுதாழ்த்து - முலைகொடுக்க தாமஸித்து. (ஈ)ப்ராணஸஹிதமாக - ப்ராணனோடேகூட. (ச)புகர் - ப்ரகாசம். (ரு) தேநுகன் - ரிஷபவடிவாய்வந்த வஸுரன்.

ஸுரனும், திண்ணிதான திறலையுடையனாய் அதிக்ரூரமாயிருக்கிற நரகாஸுரனும் என்று சொல்லப்படுகிறவர்கள் தாங்களுடைய நசித்துப்போம்படியாக யுத்தத்திலே முடுகிச்சென்ற ஆனையானவனே. ஆனைபோல் என்னாதே, ஆனையென்றது - முற்றுவமை. (ச)

மூ.—மத்தளவுந்தயிரும்வார்குழனன்மடவார்
வைத்தனநெய்களவால்வாரிவிழுங்கியொருங்
கொத்தவிணைமருதமுன்னியவந்தவரை
யூருகரத்தினொடுமுந்தியவெந்திறலோய்
முத்தினிளமுறுவன்முற்றவருவதன்முன்
முன்னமுகத்தணியார்மொய்குழல்களலைய
அத்தவெனக்கொருகாலாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறேயாடுகவாடுகவே.

ப-ரை.—வார் - நீண்ட, குழல் - மயிர்முடியையும், நல் - நன்றான, மடவார் - மடப்பத்தையுமுடையரான ஸ்த்ரீகள், வைத்தன - வைத்தவையான, மத்து - மத்தாலே, அளவும் - அளாவிக்கடைகைக்குத் தகுந்த, தயிரும்—, நெய்யும்-வெண்ணெயுருக்கின நெய்யும், களவால்-களவாலே, வாரி—, விழுங்கி-அமுதுசெய்து, உன்னிய - உன்னை நலியவேணுமென்னும் நினைவையுடையராய், ஒருங்கு - ஒருபடிப்பட, ஒத்த - மநது ஒத்துள்ளவர்களாய், இணை - இரண்டான, மருதம் - மருதமரமாய்க்கொண்டு, வந்தவரை - வந்துநின்ற அஸுரர்களை, ஊருவொடும்-திருத்துடைகளாலும், கரத்தினொடும்-திருக்கைகளாலும், உந்திய - இரண்டருகும் சரிந்துவிழும்படி தள்ளிப்பொகட்ட, வெம்திறலோய்-மிக்கவலியையுடையவனே, முத்து - திருமுத்துக்கள் தோன்றும்படி, இன் - இனிதான, இளமுறுவல் - மந்தஸ்மிதமானது, முற்ற - பூர்ணமாக, வருவதன் முன் - வருவதற்குமுன்னே, முன்னம்முகத்து - முன்முகத்திலே, அணி-அழகு, ஆர் - மிகுந்த, மொய் - நெருங்கியிருந்துள்ள, குழல்கள் - திருகுழல்களானவை, அலைய - அசையும்படியாக, அத்த-அப்பனே; மற்றது முன்போலே.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மத்தளவுமித்யாதி) (வார்குழல்நன்மடவார்வைத்தன) நீண்ட (க) கேசபாரத்தையும் நன்றானமடப்பத்தையும் உடையரான ஸ்த்ரீகள் சேமித்துவைத்தவையான. (மத்தளவும்தயிரும்-நெய்யும் களவால்வாரிவிழுங்கி) மத்தாலே அளாவிக்கடைகைக்கு(உ)யோக்யமானதயிரும், முன்புகடைந்தவெண்ணெய் உருக்கின நெய்யும் வைத்தவர்கள் அறியாதபடி (ங) க்ருத்ரிமத்தாலே (ச) அபிநிவேசாநுகுணமாக வாரியமுதுசெய்து. (உன்னிய - ஒருங்கொத்தவிணைமருதம் - வந்தவரை) உன்னை நலியவேணுமென்னும் நினைவையுடையராய் அதுக்கிடாக வொருபடிப்பட நெஞ்சு ஒத்துள்ளவர்களாய் (ரு) ஸ்வவேஷம் தெரியாதபடி இரட்டை மரு

(க)கேசபாரம் - மயிர்முடி. (உ) யோக்யமான - தகுந்த. (ங)க்ருத்ரிமம்-வஞ்சனை. (ச) அபிநிவேசாநு குணமாக - ஆசைக்குத்தக்கபடி. (ரு) ஸ்வவேஷம் - தங்கள்வடிவு.

தாய்வந்துநின்ற வஸுரர்களை. (ஊருவித்யாதி) நடுவே தவழ்ந்து போகையாலே திருத்துடைகளாலும் திருக்கைகளாலும் இரண்டருகும் சரிந்துவிழும்படி தள்ளிப்பொகட்ட (க) கடியதிறலை யுடையவனே. (முக்திஂத்யாதி) திருமுத்துக்கள் தோன்றும்படி இனிதான மந்தஸ்மிதமானது பூர்ணமாகவருவதற்குமுன்னே, முன்முகத்திலே அழகுமிக்குச்செறிந்திருந்துள்ள திருக்குழல்களானவை "வந்துன் பவளவாய்மொய்ப்ப" என்கிறபடியே திருப்பவளத்தை மறைக்கும்படி தாழ்ந்தலையும்படியாக. அணி - அழகு. மொய் - செறிவு. அத்த- அப்பனே. (௫)

மூ.—காய்மலர்நிறவாகருமுகில்போலுருவா
கானகமாமடுவிற்காளியனுச்சியிலே
தூயநடம்பயிலுஞ்சுந்தரவென்சிறுவா
துங்கமதக்கரியின்கொம்புபறித்தவனே
ஆயம்றிந்துபொருவானெதிர்வந்தமல்லை
யந்தரமின்றியழித்தாடியதாளிணையாய்
ஆயவென்னக்கொருகாலாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே.

ப - ரை.—காய்மலர் - காயாம்பூப்போலேயிருக்கிற, நிறவா - நிறத்தை யுடையனாய், கரு - கறுத்த, முகில்போல் - மேகம்போன்ற, உருவா - வடிவை யுடையனாய், கானகம் - காட்டிலே, மா - பெரிய, மடுவில் - மடுவினுள்ளே, காளியன் - காளியனுடைய, உச்சியிலே - சிரஸ்ஸிலே, தூய - அழகான, நடம் பயிலும் - நிருத்தத்தைச்செய்த, சுந்தரம் - அழகையுடைய, என்சிறுவா - என் பிள்ளையானவனாய், துங்கம் - பெரியவுயர்த்தியையுடைத்தாய், மதம்-மதத்தை யுடைத்தான, கரியின் - குவலயாபீடத்தினுடைய, கொம்பு - கொம்புகளை, பறித்தவனே - வருத்தமறப்பிடுங்கினவனாய், ஆயம் அறிந்து - மல்பொரும்வகை யறிந்து, பொருவான் - போர்செய்கைக்காக, எதிர்வந்த - எதிர்த்துவந்த, மல்லை - மல்லரை, அந்தரமின்றி - அவர்கள் முயற்சிசெய்ய இடமில்லாமல், அழித்து - விரைவாகச்சென்றழித்து, ஆடிய-இன்னம் வருவாருண்டோவென்று மநோஹரமாம்படி ஸஞ்சரித்த, தாளிணையாய் - திருவடிகளையுடையனாய், ஆய- ஆயனானவனே;

வ்யா.—ஆறும்பாட்டு. (காயவித்யாதி) "காயா" என்கிற இத்தை "காய"என்று குறுக்கிக்கிடக்கிறது. நெய்ப்பாலும்(உ)நைல்யத்தாலும் காயாம்பூப்போலே யிருக்கிற நிறத்தையுடையவனே. (கருமுகிலித்யாதி) இருட்சியாலும் குளிர்த்தியாலும் காளமேகம்போலிருக்கிற வடிவை யுடையவனே. (கானகமித்யாதி) காட்டிடத்திலே பெரியமடுவினுள்ளே கிடந்தகாளியனை அலைத்துக்கிளப்பி,(ங)க்ரோ

(க)கடியதிறல் - மிக்கவலிமை. (உ)நைல்யம் - நீலவர்ணம். (ங)க்ரோதம்- கோபம்.

தத்தாலே விஸ்த்ருதமான அவன்சிரஸ்ஸிலே ஸலக்ஷண மாகை யாலே அழகியதாயிருந்துள்ளந்ருத்தத்தைநெருங்கச்செய்த அழகை யுடைய என்பிள்ளையானவனே. சுந்தரம்-அழகு. சிறுவன்-பிள்ளை. (துங்கமித்யாதி) பெரிய உயர்த்தியையுடைத்தாய் (க) மதமுதிதமா ன குவலயாபீடத்தினுடைய கொம்புகளை அநாயாஸேநப்பிடுங்கின வனே. (ஆயமித்யாதி) மல்பொரும் கூறறிந்து பொருவதாக எதிர் ந்துவந்த மல்லரை, அவர்களுக்கு வ்யாபரிக்கைக்கு இடமறும்படி சீக்ரமாகச்சென்று ஓடிப்பொருதழித்து, இன்னம் வருவாருண்டோ வென்றுபார்த்து மநோஹரமாம்படிஸஞ்சரித்த திருவடிகளையுடைய வனே. அன்றிக்கே, அந்தரமின்றி என்றது - மற்பொருகிறபோது உடலும் உடலும் இடைவெளியறப் பொருந்தும்படி பொருதபடி யைச்சொல்லுகிறதாகவுமாம். அன்றிக்கே, அந்தரமாவது - அபாய மாய், உனக்கொரு அபாயமில்லாதபடி அவர்களை அழித்து என்கிற தாகவுமாம். ஆய - ஆயனே. (சு)

மூ.—துப்புடையாயர்கடஞ்சொல்வழுவாதொருகாற்
றூயகருங்குழனற்றோகைமயிலனைய
நற்பினைதன்றிறமாநல்விடையேழவிய
நல்லதிறலுடையநாதனுமானவனே
தப்பினபிள்ளைகளைத்தனமிகுசோதிபுகத்
தனியொருதேர்கடவித்தாயொடுகூட்டியவென்
அப்பவெனக்கொருகாலாடுகசெங்கீரை
யாயர்கள்போரேறேயாடுகவாடுகவே.

ப-ரை.—துப்புடை - மிடுக்குள்ள, ஆயர்கள்தம் - இடையருடைய, சொல்-சொல்லை, வழுவாது - தப்பாமல், ஒருகால் - ஒருகாலத்திலே, தூய - அழகிய தாய், கரு - கறுத்திருந்துள்ள, குழல் - குழலையுடையளாய், நல் - நன்றான, தோகை - தோகையையுடைய, மயிலனைய - மயில்போலேயிருக்கிற சாயலை யுடைய, நற்பினைதன்திறமா - நற்பின்னைப்பிராட்டி ஹேதுவாக, நல் - கொடி தான, விடையேழ் - ரிஷபங்களேழும், அவிய - விளக்குப்பிணம்போலே அவி யும்படியாக, நல்ல - நன்றான, திறலுடைய - மிடுக்கையுடையவனாய், நாதனு மானவனே—, தப்பின - கைதப்பிப்போன, பிள்ளைகளை - வைதிகன்பிள்ளைகளை, தன - தன்னுடைய, மிகுசோதி - நிரவதிக தேஜோரூபமான பரமபதத்திலே, புக - செல்லும்படியாக, தனி - தனியே, ஒரு - ஒப்பற்ற, தேர்-தேரை, கடவி-நடத்தி, அங்குநின்றும் கொண்டுவந்து, தாயொடுகூட்டிய - தாயானவள் "என் பிள்ளைகள்" என்று உச்சிமோந்து எடுக்கும்படி அவளோடே கூட்டினவனாய், என் - எனக்கு, அப்ப - உபகாரகனானவனே; மற்றதுமுன்போலே.

வ்யா.—ஏழாம்பாட்டு. (துப்பித்யாதி) துப்பு - மிடுக்கு. இத் தால் - ஏறுதழுவவல்ல ஸாமர்த்யத்தைச்சொல்லுதல். அன்றிக்கே, ரிஷபங்களின்வன்மையும் இவன்மென்மையும் பாராதே இவற்றைத்

(க) மதமுதிதம் - மதத்தாலே.

தழுவவேணுமென்ற (க)நெஞ்சுரமாதல். இப்படியிருந்துள்ள இடையர் தங்களுடைய வசநத்தைத்தப்பாதே ஒருகாலவிசேஷத்திலே. (தூயவித்யாதி) அழகியதாய்க்கறுத்திருந்துள்ளகுழலை யுடையளாய், அத்தாலே நன்றான தோகைமயில்போலே யிருக்கிற சாயலையுடைய நற்பின்னைப்பிராட்டிஹேதுவாக. இவளோடேசேரலாமாகில், "ஆர் சொல்லிற்றுச் செய்தால்நல்லது" என்றிறே ஆயர்கள்தம்சொல்வழுவாதொழிந்தது. (நல்விடையித்யாதி)கொடிதானரிஷபங்கள் ஏழும் (உ) விளக்குப்பிணம்போலே அவியும்படியாக நன்றான மிடுக்கையுடையனாய், அத்தாலே இடையரும் "எங்கள்குலநாதன்" என்று கொண்டாடும்படி அவர்களுக்கு நாதனுமானவனே. நல்விடையென்றது - "நல்லபாம்பு" என்னுமாபோலே (ந)க்ரௌர்யத்தைப்பற்ற. (தப்பினவித்யாதி) (ச)ப்ரஸவஸமநந்தரம் மாதாவானவள் காண்பதற்குமுன்னே கைதப்பிப்போன வைதிக புத்ரர்களை "தன்னுடைச் சோதி" என்கிறபடியே (ரு)தனக்கு அஸாதாரணமாய் (சு)நிரவதிக தேஜோ ரூபமான பரமபதத்திலே செல்லும்படியாகத், தனியே அத்விதீயமான தேரை நடத்தி, அத்தை ப்ரக்ருதி மண்டலத்தளவிலே நிறுத்தி, தானே அங்கேசென்றுபுக்கு அங்குநின்றும் கொடு போந்து, மாதாவானவள் "என்பிள்ளைகள்" என்று உச்சிமோந்து எடுக்கும்படி அவளோடேகூட்டினவனாய், ஆச்ரிதர் கார்யம்செய்து அவ்வழியாலும் எனக்கு உபகாரகனானவனே. (எ)

மூ.—உன்னையுமொக்கலையிற்கொண்டுதமின்மருவி
யுன்னொடுதங்கள்கருத்தாயினசெய்துவரும்
கன்னியரும்மகிழக்கண்டவர்கண்குளிரக்
கற்றவர்தெற்றிவரப்பெற்றவெனக்கருளி
மன்னுகுறுங்குடியாய்வெள்ளறையாய்மதிள்சூழ்
சோலைமலைக்கரசேகண்ணபுரத்தமுதே
என்னவலங்களைவாயாடுகசெங்கீரை
யேழுலகுமுடையாயாடுகவாடுகவே.

ப - ரை.—மன்னு - அழிவில்லாத, குறுங்குடியாய் - திருக்குறுங்குடியை யுடையவனும், வெள்ளறையாய் - திருவெள்ளறையை யுடையனுமாய், மதிள் சூழ் - மதிளாலேசூழ்ந்த, சோலைமலைக்கு - திருமாலிருஞ்சோலைமலைக்கு, அரசே - ராஜாவானவனாய், கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே நிற்கிற, அமுதே - அம்ருதமானவனாய், என் - என்னுடைய, அவலம் - துன்பத்தை, களைவாய் - போக்கும்வனே, உன்னையும் - அழகுமுதலியவற்றால் கண்ணையும்மநதை

(க)நெஞ்சுரம் - மநவலிமை. (உ)விளக்குப்பிணம்போல் - ஒன்றுமில்லாதபடி. (ந) க்ரௌர்யம் - கொடுமைத்தன்மை. (ச) ப்ரஸவஸமநந்தரம் - பிள்ளைபெற்றபிறகு. (ரு) தனக்கஸாதாரணமாய் - தனக்கேயுரித்தாய். (சு) நிரவதிக தேஜோரூபமான - மிக்கவொளிவடிவான.

யும் கவருமவனான வுன்னையும், ஒக்கலையில் - மருங்கிலே, கொண்டு - எடுத்துக்கொண்டு, தம் - தங்களுடைய, இல் - க்ருஹங்களிலே, மருவி - சேர்ந்து, உன்னொடு - உன்னோடே, தங்கள் - தங்களுடைய, கருத்தாயினசெய்து - எண்ணத்துக்குத்தக்கபடி பரிமாறி, வரும் - மீளவும்கொண்டுவாராநிற்கிற, கன்னியரும்- இளம்பெண்களும், மகிழ - இச்செய்கையைக்கண்டு உகக்கும்படியாகவும், கண்டவர் - பார்த்தவர்களுடைய, கண்குளிர - கண்கள் குளிரும்படியாகவும், கற்றவர் - நாலுசொல்லைத் தொடுக்கக்கற்றவர்கள், தெற்றிவர-செருங்கிவர, பெற்ற- உன்னைப்பிள்ளையாகப்பெற்ற, எனக்கு—, அருளி - க்ருபைசெய்து, ஆடுகசெங்கீரை - செங்கீரை ஆடியருளவேணும்; ஏழுலகும் - ஸமஸ்த லோகங்களுக்கும், உடையாய் - ஸ்வாமியானவனே, ஆடுகஆடுகவே - ஆடியருளவேணும் ஆடியருளவேணுமென்கை.

வ்யா.—எட்டாம்பாட்டு. (உன்னையுமித்யாதி) ஸௌந்தர்யாதிகளாலே (க) *த்ருஷ்டிசித்தாபஹாரியான வுன்னையும் மருங்கிலே எடுத்துக்கொண்டு தங்கள் க்ருஹங்களிலே சேர்ந்து. இதென்ன வருமைதான், இவன் மருங்கிலேயிருக்க இவர்கள் தங்கள் க்ருஹங்களறிந்துபோனபடியென்! என்று கருத்து. (உன்னித்யாதி) (உ) ஈத்ருசனான வுன்னோடே தங்கள்நினைவுக்குத்தக்கபடி பரிமாறி, மீளவும் கொண்டு வாராநிற்கும் (ங) பாலைகளானவர்களும் இச்சேஷ்டிதத்தைக் கண்டு உகக்கும்படியாக. இத்தால் - தனியிடத்திலே (ச) யௌவநாவஸ்தனாய்த்தங்களோடே பரிமாறுமவன், மாத்ருஸந்நிதியில் இப்படி (ரு) சைசவாவஸ்தனாய்ச்செய்கிற சேஷ்டிதம்கண்டால் அவர்கள் உகப்பர்களென்று கருத்து. (கண்டவர் கண்குளிர) ஆனோனுமாக, இச்சேஷ்டிதங்களைக் கண்டவர்கள்கண்கள் இளநீர்க்குழம்பிட்டாற்போலே குளிரும்படியாக. (கற்றவர்தெற்றிவர) நாலுசப்தம் தொடுக்கக்கற்றவர்கள், உன்னுடைய பாலசேஷ்டித ரஸத்தைக்கண்டு (சு) பிள்ளைக்கவிகள் தொடுத்துவர. (பெற்றவெனக்கருளி) உன்னைப்பிள்ளையாகப் பெற்றவெனக்கு ப்ரஸாதத்தைப் பண்ணி. இதுமேலே அந்வயிக்கக்கடவது. (மன்னுகுறுங்குடியாய்) "[illegible]" "நஶ்ராவயதிஸாஹஸ:" என்கிறபடியே ப்ரளயத்துக்குமழியாததிருக்குறுங்குடியிலே வர்த்திக்கிறவனே. (வெள்ளறையாய்) அவ்வளவன்றிக்கே, திருவெள்ளறையிலேயும் நித்யவாஸம் பண்ணுகிறவனே. (மதிள்சூழ் சோலைமலைக்கரசே) அரணாகப்போரும்படியான மதிளாலேசூழப்பட்ட திருமலைக்கு ராஜாவாய்க்கொண்டு ஈரரசுதவிர்த்து நின்றவனே. (கண்ணபுரத்தமுதே) (எ) ஸர்வஜநபோக்யமாம்படி திருக்கண்ணபுரத்திலே நிற்கிற அம்ருதமே.

(க) த்ருஷ்டிசித்தாபஹாரி - கண்ணையும் மநதையும் கவருமவன். (உ) ஈத்ருசனான - இப்படிப்பட்டவனான. (ங) பாலைகள் - இளம்பெண்கள். (ச) யௌவநாவஸ்தனாய் - வாலிபப்பருவமுடையோனாய். (சு) பிள்ளைக்கவி - ஓர்ப்ரபந்தம். (எ) ஸர்வஜநபோக்யமாம்படி - எல்லாருக்கும் ஆநந்தத்தைத்தரும்படி.

(என் அவலம்களைவாய்) என்னுடைய (க) அவத்யத்தைப் போக்கு மவனே. அதாவது - எனக்கு பவ்யனாய் நான்சொன்னபடி செய்கை யாலே நீ(உ)அநியாம்யனானபோது நான்படும் க்லேசத்தைப்போக்கு மவனே யென்கை. (ஆடுகசெங்கீரை) இப்படியிருக்கிற நீ செங்கீரை யாடி யருளவேணும். (ஏழுலகித்யாதி) ஸமஸ்த லோகங்களுக்கும் ஸ்வாமியானவனே ஆடியருளவேணுமென்கை. மன்னு குறுங்குடி யாய் என்றுதுடங்கி - என் அவலம்களைவாய்என்று ஸம்போதித்து, உன்னையுமொக்கலையில் என்றுதுடங்கி - பெற்றவெனக்கருளி-ஆடுக செங்கீரை என்று அந்வயம். (அ)

மூ.—பாலொடுநெய்தயிரொண்சாந்தொடுசெண்பகமும்
பங்கயநல்லகருப்பூரமுநாறிவரக்
கோலநறும்பவளச்செந்துவர்வாயினிடைக்
கோமளவெள்ளிமுளைபோல்சிலபல்லிலக
நீலநிறத்தழகாரைம்படையின்னடுவே
நின்கனிவாயமுதமிற்றுமுறிந்துவிழ
ஏலுமறைப்பொருளேயாடுகசெங்கீரை
யேழுலகுமுடையாயாடுகவாடுகவே.

ப - ரை.—பாலொடு - பாலோடேகூட, நெய் - நெய்யும், தயிர் - தயிரு மாகிய விவற்றைப் பலகால் அமுதுசெய்கையாலும், ஒண்-அழகிய, சாந்தொடு-சந்தனத்தோடேகூட, செண்பகமும் - செண்பகம் முதலானவற்றைச் சாத்து கையாலும், பங்கயம் - தாமரையும், நல்ல—, கருப்பூரமும் - கர்ப்பூரமுமாகிற வவை, நாறிவர - தம்மிலேகலந்து பரிமளிக்க, கோலம் - அழகிய, நறு - நல்ல, பவளம் - பவளம்போன்ற, செம் - அழகியதாய், துவர் - சிவந்திருக்கிற, வாயி னிடை - திருவதரத்தினுள்ளே, கோமளம் - இளையதான, வெள்ளிமுளைபோல் - வெள்ளிமுளைபோலே, சிலபல் - சிலமுத்துக்கள், இலக-விளங்க, நீலநிறத்து- நீலமான நிறத்தாலே, அழகுஆர் - அழகுமிக்கிருந்துள்ள, ஐம்படையின்நடுவே- பஞ்சாயுதத்தின் நடுவே, நின் - உன்னுடைய, கனி - கனிபோலே யிருக்கிற, வாய் - திருப்பவளத்திலூறுகிற, அமுதம் - அம்ருதஜலமானது, இற்றுமுறிந்து விழ-இற்றிற்றுவிழ, ஏலும் - தகுதியான, மறை - வேதத்தினுடைய, பொருளே- அர்த்தமானவனே; மற்றது முன்போலாம்.

வ்யா.— ஒன்பதாம்பாட்டு. (பாலித்யாதி) பாலோடே கூட நெய்யும் தயிருமாகிற (ங)கவ்யங்களைப் பலகாலும் அமுதுசெய்கை யாலும், திருமேனியிலே அழகிய சாந்து, செண்பகம் முதலான வற்றைப் பலகாலும் சாத்துகையாலும், திருமேனி அசைகையாலே அவையும் ஹர்ஷத்தாலே "கருப்பூரம்நாறுமோ கமலப்பூநாறுமோ" என்னும்படியான திருப்பவளம் விகஸிக்கையாலே பங்கஜமும் நல்ல கர்ப்பூரமுமாகிற வவையும் தன்னிலே கலந்து கந்தித்துவர.

---

(க)அவத்யம் - திங்கு. (உ)அநியாம்யன்-ஒருவரால் நியமிக்கப்படாதவன். (ங) கவ்யங்கள் - பசுவினிடத்துண்டானவைகள்.

(கோலமித்யாதி) (க) தர்சநீயமாய்ப் பரிமளமான பவளம்போலே அழகியதாய்ச் சிவந்திருக்கிற திருவதரத்தினுள்ளே இளைப்தான வெள்ளியரும்புபோலே சிலமுத்துக்கள் விளங்க. (நீலமித்யாதி) நீலமான திருமேனி நிறத்துக்கு பரபாகத்தாலே அழகுமிக்கிருக்கிற ஸ்ரீபஞ்சாயுதத்தின் நடுவே உன்னுடைய (உ)பக்வபலம்போலேயிருக்கிறதிருப்பவளத்திலூறுகிற அம்ருதஜலமானது இற்றிற்றுவிழ. (ஏலுமித்யாதி) தகுதியான வேதார்த்தமானவனே. "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்கிறபடியே வேதத்துக்கு(ங)அநுரூபமான அர்த்தமிவனேயிறே. சேஷம் பூர்வவத். (கூ)

மூ.—செங்கமலக்கழலிற்சிற்றிதழ்போல்விரலிற்
சேர்திகழாழிகளுங்கிண்கிணியுமரையில்
தங்கியபொன்வடமுந்தாளநன்மாதளையின்
பூவொடுபொன்மணியும்மோதிரமுங்கிறியும்
மங்கலவைம்படையுந்தோள்வளையுங்குழையும்
மகரமும்வாளிகளுஞ்சுட்டியுமொத்திலக
எங்கள்குடிக்கரசேயாடுகசெங்கீரை
யேழுலகுமுடையாயாடுகவாடுகவே.

ப - ரை.—செம் - சிவந்த, கமலம் - தாமரைமலரையொத்த, கழலில்-திருவடிகளிலே, சிற்றிதழ்போல் - அதில் உள்ளிதழ்போலே சிறுகியிருக்கிற; விரலில் - திருவிரற்களிலே, சேர் - சேர்ந்து, திகழ் - விளங்காநின்ற, ஆழிகளும் - திருவாழிமோதிரங்களும், கிண்கிணியும்—, அரையில் - திருவரையிலே, தங்கிய- சாத்தியிருக்கிற, பொன் - பொன்னாற்செய்த, வடமும் - அரைநாணும், தாள- தாளையுடைத்தாய், நல் - நன்றான, மாதளையின்பூவொடு - மாதுளம்பூவோடே, பொன்மணியும் - இடையிடையே கலந்துகோத்த பொன்மணிக் கோவையும், மோதிரமும் - திருக்கைவிரற்களிற்சாத்தின மோதிரங்களும், கிறியும் - மணிக்கட்டில்சாத்தின சிறுப்பவளவடமும், மங்கலம் - மங்களத்தைச் செய்யுமதான, ஐம்படையும் - ஸ்ரீபஞ்சாயுதங்களும், தோள்வளையும் - திருத்தோள்வளைகளும், குழையும்-திருக்காதுப்பணிகளும், மகரமும் - திருமகரகுண்டலங்களும், வாளிகளும்-திருச்செவிமடல்மேல்சாத்தின வாளிகளும், சுட்டியும்-திருநெற்றிக்கலங்காரமாகத்தொங்குகிற சுட்டியும், ஒத்து - பொருந்தி, இலக - ப்ரகாசிக்க, எங்கள் - எங்களுடைய, குடிக்கு - குலத்துக்கு, அரசே - அரசனானவனே; மற்றது முன்போலேயாம்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (செங்கமலமித்யாதி) சிவந்த கமலம்போலே யிருக்கிற திருவடிகளில், அதில் உள்ளிதழ்போலே சிறுகியிருக்கிற திருவிரல்களிலே (ச) ஸஹஜமென்னும்படி சேர்ந்துவிளங்காநின்ற திருவாழிமோதிரங்களும், திருவரையில் கிண்கிணியும்,

(க) தர்சநீயமாய் - அழகாய். (உ) பக்வபலம் - கனிந்தபழம். (ங) அநுரூபமான - தகுந்த. (ச) ஸஹஜம் - கூடப்பிறந்தது.

அன்றிக்கே, கிண்கிணி யென்கிற வித்தைக் கிழோடே சேர்த்து, பாதச்சதங்கையாகச்சொல்லவுமாம். "சேவடிக்கிண்கிணி" என்னக் கடவதிறே. (அரையிற்றங்கிய பொன்வடமும்) திருவரையில் ஸர்வ காலமும் சாத்தியிருக்கும் பொன்னரைநாணும். (தாளநன்மாதளை யின் பூவொடுபொன்மணியும்) "உடையார்கநமணியோடொண்மாத ளம்பூ" என்கிறபடியே தாளையுடைத்தாய் நன்றான மாதளம் பூவோ டே நடுநடுவே கலந்துகோத்த பொன்மணிக்கோவையும். (மோதிர மும்கிறியும்) திருக்கையில் திருவிரலில் சாத்தின மோதிரங்களும், மணிக்கட்டிற்சாத்தின சிறுப்பவளவடமும். (மங்கலவைம்படையும்) திருமார்விற்சாத்தின மங்களாவஹமான ஸ்ரீபஞ்சாயுதமும். (தோள் வளையும்) அதுக்கு பரபாகமாய்க்கொண்டு இரண்டருகும் விளங்கா நின்றுள்ள திருத்தோள்வளைகளும். (குழையும்) திருக்காதுப் பணி களும். (மகரமும்) திருமகரக் குழைகளும். (வாளிகளும்) திருச் செவிமடல்மேல் சாத்தின வாளிகளும். (சுட்டியும்) திருக்குழலிலே சாத்தித் திருநெற்றிக்கலங்காரமாக நாலும் சுட்டியும். (ஒத்திலக)இ ரண்டருகு மசைந்தாடுகையாலே எல்லாம் சேர வொளிவிட வென் னுதல்; திருமேனிக்குத்தகுதியாய் ப்ரகாசிக்கவென்னுதல். (எங்கள் குடிக்கரசே) எங்களுடைய குலத்துக்கு ராஜாவானவனே. (கo)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அன்னமுமீனுருவுமாளரியுங்குறளு
மாமையுமானவனேயாயர்கணாயகனே
என்னவலங்களைவாயாடுகசெங்கீரை
யேழுலகமுடையாயாடுகவாடுகவென்று
அன்னநடைமடவாளசோதையுகந்தபரி
சானபுகழ்ப்புதுவைப்பட்டனுரைத்ததமிழ்
இன்னிசைமாலைகளிப்பத்தும்வல்லாருலகி
லெண்டிசையும்புகழ்மிக்கின்பமதெய்துவரே.

ப-ரை.—அன்னமும் - ஹம்ஸமும், மீனுருவும் - மீனும், ஆளரியும்-ந்ருஸிம் ஹமும், குறளும் - வாமநனும், ஆமையுமானவனே - கூர்மமுமானவனும், ஆயர் கள் - இடையருக்கு, நாயகனே - தலைவனானவனும், என் - அடியேனுடைய, அவ லம் - துக்கத்தை, களைவாய் - போக்கினவனே, செங்கீரையாடுக - செங்கீரை யாடி யருளவேணும், ஏழுலகம்-எல்லா லோகங்களுக்கும், உடையாய்-ஸ்வாமி யானவனே, ஆடுகவாடுகவென்று - ஆடியருளவேணும் ஆடியருளவேணுமென்று, அன்னம் - ஹம்ஸம்போன்ற, நடை - நடையழகையும், மடவாள் - மடப்பத் தையுமுடையளான, அசோதை-யசோதைப்பிராட்டி, உகந்த-உகந்துசொன்ன, [illegible]ரிசு - ப்ரகாரத்தை, ஆன - மிக்க, புகழ் - புகழையுடையராய், புதுவைப்பட் [illegible] ரான ஆ[illegible]வார், உரைத்த - அருளிச்செய்த

தமிழ் - தமிழான, இன் - இனிய, இசை-இசையோடேகூடின, மாலைகள் - தொடைகளான, இப்பத்தும் - இப்பத்தையும், வல்லார்-கற்கவல்லவர்கள், உலகில்-இந்தலோகத்திலே இருக்கச்செய்தே, எண்டிசையும் - எட்டுத்திக்கிலு மடங்காத, புகழ் - கீர்த்தியையுடையராய், அது - அவர்களுக்குநிலமல்லாத, மிக்கின்பம் - மேலானஸுகத்தை, எய்துவர் - அடைவார்கள்.

வ்யா.—(அன்னமுமித்யாதி) (க) வேதப்ரதமான ஹம்ஸமும், (உ) ப்ரளயா பத்ஸகமான மத்ஸ்யமும், ஹிரண்ய நிரஸநார்த்தமாக நரஸிம்ஹமும், இந்த்ராபேக்ஷித ஸம்விதாநம் பண்ணும் வாமநனும், மந்தராதாரமான கூர்மமுமானவனே. இத்தால் - ஆச்ரித ஸம்ரக்ஷணார்த்தமாக அஸாதாரண திவ்ய விக்ரஹத்தை அழிய மாறிக்கொண்டு அவ்வவதசாநுகுணமாக ரக்ஷிக்குமவனென்கை. (ஆயர்கள்நாயகனே) அவையெல்லாம்போ லன்றிக்கே (ங) பூபார நிர்ஹரணார்த்தமாக அவதரித்து இடையர்க்குத் தலைவனானவனே. (என் அவலம்களைவாய்) எல்லாத்தசையிலும் “உனக்கென்வருகிறதோ” என்று வயிறெரியாநிற்குமென்னுடைய க்லேசத்தை, உன்னை நோக்கித் தருகையாலே போக்கினவனே. (ஆடுகசெங்கீரை) செங்கீரை ஆடியருளவேணும். (ஏழுலகமித்யாதி) ஸர்வலோகங்களுக்கும் ஸ்வாமி யானவனே யாடவேணுமாடவேணுமென்று. (அன்னமித்யாதி) அன்னம்போலே நடையழகையும் பவ்யதையையு முடையளான யசோதைப்பிராட்டி உகந்துசொன்ன ப்ரகாரத்தை. (ஆனவித்யாதி) ப்ராஹ்மணோத்தமராய் வைத்து கோபஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணி, அவள் தத்காலத்திலே அநுபவித்தாற்போலே பிற்காலத்திலே அநுபவிக்கையாலே அவளிலுங்காட்டில் ஸம்ருத்தமான புகழை யுடையராய் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹக ரான ஆழ்வாரருளிச்செய்த த்ராவிடரூபமாய் இனியதான இசையோடே கூடியிருந்துள்ள தொடைகளான விப்பத்தையும் (ச) அப்யஸிக்க வல்லவர்கள். (உலகிலித்யாதி) இந்தலோகத்திலே இருக்கச்செய்தே எட்டுத்திக்கிலுமடங்காத பெரியபுகழையுடையராய், அவர்களுக்கு (ரு)நிலமல்லாத(சு)பகவதநுபவபரமஸுகத்தை ப்ராபிக்கப் பெறுவர்கள். (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—உய்யக்கோளரி நம்முடைவானவர் மத்துக்காய துப்புன்னைபால் செங்கமல மன்னமாணிக்கம்.

---

ஆ திருமொழி ரு-க்கு, பாட்டு-சுஉ.

---

(க) வேதப்ரதமான - வேதத்தை யுபதேசிக்குமதான. (உ) ப்ரளயாபத்ஸகமான - ப்ரளயமாகிய ஆபத்திலுதவத்தக்க. (ங) பூபாரநிர்ஹரணம் - பூமியின் பளுவை நீக்குகை. (ச) அப்யஸித்தல் - ஓதுதல். (ரு)நிலமல்லாத - பெறுதற்கரிய. (சு) பகவதநுபவபரமஸுகம் - பகவானை யநுபவிக்கையாகிற மேலான ஆநந்தம்.

அ.—கீழே-செங்கீரையாடுகையாகிற அவனுடையபாலசேஷ்டிதத்தை, தத்காலத்திலே யசோதைப்பிராட்டி ப்ரார்த்தித்தநுபவித்தாற்போலே *மயர்வறமதிநல மருளப்பெறுகையாலே அந்தஸ்நேஹத்தையுடையராய்க்கொண்டு, தாமும் அநுபவித்தாராய் நின்றார்; இனி, சப்பாணிகொட்டுகையாகிற பாலசேஷ்டிதத்தைச்செய்தருளவேணுமென்று அவனைப்ரார்த்தித்து,அந்தசேஷ்டிதரஸத்தை யநுபவித்தாற்போலே ஒருசேஷ்டிதத்தை அநுபவித்தவளவில் (க) பர்யாப்தி பிறவாத அபிநிவேசாதிசயத்தாலே அந்தசேஷ்டித ரஸத்தையு மநுபவிக்க வாசைப்பட்டு, அவள் பேசினாற்போலேபேசி, தாமுமநுபவிக்கிறார்.

மூ.—மாணிக்கக்கிண்கிணியார்ப்பமருங்கின்மேல்
ஆணிப்பொன்னாற்செய்தவாய்பொன்னுடைமணி
பேணிப்பவளவாய்முத்திலங்கப்பண்டு [பாணி.
காணிகொண்டகைகளாற்சப்பாணி கருங்குழற்குட்டனேசப்

ப-ரை.—ஆணி - மாற்றுயர்ந்த, பொன்னால் - பொன்னாலே, செய்த - செய்யப்பட்டதாய், ஆய் - ஆராய்ந்துசெய்யப்பட்டு, பொன் - அழகியதாயிருந்துள்ள, உடைமணி - அரைவடத்தையுடைத்தான, மருங்கின்மேல் - இடையிலே, மாணிக்கம் - மாணிக்கத்தாற்செய்த, கிண்கிணி - கிண்கிணியானது, ஆர்ப்ப-சப்திக்க, பேணி - விருப்பத்தோடே, பவளம் - பவளம்போலேயிருக்கிற, வாய் - திருவதரமும், முத்து - திருமுத்துக்களும், இலங்க - விளங்கும்படி புன்னகை செய்துகொண்டு, பண்டு - முன்பு, காணி - பூமியை, கொண்ட - நீரேற்றுவாங்கிக்கொண்ட, கைகளால் - திருக்கைகளாலே, சப்பாணி - சப்பாணிகொட்டியருளவேணும்; கரு-கறுத்த, குழல் - திருக்குழலையுடைய, குட்டனே - பிள்ளைத்தனத்தையுடையவனே, சப்பாணி - சப்பாணிகொட்டி யருளவேணும்.

வ்யா.—முதற்பாட்டு. (மாணிக்க மித்யாதி) மாற்றெழும்பினபொன்னாலே சமைக்கப்பட்டதாய்ப் பழிப்பற்று அழகியதாயிருந்துள்ள அரைவடத்தை யுடைத்தான மருங்கின்மேலே மாணிக்கக்கிண்கிணியானது த்வநிக்க. "ஆய்பொன்னுடைமணி" என்கிறவிடத்தில், ஆய்தல் - தெரிதலாய், பழிப்பறுதலைச் சொல்லுகிறது. ஆணிப்பொன்னாற் செய்த என்று கீழேசொல்லுகையாலே, மேல், பொன்னென்று - அழகைச் சொல்லுகிறது. மாணிக்கக் கிண்கிணி சப்திக்குமோவென்னில் ; நல்மாணிக்கமாகையாலே சப்திக்கும். கிண்கிணிக்குப் புறம்பே மாணிக்கம் பதித்தாலும் சப்தியாது. ( பேணியித்யாதி ) என்னுடைய நிர்ப்பந்தத்துக்காகவன்றிக்கே, விருப்பத்தோடே, பவளம்போலேயிருக்கிற திருவதரமும் திருமுத்தும் பரபாகத்தாலே விளங்கும்படி ஸ்மிதம் செய்துகொண்டு. அன்றிக்கே, பேணியென்றது-உன்திருமேனி யலையாதபடி பேணிக்

(க) பர்யாப்திபிறவாத - முற்றுதலில்லாத.

கொண்டென்னவுமாம். (பண்டித்யாதி) முன்பு, "குடங்கையில் மண் கொண்டு" என்கிறபடியே உன்னுடைமையான பூமியை மஹாபலி பக்கலிலேசென்று (க) உதகபூர்வகமாக பரிக்ரஹித்த திருக்கைக ளாலே. இத்தால் – தன்மேன்மைபாராதே ஆச்ரிதர்க்காகத் தன்னை யழியமாறிக்கார்யம் செய்யும் கையென்கை. (சப்பாணி) சப்பாணி கொட்டி யருளவேணும். (கருங்குழலித்யாதி) கருகின திருக்குழலை யும் பிள்ளைத்தனத்தையுமுடையவனே சப்பாணிகொட்டியருளவே ணும். (க)

மூ.—பொன்னரைநாணொடுமாணிக்கக்கிண்கிணி
தன்னரையாடத்தனிச்சுட்டிதாழ்ந்தாட
என்னரைமேனின்றிழிந்துங்களாயர்தம் [சப்பாணி.
மன்னரைமேற்கொட்டாய்சப்பாணிமாயவனேகொட்டாய்

ப-ரை.—பொன் – பொன்னாலேசெய்யப்பட்ட, அரைநாணொடு – திருவரை நாணோடேசேர்ந்த, மாணிக்கம் – மாணிக்கத்தாற்செய்த, கிண்கிணி – கிண்கிணி யானது, தன் – தனக்கிருப்பிடமான, அரை – அரையிலேகிடந்து, ஆட–அசைந்து சப்திக்கவும், தனி – ஒப்பற்ற, சுட்டி – சுட்டியாகிற வாபரணம், தாழ்ந்தாட– திருநெற்றியிலே தாழ்ந்தசையவும், என் – என்னுடைய, அரைமேல்நின்று – மடி யில்நின்றும், இழிந்து—, உங்கள் – உங்கள் தமப்பனாராய், ஆயர்தம் – ஆயர் களுக்கெல்லாம், மன்–ராஜாவாயிருக்குமவருடைய, அரைமேல் – மடியிலிருந்து, சப்பாணிகொட்டாய்—; மாயவனே – ஆச்சரியச்செய்கையை யுடையவனே, சப்பாணி கொட்டாய்—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பொன்னித்யாதி) பொன்னாலே செய்யப்பட்ட திருவரைநாணோடேசேர்ந்த மாணிக்கக் கிண்கிணி யானது தனக்கு வாஸஸ்தாநமான (உ) கடிப்ரதேசத்திலேகிடந்து சப்திக்க. (தனியித்யாதி) திருக்குழலிற் சாத்தின (ங) அத்விதீய மான சுட்டியாகிற ஆபரணம் திருநெற்றியிலே தாழ்ந்தசைய. (என் னித்யாதி) என்னுடைய மடியில்நின்று மிழிந்து உங்கள்தமப்பனா ராய் ஆயர்க்கெல்லாம் நிர்வாஹகரா யிருக்கிறவர் மடியிலேயிருந்து சப்பாணிகொட்டியருளாய். இத்தால் – தன்மடியிலே யிருந்து சப் பாணிகொட்டுகிறதிலும் அவர்மடியிலிருந்து சப்பாணிகொட்டக் காண்கை தனக்கு உகப்பாகையாலேஅத்தைச்செய்யவேணுமென்று அபேக்ஷித்தாராய்த்து. (மாயவனே) ஆச்சரியபூதனானவனே. (உ)

மூ.—பன்மணிமுத்தின்பவளம்பதித்தன்ன
என்மணிவண்ணனிலங்குபொற்றோட்டின்மேல்
நின்மணிவாய்முத்திலங்கநின்னம்மைதன் [ணி.
அம்மணிமேற்கொட்டாய்சப்பாணியாழியங்கையனேசப்பா

(க) உதகபூர்வகமாக பரிக்ரஹித்த – நீரேற்றுவாங்கிக்கொண்ட. (உ) கடிப்ர தேசம் – அரை; இடுப்பு. (ங) அத்விதீயமான – ஒப்பற்ற.

ப - ரை.—என் - எனக்குக் கீழ்ப்படிந்தவனாய், மணி - நீலரத்நம்போன்ற, வண்ணன் - வடிவையுடையனாயிருக்கிறவனே, பல் - பலவகைப்பட்ட, மணி - ரத்நங்களும், முத்து - முத்துக்களும், இன் - இனிய, பவளம் - பவளமும், பதித்து - அழுத்தி, அன்ன - வாயாற்சொல்லி முடியாத அழகையுடைத்தாய்க் கொண்டு, இலங்கு - விளங்காநிற்கிற, பொற்றோட்டின்மேல் - பொற்றோட்டின் அழகுக்குமேலே, நின் - உன்னுடைய, மணி - அழகிய, வாய் - திருப்பவளத்தில், முத்து - திருமுத்துக்கள், இலங்க - ப்ரகாசிக்க, நின் - உன்னைப்பிள்ளையாகப் பெற்ற, அம்மை - தாயாரான, தன்-அவளுடைய, அம்மணிமேல்-மடியிலிருந்து, சப்பாணிகொட்டாய்—; ஆழி - திருவாழியை, அம் - அழகிய, கையனே - திருக்கையிலே யுடையவனே, சப்பாணி—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (என்மணிவண்ணன்)என்னுடையவனென்று அபிமாநிக்கலாம்படி எனக்குபவ்யனாய் நீலரத்நம்போன்ற வடிவையுடையனாயிருக்கிறவனே. (பன்மணியித்யாதி) மாணிக்கம், மரதகம், புஷ்யராகம், வைரம், நீலம், கோமேதகம், வைடூர்யமென்கிற பலவகைப்பட்டரத்நங்களும், முத்தும், இனியபவளமும் பகைத்தொடையாகவழுத்தி (க) வாசாமகோசரமான அழகை யுடைத்தாய்க்கொண்டு விளங்காநிற்கிற பொற்றோட்டி னழகுக்குமேலே. (நின்னித்யாதி) உன்னுடைய அழகிதான திருப்பவளத்தில் திருமுத்துக்கள் ப்ரகாசிக்க. (நின்னம்மையித்யாதி) உன்னைப் பிள்ளையாகப் பெற்ற (உ) பாக்யத்தையுடையளான அவளுடைய மடிமேலேயிருந்து சப்பாணிகொட்டாய். அம்மணி யென்று-அரைக்குப்பேர். இத்தால் - ஸ்ரீநந்தகோபர்தம்முடையமடியிலிருந்து சப்பாணி கொட்டுகிறதிலும் தாயார்மடியிலிருந்து சப்பாணி கொட்டக்காண்கை தமக்குகப்பாகையாலே அத்தைச்செய்யவேணுமென்று அபேக்ஷித்தாராய்த்து. (ஆழியங்கையனே) திருவாழியை அழகிய திருக்கையிலே யுடையவனே யென்னுதல்; ஆழியென்று - திருவாழி மோதிரமாதல். (௩)

மூ.—தூநிலாமுற்றத்தேபோந்துவிளையாட
வானிலாவம்புலீசந்திராவாவென்று
நீநிலாநின்புகழாநின்றவாயர்தம் [பாணி.
கோநிலாவக்கொட்டாய்சப்பாணிகுடந்தைக்கிடந்தானேசப்

ப - ரை.—தூ - தூய்தான, நிலா - நிலவையுடைய, முற்றத்தே - திருமுற்றத்திலே, போந்து - வந்து, வான்-ஆகாசத்திலே, நிலாம்-ஸஞ்சரிக்கிற, அம்புலீ சந்திரா—, விளையாட - விளையாடுவதற்கு, வாவென்று - வாவென்றழைத்து, நின் - உன்செய்கையில் கால்தாழ்ந்தவர்களாய்க் கொண்டு, புகழாநின்ற - உன்னைப்புகழாநிற்கிற, ஆயர்தம் - இடையர்களுக்கு, கோ - அரசனான எங்களையன், நிலாவ - விளங்கும்படி, சப்பாணிகொட்டாய் - சப்பாணிகொட்டியருளவேணும்; குடந்தை - திருக்குடந்தையிலே, கிடந்தானே - கண்வளர்ந்தருளுகிறவனே, நீ—, நிலா - நின்று, சப்பாணிகொட்டாய்—.

(க) வாசாமகோசரம் - வாக்குக்கு எட்டாதது. (உ) பாக்யம் - அதிர்ஷ்டம்.

வ்யா.— நாலாம்பாட்டு. (தூநிலாவித்யாதி) தூயதான நிலா முற்றத்திலே போந்து. (விளையாடவித்யாதி) ஆகாசத்திலே வர்த்திக்கிற *அம்புலீ சந்திரா விளையாடவாவென்று, அம்புலியை யழைத்து. (நீநிலா) நீநின்று. (நின்னித்யாதி) உன்சேஷ்டி தங்களிலே வித்தராய்க்கொண்டு உன்னைப் புகழாநிற்கிற ஸர்வகோபநிர்வாஹகரான உங்களையன் உன்னுடையசேஷ்டிதத்தைக்கண்டஹர்ஷத்தாலே உஜ்வலமாம்படியாகச் சப்பாணிகொட்டவேணும். (குடந்தையித்யாதி) (க) ஆச்ரிதபராதீநனுப்கொண்டு திருக்குடந்தை யிலே கண்வளர்ந்தருளுகிறவனே. (ச)

ரு.—புட்டியிற்சேறும்புழுதியுங்கொண்டுவந்து
அட்டியமுக்கியகம்புக்கறியாமே
சட்டித்தயிருந்தடாவினில்வெண்ணெயுமுண் [ப்பாணி.
பட்டிக்கன்றேகொட்டாய்சப்பாணிபற்பநாபா்கொட்டாய்ச

ப - ரை.—புட்டியில் - திருவரையிலே, சேறும் - சேற்றையும், புழுதியும்- புழுதியையும், கொண்டுவந்து—, அட்டி - மேலேயிட்டு, அமுக்கி - உறைக்கப்பூசி, அகம்புக்கு - உள்ளேபுக்கு, அறியாமே - வைத்தநானறியாத படியாக, சட்டி - சட்டிகளிலே தோய்த்துவைத்த, தயிரும்—, தடாவினில் - தாழிகளிலே சேர்த்துவைத்த, வெண்ணெயும் - வெண்ணெயையும், உண் - அமுதுசெய்கிற, பட்டி - பட்டிதின்று திரிகிற, கன்றே - கன்றுபோலே களவேயாத்ரையாய்த் திரிகிறவனே, சப்பாணிகொட்டாய் - சப்பாணிகொட்டி யருளவேணும்; பற்பம் - தாமரையை, நாபா-திருநாபியிலே யுடையவனே, சப்பாணிகொட்டாய்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (புட்டியித்யாதி) (உ). மத்யமாங்கத்தில் சேற்றையும் புழுதியையும் கொண்டுவந்து *சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்கப் புழுதியிலே யிருந்து விளையாடுகையாலே திருவரையில்நனைந்தவிடம்சேறும், நனையாதவிடம் புழுதியுமாயிருக்குமிறே. (அட்டியமுக்கி) இப்படியிருக்கிற (ங) ஆகாரத்தோடேவந்து மேலேயணைகையாலே அந்தச்சேற்றையும் புழுதியையும் கொண்டுவந்து மேலேயிட்டு உறைக்கப்பூசி. (அகம்புக்கித்யாதி) ஓடிப்போய் உள்ளேபுக்கு, வைத்தநான் அறியாதபடியாகச் சட்டிகளிலே தோய்த்துவைத்த தயிரையும் தடாக்களிலே சேர்த்துவைத்தவெண்ணெயையும் அமுதுசெய்யாநிற்கும். (பட்டியித்யாதி) பட்டிதின்றுதிரியும் கன்றுபோலே களவேயாத்ரையாய்த் திரியுமவனே சப்பாணிகொட்டு. (பற்பநாபா) (ச) ஸகலஜகத்காரணமான தாமரையைத்திருநாபியிலே யுடையவனே. (ரு)

---

(க) ஆச்ரிதபராதீநன் - ஆச்ரிதர்க்கு வச்யனாயிருக்குமவன். (உ) மத்யமாங்கம் - திருவரை. (ங) ஆகாரம் - வடிவு. (ச) ஸகலஜகத்காரணம்-எல்லா வுலகுக்கும் மூலம்.

மூ.—தாரித்துநூற்றுவர்தந்தைசொற்கொள்ளாது
போருய்த்துவந்துபுகுந்தவர்மண்ணாளப்
பாரித்தமன்னர்படப்பஞ்சவர்க்கன்று
தேருய்த்தகைகளாற்சப்பாணிதேவகிசிங்கமேசப்பாணி.

ப - ரை.—தந்தை - எல்லார்க்கும் பிதாவான நீ தூதாகச்சென்று அருளிச்செய்த, சொல்-வசநத்தை, தாரித்து - தரித்து, கொள்ளாது - அங்கீகரியாமல், போர் - யுத்தத்தை, உய்த்து-நடத்துவதாக, வந்து-செருக்கிவந்து, புகுந்தவர்-யுத்தபூமியிலே புகுந்தவர்களாய், மண்ணாள - பாண்டவர்களை யழியச்செய்து பூமிமுழுமையும் தாங்களே ஆளுவதாக, பாரித்த - யத்நித்த, மன்னர் - ராஜாக்களான, நூற்றுவர் - நூற்றுவரும், பட - பட்டுப்போம்படியாக, பஞ்சவர்க்கு-பாண்டவர்களைவர்க்கும், அன்று-தங்கள்வெறுமை தோன்றநின்றவன்று, தேர்-தேரை, உய்த்த - நடத்தின, கைகளால் - திருக்கைகளாலே, சப்பாணி—; தேவகி - தேவகிப்பிராட்டிவயிற்றிற் பிறப்பாலே, சிங்கமே - ஸிம்ஹக்கன்று போலே செருக்கியிருக்கிறவனே, சப்பாணி—.

வ்யா.—ஆறும்பாட்டு. (தாரித்து) தரித்து என்கிறவித்தைநீட்டிக்கிடக்கிறது. தரித்து-பொறுப்புண்டாயென்னுதல், புத்திபண்ணியென்னுதல். (நூற்றுவர்) இதுக்கு மேலேஅந்வயம். (தந்தைசொற்கொள்ளாது) "సర్వేషామేవ లోకానాం పితా మాతా చ మాధవః" "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதாமாதாச மாதவ:" என்கிறபடியே ஸர்வலோகத்துக்கும் பிதாவாகையாலே தங்களுக்கும் பிதாவான நீ இரண்டுதலையையும் சேர்க்கைக்குத்தூதாகவெழுந்தருளி, "பாண்டவர்களும் நீங்களும் (க)பரஸ்பரம் விரோதித்திருக்கவேண்டா, ப்ராப்தி எல்லார்க்குமொக்கும்; ஆனபின்பு, ராஜ்யத்தை (உ) ஸமவிபாகம் பண்ணி புஜித்துச்சேர்ந்திருங்கோள்; அதுசெய்யமாட்டிகோளாகில், தலைக்கு இரண்டு ஊராக அவர்களுக்குப் பத்தூர்தன்னைக் கொடுங்கோள்; அதுவும் செய்யிகோளாகில் அவர்கள்தங்களுக்குக் குடியிருக்கைக்கு ஓரூர்தன்னைக்கொடுங்கோள்" என்று இப்படி அருளிச்செய்தவசநத்தில் ஒன்றையுங்கைக்கொள்ளாதே. (போருய்த்தித்யாதி) பின்புரோஷத்தாலே (௩) *வீரபோக்யாவஸுந்தராவன்றோ, யுத்தத்தைப் பண்ணி ஜயித்தவர்களொருவர் ராஜ்யத்தையாளுங்கோள் என்றபடியாலே யுத்தத்தை நடத்துவதாத (௪) கர்வோத்தராய்வந்து யுத்தபூமியிலே புகுந்தவர்களாய், பாண்டவர்களை யழியச்செய்து, பூமிப் பரப்படங்கலும் தாங்களே ஆளுவதாகப் பாரித்த ராஜாக்களான நூற்றுவரும், ஒருவர் (௫) சேஷியாதபடி பட்டுப்

(க) பரஸ்பரம் - ஒருவர்க்கொருவர். (உ) ஸமவிபாகம்பண்ணி-சரியாகப் பங்கிட்டுக்கொண்டு. (௩) வீரபோக்யாவஸுந்தரா - பூமியானது வீரத்தன்மையுடையோனால் அநுபவிக்கத்தக்கது. (௪) கர்வோத்தராய் - மிக்கசெருக்குடையவர்களாய். (௫) சேஷியாதபடி - மிஞ்சாதபடி.

போம்படியாக. (பஞ்சவர்க்கித்யாதி) உன்னையல்லது வேறுதுணையில்லாத பாண்டவர்கள் ஐவர்க்கும் தங்கள் வெறுமைதோன்ற நின்றவன்று, "ஆயுதமெடுக்க வொண்ணாது" என்கையாலே (௧) ஸாரத்யத்திலே அதிக்ருதனாய் (௨) ப்ரதிபக்ஷ மித்தனையும் தேர்க்காலிலே நெரிந்துபோம்படி தேரைநடத்தின கைகளாலே சப்பாணிகொட்டவேணும். (தேவகிசிங்கமே) தேவகிப்பிராட்டி வயிற்றிற்பிறப்பாலே ஸிம்ஹக்கன்றுபோலே செருக்கியிருக்கிறவனே சப்பாணி. (௬)

மூ.—பரந்திட்டுநின்றபடுகடல்தன்னை
யிரந்திட்டகைமேலெறிதிரைமோதக்
கரந்திட்டுநின்றகடலைக்கலங்கச்
சரந்தொட்டகைகளாற்சப்பாணிசார்ங்கவிற்கையனேசப்பாணி.

ப-ரை.—பரந்திட்டுநின்ற - அகன்றிருக்கிற, படு - ஆழ்ந்த, கடல் - கடலானது, தன்னை - தன்னைக்குறித்து, இரந்திட்ட - சரணம்புகுந்த, கைமேல் - திருக்கையின்மேலே, எறி - அலையெறிகிற, திரை - திரைகளாலே, மோத—, கரந்திட்டுநின்ற - முகம்கொடாதே மறைந்துநின்ற, கடல் - ஸமுத்ரத்துக்குத் தலைவனானவருணனை, கலங்க-குடல்குழம்பும்படியாக, சரம்-அம்பை, தொட்ட-விடுத்த, கைகளால் - திருக்கைகளாலே, சப்பாணி - சப்பாணிகொட்டியருளவேணும்; சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கமென்கிற, வில் - தநுஸ்ஸைதரித்த, கையனே-திருக்கையையுடையவனே, சப்பாணி—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பரந்தித்யாதி) "[illegible]" "[illegible]" என்கிறபடியே ஒருவரால் எல்லைகாணவொண்ணாதபடி விஸ்தீர்ணமாய்நின்ற ஆழ்ந்தகடலானது. படுவென்று - ஆழம். அன்றிக்கே, ரத்நாதிகள் (௩)படுகிற கடலென்றுமாம். (தன்னையித்யாதி) "[illegible]" "[illegible]" என்கிறபடியே-"லங்கையிலேபோம்படியாகவழிதரவேணும்" என்று தன்னைக்குறித்துச் சரணம் புகுந்த கையின்மேலே அலையெறிகிற திரைகளானவை மோத. (கரந்தித்யாதி) முகம்காட்டாதே மறைந்து நின்றகடலை (௪) பீதியாலே கீழ்மண்கொண்டு மேல் மண்ணெறியும்படி கலங்க. "[illegible]" "[illegible]" என்கிறபடியேசீறி, சரம்தொட்டகைகளாலே சப்பாணி. கடல்என்கிற சப்தத்தாலே - அபிமாநியான வருணனைச்சொல்லுகிறது. (சார்ங்கவிற்கையனே) அப்போது, கையும் வில்லுமாய்நின்ற அழகையுடையவனே யென்னுதல்; கையிலே வில்லைவாங்கினபோதை வீரப்பாட்டைச் சொல்லுதல். (௭)

(௧)ஸாரத்யத்திலே அதிக்ருதனாய் - தேரையோட்டுமவனாய். (௨)ப்ரதிபக்ஷ மித்தனையும் - விரோதிவர்க்கமெல்லாம். (௩) படுகை - உண்டாகை. (௪) பீதி-பயம்.

மூ.—குரக்கினத்தாலேகுரைகடறன்னை
நெருக்கியணைகட்டிநீணீரிலங்கை
யரக்கரவியவடுகணையாலே
நெருக்கியகைகளாற்சப்பாணிநேமியங்கையனேசப்பாணி.

ப-ரை.—குரக்கினத்தாலே - குரங்குகளினுடைய திரளாலே, குரை - சப்தியாநின்ற, கடல்தன்னை-ஸமுத்ரத்தை, நெருக்கி-இரண்டருகும் தேங்கும்படி, அணைகட்டி - நடுவே அணைகட்டி, நீள் - பரந்த,நீர்-கடலை அகழாகவுடைத்தான, இலங்கை - லங்கையை யிருப்பிடமாக வுடைய, அரக்கர் - ராக்ஷஸரானவர்கள், அவிய-அழிந்துபோம்படியாக, அடு - ஹிம்ஸிக்கிற, கணையாலே - அம்புகளாலே, நெருக்கிய - நெருங்கப்போர்செய்த, கைகளால் - கைகளாலே, சப்பாணி—; நேமி - திருவாழியை, அம் - அழகிய, கையனே - திருக்கையிலே யுடையவனே, சப்பாணி - சப்பாணிகொட்டி யருளவேணும்.

வ்யா.— எட்டாம்பாட்டு. (குரக்கித்யாதி) நீருக்கு அஞ்சி உயர்ந்தநிலங்களிலே வர்த்திக்கும் குரங்குகளினுடைய திரளாலே, ஆழத்தாலும் பரப்பாலும் திரைக்கிளப்பத்தை யுடைத்தாய்க் கொண்டு கோஷியாநின்ற ஸமுத்ரத்தை இரண்டருகும் தேங்கிப்போம்படி நடுவேயணைகட்டி. (நீணீரித்யாதி) "நீள்கடல்சூழிலங்கை" என்கிறபடியே - பரந்தகடலை அகழாகவுடைத்தான லங்கையை யிருப்பிடமாக வுடையராகையாலே, இந்த அரண் உண்டாயிருக்க நமக்கொருகுறைகளுமில்லையென்று செருக்கி யிருக்கும் ராக்ஷஸரானவர்கள் (க) முழுக்காயாக அவியும்படியாக, ப்ரதிபக்ஷநிரஸநசீலமான அம்புகளாலே நெருங்கப்பொருதகைகளாலே சப்பாணி. (நேமியங்கையனே சப்பாணி) திருவாழியை அழகிய திருக்கையிலே யுடையவனே சப்பாணி. விரோதி நிரஸநத்துக்கு அடுகணைதானே அமைந்திருக்கையாலே திருவாழி அழகுக்குடலாமித்தனையிறே. (அ)

மூ.—அளந்திட்டதூணையவன்தட்டவாங்கே
வளர்ந்திட்டுவாளுகிர்ச்சிங்கவுருவாய்
உளந்தொட்டிரணியனொண்மார்வகலம் [ணி.
பிளந்திட்டகைகளாற்சப்பாணிபேய்முலையுண்டானேசப்பா

ப-ரை.—அளந்திட்ட - இரணியன் தனக்குப்பொருத்தம்பார்த்து அளந்து நட்ட, தூணை - கம்பத்தை, அவன் - அவன்தானே, தட்ட - அடிக்க, ஆங்கே - அத்தூணிலே அடித்தவிடத்திலே, வாள் - ஒளியையுடைத்தான, உகிர் - நகங்களையுடைய, சிங்கவுருவாய் - நரஸிம்ஹரூபமாய், வளர்ந்திட்டு - வளர்ந்து, உளம்-அவன்மநதை, தொட்டு - அநுகூலிக்கக்கூடுமோவென்றுபரீக்ஷைபண்ணி, இரணியன் - ஹிரண்யனுடைய, ஒண் - ஒள்ளியதாய், அகலம் - விசாலமான, மார்வு - மார்வை, பிளந்திட்ட - திருவுகிர்களாலே இரண்டுகூறாகப் பிளந்து

(க) முழுக்காயாக - இருந்தபடியே.

பொகட்ட, கைகளால் - திருக்கைகளாலே, சப்பாணி—; பேய்-பூதனையுடைய, முலை - முலையை, உண்டானே - ப்ராணனோடு உண்டவனே, சப்பாணி—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (அளந்தித்யாதி) "முன்பேநரஸிம்ஹத்தைவைத்து நட்டதூண்" என்னவொண்ணாதபடி தானேதனக்குப் பொருந்தப்பார்த்து அளந்து நட்டதூணை. (அவன்தட்ட) வேறே சிலர்தட்டில், கையிலே நரஸிம்ஹத்தையடக்கிக்கொண்டுவந்து தூணிலேபாய்ச்சினார்களென்ன ஒண்ணாதபடி அவன்தானே, "எங்குமுளன்" என்று ப்ரஹ்லாதன்பண்ணின (க) ப்ரதிஜ்ஞைபொருமல், "பிள்ளையைச்சீறி வெகுண்டுதூண் புடைப்ப" என்கிறபடியே அவனைச்சீறி, அந்தச் (உ) சீற்றத்தினுடைய அதிசயத்தாலே, "ஆனால், நீசொல்லுகிறவன் இங்கில்லை" என்று அழன்று அடிக்க. (ஆங்கே) அடித்த விடமொழிய (ந) ஸ்தலாந்தரத்திலேதோன்றிலும் "இவன் இங்கில்லை" என்ற ப்ரதிஜ்ஞை நிலைநின்றதாமென்று, தூணில் அவன அடித்தவிடந்தன்னிலே. (வளர்ந்திட்டு) "பரியவிரணியன்" என்னும்படி பருத்துவளர்ந்த வடிவை யுடையனானவன் கீழ்ப்படும்படியாகத் தான்வளர்ந்து. (வாளுகிர்ச்சிங்கவுருவாய்) (ச) அஸ்த்ர(ரு) சஸ்த்ரங்களில் ஒன்றாலும் படக்கடவனல்லவாகவும், (சு) தேவாதிசதுர்விதஜாதியிலுள்ளவற்றில் ஒன்றின்கையிற்படக்கடவனல்லவாகவும்,ப்ரஹ்மருத்ராதிகள்கொடுத்தவரத்துக்கு விரோதம்வாராதபடி, ஒளியையுடைத்தான உகிர்களையுடைய நரஸிம்ஹ ரூபியாய். (உளந்தொட்டு) "எங்குமுளன்" என்று ப்ரஹ்லாதன் சொன்னபடியே, தான் "இல்லை" என்றுசொன்ன ஸ்தலந்தன்னிலே "உண்டு" என்னும்படியாகத் தோற்றுகையாலும், தான்கொண்ட வரத்தில் ஒன்றிலும் அகப்படாத வடிவைக்கொண்டு தோற்றுகை யாலும், "சிரம் பற்றிமுடியிடியக்கண்பிதுங்கவாயலறத்தெழித்தான்" என்கிறபடியே ஒரொன்றே (எ) துஸ்ஸஹமாம்படி பண்ணின (அ) பீடாவிசேஷங்களாலும், பீதியாலே நெஞ்சிளகி அநுகூலிக்கக்கூடுமோவென்று (கூ) ஹ்ருதய பரீக்ஷைபண்ணி. (இரணியனொண்மார்வகலம்) ஹிரண்யனுடைய ஒள்ளியதாய் விஸ்த்ருதமானமார்வை. ஒண்மையாவது-நரஸிம்ஹத்தினுடைய கோபாக்நியாலும் தன்னுடைய உதரத்தில்பயாக்நியாலும் பிறந்த பரிதாபத்தாலே அக்நி முகத்தில் பொன்போலே உருகிப் பதம்செய்து ஒளிவிடுகை. இத்தால்-திருவுகிர்க்கு அநாயா

---

(க) ப்ரதிஜ்ஞை - சபதம்; சூள். (உ) சீற்றத்தினுடைய வதிசயத்தாலே - மிக்ககோபத்தாலே. (ந)ஸ்தலாந்தரம் - வேறிடம். (ச) அஸ்த்ரம் - மந்த்ரிக்கப்பட்ட ஆயுதம். (ரு)சஸ்த்ரம்-ஆயுதம். (சு) தேவாதிசதுர்விதஜாதிகள் - தேவர் முதலிய நால்வகைச்சாதிகள். அவையாவன தேவர், மனிதர், விலங்கு, தாவரம். (எ) துஸ்ஸஹமாம்படி - பொறுக்கவொண்ணாதபடி. (அ)பீடாவிசேஷம் - மிகவருத்துகை. (கூ) ஹ்ருதயபரீக்ஷைபண்ணி - மநதைச்சோதித்து.

ஸோ கிழிக்கலாம்படியானபடியைச் சொல்லுகிறது. அகலமென் கையாலே-வரபல புஜபலங்களாலே (க) மிடியறவளர்ந்தபரப்பாலே திருவுகிர்கட்கெல்லாம் இரைபோந்தபடி சொல்லுகிறது. (பிளந் திட்டகைகளால்) "உடலகமிருபிளவாக் கையில் நீளுகிர்ப்படையது வாய்த்தவனே" என்கிறபடியே-திருவுகிர்களாலே இரண்டுகூறாகப் பிளந்துபொகட்ட திருக்கைகளாலேசப்பாணி. (பேய்முலையித்யாதி) அவனைப்போலே (உ) ப்ராதிகூல்யம் தோற்றநிற்கையு மன்றிக்கே, "தாயாய்வந்தபேய்"என்கிறபடியே வஞ்சகையாய்வந்தபூதனையுடைய முலையை (ந)ப்ராணஸஹிதமாகவுண்டுமுடித்தவனே சப்பாணி.

மூ.—அடைந்திட்டமரர்களாழ்கடறன்னை
மிடைந்திட்டுமந்தரம்மத்தாகநாட்டி
வடஞ்சுற்றிவாசுகிவன்கயிறாகக்    [பாணி.
கடைந்திட்டகைகளாற்சப்பாணிகார்முகில்வண்ணனேசப்

ப-ரை.—அமரர்கள் - தேவர்கள், அடைந்திட்டு - சரணம்புகுர, ஆழ் - மிகவும் ஆழமான, கடல்தன்னை - திருப்பாற்கடலை, மிடைந்திட்டு - நெருக்கி, மந்தரம் - மந்தரபர்வதத்தை, மத்தாகநாட்டி - கடைகைக்குமத்தாக நிறுத்தி, வாசுகி - வாஸுகியாகிற, வன் - வலிய, வடம் - கயிற்றை, கயிறாக - கடைகயிறாக, சுற்றி—, கடைந்திட்ட - அம்ர்தம் கிளரும்படி கடைந்தருளின, கைகளால் - திருக்கைகளாலே, சப்பாணி—; கார் - கறுத்த, முகில் - மேகம்போன்ற, வண்ணனே - வடிவையுடையவனே, சப்பாணி—.

வ்யா.—பத்தாம்பாட்டு. (அடைந்தித்யாதி) (ச) துர்வாஸசாபோபஹதராய் அத்தாலே (ரு)நஷ்டைச்வர்யராய் (சு) அஸுராக்ராந்தராய்(எ)அமரத்வஸாபேக்ஷரான தேவர்கள் "ஶரணம் த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தா தேவதாகணா:" "ஸப்ரஹ்மகாஸ் ஸுராஸ் ஸர்வே ப்ராஞ்ஜலயோ ரகுநந்தநம்" என்கிறபடியே ரக்ஷித்தருளவேணுமென்று சரணம்புகுர. அடைந்திட்டு என்கிறவினையெச்சம் திரிந்து, அடைந்திட என்னும் பொருள்பெற்றுக்கிடக்கிறது. "நலங்கழல்வணங்கி" என்கிற விதுதிரிந்து, வணங்க வென்னும் பொருளாகிறாற்போலே. (ஆழ்கடலித்யாதி) (அ) அத்யகாதமான க்ஷீராப்தியை நம்முடைய படுக்கையென்றுபாராதே நெருக்கி. (மந்தரமித்யாதி) "மந்தாநம் மந்தரம் க்ருத்வா" "க்ஷீரோதமதநே க்ருதா" என்கிறபடியே மஹாசலமான மந்தரத்தை, கடைகைக்கு மத்தாக நாட்டி. (வடமித்யாதி) "நேத்ரம் க்ருத்வா ச வாஸுகிம்" "யோக்த்ரம் க்ருத்வா

(க)மிடியற - குறைவில்லாமல். (உ)ப்ராதிகூல்யம் - வைரத்தன்மை. (ந) ப்ராணஸஹிதமாக - ப்ராணனோடுகூட. (ச) துர்வாஸசாபோபஹதராய் - துர்வாஸருடையசாபத்தாலே வருந்தினவர்களாய். (ரு)நஷ்டைச்வர்யராய்-பொருளிழந்தவராய். (சு) அஸுராக்ராந்தராய் - அஸுரரால் ஆக்ரமிக்கப்பட்டவர்களாய். (எ) அமரத்வஸாபேக்ஷரான - சாவாமையை விரும்பினவர்களான. (அ) அத்யகாதமான - மிகவும் ஆழமான.

வாஸுகிம்" என்கிறபடியே-வாஸுகியாகிற வலியகயிற்றை அதிலே கடைகயிறாகச்சுற்றி. (கடைந்திட்டவித்யாதி) தேவர்களையும் அஸுரர்களையும் முந்துறக்கடையவிட்டு, அவர்கள் இளைத்துக்கைவாங்கின வாறே "அலைகடல்கடைந்தவப்பன்" என்கிறபடியே (க) அம்ர்தம் கிளருந்தனையும் நின்றுகடைந்தருளின கைகளாலே சப்பாணி. (கார்முகிலித்யாதி) ஆச்ரிதருடைய(உ)அபேக்ஷிதஸம்விதாநம்பண்ணின ஹர்ஷத்தாலே காளமேகம்போலே குளிர்ந்து புகர்பெற்றவடிவை யுடையனாய் நின்றவனே சப்பாணி. (கய)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆட்கொள்ளத்தோன்றியவாயர்தங்கோவினை
நாட்கமழ்பூம்பொழில்வில்லிபுத்தூர்ப்பட்டன்
வேட்கையாற்சொன்னசப்பாணியீரைந்தும்
வேட்கையினாற்சொல்லுவார்வினைபோமே.

ப-ரை.—ஆட்கொள்ள - யாவரையும் அடிமைகொள்ளுவதாக, தோன்றிய - வந்தவதரித்த, ஆயர்தம் - இடையர்களுக்கு, கோவினை-ராஜாவானவனை, நாள் - ஸர்வகாலத்திலும், கமழ் - பரிமளியா நின்றுள்ள, பூ - புஷ்பங்களை யுடைய, பொழில் - பொழிலாலே சூழ்ந்த, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூருக் குத்தலைவரான, பட்டன் - பெரியாழ்வார், வேட்கையால் - ஆசையாலே, சொன்ன - அருளிச்செய்த, சப்பாணி - சப்பாணிவிஷயமான, ஈரைந்தும் - பத்துப் பாட்டையும், வேட்கையினால் - ஆசையாலே, சொல்லுவார் - சொல்லுமவர்களுடைய, வினை - ஸகலபாபங்களும், போம் - தன்னடையேபோம்.

வ்யா.— (ஆட்கொள்ளத் தோன்றிய) ஸர்வரையும் அடிமை கொள்வதாகவந்து ஆவிர்ப்பவித்த. அவதார ப்ரயோஜநம் — லீலா விபூதியிலுள்ள சேதநரைத் திருத்தி அடிமைகொள்கையென்கை. "பிறந்த" என்னாதே, தோன்றிய என்றது, "தேவகீபூர்வஸந்த்யாயாம் ஆவிர்பூதம்" "தேவகீவஸுதேவாப்யாம் ஆவிர்பூத:" என்கிறபடியே (ங) கர்ப்பவாஸதோஷமற வந்தவதரித்தமை தோற்றுகைக்காக. (ஆயர் தம்கோவினை) (ச)ஆவிர்ப்பவித்தது ஸ்ரீமதுரையிலேயாகிலும் அது ப்ரகாசித்ததும் ப்ரயோஜநப்பட்டதும் திருவாய்ப்பாடியிலேயிறே. தான்தாழநின்று ஏவிற்றுச்செய்து, தன்நீர்மையாலே எல்லாரையும் வசீகரித்து ஆளாக்கிக்கொண்டு (ரு) ஸர்வகோப நிர்வாஹகனானவனை. (நாட்கமழித்யாதி) ஸர்வகாலத்திலும் கமழாநின்றுள்ள பூம்

---

(க)அம்ர்தம்கிளருந்தனையும் - அமிர்தமுண்டாமளவும். (உ) அபேக்ஷிதஸம் விதாநம்பண்ணின ஹர்ஷம் - விருப்பத்தைத் தலைக்கட்டிக்கொடுத்த ஸந்தோஷம். (ங) கர்ப்பவாஸதோஷம் - கர்பத்தில்வஸித்ததனாலுண்டான தோஷம். (ச) ஆவிர்ப்பவித்த - அவதரித்த. (ரு) ஸர்வகோபநிர்வாஹகன் - இடையர்க் கெல்லாம் தலைவன்.

பொழில்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார். (வேட்கையித்யாதி) (க) அவதார சேஷ்டிதாநுபவத்தில் ஆசையாலே அருளிச்செய்த சப்பாணிவிஷயமான பத்துப்பாட்டையும் (உ) ஆசா பூர்வகமாகச் சொல்லுமவர்களுடைய (ங) அகிலபாபங்களும் தன்னடையேபோம். (கக)

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—மாணிபொன்பன் தூநிலாப்புட்டித் தாரிபரந்து குரக்கினம் அளந்தடைந்து ஆட்கொள் துடர்.

---

ஆ திருமொழி கூ-க்கு, பாட்டு-எங.

அ.—கீழ்த்திருமொழியிலே - சப்பாணி கொட்டுகை யாகிற அவனுடைய (ச) பாலசேஷ்டிதத்தை, தத்காலத்திலே யசோதைப் பிராட்டி யநுபவித்தாற்போலே, பிற்பாடரா யிருக்கிற தாமும் அதில் ஆதராதிசயத்தாலே அவளுடைய (ரு) பாவயுக்தராய்க்கொண்டுபேசி யநுபவித்தாராய் நின்றார்; அவன் தளர் - நடை நடக்கையாகிற சேஷ்டிதத்தை தத்காலம்போலே அநுபவித்து இனியராகிறாரிதில்.

மூ.—துடர்சங்கிலிகைசலார்பிலாரொன்னத்தூங்குபொன்மணியொலிப்பப், படுமும்மதப்புனல்சோர வாரணம்பையநின்றூர்வதுபோல், உடன்கூடிக்கிண்கிணியாரவாரிப்பவுடைமணிபறைகறங்கத், தடந்தாளிணைகொண்டு சார்ங்கபாணிதளர்நடைநடவானோ.

ப-ரை.—சங்கிலிகைத்துடர் - சங்கிலித்துடரானது, சலார்பிலாரொன்ன-சலார்பிலாரொன்று சப்திக்கும்படியாகவும், தூங்கு - பொற்கயிற்றில் தொங்குகிற, பொன்மணி-பொன்மணியானது, ஒலிப்ப - சப்திக்கும்படியாகவும், படு- உண்டாகப்பட்ட, மூன்று - கன்னமிரண்டு மேட்ரமொன்று - ஆகிய மூன்றிடங்களினின்றும், மதப்புனல் - மதஜலமானது, சோர - அருவிபோலே வடியும்படியாகவும், வாரணம் - யானையானது, பைய - மெள்ள, நின்று—, ஊர்வதுபோல் - நடக்குமாபோலே, கிண்கிணி - திருவடிகளில்சாத்தின சதங்கைகளானவை, உடன்கூடி - தன்னிலேகூடி, ஆரவாரிப்ப - சப்திக்கும்படி யாகவும், உடைமணி - திருவரையிற்கட்டினமணியானது, பறை - பறைபோலே, கறங்க- சப்திக்கும்படியாகவும், தடம் - பருத்த, இணை - ஒன்றுக்கொன்றொப்பான, தாள்கொண்டு - திருவடிகளைக்கொண்டு, சார்ங்கம் - ஸ்ரீசார்ங்க மென்னும் வில்லை, பாணி - திருக்கையிலேயுடையவன், தளர்நடைநடவானோ—.

---

(க) அவதாரசேஷ்டிதாநுபவத்தில் - திருவவதாரச்செய்கைகளை யநுபவிக்கையிலே. (உ) ஆசாபூர்வகமாக - ஆசையோடுகூட. (ங) அகிலபாபங்களும் - பாவங்களெல்லாம். (ச) பாலசேஷ்டிதம் - இளமைப்பருவத்தின் செய்கை. (ரு) பாவயுக்தராய் - கருத்தையுடையராய்.

வ்யா.—முதற்பாட்டு (துடரித்யாதி) (க) மதாதிசயத்தாலே கம்பத்தை முறித்துக் காலில் துடரையிழுத்துக்கொண்டு நடக்கையாலே காலிற்கிடக்கிறசங்கிலிகைத்துடரானதுசலார்பிலாரென்றுசப்திக்க. துடரென்று-விலங்கு. ஆனைவிலங்கு சங்கிலிகையாயிறேயிருப்பது. சலார்பிலார் என்கிறது - (உ) சப்தாநுகாரம். (தூங்கித்யாதி) முதுகில்கட்டின பொன்கயிற்றில் தூங்குகிறமணியானது த்வநிக்க. "பொன்மணி" என்கிறவிடத்தில், பொன் என்கிறவித்தால் - பொற்கயிற்றைச் சொல்லுகிறது. (படுவித்யாதி) உண்டாகப்பட்டமூன்று வகையான மதஜலம் அருவிகுதித்தாற்போலே வடிய. மும்மதப்புனலாவது - மதத்தாலே (ங) கபோலத்வயமும் (ச) மேட்ர (ரு) ஸ்தாநமுமாகிற த்ரயத்தில் நின்றுவடிகிறஜலம். (வாரணமித்யாதி) ஆனையானது அந்த (சு) மதபாரவச்யத்தாலே (எ) அலஸமாய்க்கொண்டு மெள்ளநடக்குமாபோலே. (உடனித்யாதி) "சேவடிக்கிண்கிணி" என்கிறபடியே திருவடிகளிற்சாத்தின சதங்கைகளானவை தன்னிலேகூடி சப்திக்க. அன்றிக்கே, திருவரையிற் சாத்தின சதங்கைவடமானது நழுவிவிழுந்து திருவடிகளோடேசேர்ந்து இழுப்புண்டுவருகையாலே அதிலுண்டான சதங்கைகள் தன்னிலேகூடி சப்திக்கவென்னவுமாம். (உடையித்யாதி) திருவரையிற்கட்டின மணியானது பறைபோலே சப்திக்க. (தடந்தாளித்யாதி) பருவத்துக்கீடாய் விகாஸயுக்தமாய் (அ) பரஸ்பரஸத்ர்சமாயிருக்கிற திருவடிகளைக்கொண்டு. (சார்ங்கபாணி) ஸ்ரீசார்ங்கத்தைத் திருக்கையிலே யுடையவன். இது (கூ) ஈச்வரத்வ சிஹ்நங்களுக்கு (கo) உபலக்ஷணம். அவதரிக்கிறபோதே ஈச்வரத்வ சிஹ்நங்கள்தோன்றும்படியாகவிறே வந்தவதரித்து. (தளர்நடைநடவானோ) தளர்நடையாவது - திருவடிகள் ஊன்றிநடக்கும் பருவமன்றிக்கேநடக்கிறதசையாகையாலே தள்ளம்பாறிநடக்கும் நடை. (க)

மூ.—செக்கரிடை நுனிக்கொம்பிற் றோன்றுஞ் சிறுபிறை முளைபோல், நக்கச்செந்துவர்வாய்த்திண்ணைமீதேநளிர்வெண்பல் முளையிலக, அக்குவடமுடுத்தாமைத்தாலிபூண்டவநந்தசயநன், தக்கமாமணிவண்ணன் வாசுதேவன்தளர்நடைநடவானோ.

---

(க) மதாதிசயத்தாலே - மிக்கமதத்தாலே. (உ) சப்தாநுகாரம் - ஒலிக்குறிப்பு. (ங) கபோலத்வயம் - இரண்டுகன்னம். (ச) மேட்ரம் - கோசம். (ரு) ஸ்தாநத்ரயம் - மூன்றிடங்கள். (சு) மதபாரவச்யத்தாலே - மதத்துக்குவசமாயிருக்கையாலே. (எ) அலஸமாய்க்கொண்டு - மந்தபுத்தியாய்க்கொண்டு. (அ) பரஸ்பரஸத்ருசம் - ஒன்றுக்கொன்றொப்பு. (கூ) ஈச்வரத்வசிஹ்நங்கள் - ஈச்வரனுக்குள்ள குறிகள் (கo) உபலக்ஷணம் - சொல்லாதவற்றுக்கு மடையாளமாயிருப்பது.

ப-ரை.—செக்கரிடை - செவ்வானத்திடையில், கொம்புநுனியில் - கிளையின் முனையிலே, தோன்றும் - தோன்றும்படிவிளங்குகிற, சிறுபிறை - இளம்சந்த்ரனுடைய, முளைபோல் - அங்குரம்போலே, நக்க - சிரிக்கையாலே, செம்துவர் - மிகவும்சிவந்திருந்துள்ள, வாய் - திருவதரமாகிற, திண்ணைமீது - உயர்ந்தநிலத்தின்மேலே, நளிர் - குளிர்ந்து, வெண் - வெளுத்திருக்கிற, பல் - திருமுத்துக்களுடைய, முளை - முளைகள், இலக - ப்ரகாசிக்க, அக்குவடம் - சங்குமணிவடத்தை, உடுத்து - அரையிலே தரித்து, ஆமைத்தாலி - கூர்மாகாரமான ஆபரணத்தை, பூண்ட - அணிந்தவனாய், அநந்தசயநன் - திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையனாய், தக்க - தகுந்த, மாமணி - நீலரத்நம்போன்ற, வண்ணன் - திரு நிறத்தையுடையனாய், வாசுதேவன் - ஸ்ரீவஸுதேவ புத்ரனானவன், தளர்நடைநடவானோ—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (செக்கரித்யாதி) செக்கர்வானத்திடையிலே, (க) சாகாக்ரத்திலே தோன்றும்படி (௨) உஜ்ஜ்வலமான பாலசந்த்ராங்குரம்போலே. (நக்கவித்யாதி) (௩) ஸ்மிதம்செய்கையாலே மிகச் சிவந்திருந்துள்ள திருவதரமாகிற உயர்ந்த நிலத்தின் மேலே குளிர்ந்து வெளுத்திருக்கிற திருமுத்தின் (௪) அங்குரத்தினுடைய தேஜஸ்ஸானது ப்ரகாசிக்க. (அக்குவடமுடுத்து) சங்குமணி வடத்தைத் திருவரையிலேசாத்தி. (ஆமைத்தாலி பூண்ட) கூர்மாகாரமான தாலியாகிற ஆபரணவிசேஷத்தைத் திருக்கழுத்திலே சாத்தியிருக்கிற. (அநந்தசயநன்) அவதாரத்தினுடைய மூலத்தைநினைத்துச்சொல்லுகிறது. "நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகத:" "நாமவாஸுதேவஸ்ய ஜ்ஞோஹ்யாகத:" என்னக்கடவதிறே. (தக்கமாமணிவண்ணன்) தகுதியான நீலரத்நம்போன்ற திருநிறத்தையுடையவன். (வாசுதேவனித்யாதி) ஸ்ரீவஸுதேவர் திருமகன், தளர்நடை நடவானோ. (௨)

மூ.—மின்னுக்கொடியுமோர் வெண்டிங்களுஞ்சூழ்பரிவேடமுமாய்ப், பின்னல்துலங்குமரசிலையும் பீதகச்சிற்றுடையொடும், மின்னிற்பொலிந்ததோர் கார்முகில்போலக் கழுத்தினிற்காறையொடுந், தன்னிற்பொலிந்த விருடீகேசன்தளர்நடைநடவானோ.

ப-ரை.—மின்னுக்கொடியும் - மின்கொடியும், ஓர் - ஒரு, வெண் - வெளுத்த, திங்களும் - சந்த்ரமண்டலமும், சூழ் - அத்தைச்சூழ்ந்த, பரிவேடமுமாய் - பரிவேஷமுமாய்க்கொண்டு, பின்னல் - திருவரையிற்சாத்தின பொற்பின்னலும், துலங்கும் - அதில் கோவைப்பட்டு விளங்குகிற, அரசிலையும்—, பீதகச்சிற்றுடையொடும் - பொற்சிற்றுடையுமாகிறவிவற்றோடே, மின்னில் - மின்னாலே, பொலிந்தது - விளங்குமதான, ஓர் - ஒரு, கார் - கறுத்த, முகில்போல - மேகம்போலே, கழுத்தினில் - திருக்கழுத்தில்சாத்தின, காறையொ

(க) சாகாக்ரத்திலே - கிளையின்முனையிலே. (௨) உஜ்ஜ்வலமான - ப்ரகாசிக்கிற. (௩) ஸ்மிதம் செய்கையாலே - சிரிக்கையாலே. (௪) அங்குரம் - முளை.

டும் - காறையென்னுமாபரணத்தோடேகூட, தன்னில் - தன்னழகாலே, பொலிந்த - நிறைந்திருப்பானாய், இருடீகேசன் - கண்டவருடைய இந்த்ரியங்களைத் தன்வசமாக்கிக் கொள்ளுமவனானவன், தளர்நடைநடவானோ—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மின்னித்யாதி) மின்கொடியும் அத்தோடுசேர்ந்ததோர் அகளங்க சந்த்ரமண்டலமும் அத்தைச்சூழ்ந்த (க) பரிவேஷமும்போலே. (பின்னலித்யாதி) திருவரையிற் சாத்தின பொற்பின்னலும், அதிலேகோவைப்பட்டு ப்ரகாசிக்கிறவெள்ளி அரசிலைப்பணியும், இவற்றுக்குமேலேசாத்தின பொன்னின் சிற்றாடையுமாகிற விவற்றோடும். (மின்னிலித்யாதி) மின்னாலே விளங்கப்பட்டதொரு காளமேகம்போலே திருக்கழுத்திற்சாத்தின காறையோடும். (தன்னிலித்யாதி) இவ்வொப்பனைகள் மிகையாம்படி தன்னழகாலே ஸம்ர்த்தனா யிருப்பானாய் அவ்வழகாலே கண்டவர்களுடைய இந்த்ரியங்களைத் தன்வசமாக்கிக்கொள்ளுமவன் தளர்நடைநடவானோ. (ங)

மூ.—கன்னற்குடந்திறந் தாலொத்தூறிக் கணகணசிரித்துவந்து,
முன்வந்துநின்று முத்தந்தருமென் முகில்வண்ணன்திருமார்
வன், தன்னைப்பெற்றேற்குத் தன்வாயமுதந் தந்தென்னைத்
தளிர்ப்பிக்கின்றான், தன்னெற்றுமாற்றலர் தலைகண்மீதேதளர்
நடைநடவானோ.

ப-ரை.—கன்னல்குடம் - கருப்பஞ்சாற்றுக்குடம், திறந்தாலொத்து-இல்லி திறந்தால் பொசியுமாபோலே, ஊறி - திருப்பவளத்தில்ஜலமானதுஊறிவடிய, கணகணசிரித்து - கணகணவென்று சிரித்து, உவந்து - ப்ரீதனாய்க்கொண்டு, முன் - முன்னே, வந்துநின்று—, முத்தம் - அதரபாநத்தை, தரும் - தாராநிற்பானாய், என்-எனக்குபவ்யனாய், முகில் - காளமேகம்போன்ற, வண்ணன்-வடிவையுடையனாய், திரு - பெரியபிராட்டியாரை, மார்வன் - திருமார்விலேயுடையனாய், தன்னை—, பெற்றேற்கு - பிள்ளையாகப் பெற்றவெனக்கு, தன்-தன்னுடைய, வாயமுதம்-வாகம்ர்தத்தை, தந்து - கொடுத்து, என்னை—, தளிர்ப்பிக்கின்றான் - தழைப்பிக்கிறவன், தன்-தன்னோடு, எற்று - எதிர்ந்த, மாற்றலர் - பகைவருடைய, தலைகள்மீது-தலைகள்மேலே, தளர்நடைநடவானோ—.

வ்யா.—நாலாம்பாட்டு. (கன்னலித்யாதி) கருப்பஞ் சாற்றுக்குடம் இல்லிதிறந்தால்பொசிந்து புறப்படுமாபோலே, திருப்பவளத்தில் ஜலமானது ஊறிவடிய, கணகணவெனச்சிரித்து ப்ரீதனாய்க்கொண்டு. கணகணவென்றது - விட்டுச்சிரிக்கிறபோதை சப்தாநுகாரம். (முன்னித்யாதி) முன்னேவந்துநின்று தன்னுடைய (உ)அதராஸ்வாதத்தைத் தாராநிற்கும். முத்தம் - அதரம். (என்னித்யாதி) எனக்குபவ்யனாய் காளமேகம்போன்ற வடிவையுடையனாய், அந்த பவ்யதைக்கு ஊற்றுவாயான லக்ஷ்மீஸம்பந்தத்தை யுடையவன்.

(க) பரிவேஷம் - சந்த்ரனைச்சுற்றியிருக்கு மொளிவட்டம். (உ) அதராஸ்வாதத்தை - அதரபாநத்தை.

(தன்னையித்யாதி) தன்னைப்பிள்ளையாகப்பெற்ற பாக்யத்தையுடைய வெனக்குத் தன்னுடைய வாகம்ர்தத்தைத்தந்து என்னைத்தழைப்பியா நின்றான். இங்கே "வாயமுதந்தந்துதளிர்ப்பிக்கின்றான்" என்று-(க) வர்த்தமாநமாகச் சொல்லுகையாலே, முன்பு "முத்தம்தரும்" என்றது - எப்போதும் தன்விஷயத்தில் அவன்செய்துபோரும் (உ) ஸ்வபாவகதநம் பண்ணினபடி. (தன்னெற்றித்யாதி) தன்னோடெதிர்ந்த சத்ருக்களானவர்களுடைய தலைகள்மேலே தளர்நடை நடவானோ. (ச)

மூ.—முன்னலோர்வெள்ளிப் பெருமலைக்குட்டன் மொடுமொடு விரைந்தோடப்,பின்னைத்தொடர்ந்ததோர்கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல்,பன்னியுலகம்பரவியோவாப்புகழ் பலதேவனெனும், தன்னம்பியோடப்பின்கூடச்செல்வான் தளர்நடைநடவானோ.

ப-ரை.—முன் - முன்னே, நல் - நன்றாய், ஓர் - அத்விதீயமாய், பெரு - பெரியதாயிருந்துள்ள, வெள்ளிமலை - வெள்ளிமலையானதுஈன்ற, குட்டன்-குட்டியானது, மொடுமொடு - திடுதிடென்று, விரைந்து - த்வரித்து, ஓட—, பின்னை - அந்தக்குட்டியின்பின்னே, தொடர்ந்தது - துடர்ந்த, கரு - கறுத்த, மலை - மலையானதுஈன்ற, ஓர் - ஒரு, குட்டன் - குட்டியானது, பெயர்ந்து-பேர்ந்து, அடியிடுவதுபோல் - அடியிட்டுச்செல்லுமாபோலே, உலகம் - லோகத்திலுள்ளவர்கள், பன்னி - ஆராய்ந்து, பரவி - ஸ்துதித்து, ஓவா - முடிவுகாணவொண்ணாத, புகழ் - புகழையுடையனாய், பலதேவனெனும் - பலதேவனென்னும்பேரையுடைய, தன்நம்பி - தன்தமையனானவன், ஓட - முன்னேயோட, பின்-அவன்பின்னே, கூட - அவனைக்கூடவேணுமென்று, செல்வான் - விரைந்து நடக்கிறவன், தளர்நடைநடவானோ—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (முன்னலித்யாதி)முன்னேவிலக்ஷணமாய் அத்விதீயமாய்ப் பெரிதாயிருந்துள்ள வெள்ளிமலையீன்ற குட்டியானது தன்செருக்காலே திடுதிடெனவிரைந்தோட. (பின்னையித்யாதி) அந்தக்குட்டியின்பின்னே தன்செருக்காலே அத்தைப்பிடிக்கைக்காகத் துடர்ந்து, அஞ்சநகிரியீன்றதொருகுட்டி, (ங) தன்சைசவாநுகுணமாகக் காலுக்குக்கால் பேர்ந்தடியிட்டுச் செல்லுமாபோலே. (பன்னியித்யாதி) லோகமெல்லாம்கூடி, தங்கள் ஜ்ஞாநசக்திகளுள்ள வளவெல்லாம்கொண்டு ஆராய்ந்து ஸ்துதித்தாலும் முடிவுகாணவொண்ணாத புகழையுடையனான பலதேவனென்னும்பேரையுடையனான தன்னுடைய தமையனானவன் செருக்கிமுன்னே ஓட, அவன்பின்னே அவனைக் கூடவேணுமென்று தன்சைசவாநுகுணமாக த்வரித்து நடக்குமவன் தளர்நடை நடவானோ. (ரு)

(க) வர்த்தமாநமாக - நிகழ்காலமாக. (உ)ஸ்வபாவகதநம்பண்ணினபடி-இயல்பைச்சொன்னபடி. (ங) தன்சைசவாநுகுணமாக - தன்னுடைய குழவித்தன்மைக்குத்தக்கபடி.

மூ.—ஒருகாலிற்சங்கொருகாலிற்சக்கரமுள்ளடி பொறித்தமைந்த, இருகாலுங்கொண் டங்கங்கெழுதினற்போ லிலச்சினைபட நடந்து, பெருகாநின்றவின்பவெள்ளத்தின்மேற்பின்னையும் பெய்துபெய்து, கருகார்க்கடல்வண்ணன் காமர்தாதைதளர் நடைநடவானோ.

ப-ரை.—கரு - இருண்டு, கார் - குளிர்ந்திருக்கிற, கடல்-கடல்போன்ற, வண்ணன் - நிறத்தையுடையனாய், காமர் - அழகாலேநாட்டைவெருட்டித்திரிகிறகாமனுக்கு, தாதை - தந்தையானவன், ஒருகாலில்-ஒருதிருவடியிலே, சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்யமும், ஒருகாலில் - மற்றொருதிருவடியிலே, சக்கரம் - திருவாழியுமாக, உள்ளடி - உள்ளடிகளிலே, பொறித்து - ரேகையாகப்பொறித்து, அமைந்த - சமைந்த, இருகாலும்கொண்டு - இரண்டுதிருவடிகளையும் கொண்டு, அங்கங்கு-அடியிட்ட அவ்வவ்விடங்களிலே, எழுதினாற்போல்- தூலிகைகொண்டு எழுதினாற்போலே, இலச்சினை - அடையாளம், பட - படும்படி, நடந்து—, பெருகாநின்ற - மேன்மேலெனப் பெருகாநிற்கிற, இன்பவெள்ளத்தின்மேல் - ஆநந்தக்கடலுக்குமேலே, பின்னையும்—, பெய்துபெய்து - மேன்மேலும் ஆநந்தத்தையுண்டாக்கி, தளர்நடைநடவானோ—.

வ்ரா.—ஆறும்பாட்டு. (ஒருகாலித்யாதி) ஒருதிருவடிகளிலே ஸ்ரீபாஞ்சஜந்யமும் ஒருதிருவடிகளிலேதிருவாழியாழ்வானுமாக உள்ளடிகளிலே (க) ரேகாரூபேணபொறித்துச் சமைந்தவிரண்டு திருவடிகளையுங் கொண்டு. (அங்கங்கித்யாதி) அடியிட்ட அவ்வவஸ்தலங்களிலே (உ) தூலிகைகொண்டு எழுதினாற்போலே அடையாளப்படும்படி நடந்து. (பெருகாவித்யாதி) இந்த நடையழகையும் வடிவழகையும்கண்டு மேன்மேலனப்பெருகாநின்றஆநந்தஸாகரத்துக்கு மேலே பின்னையும் உத்தரோத்தரம் ஆநந்தத்தையுண்டாக்கி. (கருகாரித்யாதி) இருண்டு குளிர்ந்திருக்கிற கடல்போன்ற திருநிறத்தையுடையவன். கருமை - இருட்சி. கார் - குளிர்த்தி. அன்றிக்கே, கருமை - பெருமையாய், கார் - இருட்சியாகமாவும். அன்றிக்கே, காரொன்று-மேகமாய், காளமேகம்போலேயும் கடல்போலேயுமிருக்கிற திருநிறத்தை யுடையவ னென்னவுமாம். (காமர்தாதை) அழகாலே நாட்டைவெருட்டித் திரிகிற காமனுக்கு (ங) உத்பாதகனானவன். *காமனைப்பயந்தகாளையிறே. "ப்ரத்யும்நஞ்சாப்யஜநயத்" "வ்ரஷவாஹஜநயத்" என்னும்படி யன்றிக்கே, காமனைப் பயந்தபின்பு கீழ்நோக்கிப் பிராயம்புகுமாய்த்து. காமர்தாதை - இன்ப வெள்ளத்தின்மேல் பின்னையும் பெய்துபெய்து - தளர்நடைநடவானோ என்று அந்வயம். (சு)

மூ.—படர்பங்கயமலர்வாய்நெகிழப்பனிபடுசிறுதுளிபோல், இடங்கொண்டசெவ்வா யூறியூறியிற்றிற்றுவீழநின்று, கடுஞ்சேக்கழுத்தின்மணிக்குரல்போலுடைமணிகணகணெனத், தடந்தாளிணைகொண்டு சார்ங்கபாணிதளர்நடைநடவானோ.

---

(க) ரேகாரூபேண - வரிவடிவாக. (உ) தூலிகை - சித்திரமெழுதும்கருவி. (ங) உத்பாதகன் - உண்டாக்கினதகப்பன்.

ப - ரை.—படர் - பெருத்திருந்துள்ள, பங்கயமலர் - தாமரைப்பூவானது, வாய்நெகிழ - வாய்நெகிழ்ந்தவளவிலே, பனிபடு - குளிர்ச்சியை யுடைத்தான, மதுவானது, சிறுதுளிபோல்-சிறுகத்துளித்துவிழுமாபோலே, இடம்கொண்ட-இடமுடைத்தாய், செம் - சிவந்திருந்துள்ள, வாய் - திருப்பவளத்தில் ஜலமானது, ஊறியூறி - நிரந்தரமாகவூறி, இற்றிற்றுவீழ-இற்றிற்றுவிழும்படி, நின்று-இருந்து, கடும் - கொடிதான, சே - ரிஷபத்தினுடைய, கழுத்தில் - கழுத்தில் கட்டின, மணி - மணியினுடைய, குரல்போல் - சப்தத்தைப்போல், உடை - திருவரையில்கட்டின, மணி - மணியானது, கணகணென - கணகணவென்று சப்திக்க; தடம் - பருத்து, இணை - ஒன்றுக்கொன்றொப்பான, தாள்கொண்டு - திருவடிகளைக்கொண்டு, சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கமென்னும் தநுஸ்ஸை, பாணி - திருக்கையிலேயுடையவன், தளர்நடைநடவானோ—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (படரித்யாதி) பெருத்திருந்துள்ள தாமரைப்பூவானது (க) முகுளிதமா யிருக்கையன்றிக்கே, (உ) வாய்நெகிழ்ந்தவளவிலே, குளிர்த்தியையுடைத்தான (ங)அகவாயில் மதுவானது சிறுகத்துளித்துவிழுமாபோலே. (இடங்கொண்ட வித்யாதி) இடமுடைத்தாய்ச் சிவந்திருந்துள்ள திருப்பவளத்தில் ஜலமானது (ச) நிரந்தரமாக ஊறிமுறிந்து முறிந்து விழும்படிநின்று. (கடுஞ்சேக்கழுத்தித்யாதி) கடிதான சேவின்கழுத்தில்கட்டின மணியினுடைய த்வநிபோலே திருவரையில்கட்டின மணியானது கணகணவென சப்திக்கும்படி. (தடமித்யாதி) (ரு)ஸவிகாஸமாய் பரஸ்பரஸத்ர்சமான திருவடிகளைக் கொண்டு சார்ங்கபாணியானவன் தளர்நடைநடவானோ. (எ)

மூ.—பக்கங்கருஞ்சிறுப்பாறைமீதேயருவிகள்பகர்ந்தனைய
அக்குவடமிழிந்தேறித்தாழவணியல்குல்புடைபெயர
மக்களுலகினிற்பெய்தறியாமணிக்குழவியுருவின்
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன்தளர்நடைநடவானோ.

ப - ரை.—கரு - கறுத்தநிறத்தையுடைத்தாய், சிறு - சிறுத்திருந்துள்ள, பாறை-மலையினுடைய, பக்கமீது-தாழ்வரையிலே, அருவிகள்-அருவிகளானவை, பகர்ந்தனைய - ஒளிவிடுமாபோலே, அக்குவடம் - திருவரையிற்சாத்தின சங்குமணிவடமானது, இழிந்து - தாழ்ந்தும், ஏறி - உயர்ந்தும், தாழ - தொங்கும்படியாகவும், அணி-அழகிய, அல்குல்-நிதம்பமானது, புடை-பக்கங்களிலே, பெயர-அசையும்படியாகவும், உலகினில்-லோகத்தில், மக்கள்-மநுஷ்யர், பெய்தறியா-பெற்றறியாத, மணி - அழகிய, குழவியுருவின்-குழவிவடிவையுடையனாய், தக்க-தகுதியான, மாமணி - நீலமணிபோன்ற, வண்ணன் - வடிவையுடையனான, வாசுதேவன் - ஸ்ரீவஸுதேவர்திருமகன், தளர்நடை நடவானோ—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (பக்கமித்யாதி) கறுத்த நிறத்தையுடைத்தாய்ச் சிறுத்திருந்துள்ள மலையினுடைய (சு) பார்ச்வத்திலே

(க)முகுளிதமாயிருக்கை - குவிந்திருக்கை. (உ)வாய்நெகிழ்தல் - மலர்தல். (ங)அகவாயில் - உள்ளிடத்தில். (ச)நிரந்தரமாக-எப்பொழுதும். (ரு)ஸவிகாஸமாய் - மலர்ந்ததாய். (சு) பார்ச்வத்திலே - பக்கத்திலே.

(க) நிம்நோந்நதமான அருவிகள் ஒளிவிடுமாபோலே. பகர் - ஒளி. (அக்கித்யாதி) திருவரையிற்சாத்தின (உ) வளைமணி வடமானது தாழ்ந்தும் உயர்ந்தும் நாலும்படியாக. (அணியித்யாதி) அழகிய நிதம்ப ப்ரதேசமானது பார்ச்வங்களிலே அசைய. (மக்களித்யாதி) லோகத்தில் மநுஷ்யர் பெற்றறியாத அழகிய குழவிவடிவையுடைய. (தக்கவித்யாதி) தகுதியான நீலரத்நம்போன்ற நிறத்தையுடையனான ஸ்ரீவஸுதேவர் திருமகன் தளர்நடை நடவானோ. (அ)

மூ.—வெண்புழுதிமேற்பெய்துகொண்டளைந்ததோர் வேழத்தின் கருங்கன்றுபோல், தெண்புழுதியாடித்திரிவிக்கிரமன் சிறுபுகர்படவியர்த்து, ஒண்போதலர்கமலச் சிறுகாலுறைத்தொன்றுநோவாமே, தண்போது கொண்ட தவிசின்மீதே தளர்நடைநடவானோ.

ப-ரை.—வெண் - வெளுத்த, புழுதி - புழுதியை, மேல் - மேலே, பெய்துகொண்டு - ஏறிட்டுக்கொண்டு, அளைந்ததோர் - அளைந்ததொரு, கரு - கரிய, வேழக்கன்றுபோல் - ஆனைக்கன்றுபோலே, தெள் - தெள்ளிய, புழுதி - புழுதியை, ஆடி - திருமேனியிலேறிட்டுக்கொண்டு, திரிவிக்கிரமன் - மூன்றடியளந்தவன், சிறுபுகர்பட - திருமேனி சிறிதுபுகர்த்துத்தோன்றும்படி, வியர்த்து—, ஒண் - அழகியதாய், போது-தனக்கடைத்தகாலத்தில், அலர் - அலர்ந்த, கமலம்- தாமரைப்பூப்போலே யிருக்கிற, சிறு - சிறியதான, கால் - திருவடிகள் மிதித்தவிடத்திலே, ஒன்றுறைத்து—, நோவாமே - நோவாதபடி, தண் - குளிர்ந்த, போதுகொண்ட - பூக்களையுடைத்தான, தவிசின்மீது - மெத்தையின்மேலே, தளர்நடைநடவானோ—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வெண்புழுதியித்யாதி) வெளுத்த புழுதியைமேலே ஏறிட்டுக்கொண்டு அளைந்ததொரு கரியவானைக்கன்றுபோலே. (தெண்ணித்யாதி) தெள்ளியபுழுதியைத்திருமேனியிலே யேறிட்டுக்கொண்டு. (திரிவிக்கிரமன்) ஆச்ரிதனான இந்த்ரனபேக்ஷிதம்செய்கைக்காகத்திருவடிகளின் (ங)மார்த்தவம்பாராதே லோகத்தையளந்தவன். (சிறுபுகர்படவியர்த்து) ஏறிட்டுக்கொண்ட புழுதி (ச) ஸ்வேதபிந்துக்களாலே நனைந்தவிடங்களிலே திருமேனி சிறிது (ரு) புகர்த்துத்தோன்றும்படி வியர்த்து. (ஒண்போதித்யாதி) அழகியதாய்த் தனக்கடைத்தகாலத்திலே யலர்ந்த தாமரைப்பூப்போலே யிருக்கிற சிறியதான திருவடிகள்மிதித்த விடத்திலே ஒன்றுறைத்து நோவாதபடியாக. (தண்ணித்யாதி) தவிசு - மெத்தை. குளிர்ந்தபூக்களை புடைத்தான மெத்தைமேலே தளர்நடைநடவானோ. (கூ)

(க) நிம்நோந்நதமான - மேடுபள்ளமான. (உ) வளைமணி - சங்குமணி. (ங) மார்த்தவம் - மென்மைத்தன்மை. (ச) ஸ்வேதபிந்துக்கள் - வேர்வைத்துளிகள். (ரு) புகர்த்துத்தோன்றும்படி - ஒளிபெற்று விளங்கும்படி.

மூ.—திரைநீர்ச்சந்திரமண்டலம்போல்செங்கண்மால்கேசவன்தன்
திருநீர்முகத்துத்துலங்குசுட்டிதிகழ்ந்தெங்கும்புடைபெயரப்
பெருநீர்த்திரையெழுகங்கையிலும்பெரியதோர்தீர்த்தபலம்
தருநீர்ச்சிறுச்சண்ணந்துள்ளஞ்சோரத்தளர்நடைநடவானோ.

ப-ரை.—திரை - திரைக்கிளப்பத்தையுடைத்தான, நீர் - கடல்போலேசலித்துத்தோற்றுகிற, சந்திரமண்டலம்போலே - சந்த்ரமண்டலம்போலே, செம் - சிவந்த, கண் - திருக்கண்களையும், மால் - கறுத்தநிறத்தையுமுடையனாய், கேசவன் - சிறந்தமயிர்முடியையுடையவன், தன் - தன்னுடைய, திரு- அழகியதாய், நீர் - நீர்மையையுடைத்தான, முகத்து - திருமுகமண்டலத்தில், துலங்கு - விளங்குகிற, சுட்டி - சுட்டியானது, எங்கும் - எல்லாவிடங்களிலும், திகழ்ந்து- ப்ரகாசித்து, புடைபெயர - இடம் வலங்கொண்டசைய, பெரு-தீர்த்தங்களில் உயர்ந்ததாய், நீர் - வெள்ளநீரானது, திரையெழு - அலையெறிகிற, கங்கையிலும் - கங்கையிலும்காட்டில், பெரியது - பெரியதாய், ஓர் - ஒப்பற்ற, தீர்த்தபலம் - தீர்த்தபலத்தை, தரும் - தரத்தக்க, நீர் - ஜலத்தையுடைத்தான, சிறுச்சண்ணம் - சிறுச்சண்ணமானது, துள்ளம்சோர-துளிக்கத்துளிக்க, தளர்நடை நடவானோ—.

வ்யா.—பத்தாம்பாட்டு. (திரைநீரித்யாதி) திரைக்கிளப்பத்தையுடைத்தான (க) ஸமுத்ரமத்யே சலித்துத் தோற்றுகிற சந்த்ரமண்டலம்போலே. (செங்கண்மாலித்யாதி) சிவந்த திருக்கண்களையும் அதுக்குப் பரபாகமான கறுத்ததிருநிறத்தையு முடையவனாய் (உ) ப்ரசஸ்தகேசனாயிருக்கிறவன். மால் - கரியவன். (தன்னித்யாதி) தன்னுடைய அழகியதாய்நீர்மையையுடைத்தானதிருமுகமண்டலத்தில் விளங்குகிற சுட்டியானது எங்குமொக்கப்ரகாசித்து இடம்வலங்கொண்டசைய. (பெருநீரித்யாதி) தீர்த்தங்களில் ப்ரவஹித்தமாய்(ங) ப்ரவாஹஜலம்மாறாமல் அலையெறிகிறகங்கையிலுங்காட்டில் பெரியதாய் அத்விதீயமான தீர்த்தபலத்தைத்தரும் ஜலத்தையுடைத்தான சிறுச்சண்ணமானது துளிக்கத் துளிக்கத் தளர்நடை நடவானோ. ()

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆயர்குலத்தினில்வந்துதோன்றியவஞ்சனவண்ணன்றன்னைத்
தாயர்மகிழவொன்னார்தளரத்தளர்நடைநடந்ததனை
வேயர்புகழ்விட்டுசித்தன்சீரால்விரித்தனவுரைக்கவல்லார்
மாயன்மணிவண்ணன்றாள்பணியுமக்களைப்பெறுவர்களே.

ப - ரை.—ஆயர்குலத்தினில் - இடைக்குலத்திலே, வந்துதோன்றிய - வந்தவதரித்த, அஞ்சனம் - மைபோலிருக்கிற, வண்ணன்றன்னை - திருநிறத்தையுடையவனை, தாயர் - பெற்றதாயாரான யசோதையும் தவிரப்பாத்த

(க) ஸமுத்ரமத்யே - நடுக்கடலில். (உ) ப்ரசஸ்தகேசன் - ச்ரேஷ்டமான மயிர்முடியையுடையவன். (ங) ப்ரவாஹஜலம் - வெள்ளநீர்.

ஸ்நேஹிகளும், மகிழ - மகிழவும், ஒன்னார் - கஞ்சன்முதலிய சத்ருக்கள், தளர - மநம் தளரும்படியாகவும், தளர்நடைநடந்ததனை - தளர்நடைநடந்தப்ரகாரத்தை, வேயர் - வேயரானவர்கள்; புகழ் - புகழும்படியான, விட்டுசித்தன் - பெரியாழ்வார், சீரால் - சீர்மையோடே, விரித்தன - விஸ்தரித்துச்சொன்ன விவற்றை, உரைக்கவல்லார் - ஏதேனுமொருபடி சொல்லவல்லவர்கள், மாயன் - ஆச்சரியமான குணங்களையுடையனாய், மணி-நீலரத்நம்போன்ற, வண்ணன் - வடிவையுடையவனானவனுடைய, தாள் - திருவடிகளிலே, பணியும் - கைங்கர்யத்தைப்பண்ணுகிற, மக்களை - நல்லபிள்ளைகளை, பெறுவர்கள் - பெறுவார்கள்.

வ்யா.— (ஆயரித்யாதி) கோபகுலத்திலே வந்து ஆவிர்ப்பவித்த. ராஜகுலத்தில் ஆவிர்ப்பவித்தமை (க) அடியறிவாரறியுமித்தனையிறே. இதிறே எல்லாரும்அறிந்தது. (அஞ்சநவண்ணன்றன்னை) கண்டவர் கண்குளிரும்படி அஞ்சநம்போலேயிருக்கிற திருநிறத்தையுடையவனை. (தாயரித்யாதி) பெற்றதாயாரான யசோதையும் அவளோபாதி ஸ்நேஹிகளானவர்களும் ப்ரீதராம்படியாகவும், தொட்டில் பருவத்திலே பூதநாசகடாதிகள் நிரஸ்தரானமையறிந்த கம்ஸாதிகளான சத்ருக்கள், தலையெடுத்து நடக்க வல்லனானமை கண்டு "என்செய்யப்புகுகிறோம்" என்று (உ)பீதராய் அவஸந்நராம்படியாகவும் தளர்நடை நடந்தப்ரகாரத்தை. (வேயரித்யாதி) *வேயர்தங்கள் குலத்துதித்தவராகையாலே அக்குடியிலுள்ளாரெல்லாரும் தம்முடைய வைபவத்தைச் சொல்லிப்புகழும்படியான பெரியாழ்வார். (சீராலித்யாதி) சீர்மையோடே விஸ்தரித்துச்சொன்ன விவற்றையேதேனுமொருபடிசொல்லவல்லவர்கள். (மாயனித்யாதி) ஆச்சரியமான குணங்களையுடையனாய் நீலரத்நம் போன்றவடிவை யுடையனானவனுடைய திருவடிகளிலே (ங) ஸ்வசேஷத்வாநுரூபமான வ்ருத்தி விசேஷத்தைப்பண்ணும் ஸத்புத்ரர்களைப்பெறுவர். மக்களென்று - அவிசேஷமாகச் சொல்லுகையாலே வித்யையாலும் ஜந்மத்தாலும் வரும் உபயவிதபுத்ரர்களையும்சொல்லுகிறது. (கக)

பெரிய ஜீயர்திருவடிகளேசரணம்.

துடர்செக்கர் மின்னுக்கன்னல் முன்னலொருகால் படர்பக்கம்
வெண்திரை ஆயர்பொன்.

---

*. திருமொழி எ-க்கு, பாட்டு-அஉ.

---

(க)அடியறிவார் - மூலமறிபவர். (உ)பீதராய் - பயந்தவர்களாய். (ங)ஸ்வசேஷத்வாநுரூபமான - தாம் உடைமையாயிருக்குமதுக்குத் தக்கபடி.

அ.— அவன் தளர்நடையாகிற பாலசேஷ்டிதத்தினுடைய ரஸத்தை, பெற்றதாயாரானயசோதைப்பிராட்டி தத்காலத்தில் அவனைக்குறித்து அபேக்ஷித்து அநுபவித்தாற்போலே, பிற்காலமாயிருக்கச்செய்தேயும் *மயர்வறமதிநலமருளப்பெற்றவராகையாலே தத்காலத்தில்போலே ப்ரகாசித்துத், தாமும் அந்தரஸத்தை அநுபவித்தாராய்நின்றார் - கீழ்; இனிமேல் அவனுடைய சைசவாநுகுணமாக ஓடிவந்து தன்னையணைத்துக்கொள்ளும்படியை, யசோதைப்பிராட்டி அநுபவிக்கவாசைப்பட்டு, அதுதன்னை அவனைக்குறித்தபேக்ஷித்து, அவன் வந்து தன்னையணைக்கையாகிற ரஸத்தை அவள் அநுபவித்த ப்ரகாரத்தை, அப்படியே தாமும் அநுபவித்து ஹ்ருஷ்டராகிறார். அச்சோவென்று - அவன்வந்து அணைத்துக் கொள்ளுகையை அபேக்ஷிக்கையும், அந்தசேஷ்டித ரஸத்தை அநுபவிக்கையுமே அவளோடிவர்க்கு ஸாம்யம். *மயர்வறமதி நலம்பெற்று, பாத்வாதிகளையெல்லாம் தெளியக்கண்டவ ராகையாலே அவதாராந்தரசேஷ்டிதங்களையும் இவ்வவதாரந்தன்னில் உத்தரகாலத்திலுள்ள சேஷ்டிதங்களையும் தர்மைக்யத்தாலே வஸ்து விசேஷணமாக்கிக்கொண்டு அவனைப் புகழ்ந்து அந்தபாலசேஷ்டிதரஸத்தை அநுபவித்தவிது இவர்க்கு விசேஷம்.

மூ.—பொன்னியற்கிண்கிணிசுட்டிபுறங்கட்டித்
தன்னியலோசைசலன்சலனென்றிட
மின்னியன்மேகம்விரைந்தெதிர்வந்தாற்போல்
என்னிடைக்கோட்டரா வச்சோவச்சோ யெம்பெருமான்
[வாராவச்சோவச்சோ.

ப-ரை.—பொன் - பொன்னாலே, இயல் - இயலப்பட்ட, கிண்கிணி - கிண்கிணியையும், சுட்டி - சுட்டியையும், புறம் - அவற்றிற்குரிய விடங்களிலே, கட்டி—, தன் - திருவரையிற்கிண்கிணி பாதச்சதங்கை இவற்றினுடைய, இயலோசை - இயல்வானத்வநியானது, சலன்சலனென்றிட - சலன்சலனென்று சப்திக்க, மின்னியல் - மின்னலை யியற்கையாகவுடைய, மேகம் - மேகமானது, விரைந்து - த்வரித்து, எதிர்வந்தாற்போல் - எதிரேவருமாபோலே, என் - என்னுடைய, இடைக்கு - ஒக்கலையில் இருப்புக்குஆசைப்பட்டு, ஓட்டரா-ஓடிவந்து, அச்சோவச்சோ - என்னையணைத்துக் கொள்ளவேணும்; எம்பெருமான் - என்னுடையஸ்வாமியானவனே, வாரா - வந்து, அச்சோவச்சோ—.

வ்யா.—முதற்பாட்டு. (பொன்னியல்கிண்கிணி) பொன்னாலே இயலப்பட்டகிண்கிணி. அழகுக்குடலாக மேலேபொன்தோய்த்துச் சமைத்த கிண்கிணி யென்றபடி. பொன்னை (க) உபாதாநமாகச்சமைத்ததென்னில் த்வநிக்கக்கூடாதிறே. அன்றிக்கே, பொன்வடத்திலே கோவைப்பட்ட கிண்கிணி யென்னவுமாம். "மேலே சலன்சலனென்றிட" என்கையாலே, கிண்கிணியென்றவிது - திரு

(க) உபாதாநமாக - முதற்பொருளாக.

அரையில் சாத்தும் கிண்கிணியையும், சேவடிக் கிண்கிணியையும் சொல்லுகிறது. (சுட்டி) (க) லலாடபூஷணம். இவற்றை, புறங்கட்டியென்றது, புறமென்று-இடமாய், அவற்றுக்கு அடைத்தஸ்தலங்களிலே கட்டியென்றபடி. "கண்கால்புறமகம்" என்கையாலே, புறமென்கிறசப்தம் - இடத்துக்குவாசகமிறே. (தன்னியலித்யாதி) திருவரையில்கிண்கிணியினுடையவும் திருவடிகளில்சதங்கைகளினுடையவும் தனக்கு இயல்வானத்வநி சலன்சலனென்று த்வநிக்க. சலன்சலன் என்கிறவிது - அநுகாரசப்தம். (மின்னியலித்யாதி) மின்னை யியல்வாகவுடைத்தானமேகமானது கால்படைத்துக் கடுநடையிட்டுக் கொண்டு எதிரேவருமாபோலே. கீழ், கிண்கிணி,சுட்டியென்றவை, "செங்கமலக்கழல்"என்கிறபாட்டிற்சொன்ன ஸர்வாபரணங்களுக்கு முபலக்ஷணமாய், திருமேனிக்கு பரபாகமான அவ்வாபரணதேஜஸ்ஸோடேகூட நடந்துவரவேணுமென்னுமபேக்ஷையைப்பற்ற இந்த த்ர்ஷ்டாந்தமருளிச்செய்தது. (என்னிடைக்கித்யாதி) என்னுடைய வொக்கலையிலிருப்புக் காசைப்பட்டு ஓடிவந்து என்னை யணைத்துக் கொள்ளவேணும். இருகாற் சொல்லுகிறது - அதில் ஆதராதிசயம். (எம்பெருமானித்யாதி) முன்சொன்னவிடத்தில் அல்பம்விளம்பிக்கையாலே, என்னுடைய நாதனேவாரா வச்சோவச்சோ வென்கிறது. அச்சோவென்றது - அணைத்துக்கொள்ளென்றபடி. (க)

மூ.—செங்கமலப்பூவிற்றேனுண்ணும்வண்டேபோல்
பங்கிகள்வந்துன்பவளவாய்மொய்ப்பச்
சங்குவில்வாடண்டுசக்கரமேந்திய [சோவச்சோ.
அங்கைகளாலேவந்தச்சோவச்சோ வாரத்தழுவாய்வந்தச்

ப - ரை.—செம்கமலப்பூவில் - செந்தாமரைப்பூவிலே, தேன் - மதுவை, உண்ணும் - பாநம்பண்ணுகிற, வண்டுபோல் - வண்டுகள்போலே, பங்கிகள் - சுருண்டதிருக்குழல்கள், வந்து—, உன் - உன்னுடைய, பவளவாய் - திருப்பவளத்தை, மொய்ப்ப - மொய்க்கும்படியாக, சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யமென்கிறசங்கத்தையும், வில் - ஸ்ரீசார்ங்கமென்னும் வில்லையும், வாள் - ஸ்ரீநந்தகமென்னும் வாளையும்,தண்டு-ஸ்ரீகௌமோதகியென்கிறகதையையும், சக்கரம்-திருவாழியாழ்வானையும், ஏந்திய-தரித்துக்கொண்டிருக்கிற, அம்-அழகிய, கைகளாலே-திருக்கைகளாலே,வந்து அச்சோவச்சோ - வந்தணைத்துக்கொள்ளவேணும்; ஆர - பரிபூர்ணமாக, தழுவாய் - அணைத்துக்கொள்ளவேணும்; வந்தச்சோவச்சோ—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (செங்கமலமித்யாதி) செந்தாமரைப்பூவிலே மதுபாநம்பண்ணுகிற வண்டுகள்போலே. (பங்கிகளித்யாதி) சுருண்டதிருக்குழல்கள்வந்து உன்திருப்பவளத்தை மொய்க்கும்படியாக. (சங்கித்யாதி)ஆச்ரிதவிரோதிநிரஸநத்துக்கும்(உ)அழகுக்கு முடலாய் உனக்குப்பரிகையே (ந) யாத்ரையா யிருக்கும்

(க) லலாடபூஷணம் - திருநெற்றியணி. (உ) அழகுக்குமுடலாய் - அழகுக்கும் ஹேதுவாய். (ந) யாத்திரையாய் - தொழிலாக.

ஸ்ரீபஞ்சாயுதங்களைப் பூவேந்திருந்போலே தரித்துக்கொண்டிருக்கு மவையாய்,அவைதானும் மிகையாம்படி வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியான அழகையுடைய திருக்கைகளாலேவந்து அணைத்துக்கொள்ளவேணும். (ஆரவித்யாதி) (க) அபர்யாப்தமாக வன்றிக்கே, பரிபூர்ணமாக வணைத்துக்கொள்ளவேணும். (உ)

மூ.—பஞ்சவர்தூதனாய்ப்பாரதங்கைசெய்து
நஞ்சுமிழ்நாகங்கிடந்தநற்பொய்கைபுக்கு
அஞ்சப்பணத்தின்மேற்பாய்ந்திட்டருள்செய்த [வச்சோ.
அஞ்சநவண்ணனேயச்சோவச்சோவாயர்பெருமானேயச்சோ

ப-ரை.—பஞ்சவர் - பாண்டவர்களைவர்க்கும், தூதனாய் - தூதாகி, பாரதம் - பாரதயுத்தத்திலே, கைசெய்து - கையுமணியும்வகுத்து யுத்தத்தைப்பண்ணி, நஞ்சு - விஷத்தை, உமிழ் - உமிழாநின்ற, நாகம் - காளியனாகிற ஸர்ப்பமானது, கிடந்த - வர்த்திக்கிற, நல் - கொடிய, பொய்கை - பொய்கையிலே, புக்கு - அத்தை மதியாமற்சென்றுபுக்கு, அஞ்ச - கேட்டயாவரும் அஞ்சும்படியாக, பணத்தின்மேல் - அந்தக்காளியனுடைய படத்தின்மேலே, பாய்ந்து - சென்று குதித்து, இட்டு - ந்ருத்தம்செய்து இளைப்பித்து, அருள்செய்த - அவன்பக்கலிலே அருளைப்பண்ணின, அஞ்சநவண்ணனே - அஞ்சநம்போலே குளிர்ந்துபுகர் பெற்றதிருமேனியை யுடையவனே, அச்சோவச்சோ—; ஆயர்பெருமானே - ஆயர்பெருமானான நீர்மையையுடையவனே, அச்சோவச்சோ—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பஞ்சவரித்யாதி) துர்யோதநாதிகளாலே நெருக்குண்டு, ராஜ்யாதிகளையிழந்து, உன்னையொழிய வேறொருதுணையின்றிக்கேநின்ற பாண்டவர்களைவர்க்கும் (உ)பாரதந்த்ரனாய்க்கொண்டு (ங) தூதக்ர்த்யத்திலே அதிகரித்து, துர்யோதநாதிகள்பக்கலிலேசென்று அவர்களையும் இவர்களையும் சேர்க்கப்பார்த்தவிடத்தில் அவர்கள் இசையாமையாலே, ஆனால் யுத்தத்தைப் பண்ணி ஜயித்தவர்கள் ஒருவர் ராஜ்யத்தை ஆளுங்கோளென்று சொல்லிப்போந்து, பின்பு பாண்டவர்களுக்காய் நின்று பாரதயுத்தத்திலே கையும் அணியும் வகுத்து யுத்தத்தைநடத்தி. (நஞ்சித்யாதி)விஷத்தையுமிழாநின்ற காளியனாகிறஸர்ப்பங்கிடந்த கொடிய பொய்கையிலேஅத்தைமதியாமற்சென்றுபுக்கு. நற்பொய்கையென்றது - (ச) விபரீதலக்ஷணையாய், காளியவிஷதூஷித மாகையாலே-க்ரூரமான பொய்கையென்றபடி. (அஞ்சவித்யாதி) "ஆய்ச்சிமார்களுமாயருமஞ்சிட" என்கிறபடியே இந்த வ்ர்த்தாந்தத்தைக்கேட்ட அநுகூலஜநங்களெல்லாரும் "என்னாகப்புகுகிறதோ!" என்று பயப்படும்படியாக, "ஐந்தலைய பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே" என்கிற

(க)அபர்யாப்தமாக - குறைவாக. (உ)பரதந்த்ரனாய் - வச்யனாய். (ங)தூதக்ர்த்யத்திலேயதிகரித்து - தூதுசெல்லவுடன்பட்டு. (ச) விபரீதலக்ஷணையாய் - மங்களவழக்காய். அதாவது-அமங்களமாயிருப்பதை மங்களமாகச்சொல்லுவது.

படியே அந்தக்காளியனுடைய பணங்களின்மேலேசென்று குதித்து ந்ருத்தம்செய்து அவனை யிளைப்பித்து, "க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீதமே" "கூவாஹாத்ம்ஸெெநாவ்ருத்தி: வூ ஷீக்ஷஸெ" என்று தன்னுடைய ப்ராண ரக்ஷணத்துக்காக அவன்சரணம்புகுந்தபின்பு அவன்பக்கலிலே அருளைப்பண்ணின. அஞ்சபபணத்தின்மேல்பாய்ந்திட்டென்றது - காளியன்முனஞ்சும்படியாக அவன்(க)பணத்தின்மேலே பாய்ந்தென்னவுமாம். (அஞ்சநவண்ணனே) (உ) சரணாகதரக்ஷணம்பண்ணுகையாலே அஞ்சநம்போலே குளிர்ந்துபுகர்பெற்ற திருமேனியையுடையவனே யச்சோவச்சோ. (ஆயர்பெருமானே) அமரர்பெருமானை மேன்மைக்கெதிர்த்தட்டாக ஆயர்பெருமானை நீர்மையையுடையவனே யச்சோவச்சோ. (ங)

மூ.—நாறியசாந்தநமக்கிறைநல்கென்னத்
தேறியவளுந்திருவுடம்பிற்பூச
ஊறியகூனினையுள்ளேயொடுங்கவன் [வச்சோ.
றேறவுருவினையச்சோவச்சோவெம்பெருமான்வாராவச்சோ

ப-ரை.—நமக்கு - அண்ணருடம்புக்கும் நம்முடம்புக்கும் தகுந்த, நாறிய - பரிமளத்தையுடைத்தான, சாந்தம் - சாந்திலே, இறை-கொஞ்சம், நல்கென்ன-தரவேணுமென்றபேக்ஷிக்க, அவளும் - அந்தக்கூனியும், தேறி - நெஞ்சந்தேறி, திருவுடம்பில் - திருமேனியிலே, பூச - உத்தமமான சாந்தையெடுத்துச்சாத்த, ஊறிய - அவள்முதுகில் உறைத்துப்புறப்பட்டுக்கிடக்கிற, கூனினை - கூனை, உள்ளே - அவள்சரீரத்தினுள்ளே, ஒடுங்க - அமுந்தும்படியாக, அன்று - அக்காலத்திலே, ஏறவுருவினாய் - திருக்கைகளாலே நிமிர்த்து உருவினவனே, அச்சோவச்சோ—; எம் - எங்கள்குலத்துக்கு, பெருமான் - ஸ்வாமியானவனே, வாரா-வந்து, அச்சோவச்சோ—.

வ்யா.—நாலாம்பாட்டு. (நாறியவித்யாதி) (ங) ஈரங்கொல்லியைக்கொன்று பரிவட்டங்கள் சாத்தி ஸ்ரீமதுரையிலே போய்ப்புகுந்தவளவிலே; கம்ஸனுக்குச் (ச)சாந்திட்டுப்போரும்கூனி, சாந்துகொண்டுபோகாநிற்கச்செய்தே வழியிலேகண்டு, "அண்ணர்க்கும் நமக்கும் பூசலாம்படி சாந்திடவல்லையோ" என்ன; அபேக்ஷித்தது மறுக்கமாட்டாமையாலும் "வெண்ணெய் நாற்றத்திலே பழகின இவர்கள்சாந்தின் வாசியறிவார்களோ" என்னுமத்தாலும் மட்டமான சாந்துகளைக்காட்ட; "ஸுகந்தமேதத்" "வாஜயோக்யம்" இத்யாதிப்படியே அவற்றுக்கெல்லாம் ஒரு குறைசொல்லிக்கழித்து, "அவயோர்காத்ர ஸத்ருசம் தீயதாமநுலேபநம்" "ஆவயோர்காத்ரஸத்ருஶம் தீயதாம் அநுலேபநம்" என்று - அண்ணருடம்புக்கும் நம்முடம்புக்கும் அநுரூபமான பரிமளத்தையுடைய சாந்திலே (ரு)அல்பம்தர என்று அபேக்ஷிக்க;

(க)பணம் - படம். (உ)சரணாகதரக்ஷணம்பண்ணுகை - தன்னையடைக்கலம் புகுந்தவர்களைக் காப்பாற்றுகை. (ங) ஈரங்கொல்லி - வண்ணான். (ச) சாந்திட்டுப்போரும் - சந்தநம்கொடுத்துக்கொண்டுவருகிற. (ரு) அல்பம் - சொற்பம்.

சாந்தை, தரமிட்டுக்கழித்தபடியையும் அபேக்ஷித்தசீர்மையையும் வடிவழகையும்கண்டு (க) ஹ்ர்ஷ்டையாய் "கம்ஸனுக்குக்கொடு போகிறவித்தை இவர்களுக்குக்கொடுத்தால் அவன் (உ) தண்டிக் கிற் செய்வதென்" என்று அஞ்சாதே நெஞ்சம்தேறி அவளும் உத் தமமான சாந்தையெடுத்துத் திருமேனியிலேசாத்த. (ஊறியவித் யாதி) (௩) அநந்யப்ரயோஜநமாக அவள் கிஞ்சித்கரிக்கையாலுண் டான ப்ரீதியாலே "இவள்முதுகில்கூனேநிமிர்த்துவிடக்கடவோம்" என்று திருவுள்ளம்பற்றி, அவள்முதுகிலே "வேர்விழுந்ததோ" என் னும்படி உறைத்துப்புறப்பட்டுநிற்கிற கூனே அவள்சரீரத்தினுள்ளே அடங்கும்படியாக அக்காலத்திலே நிமிர்த்து, திருக்கைகளாலே யுரு வினவனே அச்சோவச்சோ; எங்கள் குலத்துக்கு ஸ்வாமியானவனே வாராவச்சோவச்சோ. (ச)

மூ.—கழன்மன்னர்சூழக்கதிர்போல்விளங்கி
எழலுற்றுமீண்டேயிருந்துன்னைநோக்கும்
சுழலைப்பெரிதுடைத்துச்சோதனனையன் [வச்சோ.
றழலவிழித்தானேயச்சோவச்சோவாழியங்கையனேயச்சோ

ப-ரை.—கழல் - வீரக்கழலையுடைய, மன்னர் - ராஜாக்கள், சூழ - சுற்றும் ஸேவித்திருக்க, கதிர்போல் - ஸூர்யனைப்போலே, விளங்கி - விளங்கினவனாய், எழலுற்று - எழுந்திருக்க வுத்யோகித்து, மீண்டு - மறுபடியும், இருந்து - கறு வுதலாலே தெரியாதபடியிருந்து, உன்னைநோக்கும் - உன்னை நலிவதாகப்பார்த்த, பெரிது - மிகவும், சுழலையுடை - சூழ்ச்சிகளைப்பண்ணின, துச்சோதனனை - துர்யோதனனை, அன்றழலவிழித்தானே - அத்யுஷ்ணமாகப்பார்த்தவனே, அச் சோவச்சோ—; ஆழி - திருவாழியை, அம் - அழகிய, கையனே-திருக்கையிலே யுடையவனே, அச்சோவச்சோ—.

வ்ய.—அஞ்சாம்பாட்டு. (கழலித்யாதி) பாண்டவர்களுக்காக ஸ்ரீதூதெழுந்தருளுகிற விசேஷத்தைக்கேட்டு, வீரக்கழலிட்டு (ச) ஸமர்த்தராயிருக்கும் ராஜாக்கள் பலரும்சூழ ஸேவித்திருக்க, தான் ஸிம்ஹாஸநஸ்தனாய்க்கொண்டு, (ரு) அபிஷேகாத்யாபரண தேஜஸ் ஸாலும் (சு) ப்ரதாபத்தாலும் (எ) ஆதித்யனைப்போலே விளங்கி, "க்ருஷ்ணன்வந்தால் ஒருவரும் எழுந்திருத்தல், (அ) குசலப்ரச்நம் பண்ணுதல் செய்யாதே கொள்ளுங்கோள்" என்று நியமித்து, பொய் யாஸநமிட்டு வைத்திருக்கிறவளவிலே, எழுந்தருளிச்சென்றுபுகுந்த போது, இருந்த ராஜாக்களெல்லாரும் "[illegible]" "[illegible] [illegible]" என்கிறபடியே எழுந்திருப்பார் (கூ) அநுவர்த்திப்பா

(க) ஹ்ர்ஷ்டையாய் - ஸந்தோஷித்து. (உ) தண்டிக்கில் - சிக்ஷிக்கில். (௩) அநந்ய ப்ரயோஜநமாக - வேறொருபயனில்லாதபடி. (ச) ஸமர்த்தர் - வல்லவர் கள். (ரு) அபிஷேகாத்யாபரணம்-கிரீடம்முதலிய ஆபரணங்கள். (சு) ப்ரதாபம்- பராக்ரமம். (எ) ஆதித்யன் - ஸூர்யன். (அ) குசலப்ரச்நம்பண்ணுதல் - க்ஷேமத் தைக் கேட்குதல். (கூ) அநுவர்த்தித்தல் - பின்செல்லுதல்.

ராக, தானும்துடைநடுங்கி எழுந்திருக்க (க) வுத்யோகித்து, மீண்டும்கறுவுதலாலே தெரியாதபடியிருந்து. (உன்னையித்யாதி) பொய்யாஸநம்முதலாக முன்புபண்ணிவைத்தசூழ்ச்சிகளாலே நலிவதாகக் கோலி உன்னைப்பார்த்த துர்யோதநனை, உன்னகவாயிற்சீற்றமெல்லாம் பார்க்கிறபார்வையிலே தோற்றும்படி (உ) அத்யுஷ்ணமாகப் பார்த்தவனே யச்சோவச்சோ. (ஆழியங்கையனித்யாதி) திருவாழியை அழகிய திருக்கையிலேயுடையவனே அச்சோவச்சோ. (ரு)

மூ.—போரொக்கப்பண்ணியிப்பூமிப்பொறைதீர்ப்பான்
தேரொக்கவூர்ந்தாய்செழுந்தார்விசையற்காய்க்
காரொக்குமேனிக்கரும்பெருங்கண்ணனே [சோவச்சோ.
ஆரத்தழுவாய்வந்தச்சோவச்சோ வாயர்கள்போரேறே யச்

ப-ரை.—இப்பூமி - இந்தப்பூமியினுடைய, பொறை - பளுவை, தீர்ப்பான் - போக்குகைக்காக, பதினொரக்ஷௌஹிணிபரிகரமும் நூறுராஜாக்களும் பீஷ்மத்ரோணாதிகளுமான அத்திரளோடு, ஏழக்ஷௌஹிணிபரிகரத்தையும் பாண்டவர்களையும், ஒக்க-ஸமமாகக்கொண்டு, போர்பண்ணி - யுத்தம்செய்து, செழும் - அழகிய, தார் - தும்பைமாலையையுடைய, விசையற்காய் - அர்ஜுநனுக்காக, தேர் - தேரை, ஒக்க - சத்ருக்களுடைய அநேகம்தேருக்கு ஸமமாக, ஊர்ந்தாய் - நடத்தினவனாய், காரொக்கும் - மேகத்தையொத்த, மேனி - திருமேனியை யுடையனாய், கரு - கறுத்து, பெரு - பரந்திருக்கிற, கண்ணனே - திருக்கண்களையுடையவனே, ஆர - பூர்ணமாக, தழுவாய் - அணைத்தருளவேணும், வந்தச்சோவச்சோ—; ஆயர்கள் - இடையர்களுக்குக் கீழ்ப்படிந்தவனாய், போர் - யுத்தத்தில் எதிர்த்துச் செல்லுகிற, ஏறே - ரிஷபம்போலே செருக்கியிருக்கிறவனே, அச்சோவச்சோ—.

வ்யா.—ஆரும்பாட்டு. (போரித்யாதி) (ங)பதினொரு அக்ஷௌஹிணிபரிகரமும் நூறுராஜாக்களும் பீஷ்மத்ரோணாதிகளுமான அத்திரளோடு ஸமமாக ஏழக்ஷௌஹிணிபரிகரத்தையும், பாண்டவர்களையுங்கொண்டு யுத்தம்பண்ணியென்னுதல். "பாண்டவர்களுக்கு ஓர்கோல்குத்துநிலமும்கொடோம்" என்று (ச) வெட்டிதாக வார்த்தை சொன்னபின்பு துர்யோதநாதிகளை யுத்தத்திலே பொருந்தும்படியாகப் பண்ணியென்னுதல். (இப்பூமிப்பொறை தீர்ப்பான்) இதுதான் செய்தது, (ரு)அதார்மிகராய் ஆஸுரப்ரக்ருதிகளா யிருப்பாரெல்லாரையும் யுத்தபூமியிலேகொன்று, இந்தபூமியினுடைய பாரத்தைப் போக்குகைக்காக வாய்த்து. "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான்" என்கையாலே அவதார ப்ரயோஜநமுமிதுவேயிறே. (தேரித்யாதி) யுத்தத்துக்கும் விஜயத்துக்கும் தகுதியாகச்சூடும் தும்பை, வாகைமுதலான அழகிய மாலை

---

(க)உத்யோகித்தல் - முயலுதல். (உ)அத்யுஷ்ணம் - மிகக்கடுமை. (ங)பதினொரக்ஷௌஹிணிபரிகரம் - பதினொருவெள்ளம் காலாட்கள். (ச)வெட்டிதாக - கடுமையாக. (ரு)அதார்மிகர் - தர்மம்செய்யாதவர்கள்.

யையுடைய அர்ஜுநனுக்கு "ஸர்வம் ஸமாப்நோஷி" "யஸ்யைதே தஸ்ய தத்தநம்" இத்யாதிப்படியேஸர்வமுமாய்நின்று, (க)ப்ரதிபக்ஷபூதரான ...ர்களுடைய ... ரதேருக்கு ஸமமாக அவனுடைய தேரை நடத்தினவனே. "ஆயுதமெடுக்கவொண்ணாது" என்கையாலே ஸாரத்யத்திலே அதிகரித்து, (உ)தேர்க்காலாலே ப்ரதிபக்ஷஸேனையைத்துகளாக்கினுனுய்த்து. "கொல்லாமாக்கோல்" இத்யாதிப்படியே ஸாரத்யம்பண்ணின ஸாமர்த்யத்தாலேயிறே பூபாரநிரஸநம் பண்ணிற்று. (காரொக்குமித்யாதி) (ங)வர்ஷுகவலாஹகம்போலேயிருக்கிற திருமேனியையுடையனாய், *கரியவாகிப் புடைபரந்திருக்கிற திருக்கண்களையுடையனாயிருக்கிறவனே. இத்தால் - பூபாரத்தைப்போக்குகையாலும், ஆச்ரிதனான அர்ஜுநனை (ச)விஜயியாக்குகையாலுமுண்டான ஹர்ஷம் வடிவிலும் கண்ணிலும் தோற்றும்படி நின்ற நிலையைச்சொல்லுகிறது. (ஆரவித்யாதி) என்னுடைய அபிநிவேசம்தீரும்படிவந்து பூர்ணமாக வணைத்தருளவேணும். (ஆயர்களித்யாதி) கோபர்க்குபவ்யனாய், அத்தாலே (ரு)யுத்தோந்முகமான ரிஷபம்போலே செருக்கியிருக்கிறவனே யச்சோவச்சோ. (சு)

மூ.—மிக்கபெரும்புகழ்மாவலிவேள்வியில்
தக்கதிதன்றென்றுதாநம்விலக்கிய
சுக்கிரன்கண்ணைத்துரும்பாற்கிளறிய [வச்சோ.
சக்கரக்கையனே யச்சோவச்சோ சங்கமிடத்தானே யச்சோ

ப - ரை.—மிக்க - மிகவும், பெரும் - பெரிய, புகழ் - புகழையுடையனான, மாவலி - மஹாபலியினுடைய, வேள்வியில் - யாகத்திலே, இந்த்ரனுக்காக வாமந வேஷத்தைக்கொண்டு சென்றபோது, இது - இவனுக்கு தாநம்பண்ணுகிறவிது, தக்கதன்றென்று - தகுதியன்றென்று, தாநம் - தாநத்தை, விலக்கிய - மறுத்த, சுக்கிரன் - அஸுரகுருவான சுக்ரனுடைய, கண்ணை—, துரும்பால் - திருக்கையில் பவித்ரத்தினுடைய அக்ரத்தாலே, கிளறிய - கலக்கின, சக்கரம் - திருவாழியை, கையனே - திருக்கையிலே யுடையவனே, அச்சோவச்சோ—; சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, இடத்தானே - இடத்திருக்கையிலே யுடையவனே, அச்சோவச்சோ—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (மிக்கவித்யாதி) ஔதார்யத்தாலே மிகவும் பெரியபுகழை யுடையனானமஹாபலி (சு) யஜ்ஞவாடத்திலே இந்த்ரனுக்காக வாமநவேஷத்தைக்கொண்டுசென்று "கொள்வன், நான், மாவலி, மூவடி, தா" என்ன; "புலன்கொண்மாணாய்" என்கிறபடியே ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமான விவனுடைய வடிவழகாலும் (எ) அநந்விதமாகச்சொன்ன (அ) முக்தோக்தியாலும்

(க) ப்ரதிபக்ஷபூதர் - எதிரிகள். (உ) தேர்க்கால் - சக்ரம். (ங) வர்ஷுகவலாஹகம் - மழைக்காலத்தியமேகம். (ச) விஜயி - வெற்றிபெற்றவன். (ரு)யுத்தோந்முகமான - போரிலேயெதிர்ந்த. (சு) யஜ்ஞவாடம் - யாகம்செய்யுமிடம். (எ) அநந்விதமாக - பின்முன்னாக. (அ) முக்தோக்தி - மழலைச்சொல்.

மஹாபலி அபஹ்ர்தசித்தனாய், இவனபேக்ஷித்தது கொடுப்பதாக உத்யோகிக்கிற வளவிலே, குருவான சுக்ரன், இவன் வடிவும்,வரத்தும், சொன்னவார்த்தையும் (க) அதிமாநுஷமா யிருக்கையாலே நிரூபித்து, "இவன் ஸர்வேச்வரன், தேவகார்யம் செய்யவந்தான், உன்ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கவந்தான்; ஆனபின்பு, நீ தாநம் பண்ணுகிறவிது தகுதியன்று" என்று தாநத்தை (உ)நிரோதிக்க; அவன் அதுகேளாதே உதகம்பண்ணப் புகுந்தவளவிலே,உதகபாத்ர த்வாரத்திலே சுக்ரன் ப்ரவேசித்து உதகம்விழாதபடி தகைய; அந்த (ங) த்வாரசோதநம் பண்ணுவாரைப்போலே திருக்கையில் திருப்பவித்ரத்தினுடைய அக்ரத்தாலே அவன் கண்ணைக்கலக்கின திருவாழியைக் கையிலே யுடையவனே. "துரும்பாற் கிளறிய சக்கரக்கையன்" என்கையாலே - அந்த (ச) பவித்ராக்ரமாய்ப்புகுந்து அவன் கண்ணைக்கலக்கிற்று, "கருதுமிடம் பொருதும் திருவாழி" என்று தோற்றுகிறது. (சங்கமிடத்தானே) ஒருகாலும் திருவாழிக்கும் ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கும் பிரிவில்லையிறே. ஆகையாலே, அவன் வலங்கையிலே தோன்றும்போது இவன் இடங்கையிலே தோன்றும்படியாயிறே யிருப்பது. (அச்சோவச்சோ) இப்படியிருந்துள்ள கையுமாழ்வார்களுமான சேர்த்தியோடேவந்து அணைத்துக்கொள்ள வேணுமென்கை. (எ)

மூ.—என்னிதுமாயமென்னப்பனறிந்திலன்
முன்னையவண்ணமேகொண்டளவாயென்ன
மன்னுநமுசியைவானிற்சுழற்றிய [வச்சோ.
மின்னுமுடியனேயச்சோவச்சோ வேங்கடவாணனேயச்சோ

ப - ரை.—ஸர்வேச்வரன் திருக்கையிலே உதகம் விழுந்தவாறே திருவடிகளைவளர்த்து அளக்கப்புக, என் - இதுவென்ன, மாயம் - ஆச்சரியச்செய்கை; இது - இதை, என் - என்னுடைய, அப்பன் - தகப்பனானவன், அறிந்திலன் - அறியவில்லை; ஆதலால், முன்னைய - முற்பட்ட, வண்ணமேகொண்டு - வடிவையேகொண்டு, அளவாயென்ன - அளக்கவேணுமென்றுசொல்ல, மன்னும் - தான்பிடித்த நிலைவிடாதே நின்ற, நமுசியை—, வானில் - ஆகாசத்திலே, சுழற்றிய - சுற்றியெறிந்துவிட்ட, மின்னும் - விளங்குகிற, முடியனே - திருவபிஷேகத்தை யுடையவனே, அச்சோவச்சோ—; வேங்கடவாணனே - திருமலைக்குத் தலைவனாய் நிற்கிறவனே, அச்சோவச்சோ—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (என்னித்யாதி) திருக்கையிலே (ரு) உதகம்விழுந்தவநந்தரம் திருவடிகளைவளர்த்து அளக்கப்புக்கவாறே, இத்தைக்கண்ட மஹாபலிபுத்ரனான நமுசி ஓடிவந்து "இதுவென்"

(க)அதிமாநுஷம் - மநுஷ்யனைக்கடந்தது. (உ)நிரோதிக்க - தடுக்க. (ங) த்வாரசோதநம் - துளையைச்செப்பமிடல். (ச)பவித்ராக்ரம் - பவித்திரத்தின் முனை. (ரு)உதகம் - ஜலம்.

என்று வளருகிற திருவடிகளைத் தகைய ; "நீதகைகிறதென், நான் உதகமேற்றது அளந்துகொள்ளவேண்டாவோ" என்ன; "நீசெய்தது க்ர்த்ரிமமன்றோ" என்ன; "நீக்ர்த்ரிமமென்பானென், என்னுடைய ப்ரஹ்மசர்ய வேஷத்தையும் (க) அர்த்தித்வத்தையும்கண்டு உன்னுடையபிதா வுதகதாநம்பண்ணிப்போந்தது பொய்யோ" என்ன; "என்னுடையபிதாவானவன் உன்னுடையவஞ்சநத்திலே யகப்பட்டு உன்னுடைய படியொன்று மறிந்திலன்" என்ன; "நான் செய்தது வஞ்சநமென்று நீ சொல்லுகிறது என்கொண்டு" என்ன ; "வஞ்சநமன்றாகில் நீமுற்பட்டவடிவைக்கொண்டு அளவாய்" என்ன; "முன்னையவண்ணம் கூடுமோ, விகாரியான சரீரமன்றோ" என்ற வளவிலும், தான்பிடித்த நிலைவிடாதே நின்ற நமுசியை ஆகாசத்திலே சுற்றியெறிந்துவிட்ட உஜ்வலமானதிருவபிஷேகத்தையுடையவனே. திருவுலகளந்த வ்ர்த்தாந்தத்தாலே சேதநருடைய (உ) அந்ய சேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களை அறுத்தபின்பாய்த்து சேஷித்வ ப்ரகாசகமான திருவபிஷேக மொளிபெற்றது. (வேங்கடமித்யாதி) "அன்று ஞாலமளந்தபிரான்-சென்று சேர் திருவேங்கடமாமலை" என்னும்படி அந்த வாமநாவதார சேஷ்டிதமடையத் தோன்றத் திருமலைக்கு நிர்வாஹகனாய் நிற்கிறவனே அச்சோவச்சோ. (அ)

மூ.—கண்டகடலுமலையுமுலகேழும்
முண்டத்துக்காற்றாமுகில்வண்ணாவோவென்று
இண்டைச்சடைமுடியீசனிரக்கொள்ள [சோவச்சோ.
மண்டைநிறைத்தானேயச்சோவச்சோமார்வின்மறுவனேயச்

ப - ரை.—இண்டை - நெருங்கின, சடைமுடி-ஜடாபந்தத்தையுடையனாய், ஈசன் - ஈச்வராபிமாநியான ருத்ரன், கண்ட - கண்ணாற்கண்ட, கடலும் - கடல்களையும், மலையும் - மலைகளையும், உலகேழும் - ஸப்தலோகங்களையும் மற்ற வெல்லாவற்றையு மிட்டு நிறைக்கப்பார்த்தவிடத்தில், முண்டத்துக்கு - என் கையில் கபாலத்துக்கு, ஆற்றா - போராததாயிரா நின்றன; ஆதலால், முகில்வண்ணா- வறையாதுகொடுக்கும் மேகம்போன்றவௌதார்யத்தையுடையவனே யென்று, ஓ வென்று - தன்னார்த்திதோற்றக்கூப்பிட்டு, இரக்கொள்ள-இரக்க, திருமார்வில் *செங்குருதியாலே, மண்டை - அந்தக்கபாலத்தை, நிறைத்தானே - நிறைத்தவனே, அச்சோவச்சோ—; மார்வில் - திருமார்விலே, மறுவனே - ஸ்ரீவத்ஸமென்னும் மறுவையுடையவனே, அச்சோவச்சோ—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கண்டவித்யாதி) கண்ணாற்கண்ட கடல்களும் மலைகளும் ஸப்தலோகங்களையும் எல்லாவற்றையுமிட்டு நிறைக்கப்பார்க்கிலும் என்கையில் கபாலத்துக்குப் போராதா யிரா நின்றன. முண்டம் - கபாலம். இத்தால் - கண்ட விடமெங்கும் பிக்ஷைபுகுந்து திரிந்தும் நிறையக் காணாமையாலே இதினுடைய

(க) அர்த்தித்வம் - யாசிக்கை. (உ) அந்யசேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்யங்கள் - ஸர்வேச்வரனை யொழிந்தவர்க்கு உரிமைப்படுகையும், தன்னை ஸ்வதந்த்ரனாக நினைக்கையும்.

(க) துஷ்பூரதையைச் சொன்னபடி. அன்றிக்கே, கண்டகடலும் மலையுமுலகேழும் தட்டித்திரிந்து பிக்ஷைபுகுந்தவிடத்திலும் என் கையில்கபாலத்துக்குப் போருகிறதில்லை யென்னவுமாம். (முகில் வண்ணு) (உ) ஜலஸ்தலவிபாகம்பாராமல் உபகரிக்கும்மேகம் போன்ற ஔதார்யஸ்வபாவத்தை யுடையவனே. இத்தால் - நீ நிறைக்கிலொழிய நிறைக்கவல்லாரில்லை யென்கை. ஓ வென்று - தன்னார்த்தி தோற்றக் கூப்பிட்டு. (இண்டையித்யாதி) நெருங்கப் பின்னின ஜடாபந்தத்தையுடையனாய் ஈச்வராபிமாநியான ருத்ரன். இத்தால்-இவனுடைய ஈச்வரத்வம் தபஃபலமாய் வந்ததென்னுமிடமும் இவனுடைய துர்மாநமும்சொல்லுகிறது. (இரக்கொள்ள) "తత్ర నారాయణశ్శ్రీమాన్ మయా భిక్షాం ప్రయాచితః" "தத்ர நாராயணஶ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசிதஃ" என்கிறபடியே வந்து பிக்ஷையிரக்க. இரக்கொள்ள என்று - ஒருமுழுச்சொல்லாய், இரக்கவென்றபடி. (மண்டை நிறைத்தானே) "విష్ణుప్రసాదాత్సుశ్రోణి కపాలం తత్సహస్రధా । స్ఫుటితం బహుధా యాతం స్వప్నలబ్ధం ధనం యథా" "விஷ்ணுப்ரஸாதாத்ஸுஶ்ரோணி கபாலம் தத்ஸஹஸ்ரதா । ஸ்புடிதம் பஹுதா யாதம் ஸ்வப்நலப்தம் தநம் யதா" என்கிறபடியே (௩)பஹுதாவாக (ச)ஸ்புடிதமாய், போனவழி தெரியாதே போம்படி, "ஊறுசெங்குருதியால் நிறைத்த" என்கிறபடியே திருமார்வில் செங்குருதியாலே அந்தக்கபாலத்தை நிறைத்தவனே. (மார்வில்மறுவனே) ஸர்வேச்வரத்வசிஹ்நமான ஸ்ரீவத்ஸத்தைத்திருமார்விலே யுடையவனே அச்சோவச்சோ.

(ரு)அதவா, "உண்டத்துக்கு" என்றுபாடமானபோது, "கண்ட" இத்யாதிக்கு-கண்டகடலிலும் மலையிலும் உலகேழிலும் (சு)சாபோபஹதனாய்த் திரிந்து பிக்ஷைபுகுந்து "முடைத்தலையூன்" என்கிறபடியே துர்க்கந்தியானகபாலத்தில், அத்தை யுளைந்துளைந்து ஜீவித்துத்திரிந்து, அதுக்குஆற்றாதே, நெருங்கப்பின்னினஜடையையுடைய (எ)ஈச்வராபிமாநியான ருத்ரன் அந்த ஆற்றாமையை (அ)பரிஹரிக்கைக்காக முகில்வண்ணாவோவென்று உன்னுடையவௌதார்யகுணத்தைச்சொல்லி (க) ஆர்த்தியோடேகூப்பிட்டு, "இத்தைப்போக்க வேணும்" என்று அர்த்தித்தவளவிலே, "நம்மையொழியவிவனுக்குக் கதியில்லை" என்று "அரர்க்குப்பிச்சைபெய் கோபாலகோளரி" என்கிறபடியே அவன்கையில் கபாலத்தை நிறைத்தவனேயென்றுமாம்.

---

(க) துஷ்பூரதை - நிறைக்கப்படாமை. (உ) ஜலஸ்தலவிபாகம்பாராமல் - நீரென்றும்நிலமென்றும்பாராமல். (௩) பஹுதாவாக - பலபடியாக. (ச) ஸ்புடிதமாய் - வெடித்ததாய். (ரு)அதவா - அன்றிக்கே. (சு) சாபோபஹதனாய்-சபிக்கப்பட்டவனாய். (எ)ஈச்வராபிமாநி - தன்னையீச்வரனாகநினைக்குமவன். (அ) ஆர்த்தி - துக்கம்.

மூ.—துன்னியபேரிருள்சூழ்ந்துலகைமூட
மன்னியநான்மறைமுற்றுமறைந்திடப்
பின்னிவ்வுலகினிற்பேரிருணீங்கவன் [வச்சோ
றன்னமதானானேயச்சோவச்சோவருமறைதந்தானேயச்சோ

ப - ரை.—ஸ்வரூபாதிகளுக்குக் கண்காட்டியான வேதம் போகையாலே, துன்னிய - நெருங்கின, பேரிருள் - அஜ்ஞாநரூபமான மஹாந்தகாரமானது, சூழ்ந்து - சூழ்ந்துகொண்டு, உலகை - லோகத்தை, மூட - மறைக்கும்படி, மன்னிய - நிலைநின்றதாய், நால் - ரிகாதிபேதத்தாலேநாலுவகைப்பட்டிருந்துள்ள, மறைமுற்றும் - வேதமெல்லாம், மறைந்திட - திரோஹிதமாய்விட, பின் - பின்பு, இவ்வுலகினில் - இந்த லோகத்திலுண்டான, பேரிருள் - மஹாந்தகாரமானது, நீங்க - நீங்கும்படியாக, அன்று - அக்காலத்திலே, வேதத்தை வெளிப்படுத்துகைக்காக, அன்னமதானானே - ஸாராஸார விவேகசக்திகமான ஹம்ஸமாய்வந்து தோற்றினவனே, அச்சோவச்சோ—; அரு - பெறுதற்கரிய, மறை - வேதத்தை, தந்தானே-உபகரித்தவனே, அச்சோவச்சோ—.

வ்யா.—பத்தாம்பாட்டு. (துன்னியவித்யாதி) (க) தேஜஸ்ஸினுடைய அஸந்நிதாநத்தில் (உ) திமிரம் வ்யாப்தமாமாபோலே (ங) கர்மப்ரஹ்ம ஸ்வரூபாதிகளுக்குக் (ச) கண்காட்டியானவேதம் போகையாலே நெருங்கின அஜ்ஞாநரூப (ரு) மஹாந்தகாரமானது வ்யாப்தமாய்க்கொண்டு லோகத்தை யெங்கும் மறைக்கும்படியாக. (மன்னியவித்யாதி) நித்யமாய் (சு) ரிகாதிபேதத்தாலே நாலுவகைப் பட்டிருந்துள்ள வேதமெல்லாம் (எ) திரோஹிதமாய்விட. (பின்னித்யாதி) பின்பு இந்த லோகத்திலுண்டான மஹாந்தகாரமானது நீங்கும்படியாக. (அன்றித்யாதி) அக்காலத்திலே வேதத்தைவெளிப் படுத்துகைக்காக ஸாராஸாரவிவேகசக்திகமான ஹம்ஸமாய்வந்து தோற்றினவனே. (அருமறையித்யாதி) உன்னைப்பெறிலும் பெறுதற் கரிதான வேதத்தை (அ) உபகரித்தவனே அச்சோவச்சோ.

அ.—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார். (கO)

மூ.—நச்சுவார்முன்னிற்குநாராயணன்றன்னை
அச்சோவருகவென்றாய்ச்சியுரைத்தன
மச்சணிமாடப்புதுவைக்கோன்பட்டன்சொல்
நிச்சலும்பாடுவார்நீள்விசும்பாள்வரே.

ப - ரை.—நச்சுவார் - தன்னையாசைப்பட்ட யாவர்க்கும், முன்நிற்கும் - அவர்கள் ஆசைப்பட்ட வடிவைக்கொண்டு முன்னேவந்துநிற்கிற, நாராயணன்

(க) தேஜஸ்ஸினுடைய அஸந்நிதாநத்தில் - தேஜஸ்ஸந்நிதியிராதபோது. (உ) திமிரம்-இருள். (ங) கர்மப்ரஹ்மஸ்வரூபாதிகள் - கர்மஸ்வரூபம் ப்ரஹ்மஸ்வரூபம் முதலியவைகள். (ச) கண்காட்டியான - ப்ரகாசகமான. (ரு) மஹாந்தகாரம் - மிக்கவிருள். (சு) ரிகாதிபேதத்தாலே - இருக்குவேதம் முதலியவேற்றுமையாலே. (எ) திரோஹிதமாய்விட - மறைந்துவிட. (அ) உபகரித்தல் - உபதேசித்தல்.

றன்னை - நாராயணனை, அச்சோவருகவென்று—, ஆய்ச்சி-தாயாரானயசோதைப் பிராட்டி, உரைத்தன - சொன்ன பாசுரங்களை, மச்சணிமாடம் - பலநிலமான மாடங்களையுடைய, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, கோன் - நிர்வாஹகராய், பட்டன் - ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார், சொல் - அருளிச்செய்த வித்தை, பாடுவார் - ப்ரீதியுக்தராய்க் கொண்டு சொல்லுமவர்கள், நிச்சலும் - காலதத்த்வ முள்ளதனையும், நீள்விசும்பு - பரமபதத்தை, ஆள்வர் - ஸ்வாதீநமாக நடத்தப்பெறுவர்.—

வ்யா.—(நச்சுவாரித்யாதி) ஐச்வர்த்தாதிகளா லுண்டான (க) தரதமவிபாகம்பாராதே, தன்னையாசைப்பட்டவர்களெல்லார்க்கும் அவர்களாசைப்பட்டவடிவைக்கொண்டு முன்னேவந்துநிற்கும் நாராயணன்றன்னை. (அச்சோவித்யாதி) அவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்தசைசவாநுகுணமாக அவன் தன்னையணைத்துக்கொள்ளுகையில் அபேக்ஷதோற்ற அச்சோவச்சோ வென்று வருகவென்னும் தாயானயசோதைப்பிராட்டிசொன்னபாசுரங்களை. (மச்சணியித்யாதி) பலநிலமான மாடங்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வா ரருளிச்செய்தவித்தை. (நிச்சலும்பாடுவார்) ப்ரீதியுக்தராய்க் கொண்டு போகரூபமாகச் சொல்லுமவர்கள், (உ) காலதத்த்வமுள்ளதனையும் (ந) பரமாகாசசப்தவாச்யமான பரமபதத்தை ஸ்வாதீநமாக நடத்தப்பெறுவர். அதாவது - அங்குள்ள ஸகலபோகத்துக்கும் தாங்களே (ச) நிர்வாஹகராவ ரென்றபடி. (கக)

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—பொன்செங்கமலம் பஞ்சவர்நாறிய கழல்போர்மிக்க வென்னிதுகண்ட துன்னியநச்சுவட்டு.

---

ஆ திருமொழி அ-க்கு, பாட்டு-கூச.

அ.—கீழ்த்திருமொழியிலே - யசோதைப் பிராட்டி, அவனுடைய சைசவாநுகுணமாக முன்னே யோடிவந்து மேல்விழுந்து அணைத்துக்கொள்ளும் ரஸத்தை யநுபவிக்க வாசைப்பட்ட அச்சோ வென்கிற தன்னுடைய (ரு) உக்தியாலும் அதுக்கு அநுகுணமான தன்னுடைய (கூ) ஹஸ்தமுத்ராயாலும்வந்தணைத்துக்கொள்ளவேணுமென்று அவனை யபேக்ஷித்து அந்தரஸத்தை யநுபவித்தபடியை, தம்முடைய (எ) ப்ரேமாநுகுணமாக, தாமும் அப்படியே அபே

---

(க) தரதமவிபாகம் பாராமல்-வேற்றுமைகளைஆராயாமல் (உ) காலத்தவமுள்ளதனையும் - காலமுள்ளதனையும் (ந) பரமாகாசம் - மேன்மைபொருந்திய ஆகாசம். (ச) நிர்வாஹர் - தலைவர். (ரு) உக்தி - சொல் (கூ) ஹஸ்தமுத்ரா - திருக்கைதாடகம் (எ) ப்ரேமாநுகுணமாக - அன்புக்குத்தக்கபடி.

க்ஷித்து அநுபவித்தாராய்நின்றார் ; அவ்வளவன்றிக்கே, அவன்தன் னுகப்பாலே யோடிவந்து முதுகிலே மேல்விழுந்து அணைத்துக்கொள்ளும் சேஷ்டிதரஸத்தையும் அநுபவிக்கவாசைப்பட்டு, "புறம்புல்குவான்" என்று அதுதன்னை அவனைக்குறித்தபேக்ஷித்து, அவனும் அப்படிசெய்ய அவளநுபவித்த ப்ரகாரத்தை, அவ்வளவுமல்லாத ப்ரேமத்தையுடையதாம், அந்த சேஷ்டிதத்தையநுபவிக்கையிலுண்டான ஆசையாலே அவனுடைய மேன்மையையும் நீர்மையையும் சொல்லிப்புகழ்ந்துகொண்டு, "புறம்புல்குவான், புறம்புல்குவான்" என்றுபலகாலுமபேக்ஷித்து, தத்காலம்போலே தர்சித்து ப்ரீதராயநுபவிக்கிறா ரித்திருமொழியில்.

மூ.—வட்டுநடுவேவளர்கின்றமாணிக்கம்
மொட்டுநுனியின்முளைக்கின்றமுத்தேபோல்
சொட்டுச்சொட்டென்னத்துளிக்கத்துளிக்கவென்
குட்டன்வந்தென்னைப்புறம்புல்குவான் கோவிந்தனென்னைப்
[புறம்புல்குவான்.

ப - ரை.—வட்டுநடுவே - இரண்டு நீலரத்நவட்டின்நடுவே, வளர்கின்ற - வளராநிற்பதொரு, மாணிக்கம் - மாணிக்கத்தாற்செய்த, மொட்டு - மொட்டினுடைய, நுனியில் - முனையிலே, முளைக்கின்ற-அரும்பாநிற்கிற, முத்தேபோல்- முத்துக்கள்போலே, உள்ளினின்றும் புறப்படுகிற ஜலபிந்துக்கள், சொட்டுச்சொட்டென்ன - சொட்டுச்சொட்டென்று, துளிக்கத்துளிக்க-பலகாலும் துளியாநிற்க, என் - என்னுடைய, குட்டன் - பிள்ளையானவன், வந்தென்னைப்புறம் புல்குவான்—; கோவிந்தன் - ஆச்ரிதஸுலபனானவன், என்னைப் புறம்புல்குவான்—.

வ்யா.—முதற்பாட்டு. (வட்டித்யாதி) இரண்டுநீலரத்நவட்டின் நடுவே வளராநிற்பதொரு நீலரத்நத்தா லுண்டான மொட்டினுடைய (க) அக்ரத்திலே அரும்பியாநிற்கிற முத்துக்கள் போலே. நீலரத்ந மொட்டென்றது-நிறத்தையும் ஆகாரத்தையும்பற்ற. (சொட்டித்யாதி) உள்ளினின்றும் புறப்படுகிற (உ) ஜலபிந்துக்களிற்று முறிந்துசொட்டுச்சொட்டென்னப்பலகாலும்துளியாநிற்க. சொட்டுச்சொட்டென்கிற விது (ங) அநுகாரம். (என்குட்டனித்யாதி) என்பிள்ளைவந்து என்னைப்புறம்புல்குவான். (கோவிந்தன்) சுலபனானவன் என்னைப் புறம்புல்குவான். புறமென்று - முதுகு. புல்குதலாவது - தழுவுகை. புல்குவான்என்று-அபேக்ஷிக்கை. அன்றிக்கே, புல்குவான் என்றது - புல்குகிறவனென்றபடி. அப்போது - இத்தலை அபேக்ஷிக்கவன்றிக்கே, அவன்தானேவந்து புல்குகிறபடியைச் சொல்லுகிறதாம். இது "ஆழிப்பிரான்புறம்புல்கிய" என்கிற நிகமத்துக்கு மிகவும்சேரும். (க)

(க) அக்ரம் - முனை. (உ) ஜலபிந்துக்கள் - நீர்த்துளிகள். (ங) அநுகாரம் - ஒலிக்குறிப்பு.

மூ.—கிங்கிணிகட்டிக்கிறிகட்டிக்கையினில்
கங்கணமிட்டுக்கழுத்திற்றொடர்கட்டித்
தங்கணத்தாலேசதிராநடந்துவந்து [புறம்புல்குவான்.
எங்கண்ணனென்னைப் புறம்புல்குவா னெம்பிரானென்னைப்

ப-ரை.—கிங்கிணி - கிண்கிணியை, கட்டி - திருவரையிலே கட்டியும், கிறி - பவளவடத்தை, கட்டி - திருமுன்கையிலே கட்டியும், கையினில் - திருத்தோளிலே, கங்கணம் - வாகுவலயத்தை, இட்டு - சாத்தியும், கழுத்தில் - திருக்கழுத்திலே, தொடர் - சங்கிலியாகிற ஆபரணத்தை, கட்டி - சாத்தியும், தங்கணத்தாலே - திருவாபரணம் தன்னுடைய திரளோடே, சதிரா-அழகியதாக, நடந்துவந்து—, எம் - எனக்கு, கண்ணன் - ஸுலபனானவன், என்னைப்புறம்புல்குவான்—; எம் - எனக்கு, பிரான் - ஸ்வாமியானவன், என்னைப்புறம்புல்குவான்—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கிண்கிணியித்யாதி) திருவரையிலே கிண்கிணியைக்கட்டித் திருமுன்கையிலே கிறியைக்கட்டி. கிறி-சிறுப்பவளவடம். (கங்கணமித்யாதி) திருத்தோள் வளையிட்டுத் திருக்கழுத்திலே சங்கிலியாகிற வாபரணத்தைச்சாத்தி திருவாபரணம்தன்னுடைய திரளோடே. திருவாபரணப்ரகரணமாகையாலே (க) அநுக்தமான திருவாபரணங்களையும் கூட்டி, கணமென்கிறது. அன்றிக்கே, தன்கண்ணாலே என்னைக்கடாக்ஷித்துக்கொண்டென்னுதல். அத்து-சாரியை. (சதிராநடந்துவந்து) நானறியாதபடி நடந்துவந்து. அன்றிக்கே, அழகியதாக நடந்துவந்தென்னுதல். (எங்கண்ணன்)எனக்குசுலபனானவன்,என்னைப்புறம்புல்குவான். (எம்பிரான்) எனக்குஸ்வாமியானவன், என்னைப்புறம்புல்குவான். (உ)

மூ.—கத்தக்கதித்துக்கிடந்தபெருஞ்செல்வம்
ஒத்துப்பொதிந்துகொண்டுண்ணாதுமண்ணாள்வான்
கொத்துத்தலைவன்குடிகெடத்தோன்றிய [குவான்.
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவானாயர்களேறென்புறம்புல்

ப-ரை.—கத்தக்கதித்துக்கிடந்த - மிகவும் கொழுத்துக்கிடந்த, பெருஞ்செல்வம் - மஹைதைச்வர்யத்தை, ஒத்து - பந்துக்களான பாண்டவர்களோடுகூடி, பொதிந்து கொண்டு - பொருந்திக்கொண்டு, உண்ணாது - உண்ணாமல், மண் - பூமியையடங்கலும், ஆள்வான்-தானேயாளும்படியாகயத்நித்திருந்த, கொத்து-துச்சாஸநன் முதலிய வுடன்பிறந்தவர்களும் பந்துக்களுமான திரளுக்கு, தலைவன் - ப்ரதாநனாகிய துர்யோதநனுடைய, குடி - குலமுழுதும், கெட - நசிக்கும்படியாக, தோன்றிய - பார்த்தனுக்கு ஸாரதியாய்க்கொண்டு விளங்குமவனான, அத்தன் - ஸ்வாமியானவன், வந்தென்னைப் புறம்புல்குவான்—; ஆயர்கள்-கோபர்களுக்கெல்லாம், ஏறு - தலைவனானவன், என்புறம்புல்குவான்—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (கத்தவித்யாதி) அஹம் மமதைகளாலே உனக்கெனக்கென்று பிணங்கும்படி கொழுத்துக்கிடந்த

(க) அநுக்தமான-சொல்லப்படாத.

(க)மஹாதைச்வர்யத்தை. கதிப்பு-கொழுப்பு. அன்றிக்கே, "தக்கத்த டித்துப் பக்கப்பருத்து" என்னுமாபோலே, கத்தக்கதித்தென்று - ஒருமுழுச்சொல்லாய், மிகவும் கொழுத்துக்கிடந்த மஹாதைச்வர்யத்தை யென்னவுமாம். (ஒக்கவித்யாதி) பந்துக்களான பாண்டவர்களோடேகூடி நெஞ்சு பொருந்திக்கொண்டு ஜீவியாதே. (மண்ணாள்வான்) பூமிப்பரப்படங்கலும் தானே ஆள்வானாகப் பாரித்திருந்த. (கொத்துத்தலைவன்) துச்சாஸநாதிகளானப்ராதாக்களும் பந்துக்களுமானதிரளுக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு ப்ரதாநனாயிருந்துள்ள துர்யோதனனுடைய. (குடிகெட) (உ) குலமாகநசிக்கும்படி. (தோன்றிய வித்யாதி) "పార్థం రథినమారోప్య నఖ్యా సారథిం సర్వలోక సాక్షికం చకార" "பார்த்தம் ரதிநமாரோப்ய க்ருத்வா ஸாரதிமாத்மந: ஸர்வலோகஸாக்ஷிகஞ்சகார" என்கிறபடியே (ந) பார்த்தனுக்கு (ச) ஸாரதியாய்க்கொண்டு ப்ரகாசகனான ஸ்வாமியானவன், வந்து என்னைப்புறம்புல்குவான்—. (ஆயர்களித்யாதி) கோபர்களுக்கெல்லாம் தலைவனானவன், என்னைப் புறம்புல்குவான்—. (ந)

மூ.—நாந்தகமேந்தியநம்பிசரணென்று
தாழ்ந்ததநஞ்சயற்காகித்தரணியில்
வேந்தர்களுட்கவிசயன்மணித்திண்டேர் [ம்புல்குவான்.
ஊர்ந்தவனென்னைப்புறம்புல்குவானும்பர்கோனென்னைப்புற

ப-ரை.—நாந்தகம்-நந்தக மென்னும் பேரையுடைத்தான திருக்குத்துடைவாளை, ஏந்திய-ஸர்வகாலமும் திருக்கையிலே தரித்துக்கொண்டிருக்கிற, நம்பி-ஆச்ரிதரக்ஷணம் பண்ணுகைக் கீடானகுணங்களால் பூர்ணனானவனே, சரணென்று-நீரக்ஷகனாகவேணுமென்று, தாழ்ந்த - ப்ரபதநம்செய்த, தநஞ்சயற்காகி-அர்ஜுநனுக்காக, தரணியில் - பூமியிலுள்ள, வேந்தர்கள் - ராஜாக்கள், உட்க - நெஞ்சுளுக்கும்படியாக, விசயன்-அர்ஜுநனுடைய, மணி-அழகியதாய், திண்-திண்ணிதான, தேர் - தேரை, ஊர்ந்தவன் - ஸாரதியாய்நின்று நடத்தினவன், என்னைப்புறம்புல்குவான்—; உம்பர் - தேவர்களுக்கு, கோன் - ஸ்வாமியானவன், என்னைப்புறம்புல்குவான்—.

வ்யா.—நாலாம்பாட்டு. (நாந்தகமித்யாதி) நாந்தகமென்னும் பேரையுடைத்தான திருக்குத்துடைவாளை ஆச்ரிதரக்ஷணத்தில் (ரு) விளம்பாஸஹதையாலே ஸர்வகாலமும் பூவேந்தினாற்போலே திருக்கையிலே தரித்துக்கொண்டு ரக்ஷிக்கைக் கீடானகுணங்களால் பூர்ணனாயிருக்கிறநீ ரக்ஷகனாகவேணுமென்று. (தாழ்ந்தவித்யாதி) (சு) ப்ரபதநம்செய்த (எ) அர்ஜுநபக்ஷபாதியாய். (தரணியிலெித்யாதி)

(க) மஹாதைச்வர்யம்-மிக்கசெல்வம். (உ) குலமாக - குலம்முழுதும். (ந) பார்த்தன் - அர்ஜுநன். (ச) ஸாரதி-தேரையோட்டுமவன். (ரு) விளம்பாஸஹதையாலே - தாமஸத்தை ஸஹிக்கக்கூடாமையாலே. (சு) ப்ரபதநம்செய்த - அடைக்கலம்புகுந்த. (எ) அர்ஜுநபக்ஷபாதி-அர்ஜுநனிடத்தில் அன்புள்ளவன்.

பூமியிலுள்ளராஜாக்களெல்லாரும் அர்ஜுநனளவில் பக்ஷபாதத்தையும் தேரைநடத்துகிற ஸாமர்த்யத்தையும்கண்டு "நாம் இனிஜீவிக்கையென்ப தொன்றுண்டே" என்று நெஞ்சுளுக்கும்படியாக. (விசயனித்யாதி) அர்ஜுநனுடைய அழகியதாய்த் திண்ணியதானதேரை ஸாரதியாய்நின்று நடத்தினவன், என்னைப்புறம்புல்குவான்—. (உம்பரித்யாதி) இப்படி (க)துர்வர்க்கத்தை நிரஸிக்கையாலே, பூபாரத்தைப் போக்குகைக்காக அவதரித்தருளவேணுமென்று அபேக்ஷித்த தேவர்களுக்கு நிர்வாஹகனானவன், என்னைப்புறம்புல்குவான்—. ()

மூ.—வெண்கலப்பத்திரங்கட்டிவிளையாடிக்
கண்பலசெய்தகருந்தழைக்காவின்கீழ்ப்
பண்பலபாடிப்பல்லாண்டிசைப்பப்பண்டு
மண்பலகொண்டான்புறம்புல்குவான்வாமநனென்னைப்புறம் [புல்குவான்.

ப-ரை. வெண்கலம் - வெண்கலத்தாலேசெய்த, பத்திரம் - பத்ரத்தை, கட்டி - திருவரையிலே கட்டிக்கொண்டு, விளையாடி—, பலகண் - பலபீலிக்கண்களையிட்டு, செய்த - கட்டின, கரு - பெரிய, தழை - குடையாகிற, காவின்கீழ் - சோலைநிழலின்கீழே, பலபண் - பலபண்களாலே, பாடி—, பல்லாண்டிசைப்ப - மங்களாசாஸநம்பண்ண, பண்டு - மஹாபலியிடத்தில் இரந்து நீரேற்றவக்காலத்திலே,பலமண்-பூமிமுதலான ஸகலலோகங்களையும்,கொண்டான்-திருவடிகளாலே அளந்துகொண்டவன், என்புறம் புல்குவான்—; வாமநன் - குறளனானவன், என்னைப்புறம்புல்குவான்—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வெண்கலமித்யாதி) வெண்கலத்தாலேபண்ணின பத்ரத்தை ஜாத்யுசிதமாகத்திருவரையிலே கட்டிக்கொண்டுவிளையாடி. (கண்பலவித்யாதி) பலபீலிக்கண்களையுமிட்டுக்கட்டின பெரியகுடையாகிற சோலைநிழலின்கீழே. கண்-பீலிக்கண்-பெய்தல் - அதையிட்டுச் சமைத்தலைச்சொல்லுகிறது. கருமை - பெருமை - தழை-குடை. அத்தை, காவென்கிறது-பீலியினுடைய தழைவால்வந்தகுளிர்த்தியைப்பற்ற. அன்றிக்கே, "கண்பலபெய்து" என்றுபாடமானபோது கருந்தழை-கண்பலபெய்து என்று அந்வயித்து-பலபீலிக்கண்களையும் திருமுடியிலே அலங்காரமாகச்சாத்தியென்றுபொருளாகக்கடவது. கருந்தழை-பீலிப்பிச்சம் கண்ணென்றது - அதினுடையகண். தலையிலே பீலித்தழைகட்டுகை (உ) ஜாத்யுசிதவ்ருத்தியிறே. (காவின்கீழ்) இப்படிக்கொத்த அலங்காரத்தோடே சோலைநிழலிலே விளையாடியென்கை.

(பண்ணித்யாதி) "ஸ்ரீஸ்வஸ்த்யஸ்து" "ஸஹஸ்ரஜீவ" என்றும் "திசைவாழியெழ" என்றும் சொல்லுகிறபடியே திக்குக்கள் தோறும் அநுகூலரானவர்கள் (ந) பண்கள்பலவற்றாலும்பாடி மங்க

(க) துர்வர்க்கம் - தீயோர்கூட்டம். (உ) ஜாத்யுசிதவ்ருத்தி - ஜாதிக்குதிய செயல். (ந) பண் - இராகம்.

ளாசாஸநம்பண்ண. இசைப்பவென்று - சொல்லவென்றபடி. (பண்டித்யாதி) மஹாபலிபக்கலிலே அர்த்தியாய்ச்சென்று நீரேற்றவக்காலத்திலே பூமிதுடக்கமான ஸகலலோகங்களையும் திருவடிகளாலே அளந்துகொண்டவன், புறம்புல்குவான்—. (வாமநன்)அளப்பதற்கு முன்னே இரக்கைக்கு வாமநனானவன், என்னைப்புறம்புல்குவான்—.

மூ.—சத்திரமேந்தித்தனியொருமாணியாய்
உத்தரவேதியினின்றவொருவனைக்
கத்திரிவர்காணக்காணிமுற்றுங்கொண்ட
பத்திராகாரன்புறம்புல்குவான் பாரளந்தானென்புறம்புல்கு [வான்.

ப - ரை. சத்திரம் - குடையை, ஏந்தி - கையிலே தரித்துக்கொண்டு, தனி- தனியே, ஒரு-கிர்ஷ்ணஜிநமும் யஜ்ஞோபவீதமும் முஞ்சியுமான விநீதவேஷத்தாலும் வடிவழகாலும் ஒப்பற்ற, மாணியாய் - ப்ரஹ்மசாரியாய்க்கொண்டு, யாகம்செய்யுமிடத்தில்சென்று, உத்தரவேதியில்நின்ற - உத்தவேதியிலே நிற்கிற, ஒருவனை - ஒப்பற்றவுதாரகுணத்தையுடைய மஹாபலியை, கத்திரிவர் - ராஜாக்களெல்லாரும், காண - காணும்படியாக, காணிமுற்றும் - தன்னுடைமையான பூமிமுதலியமூன்றுலோகங்களையும், கொண்ட - நீரேற்று வாங்கிக்கொண்ட, பத்திரம் - விலக்ஷணமான, ஆகாரன் - வடிவையுடையவன், புறம்புல்குவான்—; பார் - முன்பு இரந்தபூமியை, அளந்தான் - திருவடிகளாலே அளந்துகொண்டவன், என் புறம்புல்குவான்—.

வ்யா.—ஆறும்பாட்டு. (சத்திரமித்யாதி) (க) சத்ரத்தையும் கையிலே தரித்துக்கொண்டு அஸஹாயனாய் (உ) க்ர்ஷ்ணஜிநமும் (ங)யஜ்ஞோப வீதமும் (ச)முஞ்சியுமான (ரு)விநீதவேஷத்தாலும் வடிவழகாலும் அத்விதீயமான வாமநனாய்க்கொண்டு யஜ்ஞவாடத்திலேசென்று. (உத்தரமித்யாதி) அத்விதீயமான ஔதார்யகுணத்தையுடையனாய். (சு) உத்தரவேதியிலேநின்ற மஹாபலியை. (கத்திரிவரித்யாதி) ராஜாக்களெல்லாரும்காண தனக்கு (எ) ஸ்வம்மான பூமியை, அவன் தன்னதாகக் கொண்டிருக்கையாலே தான் அர்த்தியாய் உதகமேற்று பரிக்ரஹித்த. (பத்திராகாரன்) பத்ரமான ஆகாரத்தை யுடையவன் - விலக்ஷணமான வடிவையுடையவனென்கை. "புலன்கொண்மாணாய்" என்றாரிறே. (பாரளந்தானித்யாதி) முன்பு இரந்தபூமியைத் திருவடிகளாலே அளந்துகொண்டவன், என்புறம் புல்குவான்—. (சு)

மூ.—பொத்தவுரலைக்கவிழ்த்ததன்மேலேறித்
தித்தித்தபாலுந்தடாவினில்வெண்ணெயும்
மெத்தத்திருவயிறாரவிழுங்கிய
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவானாழியானென்னைப்புறம் [புல்குவான்.

(க) சத்ரம்-குடை. (உ) க்ர்ஷ்ணஜிநம் - மான்றோல். (ங) யஜ்ஞோபவீதம்-பூணூல் (ச) முஞ்சி - ஓர்வகைப்புல்லினால் பின்னப்பட்டு ப்ரஹ்மசாரிகள் அரையில் மூன்றுசுற்றாகத்தரிக்குமது. (ரு) விநீதவேஷம் - தாழ்ந்தவேஷம். (சு) உத்தரவேதி - முதன்மையானஅக்நிகுண்டம். (எ) ஸ்வம்மான - சொந்தமான.

ப - ரை. பொத்தவுரலை - உபயோகமில்லாமல் அடிப்பொத்தலானவுரலை, கவிழ்த்து - உறியின்கீழேகவிழவிட்டு, அதன்மேலேறி-அதின்மேலேயேறிநின்று, தடாவினில் - காய்ச்சித்திரட்டித்தடாவிலேசேர்த்துவைத்த, தித்தித்த - மதுரமான, பாலும்-திரட்டுப்பாலையும், தடாவினில் - கடைந்து தடாவிலே சேர்த்து வைத்த, வெண்ணெயும்-வெண்ணெயையும், திருவயிறு-திருவயிறுனது, மெத்த ஆர - மிகவும் நிறையும்படி, விழுங்கிய - அமுதுசெய்த, அத்தன் - ஸ்வாமியானவன், வந்தென்னைப் புறம்புல்குவான்—; ஆழியான் - கையிலே திருவாழியை யுடையவன், என்னைப்புறம்புல்குவான்—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பொத்தவித்யாதி) பால்வெண்ணெய் முதலான (க)த்ரவ்யங்களைக்களவிலே ஜீவித்துத்திரியப்புக்கவாறே, "அவற்றை இவனுக்கெட்டாதபடி வைக்கக்கடவோம்" என்று உறி மேலே உயரச்(உ)சேமித்துவைக்க; அடிப்பொத்து (ங) உபயோக யோக்யமின்றிக்கேஎல்லாரும்(ச)உபேக்ஷித்துக்கிடந்ததொருவுரலை யுருட்டிக்கொண்டுபோய் உறிக்கீழேகவிழவிட்டு அதின்மேலேயேறி நின்று. நல்லவுரலானால் நடுவேதேடுவாருண்டா யிருக்குமென்றுயித் துப் பொத்தவுரலைத்தேடி யிட்டுக்கொண்டது. (தித்தித்தவித்யாதி) காய்ச்சித்திரட்டித்தடாவிலேவைத்தரஸ்யமானபாலையும், கடைந்து தடாவிலேசேர்த்துவைத்த வெண்ணெயையும். தடாவினிலென் கிறவிது, கீழும்மேலும் அந்வயித்துக்கிடக்கிறது. விழுங்கிய வென்கையாலே - பாலும் திரட்டுப் பாலென்றேகொள்ளவேணும்.

(மெத்தவித்யாதி) இவற்றை அமுதுசெய்கிறவிடத்தில் (ரு) அபிநிவேசாதிசயத்தாலே மிகவும் திருவயிறுநிறையவமுதுசெய்த. (அத்தன்) ஸ்வாமியானவன். கீழ்ச்சொன்ன வ்ர்த்தாந்தவிசேஷத் தைப்பற்ற வுகந்துசொல்லுகிறவார்த்தை. (வந்தென்னைப்புறம்புல்குவான்) (ஆழியான்) க்ர்த்ரிமத்தில் மிகவும் (சு) அவகாஹந முடையவனென்னுதல்; கையிலே திருவாழியை யுடையவனென்னுதல். திருவாழியையுடையவன் என்றபோது, ஸர்வாதிகனுனவன்கிடீர் க்ஷுத்ரரைப்போலே யிப்படிசெய்தவனென்று கருத்து. (என்னைப் புறம்புல்குவான்). (எ)

மூ.—மூத்தவைகாணமுதுமணற்குன்றேறிக்
கூத்துவந்தாடிக்குழலாலிசைபாடி
வாய்த்தமறையோர்வணங்கவிமையவர் [புல்குவான்.
ஏத்தவந்தென்னைப்புறம்புல்குவானெம்பிரானென்னைப்புறம்

(க) த்ரவ்யம் - பொருள். (உ) சேமித்துவைக்க - பத்ரப்படுத்த. (ங) உபயோகயோக்யமின்றிக்கே - உபயோகமில்லாமல். (ச) உபேக்ஷித்து - அசட்டை செய்து. (ரு) அபிநிவேசாதிசயம் - அன்பின்மிகுதி. (சு) அவகாஹநம் - உட்புகுதல்.

ப-ரை.—மூத்தவை - வயஸ்ஸாலும் வடிவாலும் மூத்தகோபஜநங்களான வை, காண - தன்னுடைய சேஷ்டிதரஸத்தைக்காணும்படியாக, முது - எல்லார்க்கும்தெரியும்படியுயர்ந்த, மணற்குன்றேறி - மணற்குன்றிலேயேறி, குழலால் - வேய்ங்குழலாலே, இசைபாடி - இசைகளைப்பாடிக்கொண்டும், உவந்து-ப்ரீதியுக்தனாய், கூத்தாடி - கூத்தாடிக்கொண்டும், வாய்த்த - தன்னைக்கிட்டின, மறையோர் - ரிஷிகளானவர்கள், வணங்க - இந்த ஆச்சரியச்செய்கைக்குத் தோற்றுவணங்கும்படியாகவும், இமையவர் - தேவர்களானவர்கள், ஏத்த - ஸ்துதிக்கும்படியாகவும், வந்து - இப்படிக்கூத்தாடின செவ்வியோடேவந்து, என்னைப்புறம்புல்குவான்—; எம் - எங்களுக்கு, பிரான் - மஹோபகாரகனானவன், என்னைப் புறம்புல்குவான்—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (மூத்தவைகாண) வயஸ்ஸாலும்ஜாத்யுசிதமான வடிவாலும் மூத்தகோபஜநங்களானவை தன்னுடைய சேஷ்டிதரஸத்தைக் காணும்படியாக. அன்றிக்கே,மூத்த என்கிறவித்தை, மூத்துஎன்று கடைக்குறைத்தலாய், அவைஎன்று-ஸபையாய், வ்ருத்தஜநஸபையென்னவுமாம். (முதுமணலித்யாதி) எல்லார்க்கும் தெரியும்படியான உயர்ந்தமணற்குன்றிலேயேறி. முதுமையால் - கிளர்த்தியைச்சொல்லுகிறது. (கூத்தித்யாதி) நிலவறையிற்கிடக்கிற பெண்களும்(க)விட்டுவந்துகாண்கைக்கு(உ)உறுப்பாகையாலே ப்ரீதனாய்க்கொண்டு கூத்தாடி. (குழலாலிசைபாடி) திருப்பவளத்தில் வைத்து ஊதுகிறகுழல்வழியே இசைகளைப்பாடி. குழலின் த்வநிவாய்ப்பிறே மூத்தவையறிவது. தான்நினைத்த பெண்களுடையபேரைச் சொல்லியழைக்கையும்,வெறுத்தவர்களைக் கால்கட்டிப்(ங)பொறை கொள்ளுகையும் முதலான சப்தவிசேஷங்கள் இவனோடுபழகிப்போரும்பெண்களுக்கிறே தெரிவது. குழலாலிசைபாடி-கூத்துவந்தாடி என்றந்வயித்துக்கொள்வது. குழலோசையாலே (ச)அபிமதரைத்திரட்டி, "அவர்கள்காணப்பெற்றோமே"என்று உகந்துகொண்டாய்த்துக் கூத்தாடுவது. மரக்கால்கூத்து, குடக்கூத்துஎன்று விசேஷியாமையாலே, இவற்றில் ஏதேனுமொரு கூத்தாகக்கடவது.

(வாய்த்தவித்யாதி)ஸ்வசேஷ்டிதங்காணவாசைப்பட்டு, தன்னை (ரு)அடியொத்தித்திரியும்விலக்ஷணரானரிஷிகளானவர்கள்இந்தசேஷ்டிதத்திலேதோற்றுவணங்க,தேவர்களானவர்கள் இத்தைக்கண்டு வித்தராய் நின்றுஸ்துதிக்க. அன்றிக்கே, வாய்த்தஎன்கிற வல்லொற்றை-மெல்லொற்றாக்கி, வாய்ந்தவென்றாய், மறையோரென்கிறது-நிலவறையிலே மறைந்துகிடந்தவர்க ளென்றபடியாய், முன்பு நிலவறைகளிலே மறைந்துகிடந்து குழலோசைவழியே கிட்டினபெண்கள்,திருவடிகளின்(சு)மார்த்தவத்தைநினைத்துஇந்தக்கூத்தைஅமை

---

(க) விட்டுவந்து - நிலவறைகளைவிட்டுவந்து. (உ)உறுப்பு - ஹேது. (ங) பொறை-பொறுமை. (ச)அபிமதர் - இஷ்டர். (ரு)அடியொத்தி - பின்சென்று. (சு) மார்த்தவம் - மென்மைத்தன்மை.

க்கைக்காகவணங்க, (க)அநிமிஷராய்க் கூத்தைப் பார்த்துக்கொண்டிருந்த முன்புசொன்ன வ்ர்த்தஜநங்கள் வித்தராய் ஸ்துதிக்கும்படியாக வென்னவுமாம். (வந்தித்யாதி) இப்படிகூத்தாடின செவ்வியோடேவந்தென்னைப் புறம்புல்குவான். (எம்பிரான்) எங்களுக்கு மஹோபகாரகனானவ னென்னைப் புறம்புல்குவான். (அ)

மூ.—கற்பகக்காவுகருதியகாதலிக்
கிப்பொழுதீவனென்றிந்திரன்காவினில்
நிற்பனசெய்துநிலாத்திகழ்முற்றத்துள் [புறம்புல்குவான்.
உய்த்தவனென்னைப்புறம்புல்குவா னும்பர்கோ னென்னைப்

ப-ரை.—இந்திரன்-இந்த்ரனுடைய, காவினில்-சோலையிலேயிருக்கிற, கற்பகக்காவு - கற்பகத்தருவை, கருதிய-பூலோகத்திலே யென்னுடையநிலாமுற்றத்திலேநட்டுத்தரவேணுமென்று ஆசைப்பட்ட, காதலிக்கு - அபிமதையான ஸத்யபாமைப்பிராட்டிக்கு, இப்பொழுது-இப்பொழுதே, ஈவனென்று - தரக்கடவேனென்று, கற்பகத்தைப் பிடுங்கிக்கொண்டுவந்து, நிலாத்திகழ் முற்றத்துள் - ஸ்ரீமத்வாரகையில் நிலாமுற்றத்திலே, நிற்பனசெய்து - நட்டு, உய்த்தவன் - அக்கற்பகத்தருவைத் தழைக்கச்செய்தவன், என்னைப் புறம்புல்குவான் —; உம்பர் - நித்யஸூரிகளுக்கெல்லாம், கோன் - நிர்வாஹகனானவன், என்னைப் புறம்புல்குவான்—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கற்பகமித்யாதி) தேவலோகத்திலே இந்த்ரனுடைய காவிலேநிற்கிற கற்பகக்காவை, (உ) சசிபண்ணின (ங) அவமதியடியாகப், "பிடுங்கிக்கொண்டுபோய் பூலோகத்திலே என்னுடைய நிலாமுற்றத்திலே நட்டுத்தரவேணும்" என்று ஆசைப்பட்டஅபிமதையான ஸத்யபாமைப்பிராட்டிக்கு, நாளையென்னுதல், பின்னையென்னுதல் செய்யாதே, இப்போதே தரக்கடவேனென்று பிடுங்கிக்கொண்டு(ச)போராநிற்கச்செய்தே, முற்பட ஆதரித்தஇந்த்ரன், தன்புழைக்கடையிலே ஒருபூண்டைப் பிடுங்கிக்கொண்டு போரப்பொறாமையாலேகுபிதனாய் வஜ்ரத்தை வாங்கி, தொடர்ந்து யுத்தம் செய்வானாகவந்து, வூந்தகார்யம் (ரு) பலியாமையாலே ஸ்தோத்ரம் செய்ய, "இப்போதுதானேகொடுபோகவேணும், (சு)பின்பு அங்கே வந்து நிற்கக்கடவது" என்று ஸங்கல்பம்செய்துகொண்டு போந்து, "வண்துவரைநட்டான்" என்கிறபடியே ஸ்ரீமத்வாரகையிலே நிலாமுற்றத்திலே நட்டவன். உய்த்தவன்என்கையாலே-இங்கே கொடுவந்துநட்டபின்பு அங்குத்தையிலுங்காட்டில் தழையும்பூவும் கொழுந்துமாய்க்கொண்டு (எ) ஸம்ர்த்தமானபடிசொல்லுகிறது. (என்னையித்யாதி) இப்படி (அ) அபிமதவிஷய பாதந்த்ரனானவன் என்னைப்

(க) அநிமிஷராய் - இமைகொட்டாமல். (உ) சசி - இந்தரன்மனைவி. (ங) அவமதி - அவமானம். (ச) போராநிற்க - வராநிற்க. (ரு) பலியாமையாலே - பயன்படாமையாலே. (சு) பின்பு - கண்ணன் தன்னுடைச்சோதிக் கெழுந்தருளினபின்பு. (எ) ஸம்ர்த்தமானபடி - நிறைந்தபடி. (அ) அபிமதவிஷயபாதந்த்ரன் - இஷ்டர்களுக்கு வச்யனாயிருப்பவன்.

புறம்புல்குவான். (உம்பர்கோன்) பிராட்டியுகப்புச் செய்கையாலே இஸ்ஸ்வபாவத்துக்குத் தோற்று எழுதிக்கொடுக்கும் நித்யஸூரிகளுக்கெல்லாம் நிர்வாஹகனானவன் என்னைப் புறம்புல்குவான். (௯)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆய்ச்சியன்றாழிப்பிரான்புறம்புல்கிய
வேய்த்தடந்தோளிசொல்விட்டுசித்தன்மகிழ்ந்து
ஈத்ததமிழிவையீரைந்தும்வல்லவர்
வாய்த்தநன்மக்களைப்பெற்றுமகிழ்வரே.

ப-ரை.—வேய் - மூங்கிலையொத்த, தடம் - பெருத்திருந்துள்ள, தோளி- தோள்களையுடையளான, ஆய்ச்சி-யசோதைப்பிராட்டி, அன்று-அக்காலத்திலே, ஆழி - கையிலேதிருவாழியையுடைய, பிரான் - ஸர்வேச்வரன், புறம்புல்கிய - புறம்புல்கினப்ரகாரங்களைச்சொன்ன, சொல் - சொல்லை, விட்டுசித்தன் - பெரியாழ்வார், மகிழ்ந்து - ப்ரீதராய், ஈந்த - அருளிச்செய்ததாய், தமிழ் - த்ராவிடரூபமான, இவையீரைந்தும் - இப்பத்துப்பாட்டுக்களையும், வல்லவர் - அர்த்தத்தோடறிந்து அநுஷ்டிக்கவல்லவர்கள், வாய்த்த-ஸர்வேச்வரனைவாழ்த்துகைக்கிடாகப்பொருந்தின, நல் - விலக்ஷணரான, மக்களை-சிஷ்யபுத்ரர்களை, பெற்று-அடைந்து, மகிழ்வர் - அத்தால்வந்த ஆநந்தத்தையுடையராவர்.

வ்யா.—(வேய்த்தடந்தோளி-ஆய்ச்சி) பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேய்போலேயாய்ப் பெருத்திருந்துள்ள தோள்களையுடையளான யசோதைப்பிராட்டி. (அன்றித்யாதி) அக்காலத்திலே கையிலே திருவாழியையுடைய ஸர்வேச்வரன் அவதாரத்தின் மெய்ப்பாட்டால்வந்த சைசவாநுகுணமாகத் தன்னைப் புறம்புல்கின ப்ரகாரங்களைச்சொன்னசொல்லை. (விட்டுசித்தனித்யாதி) பெரியாழ்வார் தத்காலம்போலே அநுபவித்து ப்ரீதராய், அது தன்னை யெல்லாருமறியும்படி உபகரித்ததாய் (௧) ஸர்வாதிகாரமான த்ராவிடமா யிருக்கிற இவை பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (வாய்த்தவித்யாதி) ஸர்வேச்வரனுக்கு மங்களாசாஸநம் பண்ணுகைக்கிடாகவாய்த்தவிலக்ஷணரானசிஷ்யபுத்ரர்களை லபித்து, அத்தால்வந்த ஆநந்தத்தை யுடையராவார். (௧0)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு—வட்டுக்கிங்கிணி கத்தநாந்தகம் வெண்சத்திரம் பொத்தமூத்தகற்பகம் ஆய்ச்சிமெச்சு.

---

ஆ திருமொழி ௯-க்கு, பாட்டு-௧0௪.

---

(௧) ஸர்வாதிகாரமான - எல்லாரும்சற்கரிக்கத்தக்கதான.

## இ ர ண் டா ம் ப த் து.

அ.—கீழிரண்டுதிருமொழியிலும்-"அச்சோ" என்றும், "புறம்புல்குவான்" என்றும் அவன், சைசவாநுகுணமாக ஓடிவந்து மேல்விழுந்து முன்னும்பின்னுமணைக்கும் ரஸத்தை, தானநுபவிக்க வாசைப்பட்டு அவனைக்குறித்து ப்ரார்த்தித்து அவன் அப்படி செய்ய யசோதைப்பிராட்டி அநுபவித்தாற்போலே, இந்த சேஷ்டிதங்களினுடைய ரஸத்தை யநுபவிக்க வாசைப்பட்டு, தாமும் அப்படி ப்ரார்த்தித்து தத்காலம்போலே யநுபவித்து இனியரானார்; சிறுப்பிள்ளைகள் பூச்சிகாட்டி விளையாடுமத்தையும் அவதாரத்தின் மெய்ப்பாடுதோற்ற அவன் (க) ஆசரித்தத்தை தத்காலத்திலுள்ளாரநுபவித்து ஹ்ருஷ்டராய்ப் பேசினாற்போலே, பிற்காலமாயிருக்கச் செய்தேயும் தத்காலம்போலே தாமுமநுபவித்துப்பேசி ஹ்ருஷ்டராகிறாரித்திருமொழியில்.

மூ.—மெச்சூதுசங்கமிடத்தானல்வேயூதி
பொய்ச்சூதிற்றோற்றபொறையுடைமன்னர்க்காய்ப்
பத்தூர்பெறாதன்றுபாரதங்கைசெய்த    [றான்.
அத்தூதனப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகின்

ப-ரை.—மெச்ச - யாவரும் மெச்சும்படியாக, ஊது - ஊதுகிற, சங்கம் - ஸ்ரீபாஞ்ச ஜந்யத்தை, இடத்தான் - இடத்திருக்கையிலே யுடையனாய், நல் - நல்ல, வேய் - வேய்ங்குழலை, ஊதி - ஊதுமவனானகண்ணன், பொய் - பொய்யான, சூதில் - சூதிலே, தோற்ற - தோற்றுப்போன, பொறையுடை - பொறுமையையுடைய, மன்னர்க்கு - பாண்டவர்களுக்கு, ஆய் - பலவிதத்துணையும் தானேயாய்க்கொண்டு, பத்தூர் - பத்தூர்தன்னையுங்கூட, பெறாத - அடையாத, அன்று - அக்காலத்திலே, பாரதம் - பாரதயுத்தத்திலே, கைசெய்த - கையுமணியும்வகுத்துஸாரதியாய்நின்று தேரைநடத்தின, அ - ஆச்ரிதபக்ஷபாதியான அந்த, தூதன் - தூதனானவன், அப்பூச்சிகாட்டுகின்றான்—;. அம்மனே!—.

வ்யா.—முதற்பாட்டு. (மெச்சூதுசங்கமிடத்தான்) "ஆச்ரித பரதந்த்ரனான பாண்டவபக்ஷபாதி" என்று எல்லாரும் மெச்சும்படியாகவூதுகிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யிடத்திருக்கையிலேயுடையவன். மெச்சவென்கிறவிது, மெச்சென்று கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது. மெச்சஊதுகிறவென்றபடி. மெச்சுதல் - கொண்டாட்டம். ஸ்ரீபாஞ்சஜந்யத்வநிதான் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியும் அநுகூலர்வாழும்படியுமாயிறேயிருப்பது. "యస్య నాదేన దైత్యానాం బలహాని రజాయత । దేవానాం వవృధే తేజః ప్రసాదశ్చ వయోగినామ్" "யஸ்ய நாதேந தைத்யாநாம்பலஹாநிரஜாயத|தேவாநாம்வவ்ருதே தேஜ:ப்ரஸாதஸ்ச வயோகிநாம்" என்கிறபடியே. (நல்வேயூதி) இதிறே அவதாரத்துக்

(க) ஆசரித்தல் - அநுஷ்டித்தல்.

கநுகுணமான (க) நிரூபகம். அநுகூலர் வாழும்படி நல்லகுழலை யூதுமவன். குழலுக்கு நன்மையாவது - "நன்னரம்புடைய தும்புருவோடுநாரதனும் தந்தம் வீணைமறந்து" "மரங்களினின்று மது தாரைகள்பாயும்" இத்யாதிப்படியே தன்னுடையத்வநியாலே சேதநாசேதநவிபாகமற (உ) ஈடுபடுத்தவற்றாகை. ஸ்ரீபாஞ்ச ஜந்யமும் திருக்குழலும் இவ்வவதாரத்தில் (ங) கைதொடனாயிறேயிருப்பது. பசுமேய்த்துத் திரியுங்காலத்திலும், "ஆநிரையினம் மீளக்குறித்த சங்கம்" என்றும், "கேயத்தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததும்" என்றும் சொல்லக் கடவதிறே.

(பொய்ச்சூதில்தோற்ற) க்ர்த்ரிமமானசூதிலே (ச) பராஜிதராய் ஸர்வஸ்வத்தையு மிழந்த. செவ்வையில் இவர்களை ஜயிக்கப் போகாதிறே; க்ர்த்ரிமத்தாலேயிறே யவர்களை ஜயித்தது. (பொறையுடைமன்னர்க்காய்) அவர்கள்செய்தது க்ர்த்ரிமமென்று அறிந்திருக்கச்செய்தேயும் (ரு) க்ரோதவிக்ர்தியின்றிக்கே, க்ஷமையை யுடையராயிருந்த ராஜாக்களுக்காய். துர்யோதநாதிகள், இவர்கள் ஸர்வஸ்வத்தையும் (சு) அபஹரிக்குமித்தனையல்லது இவர்கள் க்ஷமையை அபஹரிக்கமாட்டார்களிறே. ஆகையாலே பொறையுடை மன்னரொன்று - பொறையையிவர்களுக்கு நிரூபகமாகச்சொல்லுகிறது. (மன்னர்க்காய்) "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:" "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தந:" என்கிறபடியே அவர்களுக்கு ஸர்வவிதமான துணையும் தானேயாய்க்கொண்டு பாதந்த்ரனாய்.

(பத்தூரித்யாதி) இவர்களுக்காக ஸ்ரீதூதெழுந்தருளி "பாண்டவர்களும் நீங்களும் விரோதித்திராதே உள்ளார்க்குள்ள (எ) அம்சங்களை விபஜித்துக்கொடுத்து, கூடிக்கலந்திருக்கில் (அ) தீர்க்க ஜீவிகளாகலாம்" என்ன; அவர்கள், "நாங்கள் அதுசெய்யோம்" என்ன; ஆனால், "சிறிதுகுறையவாகிலுங் கொடுங்கோள், அவர்களை நான் பொருத்துகிறேன்" என்ன; அதுக்கும் அவர்க ளிசையாமையாலே, ஆனால், "அவர்களைவர்க்கும் தலைக்கிரண்டூராகப்பத்தூர்தன்னைக்கொடுங்கோள்" என்ன; "இவையொன்றும் நாங்கள் செய்வதில்லை, வீரபோக்யை யன்றோ வஸுந்தரா, யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் ஜீவிக்குமித்தனை" என்ன; ஆனால், "அது தன்னைச் செய்யுங்கோள்" என்றுபோந்து, இத்தலையையும் யுத்தத்திலேபொருத்தி, அன்று பாரதயுத்தத்திலே கையுமணியும்வகுத்து, ஸாரதி

(க) நிரூபகம் - முதலிக்கை. (உ) ஈடுபடுத்தல் - வசப்படுத்தல். (ங) கைதொடனாய் - உடன்வந்தியாய். (ச) பராஜிதராய் - தோற்று. (ரு) க்ரோதவிக்ர்தி - சீற்றத்தாலுண்டான வேறுபாடு. (சு) அபஹரித்தல் - திருடுதல். (எ) அம்சம் - பங்கு. (அ) தீர்க்கஜீவிகள் - நெடுங்காலம் வாழுமவர்கள்.

யாய் நின்று நடத்தின ஆச்ரிதபக்ஷபாதியான அந்தத்தூதனானவன். அப்பூச்சி - பயங்கரமாயுள்ளது. அதாவது - லோகத்தில் பாலரானவர்கள் எதிர்த்தலைக்கு பயங்கரமாகக் காட்டுவன சிலசேஷ்டிதங்கள்.

இவ்விடத்தில் விசேஷமுண்டு. அதேதென்னில்; நீர்மையைக்கண்டு "நம்மிலேயொருவன்" என்றிருக்குமவர்கள் பயப்படும்படி ஈச்வரத்வசிஹ்நங்களைக்காட்டுகை. "இவ்விடத்தை, உய்ந்தபிள்ளை பாடாநிற்க, திருவோலக்கத்திலே, அத்தூதனென்று - பெருமாளைக்காட்டுவது, அப்பூச்சியென்று - கண்ணை யிறுத்துக்கொண்டு வருவதாய் (க) அபிநயிக்க; உடையவர்பின்னேஸேவித்தெழுந்தருளியிருந்தவெம்பார் திருக்கைகளைத் திருத்தோள்களோடுசேர்த்துக்காட்ட, அவரும், அப்படியே அபிநயித்துக்கொண்டுவர, 'இதுக்கடியென்' என்று விசாரித்துப் (உ) புரிந்து பார்த்தருளி, ஸ்ரீ கோவிந்தப்பெருமாள் 'இருந்தீரோ' என் றருளிச்செய்தார்" என்று ப்ரஸித்தமிறே. அப்பூச்சியென்கிறது - இரண்டுதிருக்கையிலாழ்வார்களையும், அம்மனேயென்கிறது - கண்டுபயப்பட்டுச்சொல்லுகிறவார்த்தை. (க)

மூ.—மலைபுரைதோண்மன்னவருமாரதருமற்றும்
பலர்குலையநூற்றுவரும்பட்டழியப்பார்த்தன்
சிலைவளையத்திண்டேர்மேன்முன்னின்றசெங்கண்[கின்றான்.
அலைவலைவந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டு

ப-ரை.—மலைபுரை - மலைபோலே திண்ணியதான, தோள் - தோள்களையுடைய, மன்னவரும் - ராஜாக்களும், மாரதரும்-பீஷ்ம த்ரோணாதிகளான மஹாரதரும், மற்றும்பலர் - மற்றும் அநேக அதிரதமஹாரதர்களும், குலைய - நடுங்கும்படியாகவும், நூற்றுவரும்-துர்யோதநாதிகள் நூற்றுவரும், பட்டு—, அழிய - அழிந்துபோம்படியாகவும், பார்த்தன் - அர்ஜுநனுடைய, சிலை - காண்டீவமென்கிறதநுஸ்ஸானது, வளைய - வளையும்படியாகவும், திண் -திண்ணிய, தேர்மேல் - தேரின்மேலே, முன்நின்ற-முன்னே ஸாரதியாய்நின்ற, செங்கண்- புண்டரீகாக்ஷனாய், அலைவலை - அவன்வெற்றியைச்சொல்லிப் புகழுமவன், வந்தப்பூச்சி காட்டுகின்றான்—; மற்றதுமுன்போலே.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (மலையித்யாதி) மலைபோலே ஒருவரால் சலிப்பிக்க வொண்ணாதபடிதிண்ணிதான தோள்களையுடைய ராஜாக்களும். இத்தால் - அதிபல பராக்ரமராகையாலே ஒன்றுக்கு மஞ்சாதவர்களென்கை. (மாரதரும்) பீஷ்ம த்ரோணாதிகளான மஹாரதரும். பீஷ்மர்,த்ரோணாசார்யர்,கர்ணன்என்கிற இவர்களோரொருவரே அதிசூர ராகையாலே ஒ ரெதிரிகளுக்கு மஞ்சாதவர்க

(க) அபிநயித்தல் - கைமெய் காட்டல். (உ) புரிந்துபார்த்தருளி - திரும்பிப்பார்த்தருளி.

ளிறே. (மற்றும்பலர்) தனித்தனியேயெண்ணி முடியாமையாலே மற்றுமிவர்களோடொக்க விகல்பிக்கலாம்படி யிருப்பா ரநேகரென்கிறார். பதினெட்டக்ஷௌஹிணியானால் அதில் எத்தனைசூர ருண்டாயிருக்கும்; ஆகையாலே (க) ஸமுச்சயித்துச்சொல்லுமித்தனையிறே. (குலைய) "க்ர்ஷ்ணன் ஸாரத்யம் பண்ணுவதாகவேற்றான்" என்று கேட்டபோதே "நாம் இனி ஜீவிக்கை யென்றொரு பொருளுண்டோ" என்று (உ) பீதராய் நடுங்கும்படியாக. கீழே, அவரிவர் என்றாற்போலே விசேஷந் தோற்றச்சொல்லி, குலையவென்கையாலே - இந்நடுக்கத்தில் வந்தால் ஒருவர்க்குமொருவிசேஷமுமில்லை யென்கை.

(நூற்றுவரும்பட்டழிய) கீழே - மன்னவருமென்று - ராஜாக்களைச்சொல்லி யிருக்கச்செய்தே, இவர்களைப் பிரித்தெடுக்கையாலே - (ங) கோபலீவர்த்தந்யாயத்தாலே அங்கு இவர்களை யொழிந்தவர்களைச் சொல்லிற்றாகக்கடவது. பாண்டவர்களோடே யுத்தம் பண்ணி ஜயித்து பூமிப்பரப்படங்கலும் தாங்களே யாளுவதாகக் கோலியிருந்த துர்யோதநாதிகள் நூற்றுவரும்பட்டழிய, "[illegible]" "மயைவைதே நிஹதா: பூர்வமேவ" என்கிறபடியே க்ர்ஷ்ணன் அழியச்செய்வதாக (௪) ஸங்கல்பித்தபோதே நின்று நின்று வேரற்றமரம்போலேபட்டு பின்னை யுருவழிந்துபோம்படியாக.

(பார்த்தன்சிலைவளைய) அர்ஜுநன்கையில் காண்டீவம் வளைய. அதாவது - அதிரத மஹாரதரான பீஷ்மாதிகளைமதியாதே, அர்ஜுநன் எதிர்ந்துநின்று வில்வலித்து யுத்தம்பண்ணவல்லனாய்த்து இவனுடைய ஸஹாயபலமென்கை. (திண்டேர்மேல்முன்னின்ற) மஹாரதரான பீஷ்மாதிகள்விட்ட (ரு) ஆக்நேயாஸ்த்ராதிகளாலே (சு) தக்தமாய்வீழாமல் தன்திருவடிகளின் ஸம்பந்தத்தாலே திண்மையை யுடைத்தாய்நின்ற தேரின்மேலே "[illegible]" "[illegible]" என்கிறபடியே அர்ஜுநனால் பொறுக்கவொண்ணாத அஸ்த்ரசஸ்த்ரங்கள் வந்தாலும் தன்மேலே யேற்றுக்கொள்ளும்படி ஸாரதியாய் முன்னின்ற.

(செங்கணாலவலே) தான் ஸாரத்யம்பண்ணின ஸாமர்த்யத்தாலே ப்ரதிபக்ஷத்தைவென்று அந்தவிஜயத்தை அர்ஜுநன் மேலே யேறிட்டு அவன்பக்கல் வாத்ஸல்யந்தோற்ற கடாக்ஷித்து நின்று

(க) ஸமுச்சயித்து - எண்ணும்மையாக்கி. (உ) பீதராய் - பயப்பட்டு. (ங) கோபலீவர்த்தந்யாயம் - பசுகொண்டுவா, எருதுகொண்டுவா என்றால் அவ்விரண்டில் அங்கில்லாததைக்கொண்டுவாவென்று பொருள்படும். (௪) ஸங்கல்பம்-நிச்சயம். (ரு) ஆக்நேயாஸ்த்ரம் - அக்நிதேவனால் கொடுக்கப்பட்ட அஸ்த்ரம். (சு) தக்தமாய் - எரிந்து.

அவன் விஜயந் தோற்றப் பலவற்றையும் சொல்லிப் புகழுமவன். “అవాక్యనాదరః” “அவாக்யநாதர:” என்றிருக்கக்கடவவன் தடையழிந்து கலகலெனவேத்தாநிற்குமாய்த்து. “புகழ்ந்தாய்சினப்போர்ச்சுவேதனைச் சேநாபதியாய் மநப்போர் முடிக்கும்வகை” என்கிறபடியே. அதவா, பார்த்தன்சிலைவளையத்திண்டேர்மேல் முன்னின்ற செங்கணலைவலை யென்கையாலே - *అస్థానస్నేహకారుణ్యధర్మాధర్మధియాకులమ్. * (க) அஸ்தாநஸ்நேஹகாருண்யதர்மாதர்மதியா குலனாய், “న కాంక్షే విజయం కృష్ణ” “நகாங்க்ஷே விஜயங்க்ருஷ்ண” இத்யாதிப்படியே விஜயமும்வேண்டா, ராஜ்யாதிகளும் வேண்டாவென்று (உ) க்ஷேபித்து, “రథోపస్థ ఉపావిశత్” “విసృజ్య సశరం చాపం శోకసంవిగ్నమానసః” “ரதோபஸ்த உபாவிசத்” “விஸ்ருஜ்யஸசரஞ்சாபம் சோகஸம்விக்நமாநஸ:” என்கிறபடியே சோகத்தாலே வெருவின மநஸ்ஸையுடையனாய் வில்லையும் பொகட்டு (ங) யுத்தாந்நிவர்த்தனாய்த் தேர்த்தட்டிலேயிருந்த அர்ஜுநன்தெளிந்து, “కరిష్యే వచనం తవ” “கரிஷ்யே வசநந்தவ” என்றெழுந்திருந்து வில்லெடுத்து யுத்தம்பண்ணும்படியாக, (ச) ப்ரக்ர்த்யாத்மவிவேகந்துடங்கி பரமரஹஸ்யமான ப்ரபத்தி பர்யந்தமாக வுபதேசித்த (ரு) அலைவலைத்தனத்தைச்சொல்லவுமாம்.

அலைவலையென்பது - அர்த்தகௌரவமும் அதிகார கௌரவமும் பாராதே தன்னெஞ்சில் (சு) ப்ரதிபந்நமானவற்றைச் சொல்லுமவனிறே. அது இங்குமுண்டாகையாலே இவனையும் அலைவலையென்னலாமிறே. இப்படி தான் அருளிச்செய்தது (எ) சரணாகதையானவள் குழல்முடிப்பிக்கைக்காகவிறே. (வந்தித்யாதி) இப்படி பலர்குலையவும் பட்டழியவும் சிலைவளையவும் தேர் முன்னின்று ஸாரத்யம்பண்ணின, ஆச்ரிதவிரோதிநிரஸநம் ஆச்ரிதபாரதந்த்ர்யம் முதலான ஸ்வபாவங்களையுடையவன்வந்து அப்பூச்சிகாட்டுகின்றான். (அம்மனே) பூர்வவத். (உ)

மூ.—காயுநீர்புக்குக்கடம்பேறிக்காளியன்
தீயபணத்திற்சிலம்பார்க்கப்பாய்ந்தாடி
வேயின்குழலூதிவித்தகனாய்நின்ற [றான்.
ஆயன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகின்

ப-ரை.—காயும் - காளியன்விஷாக்நியாலே கொதிக்கிற, நீர் - மடுவின் ஜலத்திலே, புக்கு - மதியாமற்சென்றுபுக்கு, கடம்பேறி - அருகேநிற்கிற கடப்

(க) அஸ்தாநம் - அகாலம். (உ) க்ஷேபித்து - வெறுத்து. (ங) யுத்தாந்நிவர்த்தனாய் - போரில்நின்றும் மீண்டவனாய். (ச) ப்ரக்ர்த்யாத்மவிவேகம் - சரீரம்வேறு, ஆத்மாவேறென்று பகுத்தறிகை. (ரு) அலைவலைத்தனம் - வரம்புகடந்துபேசுகை. (சு) ப்ரதிபந்நமானவற்றை - தோற்றினவைகளை. (எ) சரணாகதையானவள் - அடைக்கலம்புகுந்த த்ரௌபதியுடைய.

பமரத்தின்மேலேறி, காளியன் - காளியனுடைய, தீய-க்ரூரமான, பணத்தில்-படத்திலே, சிலம்பு - திருவடிகளிற்சாத்தியிருக்கிற சிலம்புகள், ஆர்க்க - த்வநிக்கும்படி, பாய்ந்து - சென்றுகுதித்து, ஆடி - ந்ர்த்தம்செய்து, வேயின்குழல் - திருக்கையிலிருக்கிற வேய்ங்குழலை, ஊதி - வாயில்மடுத்தூதி, வித்தகனாய்நின்ற-விஸ்மயநீயனாயிருக்கிற, ஆயன் - ஆயனானவன், வந்தப்பூச்சிகாட்டுகின்றான்—; மற்றதுமுன்போலே.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (காயுநீரித்யாதி) (காயுநீர் புக்கு) அருகணைந்த வ்ர்க்ஷங்கள் பக்ஷிகளுட்பட பட்டுவிழும்படி காளியன் விஷாக்நியாலே (௧) தப்தமாய்நின்று கொதிக்கிறமடுவின் ஜலத்திலே மதியாமல் சென்றுபுக்கு. “கடுவிடமுடையகாளியன்தடத்தைக்கலக்கி” என்கிறபடியே அந்த தடாகத்தைக்கலக்கி, காளியன் க்ருத்தனாய்த் தலையெடுத்தெழுந்திருக்கும்படிபண்ணி. (கடம்பேறி) அந்த விஷாக்நியாலே அருகே பட்டுநிற்கிறதொருகடம்பை, தன் கடாக்ஷத்தாலே *பச்சிலைப்பூங்கடம்பாக்கி அதின்மேலேயேறி. (காளியனித்யாதி) காளியனுடைய (௨) விஷாச்ரயமாகையாலே க்ரூரமான பணத்திலே திருவடிகளில் திருச்சிலம்பு த்வநிக்கும்படி சென்றுகுதித்து, அவன்பணங்கள் நெரிந்து வாய்களாலே ரக்தம் சொரியும்படி யிளைத்து சரணம்புகுருமளவும் அதின்மேலேநின்று ந்ர்த்தம்செய்து. (வேயித்யாதி) இந்த வ்ர்த்தாந்தத்தைக்கண்டும் கேட்டும் “என்னாகப்புகுகிறதோ” என்றுதறைப்பட்டுக்கிடந்து ஈடுபடுகிற இவ்வநுகூலஜநங்கள் தலையெடுத்து ப்ரீதராய்வாழும்படி திருக்கையில் வேயின்குழலையூதி, இவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தாலே (௩) விஸ்மயநீயனாய்நின்ற. (ஆயன்) எல்லாம்செய்தாலும் ஜாத்யுசிதமான இடைத்தனத்தில்குலையாதவன். (வந்தப்பூச்சிகாட்டுகின்றான்). (௩)

மூ.—இருட்டிற்பிறந்துபோயேழைவல்லாயர்
மருட்டைத்தவிர்ப்பித்துவன்கஞ்சன்மாளப்
புரட்டியந்நாளெங்கள்பூம்பட்டுக்கொண்ட [கின்றான்.
அரட்டன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டு

ப-ரை.—இருட்டில் - அருகுநின்றவர்கள்தெரியாதஇருட்டிலே, பிறந்து - வந்தவதரித்து, போய் - திருவாய்ப்பாடியிலேபோய், ஏழை - தன்பக்கல்சபலராய், வல் - க்ர்ஷ்ணனைப்பற்றியிருக்கும் பலத்தையுடையரான, ஆயர் - கோபரானவர்கள், மருட்டை - செருக்காலே மதிமயங்கிச்சொல்லுகிற சொற்களை, தவிர்ப்பித்து - தன்னுடையவுக்திகளாலே தவிரும்படிபண்ணி, வன்கஞ்சன் - வன்னெஞ்சனானகம்ஸனானவன், மாள - முடியும்படியாக, புரட்டி - மயிரைத்தூக்கிப்பிடித்து நிலத்திலேயிட்டுப்புரட்டி, அந்நாள் - பனிநீராட்டின வந்நாளிலே, எங்கள்-எங்களுடைய, பூ - அழகிய, பட்டு - பட்டுக்களை, கொண்ட - வாரிக்கொண்டுபோன, அரட்டன்-தீம்பனானவன், வந்தப்பூச்சிகாட்டுகின்றான்—; மற்றதுமுன்போலே.

(௧) தப்தமாய் - காய்ந்து. (௨) விஷாச்ரயம் - விஷத்துக்கிடமானது. (௩) விஸ்மயநீயன் - எல்லாராலும் திகைக்கப்படுமவன்.

வ்யா.—நாலாம்பாட்டு. (இருட்டில்பிறந்து) "𑌮𑌧𑍍𑌯𑌰𑌾𑌤𑍍𑌰𑍇𑌷𑍁𑌸𑌂𑌧𑌾𑌰𑍇 𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑍇𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑍇" "மத்யராத்ரெ த்ருவிஶாயாமெ ஜாயமாநெ ஜநார்த்தநெ" என்கிறபடியே கம்ஸன்முதலான (க) துஷ்ப்ரக்ர்திகள் கண்படாதபடி அருகுநின்றாரைத் தெரியாதவிருளிலேவந்தவதரித்து. "எப்போதுபிறப்பது" என்றுஹிம்ஸிக்கைக்காக வுருவினவாளை உறையிலிடாம லிருக்கிறவன், கண்ணுல்கண்டால் விடானிறே. "𑌜𑌾𑌨𑌾𑌤𑍁 𑌮𑌾𑌵𑌤𑌾𑌰𑌸𑍍𑌤𑍇𑌕𑌂𑌸𑍋𑌽𑌯𑌂𑌦𑌿𑌤𑌿𑌜𑌨𑍍𑌮𑌨𑌃" "ஜாநாது மாவதாரந்தெ கம்ஸோயம் திதிஜந்மந:" என்றாளிறே தேவகிப்பிராட்டி. (போய்) "வீங்கிருள்வாய் அன்றன்னை புலம்பப்போய்" என்கிறபடியே அந்தச் செறிந்தவிருளிலேபெற்றதாயானவள் (உ) விரஹகாதரதையாலே காலைக்கட்டிக்கொண்டுகிடந்துகதறுநிற்கத் திருவாய்ப் பாடியிலேபோய்.

(ஏழைவல்லாயர்மருட்டைத்தவிர்ப்பித்து) தன்பக்கல் சபலராய், "𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌃𑌕𑍃𑌷𑍍𑌣𑌬𑌲𑌾𑌃" "க்ருஷ்ணாஶ்ரயா:க்ருஷ்ணபலா:" என்கிறபடியேதன்னைப்பற்றி யிருக்கும்பலத்தையுடையரான கோபரானவர்கள், செருக்காலே தாங்கள் கம்ஸனைஅழிக்கவல்லாரைப்போலே சொல்லும் (ந)ப்ராமகோக்திகளை, "நீங்களெல்லாரும் வேணுமோ, நானே செய்கிறேன்" என்றாற்போலேசொல்லும் தன்னுடையவுக்திவிசேஷங்களாலே தவிரும்படிபண்ணி. (வன்கஞ்சன்மாளப்புரட்டி) நான் செய்கிறேனென்றது (ச) உக்திமாத்ரமாய்ப் போகாமே கம்ஸ (ரு) ப்ரேஷிதனாய், தன்னையழைத்துக்கொண்டுபோகவந்த அக்ரூரனுடனே ஸ்ரீமதுரையிலேயெழுந்தருளி, உத்ஸவத்துக்கென்றழைத்துவிட்டு, வழியிலே நலியும்படியாக தன்குவலயாபீடத்தையும் மல்லரையும் நிறுத்தி, "𑌤𑍁𑌙𑍍𑌗𑌮𑌞𑍍𑌚𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃" "துங்கமஞ்சவ்யவஸ்தித:" என்கிறபடியே, தான் உயர்ந்தநிலத்திலேயேறிப் பார்த்துக்கொண்டிருந்தவன்னெஞ்சனான கம்ஸன்முடியும்படியாக, அவன்வழியில்நிறுத்தின விரோதிகளை நிரஸித்துக்கொண்டுசென்று அவனிருக்கிற மஞ்சஸ்தலத்திலே யெழப்பாய்ந்து, "𑌕𑍇𑌶𑍇𑌷𑍍𑌵𑌾𑌕𑍃𑌷𑍍𑌯𑌵𑌿𑌗𑌲𑌤𑍍𑌕𑌿𑌰𑍀𑌟𑌮𑌵𑌨𑍀𑌤𑌲𑍇। 𑌸𑌕𑌂𑌸𑌂𑌪𑌾𑌤𑌯𑌾𑌮𑌾𑌸 𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌰𑌿𑌪𑌪𑌾𑌤𑌚" "கேஶேஷ்வாக்ருஷ்யவிகலத் க்ரீடமவநீதலே। ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச" என்கிறபடியே அபிஷேகத்தைத் தட்டிப்பொகட்டு, மயிரைப்பிடித்திழுத்து, கீழேபூமியிலேவிழத்தள்ளி, அவன்மேலேகுதித்து, "கஞ்சன்குஞ்சிபிடித்து" என்கிறபடியே மயிரைத்தூக்கிப்பிடித்து நிலத்திலேயிட்டுப்புரட்டி. (அந்நாளித்யாதி) பனிநீராட்டினவந்நாளிலே எங்களுடைய அழகிய பட்டுக்களைவாரிக்கொண்ட தீம்பனானவன். அரட்டு-தீம்பு; மிடுக்காகவுமாம். வந்தப் பூச்சிகாட்டுகின்றான். (ச)

(க)துஷ்ப்ரக்ர்திகள் - தீயசெயலுடையோர். (உ)விரஹகாதரதையாலே-கண்ணனைவிட்டிருக்கிற பயத்தாலே. (ந) ப்ராமகோக்தி - மதிமயங்கப்பண்ணும்சொல். (ச)உக்திமாத்ரமாய் - சொல்லோடே. (ரு)ப்ரேஷிதன்- தூண்டப்பட்டவன்.

மூ.—சேப்பூண்டசாடுசிதறித்திருடிநெய்க்
காப்பூண்டுநந்தன்மனைவிகடைதாம்பால்
சோப்பூண்டுதுள்ளித்துடிக்கத்துடிக்கவன் [கின்றான்.
றாப்பூண்டானப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டு

ப-ரை.—சேப்பூண்ட - எருதுகள்கட்டியிழுக்கப்பட்ட, சாடு - அதிபாரமானசகடமானது நலிவதாகமேலிட்டுவர, சிதறி - அத்தை யுருக்குலையும்படியுதைத்து, நெய்க்கு - நெய்க்காசைப்பட்டு, திருடி - களவுகண்டு, ஆப்புண்டு - த்ரவ்யமுடையவர்கள் கையிலேகட்டுண்டு, நந்தன் - நந்தகோபருடைய, மனைவி - மனைவியானயசோதைப்பிராட்டியானவள், கடைதாம்பால் - கடைகயிற்றாலேயடிக்கையாலே, துள்ளித்துடிக்கத்துடிக்க—, சோப்புண்டு - அடியுண்டு, அன்று - அப்போது, ஆப்புண்டான் - கட்டுண்டிருந்தவன், அப்பூச்சிகாட்டுகின்றான் - இன்று அப்பூச்சிகாட்டுகிறான்; மற்றதுமுன்போலே.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (சேப்பூண்டித்யாதி) "வன்பாரச்சகடம்" என்கிறபடியே எருதுகள் பூண்டுவலிக்கப்பட்ட(க) அதிபாரமானசகடம், அஸுராவேசத்தாலேநலிவதாக வூர்ந்துமேலிட்டுவர, முலைவரவு தாழ்த்துச் சீறிநிமிர்த்த திருவடிகளாலே அத்தை உருக்குலையும்படியுதைத்து. (திருடியித்யாதி)நெய்க்காசைப்பட்டுக் களவுகண்டு, (உ) த்ரவ்யமுடையவர்கள்கையிலேயகப்பட்டுக்கட்டுண்டு. (நந்தன்மனைவியித்யாதி) "என்பிள்ளையைக்(ங)களவேற்றாதே,உண்டாகில்(ச)கொண்டியோடே கண்டுபிடித்துக் கட்டிக்கொண்டுவாருங்கோள்" என்று முன்பேசொல்லிவைக்கையாலே, தாயாரான தன்முன்னேயவர்கள் கட்டோடே கொண்டுவர,நந்தன்மனைவி, "பிள்ளைபெற்று வளர்த்தபடி யழகியதாயிருந்தது" என்றுதன்னைத்தானேமோதிக்கொண்டு, அவர்கள்முன்னே தன்னழற்றியெல்லாந் தோற்றும்படி, கடைகயிற்றாலே யடிக்கையாலே துள்ளித்துடிக்கத்துடிக்க அடியுண்டு. (அன்றித்யாதி) அடித்தவளவுமன்றிக்கே, ஓரிடத்திற் போகாதபடி அவள்பிடித்துக்கட்டி, அப்போது கட்டுண்டிருந்தவன் இன்று அப்பூச்சிகாட்டுகின்றான். சோப்பூண்டு, ஆப்பூண்டு என்கிறவிவை நீட்டிச் சொல்லிக்கிடக்கிறது. (ரு)

மூ.—செப்பிளமென்முலைத்தேவகிநங்கைக்குச்
சொப்படத்தோன்றித்தொறுப்பாடியோம்வைத்த
துப்பமும்பாலுந்தயிரும்விழுங்கிய [ன்றான்.
அப்பன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகி

ப-ரை. செப்பு - செப்புப்போலே யிருக்கிற ஸந்நிவேசத்தை யுடைத்தாய், இள-இளையதாய், மெல்-மெல்லியதான, முலை - முலைகளையுடையளாய், நங்கை- பூர்ணையான, தேவகிக்கு - தேவகிப்பிராட்டிக்கு, சொப்பட-நன்றாக, தோன்றி-

---

(க)அதிபாரம் - மிகவும்பளு. (உ)த்ரவ்யமுடையவர்கள் - தயிர்பாலுடையவர்கள். (ங) களவேற்றாதே - திருட்டைச்சமத்தாதே. (ச) கொண்டியோடே- திருடினபொருளோடே.

ஆவிர்ப்பவித்து, தொறுப்பாடியோம் - ஆய்ப்பாடியிலுள்ளோமானநாங்கள், வைத்த - சேமித்துவைத்த, துப்பமும் - நெய்யையும், பாலும் - பாலையும், தயிரும் - தயிரையும், விழுங்கிய - அமுதுசெய்த, அப்பன் - உபகாரகன் ; வந்தப் பூச்சிகாட்டுகின்றான்—; மற்றதுமுன்போலே.

வ்யா.—ஆறும்பாட்டு. (செப்பித்யாதி) செப்புப்போலே யிருக்கிற ஸந்நிவேசத்தையுடைத்தாய், இளகிப்பதித்து ம்ர்துவாயிருக்கிற முலைகளையுடையளாய் ஆத்மகுணபூர்ணையான தேவகிப்பிராட்டிக்கு. இப்போது இவளுடையமுலைகளைவர்ணிக்கிறது க்ர்ஷ்ணன் பிடித்து அமுதுசெய்கைக்குயோக்யமான முலைகளென்று தோற்றுகைக்காக. (௧) கம்ஸபீதியாலே அவனை (௨) ஸ்தலாந்தரத்திலே போகவிட்ட வித்தனையிறேயுள்ளது. நங்கையென்கிறது - மேல் விளைவதறியவல்லவறிவும், பிள்ளையை அவஸ்தாநுகுணமாக நோக்கவல்ல ப்ரேமமும், (௩) பரஸம்ர்த்திபரதையும்முதலான குணங்களையுடையளாகையாலே.

(சொப்படத்தோன்றி) நன்றாகத்தோன்றி. அதாவது. - "ஸர்வேச்வரனைப் பிள்ளையாகப் பெறவேணும்" என்று நோன்பு நோற்றதுக்கிடாக, "జాతో౽సి దేవదేవేశ శఙ్ఖచక్రగదాధర" "𑌜𑌾𑌤𑍋𑌽𑌸𑌿 𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑍇𑌶 𑌶𑌙𑍍𑌖𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌧𑌰" என்கிறபடியே ஸர்வேச்வரத்வசிஹ்நங்களான திவ்யாயுதங்களோடேவந்துபிறந்து, "సఫలం దేవి సఞ్జాతం జాతో౽హం యత్ తవోదరాత్" "𑌸𑌫𑌲𑌂 𑌦𑍇𑌵𑌿 𑌸𑌞𑍍𑌜𑌾𑌤𑌂 𑌜𑌾𑌤𑍋𑌽𑌹𑌂 𑌯𑌤𑍍 𑌤𑌵𑍋𑌦𑌰𑌾𑌤𑍍" என்று அவளுடைய அபேக்ஷிதஸம்விதாநம்பண்ணுகை. பிறந்து என்னாதே "தோன்றி" என்றது, "దేవకీపూర్వసన్ధ్యాయామావిర్భూతమ్" "𑌦𑍇𑌵𑌕𑍀𑌪𑍂𑌰𑍍𑌵𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌯𑌾𑌮𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌂" என்கிறபடியே கர்ப்பவாஸதோஷமற ஆவிர்ப்பவித்தமையைப் பற்ற. "నైష గర్భత్వమాపేదే న యోన్యామవసత్ ప్రభుః" "𑌨𑍈𑌷 𑌗𑌰𑍍𑌭𑌤𑍍𑌵𑌮𑌾𑌪𑍇𑌦𑍇 𑌨 𑌯𑍋𑌨𑍍𑌯𑌾𑌮𑌵𑌸𑌤𑍍 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃" என்னக் கடவதிறே.

(தொறுப்பாடியோம்) தொறு - பசு. தொறுவர் - ஆயர். தொறுப்பாடியோமென்றது - ஆய்ப்பாடியிலுள்ளோமான நாங்களென்றபடி. (வைத்த) சேமித்துவைத்த. (துப்பமித்யாதி) துப்பம்-நெய். நெய்யையும் பாலையும் தயிரையுமமுதுசெய்த. எல்லாவற்றையும் சேர விழுங்கினவென்கையாலே - துப்பமும் பாலும் என்கிறவிடத்தில், தாஞ்சின நெய்யும் காய்ந்த பாலும் விவக்ஷிதம். அன்றிக்கே, விழுங்கிய என்கிறவிது - அமுதுசெய்கிறத்துக்கு பர்யாயமானசொல்லாய், த்ரவ்யாநுகுணமாகக்கொள்ளவுமாம். (அப்பன்) உபகாரக

(௧) கம்ஸபீதியாலே - கம்ஸனிடத்தில் பயத்தாலே. (௨) ஸ்தலாந்தரத்திலே - வேறிடத்திலே. (௩) பரஸம்ர்த்திபரதை - பிறர்மினுக்கங்கண்டுஸஹித்திருத்தல்.

ன். இவ்வோத்ரவ்யங்களை விரும்பியமுதுசெய்த வுபகாரந்தன்னைச் சொல்லுகிறது. (வந்தப்பூச்சிகாட்டுகின்றான்.) (அ)

மூ.—தத்துக்கொண்டாள்கொலோதானேபெற்றாள்கொலோ
சித்தமனையாளசோதையிளஞ்சிங்கம்
கொத்தார்கருங்குழற்கோபாலர்கோளரி [ன்றான்.
அத்தன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகி

ப-ரை. தத்து - தத்தபுத்ரனாக, கொண்டாள்கொலோ - வளர்த்துக்கொண்டாளோ; அன்றிக்கே, தானே—, பெற்றாள்கொலோ - மெய்நொந்துபெற்றாளோ, சித்தமனையாள் - தன்னெஞ்சுக்கொத்து நடக்குமவளான, அசோதை-யசோதைப்பிராட்டியுடைய பிள்ளையாய், இளஞ்சிங்கம் - இளஞ்சிங்கம்போலே யிருக்குமவனாய், கொத்து - பூங்கொத்துக்களாலே, ஆர் - நிறைந்திருப்பதாய், கரு - இருண்டிருப்பதான, குழல்-குழலையுடையனாய், கோபாலர் - இடையர்களுக்கு, கோள் - மிடுக்கையுடைத்தான, அரி - ஸிம்ஹம்போலே மேனாணித்திருக்குமவனாய், அத்தன் - ஸ்வாமியானவன், வந்தப்பூச்சிகாட்டுகின்றான்—; மற்றதுமுன்போலே.

வ்யா.—ஏழாம்பாட்டு. (தத்தித்யாதி) தத்த புத்ரனாகவளர்த்துக்கொண்டாளோ; அன்றியே, தானே மெய்நொந்துபெற்றாளோ. அதாவது - "அசோதையிளஞ்சிங்கம்" என்ன; இவள் (க) தத்தஸ்வீகாரம் செய்யக்கண்டிலோம், இவள் பெறுகிறபோது இவளைப் பார்த்துப் பேணிக்கொண்டிருந்த நாமெல்லாம், இவள் பெறக்கண்டிலோம், அயர்த்துறங்கிவிட்டோம், இவள்தான் "நான்பெற்றேன்" என்று சொல்லக்கேட்டோ மித்தனையிறே. "[Grantha text]" "[Grantha text]" என்கிறபடியே அவளும்அப்போது மோஹித்துக்கிடந்து (உ) உணர்ந்தபின்பிறே யிவனைக்கண்டது. இப்படிதான்சொல்லுகிறது (ங) அதிலோகமான விவனுடைய ரூபகுணசேஷ்டிதங்களைக்கண்டால் "இவள்பிள்ளை" என்று சொல்லப்போகாதபடி யிருக்கையாலே. அவள்தானும், "இம்மாயம் வல்லபிள்ளைநம்பி யுன்னை யென்மகனேயென்பர் நின்றார்" என்று இவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களைக்கண்டால் நீ என்னுடைய பிள்ளையாகக்கூடாது, நடுநின்றவர்கள் உன்னை "என்னுடைய பிள்ளையென்றே சொல்லாநின்றார்கள்" என்னும்படியாயிறே யிருப்பது.

(சித்தமித்யாதி) தீம்புகண்டாலும் (ச) நியமியாதே தன்னெஞ்சுக்கு ஒத்துநடக்கும் யசோதையுடைய பிள்ளையாய் பாலஸிம்ஹம் போலே அவளுக்கு அடங்காதே திரிகிறவன். நியமித்தாளாகிலும்

---

(க) தத்தஸ்வீகாரம் - பிள்ளையைக்கொடுக்க வாங்கிக்கொள்ளுகை. (உ) உணர்ந்தபின்பு - விழித்துக்கொண்டபின்பு. (ங) அதிலோகமான - மிகவழகியதான. (ச) நியமியாதே - சிக்ஷியாதே.

"அங்ஙனும் தீமைகள் செய்வர்கொலோ நம்பீ யாயர்மடமக்களை" என்று இவன் தீம்பிலே கைவளரும்படியாக வாய்த்து நியமிப்பது. "அஞ்சவுரப்பாளசோதையாணாடவிட் டிட்டிருக்கும்" என்னக்கடவதிறே. கர்வத்தாலும் (க) அநபிபவநீயதையாலும் - இளஞ்சிங்கமென்கிறது. (கொத்தாரித்யாதி) உகந்தார் உகந்தபடிசூட்டினபூங்கொத்துக்களாலேநிறைந்திருப்பதாய் "अञ्जनस्निग्धालकम्" "आकुञ्चितस्रोतकेशम्" என்கிறபடியே இருண்டிருப்பதான திருக்குழலையுடையனாய், கோபாலர் கீழடங்காமல், மிடுக்கையுடைத்தான ஸிம்ஹம்போலே செருக்கி மேனாணித் திருக்குமவன். (அசோதையிளஞ்சிங்கம்-கோபாலர்கோளரி) தாய்க்கடங்காதவன் ஊர்க்கடங்கானிறே. கோள்-மிடுக்கு. (அத்தன்) ஸ்வாமி. கீழ்ச்சொன்ன ஸ்வபாவங்களுக்குத் தோற்றுச்சொல்லுகிற வார்த்தை. (வந்தப்பூச்சிகாட்டுகின்றான்).    (எ)

மூ.—கொங்கைவன்கூனிசொற்கொண்டுகுவலயத்
துங்கக்கரியும்பரியுமிராச்சியமும்
எங்கும்பரதற்கருளிவன்கானடை    [கின்றான்.
அங்கண்ணனப்பூச்சிகாட்டுகின்றானம்மனே யப்பூச்சிகாட்டு

ப-ரை. கொங்கை-முதுகிலே முலைபுறப்பட்டாற்போலே திரண்டுகிளர்ந்த, வன் - வலிய, கூனி - கூனையுடையளான மந்தரையுடைய, சொல்கொண்டு - வசநத்தைக்கொண்டு, குவலயம் - பூமியிலுள்ள ஆனைகளெல்லாவற்றிலும், துங்கம்- உயர்ந்த, கரியும் - சத்ருஞ்சயன்முதலானவானைகளையும், பரியும் - அப்படிப்பட்ட உயர்ந்த குதிரைகளையும், இராச்சியமும் - ராஜ்யத்தையும், எங்கும் - எழுந்தருளியிருக்கிற காட்டையும், பரதற்கு - ஸ்ரீபரதாழ்வானுக்கு, அருளி - கொடுத்து, வன் - ஒருவரால் புகவரிதானவலிய, கான் - காட்டை, அடை - அடைந்த, அம்-அழகிய, கண்ணன்-திருக்கண்களையுடையவன், அப்பூச்சி காட்டுகின்றான்—; மற்றதுமுன்போலே.

வ்யா.—எட்டாம்பாட்டு. (கொங்கையித்யாதி) முதுகிலேமுலைபுறப்பட்டாற்போலே திரண்டுகிளர்ந்த வலிய கூனையுடையளான மந்தரையுடைய வசநத்தைக்கொண்டு. காட்டுக்குப்போயிற்று பித்ர்வசநங்கொண்டாயிருக்க, (உ)"குப்ஜையுடையவசநங்கொண்டு"என்பானென்னென்னில் ; "न मन्थराया न च मातुरस्या दोषो न राज्ञः" "न कैकेय्या न वसिष्ठस्य दोषो न राज्ञः"என்கிறபடியே (ங) வநப்ரவேச ஹேதுக்கள் சொல்லுகிறவிடத்தில் முந்துறவெடுத்ததுஇவளையிறே. இவளுடைய வசநத்தாலே * கலக்கியமாமநத்தனளாயிறே கைகேசி வரம் வேண்டிற்று ; அதடியாகவிறே சக்ரவர்த்தி போகச்சொல்லவேண்டிற்றும். ஆகையால் எல்லாவற்றுக்கும் மூலமிதுவாகையாலே இவளுடைய சொல்கொண்டு போனானென்கிறது.

(க) அநபிபவநீயதை - இகழப்படாமை. (உ) குப்ஜை - கூனி. (ங) வநப்ரவேசஹேதுக்கள் - காட்டிற்புகுகைக்குள்ள காரணங்கள்.

(குவலயத்துங்கக்கரியும்) பூமியிலானைகளெல்லாவற்றிலும் விஞ்சின (க) சத்ருஞ்சயன் முதலானவானைகளும். (பரியும்) அப்படி லோகவிலக்ஷணமான குதிரைகளும். (இராச்சியமும்) (௨) அகண்டகமான ராஜ்யமும். (எங்கும்) "இக்ஷ்வாகூணாமியம் பூமி: ஸஶைலவநகாநநா" "ஊக்ஷ்ாக‍ுணாரிய ஜ‍ுமி ஸுஶைலவநகாநநா" என்கிறபடியே எழுந்தருளுகிற காடுதானும். (பாதற்கருளி) கைகேயீவராநுகுணமாக சக்ரவர்த்தி வசநத்தின்படியே ஸ்ரீபரதாழ்வானுக்குக் கொடுத்து. (வன்கானடையித்யாதி) ஒருவரால் ப்ரவேசிக்க வரிதான வலிய காட்டையடைந்தவழகிய ஸுலபனானவன். கட்டினகாப் போடே காடேறப் போகச்சொன்னவிடத்தில் முகத்தில் கருகுத லின்றிக்கே முடியைத்தவிர்ந்து சடையைப்புணர்ந்து நாட்டைவிட்டுக் காடேறப்போனபடியை நினைத்து-அழகிய ஸுலபனென்கிறது. அன்றிக்கே, அங்கண்ணனென்றது - "ராமபத்மபலாக்ஷ:" "ராஜீவலோசந:" என்கிறபடியே அழகிய திருக்கண்களையுடையனென்னவுமாம். அப்போது, "ராஜ்யைச்வர்யத்தைவிட்டுக் காட்டிற்போந்தோம்" என்னும் க்லேசமின்றிக்கே அகவாயில் ஹர்ஷம் திருக்கண்களிலே தோன்றும்படியாகப் போனபடியைச் சொல்லுகிறது.()

மூ.—பதகமுதலைவாய்ப்பட்டகளிறு
கதறிக்கைகூப்பியென்கண்ணாகண்ணாவென்ன
உதவப்புள்ளூர்ந்தங்குறுதுயர்தீர்த்த
அதகன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான்.

ப - ரை. பதகம் - கொடிய, முதலை - முதலையுடைய, வாய் - வாயிலே, பட்ட - அகப்பட்ட, களிறு - யானையானது, கதறி - கூப்பிட்டுக்கொண்டு, கைகூப்பி—, என்கண்ணா கண்ணாவென்ன - எனக்கு நிர்வாஹகனானவனேயென்று பலகாலும்சொல்ல, உதவ - அந்தஆபத்துக்குதவுகைக்காக, புள் - பெரியதிருவடியை, ஊர்ந்து - விரையநடத்திக்கொண்டுசென்று, அங்கு - அந்தப்பொய்கையில், உறு - முதலையின்கையிலே யகப்பட்டு ஸ்ரீகஜேந்த்ராழ்வான்பட்ட, துயர் - துக்கத்தை, தீர்த்த - போக்கின, அதகன் - மிடுக்கனானவன், வந்தப்பூச்சிகாட்டுகின்றான்—; மற்றதுமுன்போலாம்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பதகமுதலை) பதகம் - கொடுமை. "கொடியவாய்விலங்கு" என்னக்கடவதிறே. "அதின்விடத்தினுக்கனுங்கியழுங்கியவானை" என்னும்படி ஸ்ரீகஜேந்த்ராழ்வானை நோவுபடுத்தின கொடுமையைச் சொல்லுகிறது. அன்றிக்கே, பாதகமென்கிறத்தை, "பதகம்" என்று குறைத்துக்கிடக்கிறதாய்-பாதகத்தையுடைத்தான முதலையென்னவுமாம். அதாவது - சாபோபஹதமாய் வந்து கிடந்ததிறே. இம்முகத்தாலே தன்னுடைய(௩)சாபமோக்ஷ

(க) சத்ருஞ்சயன் - சக்ரவர்த்தித்திருமகனுடைய பட்டத்துயானை. (௨) அகண்டகமான - சத்ருக்களில்லாத. (௩) சாபமோக்ஷமென்று - சாபம்நீங்குமென்று.

மென்று அறிகையாலே தன்கார்யஸித்தியளவும் இவன் காலேப்பிடித்தபிடி நழுவவிடாதென்றபடி. (வாய்ப்பட்டகளிறு) அதன்வாயிலே அகப்பட்ட யானேயானது. தன்னிலமல்லாமையாலே ஒரு (க) நீர்ப்புழுவின்கையிலே யகப்பட்டதாய்த்து. வெளிநிலமாகில் இதின் அருகுவரமாட்டாதிறேயது.

(கதறியித்யாதி) அதின்வாயிலே யகப்பட்டவிடத்தில் ‘‘நம்முடைய பலத்தாலேதள்ளிக் கரையேறுகிருேம்’’என்று ‘‘గజాకృష్టే తీరే గ్రాహాకృష్టే జలే’’ ‘‘கஜ ஆக்ருஷ்டே தீரே க்ராஹ ஆக்ருஷ்டே ஜலே’’ என்கிறபடியே ஆயிரம் தேவஸம்வத்ஸரம் அது நீருக்கிழுக்க, தான் கரைக்கிழுக்கச் சென்றவிடத்திலே, அதுக்குத் தன்னிலமாகையாலும் (உ) அபிமதஸித்தியாலும் ‘‘முழுவலிமுதலே’’ என்னும்படி (ரு) பலமதிசயித்து, தனக்குத் தன்னிலமல்லாமையாலும் அபிமதாலாபத்தாலும் பலம் க்ஷீணமாய், துதிக்கை முழுத்தும்படியாகையாலே ‘‘இனி நம்மாற் செய்யலாவதொன்றுமில்லே’’ என்று ‘‘పరమాపద మాపన్నో మనసాచిన్తయద్ధరిమ్’’ ‘‘பரமாபதமாபந்நோ மநஸாசிந்தயத்தரிம்’’ என்கிறபடியே இத்தசையில் ஸர்வேச்வரனேயே தனக்கு ரக்ஷகஞக நினேத்து, தன்கையையெடுத்து அஞ்சலிபண்ணி, தன்னுர்த்தியெல்லாம் தோற்றும்படி கூப்பிட்டுக்கொண்டு, எனக்கு நிர்வாஹகனுனவனே யென்று பலகாலும்சொல்ல. ‘‘நாராயணு ஓமணிவண்ணு நாகணேயாய் வாராய்’’ என்று கூப்பிட்டானுகவருளிச்செய்தார் திருமங்கையாழ்வார்; இவர், ‘‘என்கண்ணுகண்ணு’’ என்று கூப்பிட்டானுக வருளிச்செய்தார்; ‘‘మూలేతిమక్షపణమాలపతి ద్విపేన్ద్రే’’ ‘‘மூலேதி மந்தமாலபதி த்விபேந்த்ரே’’ என்று கூப்பிட்டானுகை பௌராணிகர் சொன்னுர்களிறே. இவை தன்னில்சேரும்படியென்னென்னில்; ‘‘மூலம்’’ என்கிறவிடத்தில் அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனுன ஆகாரத்தைநினேத்துக் கூப்பிட்டானுகையாலே, அதுக்கு பர்யாயசப்தங்களேயிட்டு ஆழ்வார்க ளருளிச்செய்தார்களாகையால் எல்லாம் சேரக்குறையில்லே.

(உதவவித்யாதி) இந்த (ச) ஆர்த்தத்வநி திருச்செவிப்பட்டபோதே திருப்படுக்கையில்நின்றும் பதறியெழுந்திருந்து ‘‘ససంభ్రమ చమూపతిప్రహితహస్తమ్’’ ‘‘ஸஸம்ப்ரம சமூபதிப்ரஹிதஹஸ்தம்’’ இத்யாதிப்படியே ஸேனைமுதலியார் திருக்கைகொடுக்கவும்பற்ருமல் திருவடிநிலேகோத்து எழுந்தருளுகையுமின்றிக்கே, வெறும்தறையிலே பத்தெட்டடியிட்ட பதற்றத்தைக்கண்டு ‘‘இதுக்கடியென்’’ என்று பயப்பட்டு திவ்யாந்தஃபுரம் கைநெரிக்க, பெரியதிருவடியைப் பண்

(க) நீர்ப்புழு - முதலே. (உ) அபிமதஸித்தி - எண்ணம் நிறைவேறுகை. (ரு) பலமதிசயித்து - வலிமிகுந்து. (ச) ஆர்த்தத்வநி - துக்கமானகூக்குரல்.

செய்து ஏறப்பெறுமல், வெறும்புறத்திலே மேற்கொண்டு, "அந்த ஆர்த்திக்குதவவேணும்" என்னுமத்தைப்பற்ற அவனை (க) ப்ரேரித்து விரைய நடத்திக்கொண்டுசென்று, அந்தப் பொய்கையில் முதலையின்கையிலே யகப்பட்டுஸ்ரீகஜேந்த்ரன்பட்ட (உ) அதிமாத்ரது:க்கத்தைப்போக்கின. ஸ்ரீகஜேந்த்ரனுக்கு து:க்கமாவது-"నాహం కళేబరస్యాస్య త్రాణార్థం మధుసూదన। కరస్థకమలాన్యేవ పాదయోరర్పితుం హరే" "நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந । கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் ஹரே" என்கிறபடியே - கையிற்பூ, செவ்வியழியாமல் திருவடிகளிற்சாத்தப் பெறுகிலோமென்னுமது. (அதகன்) மிடுக்கன். இப்படி ஆச்ரிதரக்ஷணம்பண்ணின சக்திவிசேஷத்தைச் சொல்லுகிறது. (வந்தப்பூச்சிகாட்டுகின்றான்.) (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வல்லாளிலங்கைமலங்கச்சரந்துரந்த
வில்லாளனைவிட்டுசித்தன்விரித்த
சொல்லார்ந்தவப்பூச்சிப்பாடலிவைபத்தும்
வல்லார்போய்வைகுந்தமன்னியிருப்பரே.

ப-ரை. வல் - வலிய, ஆள் - ஆள்களையுடைய, இலங்கை - லங்கையானது, மலங்க - கலங்கும்படியாக, சரம்-திருச்சரங்களை, துரந்த - மேன்மேலும் நடத்தின, வில்லாளனை - வில்லையுடையவனை, விட்டுசித்தன்-பெரியாழ்வார், விரித்த-விஸ்தரேண வருளிச்செய்தவையான, சொல்லார்ந்த-சொல்நிரப்பத்தையுடைத்தாய், அப்பூச்சி-அப்பூச்சிவிஷயமான, பாடல் - பாட்டுக்களாயிருக்கிற, இவைபத்தும் - இப்பத்தையும், வல்லார் - ஏதேனுமொருபடி சொல்லவல்லவர்கள், போய் - அர்ச்சிராதி மார்க்கத்தாலேபோய், வைகுந்தம்- ஸ்ரீவைகுண்டத்திலே யவனையநுபவித்து மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு, மன்னியிருப்பர் - காலமுள்ளதனையு மிருக்கப்பெறுவர்.

வ்யா.—(வல்லாளிலங்கை) வலிய ஆள்களையுடைத்தாகையாலே ஒருவரால் அடக்கவொண்ணுத பரிகரக்கட்டுடைத்தான லங்கையானது. ராவணன் மதிக்கும்படியான ஆண்பிள்ளைகள் வர்த்திக்கிறவூரிறே. (மலங்க) செருப்பும் தேவாரமும் ஒக்கக்கட்டிப் போக்கிடங்தேடி மலங்கும்படியாக. (சரந்துரந்தவில்லாளனை) திருச்சரங்களை மேன்மேலும் நடத்தின வில்லையுடையவனை. இத்தால் - ஈச்வரத்வ (ங) பிடாரா லன்றிக்கே, அவதாரத்துக் கநுகுணமாகநின்ற அம்பாலே அவ்வூரையடர்த்த ஆண்பிள்ளைத்தனத்தைச்சொல்லுகிறது. இத்திருமொழி க்ர்ஷ்ணவதார விஷயமாயிருக்க, நிகமத்தில் இப்படியருளிச்செய்தது, அவ்வவதாரத்துக்கும் இவ்வவதாரத்துக்

(க) ப்ரேரித்து - தூண்டி. (உ) அதிமாத்ரதுக்கம் - மிகுந்ததுன்பம். (ங) பிடார் - பெருமை.

குமுண்டான (க) ஐக்யத்தைப்பற்றவிறே. "வன்கானடையங்கண்ணன்" என்று இந்த ஐக்யம் கீழும் சொல்லப்பட்டதிறே.

(விட்டுசித்தன்விரித்த) பெரியாழ்வார் விஸ்தரேணவருளிச்செய்தவையான. (சொல்லார்ந்தவித்யாதி) சொல்நிரப்பத்தையுடைத்தாய் அப்பூச்சிவிஷயமான பாட்டுக்களாயிருக்கிற விப்பத்தையும் ஏதேனு மொருபடிவல்லவர்கள். சொல்லார்ந்தவென்றது - அதிகரிப்பார்க்கு இதினர்த்தத்தில் போகவேண்டா, சப்தரஸந்தானே அமையும்படியிருக்குமென்னவுமாம். வல்லாரென்றது - ஸாபிப்ராயமாக வல்லாரென்னவுமாம். (போயித்யாதி) இதினுடைய (உ) வ்யவஸாயமே ஹேதுவாக அர்ச்சிராதி மார்க்கத்தாலேபோய் ஸ்ரீவைகுண்டத்திலே யவனை யநுபவித்து மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு (ங) யாவத்காலமு மிருக்கப்பெறுவர். (க0)

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—மெய்மலேகாயிருட்டுச் சொப்பூண்டுசெப்புத்
தத்துக்கொங்கை பதகம்வல்லாளரவணை.

ஆக திருமொழி க0-க்கு, பாட்டு - ககக.

அ.—ஆழ்வார்களெல்லாரும் க்ருஷ்ணாவதார ப்ரவணராயிருந்தார்களேயாகிலும் அவர்களெல்லாரையும் போலன்றிக்கே, க்ருஷ்ணாவதாரத்திலே (ச) அதிப்ரவணராய், அவ்வவதார ரஸாநுபவத்துக்காக கோபஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணி, "போகத்தில் வழுவாதபுதுவையர்கோன்" என்கிறபடியே அவ்வவதார ரஸமுள்ளதெல்லாம் அநுபவிக்கிறவராகையாலே, முதல்திருமொழியாலே-அவன் அவதரித்த ஸமயத்தில் அங்குள்ளார்செய்த உபலாளநவிசேஷங்களையும், அநந்தரம், யசோதைப்பிராட்டி அவனுடைய பாதாதிகேசாந்தமான அவயவங்களிலுண்டானவழகை (ரு) ப்ரத்யேகம் ப்ரத்யேகமாகத் தானநுபவித்து, (சு) அநுபுபூஷுக்களையும் தான்அழைத்துக் காட்டினபடியையும், அநந்தரம், அவள்அவனைத் தொட்டிலிலேற்றித் தாலாட்டினபடியையும், பிற்காலமாயிருக்க, தத்காலம் போலே (எ) பாவநாப்ரகர்ஷத்தாலே யசோதாதிகளுடைய (அ) ப்ராப்தியையும் ஸ்நேஹத்தையு முடையராய்க்கொண்டு தாமநுப

(க) ஐக்யம் - ஒற்றுமை. (உ) வ்யவஸாயம் - மநோநிச்சயம். (ங) யாவத்காலமும் - காலமுள்ளதனையும். (ச) அதிப்ரவணராய் - மிக்கவன்பராய். (ரு) ப்ரத்யேகம்ப்ரத்யேகம் - தனித்தனியே. (சு) அநுபுபூஷுக்கள் - அநுபவிக்கவிருப்பமுள்ளவர்கள். (எ) பாவநாப்ரகர்ஷம்-நினைப்பின்மிகுதி. (அ) ப்ராப்தி-ஸம்பந்தம்.

வித்து, அநந்தரம், அவன் அம்புலியையழைக்கை, செங்கீரையாடுகை, சப்பாணிகொட்டுகை, தளர்நடைநடக்கை, அச்சோவென்றும் புறம்புல்குவானென்றும் யசோதைப்பிராட்டி அபேக்ஷிக்க முன்னும்பின்னும் வந்தணைக்கையாகிற பாலசேஷ்டிதங்களை, தத்பாவயுக்தராய்க்கொண்டு அடைவே யநுபவித்துக்கொண்டுவந்து, கீழ்த்திருமொழியிலே - அவன் திருவாய்ப்பாடியி லுள்ளாரோடே அப்பூச்சிகாட்டி விளையாடின சேஷ்டிதத்தையும் தத்காலத்திலே அவள் அநுபவித்துப் பேசினாற்போலே தாமும் அநுபவித்துப்பேசி ஹ்ருஷ்டரானார்; இனி, அவன் (க) லீலா வ்யாபாரச்ராந்தனாய் முலையுண்கையையும்மறந்து நெடும்போதாகக்கிடந்து உறங்குகையாலே "உண்ணாப்பிள்ளையைத் தாயறியும்" என்கிறபடியே யசோதைப்பிராட்டி அத்தையறிந்து, "அம்மமுண்ணத்துயிலெழாயே" என்று அவனையெழுப்பி, நெடும்போதாக முலையுண்ணாமே கிடந்தமையை அவனுக்கறிவித்து, நெறித்துப்பாய்கிற தன்முலைகளை யுண்ணவேணுமென்று அபேக்ஷித்து, அவன்இருய்த்திருந்தவளவிலும்விடாதே (உ) நிர்ப்பந்தித்து முலையூட்டின ப்ரகாரத்தை, தாமுமநுபவிக்க வாசைப்பட்டு, தத்பாவயுக்தராய்க்கொண்டு அவனை அம்மமுண்ண வெழுப்புகைமுதலான ரஸத்தையநுபவித்துப்பேசி ஹ்ருஷ்டராகிறார் - இத்திருமொழியில்.

மூ.—அரவணையாயாயரேறேயம்மமுண்ணத்துயிலெழாயே
இரவுமுண்ணாதுறங்கிநீபோயின்றுமுச்சிகொண்டதாலோ
வரவுங்காணேன்வயிறசைந்தாய்வனமுலைகள்சோர்ந்துபாயத்
திருவுடையவாய்மடுத்துத்திளைத்துதைத்துப்பருகிடாயே.

ப - ரை.—அரவு - திருவநந்தாழ்வானை; அணையாய் - படுக்கையாகவுடையனாய், ஆயர் - இடையர்களுக்கு, ஏறே - தலைவனானவனே, அம்மமுண்ண - முலையுண்ண, துயில் - தூக்கத்தைவிட்டு, எழாய் - எழுந்திருக்கவேணும்; நீ—, இரவும் - சென்றவிரவும், உண்ணாது - முலையுண்ணாமல், உறங்கிப்போய் - உறங்கிப்போனது மன்றிக்கே, இன்றும் - இன்றைக்கும், உச்சிகொண்டது - நடுப்பகலாயிற்று; நீயாகவெழுந்திருந்து அம்மமுண்ணவேணுமென்று, வரவும் காணேன் - வரவும் கண்டிலேன்; அபேக்ஷையில்லையென்ன வொண்ணாதபடி, வயிறசைந்தாய் - வயிறுதளர்ந்திராநின்றாய்; வனம் - அழகிய, முலைகள் - முலைகளானவை, சோர்ந்து - பால் உள்ளடங்காமல்வடிந்து, பாய—, திருவுடைய - அழகிய, வாய் - திருப்பவளத்தை, மடுத்து - வைத்து, திளைத்து - முலையுண்கிற களிப்புத்தோற்றமேனாணித்து, உதைத்து - கால்களாலேயென்னுடம்பிலே புதைத்துக்கொண்டிருந்து, பருகிடாய் - உண்ணவேணும்.

வ்யா.—முதற்பாட்டு. (அரவணையித்யாதி) மென்மை குளிர்த்தி நாற்றம் துடக்கமானவற்றை (௩) ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தா

(க) லீலாவ்யாபாரச்ராந்தன் - விளையாடியலுத்தவன். (உ) நிர்ப்பந்தித்து - கட்டாயம்செய்து. (௩) ப்ரக்ருதி - ஸ்வபாவம்.

ழ்வானைப் படுக்கையாகவுடையனு யிருந்து வைத்து, "நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகத:" "நாமவார்ஜ்ஜிதுரஜ்ஹ்ராமதம்" என்கிறபடியே அப்படுக்கையைவிட்டுப் போந்து அவதீர்ணனாய் ஆயர்க்கு ப்ரதாநனானவனே. அப்படுக்கைவாய்ப்பாலே பள்ளிகொண்டு போந்தவாஸனையோ ஆயரோடுனவிடத்திலும் படுக்கைவிட் டெழுந்திராதே பள்ளிகொள்ளுகிறது. அவன்தான் இதரஸஜாதீயனு யவதரித்தால் "சென்றால்குடையாம்" என்கிறபடியே (க) சந்தாநுவர்த்தியாய் அடிமைசெய்யக்கடவ திருவநந்தாழ்வானும் அவனுடைய அவஸ்தாநுகுணமாகப் பள்ளிகொள்வதொரு திருப்படுக்கையான அடிமைகொள்ளக் கூடுமிறே. ஆகையால் அங்குண்டான ஸுகமெல்லாம் இங்குண்டாயிருக்குமிறே கண்வளர்ந்தருளுகிறவனுக்கு. (அம்மமுண்ணத்துயிலெழாயே) "முலையுண்ண" என்னுதே, அம்மமுண்ணவென்றது - சைசவாநுகுணமாக அவள்சொல்லும் பாசுரமதுவாகையாலே. துயில் - நித்ரை. எழுகையாவது - அது குலைந்தெழுந்திருக்கை. எழாயென்கிறது-எழுந்திருக்கவேணுமென்கிற ப்ரார்த்தனை. (இரவுமித்யாதி) நீ ராத்ரியுண்ணுதேயுறங்கினவளவுமன்றிக்கே இன்றும்போய் உச்சிப்பட்டது. ராத்ரி அலைத்தலாலேகிடந்துறங்கினல் விடிந்தாற்றானுகிலு முண்ணவேண்டாவோ; விடிந்தவளவேயோ, போது உச்சிப்பட்டதுகாண். ஆலும் ஒவுமாகிற (உ) அவ்யயமிரண்டும் (ங) விஷாதாதிசயஸூசகம். (வரவித்யாதி) நீயாக வெழுந்திருந்து அம்மமுண்ணவேணுமென்று வரவும் கண்டிலேன்; அபேக்ஷையில்லையென்னவொண்ணுதபடி வயிறுதளர்ந்திராநின்றாய். (வனமுலைகள்சோர்ந்துபாய) வனப்பு - அழகும், பெருமையும். முலைகளானவை யுன்பக்கல் ஸ்நேஹத்தாலே நெறித்து, பால் உள்ளடங்காமல் வடிந்துபரக்க. உனக்குப் பசியுண்டாயிருக்க, இப்பால் இப்படி வடிந்துபோக உண்ணுதொழிவதே! என்று கருத்து. (திருவுடையவாய்மடுத்து) அழகிய திருப்பவளத்தைமடுத்து. திரு-அழகு. இவ்வனமுலையிலே உன்னுடைய திருவுடையவாயை அபிநிவேசம் தோற்றமடுத்து. (திளைத்தித்யாதி) முலையுண்கிற ஹர்ஷந்தோற்ற கர்வித்துக் கால்களாலே யென்னுடம்பிலே யுதைத்துக்கொண்டிருந்து உண்டிடாய். பருகுதல் - பாநம்பண்ணுதல். (க)

மூ.—வைத்தநெய்யுங்காய்ந்தபாலும்வடிதயிருநறுவெண்ணெயும்
இத்தனையும்பெற்றறியேனெம்பிரானீபிறந்தபின்னை
எத்தனையுஞ்செய்யப்பெற்றாயேதுஞ்செய்யேன்கதம்படா
முத்தனையமுறுவல்செய்துமூக்குறிஞ்சிமுலையுணாயே. [தே

(க) சந்தாநுவர்த்தியாய் - கருத்தையொத்தவனாய். (உ) அவ்யயம் - சாரியை. (ங) விஷாதாதிசயஸூசகம் - துக்கமிகுதிக்குறிப்பு.

ப-ரை.—எம்பிரான் - என்னுடையநாயனே, நீ—; பிறந்தபின்னே - பிறந்தபின்பு, வைத்த - பழுதறவுருக்கிவைத்த, நெய்யும்—, காய்ந்த - செறிவுறக்காய்ந்த, பாலும்—, வடி - நீருள்ளது வடித்துக்கட்டியாயிருக்கிற, தயிரும்—, நறு - செவ்வையிலேகடைந்தெடுத்த, வெண்ணெயும்—, இத்தனையும் - இவையொன்றும், பெற்றறியேன் - பெற்றதில்லை; எத்தனையும் - உனக்குவேண்டினதெல்லாம், செய்யப்பெற்றாய் - செய்யக்கடவை; ஏதும் - நான் உன்னைப்பிடித்தல் அடித்தல் ஒன்றும், செய்யேன் - செய்யக்கடவேனல்லேன், கதம்படாதே - நீகோபிக்கவேண்டா; முத்தனைய - முத்துப்போலே, முறுவல்செய்து - நகைத்துக்கொண்டு, மூக்கு - மூக்காலே, உறிஞ்சி - உரோசி, முலை - முலையை, உணாய் - அமுதுசெய்யவேணும்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வைத்தவித்யாதி) பழுதற வுருக்கிவைத்த நெய்யும், செறிவுறக்காய்ந்த பாலும், நீருள்ளது வடித்துக்கட்டியாயிருக்கிற தயிரும், (க)செவ்வையிலே கடைந்தெடுத்த நறுவிய வெண்ணெயும். (எம்பிரான் நீபிறந்தபின்னை-இத்தனையும் பெற்றறியேன்) என்னுடைய நாயனே, நீபிறந்தபின்பு இவையொன்றும் பெற்றறியேன். அன்றிக்கே, இத்தனையுமென்றது - ஏகதேசமுமென்றபடியாய், இவற்றில் அல்பமும் பெற்றறியேனென்னுதல். இப்படி யென்னைக் களவேற்றுவதே! என்னைப் பிடித்தல் அடித்தல் செய்யவன்றோ நீ இவ்வார்த்தைசொல்லிற்றென்று குபிதனாக; (எத்தனையும் செய்யப்பெற்றாய்) உனக்கு வேண்டினதெல்லாம் செய்யக்கடவை. (ஏதும்செய்யேன் கதம்படாதே)நான் உன்னைப்பிடித்தல்அடித்தல் ஒன்றும் செய்யக்கடவேனல்லேன், நீகோபிக்க வேண்டா. கதம் - கோபம். (முத்தனையவித்யாதி) முத்துப்போலேயொளிவிடாநிற்கும் முறுவலைச்செய்து. அதாவது - கோபத்தைத்தவிர்ந்து ஸ்மிதம்பண்ணிக்கொண் டென்கை. (மூக்குறிஞ்சி முலையுணாயே) முலைக்கீழே முழுசிமூக்காலேயுரோசியிருந்து முலையையமுது செய்யாய். (௨)

மூ.—தந்தமக்களழுதுசென்றால்தாய்மாராவார்தரிக்ககில்லார்
வந்துநின்மேற்பூசல்செய்யவாழவல்லவாசுதேவா [ன்
உந்தையாருன்றிறத்தரல்லருன்னைநானொன்றுரப்பமாட்டே
நந்தகோபனணிசிறுவாநான்சுரந்தமுலையுணாயே.

ப-ரை. தந்தம் - தங்கள்தங்களுடைய, மக்கள் - பிள்ளைகள், அழுதுசென்றால் - அழுதுகொண்டுபோனால், தாய்மாராவார் - அவர்கள் தாய்மாரானவர்கள், தரிக்ககில்லார் - பொறுக்கமாட்டார்கள்; வந்து - அவர்கள் தங்கள் பிள்ளைகளைப் பிடித்துக்கொண்டுவந்து, நின்மேல் - உன்மேலே, பூசல்செய்ய - குற்றம்சாட்டிப்பிணங்க, வாழவல்ல - இதுவேவாழ்ச்சியாக இருக்கவல்ல, வாசுதேவா - வஸுதேவபுத்ரனானவனே, உந்தையார் - உன்தமப்பனாரானவர், உன்திறத்தரல்லர் - உன்னுடைய சேஷ்டிதங்களை யாராய்ந்துபாரார்; நான் -

(க) செவ்வையிலே - நன்றாக.

ஸ்த்ரீயான நானேயென்றால், உன்னை-நீம்பனுனவுன்னை,ஒன்று-ஒருவழியாலும், உரப்பமாட்டேன் - சிக்ஷிக்கமாட்டேன் ; ஆதலால், நந்தகோபன் - ஸ்ரீ நந்தகோபர்க்கு, அணி - அழகிய, சிறுவா - பிள்ளையானவனே, நான்சுரந்த - இப்போது நான்சுரந்த, முலை - முலையை, உணாய் - அமுதுசெய்யவேணும்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (தந்தமித்யாதி) ஊரில்பிள்ளைகளோடே விளையாடப்புக்கால் எல்லாரையும்போலன்றிக்கே, நீஅவர்களை அடித்துக் குத்தி விளையாடாநின்றாய்;இப்படிசெய்யலாமோ, தந்தம் பிள்ளைகள் அழுதுசென்றால் அவர்கள் தாய்மாரானவர்கள் பொறுக்கமாட்டார்கள். (வந்துநின்மேல் பூசல்செய்ய) அவர்கள்தாங்கள், தங்கள் பிள்ளைகளையும் பிடித்துக்கொடுவந்து உன்மேலே (க) சிலுகிட்டுப்பிணங்க. (வாழவல்ல) அதில் ஒருசற்று மிளைப்பின்றிக்கே ப்ரியப்பட்டு இதுவே போகமாகவிருக்கவல்ல. (வாசுதேவா) வஸுதேவ புத்ரனானவனே. பசுவின் வயிற்றிலே புலியாயிருந்தாயீ !. (உந்தையாரித்யாதி) உன்னுடைய தமப்பனாரானவர் உன்னிடையாட்டமிட்டெண்ணார். உன்னை சிக்ஷித்து வளர்க்காமொன்றபடி. (உன்னையித்யாதி) நீம்பனுனவுன்னை (உ) அபலையான நான் ஒருவழியாலும் (ரு) நிரஙியமிக்கமாட்டேன். (நந்தகோபனணிசிறுவா) ஸ்ரீநந்தகோபர்க்கு வாய்த்தபிள்ளாய். அணி - அழகு. இவன் தீம்பிலே உளைந்து சொல்லுகிறவார்த்தை. (நான் சுரந்தமுலையுணாயே) அவையெல்லாம் கிடக்க இப்போது நான் சுரந்தமுலையை அமுதுசெய்யாய். ()

மூ.—கஞ்சன்றன்னாற்புணர்க்கப்பட்டகள்ளச்சகடுகலக்கழியப்
பஞ்சியன்னமெல்லடியாற்பாய்ந்தபோதுநொந்திடுமென்
றஞ்சினேன்காணமரர்கோவேயாயர்கூட்டத்தளவன்றாலோ
கஞ்சனையுன்வஞ்சனையால்வலைப்படுத்தாய்முலையுணாயே.

ப-ரை. அமரர் - தேவர்களுக்கு, கோவே - தலைவனானவனே, கஞ்சன்தன்னால் - உன்மேலே கறுவுதலையுடைய கம்ஸனாலே, புணர்க்கப்பட்ட-கற்பிக்கப்பட்ட, கள்ளம் - வஞ்சநத்தையுடைய, சகடு - சகடமானது, கலங்க - கட்டுக்குலைந்து, அழிய - உருமாய்ந்துபோம்படியாக, பஞ்சியன்ன - பஞ்சுபோலே, மெல் - ம்ருதுவான, அடியால் - திருவடிகளாலே, பாய்ந்தபோது - உதைத்தபோது, நொந்திடுமென்று - நோகுமென்று, அஞ்சினேன்காண் - பயப்பட்டேன்காண் ; நானஞ்சினபடி, ஆயர்கூட்டத்தளவன்று - இடையருடையதிரள் அஞ்சினவளவல்ல; ஆதலால், கஞ்சனை - உன்திறத்திலே வஞ்சனைகளைச்செய்த கம்ஸனை, உன்வஞ்சனையால் - நீயவன்திறத்திற்செய்த வஞ்சனையாலே, வலைப்படுத்தாய் - தப்பாதபடி யகப்படுத்தி முடித்தவனே, முலை - முலையை, உணாய்- அமுதுசெய்யவேணும்.

வ்யா. — நாலாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) உன்மேல் கறுவுதலையுடையனான கம்ஸனாலே உன்னை நலிகைக்காகக் கற்பிக்கப்

(க) சிலுகிட்டு - குற்றம்சாட்டி. (உ) அபலையான - ஸ்த்ரீயான. (ரு) நிரஙியமிக்கமாட்டேன் - நன்றாக சிக்ஷிக்கமாட்டேன்.

பட்ட க்ர்த்ரிமமான சகடமானது. அஸுராவிஷ்டமாய் வருகையா லே - கள்ளச்சகடென்கிறது. (கலக்கழிய) "தளர்ந்தும் முறிந்தும் உடல்வேறுப் பிளந்துவீய" என்கிறபடியே கட்டுக்குலைந்து உருமா ய்ந்துபோம்படியாக. (பஞ்சியித்யாதி) பஞ்சுபோலேம்ர்துவானதிரு வடிகளாலே உதைத்தபோது திருவடிகள் நோமென்று பயப்பட் டேன்காண். (அமரர்கோவே) தேவர்களுக்குநிர்வாஹகனானவனே. உன்னைக்கொண்டு தங்கள்விரோதியைப் போக்கி வாழவிருக்கிற வர்கள்பாக்யத்தாலேயிறே உனக்கொரு நோவுவாராம லிருந்ததெ ன்கை. (ஆயர்கூட்டத்தளவன்றாலோ) ஆயருடைய திரள் அஞ்சின வளவல்லகாண் நானஞ்சினபடி. ஆல், ஓ என்றவை - விஷாதஸூசக மான அவ்யயங்கள். (கஞ்சனைவித்யாதி) உன்திறத்திலே வஞ்சனை களைச்செய்த கம்ஸனை நீ அவன்திறத்திற்செய்த வஞ்சனையாலே தப் பாதபடி யகப்படுத்தி முடித்தவனே. (முலையுணாயே) இப்போது முலையை யமுதுசெய்யவேணும். (ச)

மூ.—தீயபுந்திக்கஞ்சனுன்மேற்சினமுடையன்சோர்வுபார்த்து
மாயந்தன்னால்வலைப்படுக்கில்வாழகில்லேன்வாசுதேவா
தாயர்வாய்ச் சொற்கருமங்கண்டாய் சாற்றிச் சொன்னேன்
போகவேண்டா, ஆயர்பாடிக் கணிவிளக்கே யமர்ந்துவந்
தென்முலையுணாயே.

ப - ரை.—தீயபுந்தி - துர்ப்புத்தியையுடைய, கஞ்சன் - கம்ஸனானவன், உன்மேல் - உன்மேலே, சினமுடையன் - மிகவும்குபிதனாயிராநின்றான்; சோர்வு பார்த்து - நீஅஸஹாயனாய்த்திரியும் ஸமயம்பார்த்து, மாயந்தன்னால் - வஞ்ச நத்தாலே, வலைப்படுக்கில் - நழுவாதபடி பிடித்துக்கொள்ளில், வாழகில்லேன்- வாழமாட்டேன், வாசுதேவா - வஸுதேவபுத்ரனானவனே, தாயர் - தாய்மார், வாய்ச்சொல் - வாக்காற்சொல்லுவது, கருமங்கண்டாய்-பிள்ளைகளுக்கு அவச் யம் செய்யத்தக்கதுகாண்; சாற்றிச்சொன்னேன் - இதுதன்னை ப்ரசஸ்த்த மாகச்சொன்னேன், போகவேண்டா - நீவிளையாடவுங்கூடத்தனித்து ஓரிடத் தில் போகவேண்டா; ஆயர்பாடிக்கு - திருவாய்ப்பாடிக்கு, அணிவிளக்கே - மங்களதீபமானவனே; அமர்ந்து - பொருந்தி, வந்து—, என்முலை - உனக்கெ ன்று சுரந்திருக்கிற என்னுடையமுலையை, உணாய் - அமுதுசெய்யவேணும்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தீயபுந்திக்கஞ்சன்) துர்ப்புத்தியான கம்ஸன். பிள்ளைக்கொல்லியிறே. * மக்களறுவரைக் கல்லிடைமோ தின பாபிஷ்டனிறே. (உன்மேல்சினமுடையன்) "தேவகியுடைய (க) அஷ்டமகர்ப்பம் உனக்குசத்ரு" என்று அசரீரி வாக்யத்தாலே கேட்டிருக்கையாலும், பின்பு துர்க்கை சொல்லிப் போனவார்த் தையாலும் "நமக்கு சத்ருவானவன் கைதப்பிப்போய் நம்மால் கிட்டவொண்ணாத ஸ்தலத்திலே புகுந்தான், இவனையொருவழியா

(க) அஷ்டமகர்ப்பம் - எட்டாவது கர்ப்பம்.

லே ஹிம்ஸித்ததாய்விடும்படியென்" என்றிருக்கையாலும், உன்னு டையமேலே மிகவும் க்ரோதமுடையவன். (சோர்வுபார்த்து) அவி ழ்ச்சிபார்த்து. அதாவது - நீ அஸஹாயனாய்த்திரியும் (க) அவஸரம் பார்த்தென்கை. (மாயந்தன்னால் வலைப்படுக்கில்) உன்னைநலிகைக் காகமாயாரூபிகளான ஆஸுரப்ரக்ருதிகளை (உ) திர்யக்காயும் (ங) ஸ்தா வரமாயுமுள்ள வடிவுகளைக்கொண்டு நீ வ்யாபரிக்கும் ஸ்தலங்களி லேநிற்கும்படிபண்ணி, நீயறியாமல் வஞ்சநத்தாலே நழுவாதபடி பிடித்துக்கொள்ளில். (வாழகில்லேன்) நான்பின்னை ஜீவித்திருக்கக்ஷ மையல்லேன்; முடிந்தேவிடுவேன். (வாசுதேவா) உன்னாலேயிறே ஸாதுவானவவரும் சிறைப்படவேண்டிற்று. (தாயரித்யாதி) தாய் மார்சொல்லு கார்யங்காண். அதாவது - (ச) உத்தேச்யதையாலும் பரிவாலும் தாய்மார்வாக்கால் சொல்லுவது பிள்ளைகளுக்கு (ரு) அவச்யகரணீயங்கா ணென்கை. (சாற்றிச்சொன்னேன் போகவே ண்டா) இதுதன்னைக் (சு) குன்னுங்குருச்சியாக வன்றிக்கே எல்லா ருமறியும்படி ப்ரஸித்தமாகச்சொன்னேன்; (எ) லீலார்த்தமாகவும் நீதனித்து ஓரிடத்தில் போகவேண்டா. (ஆயர்பாடிக்கணிவிளக்கே) திருவாய்ப்பாடிக்கு ஒருமங்களதீபமானவனே. அணி - அழகு. இத் தால் - எனக்கேயன்று, உனக்கொரு தீங்குவரில் (அ) இவ்வூராக இருள்மூடிவிடுங்கிடாயென்கை. (அமர்ந்தித்யாதி) ஆனபின்பு, பரப ரப்பைவிட்டு ப்ரதிஷ்டிதனாய்வந்து உனக்கென்று சுரந்திருக்கிற முலையை யமுதுசெய்யவேணும். (ரு)

மூ.—மின்னனையநுண்ணிடையார் விரிகுழன்மேனுழைந்தவண்டு,
இன்னிசைக்கும்வில்லிபுத்தூரினிதமர்ந்தாயுன்னைக்கண்டார்,
என்னநோன்பு நோற்றாள் கொலோ இவனைப்பெற்ற வயிறு
டையாள், என்னும்வார்த்தையெய்துவித்தவிருடீகேசாமுலை
யுணாயே.

ப-ரை.—மின்னனைய - மின்னலையொத்த, நுண் - நுண்ணிய, இடையார் - இடையையுடையவர்கள், விரி - விஸ்த்ர்தமான, குழல்மேல் - குழல்மேலே, நு ழைந்த-மதுவைப் பாநம்பண்ணுவதற்காகப்படிந்த, வண்டு - வண்டுகளானவை, இன் - இனிய, இசைக்கும்-இசைகளைப்பாடாநின்றுள்ள, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில் லிபுத்தூரிலே, இனிது-பரமபதத்திலுங் காட்டிலினிதாக, அமர்ந்தாய்-பொருந்தி வஸிக்கிறவனே, உன்னை-வடிவாலும் குணத்தாலும் செய்கையாலும் வேறுபட் டிருக்கிறவுன்னை, கண்டார் - கண்டவர்கள், இவனை - லோகத்தில்கண்டறி யாத வைலக்ஷண்யமுடையவிவனை, பெற்றவயிறுடையாள் - பெற்றவயிறுடை யவள், இதுக்குடலாக, என்னநோன்பு-என்னதபஸ்ஸை, நோற்றாள்கொலோ-

(க) அவஸரம்பார்த்து - ஸமயம்பார்த்து. (உ) திர்யக்கு - ம்ருகம். (ங) ஸ்தா வரம் - மரம்முதலியன. (ச) உத்தேச்யதை - முக்யம். (ரு) அவச்யகரணீயம் - அவச்யம் செய்யத்தக்கது. (சு) குன்னுங்குருச்சியாக - ஏகாந்தமாக. (எ) லீலார்த்தமாகவும் - விளையாட்டுக்காகவும். (அ) இவ்வூராக - இவ்வூர்முழுதும்.

பண்ணினளோ, என்னும் - என்றுபுகழ்ந்துசொல்லும், வார்த்தை - வார்த்தையை, எய்துவித்த - எனக்குண்டாக்கித்தந்த, இருடீகேசா - கண்டவர்களுடைய ஸர்வேந்த்ரியங்களையும் உன்வசமாக்கிக்கொள்ளும் வைலக்ஷண்யத்தையுடையவனே, முலை - முலையை, உணாய் - அமுதுசெய்யவேணும்.

வ்யா.—ஆறும்பாட்டு. (மின்னித்யாதி) மின்னோடொத்த நுண்ணிய இடையையுடையவர்களென்னுதல்; மின்னை ஒருவகைக்கு ஒப்பாகவுடைத்தாய், அவ்வளவன்றிக்கே, ஸூக்ஷ்மமான இடையையுடையவர்களென்னுதல். (விரிகுழல்மேல் நுழைந்தவண்டு) விஸ்த்ர்தமானகுழல்மேலே மதுபானார்த்தமாக (க) அவகாஹித்த வண்டுகளானவை. (இன்னிசைக்குமித்யாதி) மதுபானத்தாலேசெருக்கி யினியவிசைகளைப் பாடாநிற்கும் ஸ்ரீவில்லிபுத்தூரிலே, பரமபதத்திலுங்காட்டில் இனிதாகப்பொருந்தி வர்த்திக்கிறவனே. தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கலான தேசமாகையாலே திருவுள்ளம்பொருந்தி வர்த்திப்பது இங்கேயிறே. பரமஸாம்யாபந்நர்க்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கு மித்தனையிறே பரமபதத்தில்; இங்கு இரண்டும் ஸித்திக்குமே. (உன்னைக்கண்டா ரித்யாதி) நாட்டிற்பிள்ளைகளைப்போலன்றிக்கே, ரூபகுணசேஷ்டிதங்களால் (உ) வ்யாவ்ர்த்தனாயிருக்கிற வுன்னைக்கண்டவர்கள், நாட்டிலே (௩) பாக்யாதிகைகளாய் விலக்ஷணமான பிள்ளைகளைப் பெறுவாருமுண்டிறே. அவ்வளவன்றிக்கே, லோகத்தில்கண்டறியாத வைலக்ஷண்யத்தையுடைய விவனைப்பெற்ற வயிறுடையவள் இதுக்குடலாக என்னதபஸ்ஸைப் பண்ணினளோவென்று (ச) ச்லாகித்துச்சொல்லும் வார்த்தையை யெனக்குண்டாக்கித்தந்த. (இருடீகேசா) கண்டவர்களுடைய ஸர்வேந்த்ரியங்களையும் (ரு) வ்யக்த்யந்தரத்தில் போகாதபடி உன் வசமாக்கிக்கொள்ளும் வைலக்ஷண்யத்தை யுடையவனே, முலையுணாயே. (சு)

மூ.—பெண்டிர்வாழ்வார்நின்னொப்பாரைப்பெறுதுமென்னுமாசையாலே, கண்டவர்கள்போக்கொழிந்தார்கண்ணிணையாற்கலக்கநோக்கி, வண்டுலாம்பூங்குழலினருன் வாயமுதமுண்ண வேண்டிக், கொண்டுபோவான் வந்துநின்றார் கோவிந்தாநீ முலையுணாயே.

ப-ரை.—பெண்டிர் - தங்கள்நாயகருக்கு பார்யைகளாக, வாழ்வார் - வர்த்திக்கிறவர்களாய், கண்டவர்கள் - உன்னைக்கண்டவர்கள், நின்னொப்பாரை - உன்னையொத்தபிள்ளைகளை, பெறுதுமென்னும் - பெறவேணுமென்கிற, ஆசை

---

(க) அவகாஹித்த - படிந்த. (உ) வ்யாவ்ர்த்தனாய் - வேறுபாடுடையனாய். (௩) பாக்யாதிகைகள் - முற்பிறப்பில் நல்லதவஞ்செய்தவர்கள். (ச) ச்லாகித்துச்சொல்லும் - புகழ்ந்துசொல்லும். (ரு) வ்யக்த்யந்தரத்தில் - வேறொருவிஷயத்தில்.

யாலே—, போக்கொழிந்தார் - கால்வாங்கிப் போகமாட்டாதபடியாய் விட்டார்கள்; வண்டு - வண்டுகளானவை, உலாம் - மேலேநின்று ஸஞ்சரியாநின்றுள்ள, பூ - பூவாலே யலங்க்ருதமான, குழலினார் - குழலையுடையவர்கள், கண்ணிணையால் - தங்கள்கண்களாலே, கலக்கநோக்கி-உன்னுடைய ஓரோவவயவங்களையும் ஸேவித்து, உன் - உன்னுடைய, வாயமுதம் - வாகம்ர்தத்தை, உண்ண-புஜிக்க, வேண்டி - விரும்பினவர்களாய், கொண்டுபோவான் - உன்னைக்கொண்டு போவதாக, வந்துநின்றார் - வந்துநின்றார்கள்; ஆதலால், கோவிந்தா - ஸர்வஸுலபனானவனே, நீ—, முலையுணாய் - முலையுண்ணவேணும்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பெண்டிரித்யாதி) ஸ்வபர்த்தாக்களுக்கு பார்யைகளாய் வர்த்திப்பாராய் உன்னைக்கண்டவர்கள், உன்னைப்போலேயிருக்கும் பிள்ளைகளைப் பெறவேணுமென்னு மாசையாலே கால்வாங்கிப் போகமாட்டாதபடியாய் விட்டார்கள். (வண்டுலாம்பூங்குழலினார் - கண்ணிணையால் கலக்கநோக்கி) (க) பெருக்காற்றிலே யிழியமாட்டாமல் கரையிலேநின்று ஸஞ்சரிப்பாரைப் போலே, மதுவின் ஸம்ருத்தியாலே உள்ளே யவகாஹிக்கமாட்டாமல் வண்டுகளானவை மேலேநின்று ஸஞ்சரிக்கும்படி பூவாலே அலங்க்ருதமான குழலையுடையவர்கள் தங்களுடைய கண்களாலே உன்னுடைய ஸமுதாய சோபாதர்சநஞ்செய்து. கலக்கநோக்குகையாவது - ஓரவயவத்திலே உற்றுநிற்கை யன்றிக்கே, திருமேனியையெங்குமொக்கப்பார்க்கை. கீழ் - "பெண்டிர்வாழ்வார்" என்று-(உ) பக்வைகளாய் (ரு) பர்த்ர்பரதந்த்ரைகளாய் புத்ரஸாபேக்ஷைகளானவர்களைச் சொல்லிற்று; இங்கு, வண்டுலாம் பூங்குழலினாரென்று - ப்ராப்த யௌவநைகளாய் (ச) போகஸாபேக்ஷைகளானவர்களைச் சொல்லுகிறது. (உன்னித்யாதி) உன்வாகம்ர்தம் புஜிக்கவேண்டி யுன்னையெடுத்துக்கொண்டுபோவதாக வந்துநின்றார்கள். (கோவிந்தா) ஸர்வஸுலபனானவனே. உன் (ரு) ஸௌலப்யத்துக்கு இது சேராது. (நீமுலையுணாயே) அதுவேண்டினபடியாகிறது, நீயிப்போது முலையுண்ணவேணும். (எ)

மூ.—இருமலைபோலெதிர்ந்தமல்லரிருவரங்கமெரிசெய்தாயுன்
திருமலிந்துதிகழ்மார்வுதேக்கவந்தென்னல்குலேறி
ஒருமுலையைவாய்மடுத்தொருமுலையைநெருடிக்கொண்டு
இருமுலையுமுறைமுறையாவேங்கியேங்கியிருந்துணாயே.

ப-ரை.—இருமலைபோல் - இரண்டுமலைபோலே, எதிர்ந்த - மிகப்பொருவதாக வெதிர்த்துவந்த, இருவர்மல்லர் - சாணூர முஷ்டிகராகிற இரண்டு மல்லருடைய, அங்கம் - சரீரமானது, எரி - பயாக்நியாலே, செய்தாய் - தக்தமாய்

(க) பெருக்காறு - வெள்ளமிடுகிற நதி. (உ) பக்வைகளாய் - யுவதிகளாய். (ரு) பர்த்ர்பரதந்த்ரைகளாய் - கணவர்க்குக் கீழ்ப்படிந்தவராய். (ச) போகஸாபேக்ஷைகள் - அநுபவிக்க விருப்பமுள்ளவர்கள். (ரு) ஸௌலப்யம் - ஸுலபமாயிருக்கை.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (அங்கமலமித்யாதி) நிறத்தாலும் மணத்தாலும் (க) செவ்வியாலும் (உ) விகாஸத்தாலும் அழகியதாயிருக்கும் தாமரைப்பூவினிடத்தில். போது - புஷ்பம். அகம் - இடம். (அணியித்யாதி) நீர்மையாலும் ஒளியாலும் அழகையுடைத்தான முத்துக்களானவை சிதறினாற்போலே. (செங்கமலமித்யாதி) சிவந்து மலர்ந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற திருமுகமானது குறுவெயர்ப்பரும்பும்படியாக. (திமையித்யாதி) இம்முற்றத்துள்ளே நின்று திம்புகளைச்செய்து உடம்பெல்லாம் புழுதியாகவிருந்து புழுதியளையவேண்டா. (அம்ம) ஸ்வாமியென்னுதல்; இவன் சேஷ்டித தர்சநத்தால்வந்த (௩) ஆச்சர்யோக்தியாதல். (விம்மவித்யாதி) துர்வாஸசாபோபஹதராய் அஸுரர்கள் கையிலே யீடுபட்டுச் சாவாமைக்கு மருந்துபெறுகைக்கு உன்னைவந்தாச்ரயித்த தேவர்களுக்கு, அத்தசையிலே வயிறுநிரம்ப அம்ர்தத்தை யிடுகையாலே அவர்களுக்கு நிர்வாஹகனானவனே. (முலையுணாயே) அப்போது அவர்களபேக்ஷைக்காக அதுசெய்தாற்போலே, இப்போது என்னுடைய வபேக்ஷைக்காக நீ முலையுண்ணவேணுமென்கை. (௯)

மூ.—ஓடவோடக்கிண்கிணிகளொலிக்குமோசைப்பாணியாலே
பாடிப்பாடிவருகின்றாயைப்பற்பநாபனென்றிருந்தேன்
ஆடியாடியசைந்தசைந்திட்டதனுக்கேற்றகூத்தையாடி
ஓடியோடிப்போய்விடாதேயுத்தமாநீமுலையுணாயே.

ப-ரை.—ஓடவோட - பால்யத்துக்கீடான செருக்காலேபதறியோடவோட, கிண்கிணிகள் - பாதச்சதங்கைகளான கிண்கிணிகள், ஒலிக்கும் - த்வநிக்கிற, ஓசை - த்வநியாகிற, பாணியாலே - சப்தத்தாலே, பாடிப்பாடி - வாயால்இடைவிடாமல்பாடிக்கொண்டும், அதனுக்கேற்ற - அதுக்குத்தக்க, கூத்தை—, அசைந்தசைந்திட்டாடியாடி - அசைந்தசைந் தாடிக்கொண்டும், வருகின்றாயை - இப்படியென்னை நோக்கி வாராநின்றுள்ளவுன்னை, பற்பம் - தாமரையை, நாபன் - திருநாபியிலே யுடையனாயிருப்பவனன்றோ, என்று-சதங்கையோசையும் நடையழகுந்தானே பாட்டுமாட்டுமாயிருந்த தீ! என்று, இருந்தேன் - ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தேன்; ஆனபின்பு, உத்தமா நீ - புருஷோத்தமனான நீ, ஓடியோடிப்போய்விடாது - ஓடியோடிப் போகாமல், முலையுணாய் - முலையை யுண்ணவேணும்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (ஓடவோடவித்யாதி) நடக்கும்போது மெத்தென நடக்கையன்றிக்கே, பால்யத்துக்கீடான செருக்காலே பதறியோடவோட, பாதச்சதங்கைகளான கிண்கிணிகள் த்வநிக்கும் த்வநியாகிற சப்தத்தாலே. (பாடிப்பாடி - அதனுக்கேற்றகூத்தை - அசைந்தசைந்திட்டு-ஆடியாடி) அந்தப்பாட்டுக்குத் தகுதியான ந்ர்த்

---

(க) செவ்வி - அழகு. (உ) விகாஸம் - மலர்ச்சி. (௩) ஆச்சர்யோக்தி - வியப்புச்சொல்.

தத்தை திருமேனி யிடம்வலங்கொண்டு அசைந்தசைந்திட்டு நடக்கிறநடையாலே யாடியாடி. * கூத்தன்கோவலனிறே. நடக்கிறநடையெல்லாம் வல்லாராடினாற்போலேயிறே யிருப்பது. ஆகையால் விரைந்து நடந்துவரும்போது திருவடிகளிற் சதங்கைகளினுடைய வோசைகள்தானேபாட்டாய், நடக்கிறநடையெல்லாம் ஆட்டமாயிருக்குமாய்த்து. அன்றிக்கே, கிண்கிணிகளொலிக்குமோசை தாளமாக வாயாலே பாடிப்பாடி, அதனுக்கேற்றகூத்தை யசைந்தசைந்திட்டாடியாடியென்று பொருளாகவுமாம். (வருகின்றாயைப் பற்பநாபனென்றிருந்தேன்) இப்படி யென்னைநோக்கி வாராநின்றுள்ளவுன்னை "கொப்பூழிலெழுகமலப் பூவழகர்" என்கிறபடியே வேறாபரணம்வேண்டாதே திருநாபிகமலந்தானே ஆபரணமாம்படி யிருப்பானொருவனன்றோ, இவனுக்கு வேறொருபாட்டும் ஆட்டும் வேணுமோ, சதங்கையோசையும் நடையழகுந்தானே பாட்டுமாட்டுமாயிருந்தபடி யென்னென்று ஆச்சர்யப்பட் டிருந்தே னென்னுதல். அழிந்துகிடந்தத்தை யுண்டாக்குமவனன்றோ, நம்முடைய ஸத்தையைத் தருகைக்காக வருகிறானென் றிருந்தேனென்னுதல். (ஓடியோடி யித்யாதி) இவள் சொன்னதின்கருத்தறியாதே, "இவள் நம்முடைய நீர்மையைச்சொல்லாமல் (க)ஸ்வாதந்த்ர்ய ப்ரகாசகமான மேன்மையைச் சொல்லுவதே!" என்றுமீண்டு ஓடிப்போகத்தொடங்குகையாலே, இப்படியாடிக்கொண்டு என்கைக்கெட்டாதபடி ஓடியோடிப்போய்விடாதே நீபுருஷோத்தம னாகையாலே ஆச்ரிதபரதந்த்ரனானபின்பு என்வசத்திலேவந்து என்முலையை யுண்ணவேணுமென்கிறாள். (கo)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வாரணிந்தகொங்கையாச்சிமாதவாவுண்ணென்றமாற்றம்
நீரணிந்தகுவளைவாசநிகழ்நாறும்வில்லிபுத்தூர்ப்
பாரணிந்ததொல்புகழான்பட்டர்பிரான்பாடல்வல்லார்
சீரணிந்தசெங்கண்மான்மேற்சென்றசிந்தைபெறுவர்தாமே.

ப-ரை.—வார் - கச்சாலே, அணிந்த - அலங்க்ர்தமான, கொங்கை - முலையையுடையளான, ஆச்சி - தாயாரான யசோதைப்பிராட்டி, மாதவா - ஸ்ரீய:பதியானவனே, அவதாரத்தின் மெய்ப்பாட்டுக்கீடாக, உண்ணென்ற - முலையுண்ணென்ற, மாற்றம் - சப்தத்தை, நீர்-நீருக்கு, அணிந்த - அலங்காரமாக வலர்ந்த, குவளை - செங்கழுநீரினுடைய, வாசம் - பரிமளமானது, நிகழ் - ஒருபடிப்பட, நாறும் - வீசாநின்றுள்ள, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய், பார் - பூமியெங்கும் கொண்டாடும்படி, அணிந்த-பரவினதாய், தொல் - ஸ்வாபாவிகமான, புகழான்-புகழையுடையராய், பட்டர்பிரான் - ப்ராஹ்மணோத்தம

(க) ஸ்வாதந்த்ர்யம் - தன்வயத்தனாதல்.

ரான பெரியாழ்வாரருளிச்செய்த, பாடல் - பாட்டுக்களை, வல்லார்தாம் - அப்ய ஸிக்கவல்லவர்கள், சீர் - ஆத்மகுணங்களாலே, அணிந்த - அலங்க்ர்தனாய், செம் - அவயவசோபைக்கு ப்ரகாசகமாய்ச்சிவந்த, கண் - திருக்கண்களையுடையனாய், மால்மேல் - ஆச்ரிதர்பக்கல் வ்யாமோஹனா யிருக்குமவன்விஷயத்தில், சென்ற - ஒருபடிப்படச்சென்ற, சிந்தைபெறுவர் - மநஸ்ஸையுடையராவர்.

வ்யா.—(வாரணிந்தகொங்கையாச்சி) ராஜாக்களுக்கு (க)அபிமதமானத்ரவ்யங்களை பரிசாரகரானவர்கள்கட்டி (உ) இலச்சினையிட்டு, (ங) கொண்டு திரியுமாபோலே, க்ர்ஷ்ணனுக்கு (ச) போக்யமானமுலைகள் பிறர்கண்படாதபடி கச்சாலேசேமித்துக்கொண்டு திரிகையாலே வாராலே அலங்க்ர்தமான முலையையுடையவளான ஆச்சியென்று ச்லாகித்துக்கொண்டு அருளிச்செய்கிறார். (மாதவாவுண்ணென்றமாற்றம்) ஸ்ரீய:பதியாகையாலே அவாப்த ஸமஸ்த காமனானவனை அவதாரத்தின் மெய்ப்பாட்டுக்கீடாக முலையுண்ணென்ற சப்தத்தை. (நீரித்யாதி) நீருக்கலங்காரமாகவலர்ந்த செங்கழுநீரினுடைய பரிமளமானது ஒருபடிப்பட ப்ரகாசியாநிற்கிற ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய். (பாரித்யாதி) பூமியில் ராஜாக்களில் ப்ரதாநனான பாண்டியனும், (ரு) ஜ்ஞாதாக்களில் ப்ரதாநரான (சு) செல்வநம்பி துடக்கமானவர்க ளளவன்றிக்கே, பூமியெங்கும் கொண்டாடும்படி வ்யாப்தமாய், வந்தேறி யன்றிக்கே, ஆத்மாவுக்கு ஸ்வர்பாவிகமான புகழையுடையராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வா ரருளிச்செய்த பாடலை அப்யஸிக்க வல்லவர்கள். (சீரித்யாதி) ஆத்மகுணங்களாலே அலங்க்ர்தனாய் அவயவசோபைக்கு ப்ரகாசகமான சிவந்ததிருக்கண்களையுடையனாய் இவை யிரண்டையும் ஆச்ரிதரநுபவிக்கும்படி அவர்கள்பக்கல் வ்யாமோஹத்தையுடையனா யிருக்குமவன் விஷயத்தில். அன்றிக்கே, சீரித்யாதிக்கு- ஆச்ரிதபாரதந்த்ர்யமாகிற குணத்தாலே யலங்க்ர்தனாய், இந்நீர்மைக்கும் மேன்மைக்கும் ப்ரகாசகமான சிவந்த திருக்கண்களையுடையனாய் ஸர்வஸ்மாத்பரனா யிருக்கிறவன்விஷயத்திலேயென்று பொருளாகவுமாம். (சென்றவித்யாதி) பாடல் வல்லார்தாம் செங்கண்மால் பக்கலிலே யொருபடிப்படச்சென்றமநஸ்ஸை யுடையராவர். (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—அரவணைவைத்த தந்தம்கஞ்சன் தீயமின்பெண்டிர் இருமலை யங்கமலமோட வாரணிபோய்.

---

ஆ திருமொழி கக-க்கு, பாட்டு-கஉஎ.

---

(க) அபிமதமான - இஷ்டமான. (உ) இலச்சினையிட்டு - முத்திரைவைத்து. (ங) கொண்டு - கையில்கொண்டு. (ச) போக்யம் - புஜிக்கத்தக்கது. (ரு) ஜ்ஞாதாக்கள் - அறிவுடையார். (சு) செல்வநம்பி - பாண்டியன்மந்திரி.

அ.—கீழ்த்திருமொழியிலே- இவனுடைய பாலாநுகுணமாக முலையுண்கையை மறந்துகிடந்து உறங்குகிறவனையெழுப்பி, முலையுண்ணவேணுமென்றபேக்ஷித்து, அவன் இருய்த்துநிரிந்தவளவிலும் விடாதே (க) பஹுமுகமாக (உ)நிர்ப்பந்தித்து சோதைப்பிராட்டி முலையூட்டினப்ரகாரத்தை, அவளுடைய பக்தியையும் ஸ்நேஹத்தையு முடையராய்க்கொண்டு தத்காலம்போலே அவனைக்குறித்துப்பேசி யநுபவித்து இனியராளுர்; அவள் யவனுக்குக் காதுகுத்திக் காதுபெருக்கிக் காதுப்பணிகளுமிட்டநுவிக்க வாசைப்பட்டு, காதுகுத்துகையாகிற உத்ஸவத்துக்கு ஊல் பெண்களையெல்லாம் அழைத்துவிட்டு, வந்தவர்களை (ந) ஸம்பவிக்கைக்கீடான பதார்த்தங்களும் ஸம்பாதித்துவைத்து, "அவனைக்காதுகுத்த" என்று அழைக்க, அவன் "நோம்" என்று அஞ்சி "மாட்டேன்" என்னச்செய்தேயும் அவனஞ்சாதபடியான வசநங்களைச் சொல்லியும் அவனுக்கு அபிமதமான பதார்த்தங்களைக் காட்டியும் உடன்படுத்திக்கொண்டு காதுபெருக்கினப்ரகாரத்தை, தாமும் அவளைப்போலே அநுபவிக்க வாசைப்பட்டு, தத்ததவஸ்தாபந்நராய்க்கொண்டு தத்காலம்போலே அவனைக்குறித்துப்பாசுரங்களையுபேசி யநுபவித்து ப்ரீதராகிரு ரித்திருமொழியில்.

மூ.—போய்ப்பாடுடைய நின்தந்தையுந்தாழ்த்தான் பொருதிறற்
கஞ்சன்கடியன், காப்பாருமில்லைக் கடல்வண்ணு வுன்னைத்
தனியேபோயெங்குந்திரிதி, பேய்ப்பால் முலையுண்ட பித்த
னே கேசவனம்பீ யுன்னைக்காதுகுத்த, ஆய்ப்பாலர்பெண்டுக
ளெல்லாரும்வந்தாரடைக்காய்திருத்திநான்வைத்தேன்.

ப-ரை.—பாடுடைய - புத்ரரக்ஷணத்திலும் ஸர்வ ஜீவரக்ஷணத்திலும் இடமுடைத்தான நெஞ்சையுடைய, நின் - உன்னுடைய, தந்தையும் - பிதாவும், போய் - பசுக்களின்பின்னே போய், தாழ்த்தான் - வரத்தாமஸித்தான்; பொரு - போர்செய்தற்குத்தக்க, திறல் - மிடுக்கையுடைய, கஞ்சன்-கம்ஸனானவன், கடியன் - உள்ளளவில் மிகக்கொடியனு யிராநின்ருன்; கடல்வண்ணு - கடல்போலே ச்ரமஹரமான வடிவையுடையவனே, உன்னை - இப்படிப்பட்ட வடிவழகையுடைய வுன்னை, காப்பாரும் - நலல விரகறிந்து ரக்ஷிக்கவல்லாரும், இல்லை - இங்கேயில்லை; தனியே - தனிமையாகவே, எங்கும் - எவ்விடத்திலும், போய் - சென்று, திரிதி - திரியாநின்ருய்; பேய் - பூதனையுடைய, முலைப்பால் - முலைப்பாலை, உண்ட—, பித்தன் - ப்ராந்தனுய், கேசவன் - கேசிஹந்தாவாய், நம்பீ - சௌர்யபூர்த்தியையுடையனுன, உன்னை—, காதுகுத்த - காதுகுத்துகைக்காக, ஆய்ப்பாலர் - இடையர்களும், ஆய்ப்பெண்டுகளெல்லாரும் - இடைப்பெண்களெல்லாரும், வந்தார் - வந்தார்கள்; வந்தவர்களை ஸம்பாவிக்கைக்கிடான, அடைக்காய் - அடைக்காய்முதலியவற்றை, நான்—, திருத்திவைத்தேன் - ஆயத்தம் செய்துவைத்தேன்.

(க) பஹுமுகமாக - பலபடியாக. (உ) நிர்ப்பந்தித்து - கட்டாயஞ்செய்து. (ந) ஸம்பாவித்தல் - பஹுமாநஞ்செய்தல்.

வ்யா.—முதற்பாட்டு. (போயித்யாதி) (பாடுடைய நின்தந்தையும்-போய்-தாழ்த்தான்) புத்ரரக்ஷணத்திலும் ஸ்வஜநரக்ஷணத்திலும் இடமுடையநெஞ்சையுடையனான உன்னுடையபிதாவும் "பசுக்கடையிலேசென்றுவருகிறேன், வருமளவும் நீபிள்ளையை ரக்ஷித்துக்கொள்"என்றுபோய் வரவுதாழ்த்தான். அன்றிக்கே, போய் என்கிறவிது-மிகுதிக்குவாசகமாய், ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே மிகவுமளவுடையனாய் "கூர்வேற்கொடுந்தொழிலன்" என்கிறபடியே பிறந்தவன்று துடங்கி வேலைப்புகரெழக்கடைந்து தொட்டிற்கீழே ஒரொறும்பூரிலும் ஸிம்ஹத்தின்மேலே சீறுமாபோலேசீறி, உன்னை நோக்கிக்கொண்டுதிரியும் பிதாவானவனும் கார்யார்த்தமாகப்போனவிடத்தே விளம்பித்தானென்னவுமாம். (பொருதிறல் கஞ்சன் கடியன்) பொருகையிலேமிடுக்கையுடைய கம்ஸன் உன்னளவில் மிகவும் க்ரூரன். உன்னை நலிகைக்கு (க) இடம் பார்த்துத்திரிகிறவனாகையாலே ஆனைவரவிடும், எதுசெய்விக்கும் என்று தெரியாது.

(காப்பாருமில்லை) அதுக்கு நல்விரகறிந்து ரக்ஷிக்கவல்லாருமிங்கில்லை. ரக்ஷகரானவவர் வந்திலர், நானோ (உ) அபலை, வேறொருபரிவர் காணவில்லை, யார்தான் ரக்ஷிப்பார். (கடல்வண்ணா வுன்னை) "தன்னேராயிரம் பிள்ளைகள்" என்கிறபடியே இவ்வூரில் திரிகிறவநேகம் பிள்ளைகளுக்குள்ளே நானுமொருவனாய்த் திரியாநின்றால் என்னை அவர்கள் அறியப்புகாநின்றார்களோவென்று நீநினைக்கவேண்டா, கடல் போலே ச்ரமஹரமாயிருக்கிற வுன்வடிவழகே யுன்னைக்காட்டிக்கொடாதோ; இப்படியிருக்கிற வுன்னையுணர்ந்து ரக்ஷிப்பாரு மில்லையென்னுதல். ஒருவிரோதிகளில்லையேயாயினும் (ந) அஸ்தாநே பயசங்கைபண்ணி மங்களாசாஸநம் பண்ணவேண்டும்படியான அழகுடைய வுன்னை (ச) விரோதிபூயிஷ்டமான விவ்விடத்தில் பரிவராய் ரக்ஷிப்பாரு மில்லையென்னுதல். (தனியேபோயெங்குந்திரிதி) பிள்ளைகள்தன்னோடே திரிகிறாயென்னவுமொண்ணாதபடி அவர்களையும்விட்டுத்தனியேபோய் எங்கும்ஸஞ்சரியாநின்றாய்.

அவர்கள்தன்னோடேகூடப் போனாற்றான் ப்ரயோஜநமென்; (பேய்ப்பால் முலையுண்டபித்தனே) பேயானவள் தாய்வடிவைக்கொண்டுவர, அவளைத் தாயாகவேநினைத்து அவள் முலைப்பாலையிருந்துண்ட ப்ராந்தன் நீயல்லையோ. ஆகையால், மாயாரூபிகளான வஸுரர்கள், (ரு) ஒக்கவிளையாடுகிறபிள்ளைகளோடொத்தவடிவைக்

(க) இடம்பார்த்து - ஸமயம்பார்த்து. (உ) அபலை - ஸ்த்ரீ. (ந) அஸ்தாநே - இடமில்லாதவிடத்திலே. (ச) விரோதிபூயிஷ்டமான - பகைவர்கூட்டமான. (ரு) ஒக்க - கூட.

கொடுவந்துகலசிநின்றாலும் அவர்களைப்பிள்ளைகளோபாதி தோழன்மாராக நினைப்பானொருவனிறேயென்கை. (கேசவனம்பீ) இப்படியென்செய்ய பயப்படுகிறது, நான் கேசவனம்பியன்றோ, என் கையிலேகேசிபட்டதறியாயோவென்று தன் சௌர்யபூர்த்தியைக்காட்ட, அத்தை யவ்வளவிலேவிட்டு, தான் உபக்ரமித்த கார்யத்திலே புரிந்து, நானேயன்றுகாண், உன்னைக்காதுகுத்துவதாக ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தார்காண்; வந்தவர்களை ஸம்பாவிக்கைக்கீடான அடைக்காய் முதலானவையும் நான் திருத்திவைத்தேன்; ஆனபின்பு, நீகாதுகுத்தும்படி வரவேணுமென்கிறாள். (க)

மூ.—வண்ணப்பவளமருங்கினிற்சாத்திமலர்ப்பாதக்கிண்கிணியார்ப்ப, நண்ணித்தொழுமவர்சிந்தைபிரியாத நாராயணாவிங்கே வாராய், எண்ணற்கரியபிரானே திரியையெரியா மேகாதுக்கிடுவன், கண்ணுக்குநன்று மழகுமுடைய கநகக்கடிப்புமிவையா.

ப - ரை.—வண்ணம் - நிறமுடைத்தாயிருந்துள்ள, பவளம் - பவளவடத்தை, மருங்கினில் - திருவரையிலே, சாத்தி—, மலர் - தாமரைப் பூப்போலேயிருக்கிற, பாதம் - திருவடிகளிற் சாத்தியிருக்கும், கிண்கிணி - கிண்கிணியானது, ஆர்ப்ப - சப்திக்கும்படியாக, நண்ணி - உன்னைக்கிட்டி, தொழுமவர் - தொழுகையே தொழிலாயிருக்கு மவர்களுடைய, சிந்தை - மநதில்நின்றும், பிரியாத - க்ஷணகாலமும் விட்டுநீங்காத, நாராயணா - நாராயணனே, இங்கு - நானழைக்கிற விவ்விடத்துக்கு, வாராய் - வந்தருளவேணும்; எண்ணற்கு-உன்பக்கல் ஸ்நேஹமில்லாதார்க்கு நினைக்கைக்குங்கூட, அரிய - அரியனாயிருக்கும், பிரானே - உபகாரகனானவனே, திரியை—, காதுக்கு - உன்காதுகளுக்கு, எரியாமே - எரிச்சல்வாராதபடி, இடுவன்—; கண்ணுக்கு—, நன்றும்-மிகவும், அழகுடைய - அழகையுடைத்தாயிருக்கிற, கநகக்கடிப்பிவை-பொற்கடிப்புக்களானவிவை, ஆ - இருக்கிறபடி பாராய்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வண்ணமித்யாதி) ஆகரத்திலே பிறக்கையாலே நிறமுடைத்தாயிருந்துள்ள பவளத்தினுடைய வடத்தை அதுதனக்கும் அழகுகொடுக்கவற்றான திருவரையிலேசாத்தி. (மலரித்யாதி) தாமரைப்பூப்போலேயிருக்கிற திருவடிகளிற் சதங்கைகளானவை த்வநிக்க. திருவரையும் பவளவடமுமான சேர்த்தியழகுதோற்றும்படியாகவும் திருவடிகளிற்சாத்தின சதங்கைகள் த்வநிக்கும்படியாகவும் வரவேணுமென்று கருத்து. (நண்ணியித்யாதி) அஹங்காராதிகளாலே உன்னையகன்றுதிரிகையன்றிக்கே, (க) தத்ராஹித்யத்தாலே உன்னைக்கிட்டி (உ) ஸ்வசேஷத்வாநுரூபமாகத் தொழுகையே யாத்ரையாயிருக்குமவர்களுடையநெஞ்சை, "நின்று

(க) தத்ராஹித்யம் - அது இல்லாமை. (உ) ஸ்வசேஷத்வாநுரூபமாக - தங்கள் தாழ்ச்சிக்குத்தக்கபடி.

மிருந்துங்கிடந்துந் திரிதந்தும்" என்கிறபடியே (க) இஷ்டஸர்வ சேஷ்டா விஷயமாகக்கொண்டு க்ஷணகாலமும் விட்டுப்பிரியாதே வர்த்திக்கும் நாராயணனே நானழைக்கிற விவ்விடத்தேவாராய். (எண்ணற்கரியபிரானே) உன்பக்கல் ஸ்நேஹமில்லாதார்க்கு நினைக்கைக்குங்கூடவரியனுயிருக்கும் உபகாரகனானவனே. ஆச்ரிதர்க்கு ஸுலபனுயிருக்கையும், அநாச்ரிதர்க்கு துர்லபனுயிருக்கையும், மங்களாசாஸந பரராயிருப்பார்க்குத் தம்பேறுயிறேயிருப்பது. நீ யென்னை யழைக்கிறது, திரியை என்காதுளரிய இடுகைக்கன்றேவென்ன (திரியையெரியாமே காதுக்கிடுவன்) திரியை யுன்காதுகளுக்கு எரிச்சல் வாராதபடி யநுகூலமாக இடுவன். (கண்ணுக்கித்யாதி) திரியேற்றிக்காதுபெருக்கினுல் உனக்கிடுவதாகச்சமைத்த, கண்ணுக்குமிகவும் அழகையுடைத்தா யிருக்கிற பொற்கடிப்புக்களான விவையு மிருக்கிறபடி பாராய். அழகும் என்றவிடத்தில், (உ) சசப்தம் (௩) அவ்யயம். நன்று மழகுடையவென்றும் கநகக்கடிப்பென்றும் சொன்னவிவை யிரண்டாலும் - பணித்திருத்தமும் (௪) உபாதாநவைலக்ஷண்யமும் சொல்லுகிறது. (உ)

மூ.—வையமெல்லாம்பெறும் வார்கடல்வாழுமகரக்குழை கொண்டுவைத்தேன், வெய்யவேகாதிற் றிரியையிடுவன் நீவேண்டியதெல்லாந்தருவன், உய்யவிவ்வாயர்குலத்தினிற் றேன்றியவொண்சுடராயர் கொழுந்தே, மையன்மைசெய்திளவாய்ச்சியருள்ளத்து மாதவனேயிங்கேவாராய்.

ப-ரை.—வையமெல்லாம் - பூமியெல்லாம், பெறும் - விலைபெறும்படி பெருவிலையனுய், வார் - நீண்ட, கடல் - கடலிலே, வாழும் - வர்த்திக்கிற, மகரம் - முதலைபோலே யிருக்கிற, குழை - காதுப்பணிகளை, கொண்டுவைத்தேன்—; கண்டேசமிக்கும்படி, காதில் - காதுகளிலே, திரியை—, வெய்யவே - வெச்சாப்போடே, இடுவன் - இடுவேன்; நீவேண்டியதெல்லாம் - நீவிரும்பிய பணியாரவகைகளையும் பழவகைகளையும், தருவன் - தருவேன்; உய்ய - யாவருமுஜ்ஜீவிக்கும்படி, இவ்வாயர்குலத்தினில் - இவ்விடைக்குலத்திலே, தோன்றிய - வந்து பிறந்து, ஒண்சுடர் - மிகவும் தேஜஸ்ஸுடையனுயிருப்பானுய், ஆயர் - இடையர்க்கு, கொழுந்தே - தலைவனானவனுய், இளவாய்ச்சியர் - யுவதிகளான விடைப்பெண்களை, மையன்மைசெய்து - உன்ஸௌந்தர்யாதிகளாலே மதிமயங்கும்படிபண்ணி, உள்ளத்து - அவர்களுடையநெஞ்சில் எப்பொழுது மிருப்பவனுய், மாதவனே - உன்னுடைய நெஞ்சைத்திறைகொள்ளுகிற பெரியபிராட்டிக்கு நாதனானவனே, இங்கேவாராய் - இங்கே யெழுந்தருளவேணும்.

வ்யா.—மூன்றும்பாட்டு. (வையமித்யாதி) பொற்கடிப்பளவேயல்ல, காதுபெருக்கினுல் இடும்படியாக பூமியெல்லாம்பெறும்

(க) இஷ்டஸர்வசேஷ்டாவிஷயமாக - இஷ்டமான பலவகை விளையாட்டுக்களாக. (உ) சசப்தம் - உம்மை. (௩) அவ்யயம் - சாரியை. (௪) உபாதாநம் - முதற்பொருள்.

பெருவிலையனான, நீண்டகடலிலே வர்த்திக்கும் மகரம்போலே யிருக்கிற காதுப்பணிகொண்டு வைத்தேனென்ன; நீ யிதுசொல்லுகிறது, இப்போது என்காதுக்குத் திரியிடுகைக்காகவன்றோ, திரியிட்டபோதே காதுதினவு தின்றுவரும், எனக்கு வேண்டாவென்ன; (வெய்யவேகாதில் திரியையிடுவன்) கண்டுதி சமிக்கும்படி (க) வெச்சாப்போடே காதுகளிலே திரியையிடுவனென்றவிடத்திலும் அவனிசையாமையாலே, இசைகைக்காக (நீ வேண்டியதெல்லாந் தருவன்) நீ விரும்பி யிருக்கும் (உ) அபூபபலாதிகளெல்லாம் தருவேனென்ன; அவ்வளவிலும் அவன் வாராமையாலே (உய்யவிவ்வாயர் குலத்தினிற்தோன்றிய வொண்சுடராயர் கொழுந்தே) (ங) இருந்ததேகுடியாகவுஜ்ஜீவிக்கும்படி இவ்விடைக்குலத்திலேவந்துபிறந்து, அதுதானே யுனக்குமிகவும்தேஜஸ்ஸாம்படியிருப்பானாய், வேரிலே (ச) வெக்கைதட்டினால் கொழுந்து முற்படவாடுமாபோலே இடையருக்கு ஒருவ்யஸநம்வரில் முந்துறவுன்முகம்வாடும்படி அவர்களுக்குத் தலைவனானவனே. (மையன்மைசெய்திளவாய்ச்சியருள்ளத்து மாதவனே) ஒருபருவத்தினிடைப்பெண்களை உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே மதிமயங்கும்படிபண்ணி, அவர்களுடைய நெஞ்சுக்கு ஸர்வகாலமும் விஷயமாம்படியிருப்பானாய், உன்னுடைய நெஞ்சைத் (ரு) திறைகொள்ளும்பிராட்டிக்கு வல்லபனானவனே இங்கு வாராய் என்று ஸ்துதிபூர்வகமாக வழைக்கிறாள். (ங)

மூ.—வணநன்றுடைய வைரக்கடிப்பிட்டு வார்காதுதாழப் பெருக்கிக், குணநன்றுடையரிக் கோபாலபிள்ளைகள் கோவிந்தா நீ சொல்லுக்கொள்ளாய், இணைநன்றழகியவிக்கடிப்பிட்டாலினிய பலாப்பழந்தந்து, சுணநன்றணிமுலை யுண்ணத்தருவன் நான்சோத்தம்பிரா னிங்கேவாராய்.

ப-ரை.—நன்று - நல்ல, வண்ணமுடைய - நிறத்தையுடைத்தான, வைரக்கடிப்பு - வைரக்கடுக்கனை, இட்டு—, வார் - நீண்ட, காது - காதானது, தாழ - தோளளவும் தாழும்படியாக, பெருக்கி—, இக்கோபாலபிள்ளைகள்-இவ்விடைப்பிள்ளைகள், தாய்மார் முதலானோர் சொல்லிற்றுச்செய்கையாலே, நன்று-நல்ல, குணமுடையர்-குணமுடையவர்களா யிருக்கிறார்கள்; இப்படியிருக்க, கோவிந்தா-ஸௌலப்யத்துக்குக் கோவிந்தனென்னும் பேரிட்டுக்கொண்டிருக்கிற, நீ—, சொல்லு-என்சொல்லை, கொள்ளாய்-கைக்கொள்ளுகிறாயில்லை; இணை - ஒன்றுக்கொன்றொப்பாய், நன்றழகிய-மிகவுமழகியதாயிருக்கிற, இ-இந்த, கடிப்பு-காதணியை, இட்டால் - நீயணிந்துகொள்ளுவதியாகில், இனிய - உனக்கினிதான, பலாப்பழம் - பலாப்பழத்தை, தந்து - அளித்து, சுணங்கு - வெள்ளைபடர்ந்த,

(க) வெச்சாப்பு - உஷ்ணம். (உ) அபூபம் - இலட்டுகம் முதலியன. (ங) இருந்ததேகுடியாக - அங்கிருந்த குடிகள்யாவரும். (ச) வெக்கை - உஷ்ணம். (ரு) திறை - கப்பம்.

ஈன்று - ம்ர்துவாய், அணி - அழகியதான, முலே-முலேயை, உண்ண-நீயுண்ணும் படி, நான்—, தருவன் - கொடுப்பேன்; பிரான் - உபகாரகனுனவனே, சோத்தம் - உன்னேக்கும்பிடுகிறேன்; இங்கேவாராய் - இங்கேவந்தருளவேணும்.

வ்யா.—நாலாம்பாட்டு. (வணமித்யாதி) இப்படி ஸ்துதித்துக் கொண்டழைத்தவிடத்திலும் வாராமையாலே, இது தன்னேச் சொன்னுலாகிலும் வருமோவென்று இந்த இடைப்பிள்ளேகளானவர்கள் நல்லநிறத்தையுடைத்தான வயிரக்கடிப்பிட்டு, ஒழுங்குநீண்டகாதானது தோளளவும்தாழும்படிபெருக்கி, தாய்மார்முதலானுர்சொல்லிற்றுச்செய்து மிகவும் குணமுடையரா யிருக்கிறபடி பாராய்;நீயுமிப்படி யிருக்கவேண்டாவோ. (கோவிந்தா நீ சொல்லுக்கொள்ளாய்) ஸௌலப்யத்துக்கு "கோவிந்தன்" என்று பேரிட்டுக்கொண்டிருக்கிறநீ என்சொல்லுக் கைக்கொள்ளுகிறுயில்லே யென்ன; உன்சொல்லுக்கேட்டு, நான் கடிப்பிடுவித்துக்கொண்டால் எனக்கென்னன்பு தருவாயென்ன ; (இணேநன்றழகிய விக்கடிப்பிட்டால்) ஒன்றுக்கொன்றெப்பாய் மிகவுமழகியதாயிருக்கிற விந்தக்கடிப்பையிட்டால். (இனிய பலாப்பழம்தந்து) உனக்கினிதான பலாப்பழம் தந்து. (சுணநன்றணி முலேயுண்ணத் தருவன்நான்) சுணங்கையுடைத்தாய் நன்றுய் அழகியதானமுலேயை நீ யமுதுசெய்யும்படி தருவன் நானென்ன. சுணங்கு - முலேமேல்தோன்றும் நிறம். நன்றுகையாவது - ம்ர்துவாயிருக்கை. அணி - (க) ஸந்நிவேசவைலக்ஷண்யம். (சோத்தம் பிரானிங்கே வாராய்) இப்படி சொன்னவளவிலும் வாராமையாலே, பிரானே யுன்னேக்கும்பிடுகிறேன் இங்கேவாராயென்று இரந்தழைக்கிறுள். சோத்தமென்கிறவிது – அஞ்சலி பண்ணுமவர்கள் அதுக்கு அநுகூலமாகத் தாழ்ச்சிதோற்றச்சொல்லுவதொரு சப்தவிசேஷம். (௪)

மூ.—சோத்தம்பிரானென்றிரந்தாலுங்கொள்ளாய் சுரிகுழலாரொடுநீபோய்க், கோத்துக்குரவைபிணேந்திங்கு வந்தாற் குணங்கொண்டிடுவனேநம்பீ, பேர்த்தும்பெரியனவப்பந்தருவன் பிரானேதிரியிடவொட்டில், வேய்த்தடந்தோளார் விரும்பு கருங்குழல் விட்டுவேநீயிங்கேவாராய்.

ப - ரை.—பிரான் - பிரானே, சோத்தமென்று - உன்னேக் கும்பிடுகிறேனென்று, இரந்தாலும் - யாசித்தபோதிலும், கொள்ளாய்-என்சொல்லேக்கைக்கொண்டுநீவருகிறுயில்லே;நம்பீ—,போய்-ஆளற்றவிடத்தேபோய்,சுரி-சுருண்ட, குழலாரொடு-குழலேயுடையராயிருக்கும் பெண்களோடே, நீ—, கோத்து-கைகோத்து, குரவைபிணேந்து-குரவைக்கூத்தாடி, இங்குவந்தால்-இங்கேவந்தால், பொடியாதே, குணங்கொண்டிடுவனே-குணமாகக்கொள்ளுவனே; பிரானே -

(க) ஸந்நிவேசம் - நிலேமை.

எனக்கெல்லாப்படியாலும் உபகாரகனானவனே, திரியிடவொட்டில் - திரியை யிடவொட்டுதியாகில், பேர்த்தும் - நீ சிறிது சிறிதென்று பொகட்டபின்பும், பெரியன - நீவிரும்பும்படி பெரியனவான, அப்பம் - அப்பங்களை, தருவன்-தருவேன்; வேய் - மூங்கிலையொத்த, தடம் - பெருத்திருந்துள்ள, தோளார் - தோள்களையுடையரான பெண்கள், விரும்பு-விரும்பும்படியான, கரு - இருண்டு நீண்ட, குழல் - குழலையுடையனான, விட்டுவே - விஷ்ணுவே, நீ இங்கேவாராய் - நீ இங்கேவந்தருளவேணும்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (சோத்தமித்யாதி) "சோத்தம்பிரானிங்கே வாராய்" என்றவிடத்திலும் அவன் வாராமையாலே, பிரானே உன்னைத்தொழுகிறேனென்று இரந்தாலும் என்சொல்லைக் கைக்கொண்டு நீவருகிறாயில்லையென்றவாறே, நீ யழைக்க நான்வந்தவிடத்தில் குணங்கொள்ளாமல் நேற்று என்னை யடித்தவளன்றோ நீயென்ன; அதுவோ (சுரிகுழலாரொடு நீபோய்க் கோத்துக்குரவை பிணைந்திங்குவந்தால் குணங்கொண்டிடுவனோ நம்பீ) ஆளற்றவிடத்திலேபோய், சுருண்டகுழலையுடையராயிருக்கும்பெண்களோடே கைகோத்துக் குரவை பிணைந்தாடியிங்கேவந்தால் (க) பொடியாதே குணவானென்று உன்னைக்கொள்வனோ நம்பியென்று இவள் சொன்னவாறே, (உ) நிருத்தரனாய்நிற்க, அவ்வளவிலே கையிலே திரியையெடுத்து இத்தை யிடும்படிவாராயென்ன; அவன் "அது இடவொட்டேன்" என்ன; (பிரானே திரியிடவொட்டில் - பேர்த்தும் பெரியனவப்பம் தருவன்) எனக் கெல்லாப்படியாலும் உபகாரகனானவனே திரியித்தனையு மிடவொட்டுதியாகில், நீ சிறிது சிறிதென்று பொகடப்பொகட, நீ விரும்பும்படி பெரியனவான அப்பங்களைத் தருவேன்என்றவிடத்திலும் அவன்வாராமையாலே; (வேயித்யாதி) பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் மூங்கில்போலேயாய், பெருத்திருந்துள்ளதோள்களையுடையரான பெண்கள் விரும்பும்படியாய், இருண்டுநீண்டதிருக்குழலையுடையனான (ங) விஷ்ணுவே நீ யிங்கே வாராயென்று அவன் வைலக்ஷண்யத்தைச்சொல்லிப் புகழ்ந்துகொண்டழைக்கிறாள். (ரு)

மூ.—விண்ணெலாங்கேட்கவழுதிட்டாயுன்வாயில் விரும்பியதனை நான்நோக்கி, மண்ணெலாங்கண்டென் மநத்துள்ளேயஞ்சி மதுசூதனேயென்றறிந்தேன், புண்ணேதுமில்லையுன்காதுமறியும் பொறுத்திறைப்போதிருநம்பீ, கண்ணுவென்கார்முகிலே கடல்வண்ணா காவலனே முலையுணாயே.

ப-ரை.—மண்தின்றாயென்று அடித்தவாறே, விண்ணெல்லாம் - ஆகாசப்பரப்படங்கலும், கேட்க - கேட்கும்படியாக, அழுதிட்டாய் - அழுத, உன் - உன்னுடைய, வாயில் - வாயிலே, விரும்பி - மண்தின்ற சுவடுண்டாகில் பார்ப்

(க) பொடியாது - வையாமல். (உ) நிருத்தரனாய் - விடை கொடாதவனாய். (ங) விஷ்ணு - எங்கும் ப்ரவியிருக்குமவன்.

போமென்று விரும்பி, அதனை - அத்தை, நான்—, நோக்கி - பார்த்தவளவிலே, மண்ணெல்லாம் - பூமியையெல்லாம், கண்டு - உன்திருவுதரத்திலே யிருக்கிற படிகண்டு, எனமனத்துள்ளே - என்மநஸ்ஸினுள்ளே, "நம்முடைய பிள்ளையென்று இவனை நலிந்தோமே" என்று, அஞ்சி - பயப்பட்டு, மதுசூதனனேயென்று - இவன்ஸர்வேச்வரனேயென்று, அறிந்தேன் - தெரிந்துகொண்டேன்; புண்ணேதுமில்லை - புண்ணொன்றுமில்லை ; உன் - உன்னுடைய, காது—, மறியும் - குண்டுபுரளும்; நம்பீ—, இறைப்போது - சற்றுப்போது, பொறுத்திரு - பொறுத்துக்கொண்டிரு; கண்ணா - எனக்கு ஸுலபனானவனாய், என் - எனக்கு, கார்முகிலே - காளமேகம்போலே உதாரஸ்வபாவனானவனாய், கடல் - கடல்போன்ற, வண்ணா - நிறத்தையுடையவனாய், காவலனே - எனக்கு ரக்ஷகனானவனே, முலையுணாய் - நீவந்து முலையுண்ணவேணும்.

வ்யா.—ஆறும்பாட்டு. (விண்ணித்யாதி) "மண்தின்றாய்" என்று அடித்தவாறே "ஆ" (௧) என்ன, ஆகாசப்பரப்படங்கலும் கேட்கும்படியழுத வுன்னுடையவாயிலே "மண்தின்ற (௨) சுவடுண்டாகில் பார்ப்போம்" என்றுவிரும்பி அத்தை நான் பார்த்தவளவிலே, முன்புபோலே வாய்வழியே பூமியெல்லாம் முள்ளேயிருக்கிறபடிகண்டு "நம்முடைய பிள்ளையென்று இவனை நலிந்தோமே" என்று என்மநஸ்ஸினுள்ளே பயப்பட்டு "இவன் நம்முடைய பிள்ளையல்லன், ஸர்வேச்வரனென்றறிந்தேன்" என்றவாறே, "అహంవోబాన్ధవోజాతః" "அஹம்வோபாந்தவோஜாதஃ" என்னுமவனுகையாலே இவள் (௩) அந்யனுக்கிவார்த்தைசொன்னது ஸஹியாமல் அத்தைமறப்பித்து, "தன்பிள்ளை" என்று இவளணைத்துக்கொள்ளும்படி வந்துகிட்டி நிற்க,அவ்வளவிலே இவள்,காதுக்குக் கடிப்பிடுவதாக வுத்யோகிக்க; "என்னுடைய காதுபுண், எனக்கு அதுவேண்டா" என்று அவன் சொல்ல; (புண்ணேதுமித்யாதி) புண்ணொன்றுமில்லை, உன்னுடையகாது குண்டுபுரளும், சற்றுப்போது பொறுத்திரு நம்பியென்ன; அவன் பொறுத்தபடியாலே (௪) ப்ரீதையாய் (கண்ணா) எனக்கு ஸுலபனானவனே. (என்கார்முகிலே) ஜலஸ்தலவிபாகம் பாராமல் உபகரிக்கும் காளமேகம்போலே யெனக்கு உன்னையுபகரித்தவனே. (கடல்வண்ணா) எனக்கு அநுபாவ்யமான கடல்போன்ற நிறத்தையுடையவனே. (காவலனே)எனக்குரக்ஷகனானவனே என்று ஸ்தோத்ரம்பண்ணி முலையுண்ணவேணுமென்றபேக்ஷிக்கிறாள். (௬)

மூ.—முலையேதும்வேண்டேனென்றோடி நின்காதிற் கடிப்பைப்பறித்தெறிந்திட்டு, மலையையெடுத்துமகிழ்ந்துகன்மாரிகாத்துப்பசுநிரைமேய்த்தாய், சிலையொன்றிறுத்தாய் திரிவிக்கிரமா திருவாயர்பாடிப்பிரானே, தலைநிலாப்போதே யுன்காதைப் பெருக்காதே விட்டிட்டேன்குற்றமேயன்றே.

(௧) ஆவென்ன - ஆவென்று வாய்திறக்க. (௨) சுவடு - அடையாளம். (௩) அந்யன் - தன்னுடன் சேராதவன். (௪) ப்ரீதையாய் - அன்புள்ளவளாய்.

ப - ரை.—முலை - நீதருகிற முலையையும், ஏதும் - மற்றுமுண்டான சிற்றுண்டி முலியவைகளையும், வேண்டேனென்று - விரும்பேனென்று, ஓடி - என் கைகழியவோடி, நின் - உன்னுடைய, காதில் - காதிலிட்ட, கடிப்பை - கடுக்கனை, பறித்து - கோபத்தாலேபிடுங்கி, எறிந்திட்டு - என்முன்னே யெறிந்து பொகட்டு, மலையை - கோவர்த்தநகிரியை, எடுத்து - குடையாகவெடுத்து, மகிழ்ந்து - நம்மையடைக்கலம்புகுந்த இடையரையும் பசுக்களையும் ரக்ஷிக்கப்பெற்றோமென்று உகந்து, கல்மாரி - அந்தக்கல்வர்ஷத்திலே, காத்து - பசுக்கள் மேலும் இடையர்மேலும் ஒருதுளிவிழாதபடி ரக்ஷித்து, பசு - பசுக்களுடைய, நிரை - ஸமூஹங்களை, மேய்த்தாய் - இடையர்மேய்க்கும்படி பண்ணினவனாய், ஒன்று - ஒப்பற்ற, சிலை - ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்கு சுல்கமாகவிட்ட பிநாகமென்கிற வில்லை, இறுத்தாய் - முறித்தவனாய், திரிவிக்கிரமா - திருவடிகளாலே ஸர்வலோகத்தையு மளந்தவனாய், திருவாயர்பாடி - திருவாய்ப்பாடியிலுள்ள ஜநங்களுக்கு, பிரானே - ஸர்வப்ரகாரத்தாலு முபகாரகனானவனே, தலை - தலையானது, நிலா - நில்லாத, போது - இளம்பருவத்திலே, உன் - உன்னுடைய, காதை - காதுகளை, பெருக்காது - பெருக்காமல், விட்டிட்டேன் - விட்டுவைத்தவென்னுடைய, குற்றமன்றே - குற்றமன்றோ.

வ்யா.—ஏழாம்பாட்டு. (முலையித்யாதி) இப்படி ஸ்தோத்ரம் பண்ணி முலையுண்ணச் சொன்னவாறே, முலையுண்பானாகத்தொடங்கினவளவிலே கடிப்பையெடுத்துக் காதிலேயிட, அத்தாலே சீறி (முலையேதும் வேண்டேனென்றோடி) நீதருகிறமுலையும்மற்றுமுண்டான அபூபாதிகளும்வேண்டேனென்று எனக்குப்பிடிபடாது என்கைகழியவோடி. நான் பின்துடர்ந்துவந்தவளவில் எனக்குத் தரிப்பாக (நின்காதில் கடிப்பைப்பறித் தெறிந்திட்டு) உன்காதிலிட்ட கடிப்புக்களை க்ரோதந்தோற்றப் பிடுங்கி யென்முன்னேயெறிந்து பொகட்டு. அவ்வளவிலே இந்த்ரன் பசிக்கோபத்தாலே வர்ஷிப்பிக்க, அதில் ரக்ஷ்யவர்க்கம் நோவுபடாதபடி (மலையையெடுத்து) முன்பு ரக்ஷகமென்று சொன்ன கோவர்த்தநகிரிதன்னையே குடையாகவெடுத்து. (மகிழ்ந்து) மலையைச்சுமந்து கொடுநிற்கிறவளவில் சற்றுமிளைப்பின்றிக்கே, "ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணம் பண்ணப்பெற்றோம்" என்று உகந்து. (கன்மாரிகாத்து) அந்தக்கல்வர்ஷத்தில் ஒருபசுவின்மேலேயாதல், ஓரிடையன் மேலேயாதல் ஒருதுளிவிழாதபடி ரக்ஷித்து. (பசுநிரைமேய்த்தாய்) "இனவாநிரைபாடியங்கேயொடுங்க" என்கிறபடியே-மலை, பசுமேய்கிறவிடந்தன்னிலும்சென்று எங்குமொக்கக்கவிகையாலே, பசுக்களை யிடையர் மேய்க்கும்படி பண்ணினவனே. (சிலையொன்றிறுத்தாய்) ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு (க) சுல்கமாகவிட்டதாய் ஒருவரால் போக்கவ

(க) சுல்கம் - கிழி. அதாவது - வெற்றிபெற்றவன் பெறும்படியாக ஸபையில் முடிந்து தொங்கவிட்ட பணமுடிப்பு. வித்யாசுல்கம், கந்யாசுல்கமென்பர்கள். இவ்விடத்தில் சுல்கமாவது - சிவனது பிநாகமென்கிற வில்லாம்.

அநிங்கவெண்ணுதபடி அத்விதீயமாயிருந்துள்ள (க) ரௌத்ரமான வில்லைமுறித்தவனே. (திரிவிக்கிரமா) இந்த்ரன் இழந்தராஜ்யத்தை மீட்டுக் கொடுக்கைக்காக, எல்லைநடப்பாரைப்போலே திருவடிக ளால் ஸர்வலோகத்தையு மளந்தவனே. (திருவாயர்பாடிப்பிரானே) திருவாய்ப்பாடியிலுள்ள ஜநங்களுக்கு ஸர்வப்ரகாரத்தாலும் உபகா ரகனானவனே. இப்படி, எல்லார்க்குமுபகாரகனானநீ என்னுடை ய அபேக்ஷிதமும் செய்யவேணுங்காணென்று, முன்புபறித்தெறிந்த கடிப்புக்களை யிடுவதாக உத்யோகிக்க, அதுக்கவனிசையாதொழிய (தலைநிலாவித்யாதி) தலைசெவ்வேநில்லாத விளம்பருவத்திலே யுன் னுடைய காதுகளைப்பெருக்காதே விட்டிட்டுவைத்தவென்னுடைய குற்றமன்றோ, உன்னைவெறுக்கிறதென்னென்று தன் செய்தித்தாழ் வைச்சொல்லி நோவுபடுகிறாள். (எ)

மூ.—என்குற்றமேயென்றுசொல்லவும்வேண்டாகாணென்னைநான்
மண்ணுண்டேனாக, அன்புற்றுநோக்கியடித்தும்பிடித்துமனை
வர்க்குங்காட்டிற்றிலையே,வன்புற்றரவின்பகைக்கொடிவாமந
னம்பீயுன்காதுகடூரும், துன்புற்றனவெல்லாந்தீர்ப்பாய்பிரா
னே திரியிட்டுச்சொல்லுகேன்மெய்யே.

ப-ரை.—என்குற்றமென்று - நீ யென்னுடைய குற்றமென்று, சொல்லவும் வேண்டாகாண்-சொல்லவேண்டுவதில்லைகாண்; என்னை - மண்ணுண்ணுதவென் னை, நான்—, மண்ணுண்டேனாக-மண்ணுண்டவனாக நினைத்து, அன்புற்று - ஆசை யுடையளாய்க்கொண்டு, நோக்கி-என்னுடையவாயிலும் கையிலும் மண்சுவடுண் டோவென்றுபார்த்து,பிடித்தும்-சுவடுகண்டாரைப்போலே என்னைப்பிடித்தும், அடித்தும்—, "பாரீகோள் இவன் மண்தின்னும்படி" என்று, அனைவர்க்கும்- எல்லார்க்கும், காட்டிற்றிலையே - காட்டவில்லையோ; வன் - வலிய, புற்று-புற் றிலே பயத்தாலேபதுங்கிக்கிடக்கிற, அரவின்பகை - பாம்புக்குப் பகையான கருடனை, கொடி - த்வஜமாகவுடையனாய், வாமநன் - *குறட்பிரமசாரியான, நம்பீ - முதல்வனே, இப்படி நீயொன்றுசொல்லி நானொன்றுசொல்லிப்போது போக்கியிருந்தால், உன்-உன்னுடைய, காதுகள்-காதுகளானவை, தூரும்-துந் துவிடும்; உற்றன - ஆச்ரிதரானவர்கள் பட்ட, துன்பெல்லாம்-துக்கங்களையெல் லாம், தீர்ப்பாய் - போக்கும், பிரானே - உபகாரகனானவனே, திரி - என்கை யில் திரியை, இட்டு - உன்காதிலிட்டு, மெய் - மெய்யே, சொல்லுகேன் - சொ ல்லக்கடவேன்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (என்குற்றமித்யாதி) "நீ உன்குற்றம் சொல்லி வெறுக்கிறது நான் உன்சொல்லிற்றுச் செய்திலன் என் றுஎன்குற்றத்தை நினைத்தன்றோ, என்குற்றமேயென்று சொல்லவும் வேண்டாகாண்"என்ன; "பின்னையார்குற்றம்"என்ன; "உன்குற்றமி ல்லையோ" என்ன; "உன்னைநான் என்செய்தேன்" என்ன; (என்னை

---

(க) ரௌத்ரம் - ருத்ரனுடையது.

நான் மண்ணுண்டேனாக) மண்ணுண்ணாதவென்னை நான் மண்ணுண்டேனாகநினைத்து. (அன்புற்றுநோக்கி)ஸ்நேஹிகளைப்போலேயென்னுடைய வாயிலும் கையிலும் மண்சுவடுண்டோவென்று பார்த்து. (அடித்தும்பிடித்து மனைவர்க்கும் காட்டிற்றிலையே) சுவடுகண்டாரைப்போலே என்னைபிடித்தும், அவ்வளவன்றிக்கே அடித்தும், "பாரிகோள் இவன் மண்தின்னும்படி" என்று எல்லார்க்கும் காட்டிற்றில்லையோவென்ன; (வன்புற்றரவின்பகைக்கொடிவாமநநம்பீ) வலியபுற்றிலே (க) பாதகபீதியாலே கிடக்கும் பாம்புக்குப் பகையான கருடனை (உ) த்வஜமாகவுடையனாய், * கொடுங்கோளால் நிலங்கொண்ட வாமநனான முதலியானவனே. இத்தால் - திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு பெரியதிருவடியை த்வஜமாகக் கொண்டிருப்பா னொருவனாகையாலே, லோகத்தில் ஒன்றுக்கொன்று சேராததாயுள்ளவற்றைச்சேர்த்து நடத்தவல்லனுமாய், (ங) க்ரூரமாகச்செய்தவற்றை ந்யாயமாக்கவும்வல்லவனன்றோவென்கை. (உன் காதுகள்தூரும்) இப்படி நீயொன்றுசொல்ல நாமொன்றுசொல்லிப் போதுபோக்கியிருந்தால் உன்னுடையகாதுகள் தூருங்காண். (துன்புற்றனவெல்லாம் தீர்ப்பாய்பிரானே) ஆச்ரிதரானவர்கள்துழ்கப்படுமவையெல்லாம் போக்குமுபகாரகனானவனேயென்ன ; நீ என்னை ஸ்தோத்ரம்பண்ணவேண்டா, இனியுன்னை முன்போல் பிடிக்குதல், அடிக்குதல் செய்யேனென்று மெய்யாக வொருவார்த்தைசொல்லு, நான் திரியிடுகைக்கு இசையும்படியென்ன; (திரியிட்டுச்சொல்லுகேன்மெய்யே) திரியையிட்டுவிட்டவாறே பின்னை மெய்யேசொல்லக்கடவே னென்கிறாள். (அ)

மூ.—மெய்யென்றுசொல்லுவார் சொல்லைக்கருதித் தொடுப்புண்டாய் வெண்ணெயையென்று, கையைப்பிடித்துக் கரையுரலோடென்னைக் காணவேகட்டிற்றிலையே, செய்தனசொல்லிச்சிரித்தங்கிருக்கிற்சிரீதராவுன்காதுதூரும், கையிற்றிரியை யிடுகிடாயிங்நின்ற காரிகையார்சிரியாமே.

ப-ரை.—சொல்லுவார்-இவன் வெண்ணெய்களவுகண்டானென்றுற்போலே சொல்லுகிறவர்கள், சொல்லை - சொல்லுகிறவார்த்தையை, மெய்யென்று-உண்மையென்று, கருதி - நினைத்து, வெண்ணெயை—, தொடுப்பு - களவிலே, உண்டாயென்று - அமுதுசெய்தாயென்று, கையை - என்கையை, பிடித்து—, கரை-விளிம்பையுடைய, உரலோடு - உரலோடே, காண - எல்லாரும் காணும்படி, என்னை—, கட்டிற்றிலையே - கட்டவில்லையோ; செய்தன - இப்படிநான்செய்த குற்றங்களை, சொல்லி—, சிரித்து - நகைத்துக்கொண்டு, அங்கிருக்கில் - என் பக்கல் வாராமல்போதுபோக்கிக்கொண்டு அங்கேயிருந்தாயாகில், சிரீதரா-பெ

(க) பாதகபீதி - பாபபயம். (உ) த்வஜம் - கொடி. அதாவது - விரோதிக நிரஸித்து ஆச்ரிதரை ரக்ஷிப்பதற்கு. (ங) க்ரூரம்-கொடுமை குறியாவுள்ளது.

ர்யபிராட்டியாரைத் திருமார்விலேதரிக்குமவனே, உன் - உன்னுடைய, காது - காதுகள், தூரும் - தூர்ந்துவிடும்; ஆதலால், நின்ற-உன்னைவிட்டுப்போகமாட்டாமல் கிட்டிநிற்கிற, இக்காரிகையார் - அழகுடைய விப்பெண்களானவர்கள், சிரியாமே-கூழைசுகாது சொணைக்காது என்று சொல்லிச்சிரியாதபடி, கையில் திரியை - என்கையிலிருக்கிறதிரியை, இடுகிடாய் - உன்காதுபெருக்கும்படியிட்டுக் கொள்கிடாய்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (மெய்யித்யாதி) "திரியிட்டுச்சொல்லுகேன்மெய்" என்றவாறே, உன்வார்த்தை(க)விச்வஸிக்கப் போகாது, சொன்னர் சொன்னவார்த்தைகேட்டு என்னைசிக்ஷிப்பா ளொருத்தியன்றோவென்ன; நான் அப்படிசெய்ததுண்டோ வென்ன; (மெய்யென்று சொல்லுவார் சொல்லைக்கருதி) "இவன்வெண்ணெய் களவுகண்டான்" என்றுசொல்லுவார்சொல்லும்வார்த்தையைமெய்யென்று புத்திபண்ணி. (தொடுப்புண்டாய் வெண்ணெயை யென்று) வெண்ணெயைக் களவிலே ஜீவித்தாயென்று. தொடுப்பு - களவு. (கையைப் பிடித்தித்யாதி) என்கையைப் பிடித்துக்கொண்டு பாரமான கரையுரலோடே யெல்லாருங்காணும்படி யென்னைக்கட்டிற்றில்லையோ வென்றுசொல்லி (உ) மந்தஸ்மிதஞ்செய்திருக்க. கரையுரலாவது - விளிம்புசுத்தனையான வுரல். (செய்தனவித்யாதி) இப்படி நான்செய்தகுற்றங்களைச் சொல்லி ஸ்மிதம் பண்ணிக்கொண்டு என்பக்கல் வாராமல் போதுபோக்கி நீயங்கேயிருக்கில், ஸ்ரீதரனே உன் காதுதூருங்காண். அவர்களுக்காகவாகிலும்வாவென்ன; அவ்வளவிலும் அவன்வாராமையாலே (கையில்திரியையித்யாதி) நீவிரும்பத்தக்க அழகையுடையார் உன்பக்கல் ப்ராவண்யத்தாலே உன்னைவிட்டுப் போகமாட்டாமல் (ங) ஸந்நிஹிதைகளாய் நிற்கிற இப்பெண்களானவர்கள், "கூழைக்காது, சொணைக்காது" என்றாற்போலே சொல்லிச்சிரியாதபடி உன்காதுபெருக்கும்படியென்கையில்திரியை யிடுகிடாயென்கிறாள். (௯)

மூ.—காரிகையார்க்குமுனக்குமிழுக்குற்றென் காதுகள்வீங்கியெரியில், தாரியாதாகிற்றலைநொந்திடுமென்றுவிட்டிட்டேன்குற்றமேயன்றே, சேரியிற்பிள்ளைகளெல்லாருங்காதுபெருக்கித்திரியவுங்காண்டி, ஏர்விடைசெற்றிளங்கன்றெறிந்திட்டவிருடிகேசாவென்றன்கண்ணே.

ப-ரை.—காதுகள் - என்னுடையகாதுகள், வீங்கி - தடித்து, எரியில் - எரியுமாகில், காரிகையார்க்கும் - சிரிக்கிற விப்பெண்களுக்கும், உனக்கும் - திரியிடவந்துநிற்கிற உனக்கும், இழுக்கு - ஏதேனும் சேதம், உற்றதென்-உண்டாயிற்றோவென்ன; தாரியாதாகில் - திரிமுதலியவற்றை யிடுகிறது பொறுதா

(க) விச்வஸிக்க - நம்ப. (உ) மந்தஸ்மிதம் - புன்னகை. (ங) ஸந்நிஹிதைகளாய் - கிட்டினவர்களாய்.

இல், தலை-உன்தலையிலே, நொந்திடுமென்று - நோக்காடுண்டாமென்று, விட்டிட்டேன்-அப்போதுசெய்யாமல் விட்டுவைத்தவென்னுடைய, குற்றமன்றே—; சேரியில்-இவ்வூரிலுள்ள, பிள்ளைகளெல்லாரும்-உன்னோடொத்த பருவத்தரான வெல்லாப்பிள்ளைகளும், காது - காதுகளை, பெருக்கி - பெருக்கிக்கொண்டு, திரியவும்காண்டி-திரியக்காணாநின்றாய்; ஏர்விடை-அரிஷ்டநேமியாகிற ரிஷபத்தை, செற்று - நிரஸித்து, இளங்கன்று - இளங்கன்றின்வடிவாய்நின்ற அஸுரனை, எறிந்து-விளாவாய்நின்ற அஸுரன்மேலேயெறிந்து அவ்விருவரையும் முடித்து, இட்ட - உன்னைநோக்கித் தந்தவனாய், இருடீகேசா - உன்னைக் கண்டவர்களுடைய ஸர்வேந்த்ரியங்களையும் உன்வசமாக்கிக் கொள்ளுமவனாய், என்றன்கண்ணே - எனக்குக் கண்ணானவனேயென்று உகந்துசொல்லுகிறாள்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (காரிகையார்க்கித்யாதி) "காரிகையார்சிரியாமே-கையில் திரியையிடுகிடாய்" என்றவாறே, சிரிக்கிறகாரிகையார்க்கும், திரியிடவந்து நிற்கிற உனக்கும் ஏதேனும் சேதமுண்டோ, என்னுடைய காதுகள் வீங்கியெரியுமாகில் என்று அவன் சொல்லி கைக்கெட்டாதபடி நிற்க; (தாரியாதாகிலித்யாதி) இளம்பருவத்திலே காதைப்பெருக்கலாயிருக்க, திரிமுதலானவற்றை யிடுகிறது பொறாதாகில் உன்தலையிலே நோக்காடுண்டா மென்று அப்போது செய்யாமல் விட்டுவைத்த வென்னுடைய குற்றமே யன்றோவென்று தன்னைவெறுத்து, பின்னையும்விடாதே. (சேரியித்யாதி) இவ்வூரில் உன்திறத்தின்பிள்ளைகளெல்லாரும் காதுபெருக்கித்திரியவும் காணாநின்றாயிறேயென்றவாறே, அவன்அநுமதி தோற்றநிற்க; (ஏர்விடையித்யாதி) "வம்பவிழ்கானத்துமால்விடை" என்கிறபடியே-காட்டுக்குள்ளே உன்னைநலிவதாக எதிர்ந்துவந்த அரிஷ்டநேமியாகிற ரிஷபத்தை நிரஸித்து, கன்றுகள்மேய்கிறவிடத்திலே இளங்கன்றான வடிவைக்கொண்டுவந்து ஓரஸுரன்நிற்க, அந்தக்கன்றையெடுத்து விளாவாய்நின்ற அஸுரன்மேலேயெறிந்து இரண்டுதலையையும் முடித்து அவற்றின்கையில் அகப்படாதே உன்னைநோக்கித் தந்தவனாய், உன்னைக்கண்டவர்களுடைய ஸர்வேந்த்ரியங்களையும் உன்வசமாக்கிக் கொள்ளுகையாலே ஹ்ருஷீகேசனென்னும் திருநாமத்தையுடையவனாய், எனக்கு (க) த்ருஷ்டிபூதனானவனேயென்று உகந்துசொல்லுகிறாள். (கO)

மூ.—கண்ணைக்குளிரக்கலந்தெங்குநோக்கிக் கடிகமழ்பூங்குழலார்கள், எண்ணத்துளென்று மிருந்துதித்திக்கும் பெருமானே எங்களமுதே, உண்ணக்கனிகடருவன் கடிப்பொன்று நோவாமேகாதுக்கிடுவன், பண்ணைக்கிழியச்சகடமுதைத்திட்ட பற்பநாபாவிங்கேவாராய்.

(க) த்ருஷ்டிபூதன் - கண்ணானவன்.

ப - ரை.—கண்ணை - உன்னுடையகண்ணை, குளிர - அவர்கள் கண்ணோடே குளிரும்படியாக, கலந்து - கலசி, எங்கும் - அவர்களவயவம் முழுதையும், நோக்கி - பார்த்து, கடி - வாஸனையானது, கமழ் - வீசாநின்றுள்ள, பூ - பூக்களையணிந்த, குழலார்கள் - கூந்தலுள்ளவர்களுடைய, எண்ணத்துள் - நெஞ்சினுள்ளே, என்றும் - எக்காலமும், இருந்து - பொருந்தியிருந்து, தித்திக்கும் - இனிமையைத்தாராநின்றுள்ள, பெருமானே - பெரியோனாய், எங்கள் - எங்களுக்கு, அமுதே - அம்ர்தம்போலே ஒப்பற்றவுணவானவனாய், சகடம் - கண்வளர்ந்தருளுகிற விடத்திலே காவல்வைத்த சகடமானது அஸுரத்தன்மையுடையதாய்க்கொண்டு நலியவர, பண்ணைக்கிழிய - கட்டுக்குலையும்படியாக, உதைத்திட்ட - உதைத்த, பற்பம் - உலகப்படைப்புக்குரித்தான தாமரையை, நாபா - திருநாபியிலே யுடையவனே, நீ உன்காது பெருக்குகைக்கு வருவதியாகில், உண்ண - நீவிரும்பி யமுதுசெய்யத்தக்க, கனிகள் - பழங்களை, தருவன் - தருவேனென்ன; அவன்காது நோமேயென்ன; ஒன்றும் - சற்றும், நோவாமே - நோவுவாராதபடி, காதுக்கு-உன்காதுகளுக்கு, கடிப்பு - கடுக்கனை, இடுவன் - இடுவேனென்றவாறே உடன்பட் டமைதோற்றநிற்க, இங்கேவாராய்- இங்கேவந் தருளவேணுமென்கிறாள்.

வ்யா.—பதினோராம்பாட்டு. (கண்ணையித்யாதி) * இளவாய்ச்சியர்கண்ணினுள் விடவேசெய்து விழிக்குமவனுகையாலே (கண்ணைக்குளிரக்கலந்து) உன்னுடையகண்ணை அவர்களுடையகண்களோடே குளிரக்கலந்து. இத்தால் - கண்கலவியைச்சொன்னபடி. (எங்கும்நோக்கி) அவர்களுடைய வடிவை (க) ஸமுதாயேந பார்த்து. (கடிகமழ்பூங்குழலார்கள்) (உ) பரிமளப்ரசுரமான பூக்களாலே அலங்க்ருதமாயிருந்துள்ள குழலையுடையவர்களுடைய. (எண்ணத்துளென்றுமிருந்து தித்திக்கும்பெருமானே) நெஞ்சுக்குள்ளே ஸர்வகாலமுமிருந்து ரஸிக்கும்பெரியோனே. அன்றிக்கே, கண்ணையென்கிற விடத்தில், ஐகாரத்தை அவ்யயமாக்கி, கடிகமழ்பூங்குழலாரானவர்கள் கண்குளிரும்படி உன்னுடைய அவயவசோபை கலக்கக்கொண்டு எங்குமொக்கப்பார்த்து, உன்னோட்டைக்கலவியின் ப்ரகாரங்களையெண்ண, அவர்களுடைய அபிமதாநுரூபமான எண்ணங்கடவாமல் அதுக்குள்ளே யென்றுமொக்கவிருந்து அவர்களுக்கு நிரதிசயபோக்யனாகாநிற்கும்பெருமையையுடையவனேயென்னவுமாம். (எங்களமுதே) எங்களுக்குநிரதிசயபோக்யனுமாய் (௩) ஸத்தாதாரகனுமாயிருக்கிறவனே. உனக்கபிமதைகளானவர்களுக்கும் (௪) பரிவரானவெங்களுக்கு முகப்பாம்படி உன்காது பெருக்குகைக்கு வரவென்ன ; நான் வருகிறேன், நீயென்னம்புதருவாயென்ன ; (உண்ணக்கனிகள்தருவன்) நீவிரும்பி யமுதுசெய்யும்படி யுனக்குப் பழங்

(க) ஸமுதாயேநபார்த்து - நன்றாகப்பார்த்து. (உ) பரிமளப்ரசுரமான- மிகுந்தவாஸனையுள்ள. (௩) ஸத்தாதாரகன் - உயிரைத் தரிப்பிக்குமவன். (௪) பரிவர் - அன்புள்ளவர்கள்.

கள் தருவேனென்ன; ஆனாலும் கடிப்பிடப்புகுந்தால் காதுநோமே யென்ன; (கடிப்பொன்றும்நோவாமேகாதுக்கிடுவன்) சற்றும்நோவு வாராதபடி யுன்காதுகளுக்குக் கடிப்பிடுவேனென்றவாறே, உடன் பட்டமைதோற்றநிற்க; (பண்ணையித்யாதி) கண்வளர்ந் தருளுகிற தனியிடத்திலே காவல்வைத்தசகடம் அஸுராவிஷ்டமாய் உன்னை நலியவர, அத்தைக் (க) கோப்புக்குலையவுதைத்துப் பொகட்டு ஜகத்துக்குவேர்ப்பற்றானவுன்னை நோக்கித் தந்தவனல்லையோ, இங் ஙனேவாராயென்று புகழ்ந்துகொண் டழைக்கிறாள். (கக)

மூ.—வாவென்றுசொல்லியென்கையைப்பிடித்துவலியவேகாதிற்க டிப்பை, நோவத்திரிக்கிலுனக் கிங்கிழுக்குற்றென் காதுக ணொந்திடுங்கில்லேன், நாவற்பழங்கொண்டுவைத்தேனிவை யாணய்நம்பிமுன்வஞ்சமகளைச், சாவப்பாலுண்டுசகடிறப்பா ய்ந்திட்டதாமோதராவிங்கேவாராய்.

ப - ரை.—வாவென்றுசொல்லி - என்னைவரச்சொல்லியழைத்து, நான்வா ராநிற்கச்செய்தே, என் - என்னுடைய, கையை—, பிடித்து - கட்டியாகப்பிடி த்துக்கொண்டு, வலியவே - பலவந்தமாக, காதில் - என்காதிலே, கடிப்பை-கா தணியை, நோவ - நோம்படியாக, திரிக்கில் - திரிகியிடுவதியாகில், உனக்கு—, இங்கு - இப்பொழுது, இழுக்குற்றென் - சேதமானதுண்டோ, காதுகள் - என் காதுகள், நொந்திடும் - நோமாதலால், கில்லேன் - வரமாட்டேனென்ன; நம்பீ - பூர்ணனானவனே, நாவற்பழம் - நீ யுகக்கும் * நல்லன நாவற்பழங்களை, கொண்டு - ஸம்பாதித்துக்கொடுவந்து, வைத்தேன்—; இவை - இக்கனிகளை, ஆணய் - பார்என்று காட்ட, அத்தைக்கண்டவாறே வருவாரைப்போலேநிற்க, முன் - முன்பு, வஞ்சமகளை - தன் வடிவுமறைத்துத் தாய்வடிவுகொண்டு வஞ்ச கையாய்வந்த பேய்ச்சி, சாவ - சாம்படியாக, பால - அவள்முலைப்பாலை, உண் டு - அவள் ப்ராணனோடேயுண்டு, சகடு - தன்னை நலிவதாக மேலிட்டுவந்த சக டமானது, இற - முறியும்படியாக, பாய்ந்து - உதைத்துப்பொகட்டு, இட்ட - அவ்விரோதிகள் கையில் உன்னையகப்படாமல் நோக்கித் தந்தவனாய், தாமம் - கட்டினகயிற்றின் தழும்புகாணலாம்படியான, உதரா - திருவயிற்றையுடைய வனே, இங்கேவாராய் - இங்கேவந்தருளவேணும்.

வ்யா.—பன்னிரண்டாம்பாட்டு. (வாவித்யாதி) "பற்பநாபா விங்கேவாராய்" என்றவாறே (வாவென்றுசொல்லி யென்கையைப் பிடித்து) என்னைவரவென்று சொல்லியழைத்து, நான்வரக்கொள்ள, என்கையை யுறைக்கப்பிடித்துக்கொண்டு. (வலியவேகாதில்கடிப் பை நோவத்திரிக்கிலுனக்கிங் கிழுக்குற்றென்) (உ) பலாத்காரேண என்காதில் கடிப்பைநோம்படி திரிகியிடுவதியாகில் உனக்கு இங்கு ச்சேதமானதுண்டோ, என்காதுகள்நோங்காண், வரமாட்டேனென் ன; (நாவற்பழம் கொண்டுவைத்தே னிவையாணய் நம்பீ) இவன் வருகைக்காக, "நீயுகக்கும் நாவற்பழம்கொண்டுவைத்தேன் இவற்

(க) கோப்புக்குலைய - கட்டுக்குலைய. (உ) பலாத்காரேண - பலவந்தமாக.

றைப்பாராய் நம்பீ" என்றுகாட்ட, அத்தைக்கண்டவாறே வருவானைப்போலேநிற்க,(முன்னித்யாதி)முன்பே, தன்வடிவைமறைத்துத் தாய்வடிவுகொண்டு வஞ்சகையாய்வந்த பேய்ச்சியைச் சாம்படியாக முலைப்பாலையுண்டு, நலிவதாகமேலிட்டுவந்த சகடத்தை முறியவுதைத்துப்பொகட்டு, அவ்விரோதிகள்கையில் அகப்படாமல் உன்னை நோக்கித்தந்தவனாய், அந்தசக்திமானாயிருக்கச்செய்தே அசக்தனைப்போலே யென்கையிலே பிடியுண்டு நான் கட்டினகயிற்றின் தழும்பு உன்வயிற்றிலே கிடக்கையாலே தாமோதரனென்று பேராம்படியென்கையாலே கட்டுண்டிருந்த நீர்மையை யுடையவனன்றோ, இங்கே வாராயென்று-உகந்தழைக்கிறாள். (௧௨)

அ.—நிகமத்தில் - இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வார்காதுதாழப்பெருக்கியமைத்து மகரக்குழையிடவேண்டிச், சீராலசோதைதிருமாலைச்சொன்ன சொற்சிந்தையுணின்றுதிகழப், பாரார்தொல்புகழான்புதுவைமன்னன் பன்னிருநாமத்தாற்சொன்ன, வாராதவந்தாதி பன்னிரண்டும்வல்லாரச்சுதனுக்கடியாரே.

ப-ரை.—வார் - இயற்கையாகவே நீண்டிருப்பதான, காது - காதானது, தாழ-வேண்டுமளவும் தாழும்படியாக, பெருக்கி - பெருகச்செய்து, அமைத்து-அளவிலேயமைத்து, மகரக்குழை - மகரகுண்டலத்தை, இடவேண்டி - சாத்தவேணுமென்றாசைப்பட்டு, சீரால் - சீர்மையோடே, அசோதை - யசோதைப்பிராட்டி, திருமாலை-பெரியபிராட்டியார்க்கு நாதனானவுன்னைக்குறித்து, சொன்ன - சொல்லிய, சொல் - சொலவுகளானவை, சிந்தையுள் - தம்முடைய திருவுள்ளத்தினுள்ளே, நின்று - எல்லாக்காலமுமிருந்து, திகழ-விளங்கும்படியாக, பார் - பூமியிலுள்ளாருடைய ஹ்ருதயங்கள், ஆர் - நிறையும்படி, தொல் - பழையதான, புகழான் - புகழையுடையராய், புதுவை - திருப்புதுவைக்கு, மன்னன் - தலைவரான பெரியாழ்வார், பன்னிருநாமத்தால்சொன்ன - வைஷ்ணவ அடையாளமான பன்னிரண்டு திருநாமங்களோடருளிச்செய்ததாதலால், ஆராத - அநுபவிப்பவர்களுக்கு ஒருகாலமும் த்ருப்தி பிறவாததாய், அந்தாதி - அந்தாதியான, பன்னிரண்டும் - இப்பன்னிரண்டுபாட்டையும், வல்லார் - கருத்துடன் கற்கவல்லவர்கள், அச்சுதனுக்கு - ஆச்ரிதரை யொருகாலமும் நழுவவிடாதவனுக்கு, அடியார் - * அத்தாணிச்சேவகம் செய்யப்பெறுவர்.

வ்யா.—(வாரித்யாதி) ஸ்வபாவமே யொழுங்கு நீண்டகாது வேண்டுமளவும் தாழப்பெருக்கி, மட்டிலேயமைத்து, மகரக்குழை சாத்தவேணுமென்றாசைப்பட்டு. (சீராலித்யாதி)சீர்மைகுன்றாதபடி யசோதைப்பிராட்டி ஸ்ரீயஃபதியான வுன்னைக் குறித்துச்சொன்ன சொலவுகளானவை. (சிந்தையுள்நின்றுதிகழ) தம்முடைய திருவுள்ளத்தினுள்ளே ஸர்வகாலமும் நின்றுவிளங்க. (பாராரித்யாதி) பூமியிலுள்ளாருடைய ஹ்ருதயங்கள் நிறையும்படி பழையதான புகழை

யுடையராய்த் திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார். (பன்னிருநாமமித்யாதி) வைஷ்ணவசிஹ்நமான திருத்வாதசநாமங்களோடேயருளிச்செய்ததாய், (க) அதஏவ (உ)அநுபவிதாக்களுக்கு ஒருகாலும் த்ர்ப்திபிறவாதே மேன்மேலு மபேக்ஷிக்கும்படி (ந) நிரதிசய போக்யமாயிருக்கிற அந்தாதியான விவைபன்னிரண்டு பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (அச்சுதனுக் கடியாரே) ஆச்ரிதரையொருகாலும் நழுவவிடாத ஸ்வபாவனானவனுக்கு (ச) அநவரத கிஞ்சித்கார பரராகப்பெறுவர். (கங)

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—போய்வண்ணவையம் வணம்சோத்தம்பின்முலை என்
மெய்காரிகைகண்ணை வாவார்காதுவெண்ணெய்.

---

ஆ திருமொழி கஉ-க்கு, பாட்டு-கச0.

---

அ.—மாதாவான யசோதைப்பிராட்டி அவனுடைய வவதாரத்தின் மெய்ப்பாட்டால்வந்த பால்யாநுகுணமாக அவனை யநுஸந்தித்துக்கொண்டு, காதுகுத்தி, திரியும்கடிப்பும்முதலானவையிட்டுக் காதுகுத்திப் பெருக்கித் தலைக்கட்டினவநந்தரம், பிள்ளைகளைக்காது பெருக்கினால் அந்தச்செடி நீங்கக் குளிப்பாட்டும் க்ரமத்திலே இவனை மஞ்சநமாட்டவேணுமென்று உத்யோகித்து, அதுக்குவேண்டு முபகரணங்களையும் ஸம்பாதித்துவைத்து நீராடவாவென்றழைத்து, அவன் இசையாதவளவிலும் விடாதேநிர்ப்பந்தித்து, அவச்யம் இன்று திருமஞ்சநம் செய்யவேண்டின ஹேதுவையு மவனுக்கறிவித்து, திருமஞ்சநம் செய்தால் பின்பு திருமேனிக்கலங்காரமாகச் சாத்துகைக் குறுப்பானவையாகத்தான் தேடிவைத்த (ரு) அங்கராகாதிகளையுங்காட்ட இசைந்துவருகைக்குடலாக அவனுக்கு (சு) அபிமதமான அபூபபலாதிகளையும் முன்னிட்டு அவன்பக்கல் தனக்குண்டான ஸ்நேஹாதிகளையும் சொல்லி, புழுதியளைந்த பொன்மேனி காண நான் மிகவும் விரும்பியிருப்பன், ஆனாலும் கண்டவர்கள் "ஒருத்தி பிள்ளைவளர்த்தபடியென்" என்று பழிப்பர்கள்; அவ்வளவேயுமன்று, நீபுழுதியும் உடம்புமாயிருக்கிறபடியைக் காணில் உனக்கபிமதைகளான நப்பின்னைப்பிராட்டி சிரிக்கும் என்றாற்போலே சிலவற்றைச் சொல்லியும் அவனைவருந்தி யுடன்படுத்தி மஞ்சநமாட்

---

(க) அதஏவ - ஆகையாலே. (உ) அநுபவிதாக்கள் - அநுபவிப்பவர்கள். (ந) நிரதிசயபோக்யம் - ஒப்பற்றஇன்பம். (ச) அநவரதகிஞ்சித்காரபரர்-எப்பொழுதும் கைங்கர்யம்செய்ய விருப்பமுள்ளவர்கள். (ரு) அங்கராகம் - சந்தநம். (சு) அபிமதம் - இஷ்டம்.

டின ப்ரகாரத்தையும் தாமுமநுபவிக்க வாசைப்பட்டு, பாவநாப்ரகர்ஷத்தாலே தத்ததவஸ்தாபந்நராய்க் கொண்டு அவள் அப்போது பேசின பாசுரங்களையெல்லாம் தத்காலம்போலே அவனைக் குறித்துப்பேசி, அவனை மஞ்சநமாட்டுகையாகிற ரஸத்தைத் தாமநுபவித்து ஹ்ர்ஷ்டராகிறு ரித்திருமொழியில்.

மூ.—வெண்ணெயளைந்தகுணுங்கும் விளையாடுபுழுதியுங்கொண்டு,
திண்ணெனவிவ்விரா வுன்னைத்தேய்த்துக் கிடக்கநானொட்
டேன், எண்ணெய்புளிப்பழங்கொண்டிங் கெத்தனைபோது
மிருந்தேன், நண்ணலரியபிரானேநாரணாநீராடவாராய்.

ப-ரை. வெண்ணெய்-வெண்ணெயை, அளைந்த-* தாரார்தடந்தோள்களுள்ளளவும் கைநீட்டி அளைகையாலுண்டான, குணுங்கும் - முடைநாற்றத்தையும், விளையாடு - பின்புவிளையாடுகையாலுண்டான, புழுதியும் - புழுதியையும், கொண்டு—, திண்ணென - உண்மையாக, இ - இந்த, இரா - இராத்திரியில்; உன்னை—, தேய்த்து - தினவால் உடம்பைப் படுக்கையிலே தேய்த்துக்கொண்டு, கிடக்க - கிடக்கைக்கு, நான் - உன்னளவில் பரிவுடையநான், ஒட்டேன் - ஸம்மதியேன்; உன்திருமேனியில் முக்குறச் சாத்துகைக்கு யோக்யமான, எண்ணெய் - எண்ணெய்க்காப்பும், புளிப்பழம் - அவ்வெண்ணெய் கழற்றுகைக்குப் புளிக்காப்பும், கொண்டு - கையிற்கொண்டு, இங்கு - இவ்விடத்தில், எத்தனைபோதும் - நெடும்போதாக, இருந்தேன் - இராநின்றேன்; ஆதலால், நண்ணலரிய - தங்கள் முயற்சியால் ஒருவர்க்கும் கிட்டவொண்ணாத, பிரானே - உபகாரகனானவனாய், நாரணா - மேன்மையையும் நீர்மையையும் விளக்குமதான திருநாமத்தையுடையவனே, நீராட-திருமஞ்சநங்கொண்டருளுகைக்கு, வாராய் - வந்தருளவேணும்.

வ்யா.—முதற்பாட்டு. (வெண்ணெயளைந்தகுணுங்கும்) வெண்ணெயமுதுசெய்யும்போது அதிலுண்டான அபிநிவேசாதிசயத்தாலே "தாரார்தடந்தோள்களுள்ளளவும்கைநீட்டி" என்று கைநிறையுந்தனையும் வயிறுநிறையுமென்னும் (க) மௌக்த்யத்தாலே வெண்ணெய்த் தாழிக்குள்ளே திருக்கைகளுள்ளளவும்நீட்டி யள்ளியும் "முழுதும்வெண்ணெயளைந்து" என்கிறபடியே வெண்ணெயைமுழுக்க விருந்தளைந்து அமுதுசெய்கையாலே திருமேனியெங்கும் வெண்ணெய்முடையாயிறேயிருப்பது. (விளையாடுபுழுதியும்) அதுக்குமேலேவிளையாடப்புக்கால்புழுதியிலேபோயிருந்துஅளைந்துவிடுகையாலே அந்தவெண்ணெய்ப்பசையோடே திருமேனியெங்கும் புழுதியும்பற்றியிறே கிடப்பது. (கொண்டு) இப்படி வெண்ணெயளைகையால்வந்த (உ) குணுங்குநாற்றத்தையும் விளையாடினபோதைப் புழுதியையும்கொண்டு. (திண்ணென) திண்ணியதாக - நிச்சயமாகவென்றபடி. (இவ்விராவித்யாதி) இந்தராத்ரியில் உன்னை (ங) கண்

(க) மௌக்த்யம் - குழவித்தன்மை. (உ) குணுங்குநாற்றம் - ஓர்வகைநாற்றம். (ங) கண்டூதி - தினவு.

டேதியாலே உடம்பைப் படுக்கையிலே தேய்த்துக்கொண்டுகிடக்க நான் (க) ஸம்வதியேன். (திண்ணென - ஒட்டேன்) நிச்சயமாகவுன்னை யிப்படிகிடக்கவொட்டேன், நான் நீராட்டியேவிடுவேனென்ன; எனக்குக் குளிக்கைக்கு வேண்டுமவைகொண்டுவந்தாயோவென்ன; (எண்ணெயித்யாதி)உன்திருமேனிக்குமுந்துறச்சாத்துகைக்கு எண்ணெய்க்காப்பும், பின்பு அதுகழற்றுகைக்குப்புளிக்காப்பும்கொண்டு அநேகம் போதில்லையோ இங்கே நானிருக்கிறது. (நண்ணலரியபிரானே) ஸ்வயத்நத்தால் ஒருவர்க்கும்கிட்டவொண்ணாத வுபகாரகனானவனே. (நாரணா) மேன்மைக்கும் நீர்மைக்கும் ப்ரகாசகமான திருநாமமிறே யிது· நீர்மையிலேயிறே யிவளுக்கிப்போதுநோக்கு. (நீராடவாராய்) ஒட்டேனென்று ப்ரேமத்தாலேசொன்னாலும் உபகரணங்களை முன்னிட்டாலும் ப்ரயோஜநமில்லையே, நீவந்தாலிறே ப்ரயோஜநமுள்ளது; ஆனபின்பு, நீராடிவரவேணுமென்றபேக்ஷிக்கிறாள். (க)

மூ.—கன்றுகளோடச்செவியிற்கட்டெறும்புபிடித்திட்டால்,தென்றிக்கெடுமாகில்வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்பன், நின்றமராமரஞ்சாய்த்தாய்நீபிறந்ததிருவோணம்,இன்றுநீநீராடவேண்டுமெம்பிரானோடாதேவாராய்.

ப-ரை. கன்றுகள் - கன்றுகளானவை, ஓட - வெருண்டோடுகிறதுகாண்கைக்காக, செவியில் - அவற்றின்செவியிலே, கட்டெறும்பு - கறுத்துப் பெருத்திருந்துள்ளவோர்வகை யெறும்பை, பிடித்து—, இட்டால் - புகப்பெய்தால், தென்றி - ஒன்றுபோனவழி ஒன்று போகாதேசிதறி, கெடுமாகில் - ஓடிப்போய்விடுமாகில், வெண்ணெய் - வெண்ணெயை, திரட்டி - அதிலுண்டான விருப்பத்தாலே திரட்டி, விழுங்குமா - விழுங்கும்படியை, காண்பன் - காணக்கடவேன்; "புணராநின்ற மரமேழன்றெய்த வொருவில்வலவா" என்கிறபடியே, நின்ற - இலக்குக் குறிக்கவொண்ணாதபடி சேராச்சேர்த்தியாக நெருங்கிநின்ற, மராமரம் - ஸப்தஸாலவ்ருக்ஷங்களை, சாய்த்தாய் - மறுபாடுருவும்படியெய்து சாய்த்தவனே, நீ—, பிறந்த - அவதரித்த, திருவோணம் - திருவோண நக்ஷத்ரம், இன்று - இன்றுகாண்; ஆனபின்பு, நீ—, நீராடவேண்டும் - திருமஞ்சநங்கொண்டருள வரவேணுமென்ன; அவன்மாட்டேனென்று ஓடப்புக்கவாறே, எம்பிரான் - என்னுடைய நாயனே, ஓடாது - ஓடாமல், வாராய் - வந்தருளவேணுமென்கிறாள்.

வ்ய.—இரண்டாம்பாட்டு. (கன்றித்யாதி)இவளழைக்கச்செய்தேயும்வாராதே,லீலாபரனாய்நின்று கன்றுகள் வெருண்டோடுகிறதுகாண்கைக்காக அவற்றின்செவியிலே கட்டெறும்புகளைப்பிடித்திட அத்தைக்கொண்டுசொல்லுகிறாள்;—கன்றுகள் வெருண்டோடும்படியாக அவற்றின்செவியிலே முறியக்கடிக்கும் கட்டெறும்புகளைப் பிடித்திட்டால். (தென்றியித்யாதி) வெருண்டு ஒன்றுபோனவழி

(க) ஸம்வதித்தல் - உடன்படல்.

ஒன்றுபோகாதேசிதறி, காணவொண்ணாதபடி யோடிப்போய்விடுமாகில். (வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்பன்) வெண்ணெயிலுண்டான விருப்பத்தாலே அத்தைத்திரட்டி யிருந்து நீவிழுங்கும்படியைக்காணக்கடவேன். கன்றுண்டானாலன்றோ பசு கறக்கலாவது, பசு கறந்தாலன்றோ பாலுண்டாவது; பாலுண்டாய் வெண்ணெயுண்டாகவேணும். ஆகையால் உன்னுடைய ஜீவநங்கிடாய் குறையப்புகுகிறதென்கை. (நின்றமராமரம்சாய்த்தாய்) ஆச்ரிதனுடைய (௧) அதிசங்கையைப் போக்குகைக்காக நினைத்தபடி இலக்குக்குறிக்கவொண்ணாதபடி நெருங்கிநின்றமராமரங்களை (௨) மறுபாடுருவ வெய்து சாய்த்தவனே. (நீ பிறந்த திருவோணமின்று) நீயவதரித்த திருவோணநக்ஷத்ரங்காணின்று. இதுதான் வைஷ்ணவநக்ஷத்ரமாகையாலும் அவதாராந்தரங்களிலே இந்த நக்ஷத்ராந்வயமுண்டாகக்கூடுகையாலும் தர்மைக்யத்தைப் பற்றச்சொல்லுகிறது. (நீநீராடவேண்டும்) பிறந்தநாளைக்கும் குளியாதிருப்பாருண்டோ; ஸர்வதா நீயின்று திருமஞ்சநஞ்செய்யவேணுமென்ன; “மாட்டேன்” என்று ஓடப்புக்கவாறே (எம்பிரானோடாதேவாராய) என்னுடைய நாயனே ஓடலாகாதுகாண், வாராயென்கிறாள். (௨)

மூ.—பேய்ச்சிமுலையுண்ணக்கண்டுபின்னையுநில்லாதென்னெஞ்சம்
ஆய்ச்சியரெல்லாருங்கூடியழைக்கவுநான்முலைதந்தேன்
காய்ச்சினநீரொடுநெல்லிக்கடாரத்திற்பூரித்துவைத்தேன்
வாய்த்தபுகழ்மணிவண்ணமஞ்சநமாடநீவாராய்.

ப-ரை.—பேய்ச்சி - பூதனையுடைய, முலை - முலைப்பாலை, உண்ண - அவள் முடியும்படியுண்டமையை, கண்டு - கண்டிருக்கச்செய்தேயும், பின்னையும் - அத்தைக்கண்டபின்பும், என் - என்னுடைய, நெஞ்சம் - நெஞ்சானது, நில்லாது - உன்பக்கலுண்டான வன்பினாலே தரிக்கமாட்டாமல், ஆய்ச்சியரெல்லாரும் - இடைச்சிகளெல்லாரும், கூடி - சேர்ந்து, அழைக்கவும் - பேய்ச்சிபட்டுக் கிடக்கிறபடியையும் நீயவள்மேலேயிருந்து முலையுண்கிறபடியையும் கண்டு பயந்து கூப்பிடச்செய்தேயும், நான்—, முலை - அந்தவிஷத்துக்கு அம்ருதமான முலையை, தந்தேன் - தந்தநான், நெல்லியொடு - நெல்லியோடே, காய்ச்சின - உன்திருமேனிக்கநுகுணமாகக் காய்ச்சின, நீர் - தீர்த்தத்தை, கடாரத்தில் - திருமஞ்சநத் தாழியிலே, பூரித்துவைத்தேன் - நிறைத்துவைத்தேன்; வாய்த்த - நன்றான, புகழ் - புகழையும், மணிவண்ண - நீலரத்நம்போன்ற வடிவையுமுடையவனே, மஞ்சநமாட - புழுதிமுதலானவைபோம்படி திருமஞ்சநங்கொண்டருளுகைக்கு, நீ—, வாராய் - வந்தருளவேணும்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பேய்ச்சியித்யாதி) “வஞ்சனையால் வந்தபேய்ச்சி” என்கிறபடியே-தன்வடிவைமறைத்து என்வடிவைக்கொண்டுவந்த பேய்ச்சியுடையமுலையை அவள் முடியும்படி யுண்

(௧) அதிசங்கை - ஸந்தேகம். (௨) மறுபாடுருவ - பின்னேபுறப்படும்படி.

டமைகண்டிருக்கச்செய்தே. (பின்னையும் நில்லாதென் னெஞ்சம்) இத்தைக்கண்டால் அஞ்சியோடவேண்டியிருக்க, பின்னையும் என்னுடைய நெஞ்சானது உன்பக்கல் ஸ்நேஹமடியாகத்தரிக்கமாட்டாதே. (ஆய்ச்சியரெல்லாருங்கூடியழைக்கவும்) பேய்ச்சிபட்டுக்கிடக்கிறப்படியையும் நீ அவள்மேலே யிருந்து முலையுண்கிற படியையும் கண்டு, இடைச்சிகளெல்லாரும் (க) பீதைகளாய்க் கூப்பிடச்செய்தேயும் நானஞ்சாமல்வந்து உன்னையெடுத்து முலையைத்தந்தேன். இப்படியன்றோ எனக் குன்பக்கலுண்டான ஸ்நேஹம்; ஆனபின்பு நான்சொன்னது செய்யவேணுங்காணென்கை. (காய்ச்சின நீரித்யாதி) உன்னுடையதிருமேனிக்கநுகுணமாக நெல்லியோடே காய்ச்சின திருமஞ்சநத்தைக் கடாரத்திலேபூரித்துவைத்தேன். (வாய்த்தவித்யாதி) பேய்ச்சியுடையவஞ்சனையிலே அகப்படாதே அவளை நிரஸித்து உன்னை நோக்கித் தருகையாலே நன்றான புகழையுடையனாய், அநுபவிப்பார்க்கு ஆகர்ஷகமாம்படி நீலரத்நம்போன்ற வடிவையுமுடையவனே. (மஞ்சநமாட நீவாராய்) மாணிக்கத்துக்கு மாசேறினாற்போலே உன்திருமேனியில் வந்தேறியான புழுதிமுதலானவை போம்படி திருமஞ்சநம் செய்யவரவேணும். (௩)

மூ.—கஞ்சன்புணர்ப்பினில்வந்தகடியசகடமுதைத்து
வஞ்சகப்பேய்மகடுஞ்சவாய்முலைவைத்தபிரானே
மஞ்சளுஞ்செங்கழுநீரின்வாசிகையுநாறுசாந்தும்
அஞ்சநமும்கொண்டுவைத்தேனழகனேநீராடவாராய்.

ப - ரை.—கஞ்சன் - கம்ஸனுடைய, புணர்ப்பினில் - ஏவுகையால், வந்த—, கடிய - கொடுந்தன்மையனான, சகடம் - சகடாஸுரனை, உதைத்து - திருவடிகளாலே கட்டுக்குலையும்படியுதைத்து, வஞ்சகம்-வஞ்சகையான, பேய்மகள் - பூதனையானவள், துஞ்ச - முடியும்படியாக, முலை - அவள் முலையிலே, வாய் - உன் திருப்பவளத்தை, வைத்த - வைத்து அமுதுசெய்த, பிரானே - உபகாரகனானவனே, மஞ்சளும் - உன்திருமேனி நிறம்பெறச்சாத்துகைக் கீடான மஞ்சளும், செங்கழுநீரின்வாசிகையும் - உன்திருமுடிக் கலங்காரமாகச் சாத்தத்தக்க செங்கழுநீர்மாலையும், நாறு - உன்திருமேனிக் கநுகுணமாக ஆறிக்குளிர்ந்து மணத்திருக்கிற, சாந்தும் - கஸ்தூரி, கர்ப்பூரம், புழுகு, பனிநீர் முதலியவை சேர்ந்த கலவைச்சந்தநமும், அஞ்சநமும் - உன்திருக்கண்களுக்குச் சாத்துகைக்குத் தக்க அஞ்சநமும், கொண்டு-அருமைப்பட்டுத் தேடிக்கொணர்ந்து, வைத்தேன்-வைத்திருக்கிறேன்; அழகனே - இவையெல்லாம் மிகையாம்படியான அழகையுடையவனே, நீராட - திருமஞ்சநம்செய்ய, வாராய் - வரவேணும்.

வ்யா.—நாலாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) (உ) கம்ஸப்ரேரிதனாய்வந்த அதிக்ரூரனான சகடாஸுரனை, முலைவரவு தாழ்த்துச்சீறி

(க) பீதைகளாய் - பயந்தவர்களாய். (உ) கம்ஸப்ரேரிதனாய் - கம்ஸனால் ஏவப்பட்டவனாய்.

நிமிர்த்த திருவடிகளாலே கலக்கழியும்படி யுதைத்து. (வஞ்சகமித்யாதி) தாய்வடிவுகொண்டுவந்த வஞ்சகியான பேய்ச்சிமுடியும்படியாக, அவள்முலையிலே உன் திருப்பவளத்தைவைத்து உண்டவுபகாரகனானவனே. சகடாஸுரன்கையிலும் பூதனைகையிலும் அகப்படாமல் உன்னைநோக்கித் தந்தவுபகாரகனானவனன்றோவென்கை. (மஞ்சளுமித்யாதி) உன் திருமேனிக்கு நிறம்பெறச்சாத்துகைக்கீடான மஞ்சளும், உன் திருமுடிக்கலங்காரமாகச் சாத்தத்தக்க செங்கழுநீர் (க) வாசிகையும், உன் திருமேனிக்கநுகுணமாம்படி ஆறிக்குளிர்ந்து மணத்திருக்கிறசாந்தும், உன்னுடைய திருக்கண்களுக்குச் சாத்துகைக்கீடான அஞ்சநமும் கொண்டுவந்து வைத்தேன். (அழகனேநீராடவாராய்) இவையெல்லாம் மிகையாம்படியானவழகையுடையவனே, உன்னழகுதோன்றும்படி திருமஞ்சநம் செய்ய வரவேணும். (ச)

மூ.—அப்பங்கலந்தசிற்றுண்டியக்காரம்பாலிற்கலந்து
சொப்படநான்சுட்டுவைத்தேன்றின்னலுறுதியேனம்பி
செப்பிளமென்முலையார்கள்சிறுபுறம்பேசிச்சிரிப்பர்
சொப்படநீராடவேண்டுஞ்சோத்தம்பிரானிங்கேவாராய்.

ப - ரை.—நம்பி - பிள்ளைத்தனத்தில் பூர்த்தியை யுடையவனே, செப்பு-செப்புப்போன்ற நிலைமையையுடைத்தாய், இளம் - இளையதாய், மெல்-ம்ர்துவாயிருக்கிற, முலையார்கள் - முலையையுடையவர்கள், நீநீராடாமலிருக்கிறவடிவைக்கண்டால், சிறு - தோற்றின புன்மைகளை, புறம்பேசி - காணாதவிடங்களிலே சொல்லி, சிரிப்பர்-சிரியாநிற்பர்கள்; நான்—, அப்பம் - அப்பத்தையும், கலந்த-அத்தோடுசேர்ந்த, சிற்றுண்டி - சிற்றுண்டியையும், பாலில் - பாலிலே, அக்காரம்- கருப்புக்கட்டியையிட்டு, கலந்து - பிசைந்து, சொப்பட - நன்றாக, சுட்டுவைத்தேன் - பக்வம்செய்தேன்; தின்னல் - அமுதுசெய்ய, உறுதியேல் - விருப்புற்றிருந்தாயாகில், அதுக்கிடமறும்படியாக, சொப்பட - நன்றாக, நீராடவேண்டும் - நீராடவரவேணுமென்ற வளவிலும் வாராமையாலே, பிரான் - பிரானே, சோத்தம் - உன்னைத்தொழுகிறேன், இங்கேவாராய் - இங்கேவரவேணுமென் றழைக்கிறாள்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அப்பமித்யாதி) அப்பத்தையும் அத்தோடேசேர்ந்த சிற்றுண்டியாகிற (உ) அபூப விசேஷத்தையும். (அக்காரம்பாலில்கலந்து) பாலிலே கருப்புக்கட்டியையிட்டுப் பிசைந்து. (சொப்படவித்யாதி) நன்றாக நான் சுட்டுவைத்தேன். சொப்பட - நன்றாக. (தின்னலுறுதியேல்நம்பி) பிள்ளைத்தனத்தில் பூர்த்தியை யுடையவனே அமுதுசெய்யவேணுமென்று அதிலே உற்றிருந்தாயாகில், நீராடவேணுமென்று மேலே அந்வயம். செப்புப்போலேயிருக்கிற ஸந்நிவேசத்தையுடைத்தாய் இளையதாய் ம்ர்துவாயிரு

(க) வாசிகை - மாலை. (உ) அபூபவிசேஷம் - ஓர்வகைப்பணியாரம்.

க்கிற முலேயையுடையவர்கள். (சிறுபுறம்பேசிச்சிரிப்பர்) நீராடா மலிருக்கிற வடிவைக்கண்டால் தோற்றினபுன்மைகளைக்காணாதவிட ங்களிலே சொல்லிச் சிரியாநிற்பர்கள். சிறுமை - புன்மை. புறம் பேசுகையாவது - காணாதவிடத்தேசொல்லுகை. (சொப்படநீராட வேண்டும்) அதுக்கிடமறும்படியாகவும் நன்றாக நீராடவேணுமெ ன்ன; அவ்வளவிலும் அவன்வாராமையாலே (சோத்தம்பிரானிங்கே வாராய்) பிரானே யுன்னைத்தொழுகிறேன், இங்கேவாராயென்று அழைக்கிறாள். (ரு)

மூ.—எண்ணெய்க்குடத்தையுருட்டி யிளம்பிள்ளைகிள்ளியெழுப்பி
கண்ணைப்புரட்டிவிழித்துக்கழைகண்டுசெய்யும்பிரானே [க்
யுண்ணக்கனிகடருவனொலிகடலோதநீர்போலே
வண்ணமழகியநம்பிமஞ்சநமாடநீவாராய்.

ப - ரை.—எண்ணெய்க்குடத்தை—, உருட்டி - வேறொன்றில் மநஞ்செல் லும்படி உருட்டியும், இளம்பிள்ளை - கிடந்துறங்குகிற சிறுப்பிள்ளையை, கிள்ளி- தேளெறிந்தாற்போலே வீரிட்டுக் கூப்பிடும்படியாகக்கிள்ளி, எழுப்பி - எழுந் திருக்கச்செய்து, கண்ணை - கண்ணிமையை, புரட்டிவிழித்து - அகவாய்புறவா யாகப்புரட்டி விழித்து, கழகண்டு - இத்தன்மைத்தான தீம்புகளை, செய்யும் - செய்கின்ற, பிரானே - ஸ்வதந்த்ரனானவனே, உண்ண - நீவிரும்பி யமுதுசெய் யும்படி, கனிகள் - நாவற்பழம்முதலிய கனிகளை, தருவன் - தாராநிற்பன்; ஆன பின்பு, ஒலி - சப்திக்கிற, கடல் - கடலினுடைய, ஓதம் - திரைக்கிளப்பத்தை யுடைத்தான, நீர்போலே - ஜலம்போலே, அழகிய—, வண்ணம் - திருமேனி நிறத்தையுடைய, நம்பீ—, மற்றதுமுன்போலே.

வ்யா.—ஆறும்பாட்டு. (எண்ணெயித்யாதி) அகத்திலுள்ளாரெ ல்லாரும்(க)அங்யபராம்படியாக எண்ணெய்க்குடத்தை யுருட்டி. அத்தையிறைப்பார்வழிப்பாராய்க்கொண்டு (உ) வ்யாகுலப்படாநிற் கச்செய்தே (இளம்பிள்ளைகிள்ளியெழுப்பி) அத்தைவிட்டிங்கேயோ டிவரவேண்டும்படி கிடந்துறங்குகிற சிறுப்பிள்ளையை, தேளெறிந் தாற்போலே வீரிட்டுக்கூப்பிடும்படியாகக் கிள்ளியெழுப்பி. (கண் ணைப்புரட்டிவிழித்து) அருகுநின்றவர்கள்முகத்திலே "அப்பூச்சி" என்று கண்ணினிமையை அகவாய் புறவாயாகப்புரட்டிவிழித்து. (கழகண்டுசெய்யும்பிரானே)இப்படி (ங)துஸ்ஸஹமானதீம்புகளைச் செய்யும் (ச) ஸ்வதந்த்ரனானவனே. ஒருத்தர்கையில் அடங்காதானா யிராநின்றாயே யாகிலும், நான் இப்போது சொல்லிற்றுச்செய்யவே ணுங்காணென்று கருத்து. (உண்ணக்கனிகள்தருவன்) நீ விரும்பி யமுது செய்யும்படி நாவல்பழம்முதலான பழங்களைத்தருவேன்.

(க) அங்யபராம்படி - வேறொன்றில் மநஞ்செல்லும்படி. (உ) வ்யாகுலப் பட - வருத்தப்பட. (ங) துஸ்ஸஹமான - பொறுக்கவொண்ணாத. (ச) ஸ்வ தந்த்ரன் - பிறர்க்குக்கீழ்ப்படியாதவன்.

(ஒலிகடலித்யாதி) கோஷிக்கிறகடலின் திரைக்கிளப்பத்தையுடைத் தான ஜலம்போலே திருமேனியின்நிறமழகிய நம்பீ. (மஞ்சநமாட நீவாராய்) உன் திருமேனியில் அழகுதோன்றும்படி திருமஞ்சந மாட நீ வரவேணும். (சு)

மூ.—கறந்தநற்பாலுந்தயிருங் கடைந்துறிமேல்வைத்தவெண்ணெ
பிறந்ததுவேமுதலாகப்பெற்றறியேனெம்பிரானே [ய்
சிறந்தநற்றாயலர்தூற்றுமென்பதனாற்பிறர்முன்னே
மறந்துமுரையாடமாட்டேன்மஞ்சநமாடநீவாராய்.

ப-ரை.—எம்பிரானே - என்னுயனே, கறந்த - உரியகாலங்களிலே கறந்த, நல் - நல்ல, பாலும் - பாலையும், தயிரும் - அந்தப்பாலிலே உறைந்த தயிரையும், கடைந்து - அப்படியிருந்துள்ள தயிரைக்கடைந்து தாழியிலே சேர்த்து, உறிமேல் - சிக்கத்திலே, வைத்த - பத்ரப்படுத்திவைத்த, வெண்ணெய் - வெண்ணெயையும், பிறந்ததுமுதலாக - நீபிறந்த வன்றுதொடங்கி, பெற்றறியேன் - பெற்றதேயில்லை; உன்பக்கலுள்ள குற்றங்களை மறைக்கக்கடவ, சிறந்த - மிகவும், நல் - அன்பினளான, தாய் - தாயானவள், அலர்தூற்றும் - பழிதூற்றா நின்றாளென்று, என்பதனால் - என்று லோகத்தார் சொல்லுமத்தைப்பற்ற, பிறர்முன்னே - அந்யருடையமுன்பு, மறந்தும் - மெய்மறந்துங்கூட, உரையாடமாட்டேன் - வாய்விடமாட்டேன்; மற்றது முன்போலே.

வ்யா,—ஏழாம்பாட்டு. (கறந்தவித்யாதி) (க) ப்ராப்தகாலங்களிலே கறந்தநல்லபாலும். நன்மையாவது - நாழியும் உழக்குநெய் போருகை. (தயிரும்) அந்தப்பாலிலேயுறைந்ததயிரும். (கடைந்துறிமேல்வைத்தவெண்ணெய்)அப்படி யிருந்துள்ளதயிரைக்கடைந்து தாழியிலேசேர்த்து உறிமேலேவைத்த வெண்ணெயும். (பிறந்தித்யாதி) நீ பிறந்தவன்றுதுடங்கி, என்னுயனே, இவை நான்பெற்றறியேன். (சிறந்தவித்யாதி) குற்றமுண்டானாலும் மறைக்கக்கடவ மிகவும் ஸ்நேஹியான தாயானவள்தான் பழிதூற்றாநின்றாளென்றுலோகம் சொல்லுமத்தைப்பற்ற அந்யருடையமுன்பு அபுத்திபூர்வகமாகவும் வாய்விடமாட்டேன். (மஞ்சநமாடநீவாராய்) இப்படி உனக்கு ஸ்நேஹியானவெனக்கு ப்ரியமாக நீமஞ்சநமாடவரவேணும். (எ)

மூ.—கன்றினைவாலோலைகட்டிக்கனிகளுதிரவெறிந்து [ய்போலும்
பின்றொடர்ந்தோடியோர்பாம்பைப்பிடித்துக்கொண்டாட்டினா
நின்றிறத்தேனல்லேனம்பிநீபிறந்ததிருநன்னாள்
நன்றுநீநீராடவேண்டும்நாரணாவோடாதேவாராய்.

ப-ரை.—கன்றுகள்மேய்க்கப் போனவிடத்திலே வெருண்டு துள்ளியோடு மது காண்கைக்காக, கன்றினை - ஒருகன்றை, வால் - வாலிலே, ஓலை - ஓலையை, கட்டி—, உன்னை நலிகைக்காகக் கன்றுகளின்நடுவே கலசிவந்து நின்ற

(க) ப்ராப்தகாலம் - உரியகாலம்.

தோர் அஸுரத்தன்மையுள்ள கன்றைக்குணிலாகக்கொண்டு, கனிகள் - ஆஸுரமான விளாவினுடைய பழங்கள், உதிர - உதிர்ந்துவிழும்படி, எறிந்து - வீசி, பின் துடர்ந்து - அதுக்குப்பின்பாக, ஓடி - ஓடிச்சென்று, ஓர்பாம்பை - ஒருபாம்பை, பிடித்துக்கொண்டு—, ஆட்டினாய்போலும் - ஆட்டினாயோதான்; நம்பீ—, நின்திறத்தேனல்லேன் - உன்படிகளெனக்கொன்றும் தெரியாது; அதுநிற்க, நீபிறந்த - நீயவதரித்த, நல் - விலக்ஷணமான, திருநாள் - திருநக்ஷத்ரம் இன்றுகாண்; ஆதலால், நன்று - நன்றாக, நீ—, நீராடவேண்டும் - திருமஞ்சநஞ்செய்யவேணும்; நாரணா - எல்லாவுயிர்களோடும் ஒழிக்கவொழியாத ஸம்பந்தத்தையுடையவனே, ஓடாது - ஓடாமல், வாராய் - வந்தருளவேணும்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (கன்றினையித்யாதி) கன்றுகள் மேய்க்கப்போனவிடத்தே வெருண்டு துள்ளியோடுமது காண்கைக்காக ஒருகன்றை வாலிலே ஓலையைக்கட்டி, உன்னை நலிகைக்காகக் கன்றுகளின் நடுவே கலசிவந்துநின்றதோர் ஆஸுரமானகன்றைக் குணிலாகக்கொண்டு ஆஸுரமானவிளாவினுடைய பழங்கள் உதிரவெறிந்து. (பின்னித்யாதி) அதுக்குப் பின்பாக வோடிச்சென்று ஒருபாம்பைப் பிடித்துக்கொண்டு ஆட்டினாயோதான். நீ யிப்போதுசெய்கிற தீம்பால் அவையும் செய்தாயாக நான் கேட்டதுங்கூடுமிறே. துடர்ந்தென்றது - (க) கதிவாசியாய், சென்றென்றபடி. (நின்னித்யாதி) உன்படிகளெனக்கொன்றும் தெரிந்திருக்கிறதில்லை. அதுகிடக்கிடு. (நீபிறந்த திருநன்னாள்) நீயவதரித்த விலக்ஷணமான திருநக்ஷத்ரங் காணின்று. (நன்றுநீநீராடவேண்டும்) நன்றாகநீ திருமஞ்சநம் செய்யவேணும். ஒருநாளும் நீராடாதாரும் பிறந்தநாளில் நீராடாதாரில்லையிறே. (நாரணா வோடாதேவாராய்) ஸர்வாத்மாக்களோடும் ஒழிக்கவொழியாத ஸம்பந்தத்தையுடையவனே என்னுடைய சொல்லை மறுத்து ஓடலாகாதுகாண், வாராய். (அ)

மூ.—பூணித்தொழுவினிற்புக்குப்புழுதியளைந்தபொன்மேனி
காணப்பெரிதுமுகப்பனாகிலுங்கண்டார்பழிப்பர்
நாணெத்தனையுமிலாதாய்நற்பின்னைகாணிற்சிரிக்கும்
மாணிக்கமேயென்மணியேமஞ்சனமாடநீவாராய்.

ப-ரை.—பூணித்தொழுவினில் - பசுக்களையடைத்துத்திறந்துவிடும் தொழுவிலே, புக்கு - புகுந்து, புழுதியளைந்த - புழுதியையளைந்த, பொன்-பொன்போன்ற, மேனி-திருமேனியை, காண-காண்கைக்கு, பெரிதும் - மிகவும், உகப்பன்-விரும்பியிருப்பன்; ஆகிலும் - நானுகந்திருந்தாலும், கண்டார் - உன்னைக்கண்டவர்கள், பழிப்பர் - "ஒருத்திபிள்ளைபெற்றுவளர்த்தபடியென்" என்று ஏசுவர்கள்; எத்தனையும் - சற்றேனும், நாண் - வெட்கம், இலாதாய் - இல்லாதவனே, நற்பின்னை - நற்பின்னையானவள், காணில் - நீ புழுதியும்உடம்புமாயிருக்கிறபடியைக்காண்பாளாயின், சிரிக்கும்-மைத்துனமையாலேசிரியாநிற்கும்; ஆதலால்,

(க) கதிவாசி - செல்லுகையைச்சொல்லுமது.

என் - எனக்கு, மாணிக்கமே - மாணிக்கம்போலேயும், மணியே - மரதகம் போலேயுமிருக்கிற திருநிறத்தையுடையவனே; மற்றது முன்போலே.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பூணியித்யாதி) பசுக்களையடைத்துத் திறந்துவிடும்தொழுவிலேபுக்கு. ஜாத்யுசிதமாகத் தொழுக்களிலேபுகுந்து விளையாடாநிற்குமிறே. (புழுதியளைந்தபொன்மேனி) பால்யாநுகுணமாகப் புழுதியையிருந்தளைகையாலே, அது திருமேனியெங்கும் வ்யாப்தமானாலும் பொன்னுக்குப் புழுதியேறினாற்போலே யிருக்கும்படியைப்பற்றச்சொல்லுகிறது. (காணப்பெரிதுமுகப்பன்) நீராட்டிக்காண்பதிலும் முக்தபாவந்தோற்றுகையாலே, இப்படி யிருக்கிறவுன்திருமேனியைக்காண்கைக்கு மிகவும் விரும்பியிருப்பன். (ஆகிலும்கண்டார்பழிப்பர்)நானுகந்திருந்தாலும் உன்னைக் கண்டவர்கள் "ஒருத்திபிள்ளைபெற்றுவளர்த்தபடியென்"என்று ஏசுவர்கள். (நாணெத்தனையுமிலாதாய்)(க)ஏகதேசமும்(உ)லஜ்ஜையில்லாதவனே. (நற்பின்னைகாணிற்சிரிக்கும்)நீபுழுதியும் உடம்புமாயிருக்கிறபடியை நற்பின்னை காணுமாகில் மைத்துனமையாலேசிரிக்கும். நாட்டார்பழிக்கு அஞ்சுகிறமாத்ரமோ, நற்பின்னை சிரிப்புக்குலஜ்ஜிக்கவேண்டாவோ. நீ அதுசெய்யாதொழிகிறது நிர்லஜ்ஜனானகையாலிறேயென்று கருத்து. (மாணிக்கமேயென்மணியே) வடிவழகுக்கொன்றே யுபமாநமாவதொன்றில்லாமையாலே அங்குமிங்கும் கதிர்பொறுக்குகிறாள். மாணிக்கம்போலேயும் மரதகம்போலேயுமிருக்கிற வடிவழகையுடையவனே யென்கை. (மஞ்சநமாட நீவாராய்) இப்படி யிருக்கிற வுன்திருமேனியில் வந்தேறியான அழுக்குக்கழிந்துவிளங்கும்படி திருமஞ்சநமாட வரவேணும். (கூ)

அ.—நிகமத்தில் - இத் திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—கார்மலிமேனிநிறத்துக்கண்ணபிரானையுகந்து
வார்மலிகொங்கையசோதைமஞ்சநமாட்டியவாற்றைப் [ல்
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான்சொன்னபாட
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே.

ப-தை.—கார் - நீர்கொண்டெழுந்த காளமேகத்திற் காட்டில், மலி-மிகுத்திருந்துள்ள, மேனிநிறத்து - திருமேனிநிறத்தையுடையனாய், கண்ணன்-தன்னையடைந்தவர்களுக்கெளியனாய், பிரானை - உபகாரகனுமானவனை, உகந்து - ஆதரித்துக்கொண்டு, வார் - கச்சிலடங்காமல், மலி - பருத்துவாராநின்றுள்ள, கொங்கை - முலையையுடைய, அசோதை - யசோதைடபிராட்டியானவள், மஞ்சநமாட்டியவாற்றை - திருமஞ்சநஞ்செய்தபடியை, பார்மலி - பூமியிலடங்காத வேற்றத்தையுடைத்தாய், தொல்-பழையதாயிருந்துள்ள, புதுவை - திருப்புதுவைக்கு, கோன் - தலைவராய், பட்டர்பிரான் - ப்ராஹ்மணோத்தமரான

(க) ஏகதேசமும் - அற்பமும். (உ) லஜ்ஜை - வெட்கம்.

பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், சீர்மலி-சீர்களாலேநிறைந்து, செம் - செவ்வியதாய், தமிழ் - தமிழாயிருந்துள்ள, பாடல்-பாடலை, வல்லார்-கருத்துடன் பயிலவல்லவர்கள், தீவினையாதும் - தீவினையொன்றும், இலர்-இல்லாதவராவர்.

வ்யா.— (கார்மலிமேனிநிறத்து) நீர்கொண்டெழுந்த காளமேகத்திற்காட்டில்மிகுத்திருந்துள்ள திருமேனி நிறத்தையுடைய. (கண்ணபிரானையுகந்து) ஆச்ரிதர்க்கு ஸுலபனுமாய் உபகாரகனுமானவனை ஆதரித்துக்கொண்டு. (வார்மலியித்யாதி) கச்சிலடங்காமல் விம்மும்படியான முலையையுடைய யசோதைப்பிராட்டி மஞ்சனமாட்டின ப்ரகாரத்தை. (பார்மலியித்யாதி) பூமியிலடங்காதவேற்றத்தையுடைத்தாய்ப் பழையதாயிருந்துள்ள திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த. (சீர்மலிசெந்தமிழ்வல்லார்) சீர்மலிகையாவது - சப்தலக்ஷணங்களில் குறைவற்றிருக்கையாலே அழகுமிக்கிருக்கை. அன்றிக்கே, (க) பகவத்குணங்களால் நிறைந்திருக்கிறவென்னுதல். (செந்தமிழ்) (உ) ஆர்ஜவயுக்தமானதமிழ். அதாவது - சப்தத்தினுடைய (௩) ப்ரஸந்நதையாலே உள்ளிற்கிடக்கிற அர்த்தம் தானேப்ரகாசிக்கும்படியிருக்கை. (பாடல்) பாட்டுக்கள். (வல்லார்) இவற்றை ஸாபிப்ராயமாகவல்லவர்கள். (தீவினையாதுமிலரே) தீவினையொன்றுமில்லாதவராவர். அவர்களுக்கு ஒரு துஷ்கர்மங்களுமில்லையென்கை. (௧௦)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—வெண்ணெய்கன்றுபேய்ச்சிகஞ்சனப்பமெண்ணெய்கறந்தகன்றினைபூணிகார்பின்னை.

ஆக திருமொழி ௧௩-க்கு, பாட்டு-௧௪அ.

அ.—"எல்லாம் தெய்வநங்கை யசோதைபெற்றாளே" என்கிறபடியே அவதாரஸமயமேதுடங்கி இவ்வவதாரசேஷ்டித ரஸமெல்லாம் தானே (ச) முற்றூட்டாகவநுபவித்த யசோதைப்பிராட்டி, அவனுடைய அவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்த பால்யாநுகுணமாக அவள்அவனை "மஞ்சனமாடவாராய்"என்று அர்த்தித்து, அவன் அதுக்கிசையாமையாலே அநேக ப்ரகாரேண அநுஸரித்து உடன்படுத்தி மஞ்சனமாட்டித் தலைக்கட்டினவநந்தரம், அவனுக்குத் திருக்குழல்வாருவதாகஉத்யோகித்து அவன்இறங்கியோடாமல்இசைந்து

(க) பகவத்குணம் - எம்பெருமானுடைய குணங்கள். (உ) ஆர்ஜவம் - செவ்வை. (௩) ப்ரஸந்நதையாலே - எளிமையாலே. (ச) முற்றூட்டு - முழுதநுபவம்.

நிற்கைக்காக, லோகத்தில் சிறுப்பிள்ளைகளைக் குழல்வாருவார், அவர்களை வசப்படுத்துகைக்காக மருட்டிச் சொல்லுமாபோலே, இவனுடைய பால்யாநுகுணமாக "அக்காக்காய்குழல்வாரவா" என்று பலகாலு மிவன்செவிகேட்கச்சொல்லிச் சீராட்டிக்கொண்டிருந்து திருக்குழல்வாரின ப்ரகாரத்தையும் தாமநுபவிக்க வாசைப்பட்டு, பாவநா ப்ரகர்ஷத்தாலே (க) தத்தவஸ்தாபந்நராய்க்கொண்டு, தத்காலம்போலேதாம் அவனைக்குறித்து அப்பாசுரங்களைச்சொல்லி, திருக்குழல்வாருகையாகிற ரஸத்தை யநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

மூ.—பின்னைமணாளனைப்பேரிற்கிடந்தானை
முன்னையமரர்முதற்றனிவித்தினை
என்னையுமெங்கள்குடிமுழுதாட்கொண்ட
மன்னனைவந்துகுழல்வாராயக்காக்காய்
மாதவன்றன்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—பின்னை - நற்பின்னைப்பிராட்டியை, மணாளனை - திருமணம் புணர்ந்தவனாய், பேரில - திருப்பேரிலே, கிடந்தானை - பள்ளிகொண் டருளினவனாய், முன்னை - எம்பெருமானை யநுபவிக்கைக்கு முற்பட்டவர்களாய், அமரர் - * அயர்வறுமமரர்களான நித்யஸூரிகளுக்கு, முதல் - தலைவனாய், தனி - அத்விதீயமான, வித்தினை - காரணபூதனானவனாய், என்னையும் - தன்னைப்பிரிந்தன்றியுளேனாகாதவென்னையும், எங்கள் - முன்னேழ், பின்னேழ், நடுவேழ் ஆகிய இருபத்தொரு தலைமுறைகளிலும் பழிக்கப்படாத வெங்களுடைய, குடிமுழுது - குடியிலுள்ளா ரெல்லாரையும், ஆட்கொண்ட - அடிமைகொண்ட, மன்னனை - ராஜாவானவனை, வந்து—, குழல்வாரா யக்காக்காய்—; மாதவன்தன் - பெரியபிராட்டியார்க்கு வல்லபனானவனுடைய, குழல்வாரா யக்காக்காய்—.

வ்யா.—முதற்பாட்டு. (பின்னைமணாளனை) நற்பின்னைப்பிராட்டிக்கு(உ)வல்லபனானவனை. இவ்வவதாரத்துக்கு(ந)ப்ரதாநமஹிஷியிவளிறே. மேன்மைக்கு ஸ்ரீயப்பதியென்னுமாபோலேயிறே நீர்மைக்கு இவளுக்கு வல்லபனென்கிறதும். (பேரில்கிடந்தானை)அதுக்குமேலே யொருநீர்மையிறேயிது. அவதார ஸௌலப்யம்போலன்றிறே அர்ச்சாவதார ஸௌலப்யம். "கொம்பினார்பின்னைகோலங் கூடுநற்கேறுகொன்றான் - தென்திருப் பேருள்மேவு மெம்பிரான்" என்கையாலே - பின்னைக்கு மணாளனானதுக்கும் பேரில்கிடந்ததுக்கு மொருசேர்த்தியுண்டிறே. நற்பின்னைப்பிராட்டியைத் திருமணம் புணர்ந்து, பின்பு அவளோடேகூடவந்து கண்வளர்ந்தருளிற்றுத் திருப்பேரிலேபோலேகாணும். (முன்னையமரரித்யாதி)கீழ்ச்சொன்ன நீர்மைக்கெதிர்த்தட்டான மேன்மையைச் சொல்லுகிறது. "ஸத்ரூ

(க) தத்தவஸ்தாபந்நராய்க்கொண்டு - அந்த தசையையுடையராய்க்கொண்டு. (உ) வல்லபன் - நாயகன். (ந) ப்ரதாநமஹிஷி-முதன்மையான இராக்கினி.

ர்வேஸ்ய ஸ்ரஷ்டா ஸந்தவா:" "யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:" என்கிறபடியே-பகவதநுபவத்துக்கு (க) முற்பாடரான (உ) நித்யஸூரிகளுக்கு (ங) சேஷித்வேந ப்ரதாநனாய், அவர்களுடைய ஸத்தாதிகளுக்கும் தாரகாதிகளுக்கும் தானே ஹேதுவானவனை. (என்னையுமித்யாதி) தன்னைப்பரிந்தன்றி உளேனாகாதவென்னையும் * ஏழாட்காலும் பழிப்பில்லாத எங்கள்குடியிலுள்ளாரெல்லாரையும் ஸ்வரூபாநுரூபமான வடிமையைக்கொண்ட. (மன்னனை) ராஜாவானவனை. (வந்துகுழல்வாராயக்காக்காய்) இது சிறுப்பிள்ளைகளைக் குழல்வாருவார் சீராட்டாகச் சொல்லும்பாசுரம். (மாதவனித்யாதி) நீர்மைக்குப் பின்னைமணாளனானாற்போலே, மேன்மைக்கு ஸ்ரீயபதியானவனுடைய குழல்வாராய் வந்தக்காக்காய். (க)

மூ.—பேயின்முலையுண்டபிள்ளையிவன்முன்னம்
மாயச்சகடுமருதுமிறுத்தவன்
காயாமலர்வண்ணன்கண்ணன்கருங்குழல்
தூய்தாகவந்துகுழல்வாராயக்காக்காய்
தூமணிவண்ணன்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—இவன் - இச்சிறுக்கனானவன், முன்னம் - முன்பு, பேயின்-தாய் வடிவுகொண்டுவந்த பூதனையுடைய, முலை - முலையை, உண்ட-தாய்முலை யுண்ணுமாபோலே யிருந்துண்ட, பிள்ளை-பிள்ளையாய், அதுக்குப்பின்பு, மாயம்-வஞ்சனத்தையுடைய, சகடும் - சகடத்தையும், மருதும் - யமளார்ஜுநங்க ளாகிற இரண்டு மருதமரங்களையும், இறுத்தவன் - காலாலும் துடையாலும் தள்ளிமுறித்துப்பொகட்டவனாய், காயாமலர் - அப்போதலர்ந்த காயாம்பூப்போலேயிருக்கிற, வண்ணன்-வடிவழகுடையனாய், கண்ணன்-ஆச்ரிதர்க்கெளியனாயிருக்குமவனுடைய, கரு - கறுத்திருந்துள்ள, குழல் - திருக்குழலை, தூய்தாக - நன்றாக, வந்து—, குழல்வாராயக்காக்காய்—; தூ-பழிப்பற்ற, மணி-நீலரத்நம்போன்ற, வண்ணன் - வடிவையுடையவனுடைய, குழல் - குழலை, வாராயக்காக்காய்—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பேயின்முலையுண்டபிள்ளையிவன்முன்னம்) முன்னம் தாய்வடிவுகொண்டுவந்த பூதனையுடைய முலையை, தாய்முலையுண்ணுமாபோலே யிருந்துண்ட முக்தனிவன். இவனுக்குப்பிள்ளைத்தனத்தில் (ச)புரையில்லையாகில் அவள்முடிந்தபடியென்னென்னில்; ப்ரதிகூலித்துக் கிட்டினார்முடியக்கடவ வஸ்து ஸ்வபாவத்தாலே முடிந்தவித்தனை. (மாயச்சகடுமருதுமிறுத்தவன்) அதுக்குப்பின்பு, கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே அஸுராவிஷ்டமாய் நலியவந்த க்ர்த்ரிமமான சகடத்தையும், தவழ்ந்துபோகாநிற்கச்செய்தே நடுவே நலிவதாகநின்ற யமளார்ஜுநங்களையும் காலாலும்

(க) முற்பாடர் - முற்பட்டவர்கள். (உ) நித்யஸூரிகள் - திருவநந்தாழ்வான், பெரியதிருவடி, சேனைமுதலியார் துடக்கமானவர்கள். (ங) சேஷித்வேந - உடையவனாயிருத்தலால். (ச) புரையில்லை - குற்றமில்லை.

துடையாலும் தள்ளிமுறித்துப்பொகட்டவன். (காயாமலர்வண்ணன்) ஆத்மகுணங்கள் மிகையாம்படி அப்போதலர்ந்த செவ்விக்காயாம்பூப்போலேயாய், அநுகூலரை (க)எழுத்திடுவித்துக்கொள்ளும் வடிவழகு படைத்தவன். (கண்ணன்) விருபனானாலும் விடவொண்ணாத ஸௌலப்யத்தையுடையவன். (கருங்குழல்) குழலுக்கு ஒரு போலி காணாமையாலே வெறும்கருங்குழலென்கிறாள். (தூய்தாக வந்து குழல்வாராய்) நன்றாகவந்து குழல்வாராய். தூய்தாகவாருகையாவது - அலகலகாய்ச் (உ) செப்பம்கிடக்கும்படி வாருகை. (தூமணிவண்ணன்) பழிப்பற்ற நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையவன். காயாம்பூப்போலே போதுசெய்யாதே ஒருபடிப்பட்டிருக்கும் நீலரத்நம்போன்ற வடிவழகையுடையவனென்கை. (உ)

மூ.—திண்ணக்கலத்துத்திரையுறிமேல்வைத்த
வெண்ணெய்விழுங்கிவிரையனுறங்கிடும்
அண்ணலமரர்பெருமானையாயர்தம்
கண்ணனைவந்துகுழல்வாராயக்காக்காய்
கார்முகில்வண்ணன்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—திண்ணம் - திண்ணிதான, கலத்து - கலத்திலே, திரை - கயிறுகளாற் பின்னப்பட்டுப் பெரிதாயிருந்துள்ள, உறிமேல் - சிக்கத்திலே, வைத்த - பத்ரப்படுத்திவைத்த, வெண்ணெய் - வெண்ணெயை, விழுங்கி - வைத்தகுறியழியாதபடிவிழுங்கி, விரையன்-கடுகப்போந்து, உறங்கிடும் - * உறங்குவான் போல்கிடக்குமவனாய், அண்ணல் - ஸர்வஸ்வாமியானவனாய், அமரர்-நித்யஸூரிகளுக்கு, பெருமானை - அதிபதியானவனாய், ஆயர்தம் - இடக்கைவலக்கையறியாத இடையர்க்கு, கண்ணனை-ரக்ஷகனானவனுடைய, குழல் - குழலை, வந்து—, வாராயக்காக்காய்—; கார் - மழைக்காலத்திலுண்டான, முகில் - மேகம் போன்ற, வண்ணன் - வடிவையுடையவனுடைய, குழல்வாராயக்காக்காய்—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (திண்ணக்கலத்து) சிக்கென்றகலத்திலே. கோல்களாலே மாறியடித்தாலும்(ங)ஈடுபடாதகலமென்கை. (திரையுறிமேல்வைத்த) பெரியவுறிமேலேவைத்த. திரையுறியாவது - கயிற்றுப் பின்னலாகக்கொண்டு சமைத்தபெரியவுறி. (வெண்ணெய்விழுங்கி) இப்படி சேமித்துவைத்தவெண்ணெயை வைத்தகுறியழியாமல் "தெய்வம் கொண்டதோ" என்னும்படி விழுங்கி. (விரையனுறங்கிடும்) உடையவர்கள் காணுமதற்குமுன்னே கடுகப்போந்து, அறியாதாரைப்போலே கிடந்துறங்காநிற்கும். வெண்ணெய்விழுங்குகிறபோதைப் பதற்றத்திலுங்காட்டில் பதறி உறங்கப்புக்கால் கண்ணுறங்குமோ. (ச) குறுவிழிகொண்டு, வந்தார், போ

(க) எழுத்திடுவித்துக்கொள்ளுகை - அடிமைச்சீட்டெழுதிக்கொள்ளுகை. (உ) செப்பம் - செவ்வை. (ங) ஈடுபடாத - உடையாத. (ச) குறுவிழிகொள்ளுகை - கண்ணைக் கொஞ்சமாகத்திறந்துகொண்டிருக்கை.

னுர் நிழலாட்டம்பார்த்துக்கொண்டு கிடக்கையாலே, "இதென்ன பொய்யுறக்கம்" என்று பிடித்துக்கொள்ளு மவர்களிறே. (அண்ணல்) ஸ்வாமி. இந்த (க) நவநீதசௌர்ய வ்ர்த்தாந்தத்தாலே அநுகூலரானவர்களை யெழுதிக்கொள்ளுமவன். (அமரர்பெருமானை) * அயர்வறு மமரர்களதிபதியை. மேன்மைக்கு இதுக்கவ்வருகு சொல்லலாவ தில்லையிறே. (ஆயர்தம்கண்ணனை) அம்மேன்மைக்கெதிர்த்தட்டான நீர்மைசொல்லுகிறது. இடக்கை வலக்கையறியாத இடையர்க்கு நிர்வாஹகனானவனை. (கண்ணன்) அவர்களுக்குக் கண்ணானவ னென்னவுமாம். (கார்முகில்வண்ணன்) வர்ஷுக வலாஹகம்போலேயிருக்கிற வடிவையுடையவன். இத்தால் - அநுபவிப்பார்க்கு ச்ரமஹரமான வடிவையுடையவனென்கை. குழல்வாராய். (ங)

மூ.—பள்ளத்தில்மேயும்பறவையுருக்கொண்டு
கள்ளவசுரன்வருவானைத்தான்கண்டு
புள்ளிதுவென்றுபொதுக்கோவாய்கீண்டிட்ட
பிள்ளையைவந்துகுழல்வாராயக்காக்காய்
பேய்முலையுண்டான்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—பள்ளத்தில்-நீர்நிலங்களிலே, மேயும்-இரையெடுத்துத் திரியாநிற்கிற, பறவை - கொக்காகிற பக்ஷியினுடைய, உருக்கொண்டு-வடிவைக்கொண்டு, கள்ளம் - க்ர்த்ரிமமான, அசுரன் - அஸுரனானவன், வருவானை - தன்வடிவை மறைத்தவனாய்க்கொண்டு நலியவருகிறவனை, தான் - பராக்காய்க் கன்று மேய்த்து விளையாடுகிறதான், கண்டு—, இது - இத்தைப்பெரிதாக நினையாதே, புள்ளென்று - அற்பமான பறவையென்றுநினைத்து, வாய் - தன்னை நலிவதற்கு அங்காந்துவருகிற வாயை, பொதுக்கோ-சடக்கென, கீண்டிட்ட - கிழித்துப்பொகட்ட, பிள்ளையைவந்து—, குழல்வாராயக்காக்காய்—; பேய்-பூதனையுடைய, முலை - முலையை, உண்டான்-அவள்ப்ராணனோடு உண்டவனுடைய, குழல்வாராயக்காக்காய்—.

வ்யா.—நாலாம்பாட்டு. (பள்ளத்திலித்யாதி) நீர்த்தாழ்வுகளிலே இரையெடுத்துத் திரியாநிற்கும் (உ) பகமாகிறபக்ஷியின் வடிவைக்கொண்டு. (கள்ளவசுரன்) க்ர்த்ரிமமானவஸுரன். தன்னுடைய ரூபத்தைமறைத்து பகரூபங் கொண்டுவந்தது க்ர்த்ரிமனாகையாலேயிறே. (வருவானைத்தான்கண்டு) இப்படி (ங) ப்ரச்சந்நனாய்க்கொண்டு தன்னை நலியவருகிறவனை, அந்யபரனாய்க் கன்றுமேய்த்துநின்று விளையாடுகிற தான்கண்டு. (புள்ளிதுவென்று) அஸுரனென்று இத்தைப்பெருக்கநினையாதே, ஒருபக்ஷியென்று (ச) ஆபா

(க) நவநீதசௌர்யம் - வெண்ணெய் களவுகாண்கை. (உ) பகம் - கொக்கு. (ங) ப்ரச்சந்நனாய்க்கொண்டு - தன் வடிவை மறைத்தவனாய்க்கொண்டு. (ச) ஆபாஸமாக - தண்ணிதாக.

ஸமாகநினைத்து. (பொதுக்கோ வாய்கீண்டிட்ட) தன்னை நலிவதாக அங்காந்துவருகிறவாயை, அதினுடைய நினைவுக்கிடமறும்படி சடக்கெனக்கிழித்துப்பொகட்ட. பொதுக்கோவென்கிறது - பொதுக்கெனவென்றபடி. அதாவது - சடக்கெனவென்கை. (பிள்ளையை) பிள்ளைத்தனத்தில் புரையில்லாதவனை. இத்தனையும் செய்யாநிற்கச்செய்தே இதுதானுமொருவிளையாட்டாயிருந்தபடி. (பேய்முலையுண்டான்) அவள்முலையுண்கிறவிடத்தில் பிள்ளைத்தனத்தில் புரையில்லாதாற்போலேயாய்த்து - இதுவும். (௪)

மூ.—கற்றினமேய்த்துக்கனிக்கொருகன்றினைப்
பற்றியெறிந்தபரமன்றிருமுடி
உற்றனபேசிநீயோடித்திரியாதே
அற்றைக்கும்வந்துகுழல்வாராயக்காக்காய்
ஆழியான்றன்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—கற்றினம் - கன்றுகளினுடையதிரளை, மேய்த்து—, ஒருகன்றினை-அஸுரமாய்வந்து நின்றதொருகன்றை, பற்றி - காலைப்பிடித்துத் தூக்கியெடுத்து, கனிக்கு - அந்தவிளங்கனி யுதிருகைக்காக, எறிந்த - எறிந்து இரண்டையும் சேரமுடித்துப் பொகட்ட, பரமன் - உபகாரகனுடைய, திரு - அழகிய, முடி - மயிர்முடியை, உற்றன - உன்சாதிக்கேற்றவற்றை, பேசி - சொல்லிக்கொண்டு, நீ—, ஓடித்திரியாதே - ஓடிப்போகாமல், அற்றைக்கும் - நாடோறும், வந்துகுழல்வாரா யக்காக்காய்—; ஆழியான்தன் - திருவாழியைத்திருக்கையிலேயுடையவனுடைய, குழல்வாரா யக்காக்காய்—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (கற்றினம்மேய்த்து) கன்றுகளினுடைய திரளைமேய்த்து. பால்யத்தில் கன்றுகள்மேய்த்து, பின்பிறே பசுக்கள்மேய்ப்பது; ஆகையாலே இவனும் கன்றுகள்மேய்க்கத் துடங்கினனாய்த்து. (கனிக்கொருகன்றினைப் பற்றியெறிந்த) இப்படி கன்றுமேய்த்துத் திரியாநிற்கிறவிடத்திலே தன்னை நலிகைக்காகக் கன்றின வடிவைக்கொண்டும் விளாவானவடிவைக்கொண்டும் வந்துநின்ற சிலவஸுரர்களைக்கண்டு, "விளங்கனிக்கிளங்கன்று விசிறி" என்கிறபடியே - முள்ளாலே முள்ளைக்களையுமாபோலே அஸுரமயமாய்வந்து நின்றதொருகன்றை, காலைப்பிடித்துத்தூக்கியெடுத்து அந்த விளங்கனி யுதிருகைக்காக எறிந்து இரண்டையும் சேரமுடித்துப்பொகட்ட. (பரமன்திருமுடி) தன்னை நலியவந்த இவற்றின் கையில் தான்படாதே, அவற்றை நிரஸித்து ஜகத்துக்கு (க) பரமசேஷியான தன்னை நோக்கித்தந்த வுபகாரகனுடைய திருமுடியை. (உற்றனபேசி நீயோடித்திரியாதே) உன்னுடைய ஜாத்யுசிதமானவற்றைச் சொல்லிக்கொண்டு, ஓரிடத்திலேநிலையின்றிக்கே நீபறந்து

(க) பரமசேஷி - எல்லாராலு மதிசயத்தைப் பண்ணத்தக்கவன்.

திரியாதே. (அற்றைக்கும்வந்துகுழல்வாராய்) நாடோறும்வந்து திருக்குழல்வாராய். (ஆழியான்) திருவாழியையுடையவன். (க) அவிதேயரை (உ) நியமிக்கவல்ல பரிகரமுடையவனென்கை. (ரு)

மூ.—கிழக்கிற்குடிமன்னர்கேடிலாதாரை
அழிப்பானினைந்திட்டவ்வாழியதனால்
விழிக்குமளவிலேவேரறுத்தானைக்
குழற்கணியாகக்குழல்வாராயக்காக்காய்
கோவிந்தன்றண்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—கிழக்கில்குடி - ப்ராக்ஜ்யோதிஷ புரவாஸிகளாய், மன்னர் - நரகாஸுரன்முதலிய அரசர்களாய், கேடிலாதாரை - வரபல புஜபலங்களுண்டாகையாலே நமக்கொரு கேடில்லையென்று நினைத்திருந்தவர்களை, தன்னையடைக்கலம்புகுந்தவர்களான இந்திரன்முதலானோரை நலிகையாலே, அழிப்பான் - அழிக்க, நினைந்திட்டு - திருவுள்ளம்பற்றி, அ - ஆச்ரிதவிரோதி நிரஸநத்தில் மிகவும் முயலாநிற்கிற ஏற்றத்தையுடைய, ஆழியதனால் - திருவாழியாலே, விழிக்குமளவிலே - இமைத்து விழிக்கும்முன்னே, வேரறுத்தானை-கிழங்கெடுத்துப் போகட்டவனுடைய, குழற்கு - திருக்குழலுக்கு, அணி - அழகு, ஆக - உண்டாம்படி, குழல்வாராயக்காக்காய்; கோவிந்தன் - பசுக்களைக்காக்கையைத் தொழிலாகவுடையவனுடைய, தண் - சிறந்த, குழல்வாராயக்காக்காய்—.

வ்யா.—ஆரும்பாட்டு. (கிழக்கில்குடிமன்னர்) (ங)ப்ராக்ஜ்யோதிஷ புரவாஸிகளாய் நரகாஸுரப்ரப்ர்திகளான ராஜாக்களை. (கேடிலாதாரை) வரபலபுஜபலங்களுண்டாகையாலே நமக்கொரு கேடில்லையென்று நினைத்திருந்தவர்களை. (அழிப்பான்நினைந்திட்டு) ஆச்ரிதரான இந்த்ராதிகளைநலிகையாலே அழிக்கத்திருவுள்ளம்பற்றி. (அவ்வாழியதனால்) * சருதுமிடம்பொருதுமதாய், "அறமுயலாழி" என்கிறபடியே தன்னிலுங்காட்டில் ஆச்ரிதவிரோதி நிரஸநத்தில் மிகவும் முயலாநிற்கும் ஏற்றத்தையுடைய திருவாழியாலே. (விழிக்குமளவிலேவேரறுத்தானை)இமைத்துவிழிக்கும்முன்னே கிழங்கெடுத்துப்பொகட்டவனை. அதவா, கேடிலாதாரையழிப்பான் நினைந்திட்டு-கிழக்கில் குடிமன்னர்-விழிக்குமளவிலே - ஆழியதனால் - வேரறுத்தானை என்று அந்வயமாக்கி - "நமக்கு ரக்ஷகனாக வீச்வரன் உண்டு" என்றிருக்கையாலே-தங்களுக்கொரு கேடின்றிக்கேயிருக்குமிந்த்ராதிகளை அடர்த்தழிப்பதாகக்கோலி, ப்ராக்ஜ்யோதிஷ புரவாஸிகளான நரகப்ரப்ர்த்யஸுர ராஜாக்களானவர்களை யழிக்கப்பார்க்கிறவளவிலே அச்செய்தி இந்த்ரன்வந்து விண்ணப்பம்செய்தவநந்தரம், பெரியதிருவடியைமேற்கொண்டு நரகபுரத்திலே யெழுந்தருளி,

(க) அவிதேயர் - கீழ்ப்படியாதவர்கள். (உ) நியமிக்கவல்ல - கீழ்ப்படுத்ததக்க. (ங) ப்ராக்ஜ்யோதிஷபுரம் - நரகாஸுரன்பட்டணம்.

*கருதுமிடம் பொரவல்ல திருவாழியாலே அந்தநராகாதிகளை மறுகி [illegible]ண்டாகாதபடி அறுத்துப்போகட்டவனையென்னவுமாம். (குழற்கணியாகக்குழல்வாராய்) திருக்குழல்களுக்கு அழகு பிறக்கும்படி குழல்வாராய். (கோவிந்தன்) (க) பராக்ஷணத்திலேதிர்ந்த வ்யாபாரங்களையுடையவன். (தண்குழல்) ச்லாக்யமானகுழல். (சு)

மூ.—பிண்டத்திரளையும்பேய்க்கிட்டநீர்ச்சோறும்
உண்டற்குவேண்டிநீயோடித்திரியாதே
அண்டத்தமரர்பெருமானழகமர்
வண்டொத்திருண்டகுழல்வாராயக்காக்காய்
மாயவன்றன்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—நீ—, பிண்டத்திரளையும் - பித்ர்க்கள் முதலானாரைக் குறித்து இடுகிற பிண்டங்களாகிற திரளையையும், பேய்க்கிட்ட - பிசாசங்களை யுத்தேசித்து இட்ட, நீர்ச்சோறும் - ஜலத்துடன்சேர்ந்த சோறுகளையும், உண்டற்கு- உண்கைக்கு, வேண்டி - ஆசைப்பட்டு, ஓடித்திரியாது-அதுக்கிடந்தேடித் தட்டித்திரியாமல், அண்டம் - நித்யவிபூதியிலே, அமரர் - * அயர்வறுமமரர் களுக்கு, பெருமான் - * அதிபதியா யிருப்பவனுடைய, அழகமர்-அழகுபொருந்தியிருந்துள்ள, வண்டொத்து-வண்டுபோலே, இருண்ட-சுருண்டிருண்டிருக்கிற, குழல் - குழலை, வாராய்—; மாயவன்தன்-யாவராலும் வியக்கப்படுமவற்றைச் செய்யவல்லவனுடைய, குழல்வாரா யக்காக்காய்—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பிண்டத்திரளையும்) பித்ர்க்கள் முதலானாரை யுத்தேசித்துஇடும் பிண்டங்களாகிற திரளையையும். (பேய்க்கிட்டநீர்ச்சோறும்) பிசாசங்களையுத்தேசித்து இட்ட ஜலஸஹிதமான சோறுகளையும். (உண்டற்குவேண்டி) உண்கைக்காசைப்பட்டு. (நீயோடித்திரியாதே) அது கிட்டுமிடந்தேடி நீ தட்டித்திரியாதே. (அண்டத்தமரர்பெருமான்) (உ) நித்யவிபூதியிலே (ங)ஸூரிகளுக்கு (ச) தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்கும் பெரியவனுடைய. (அழகமர்வண்டொத்திருண்டகுழல்வாராய்) அழகுபொருந்தியிருந்துள்ள வண்டுபோலே சுருண்டிருண்டிருக்கிற குழல்களை வாராய். (மாயவனித்யாதி) ஆச்சர்யசக்தியுக்தனானவனுடைய குழலை வந்துவாராய். (எ)

மூ.—உந்தியெழுந்தவுருவமலர்தன்னில்
சந்தச்சதுமுகன்றன்னைப்படைத்தவன்
கொந்தக்குழலைக்குறந்துபுளியட்டித்
தந்தத்தின்சிப்பாற்குழல்வாராயக்காக்காய்!
தாமோதரன்றன்குழல்வாராயக்காக்காய்.

---

(க) பரரக்ஷணம் - தன்னையொழிந்தவற்றைக் காப்பாற்றுகை. (உ) நித்யவிபூதி - பரமபதம். (ங) ஸூரிகள்-திருவநந்தாழ்வான்துடக்கமானார். (ச) தாரகாதிகள் - அந்நபாநாதிகள்.

ப-ரை.—உந்தி - திருநாபியிலே, எழுந்த - உண்டான, உருவம் - அழகிய, மலர்தன்னில் - தாமரைப்பூவிலே, சந்தம் - அறிவாலும் வல்லமையாலும் வந்த அழகையுடைய, சதுமுகன்றன்னை - நான்முகனை, படைத்தவன் - ஸ்ர்ஷ்டித்தவனுடைய, புளிகுறந்தட்டி - புளிகுறந்தட்டின, கொந்தம் - நெறிப்பையுடைய, குழலை - திருக்குழலை, தந்தத்தின் - தந்தத்தினாற்செய்த, சீப்பால் - சீப்பைக்கொண்டு, குழல்வாராய்—; தாமோதரன்தன் - அபலையானவெனக்குப் பிடித்துக்கட்டலாம்படி ஸுலபனாயிருக்கிறவனுடைய, குழல்வாராய்—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (உந்தியித்யாதி) திருநாபியிலே கிளர்ந்தஅழகியதாமரைப்பூவிலே. உருவம்-அழகு. (சந்தமித்யாதி) ஜகத்ஸ்ர்ஷ்டியில்வந்தால் தன்னைப்போலாக்க விகல்பிக்கலாம்படி ஜ்ஞாநசக்திகளால்வந்த வைலக்ஷண்யத்தையுடைய சதுர்முகனை ஸ்ர்ஷ்டித்தவன். சந்தம் - அழகு. அன்றிக்கே, சந்தமென்று - சந்தஸ்ஸாய், வேதத்தைத் தனக்குநிரூபகமாகவுடைய னென்னவுமாம். (கொந்தக்குழலைக் குறந்துபுளியட்டி) திருமஞ்சநஞ்செய்கிறபோது புளிகுறந்தட்டித் திருமஞ்சநஞ் செய்கையாலே நெறித்திருக்கிற குழலை. கொந்தம் - நெறிப்பு. புளியட்டிக்கொந்தக் குழலென்றது-புளியட்டின கொந்தக்குழலென்றபடி. திருக்குழல் வாருகிற காலத்தில் இது கூடாமையாலே திருமஞ்சநகாலத்திற்செய்ததென்னுமிடம் (க) நிச்சிதமிறே. * எண்ணெய்புளிப்பழங்கொண்டிறே திருமஞ்சநம்செய்தது. அதவா, கொந்தக்குழலை - நெறித்திருக்கிற திருக்குழலை, குறந்து புளியட்டி: அகங்களில்வளர்ந்ததனால்(உ)ஸ்வைரமாகக் குறந்தது. புளியுண்டு-புழுகு, அத்தை வார்த்தென்னவுமாம். குறந்த புளியென்கிறவிடத்தில், துகரம்கடைக்குறைத்தலாய்க்கிடக்கிறது. * ஒண்சங்கதைவாள்போலே. "புழுகட்டி" என்றுபாடமாகில் - புழுகைக்குறந்தட்டிஎன்றுபொருளாகக்கடவது. (தந்தத்தின்சீப்பால்குழல்வாராய்) திருக்குழலினுடையச்லாக்யாநுகுணமாகத்தந்தத்தால்பண்ணின சீப்பைக்கொண்டு குழல்வாராய். (தாமோதரனித்யாதி) அபலையானவெனக்குப் பிடித்துக்கட்டலாம்படி ஸுலபனாயிருக்கிறவனுடைய குழல்வாராய். (அ)

மூ.—மன்னன்றன்றேவிமார்கண்டுமகிழ்வெய்த
முன்னிவ்வுலகினைமுற்றுமளந்தவன்
பொன்னின்முடியினைப்பூவணைமேல்வைத்துப்
பின்னேயிருந்துகுழல்வாராயக்காக்காய்
பேராயிரத்தான்குழல்வாராயக்காக்காய்.

ப-ரை.—மன்னன்தன் - அஸுரராஜனான மஹாபலியினுடைய, தேவிமார் - மனையாட்டிகளானவர்கள், கண்டு - பார்த்தவர்கள் கண்ணையும் மநதையும் கவரத்தக்க வடிவழகுக்குமேலே விளங்காநின்றுள்ள முப்புரிநூலும் க்ர்ஷ்ணாஜிந

(க) நிச்சிதம் - உண்மை. (உ) ஸ்வைரமாக - இஷ்டப்படி.

மும் முஞ்சியுமாய் நிற்கிற மாணியான வடிவைக்கண்டு, மகிழ்வு எய்த - களிக்கும்படி யிரந்து, முன் - முன்னே, இவ்வுலகினை முற்றும் - தன்னதாயிருக்கிற இந்தலோகத்தையெல்லாம், அளந்தவன் - புதிதாகப் பெற்றாற்போலே அளந்துகொண்டவனுடைய, பொன் - அழகிய, முடியினை - திருமுடியை, பூ - பூப்போலே மென்மையையுடைத்தான, அணைமேல் - படுக்கையின்மேலே, வைத்து—, பின்னேயிருந்து - பிற்புறத்திலேநின்று, குழல் - திருக்குழலை, வாராய்—; ஆயிரம்பேரான் - அநேகம் திருநாமங்களை யுடையனானவனுடைய, குழல்வாராய்—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (மன்னனித்யாதி) "புலன்கொண் மாணாய்" என்கிறபடியே-ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமானவாமநரூபமும், "பொங்கிலங்குபுரிநூலும்" இத்யாதிப்படியே - அவ்வழகுககு மேலே கிளர்ந்து விளங்காநின்றுள்ளயஜ்ஞோபவீதமும், க்ர்ஷ்ணாஜிநமும், முஞ்சியுமானவிநீதவேஷமுமாய்க்கொண்டு மஹாபலியஜ்ஞவாடத்திலே வல்லாராடினாற்போலே பதறிநடந்துசென்று நின்ற நிலையையும், "கொளவன் நான்" இத்யாதிப்படியேசொன்ன முக்தஜல்பத்தையும்கண்டு, அஸுரராஜனான மஹாபலியினுடைய ஸ்த்ரீகளானவர்கள் ப்ரீதைகளாம்படிமுந்துறநின்றுஅர்த்தித்து, கையிலே நீர்விழுந்தஸமநந்தரம், முன்பேதன்னதாயிருக்கிற விந்தலோகத்தையெல்லாம் இப்போது அபூர்வமாகப்பெற்றாற்போலே யளந்துகொண்டவனுடைய. (பொன்னின்முடியினை) அழகியதிருமுடியை. பொன் - அழகு. இன் - சாரியை. (பூவணைமேல்வைத்து) திருமுடியை,மார்த்தவத்துக்கீடாக, பூப்போலேம்ர்துவான அணைமேலேவைத்து. (பின்னேயிருந்துகுழல்வாராய்) வாருகைக்குஅநுகுணமாகப் பின்னேயிருந்து திருக்குழல்வாராய். (பேராயிரத்தான்) தன் வைலக்ஷண்யத்தைக்கண்டு ஸ்துதிக்குமவர்களுக்கு இழிந்தவிடமெல்லாம் துறையாம்படி "ஸஹஸ்ரநாமா" "ஸஹஸ்ரநாமா" என்கிறபடியே அநேகம் திருநாமங்களையுடையனானவனுடைய குழல்வாராய். (௯)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—கண்டார்பழியாமேயக்காக்காய்கார்வண்ணன்
வண்டார்குழல்வாரவாவென்றவாய்ச்சிசொல்
விண்டோய்மதிள்வில்லிபுத்தூர்க்கோன்பட்டன்சொல்
கொண்டாடிப்பாடக்குறுகாவினைதானே.

ப-ரை.—கண்டார் - கண்டவர்கள், பழியாமே - பழியாதபடி, அக்காக்காய்—, கார் - மேகம்போலேகறுத்த, வண்ணன் - வடிவையுடையவனுடைய, வண்டு ஆர் - இருட்சியாலும் சுருட்சியாலும் வண்டுபோலேயிருக்கிற, குழல் - குழலை, வார - வாரும்படி, வாவென்ற - வாவென்றுசொன்ன, ஆய்ச்சி - யசோ

தைப்பிராட்டியினுடைய, சொல் - சொலவை, விண் - ஆகாசத்தை, தோய - அளாவிய, மதிள் - மதிளையுடைய, வில்லிபுத்தூர்-ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, கோன்-தலைவரான, பட்டன் - பெரியாழ்வார், சொல் - அருளிச்செய்தவித்தை, கொண்டாடி - சொல்லையும் பொருளையும் மெச்சிக்கொண்டு, பாட-அன்பினுலேதூண்டப்பட்டவர்களாய்க் கொண்டுபாடுவார்களாயின், வினை - வினையென்று பேர்பெற்றவையடங்கலும், தானே—, குறுகா - அவர்களருகிற்கிட்டாவாம்.

வ்யா.—(கண்டாரித்யாதி) திருமஞ்சனஞ்செய்து குழல்வாரா திருந்தால் கண்டவர்கள் பழிக்கக்கூடும், அவர்கள்பழியாதபடியாக. (அக்காக்காய்) (கார்வண்ணனித்யாதி) மேகம்போலேச்யாமளமான வடிவையுடையவனுடைய, இருட்சியாலும் சுருட்சியாலும் வண்டு போலேயிருக்கிற திருக்குழலை வாரும்படியாக வாவென்றுசொன்ன யசோதைப் பிராட்டியினுடைய சொலவை. (விண்டோயித்யாதி) ஆகாசத்திலே மிகவுமுயர்ந்த மதிளையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த வித்தை. (கொண்டாடி யித்யாதி) சப்தார்த்தவைலக்ஷண்யத்தைக்கொண்டாடி, ப்ரீதிப்ரேரிதராய்க் கொண்டுபாட, வினையென்று பேர்பெற்றவையடங்கலும் தானேயருகுவந்துகிட்டா. (கo)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு.—பின்னைப்பேய்திண்ணப்பள்ளத்தில் கற்றினம் கிழக்கில் பிண்டமுந்தி மன்னன்கண்டார் வேலி.

---

ஆறாந்திருமொழி கச-க்கு, பாட்டு- கருஅ.

அ.—யசோதைப்பிராட்டி அவனைத்திருக்குழல்வாருவதாகவுத் யோகித்து,அவன்"ஒட்டேன்"என்றுஅழுதும் இறங்கியோடாமைக்காக அவனுடைய பால்யத்துக்கநுகுணமாம்படி, அக்காக்காய்குழல்வாரவாவென்று பலகாலும் அவன்செவிகேட்கச்சொல்லியிருந்து அவனையுகப்பித்துத் திருக்குழல்வாரினபடியை, தாமநுபவிக்கையில் ஆசையுடையராய்,பாவநாப்ரகர்ஷத்தாலே அவளான நிலையையடைந்து,தத்காலம்போலே அவனைக்குறித்துப் பாசுரங்களைப்பேசி யநுபவித்தாராய்நின்றார் - கீழ்; திருக்குழல்வாரினவநந்தரம் பூச்சூட்டுவதாகத் தேடுகிறவளவிலே, ஜாத்யுசிதமாகக் கன்றுமேய்க்கப்போகிற பிள்ளைகளோடே தானும் போவானாகவுத்யோகித்து, கன்றுகள்மேய்த்து மறிக்கிறகோலைத்தாவென்ன; அவள்இசைந்து கோலைக்கொடாமல், "இவனை (க) ஒப்பித்துக்காணவேணும்" என்னும் கருத்தாலே கோலைவாங்கித் தருகிறேனென்று இவனையழுகைமருட்டி "அக்காக்காய் கோல்கொண்டுவா" என்று பலகாலும்சொன்ன ப்ரகாரத்தை,

(க) ஒப்பித்து - அலங்கரித்து.

தத்பாவயுக்தராய்க்கொண்டு அவளைப்போலேதாமும் அவனைக்குறித்துப்பேசி அந்தரஸத்தை யநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

மூ.—வேலிக்கோல்வெட்டிவிளையாடுவில்லேற்றித்
தாலிக்கொழுந்தைத்தடங்கழுத்திற்பூண்டு
பீலித்தழையைப்பிணைத்துப்பிறகிட்டுக்
காலிப்பின்போவாற்கோர்கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்கோர்கோல்கொண்டுவா.

ப-ரை.—வேலி-வளர்ந்திருக்கிற, கோல்-கோல்களை, வெட்டி—, விளையாடு விளையாடுதற்பொருட்டு, வில்-வில்லாகப்பண்ணி, ஏற்றி-அதிலே நாணியேறிட்டு, கொழுந்து - தங்கள் சாதிக்குரித்தாய்ச்சிறந்திருந்துள்ள, தாலியை - ஆமைத் தாலியை, தடம் - பெரிய, கழுத்தில் - திருக்கழுத்திலே, பூண்டு - தரித்து, பீலி - மயிலினுடைய, தழையை - தோகைகளை, பிணைத்து - சேர்த்து, பிறகு - திருமுதுகிலே, இட்டு - தொங்கவிட்டு, காலிப்பின் - கன்றுகாலியின்பின்னே, போவாற்கு - அவற்றைமேய்க்கைக்காகப் போமவனுக்கு, ஓர்கோல் கொண்டு வா—; கடல் - கடலோடொத்த, நிறம் - நிறத்தையுடைத்தான, வண்ணற்கு - வடிவையுடையவனுக்கு, ஓர்கோல்கொண்டுவா—.

வ்யா.—முதற்பாட்டு. (வேலிக்கோல்வெட்டி) வேலிக்கால்களிலே வளர்ந்துநிற்கும் கோல்களைவெட்டி. அன்றிக்கே, வேலியென்று-வளைவாய், வளைந்தகோலைவெட்டியென்னவுமாம். (விளையாடு வில்லேற்றி) லீலார்த்தமாகவில்லாகப்பண்ணி நாணியேறிட்டு. (தாலிக்கொழுந்தைத்தடங்கழுத்திற்பூண்டு) ஜாத்யுசிதமாகையாலேச்ரேஷ்டமாயிருந்துள்ள ஆமைத்தாலியைத்தடவிதான கழுத்திலேபூண்டு. அன்றிக்கே, தாலியென்றது-(க)தாளியென்றபடியாய், கொழுந்தென்றது - அதின் வெண்குருத்தாய், அது வெள்ளிபோலே யிருக்கையாலே அத்தை ஆபரணமாகத்தெற்றிப் பூண்பர்களிறேயிடையர்; அத்தைச்சொல்லிற்றாகவுமாம். (பீலியித்யாதி) பீலிப்பிச்சங்களைச்சேர்த்துத் திருமுதுகிலேநாற்றி. (காலியித்யாதி) கன்றுகாலியின் பின்னே அவற்றைமேய்க்கைக்காகப்போமவனுக்கு ஓர்கோல் கொண்டுவா. (கடலித்யாதி) கடலோடொத்தநிறத்தையுடைத்தானவடிவையுடையவனுக்கு. (க)

மூ.—கொங்குங்குடந்தையுங்கோட்டியூரும்பேரும்
எங்குந்திரிந்துவிளையாடுமென்மகன்
சங்கம்பிடிக்குந்தடக்கைக்குத்தக்கநல்
அங்கமுடையதோர்கோல்கொண்டுவா
அரக்குவழித்ததோர்கோல்கொண்டுவா.

ப-ரை.—கொங்கு - பரிமளத்தையுடைத்தான, குடந்தையும் - * செல்வம் மல்குதென்திருக்குடந்தையிலும், கோட்டியூரும் - * வண்ணநன்மணியும்மரதகமுமழுத்தி நிழலெழும்திண்ணைசூழ்திருக்கோட்டியூரிலும், பேரும்-*திருப்பேர்

(க) தாளி - பனைமரம்.

நகரிலும், எங்கும் - சொல்லப்படாதனவானமற்ற உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும், திரிந்து - உலாவி, விளையாடும் - விளையாடாநின்றுள்ள, என் - என்னுடையவனென்று அபிமாநிக்கலாம்படியான, மகன் - பிள்ளையுடைய, சங்கம்-* பஞ்சசநனுடலில் வளருகையாலே பாஞ்சசந்யமென்னும் பெயர்படைத்தசங்கத்தை, பிடிக்கும்-ப்ரதிகூலர்மண்ணுண்ணும்படியாகவும் அநுகூலர்வாழும்படியாகவும் ஊதுகைக்காகப்பிடிக்கும், தடம் - பெரிய, கைக்கு - திருக்கைகளுக்கு, தக்க - தகுந்திருந்துள்ளதாய், நல் - அழகிய, அங்கமுடையது - வடிவையுடைத்தா யிருந்துள்ள, ஓர் - ஒரு, கோல்கொண்டுவா—; நிறமுடைத்தாம்படிக்கிடாக, அரக்குவழித்தது - அரக்குப்பூசப்பட்டிருப்பதான, ஓர் - ஒரு, கோல்கொண்டுவா—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கொங்குங்குடந்தையும்) பரிமளத்தையுடைத்தான திருக்குடந்தையிலும். கொங்குக்குடந்தையென்கிறவல்லேல்லாற்று மெல்லொற்றாய்க் கிடக்கிறது. சோலைகளிலுமோடைகளிலுமுண்டானபரிமளமும்,உள்ளுக்கண்வளர்ந்தருளுகிறவனுடைய திருமேனியின்பரிமளமுமாய்க்கொண்டு ஊரடங்கலும் பரிமளமாய்க் கிடக்குமித்தனை. (கோட்டியூரும்) திருக்கோட்டியூரிலும். (பேரும்) திருப்பேரிலும். (எங்கும்) (க) அநுக்தமானதிருப்பதிகளிலும். (திரிந்துவிளையாடுமென்மகன்) வ்யாபரித்து விளையாடாநிற்குமென்பிள்ளையுடைய. (சங்கம்பிடிக்கும் தடக்கைக்குத்தக்க) ஸ்ரீபாஞ்சஜந்யத்தைப்பிடிக்கும் பெரிய திருக்கைக்குத்தகுதியான. (நல்லங்கமுடையதோர் கோல்கொண்டுவா) நல்லவடிவையுடைத்தானதொரு கோல்கொண்டுவா. (அரக்கித்யாதி) நிறமுடைத்தாம்படி அரக்குவழித்ததொரு கோல்கொண்டுவா. (உ)

ரு.—கறுத்திட்டெதிர்நின்றகஞ்சனைக்கொன்றான்
பொறுத்திட்டெதிர்வந்தபுள்ளின்வாய்கீண்டான்
நெறித்தகுழல்களைநீங்கமுன்னோடிச்
சிறுக்கன்றுமேய்ப்பாற்கோர்கோல்கொண்டுவா
தேவபிரானுக்கோர்கோல்கொண்டுவா.

ப - ரை.—கறுத்து - சீற்றத்தையுடையனாய்க்கொண்டு, எதிரிட்டுநின்ற - எதிர்ந்துநின்ற, கஞ்சனை - கம்ஸனை, கொன்றான் - கொன்றவனாய், பொறுத்திட்டு - வருகிறபோதிலுண்டான வேகத்தைப்பொறுத்துநின்று, எதிர்வந்த - தன்னைநலிவதாக எதிரேவந்த, புள்ளின் - பகாஸுரனுடைய, வாய் - வாயை, கீண்டான் - கிழித்தவனாய், நெறித்த - நெறித்துமுன்னே தொங்காநின்றுள்ள, குழல்கள் - குழல்களானவை, நீங்க - ஓடுகிறவிசையாலே இரண்டருகும் நீங்கும்படியாக, முன் - கன்றுகளுக்குமுன்னே, ஓடி—, சிறுக்கன்று - இளங்கன்றுகளை, மேய்ப்பாற்கு - மேய்க்கிறவனுக்கு, ஓர்கோல்கொண்டுவா—; ஆஸுரத்தன்மையையுடையரான கம்ஸாதிகளையழியச்செய்கையாலே, தேவர் - தேவர்க்கு, பிரானுக்கு - உபகாரகனானவனுக்கு, ஓர்கோல்கொண்டுவா—.

(க) அநுக்தமான - சொல்லப்படாதனவான.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (கறுத்தித்யாதி) கறுப்பு - சீற்றம். தன்மேலே க்ரோதத்தையுடையனாய்க்கொண்டு எதிரிட்டுநின்ற கம்ஸனைக்கொன்றவன். (பொறுத்தித்யாதி) வருகிறபோதை வேகத்தைப்பொறுத்துநின்று, தன்னை நலிவதாக எதிரேவந்த பகாஸுரனுடைய வாயைக்கிழித்தவன். (நெறித்தவித்யாதி) நெறித்துமுன்னே நாலாநின்றகுழல்களானவை, ஓடுகிறவிசையாலே இரண்டருகும்நீங்கும்படியாகக் கன்றுகளுக்குமுன்னேயோடி. (சிறுக்கன்றித்யாதி) இளங்கன்றுகளை மேய்க்கிறவனுக்கு ஓர்கோல்கொண்டுவா. (தேவபிரானுக்கு) ஆஸுரப்ரக்ருதிகளான கம்ஸாதிகளை யழியச்செய்கையாலே தேவர்களுக்கு உபகாரகனானவனுக்கு. (௩)

மூ.—ஒன்றேயுரைப்பானொருசொல்லேசொல்லுவான்
துன்றுமுடியான்துரியோதநன்பக்கல்
சென்றங்குப்பாரதங்கையெறிந்தானுக்குக்
கன்றுகள்மேய்ப்பதோர்கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்கோர்கோல்கொண்டுவா.

ப-ரை.—ஒன்றே-"பாண்டவர்களும் நாங்களும்கூடி ஜீவிப்பதில்லை" என்னுமோரர்த்தமே, உரைப்பான் - சொல்லுமவனும், கூடிஜீவிப்பதில்லையேயாகிலும் "அவர்களுக்கும் ஏதேனும் சிலகொடுக்கவேண்டாவோ" என்றுநடுநிலைமையோர் சொன்னால், ஒருசொல்லே-"அவர்களுக்கு ஒருகோற்குத்துநிலமும்கொடுப்பதில்லை" என்னுமொருவசநமே, சொல்லுவான் - சொல்லுமவனும், துன்று - நவமணிகள் நெருங்கியிருந்துள்ள, முடியான்-கிரீடத்தையுடையனுமான, துரியோதநன் பக்கல்- துரியோதநனிடத்திலே, சென்று-இரண்டுதலையையும் பொருந்தவிடுகைக்காகத் தூதாய்ச்சென்று, பாண்டவர்களுக்காய்நின்று, பாரதம் - பாரதயுத்தத்துக்கு, அங்கு - அங்கே, கையெறிந்தானுக்கு - கைதட்டிப்போந்தவனுக்கு, கன்றுகள் - கற்றுத்திரள்களை, மேய்ப்பது - மேய்க்கைக்குத்தகுதியாயிருந்துள்ள, ஓர்கோல் கொண்டுவா—; கடல் - கடலையொத்த, நிறம் - நிறத்தையுடைத்தான, வண்ணற்கு - வடிவையுடையவனுக்கு, ஓர்கோல் கொண்டுவா—.

வ்யா.—நாலாம்பாட்டு. (ஒன்றித்யாதி) "பாண்டவர்களும் நாங்களும்கூடி ஜீவிப்பதில்லை" என்னு மோரர்த்தமே சொல்லுவானாய், கூடிஜீவிப்பதில்லையேயாகிலும் "அவர்களுக்கும் ஏதேனும் சில கொடுக்கவேண்டாவோ" என்று மத்யஸ்தர்சொன்னால் "அவர்களுக்கு ஒருகோற்குத்துநிலமும் கொடுப்பதில்லை" என்னுமொருவசநமே சொல்லுவானுமாயிருக்குமவனென்கை. அன்றிக்கே,ஆச்ரிதவிஷயத்தில் "ಮಿತ್ರಭಾವೇನ ಸಂಪ್ರಾಪ್ತಂ" "ராமோ த்விர்நாபிபாஷதே" இத்யாதிப்படியே-ஒருபடியாலும் அவர்களைக்கைவிடாமையாகிற ஓரர்த்தமே சொல்லுமவனாய், "ಅಭಯಂ ಸರ್ವಭೂತೇಭ್ಯೋ ದದಾಮಿ" "ஸக்ருதேவ ப்ரபந்நாய" இத்யாதிப்படியே-அவர்களுடைய ரக்ஷணத்துக்குடலான வசநமொன்றுமே சொல்லாநிற்பானா யிருக்குமவ னென்று

பகவத்விசேஷணமாகவுமாம். (துன்றுமுடியான்) நவரத்நங்களிலே நெருங்கின அபிஷேகத்தை யுடையவன். (௧) அபிஷிக்தக்ஷத்ரியராலே நெருங்கி ஸேவிக்கப்படுமவனென்னுதல். (துரியோதநன்பக்கல்) (௨) ஏவம்பூதனான துர்யோதநன்பக்கலிலே. (சென்றங்குப்பாரதம் கையெறிந்தானுக்கு) இரண்டுதலையையும் பொருந்தவிடலாமோவென்று தூதனாய்ச்சென்று பொருத்தப்பார்த்தவிடத்தில் பொருந்தாமையாலும் யுத்தத்திலே, பொருந்துகையாலும்; ஆனால், அதுதன்னைச்செய்கவென்று பாரதயுத்தத்துக்கு அங்கே கைதட்டிப் போந்தவனுக்கென்னுதல். அன்றிக்கே, ஆனால் அதுதன்னைச் செய்வதென்று இசைந்துபோந்து, பாண்டவர்களுக்காய்நின்று பாரதயுத்தத்திலே கையுமணியும்வகுத்தவனுக் கென்னுதல். எறிதல் - இடுதலாகையாலே, வேண்டினபொருள் கொள்ளலாமிறே. (கன்றுகள்மேய்ப்பதோர் கோல்கொண்டுவா) பசுமேய்க்கையிலும் அவன் விரும்பியிருப்பது கன்றுகள்மேய்க்கவாய்த்து. அதுக்குத் தகுதியா யிருப்பதொரு கோல்கொண்டுவா. (கடலித்யாதி) கடலோடொத்த நிறத்தையுடைத்தான வடிவையுடையவனுக்கு. (௪)

மூ.—சீரொன்றுதூதாய்த்துரியோதநன்பக்கல்
ஊரொன்றுவேண்டிப்பெறாதவுரோடத்தால்
பாரொன்றிப்பாரதங்கைசெய்துபார்த்தற்குத்
தேரொன்றையூர்ந்தாற்கோர்கோல்கொண்டுவா
தேவபிரானுக்கோர்கோல்கொண்டுவா.

ப-ரை.—சீர் - தன்னையடுத்தவர்களுக்கு வசப்பட்டிருக்கையாகிறகுணம், ஒன்று - சேருகைக்குறுப்பான, தூதாய் - தூதுசெல்லுகையைமேற்கொண்டவனாய்க்கொண்டு, துரியோதநன்பக்கல்-அதர்மத்தையுடையனாய்ச் சுற்றத்தாரை வருத்தித் தன்வலியாலே பிழைக்கவிருக்கிற துரியோதந னிடத்திலேசென்று, ஊரொன்று - ஓரூர் தனையாகிலும்கொடுவென்று, வேண்டி - தாழ்ச்சிதோற்றக்கேட்டும், பெறாத - தான்விரும்பினபடி பெறாத, உரோடத்தால் - ரோஷத்தாலே, பார் - பூமியிலே, ஒன்றி - திருவடிகள்பாவிநின்று, பாரதம் - பாரதயுத்தத்திலே, கைசெய்து - கையுமணியும்வகுத்து, ஆயுதமெடுக்கவொண்ணாமையாலே ஸாரதியாய்க்கொண்டு, பார்த்தற்கு - அர்ஜுநனுடைய, ஒன்று - பகைவரை உருளைக்காலாலே நெருக்குகைக்குறுப்பாகையாலே ஒப்பற்றிருந்துள்ள, தேரை —, ஊர்ந்தாற்கு - நடத்தினவனுக்கு, ஓர்கோல்கொண்டுவா—; தேவர் - * அயர்வறுமமரர்களுக்கு, பிரானுக்கு - தலைவனாகுகையாகிற மேன்மையையுடையவனுக்கு, ஓர் கோல்கொண்டுவா—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (சீரொன்றுதூதாய்) "இன்னார்தூதனெனநின்றான்" என்கிறபடியே அச்ரிதபாரதந்த்ர்யமாகிற குணம் தனக்குச் சேருகைக்குறுப்பான தூதக்ருத்யத்திலே அதிகரித்து.

(௧) அபிஷிக்தக்ஷத்ரியர் - பட்டாபிஷேகத்தை யடைந்தவரசர்கள்.

(துரியோதநன்பக்கலிலே ஒன்றுவேண்டி) (க) அதார்மிகனாய் பந்துக்களையடர்த்து, பலத்தாலே ஜீவிக்கவிருக்கிற துர்யோதநன்பக்கலிலே சென்று "உங்களுக்குள்ள (உ) அம்சங்களை (ங) விபஜித்து இரண்டுதலையும் பொருந்தி ஜீவித்திருங்கோள்" என்று ஸந்துசொன்னவளவில், அவன் "அதுசெய்யேன்" என்றவாறே, "ஆனால் பத்தூர் தன்னைக் கொடுக்கப்பார்ப்பது" என்ன; "அதுவும்செய்யேன்" என்றவாறே "ஒரூர் தன்னையாகிலும்கொடு" என்றவளவில், அவன் அதுக்குமிசையாமல், "அவர்களுக்கு தர்மமுண்டு, தத்வபலமான ஸ்வர்க்காதிலோகங்களுண்டு, அத்தையநுபவிக்கக்கடவர்கள், எங்களுக்கு இத்தனையுமன்றோ வுள்ளது, அதில் ஒன்றும் கொடுப்பதில்லை" என்று வெட்டிதாக வார்த்தைசொல்ல; (பெறாத வுரோடத்தால்) ஓரூர்தானும் பெறாத ரோஷத்தாலே. ஆனால்* வீரபோக்யையன்றோ வஸுந்தரை, யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்களொருவர் பூமியையாளுங்கோளென்ன; அவன் அதுக்குப் பொருந்தினவாறே (பாரொன்றி) திருவுள்ள முகந்து, பூமியிலே பரந்தகால்பாவிநின்று. (பாரதம்கைசெய்து) பாரதயுத்தத்திலே பாண்டவர்களுக்காக நின்று கையுமணியும் வகுத்து. (பார்த்தற்குத்தேரொன்றை யூர்ந்தார்க்கு) ஆயுதமெடுக்க வொண்ணாமையாலே ஸாரத்யத்திலே அதிக்ருதனாய், அர்ஜுநனை ரதியாக்கி, ப்ரதிபக்ஷத்தை உருளைக்காலாலே நெருக்குகைக் குறுப்பாகையாலே அத்விதீயமான தேரை நடத்தினவனுக்கு ஓர்கோல்கொண்டுவா. (தேவபிரானுக்கு) இந்நீர்மைக் கெதிர்த்தட்டாம்படி, நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான மேன்மையை யுடையவனுக்கு. இத்தால் - மநுஷ்யத்வே பரத்வத்தைச் சொன்னபடி. (ரு)

மூ.—ஆலத்திலையானரவினணைமேலான்
நீலக்கடலுள்நெடுங்காலங்கண்வளர்ந்தான்
பாலப்பிராயத்தேபார்த்தற்கருள்செய்த
கோலப்பிரானுக்கோர்கோல்கொண்டுவா
குடந்தைக்கிடந்தாற்கோர்கோல்கொண்டுவா.

ப-ரை.—ஜகத்ப்ரளயம்வந்தபோது, ஆலிலையான் - * ஆலினிலையதன்மேற் பையவுயோகுதுயில் கொண்டவனாய், அரவு - திருவநந்தாழ்வானாகிற, அணைமேலான் - திருப்பள்ளியிலே கண்வளர்ந்தருளினவனாய், நீலம் - திருமேனியின்சாயையாலே நீலநிறத்தையடைந்திருக்கிற, கடலுள் - கடலிலே, நெடுங்காலம் - ப்ரளயம்வருமளவும், கண்வளர்ந்தான் - கண்வளர்ந்தருளினவனாய், பாலப்பிராயத்தே - இளமைப்பருவத்திலே, பார்த்தற்கு - அர்ஜுநனுக்கு, அருள்செய்த - இந்த்ரனபேக்ஷித்தபடியேபூர்ணகடாக்ஷம்செய்தருளின, கோலம் - அழகிய, பிரானுக்கு - உபகாரகனானவனுக்கு, ஓர்கோல்கொண்டுவா—; க்ருஷ்ணாவதாரத்திலே

(க) அதார்மிகன் - தர்மஸம்பந்தமில்லாதவன். (உ) அம்சம் - பங்கு. (ங) விபஜித்து - பங்கிட்டுக்கொண்டு.

ஆச்ரிதர்க்கு எளியனாயிருந்தமை விளங்கும்படி, குடந்தை - திருக்குடந்தையிலே, கிடந்தார்க்கு - கண்வளர்ந்தருளினவனுக்கு, ஓர்கோல் கொண்டுவா —.

வ்யா.—ஆறும்பாட்டு. (ஆலத்திலையான்) ஜகத் ப்ரளயம்வந்தபோது (க)வடதளத்திலேகண்வளர்ந்தருளினவன். அத்து-சாரியை. (அரவினணைமேலான்) திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிறவன். "ஸஹஸ்ரவதநோ தேவ: ஃபணாமணிவிராஜித: । ஸர்வாபரணபூஷாட்யோ" "ஸஹஸ்ரவதநே நாம்நா ஃபணாமணிவிராஜிதம் ஸஹஸ்ரவதநம் வடவ்ருக்ஷம் ஸமுத்ரமத்யே ஸமுபைதி வாஸு" என்கிறபடியே-வடவ்ருக்ஷமானாலும் திருவநந்தாழ்வானிறே. ஆலத்திலையானரவினணைமேலானென்கையாலே-அந்த அர்த்தமும் தோற்றுகிறது. (நீலக்கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்) க்ஷீரமாகையாலே வெளுத்தநிறமாயிருக்கச்செய்தேயும், திருமேனியின் நிழலீட்டாலே நீலமான நிறத்தையுடைத்தாயிருக்கிற கடலிலே, ப்ரளயாவதியாகக் கண்வளர்ந்தருளினவன். "கருந்தண்மாகடல் கண்துயின்றவன்", "உவர்க்குங்கருங்கடல் நீருள்ளான்" என்கையாலே, நீலக்கடலென்று - இந்த லவண ஸமுத்ரந்தன்னைச் சொல்லிற்றாகவுமாம். அரவினணைமேலானைக்கொண்டு நீலக்கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தானென்று மேலே அந்வயிக்கவுமாம். (பாலப்பிராயத்தே பார்த்தற்கருள்செய்த) இந்த்ரன்வந்து "என்னுடைய புத்ரனை யிவனை ரக்ஷித்தருளவேணும்" என்று காட்டிக்கொடுக்கையாலே, பால்யவயஸ்ஸிலே அர்ஜுநனுக்கு அருள்செய்தபின்பு, இவன், தன்னளவிலே ஸ்நேஹித்து(உ)வசவர்த்தியாய்ப்போருகையாலும், எல்லாரளவிலும்போலன்றியே இவனளவில் தான்பக்ஷபதித்துப்போருகையாலும், அவ்வருள் மேன்மேலென வளர்ந்துசென்ற வித்தனையிறே. (கோலப்பிரானுக்கு) அழகிய வுபகாரகனுக்கென்னுதல்; அத்விதீயமான விக்ரஹத்தை இவனுக்கு (ங) சக்ஷுர்விஷயமாக்கி, முன்னின்று ரக்ஷித்தவுபகாரத்தைச் சொல்லுகிறதாதல். (குடந்தைக்கிடந்தாற்கு) "குடந்தையன் கோவலன்" என்கிறபடியே க்ருஷ்ணாவதாரஸௌலப்யமெல்லாம் தோற்றும்படியிறே திருக்குடந்தையில் கண்வளர்ந்தருளுவது. அங்கும் கோலப்பிரானைப்போலே, இங்கும் * ஏரார்கோலந்திகழவிறே சாய்ந்தருளுவது. (சு)

எ —பொற்றிகழ்சித்திரகூடப்பொருப்பினில்
உற்றவடிவிலொருகண்ணுங்கொண்டவக்
கற்றைக்குழலன்கடியன்விரைந்துன்னை
மற்றைக்கண்கொள்ளாமேகோல்கொண்டுவா
மணிவண்ணனம்பிக்கோர்கோல்கொண்டுவா.

(க) வடதளம் - ஆலிலை. (உ) வசவர்த்தியாய் - தனக்கு வசப்பட்டவனாய். (ங) சக்ஷுர்விஷயமாக்கி-கண்ணுக்குத் தெரியும்படிபண்ணி.

ப-ரை.—பொன்-அயோத்தியாநகரத்திலுங் காட்டில் விருப்புற்றெழுந்தருளி யிருக்கும்படி, சோலைகள், சுனைகள், பாறைகள், அருவிகள், பலவகைக்கனிமரங்கள், பலவகைப்பூங்கொடிகள் முதலியவற்றால் பொலிவையுடைத்தாய், திகழ்-விளங்காநின்றுள்ள, சித்திரகூடப்பொருப்பினில் - சித்ரகூடமென்னும் மலைச்சாரலிலே, பிராட்டிமடியிலே பெருமாள் கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே, வடிவில் - பிராட்டிவடிவிலே, உற்ற - துர்ப்புத்தியடியாகச்சென்றுற்ற இரண்டு கண்களில், ஒருகண் - ஒருகண்ணை, கொண்ட - பறித்துவிட்ட, அ - அப்படிப்பட்ட தன்மையையுடையனாய், கற்றை - செறிந்திருந்துள்ள, குழலன் - மயிர்முடியையுடையனாய், கடியன்-குற்றத்துக்கிடாக சிக்ஷிக்கும்கொடுந்தன்மையையுடையவன்; ஆதலால், சொன்னதுசெய்யாமையாலே உன்னை - உன்னைச்சீறி, மற்றைக்கண் - மற்றைக்கண்ணையும், கொள்ளாமே - பறியாதபடியாக, விரைந்து - விரைவாய், கோல்கொண்டுவா—; மணி - நீலரத்நம்போன்ற, வண்ணன் - வடிவையுடையனாய், நம்பிக்கு - தன்வயத்தனாயிருத்தலாலே பூர்ணனானவனுக்கு, ஓர்கோல்கொண்டுவா—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பொற்றிகழித்யாதி) "ஸுதர்சநாந் புஷ்பிதகாநநோ யம் கிரிராஜ்யேப ஸோமகிரிஃ । யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த: குபேர இவ நந்தநே" "வைதேஹ்யா ஸஹ புத்ரோயம் ஸுஸ்நாதோ ரமதே பவான் । யத்ர நவதிகாகுத்ஸ்த: கூப வேரஜவநநநே" என்கிறபடியே திருவயோத்யையி லிருப்பிலுங் காட்டில் உகந்தெழுந்தருளி யிருக்கும்படி சோலைகளும் சுனைகளும் பாறைகளும் அருவிகளும் முதலானவற்றால் வந்த பொலிவையுடைத்தாய் விளங்காநின்றுள்ள சித்ரகூடபர்வத பார்ச்வத்திலே எழுந்தருளி யிருக்கச்செய்தேயிறே காகம்வந்து அபராதம் பண்ணிற்று. பிராட்டியும்தாமுங்கூட ஜலக்ரீடைபண்ணினபின்பு, பெருமாள் மடியிலே முந்துறப் பிராட்டிகண்வளர்ந்து, அநந்தரம் "பர்யாயேண ப்ரஸுப்தஃ" "வைதேஹ்யங்கேஸ்ய ஸுஷ்வாப" என்கிறபடியே-பிராட்டி மடியிலே பெருமாள் கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே, இந்த்ரபுத்ரனான ஜயந்தன், ஆஸுரப்ரக்ருதியாகையாலே தேவரூபத்தை மறைத்துகாகரூபத்தை பரிக்ரஹித்துக்கொண்டு,(௧)"ஜநநி"என்றறியாதே, பிராட்டியுடைய வடிவழகைக்கண்டு, (௨) விபரீதபுத்தியாலே வந்து திருமேனியிலே புண்படுத்த, அத்தாலே பெருமாள் சீறியருளி, காகத்தைக்குறித்து (௩) ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்க, அது, புக்கவிடமெங்கும் தொடருகையாலே ஓரிடத்திலும் போகக்கற்று, "த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய" "தமேவ சரணம் கதஃ" என்கிறபடியே தன்னுடைய (௪) ப்ராணரக்ஷணார்த்தமாக வந்து சரணம்புக, அத்தாலே, ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு ஒரு (௫) கண்ணழிவைக் கற்பித்து, ப்ராணனோடே போகவிட்ட, கதையைச் சுருங்கச் சொல்லுகிறது(உற்றவடிவிலொ

(௧) ஜநநி - தாயார். (௨) விபரீதபுத்தி - துர்ப்புத்தி. (௩) ப்ரஹ்மாஸ்த்ரம் - ப்ரஹ்மாவினால் கொடுக்கப்பட்ட அஸ்த்ரம். (௪) ப்ராணரக்ஷணார்த்தமாக - ப்ராணனைக் காப்பாற்றும்பொருட்டு. (௫) கண்ணழிவு - குறைவு.

ருகண்ணுங் கொண்ட) என்று. அதாவது - விபரீதபுத்தியடியாகப் பிராட்டியுடைய வடிவிலே சென்றுற்ற இரண்டுகண்ணில் ஒருகண்ணைப் பறித்துவிட்டவ னென்கை. (அக்கற்றைக் குழலன் கடியன்) அப்படிப்பட்ட ஸ்வபாவனாய், செறிந்ததிருக்குழலை யுடையனாயிருக்கிறவன், குற்றத்துக்கீடாக தண்டிக்கும் க்ரூரன். (விரைந்திதயாதி) ஆனபின்பு சொன்னதுசெய்யாமையாலே உன்னைச் சிறி, மற்றைக் கண்ணையும் பறியாதபடியாக விரைந்து கோல்கொண்டுவா. (மணிவண்ணனம்பிக்கு) நீலரத்நம்போன்ற வடிவையுடையனாய், ஸ்வாதந்த்ர்யத்தால் பூர்ணனானவனுக்கு ஓர்கோல்கொண்டுவா. (எ)

மூ.—மின்னிடைச்சீதைபொருட்டாவிலங்கையர்
மன்னன்மணிமுடிபத்துமுடன்வீழத்
தன்னிகரொன்றில்லாச்சிலைகால்வளைத்திட்ட
மின்னுமுடியற்கோர்கோல்கொண்டுவா
வேலையடைத்தாற்கோர்கோல்கொண்டுவா.

ப-ரை.—மின் - மின்னலையொத்த, இடை - இடையையுடையளான, சீதை பொருட்டா - பிராட்டியைச் சிறையில்வைத்ததின் நிமித்தமாக, இலங்கையர் - லங்கையிலுள்ளவர்களுக்கு, மன்னன் - அரசனானராவணனுடைய, மணி - நவரத்நங்களழுத்திச்சமைத்த கிரீடந்தரித்த, முடிபத்தும் - பத்துத்தலைகளும், உடன் - ஒருகாலத்திலேயே, வீழ - அற்றுவிழும்படியாக, தன் - தனக்கு, நிகரொன்றில்லா - ஒப்பாவதொன்றில்லாதிருக்கிற, சிலை - வில்லை, கால்வளைத்து - கால்வளையும்படிபண்ணி, இட்ட - அம்புகளைத்தொடுத்தெய்ததனால், மின்னும் - விளங்காநின்றுள்ள, முடியற்கு - திருவபிஷேகத்தையுடையனாய் நின்றவனுக்கு, ஓர்கோல்கொண்டுவா—; வேலை - ஸமுத்ரத்தை, அடைத்தாற்கு - * மலையதனாலணைகட்டினவனுக்கு, ஓர்கோல் கொண்டுவா—.

வ்யா—எட்டாம்பாட்டு. (மின்னித்யாதி) மின்னோடொத்த இடையையுடைய ளாகையாலே-விரஹஸஹமல்லாத ம்ர்துப்ரக்ர்தியாய், அயோநிஜையாகையாலே - கர்ப்பவாஸக்லேசமுமுட்பட வறியாத பிராட்டிக்காக. (இலங்கையர்மன்னன்) இப்படி யிருக்கிறவளை, பிரித்துக்கொண்டுபோய்ச் சிறைவைத்தவனாய், லங்கையிலுள்ளார்க்கெல்லாம் நிர்வாஹகனாயிருக்கிற ராவணனுடைய. (மணிமுடிபத்துமுடன் வீழ) ரத்நாதிகளாலே அலங்க்ர்தமான தலைகளை ஒரொன்றாக அறுத்தவிடத்தில், அவன்கொண்ட வரபலத்தாலே மீளவும் மீளவும் கிளருகையாலே, பத்தும் சேரவொருகாலேயற்று விழும்படியாக. (தன்னிகரித்யாதி) தனக்கு உபமாநமாவதொன்றில்லாதபடியிருக்கும் திருவில்லை, கால்வளையும்படி பண்ணின. வளைத்து இட்ட - வளைத்தெய்த வென்றபடி. (மின்னு முடியற்கு) இப்படி ராவணவதம்பண்ணுகையாலே-விளங்காநின்றுள்ள வீராபிஷேகத்தையுடையனாய் நின்றவனுக்கு. (வேலை யடைத்தாற்கு)

"சுரிகுழல்கனிவாய்" இத்யாதிப்படியே வேலையடைத்ததும் பிராட்டிக்காகவிறே. (அ)

மூ.—தென்னிலங்கைமன்னன்சிரந்தோடுணிசெய்து
மின்னிலங்குபூண்விபீடணனம்பிக்கு
என்னிலங்குநாமத்தளவுமரசென்ற
மின்னலங்காரற்கோர்கோல்கொண்டுவா
வேங்கடவாணற்கோர்கோல்கொண்டுவா.

ப-ரை.—தென் - "மதிளரண், மலையரண், காட்டரண்" என்கிறமூவகைய ரணையுடைத்தானதாகையாலே கட்டளைப்பட்டிருக்கிற, இலங்கை- * இராக்கதர் வாழிலங்கைக்கு, மன்னன - தலைவனானராவணனுடைய, "முடியொருபதும் தோளிருபதும்துணிய" என்கிறபடியே, சிரம் - பத்துத்தலைகளையும், தோள் - இருபதுதோள்களையும், துணிசெய்து - அறுத்துப்பொகட்டு, மின்இலங்கு-ஒளி விடாநின்றுள்ள, பூண் - ஆபரணம்பூண்டவனாய், நம்பி - சக்ரவர்த்தித்திருமகனை அடைக்கலம்புகுகையால்வந்த திருவால்நிறைந்தவனான, விபீடணனுக்கு- ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு, இலங்கு - விளங்காநின்றுள்ள, என்னாமத்தளவும்-என்னுடையபெயர் இந்தலோகத்தில் செல்லுந்தனையும், அரசென்ற - உனக்கு அரசு செல்லக்கடவதென்றருளிச்செய்த, மின் - மின்போலே, இலங்கு - விளங்காநின்றுள்ள, ஆரற்கு - நவமணிகள் கோத்துச்சமைத்த ஆரத்தையுடையவனுக்கு, ஓர்கோல கொண்டுவா—; வேங்கடம் - திருமலைக்கு, வாணற்கு - தலைவனானவனுக்கு, ஓர்கோல் கொண்டுவா—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தென்னித்யாதி) (க) துர்க்கத்ரயயுக்தமாகையாலே ஒருவரால் அழிக்கவொண்ணாதபடி யிருக்கும், (உ) கட்டளைப்பட்டலங்கைக்கு நிர்வாஹகனான ராவணனுடைய. தென் என்று - அழகாய், கட்டளைப்பட்டிருக்கையைச் சொல்லுகிறது. (சிரந்தோள்துணிசெய்து). தேவர்கள்கொடுத்த வரபலத்தாலே அழிவில்லையாக நினைத்திருந்த தலைகளையும் தோள்களையும் துணித்துப்பொகட்டு. (மின்னித்யாதி) ஒளிவிடாநின்றுள்ள ஆபரணத்தையுடைய ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு. "அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந்" "ஸுஹ்ருதீக்ஷமதாம் ஸ்ரீ ஊரு" என்கிறபடியே லங்கையைவிட்டு (ங) அந்தரிக்ஷகதனானபோதே ராவணஸம்பந்தத்தால்வந்த அஸ்ரீகுடிபோய், ராமஸம்பந்தத்தால்வந்த ஸ்ரீயால் பூர்ணனாகையாலே நம்பியென்கிறது. (என்னிலங்கித்யாதி) என்னுடைய உஜ்வலமான நாமம் இந்தலோகத்தில் எவ்வளவும் செல்லும், அவ்வளவும் உனக்கு ராஜ்யம் நடக்கக்கடவதென்று அருளிச்செய்த. (மின்னலங்காரற்கு) ஒளிவிடாநின்ற வொப்பனையை யுடையவனுக்கு. அலங்காரம்-ஒப்பனை. அன்றிக்கே, "மின்னிலங்காரற்கு" என்று பாடமானபோது - மின்

(க) துர்க்கத்ரயம்-மூவகையரண். (உ) கட்டளைப்பட்ட-சதுரப்பாடுடைய (ங) அந்தரிக்ஷகனானபோதே - ஆகாசமார்க்கமாய்ச்சென்றபோதே.

போலே விளங்காநின்றுள்ள ஹாரத்தையுடையவனுக்கென்று பொருளாகக்கடவது. (வேங்கடவாணற்கு) "மிடைந்தவேழ் மரங்களு மடங்கவெய்துவேங்கடமடைந்தமால்" என்கிறபடியே-அவ்வவதார குணமெல்லாம் இங்கே ப்ரகாசிக்கும்படி திருமலைக்கு நிர்வாஹகனு யிருக்கிறவனுக்கு. (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அக்காக்காய்நம்பிக்குக்கோல்கொண்டுவாவென்று
மிக்காளுரைத்தசொல்வில்லிபுத்தூர்ப்பட்டன்
ஒக்கவுரைத்ததமிழ்பத்தும்வல்லவர்
மக்களைப்பெற்றுமகிழ்வரிவ்வையத்தே.

ப-ரை.—நம்பிக்கு - தீம்பிலேகைவளருகையாலே பூர்ணனுனவிவனுக்கு, அக்காக்காய்—, கோல்கொண்டுவாவென்று - கன்றுகள்மேய்க்கைக்குரியகோல் தேடித்தாவென்று, மிக்காள் - "மருவுநின்திருநெற்றியில் என்றுதுடங்கி - திருவிலேனொன்றும்பெற்றிலேன்" என்றும்,"தன்னநந்தாமரையென்றுதுடங்கி-வாரிவாய்க்கொண்டவடிசிலின்மிச்சிலுண்ணப்பெற்றிலேன்" என்றும், "குழகனே யென்றுதுடங்கி - நின்திருக்கண்ணிணை நோக்கந்தன்னையு மிழந்தேனிழந்தேன்" என்றும்இருய்த்த தேவகிப்பிராட்டியிலும், "முழுதும்வெண்ணெய் என்று துடங்கி-தொழுகையு மிவைகண்டவசோதைதொல்லையின்பத்திறுதிகண்டாள்" என்று அவனுடைய இளமைப்பருவத்தில் விளையாட்டாலுண்டான இன்பத்தை யெல்லாம்பெற்றுளாகையாலே மேற்பட்டாளான யசோதைப்பிராட்டி, உரைத்த - சொன்ன, சொல் - சொலவை, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான, பட்டன் - பெரியாழ்வார், ஒக்க - அவள்சொன்னாற்போலே, உரைத்த - அருளிச்செய்த, தமிழ்-யாவர்க்கும் எளிதில்கற்கலானதமிழாயிருந்துள்ள, பத்தும் - பத்துப்பாட்டையும், வல்லுவர் - கருத்துடன்கற்கவல்லவர்கள், மக்களை - * மாயன்மணிவண்ணன்தாள்பணியுமவரான சிஷ்யபுத்ரர்களை, பெற்று - லபித்து, இவ்வையத்து - இம்மண்ணுலகில், மகிழ்வர் - அவர்களும்தாங்களுமாய்க்கொண்டு களித்திருக்கப்பெறுவர்.

வ்யா.—(அக்காக்காய் நம்பிக்குக் கோல் கொண்டுவாவென்று) கன்றுகள் மேய்க்கப்போம்படி கோல்தேடித்தாவென்று, அழுகிறவவனை (க) அழுகை மருட்டுகைக்காகச் சொன்ன பாசுரமாய்த்திது. கீழ், "அக்காக்காய்குழல்வாரவா" என்றதோபாதியிறே, இங்கு, அக்காக்காய் கோல்கொண்டுவா வென்றதும். (மிக்காளுரைத்தசொல்) இருவருமொக்க நோன்புநோற்கச்செய்தே, இவனைப் பெற்றமாத்ரமேயாய், இவனுடைய பாலசேஷ்டிதங்க ளொன்றுமநுபவிக்கப் பெறுமையாலே "திருவிலேனொன்றும் பெற்றிலேன்" என்ற தேவகிப்பிராட்டியைப் போலன்றியே, "எல்லாம் தெய்வநங்கையசோ

(க) அழுகைமருட்டுகை - அழுகைமாற்றுகை.

..ைபெற்றுள்" என்னும்படி – இவ்வவதாரத்திலுள்ள ரஸமெல்லா மநுபவிக்கப்பெற்ற (க) பர்க்யாதிகையான யசோதைப் பிராட்டி சொன்னசொல்லே. (வில்லிபுத்தூர்ப் பட்டனுக்க வுரைத்த தமிழ் பத்தும் வல்லவர்) ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ் வார், அவளுடைய (உ) பாவபந்தத்தை யுடையராய், அவள்சொன் னாப்போலே சொன்னதாய், ஸர்வாதிகாரமான (ந)த்ராமிடமாயிரு ந்துள்ள பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (மக்க ளிதயாதி) பகவத்ஜ்ஞாநப்ரேம பரிபூர்ணரான சிஷ்யபுத்ரர்களைப் பெற்று, அவர்களும் தாங்களுமாய்க்கொண்டு, இந்தஸம்ஸாரபூமியி லே ஆநந்திகளாயிருக்கப் பெறுவர். (கo)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—வேலிகொங்குகறுத்தொன்றே சீராலப்பொற்றிகழ்
மின்னிடைத்தென்னிலங்கை யக்காக்காயாநிரை.
ஆ_ திருமொழி ரு-க்கு, பாட்டு-கசுஅ.

---

அ.—தாயாரானயசோதைப்பிராட்டி, தனக்குக் குழல்வாரின வநந்தரம், பூச்சூட்டுவதாகவிருக்கிறவளவிலே, அவன் கன்றுகள் மேய்க்கப்போவதாகநினைத்து, "அவைமறித்துமேய்க்கைக்கீடான கோல்தரவேணும்"என்றபேக்ஷிக்க, அது, தனக்கு அநிஷ்டமானது கொண்டு, அவள்கொடாதொழிகையாலே, அவன் அழப்புக்கவா மீற, அவனை அழுகைமருட்டுகைக்காக "அக்காக்காய்கோல்கொண் டுவா"என்று பலகாலும் சொல்லி அவனழுகையை மாற்றி உகப்பித் தபின்பு, அவனுக்குப் பூச்சூட்டுவதாகக்கோலி, செண்பகம் மல்லி கை செங்கழுநீர் இருவாழ்ச்சிதுடக்கமாய், நிறத்தாலும் மணத்தா லும் ஒன்றுபோலொன்றன்றிக்கே விலக்ஷணமாயிருக்கும் புஷ்பங்க ளையுண்டாக்கி, அவற்றைத் தனித்தனியேசொல்லி, உனக்கு இன்ன இன்ன பூச்சூட்டும்படி வாவென்று அநுவர்த்தித்தழைத்துப் பூச்சூ ட்டினப்ரகாரத்தைத் தாமுமநுபவிக்க வாசைப்பட்டு, தத்பாவயுக் தராய்க்கொண்டு, அவனைக் குறித்து அவள் பேசினாற்போலேபேசி, அந்தரஸத்தை யநுபவிக்கிறார்-இத்திருமொழியில்.

மூ.—ஆநிரைமேய்க்கநீபோதியருமருந்தாவதறியாய்
கானகமெல்லாந்திரிந்துன்கரியதிருமேனிவாடப்
பானையிற்பாலைப்பருகிப்பற்றுதாரெல்லாஞ்சிரிப்பத்
தேனிலினியபிரானேசெண்பகப்பூச்சூட்டவாராய்.

---

(க) பார்க்யாதிகை - மிக்கதவம்செய்தவள். (உ) பாவபந்தம்-அபிநிவேசம். (ந) த்ராமிடம் - தமிழ்.

ப-ரை.—தேனில் - தேனிலுங்காட்டில், இனிய - இனியனான, பிரானே - உபகாரகனானவனே, பற்றுதாரெல்லாம்-உன்னை யுகவாதாரெல்லாரும், சிரிப்ப- நகைக்கும்படியாக, பானையில் - கறந்தபானையோடேயிருக்கிற, பாலை-பச்சைப் பாலை, பருகி - அந்தபாத்ரத்திலே இருக்கச்செய்தேபருகி, உன் - உன்னுடைய, கரிய - கறுத்த, திருமேனி - திருமேனியானது, வாட - காட்டழல்பொறுமை யாலே வாடும்படியாக, கானகமெல்லாம் - காட்டிடமெங்கும், திரிந்து—, ஆநிரை - மேய்ச்சலுள்ளவிடம்தேடி யோடாநிற்கிற பசுநிரையை, மேய்க்க - மேய்க்கைக்காக, நீ - மென்மைத்தன்மையனானநீ, போதி - போகாநின்றாய்; உன்னை யெங்களுக்குநோக்கித்தருகைக்கு, அரு - அரிய, மருந்தாவது-மருந்தை, அறியாய் - அறிகிறிலை; ஆதலால் ஆநிரைமேய்க்கப்போகைதவிர்ந்து, செண்பக ப்பூ - நாண்மலரான செண்பத்தை, சூட்ட - நான்சூட்டும்படி, வாராய் - வந் தருளவேணும்.

வ்ரா.—முதற்பாட்டு. (ஆநிரைமேய்க்கநீபோதி) உன்வாசியறி யாதே, தனக்குமேய்ச்சலுள்ளவிடத்தே ஓடாநிற்கும் பசுநிரையை மேய்க்கைக்காக(க)ஸுகுமாரனானநீ போகாநின்றாய். (அருமருந்தா வதறியாய்) நீ உன்னைப்பெறுதற்கு அரியமருந்தாவதறிகிறிலை. இங் குள்ளார்க்கு * நோய்களறுக்கும்மருந்தாய், அங்குள்ளார்க்கு * போ கமகிழ்ச்சிக்கு மருந்தாயிறே யிவன்றானிருப்பது. (கானகமெல்லாந் திரிந்து) காட்டிடமெங்கும் திரிந்து. பசுக்கள்பச்சைகண்டவிடமெ ங்கும்பரந்துமேய்கையாலே, உனக்கும் அவைபோனவிடமெங்கும் திரியவேணுமிறே. (உன்கரியதிருமேனிவாட) * கண்டவர்கள்கண் குளிரும்படியிருக்கும், உன்னுடைய (உ) ச்யாமளமான திருமேனி யானது, காட்டழல் பொறுமையாலே வெக்கைதட்டினபூப்போலே வாடும்படியாக.

(பானையிற்பாலைப்பருகி) கறந்தபானையோடேயிருக்கிற பச் சைப்பாலை, அந்த பாத்ரத்திலே யிருக்கச்செய்தேபருகி. (பற்று தாரெல்லாம்சிரிப்ப) உன்னையுகவாதாரெல்லாரும் "எங்கள் வீட் டில் கைப்பானையில் பாலைக்குடித்துப்போந்தான்" என்று சிரிக் கும்படியாக. (தேனிலினியபிரானே) தேனிலுங்காட்டிலினியனான உபகாரகனானவனே. இத்தால் - அநுபவிப்பார்க்கு ஒருகாலும்த்ருப் திபிறவாதே, மேன்மேலனஅநுபவிக்கவேண்டும்படி யிருப்பானா யிருக்கிறதன்னை யுபகரிப்பானும்தானேயாய் யிருக்குமவனென்கை. (செண்பகப்பூச்சூட்டவாராய்) காலபுஷ்பமான செண்பகமானதுசெ வ்விகுன்றாமல் சாத்தவாராய். தேனிலினியபிரானே - பற்றுதாரெ ல்லாம்சிரிப்ப - பானையிற்பாலைப்பருகி - உன்கரியதிருமேனிவாட- கானகமெல்லாம்திரிந்து - ஆநிரைமேய்க்கநீபோதி - அருமருந்தாவ தறியாய் - செண்பகப்பூச்சூட்டவாராய் என்றந்வயம். (க)

(க) ஸுகுமாரன் - மென்மைத்தன்மையுடையவன். (உ) ச்யாமளமான- கறுத்த,

மூ.—கருவுடைமேகங்கள்கண்டாலுன்னைக்கண்டாலொக்குங்கண்
உருவுடையாயுலகேழுமுண்டாகவந்துபிறந்தாய் [கள்
திருவுடையாண்மணவாளாதிருவரங்கத்தேகிடந்தாய்
மருவிமணங்கமழ்கின்றமல்லிகைப்பூச்சூட்டவாராய்.

ப-ரை.—கண்கள் - கண்களானவை, உன்னை - * கண்டவர்கள் கண்குளிரத்தக்கவடிவழகையுடையனான வுன்னை, கண்டால்-பார்த்தால், கருவுடை - சூல்கொண்டெழுந்த, மேகங்கள் - மேகங்களை, கண்டாலொக்கும் - கண்டாற்போலே குளிரும்படியான, உருவுடையாய் - வடிவையுடையனாய், உலகேழும் - எல்லாலோகங்களும், உண்டாக - ஸத்தைபெற்றுஜ்ஜீவிக்கும்படி, வந்து—, பிறந்தாய்-திருவவதரித்தவனாய், திருவுடையாள் - உன்னைத்தனக்கு ஸம்பத்தாக வுடையளாயிருக்கும் பெரியபிராட்டியாருக்கு, மணவாளா - நாயகனானவனாய், திருவரங்கத்து - கோயிலிலே, கிடந்தாய் - ஸம்ஸாரிசேதநரை ரக்ஷித்தருளும்படி கண்வளர்ந்தருளினவனே, மணம் - பரிமளமானது, மருவி - பொருந்திநின்று, கமழ்கின்ற - கமழாநின்றுள்ள, மல்லிகைப்பூச்சூட்டவாராய்—.

வ்ஹா.—இரண்டாம்பாட்டு. (கருவித்யாதி) (கண்கள்-உன்னைக்கண்டால்-கருவுடைமேகங்கள்கண்டாலொக்கும்-உருவுடையாய்) கண்களானவை உன்னைப்பார்த்தால், நீர்கொண்டெழுந்த காளமேகங்களைக்கண்டாற்போலே குளிரும்படியான வடிவையுடையவனே. அன்றிக்கே, நீர்கொண்டெழுந்த காளமேகங்களைக்கண்டால் உன்னைக்கண்டாற்போலேயிருக்கும். (கண்களுருவுடையாய்) அழகுஒருதட்டும் தானொருதட்டுமாம்படியான கண்களினழகையுடையவனேயென்னவுமாம். (உலகேழுமுண்டாகவந்துபிறந்தாய்) ஸகலலோகங்களும் உன்னுடைய அவதாரத்தாலே (க) லப்தஸத்தாகமாய் உஜ்ஜீவிக்கும்படிவந்து பிறந்தவனே. (திருவுடையாள் மணவாளா) "ஸ்ரீ, ஶ்ரீயஃ" "திருவுக்குந்திருவாகிய" என்கிறபடியே - உன்னை, தனக்கு ஸம்பத்தாக வுடையளாயிருக்கும் பெரியபிராட்டியாருக்கு வல்லபனானவனே., (திருவரங்கத்தேகிடந்தாய்) அவளுகப்புக்காக ஸம்ஸாரி சேதநரை ரக்ஷித்தருளும்படி கோயிலிலே கண்வளர்ந்தருளினவனே. (மருவியித்யாதி) பரிமளமானது நீங்காமல்நின்று கமழாநிற்கிற மல்லிகைப்பூச்சூட்டவாராய். (உ)

மூ.—மச்சொடுமாளிகையேறிமாதர்கடம்மிடம்புக்குக்
கச்சொடுபட்டைக்கிழித்துக்காம்புதுகிலவைகீறி
நிச்சலுந்தீமைகள்செய்வாய்நீடுருவேங்கடத்தெந்தாய்
பச்சைத்தமநகத்தோடுபாதிரிப்பூச்சூட்டவாராய்.

ப-ரை.—மச்சொடு-நடுநிலங்களிலும், மாளிகை-மேல்நிலங்களிலும் சென்று, ஏறி—, மாதர்கள்தம்மிடம் - பெண்களிருக்கிற விடங்களில், புக்கு - புகுந்து, கச்சொடு - அவர்கள் முலைக்கச்சையும், பட்டை - அதற்குமேலே தரிக்

(க) லப்தஸத்தாகமாய் - ஸத்தை பெற்றதாய்க்கொண்டு.

கத்தக்க பட்டையும், கிழிந்து - கிழித்ததுமன்றி, காம்புதுகிலவை - மேலேத்திரமுள்ள கரையையுடைத்தான புடைவைகளையும், கீறி - கிழித்தும், நிச்சலும் - நாடோறும், தீமைகள் - தீம்புகளை, செய்வாய் - செய்யுமவனாய், நீள் - பரமாகாசத்தையளாவும்படியான உயர்த்தியையுடைய, திருவேங்கடம் - வடக்குத்திருமலையிலே நிற்கிற, எந்தாய் - என்ஸ்வாமியானவனே, பச்சை - பசுமைநிறம் குன்றாத, தமனகத்தோடு - தவநத்தோடு, பாதிரிப்பூ - பாதிரிப்பூவை, சூட்ட வாராய்—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மச்சித்யாதி) மச்சு - நடுநிலம். மாளிகை - மேல்நிலம். மச்சோடே கூட மாளிகையிலே சென்றேறி. (மாதர்கள்தம்மிடம்புக்கு) பெண்களிருக்கிற விடங்களிலேபுக்கு. (கச்சொடுபட்டைக்கிழித்து) அவர்கள் முலைக்கச்சோடே அதற்கு மேலிடான பட்டுக்களையும் கிழித்து. (காம்புதுகிலவைகீறி) பணிப்புடைவைகளானவற்றையும்கிழித்து. காம்புதுகில் - விளிம்பில் பணியுடன்சேர்ந்தபுடைவை. (நிச்சலும்தீமைகள்செய்வாய்)நாடோறும் தீம்புகளைச்செய்யுமவனே. வளரவளர தீம்பு கையேறிச் செல்லாநின்றதிறே. (நீள்திருவேங்கடத்தெந்தாய்) (க) ஒக்கத்தையுடைத்தான வடக்குத்திருமலையிலேநிற்கிற என் ஸ்வாமியானவனே. * கானமும் வாநரமுமானவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டுநிற்கிறது ஸ்வாமித்வப்ராப்தியாலேயிறே. (பச்சையித்யாதி) பசுமைகுன்றாத தமநகத்தோடே, அதுக்கு பரபாகமான நிறத்தையுடைய பாதிரிப்பூவையும் சூட்டும்படி வரவேணும். (௩)

௪.—தெருவின்கணின்றிளவாய்ச்சிமார்களைத்தீமைசெய்யாதே
மருவுந்தமநகமுஞ்சீர்மாலைமணங்கமழ்கின்ற
புருவங்கருங்குழனெற்றிப்பொலிந்தமுகிற்கன்றுபோலே
உருவமழகியநம்பியுகந்திவைசூட்டநீவாராய்.

ப-ரை.—புருவம் - மதநவில்லுபோல் வளைந்த புருவங்களையும், கரு - கறுத்துச் சுருண்டு நீண்டிருந்துள்ள, குழல் - குழலையும், நெற்றி - இரண்டுக்கும் நடுவே விளங்காநிற்கிற திருநெற்றியுமாகிற இவ்வவயவசோபையாலே, பொலிந்த - விளங்காநிற்பதொரு, முகில் - மேகமானது பெற்ற, கன்றுபோலே—, உருவம் - வடிவால், அழகிய - அழகியனுமாய், நம்பி - எல்லாப்படியாலும் நிறைந்திருப்பவனானவனே, தெருவின்கண் - வீதியில், நின்ற - விளையாடாநிற்கிற, இள - பருவத்தாலிளைய, ஆய்ச்சிமார்களை - இடைப்பெண்களை, தீமைசெய்யாதே - சிற்றில்சிதைத்தல்முதலிய தீம்புகளைச்செய்யாதேகொள் என்ன; ஆகில் என் செய்யவேணுமென்ன; மணம்கமழ்கின்ற - பரிமளம்வீசாநின்றுள்ள, மருவும் - மருவையும், தமநகமும் - தமநகத்தையும் சேர்த்துக்கட்டின, சீர் - அழகிய, மாலையிவை - மாலைகளானவிவற்றை, உகந்து - நானுகந்து, சூட்ட - உன்திருக்குழலிலே சூட்டும்படியாக, நீ—, வாராய் - வந்தருளவேணும்.

(க) ஒக்கம் - உயர்த்தி.

வ்யா.—நாலாம்பாட்டு. (தெருவின்கணின்று) நான் மச்சிலும் மாளிகையிலு மேறினேனோ, தெருவிலேயன்றோ நின்றேன், என்னை நீ இப்படி சொல்லுவானென்னென்ன; அவ்விடத்தில்தானோ நீ தீமைசெய்யாதிருக்கிறது. தெருவிடங்களிலேநின்று. (இளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே) அவ்விடத்தில் விளையாடாநிற்கிற பருவத்தாலிளைய இடைப்பெண்களைத் தீமைசெய்யாதே. சிற்றில் சிதைக்கை, (க) லீலோபகரணங்களைப்பறிக்கை, அவர்களோடே *கைப்பிணக்கிடுகைமுதலாக இவன்செய்யும் (உ) விஷயங்கள் வாசாமகோசரமாகையாலே, தீமையென்று ஒருசொல்லாலேயடக்கிச்சொல்லுகிறார். (மருவும் தமநகமுஞ் சீர்மாலைமணங்கமழ்கின்ற) மருவும் தமநகமும் கலந்துகட்டின அழகியமாலைகளானவை பரிமளம்கமழாநின்றன. உன் திருக்குழலிலே சேரத்தக்க மணம் பாழேபோகாநின்றதென்கை. (புருவமித்யாதி) உபமாநரஹிதமான புருவமும், இருண்டிருந்துள்ள குழலும், இரண்டுக்கும் நடுவே விளங்காநிற்கிற திருநெற்றியுமாகிற இவ்வவயவ சோபையாலே உஜ்வலமாயிருப்பதொரு முகிலின்றகன்றுபோலே வடிவால் அழகியனுமாய் ஸ்வப்ரகார பரிபூர்ணனுமா யிருக்கிறவனே. (உகந்தித்யாதி) "உனக்குச் சூட்டப்பெற்றோம்" என்கிற வுகப்புடனே, மணம் கமழாநின்றுள்ள இம்மாலைகளை நான் உனக்குச்சூட்டும்படியாக வரவேணும். (ச)

மூ.—புள்ளினைவாய்பிளந்திட்டாய்பொருகரியின்கொம்பொசித்
கள்ளவரக்கியைமூக்கொடுகாவலனைத்தலைகொண்டாய் [தாய்
அள்ளிநீவெண்ணெய்விழுங்கவஞ்சாதடியேனடித்தேன்
தெள்ளியநீரிலெழுந்தசெங்கழுநீர்சூட்டவாராய்.

ப-ரை.—புள்ளினை - *பறவையுருக்கொண்டு உன்னைநலிவதாகவந்த பகாஸுரனுடைய, வாய் - வாயை, பிளந்திட்டாய் - கிழித்துப்பொகட்டவனாய், பொரு - போர்செய்ய எதிர்த்துவாராநின்றுள்ள, கரியின் - குவலயாபீடமென்னும்யானையுடைய, கொம்பு - கொம்பை, ஒசித்தாய் - வருத்தமின்றிப் பிடுங்கிப் பொகட்டவனாய், கள்ளம் - வஞ்சகமான வேஷங்கொண்டுவந்த, அரக்கியை - சூர்ப்பணகியாகிய ராக்ஷஸியினுடைய, மூக்கொடு - மூக்குடனே, காவலனை - அவளுக்கு ரக்ஷகனான ராவணனுடைய, தலை - தலையையும், கொண்டாய் - அறுத்துப்பொகட்டவனே, நீ—, வெண்ணெய் - வெண்ணெயை, அள்ளிவிழுங்க - அள்ளிவிழுங்கவும் பெற்றுவைத்து, அடியேன்—, அஞ்சாது - உன்திருமேனியின் மென்மைத்தன்மைபார்த்து அஞ்சாமல், அடித்தேன்—; ஆனபின்பு, நான்செய்தத்தைப் பொறுத்து, தெள்ளிய - தெளிந்த, நீரில் - நீரிலே, எழுந்த - உண்டான, செங்கழுநீர் - நிறத்தையும் மணத்தையுமுடைய செங்கழுநீரை, சூட்ட - செவ்வியழிவதுக்கு முன்னேசூட்டும்படியாக, வாராய் - வந்தருளவேணும்.

---

(க) லீலோபகரணங்கள் - விளையாட்டுக்கருவிகள். (உ) விஷமங்கள் - சேஷ்டைகள்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (புள்ளினையித்யாதி) கன்றுகள் மேய்க்கிறவிடத்தில் * பள்ளத்தில்மேயும்பறவையுருக்கொண்டு உன்னை நலிவதாகவந்த பகாஸுரனை வாயைக்கிழித்துப் பொகட்டவனே. (பொருவித்யாதி) "கல்யாணத்துக்கு" என்று அழைத்துவிட்டு வழியிலே நலிவதாக கம்ஸன் நிறுத்திவைத்ததாய்,உன்மேலே யுத்தோந்முகமாய்வந்த குவலயாபீடத்தின்கொம்பை அநாயாஸேநப்பிடுங்கிப் பொகட்டவனே. (கள்ளமித்யாதி) "சீதைக்கு நேராவன்" என்று க்ருத்ரிம வேஷங்கொண்டுவந்த சூர்ப்பணகியாகிற ராக்ஷஸிமூக்கோடே அவளுக்கு ரக்ஷகனான ராவணன்தலையையும் அறுத்துப்பொகட்டவனே. இவளுக்குஅவன்காவலனாகையாவது-இவளை (க)"ஸ்வைரஸஞ்சாரம் பண்ணித்திரி"என்று விடுகையிறே. அன்றிக்கே, பொதுவிலே, காவலனென்கையாலே - ராக்ஷஸஜாதிக்காக ரக்ஷகனென்னவுமாம். இத்தால் - ப்ரபலவிரோதிகளை அநாயாஸேநப்போக்கி, உன்னை யநுபவிப்பார்க்கு உன்னை வுபகரித்தவனன்றோவென்கை. (அள்ளியித்யாதி) "இவன்,வெண்ணெய் தானேயள்ளிவிழுங்கவல்லனுவதெப்போதோ"என்றுப்ரார்த்தித்திருந்தநான்,நீவெண்ணெயை அள்ளிவிழுங்கவும் பெற்றுவைத்து உன்மார்த்தவத்தைப் பார்த்தஞ்சாமல் அடியேனடித்தேன். யாவர்சிலரும் அநுதாபம் தலையெடுத்தால் "அடியேன்" என்றிறே சொல்லுவது. இவள்தான் அதுதன்னை முன்னே நினையாதே அடிக்கவேண்டிற்றும், இவன் மற்றுமோரிடத்திலே இது செய்யுமாகில் வரும்பழிச்சொலவுக்கு அஞ்சியிறே. (தெள்ளிய வித்யாதி) ஆனபின்பு நான் முன்செய்த வத்தைப் பொறுத்து, தெளிந்த நீரிலே எழுந்ததாகையாலே நிறத்தாலும்பரிமளத்தாலும் விலக்ஷணமாயிருக்கிற செங்கழுநீரை செவ்வையிலே நான் சூட்டும்படி வாராய். (ரு)

மூ.—எருதுகளோடுபொருதியேதுமுலோபாய்காணம்பி
கருதியதீமைகள்செய்துகஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய்
தெருவின்கட்டீமைகள்செய்துசிக்கனமல்லர்களோடு
பொருதுவருகின்றபொன்னேபுன்னைப்பூச்சூட்டவாராய்.

ப-ரை.— நற்பின்னைப்பிராட்டியைப் பெறுகைக்காக, எருதுகளோடு - அஸுரத்தன்மையுள்ள வெருதுகளோடே, பொருதி - போர்செய்தா நின்றவனாய், ஏதும் - ஒன்றிலும், உலோபாய் - லோபகுண மில்லாதவனாய், நம்பி - நற்பின்னைப்பிராட்டிபக்கலுண்டான அன்பினாலே நிறைந்தவனாய், கருதிய - கம்ஸன் உன்திறத்திற்செய்யக்கருதிய, தீமைகள் - தீமைகளை, செய்து - அவன் திறத்தில் தீசெய்து, கஞ்சனை - கம்ஸனை, கால்கொடு - உன்திருவடிகளாலே, பாய்ந்தாய் - உதைத்தவனாய், தெருவின்கண் - அவனை கிரவிப்பதாகப் போகிற வழியிலே, தீமைகள்செய்து - ரஜகனைக்கொன்றும், வில்லைமுறித்தும், குவலயா

(க) ஸ்வைரஸஞ்சாரம் - தன்னிச்சைப்படி திரிகை.

கஞ்சன் கருதினமான தீமைகளைச்செய்து, சிக்கன - திண்மையையுடைய, மல்லர்களோடு-மல்லயுத்தம் செய்கையை மேற்கொண்டுவந்த சாணூரமுஷ்டிகராகிய மல்லரோடே சபதம்செய்துகொண்டு, பொருது - அவர்களைப் பொருதழித்து, வருகின்ற - பகைவரை வென்றுவருகிற செருக்காலே, பொன்னே - பொன்போலே விளங்காநின்றுள்ள வடிவையுடையவனே, புன்னைப்பூ - புன்னைப்பூவை, சூட்ட - உன் திருக்குழலில் நான்சூட்டும்படியாக, வாராய் - நீவந்தருளவேணும்.

வ்யா — ஆரும்பாட்டு. (எருதுகளோடுபொருதி) நப்பின்னைப் பிராட்டியை லபிக்கையிலுண்டான ஆசையாலே உன் திருமேனியின் மார்த்தவம்பாராமல் அஸுராவிஷ்டமான எருதுகளோடே பொராநின்றாய். காலாந்தரமாயிருக்கச் செய்தேயும் தத்காலம்போலே ப்ரகாசிக்கையாலே, "பொருதி" என்று - வர்த்தமாநமாகச் சொல்லுகிறது. (ஏதுமுலோபாய்காண்) ஒன்றிலும் லோபமற்றிராநின்றாய்காண். அதாவது - தேஹத்தைப்பேணுதல், ப்ராணனைப் பேணுதல் செய்யாதிருக்கை. (நம்பி) நப்பின்னையானவிவள்வ்யாமோஹத்தால் பூர்ணனானவனே. (கருதியதீமைகள்செய்து) கஞ்சன் உன்திறத்தில் செய்யக்கருதின தீமைகளெல்லாவற்றையும் அவன் திறத்திலே நீசெய்து. (கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய்) கம்ஸனைத் திருவடிகளாலே உதைத்தாய். அதாவது - "உச்சமஞ்சவ்யவஸ்திதः" "தச்சோத்வஹ்யவ்யவஸ்திதः" என்கிறபடியே அவனிருந்த உயர்ந்த மஞ்சஸ்தலத்திலே சென்று குதித்து, "కేశేష్వాకృష్య విగళత్కిరీటమవనీతలే । స కంసం పాతయామాస తస్యోపరి పపాత చ" "கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத் கிரீடமவநீதலே । ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாத ச" என்கிறபடியே அபிஷேகத்தைப் பறித்தெறிந்து, மயிரைப்பிடித் திழுத்து மஞ்சஸ்தலத்தில்நின்றும் பூமியிலே விழத்தள்ளி, அவன்மேலேகுதித்திறே அவனைக்கொன்றது. (தெருவின்கண் தீமைகள் செய்து) தெரு - வழி. அவனை நிரஸிப்பதாகப் போகிறபோது வழியிலே அவனுடைய ஈரங்கொல்லியான ரஜகனைக்கொன்று, ஆயுதசாலையிலே புக்கு அவனுக்கு மறம்பிறக்கும்படி "வில்விழவுக்கு" என்று அலங்கரித்திருக்கிற வில்லை முறித்து, அவனுக்கு (க) அபிமதகஜமான குவலயாபீடத்தைக் கொன்றுசெய்தவினையிறே தெருவின்கண் செய்த தீமைகளாவன. (சிக்கன மல்லர்களோடு பொருது) "ஏவிற்றுச்செய்வானேன்றெதிர்ந்துவந்தமல்லர்" என்கிறபடியே கம்ஸன் ஏவினதுசெய்யவேணுமென்று மற்பொருகையை ஏன்று கொண்டுவந்தசாணூர முஷ்டிகராகிற மல்லரோடே (௨) ப்ரதிஜ்ஞா பூர்வகமாக உறைக்கப்பொருதழிந்து. (வருகின்றபொன்னே) இப்படி விரோதி

(க) அபிமதகஜம் - இஷ்டமானயானை. (௨) ப்ரதிஜ்ஞாபூர்வகமாக - சபதம்செய்துகொண்டு.

வர்க்கத்தை நிரஸித்து வருகிறபோதைச் செருக்காலே பொன்போலே உஜ்வலமான வடிவையுடையவனே. முந்துற கம்ஸ நிரஸநத்தைச் சொல்லி, அதுக்கு பூர்வத்திலுள்ளவற்றை, பின்பு சொல்லுவானென்னென்னில்; கம்ஸநிரஸநமே (க) ப்ரதாநமாய், இவை அதுக்குறுப்பாக, போகிறவழியில் செய்த வ்யாபாரங்களாகையாலே அதுக்கு முன்னுக்ச்சொன்ன விதில் விரோதமில்லை. (புன்னையித்யாதி) உனக்குப்பாங்கான புன்னைப்பூச் சூட்டும்படியாக நீவாராய். பொன்னே புன்னைப்பூச்சூட்ட வாராய் என்கையாலே - பொன்னோடே பொன்னைச் சேர்ப்பானைப்போலே, பொன்போலே யிருக்கிற திருமேனியிலே * பொன்னேய்ந்த தாதையுடைய புன்னைப்பூவைச் சூட்டப் பார்க்கிறாள்காணும். (சா)

எ.—குடங்களெடுத்தேறவிட்டுக்கூத்தாடவல்லவெங்கோவே
மடங்கொண்மதிமுகத்தாரைமால்செய்யவல்லவென்மைந்தா
இடந்திட்டிரணியனெஞ்சையிருபிளவாகமுன்கீண்டாய் [ய்.
குடந்தைக்கிடந்தவெங்கோவேகுருக்கத்திப்பூச்சூட்டவாரா

ப-ரை.—குடங்கள் - பலமட்குடங்களை, எடுத்து - கையிலேயெடுத்துக்கொண்டும், ஏறவிட்டு - ஆகாசத்திலே எறிந்தும், கூத்தாட - கூத்தாடுகையில், வல்ல- வல்லவனாய், எம் - எங்களுக்கு, கோவே - நாயகனானவனாய், மடங்கொள்-மடப்பத்தை யுடையராய், மதி - பூர்ணசந்த்ரனைப்போலே குளிர்ந்து ஒளிவிடாநின்றுள்ள, முகத்தாரை - முகத்தையுடையரா யிருக்கிற பெண்களை, மால்செய்ய வல்ல - மயக்கவல்ல, என் - என்னுடைய, மைந்தா - பிள்ளையானவனாய், முன்-முற்காலத்திலே, இரணியன் - ஹிரண்யனுடைய, நெஞ்சை - மார்வை, இடந்திட்டு - திருவுகிர்களாலே யூன்றியிடந்து, இருபிளவாக - இரண்டுபிளவாம்படி, கீண்டாய் - கிழித்துப்போகட்டவனாய், அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கும் உதவுகைக்காக, குடந்தை - திருக்குடந்தையில், கிடந்த - "கிடந்தவாறெழுந்திருந்துபேசு" என்னும்படி கண்வளர்ந்தருளுமவனாய், எம்-எங்களுக்கு, கோவே - அரசனானவனே, குருக்கத்திப்பூ - உனக்கென்று நான்சேமித்த குருக்கத்திப்பூவை, சூட்ட - சூட்டுகைக்கு, வாராய் - வந்தருளவேணும்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (குடங்களித்யாதி) ப்ராஹ்மணர் ஐச்வர்யம் விஞ்சினால் யாகாதிகள் பண்ணுமாபோலே, இடையர் ஐச்வர்யம் விஞ்சினால் செருக்குக்குப் போக்குவிட்டாடுவதொரு கூத்தாய்த்து - குடக்கூத்தாவது. (உ) உபயவிபூத்யைச்வர்யம்போலன்றிக்கே, பிறந்துபடைத்த ஐச்வர்யமிறே யிவனுக்கிது. இடையர்க்கு ஐச்வர்யந்தானாவது - (ங) கோஸம்ருத்தியிறே. அந்தஸம்ருத்தி குறைவறவுள்ளது தனக்கேயாகையாலே, அத்தால் வந்த செருக்குக்குப் போக்குவிட்டுக் குடக்கூத்தாடினபடி சொல்லுகிறது. தலையிலே

(க) ப்ரதாநமாய் - முக்யமானதாய். (உ) உபயவிபூத்யைச்வர்யம் - நித்யவிபூதியும் லீலாவிபூதியுமாகியஸம்பத்து. (ங) கோஸம்ருத்தி-பசுக்களின்மிகுதி.

அடுக்குக்குடமிருக்க, இரண்டுதோள்களிலும் குடங்களிருக்க, இரண்டுகையிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலே எறிந்தாடுவதொரு கூத்தாய்த்து - குடக்கூத்தாவது. அத்தைச்சொல்லுகிறது (குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்ல) என்று. "குடம்" என்னாதே, குடங்கள் என்கையாலே - பலகுடங்களையும் கொண்டு ஆடினமையைச் சொல்லுகிறது. எடுத்தேறவிட்டு என்கையாலே-அவற்றைத் திருக்கையிலே யெடுத்து ஆகாசத்திலே உயர எறிவதோராண்மையைச் சொல்லுகிறது. கூத்தாட வல்லவென்கையாலே - மற்றும் இக்கூத்தாடுவாருண்டேயாகிலும், இவன் ஆடின (க) கட்டளை ஒருவர்க்கு மாடப்போகாதென்னு மிடம் சொல்லுகிறது. (கூத்துஆ!) இவனாடின (உ) வைசித்ரியம் பரதசாஸ்த்ரத்திலும் காண வரிதாயிருக்கை. (எங்கோவே) எங்களுக்கு நாயகனானவனே. (மடங்கொளித்யாதி) இப்படியிருக்கிற சேஷ்டிதத்தாலே மடப்பத்தை யுடையராய், பூர்ணசந்த்ரனைப்போலே குளிர்ந்து ஒளிவிடாநின்ற முகத்தையுடையரா யிருக்கிற ஸ்த்ரீகளைப் பிச்சேற்றவல்ல வென்னுடைய பிள்ளையானவனே. (இடந்திட்டித்யாதி) நெஞ்சென்று - மார்வைச் சொல்லுகிறது. தேவர்கள் கொடுத்த வரபலத்தாலே பூண்கட்டியிருக்கிற ஹிரண்யனுடைய மார்வை, "கொலைக்கையாளன் நெஞ்சிடந்த கூருகிராளன்" என்கிறபடியே கூரியதிருவுகிர்களாலே உறைக்க வூன்றியிடந்து இரண்டு கூறும்படியாக முற்காலத்திலே கிழித்துப் பொகட்டவனே. இத்தால்-சிறுக்கனுடைய ஆபத்திலே வந்து உதவினவனாகையாலே தளர்ந்தாரை நோக்குமவனென்னு மிடம் சொல்லுகிறது. (குடந்தையித்யாதி) அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கும் உதவுகைக்காகத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளின என்னையனானவனே. (குருக்கத்தியித்யாதி) உனக்கென்று தேடிவைத்த குருக்கத்திப்பூவை உன் திருக்குழலிலே சூட்டும்படியாக வாராய். (எ)

மூ.—சீமாலிகனவனோடுதோழமைக்கொள்ளவும்வல்லாய்
சாமாறவனைநீயெண்ணிச்சக்கரத்தாற்றலைகொண்டாய்
ஆமாறறியும்பிரானேயணியரங்கத்தேகிடந்தாய் [ய்.
ஏமாற்றமென்னைத்தவிர்த்தாயிருவாட்சிப்பூச்சூட்டவாரா

ப-ரை.—மாலிகன் - மாலிகனென்னும் பேரையுடையனாய், அவனோடு - அஸுரத்தன்மையில் தனக்குமேற்பட்டாரில்லை யென்னும்படியான வவனோடே, தோழமைக்கொள்ளவும் - நட்புக்கொள்ளவும், வல்லாய் - ஸமர்த்தனானவனாய், அவன் - அவ்வஸுரனானவன், சாம் - சாகத்தக்க, ஆறு-வழிகளை, நீ—, எண்ணி- யோசித்து, சக்கரத்தால் - திருவாழியாலே, தலைகொண்டாய் - தலையையறுத்துப் பொகட்டவனாய், பகைவரை சிக்ஷிக்கை, அடுத்தவரை ரக்ஷிக்கையாகிற

(க) கட்டளை - ப்ரகாரம். (உ) வைசித்ர்யம் - ஆச்சரியத்தன்மை.

விவற்றில், ஆம் ஆறு - மேல்விளைவதை, அறியும் - அறியவல்ல, பிராமே - உப காரகனானவனாய், அணி - ஸம்ஸாரத்துக் காபரணமான, அரங்கத்து - * நல்லார்கள்வாழும் நளிரரங்கத்திலே, கிடந்தாய் - மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்கள் ப்பெறுகைக்காகப் பள்ளிகொண்டருளுமவனாய், என்-"உனக்கென்வருகிறதோ" என்று வயிறெரியாநிற்கிற வென்னுடைய, ஏமாற்றம் - துக்கத்தை, தவிர்த்தாய்-போக்கினவனே, இருவாழ்ச்சிப்பூச்சூட்டவாராய்—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (சீமாலிக னித்யாதி) [மாலிகனென் பானொருத்தன் க்ர்ஷ்ணனுக்கு (க) ஸகாவாய், பல ஆயுதங்களும் பயிற்றுவிக்க க்ர்ஷ்ணன்பக்கலிலே கற்று, இந்த (உ) ஆஸக்திபலத்தாலே ஒருவர்க்குமஞ்சாமல் லோகத்திலுள்ள ஸாதுக்களை நலிந்து திரியப்புக்கவாறே, "ஸகாவாய்ப்போந்தவிவனை நிரஸிக்கவொண்ணாது" என்று திருவுள்ளத்தில் (ங) அத்யந்தவ்யாகுலம் நடந்துபோருகிற காலத்திலே, அவனை ஒருபோது கருகநியமித்தவாறே, அவன் றான், "நறுகுமுறுகு" என்றாற்போலே சிலபிதற்றி,எல்லா வாயுதங்களிலும் பயிற்றுவித்திரோ யாகிலும், என்னை, "ஆழிபயிற்றுவித்திலீரோ" என்ன; "இதுநமக்கு அஸாதாரணம், உனக்கு (ச) கர்த்தவ்யமன்று காண்" என்ன; "எனக்குகர்த்தவ்யமன்றியிலே யிருப்பதோராயுதமுண்டோ"என்று அவன் நிர்ப்பந்தங்களைப் பண்ணினவாறே, இவனுடைய (ரு) துஸ்வபாவங்களடியாக, "இவனை நிரஸிக்க வேணும்" என்று திருவுள்ளம்பற்றி, தன்னுடைய சீர்மை குன்றாதபடி ஆயுதம் பயிற்றுவிக்கிறானாக, திருவாழியை ஒருவிரலாலே சுழற்றி ஆகாசத்திலே எழவீசி, சுழன்று வருகிற திருவாழியை மீண்டும் திருக்கையிலே அநாயாஸேந ஏற்க, அவன் இத்தைக்கண்டு, "எனக்கு இது அரிதோ" என்று கைநீட்ட, "உனக்கு இது அரிதுகாண்" என்னச்செய்தேயும் அவன்வாங்கிச்சுழற்றி மேலேவிட்டு, மீண்டு சுழன்றுவருகிறபோது பிடிப்பானாகநினைத்து, தன்கழுத்தை யடுக்கத் தன்விரலை யெடுத்துக்கொடுநிற்க, அது * வட்டவாய் நுதிநேமியாகையாலே சுழலவர இடம்போராததுகொண்டு அதன்வீச்சு இவன்கையில் பிடிபடாமல் இவன்தலையை யரிந்து போகட்டது] என்று (சா) இதிஹாஸாதிகளிலே சொல்லப்பட்டதொரு வ்ர்த்தாந்தத்தை இப்பாட்டில் (எ) பூர்வார்த்தத்தாலே ஸங்க்ரஹேண சொல்லுகிறது.

(சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய்) ஸ்ரீ-(அ) ஔபசாரிகம். மாலிகனென்று பேரையுடையனாய் ஆஸுரப்ராக்ருதியா யிருக்கிறவனோடே, உன்குணத்தாலே கலந்து தோழமைக் கொள்ளவும் வல்லவனே.

(க) ஸகாவாய்-நட்பனாய். (உ) ஆஸக்திபலத்தால்-ஊம்பத்நபலத்தாலே (ங) அத்யந்தவ்யாகுலம் - மிக்கவருத்தம். (ச) கர்த்தவ்யம் - செய்யத்தக்கது. (ரு) துஸ்வபாவம் - கெட்டநடக்கை. (சா) இதிஹாஸம் - பாரதம்முதலியன. (எ) பூர்வார்த்தம் - முன்பாதி. (அ) ஔபசாரிகம் - உபசாரமாகச்சொல்லுமது.

(சாமாறவனைநீயெண்ணி) அவன் (க)ஸாதுபீடாதிகளைப் பண்ணப் புக்கவாறே, இனி "அவனையழியச்செய்யாவிடில் நாடுகுடிகிடவாது" என்று அவன் சாகத்தக்கவழிகளை நீயேசிந்தித்து. அதாவது-"தோழனைக்கொன்றான்" என்று தனக்கு (உ) அபவாதம் வாராதபடியாகவும் "தன்னாலே தான் முடிந்தான்" என்னும்படியாகவும் தக்கவழியைச் சிந்திக்கை. அவனை என்கிற இடத்தில், ஐகாரம் - அவ்யயம். (சக்கரத்தால் தலைகொண்டாய்) "நமக்கு (ங) அஸாதாரணமான ஆயுதம், உனக்கிதாகாதுகாண்" என்னச்செய்தேயும் அவன் நிர்ப்பந்தம் பண்ணினதுக்காக, அவனை, ஆழிபயிற்றுவிப்பாரைப்போலே உபாயரூபேண திருவாழியாலே (ச) சிரச்சேதம்பண்ணிப் பொகட்டவனே. (ஆமாறறியும்பிரானே) சத்ருநிரஸநம், ஆச்ரிதரக்ஷணமாகிறவிவற்றில் ஏதேனுமொன்றில் புகுந்தால், மேல்விளைவதறியும் உபகாரகனானவனே.

(அணியரங்கத்தேகிடந்தாய்) "இங்கேகிடந்தால் நமக்கு முமுக்ஷுக்களை லபிக்கலாம்" என்று ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே பள்ளிகொண்டருளுகிறவனே. (ஏமாற்றமென்னைத்தவிர்த்தாய்) "நல்லார்கள்வாழும் நளிரரங்கம்" என்கிறபடியே பரிவருள்ள தேசத்திலே பள்ளிகொள்ளுகையாலே உன்ஸௌகுமார்யாதிகளை நினைத்து, "உனக்கென்வருகிறதோ" என்று வயிறெரியாநிற்குமென் க்லேசத்தைப் போக்கினவனே. ஏமாற்றமாவது - துக்கம். (இருவாழ்ச்சிப்பூச்சூட்டவாராய்)காலபுஷ்பமானவிது செவ்வியழிவதற்கு முன்னே உன்திருக்குழலிலே நான்சூட்டும்படிவாராய்.

மூ.—அண்டத்தமரர்கள்சூழவத்தாணியுள்ளங்கிருந்தாய்
தொண்டர்களெஞ்சிலுறைவாய்தூமலராண்மணவாளா
உண்டிட்டுலகினையேழுமோராலிலையிற்றுயில்கொண்டாய்
கண்டுநானுன்னையுகக்கக்கருமுகைப்பூச்சூட்டவாராய்.

ப-ரை.—அண்டத்துள் - பரமபதத்தினுள்ளே, அத்தாணி - அருகிருப்பையுடையரான, அமரர்கள் - நித்யஸூரிகள், சூழ-சூழ்ந்துஸேவித்துநிற்க, அங்கு-அவர்கள்நடுவே, இருந்தாய் - எல்லாலோகங்களிலும் தன்னாணைசெல்லும்படியிருந்தவனாய், தொண்டர்கள் - இந்தலீலாவிபூதியில் மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்களாய் உன்பக்கல் அன்புடையராயிருக்குமவர்களுடைய, நெஞ்சில்-மநஸ்ஸினுள்ளே, உறைவாய் - பரமபதத்திலுங்காட்டில்உகந்து பொருந்தியிருப்பவனாய், தூ-தூய்தான, மலராள் - தாமரைப்பூவைப்பிறந்தகமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு, மணவாளா - நாயகனானவனாய், ஏழுலகினையும் - ஸகலலோகங்களையும், உண்டிட்டு-ப்ரளயத்திலழியாதபடி திருவயிற்றிலேவைத்து, ஓராலிலையில்-

(க) ஸாதுபீடாதிகளைப்பண்ணுகை-ஸாதுக்கள்விஷயத்தில் துன்பமுதலியவற்றைச் செய்தல். (உ) அபவாதம் - பழி. (ங) அஸாதாரணமான - உரித்தான. (ச) சிரச்சேதம்பண்ணி - தலையையறுத்து.

இளைதாயிருப்பதொரு ஆலிலையிலே, துயில்கொண்டாய் - கண்வளர்ந்தருளினவனாய், உன்னை - மாலையும் மயிர்முடியுமாயிருக்கிறவுன்னை, கண்டு—, நான்—, உகக்க - ஸந்தோஷிக்கும்படியாக, கருமுகைப்பூ - நீயுகக்கும் சிறுசெண்பகப் பூவை, சூட்ட - சூட்டுகைக்கு, வாராய் - வந்தருளவேணும்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (அண்டத்தித்யாதி) "இறந்தாற்றங்குமூரண்டமே" என்றும், "அண்டம்போ யாட்சியவர்க்கு" என்றும், பரமபதத்தை "அண்டம்" என்றுசொல்லக்கடவதிறே. (அண்டத்துள் - அத்தாணி-அமரர்கள்சூழ - அங்கிருந்தாய்) பரம பதத்தினுள்ளே அருகிருப்பையுடையரான நித்யஸூரிகள்சூழ ஸேவிக்க, அவர்கள்நடுவே *ஏழுலகும் தனிக்கோல்செல்ல வீற்றிருந்தருளினவனே. அத்தாணி-அருகிருப்பு. (தொண்டர்கள்நெஞ்சிலுறைவாய்) இந்த விபூதியில் முமுக்ஷுக்களாய் உன்பக்கல் ப்ரேமயுக்தரா யிருக்குமவர்களுடைய மநஸ்ஸினுள்ளே, பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் உகந்து நித்யவாஸம்பண்ணுமவனே. (தூமலராள் மணவாளா) தூய்தானதாமரைப்பூவைப்பிறந்தகமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு நாயகனானவனே. "శ్రియఃశ్రీః" "ஸ்ரியஸ்ஸ்ரீ:" என்கிறபடியே பரமபதத்திலும், "அரவிந்தப் பாவையுந் தானும்" என்கிறபடியே தொண்டர்களுடைய ஹ்ர்தயத்திலும், பிராட்டியுந் தானுங் கூடவிறே யெழுந்தருளியிருப்பது.

(உண்டிட்டித்யாதி) ப்ரளயத்தில் அழியாதபடி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து ஒருபவனான ஆலிலையிலே கண்வளர்ந்தருளினவனே. இந்த (க) ஆபத்ஸகத்வத்துக்கு ஹேது, கீழ்ச்சொன்ன ஸ்ரிய:பதித்வமிறே. "యస్యావీక్ష్యముఖంతదిఙ్గితపరాధీనోవిధత్తేఖిలమ్" "யஸ்யாவீக்ஷ்யமுகம்ததிங்கிதபராதீநோவிதத்தேகிலம்" என்கிற படியே ஸகலமும் அவளுடையஇங்கிதபராதீநனாயிறே செய்வது. (கண்டித்யாதி) மாலையும் மயிர்முடியுமாயிருக்கிற உன்னைக்கண்டு நானுகக்கும்படியாக நீ உகக்கும் கருமுகைப்பூச்சூட்டவாராய். (கூ)

மூ.—செண்பகமல்லிகையோடுசெங்கழுநீரிருவாழ்ச்சி
எண்பகர்பூவுங்கொணர்ந்தேனின்றிவைசூட்ட வாவென்று
மண்பகர்கொண்டானையாய்ச்சிமகிழ்ந்துரைசெய்தவிம்மாலை
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன்பட்டர்பிரான்சொன்னபத்தே.

ப-ரை.—செண்பகம் - செண்பகமும், மல்லிகை - மல்லிகையும், செங்கழுநீர் - செங்கழுநீரும், இருவாழ்ச்சி - இருவாழ்ச்சிமுதலாக, எண்-எண்ணி, பகர்-சொல்லப்பட்ட, பூவும் - பூக்களெல்லாவற்றையும், கொணர்ந்தேன் - அருமைப்பட்டுத் தேடிக்கொண்டுவந்த, இவை - இப்புஷ்பவகைகளை, இன்று-இப்போது, சூட்ட - உன்திருக்குழலிலேசூட்டும்படி, வாவென்று-வரவேணுமென்று, பகர் -

(க) ஆபத்ஸகத்வம் - ஆபத்தில் உதவுகை.

"மூவடிதா" என்றிரந்த, மன்னை - மண்ணை, கொண்டானை - திருவடிகளாலீட்டியளந்துகொண்டவனை, ஆய்ச்சி - யசோதைப்பிராட்டி, மகிழ்ந்து-களித்து, உரைசெய்த - சொன்னவற்றை, பண் - பண்ணிலேசேரும்படி, பகர் - சொல்லாநிற்கும், வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு, கோன் - தலைவராய், பட்டர்பிரான் - ப்ராஹ்மணோத்தமரானபெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, இம்மாலை - *சொல்மாலையானவிவை, பத்தே - ஒருபத்தேஎன்று இதின் பெருமையைச்சொல்லி யீடுபடுகிறார்.

வ்யா.—நிகமத்தில், (செண்பகமல்லிகையோடித்யாதி) ப்ராதஃகாலபுஷ்பிதமான செண்பகமும் ஸாயங்காலபுஷ்பமான மல்லிகையுமாகிற விவற்றோடே, ப்ராதஃகாலபுஷ்பங்களானசெங்கழுநீரிருவாழ்ச்சியும் முதலாக எண்ணிச்சொல்லப்பட்டபூக்களெல்லாங் கொண்டுவந்தேன். அன்றிக்கே, எண்பகர்பூவென்றது-இன்ன தின்னதென்று (க) பரிகணிக்கப்படுமதாய் சாஸ்த்ரஸித்தமுமாகிற பூக்களென்னவுமாம். கொணர்ந்தேனென்றது - கொண்டுவந்தேனென்றபடி. (இன்றிவைசூட்டவாவென்று) இப்போது இவற்றை உன்திருக்குழலிலே சூட்டவரவேணுமென்று. (மண்பகர்கொண்டானை) பகர்ந்தமண்ணைக்கொண்டவனை. பகர்தல் - "மூவடிதா" என்ற இவனுடைய உக்தியாதல்; "தந்தேன்" என்ற மஹாபலி உக்தியாதல். சாஸ்த்ரஸித்தமான பூமியையெல்லாங் கொண்டவனையென்னுதல். (ஆய்ச்சிமகிழ்ந்துரைசெய்த) இப்படியிருக்கிறவனைக்குறித்து இன்றிவைசூட்டவாவென்று யசோதைப்பிராட்டி உகந்துசொன்ன ப்ரகாரங்களை. செய்தவென்றது - செய்தவற்றையென்றபடி. (பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்ன-இம்மாலை-பத்தே) ஆரேனுமொருவர் ஏதேனுமொன்றைச் சொல்லிலும் பண்ணிலேசேரும்படி சொல்லாநிற்கும் ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த இம்மாலையும் ஒருபத்தே! என்று இதினுடைய ச்லாக்யதையைச் சொல்லுகிறது. இதுக்கொருபலம் சொல்லாதே இத்தை ச்லாகித்துவிட்டது, இதினுடைய ரஸாநுபவந்தானே இதுக்குபலமென்று தோற்றுகைக்காக. (க0)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—ஆநிரைகருமச்சு தெருப்புள் எருதுகுடம் சீமாலிகனண்டம் செண்பகமிந்திரன்.

---

ஆ திருமொழி கசு-க்கு, பாட்டு-கஎஅ.

---

(க) பரிகணிக்கப்படுமேது - எண்ணப்படுமேது.

அ.—கீழே, அவனைத்திருமஞ்சனமாட்டித் திருக்குழல்வாரினயசோதைப்பிராட்டி "அவன்திருக்குழலுக்கலங்காரமாகப் பூச்சூட்டவேணும்" என்றுகோலி, ஒன்றுபோலொன்றன்றிக்கே விலக்ஷணமானபுஷ்பங்கள் பலவற்றையும் ஸம்பாதித்து "இவைசெவ்வியழிவதுக்குமுன்னே உனக்கு நான் சூட்டும்படி வரவேணும்"என்று பலகாலுமழைத்துப் பூச்சூட்டினவநந்தரம், "அவனழகுக்கு (க)த்ர்ஷ்டிதோஷம் வாராதபடி காப்பிடவேணும்" என்று நினைத்து, "ஸாயங்காலத்திலே உன்னைஸேவிப்பதாக தேவஜாதியெல்லாம் வந்து நில்லாநின்றார்கள், காலமும் ஸந்த்யை ஆயிற்று, இக்காலத்தில் உக்ரதேவதைகள் ஸஞ்சரிக்கும் மன்றுமுதலான ஸ்தலங்களில் நில்லாதே உனக்கு அந்திக்காப்பிடும்படி வரவேணும்" என்று பலகாலுமநுவர்த்தித்தழைத்துக் காப்பிட்ட ப்ரகாரத்தை, தாமுமநுபவிக்க வாசைப்பட்டு, (உ) உகந்தருளின நிலமான திருவெள்ளறையில் அவன்நிற்கிற நிலையிலே அவனைக்குறித்து, யசோதைப்பிராட்டி யுடைய ஸ்நேஹத்தையும் பரிவையுமுடையராய்க்கொண்டு, அவள்பேசினாற்போலேபேசி அவனுக்குத் திருவந்திக்காப்பிடுகையாகிற ரஸத்தை யநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

மூ.—இந்திரனோடுபிரமனீசனிமையவரெல்லாம்
மந்திரமாமலர்கொண்டுமறைந்துவராய்வந்துநின்றார்
சந்திரன்மாளிகைசேருஞ்சதுரர்கள்வெள்ளறைநின்றாய்
அந்தியம்போதிதுவாகுமழகனேகாப்பிடவாராய்.

ப-ரை.—சந்திரன் - சந்த்ரனானவன், மாளிகை - மாளிகைகளிலே, சேரும்- சேரும்படியிருப்பதாய், சதுரர்கள்-உன்மென்மைத்தன்மை முதலியவற்றையறிந்து மங்களாசாஸநம்பண்ணிநோக்கவல்ல ஸமர்த்தரானவர்கள்வர்த்திக்கிற, வெள்ளறை-திருவெள்ளறையிலே, நின்றாய்-நின்றருளினவனே, இந்திரனோடு-மூவுலகுக்கும்காவலனாகிய இந்த்ரனோடே, பிரமன்-பதினான்குலகங்களையும்படைத்த நான்முகனும், ஈசன் - அழித்தற்றொழிலுக்குரியருத்ரனும், இமையவரெல்லாம்- மற்றுமுண்டான தேவர்களெல்லாரும், மந்திரம் - புருஷஸூக்தம்முதலிய, மா - சிறந்த, மலர் - மலரை, கொண்டு—, மறைந்து - பிறர்கண்ணுக்குத் தெரியாதபடி, உவரா-தூரத்திலும்கிட்டத்திலுமின்றிக்கே நடுவிடத்தராய்க்கொண்டு, வந்துநின்றார்-வந்திராநின்றார்கள்; அழகனே-எப்பொழுதும் காப்பிடவேண்டும்படியான அழகையுடையவனே, இது—, அந்தியம்போதாகும்-மாலைப்பொழுதாயிருக்குமென்ன; ஆகில் என்செய்யவேணுமென்ன; காப்பிடவாராய்-உன்னுடைய இயற்கையான தேஜஸ்ஸுக்கும் ஒப்பனையழகுக்கும் ஒருகுறைவாராதபடியாகத் திருவந்திக்காப்பிட நீ வரவேணும்.

வ்யா.—முதற்பாட்டு. (இந்திரனித்யாதி) (௩) த்ரைலோக்ய பாலகனான இந்த்ரனோடே, (௪) சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவானப்ர

(க) த்ர்ஷ்டிதோஷம் - கண்ணெச்சில். (உ) உகந்தருளினநிலம் - திவ்யதேசம். (௩) த்ரைலோக்யபாலகன் - மூவுலகக்காவலன். (௪) சதுர்த்தசபுவநம் - பதினான்குலகம்.

ஹ்மாவும், (க) ஜகத்ஸம்ஹாரகர்த்தாவான ருத்ரனும், இவர்களுக்கு பரதந்த்ரராய் வர்த்திக்கும் மற்றுமுண்டான தேவர்களுமெல்லாம். இத்தால் - அதிகாரிபுருஷர்களோடு அவர்களுக்குக் குடிமக்களாய் வர்த்திக்குமவர்களோடு வாசியற எல்லாருமென்றபடி. ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள் மூவரையும்சொல்லுகிறவிடத்தில், இந்த்ரனை முந்துறச் சொல்லிற்று - அவனுபாதி ப்ரஹ்ம ருத்ரர்களுக்கும் அதிகரித்த கார்யத்தால்வந்த ஏற்றமித்தனையொழிய, (உ)ஈச்வரத்வகந்தமில்லை யென்று தோற்றுகைக்காக. இவர்கள்தான் தொட்டில் பருவமே பிடித்து இவ்விஷயத்திலே(ரு)கிஞ்சித்கரித்திறேபோருவது. ஆகையாலே, * எழிலுடைக்கிண்கிணி தந்துவனுய்நின்றவிந்த்ரனோடே, * வண்ணச்சிறுத்தொட்டில் வரவிட்ட ப்ரஹ்மாவும், * உடையார் கநமணிவரவிட்ட ருத்ரனும், * வலம்புரி, சேவடிக்கிண்கிணி முதலானவை வரவிட்ட மற்றுமுண்டான தேவர்களுமெல்லாமென்கை.

(மந்திரமாமலர்கொண்டு) திருமந்த்ரபுஷ்பங்கொண்டு. மந்திரமென்கிறது - *மறைகொண்டமந்திரமான ஸ்ரீபுருஷஸூக்தாதிகளை. மாமலரென்கிறது - ச்லாக்யமான கல்பகபுஷ்பாதிகளை. (மறைந்துவராய்வந்துநின்றார்) "கட்கரியபிரமன்சிவனிந்திரன்" என்கிறபடியே இங்குள்ளாருடைய கண்ணுக்கு விஷயமாகாதவர்களாகையாலே பிறர்க்குத் தெரியாதபடியாக நீ யருள்பாடிட்டவாறே வரும்படி உனக்கு அதூரவிப்ரக்ர்ஷ்டராய்வந்து நின்றார்கள். "மறைந்துவரா" என்று பாடமானாலும், உவரா - அதூரவிப்ரக்ர்ஷ்டராக வென்று பொருள்.

(சந்திரனித்யாதி) சந்த்ரபதத்தளவும்செல்ல ஓங்கியிருக்கையாலே, சந்த்ரன், மாளிகைகளிலேவந்து சேரும்படியிருப்பதாய், உன் ஸௌகுமார்யாதிகளறிந்து மங்களாசாஸநம்பண்ணி நோக்கவல்ல ஸமர்த்தரானவர்கள் வர்த்திக்கிற திருவெள்ளறையிலே நின்றருளினவனே. (அந்தியம்போதிதுவாகும்) இது ஸந்த்யாகாலமாயிருக்கும். விளையாட்டுப்பராக்காலே அஸ்தமித்ததும் அறிகிறாயில்லையீ!. (அழகனே) த்ர்ஷ்டிதோஷபயத்தாலே அநவரதம் காப்பிடவேண்டும்படியான அழகையுடையவனே. அஸ்தமித்ததறியாதாற்போலே உன்னழகின்வாசியும் அறிகிறாயில்லையீ!. (காப்பிடவாராய்)உன்னுடைய ஸ்வாபாவிகமான ஸமுதாயசோபைக்கும் ஒப்பனையழகுக்கும் ஒரு குறைவாராதபடியாகத் திருவந்திக்காப்பிட வாராய். (க)

மூ.—கன்றுகளில்லம்புகுந்துகதறுகின்றபசுவெல்லாம்
நின்றொழிந்தேனுன்னைக்கூவிநேசமேலொன்றுமிலாதாய்
மன்றினில்லேலந்திப்போதுமதிட்டிருவெள்ளறைநின்றாய்
நன்றுகண்டாயென்றன்சொல்லுநானுன்னைக்காப்பிடவாராய்.

(க) ஜகத்ஸம்ஹாரம்-உலகமழிக்கை. (உ) ஈச்வரத்வகந்தம்-ஸ்வாமியாயிருக்கைக்குரியதன்மைசற்றும். (ரு) கிஞ்சித்கரிக்கை - கைங்கர்யம் பண்ணுகை.

ப - ரை.—பசுவெல்லாம் - பசுக்களெல்லாம், கன்றுகளில்லம் - கன்றுகள் நிற்கிறவிடத்திலே, புகுந்து - வந்து புகுந்து, கதறுகின்ற - கன்றுகள்குடித்தல் கறத்தல்செய்யப்பெறுமல் முலைக்கடுப்பாலே கதறுநின்றன; அவற்றைப்போல, உன்னை—, கூவி - நான் அழைத்து, நின்றொழிந்தேன் - நின்றுவிட்டேன்; நேசம் - என்பக்கல் ஸ்நேஹம், ஒன்றும் - அத்யல்பமும், இலாதாய் - இல்லாதவனாய், அந்திப்போது - அந்திப்பொழுதில், மன்றில் - க்ஷுத்ரதேவதைகள் நிற்குமிடமான நாற்சந்தியிலே, நில்லேல் - நில்லாதேகொள்ளாய்; மதிள் - உனக்கரணை மதிலையுடைய, திருவெள்ளறை - திருவெள்ளறையிலே, நின்றாய் - நின்றருளினவனே, என்றன் - என்னுடைய, சொல்லு - சொல்வழிநடக்கை, நன்று கண்டாய் - உனக்கு நன்மையைத்தாராநிற்கும் கிடாயென்ன; ஆகில் என்செய்ய வேணுமென்ன; நான் - உன்பக்கல் அன்புடையளாய் வாழ்த்துகையைத் தொழிலாக வுடையநான், உன்னை - எட்பொழுதும் காப்பிடவேண்டும்படியான அழகுடைய உன்னை, காப்பிடவாராய் - காப்பிடும்படி வரவேணும்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கன்றித்யாதி) பசுக்களானவையெல்லாம் கன்றுகள்நிற்கிறவிடத்திலேவந்து புகுந்து, கன்றுகளைக் குடிக்கவிடுதல், கறக்குதல் செய்வாரில்லாததுகொண்டு முலைக்கடுப்பாலே கதறுநின்றன. அதவா, "கதறுகின்ற" என்றத்தை, கீழும்மேலும் அந்வயித்து - கன்றுகளெல்லாம் தொழுவத்தில் தந்தாம்நிலைகளிலே புகுந்துநின்று முலையுண்ணப்பெறுமையாலே நாக்கொட்டிக்கதறுநின்றன; பசுக்களெல்லாம்புறம்பேநின்று, கன்றுகள் குடித்தல்கறத்தல் செய்யப்பெறுமல் முலைக்கடுப்பாலே கதறுநின்றன வென்னவுமாம். அவை அப்படிகதறவேண்டுகிறது - முன்போலே நீ கன்றுகளைவிட்டுக் கறவாமையன்றோ, அதுசெய்யாதொழிவானென்னென்ன (நின்றொழிந்தேனுன்னைக்கூவி) நான் உன்னையழைத்துநின்றுவிட்டேன்; பின்னை அங்கு ஆரதுசெய்வார்?. அவை கன்றைநினைத்துக் கதறுகிறாற்போலேயன்றோ, நானும்உன்னையழைத்துநின்றுவிட்டபடி. (நேசமேலொன்றுமிலாதாய்)என்பக்கல்ஸ்நேஹமாகில் ஒன்றுமில்லாதவனே. கதறுகிற தாய்களளவில் கன்றுகளுக்குண்டான ஸ்நேஹம், என்பக்கலுனக்குண்டாகவேண்டாவோ; அது ஏகதேசமுமில்லாதவனாயிருந்தாயே. நான் உன்பக்கல் ஸ்நேஹமற்றிருக்கிறேனோ, விளையாடி வருகைக்காக நின்றேனத்தனையன்றோவென்ன (மன்றினில்லேலந்திப்போது) ஸந்த்யா காலத்திலே க்ஷுத்ரதேவதைகள் நிற்குமிடமான நாற்சந்தியிலே நில்லாதே கொள்ளாய். விளையாடுகைக்கு ஸ்தலமும் காலமுமல்லகாணிது. (மதிள் திருவெள்ளறைநின்றாய்) மங்களாசாஸநபரர்க்கு அஞ்சவேண்டாதபடி உனக்கு அரணாகப்போரும்படியான மதிளையுடைய திருவெள்ளறையிலே நின்றருளினவனே. புறம்பே புறப்பட்டு (க) வ்யாபரியாதே அவ்வரணுக்குள்ளே நின்றாயாகில் எனக்கிப்படி வயிறு

(க) வ்யாபரியாதே - திரியாதே.

பிடிக்கவேண்டாவே. (நன்றுகண்டா யென்றன்சொலலு) இப்படி சொன்னவிடத்திலும் தன்சொல் அவன் கைக்கொள்ளாமையாலே, என்சொலவு நன்றுகிடாய், அத்தைக் கைக்கொள் ளென்கிறாள்; "தாயர்வாய்ச்சொல் கருமங்கண்டாய்" என்றாற்போலே. (நானுன்னைக்காப்பிடவாராய்)உன்பக்கல்ஸ்நேஹயுக்தையாய் மங்களாசாஸநபரையாயிருக்கிறநான், அநவரதம்காப்பிடவேண்டும்படியான ஸௌகுமார்யங்களையுடைய வுன்னைக் காப்பிடும்படியாகநீவாராய். (௨)

மூ.—செப்போதுமென்முலையார்கள்சிறுசோறுமில்லுஞ்சிதைத்திட்
டப்போதுநானுரப்பப்போயடிசிலுமுண்டிலேயாள்வாய்
முப்போதும்வானவரேத்துமுனிவர்கள்வெள்ளறைநின்றாய்
இப்போதுநானொன்றுஞ்செய்யேனெம்பிரான்காப்பிடவாராய்.

ப-ரை.—முப்போதும் - காலை, உச்சி, மாலையாகிய மூன்றுகாலங்களிலும், வானவர் - தேவர்களாலே, ஏத்தும் - ஸ்தோத்ரம்பண்ணப் படுவானாய், முநிவர்கள் - உன்னையெப்போதும் சிந்தியாநிற்குமவர்கள் பொருந்திவாழ்கின்ற, வெள்ளறை - திருவெள்ளறையிலே, நின்றாய் - நிற்குமவனாய், எம்பிரான் - எனக்கு எல்லாப்படியாலும் உபகாரகனானவனாய், ஆள்வாய் - என்னையாளப்பிறந்தவனே, செப்பு - பொற்கிண்ணமென்று, ஓதும் - சொல்லத்தக்க நிலைமையையுடைத்தாய், மெல் - ம்ருதுவாயிருந்துள்ள, முலையார்கள் - முலையையுடையவர்களுடைய, சிறுசோறும் - விளையாட்டுக்காக மணற்கொழித்துச் சமைத்தசிறு சோற்றையும், சிற்றில்லும் - கொட்டகத்தையும், சிதைத்திட்டு - அழித்துப் பொகட்டதுமன்றி, அப்போது - அந்தக்காலத்திலே, நான்—, உரப்ப - கோபிக்க, போய் - என்முன்நிற்கவஞ்சிப்போய், அடிசிலும் - உனக்கினிதாம்படி சமைத்த அடிசிலையும், உண்டிலை - * வண்ணச்செஞ்சிறுகை விரலனைத்தும் வாரிவாய்க்கொண்டிலையாகிலும், இப்போது—, நான்—, ஒன்றும் - உன்னைப்பிடித்தல் அடித்தல் ஒன்றும், செய்யேன்—; காப்பிடவாராய் - உனக்கு நான் காப்பிடும்படி வந்தருளவேணுமென்கிறாள்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (செப்பித்யாதி) செப்பென்றுசொல்லும்படியான ஸந்நிவேசத்தையுடைத்தாய், அதுபோலே கடிநமாயிருக்கையன்றிக்கே ம்ருதுவாயிருக்கும் முலையையுடையவர்களுடைய. (சிறுசோறுமில்லும்சிதைத்திட்டு) லீலார்த்தமாக மணற்கொழித்துச்சமைத்த சிறுசோற்றையும் கொட்டகத்தையு மழித்திட்டு. (அப்போதுநானுரப்பப்போய்)"பெண்களோடே கைப்பிணக்கிட்டுவிளையாடித்திரிய வேண்டாகாண்" என்று அப்போது நான்கோபித்தவாறே, நான் பிடிக்குதல்அடிக்குதல் செய்யப்போகிறேன் என்று என்முன் நிற்கவஞ்சிப்போய். (அடிசிலுமுண்டிலை) உனக்கினிதாகச் சமைத்துவைத்த அடிசிலுமமுதுசெய்திலை. (ஆள்வாய்) என்னை யாளப்பிறந்தவனே. இப்படியோ நீயென்னையாளத்தேடுகிறது. இவளையாளுகையாவது - இவள் சொல்வழிவந்து, இவள்

கொடுத்தவற்றையும் விநியோகம்கொண்டு, (க) கோற்கீழ்க்கன்றாய் நடக்கையிறே. (முப்போதுமித்யாதி) "ஆதிநடுவந்திவாய்" என்கிற படியே, த்ரிஸந்தயமும் - ப்ரஹ்மபாவனைதலையெடுத்தபோதெல்லாம், தேவர்களாலே, ஸ்துதிக்கப்படுமவனாய், மங்களாசாஸந பரராய்க்கொண்டு உன்னுடைய ஸம்ர்த்தியையே எப்போதும் மநநம் பண்ணாநிற்குமவர்களுடைய திருவெள்ளறையிலே நிற்குமவனே. (இப்போது நானொன்றும்செய்யேன்) அப்போது ஹிதரூபமாகவுன்னைக்கோபித்து வார்த்தைசொன்னேனாகிலும் இப்போது நானுன்னை ஒன்றும் செய்யேன். (எம்பிரான் காப்பிடவாராய்) என்னுடைய நாதனே,உனக்கு நான் காப்பிடும்படிவாராய். (ங)

மூ.—கண்ணின்மணற்கொடுதூவிக்காலினாற்பாய்ந்தனையென்றென்
றெண்ணரும்பிள்ளைகள்வந்திட்டிவரால்முறைப்படுகின்றார்
கண்ணனேவெள்ளறைநின்றாய்கண்டாரோடேதீமைசெய்வா
ய், வண்ணமேவேலையதொப்பாய்வள்ளலேகாப்பிடவாராய்.

ப-ரை.—கண்ணனே - எல்லார்க்கும் கிட்டவெளியனாய், வெள்ளறை நின்றாய் - திருவெள்ளறையிலே நின்றருளினவனாய், கண்டாரோடே - கண்டவர்களோடெல்லாம், தீமை - தீம்புகளை, செய்வாய் - செய்யுமவனாய், வண்ணம் - நிறத்தில், வேலையது - ஸமுத்ரத்தை, ஒப்பாய் - ஒக்குமவனாய், வள்ளலே - இவ்வழகை யெனக்கு முற்றூட்டாக அநுபவிக்கும்படி பண்ணினவனே, எண்ணரும்பிள்ளைகள் - இத்தனைபேரென்று எண்ணிச்சொல்லி முடியாத பெண்பிள்ளைகளான, இவர் - இவர்கள், வந்திட்டு - உன்னாலீடுபட்டமை தோற்ற என்கண் காணவந்து, கண்ணில் - எங்கள் கண்களிலே, மணல் - மணலை, கொடு - கொண்டுவந்து, தூவி—, காலினால் - காலாலே, பாய்ந்தனை - பாய்ந்தாய், என்றென்று - என்று தனித்தனியேசொல்லி, முறைப்படுகின்றார் - முறையிடுகிறார்கள்; ஆதலால் அவர்களிடத்திற் போகாமல், காப்பிடவாராய் - காப்பிடும்படி வந்தருளவேணுமென்கிறாள்.

வ்ய.—நாலாம்பாட்டு. (கண்ணினித்யாதி)கண்விழித்து விளையாடவொண்ணாதபடி கண்ணிலே மணலைக்கொடுவந்துதூவி. "எங்கள்கண்ணிலே மணலைத்தூவுவானென்" என்றவாறே, கோபித்துக் காலாலே யுதைத்தாயென்று தனித்தனியே சொல்லி. ஒருவரிருவரன்றிக்கே, அஸங்க்யாதரான பிள்ளைகள் உன்னால் (உ) ஈடுபட்டமை தோற்றவந்து இவர்கள் முறைப்படாநின்றபடி பாராய். (கண்ணனே வெள்ளறைநின்றாய்) எல்லார்க்கும் ஸுலபனாய்க் கொண்டு திருவெள்ளறையிலே நின்றருளினவனே. (கண்டாரோடே தீமை செய்வாய்) உன்னோடு (ங) ஸம்பந்தமும் ஸ்நேஹமுமுண்டாய் நீ செய்தது பொறுக்கத்தக்கவர்க ளன்றிக்கே, கண்டவர்களோ டெல்

(க) கோற்கீழ்க்கன்று - கோலுக்கமைந்து நடக்கும்கன்று ; பவ்யதையைச் சொன்னபடி. (உ) ஈடுபட்டமை - வருந்தினமை. (ங) ஸம்பந்தம் - உறவு.

லாம் தீம்புகளைச்செய்யுமவனே. இப்படி தீமைசெய்யலாகாதுகாண். (வண்ணமேயித்யாதி) நிறமானது ஸமுத்ரத்தோ டொக்குமவனே. வண்ணம் - நிறம். ஏகாரம் - அவ்யயம். வேலை - ஸமுத்ரம். அது வென்றது - வேலையாகிற வதுவென்றபடி. இத்தால் - தீம்புசெய்தாலும் விடவொண்ணாத வடிவழகையுடையவனென்கை. (வள்ளலே) இவ்வடிவழகை யெனக்கு உபகரித்தவனே காப்பிடவாராய். (ச)

மூ.—பல்லாயிரவரிவ்வூரிற்பிள்ளைகடீமைகள்செய்வார்
எல்லாமுன்மேலன்றிப்போகாதெம்பிரானீயிங்கேவாராய்
நல்லார்கள்வெள்ளறைநின்றாய்ஞானச்சுடரேயுன்மேனி
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச்சொப்படக்காப்பிடவாராய்.

ப-ரை.—நல்லார்கள் - உன்னையன்புடன்வாழ்த்துகிறவர்கள் பொருந்திவாழ்கின்ற, வெள்ளறை - திருவெள்ளறையிலே, நின்றாய் - நின்றருளினவனாய், ஞானச்சுடரே - அறிவால்விளங்குமவனாய், எம்பிரான் - என்னையனுனவனே, இவ்வூரில் - இவ்விடைச்சேரியில், தீமைகள்செய்வார் - தீம்புகளைச்செய்யுமவரான, பிள்ளைகள் - சிறுவர்கள், பல்லாயிரவர் - அநேகமாயிரம்பேர்களிருக்கிறார்கள்; எல்லாம் - அவர்கள்செய்யும் தீம்புகளெல்லாம், உன்மேலன்றி-உன்மேலேயேறுமதொழிய, போகாது - புறம்புபோகாது ; ஆதலால், நீ—, இங்கேவாராய் - நல்லவர்கள்வர்த்திக்கிற விங்கேவந்தருளவேணுமென்ன; நீயழைக்கிறதென்செய்யவென்ன; உன் - உன்னுடைய, மேனி - திருமேனியை, சொல்-சொற்கள், ஆர - நிறையும்படி, நின்றேத்தி - நின்றுஸ்துதித்து, வாழ்த்தி - மங்களாசாஸநம்பண்ணி, சொப்பட - நன்றாக, காப்பிட - நான்காப்பிடும்படி, வாராய்-வரவேணுமென்கிறாள்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பல்லாயிரவரித்யாதி) (க) பஞ்சலக்ஷம் குடியானவிவ்வூரில் தீமைசெய்யுமவர்களான பிள்ளைகள் அநேகமாயிரம் பேரிறே. (எல்லாமுன்மேலன்றிப்போகாது) தந்தாம் செய்த தீமைகளை நீசெய்தாயென்று உன்மேலே வையாநின்றார்கள். ஆகையால், அவர்கள்செய்த தீமைகளெல்லாம் உன்மேலே ஏறுமதொழிய புறம்புபோகாது. (எம்பிரான் நீயிங்கேவாராய்) என்னையனே, உன்மேலே தோஷமேறிடுகிறவரிடத்தில்நின்றும், அவர்கள்சொலவும் நினைவும் பொறாதார் வர்த்திக்கிற விங்கேவாராய். (நல்லார்கள் வெள்ளறைநின்றாய்) உன்பக்கல் தோஷகந்தமுள்ளவர்களை ஸஹியாதே உனக்கு ஸ்நேஹிகளாய் மங்களாசாஸநபரராயிருக்கிறவர்கள் வர்த்திக்கிற திருவெள்ளறையிலே நின்றருளினவனே. (ஞானச்சுடரே) (உ) ஜ்ஞானப்ரபையையுடையவனே. (உன்மேனி) அந்தஜ்ஞானத்துக்கும் (ங) ஜ்ஞாநாச்ரயமான ஸ்வரூபத்துக்கும் ப்ரகாசகமான உன்னுடைய திருமேனியை. (சொல்லார-நின்றேத்தி) சொல்நிறையும்படி நின்று ஸ்துதித்து. ஸர்வசப்தவாச்யமான விஷ

(க) பஞ்சலக்ஷம் - அஞ்சுலக்ஷம். (உ) ஜ்ஞானப்ரபை - அறிவின்சுடர். (ங) ஜ்ஞாநாச்ரயம் - அறிவுக்கிடம்.

யத்திலிறே சொல்லாருவது. "கவிக்கு நிறைபொருளாய் நின்றான்" என்னக்கடவதிறே. (வாழ்த்தி) மங்களாசாஸநம் பண்ணி. (சொப்படக்காப்பிடவாராய்) நன்றாக நான்காப்பிடவாராய். சொப்பட - நன்றாகவென்றபடி. (ரு)

மூ.—கஞ்சன்கறுக்கொண்டுநின்மேற்கருநிறச்செம்மயிர்ப்பேயை
வஞ்சிப்பதற்குவிடுத்தானென்பதோர்வார்த்தையுமுண்டு
மஞ்சுதவழ்மணிமாடமதிட்டிருவெள்ளறைநின்றாய்
அஞ்சுவனீயங்குநிற்கவழகனேகாப்பிடவாராய்.

ப-ரை.—மஞ்சு - மேகங்களானவை, தவழ் - தவழும்படியான வுயர்த்தியையும், மணி - நவமணிகளழுத்திச்சமைந்த, மாடம் - மாடங்களையும், மதிள்- அரண்செய்யத்தக்க மதிளையுமுடைத்தான, திருவெள்ளறைநின்றாய் - திருவெள்ளறையில் நின்றருளினவனாய், கஞ்சன் - கம்ஸன், நின்மேல் - உன்னளவில், கறுக்கொண்டு - மிக்கசீற்றத்தை யுடையனாய்க்கொண்டு, கருநிறம் - கறுத்தநிறத்தையும், செம் - செக்கர்வானம்போலேசிவந்த, மயிர் - மயிரையுமுடையளான, பேயை - பேய்ச்சியானபூதநையை, வஞ்சிப்பதற்கு - வஞ்சனையினாலே உன்னை முடிப்பதற்கு, விடுத்தான் - அனுப்பினான், என்பது - என்றுசெல்லுமதான, ஓர்- ஒரு, வார்த்தை—, உண்டு - நீபிறந்தபோதே கேட்டதுண்டு; ஆதலால், நீ—, அங்கு - "உனக்கென்ன தீங்குவருமோ" என்று அஞ்சத்தக்கவவ்விடத்திலே, நிற்க - நிற்கைக்கு, அஞ்சுவன் - அஞ்சாநின்றேன்; அழகனே - ஒப்பற்றஅழகையுடையவனே, காப்பிடவாராய் - உன்னழகுக்குக்கண்ணெச்சில் வாராதபடியாகக் காப்பிடும்படி வந்தருளவேணுமென்கிறாள்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) அசரீரிவாக்யம் கேட்டவன்றுதொடங்கி, (க) அத்யந்தம் (உ) வைரஹ்ரதயனாய் அதிசங்கையாலே * மக்களறுவரைக்கல்லிடைமோதி, ஸப்தமகர்ப்பம் நழுவப்போய்த்தென்றுவிட்டு, "அஷ்டமகர்ப்பமான விதெப்போதோபிறப்பது" என்று ஹிம்ஸிப்பதாகப் பார்த்துக்கொண்டிராநிற்கச்செய்தேயும் தாயும் தமப்பனுமொழிய அசலறியாதபடி இருளிலே வந்துபிறந்து, அவ்விருளிலே அங்குநின்றும் திருவாய்ப்பாடியிலே போந்தவித்தை, துர்க்காவசநாதிகளாலே அறிந்து, கம்ஸன் உன்விஷயத்திலே மிகவும் சீற்றத்தையுடையனாய்க்கொண்டு. கறுப்பென்கிறவிது "கறு" என்று குறைந்துகிடக்கிறது. கறுப்பு - சீற்றம். (கருநிறமித்யாதி) இருள்தானொருவடிவு கொண்டாற்போலே கறுத்தநிறத்தையும் அக்நிஜ்வாலைபோலே சிவந்த தலைமயிரையும் உடையளாயிருக்கிற பேய்ச்சியை, நேர்கொடுநேர் சென்றால் அவனை யுன்னால் (ங) ஸாதிக்கப்போகாது வஞ்சநத்தால்சென்று ஸாதியென்றுவிட்டான் என்பதொருவார்த்தையு முண்டுகாண் பிற

(க) அத்யந்தம் - மிகவும். (உ) வைரஹ்ரதயன் - வைரமுள்ள மனதுடையவன். (ங) ஸாதிக்கப்போகாது - வெல்லப்போகாது.

க்கிறபோது. இவ்வார்த்தைதான், ஸ்ரீநந்தகோபர் வஸுதேவர்பக்க லிலேகேட்டுவந்து சொன்னாராதல்; ஸ்ரீமதுரையில்* பாவைவழக்க மிங்கேவந்துபிறந்ததாதல்.

(மஞ்சித்யாதி) மேகங்களானவை தவழும்படியான உயர்த்தியை யுடைத்தாய், மணிமயமான மாடங்களையும் அரணாகப் போரும்படியான மதிளையுமுடைததான திருவெள்ளறையிலே நிலையாய் நின்றவனே. (அஞ்சுவன்நீயங்குநிற்க) "பூதனைவந்து வஞ்சநத்தால் உன்னை நலியத்தேடினதும் அதின்வசமா யன்றிக்கே கம்ஸ ப்ரேரிதை யாகையாலே" என்று வார்த்தை பிறக்கையால் "அவன் இன்னம் ஆரைவரவிடும், எது செய்யுமென்று தெரியாது" என்று பயஸ்தாநமான அவ்விடத்தில் நீநிற்கிறவிதுக்கு நான் அஞ்சாநின்றேன். (அழகனேகாப்பிடவாராய்) ஆனபின்பு அங்குநில்லாதே அதிலோகமான அழகையுடையவனே, உன்னழகுக்கு த்ர்ஷ்டிதோஷம் வாராதபடியாகக் காப்பிடவாராய். (௬)

மூ.—கள்ளச்சகடுமருதுங்கலக்கழியவுதைசெய்த
பிள்ளையரசேநீபேயைப்பிடித்துமுலையுண்டபின்னை
உள்ளவாறொன்றுமறியேனொளியுடைவெள்ளறைநின்றாய்
பள்ளிகொள்போதிதுவாகும்பரமனேகாப்பிடவாராய்.

ப-ரை.—ஒளியுடை - மாடங்களும் மதிள்களுமானஅழகையுடைய, வெள்ளறை - திருவெள்ளறையிலே, நின்றாய் - நின்றருளினவனாய், பரமனே - அழகு முதலியவற்றாலுனக்குமேற்பட்டாரில்லாதவனாய், கள்ளம்-வஞ்சநத்தையுடைய, சகடும் - சகடத்தையும், மருதும் - யமளார்ஜுநங்களையும், கலக்கழிய - கட்டுக்குலைந்து உருமாய்ந்துபோம்படி, உதைசெய்த - திருவடிகளாலும் திருத்துடை திருத்தோள்களாலும் தள்ளிப்பொகட்ட, பிள்ளையரசே - பிள்ளைத்தனத்தில் புரையற்றுநின்றபெருமையுடையவனே, நீ—, பேயை - பேயைத் தாயாகநினைத்து, முலை - அவள்முலையை, பிடித்து—, உண்டபின்னை - சுவைத்தபின்பு, உள்ளவாறு - உனக்குண்டாம்படி, ஒன்றும்—, அறியேன் - அறிகிறிலேன்; இது-இக்காலமோ, பள்ளிகொள் - திருவணையிலே சாய்ந்தருளத்தக்க, போதாகும்-காலமாயிராநின்றது; ஆகையால், காப்பிடவாராய் - உனக்கொரு குறைவுவாராமல் காப்பிடும்படி வந்தருளவேணும்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (கள்ளமித்யாதி) கண்வளர்ந் தருளச்செய்தே உன்னை நலிவதாக அஸுராவிஷ்டமாய்வந்த க்ர்த்ரிமசகடத்தையும், தவழ்ந்துபோகாநிற்கச் செய்தே உன்னைநலிவதாக அஸுராவிஷ்டமாய்நின்ற யமளார்ஜுநங்களையும் தன்னுடைய ரூபம் கட்டுக்குலைந்து சிதிலமாய் விழும்படியாக, "காலாற்சகடம் பாய்ந்தான்" என்றும், "ஊருகரத்திறனுடுமுந்திய" என்றும் சொல்லுகிறபடியே திருவடிகளாலும், திருத்துடை திருத்தோள்களாலும்

* தமிழர் உலகவழக்கத்தை "பரவைவழக்கு" என்பர்.

தள்ளிப்பொகட்ட. (பிள்ளையரசே) இந்த (க) அதிப்ரவ்ர்த்திகளைச் செய்யாநிற்கச்செய்தேயும் பிள்ளைத்தனத்தில் புரையற்றிருந்தபெருமையை யுடையவனே. (நீபேயைப்பிடித்து முலையுண்டபின்னை) நீ பேயைத்தாயாக, பிடித்து முலையுண்டபின்பு. (உள்ளவாறொன்றுமறியேன்) உள்ளபடி யொன்றும் அறிகிறேனில்லை. அதாவது-இன்னம் அப்படிக்கொத்தவற்றைச் செய்வுதியாகில், "ஒருநாளல்ல ஒருநாள் அபாயம்விளையும்"என்று பயப்படாநின்றேனென்கை. (ஒளியுடையித்யாதி) மாடங்களும் மதிள்களுமான அழகையுடைய திருவெள்ளறையிலேநின்றருளினவனே. (பள்ளிகொள்போதிதுவாகும்) நீகண்வளர்ந்தருளுகிறபோதாய்த்து இப்போது. ஸந்த்யாகாலத்தளவன்றிக்கே, மாலைவைகிற்றுக் காணென்றபடி. (பரமனே காப்பிடவாராய்) ஸௌந்தர்யாதிகளால் உனக்குமேலிட்டா ரில்லாதவனே, உனக்கொரு குறைவாராதபடியாக நான்காப்பிடவாராய். (எ)

மூ.—இன்பமதனையுயர்த்தாயிமையவர்க்கென்றுமரியாய்
கும்பக்களிறட்டகோவேகொடுங்கஞ்சனெஞ்சினிற்கூற்றே
செம்பொன்மதிள்வெள்ளறையாய்செல்வத்தினால்வளர்பிள்ளா
கம்பக்கபாலிகாணங்குக்கடிதோடிக்காப்பிடவாராய். [ய்

ப-ரை.—இன்பமதனை-உன்னுடைய அவதாரகுணத்துக்குத்தக்க விளையாட்டநுபவிக்கையால்வந்த ஆநந்தத்தை, உயர்த்தாய் - எனக்கு மேன்மேலனப்பெருகப்பண்ணினவனாய், இமையவர்க்கு - தங்கள் அறிவும் வல்லமையும்கொண்டு உன்னைப்பெறத்தேடுகிற தேவர்களுக்கு, என்றும் - எக்காலத்திலும், அரியாய் - பெறற்கரிய னனவனாய், கும்பம் - உயர்ந்த மஸ்தகத்தையுடைய, களிறு - குவலயாபீடத்தை, அட்ட - கொன்ற, கோவே - அரசனானவனாய், கொடு - உன்னளவில் எப்பொழுதும் தீங்குசெய்யத்தேடுகிற, கஞ்சன்-கம்ஸனுடைய, நெஞ்சினில் - மநஸ்ஸில், கூற்றே - யமனைப்போலே அச்சத்தையுண்டுபண்ணுமவனாய், செம்பொன் - ஆயிரத்தெட்டுமாற்றுள்ள ஜாம்பூநதமென்னும் சிவந்த பொன்போலே மிகவுமழகிய, மதிள் - மதிளையுடைய, வெள்ளறையாய் - திருவெள்ளறையை யிருப்பிடமாகவுடையனாய், செல்வத்தினால்-செல்வச்செருக்கோடே, வளர் - வளர்கிற, பிள்ளாய் - பிள்ளையானவனே, அங்கு - அவ்விடமானது, கம்பம் - கண்டவர்களுக்கு நடுக்கத்தைவிளைக்கத்தக்க, கபாலிகாண் - கபாலத்தையுடையளான துர்க்கைஸஞ்சரிக்கிறவிடங்காண்; ஆதலால் அந்தக்ஷுத்ரதேவதைகள் உலாவுகிறஅந்திப்பொழுதில் அவ்விடத்திலில்லாதே, காப்பிட - நான்காப்பிடும்படி, கடிது - சடக்கென, ஓடிவாராய்—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (இன்பமதனை யுயர்த்தாய்) உன்னுடைய அவதாரகுண சேஷ்டிதாநுபவத்தால் வந்த (உ) ஸுகத்தை எனக்கு மேன்மேலு மதிசயிப்பித்தவனே. "மாழுழைகையு மிவை கண்டவசோதை தொல்லையின்பத் திறுதிகண்டாள்" என்னாககடவ

(க) அதிப்ரவ்ர்த்தி - அளவுகடந்து நடக்கை. (உ) ஸுகம் - ஆநந்தம்.

திறே. (இமையவர்க்கென்றுமரியாய்)தந்தாமுடைய ஜ்ஞாநசக்திகள் கொண்டு உன்னைலபிக்கப்பார்க்கும் தேவர்களுக்கு என்று மொக்க (க) துஷ்ப்ராபனானவனே. இத்தால் - கீழ்ச்சொன்ன நீர்மைக்கு எதிர்த்தட்டான மேன்மையைச் சொல்லுகிறது. (கும்பக்களிறட்ட கோவே) "கும்பமிகுமதயானை" என்கிறபடியே (உ) மஸ்தகத்தினு டைய உயர்த்தியை யுடைத்தாயிருக்கும் குவலயாபீடத்தை நிரஸி த்த சௌர்யத்தையுடைய ராஜாவானவனே. (கொடுங்கஞ்சன்நெஞ் சினிற்கூற்றே)உன்பக்கல் என்றுமொக்க க்ரூரனாயிருக்கும் கம்ஸனு டைய மநஸ்ஸில் கூற்றம்போல் பயாவஹனாய்க்கொண்டு தோற்று மவனே.

(செம்பொன்மதிள் வெள்ளறையாய்) செம்பொன்போலே மிக வும் (ங) ஸ்ப்ர்ஹணீயமான மதிளையுடைய திருவெள்ளறையை வா ஸஸ்தாநமாக வுடையவனே. (செல்வத்தினால் வளர்பிள்ளாய்) சக்ரவர்த்தித்திருமகனைப்போலே பலர்க்கும் நியாம்யனாய் வளருகை யன்றிக்கே, ஒருவர் நியமநத்தில் அடங்காமல் வேண்டினபடி செய் துவேண்டினபடி புஜித்து, செல்வச்செருக்கோடே வளருகிறபிள்ளை யானவனே. (கம்பக்கபாலிகாணங்கு) கண்டவர்களுக்கு நடுக்கத் தை விளைக்கும் உக்ரமானமழுவையும் கபாலத்தையு முடையளான துர்க்கை ஸஞ்சரிக்கிற ஸ்தலங்காணவ்விடம். அன்றிக்கே, கபாலி யென்று-ருத்ரனைச்சொல்லிற்றாகவுமாம். (கடிதோடிக் காப்பிடவா ராய்) அந்த க்ஷுத்ர தேவதைகள் ஸஞ்சரிக்கிற ஸந்த்யா காலத்தில் அங்குநில்லாதே, இக்காலத்திலே நான் உனக்குக் காப்பிடும்படி சடக்கென வோடிவாராய். (அ)

மூ.—இருக்கொடுநீர்சங்கிற் கொண்டிட்டெழின்மறையோர் வந்து நின்றார், தருக்கேனம்பிசந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளா ய்சிலநாள், திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள் ளறைநின்றாய், உருக்காட்டுமந்திவிளக் கின்றொளிகொள்ள வேற்றுகேன் வாராய்.

ப-ரை.—தேசுடை - தேஜஸ்ஸையுடைத்தான, வெள்ளறை - திருவெள் ளறையிலே, நின்றாய் - நின்றருளினவனாய், நம்பி - நீம்பால் பூர்ணனானவனே, சிலநாள் - இன்னும் சிலநாளைக்கு, தாய்சொல்லு - தாய்வார்த்தையை, கொள் ளாய் - மேற்கொண்டு நடக்கவேணுமென்ன; ஆகில்நீயிப்பொழுது சொல்லுவ தென் னென்ன ; இருக்கொடு - புருஷஸூக்தம்முதலிய இருக்குக்களோடே கூட, நீர் - சுத்தஜலத்தை, சங்கில் - வலம்புரிசங்கத்திலே, கொண்டிட்டு-கொ ண்டு, எழில் - காப்பிடுகைக்குத்தக்க அழகையுடையரான, மறையோர் - ப்ராஹ் மணராானவர்கள், வந்துநின்றார் - வந்துநிற்கிறார்கள்; ஆதலால், சந்திநின்று-

(க) துஷ்ப்ராபன் - கிட்டவொண்ணாதவன். (உ) மஸ்தகம் - மண்டை. (ங) ஸ்ப்ர்ஹணீயம் - அழகு.

க்ஷுத்ரதேவதைகள் சேரும்படியான நாற்சந்தியிலேநின்று, தருக்கேல் - கர்வியாமல், நான் —, உன்னை —, திரு - அழகிய, காப்புச்சாத்த - ரக்ஷையிடும்பொருட்டு, உரு - உன்திருமேனியை, காட்டும் - காட்டத்தக்கதான, அந்திவிளக்கு - திருவந்திக்காப்பை, இன்று - இப்போது, ஒளிகொள்ள - ஒளியை யுடைத்தாம்படி, ஏற்றுகேன் - ஏற்றும்படி, வாராய் - வந்தருளவேணும்.

வ்யா —ஒன்பதாம்பாட்டு. (இருக்கித்யாதி) "வேதப்புநித விருக்கை" என்கிறபடியே புருஷஸூக்தாதிகளான ரிக்குக்களோடே கூட சுத்தஜலத்தையும் சங்கிலேகொண்டு, உனக்கு ரக்ஷையிடுகைக்காக விலக்ஷணரான ப்ராஹ்மணர்வந்துநின்றார்கள்; அவர்களைக்கொண்டு ரக்ஷைபண்ணுவித்துக் கொள்ளவேணுங்காண். உங்கள் ஐயரும் அப்படியன்றோ செய்வது வாராயென்ன; அதுகேளாமல் கர்வித்து ஸந்தியிலேநின்று விளையாடப்புக்கவாறே (தருக்கேல்நம்பி சந்திநின்று) என்கிறாள். தீம்பால் பூர்ணனானவனே, க்ஷுத்ரதேவதைகள் ஸந்நிதிபண்ணும் நாற்சந்தியிலேநின்று (க) கர்வியாதேகொள். அவர்கள் ரக்ஷையிடுகைக்காக வந்திலையாகிலும், அந்த ஸ்தலந்தன்னில் நில்லாதேவாராய். (தாய்சொல்லுக் கொள்ளாய் சிலநாள்) இன்னம் சிலநாள் (உ) மாத்ர்வசநபரிபாலநம் செய்யவேணுங்காண். (திருக்காப்புநானுன்னைச்சாத்த) நான் உன்னை அழகிதான ரக்ஷையிட. (தேசுடைவெள்ளறைநின்றாய்) விலக்ஷணரானவர்கள் வர்த்திக்கையால்வந்த தேஜஸ்ஸையுடைத்தான திருவெள்ளறையிலே நின்றருளினவனே. (உருக்காட்டுமந்திவிளக்கு) உன் திருமேனியைக்காட்டும் திருவந்திக்காப்பு. ஏற்றுவார் ஏற்றியெடுப்பது நிரதிசயபோக்யமான திருமேனிகாண்கை புருஷார்த்தமாகவிறே. ஆகையாலே உருக்காட்டுமென்கிறது. (இன்றொளிகொள்ள வேற்றுகேன்வாராய்) இப்போது ஒளியையுடைத்தாம்படி ஏற்றாநின்றேன், இத்தைக்கண்டருளும்படி கடுகவாராய். திருக்காப்பு நானுன்னைச்சாத்த - உருக்காட்டுமந்திவிளக்கின்றொளிகொள்ள வேற்றுகேன் வாராய் என்றந்வயம். (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலஞ்சொல்லி, தலைக்கட்டுகிறார்.

மூ.—போதமர்செல்வக்கொழுந்துபுணர்திருவெள்ளறையானை
மாதர்க்குயர்ந்தவசோதைமகன்றன்னைக்காப்பிட்டமாற்றம்
வேதப்பயன்கொள்ளவல்லவிட்டுசித்தன்சொன்னமாலை
பாதப்பயன்கொள்ளவல்லபத்தருள்ளார்வினைபோமே.

ப - ரை.—மாதர்க்கு - லோகத்திலுள்ள ஸ்த்ரீகளெல்லாரிலும், உயர்ந்த - மேற்பட்டாளான, அசோதை - யசோதைப்பிராட்டியானவள், போது-செந்

(க) கர்வியாதேகொள் - செருக்கடையாதே. (உ) மாத்ர்வசநம் - தாய் சொல்.

மரைமலரை, அமர் - இருப்பிடமாகவுடையளாய், செல்வம் - எல்லாச் செல்வங்களுக்கும் இருப்பிடமானவளாய், கொழுந்து - முதல்மணவாட்டியான பெரியபிராட்டியார், புணர் - நித்யஸம்ச்லேஷம்பண்ணும்படி, திருவெள்ளறையானை-திருவெள்ளறையிலேநிற்கிறவனுய், மகன்றன்னை - தனக்கு மகனுய்நின்றவனை, காப்பிட்ட - மகன்பக்கலிலே தனக்குண்டான அன்பெல்லாம்தோற்ற ரக்ஷையிட்ட, மாற்றம் - பாசுரங்களை, வேதப்பயன் - எம்பெருமானை வாழ்த்துகையே வேததாத்பர்யமென்று, கொள்ளவல்ல-கைக்கொள்ளவல்ல, விட்டுசித்தன்-பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, மாலை - மாலையான இத்திருமொழியில், பாதம் - பாட்டுக்கள்தோறும்பின்னடியிற்சொன்ன, பயன் - ப்ரயோஜநத்தை, கொள்ளவல்ல-அடைதற்குத்தக்க, பத்தருள்ளார் - பக்திமாங்களா யுள்ளவர்களுடைய, வினை - மங்களாசாஸந விரோதியாயுள்ளபாபம், போம் - தன்னடையேவிட்டுப்போம்.

வ்யா.—(போதமர்செல்வக்கொழுந்து)தனக்குப் பிறந்தகமான தாமரைப்பூவை யிருப்பிடமாக வுடையளாய், ஸ்ரீயாகையாலே (க) ஸகலஸம்பத்ஸமஷ்டிபூதையாய்,ப்ரதாநமஹிஷியா யிருந்துள்ள பெரியபிராட்டியார். "பங்கயச்செல்வி"என்றிறே திருநாமம். (புணர்திருவெள்ளறையானை) அவள் தாமரைப்பூவைமறந்து, "அகலகில்லேன்" என்கிறபடியே க்ஷணகாலமும் பிரியமாட்டாதே (உ) நித்யஸம்ச்லேஷம்பண்ணும்படியாய்க்கொண்டு திருவெள்ளறையிலே நிற்கிறவனை. "கோல் தேடியோடுங் கொழுந்தது" என்கிற படியே கொழுந்தானதொன்று, (ங) உபக்நத்தையொழிய தரிக்கமாட்டாதாற்போலே யாய்த்து, போதமர் செல்வக்கொழுந்தான விவளும் திருவெள்ளறையானுகிற உபக்நத்தோடே புணர்ந்தல்லது தரிக்கமாட்டாதபடி. உபக்நம், ஆதாரமாய் நிற்கும்மாத்ரமாய், அதின்மேலே படர்ந்தகொடியேப்ரதாநமா யிருக்குமாபோலே யாய்த்து, *செந்தாமரைக்கண்ணர் அப்ரதாநராய் இவளே அவ்வூருக்கு ப்ரதாநையா யிருக்கும்படி. (மாதர்க்குயர்ந்தவசோதை) "என்னநோன்பு நோற்றாள் கொலோ விவனைப்பெற்ற வயிறுடையாள்" என்றும், "எல்லாம்தெய்வநங்கை யசோதைபெற்றாள்" என்றும் சொல்லும்படி இவனைப் பிள்ளையாகப்பெற்று, இவனுடைய பாலசேஷ்டிதாதிகளான ஸகலரஸங்களு மநுபவிக்கப்பெற்றவ ளாகையாலே லோகத்தில் ஸ்த்ரீகளெல்லாரிலும் (ச) உத்க்ர்ஷ்டையான யசோதைப் பிராட்டி.

(மகன்றன்னைக் காப்பிட்ட மாற்றம்) ரூபகுண சேஷ்டிதங்களெல்லாவற்றாலும் அநவரதம் காப்பிடவேண்டும்படியா யிருக்கும் தன்னுடைய புத்ரனானவனை, புத்ரஸ்நேஹமெல்லாந் தோற்றரக்ஷை

(க) ஸகலஸம்பத்ஸமஷ்டிபூதை - எல்லாச் செல்வமிகுதிக்கும் ஆதாரமாயிருப்பவள். (உ) நித்யஸம்ச்லேஷம்பண்ணும்படியாய் - என்றும் கூடியிருக்கும்படியாய். (ங) உபக்நம் - கொள்கொம்பு. (ச) உத்க்ர்ஷ்டை - உயர்ந்தவள்.

யிட்ட பாசுரங்களை. (வேதப்பயனித்யாதி)பகவத்விஷயத்தில் மங்களாசாஸநம் பண்ணுகையே (க) வேததாத்பர்ய மென்றறிந்து கைக்கொள்ளவல்ல பெரியாழ்வா ரருளிச்செய்த மாலையான வித்திருமொழியில். (பாதப்பயனித்யாதி) பாட்டுக்கள்தோறும் பின்னடியிற் சொன்னப்ரயோஜநத்தைக் கைக்கொள்ளவல்ல பக்திமாங்களாயுள்ளவர்களுடைய மங்களாசாஸந விரோதியாயுள்ள பாபம் தன்னடையே விட்டுப்போம். (க0)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—இந்திரன்கன்று செப்புகண்ணில் பல்லாகஞ்சன் கள்ளமின்பமிருக்குப் போதமர்வெண்ணெய்.

---

ஆ திருமொழி கஎ-க்கு, பாட்டு-ாஅகூ.

---

அ.—கீழ் - பூச்சூட்டிக் காப்பிட்டு, தனக்கு வசவர்த்தியாக்கி, தன்னருகே இவனையுறக்கி, (உ) நிர்ப்பரையாய், மாதாவான யசோதைப்பிராட்டி தானுமுறங்கி உணர்ந்து, தன்னுடைய க்ர்ஹகார்யபரவசையாய் (ஙூ) வ்யாபரியாநிற்க, இவனு முணர்ந்துபோய் ஊரிலகங்களிலேபுக்கு, அங்குண்டான வெண்ணெய்களை விழுங்கி அவையிருந்த பாத்ரங்களையுடைத்து, காய்ச்சிவைத்தபாலைச் சாய்த்துப்பருகி, அவர்கள் சமைத்துவைத்த பணியாரங்கள்முதலானவற்றை நிச்சேஷமாக வெடுத்து ஜீவித்து, சிறுப்பெண்ணையழைத்து அவள் கையில் வளையைக் கழற்றிக் கொண்டுபோய் அத்தைக்கொடுத்து நாவற்பழங்கள்கொண்டு, இப்படி தீம்புகளைச் செய்கையாலே அவ்வவ க்ர்ஹங்களிலுள்ளார் தனித்தனியேவந்து முறைப்பட்டு "உன்பிள்ளையை இங்கே அழைத்துக்கொள்ளாய்" என்ற ப்ரகாரத்தையும், இவளும் இவர்கள்சொன்ன வநந்தரத்திலே இவனை இங்கேயழைத்துக்கொள்ளுகைக்காக, பலகாலு மிவனை ஸ்தோத்ரம்பண்ணுவது, உன்னைப் பிறர்சொல்லும் (ச) பரிபவம் எனக்குப் பொறுக்கப்போகிறதில்லை வாராய் என்பதாய் (ரு) இப்புடைகளிலே பலவற்றையும் சொல்லி இவனையழைத்த ப்ரகாரத்தையும் தத்வஸ்தாபந்நராய்க் கொண்டுபேசி, முன்பு அவன் செய்த க்ரீடைகளெல்லாவற்றையுமநுபவித்து ஹர்ஷ்டராகிறார் - இத்திருமொழியில்.

அ.—முதற்பாட்டு. ஊரில் ஸ்த்ரீகளிலே சிலர் தங்கள் க்ர்ஹங்களிலே இவன் செய்ததீம்புகளை, தாயாரான யசோதைப் பிராட்டி

---

(க) வேததாத்பர்யம் - வேதத்தின் உட்கருத்து. (உ) நிர்ப்பரையாய்-பளு நீங்கினவளாய். (ங) வ்யாபரியாநிற்க - செல்லாநிற்க. (ச) பரிபவம் - அவமாநம். (ரு) இப்புடைகளிலே - இவ்வகையாக.

க்கு வந்துசொல்லி, அவனை நீயிங்கே யழைக்கவேணுமென்றபடியைச்சொல்லுகிறது.

மூ.—வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டதனோசைகேட்கும், கண்ணபிரான் கற்றகல்விதன்னைக் காக்ககிலோ முன்மகனைக்காவாய், புண்ணிற்புளிப்பெய்தாலொக்குந்தீமைபுரைபுரையாலிவைசெய்யவல்ல, அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற வசோதைநங்காயுன் மகனைக்கூவாய்.

ப-ரை.—புரைபுரை - மனைகள்தோறும், புண்ணில் - புண்ணிலே, புளி-புளியை, பெய்தாலொக்கும் - சுரந்திட்டால்கரிக்குமாபோலே, இவை - இப்படிப்பட்ட, தீமை - ஆற்றொணாததீமைகளை, செய்யவல்ல - செய்வதில்வல்லவனாய், அண்ணல் - தலைவனாகுதற்குக் குறிப்பான, கண்ணான் - கண்ணையுடையனாய், ஓர் - ஒப்பற்ற, மகனை - பிள்ளையை, பெற்ற - பெறுகையால், நங்கை - பூர்ணையான, அசோதாய் - யசோதைப்பிராட்டியே, வெண்ணெய் - கடைந்தெடுத்துத்தாழிகளிலே சேர்த்துவைத்தவெண்ணெயை, விழுங்கி - இறையும்விஞ்சாதபடிவிழுங்கி, வெறும்கலத்தை - வெறும்கலங்களை, வெற்பிடையிட்டு - கல்லிலேயிட்டுடைத்து, அதன் - அதுஉடைகிறபோதுண்டான, ஓசை - ஓசையை, கேட்கும் - செவிகொடுத்துக்கேட்கின்ற, கண்ணன் - க்ர்ஷ்ணனான, பிரான் - உபகாரகன், கற்ற—, கல்விதன்னை - வஞ்சனையாகியவித்யையை, காக்க - காத்துக்கொள்கைக்கு, கில்லோம் - எங்களால்முடியாது; ஆதலால், உன் - உன்னுடைய, மகனை - பிள்ளையை, கூவாய் - உன்பக்கலில்வரும்படி யழைத்து, காவாய் - வெளியிற்போகாமே காத்துக்கொள்ளவேணும்.

வ்யா.—(வெண்ணெய் விழுங்கி) கடைந்தெடுத்துத் தாழிகளிலே சேர்த்துவைத்த வெண்ணெயை (க) நிச்சேஷமாகக் களவிலே விழுங்கி. அவ்வளவுமன்றிக்கே (வெறுங்கலத்தைவெற்பிடையிட்டு) அது இருந்தபாத்ரத்தைக் கல்லிலேயிட்டு உடைத்து. வெண்ணெய்தான் விழுங்கினானாகிறான், வெறுங்கலங்களை வெற்பிடையிட்டுடைக்குமோ, இத்தால் இவனுக்கு ப்ரயோஜநமென்னென்ன (அதனோசைகேட்கும்) அது உடைகிறபோதை ஓசைகேட்கையாய்த்து இவனுக்கு ப்ரயோஜநம்; அதுக்காகச் செய்யும் என்ன; ஆனால், "உங்கள் க்ர்ஹங்களை இவனுக்குப் புகுர அவகாசமில்லாதபடி அடைத்து நோக்கிக்கொள்ளுங்கோள்" என்ன (கண்ணபிரான்கற்ற கல்விதன்னைக் காக்ககிலோம்) க்ர்ஷ்ணனான வுபகாரகன்கற்ற க்ர்த்ரிமவித்யையை நாங்கள் காக்கமாட்டுகிறிலோம். எல்லாருடைய களவும் காக்கலாம், இவனுடைய களவு எங்களால் காக்கப்போகாதென்கை. பிரானென்றது - (உ)வ்யதிரேகோக்தி. (ங)ஸர்வஸ்வாப

(க) நிச்சேஷமாக - முழுதும். (உ) வ்யதிரேகோக்தி - எதிர்த்தட்டாகச் சொல்லுதல். (ங) ஸர்வஸ்வாபஹாரி - எல்லாப்பொருளையும் கைக்கொள்ளுமவன்.

ஹாரி யென்றபடி. உந்தம் க்ர்ஹங்களை நீங்கள் காக்கமாட்டிகோளாகில் ஆர்காப்பாரென்ன (உன்மகனைக்காவாய்) உன்னுடையபிள்ளையை நீ காத்துக்கொள்ளுவுதியாகில் எல்லாம் காவல்படும்; நீ அத்தைச்செய்யாய் என்றவாறே, சிறுப்பிள்ளைகள் தீம்புகளைச் செய்யார்களோ, அவன் அறியாமல் ஏதேனும்சிலசெய்ததுண்டாகில் நீங்களும் சற்றுப்பொறுக்கவேண்டாவோ, இப்படி அலர்தூற்றலாமோ வென்ன (புண்ணில் புளிப்பெய்தாலொக்கும்தீமை) புண்ணிலே புளியைக் (க) குறந்திட்டால் கரிக்குமாபோலே (உ) துஸ்ஸஹமானதீமைகளைச் செய்யாநின்றால் எங்ஙனேபொறுப்பது. நீங்கள் ஓரகத்திலுள்ளாரன்றோ, இப்படி சொல்லுகிறிகோள், உங்களோரகத்திலும் இப்படிநின்று இவன்தீம்புகளைச் செய்கிறனாகாதேயென்ன; எங்களகமொன்றிலு மன்று (புரைபுரையாலிவைசெய்யவல்ல) அகந்தோறும் இப்படியிருந்துள்ளதீம்புகளைச் செய்யவல்லவன்காணிவனென்கிறார்கள். புரையாவது - க்ர்ஹம். (ங) வீப்ஸையால் - அகந்தோறு மென்றபடி. ஆல் - அசை. (அண்ணல்கண்ணன்) அண்ணலென்றது - ஸ்வாமிவாசகம். அண்ணல்கண்ணனென்றது - ஸ்வாமித்வ ஸூசகமான கண்ணையுடையவ னென்றபடி. இத்தால் - இவ்விடத்தில், ஸ்வாமியென்றது - க்ர்த்ரிமர்க்குத் தலைவனென்றபடியாய், இதுக்கு ப்ரகாசகமான கண்ணையுடையவ னென்றதாய்த்து. அன்றிக்கே, அண்ணற்கென்றது - அண்ணனுக்கென்றபடியாய், அண்ணனென்றது-அண்ணியனாகாதவனென்றபடியாய், இப்படி தீம்புகளைச் செய்கையாலே "தன்னம்பிநம்பியுமிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான்" என்கிறபடியே ஸாதுவாய்த்திரியும் (ச) நம்பிமூத்தபிரானுக்கும் தனக்கும் ஒரு சேர்த்தியில்லாதவனென்னவுமாம். (ஓர்மகனைப் பெற்ற அசோதைநங்காய்) இப்படி அத்விதீயனான பிள்ளையைப்பெற்றபூர்த்தியை யுடையவளே. (உன்மகனைக்கூவாய்) இப்படி தீம்புகளைச்செய்து திரியாமே, உன்மகனை உன்பக்கலிலே அழைத்துக்கொள்ளாய். (க)

அ.—இரண்டாம்பாட்டு. இப்படி இவர்கள்சொன்னவநந்தரம் யசோதைப்பிராட்டி தன்புத்ரனானவனை யழைத்தப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—வருகவருகவருகவிங்கேவாமநநம்பீவருகவிங்கே
கரியகுழல்செய்யவாய்முகத்துக்காகுத்தநம்பீவருகவிங்கே
அரியனிவனெனக்கின்றுநங்காயஞ்சநவண்ணவசலகத்தார்
பரிபவம்பேசத்தரிக்ககில்லேன்பாவியேனுக்கிங்கேபோதராயே.

(க) குறந்திடல் - சொரிதல். (உ) துஸ்ஸஹம் - பொறுக்கொணாமை. (ங) வீப்ஸை - மீமிசைச்சொல். (ச) நம்பிமூத்தபிரான் - ஸ்ரீபலராமன்

ப - ரை.—வாமநன் - *மாணியுருவாய்க்கொண்டு ஆச்ரிதரக்ஷணம் செய்கையால்வந்த, நம்பீ - பூர்த்தியையுடையவனே, அங்கேயிருந்து தீம்புகளைச்செய்து கண்டார் வாயாலே உன்னை பரிபவித்துப்பேச நான்கேளாதபடி, இங்கே—, வருகவருகவருக - மிக்கவிரைவாய் வந்தருளவேணும்; கரிய - கறுத்த, குழல் - திருக்குழலையும், செய்ய - சிவந்த, வாய் - திருப்பவளத்தையும், முகத்து-அவ்விரண்டுக்கும் நடுவேவிளங்காநின்ற திருமுகத்தையுமுடையனாய், நம்பீ - தாய்தந்தைகள் சொல்லிற்றுச் செய்யும் குணபூர்த்தியையுடையனாய், காகுத்த-ககுஸ்த சக்ரவர்த்தியின் வம்சத்தை விளங்கச்செய்கையால்வந்த காகுத்தனென்னும் பெயரையுடையவனே, இங்கே—, வருக - வந்தருளவேணுமென்ன; அங்குவந்திருப்பாருள் ஒருத்தி, உனமகனைப்புகழ்ந்தழைக்கிறாயல்லது அச்சமுறும்படி கடிந்து பேசுகிறிலையேயென்ன; நங்காய் - பிள்ளைபெற்று ஸ்நேஹித்து வளர்த்துப் போரும் பூர்த்தியையுடையவளே, இவன் - இச்சிறுவன், எனக்கு—, இன்று—, அரியன் - பெறுதற் கரியனென்றுசொல்லி, அஞ்சநவண்ணா-அஞ்சநம்போன்ற திருமேனிநிறத்தையுடையவனே, அசலகத்தார் - அசலகத்துப் பெண்டிரானவர்கள், பரிபவம்பேச - கள்ளன் தீம்பன் என்றாற்போலே உன்னைப்பரிபவித்துப்பேச, தரிக்ககில்லேன் - என்செவியாரக்கேட்டுத் தரித்திருக்கமாட்டேனென்ன; ஆகில் என்செய்யவேணுமென்ன; பாவியேனுக்கு - இச்சொலவுகள் கேட்கும்படியான பாபத்தைப்பண்ணினவென்னுடைய மநத்துன்பம் நீங்கும்படி, இங்கே—, போதராய் - வந்தருளவேணும்.

வ்யா.—(வருகவருகவருகவிங்கே) அங்கேயிருந்து தீம்புகளைச்செய்து கண்டார்வாயாலே பரிபவம்கேளாதே இங்கே வாவென்கிறாள். வருகவென்றது - வாவென்றபடி. அவன்கடுகவருகைக்காகப் பலகாலும்சொல்லுகிறாள். இப்படியழைத்தவிடத்திலும் வாராமையாலே (வாமநநம்பீவருகவிங்கே) நீவாமநநம்பியன்றோ, ஆச்ரிதரக்ஷணம்செய்யும் குணபூர்த்தியுடைய நீ யிங்கேவாராயென்கிறாள். அவ்வளவிலும் வாராமையாலே (கரியவித்யாதி) கறுத்த திருக்குழலையும், சிவந்ததிருப்பவளத்தையும், உபமாநராஹித்யமாய்க்கொண்டு இரண்டுக்கும்நடுவே விளங்காநின்ற திருமுகத்தையு முடையனாய், மாதாபிதாக்கள் சொல்லிற்றுச்செய்யும் குணபூர்த்தியை யுடைய காகுத்தனன்றோ நீ இங்கேவாராயென்ன; முறைப்பட்டுவந்து நின்றவர்களிலேஒருத்தி "அஞ்சவுரப்பாள் அசோதை" என்கிறபடியே நீ நியமியாமல் கொள்கொம்புகொடுத்தன்றோ இப்படி இவன் தீம்பிலே (க) தகணேறவேண்டிற்று, இப்போது மிவனைப் புகழ்ந்துகொண்டு அழைக்கிறாயித்தனைபோக்கி, நியமித்து ஒருவார்த்தைசொல்லுகிறிலையேயென்ன (அரியனிவனெனக்கின்றுநங்காய்) என்கிறாள். பிள்ளைபெற்று ஸ்நேஹித்துவளர்த்துப் போரும்பூர்த்தியை யுடையவளே, இவனெனக்கு இன்றுபெறுதற்கு அரியவனன்றோ, இப்படியிருக்கிறவனை நான் கருக நியமிக்கமாட்டேன்காணென்கை. இப்படி இவள்சொன்னதுக்கு உத்தரம்சொல்லி, மீளவும் தன் பிள்ளை

(க) தகண் - தழும்பு.

யானவவனைக்குறித்து (க) பரபரிபவம் பொறுக்கமாட்டாமையாலே வந்த தன் (உ) க்லேசத்தைச் சொல்லியழைக்கிறாள் (அஞ்சநவண்ணா) * கண்டவர்கள் கண்குளிரும்படி அஞ்சநம்போன்ற திருநிறத்தையுடையவனே. (அசலகத்தார் பரிவம்பேசத் தரிக்ககில்லேன்) அசலகத்தாரானவர்கள் "கள்ளன், தீம்பன்" என்றாற்போலே உன்னைப்பரிபவங்கள் சொல்லக்கேட்டுப் பொறுக்கமாட்டுகிறிலேன். (பாவியேனுக்கிங்கே போதராயே) இச்சொலவுகள் கேட்கும்படியான பாபத்தைப் பண்ணினவெனக்கு இந்தக்லேசம் தீரும்படி இங்கேவாராய். (உ)

அ.—மூன்றாம்பாட்டு. முன்புத்தையவர்களையொழிய வேறே சிலர்வந்து, தங்கள்க்ர்ஹத்திலே அவன்செய்த தீம்புகளைச்சொல்லி, இப்படி அருகிருந்தாரை யநியாயஞ்செய்யலாமோ, உன்பிள்ளையை உன்பக்கலிலே யழைத்துக்கொள்ளாய் என்றப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—திருவுடைப்பிள்ளை தான் தீயவாறுதேக்கமொன்று மிலன்
றேசுடையன், உருகவைத்தகுடத்தோடுவெண்ணெ யுறிச்சி
யுடைத்திட்டுப் போந்துநின்றான், அருகிருந்தார்தம்மை யநி
யாயஞ்செய்வதுதான் வழக்கோ வசோதாய், வருகவென்
றுன்மகன்றன்னைக்கூவாய் வாழவொட்டான்மதுசூதனனே.

ப-ரை.—அசோதாய்—, திருவுடை - செல்வத்தாற் குறைவற்றவனாய், பிள்ளை - உன்மகனான, தான்—, தீயவாறு - தீமைசெய்யும் வகைகளில், ஒன்றும் - சிறிதேனும், தேக்கமிலன் - தேங்குதலில்லாதவனாய், தேசுடையன் - அதுதன்னையே தனக்கு தேஜஸ்ஸாக வுடையனாயிராநின்றா னென்ன; அவன் செய்த தீமைகளென்னென்ன; உருகவைத்த - உருக்குவதற்காகவைத்த, வெண்ணெய் - வெண்ணெயை, குடத்தோடு - தாழியோடே, உறிச்சி - உறிஞ்சி, உடைத்திட்டு - பாத்ரத்தையுமுடைத்து, போந்து - இவ்வருகேவந்து, நின்றான் - நில்லாநின்றான்; மதுசூதனன் - முன்புவிரோதிநிரஸநம்செய்து போந்தவன் இப்போது தானே விரோதியாய்நின்று, வாழவொட்டான் - எங்களைக் குடிசெய்து வாழ்ந்திருக்கவும் ஒட்டுகிறிலன்; அருகு-உன்னயலிலே, இருந்தார் தம்மை - குடியிருப்பவரான எங்களை, அநியாயம் செய்வது - உன்பிள்ளையைக் கொண்டு வேண்டிற்றுச் செய்கிறவிது, வழக்கோ - ந்யாயமோவென்ன; ஆகில் நீங்கள் செய்யச்சொல்லுகிறதென்னென்ன; உன்மகன்றன்னை - உன்னுடைய பிள்ளையான, க்ர்ஷ்ணனை, வருகவென்று-உன்னருகுவரும்படி, கூவாய்-அழைத்துக்கொள்ளவேணும்.

வ்யா.—(திருவுடைப்பிள்ளை) ஸ்ரீமானானபிள்ளை. ஐச்வர்யத்தால் வற்றவனென்கை. இத்தால் - (ங) ஸ்வக்ர்ஹத்தில் ஜீவநமற்று

(க) பரபரிபவம் - பிறரால் சொல்லப்படும் பழிச்சொலவு. (உ) க்லேசம்-மநத்துன்பம். (ங) ஸ்வக்ர்ஹம் - தன்னுடையஅகம்.

(க) வயிறுவாழாமல்செய்கிறுனன்றே,செல்வக்கிளர்ப்பாலேசெய்கிற தீம்புகளிறேயிவையென்கை. (தான்தீயவாறுதேக்கமொன்றுமிலன்) தான் தீம்புசெய்யும் ப்ரகாரங்களில் தன் பிறப்பையும் ஐச்வர்யத்தையும் பார்த்து, "நாம் இத்தைச்செய்யும்படியென்" என்றுதேங்குதல் அல்பமுமுடையவனல்லன்; தடையறச் செய்யாநிற்கு மென்கை. (தேசுடையன்) தேக்கமில்லாத வளவேயோ, இதுதன்னையே தனக்குதேஜஸ்ஸர்கவுடையனுயிராநிற்கும். இத்தால்-பிறர்சொல்லும் பழிச்சொலவுக்கு அஞ்சானென்கை. இப்படி நீங்கள்சொல்லுகைக்கு இவன்ருன்செய்தவையென்னென்ன ; செய்தவற்றில் ஒன்றைச் சொல்லுகிருள் (உருகவித்யாதி)உருக்குவதாகவைத்த பாத்ரத்தோடே வெண்ணெயையுறிஞ்சி பாத்ரத்தையுமுடைத்து, தான் அல்லாதாரைப்போலே இவ்வருகேபோந்துநில்லாநின்ருன். (அருகித்யாதி) உன்னயலிலே குடியிருந்த வெங்களை உன்பிள்ளையைக்கொண்டு வேண்டிற்றுச் செய்கிறவிதுதான் ந்யாயமோ அசோதாய். (வருகவென்றுன்மகன் றன்னைக்கூவாய்) உன்னுடைய பிள்ளையானவனை, இங்கே நின்று இன்னமும் தீம்புகளைச்செய்யாமல் உன்னருகே வாவென்றழைத்துக்கொள்ளாய். (வாழவொட்டான்மதுசூதநனே) நீ இது செய்யாயாகில் எங்களைஅவன்குடிசெய்து குடிவாழ்ந்திருக்கவொட்டான்காணென்கை. மதுசூதநன் என்றது-முன்பு விரோதிநிரஸநஞ் செய்து போந்தவன், இப்போது, தான் விரோதியாய் நின்று நலியாநின்ருனென்கிறவெறுப்பாலே. (௩)

அ.—நாலாம்பாட்டு. "வருகவென்றுன்மகன்றன்னைக்கூவாய்" என்றவாறே, இவள் ஸ்துதிபூர்வகமாக அழைக்க, அவனும் ப்ரீதனுயோடிவந்து அகத்திலேபுகுர, இவள் எதிரோசென்று எடுத்துக்கொண்டபடியைச் சொல்லுகிறது.

மூ.—கொண்டல்வண்ணு விங்கேபோதராயே கோயிற்பிள்ளா யிங்கே போதராயே, தெண்டிரைசூழ் திருப்பேர்க்கிடந்த திருநாரணுவிங்கே போதராயே, உண்டுவந்தே னம்மமென்று சொல்லியோடியகம்புகவாய்ச்சிதானும், கண்டெதிரே சென்றெடுத்துக்கொள்ளக் கண்ணபிரான்கற்றகல்விதானே.

ப-ரை.—கொண்டல் - நீர்கொண்டெழுந்த காளமேகம்போன்ற, வண்ணு - வடிவையுடையவனே, இங்கே - அங்குநின்று மிவ்விடத்துக்கு, போதராய்- வாராய்; கோயில் - *பூம்பொழி லரங்கமான கோயிலிலே பொருந்திவாழ்கிற, பிள்ளாய் - பிள்ளையானவனே, இங்கே—, போதராய் - வாராய்; தெள் - தெளிந்த, திரை - திரைகளையுடைத்தான, சூழ் - புனலாலே சூழப்பட்ட, திருப்பேர் - திருப்பேரிலே, கிடந்த - கண்வளர்ந்த, திரு - ஸ்ரீமானுன, நாரணு - நாராயணனே, இங்கே—, போதராய் - வாவென்று ஸ்தோத்ரம்பண்ணி அம்மமுண்ணவழைக்க கிட்டவந்து, அம்மமுண்டுவந்தேனென்று சொல்லி—, ஓடி -

(க) வயிறுவாழாமல் - வயிறு வளர்க்கவகையில்லாமல்.

ஓடிவந்து, அகம்புக-மாளிகையிலேபுக, ஆய்ச்சிதானும் - தாயாரானயசோதைப் பிராட்டியும், கண்டு - இவன்வந்தவரத்தைக் கண்டு, எதிரேசென்று - அன்புடையளாய்க்கொண்டு எதிரேபோய், எடுத்துக்கொள்ள - எடுத்துக்கொள்ளும்படி, கண்ணன் - ஆச்ரித ஸுலபனான, பிரான் - உபகாரகன், கற்ற—, கல்வி தான்! - கல்வியிருந்தபடி யென்னென்று ப்ரீதராகிறார்.

வ்யா.—(கொண்டலித்யாதி) நீர்கொண்டெழுந்த காளமேகம் போலே யிருக்கிறவடிவையுடையவனே, அங்குநின்று மிங்கே போதராயே. போதராயென்றது-வாராயென்றபடி. (கோயில்பிள்ளா யிங்கேபோதராயே) "கொண்டல்வண்ணன்-வெண்ணெயுண்டவாயன்" என்னும்படி கோயிலிலேவஸிக்கிற பிள்ளையானவனே, இங்கே போதராயே. (தெண்டிரையித்யாதி) தெளிந்ததிரைகளை யுடைத்தான புனலாலே சூழப்பட்ட திருப்பேரிலே கண்வளர்ந்த ஸ்ரீமானானநாராயணனே, இங்கே அம்மமுண்ணப்போதராயே. (உண்டித்யாதி) இப்படி ஸ்துதிபூர்வகமாக அவளழைத்தவாறே, கிட்டவந்து அம்மமுண்டுவந்தேன்காணென்றுசொல்லி ஓடிவந்து அகத்திலேபுக, தாயாரான இவளும் இவன்வந்த வரத்தையும் முகத்தில் ப்ரஸந்நதையையும்கண்டு ப்ரீதையாய் எதிரேசென்று எடுத்துக்கொள்ள, கண்ணபிரானானவன் கற்றகல்வி யிருந்தபடியே! என்று ப்ரீதராகிறார்.

அன்றிக்கே, ஆய்ச்சிதானும்கண்டெதிரேசென்றெடுத்துக்கொள்ள வென்றது - பிறர்சொல்லுமாபோலே தன்செயலைத் தானேசொன்னபடியாய், அம்மமுண்ணவர வேணுமென்றழைத்தால் அருகேவந்துநின்று, "வேணும், வேண்டா" என்னவமைந்திருக்க, உண்டுவந்தேனம்மம் என்றபடியும், ஓடிவந்து உள்ளேபுகுந்தபடியும், அந்த (க) உக்திவ்ருத்திகளைக்கண்டு (உ)வித்தையாய், தாயாரானதானும், முன் தான்செய்த தீம்புகளைமறந்து எதிரேவந்து எடுத்துக்கொள்ளும்படியாகப் பண்ணினபடியும், இவை யெல்லாவற்றையும் அநுஸந்தித்து, கண்ணபிரான் கற்றகல்விதானேயென்று-ஒருவன் கற்றகல்வியிருந்தபடியே!, இப்பருவத்திலே இத்தனை (௩) விரகெல்லாம் இவனறிவதே! என்று தன்னிலே (ச) ச்லாகித்து ப்ரீதை யாகிறாளென்று யோஜிக்கவுமாம். இப்படியானபோது, (ரு) பூர்வோத்தரார்த்தங்கள் சேர்ந்துகிடக்கும். (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. இப்படி க்ருஹத்திலே வந்து புகுந்து இவளை யுகப்பித்துநின்று அவன் முன்புபோலே அசலகங்களிலே போய்த் தீம்புகளைச்செய்ய, அதிலே ஒருத்திவந்து தன்னகத்தில்

(க) உக்திவ்ருத்திகள் - சொலவும், செய்கையும். (உ) வித்தையாய் - திகைத்தவளாய். (௩)விரகெல்லாம் - உபாயமெல்லாம். (ச)ச்லாகித்து - புகழ்ந்து. (ரு) பூர்வோத்தரார்த்தங்கள் - பாட்டின் முன்பாதியும் பின்பாதியும்.

அவன்செய்த தீம்புகளைச்சொல்லி முறைப்பட்டு, உன்மகனை யிங்கே யழைத்துக்கொள்ளா யென்றபடியைச் சொல்லுகிறது.

மூ.—பாலைக்கறந்தடுப் பேறவைத்துப் பல்வளையா ளென்மகளிருப்ப, மேலையகத்தே நெருப்புவேண்டிச் சென்றிறைப்பொழுதங்கேபேசிநின்றேன், சாளக்கிராமமுடையநம்பி சாய்த்துப் பருகிட்டுப் போந்துநின்றான், ஆலைக்கரும்பின் மொழியனைய வசோதைநங்காயுன் மகனைக்கூவாய்.

ப-ரை.—ஆலை - ஆலையிலிட்டு ஆடுவதற்குரிய, கரும்பனைய - முதிர்ந்த கரும்புபோலே, இன்-இனிதான, மொழி - மொழியையும், நங்கை - ஸ்தரீத்வபூர்த்தியையு முடைய, அசோதாய்—, பாலை - பசுக்களிலுண்டான பாலை, கறந்து—, அடுப்பு - அடுப்பிலே, ஏறவைத்து - மிடாக்களோடு ஏற்றிவைத்து, பல்வளையாள் - பலவளைகளையுமுடையளான, என் - என்னுடைய, மகள் - மகளானவள், இருப்ப - இதுக்குக்காவலாயிருக்க, மேலையகத்து - உன்னகத்துக்கு மேலண்டையகத்திலே, நெருப்புவேண்டி - இது காய்ச்சுவதற்கு நெருப்பெடுத்துவருவதாக, சென்று - போய், இறைப்பொழுது - க்ஷணகாலம், அங்கே—, பேசிநின்றேன் - அவர்களோடுவார்த்தைசொல்லிக்கொண்டிராநிற்க, சாளக்கிராமம் - ஸ்ரீஸாளக்ராமத்தை, உடைய-வாஸஸ்தாநமாகவுடைய, நம்பி-பூர்ணனவன், சாய்த்து - அந்தபாத்ரத்தைச்சாய்த்து, பருகிட்டு - அதிலிருந்தபாலைப்பருகி, போந்து - இடையப்போந்து, நின்றான் - நில்லாநின்றான்; ஆதலால், எங்களகங்களிலேவந்து தீம்புசெய்கைதவிர்ந்து, உன்மகனை - உன்பிள்ளையானவனை, கூவாய் - உன்பக்கலிலேவரும்படி விரைந்தழைக்க வேணுமென்கிறாள்.

வ்யா.—(பாலைக்கறந்து) * வாங்கக்குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்களி லுண்டான பாலையெல்லாம்கறந்து. (அடுப்பேறவைத்து) அந்தப்பாலையெல்லாம் காய்ச்சுகைக்காக மிடாக்களோடும் தடாக்களோடும் அடுப்பிலே ஏற்றிவைத்து. (பல்வளையாளென்மகளிருப்ப) பலவளைகளையுமுடையளான என்மகள் இதுக்குக் காவலாக இராநிற்க. (மேலையகத்தே நெருப்புவேண்டிச்சென்று) உன்னகத்துக்கு மேலையாளவகத்திலே இது காய்ச்சுகைக்கு நெருப்பெடுத்துக்கொள்வதாகப்போய். (இறைப்பொழுதங்கே பேசிநின்றேன்) க்ஷணகாலமங்கே அவர்களோடே வார்த்தைசொல்லிநின்றேன். இதுவே (க) அவகாசமாக (சாளக்கிராமமித்யாதி) ஸ்ரீஸாளக்ராமத்திலே நித்யவாஸம்செய்கிற பூர்ணன், அபூர்ணரைப்போலே அத்தனைபாத்ரங்களையும் (உ) மறித்துப்பருகி, தான், அல்லாதாரைப்போலே இடையப்போந்து நில்லாநின்றான். (ஆலைக்கரும்பித்யாதி) ஆடுகைக்கு (ங) பக்வமான கரும்புபோலே இனிதாயிருக்கிறமொழியையும் பூர்த்தியையு முடையவளே. (உன்மகனைக்கூவாய்) உன்

(க) அவகாசம்-ஸமயம். (உ) மறித்து - சாய்த்து. (ங) பக்வமான-முதிர்ந்த.

பிள்ளையானவவனை, அங்குநின்று தீமைசெய்யாதே உன்பக்கலிலே வரும்படி விரைந்தழையாய். (ரு)

அ.—ஆறும்பாட்டு. "அசோதைநங்காய் உன்மகனைக்கூவாய்" என்றவாறே, தன்மகனை இவளழைத்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—போதர் கண்டாயிங்கேபோதர்கண்டாய் போதரோனென்னுதே போதர்கண்டாய், ஏதேனுஞ்சொல்லியசலகத்தா ரோதேனும் பேசநான் கேட்கமாட்டேன், கோதுகுலமுடைக்குட்டனேயோ குன்றெடுத்தாய்குடமாடுகூத்தா, வேதப்பொருளே யென்வேங்கடவா வித்தகனேயிங்கேபோதராயே.

ப-ரை.—கோதுகுலமுடை - எல்லாருங்கொண்டாடத்தக்க சீரையுடைய, குட்டனே - பிள்ளையானவனும், பசுக்களையுமிடையரையும் ரக்ஷிக்கைக்காக, குன்று - * மந்திகள்தம்குட்டங்களைக் குடங்கைக்கொண்டு கண்வளர்த்துமதான கோவர்த்தநபர்வதத்தை, எடுத்தாய்-குடையாகஎடுத்தவனும், குடமாடு - குடக்கூத்தாடின, கூத்தா - கூத்தையுடையனும், வேதப்பொருளே - எல்லாவேதங்களாலும் சொல்லப்படுமவனும், என் - என்னுடையவனென்னும்படி, வேங்கடவா - திருமலையிலே இரண்டுவிபூதியிலுள்ளாரையும் அநுபவிப்பித்துக்கொண்டு நிற்கையாலே, வித்தகனே - எல்லாராலும் வியக்கப்படத்தக்கவனுனவனே, இங்கே—, போதர்கண்டாய் போதர்கண்டாய் - விரைவாகப்போருகிடாயென்னச்செய்தேயும் வாராமையாலே, போதரோனென்னுதே - வாரோனென்னுமல், போதர்கண்டாய்-வாராயென்ன; என்னை நீயென்செய்யநிர்ப்பந்தித்தழைக்கிறு யென்ன; அசலகத்தார் - அசலகத்தாரானவர்கள், ஏதேனும் - உன்விஷயமாக வாயாற்சொல்லொணுத குற்றங்களை, சொல்லி - தங்களிலேசொல்லி, ஏதேனும் - என்செவியாலகேட்கவும் வாக்கால்சொல்லவுமொண்ணுத குற்றங்களை, பேச - சொல்ல, நான்—, கேட்கமாட்டேன் - கேட்டுப்பொறுக்கமாட்டுகிறிலேன் ; ஆகையால், இங்கேபோதராய் - அவர்களகங்களிலேபோய் தீமைசெய்கைதவிர்ந்து இங்கேவாராயென்கிருள்.

வ்யா.—(போதர்கண்டாயிங்கே) அங்கேநின்று தீம்புசெய்யாதே இங்கேபோருகிடாய். போதவென்றது - போதருவென்றபடி. (போதர்கண்டாய்) இவன் கடுகவருகைக்காக மீளவு மொருகால் சொல்லுகிருள். இப்படி இவளழைக்கச்செய்தே அவன் வரமாட்டேனென்ன; (போதரோனென்னுதே போதர்கண்டாய்) வாரோனென்னுதே வாகிடா யென்கிருள். என்செய்யத்தான் நீ இப்படி நிர்ப்பந்தித் தழைக்கிறதென்ன (ஏதேனும் சொல்லி யசலகத்தார் ஏதேனும் பேச நான்கேட்கமாட்டேன்) அசலகத்தா ரானவர்கள் உன்விஷயமாக வாசாமகோசரமானதோஷங்களைத் தங்களிலேசொல்லி, அவ்வளவுமன்றிக்கே, என்பக்கலிலேவந்து என்செவியாற் கேட்கவும் வாக்காற்சொல்லவுமொண்ணுதவற்றைச் சொல்ல நான்கேட்டிருக்கமாட்டுகிறிலன். (கோதுகுலமுடைக்குட்டனேயோ) எல்லாரும் கொண்டாடும் சீரையுடைய பிள்ளாய். இப்படியிருந்துள்ள நீ

எல்லாரும் பழிக்கும்படியாவதே! என்று (க) விஷண்ணையாய், ஓ என்கிறாள்.

(குன்றெடுத்தாய்) கோக்களையும் கோபகுலத்தையும், கோவர்த்தநகிரியை யெடுத்து ரக்ஷித்தவனே. (குடமாடுகூத்தா) கோஸம்ருத்தியால் வந்த ஐச்வர்யச்செருக்குக்குப் போக்குவீடாகக்குடக்கூத்தாடினவனே. குடமாடு கூத்தனென்றது - குடமெடுத்தாடின கூத்தை யுடையவனென்றபடி. இவ்விரண்டாலும் - இக்குலத்துக்கு ரக்ஷகனாய், இக்குலத்தில் பிறப்பால்வந்த ஐச்வர்யமே யுனக்கு ஐச்வர்யமென்று நினைத்திருக்குமவனன்றோ, நீ யிதுக்கீடாக வர்த்திக்க வேணுங்காணென்கை. (வேதப்பொருளே) "𑌵𑍇𑌦𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌹𑌮𑍇𑌵 𑌵𑍇𑌦𑍍𑌯𑌃" "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்கிறபடியேஸகல (உ) வேதப்ரதிபாத்யனானவனே. (என்வேங்கடவா) அப்படியே சாஸ்த்ரத்திலே கேட்டுப்போகையன்றிக்கே, கண்ணாலே காணலாம்படி *வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பானதிருமலையிலே இரண்டுவிபூதியிலுள்ளாரையும் ஒருதுறையிலே அநுபவிப்பித்துக்கொண்டுஎன்னுடையவ னென்னும்படி நிற்கிறவனே. (வித்தகனே) இப்படிநிற்கையாலே (ங) விஸ்மயநீய னானவனே. (இங்கேபோதராயே) உன்னுடைய குணஹாநிசொல்லுவார் வர்த்திக்கிறவிடத்தில்நின்றும் உன்குணமேபேசாநிற்கும் நானிருக்கிறவிடத்தில் வாராய். (சு)

அ.—ஏழாம்பாட்டு. "வித்தகனே யிங்கேபோதராயே" என்று இவளழைத்தவிடத்தில் வாராமல் வேறோரகத்திலே போய்ப்புக்கு, அவர்கள் (ச) வ்ரதார்த்தமாகச் சமைத்துவைத்த பதார்த்தங்களை (ரு) யடைய ஜீவிக்கையாலே, ஒருத்திவந்து அத்தைச் சொல்லி முறைப்பட்டு, உன்மகனை அழைத்துக்கொள்ளா யென்றபடியைச் சொல்லுகிறது.

மூ.—செந்நெலரிசி சிறுபருப்புச் செய்தவக்கார நறுநெய்பாலால், பன்னிரண்டு திருவோண மட்டேன் பண்டுமிப்பிள்ளை பரிசறிவன், இன்னமுகப்பனென்றுசொல்லி யெல்லாம்விழுங்கிட்டுப் போந்துநின்றான், உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளா யிவையுஞ்சிலவே.

ப-ரை.—அசோதைநங்காய்—, செந்நெலரிசி - தலைநிலத்தில் பழுதறவிளைந்து சிவந்திருந்துள்ள செந்நெலரிசியும், சிறுபருப்பு - பசுத்த சிறுபயறுநெரித்துண்டாக்கின பருப்பும், செய்த - பக்வம்கெடாமல் காய்ச்சித்திரட்டின,

(க) விஷண்ணையாய் - துக்கமுற்றவளாய். (உ) வேதப்ரதிபாத்யன் - வேதத்திலே சொல்லப்படுமவன். (ங) விஸ்மயநீயன் - யாவராலும் வியக்கப்படத்தக்கவன். (ச) வ்ரதார்த்தமாக-நோன்புக்காக. (ரு) அடைய - எல்லாம்.

அக்காரம் - கருப்புக்கட்டியும், நறு - செவ்விகுன்றுமல் உருக்கின, நெய் - பசுவின்நெய்யும், நறு - நற்பசுக்களிற்கறந்த, பாலால் - பாலுமாகிற விவற்றாலே, பன்னிரண்டு திருவோணம்—, அட்டேன் - நோன்புக்குறுப்பாகத் திருக்கன்னலமுதும் இலட்டுகமுதலிய வுமாகச்சமைத்தேன்; பண்டும்-முன்பும், இப்பிள்ளை - இச்சிறுவனுடைய, பரிசு - தன்மையை, அறிவன் - அறிவேன்; எல்லாம் - திருவோணத்துக்கென்று சமைத்துவைத்தவற்றையெல்லாம், விழுங்கிட்டு - சற்றேனும் விஞ்சாதபடி விழுங்கினவளவிலும் த்ர்ப்திபிறவாமல், இன்னம் - இன்னமும், நான்—, உகப்பனென்று - விருப்புறுகின்றேனென்று, சொல்லி—, போந்து - அவ்விடம்விட்டுப்போந்து, நின்றான் - நில்லாநின்றான்; அங்கு வந்து தீமைசெய்யாதபடி, உன்மகன்றன்னை-உன்னுடையபிள்ளையை, கூவிக்கொள்ளாய் - உன்பக்கலிலே யழைத்துக்கொள்ளவேணும்; இவையும் - பிள்ளைகளைத் தீம்புசெய்து திரியவிட்டிருக்கிறவிதுவும், சிலவே - ஒருபிள்ளை வளர்க்கையோ.

வ்ய‌ா.— (செங்நெலித்யாதி) உரநிலத்திலே பழுதற விளைந்து சிவந்து சுத்தமான செங்நெலரிசியும், அப்படிப்பட்ட நிலத்தில் விளைந்த சிறுபயறு நெரித்துண்டாக்கின பருப்பும், (க) பாகதோஷம்வாராதபடி காய்ச்சித்திரட்டி நன்றாகச்செய்த கருப்புக்கட்டியும், நற்பசுவின்பாலாய் நால் ஒன்றாம்படி காய்ச்சித்தோய்த்துச் செவ்விகுன்றாமல் கடைந்துஉருக்கினநெய்யும், நற்பசுக்களில் கறந்தபாலுமாகிற விவற்றினாலே. (பன்னிரண்டுதிருவோணமட்டேன்) பன்னிரண்டுதிருவோணம்வ்ரதாங்கமாகபாயஸாபூபங்கள்சமைத்தேன். (பண்டுமிப்பிள்ளைபரிசறிவன்) முன்பும் இப்பிள்ளை ப்ரகாரமறிவன். அதாவது - நான் திருவோணவ்ரதத்துக்கென்று ஆரம்பித்து இவை சமைத்தபோதே, இவனும் தீம்பிலே ஆரம்பித்து, தேவார்ச்சநம் செய்வதுக்குமுன்னே இவற்றைவாரி ஜீவித்துவிடுமென்கை. இப்போதுமப்படியே (எல்லாம்விழுங்கிட்டு) இத்திருவோணத்துக்கென்று சமைத்தவையெல்லாம் ஒன்றும்சேஷியாதபடி விழுங்கி. (இன்னமுகப்பனென்றுசொல்லி) அதிலும் த்ர்ப்திபிறவாமல் இன்னமும் வேண்டியிருப்பன்நானென்றுசொல்லி. (போந்துநின்றான்) அந்யபரனைப்போலே அங்குநின்றும் விடப்போந்து நில்லாநின்றான். (உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளாய்) யசோதைப்பிராட்டி, அங்குத்தீமைசெய்யாமல் உன்னுடைய பிள்ளையை உன்பக்கலிலே அழைத்துக்கொள்ளாய். (இவையும்சிலவே) பிள்ளைபெற்றார்க்கு, பிள்ளை தீம்புசெய்யாமல் பேணிவளர்க்க வேண்டாவோ, இவையும் சிலபிள்ளை வளர்க்கையோ. (எ)

அ.—எட்டாம்பாட்டு. "உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளாய்" என்றவாறே, தன்மகனை அவளழைத்தப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

---

(க) பாகதோஷம் - பக்வக்கேடு.

மூ.—கேசவனேயிங்கேபோதராயேகில்லேனென்னுதிங்கேபோதராயே, நேசமிலாதாரகத்திருந்து நீ விளையாடாதேபோதராயே, தூசனஞ்சொல்லுந்தொழுத்தைமாருந்தொண்டருநின்ற விடத்தினின்றும், தாய்சொல்லுக்கொள்வது தன்மங்கண்டாய் தாமோதராவிங்கேபோதராயே.

ப-ரை.—கேசவனே - அழகிய மயிர்முடியையுடையவனே, இங்கே - அங்குநின்று மிவ்விடத்துக்கு, போதராய் - அசைந்துவருகிற குழல்களும் நீயுமாய் நடந்துவரும்போதையழகை நானநுபவிக்கும்படி வரவேணுமென்ன; நானிப்போது வரமாட்டேனென்ன; கில்லேனென்னுது - மாட்டேனென்னுமல், இங்கேபோதராய் - இங்கேவரவேணுமென்ன: நானிங்கே சற்றுப்போது விளையாடி வருகிறேனென்ன; நீ—, நேசம் - உன்பக்கல் ஸ்நேஹம், இலாதார் - இல்லாதவர்களுடைய, அகத்திருந்து-அகத்திலே நின்று, விளையாடாது - விளையாட்டொழிவதுமன்றி, தூசனம்சொல்லும் - உன்னை தூஷித்துவருகிற, தொழுத்தைமாரும் - இடைச்சிகளுக்கடிச்சிகளாய்ப் போருமவர்களும், தொண்டரும் - இடையர்க்கடியராய்ப் போருகிறவர்களும், நின்றவிடத்தில் நின்றும் - நிற்கிறவிடங்களினின்றும், போதராய் - இங்கேவாவென்ற விடத்திலும் அவன் வாராமையாலே, தாய்சொல்லு - தாயின்வார்த்தையை, கொள்வது-மேற்கொண்டு நடப்பது, தன்மங்கண்டாய் - தர்மங்காணென்ன; தாய்வார்த்தையை உட்கொண்டு நடப்பவர்களுக்கன்றோ நீசொல்லலாவதென்ன; நீ திருவவதரித்தபோது "[illegible]" "உபஸம்ஹர" என்ற மாத்ர்வசநத்தைப் பாதுகாத்ததும்ன்றி, தாமோதரா - கயிற்றையிட்டு வயிற்றிலே கட்டலாம்படி எனக்கும் முன்பு கீழ்ப்படிந்திருந்தவனுமன்றோ, இங்கே—, போதராய் - வந்தருளவேணும்.

வ்யா.— (கேசவனேயிங்கேபோதராயே) ப்ரசஸ்த கேசனானவனே, அசைந்துவருகிற குழல்களும் நீயுமாய்நடந்துவரும்போதையழகை நானநுபவிக்கும்படி அங்குநின்று மிங்கேவாராய். இப்படி இவளழைத்தவிடத்தில் "நானிப்போது வரமாட்டேன்" என்ன; (கில்லேனென்னுதிங்கேபோதராயே) மாட்டேனென்னுதே இங்கே வாராயென்கிறள். நானிங்கே சற்றுப்போதிருந்து விளையாடி வருகிறேனென்ன ; (நேசமித்யாதி) விளையாடும்போதைக்கு உனக்கு வேறிடமில்லையோ; உன்பக்கல் ஸ்நேஹமில்லாதாரகத்திலே யிருந்து நீ விளையாடாதே இங்கேவாராய். (தூசனம்சொல்லும் தொழுத்தைமாரும் தொண்டரும் நின்றவிடத்தில் நின்றும்) இவ்வளவேயோ, இடைச்சிகளுக்கு அடிச்சிகளாய்ப் போருகிறவர்களும் இடையர்க்கு அடியராய்ப்போருகிறவர்களும் உனக்குச்சொல்லுகிற தூஷணங்களுக்கு ஓரவதியில்லைகாண், அவர்கள் நின்றவிடத்தில் நில்லாதே போராய். இப்படி சொன்னவிடத்திலும் அவன் வாராமையாலே (தாய்சொல்லுக்கொள்வது தன்மங்கண்டாய்) என்கிறக்கிறள். பெற்றதாய்வசநங்கொள்ளுகை பிள்ளைகளுக்கு தர்மங்காண்;

நீதான், பிறந்தபோதே மாத்ர்வசந பரிபாலநம் பண்ணினவனன்றே. (தாமோதரா) கயிற்றையிட்டு வயிற்றிலே கட்டலாம்படி எனக்குத் தான் முன்பு பவ்யனுயிருந்தவனுமன்றே. (இங்கேபோதராயே) ஆனபின்பு, என்சொல்லைமறுதே இங்கேவாராய். (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. "தாமோதராவிங்கேவாராய்" என்றழைத்தவிடத்திலும் வாராதே வேறேபொருக்ர்ஹத்திலேபோய்ப் புக்கு, அவர்கள் சமைத்துவைத்த அபூபாதிகளையுடைய வாரிஜீவிக்கை முதலானதிம்புகளைச்செய்ய, அவ்வகத்துக்குக் கடவளானவள் வந்து முறைப்பட்டு "உன்பிள்ளையை யிங்கேயழைத்துக்கொள்ளாய்" என்றபடியைச்சொல்லுகிறது.

மூ.—கன்னலிலட்டுகத்தோடுசீடை காரெள்ளிலுண்டை கலத்திலிட்டு, என்னகமென்றுநான் வைத்துப்போந்தே னிவன்புக்கவற்றைப் பெறுத்திப்போந்தான், பின்னுமகம்புக் குறியை நோக்கிப் பிறங்கொளிவெண்ணெயுஞ் சோதிக்கின்றான், உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளா யிவையுஞ் சிலவே.

ப-ரை.—அசோதைநங்காய்—, கன்னல்-வெள்ளைச்சர்க்கரைப் பாகுடன்சேர்ந்த, இலட்டுகத்தோடு-இலட்டுகமும், சீடை-சீடையும், காரெள்ளிலுண்டை-காரெள்ளிட்டு வாரின உண்டையும், கலத்தில் - அவற்றுக்குத்தகுந்த பாத்ரங்களிலே, வைத்திட்டு - வைத்து, என்னகமென்று - என்னகமாகையால் இங்குப் புகுவாரில்லையென்று நினைத்து, நான்—, போந்தேன் - படலையடைத்திட்டுப் புறம்போந்தவளவில், இவன்—, புக்கு - சென்றுபுக்கு, அவற்றை—, பெறுத்தி - நான்பெறுதபடிபண்ணி, போந்தான்—; அதுபோராமல், பின்னும் - மறுபடியும், அகம் - * படலடைத்த சிறுகுரம்பைகளிலே, புக்கு - நுழைந்து புக்கு, உறியைநோக்கி - உறியைப்பார்த்து, பிறங்கொளி - மிகவும் செவ்வியையுடைத்தான, வெண்ணெயும் - * பசுவெண்ணெயு முண்டோவென்று, சோதிக்கின்றான் - ஆராயாநின்றான்; ஆதலால் அங்குநின்று * அடலடர்த்த வேற்கணார் தோக்கைபற்றித் திம்புசெய்யாதபடி, உன்மகன்றன்னை - உன்னுடைய பிள்ளையானவனை, கூவிக்கொள்ளாய் - உன்னருகே யழைத்துக்கொள்ளவேணும்; இவையும் - இவனைத் தீம்பிலே கைவளரவிட்டிருக்கிற விதுவும், சிலவே - ஒரு பிள்ளை வளர்க்கையோ.

வ்யா.—(கன்னல்) கருப்புக்கட்டி. இது, மேற்சொல்லுகிறவையெல்லாவற்றோடும் அந்வயித்துக்கிடக்கிறது. கருப்புவட்டோடே சமைந்தவை, வட்டிலுங் காட்டில் (க) ரஸிக்குமிறே. (இலட்டுகத்தோடு சீடைகாரெள்ளிலுண்டை.) இலட்டுகமாவது-ஒரபூபவிசேஷம். அத்தோடே சீடையையும், காரெள்ளிட்டுவாரின எள்ளுண்டையையும். (கலத்திலிட்டு) அவற்றுக்கநுரூபமான பாத்ரங்களிலேயிட்டு. (என்னகமென்று நான் வைத்துப்போந்தேன்) என்னகமன்றே, இங்குப்

(க) ரஸிக்கும் - தித்திக்கும்.

புகுவாரில்லையேயென்றுவைத்து நான் புறம்போந்தேன். (இவன் புக்கவற்றைப் பெறுத்திப்போந்தான்) நான் போந்ததே அவகாசமாக இவன்சென்றுபுக்கு அவற்றை நான் பெறும்படிபண்ணிப் போந்தானென்று வ்யதிரேகமாகச்சொல்லுகிறாள். அதாவது - அவற்றில் எனக்கொன்றும் (௧) லபியாதபடி தானேஜீவித்துப் போந்தானென்கை. (பின்னுமகம்புக்குறியைநோக்கி) அதுபோராமல் மீண்டும் அகத்திலே புக்கு உறியைப்பார்த்து. (பிறங்கொளிவெண்ணெயும் சோதிக்கின்றான்) மிகவும் செவ்வியையுடைத்தானவெண்ணெயுண்டோவென்று ஆராயாநின்றான். (உன்மகனித்யாதி) யசோதைப்பிராட்டி, உன்னுடையபிள்ளையானவனை அங்குநின்றும் தீம்புசெய்யாதே உன்னருகே யழைத்துக்கொள்ளாய். (இவையும்சிலவே) இப்படி யிவனைத்தீம்பிலே கைவளரவிட்டிருக்கிற விவையும் ஒரு பிள்ளை வளர்க்கையோ.

அன்றிக்கே, உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளாயென்று - குணபூர்த்தியையுடைய வசோதாய், அவனும் உன்னைப்போலே குணபூர்த்தியையுடையனாம்படி உன்னருகே யழைத்துக்கொள்ளா யென்றவாறே, என்னுடைய குணபூர்த்தியும் அவனுடையதோஷங்களும் சொல்லிக்கதறுகையோ உங்களுக்குள்ளது, சிறுபிள்ளைகள் படலைத்திறந்து குரம்பைகளிலேபுக்கு கண்டவற்றைப்பொறுக்கி வாயிலேயிடக்கடவதன்றோ, உங்கள் பிள்ளைகள்தானே உங்களுக்கு (உ) வசவர்த்திகளாய்த் திரிகிறனஎன்று இவள் இவர்களைவெறுத்து (௩) விமுகையாக, அவன்செய்தவற்றுக்குமேலே, இவையும் சிலவேயென்று-இவள் இன்னாப்பாலேசொல்லுகிறாளாகவுமாம். (௯)

அ.—பத்தாம்பாட்டு. "உன்மகன்றன்னை யசோதை நங்காய் கூவிக்கொள்ளாய்" என்று ஒருத்திசொல்லி வாய்மாறுவதுக்குமுன்னே வேறே யொருத்திவந்து, தன்னுடைய க்ர்ஹத்தில் இவன்செய்த தீம்புகளை முறைப்பட்டபடியைச் சொல்லுகிறது.

மூ. — சொல்லிலரசிப்படுதிநங்காய் சூழலுடையனுன்பிள்ளைதானே, இல்லம்புகுந்தென் மகளைக்கூவிக் கையில்வளையைக் கழற்றிக்கொண்டு, கொல்லையினின்றுங் கொணர்ந்துவிற்ற வங்கொருத்திக் கவ்வளைகொடுத்து, நல்லன நாவற்பழங்கள் கொண்டு நானல்லேனென்று சிரிக்கின்றானே.

ப-ரை.—நங்காய் - குணபூர்த்தியையுடைய யசோதாய், சொல்லில் - உன் பிள்ளைசெய்த தீம்புகளைச்சொல்லில், அரசிப்படுதி - கோபியாநின்றாய்; உன்பிள்ளைதான் - உன்னுடையபிள்ளையானவன், சூழலுடையன் - எங்களால் பொறுக்

(௧) லபியாதபடி-கிட்டாதபடி. (உ) வசவர்த்திகளாய்-வசப்பட்டவைகளாய். (௩) விமுகையாக - முகத்தைத்திருப்பிக்கொள்ள.

கொணுததுமன்றி உன்னுடன்சொல்லியல்லது நிற்கவொண்ணாதபடியான பல வகை வஞ்சனைச்செய்கைகளை யுடையனாயிராநின்றானென்ன; அவன் அப்படி ஆற்றொணாத தீமைகள் செய்ததுண்டாகில் அவற்றிலொன்றுசொல்லிக் காணாயென்ன; இல்லம் - என்னகத்திலே, புகுந்து - நுழைந்து, என்மகளை—, கூவி - பேர்சொல்லியழைத்து, கையில் - அவள்கையில் தரித்திருந்த, வளையை-அடையாளவளையை, கழற்றிக்கொண்டு - கழற்றிக்கொடுபோய், கொல்லையினின்றும் - கொல்லையிலிருந்து, கொணர்ந்து - கொண்டுவந்து, அங்கு - அங்கே, விற்ற - நாவற்பழம்விற்கிற, ஒருத்திக்கு—, அவ்வளை - அந்தவளையை, கொடுத்து—, நல்லன - தனக்கேற்கஅழகிதாய் நல்லனவான, நாவற்பழங்கள்-நாவற்பழங்களை, கொண்டு - வாங்கிக்கொண்டு, போரும்போராதென்று சொல்லுகிறவளவிலேநான்கண்டு "இவ்வளை இவளுக்குநீயோதந்தாய்" என்ன; நானல்லேனென்று - நானல்லேன்காணென்று, சிரிக்கின்றான் - நான் மறுமாற்றம் சொல்ல இடமறச்சில வார்த்தைகளைச்சொல்லிச் சிரியாநின்றான். இதிற் காட்டில் பொறுக்கொணாத தீம்புண்டோவென்கை.

வ்யா.—(சொல்லிலரசிப்படுதிநங்காய்) முன்பே ஒருத்திசொன்னதுக்குமேலே புண்ணின்மேல்புண்ணாக இவளுமொருத்திவந்து தன் மகன்குறைகளைச் சொல்லப்புக்கவாறே, இதுவுமொரு சிலுகோவென்று தாயாரான யசோதைப்பிராட்டி (க) குபிதையாக; நங்காய், உன்பிள்ளை செய்தவற்றைச்சொல்லில் நீ கோபியாநின்றாய். (சூழலுடைய னுன்பிள்ளைதானே) உன்பிள்ளையானவன்தானே (உ) துஸ்ஸஹமாய் உனக்குவந்து சொல்லியல்லது நிற்கவொண்ணாதபடியான சூழல்களையுடையனாயிராநின்றான். சூழலாவது - சூழ்ச்சி. அதாவது - (ங) நாநாவானக்ர்த்ரிமவகைகள். அவற்றில் இவனுக்கில்லாதது இல்லைகாணென்ன; இப்படி சொல்லுகைக்கு அவன் இப்போது துஸ்ஸஹமாகச் செய்ததுதான் ஏது, அத்தைச் சொல்லென்னச்சொல்லுகிறாள்மேல் (இல்லம்புகுந்தென் மகளைக்கூவி)என்னகத்திலே புகுந்து என்மகளைப்பேரைச்சொல்லியழைத்து. (கையில் வளையைக் கழற்றிக்கொண்டு) அவள் கையில் அடையாளவளையைக் கழற்றிக்கொண்டுபோய். (கொல்லையித்யாதி) கொல்லையில் நின்றும் கொடுவந்து, அங்கே நாவற்பழம்விற்கிறாளொருத்திக்கு அவ்வளையைக்கொடுத்து. (நல்லனநாவற்பழங்கள்கொண்டு) தனக்கேறவழகிதான நாவற்பழங்கொண்டு, போரும் போராதுஎன்று சொல்லுகிறவளவிலே நான்கண்டு, "இவ்வளை உனக்குவந்தபடியென்" என்று அவளைக்கேட்க, அவள் "இவன்தந்தான்" என்ன; "நீயோ இவளுக்கு வளைகழற்றிக்கொண்டுகொடுத்தாய்" என்ன (நானல்லேனென்று சிரிக்கின்றானே) "நானல்லேன்காண், என்கையில் வளைகண்டாயோ, நான் உன் இல்லம்புகுகிறது கண்டாயோ, உன் பெண்

(க) குபிதையாக - கோபித்துக்கொள்ள. (உ) துஸ்ஸஹமாய் - பொறுக்கொணாததாய். (ங) நாநாவானக்ர்த்ரிமம் - பலவகையானவஞ்சனை.

ணைப்பேரைச்சொல்லியழைக்கிறது கேட்டாயோ, வந்து கையில் வளைகழற்றினது கண்டாயோ, கண்டாயாகில் உன்வளையை யங்கே பறித்துக்கொள்ளாவிட்டதென்" என்றாற்போலே எனக்கு மறுநாக் கெடுக்கவிடமில்லாதபடி சிலவார்த்தைகளைச் சொல்லிநின்று சிரியா நின்றான், இதிற் காட்டிலுண்டோ துஸ்ஸஹமான தீம்பென்கை. ()

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார், தமக்கு ப்ராப்யராவ ரென்கிறார்.

மூ.—வண்டுகளித்திரைக்கும் பொழில்சூழ் வருபுனற்காவிரித் தெ
ன்னரங்கன், பண்டவன்செய்த கிரீடையெல்லாம் பட்டர்
பிரான்விட்டுசித்தன்பாடல், கொண்டிவைபாடிக் குனிக்க
வல்லார் கோவிந்தன்றன்னடியார்களாகி, எண்டிசைக்கும்
விளக்காகிநிற்பா ரிணையடியென் றலைமேலனவே.

ப-ரை.—வண்டு - வண்டுகளானவை, களித்து-மதுபாநத்தாலேகளித்துப் பாடுகிற, இரைக்கும் - கோஷத்தையுடைத்தான, பொழில்-பொழில்களாலும், வரு - பொழில்களுக்காதாரமாகப்பெருகி வாராநின்றுள்ள, புனல் - புனலை யுடைத்தான, காவிரி - காவிரியாலும், சூழ்-சூழப்பட்டு, தென்-திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருவீதிகளும் மாடமாளிகைகளுமான இவற்றோட்டைச் சேர்த்தியால்வந்த அழகையுடைத்தாயிருந்துள்ள, அரங்கன் -* திருவரங்கப்பெருநகரிலே நித்யவாஸம்பண்ணுகிற வைபவத்தையுடையனான, அவன் —, பண்டு- முன்பு, செய்த - செய்தருளின, கிரீடையெல்லாம் - விளையாட்டுச்செய்கைகளெல்லாவற்றையும், விட்டு-எங்கும்பரவியிருப்பவனான விஷ்ணுவை, சித்தன் - மநஸ்ஸிலே யுடையராய், பட்டர்பிரான் - ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார்பாடின, பாடல் - பாடலான, இவைகொண்டு-இவற்றைக்கொண்டு, பாடி- அன்பினால் தூண்டப்பட்டவர்களாய்ப்பாடி, குனிக்கவல்லார் - உடம்புஇருந்தவிடத்திலிராதே ஆடவல்லவர்களாய், கோவிந்தன்றன் - இந்த சேஷ்டிதங்களையெல்லாம்செய்த கோவிந்தனுக்கு, அடியார்களாகி - அடியார்களாய், எண்டிசைக்கும் - எட்டுத்திசைகளிலுமுள்ள இருள்நீங்கும்படி, விளக்காகிநிற்பார் - விளங்கா நிற்குமவர்களுடைய, இணை - சேர்த்தியழகையுடைத்தான, அடி - திருவடிகளானவை, என்தலைமேலனவே - என்தலைமேலே எல்லாக்காலமும்வர்த்திக்குமவைகளென்கிறார்.

வ்யா.—(வண்டித்யாதி) வண்டுகளானவை மதுபாநத்தாலே களித்துப்பாடுகிற கோஷத்தை யுடைத்தான பொழில்களாலும், பொழில்களுக்கு தாரகமாகப்பெருகிவாராநின்றுள்ள புனலையுடைத்தான காவிரியாலும் சூழப்பட்டு, திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருவீதிகளும் * மாடமாளிகைகளுமான இவற்றோட்டைச் சேர்த்தியால்வந்த அழகையுடைத்தா யிருந்துள்ள * திருவரங்கப் பெருநகரிலே நித்யவாஸம்பண்ணுகிற வைபவத்தை யுடையனானவன் முன்புசெய்த லீலாசேஷ்டிதங்களெல்லாவற்றையும். (பட்டர் பிரானித்யாதி) ஸர்வவ்யாபகனான விஷ்ணுவை மநஸ்ஸிலே யுடை

யராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் பாடின பாடலான இவற்றைக்கொண்டு. (பாடிக்குனிக்கவல்லார்.) ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடி, உடம்பு இருந்தவிடத்திலிராதே விக்ருதராய் ஆடவல்லவர்களாய். (கோவிந்தனித்யாதி) இந்த சேஷ்டிதங்களெல்லாம் செய்த கோவிந்தனுக்கே அடியார்களாய், தங்களுடைய ஸந்நிதிவிசேஷத்தாலே எட்டுத்திக்கிலுமுண்டான (க) அந்தகாரம்போம்படி ப்ரகாசகராய்க்கொண்டு நிற்குமவர்களுடைய. (இணையடியென்றலைமேலனவே) சேர்த்தியழகையுடைத்தான திருவடிகளானவை யென்தலைமேலே ஸர்வகாலமும் வர்த்திக்குமவைகளென்கிறார். இத்தால் - "ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள்பண்டே" என்னுமாபோலே, இத்தை (உ) யப்யஸித்தவர்களுடைய வைபவத்தையும் அவர்கள்பக்கல் தமக்குண்டான (௩) கௌரவப்ரதிபத்தியையுமருளிச்செய்தாராய்த்து. (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—வெண்ணெய்வருதிருக் கொண்டல்பாலை போதர் செந்நெல் கேசவனே கன்னல்சொல்லில் வண்டாற்றில்.

---

ஆ திருமொழி கஅ-க்கு, பாட்டு-உ௦௦.

அ. — கீழில் திருமொழியிலே - ஊரில் ஸ்த்ரீகளானவர்கள் தந்தாமகங்களில் இவன்செய்த தீம்புகளைச்சொல்லி, தாயாரான யசோதைப்பிராட்டிக்கு வந்து முறைப்பட்டு "உன்மகனை யிங்கேயழைத்துக்கொள்ளவேணும்" என்றபடியையும், அதுக்கீடாக அவள் அவனையழைத்த ப்ரகாரங்களையும் சொல்லுகையாலே அவன் ஊரிலகங்கள்தோறும்செய்த நவநீதசௌர்யாதி க்ரீடா விசேஷங்களையநுபவித்தாராய் நின்றார் ; ப்ராப்தயௌவனைகளான பெண்களோடே அவன் (ச) இட்டீடுகொண்டு விளையாடுகையாலே அவனோடீடுபட்டபெண்கள், மாதாவான யசோதைப்பிராட்டிபக்கலிலேவந்து, தங்கள்திறத்தில் அவன்செய்த தீம்புகளிலே சிலவற்றைச்சொல்லி, ஆச்ரிதவிரோதி நிரஸநசீலனாய், ஆச்ரிதரக்ஷகனாய், ஆச்ரிதர் கட்டவுமடிக்கவுமாம்படியெளியனாய், ஆச்ரிதர்க்கு நற்சீவனானதன்னை பூதநைகையில் அகப்படாமல் நோக்கிக்கொடுத்தவனாய், ஆச்ரிதர்க்குத் தன்னையழியமாறியும் கார்யம்செய்யுமவனாய், ஆச்ரிதரார்த்தியறிந்துசென்று உதவுமவனாய், நித்யாச்ரிதையான பூமிப்பிராட்டிக்காக (௫) நிமக்நையானபூமியை உத்தரித்தவனாய்

(க) அந்தகாரம் - இருள். (உ) அப்யஸித்தல் - பழகுதல். (௩) கௌரவப்ரதிபத்தி - நன்றுமதிக்கை. (ச) இட்டீடுகொள்ளுகை - ஒன்றுசொல்லி ஒன்றுகேட்டுக்கொள்ளுகை. (௫) நிமக்நையான - அழுந்திக்கிடந்த.

இப்படி ஸர்வவிஷயமாக உபகாரங்களைப் பண்ணினவன் எங்கள் திறத்தில் அபகாரங்களைச்செய்யாநின்றான், ஆனபின்பு இவன்கீழ் ஜீவிக்கப்போகாது, இவனாலேநாங்கள் இன்றுமுடிவுதோம் என்று பலகாலும்சொல்லி முறைப்பட்ட ப்ரகாரத்தை, தாமுமப்படியே பேசி, அவனுடைய அந்த லீலாவ்யாபார ரஸத்தை அநுபவிக்கிறார்- இத்திருமொழியில்.

மூ.—ஆற்றிலிருந்துவிளையாடுவோங்களைச்
சேற்றாலெறிந்துவளைதுகில்கைக்கொண்டு
காற்றிற்கடியனாயோடியகம்புக்கு
மாற்றமுந்தாரானா லின்றுமுற்றும்
வளைத்திறம்பேசானாலின்றுமுற்றும்.

ப-ரை.—ஆற்றிலிருந்து - யமுனையாற்றுமணலிலிருந்து, விளையாடுவோங்களை - தோழியரும் யாமுமாய் விளையாடுகிறவெங்களை, சேற்றாலெறிந்து - சேற்றையிட்டெறிந்து, நாங்கள்குளிக்கைக்காகக் களைந்திட்டுவைத்த, வளை - வளையல்களையும், துகில் - வஸ்த்ரங்களையும், கைக்கொண்டு - வாரிக்கொண்டு, காற்றில் - காற்றிற்காட்டிலும், கடியனாய் - மிகவிரைந்தவனாய், ஓடி—, அகம் புக்கு - அகத்திலேபுக்கு, மாற்றமுந்தாரானால் - நாங்கள் தன்பேரைச்சொல்லி யழைப்பினும் அதுக்கொரு மறுமாற்றமும் தாராதவனால், இன்று—, முற்றும் - முடிவோம்; வளைத்திறம் - வளையின் விஷயமாக, பேசானால் - தருவன் தாரேனென்பவற்றில் ஒன்றும் பேசாதவனாலே, இன்றுமுற்றும் - இன்றுமுடிவோம்.

வ்யா.—முதற்பாட்டு. (ஆற்றிலிருந்து) சிலர் "எங்களது" என்றபிமானிக்கும் நிலத்திலேயிருந்தோமோ, ஸர்வஸாதாரணமானஸ்தலத்திலேயன்றோ நாங்களிருந்தது. இத்தால் - ஏகாந்தமாய், இவனுக்குவந்து தீம்புசெய்யவொண்ணாதபடி பலரும்போவார்வருவாரான ஸ்தலத்திலேயன்றோ நாங்களிருந்ததென்கை. (விளையாடுவோங்களை) விளையாடுகிறவெங்களை. தன்னையொழிய நாங்கள் அந்யபரைக ளன்றோ; தன் (க) இடையாட்டம்பட்டோமோ: நாங்கள் முன்தீமை செய்தோமாகிலுமாமிறே; தன்னைக்கடைக்கண்ணால்கணிசித்தோமோ: தன்னையிங்கிட்டெண்ணினாரில்லைகிடீர். (சேற்றாலெறிந்து) சேற்றையிட்டெறிந்து. பிறரறியாதபடி கைகளாலே ஸ்பர்சித்தாலாகாதோ; "இதேது" என்று பிறர்கண்டு கேட்கும்படி சேற்றையிட்டெறியவேணுமோ. (வளைதுகில்கைக்கொண்டு) நாங்கள்குளிக்கைக்காகக் களைந்திட்டுவைத்தவளைகளையும் துகில்களையும் வாரிக்கொண்டு. இடைப்பெண்களாகையாலே ஆபரணங்களும் பரிவட்டங்களும் களைந்திட்டுவைத்திறே குளிப்பது. (காற்றிற்கடியனாயோடி) (க) துடர் அகப்படாதே காற்றிலுங்காட்டில்கடியனாயோடி. தன் ஜீவநத்தில் ஒன்றும் குறையாதபடிகொண்டால், எங்கள் ஜீவநத்தை

(க) இடையாட்டம் - விஷயம்.

யும் கொண்டுபோகவேணுமோ. அவனுக்கு ஜீவநம் இவர்களுடைய வளைகளும் துகில்களும்; இவர்களுக்கு ஜீவநம் அவன்றன்னுடைய வடிவிறே. (அகம்புக்கு) பின்துடர்ந்துசென்றாலும் காணப்போகாதபடி தன்னகத்திலேசென்றுபுக்கு. வழிபறித்து (க) அஸாதாரணஸ்தலத்திலே யாய்த்திருப்பது. (மாற்றமும்தாரானாலின்றுமுற்றும்) நாங்கள் தன்பேரைச்சொல்லியழைத்தாலும் அதுக்கு ஒருமறுமாற்றந்தானும் சொல்லுகிறானில்லை; வார்த்தையும் ஏதேனும்வளையும் துகிலுமோ; ஒருவார்த்தைதன்னையாகிலும் தந்தாலாகாதோ. இப்படி ஒருவார்த்தையுமுட்படச்சொல்லாதவனாலே இன்றுமுடிவோம். ஒருவார்த்தைபெறில் ஜீவிப்பர்போலேகாணும். (வளைத்திறம்பேசானின்றுமுற்றும்) தருவனென்னுதல், தாரேனென்னுதல், வளையிடையாட்டமாக ஒன்றும்சொல்லாதவனாலே இன்றுமுடிவோம். முற்றுதும் என்கிறவிது, முற்றும்என்று குறைந்துகிடக்கிறது. முற்றுதல் - முற்றலாய், அதாவது - முடிவாய், முற்றுமென்றது - முடிவோமென்றபடி. (க)

மூ.—குண்டலந்தாழக்குழறாழநாண்டாழ
எண்டிசையோருமிறைஞ்சித்தொழுதேத்த
வண்டமர்பூங்குழலார்துகில்கைக்கொண்டு
விண்டோய்மரத்தானாலின்றுமுற்றும்
வேண்டவுந்தாரானாலின்றுமுற்றும்.

ப-ரை.—குண்டலம் - காதுப்பணிகள், தாழ-திருத்தோள்களளவும் தாழ்ந்தசையவும், குழல் - திருக்குழல்கள், தாழ - அதுக்குப்பரபாகமாம்படி தாழ்ந்தசையவும், நாண்-திருக்கழுத்திற்சாத்தினவிடுநாணானது, தாழ-திருவுந்தியளவும் தாழ்ந்தசையவும், எண்டிசையோரும்-எட்டுத்திசையிலுமுள்ள தேவரும் மனிதர் முதலியவும், இறைஞ்சி-இவ்வடிவழகைக்கண்டு அபிமாநத்தைவிட்டவர்களாய்க் கொண்டு வணங்கி, தொழுது - *மெய்தழும்பத்தொழுது, ஏத்த-வாய்படைத்த ப்ரயோஜநம்பெறும்படி ஸ்துதிக்க, வண்டு-வண்டுகள், அமர்-தேனில்நசையாலே அத்தைவிட்டுப் போகமாட்டாதே படிந்துகிடக்கிற, பூ-புஷ்பங்களாலே அலங்க்ருதமான, குழலார் - குழலையுடையவர்களுடைய, துகில்-பரிவட்டங்களை, கைக்கொண்டு, வாரிக்கொண்டு, விண் - ஆகாசத்தை, தோய் - அளாவிய, மரத்தானால்-குருந்த மரத்திலிருந்தவனால், இன்றுமுற்றும்—; வேண்டவும் - *துகிலைப் பணித்தருளும்படி வேண்டிக்கொண்டும், தாரானால் - கொடாதவனாலே, இன்றுமுற்றும்—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (குண்டலந்தாழக்குழல்தாழநாண்தாழ) குண்டலம் - காதுப்பணி. அதுதிருத்தோள்களளவும் தாழ்ந்தசைய, திருக்குழல்களும் அதுக்கு பரபாகமாம்படி அத்தோடொக்கத்தாழ்ந்தசைய, திருக்கழுத்திற்சாத்தின விடுநாணானது திரு

(க) அஸாதாரணஸ்தலம் - தனக்கேயுரித்தான இடம்.

வுந்தியளவுந்தாழ. (எண்டிசையோரு மிறைஞ்சித் தொழுதேத்த) எட்டுதிக்கிலுமுண்டான தேவமநுஷ்யாதிகளெல்லாம் இவ்வடிவழகையும் சேஷ்டிதவைலக்ஷண்யத்தையுங்கண்டு (க) பக்நாபிமாநராய் வணங்கி ஸ்தோத்ரம்பண்ண. (வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு) வண்டுகள்மாறுதபூக்களாலே அலங்க்ர்தமான குழலையுடையவர்களுடைய, கரையிலே யிட்டுவைத்த பரிவட்டங்களைக் கைக்கொண்டு. (விண்டோய்மரத்தானுலின்றுமுற்றும்) இவர்களுக்கெட்டாதபடி விண்ணிலேதோய வளர்ந்த குருந்தமரத்திலேயிருந்தவனுல் இன்றுமுடிவோம். (வேண்டவும் தாரானுலின்றுமுற்றும்) "துகிலைப்பணித்தருளாய்" என்றபேக்ஷிக்கவும் கொடாதவனுலே இன்றுமுடிவோம். (உ)

மூ.—தடம்படுதாமரைப்பொய்கைகலக்கி
விடம்படுநாகத்தைவால்பற்றியீர்த்துப்
படம்படுபைந்தலைமேலெழப்பாய்ந்திட்
டுடம்பையசைத்தானுலின்றுமுற்று
முச்சியினின்றானுலின்றுமுற்றும்.

ப - ரை.—தடம்படு - இடமுடைத்தான, தாமரைப்பொய்கை - தாமரைப்பொய்கையை, கலக்கி - கலங்கச்செய்ததனுல் சீற்றையுடையனுய், விடம்படு - விஷத்தையுமிழ்ந்துகொண்டு கிளர்ந்த, நாகத்தை - காளியனுகிற ஸர்ப்பத்தையொருபொருளாக மதியாதே, வால் - வாலை, பற்றியீர்த்து - பிடித்திழுத்து, படம்படு - படத்தையுடைத்தாய், பை - கோபத்தாலேபரந்த, தலைமேல் - அதின் தலைமேலே, எழப்பாய்ந்திட்டு - விஷத்தைக்கக்கும்படி கிளரக்குதித்து, "இப்பாம்பின்வாயிலே அகப்படப்புகுகிறுன்" என்று படுகொடுபட்டுக் கிடக்கிறவர்கள் தரித்தெழுந் திருக்கும்படியாக, உடம்பை-திருமேனியை, அசைத்தானுல் - அசைத்தாடினவனுலே, இன்றுமுற்றும்—; உச்சியில் - அந்தக்காளியன் இளைத்துவிழுந்து சரணம்புகுமளவும், உசசியில்-பணத்தின்மேல், நின்றானுல் - நெருங்கமிதித்து நின்றவனுலே, இன்றுமுற்றும்—.

வ்யா.—மூன்றும்பாட்டு. (தடமித்யாதி) இடமுடைத்தானதாமரைப்பொய்கையென்றிறே ப்ரஸித்தி-காளியன்புகுவதற்குமுன்பு; பின்பிறே * நச்சமூல்பொய்கையாயிற்று. இப்படிப்பட்டபொய்கையை, "నిపపాత హ్రదే తత్ర సర్పరాజస్య వేగతః । తేనాతిపతతా తత్ర క్షోభితస్స మహాహ్రదః" "நிபபாத ஹ்ரதே தத்ர ஸர்பராஜஸ்ய வேகத: । தேநாதிபததா தத்ர க்ஷோபிதஸ்ஸ மஹாஹ்ரத:" என்கிறபடியே பெரியவிசையோடேயுள்ளேகுதித்துக் கலங்கப்பண்ணி. (விடம்படுநாகத்தைவால்பற்றியீர்த்து) இப்படி கலக்கினவாறே க்ருத்தனுய், விஷத்தையுமிழ்ந்துகொண்டுகிளர்ந்த காளியனுகிற ஸர்ப்பத்தை (உ) ஒருசரக்காக நினை

(க) பக்நாபிமாநராய் - நாம் என்கிற அபிமாநத்தை விட்டவர்களாய். (உ) ஒருசரக்காக - ஒருபொருளாக.

யாதே வாலைப்பிடித்திழுத்து. (படம்படுபைந்தலைமேலெழப்பாய்ந் திட்டு) படத்தையுடைத்தாய், கோபத்தாலே விஸ்த்ருதமான அதி ன்தலைமேலே, அதிர்த்தியாலே விஷத்தைக்கக்கும்படி கிளரக்குதி த்து. (உடம்பை யசைத்தானாலின்றுமுற்றும்) காளியனுடையக்ரோ தத்தையும், கிளர்த்தியையும், அவன்பணங்களிலே இவன் சென்று குதித்தபடியையும் கரையிலேநின்றுகண்டு, "இப்பாம்பின்வாயிலே அகப்படப்புகுகிறானித்தனை, எல்லாரும் முடிந்தோம்" என்று (க) படுகாடுபட்டு விழுந்துகிடக்கிற அநுகூலரான கோபகோபீஜநங்கள் தரித்தெழுந்திருக்கும்படியாக, அங்கேநின்று திருமேனியை அசை த்தாடினவனாலேஇன்றுமுடிவுதோம். (உச்சியில்நின்றானாலின்றுமுற் றும்) அவன் இளைத்து விழுந்து சரணம்புகுமளவும் அந்த (உ)பண த்தின்மேலே நெருங்கமிதித்துநின்றவனாலே இன்று முடிவுதோம். இத்தால் - (ங) ப்ரதிகூலனை (ச) தமித்து, அநுகூலரானவர்களு டைய வயிற்றெரிச்சல் போக்கினவன், ஸ்வசேஷ்டிதங்களாலே எங் களை இப்படி வயிறெரியும்படிபண்ணா நின்றான்; ஆனபின்பு, அவ னாலேநாங்கள் இன்றுமுடிவுதோமென்கை. இருகாற்சொல்லுகிறது- ஆற்றாமையினுடைய அதிசயம். (ங)

மூ.—தேநுகனாவிசெகுத்துப்பனங்கனி
தானெறிந்திட்டதடம்பெருந்தோளினால்
வானவர்கோன்விடவந்தமழைதடுத்
தானிரைகாத்தானாலின்றுமுற்று
மவையுய்யக்கொண்டானாலின்றுமுற்றும்.

ப-ரை.—தேநுகன் - தேநுகனென்கிறவஸுரனுடைய, ஆவி - ப்ராணனை, செகுத்து - ஆகாசத்திலேயெடுத்துச் சுழற்றுகிற வேகத்தாலேமுடித்து, பனங்கனி- ஆஸுரமான பனைமரத்தின் பழங்களுதிரும்படி, தான்—, எறிந்திட்ட-எறிந்த, தடம்பெரும் - மிகவும்பெரிய, தோளினால் - தோளாலே, வானவர் - தேவர்களு க்கு, கோன் - தலைவனான இந்த்ரன், விட - * முனிந்து விடுக்கப்பட்டு, வந்த—, மழை - மழையை, தடுத்து - மறுத்து, ஆநிரை - ஆநிரைகளை, காத்தானால் - ரக்ஷித்தவனாலே, இன்றுமுற்றும்—; அவை - அவற்றை; உய்யக்கொண்டானால்- உஜ்ஜீவிப்பித்தவனாலே; இன்றுமுற்றும்—.

வ்யா.—நாலாம்பாட்டு. (தேநுகனித்யாதி) "గృహీత్వా భ్రామణేనైవ సోమ్బరే గతజీవితమ్ । తస్మిన్నేవ స చిక్షేప ధేనుకం తృణరాజని ॥ తతః ఫలాన్యనేకాని తాలాగ్రాన్నిపతన్ ఖరః। పృథివ్యాం పాతయామాస మహావాతో ఘనానివ" "𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 𑌭𑍍𑌰𑌾𑌮𑌣𑍇𑌨𑍈𑌵 𑌸𑍋𑌮𑍍𑌬𑌰𑍇 𑌗𑌤𑌜𑍀𑌵𑌿𑌤𑌮𑍍। 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵 𑌸 𑌚𑌿𑌕𑍍𑌷𑍇𑌪 𑌧𑍇𑌨𑍁𑌕𑌂 𑌤𑍃𑌣𑌰𑌾𑌜𑌨𑌿। 𑌤𑌤𑌃 𑌫𑌲𑌾𑌨𑍍𑌯𑌨𑍇𑌕𑌾𑌨𑌿 𑌤𑌾𑌲𑌾𑌗𑍍𑌰𑌾𑌨𑍍𑌨𑌿𑌪𑌤𑌨𑍍 𑌖𑌰𑌃। 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂 𑌪𑌾𑌤𑌯𑌾𑌮𑌾𑌸 𑌮𑌹𑌾𑌵𑌾𑌤𑍋 𑌘𑌨𑌾𑌨𑌿𑌵" என்கிறபடியே

(க) படுகாடுபட்டு-வெட்டிவிட்டமரத்தை யொத்தவர்களாய். (உ) பணம் - படம். (ங) ப்ரதிகூலன் - விரோதி. (ச) தமித்து - சிக்ஷித்து.

கழுதையானவடிவைக்கொண்டு, தன்னைநலிவதாக வந்துநின்றதேநு கனுகிறவஸுரனுடைய ப்ராணனை, ஆகாசத்திலேயெடுத்துச்சுழற்று கிறவேகத்தாலேமுடித்து, ஆஸுரமான பனையினுடைய பழங்களுதிரும்படியாக, தானெறிந்திட்ட மிகவும் பெரியதோளாலே. (வான வரித்யாதி) தனக்கிடுகிறசோற்றை விலக்கி மலைக்கிடுவித்ததடியாக மிகவும்குபிதனாய், தேவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரன், ஆய்ப்பாடியிலுள்ள கோக்களும் கோபகோபீஜநங்களும் கடலிலே போய்ப்புகும்படி வர்ஷிக்கச்சொல்லி, புஷ்கலாவர்த்தகாதி மேகங்களை ஏவிவிடுகையாலே அவற்றால் வந்தவர்ஷத்தை, முன்பே "ரக்ஷகம்" என்று சொன்னமலைதன்னையே குடையாகவெடுத்துத்தடுத்து, உள்ளத்தில் தான்செய்யு முபகாரமறியும் பசுக்களைரக்ஷித்தவனாலேஇன்றுமுடிவுதோம். (அவையித்யாதி) அம்மழையிலீடுபடாதபடி நோக்கி, அவற்றை உஜ்ஜீவிப்பித்தவனாலே இன்றுமுடிவுதோம்.

இத்தால்-ரக்ஷ்யவர்க்கத்துக்கு வந்தவர்ஷாபத்தைப் போக்கினவன், எங்களுக்கு விரஹாபத்தை விளைத்து நலியாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்களின்றுமுடிவுதோமென்கை. (ச)

மூ.—ஆய்ச்சியர்சேரியளைதயிர்பாலுண்டு
பேர்த்தவர்கண்டுபிடிக்கப்பிடியுண்டு
வேய்த்தடந்தோளினார்வெண்ணெய்கொண்மாட்டாதங்
காப்புண்டிருந்தானலின்றுமுற்று
மடியுண்டழுதானலின்றுமுற்றும்.

ப-ரை.—சேரி - சேரியிலே, ஆய்ச்சியர் - இடைச்சிகள், அளை - * தாரார் தடந்தோள்க ளுள்ளளவும் கைநீட்டியளைந்த, தயிர் - கடைவதாகவைத்த தயிரையும், பால் - காய்ச்சுவதாகவைத்த பாலையும், உண்டு - அமுதுசெய்து, பேர்த்து - மீண்டு ஒருகால் வெண்ணெய் களவுகாணப்புகுந்த வளவிலே, அவர் - அவர்கள், கண்டு - ஒளித்திருந்துகண்டு, பிடிக்க—, பிடியுண்டு - அவர்கள்கையிலேபிடிபட்டு, தடம் - சுற்றுடைமையாலே, வேய் - மூங்கிலையெத்த, தோளினார் - தோள்களையுடையவர்களுடைய, வெண்ணெய் - வெண்ணெயை, கொள்மாட்டாது - அபஹரிக்கமாட்டாதே, அங்கு - அங்கே, ஆப்புண்டிருந்தானல் - அவர்களால் கட்டுண்டிருந்தவனாலே, இன்றுமுற்றும்—; அடியுண்டு - அவர்கள்கையாலே அடியுண்டிருந்து, அழுதானல் - அழுதவனாலே, இன்றுமுற்றும்—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (ஆய்ச்சியர்சேரி) இடைச்சிகள்சேரியிலே. (அளைதயிர்பாலுண்டு) அவர்கள் கடைவதாக மத்துநாட்டியுடைத்தவளவிலே வைத்ததயிரையும், காய்ச்சுவதாகவைத்த பாலையுமமுதுசெய்து. அன்றிக்கே, அளைதயிரென்றது-அபிநிவேசாதிசயத்தாலே தன்கையுள்ளளவும் போகவிட்டு அளையப்பட்ட தயிரென்னவுமாம். (பேர்த்தவர்கண்டுபிடிக்கப்பிடியுண்டு) "மீண்டு ஒருகால்

வெண்ணெய் களவுகாண" என்று புகுந்தவளவிலே, அவர்கள் ஒளித்திருந்து கண்டுபிடிக்க அவர்கள் கையிலேபிடிபட்டு. (வேயித்யாதி) பசுமையாலும் சுற்றுடைமையாலும் வேய்போலே யிருப்பதாய், பெரிதாயிருந்துள்ள தோளேயுடையவர்களுடைய வெண்ணெயை அபஹரிக்கமாட்டாதே. (அங்கித்யாதி) அங்கேயவர்கள்கட்டக் கட்டுண்டிருந்தவனாலே இன்றுமுடிவுதோம். (அடியுண்டித்யாதி) கட்டினவளவுமன்றிக்கே, அவர்களடிக்க அவர்கள்கையாலே அடியுண்டிருந்தழுதவனாலே இன்றுமுடிவுதோம்.

இத்தால் - அநுகூலரான அபலைகளுக்கு, கட்டிவைக்கலாம்படி பவ்யனாயிருந்தவன்; எங்களுக்கு அபவ்யனாய் (க) மிறுக்குக்களைப் பண்ணாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்கள் இன்றுமுடிவுதோமென்கை. (ரு)

சூ.—தள்ளித்தளர்நடையிட்டிளம்பிள்ளையாய்
உள்ளத்தினுள்ளேயவளையுறநோக்கிக்
கள்ளத்தினால்வந்தபேய்ச்சிமுலையுயிர்
துள்ளச்சுவைத்தானாலின்றுமுற்றுந்
துவக்கறவுண்டானாலின்றுமுற்றும்.

ப-ரை.—தள்ளி - தடுமாறி; தளர்நடையிட்டு—, இளம்பிள்ளையாய் - மிகவிளைனாயிருக்கச்செய்தே, உள்ளத்தினுள்ளே - தன்மநஸ்ஸினுள்ளே, அவளை—, உறநோக்கி - "நம்மை நலியவருகிறாள்" என்று உறைக்கப்பார்த்து, கள்ளத்தினால்-தன்வடிவைமறைத்துத் தாய்வடிவுகொண்டு க்ர்த்ரிமத்தாலே, வந்த—, பேய்ச்சி-பூதநையுடைய, முலை-முலைப்பாலோடே, உயிர்-அவளுயிரையும், துள்ள - அவள்துடிக்கும்படி, சுவைத்தானால் - பசையற வுண்டவனாலே, இன்றுமுற்றும்—; அந்நச்சுமுலையையுண்ணாநிற்கச்செய்தே, துவக்குஅற - அந்நஞ்சில் தனக்கொரு ஸ்பர்சமற, உண்டானால் - உண்டவனாலே, இன்றுமுற்றும்—.

வ்யா.—ஆறும்பாட்டு. (தள்ளித்தளர்நடையிட்டு) காலூன்றி நடக்கத் தரிப்பில்லாமையாலே தடுமாறித்தளர்நடையிட்டு. (இளம்பிள்ளையாய்) முக்தசிசுவாய். இத்தால் - நடக்கைக்குங்கூட பலமில்லாத அதிபாலனாயிருக்கச்செய்தேயென்கை. (உள்ளத்தினுள்ளே அவளை யுறநோக்கி) பிறர்க்குத்தெரியாதபடி தன்மநஸ்ஸினுள்ளே "நம்மைநலிவதாகவருகிறவள்-இவள்" என்று அவளை உறைக்கப்பார்த்து. (கள்ளமித்யாதி) தன்வடிவைமறைத்துத் தாய்வடிவைக்கொண்டு க்ர்த்ரிமத்தாலேவந்த பூதநையுடையமுலைப்பாலோடே அவளுயிரையும் அவள்துடிக்கும்படி பசையறவுண்டவனாலே இன்றுமுடிவுதோம். (துவக்கறவித்யாதி) அவள் நச்சுமுலையை யுண்ணாநிற்கச்செய்தே, அந்நஞ்சில் தனக்கொரு ஸ்பர்சமற வுண்டவனாலே யின்று முடிவுதோம்.

(க) மிறுக்கு - தீங்கு.

இத்தால் - ஆச்ரிதர்க்கு நற்சிவனனதன்னை பூதனைகையில் அகப்படாமல் நோக்கி உபகரித்தவன், எங்களுக்குத் தன்னைத்தாராமல் அருமைப்படுத்தாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்கள் இன்றுமுடிவுதோமென்கை. (௬)

மூ.—மாவலிவேள்வியின்மாணுருவாய்ச்சென்று
மூவடிதாவென்றிரந்தவிம்மண்ணினை
ஓரடியிட்டிரண்டாமடிதன்னிலே
தாவடியிட்டானாலின்றுமுற்றும்
தரணியளந்தானாலின்றுமுற்றும்.

ப-ரை.—மாவலி - மஹாபலியினுடைய, வேள்வியில் - யாகத்திலே, மாணுருவாய் - வாமநவேஷத்தையுடையனாய்க்கொண்டு, சென்று - வடிவழகாலும் நடையழகாலும் தான்சொன்னதை அவன் மறுக்காதபடிசென்று, மூவடிதாவென்று - என்காலாலே மூன்றடிதாவென்று, இரந்த - இரந்து நீரேற்றுப்பெற்ற, இம்மண்ணினை - இந்தபூமியை, ஓரடியிட்டு - மண்ணின்பரப்படங்கலும் தனக்குள்ளேயாம்படி யோரடியிட்டு, இரண்டாமடிதன்னிலே - இரண்டாமடியிலே, தாவடியிட்டானால் - மேலுலகங்களெல்லாவற்றையும் தனக்குள்ளேயாம்படி தாவியடியிட்டவனாலே, இன்றுமுற்றும்—; தரணி - லோகத்தை, அளந்தானால் - அளந்தவனால், இன்றுமுற்றும்—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (மாவலிவேள்வியில்) இந்த்ரனுடைய ஐச்வர்யத்தை பலத்தாலே அபஹரித்துக்கொண்டு, "கோவாகிய மாவலி" என்கிறபடியே தன்னரசாய், அழிக்கவொண்ணாதபடி (க) ஔதார்யமென்பதொரு குணத்தையுடையனாயிருந்த மஹாபலியினுடைய யாகத்திலே. (மாணுருவாய்ச்சென்று) "கள்ளக்குறளாய்" என்கிறபடியே-அவனை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணுகைக்காக வாமநவேஷத்தைக்கொண்டு, வடிவழகாலும் நடையழகாலும் அவன் அபஹ்ர்தசித்தனாய் தான்சொன்னதுமறுமற்செய்யும்படிசென்று. (மூவடிதாவென்றிரந்த இம்மண்ணினை) அவன் சடக்கென இசைந்து தருகைக்காகவும், பின்பு ஓரடிக்கு அவனைச் சிறைவைக்கைக்காகவும் "என்காலாலே மூன்றடிதா" என்று இரந்துபெற்ற இப்பூமியை. மண்ணென்கிறவிது-மற்றலோகங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். (ஓரடியித்யாதி) அளக்கிறவளவிலே பூமிப்பரப்படங்கலும் தனக்குள்ளேயாம்படி ஓரடியிட்டு இரண்டாமடிதன்னிலே. (தாவடியித்யாதி) (உ) ஊர்த்வலோகங்களடங்கலும் தனக்குள்ளேயாம்படி தாவியடியிட்டவனாலே இன்றுமுடிவுதோம். (தரணியித்யாதி) திருவடிகளின் மார்த்தவம்பாராதே, ஓராச்ரிதனுக்காக இப்படி லோகத்தை யளந்தவனாலே யின்று முடிவுதோம்.

---

(க) ஔதார்யம் - கொடுக்குந்தன்மை. (உ) ஊர்த்வலோகங்கள் - மேலுலகங்கள்.

இத்தால் – தன்னையழியமாறியும் ஆச்ரிதரபேக்ஷிதம் செய்யுமவன்எங்களபேக்ஷிதம்செய்யாதேயீடுபடுத்தாநின்றான். ஆனபின்பு, அவனாலே நாங்கள் முடிவுதோமென்கை. (எ)

மூ.—தாழைதண்ணாம்பற்றடம்பெரும்பொய்கைவாய்
வாழுமுதலைவலைப்பட்டுவாதிப்புண்
வேழந்துயர்கெடவிண்ணோர்பெருமானாய்
ஆழிபணிகொண்டானாலின்றுமுற்று
மதற்கருள்செய்தானாலின்றுமுற்றும்.

ப-ரை.—தாழை-கரையிலே தாழைகளையும், உள்ளே, தண் – குளிர்ந்த, ஆம்பல்-ஆம்பல்களையுமுடைத்தாய், தடம்பெரும்-மிகவும் பெரிதாயிருந்துள்ள, பொய்கைவாய் – * மீனமர்பொய்கையிலே, வாழும் – வர்த்திக்கிற, முதலை – முதலையாகிய, வலை – வலையிலே, பட்டு – அகப்பட்டு, வாதிப்புண் – வருந்தின, வேழம்-ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, துயர் – "கையில்பூசெவ்வி யழிவதற்குமுன்னே திருவடிகளிலே சாத்தப்பெற்றிலோம்" என்கிற மநோதுக்கம், கெட – தீரும்படியாக, விண்ணோர் – நித்யஸூரிகளுக்கு, பெருமானாய் – ஸ்வாமியானமைதோற்றப் பெரியதிருவடியைமேற் கொண்டுசென்று, ஆழி – திருவாழியாலே முதலையைத்துணித்து அர்தச்சிறையைவிடுவித்து, பணிகொண்டானால் – அவன்கையில் பூவைத் திருவடிகளிலே யிடுவித்துக்கொண்டவனாலே, இன்றுமுற்றும்—; அதற்கு – அந்தவானைக்கு, அருள்செய்தானால் – அப்படியருளைப்பண்ணினவனால், இன்றுமுற்றும்—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (தாழையித்யாதி) கரையிலே தாழைகளையும் உள்ளேகுளிர்ந்த ஆம்பல்களையு முடைத்தாய், மிகவும்பெரிதாயிருந்துள்ளபொய்கையிடத்திலே. தாழை-கரையிலுண்டானசோலைக்கு உபலக்ஷணம். "மொய்ம்மாம் பூம்பொழிற்பொய்கை" என்றாரிறே ஆழ்வார். ஆம்பல்-உள்ளுண்டான புஷ்பங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். "வைகுதாமரைவாங்கியவேழம்" என்கிறபடியே தாமரை நெருங்கப் பூத்துக்கிடக்கிறதுகண்டு அதுபறிக்கைக்காகவிறே "உள்ளே துஷ்டஸத்த்வம் கிடக்கிறது" என்று அறியாதே ஸ்ரீகஜேந்த்ரன் றான் இப்பொய்கையிலே(க)அத்யாதரத்தோடேசென்று இழிந்தது. (வாழுமுதலைவலைப்பட்டு) நெடுங்காலமெல்லாம் "நம்சாபமோக்ஷத்துக்கு ஓரானைவருவதெப்போதோ" என்கிறநினைவோடே, அதினுள்ளே வர்த்தித்தமுதலையாகிற வலையிலேயகப்பட்டு. (வாதிப்புண் வேழம்துயர்கெட) "[illegible]" "[illegible]" என்கிறபடியே அது நீருக்கிழுக்க, தான்கரைக்கிழுக்க, "[illegible]" "[illegible]" என்கிறபடியே நெடுங்காலம் இப்படி(உ)பாதைப்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய "கையிற்பூ செவ்வியழியாமல் திருவடிகளிலே

(க) அத்யாதரம் - மிகவிருப்பு. (உ) பாதைப்பட்ட - வருந்தின.

சாத்தப்பெற்றிலோமே” என்கிறக்லேசம்தீரும்படியாக. (விண்ணோர் பெருமானு யாழிபணிகொண்டானுலின்றுமுற்றும்) * அயர்வறுமமரர்களதிபதியானமைதோற்றப் பெரியதிருவடியை மேற்கொண்டு சென்று, “க்ராஹக்ரஸ்தேகஜேந்த்ரே” “ஹ்ராஹஞ்சக்ரேணாயவம்” என்கிறபடியே திருவாழியாலே முதலையைத்துணித்து அந்தச்சிறையைவிடுவித்து, அவன்கையில்பூவைத் திருவடிகளிலே யிடுவித்துக்கொண்டு இப்படி ரக்ஷித்தவனாலே இன்று முடிவுதோம். (அதற்கித்யாதி) “கைம்மாவுக்கருள்செய்த” என்கிறபடியே அந்தவானைக்கு அப்படி அருள்செய்தவனாலே இன்று முடிவுதோம்.

இத்தால் – ஆச்ரிதனுடைய ஆர்த்திதீரச்சென்று ரக்ஷித்தவன் எங்களை ஆர்த்தர்களாயிடுபடும்படி பண்ணாநின்றான்; ஆனபின்பு, அவனாலேநாங்கள் இன்று முடிவுதோமென்கை. (அ)

மூ.—வானத்தெழுந்தமழைமுகில்போலெங்கும்
கானத்துமேய்ந்துகளித்துவிளையாடி
ஏனத்துருவாயிடந்தவிம்மண்ணினைத்
தானத்தேவைத்தானலின்றுமுற்றுந்
தரணியிடந்தானலின்றுமுற்றும்.

ப-ரை.—வானத்து - ஆகாசத்திலே, எழுந்த - நீர்கொண்டெழுந்த, மழைமுகில்போல் - காளமேகம்போன்ற நிறத்தையுடைய, ஏனத்துருவாய் - வராஹரூபியாய், கானத்து - காட்டிலே, எங்கும் - எல்லாத்திசைகளிலும் ஸஞ்சரித்து, மேய்ந்து - கோரைக்கிழங்குமுதலியவற்றைஜீவித்து, களித்து - செருக்கையுடையதாய்க்கொண்டு, விளையாடி—, இடந்த - அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்த, இம்மண்ணினை இந்தபூமியை, தானத்தே-தனக்குரியவிடத்திலே, வைத்தானால் - வைத்தவனாலே, இன்றுமுற்றும்—; தரணி - இப்படி உருத்தெரியாதே கிடந்த இந்தபூமியை, இடந்தானால் - உத்தரித்தவனாலே, இன்று முற்றும் —.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வானத்தெழுந்த மழைமுகில்போல்) ஆகாசத்திலே நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே. இத்தால் - திருமேனியின் நிறத்தைச்சொல்லுகிறது. (எங்கும்கானத்துமேய்ந்து) காட்டிலே(க) ஒருப்ரதிபக்ஷபயமற எங்கும் ஸஞ்சரித்து, கோரைக்கிழங்குமுதலானவற்றை ஜீவித்து. (களித்துவிளையாடி) ஜாத்யுசிதமான கர்வத்தோடே கூடிக்கொண்டு விளையாடி. (ஏனத்துருவாய்) நீருக்கும் சேற்றுக்குமிருயாத வராஹவேஷத்தை யுடையனாய். (இடந்தவித்யாதி) (உ) அண்டபித்தியில் நின்றும் (ங) ஒட்டுவிடுவித்தெடுத்த இந்தபூமியை, “நான்றிலவேழ்மண்ணும் தானத்தவே” என்னும்படி ஸ்வஸ்தாநத்திலே வைத்தவனாலே இன்று முடிவுதோம். (தரணியித்யாதி) இப்படி நிமக்நையானபூமியை உத்தரித்தவனாலே இன்று முடிவுதோம்.

(க) ப்ரதிபக்ஷபயமற - பகைவர்பயமில்லாமல். (உ) அண்டபித்தி - அண்டமாகியசுவர். (ங) ஒட்டு - ஸம்பந்தம்.

இத்தால்-(க) ப்ரளயாபந்நையான பூமியையெடுத்தவன், எங்களை விரஹப்ரளயத்தே தள்ளாநின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்களின்று முடிவுதோமென்கை. (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அங்கமலக்கண்ணன்றன்னையசோதைக்கு
மங்கைநல்லார்கடாம்வந்துமுறைப்பட்ட
அங்கவர்சொல்லைப்புதுவைக்கோன்பட்டன்சொல்
இங்கிவைவல்லவர்க்கேதமொன்றில்லையே.

ப-ரை.—மங்கை - பருவத்தாலிளையராய், நல்லாரவர்கள்தாம் - க்ர்ஷ்ணனளவிலே ஸ்நேஹிகளுமாயிருக்கிற பெண்களானவர்கள், அம்-கடைசிவந்துசெவ்வரிபாய்ந்து கருணைநனைந்து கருவிழிமிளிர்ந்து தெளிந்துகுளிர்ந்து அகன்றுமலர்ந்து அழகிதாயிருக்கிற, கமலம் - செந்தாமரைமலர்போன்ற, கண்ணன்றன்னை - திருக்கண்களை யுடையவனைப்பற்ற, அங்கு - அவளகத்திலே, வந்து—, அசோதைக்கு - தாயாரான யசோதைப்பிராட்டியிடத்திலே, முறைப்பட்ட - தங்களீடுபாடுதோற்றமுறையிட்ட, சொல்லை—, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, கோன் - தலைவரான, பட்டன் - பெரியாழ்வாரருளிச்செய்த, சொல்லிவை - சொல்லானவிவற்றை, இங்கு - இந்தலோகத்திலே, வல்லவர்க்கு - கருத்துடன் கற்க வல்லவர்களுக்கு, ஏதம் - பொல்லாங்கென்னப்பட்டவை, ஒன்று - ஏகதேசமும், இல்லை - இல்லாதபடிபோம்.

வ்யா.—(அங்கமலக் கண்ணன்றன்னை) சிவப்பாலும் விகாஸத்தாலும் செவ்வையாலும் அழகிய தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்களை யுடையவனைப்பற்ற. (அசோதைக்கு) தாயாரான யசோதைப்பிராட்டிக்கு. (மங்கைநல்லார்கள்தாம்)பருவத்தாலிளையராய் க்ர்ஷ்ணனளவிலே ஸ்நேஹிகளுமாயிருக்கிற பெண்களானவர்கள்தாங்கள். (அங்கு - வந்துமுறைப்பட்ட) அவளகத்திலேவந்து தங்களீடுபாடுதோற்றமுறைப்பட்ட. (அவர்சொல்லை) அவர்கள் சொல்லை. (மங்கைநல்லாரானவர்கள்தாம் - அங்கமலக்கண்ணன்றன்னைப்பற்ற-அங்கு-வந்து-அசோதைக்கு- முறைப்பட்ட-சொல்லை) என்றந்வயம். (புதுவைக்கோன்பட்டன்சொல்-இவை) ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த சொல்லானவிவற்றை. (இங்கு - வல்லவர்க்கு) இந்தலோகத்திலே ஸாபிப்ராயமாக வல்லவர்களுக்கு. (ஏதமொன்றில்லையே) பொல்லாங்கென்னப்பட்டவை யொன்றுமில்லாதபடிபோம்.

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

---

அடிவரவு. — ஆற்றில்குண்டலம்தடம் தேநுகனுய்ச்சிதள்ளி மாவலிதாழை வானத்து அங்கமலந்தன்னோர்.

ஆ திருமொழி கக-க்கு, பாட்டு-உகo.

---

(க) ப்ரளயாபந்நையான - ப்ரளயாபத்தையடைந்த.

அ.—திருவாய்ப்பாடியில் ப்ராப்தயௌவநைகளாய் லீலாபரை களாய்த் திரிகிறபெண்கள் திறகத்தில் அவன் துஸ்ஸஹமான தீம்பு களைச்செய்து தங்களைநலிகிற ப்ரகாரத்தை, தாயாரான யசோதைப் பிராட்டிக்குவந்து முறைப்பட்ட ப்ரகாரத்தை, தத்பாவயுக்தராய்க் கொண்டு, தாமும்அவர்களைப்போலேபேசி அவனுடைய அந்தலீலா வ்யாபாரரஸத்தை அநுபவித்தாராய்நின்றார்-கீழ்; மாத்ர்ஸ்நேஹத் தாலேபலகாலும் அவனை அம்மமுண்ணவழைத்தும் அம்மமூட்டியும் போரும் யசோதைப்பிராட்டி, அவனுடைய பருவத்தின் இளமை யையும் அதுக்கநுரூபமல்லாதபடியான (க) அதிமாநுஷ சேஷ்டித ங்களையும்கண்டு, அவனை "தன்னுடையபிள்ளை" என்றுநினைத்திருக் கைதவிர்ந்து, "(உ) அநியாம்யனைப் (ந) அப்ரதிஹதலீலாரஸபர னைஸர்வேச்வரன்" என்றநுஸந்தித்து அவனைக்குறித்து அவைதன் னைச்சொல்லி, "உனக்கம்மந்தரவஞ்சுவன்" என்று பலகாலும்பே சினபாசுரத்தை, ததவஸ்தாபந்நராய்க்கொண்டு தாமு மப்படியே பேசி அந்தரஸத்தை அநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

மூ.—தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான், பொன்னேய்நெய்யொடுபாலமுதுண்டொரு புள்ளுவன்பொ ய்யேதவழும், மின்னேர்நுண்ணிடைவஞ்சமகள் கொங்கைது ஞ்சவாய்வைத்தபிரானே, அன்னேயுன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே.

ப - ரை.—தன் - தனக்கு, நேர் - பிறப்புமுதலியவற்றால் ஒப்பான, ஆயி ரம் பிள்ளைகளோடு - ஆயிரம் பிள்ளைகளோடே, தளர்நடையிட்டு—, வரு வான் - வருமவனாய்; பக்வம்கெடாமலுருக்கித் தோய்ந்ததாகையாலே, பொ ன்னேய் - பொன்னோடொத்த நிறத்தையுடைத்தான, நெய்யொடு - நெய்யை யும், பாலமுது - பாலமுதையும், உண்டு—, ஒரு - ஒப்பற்ற, புள்ளுவன் - கள் ளனாய்க்கொண்டு, பொய்யே - பொய்யாக, தவழும் - தவழுமவனாய்; மின்-மின் னலை, நேர் - ஒத்த, நுண் - நுண்ணிய, இடை - இடையையும், வஞ்சமகள் - வஞ்சநத்தையுமுடையளான பேய்ச்சியானவள், துஞ்ச - முடியும்படி, கொங் கை - அவள் முலையிலே, வாய்வைத்த - திருப்பவளத்தைவைத்துண்ட, பிரா னே - உபகாரகனானவனே; அன்னே - அம்மே, உன்னை - இவ்வளவும் என்பிள் ளையாக நினைந்திருந்தவுன்னை, அறிந்துகொண்டேன் - இன்று * அருந்தெய்வ மென்று அறிந்துகொண்டேன்; ஆகையால், உனக்கு—, அம்மந்தர - அம்மம் தருகைக்கு, அஞ்சுவன்-பயப்படாநின்றேன்.

வ்யா.—முதற்பாட்டு. (தன்னேரித்யாதி) "க்ர்ஷ்ணன் திரு வாய்ப்பாடியிலே வந்தவதரிக்கிறபோது அவனோடொக்க ஆயிரம் பிள்ளைகள் சேரப்பிறந்தார்கள்" என்றுசொல்லுவதொரு ப்ரஸித்தி

(க) அதிமாநுஷசேஷ்டிதம் - மனிதரைக்கடந்தசெய்கை. (உ) அநியாம் யன் - ஒருவரால் நியமிக்கப்படாதவன். (ந) அப்ரதிஹதலீலாரஸபரன்-இடை யூறில்லாத விளையாட்டில் விருப்பமுள்ளவன்.

உண்டிறே; பிறப்பாலும்வளர்ப்பாலும்வயஸ்ஸாலும்வளர்த்தியாலும் அந்யோந்யமுண்டான ஸ்நேஹத்தாலும் தன்னேடொக்கச் சொல்லலாம்படி யிருப்பார் ஆயிரம்பிள்ளைகளோடேயாய்த்துத் தளர்நடையிட்டு வருவது. "பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்த:" "ப்ராதுர்ஜ்யேஷ்டஸ்ய" என்று பால்யம்துடங்கிப்பெருமாளையொழிய தரிக்கமாட்டாத இளையபெருமாளைப்போலே, இவர்களும் பால்யமேதுடங்கி இவனையொழிய தரிக்கமாட்டாத ஸ்நேஹத்தையுடையராய், எப்போது மொக்கக்கூடித் திரிகையாலே இவர்களோடேகூடியே தளர்நடையிட்டு வருமென்னலாமிறே. தளர்நடையிட்டு வருமவனேயென்று (க) ஸமபுத்தி. (பொன்னேய் நெய்யொடுபாலமுதுண்டு) செவ்விகுன்றுமலுருக்கித் (உ) துஞ்சினதாகையாலே பொன்னேடொத்த நிறத்தை யுடைத்தான நெய்யோடே, ரஸ்யமான பாலமுதையு முண்டு. (ஒருபுள்ளுவன் பொய்யேதவழும்) புள்ளுவமாவது - மெய்போலேயிருக்கும்பொய். உண்டிருக்கச்செய்தே "உண்டிலேன்" என்கையாலே "அஸத்யவாதி" என்றுதோற்றுமிறே. ஒரு புள்ளுவனென்றது - களவுக்கு அத்விதீயனென்றபடி. (பொய்யேதவழும்) தளர்நடையிட்டுத்திரிகிறவன் அதுக்கு க்ஷமரல்லாதாரைப்போலே தவழுகிறதும் க்ர்த்ரிமமென்றுதோற்றுமிறே; ஆகையாலிறே பொய்யேதவழுமென்றது. இதுவும், பொய்யேதவழுமொருபுள்ளுவனே என்றுஸம்புத்தி.

(மின்னேரித்யாதி) * பெற்றதாய்போலே வருகையாலே, மின்னேடொத்த நுண்ணிய இடையையும் வஞ்சநத்தையுமுடையளான பேய்ச்சியானவள் முடியும்படி அவள்முலையிலே திருப்பவளத்தை வைத்துண்ட உபகாரகனனவனே. இவ்விடத்தில் உபகாரமாவது, * உலகங்கட்கெல்லா மோருயிரான தன்னை முடிக்கவந்தவளை நிரஸித்து, தன்னைநோக்கித் தந்தவிதுவிறே. (அன்னே) அதாவது - அம்மே! என்று அச்சத்தாலேசொல்லுகிற வார்த்தை. (உன்னையறிந்துகொண்டேன்) முன்பெல்லாம் என்பிள்ளையாகவும் நான்தருகிற அம்மம் முதலானவை உனக்கு தாரகாதிகளாகவும் நினைத்திருந்தேன்; உன்படிகள் அதிமாநுஷங்களாகையாலே "ஆயர்புத்திரனல்லனருந்தெய்வம்" என்கிறபடியே-இவன் நம்மோடுஸஜாதீயனுமல்லன், நான்கொடுக்கிறவை யிவனுக்கு தாரகாதிகளுமல்லவென்று நன்றாகவறிந்து கொண்டேன். (உனக்கஞ்சுவனம்மந்தரவே) இப்படியிருக்கிறவுனக்கு அம்மந்தரவஞ்சுவன். "தவழுகைபொய்" என்றவோபாதி "அம்மம்" என்கிற இவன்சொலவும் பொய்யென்று தோற்றுநிற்கச் செய்தேயும் அவன்சொலவை அநுகரித்துச்சொல்லுகிருள். (க)

(க) ஸம்புத்தி - விளிவேற்றுமை. (உ) துஞ்சினது - தோய்ந்தது.

மூ.—பொன்போன்மஞ்சநமாட்டியமுதூட்டிப் போனேன்வருமளவிப்பால், வன்பாரச்சகடமிறச்சாடிவடக்கிலகம்புக்கிருந்து, மின்போனுண்ணிடையா ளொருகன்னியை வேற்றுருவஞ்செய்துவைத்த, அன்பாவுன்னேயறிந்துகொண்டேனுனக்கஞ்சுவனம்மந்தரவே.

ப-ரை.—பொன்போல் - பொன்போலேதிருமேனியழகுவிளங்கும்படியாக, மஞ்சநமாட்டி - திருமஞ்சநஞ்செய்து, அமுதூட்டி - அமுதுசெய்யப்பண்ணி, போனேன் - யமுனையாற்றில் குளிப்பதாகப் போனநான், வருமளவிப்பால்-வருவதற்குமுன்னே, வல் - வலியதாய், பாரம் - கனவிதாயிருக்கிற, சகடம்-சகடமானது, இற - கட்டுக்குலேந்துபோம்படியாக, சாடி - திருவடிகளாலே யுதைத்து, வடக்கில் - இவ்வகத்துக்கு வடக்கிலுள்ள, அகம் - அகத்திலே, புக்கு நுழைந்து, இருந்து—, மின்போல் - மின்னலேயொத்த, நுன் - நுண்ணிதான, இடையாள் - இடையையுடையளாய், ஒருகன்னியை - யௌவனையாயிருப்பாளொருத்தியை, புணர்ச்சிக்குரியகுறிகளாலே, வேறு - மாறுபட்ட, உருவம் - வடிவையுடையளாம்படி, செய்துவைத்த-பண்ணிவைத்தவனாய், அன்பா-கண்டதொன்றிலே மேல்விழும்படியான ஸ்நேஹத்தையுடையனானவனே, உன்னே—, அறிந்துகொண்டேன் - எங்களைக் காட்டிலும் வேறுபாடுடையனென்று அறிந்துகொண்டேன்; மற்றதுமுன்போலாம்.

வ்யா. — இரண்டாம்பாட்டு. (பொன்னித்யாதி) திருமேனியழகு விளங்கும்படியாகத் திருமஞ்சநஞ்செய்து, "என்னிளங்கொங்கையமுதமூட்டி" என்கிறபடியே அமுதுசெய்யப்பண்ணி, "யமுனைநீராடப்போனேன்" என்கிறபடியே யமுனையாகிறவாற்றிலே குளிப்பதாகப்போனநான் வருவதற்குமுன்னே. (வன்பாரச்சகடமிறச்சாடி) வலியதாய்க் கனவிதாயிருக்கிற சகடமானது கட்டுக்குலேந்து முறிந்துபோம்படியாக, முலைவரவுதாழ்த்துச்சீறி நிமிர்த்ததிருவடிகளாலேஉதைத்து. (வடக்கிலகம்புக்கிருந்து) இவ்வகத்துக்கு வடவருகிலகத்திலேபுக்கிருந்து. (மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை) மின்போலே நுண்ணிதான இடையையுடையளாய், நவயௌவனையாயிருப்பாளொருத்தியை. (வேற்றுருவம் செய்துவைத்த) (க) ஸம்போகசிஹ்நங்களாலே (உ) விக்ருதவேஷையாம்படி பண்ணிவைத்த. (அன்பா) கண்டதொன்றிலே மேல்விழும்படியான ஸ்நேஹத்தையுடையவனே. இத்தால் - தீம்பனென்றபடி. (உன்னேயறிந்துகொண்டேன்) இவன் நம்மோடு ஸஜாதீயனல்லன், வ்யாவ்ருத்தனென்று உன்னே உள்ளபடியறிந்துகொண்டேன். (உனக்கஞ்சுவனம்மந்தரவே) ஆனபின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். (உ)

(க) ஸம்போக சிஹ்நங்கள் - புணர்ச்சிக்குறிகள். (உ) விக்ருதவேஷையாம்படி - மாறுபட்டவேஷத்தை யுடையளாம்படி.

மூ.—கும்மாயத்தொடுவெண்ணெய்விழுங்கிக் குடத்தயிர்சாய்த்துப்பருகிப், பொய்ம்மாயமருதானவசுரரைப் பொன்றுவித்தின்றுநீவந்தாய், இம்மாயம்வல்லபிள்ளைநம்பீயுன்னை யென்மகனேயென்பர்நின்றார், அம்மாவுன்னையறிந்துகொண்டேனுனக்கஞ்சுவனம்மந்தரவே.

ப-ரை.—கும்மாயத்தொடு - குழையச்சமைத்தபருப்பையும், வெண்ணெய்-வெண்ணெயையும், விழுங்கி-சேரவிழுங்கியும், குடம்-குடத்திலேநிறைத்திருந்த, தயிர் - தயிரை, சாய்த்து - அத்தோடேசாய்த்து, பருகி-அமுதுசெய்தும், பொய் - பொய்யே, மாயம்-ஆச்சரியமான, மருதான-மருதுகளாய்நின்ற, அசுரரை-அஸுரர்களை, பொன்றுவித்து - மறியவிழுந்து முடியும்படிபண்ணியும், இன்று - இப்போது, நீ—, வந்தாய் - ஒன்றும் செய்யாதாரைப்போலேவந்தவனாய்; இ - இந்த, மாயம் - ஆச்சரியங்களை, வல்ல - செய்யவல்லனாய், பிள்ளை-பிள்ளைத்தனத்தால், நம்பீ - பூர்ணனானவனே, உன்னை-இப்படியிருக்கிறவுன்னை, நின்றார் - நடுநின்றவர்கள், என் - என்னுடைய, மகனென்பர்-மகனென்றுசொல்லுவர்கள்; அம்மா - எல்லார்க்கும் ஸ்வாமி, உன்னை—, அறிந்துகொண்டேன் - உள்ளபடியறிந்துகொண்டேன்; மற்றதுமுன்போலாம்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (கும்மாயமித்யாதி) குழையச்சமைத்துவைத்தபருப்போடே வெண்ணெயையும்சேரவிழுங்கி. (குடத்தயிரித்யாதி)குடத்திலேநிறைத்திருந்ததயிரை அத்தோடேசாய்த்தமுதுசெய்து. (பொய்யித்யாதி)தங்கள்வேஷம்அதுவன்றிக்கேயிருக்கச்செய்தே,பொய்யே ஆச்சர்யமானமருதுகளாய்நின்ற அஸுரர்களை மறியவிழுந்து முடியும்படிபண்ணி. (இன்றுநீவந்தாய்) இப்போது ஒன்றும்செய்யாதாரைப்போலே நீவந்தாய். (இம்மாயம்வல்லபிள்ளைநம்பீ) இந்த ஆச்சர்யங்களைச்செய்யவல்லனாய், பிள்ளைத்தனத்தால் பூர்ணனானவனே. (உன்னையென்மகனேயென்பர்நின்றார்) இப்படியிருக்கிறவுன்னை உன்வாசியறியாத நடுநின்றவர்கள் "என்னுடைய மகன்" என்றுசொல்லுவர்கள். (அம்மாவுன்னையறிந்துகொண்டேன்) நான் அங்ஙனன்றிக்கே, "என்மகனன்று" என்றும், "எல்லார்க்கும் ஸ்வாமி" என்றும் உன்னை உள்ளபடியறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆனபின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். (௩)

மூ. — மையார்கண்மடவாய்ச்சியர்மக்களைமையன்மைசெய்தவர்பின்போய்க், கொய்யார்பூந்துகில்பற்றித்தனிநின்றுகுற்றம்பலபலசெய்தாய், பொய்யாவுன்னைப்புறம்பலபேசுவபுத்தகத்துக்குளகேட்டேன், ஐயாவுன்னையறிந்துகொண்டேனுனக்கஞ்சுவனம்மந்தரவே.

ப-ரை.—அஞ்சனத்தாலே, ஆர் - அலங்க்ருதமான, கண்-கண்களையும், மடம்-ஆத்மகுணங்களில் தலையான மடப்பத்தையும், ஆய்ச்சியர் - இடைக்குடிப்பிறப்பையுமுடையரான, மக்களை - பெண்களை, மையன்மைசெய்து - உன்னுடைய வழகு முதலியவற்றால் பிச்சேற்றி, அவர் - அவர்களுடைய, பின்போய் -

பின்சென்று, கொய் - கொய்தல், ஆர் - ஆர்ந்திருந்துள்ள, பூ - அழகிய, துகில்- பரிவட்டங்களை, பற்றி - பிடித்து, தனிநின்று - தனியிடத்திலேநின்று, பலபல- இத்தனையென்று எண்ணிச்சொல்லிமுடியாத, குற்றம் - குற்றங்களை, செய்தா ய் - செய்தற்றுயென்ன ; நானொருகுற்றமும் செய்திலேன், நீகண்டதுண்டாகில் ஒன்றுசொல்லிக்காணுயென்ன ; பொய்யா - க்ர்த்ரிமனே, உன்னை—, பேசுவ - பிறர்பேசுவனவாகிய, புறம்பல - பொல்லாங்குகள், புத்தகத்துக்கு - ஒருபுஸ் தகம் நிறையவெழுதுகைக்கு, உள-தகுந்துள்ளவற்றை, கேட்டேன்—; அவர்கள் சொன்னதும் நீகேட்டதுமோ ஸத்யம், நான்சொன்னதன்றே ஸத்யமென்ன ; ஐயா-க்ர்த்ரிமர்க்கெல்லாம் ஸ்வாமியானவனே,உன்னை—, அறிந்துகொண்டேன்- அழகிய சொல்லையும் வியப்புறத்தக்கசெய்கையு முடையவனென்று அறிந்து கொண்டேன்; மற்றதுமுன்போலாம்.

வ்யா. — நாலாம்பாட்டு. (மையாரித்யாதி) அஞ்சநத்தாலே அலங்க்ர்தமான கண்களையும், ஆத்மகுணங்களில் ப்ரதாநமான மடப்பத்தையும், குடிப்பிறப்பையுமுடையரானபெண்களை. (மைய ன்மைசெய்து) உன்பக்கலிலே ஸ்நேஹிகளாய் தாய்மார்முதலானோர் க்கு வசவர்த்திகளாகாதபடி உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே (க) பிச்சேற்றி. (அவர்பின்போய்) அவர்களுடையபின்னேபோய். (கொய்யார்பூந்துகில்பற்றி) கொய்தலார்ந்திருந்துள்ள அழகிய பரி வட்டங்களைப்பிடித்து. இத்தால் - அவர்கள் பரிவட்டங்களின் (உ) கொய்சகங்களைப்பிடித்துக்கொண்டு, அவர்கள் பின்னேபோயென் கை. (தனிநின்று குற்றம் பலபலசெய்தாய்) ஏகாந்தஸ்தலத்திலே நின்று (௩) அவாச்யமான வ்யாபாரங்களை (ச) அபரிகண்யமாம்படி செய்தாய். ஆவதென், நானொருகுற்றமும்செய்திலேன்,நீமற்றுக்கண் டாயோவென்ன (பொய்யாவித்யாதி) க்ர்த்ரிமனே உன்னைப்பொல் லாங்கு பலவற்றையும் பிறர்சொல்லுமவைகள் ஒருபுஸ்தகம் நிறைய வெழுதத்தக்கவை, கேட்டேன். அவர்கள் சொல்லுமதும் நீகேட்டது மேயோஸத்யம், நான்சொன்னதன்றே ஸத்யமென்ன; (ஐயா) இதெ ன்ன தெளிவுதான்! என்று கொண்டாடுகிறாள். அன்றிக்கே, ஐயாவெ ன்று - க்ர்த்ரிமர்க்கெல்லாம் ஸ்வாமியானவனே யென்கிறாளாதல். (உன்னையறிந்துகொண்டேன்) உன்னை அதிலோகமானவுக்திசேஷ்டி தங்களையுடையவனென்றறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆன பின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். (ச)

மூ.—முப்போதுங்கடைந்தீண்டியவெண்ணெயினோடுதயிரும்விழு ங்கிக், கப்பாலாயர்கள்காவிற்கொணர்ந்தகலத்தொடுசாய்த் துப்பருகி, மெய்ப்பாலுண்டழுபிள்ளைகள்போலநீவிம்மிவிம் மியழுகின்ற, அப்பாவுன்னையறிந்துகொண்டேனுனக்கஞ்சுவ னம்மந்தரவே.

(க) பிச்சேற்றி - ஆசைமிகும்படிபண்ணி. (உ) கொய்சகம் - முன்தானை. (௩) அவாச்யமான - வாயாற்சொல்லொணுத. (ச) அபரிகண்யம் - எண்ணி முடியாதது.

ப-ரை.— முப்போதும் - காலையும் உச்சியும் அந்தியுமாகிற மூன்றுபொழுதும், கடைந்து —, ஈண்டிய - திரண்ட, வெண்ணெயினோடு-வெண்ணெயையும், தயிரும் - செறியத்தோய்ந்த தயிரையும், விழுங்கி—, ஆயர்கள் - இடையர்கள், கப்பால் - தோளாலே, காவில் - காவடியில், கொணர்ந்த - கொண்டுவந்தபால்களை, கலத்தொடு - பாத்ரத்தோடே, சாய்த்துப்பருகி—, மெய்ப்பால்-உடம்பில் முலைப்பாலை, உண்டு - தாரகமாகவுண்டு, அழு - அதுபெறாதபோது அழுகிற, பிள்ளைகள்போல - பிள்ளைகளைப்போலே, நீ—, விம்மிவிம்மியழுகின்ற - என் முலைப்பாலுண்கைக்குப் பொருமிப்பொருமியழுகிற, அப்பா - இந்தமதிநரைக் கடந்த செய்கையையுடைய பெரியவனே, உன்னை —, அறிந்துகொண்டேன் - மானிடசாதியல்லனென்றறிந்துகொண்டேன்; மற்றதுமுன்போலாம்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (முப்போதுமித்யாதி) எப்போதும் கறப்பனகடைவனவாய்ச்செல்லும்போலே காணுந்திருவாய்ப்பாடி. சிறுகாலையும் உச்சியும்அந்தியுமாகிற மூன்றுபொழுதும்கடைந்துதிரண்டவெண்ணெயோடே, அக்காலங்களெல்லாவற்றிலுமுண்டான செறியத்தோய்ந்ததயிரையும்விழுங்கி. (கப்பாலித்யாதி)தோளாலே இடையர் (க) காவிலே கொண்டுவந்தபால்களை கொண்டுவந்த பாத்ரத்தோடே சாய்த்துப்பருகி. (மெய்ப்பாலித்யாதி) உடம்பில் முலைப்பால் தாரகமாகவுண்டு, அதுபெறாதபோது அழும்பிள்ளைகளைப்போலே * என்னிளங்கொங்கையமுதமுண்கைக்கு நீபொருமிப்பொருமியழுகின்ற. (அப்பாவுன்னை யறிந்துகொண்டேன்)இந்த அதிமாநுஷசேஷ்டிதத்தையுடைய பெரியோனே, உன்னை "மநுஷ்யஸஜாதீயனல்லன்" என்று அறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆனபின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். (ரு)

மூ —கரும்பார்நீள்வயற்காய்கதிர்ச்செந்நெலைக்கற்றாநிரைமண்டித்
தின்ன, விரும்பாக்கன்றொன்றுகொண்டுவிளங்கனிவீழவெ
றிந்தபிரானே, சுரும்பார்மென்குழற்கன்னியொருத்திக்குச்
சூழ்வலைவைத்துத்திரியும், அரம்பாவுன்னையறிந்துகொண்
டேனுனக்கஞ்சுவனம்மந்தரவே.

ப - ரை. நீள் - பரந்த, வயல் - வயலிலேயுண்டான, கரும்பார் - கரும்பு போலேயெழுந்து, காய் - பசுங்காயான, கதிர் - கதிரையுடைய, செந்நெலை—, கன்று - கன்றுகளையுடைய, ஆநிரை - பசுநிரையானது, மண்டி - மேல்விழுந்து, தின்ன - தின்னுநிற்கச்செய்தே, விரும்பா - தின்கையில் விருப்பமில்லாத, ஒன்று - ஒரு, கன்றுகொண்டு - கன்றைக்கொண்டு, விளங்கனி - கண்டவர்கள் விருப்புறும்படி பழுத்துநின்ற விளாவின்பழங்கள், வீழ - சிதறிவிழும்படி, எறிந்த - * கன்றைக் குணிலாகவெறிந்த, பிரானே - உபகாரகனானவனே, எப்போதுமொக்கப் பூமாறாமையாலே, சுரும்பு - வண்டுகளானவை, ஆர் - நெருங்கப்படிந்து கிடக்கும்படியிருப்பதாய், மெல் - ம்ருதுவாயிருந்துள்ள, குழல் -

(க) காவிலே - காவடியிலே.

குழலையுடையளாய், கன்னியொருத்திக்கு - புதிதான யௌவநத்தை யுடையளா யிருப்பாளொருத்திக்கு, சூழ் - தப்பாமலகப்படுத்திக்கொள்ளும், வலை - திருக்கண்களாகிறவலையை, வைத்து - எப்போதும் அவள்விஷயத்திலேவைத்து, திரியும் - அகப்படுமளவும் அந்யபரனைப்போலே ஸஞ்சரிக்கிற, அரம்பா - தீம்பனானவனே, உன்னை - இத்தன்மையனானவுன்னை, அறிந்துகொண்டேன் - நன்றாகவறிந்துகொண்டேன்; மற்றதுமுன்போலேயாம்.

வ்யா.—ஆறும்பாட்டு. (கரும்பித்யாதி) பரந்தவயலிலே கரும்புபோலே எழுந்து பசுங்காயான கதிரையுடைய செந்நெலை. (கற்றாநிரை) கன்றுகளோடேகூடின பசுநிரையானது. (மண்டித்தின்ன) விரும்பி மேல்விழுந்து தின்னாநிற்கச்செய்தே. (விரும்பாக்கன்றொன்றுகொண்டு) தானும் தின்பானைப்போலே பாவியாநிற்கச்செய்தே, தின்கையில் விருப்பமில்லாததொருகன்றைக்கொண்டு. (விளங்கனிவீழவெறிந்தபிரானே) (க) ஆகர்ஷகமாம்படி பழுத்துநின்றவிளாவினுடைய பழங்கள் சிதறிவிழும்படியெறிந்த உபகாரகனே. ஓரஸுரன் கன்றாய்வந்துநிற்க, ஓரஸுரன் விளாவாய்வந்துநிற்க, இத்தையறிந்து, ஒன்றையிட்டு ஒன்றையெறிந்து இரண்டையும் நிரஸித்துப் பொகட்ட வுபகாரத்தைச்சொல்லுகிறது. (சுரும்பாரித்யாதி) எப்போதுமொக்கப் பூமாறாமையாலே வண்டுகளானவை நெருங்கப் படிந்து கிடக்கும்படியிருப்பதாய், ம்ருதுவாயிருந்துள்ள குழலையுடையளாய் (உ) நவயௌவனையா யிருப்பாளொருத்திக்கு. (சூழ்வலைவைத்துத்திரியு மரம்பா) "வாசுதேவன்வலை" என்றும், "தாமரைத்தடங்கண் விழிகளினகவலை" என்றும், "கார்த்தண்கமலக்கண்ணென்னு நெடுங்கயிறு" என்றும் சொல்லுகிறபடியே-தப்பாமலகப் படுத்திக்கொள்ளும் திருக்கண்களாகிற வலையை எப்போதுமொக்க அவள்விஷயத்திலேவைத்து, அகப்படுமளவும் அந்யபரனைப் போலேஸஞ்சரிக்கிற தீம்பனானவனே. (உன்னையறிந்துகொண்டேன்) (ங) ஏவம்பூதனானவுன்னை நன்றாகவறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆனபின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். (சு)

மூ.—மருட்டார்மென் குழல்கொண்டு பொழில்புக்கு வாய்வைத்
தவ்வாயர்தம்பாடிச், சுருட்டார்மென்குழற் கன்னியர்வந்து
ன்னைச் சுற்றுந்தொழநின்றசோதி, பொருட்டாய மிலேனெ
ம்பெருமானுன்னைப் பெற்றகுற்றமல்லான்மற்றிங், கரட்டா
வுன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே.

ப-ரை.—மருட்டு ஆர் - மிகவும் மதிமயக்கப்பண்ணுமதாய், மெல்-மெல்லிதான ஓசையையுடைய, குழல்கொண்டு - வேய்ங்குழலைக்கொண்டு, பொழில் புக்கு - போகத்துக்கேகாந்தமான பொழிலிலேபோய்ப்புக்கு, வாய்வைத்து -

(க) ஆகர்ஷகம் - மனதைக்கவரத்தக்கது. (உ) நவயௌவனை - புதிய யௌவநத்தையுடையவள். (ங) ஏவம்பூதனான - இத்தன்மையனான.

திருப்பவளத்திலே வைத்தூதி, அவ்வாயர்தம் - அவ்விடையருடைய, பாடி - ஊரிலே, சுருண்டு—, ஆர் - பூவாலே அலங்க்ருதமாய், மெல் - ம்ருதுவாயிருந்துள்ள, குழல் - குழலையுடையரான, கன்னியர் - பெண்களானவர்கள், வந்து - குழலோசையாலே தூண்டப்பட்டவராய்வந்து, உன்னை—, சுற்றும் - சூழ்ந்து நின்று, தொழ - ஸேவித்துநிற்பதனால், சோதிநின்ற - தேஜஸ்ஸையுடையனாய் நின்ற, எம்பெருமான்-என்னுடைய நாதனானவனே, உன்னை-தீம்பனானவுன்னை, பெற்ற - பிள்ளையாகப்பெற்ற, குற்றமல்லால் - குற்றமொழிய, இங்கு - இவ்வூரி லுள்ளாரோடு, மற்று - வேறொரு, பொருள்தாயமிலேன் - அர்த்ததாயமுடையே னல்லேன்; அரட்டா - தீம்பனானவனே, உன்னை—, அறிந்துகொண்டேன் - நன்றாகவறிந்துகொண்டேன்; மற்றதுமுன்போலாம்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (மருட்டாரித்யாதி)கேட்டவர்களை மற்றொன்றறியாதபடி மருளப்பண்ணுதலால் மிக்கிருப்பதாய், அவர்கள் *செவியைப்பற்றி வாங்கும்படியான ம்ருதுவானத்வநியையுடைத்தான வேய்ங்குழலைக்கொண்டு, (க) போகத்துக்கேகாந்தமான பொழிலிலேபோய்ப்புக்குத் திருப்பவளத்திலேவைத்தூதி. (அவ்வாயரித்யாதி) "க்ருஷ்ணன்கிடாய், பெண்கள்கிடாய்" என்று பெண்களைக் காத்துக்கொண்டுதிரியும் அவ்விடையருடைய வூரில். (சுருட்டாரித்யாதி) சுருண்டு, பூவாலே அலங்க்ருதமாய், ம்ருதுவாயிருந்துள்ள குழலையுடைய பெண்களானவர்கள் குழலோசையாலே ப்ரேரிதராய்வந்து உன்னைச்சூழநின்றுதொழ, அத்தால்வந்த தேஜஸ்ஸையுடையனாய்நின்றவனே. (பொருள்தாயமித்யாதி) என்னுடைய நாதனானவனே, இப்படி தீம்பனானவுன்னைப் பிள்ளையாகப்பெற்ற குற்றமொழிய இவ்வூரிலுள்ளார் என்னோடுகோறுகாறென்ன எறிவார்களோடு (உ) ஓரர்த்ததாய முடையேனல்லேன். (அரட்டாவுன்னையறிந்துகொண்டேன்) இப்படி தீம்பனானவனே, உன்னைநன்றாகவறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆனபின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். (எ)

மூ.—வாளாவாகிலுங்காணகில்லார்பிறர்மக்களைமையன்மைசெய்து, தோளாலிட்டவ ரோடுதிளைத்து நீசொல்லப்படாதனசெய்தாய், கேளாராயர்குலத்தவரிப்பழி கெட்டேன் வாழ்வில்லைநந்தன், காளாயுன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே,

ப-ரை.—நீ தீம்புசெய்யாதிருந்தாலும் உன்னைக்குப்பொறுதவர்கள், வாளாவாகிலும் - வெறுமனேயாகிலும், காணகில்லார்-உன்னைக்காண வேண்டார்கள்; அப்படியிருக்க, பிறர் - பிறருடைய, மக்களை - பெண்களை, மையன்மை செய்து - உன்னுடைய அழகியசேஷ்டிதங்களாலே பிச்சேறும்படிபண்ணி, தோளால் - தோளாலே, இட்டு - அணைத்திட்டு, அவரோடு - அவர்களோடே நின்று,

(க) போகத்துக்கு - அநுபவித்தற்கு. (உ) அர்த்ததாயம்-பொருள்பங்கு.

திளைத்து - விளையாடி, சொல்லப்படாதன - வாக்காற் சொல்லவொண்ணாத தீம்புகளை, நீ—, செய்தாய்—; ஆயர்குலத்தவர் - இடைக்குலத்திலுள்ளவர்கள், இப்பழி - இப்பழியை, கேளார் - கேட்கப்பொறார்கள்; கெட்டேன்!—, வாழ்வில்லை - இவ்வூரிலெனக்கு வஸிக்கப்போகாது; நந்தன் - ஓரறிவுயிரும்வருந்தாமல் நடக்கவல்ல நந்தகோபருடைய, காளாய்-பிள்ளையானவனே, உன்னை—, அறிந்துகொண்டேன் - நாட்டார்படியல்லையென்று அறிந்துகொண்டேன்; மற்றது முன்போலாம்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (வாளாவித்யாதி) தீம்பு செய்யாதிருக்கிலும் உன்மினுக்கம்பொறாதவர்கள் வெறுமனேயாகிலும் உன்னைக் காணவேண்டார்கள். அதுக்குமேலே (பிறர்மக்களைமையன்மைசெய்து)பிறருடையபெண்களை உன்னுடைய(க)இங்கிதாதிகளாலே அறிவுகேட்டைவிளைவித்து. (தோளாலிட்டவரோடுதிளைத்து) தோளாலே யணைத்திட்டு அவர்களோடேநின்று விளையாடி. (நீ சொல்லப்படாதன செய்தாய்) வாக்காற் சொல்லவொண்ணாதவற்றை நீ செய்தாய். (கேளாராயர் குலத்தவரிப்பழி) இடைக்குலத்திலுள்ளவர்கள் இப்பழிகேட்கப்பொறார்கள். (கெட்டேன் வாழ்வில்லை) கெட்டேன்!, இவ்வூரில் எனக்கொருவாழ்வில்லை. அதாவது - இவ்வூரில் வர்த்திக்கப்போகாதென்கை. கெட்டேனென்றது - விஷாதாதிசயத்தாலே கைநெரித்துச்சொல்லுகிற வார்த்தை. (நந்தன்காளாய்) பசும்புல்லுச்சாவமிதியார் ஸ்ரீநந்தகோபர்; பிள்ளையான நீ இப்படி செய்யக்கடவையோ. அன்றிக்கே, அவர் உன்னைநியமித்து வளர்க்காமையிறே நீ யிப்படி தீம்பனாய்த்தென்னுதல். (உன்னையறிந்துகொண்டேன்) பருவமிதுவாயிருக்க, செய்கிறசெயல்களிதுவாகையாலே உன்னை "நாட்டார்படியல்லை" என்று அறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆனபின்பு, உனக்கம்மந்தர வஞ்சுவன். (அ)

மூ.—தாய்மார்மோர்விற்கப்போவர் தமப்பன்மார் கற்றாநிரைப்பின்புபோவர், நீயாய்ப்பாடியிளங்கன்னிமார்களைநேர்படவே கொண்டுபோதி,காய்வார்க்கென்றுமுகப்பனவேசெய்துகண்டார்கழறத்திரியும், ஆயாவுன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே.

ப-ரை.—தாய்மார் - தாய்மாரானவர்கள், பெண்களையகம்பார்க்கவைத்து, மோர்விற்க-மோர்விற்கைக்காக, போவர் - அசலூர்க்குப்போகாநிற்பர்கள்; தமப்பன்மார் - தமப்பன்மாரானவர்கள், கன்று - கன்றையுடைய, ஆநிரை-பசுநிரை மேய்க்கைக்காக, பின்பு - அவற்றின்பின்னே, போவர் - போகாநிற்பர்கள்; அந்தஸமயம்பார்த்து, நீ—, ஆய்ப்பாடி - திருவாய்ப்பாடியிலுள்ள, இளங்கன்னிமார்களை - யுவதிகளானபெண்களை, நேர்பட - உன்னினைவுக்கு வாய்க்குமிடங்களில், கொண்டுபோதி - கொண்டுபோகாநின்றாய்; காய்வார்க்கு - உன்னைவிரோ

---

(க) இங்கிதம் - அவயவச்செய்கை.

த்துப்போரும் சிசுபாலாதிகளுக்கு, "இவனைப்பரிபவிக்கைக்கிடம்பெற்றோம்" என்று, என்றும் - ஸர்வகாலமும், உகப்பனவே - உகக்கும்படியானவற்றையே, செய்து—, கண்டார் - உன் செயல்களைக்கண்டவர்கள், கழற - நீ செய்யும் தீம்பு பொறாமல் நியமிக்கும்படி, திரியும் - திரியாநிற்கிற, ஆயா - இடையனானவனே, உன்னை—, அறிந்துகொண்டேன் - "மநுஷ்யஸஜாதியனல்லன" என்று அறிந்து கொண்டேன்; மற்றது முன்போலாம்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தாய்மாரித்யாதி) பெண்களை அகம் பார்க்கவைத்து, தாய்மாரானவர்கள் மோர்விற்கப் போகாநிற்பர் கள். இடையர்க்கு ஐச்வர்யம் மிகவுமுண்டானாலும் இடைச்சிகள் மோர்விற்று ஜீவிக்குமதிறே தங்களுக்குத்தகுதியான ஜீவநமாக நினைத்திருப்பது. மோர்தான்விற்கை அரிதாயிருக்குமிறே. திரு வாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியிலும் கறப்பனகடைவன குறை வற்றிருக்கையால் அசலூர்களிலேபோய் விற்கவேண்டுகையாலே இக்காலவிளம்பம் இவனுக்கு அவகாசஹேதுவாயிறே யிருப்பது. (தமப்பன்மாரித்யாதி) தாய்மார்போனால் தமப்பன்மார்தா னிருந் தாலும் இவனுக்கு நினைத்தபடி செய்யப்போகாதிறே; அதுவுமில் லாதபடி, தமப்பன்மாரானவர்கள் கற்றாவாநிரையின்பின்னே போகா நிற்பர்கள். அவை மேய்ச்சலுள்ளவிடங்களிலே தூரப்போகையும், இவர்கள்வரத்தை (க) நியமியாமல் அவற்றின்பின்னே போகையும், அவைமேய்ந்து வயிறு நிறைந்தாலல்லது மீளாதொழிகையும், அவை மீண்டால் அவற்றின்பின்னே இவர்கள் வருகையுமாயிறே யிரு ப்பது; ஆகையால் இந்தககால (உ) விளம்பமும் இவனுக்கு (௩) அவகாசமிறே. (நீயாய்ப்பாடி யிளங்கன்னிமார்களைநேர்படவேகொ ண்டுபோதி) நீ திருவாய்ப்பாடியில் (ச) யுவதிகளான பெண்களை உன்னினைவுக்கு வாய்க்கும்படி கொண்டுபோதி. அதாவது-உனக்கு (ரு) அபிமதமான ஸ்தலங்களிலே கொண்டுபோகாநின்றாயென்ற படி. தாய்மார் தமப்பன்மார் போகையாலும், காலவிளம்பமுண் டாகையாலும், அவ்வகந்தானே அபிமதஸ்தலமா யிருக்கச்செய்தே யும் (௬) "ப்ராமாதிகமாக ஆரேனும் வரக்கூடும்" என்றிறே (எ) ஸ்தலாந்தரம்தேடிப் போகவேண்டுகிறது. (காய்வார்க்கென்றும் உக ப்பனவேசெய்து) உன்குணத்திலும் தோஷத்தை (அ) ஆவிஷ்கரி க்குமவர்களாய், உன்பக்கல் (௯) த்வேஷபரராயேபோரும் சிசுபாலா திகளுக்கு, சொல்லி (௧0) பரிபவிக்கைக்கு இடம்பெற்றோம் என்று

(க) நியமியாமல் - குறியாமல். (உ) விளம்பம் - தாமஸம். (௩) அவகா சம் - காலம். (ச) யுவதிகள் - யௌவநபருவத்தையுடையவர்கள். (ரு) அபி மதம் - இஷ்டம். (௬) ப்ராமாதிகமாக - தன்னையறியாமல். (எ) ஸ்தலாந்தரம்- வேறிடம். (அ) ஆவிஷ்கரிக்கும் - ஏறிடுகிற. (௯) த்வேஷபரராய் - பகைபா ராட்டுமவராய். (௧0) பரிபவிக்கை - இகழ்ந்துபேசுகை.

ஸர்வகாலமும் உகக்கும்படியானவற்றைச்செய்து. (கண்டார்கழறத் திரியுமாயா) காய்வாரன்றிக்கே, உனக்குநல்லவர்களாய் நீசெய்கிற வ்யாபாரங்களைக் கண்டவர்கள் நீசெய்கிற தீம்புபொறுமல் நியமிக்கும்படி திரியாநிற்கிற ஆயனே. குலமர்யாதைதன்னையும்பார்க்கிறிலையே யென்கை. (உன்னை யறிந்துகொண்டேன்) நீயிப்படி திரிந்தாயாகிலும் உன்னுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கண்டபின்பு, உன்னை "மநுஷ்யஸஜாதீயனல்லன்" என்று அறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆனபின்பு, உனக்கு அம்மந்த்ரமஞ்சுவன்.

மூ.—தொத்தார்பூங் குழற்கன்னி யொருத்தியைச் சோலைத்தடங் கொண்டுபுக்கு, முத்தார்கொங்கைபுணர்ந் திராநாழிகை மூவேழுசென்றபின்வந்தாய், ஒத்தார்க்கொத்தனபேசுவருன்னையுரப்பவே நானொன்றுமாட்டேன், அத்தாவுன்னையறிந்து கொண்டே னுனக்கஞ்சுவனம்மந்த்ரமே.

ப-ரை.—தொத்து-கொத்தாய், ஆர்-சேர்ந்திருந்துள்ள, பூ-பூக்களாலே அலங்க்ருதமான, குழல்-குழலையுடையளாய், கன்னி-யௌவநத்தையுடையாளான, ஒருத்தியை—, தடம்-இடமுடைத்தான, சோலை-சோலையிலே, கொண்டு புக்கு-கொண்டுபுகுந்து, முத்து-முத்துவடத்தாலே, ஆர்-அலங்க்ருதமான, கொங்கை-ஸ்தநங்களிலே, புணர்ந்து-ஸம்ச்லேஷித்து, இரா-சென்றவிரவு, மூவேழுநாழிகைசென்றபின்-மூன்றுயாமமானபின்பு, வந்தாய்-இல்லம்வந்து சேர்ந்தாய்; உன்னை—, ஒத்தார்க்கு ஒத்தன-வேண்டுவார்க்கு வேண்டுமவற்றை, பேசுவர்-சொல்லுவர்கள்; உரப்ப-இப்படியிருக்கிறவுன்னை கோபிக்கவென்றால், நான்—, ஒன்றும்-எவ்வளவும், மாட்டேன்-க்ஷமையாகிறிலேன்; அத்தா-என்னுடையனே, உன்னை—, அறிந்துகொண்டேன்-ஒருவரால்நியமிக்கப்படாதவனென்றறிந்துகொண்டேன்; மற்றது முன்போலாம்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (தொத்தாரித்யாதி) கொத்தாய்ச் சேர்ந்திருந்துள்ள பூக்களாலே அலங்க்ருதமான குழலையுடையளாய், திருவாய்ப்பாடியிலுள்ள பெண்களிற் காட்டில் "இன்னாள்" என்று குறிக்கப்படுவா ளொருத்தியை. (சோலைத்தடம்கொண்டு புக்கு) இடமுடைத்தான சோலையிலே கொண்டுபுக்கு. (முத்தார்கொங்கை புணர்ந்து) முத்துவடத்தாலே யலங்க்ருதமான முலைகளிலே ஸம்ச்லேஷித்து. (இராநாழிகை மூவேழுசென்றபின்வந்தாய்) ராத்ரி மூன்றுயாமமற்றபின் வந்தாய். (ஒத்தார்க்கொத்தனபேசுவருன்னை) உன்செயலிதுவாகையாலே வேண்டுவார்க்கு வேண்டுவது சொல்லுவருன்னை. உனக்கு தோஷம்சொல்லுவார்க்கெல்லாமிடமாம்படி செய்யாநின்றாயென்கை. (உரப்பவே நானொன்றும்மாட்டேன்) இப்படியிருக்கிற வுன்னைகோபிக்கவென்றால் நான் ஏகதேசமும் க்ஷமையாகிறிலேன். பிள்ளைகள்தீம்புகண்டால் தாய்மார் சிக்ஷியார்களோ, "உன்னுடைய முகம் கன்றும்" என்னுமத்தாலே அது என்னாற்

செய்யப்போகிறதில்லை. (அத்தா) என்னுடைய நாதனே. (உன்னை யறிந்துகொண்டேன்) உன்னுடைய அதிமாநுஷம் கண்டபின்னை "அநியாம்யன்" என்றறிந்துகொண்டேன். (உனக்கித்யாதி) ஆன பின்பு, உனக்கம்மந்தரவஞ்சுவன். (௧௦)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்ருர்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிருர்.

மூ.—காரார்மேனிநிறத்தெம்பிரானைக்கடிகமழ்பூங்குழலாய்ச்சி [ம்
ஆராவின்னமுதுண்ணத்தருவனுனம்மந்தாரோனென்றமாற்ற
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன் பட்டர்பிரான்சொன்
ஏராரின்னிசைமாலைவல்லாரிருடீகேசனடியாரே. [னபாடல்

ப-ரை.—காரார் - மேகத்தோடொத்த, மேனி-திருமேனியின், நிறத்து-நிற த்தையுடையனுய், எம்பிரானை - எனக்குஉபகாரகனுனவனை, கடி - நறுநாற்றம், கமழ் - கமழாநின்றுள்ள, பூ - அழகிய, குழல் - குழலையுடையளான, ஆய்ச்சி - யசோதைப்பிராட்டி, ஆரா - ஒருகாலும் தெகுட்டாததாய், இன் - இனிதாயிருந் துள்ள, அமுதுண்ண - கொங்கையமுதமுண்ண, தருவன் - தருவாளாயிருந்த, நான்—, அம்மந்தாரோனென்றமாற்றம் - "உனக்கம்மந்தரவஞ்சுவன்" என்று சொன்னசொலவை, நாட்டிலுள்ளவர்களடையக்கொண்டாடுகையாலே, பார்- பூமியெங்கும், ஆர் - நிறைந்திருப்பதாய், தொல் - இயற்கையான, புகழான்- புகழையுடையராய், புதுவை-திருப்புதுவைக்கு, மன்னன் - தலைவரான, பட்டர் பிரான்-பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, பாடல்-பாடலான, ஏரார்- இயலழகால்மிக்கு, இன்-இனிய, இசை-இசையோடே கூடியிருந்துள்ள, மாலை- மாலையை, வல்லார் - கருத்துடன் கற்கவல்லவர்கள், இருடீகேசன் - ஐம்பொறி களைத் தனக்குள்ளேயடக்கவல்லவனுக்கு, அடியார் - நாடோறும் கைங்கர்யம் பண்ணப்பெறுவர்.

வ்யா.—(காராரித்யாதி) மேகத்தோடுசேர்ந்த திருமேனியின் நிறத்தையுடையனுய் எனக்கு உபகாரகனுனவனை. (கடிகமழ்பூங் குழலாய்ச்சி)நறுநாற்றம் கமழாநின்றுள்ள அழகியகுழலையுடையளா னயசோதைப்பிராட்டி. (ஆராவித்யாதி) ஒருகாலும் தெகுட்டாத தாய் இனியதாயிருந்துள்ள * என்னிளங்கொங்கையமுதமுண்ண முன்பும்தந்து மேலும் தருவாளாயிருந்த நான் உன்னையறிந்து கொண்டபின்பு, "உனக்கம்மந்தாரோன் அஞ்சுவன்" என்றுசொன்ன சொலவை. (பாராரித்யாதி) விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியற இருந்தாரிருந்தவிடமெங்கும் கொண்டாடுகையாலே பூமி யெங்கும் நிறைந்திருப்பதாய், (௧) ஸ்வாபாவிகமான புகழையுடை யராய், திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வா ரருளிச் செய்தபாடலான. (ஏராரித்யாதி)இயலழகால்மிக்கு,அதுக்குமேலே

(௧) ஸ்வாபாவிகமான - இயற்கையான.

இனியவிசையோடே கூடியிருந்துள்ள (க) ஸந்தர்ப்பத்தை ஸாபி ப்ராயமாகவல்லவர்கள். (இருடீகேசனடியாரே) இந்த்ரியங்களைப் பட்டிபுகுராமல் ஸ்வரூபாநு ரூபமாக நடக்கும்படி நியமிக்குமவனு க்கு (உ) நித்யகிங்கரராகப்பெறுவர். (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

---

அடிவரவு.—தன்னேர்பொன் கும்மாயம் மையார் முப்போது கருமமருட்டார் வாளாதாய்மார் தொத்தார் காராரஞ்சநம்.

ஆ திருமொழி உ0-க்கு, பாட்டு-உஉக.

---

அ.—"அம்மமுண்ணத்துயிலெழாய்" "சுணநன்றணிமுலையுண் ணத்தருவன்" என்றும் "இவன்பருவத்துக்கு அநுகுணமான (ந) தாரகமிது" என்றுநினைத்து காலாநுகுணமாக முலைகொடுத்துப் போரும் மாதாவான யசோதைப்பிராட்டி, இவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களைக்கண்டு இவன்பக்கல் (ச) புத்ரத்வாதி (ரு) ப்ர திபத்தி குலைந்து (சூ) தேவதாப்ரதிபத்திவிளைந்து, இவன் "அம் மமுண்ணவேணும்" என்று அழச்செய்தேயும், "உன்னையறிந்துகொ ண்டேன் - உனக்கம்மந்தரவஞ்சுவன்" என்றுபலகாலும் சொன்ன ப்ரகாரத்தை, தாமும் அப்படியேபேசி யநுபவித்தாராய் நின்றார்- சீழ்; அவள் அத்தை அப்போதேமறந்து, முன்போலே தன்னுடைய புத்ரனாகவே இவனை ப்ரதிபத்திபண்ணி யபிமாநித்து, ப்ராஹ்ம ணர்க்கு பால்யத்திலே ப்ர்ஹ்மசர்ய மநுஷ்டித்து, பின்பு (எ) கார் ஹஸ்த்ய மநுஷ்டிக்கை தர்மமாயிருக்குமாபோலே, இடையர்க்கும் இளம்பருவத்தில் கன்றுகள்மேய்த்து, பக்வரானபின்பு பசுநிரைமே ய்க்கை ஜாத்யுசித தர்மமாகையாலே, "[illegible]" "[illegible]" என்கிற படியே கன்றுகள்மேய்க்கத் தகுதியான பருவத்தை ப்ராப்தனான விவனை * சிறுகாலேயூட்டி யொருப்படுத்தி, கன்றுகள் மேய்க்கும்படி போகவிட்டு, அவன்போன வநந்தரம் க்ஷணகாலவிச்லேஷம் பொறு க்கமாட்டாதவ ளாகையாலே அவன் ஊரிலேநின்றுசெய்யும் ஸ்வைர. விஹாரங்களையெல்லாம் பரக்கச்சொல்லி, இப்படிசெய்து திரி யாமல் "கன்றுகளின்பின்னே இவனை யென்செய்யப் போகவிட் டேன்" என்று இவனுடைய மார்த்தவத்தையும், போகிறவிடத்தின்

---

(க) ஸந்தர்ப்பம் - தொடை. (உ) நித்யகிங்கரர்-நாடோறும்கைங்கர்யம் செய்யுமவர். (ந) தாரகம்-தரிப்பிக்குமது. (ச) புத்ரத்வம்-பிள்ளையாகுகை. (ரு) ப்ரதிபத்தி - நினைப்பு. (சூ) தேவதாப்ரதிபத்தி - தெய்வமாகநினைக்கை. (எ) கார்ஹஸ்த்யம் - இல்லறச்செய்கை.

(க) காடிந்யௌஷ்ண்யங்களையு மநுஸந்தித்து, "ஸுகுமாரனை யிவனை இப்படியிருக்கிற காட்டிலே போகவிட்டேனே" என்றும், அவ்வளவுமன்றிக்கே, "குடையும்செருப்பும்கொடாமல்வெய்யிலும் கல்லும் முள்ளுமான தேசத்திலே போகவிட்டேனே" என்றும்(உ) பகுமுகமாக க்லேசித்துச்சொன்ன ப்ரகாரத்தை, தத்தவஸ்தாபந்நராய்க்கொண்டு தாமுமப்படியேபேசி அநுபவிக்கிறார்-இத்திருமொழியில்.

மூ.—அஞ்சநவண்ணனையாயர்கோலக்கொழுந்தினை
மஞ்சநமாட்டிமனைகடோறுந்திரியாமே
கஞ்சனைக்காய்ந்தகழலடிநோவக்கன்றின்பின்
என்செயப்பிள்ளையைப்போக்கினேனெல்லேபாவமே.

ப-ரை.—அஞ்சநம் - மைபோலேயிருண்டிருக்கிற, வண்ணனை - திருமேனியையுடையனாய், ஆயர்கோலம் - இடையர்கோலம்பூண்டு, கொழுந்தினை - அவர்களுக்குத்தலைவனானவனை, மஞ்சநமாட்டி - திருமஞ்சநம்செய்து, மனைகடோறும் - பிறர்மனைகள்தோறும், திரியாமே - திரியக்கண்டிருக்கப்பொறுதே, கஞ்சனை - கொடுந்தன்மையனானகம்ஸனை யுதைக்கையாலே, காய்ந்த - நொந்த, கழல் - வீரக்கழலையுடைத்தான, அடி - திருவடிகள், *பொருந்தார்கைவேல் நுதிபோன்ற பரலையுடையகாட்டிலே, நோவ - மிகவும்நோம்படியாக, கன்றின்பின் - புல்லுக்கண்டுபரந்நோடித்திரியும் கன்றுகளின்பின்னே, பிள்ளையை-மென்மைத்தன்மையனான வென்பிள்ளையை, என்செய - என்னப்ரயோஜநத்துக்காக, போக்கினேன் - போகவிட்டேன்; எல்லே - என்னே, பாவமே - நான்பண்ணின பாபமிருந்தபடி யென்! என்றுவெறுத்துச் சொல்லுகிறாள்.

வ்யா.—முதற்பாட்டு. (அஞ்சநவண்ணனை) * கண்டவர்கள் கண்குளிரும்படி அஞ்சநம்போலே யிருண்டிருக்கிற திருமேனியை யுடையவனை. அஞ்சநம் - மை. * மைப்படி மேனியிறே. (ஆயரித்யாதி) கன்றுகளின்பின்னேபோகிறபோதை நடையின்த்வரையும் திருமேனியின் குறுவெயர்ப்பும் அலைந்த திருக்குழல்களும் திருக்கையில்பிடித்த பொற்கோலுமான ஆயர்கோலத்தை யுடையனாய், அவர்களுக்கு முன்னோடி கார்யம்பார்க்கும் தலைவனானவனை. அன்றிக்கே, வேரிலே வெக்கைதட்டினால் கொழுந்துமுற்பட வாடுமாபோலே அவர்களுக்கு ஒருநோவுவந்தால் முதல் தன்முகம்வாடும்படியிருக்கையாலே "கொழுந்து" என்கிறதாகவுமாம். "ஆயர்கொழுந்தாய்" என்றாரிறே ஆழ்வார். (மஞ்சநமித்யாதி) "பொன்போல் மஞ்சநமாட்டி" என்கிறபடியே திருமேனியழகு விளங்கும்படி திருமஞ்சநஞ்செய்து, தன்மனைபோலேமனைகடோறும்(ந)வ்யாபரித்துத்

---

(க) காடிந்யௌஷ்ண்யம் - வன்மையும்வெப்பமும். (உ) பகுமுகமாக - பலபடியாக. (ந) வ்யாபரித்து - உலாவி.

திரியக்கண்டிருக்கப்பெறுதே. (கஞ்சனைக்காய்ந்த கழலடிநோவ) (க) கடிநப்ரக்ர்தியானகம்ஸனை உதைக்கையாலே நொந்ததிருவடிக ளானவை கல்லும் கரடுமான காட்டுவழியிலே நடக்கையாலே மிகவும் நோம்படியாக. கழலடி - வீரக்கழலையுடைத்தான திரு வடிக ளென்கை. (கன்றின்பின் என்செயப்பிள்ளையைப் போக்கி னேன்) ஓரிடத்தில் நில்லாதே பரந்தோடித்திரியும் கன்றுகளின் பின்னே ம்ர்துப்ரக்ர்தியான பிள்ளையை ஏதுக்காகப் போகவிட் டேன். இவன்பக்வனுய் சத்ருஜயம்பண்ண வல்லனுனுலும் "பிள்ளை" என்றிறே யிவள்சொல்லுவது. (எல்லேபாவமே) என்னே! நான் பண்ணினபாப மிருந்தபடி யென்னென்று வெறுத்துச் சொல்லு கிருள். (க)

மூ.—பற்றுமஞ்சட்பூசிப்பாவைமாரொடுபாடியில்
சிற்றிற்சிதைத்தெங்குந்தீமைசெய்துதிரியாமே
கற்றுத்தூளியுடைவேடர்கானிடைக்கன்றின்பின்
எற்றுக்கென்பிள்ளையைப்போக்கினேனெல்லேபாவமே.

ப - ை. — என்பிள்ளையானவன், பற்று - பற்றத்தக்க, மஞ்சள்-மஞ்சளை, பூசி - திருமேனியெங்கும்பூசப்பட்டவனுய், பாடியில்-திருவாய்ப்பாடியிலுள்ள, பாவைமாரொடு - பெண்களோடே, சிற்றில் - தன்னையசட்டைசெய்து விளை யாடுகிற பெண்களுடைய கொட்டகங்களை, சிதைத்து - அழித்துப்பொகட்டு, எங்கும்-எவ்விடங்களிலும், தீமைசெய்து-இவ்வண்ணமான தீம்புகளைச்செய்து, திரியாமே - திரியாதபடியாக, கன்று - கன்றுகளுடைய, தூளியுடை - தூளி யாலே நிறைந்ததாய், வேடர் - அடித்துப்பறிக்கும் வேடர் ஸஞ்சரிக்கிற, கானிடை - காட்டிலே, கன்றின்பின் - கன்றுகளின்பின்னே, என்பிள்ளையை—, எற்றுக்கு - என்னப்ரயோஜநத்துக்காக, போக்கினேன் - போகவிட்டேன்; மற்றது முன்போலாம்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பற்றுமஞ்சள்பூசி)ஊரிற்பெண்க ளுக்குப் பூசுகைக்குமஞ்சள் அரைத்தால் பற்றுப்பார்ப்பது இவ னுடம்பிலேயாய்த்து. ஒருத்தரிழுகினவிடத்திலே ஒருத்தரிழுகாதே தனித்தனியேயிழுகி, பற்றுப்பார்க்கையாலே திருமேனியெங்கும் மஞ்சள்பூசினுற்போலே யிருக்குமாய்த்து. அத்தைப்பற்ற "பற்று மஞ்சள்பூசி" என்கிருள். (பாவைமாரொடுபாடியில்) திருவாய்ப் பாடியிலுள்ளபெண்களோடே. (சிற்றில்சிதைத்து)தன்னை(உ)உபே க்ஷித்திருந்து விளையாடுகிறவர்களுடைய கொட்டகங்களை யழித்து. (எங்கும் தீமைசெய்து திரியாமே) (ந) இப்புடைகளிலே யெங்கும் தீம்புகளைச்செய்து திரியாதபடியாக. இப்படிதிரியக் கண்டிருக்கை போலேகாணும் இவள்தானுகப்பது. (கற்றுத்தூளியுடை வேடர் கானிடை) முன்வருகிறவர்களைத் தெரியாதபடி கன்றுகளினுடைய

(க) கடிநப்ரக்ர்தியான - கொடுந்தன்மையனுன. (உ) உபேக்ஷித்து - அசட்டைசெய்து. (ந) இப்புடைகளிலே - இவ்விடங்களிலே.

தூளியாலே (க) வ்யாப்தமாய் அடிச்சுப்பறிக்கும் வேடர்சஞ்சரிக்கிற காட்டிலே. (கன்றின்பின் எற்றுக்கென்பிள்ளையைப் போக்கினேன்) புறம்பொன்றையும் பார்க்கவொட்டாதே தன்பின்னே ஓடித்திரியப் பண்ணும் கன்றுகளின்பின்னே என்ன ப்ரயோஜநத்துக்காக என்பிள்ளையைப் போகவிட்டேன். (எல்லேபாவமே) பூர்வவத். (உ)

மூ.—நன்மணிமேகலைநங்கைமாரொடுநாடொறும்
பொன்மணிமேனிபுழுதியாடித்திரியாமே
கன்மணிநின்றதிர்கானதரிடைக்கன்றின்பின்
என்மணிவண்ணனைப்போக்கினேனெல்லேபாவமே.

ப - ரை.—என் - எனக்கு அநுபவித்தற்குத் தகுதியாயிருந்துள்ள, மணிவண்ணனை - நீலரத்நம்போன்ற வடிவையுடையவனை, நல் - சிறந்த, மணி - நவமணிகள் கோத்துச்சமைத்த, மேகலை-மேகலாபரணத்தையுடையராய், நங்கைமாரொடு - குணபூர்த்தியையுடையரான பெண்களோடே, பொன் - அழகிய, மணி - நீலரத்நம்போன்ற, மேனி - திருமேனியானது, நாடொறும் - நாள்தோறும், புழுதி - புழுதியிலே, ஆடி - விளையாடி, திரியாமே - திரியாதபடி, கல் - மலையானது, மணிநின்று - மணித்வநிபோலேநின்று, அதிர் - ப்ரதித்வநியெழும்படியான, கானதரிடை - காட்டுவழியிலே, கன்றின்பின் - கன்றின்பின்னே, போக்கினேன் - போகவிட்டேன்; மற்றது முன்போலாம்.

வ்ய‍ா.—மூன்றும்பாட்டு. (நன்மணியித்யாதி) நல்லரத்நங்களாலே சேர்க்கப்பட்ட மேகலையையுடையராய், ஜாத்யுசிதமான குணபூர்த்தியை யுடையரான பெண்களோடே ஒருநா ளிரண்டுநாளன்றிக்கே நாடோறும். (பொன்னித்யாதி) அழகிய நீலரத்நம்போலேயிருக்கிற திருமேனி அவர்களோடு இட்டீடு கொள்ளுகையாலே புழுதியாடித் திரியாதபடியாக. * மஞ்சநமாட்டி மனைகடோறும் திரியக் காண்பதிலும் இப்படிபுழுதியாடித் திரியக்காண்கைபோலேகாணும் இவள்தானுகந்திருப்பது. (கன்மணியித்யாதி) "கன்று மேய்த்து விளையாடவல்லானை வரைமீகானில்" என்கிறபடியே மலைமேல் காடுகளிலே கன்றுகளை மேய்க்கையாலே ஜாத்யுசிதமாக இவன்கன்றுகளை யழைக்கிற த்வநியாலும், அவைதான் கூப்பிடுகிற த்வநியாலும், அங்குண்டான மலையானது மணித்வநிபோலேநின்று ப்ரதித்வநி யெழும்படியான காட்டுவழியிலே கன்றின்பின்னே. (என் மணிவண்ணனைப்போக்கினேன்) ஏதேனு மொன்றைக் கண்டவாறே வெருண்டோடுகிற கன்றுகளின்பின்னே, எனக்கநுபாவ்யமான நீலரத்நம்போன்ற வடிவையுடையவனைப் போகவிட்டேன். (எல்லேபாவமே). (ந)

---

(க) வ்யாப்தமாய் - நிறைந்து.

மூ.—வண்ணக்கருங்குழன்மாதர்வந்தலர்தூற்றிடப்
பண்ணிப்பலசெய்திப்பாடியெங்குந்திரியாமே
கண்ணுக்கினியானைக்கானதரிடைக்கன்றின்பின்
எண்ணற்கரியானைப்போக்கினேனெல்லேபாவமே.

ப-ரை.—வண்ணம் - அழகிதாய், கரு - கறுத்திருந்துள்ள, குழல் - குழலையுடையரான, மாதர் - ஸ்த்ரீகளானவர்கள், வந்து - தலைகுலையவோடிவந்து, அலர்தூற்றிட - பழிதூற்றும்படியாக, பண்ணி—, பல-அளவில்லாததீம்புகளை, செய்து—, இப்பாடியெங்கும் - இவ்வூரெங்கும், திரியாமே - திரியாதபடியாக, கண்ணுக்கு - கண்களுக்கு, இனியானை - கண்டுகளிக்கும்படி இனியனானவனை, எண்ணற்கு - தங்கள்முயற்சியால் கிட்டத்தேடுகிறவர்களுக்கு, அரியானை - அரியனானவனை, கானதரிடை - காட்டுவழியிலே, கன்றின்பின் - கன்றுகளின்பின்னே, போக்கினேன் - போகவிட்டேன்; எல்லேபாவமே—.

வ்யா.—நாலாம்பாட்டு. (வண்ணமித்யாதி) வண்ணம்-அழகு. அழகிதாய்க் கறுத்திருந்துள்ள குழலையுடையரான ஸ்த்ரீகளானவர்கள் தலைகுலையவோடிவந்து பழிதூற்றும்படியாகப்பண்ணி. (பலசெய்திப்பாடியெங்கும் திரியாமே) பலஎன்னுமதொழிய இத்தனையென்று பரிகணிக்க வொண்ணாதபடியான தீம்புகளைச்செய்து இவ்வூரெங்கும் திரியாதபடியாக. அலர்தூற்றுகையும் இவனிப்படி செய்கையுந்தானே ரஸமாயிருக்கும்போலேகாணுமிவளுக்கு. (கண்ணுக்கினியானை) தீம்பாலே நெஞ்சுகள் புண்பட்டாலும் அவற்றைக் கண்வாங்க வொண்ணாதபடி த்ர்ஷ்டிப்ரியனாயிருக்குமவனை. (எண்ணற்கரியானை) ஸ்வயத்நத்தாலே பெறப்பார்ப்பார்க்கு நினைக்கைக்கும் அரியனானவனை. (கானதரிடைக் கன்றின்பின்-போக்கினேன்) இப்படி (க) துர்லபனானவனைக் காட்டுவழியிலே கன்றுகளின்பின்னே போகவிட்டேன். (எல்லேபாவமே). (௪)

மூ.—அவ்வவ்விடம்புக்கவ்வாயர்பெண்டிர்க்கணுக்கனாய்க்
கொவ்வைக்கனிவாய்கொடுத்துக்கூழமைசெய்யாமே
யெவ்வஞ்சிலையுடைவேடர்கானிடைக்கன்றின்பின்
தெய்வத்தலைவனைப்போக்கினேனெல்லேபாவமே.

ப-ரை.—தெய்வம் - தேவர்களுக்கு, தலைவனை - ஸ்வாமியானவனை, அவ்வவ்விடம் - மச்சுமாளிகைநிலவறைமுதலிய அவ்வவஸ்தலங்களிலே, புக்கு - பிறர்க்குத்தெரியாதபடிசென்றுபுக்கு, அவ்வாயர்பெண்டிர்க்கு - அவ்விடைப்பெண்களுக்கு, அணுக்கனாய் - அந்தரங்கனாய்க்கொண்டு, கொவ்வைக்கனி - கோவைக்கனியையொத்த, வாய் - திருவதரத்தை, கொடுத்து - அவர்களுக்கு ஜீவநமாகக்கொடுத்து, கூழமைசெய்யாமே-கூழைத்தனமடித்துத்திரியாதபடி, எவ்வம்-துன்பத்தைப்பண்ணுகின்றுள்ள, சிலையுடை-சிலையைக்கையிலேயுடைய, வேடர் - வேடர்கள்சஞ்சரிக்கிற, கானிடை - காட்டிலே, கன்றின்பின் - தன்னிச்சைப்படி உலாவிமேய்ந்துதிரிகிற கன்றுகளின்பின்னே, போக்கினேன் - போகவிட்டேன்; எல்லேபாவமே—.

(க) துர்லபன் - பெறுதற்கரியவன்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அவ்வவ்விடம்புக்கு) * மச்சொடு மாளிகை நிலவறைமுதலான அவ்வவ ஸ்தலங்களிலே பிறர்க்குத் தெரியாதபடி சென்றுபுக்கு. (அவ்வாயர்பெண்டிர்க்கணுக்கனுய்) அவ்வவஸ்தலங்களிலிருந்த இடைப்பெண்களுக்கு (க) அந்தரங்கனுய். அதாவது-அவர்கள்(உ)புத்யதீநமாகத்தன்னைச்சமைத்துவைக்கை. (கொவ்வைக்கனிவாய் கொடுத்து) கோவைப் பழம்போலேயிருக்கிற திருவதரத்தை அவர்களுக்கு ஜீவநமாகக்கொடுத்து. (கூழமைசெய்யாமே) கூழைத்தனமடித்துத் திரியாமே. கூழமையாவது - "உன்னையல்லதறியேன், உன்னையல்லதறியேன்" என்று அவரவர்க்கேயற்றுனுய்ப் பரிமாறுகை. (எவ்வம் சிலையுடைவேடர் கானிடை) எவ்வம் சிலையென்றது - "எவ்வம் வெவ்வேல்" என்னுமாபோலே, கண்டவர்களுக்கு பயங்கரமாய்க்கொண்டு துக்கத்தைப் பண்ணாநின்றுள்ள சிலையென்னுதல். அன்றிக்கே, "ஏவம்" என்கிறவித்தை, எவ்வம் என்றுகுறைத்துக்கிடக்கிறதாய், "ஏ" என்று-அம்புக்குப்பேராய், அம்போடேசேர்ந்த சிலையென்னவுமாம். முற்பட்டயோஜனைக்கு, எவ்வமென்றது - எவ்வத்தைப் பண்ணாநிற்குமென்றபடி; பிற்பட்டயோஜனைக்கு, எவ்வம் என்கிறவிடத்தில் வகரவொற்று, கீழிலடிகளுக்குச் சேரவேண்டுகையாலே வந்துகிடக்கிற வித்தனை. இப்படியிருந்துள்ள சிலையையுடையரான வேடர் வர்த்திக்கிற காட்டிடத்திலே. (கன்றின்பின் தெய்வத் தலைவனைப் போக்கினேன்) (ங) ஸ்வைரகதியான கன்றுகளின்பின்னே தேவர்களுக்குத் தலையானவனைப் போகவிட்டேன். (எல்லேபாவமே). ()

மூ.—மிடறுமெழுமெழுத்தோடவெண்ணெய்விழுங்கிப்போய்ப்
படிறுபலசெய்திப்பாடியெங்குந்திரியாமே
கடிறுபலதிரிகானதரிடைக்கன்றின்பின்
இடறவென்பிள்ளையைப்போக்கினேனெல்லேபாவமே.

ப-ரை.—வெண்ணெய் - வெண்ணெயை, மிடறு - மிடற்றிலே, மெழுமெழுத்தோட - மெழுமெழுத்து உள்ளேயோடும்படியாக, விழுங்கி - விழுங்கியிட்டு, போய்-புறம்போந்து, பல-எண்ணில்லாத, படிறு-தீம்புகளை, செய்து—, இப்பாடியெங்கும் - இத்திருவாய்ப்பாடியெங்கும், திரியாமே - திரியாதபடியாக, பல - எண்ணிறந்த, கடிறு - காட்டானைகள், திரி - சஞ்சரியாநின்றுள்ள, கானதரிடை - காட்டுவழியிலே, கன்றின்பின் - புல்லுக்கண்டு பரந்தோடித்திரியும் கன்றுகளின்பின்னே, இடற - தட்டித்திரியும்படி, என்பிள்ளையை - மென்மைத்தன்மையனுன என்னுடையபிள்ளையை, போக்கினேன் - போகவிட்டேன்; எல்லேபாவமே—.

---

(க) அந்தரங்கன் - ஏகாந்தன். (உ) புத்யதீநமாக - இஷ்டப்படி. (ங) ஸ்வைரகதியான - தன்னிச்சைப்படிஉலாவித்திரிகிற.

வ்யா.—ஆறும்பாட்டு. (மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய்விழுங்கிப்போய்) இத்தால்-வெண்ணெய்விழுங்கும்போதை (க) அநாயாஸம் சொல்லுகிறது. அதாவது-(உ) ஓதநாபூபாதிகள் அமுதுசெய்யும்போது குறிக்கொண்டு திருப்பவளத்திலே இட்டிருந்து மென்று, மெள்ளமிடற்றுக்குக்கீழே யிழிச்சவேணுமிறே; அங்ஙனன்றிக்கே, "தாழியில் வெண்ணெய் தடங்கையாரவிழுங்கிய" என்றும், "தடாநிறைந்த வெள்ளிமலை யிருந்தாலொத்த வெண்ணெயைவாரி விழுங்கிட்டு" என்றும் சொல்லுகிறபடியே வெண்ணெயினுடைய ஸம்ர்த்தியைக்கண்டு ப்ரியப்பட்டு அபிநிவேசாதிசயத்தாலே திருக்கையைவிரித்து நிறையவள்ளி, "கைகலந்துண்டான்" என்கிறபடியே இடக்கையாலும் வலக்கையாலும் வாரியமுது செய்யும்போது ஒருபருக்கை யில்லாமையாலே மிடற்றிலுறுத்தாமல் மெழுமெழுத்து உள்ளேயோடும்படியாயிறே யிருப்பது. ஆகையால் இவன் ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்திருக்குமிறே. இப்படி வெண்ணெயை யமுதுசெய்து, (ங) கவ்யாந்தரங்களிற் காட்டிலும் இவன் விரும்பியிருப்பது வெண்ணெயேயிறே. *ஈட்டியவெண்ணெய் தொடுவுண்கைக்காகவிறேவந்தவதரித்ததும். விழுங்கிப்போயென்றது-விழுங்கியிட்டென்னுதல்; வெண்ணெயை விழுங்கி, தான் அல்லாதாரைப்போலே இவ்விடத்தில் நின்றும் ஸ்தலாந்தரத்திலே போயென்னுதல்; ஸ்வக்ர்ஹத்திலே இப்படி வெண்ணெயை விழுங்கிப் புறம்போயென்னுதல்.

(படிறுபலசெய்து)படிறு-தீம்பு. பலவென்கையாலே-அதுக்கு எண்ணில்லாமைசொல்லுகிறது. "பந்துபறித்துத்துகில்பற்றிக்கீறிப் படிறன்படிறுசெய்ய"என்கிறபடியே விளையாடுகிறபெண்கள்கையில் (ச) லீலோபகரணங்களைப்பறிப்பது, அவர்கள்புடைவைகளைப்பற்றிக்கிழிப்பது, சிற்றில்களையழிப்பது, "தொட்டுதைத்து நலியேல்" "எம்மைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்கிறபடியே அவர்களோடே இட்டீடுகொண்டு மெய்ப்பிணக்கிடுவதாய்ச் செய்யும் வ்யாபாரங்களுக்கு ஓரவதியில்லையிறே. இவன் செய்யுமவை (ரு) அவாச்யமுமாய்(சூ)அஸங்க்யேயமுமா யிருக்கையாலேயிறே "படிறு"என்றும் "பல"என்றும் இவள் அடக்கிச் சொல்லிவிட்டது. இப்படிசெய்து (இப்பாடியெங்கும்திரியாமே)ஓரகமிரண்டகத்தள வன்றிக்கே, ஒருதெரு இரண்டுதெருவளவு மன்றிக்கே, பஞ்சலக்ஷம் குடியாய்

(க) அநாயாஸம் - வருத்தமின்மை. (உ) ஓதநாபூபம் - ப்ரஸாதமும் பணியாரமும். (ங) கவ்யாந்தரங்கள் - பாலும், தயிரும், வெண்ணெயும், நெய்யும், மோருமாம். (ச) லீலோபகரணங்கள் - விளையாட்டுக்கருவிகள். (ரு) அவாச்யம் - வாக்காற்சொல்லொணாதது. (சூ) அஸங்க்யேயம் - எண்ணில்லாதது.

ஒருகோல் ஒருமணியான இத்திருவாய்ப்பாடியெங்கும் இப்படி திரியாதபடியாக. [அஞ்சவுரப்பாளசோதையாணாடவிட்டிட்டிருக்கும்] இவன் இப்படி செய்யாநின்றால் பயப்பட நியமியாதே "நம்முடைய பிள்ளையும் ஸமர்த்தனாய் இப்படி செய்யப்பெற்றோம்" என்று இது தன்னைக்கண்டு உகந்திருக்குமவளிறே. ஆகையாலிறே இப்படி திரியாதபடி போகவிட்டேனென்று க்லேசிக்கிறது.

(கடிறுபலதிரி) களிறுகள்பலவும் திரிகிற. "கெளிறு" என்கிற மத்ஸ்யத்தை, "கெடிறு" என்னுமாபோலே, களிறு என்கிற வித்தை, கடிறு என்கிறது. கருடனை, "கருளன்" என்று டகாரத்துக்கு ளகரமாகச் சொல்லுகிறாற்போலே, களிற்றை "கடிறு" என்று ளகரத்துக்கு டகரமாகச்சொல்லுகிறது. ஆனைகள்பலவும் திரிகிற வென்கையாலே, "காட்டானைகள் ஆளைக்கண்டால் ஓடித் தொடர்ந்து விழவிட்டுக்கொல்லும்" என்று அஞ்சிச்சொல்லுகிறாள். (கானதரிடை) காட்டுவழியிடத்திலே. அதாவது - (௧) சிற்றடிப்பாடாகையாலே இடவாய் வலவாய்ப்போக இடமற்றிருக்குமிறே. (கன்றின்பின்) அதிலும் தன்னிஷ்டத்திலேபோய் வருகையன்றிக்கே, புல்லுக்கண்டவிடத்திலே நுழைந்து போகாநிற்கும் கன்றுகளின்பின்னே திரியவேணுமே. (இடறவென்பிள்ளையைப்போக்கினேன்) இப்படி தட்டித்திரியும்படியாக ஸுகுமாரனை வென்பிள்ளையைப் போகவிட்டேன். (எல்லேபாவமே). (௬)

மூ.—வள்ளிநுடங்கிடைமாதர்வந்தலர்தூற்றிடத்
துள்ளிவிளையாடித்தோழரோடுதிரியாமே
கள்ளியுணங்குவெங்கானதரிடைக்கன்றின்பின்
புள்ளின்றலைவனைப்போக்கினேனெல்லேபாவமே.

ப-ரை.—வள்ளி - இளவஞ்சிக்கொடிபோன்று, நுடங்கு - துவளாநின்றுள்ள, இடை - இடையையுடையரான, மாதர் - பெண்களானவர்கள், வந்து—, அலர்தூற்றிட - தங்கள்விஷயத்தில் இவன்செய்ததீம்புகளைச்சொல்லிப் பழிதூற்ற, அதில் சற்றும்பயமில்லாதவனாய்க்கொண்டு, துள்ளி - நிலத்தில்மிதித்து நடவாதே துள்ளிக்கொண்டு, விளையாடி—, தோழரோடு - தோழன்மாரோடே, திரியாமே - திரியாதபடியாக, கள்ளி - மழையில்லாக்காலத்திலும் பசுமைமாறாத கள்ளியும், உணங்கு-பால்வற்றியுலரத்தக்க, வெம்-வெம்மையையுடைய, கானதரிடை - காட்டுவழியிலே, கன்றின்பின் - கன்றுகளின்பின்னே, புள்ளின் தலைவனை-பெரியதிருவடிக்கு நாயகனானவனை, போக்கினேன் - போகவிட்டேன்; எல்லேபாவமே—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (வள்ளியித்யாதி) வள்ளி - கொடி. கொடிபோலே நுடங்குகிற இடையையுடையரான பெண்கள் வந்து தங்கள்திறத்தில் இவன்செய்த படிறுகளைச்சொல்லிப் பழி

(௧) சிற்றடிப்பாடு - கொடிவழி.

தூற்ற. உளைய விளையாடினால் பழிதூற்றாநிற்பார்களிறே. (துள்ளி விளையாடித் தோழரோடுதிரியாமே) இப்படி இவர்கள்வந்து பழி தூற்றாநின்றால் ஒருசற்றும் பயமின்றிக்கே இதுதன்னையே தனக் கேற்றமாகக்கொண்டு கர்வித்து, குழக்கன்றுகள் செருக்காலே துள் ளுமாபோலே நிலத்தில்மிதித்து நடவாதே துள்ளிக்கொண்டு (க) விநோதித்து * தன்னேராயிரம்பிள்ளைகளான தோழன்மாரோடே திரியாதபடியாக. (கள்ளியுணங்குவெங்கானதரிடைக் கன்றின்பின்) அநாவ்ர்ஷ்டியிலும் பசுமைமாறாத கள்ளியானது நிலவெம்மையா லேபால்வற்றிப் பசுமையழிந்து (உ) உணரும்படி அத்யுஷ்ணமான காட்டுவழியிலே கன்றுகளின்பின்னே. (புள்ளின் தலைவனைப்போக் கினேன்) பெரியதிருவடிக்கு நாயகனாய் அவன்மேற்கொண்டு ஸஞ் சரிக்குமதொழிய ஒருகாலமும் (௩) கால்நடை திரியாதவனைப் போக்கினேன் (எல்லேபாவமே). (௭)

மூ.—பன்னிருதிங்கள்வயிற்றிற்கொண்டவப்பாங்கினால்
என்னிளங்கொங்கையமுதமூட்டியெடுத்தியான்
பொன்னடிநோவப்புலரியேகானிற்கன்றின்பின்
என்னிளஞ்சிங்கத்தைப்போக்கினேனெல்லேபாவமே.

ப-ரை.—பன்னிருதிங்கள் - பன்னிரண்டுமாஸம், வயிற்றிற்கொண்ட-நலுங் காமல் வயிற்றில்வைத்துக்கொண்டிருந்து, அப்பாங்கினால் - மிகப்பாங்காகநடத் திப்போந்த நட்பின்மிகுதியாலே, யான்—, என் - மிக்கவன்பினளானவென் னுடைய, இள - குழைந்திருக்கிற, கொங்கையமுதம் - முலையில்பாலை, ஊட்டி யெடுத்து—, பொன் - மெல்லியவாய் அழகியவாயிருந்துள்ள, அடி - திருவடிகள், நோவ - கல்லுங்கரடுமானநிலத்திலே நடக்கையாலே மிகவும்நோம்படியாக, புலரி - விடியற்காலத்திலே, கானில் - காட்டிலே, கன்றின்பின் - கன்றுகளின் பின்னே, என்-என்னுடையபிள்ளையாய், இளஞ்சிங்கத்தை-சிங்கக்குட்டிபோலே செருக்கித்திரிகிறவனை, போக்கினேன் - போகவிட்டேன்; எல்லேபாவமே—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (பன்னிருதிங்கள்) "[Grantha] [Grantha]" "தத்ஶ்ச த்வாதஶே மாஸே" என்கிறபடியே சக்ரவர்த்தித் திரு மகனைப்போலே இவனும் பன்னிரண்டுமாஸம் கர்ப்பவாஸம்பண் ணியிறே பிறந்தது. கர்ப்பிணிகளான ஸ்த்ரீகள் தங்களுடைய (௪) ஆதரத்தால், ஸ்திதி கமந சயநாதிகளால் கர்ப்பத்திலிருக்கிற பிள்ளைகளுக்கு நலுக்கம்வாராதபடி பேணிக்கொண்டிறே திரிவது; அப்படியே இவளும் பன்னிரண்டுமாஸமும் ஒருநலுக்கம் வாராத படிபேணி தன்வயிற்றிலேவைத்துக்கொண்டிருந்த ஸ்நேஹவிசே ஷத்தைச் சொல்லுகிறாள் (பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்ட வப் பாங்கினால்) என்று. (என்னிளங்கொங்கை யமுதமூட்டி யெடுத்தி

(க) விநோதித்து - வேடிக்கையாய். (உ) உணரும்படி - உலரும்படி. (௩) கால்நடை - கால்நடையாக. (௪) ஆதரம் - அன்பு.

யான்) வயிற்றிலிருந்தகாலம் நலுங்காமல் நோக்கினவள், பிறந்து வளருகிறகாலத்தில் நலுங்கவிடாளிறே; ஆகையாலே இவனுடைய பருவத்துக்கிடான தாரகமிட்டு தானெடுத்துவளர்த்துக்கொண்டு போந்தபடி சொல்லுகிருள். இப்படி ஸ்நேஹியான வென்னுடைய இளமுலையில்பாலையூட்டி யானெடுத்து. பிள்ளைமுழுசி முலைநெருடுங்காலத்தில் "வரக்கு" என்று இருக்கையன்றிக்கே, குழைந்திருக்கும்படியைப்பற்ற "இளமுலை"என்கிறது. கொங்கையமுதமென்கையாலே-முலைப்பாலென்கிறது. ஊட்டியெடுத்தியானென்றது - நிலத்தில்விடாமல் ஒக்கலையிலெடுத்துக்கொண்டுதிரிந்து வளர்த்து வைத்தே னென்கை. (பொன்னடிநோவப் புலரியேகானிற்கன்றின் பின்) * தண்போதுகொண்டதவிசு "நெரிஞ்சி" என்னும்படி அத்யந்தம் ம்ர்துவாய் (உ) ஸ்ப்ர்ஹணீயமான திருவடிகள் கடிநஸ்தலத்திலே நடக்கையாலே உளைந்துநோம்படியாக, சிறுகாலே காட்டிலேமேய்ச்சல் கண்டவிடத்திலேயோடும் கன்றுகளின்பின்னே. (என்னிளஞ்சிங்கத்தைப் போக்கினேன்) என்னுடைய பிள்ளையாய் நான் சீராட்டிவளர்க்கையாலே ஸிம்ஹக்கன்றுபோலே செருக்கித் திரிகிறவனைப் போகவிட்டேன். (எல்லேபாவமே). (அ)

மூ.—குடையுஞ்செருப்புங்கொடாதேதாமோதரனைநான்
உடையுங்கடியனவூன்றுவெம்பரற்களுடைக்
கடியவெங்கானிடைக்காலடிநோவக்கன்றின்பின்
கொடியேனென்பிள்ளையைப்போக்கினேனெல்லேபாவமே.

ப-ரை.—குடையும்-மேலேவெய்யில்படாமைக்குக் குடையையும், செருப்பும் - திருவடிகளில் நிலவெம்மைதட்டாமைக்கும் முள்ளூறுத்தாமைக்கும் ரக்ஷகமாகச்செருப்பையும், கொடாது - கொடாமல், தாமோதரனை - எனக்குக் கீழ்ப்படிந்தவனாய் நான்கட்டினகட்டு அவிழ்க்கமாட்டாமலிருந்த யென்பிள்ளையானவனை, நான்—, உடையும் - கதிரவன்வெப்பத்தாலே பிளந்துகிடப்பதாய், கடியன - கூரியதாய்க்கொண்டு, ஊன்று - காலிலேயூன்றுவனவாய், வெம்-கால்வைக்கப்பெறுதபடியான, பரற்களுடை - பருக்காங்கற்களையுடைய, கடிய வெம் - அத்யுஷ்ணமான, கானிடை - காட்டிலே, கால் - கால்களின், அடி - உள்ளடியானது, நோவ - நோம்படியாக, கன்றின்பின் - பச்சைகண்டவிடமெல்லாம் பரந்துதிரியும் கன்றுகளின்பின்னே, கொடியேன் - இவற்றைநன்காராயாத கொடுமையையுடையநான், என்பிள்ளையை - மென்மைத்தன்மையனான வென்னுடையபிள்ளையை, போக்கினேன் - போகவிட்டேன்; எல்லேபாவமே—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (குடையும் செருப்பும்கொடாதே) வெய்யிலுக்கு ரக்ஷகமானகுடையையும், அடிச்சூட்டுக்கும் முள்ளு முதலானவற்றுக்கும் ரக்ஷகமானசெருப்பையும்கொடுத்துவிடாதே. (தாமோதரனைநான்) எனக்குபவ்யனாய் நான்கட்டினகட்டு அவிழ்க்க

(உ) ஸ்ப்ர்ஹணீயமான - அழகியதான.

மாட்டாமலிருந்த பிள்ளையானவனைநான். (உடையுங்கடியனவூன்று வெம்பரற்களுடை) உஷ்ணத்தாலேதான் உடைந்துகிடப்பதாய், கூரியதாய்க்கொண்டு காலிலேவூன்றுவனவாய், கால்வைக்கப் பெறுதபடி அத்யுஷ்ணமான பருக்கைகளையுடைய. (கடியவெங்கானிடை) மேல் ஒதுங்கநிழலில்லாதபடி கொடியதாய் வெவ்விதான காட்டிலே. (காலடிநோவ) கால்களின் உள்ளடிநோம்படியாக. (கன்றின்பின்கொடியே னென்பிள்ளையைப்போக்கினேன்) பச்சை கண்டவிடமெல்லாம்பரந்துதிரியும் கன்றுகளின்பின்னே இவற்றையெல்லாம் ஒக்கவொக்கநிரூபியாத கொடுமையையுடையேனான நான் ஸுகுமாரனானவென்னுடைய பிள்ளையைப்போகவிட்டேன். (எல்லேபாவமே.) (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—என்றுமெனக்கினியானையென்மணிவண்ணனைக்
கன்றின்பின்போக்கினேனென்றசோதைகழறிய
பொன்றிகழ்மாடப்புதுவையர்கோன்பட்டன்சொல்
இன்றமிழ்மாலைகள்வல்லவர்க்கிடரில்லையே.

ப-ரை.—என்றும் - எல்லாக்காலத்திலும், எனக்கு—, இனியானை - இனியனானவனாய், என் - எனக்கநுபாவ்யமான, மணிவண்ணனை - நீலரத்நம்போன்ற வடிவையுடையவனை, கன்றின்பின்-கன்றுகளின்பின்னே, போக்கினேனென்று - போகவிட்டேனென்று, அசோதை - யசோதைப்பிராட்டி, கழறிய - மநவருத்த முற்றுச்சொல்லியசொலவை, பொன் - பொன்னாலேசெய்யப்பட்டு, திகழ் - விளங்காநின்றுள்ள, மாடம் - மாடங்களையுடைய, புதுவையர் - ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு, கோன் - தலைவரான, பட்டன் - பெரியாழ்வார், சொல் - அருளிச்செய்த, இன் - சொற்பொருளினினிமையையுடைய, தமிழ்மாலைகள்-தமிழ்த் தொடைகளானவிப்பத்தை, வல்லவர்க்கு - கருத்துடன்கற்கவல்லவர்களுக்கு, இடர் - ஸர்வேச்வரனைப்பிரிந்திருக்கையாகிற துக்கம், இல்லை - இல்லாதபடி போம்.

வ்யா.—(என்றுமெனக்கினியானை) இப்போதுசெய்கையன்றிக்கே, எல்லாக்காலத்திலும் எனக்கு ரஸாவஹனானவனை. (என்மணிவண்ணனை) எனக்கு அநுபாவ்யமான நீலரதநம்போன்றவடிவையுடையவனை. (கன்றின்பின்போக்கினேனென் றசோதைகழறிய) "விளைவதறியாதே கன்றுகளின்பின்போகவிட்டேன்" என்று யசோதைப்பிராட்டி க்லேசப்பட்டுச்சொன்னத்தை. (பொன்றிகழ்மாடப் புதுவையர்கோன்பட்டன்சொல்) பொன்னாலேசெய்யப்பட்டு விளங்காநின்றுள்ள மாடங்களையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் அருளிச்செய்த. (இன்றமிழித்யாதி)

சப்தார்த்தங்களினுடைய ரஸத்தையுடைத்தான தமிழ்த்தொடைக ளானவிப்பத்தை ஸாபிப்ராயமாக வல்லவர்களுக்கு பகவத்விச்லேஷ து:கமில்லை. (௧௦)

---

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு.—அஞ்சநப்பற்று நன்மணிவண்ணம் அவ்வமிடறு வள்ளிபன்னிருகுடையென்றும் சீலை.

ஆ திருமொழி உ௧-க்கு, பாட்டு-உ௩௧.

---

அ.—ஜாத்யுசிததர்மமாகையாலே யவனைக் கன்றுகள்மேய்க்கப் போகவிட்ட யசோதைப்பிராட்டி, அவன்போனவநந்தரம் தத்விச்லேஷா (௧) ஸஹமாநையாய்க்கொண்டு, ஊரில் நின்றபோது செய்யும் லீலாசேஷ்டிதங்களையெல்லாம்சொல்லி, இப்படிசெய்து திரியாமல் இவனை ஏதுக்காகப் போகவிட்டேன் என்றும், அவனுடைய மார்த்தவத்தையும் போகிறவிடத்தின் கொடுமைகளையுமநுஸந்தித்து, இப்படிஸுகுமாரனானவிவனை இந்தக்கொடியகாட்டிலே கன்றுகளின்பின்னே போகவிட்டேன் என்றும் க்லேசித்துச் சொன்ன ப்ரகாரங்களை, தாமும் அப்படியே அவனைக்குறித்துப் பேசி யநுபவித்தாராய் நின்றார் - கீழ்; கன்றுகளைமேய்த்து மீண்டு வருகிறபோது அவள்எதிரேசென்று அவனுடைய திருமேனியையும் அலங்காரத்தையும்கண்டு ப்ரீதையாய், தானநுபவித்துப் பலர்க்கு மழைத்துக்காட்டி, லோகத்திலே என்னைப்போல் பிள்ளைபெற்றாரில்லையென்பது; நான்வாழ்வையுகந்து, உன்னைக் கன்றுமேய்க்கப் போகவிட்டேன், என்னைப்போலே கடிநசித்தையாயிருப்பாளொரு ஸ்த்ரீ யில்லையென்பது ; உன்னுடைய திருமேனியெல்லாம் கற்றுத் தூளியா யிருக்கிறதுகாண், நீராடத்தக்கது பண்ணிவைத்தேன், நீராடி யமுதுசெய்யென்பது ; குடையும்செருப்பும் கொடாமையாலே திருவடிகளும்வெதும்பித் திருக்கண்களும்சிவந்து திருமேனியு மலசுதலையடைந்தாய்காண் என்பதாய்; பின்னையும் பலவற்றையும் அவனைக்குறித்துச் சொல்லிக்கொண்டுசென்று, "கண்ணா நீ நாளைத்தொட்டுக் கன்றின்பின்போகேல் கோலஞ்செய் திங்கேயிரு" என்னும தளவாக வவன்செய்யுமவையும் தவிருமவையும் கற்பித்த பாசுரங்களையெல்லாம் ததவஸ்தாபந்நராய்க்கொண்டு, தம்முடைய ப்ரேமாதிசயத்தாலே தாமுமவனைக்குறித்து அப்படியேபேசி, அந்த ரஸத்தை யநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

மூ.—சீலைக்குதம்பையொருகாதொருகாது செந்நிறமேற்றோன்றிப் பூக், கோலப்பணைக்கச்சுங் கூறையுடையுங் குளிர்முத்தின்

(௧) அஸஹமாநையாய் - பொறுக்காதவளாய்.

கோடாலமும், காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன்
வேடத்தைவந்து காணீர், ஞாலத்துப்புத்திரனைப் பெற்றார்
நங்கைமீர் நானே மற்றாருமில்லை.

ப-ரை.—ஒருகாது - ஒருகாதிலே, சீலைக்குதம்பை-சீலைத்தக்கையையும், ஒருகாது - மற்றொருகாதிலே, செந்நிறமேல்தோன்றிப்பூ - செங்காந்தள்பூவையும், உடை - திருமேனிக்குத்தகுதியாகச்சாத்தின, கூறையும் - திருப்பரிவட்டத்தையும், அதுநழுவாதபடி யதின்மேலேசாத்தின, கோலம்-அழகியதாய், பணை-பெரிதாயிருந்துள்ள, கச்சும் - கச்சையும், குளிர் - குளிர்ந்த, முத்தின் - முத்தாலே சமைக்கப்பட்டு, கோடு - பிறைபோலேவளைந்திருக்கிற, ஆலமும்-ஹாரத்தையுமுடையனுய்க்கொண்டு, காலி - கன்றுகளை வயிறுநிறையமேய்த்து, பின்னே வருகின்ற - அவற்றைமுன்நடக்கவிட்டுத் தான்பின்நடந்துவருகிற, கடல் - கடல் போன்ற, வண்ணன் - நிறத்தையுடையவனுடைய, வேடத்தை - அலங்காரத்தை, வந்துகாணீர் - வந்துகாணுங்கள்; நங்கைமீர் - பிள்ளைவாசியறியும் குணபூர்த்தியுடையவர்களே, ஞாலத்து - லோகத்தில், புத்திரனை - புத்ரனை, பெற்றார்-பெற்றவர்களில், "நல்லபிள்ளைபெற்றவள்" என்று சொல்லத்தக்கேன், நானே—; மற்றாருமில்லை - மற்றொருவருமில்லை.

வ்யா.—முதற்பாட்டு. (சீலையித்யாதி) ஒருகாதிலே (௧) சீலைக்குதம்பை, ஒருகாதிலே சிவந்தநிறத்தையுடைய (௨) மேல்தோன்றிப்பூ. இரண்டுகாதிலும் சீலைக்குதம்பையிட்டு விட, அதிலே ஒருகாதிலத்தைக் கழற்றிப்பொகட்டுச் செங்காந்தள்பூவை யிட்டுக்கொண்டுவந்தானுய்த்து.(கோலப்பணைக்கச்சுங்கூறையுடையும்)திருமேனிக்குத் தகுதியாகச்சாத்தின பரிவட்டமும், அதுநழுவாதபடி அதின்மேலேசாத்தின (௩)தர்சநீயமாய்ப் பெரிதானகச்சும். (குளிர் முத்தின் கோடாலமும்) குளிர்ந்தமுத்தாலே சமைக்கப்பட்டுப் பிறைபோலே வளைந்திருக்கிற ஹாரமும். "ஆரம்" என்கிறவிது "ரலயோரபேதஃ" என்கிறந்யாயத்தாலே "ஆலம்" என்றுகிடக்கிறது. அன்றிக்கே, "ஆரம்" என்று பாடந்தானுகவுமாம். (காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன் வேடத்தைவந்து காணீர்) "காலி" என்கிறவிது ஜாதிப்பேராகையாலே, இவ்விடத்தில் - கன்றுகளைச் சொல்லுகிறது. கன்றுகளை வயிறுநிறையமேய்த்து அவற்றை முன் நடக்கவிட்டு தான்பின்னேவாராநிற்கிற கடல்போன்ற நிறத்தையுடையவனுடைய அலங்காரத்தை வந்துகாணிகோள். "சீலைக்குதம்பை" இத்யாதியாற்சொன்ன வொப்பனையையிறே "இங்கு வேஷம்" என்கிறது. காணீரென்கிறது - கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படிவந்து காணுங்கோளென்கை. (ஞாலத்தித்யாதி) பிள்ளைவாசியறியும் குணபூர்த்தியுடையவர்களே, லோகத்தில் புத்ரனைப்பெற்ற

---

(௧) சீலைக்குதம்பை - சீலைத்தக்கை. (௨) மேல்தோன்றிப்பூ - செங்காந்தள்பூ. (௩) தர்சநீயமாய் - அழகிதாய்.

வர்களில் "நல்லபிள்ளைபெற்றவள்" என்று சொல்லத்தக்கேன் நானே, மற்றொருவருமில்லை. "என்னநோன்பு நோற்றாள் கொலோ இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்று கொண்டாடப்பட்டார் என்னையொழிய மற்றொருவருண்டோவென்கை. (க)

அ.—இரண்டாம்பாட்டு. "காலிப்பின்னேவருகின்ற கடல் வண்ணன் வேடத்தைவந்து காணீர்" என்று-கன்றுமேய்த்து வருகிற போதை அவனுடையவடிவையும் அலங்காரத்தையும் தானநுபவித்துப் பிறர்க்குக்காட்டினாளாயிறே கீழ்நின்றது; இது, அவனை யெதிரேசென்று அணைத்துக்கொண்டு, தன்னுடைய ஸ்நேஹத்தாலே அவன் முகத்தைப்பார்த்துச் சொல்லுகிற பாசுரமாயிருக்கிறது.

மூ.—கன்னிநன்மாமதிள்சூழ்தரு பூம்பொழிற்காவிரித் தென்னரங்கம், மன்னிய சீர்மதுசூதநா கேசவா பாவியேன்வாழ்வுகந்து, உன்னையிளங் கன்றுமேய்க்கச் சிறுகாலேயூட்டியொருப் படுத்தேன், என்னின்மநம்வலியா ளொருபெண்ணில்லை யென்குட்டனேமுத்தந்தா.

ப-ரை.—கன்னி - அழிவில்லாததாய், நல் - யாவர்க்கும் இன்பத்தையுண்டு பண்ணுமதாய், மா - அரணாகப்போரும்படியான பெருமையையுடைத்தாயிருந்துள்ள, மதிள் - திருமதிள்களாலே, சூழ்தரு - சூழப்பட்டு, பூ - நித்யவஸந்தமான, பொழில் - திருச்சோலைகளையுமுடைத்தாய், காவிரி - அவற்றைவளர்ப்பதான * கங்கையிற்புநிதமானகாவிரியாகிறமஹாநதியோடும்கூடி, தென் - தெற்குத்திக்குக்கு முதன்மையாயிருந்துள்ள, அரங்கம் - *திருவரங்கன்திருப்பதியிலே, மன்னிய - *யாவரும்வந்தடிவணங்கும்படி நித்யவாஸம்பண்ணுகிற, சீர் - ஸௌசீல்யகுணயுக்தனாய், மதுசூதநா - ஆச்ரிதவிரோதிகளை மதுவைநிரஸித்தாற்போலே நிரஸித்துப்பொகடுமவனாய், கேசவா - அவர்களநுபவிக்கைக்குத்தகுதியான அழகியமயிர்முடியையுடையவனே, பாவியேன் - உன்னுடைய வருமைபெருமையும் மென்மைத்தன்மையுமறியாத பாபியானநான், வாழ்வு - நமதுசாதிக்கேற்றதாயிருந்துள்ள கன்றுமேய்க்கைமுதலியவாழ்வை, உகந்து - விரும்பி, உன்னை - இவ்வுலைச்சலுக்கு ஆளல்லாதவுன்னை, இள-புல்லைப்பறித்துக் கசக்கித்தித்த வேண்டும்படியான இளமையையுடைய, கன்று - கன்றுகளை, மேய்க்க - மேய்க்கும்படியாக, சிறுகாலே - விடிவோறே, ஊட்டி - உன்னையுண்பித்து, ஒருப்படுத்தேன் - அவற்றின்பின்னே போகவிட்டேன்; என்னில்-கன்றுகளின்பின்னே போகவிட்டுப்பொறுத்திருந்த வென்னிற்காட்டில், மநம்வலியாள் - நெஞ்சுரமுடையளான, ஒருபெண்—, இல்லை - இந்த லோகத்திலில்லை; என் - என்னுடைய, குட்டனே - சிறுப்பிள்ளையானவனே, முத்தந்தா - முத்தம் தரவேணுமென்று அணைத்து உகந்துசொல்லுகிறாள்.

வ்யா.—(கன்னியித்யாதி) அழிவில்லாததாய் (க) அகிலஜநமநோஹரமாய் அரணாகப் போரும்படியான பெருமையை யுடை

(*) அகிலஜநமநோஹரம் - யாவர்க்கும் இன்பத்தையுண்டுபண்ணுமது.

த்தாயிருந்துள்ள திருமதிள்களாலே சூழப்பட்டு, (க) நித்யவஸந்தமான திருச்சோலைகளையுமுடைத்தாய், அவற்றை வளர்ப்பதான காவிரியாகிற மஹாநதியோடுங்கூடித் தெற்குத்திக்குக்கு ப்ரதாநமாயிருந்துள்ள * திருவரங்கன்திருப்பதியிலே * யாவரும்வந்தடிவணங்கும்படி நித்யவாஸம்பண்ணுகிற ஸௌசீல்யகுணயுக்தனாய், ஆச்ரிதவிரோதிகளை மதுவைநிரஸித்தாற்போலே நிரஸித்துப்பொகடுமவனாய், அவர்களுக்கு அநுபாவ்யமாம்படி ப்ரசஸ்தமான திருக்குழலையுடையனா யிருக்கிறவனே. (பாவியேன் வாழ்வுகந்து) உன்னுடைய வருமைபெருமையும் ஸௌகுமார்யமுமறியாத பாபியானநான் ஜாத்யுசித தர்மாநுஷ்டாநமாகிற வாழ்வையுகந்து. (உன்னை) இவ்வலைச்சலுக்கெல்லாம் ஆளல்லாதவுன்னை. (இளங்கன்று மேய்க்க) அள்ளியுண்ணவறியாத வுன்னைப்போலே, பறித்துக்கசக்கித்தீத்தவேண்டும்படியான இளங்கன்றுகளை மேய்க்கும்படியாக. (சிறுகாலையூட்டி யொருப்படுத்தேன்) அவைமேய்க்கப் போங்காலமான விடிவோறே "மீளவருமளவும் உனக்கு தாரகமாகவேணும்" என்று ஊட்டி அவற்றின்பின்னே போகவிட்டேன். (என்னில் மநம்வலியாளொரு பெண்ணில்லை) இப்படி உன்னைப்போகவிட்டுப்பொறுத்திருந்த வென்னிற்காட்டில் நெஞ்சுரமுடையாளொருபெண் லோகத்திலில்லை. வேறுசிலராகில் நெஞ்சழிந்து விழுந்துவிடார்களோ வென்கை. (என்குட்டனே முத்தம்தா) என்னுடைய சிறுப்பிள்ளையானவனே முத்தம்தாவென்று அணைத்து உகந்துசொல்லுகிறாள். முத்தம் - அதரம். (உ)

மூ.—காடுகளூடுபோய்க் கன்றுகள்மேய்த்துமறியோடிக்கார்க்கோடற்பூச், சூடிவருகின்றதாமோதராகற்றுத்தூளிகாணுன்னுடம்பு, பேடைமயிற்சாயற் பின்னைமணாளா நீராட்டமைத்துவைத்தேன், ஆடியமுதுசெய் யப்பனுமுண்டில னுன்னோடுடனே யுண்பான்.

ப-ரை.—காடுகளூடுபோய் - புல்லும்தண்ணீருமுள்ளவிடம்கண்டு மேய்க்கைக்காகப் பலவகைப்பட்டகாடுகளுக்குள்ளேபோய், கன்றுகள் - கன்றுகளை, மேய்த்து—, மறி - அவைகைகழியப்போகாமல் மறிக்கைக்காக, ஓடி - முன்னேயோடி, அவை வயிறுநிறையமேய்ந்து ஊரைநோக்கிமடங்கின களிப்பாலே, கார - பெரிய, கோடல்பூ - வெண்காந்தள்பூக்களை, சூடி - திருமுடியிலேசாத்திக்கொண்டு, வருகின்ற - வாராநிற்பானாய், தாமோதரா - கட்டினகயிற்றின்தழும்புகாணலாம்படியான வயிற்றையுடையனே, உன் - உன்னுடைய, உடம்பு - திருமேனியெங்கும், கன்று - கன்றுகளாலேகிளம்பின, தூளிகாண் - தூளியேறிக்கிடக்கிறதுகாண்; மயில்பேடை - பெண்மயில்போன்ற, சாயல்-சாயலையுடைய, பின்னை - நப்பின்னைப்பிராட்டிக்கு, மணாளா - வல்லபனானவனே, நீராட்டு -

(க) நித்யவஸந்தமாய் - என்றும் வசந்தருதுவாய்.

நீராடுகைக்குவேண்டுவன, அமைத்துவைத்தேன் - ஆயத்தம்பண்ணிவைத்தேன்; ஆடி - நீராடிவிட்டு, அமுதுசெய் - அமுதுசெய்யவேணுமென்ன; அதுகேட்டு, சற்றுப்பொறுத்தாகிறது என்ன; உன்னோடேனே - உன்னுடனே, உண்பான் - உண்கைக்காக, அப்பனும் - உங்கள்தமப்பனாரும், உண்டிலன் - உண்டிலர்; ஆதலால், காலத்தாழ்வுசெய்யாமல் சடக்கென அமுதுசெய்யவேணுமென்கிறாள்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (காடுகளூடுபோய்) கன்றுகளுக்குப் புல்லும் தண்ணீருமுள்ளவிடம் பார்க்கைக்காகவும், அவைமேய்க்கைக்காகவும், ஒன்றுபோலன்றிக்கே பலவகைப்பட்டிருந்துள்ள காடுகளுக்குள்ளேபோய். (கன்றுகள்மேய்த்து மறியோடி) கன்றுகளை மேய்த்து, அவை கைகழியப்போகாமல்மறிக்கைக்காக முன்னேயோடி. (கார்க்கோடல்பூச்சூடிவருகின்ற) அவை வயிறுநிறையமேய்ந்து ஊரைநோக்கி மடங்கினவாறே (க) ப்ரீதனாய், பெரியகோடல் பூக்களைத் திருமுடியிலே சாத்திக்கொண்டு வாராநிற்கிற. (தாமோதரா) முன்பு தனக்குநியாம்யனாயிருந்த (உ) பந்தத்தை யுணர்த்துகிறாள் - மேலும் தான் நியமித்தபடி செய்கைக்காக. (கற்றுத்தூளி காணுன்னுடம்பு) கன்றுகளினுடைய திரளுக்குநடுவேபோகையாலே அந்த தூளியேறிக்கிடக்கிறதுகாண் உன்னுடைய திருமேனியெங்கும். (பேடைமயிற்சாயல் பின்னைமணாளா) மயில்பேடைபோலும் சாயலையுடைய நற்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனானவனே. இத்தால் - ஜாத்யுசிததர்மாநுஷ்டாநத்தால்வந்த தூளியாகையாலும், அது தான் ரத்நத்திலேயேறின (௩) வார்ப்புப்போலே யிருக்கையாலும் எனக்கினிதா யிருந்ததாகிலும், உனக்கபிமதையான நற்பின்னையோட்டைக்கலவிக்குறுப்பாகக் குளிக்கவேணுமென்னு மிடத்தை ஸூசிப்பிக்கிறாள். (நீராட்டமைத்துவைத்தேன்) நீராடுகைக்குவேண்டுவன சமைத்துவைத்தேன். அதாவது - * எண்ணெய் புளிப்பழம் கொண்டு வருகையும், * காய்ச்சினநீரொடு நெல்லிக்கடாரத்தில் பூரித்துவைக்கையுமிறே. (ஆடியமுதுசெய்) இளைப்பாலே சடக்கென அமுதுசெய்யப்புகுராதே, நீராடிவிட்டு அமுது செய்யவேணும். (அப்பனுமுண்டிலன் உன்னோடேனேயுண்பான்) "உன்னோடேனேயுண்ணவேணும்" என்று உங்கள் தமப்பனாரும் உண்டிலர். ஆனபின்பு, காலவிளம்பம்பண்ணாதே கடுக அமுதுசெய்யென்கை.

மூ.—கடியார்பொழி லணிவேங்கடவா கரும்போரேறே நீயுகக்கும், குடையுஞ்செருப்புங் குழலுந்தருவிக்கக் கொள்ளாதே போனாய் மாலே, கடியவெங்கானிடைக் கன்றின்பின்போன சிறுகுட்டச் செங்கமல, வடியும்வெதும்பி யுன்கண்கள் சிவந்தா யசைந்திட்டாய்நீ யெம்பிரான்.

(க) ப்ரீதனாய் - அன்பனாய். (உ) பந்தம் - ஸம்பந்தம். (௩) வார்ப்பு - வார்ப்படம்.

ப - ரை.—கடி ஆர் - பரிமளம்மிக்க, பொழில் - பொழில்களையுடைத்தாய், அணி - அழகிதாயிருந்துள்ள, வேங்கடவா - திருமலையிலே நித்யவாஸம்பண்ணு மவனுய், கரு - கறுத்தநிறத்தையுடைத்தாய், போர் - செருக்காலே பொருது, ஏறே - தன்னிச்சைப்படி திரியாநின்றுள்ள ரிஷபம்போலேமேனுணிப்புத்தோற் றத்திரிகிறவனே, நீ—, உகக்கும் - உகக்குமவையாய், குடையும் - மழைத்துளி கள்மேல்விழாதபடி காக்குமதானகுடையையும், செருப்பும்-முள்ளுறுத்தாமை முதலியவற்றுக்குரக்ஷகமான திருவடிநிலைகளையும், குழலும் - கன்றுகளையமை த்துமேய்க்கைக்கும் மறிக்கைக்குமுறுப்பாக ஊதுகைக்குடலானவேய்ங்குழலை யும், தருவிக்க - தருவிக்கச்செய்தே, கொள்ளாதே - இவற்றைவாங்கிக்கொள் ளாதே, மால்-கன்றுகள்மேய்க்கையிலுண்டானமிகுந்த ஆசையாலே, போனுய்-அவற்றின்பின்னேபோனவனே, கடியவெம் - மிகவும்வெம்மையையுடைத்தான, கானிடை - காட்டிலே, கன்றின்பின் - கன்றுகள்போனவிடமெங்கும், போன - பின்துடர்ந்துபோன, சிறுக்குட்டன் - சிறுப்பிள்ளையான வுன்னுடைய, செங்கம லம் - செந்தாமரைமலரையொத்த, அடியும் - திருவடிகளும், வெதும்பி - கொதி த்து, உன் - உன்னுடைய, கண்கள் - திருக்கண்களும், சிவந்தாய் - சிவந்து, அசைந்திட்டாய் - இளைத்திட்டாய், நீ—; எம்பிரான்-என்னுயனுனவனேஎன்று மநந்தளர்ந்து சொல்லுகிறுள்.

வ்யா.—நாலாம்பாட்டு. (கடியித்யாதி) (௧) பரிமளப்ரசுரமான பொழில்களையுடைத்தாய் அழகியதாயிருந்துள்ள திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிறவனே. (கரும்போரேறே) கறுத்தநிறத் தையுடைத்தாய், செருக்காலே எதிரேபொருது ஸ்வைரத்திலே திரியும் ரிஷபம்போலே, திருவாய்ப்பாடியை (௨) மூலையடியேநட த்தி, மேனுணிப்புத்தோற்றத் திரிகிறவனே. "பட்டிமேய்ந்தோர் காரேறு" என்னக்கடவதிறே. (நீயுகக்குமித்யாதி) நீயுகக்குமவை யான (௩) வர்ஷாதபவாரணமான குடையும், (௪) கண்டகாதிபரி ஹாரகமான திருவடிநிலைகளும், கன்றுகளையமைத்து மேய்க்கைக் கும் அழைக்கைக்கு முறுப்பாக ஊதுகைக்குடலான வேய்ங்குழலும் தருவிக்கச்செய்தே இவற்றைவாங்கிக்கொள்ளாதே, கன்றுகள் மேய் க்கையில் வ்யாமோஹத்தாலே போனவனே. (கடியவெங்கானி டைக்கன்றின்பின்போன) மிகவும்வெம்மையையுடைத்தான காட் டிலே கன்றுகள்போனவிடமெங்கும் துடர்ந்துபோன. (சிறுக் குட்டச் செங்கமலவடியும் வெதும்பி) சிறுப்பிள்ளையான வுன்னு டைய சிவந்தகமலம்போன்ற திருவடிகளும் கொதித்து. செங்கம லவடியென்கையாலே - திருவடிகளினுடைய மென்மை குளிர்த்தி முதலானவற்றைச் சொல்லுகிறது. இப்படியிருக்கிற திருவடிகள் குடையும் செருப்புமின்றிக்கே * கடியவெங்கானிலே திரிந்தால்

(௧) பரிமளப்ரசுரமான - மிக்க பரிமளத்தையுடைய. (௨) மூலையடியேநட த்தி - தன்னிச்சைப்படிநடத்தி. (௩) வர்ஷாதபவாரணமான - மழையையும் வெய்யிலையும் தடுக்குமதான. (௪) கண்டகாதிபரிஹாரகம் - முள்முதலானவை உறுத்தாமல்பண்ணுமது.

வெதும்பச்சொல்லவேண்டாவிறே. (உன்கண்கள்சிவந்தாய்) கால் கொதித்தால் கண்கள்சிவக்கை நிச்சிதமிறே. அதுக்குமேலே, கன்றுகளுக்கு (க) மேய்ச்சற்றலைபார்க்கை, அவற்றின்வயிற்றிலே நிறைவு குறைவுபார்க்கை, "துஷ்டம்ருகங்கள் வருகிறதுண்டோ" என்று சுற்றும்பலகாலும் பார்க்கை, கைகழியப்போனவையுண்டோவென்று மறிக்கைக்குப்பார்க்கைமுதலாக ஓரொன்றிலே ஊன்றப்பார்க்கையாலும் திருக்கண்கள்சிவக்குமிறே. (அசைந்திட்டாய்நீ யெம்பிரான்) இளைத்திட்டாய்நீ யென்னுயனே. திருவடிகள்வெதும்பித் திருக்கண்கள் சிவந்தவளவேயோ, ஊருக்குள்ளே திரியும்போது "கரும்போரேறு" என்னும்படி (உ) புஷ்கலமான வடிவையுடையனாய்ச் செருக்கித்திரியக்கடவநீ போர இளைத்துவிட்டாயென்று வெறுத்துச்சொல்லுகிறாள். (ச)

மூ.—பற்றார்நடுங்க முன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்தபோரேறேயென், சிற்றாயர்சிங்கமேசீதைமணாளாசிறுக்குட்டச்செங்கண்மாலே, சிற்றாடையுஞ் சிறுப்பத்திரமுமிவை கட்டிலின் மேல் வைத்துப்போய்க், கற்றாயரோடுநீ கன்றுகண்மேய்த்துக் கலந்துடன்வந்தாய் போலும்.

ப-ரை.—பற்றார் - பகைவரான துர்யோதநாதிகள், நடுங்க - இதினுடைய வோசையைக்கேட்டு நடுங்கும்படியாக, முன் - பாரதயுத்தத்திலே, பாஞ்சசன்னியத்தை - ஸ்ரீபாஞ்சஜந்யமென்னும் சங்கத்தை, வாய் - திருப்பவளத்திலே, வைத்த - வைத்தூதி, போர் - போர்செய்யஎதிர்த்துவருகிற, ஏறே - ரிஷபம் போலே செருக்குத்தோற்றநின்றவனாய், என் - எனக்குக்கீழ்ப்படிந்தவனாய், சிற்றாயர் - இடைச்சிறுவர்களோடே, சிங்கமே - சிங்கக்குட்டிபோலே மேனாணிப்புத்தோற்றத்திரிகிறவனாய், சீதை-ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு, மணாளா - வல்லபனானவனாய், சிறுக்குட்டன் - சிறுப்பிள்ளையாயிருக்கச்செய்தே, செங்கண் - செந்தாமரைமலரையொத்த திருக்கண்களை யுடையனாயிருக்கையாலே, மாலே - "எல்லார்க்கும்சேஷி" என்று தோற்றும்படியிருக்கிறவனே, சிறு-உன் பருவத்துக்குத்தகுதியான, ஆடையும் - திருப்பரிவட்டமும், சிறு-உன் திருக்கைக் கடங்கின, பத்திரமுமிவை - பத்திரமுமாகிறவிவற்றை, கட்டிலின்மேல் - நீ கண்வளர்ந்தருளின கட்டிலின்மேலே, வைத்து—, போய் - மறந்துபோய், கன்று - கன்றுகள்மேய்க்கிற, ஆயரோடு - இடைப்பிள்ளைகளோடே, நீ—, கன்றுகள் - கன்றுகளை, மேய்த்து—, உடன்கலந்து - அவர்களுடனேசேர்ந்து, வந்தாய் போலும் - வந்தாயோதானென்று உகக்கிறாள்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பற்றாரித்யாதி) 'மம ப்ராணா ஹி பாண்டவா:" "மம ப்ராணா ஹி பாண்டவா:" என்கிறபடியே ப்ராணபூதரான பாண்டவர்களை நலிகையாலே "த்விஷதந்நம் ந போக்தவ்யம்" "த்விஷந்தம் நைவ போஜயேத்" என்னும்படி உனக்கு சத்ருக்களான துர்யோதநாதிகள்

(க) மேய்ச்சல்தலை - மேய்க்கைக்குரிய புல்லுள்ளவிடம். (உ) புஷ்கலம் - புஷ்டி.

"స ఘోషో ధార్తరాష్ట్రాణాం హృదయాని వ్యదారయత్" "ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத்" என்கிறபடியே இதினுடைய த்வநியைக்கேட்டு நடுங்கும்படியாக பாரத (௧) ஸமரத்திலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலேவைத்தூதி, யுத்தோந்முகமான ரிஷபம்போலே செருக்குத்தோற்ற நின்றவனே. (என்சிற்றுயர்சிங்கமே) எனக்குபவ்யனாய் "தன்னேராயிரம்பிள்ளைகள்" என்கிற சிறுப்பிள்ளைகளோடே ஸிம்ஹக்கன்றுபோலே மேணாணிப்புத் தோற்ற விளையாடித்திரிகிறவனே. (சீதைமணாளா) ப்ரதிகூலநிரஸநமும் அநுகூலரக்ஷணமும் கண்டால் "భర్తారం పరిషస్వజే" "பர்த்தாரம் பரிஷஸ்வஜே" என்கிறபடியே, உகந்தணைக்கும் ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்கு (௨) வல்லபனானவனே. (சிறுக்குட்டச்செங்கண்மாலே) சிறுப்பிள்ளையாயிருக்கச்செய்தே புண்டரீகாக்ஷத்வத்தாலே (௩) "ஸர்வஸ்மாத்பரன்" என்றுதோற்றும்படி யிருக்கிறவனே. (சிற்றுடையுமித்யாதி) உன்பருவத்துக்குத் தகுதியான திருப்பரிவட்டமும் உன்திருக்கைக்கடங்கின விளையாடுபத்திரமுமாகிற விவற்றைக் கன்றுமேய்க்கப்போகிற த்வரையாலே (௪) கிடக்கைப்பாட்டிலே பொகட்டுப் போவாரைப்போலே, கண்வளர்ந்தருளின கட்டிலின்மேலேவைத்து மறந்துபோய். (கற்றுயரோடுநீ கன்றுகள்மேய்த்து) கன்றுகள்மேய்க்கிற இடைப்பிள்ளைகளோடே நீகன்றுகளை மேய்த்து. (கலந்துடன்வந்தாய்போலும்) "அவர்களிலே ஒருவன்" என்னலாம்படி அவர்களுடனேசேர்ந்து வந்தாயோதானென்று உகக்கிறாள். (௫)

மூ.—அஞ்சுடராழி யுன்கையகத்தேந்து மழகாநீபொய்கைபுக்கு,
நஞ்சுமிழ்நாகத்திநோடுபிணங்கவுநானுயிர்வாழ்ந்திருந்தேன்,
என்செய்யவென்னை வயிறுமறுக்கினா யேதுமோரச்ச மில்லை,
கஞ்சன்மனத்துக் குகப்பனவேசெய்தாய் காயாம்பூவண்ணங்
கொண்டாய்.

ப - ரை.—அம் - அழகிய, சுடர் - தேஜஸ்ஸையுடைய, ஆழி - திருவாழியை, உன் - இயல்பிலேயே த்ர்ஷ்டிகழிக்கவேண்டும்படியான வுன்னுடைய, கையகத்து - திருக்கையிலே, ஏந்தும் - தரித்துக்கொண்டிருக்கிற, அழகா - அழகையுடையவனே, நீ—, உன் மென்மைத்தன்மைபாராமல், பொய்கை - நச்சுப்பொய்கையிலே, புக்கு - போய்ப்புக்கு, நஞ்சு உமிழ் - சீற்றத்தாலே விஷத்தை யுமிழாநின்றுள்ள, நாகத்திநோடு-காளியனாகிற ஸர்ப்பத்தோடே, பிணங்கவும் - நீ போர்செய்யவும், நான்—, உயிர்வாழ்ந்திருந்தேன் - ப்ராணனோடிருந்தேன்; என்னை—, என்செய்ய - ஏதுக்காக, வயிறுமறுக்கினாய் - வயிறுகுழம்பப்பண்ணினாய்; உனக்குத்தீங்குவருமென்றுதல், எனக்குவயிறெரியுமென்றுதல், உலகத்

(௧) ஸமரம் - யுத்தம். (௨) வல்லபன் - மணவாளன். (௩) ஸர்வஸ்மாத்பரன் - எல்லாரிலுமுயர்ந்தவன். (௪) கிடக்கைப்பாடு - பள்ளிகொள்ளுமிடம்.

தார் இதுகண்டால் பொறார்களென்றுதல், ஏதும் - சற்றும், ஓர் அச்சமில்லை - உனக்கு ஒருபயமில்லை; கஞ்சன் - உனக்குத்தீங்குசெய்யத்தேடுகிற கம்ஸனுடைய, மநத்துக்கு - மநஸ்ஸுக்கு, உகப்பனவே - ப்ரியமானவற்றையே, செய்தாய்—; காயாம்பூ - காயாம்பூப்போலேயிருக்கிற, வண்ணம்கொண்டாய்- திருநிறத்தையுடையவனே, உன்னிச்சைப்படி யாகிறது; இவ்வடிவுக்கு ஒரு வேறுபாடுண்டாகாமல் பிழைக்கப்பெற்றேனென்று தன்னிலேயுகக்கிறாள்.

வ்யா.—ஆறும்பாட்டு. (அஞ்சுடரித்யாதி) உன்திருமேனி நிறத்துக்கு பரபாகமான அழகியதேஜஸ்ஸையுடைய திருவாழியை, வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியான உன்திருக்கையிலே தரித்துக்கொண்டிருக்கிற அழகையுடையவனே. (நீபொய்கைபுக்கு) ✻கருதுமிடம்பொருதுகைநிற்கும்பரிகாரமுண்டாயிருக்க, (க) இயற்றியில்லாதாரைப்போலே நீ உன்னுடைய மார்த்தவத்தைப் பாராமல் நச்சுப்பொய்கையிலே போய்ப்புக்கு. (நஞ்சுமிழ்நாகத்தினோடு பிணங்கவும் நானுயிர்வாழ்ந்திருந்தேன்) க்ரோதத்தாலே மேன்மேலன நஞ்சையுமிழாநின்றுள்ள காளியனென்கிறஸர்ப்பத்தோடே, அது தன்னுடலாலே உன்னைக்கட்ட, அத்தையுதறிப்பொகட்டு, அதனுச்சியிலேயேறி அதின்வாலைப் பிடித்துக்கொண்டு நின்றுதிளைத்து வாயாலேரத்தம்கக்கும்படியாட, இப்படியாய்க்கொண்டு அந்யோந்யம் பிணங்கினபோது நான் ப்ராணனோடேயிருந்தேனிறே. (என்செய்யவென்னைவயிறுமறுக்கினாய்) எதுக்காக என்னை யிப்படிவயிறுமறுகப்பண்ணினாய். (ஏதுமோரச்சமில்லை) இப்படிஸாஹஸ ப்ரவர்த்திசெய்தால் "உனக்குத்தான் ஒரு தீங்குவரும்" என்றுதல், "எனக்குவயிறெரியும்"என்றுதல், "லோகமிதுகண்டால்பொறாது" என்றுதல், உனக்கு ஏகதேசமும் ஒரு பயமில்லை. (கஞ்சன்மநத்துக் குகப்பனவேசெய்தாய்) "உனக்கே தேனுமொருஅபாய மெப்போதோவருவது" என்று இடம்பார்த்திருக்கும் கம்ஸனுடைய மநஸ்ஸுக்கு ப்ரியமானவற்றையே செய்தாய். (காயாம்பூவண்ணங்கொண்டாய்) காயாம்பூப்போலேயிருக்கிற திருநிறத்தையுடையவனே, வேண்டினபடியாகிறது, இவ்வடிவுக்கு ஒரு (உ) வைகல்யம்வாராமல் பிழைக்கப்பெற்றேனே யென்கை. (சு)

மூ.—பன்றியுமாமையு மீநமுமாகிய பாற்கடல்வண்ணா வுன்மேல்,
கன்றினுருவாகி மேய்புலத்தேவந்த கள்ளவசுரர் தம்மைச்,
சென்றுபிடித்துச்சிறுக்கைகளாலேவிளங்காயெறிந்தாய்போலும், என்றுமென் பிள்ளைக்குத்தீமைகள் செய்வார்களங்ஙனமாவர்களே.

---

(க) இயற்றி - வல்லமை. (உ) வைகல்யம் - குறைவு.

ப-ரை.—பன்றியும்-ஹிரண்யாக்ஷனை நிரஸித்து பூமியைத்தன்னிலையிலிருத்துகைக்காகச்செய்த வராஹாவதாரமும், ஆமையும் - அஸுரர் கண்டுபதைக்கவும் தேவர் உண்டுகளிக்கவும் பாற்கடலைக்கடைந்து அம்ர்தத்தையுண்டாக்குகைக்காக மந்தரபர்வதம் மிதக்கைக்காதாரமான கூர்மாவதாரமும், மீநமுமாகிய-மதுகைடபர்களால் அபஹரிக்கப்பட்டவேதத்தை நான்முகனுக்கு மீட்டுக்கொடுக்கைக்காக மத்ஸ்யாவதாரமுஞ்செய்தருளினவனாய், பாற்கடல் - பாற்கடலைப்போலேவெளுத்திருந்துள்ள, வண்ணா - திருமேனிநிறத்தையுடையவனே, உன்மேல் - எல்லாப்படியாலும் காக்குமவனானவுன்மேலே நலிவதாக, கன்றினுருவாகி - கன்றின்வடிவையுடையனாய்க்கொண்டு, மேய் - கன்றுகள்மேய்கிற, புலத்து - நிலத்திலே, வந்த - வந்துகலந்துநின்ற, கள்ளம் - வஞ்சச்செய்கைகளையுடைய, அசுரர்தம்மை - அஸுரர்களை, சென்று - அவர்கள்செயல்களாலே அஸுரனென்று அறிந்துசென்று, சிறுக்கைகளாலே—, பிடித்து - கன்றாய்நின்ற வஸுரனைப்பிடித்து, விள - அஸுரத்தன்மையுடையதாய் உன்னை நலிவதாக நின்ற விளாவினுடைய, காய் - காயுதிர்க்கைக்காக, எறிந்தாய்போலும் - தூக்கியெடுத்தெறிந்து இரண்டுதலையையும் முடித்துப் பொகட்டாயோ; வென்ன; "எறிந்தேன்" என்ன; என் - என்னுடைய, பிள்ளைக்கு --, தீமைகள் - தீங்குகளை, செய்வார்கள் - செய்யமுயன்றவர்கள், என்றும் - என்றைக்கும், அங்ஙனமாவர்கள் - அவ்விளவும்கன்றும்போலே நசித்துப்போவர்களென்று நெஞ்செரிச்சலாலே சொல்லுகிறாள்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பன்றியுமாமையுமீநமுமாகிய) பூம்யுத்தரணம் பண்ணினவராஹமும், மந்தராதாரமான கூர்மமும், ப்ரளயாபத்ஸகமான மத்ஸ்யமுமான. இத்தால்-(க) அப்ராக்ர்த திவ்ய ஸம்ஸ்தாநத்தையழியமாறி திர்யக்ஜாதீயமாக்கிக்கொண்டு (உ) ஜகத்ரக்ஷணம் பண்ணியருளின நீர்மையைச் சொல்லுகிறது. வராஹாவதாரத்தை முற்படச்சொல்லிற்று - (௩) ப்ரளயார்ணவமக்நையான பூமியையெடுத்த வளவன்றிக்கே, (௪) ஸம்ஸாரார்ணவமக்நரான சேதநரை (௫) உத்தரிப்பிக்கைக்காக (௬) தத்ததநுரூபோபாயங்களை உபதேசித்த வேற்றத்தைப்பற்ற. "ஏனத்துருவாயிடந்தபிரான் - ஞானப்பிரான்" என்றாரிறே யாழ்வார். திருமங்கையாழ்வாரும் "ஏனத்தினுருவாகி நிலமங்கையெழில்கொண்டான்" என்றவநந்தரம், "ஞானத்தினொளியுருவை" என்றாரிறே. இவர்தாமும் "எயிற்றிடை மண்கொண்ட வெந்தையிராப்பகலோதுவித்து" என்றுமேலே அருளிச்செய்தாரிறே. (பாற்கடல்வண்ணா) பாற்கடல்போலே வெளுத்திருந்துள்ள திருமேனி நிறத்தையுடையவனே. இத்தால் - "பாலினீர்மை" என்கிறபடியே ஸத்த்வப்ரசுரரான க்ர்த

(க) அப்ராக்ரத திவ்யஸம்ஸ்தாநம் - திவ்யமங்களவிக்ரஹம். (உ) ஜகத்ரக்ஷணம்-உலகத்தைக்காப்பாற்றுகை. (௩) ப்ரளயார்ணவமக்நையான-அழிவைச்செய்யுமதானஸ்முத்ரத்திலே அழுந்திக்கிடந்த. (௪) ஸம்ஸாரார்ணவம்-பிறவிக்கடல். (௫) உத்தரிப்பிக்கை - உயரவெடுக்கை. (௬) தத்ததநுருபம் - அததுக்குத்தக்க.

யுகபுருஷர்களுடைய (க) ருச்யநுகுணமான திருமேனிநிறத்தை யுடையனுய்க்கொண்டு, அவர்களுக்கு ஆச்ரயணீயனுய் ரக்ஷித்தபடி சொல்லுகிறது. "பார்க்கடல்வண்ணு" என்று பாடமாகில் - பார் சூழ்ந்த கடல்போலேயிருக்கிற திருமேனிநிறத்தை யுடையவனே யென்கை. அப்போது, இப்படியிருக்கிற திருவடிவையிறே நீ அழியமாறி, திர்யக்ரூபமாக்கிக்கொண்டு ஜகத்ரக்ஷணம் பண்ணிற் றென்றபடி.

(உன்மேலித்யாதி) இப்படிஜகத்துக்கு ஸர்வப்ரகாரரக்ஷக னுன உன்மேலேநலிவதாக நீமேய்க்கிற கன்றுகளுக்குள்ளே (உ) தத்துல்யமான வடிவைக்கொண்டு அவைமேய்கிற நிலத்திலேவந்து கலந்துநின்ற க்ர்த்ரிமரான அஸுரர்தங்களை. (சென்றுபிடித்துச்சிறு க்கைகளாலே) அவர்கள்சேஷ்டித விசேஷங்களாலே அறிந்துசெ ன்று சிறுக்கைகளாலே பிடித்து. (விளங்கா யெறிந்தாய்போலும்) ஆஸுரமாய் உன்னைநலிவதாக நின்றவிளாவினுடைய காயுதிர்க்க, எறிவாரைப்போலே, தூக்கியெடுத்தெறிந்து இரண்டுதலையையும் முடித்துப்பொகட்டாயோதான் என்றவாறே "எறிந்தேன்காண்" என்றுசொல்லிநிற்க; (என்றுமித்யாதி) என்னுடைய பிள்ளைக்குத் தீமைசெய்வதாகக் கோலினவர்கள் என்றும் அப்படியாய்ப்போவர்க ளென்று நெஞ்செரிச்சலாலே சொல்லுகிருள். அங்ஙனமாவர்க ளென்றது-அப்படியேயாவர்களென்றபடியாய், அவ்விளாவும் கன்றும் போலே நசித்துப்போவர்களென்றபடி. (எ)

மூ.—கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா கோவலரிந்திரற்
குக், காட்டிய சோறுங்கறியுந்தயிருங் கலந்துடனுண்டாய்
போலும், ஊட்டமுதலிலே னுன்றன்னைக்கொண் டொரு
போது மெனக்கரிது, வாட்டமிலாப்புகழ் வாசுதேவாவுன்னை
யஞ்சுவ னின்றுதொட்டும்.

ப-ரை.—கேசவா - நான்முகனுக்கும் ருத்ரனுக்கும் தலைவனுகையால் வந்த கேசவனென்னும் திருநாமத்தையுடையவனே, கேட்டறியாதன - உன்விஷயத் தில் இதற்குமுன்பு கேட்டறியாதவற்றையெல்லாம், கேட்கின்றேன்-இப்போது கேளாநின்றேனென்ன; நீகேட்டவற்றில் ஒன்றுசொல்லிக்காணுயென்ன; கோவ லர் - இடையரானவர்கள், இந்திரற்கு - இந்த்ரனுக்கிடுகைக்காக, காட்டிய - அனுப்பினதாய், சோறும் - வண்டிகளில்கொண்டுபோன மிக்கசோற்றையும், கறியும் - அதற்குத்தக்ககறியையும், தயிரும் - தயிரையும், கலந்து - சேரக் கலந்து, உடன் - ஒன்றெழியாமல், உண்டாய்போலும் - உண்டுவிட்டாயோ வென்ன; அதற்கு ஒன்றும்பேசாதிருக்க; இப்படி உண்ணத்தக்க வுனக்கு,

(க) ருச்யநுகுணமாக - விருப்பத்துக்குத்தக்கபடி. (உ) தத்துல்யமான - அதையொத்த.

ஊட்ட - நாள்தோறுமூட்டத்தக்க, முதலிலேன்-கைம்முதலுடையேனல்லேன்; உன்றன்னைக்கொண்டு - உன்னைவைத்துக்கொண்டு, ஒருபோதும்—, எனக்கு—, அரிது - ஆற்றவரிது; வாட்டமிலா - ஒருகாலும் வாட்டமில்லாத, புகழ் - புகழையுடைய, வாசுதேவா - வஸுதேவர்புத்ரனே, உன்னை-ஆச்சர்யமானசெய்கையையுடைய வுன்னைக்குறித்து, இன்றுதொட்டும் - *கேட்டறியாதன கேட்டவின்றுதுடக்கமாக, அஞ்சுவன் - உன்புகழுக்கு என்னவாட்டம்வரப்புகுகிறதோவென்று பயப்படாநின்றேனென்கிறாள்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (கேட்டறியாதனவித்யாதி) ப்ரஹ்மருத்ரர்களுக்குக் காரணபூதனாகையாலே "கேசவன்" என்னும் திருநாமத்தையுடையவனே. இதுக்குமுன்பு உன்விஷயத்தில் கேட்டறியாதன வெல்லாம் இப்போது கேளாநின்றேன் என்றவாறே "அதேதுதான்" என்று அவன்கேட்க; (கோவலரித்யாதி) (க) கோதநராகையாலே வர்ஷார்த்தமாக (௨) வத்ஸரந்தோறும் இந்த்ரனுக்குச் சோறிட்டுப் போருமிடையரானவர்கள், அந்த இந்த்ரனுக்கிடுவதாக வரக்காட்டின * துன்னுசகடத்தாற்புக்க பெருஞ்சோற்றையும் அதுக்குத்தக்ககறியையும் தயிரையும் அவனுக்கிடாதபடி சிலவுக்திவிசேஷங்களைச்சொல்லி நீவிலக்கி, "நமக்கெல்லாப்படியாலும் ரக்ஷகமாயிருக்கிற விம்மலைக்கிடுங்கோள்" என்று அதின் முன்னேயிடுவித்து, "ஸர்வஸ்வம்" "மஹாவஷ்யோநாஷி" என்று * ஒரு பூதவடிவைக்கொண்டு வந்திருந்து எல்லாவற்றையும் சேரக்கலந்து ஒன்றொழியாமல் நீயே புஜித்துவிட்டாயென்று. "பாசநநல்லன பண்டிகளால் புகப்பெய்த வதனையெல்லாம் - போயிருந் தங்கொரு பூதவடிவுகொண்டுன் மகனின்று நங்காய்-மாயனதனையெல்லாம் முற்றவாரி வளைத்துண்டிருந்தான்" என்று பலரும்வந்து சொல்லாநின்றார்கள், அப்படிசெய்தாயோதான்" என்ன; (௩) நிருத்தரனாய் நின்றவாறே (ஊட்டமுதலிலே னுன்றன்னைக்கொண்டொருபோதுமெனக்கரிது) என்கிறாள்., அதாவது - இப்படியுண்ண வல்லவுனக்கு நாள்தோறு மிப்படியூட்டத்தக்க முதலுடையேனல்லேன்; இப்படியிருக்கிற வுன்னைக்கொண்டு ஒருபோதுமெனக் காற்றவரிதென்கை. (வாட்டமிலாப் புகழ்வாசுதேவா) ஒருகாலும் வாட்டமின்றிக்கே நித்யமாய்ச் செல்லும்படியான புகழையுடைய வஸுதேவர் புத்ரனே, இப்படிக்கொத்த வ்யாபாரங்களால் உன்புகழுக்கு ஒருவாட்டம்வாராதொழியவேணுமென்று கருத்து. (உன்னையஞ்சுவனின்றுதொட்டும்) இப்படிப்பட்ட அதிமாநுஷத்வத்தைச்செய்த வுன்னைக்குறித்து, இன்னமேதுசெய்யத்தேடுகிறாய், உன்புகழுக்கு வாட்டம்

(க) கோதநர் - பசுநிரையாகியஸம்பத்துடையவர்கள். (௨) வத்ஸரந்தோறும் - வருடம்தோறும். (௩) நிருத்தரனாய் - மறுமாற்றம்சொல்லாதவனாகி.

வரப்புகுகிறதோவென்று, கேட்டறியாதனகேட்ட வின்று துடக்க மாக நானஞ்சாநின்றே னென்கிருள். (அ)

மூ.—திண்ணார்வெண் சங்குடையாய் திருநாட்டிருவோண மின்றே ழுநாண்முன், பண்ணேர்மொழியாரைக் கூவிமுளையட்டிப் பல்லாண்டு கூறுவித்தேன், கண்ணாலஞ்செய்யக் கறியுங்கலத் ததரிசியு மாக்கிவைத்தேன், கண்ணாநீநாளைத்தொட்டுக் கன் றின்பின்போகேல் கோலஞ்செய்திங்கேயிரு.

ப-ரை.—திண் ஆர்-பகைவர்வயிறுபிடிக்கும்படி நிலைபேராமல்நின்றுமுழங் கும் திண்மையையும், வெண் - அநுகூலர்க்கு அணுகிவாழலாம்படியான வெண் மையையுமுடைய, சங்குடையாய் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருக்கையிலேயுடை யவனே, திருநாள் - நீபிறந்ததிருநக்ஷத்ரமான, திருவோணம்—, இன்று - இன் றைக்கு, ஏழுநாள் - ஏழாம்நாளாகையால், முன் - அதுக்குமுன்னதாக, பண் - பண்ணோடேகூடின, ஏர் - அழகிய, மொழியாரை - மொழியையுடையவர்களை, கூவி - அழைத்து, முளையட்டி - திருமுளைசாத்தி, பல்லாண்டுகூறுவித்தேன் - மங்களாசாஸநம்பண்ணுவித்ததுமன்றி, கண்ணாலம்செய்ய - திருவோணநக்ஷத் ரத்துக்குத் திருக்கலியாணம்செய்வதாக, கறியும்-கறியமுதுகளும், அரிசியும் - அமுதுபடிகளும், கலத்ததாக்கிவைத்தேன் - பாத்ரங்களிற் சேர்த்துவைத்திருக் கிறேனுகையால், கண்ணா-எனக்குக்கண்ணாயிருப்பவனே, நீ—, நாளைத்தொட்டு- நாளைமுதலாக, கன்றின்பின் - கன்றுகளின்பின்னே, போகேல் - அவைமேய்த்து வருகைக்காகப் போகாதேகொள்ளென்ன; பின்னைநீ செய்யச்சொல்லுகிற தென்னென்ன; கோலம்செய்து-ஆபரணமுதலியவற்றையணிகையாலுண்டான அலங்காரத்தை யுடையனுய்க்கொண்டு, இங்கேயிரு-அகத்தைவிட்டுப்போகாமே யிங்கேயிருவென்று நல்வார்த்தையாலே நியமித்துச்சொல்லுகிருள்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (திண்ணார் வெண்சங்குடையாய்) "படைபோர்புக்குமுழங்கு மப்பாஞ்சசன்னியம்" என்கிறபடியே ப்ரதிகூலநிரஸநத்தில், நிலைபேராமல்நின்று முழங்கும் திண்மையை யுடைத்தாய் "பாலன்னவண்ணத்துன் பாஞ்சசன்னியம்" என்கிற படியே திருமேனிநிறத்துக்கு பரபாகமாய்க்கொண்டு அநுகூலர்க் கநுபாவ்யமான வெண்மையையுடைத்தாயிருக்கிற ஸ்ரீபாஞ்ச ஜந்யத் தையுடையவனே. (திருநாள் திருவோணமின்றேழுநாள்) நீபிறந்த திருநக்ஷத்ரமான திருவோணம் இற்றைக் கேழாநாள். (முன்னித் யாதி) ஆகையாலே அதுக்குடலாக முன்னே பண்ணோடேகூடின அழகிய மொழியையுடையவர்களை யழைத்துத் திருமுளைசாத்தி மங்களாசாஸநம் பண்ணுவித்தேன். (கண்ணாலமித்யாதி) திருவோ ணதிருநக்ஷத்ரத்துக்குத் திருக்கல்யாணம்செய்வதாக கறியமுதுக ளும் அமுதுபடிகளும்சேர்த்து பாத்ரஸ்த மாக்கிவைத்தேன். (கண்ணா) எனக்குக்கண்ணாயிருந்தவனே. (நீநாளைத்தொட்டுக் கன் றின்பின்போகேல்) "ஜாத்யுசிதமானதர்மம்" என்று கன்றுகள் மேய்க்கப்போம் நீ, நாளைமுதலாகக் கன்றுகளின்பின்னேபோகாதே

கொள். (கோலஞ்செய்திங்கேயிரு) ஆபரணாதிகளால்வந்த வொப்ப னையை யுடையனாய்க்கொண்டு அகத்தைவிட்டுப் போகாமல் இங் கேயிருவென்று (க) அநுவர்த்தந பூர்வகமாக நியமித்துச் சொல்லு கிறாள். (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—புற்றரவல்கு லசோதைநல்லாய்ச்சி தன்புத்திரன் கோவிந்த னைக், கற்றின மேய்த்துவரக் கண்டுகந்தவள் கற்பித்தமாற்ற மெல்லாம், செற்றமிலாதவர்வாழ்தரு தென்புதுவைவிட்டு சித்தன்சொல், கற்றிவைபாட வல்லார் கடல்வண்ணன்கழ லிணை காண்பர்களே.

ப-ரை.—புற்று - புற்றிலேவளருகிற, அரவு - பாம்பின்படத்தையொத்த, அல்குல் - நிதம்பத்தையுடையளாய், அசோதை - யசோதையென்னும் பெயரை யுடையளாய், நல்-பிள்ளைதிறத்தில் பேரன்புடையளாயிருக்கிற, ஆய்ச்சி-ஆய்ச்சி யானவள், தன் - தன்னுடைய, புத்திரன் - பிள்ளையாய், கோவிந்தனை-பசுக்களை ரக்ஷிக்கையால்வந்த கோவிந்தனென்னும் திருநாமத்தையுடையவனை, கன்று - கன்றுகளினுடைய, இனம் - ஸமூஹத்தை, மேய்த்து - வயிறுநிறையமேய்த்து, வர - திரும்பிவர, கண்டு - கண்ணாரக்கண்டு, உகந்து - மநமகிழ்ந்து, அவள் —, கற்பித்த - அவனைக்குறித்து இன்னபடியின்னபடிசெய்யென்று கற்பித்த, மாற்ற மெல்லாம் - சொலவுகளெல்லாவற்றையும், செற்றமிலாதவர் - தாமசெய்யும் செய்கைகளில் அஸூயையில்லாதவர்கள், வாழ்தரு - வர்த்திக்கிற, தென் - அழ கிய, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான. விட்டுசித்தன் - பெரியாழ் வாரருளிச்செய்த, சொல்லிவை - சொல்லானவிவற்றை, கற்று - ஓராசார்யன் பக்கலிலே அப்யஸித்து, பாடவல்லார் - அதிலுண்டானவினிமையாலே வாய் படைத்த ப்ரயோஜநம்பெறப் பாடவல்லவர்கள், கடல் - கடல்போன்ற, வண் ணன் - திருநிறத்தையுடையனான க்ருஷ்ணனுடைய, இணை - ஒன்றுக்கொன் றொப்பான, கழல் - திருவடிகளை, காண்பர்கள் - கண்டநுபவிக்கப்பெறுவர்கள்.

வ்யா.—(புற்றரவித்யாதி) தன்நிலத்திலே மிடியற வளருகை யால்வந்த ஒளியையும் கொழுப்பையுமுடைத்தான அரவினுடைய பணம்போலேயிருக்கிற நிதம்பப்ரதேசத்தையுடையளாய், "யசோ தை"என்கிறதிருநாமத்தையுடையளாய், புத்ரவிஷயத்தில் ஸ்நேஹ த்தையுமுடையளாயிருக்கிற ஆய்ச்சியானவள். (தன்புத்திரன் கோ விந்தனை) தன்புத்ரனான கோவிந்தனை. இவளுக்கு புத்ரனாகையா லேயிறே, கோவிந்தனாகத் தான்பெற்றது. க்ருஷ்ணனை யென்றபடி. (கற்றினம்மேய்த்துவரக் கண்டுகந்து) கன்றுகளினுடைய ஸமூஹத் தை ஒன்றொழியாமல் வயிறுநிறையமேய்த்து. அத்தாலே (உ) ஸந் துஷ்டனாய்க் கொண்டுவரக் கண்டு ப்ரீதையாய். (அவள்கற்பித்த

(க) அநுவர்த்தநம் - பின்செல்லுகை. (உ) ஸந்துஷ்டனாய் - ஸந்தோஷ முற்றவனாய்.

மாற்றமெல்லாம்) அவள் அவனைக்குறித்து "இன்னபடி இன்னபடி செய்" என்று கற்பித்த சொலவுகளெல்லாவற்றையும். (செற்றமித்யாதி) மங்களாசாஸநபரராய் அதுக்கு அநுகூலரைக் கூட்டியும் ப்ரதிகூலரைநீக்கியும் தாம்செய்யும் வ்யாபாரங்களில் அஸூயையில்லாதவர்கள் வர்த்திக்கிற தர்சநீயமான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வா ரருளிச்செய்த சொல்லான விவற்றை. (கற்று - பாடவல்லார்) ஓராசார்யன்பக்கலிலேயப்யஸித்து, அதிலுண்டான ரஸ்யதையாலே ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு பாடவல்லார். (கடல்வண்ணன் கழலிணைகாண்பர்களே) "காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன்" என்றுசொன்ன கடல்போன்ற நிறத்தையுடையனான க்ர்ஷ்ணனுடைய (க) பரஸ்பர ஸத்ர்சமான திருவடிகளைத் தாம்கண்டாற்போலே கண்டநுபவிக்கப் பெறுவரென்கை.()

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

---

சீலைகன்னிகாடுகெடி பற்றுரஞ்சுடர் பன்றிகேட்டுத் திண்ணூர் புற்றுத்தழை.

ஆ திருமொழி உஉ-க்கு, பாட்டு-உசக.

அ.—கீழே - "நாளைத்தொட்டுக் கன்றின்பின்போகேல்கோலம் செய்திங்கேயிரு" என்கையாலே, ஏழுநாளெழுந்தருளி யிருந்து திருவோணத் திருநக்ஷத்ரமுங்கொண்டாடி விட்ட பின்பு; பசுக்களையும் கன்றுகளையும் மேய்க்கப்போய் அவைமேய்ந்த ப்ரீதியாலே தன்னை நாநாப்ரகாரமாக அலங்கரித்துக் குழலூதுவது இசைபாடுவதாய்க் கொண்டு தானும் * தன்னேராயிரம் திருத்தோழன்மாருமாகப் பெரியமேனணிப்போடே எழுந்தருளிவருகிற ப்ரகாரத்தைக்கண்டு, திருவாய்ப்பாடியிலே பெண்கள் பலகணிவழியே நுழைந்து பார்ப்பாரும் நிற்பாரும், அவன்வரும்போதாக எதிரே நின்று உங்கள்வளையை யிழவாதேகொள்ளுங்கோள் என்பாரும், வருகிற வவன்வடிவை என்பெண் அருகேநின்று கண்டாளித்தனை, அதுகண்டு இவ்வூரொன்று புணராநின்றதென்பாரும், அவன்வருகிறபடியைத் தெருவிலேகண்டு அவன்பக்கல் ஸ்நேஹத்தாலே தாங்கள் விக்ர்தைகளாய், காணாதாரையுமழைத்துக் காட்டுவாரும், அவன் சேஷ்டிதத்திலேயீடுபட்டு தாங்கள் (உ) அநந்யார்ஹரானமை சொல்லுவாரும், அவன் இத்தெருவேவருமாகில் "எங்கள்பந்தைப்பறித்துக்கொண்டுபோனவன்" என்றுவளைத்து அவனுடையபவள

---

(க) பரஸ்பரஸத்ர்சமான - ஒன்றுக்கொன்றொப்பான. (உ) அநந்யார்ஹர்-பிறர்க்கு உரிமையாகாதவர்.

வாய்முறுவலைக்காண்போம் என்பாரும், அவன்வரவைக்கண்டு தாம் தாம் ஈடுபட்டமையைத்தாய்மார்க்குச் சொல்லும்படி விக்ர்தைக ளாவாருமாய், இப்படி அவன்பக்கல்காமுற்றப்ரகாரத்தை அவர் களெல்லாருடையவும் (௧) பாவவ்ர்த்தியை யுடையராய்க்கொண்டு தாம் அவனைக்குறித்துப்பேசி ப்ரீதராகிறார் - இத்திருமொழியில்.

மூ.—தழைகளுந்தொங்கலுந் ததும்பியெங்குந் தண்ணுமையெக்க மத்தளிதாழ்பீலிக், குழல்களுங்கீதமுமாகியெங்குங் கோவிந் தன்வருகின்றகூட்டங்கண்டு, மழைகொலோவருகின்றதென் றுசொல்லி மங்கைமார் சாலகவாசல்பற்றி, நுழைவனர்நிற் பனராகியெங்கு முள்ளம்விட்டூண்மறந்தொழிந்தனரே.

ப - ரை.—தழைகளும் - தழையென்று பேர்பெற்றவையும், தொங்கல்க ளும் - தொங்கலென்று பேர்பெற்றவையுமான பீலிக்குடைகள், எங்கும்—, ததும்பி - நிறைந்திருக்க, தண்ணுமை - ம்ர்தங்கமும், எக்கம் - ஒருதந்தியை யுடைய, மத்தளி - மத்தளியென்னும்பறையும், தாழ்பீலி - பீலிதூக்கின திருச் சின்னங்களும், குழல்களும் - இலைக்குழல் வேய்ங்குழல் முதலானகுழல்களும், கீதமும் - இடைச்சாதிக்குரியபாட்டுக்களும், எங்கும்—, ஆகி - இவையேயாய்க் கொண்டு, கோவிந்தன் - கோரக்ஷணத்துக்கு முடிசூடினவன், வருகின்ற - தோழன்மாரும் தானுமாய்வருகிற, கூட்டம் - திரளை, கண்டு—, மழை - மேக ஸமூஹந்தான், வருகின்றதென்று - தரைமேலேநடந்து வருகிறதென்று, மங் கைமார் - யௌவநபருவத்தரான பெண்கள், சொல்லி - கொண்டாட்டத்துட னேசொல்லி, சாலகவாசல்பற்றி - அவனையணைக்கையிலுண்டான ஆசையாலே பலகணிவாயில்களைச் சென்றுகிட்டி, நுழைவனர் - நுழைவாரும், நிற்பனராகி- பலகணிவாயிலில் நுழையப்போகாமை முதலியவற்றால் நிற்பாருமாகி, எங் கும் - அவன்போனவழியெங்கும், உள்ளம்விட்டு-நெஞ்சைப்பரக்கவிட்டு, ஊண்- உணவை, மறந்தொழிந்தனர் - மறந்துவிட்டார்கள்.

வ்யா.—முதற்பாட்டு. (தழையித்யாதி) தழையென்றும், தொங் கலென்றும்-பீலிக்குடைவிசேஷங்கள். "தழைதொங்கல்சாபாலம் பிச்சம்குளிரிபீலிக்குஞ்சமாகும்" என்று-தழையென்றும், தொங்க லென்றும், சாபாலமென்றும், பிச்சமென்றும், குளிரியென்றும், பீலிக்குடைக்குப் பேராகச்சொன்னானிறே திவாகரன். எல்லாம் பீலிக்குடைக்குப்பேரானாலும் அதில் ஆகாரபேதமுண்டாகையா லே, தழையென்றும் தொங்கலென்றும் பிரித்துச்சொல்லுகிறது. "தழைகளும்" என்று - பலவாகச்சொல்லுகையாலே, "தொங்க லும்" என்கிறவிடத்திலும் (௨) பகுவசநம் (௩) விவக்ஷிதம். (ததும்பி யெங்கும்) எங்கும்நிறைந்து. (தண்ணுமை) அதாவது - ஒருமங்கள வாத்யவிசேஷம். எக்கமாவது - ஏகதந்த்ரியாய், மத்தளியென்று பிரி த்துச்சொல்லவுமாம். அன்றிக்கே, எக்கமத்தளியென்று-ஒருபறை

(௧) பாவவ்ர்த்தியுடையராய் - கருத்தையுடையராய். (௨) பகுவசநம்- பன்மையெண். (௩) விவக்ஷிதம் - அவச்யம்வேண்டுமது.

விசேஷமாகவுமாம். (தாழ்பீலி) பீலிதூக்கினசின்னமென்னுதல்; பீலிதாழ்ந்தவாத்யமென்னுதல். (குழல்களும்) இலைக்குழல், வேய்ங்குழல்முதலான குழல்களும். (கீதமும்) (க) ஜாத்யுசிதமானபாட்டுக்களும். (ஆகியெங்கும்) எங்கு மிவையேயாய்க்கொண்டு. (கோவிந்தன் வருகின்றகூட்டங்கண்டு) கோரக்ஷணத்துக்கு முடிசூடினவன் * தன்னேராயிரம்பிள்ளைகளும் தானுமாய்வருகிற திரளைக்கண்டு. (மழைகொலோ வருகின்றதென்றுசொல்லி மங்கைமார்) மேகஸமூஹமோதான் தரைமேலேநடந்துவருகிறதென்று யுவதிகளானஸ்த்ரீகள் கொண்டாட்டத்துடனே சொல்லி. (சாலகவாசல்பற்றி) (உ) பலகணி த்வாரங்களைச் சென்று கிட்டி. (நுழைவனர்நிற்பனராகி) வ்யாமோஹத்தாலேசென்று மேல்விழுவதாக நுழைவாரும், (௩) ஜாலக ப்ரதிபந்தகத்தாலும் பந்துவர்க்க பீதியாலும் (௪) ஸ்த்ரீத்வாபிமாநத்தாலும் நிற்பாருமாகி. (எங்குமுள்ளம்விட்டு) அவன் போனவழியெங்கும் நெஞ்சைப்பரக்கவிட்டு. (ஊண்மறந்தொழிந்தனரே) உணவைமறந்துவிட்டார்கள். உணவைநினைக்கும்போது நெஞ்சுவேணுமிறே; நெஞ்சு அவன்பின்னேபோய்விட்டதே; நெஞ்சில்லாதார்க்கு நினைக்கப்போமோ. ஆகையாலே, "மறந்தனர்" என்னுதே, மறந்துவிட்டார்களென்கிறது. (க)

மூ.—வல்லிநுண்ணிதழன்னவாடைகொண்டு வசையறத்திருவரை விரித்துடுத்துப், பல்லிநுண்பற்றாகவுடைவாள்சாத்திப் பணைக்கச்சுந்திப் பலதழைநடுவே, முல்லைநன் னறுமலர்வேங்கை மலரணிந்துபல்லாயர்குழாநடுவே, எல்லியம்போதாகப்பிள்ளைவரு மெதிர்நின்றங்கினவளையிழவேன்மினே.

ப - ரை.—வல்லி - கற்பகக்கொடியினுடைய, நுண் - நுண்ணிதான, இதழன்ன - இதழ்போலேமெல்லிதாய் நிறத்திருக்கிற, ஆடை - பரிவட்டத்தை, கொண்டு—, வசையற - நன்றாக, திருவரை - திருவரையிலே, விரித்துடுத்து - விரித்துச்சாத்திக்கொண்டும், அதுக்குமேலே, பணைக்கச்சு - பெரியகச்சை, உந்தி - இளப்பி, பல்லி - பல்லியானது, நுண்பற்றாக - சுவர்களிலேஇடைவெளியறப் பற்றிக்கிடக்குமாபோலே, உடைவாள் - திருக்குத்துடைவாளை, சாத்தி - சாத்திக்கொண்டும், பலதழை - பலவாகியபீலிக்குடைகளின், நடுவே—, நல் - அழகிதாய், நறு - பரிமளம்வீசாநின்றுள்ள, முல்லைமலர் - முல்லைப்பூவும், வேங்கைமலர் - வேங்கைப்பூவுமாகிற இவற்றை, அணிந்து - தொடுத்துச் சாத்திக்கொண்டும், பல் - பலவான, ஆயர்குழாநடுவே - ஆயருடைய திரள்நடுவே, எல்லியம்போதாக - அந்தியம்போதாக, பிள்ளை - ஸ்ரீ நந்தகோபர் திருமகன், வரும் - வருகிற, அங்கு - அவ்வழியிலே, எதிர்நின்று - எதிரேநின்று, இனவளை - உங்கள் கையில்கிடக்கிற திரளானவளைகளை, இழவேன்மின் - இழவாதே கொள்ளுங்கோள்.

(க) ஜாத்யுசிதமான - இடைச்சாதிக்கேற்ற. (உ) பலகணி - ஜன்னல். (௩) ஜாலகம் - ஜன்னல். (௪) ஸ்த்ரீத்வாபிமாநம் - பெண்மையால்வந்தஅஹங்காரம்.

வ்ா.—இரண்டாம்பாட்டு. (வல்லியித்யாதி) கல்பகவல்லியி னுடைய நுண்ணிதாகியவிதழ்போலே ம்ருதுவாய்நிறத்திருக்கிற பரியட்டத்தைக் கொண்டு. (வசையறத்திருவரை விரித்துடுத்து) நன்றாகத்திருவரையிலே விரித்துச்சாத்தி. வசையறவென்றது-பழு தறவென்றபடி. பரிவட்டம்நன்றானாலும் உடுக்கவல்லதொரு ஸாமர் த்யமுண்டிறே. அதாவது-பரிவட்டம்சாத்தினால் "ஜாஜ்வல்யமாநம்" "கெளஸேயவஸ்த்ர கடிதடம்" என்கிறபடியே திருவரை பூத்தாற்போலே யிருக்கை. (பல்லியித்யாதி) (பணைக்கச்சுந்தி-பல்லி துன்பற்றாகவுடைவாள்சாத்தி) திருவரையிற்சாத்தின பரிவட்டத்து க்குமேலே (க) முசிவறவிரித்து அழுந்தச்சாத்தின பெரியகச்சைக் கிளப்பிச், சுவர்களிலே (உ) நீரந்த்ரமாகப் பல்லிபற்றிக்கிடந்தாற் போலே, வைத்துக்கட்டினதாயிராதே, "ஸஹஜம்" என்னலாம்படி திருக்குத்துடைவாளைச்சாத்தி. (பலதழைநடுவே) பலபீலிக்குடை யின்நடுவே. (முல்லையித்யாதி) ஜாத்யுசிதமாய், செவ்விகுன்றமல் பரிமளிதமாய் (உ) விகஸிதமான முல்லைப்பூவும் வேங்கைப்பூவு மாகிற விவற்றைத் தொடுத்துச்சாத்தி. (பல்லாயர்குழாநடுவே) "தன்னேராயிரம்பிள்ளைகள்" என்கிறபடியே தன்னோடொத்த தரத்தராய், தன்னை ஸேவித்துக்கொண்டுவருகிற பலஆயருடைய திரள்நடுவே. (எல்லியம்போதாகப் பிள்ளைவரும்) அந்தியம்போதாக ஸ்ரீநந்தகோபர் திருமகனானவன்வரும். (எதிர்நின்றங்கினவளை யிழ வேன்மினே) அவன்வருகிறவழியிலே எதிரேநின்று உங்கள்கையில் கிடக்கிற திரளானவளையையிழவாதே கொள்ளுங்கோள். எதிர் நிற்கையென்றும், வளையிழக்கையென்றும் இரண்டில்லைபோலே காணும். இனவளையிழவேன்மினென்கையாலே - எதிர்நின்றவர்க ளில் இனவளையில் ஒருவளை நோக்கவல்லாரில்லை யென்னுமிடம் சொல்லுகிறது. (உ)

மூ.—சுரிகையுந்தெறிவில்லுஞ் செண்டுகோலுமேலாடையுந் தோ ழன்மார் கொண்டோட, ஒருகையாலொருவன்றன்றோளை யூன்றியாநிரையினமீளக்குறித்தசங்கம், வருகையில்வாடிய பிள்ளைகண்ணன் மஞ்சளுமேனியும்வடிவுங்கண்டாள், அரு கேநின்றாளென்பெண்ணோக்கிக் கண்டாளதுகண்டிவ்வூரொ ன்றுபுணர்க்கின்றதே.

ப-ரை.—சுரிகையும் - உடைவாளையும், தெறிவில்லும்-சுண்டுவில்லையும், செ ண்டுகோலும் - பூஞ்செண்டுடைத்தான கோலையும், மேலாடையும் - மேல்சாத் தையும், தோழன்மார் - தன்னைக்கணப்பொழுதாயினும் பிரிந்து தரித்திருக்க மாட்டாத திருத்தோழன்மாரானவர்கள், கொண்டு - தங்கள்கைகளிலேகொ ண்டு, ஓட - விரும்பினபோது கொடுக்கைக்காக ஓரடிதாழாமல் பின்னேவிரா

(க) முசிவற - சுருங்குதலில்லாமல். (உ) விகஸிதமான - அலர்ந்த.

ந்துகொண்டு ஸேவித்துவர, ஒருவன்றன் - உயிர்த்தோழனை வொருவனுடைய, தோளை —, ஒருகையால் - ஒருதிருக்கையாலே, ஊன்றி-ஊன்றிக்கொண்டும், ஒரு கையால் - மற்றைத்திருக்கையாலே, ஆநிரை-பசுநிரையினுடைய, இனம்-திரளானது, மீள - மீளுகைக்குறுப்பாக, குறித்த-ஊதின, சங்கம் - சங்கத்தைப்பிடித்துக்கொண்டு, வருகையில் - மீண்டுவருகிறவளவிலே, வாடிய - மென்மைத்தன்மையலும் பசுக்களின்பின்னே திரிகையாலும் பகலெல்லாம் பெண்களைப்பிரிகையாலுமுண்டான வாட்டத்தையுடையனாய், பிள்ளை - மைந்தனான, கண்ணன் - க்ர்ஷ்ணனுடைய, மஞ்சளும் - இடைப்பெண்கள்பூச, பட்டுப்படாதமஞ்சளும், மேனியும் - அதுக்குநிறம் கொடுக்கத்தக்க திருமேனியும், வடிவும்-அழகிய அவயவங்களின்பொதுவான காந்தியையும், கண்டாள் - பார்த்து, அருகே - அவன்வருகிறவழிக்கருகிலே, நின்றாள் - நின்றவளான, என்பெண் - என் பெண்ணானவள், கண்டாள் - எல்லாரும் காண்பதுபோலக் கண்டதுமன்றி, ஒருகாலும்கண்டறியாத காட்சியாகையாலே, நோக்கிக்கண்டாள் - விரும்பிப் பார்த்தாள்; அதுகண்டு - இவள்கண்வைத்துப்பார்த்த அவ்வளவைக்கண்டு, "அவன்பக்கலில் வ்யாமோஹத்தையுடையளாயினாள்" என்று, இவ்வூர் - இவ்வூரிலுள்ளவர்கள், ஒன்றுபுணர்க்கின்றது - ஒருஸம்பந்தத்தைத்தொடுத்து நடத்தாநின்றார்கள்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (சுரிகையுமித்யாதி) பசுமேய்க்கப் போம்போது விரோதிநிரஸநத்துக்கும் லீலைக்குமுறுப்பானவுபகரணங்கள்பலவும் கொண்டாய்த்துப்போவது. சுரிகையென்று - ஓராயுதவிசேஷம். கீழே, "உடைவாள்சாத்தி" என்றும், இங்கே, "சுரிகை" என்றும் சொல்லுகையாலே-விரோதிநிரஸநத்துக் குடலான ஆயுதங்கள். * சென்று செருச்செய்யுமவர்க ளாகையாலே ஆயுதமும் வேணுமிறே. தெறிவில்லாவது - சுண்டுவில்லு. இதுவும் செண்டுகோலும் லீலைக்குபகரணம்; இவற்றையும். (மேலாடையும்) பசுமேய்த்துவரும்போது திருவரைக்குத் தகுதியாக, முன்பு சாத்தின பரியட்டத்துடனேசாத்துகைக்குத் தகுதியான மேற்சாத்தையும். (தோழன்மார்கொண்டோட) (க) ஸமாநவயஸ்கராய்த் தனக்கு ஸ்நேஹிகளாய்த் தன்னையொருக்ஷணகால்மும் பிரிந்திருக்க மாட்டாத தோழன்மாரானவர்கள் தங்கள்தங்கள் கைகளிலேகொண்டு (உ) அபேக்ஷிதஸமயத்திலே கொடுக்கைக்காகவோடி (ந) தாழாமல் பின்னேவிரைந்துகொண்டு ஸேவித்துவர. (ஒருகையாலொருவன்றன்தோளையூன்றி) கீழ்ச்சொன்ன தோழன்மாரளவன்றிக்கே, உயிர்த்தோழனாய் (ச) ப்ரியபரனுமாய் (ரு) ஹிதபரனுமாயிருப்பானொருவனுடையதோளை ஒருதிருக்கையாலே ஸ்பர்சித்து. (ஆநிரையினம் மீளக்குறித்தசங்கம்) மற்றைத்திருக்கையாலே பசுநிரையி

(க) ஸமாநவயஸ்கர் - தன்னோடொத்தபருவத்தினர். (உ) அபேக்ஷித ஸமயம்-விரும்புங்காலம். (ந) தாழாமல் - தாமஸியாமல். (ச) ப்ரியபரன்-இஷ்டத்தைச்செய்யுமவன். (ரு) ஹிதபரன் - அநுகூலத்தைவிரும்புமவன்.

னுடைய திரளானது மீளும்படியாக வூதினசங்கத்தைப்பிடித்துக் கொண்டு. சங்கம்குறிக்கும்போது, ஆநிரையினமானது மேய்கைக் குறுப்பாகக் குறிக்குமதும், மீளுகைக்குறுப்பாகக் குறிக்குமதும், பக்கத்துவிலங்காமைக் குறுப்பாகக்குறிக்குமதுமாய் (க) பகுமுக மாயிறேயிருப்பது. இவையெல்லாம், ஊதுகிற த்வநிவிசேஷத்தா லே வாஸநைபண்ணின பசுக்களறியுமிறே. இப்போது ஸாயங்கால மாகையாலே, மீளக்குறித்தசங்கம் என்கிறது. இந்தத்வநிதான் *பூங்கொள் திருமுகத்துமடுத்தூதிய சங்கொலிபோலே திருவாய்ப் பாடியில் பெண்களுக்கும் தன்வரவையுணர்த்துகைக் குடலாயிறே யிருப்பது.

(வருகையில்வாடிய பிள்ளைகண்ணன்) இப்படிவருகிறவள வில், பசுக்களின்பின்னேதிரிந்த ஆயாஸம்பொறுத ஸௌகுமார்ய த்தாலும், பகலெல்லாம் பெண்களைப்பிரிந்துபோகையா லுண்டா ன தளர்த்தியாலும்வந்த வாட்டத்தையுடையனாய் நவயௌவநனா யிருந்துள்ள க்ர்ஷ்ணனுடைய். (மஞ்சளும் மேனியுமித்யாதி) * பற் றுமஞ்சள் பூசும்படி ஸுலபனாகையாலே அவர்கள்பூச பட்டுப்படா தமஞ்சளும், அதுக்குபாபாகமான திருமேனியின்நிறமும், (உ) திவ் யமான அவயவ ஸமுதாயசோபையும், அவன் வருகிறவழிக்க ருகேநின்றவளான என்பெண், எல்லாரும்காண்கிறவோபாதி கண் டாள். (நோக்கிக்கண்டாள்) விளையாடப்போகிறவள் (௩) அபூர்வ தர்சநத்தாலே (௪) புரிந்து கண்வைத்துப்பார்த்தாள். (அதுகண் டிவ்வூரொன்று புணர்க்கின்றதே) இவள்கண்வைத்துப்பார்த்த அவ் வளவைக்கண்டு, அவன்பக்கலிலே ப்ரவணையாய்ப் பார்த்தாளாகக் கொண்டு, இவ்வூரானது ஒன்றைத்தொடுத்து நடத்தாநின்றது. ஒன் றுபுணர்க்கையாவது - இவளுக்குமவனுக்கும் ஒருஸம்பந்தமின்றிக் கே யிருக்கச்செய்தே உண்டானாற்போலே ஒன்றைக்கட்டிப்பிடித் துச்சொல்லுகை. (௩)

மூ.—குன்றெடுத்தா நிரைகாத்தபிரான் கோவலனாய்க் குழலூதியூ தி, கன்றுகண்மேய்த்துத் தன்றோழரோடு கலந்துடன்வரு வானைத் தெருவிற்கண்டு, என்றுமிவனையொப்பாரைநங்காய் கண்டறியேனேடிவந்துகாணாய், ஒன்றுநில்லா வளைகழன்று துகிலேந்திளமுலையுமென்வசமல்லவே.

ப-ரை.—இந்த்ரன்பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தைவர்ஷிப்பிக்கப்புக்க வாறே, குன்று - கோவர்த்தநபர்வதத்தை, எடுத்து - குடையாகவெடுத்து, ஆநி ரை - ரக்ஷ்யவர்க்கமான பசுநிரையின்மேல் ஒருதுளிவிழாதபடி, காத்த - ரக்ஷி த்த, பிரான்-உபகாரகன், கோவலனாய்—, குழல் - வேய்ங்குழலை, ஊதியூதி-பல காலும் ஊதிக்கொண்டு, கன்றுகள் - கன்றுகளை, மேய்த்து - வயிறுநிறையும்படி

(க) பகுமுகமாக - பலபடியாக. (உ) திவ்யம் - அழகிது. (௩) அபூர்வ தர்சநம் - காணக்காட்சி. (௪) புரிந்து - விரும்பி.

மேய்த்தவனாய், தன் - கூடப்போனதன்னுடைய, தோழரோடு - தோழரோடே, கலந்து - "அவர்களிலேயொருவன்" என்னலாம்படிகலந்து, உடன்வருவானை - கூடவருகிறவனை, தெருவில் - வீதியிலே, கண்டு—, நங்காய் - ஸ்த்ரீத்வபூர்த்தியுடையவளே, என்றும்-ஒருகாலத்திலும், இவனை—, ஒப்பாரை - ஒத்தவர்களை, கண்டறியேன்—; ஏடி - தோழீ, வந்துகாணாய் - வந்துபாராய்; அவனைக்கண்டவநந்தரம், துகில்-பரிவட்டமும், கழன்று - அரையில்தொங்காதபடி கழலுவது மன்றி, வளை - கையில்தரித்தவளைகளும், வலியநிறுத்திலும், ஒன்று - ஒன்றும், நில்லா - நிற்கிறனவில்லை; ஏந்து - ஏந்துதலையும், இள - இளமையுமுடைத்தான, முலையும்—, என் - என்னுடைய, வசமல்ல - வசத்தில்நிற்கிறதில்லை.

வ்யா.—நாலாம்பாட்டு. (குன்றெடுத்தாநிரைகாத்தபிரான்) இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தை வர்ஷிப்பிக்கப்புக்கவாறே "கல்லெடுத்துக்கன்மாரிகாத்தாய்" என்கிறபடியே - முன்பு "ரக்ஷகம்" என்றுசொன்ன மலைதன்னையே (க) வர்ஷவாரணமான குடையாகவெடுத்து, (உ) ரக்ஷ்யவர்க்கமான பசுநிரையின்மேல் ஒருதுளி விழாதபடி ரக்ஷித்தவுபகாரகன். (கோவலனாய்) கீழ்ச்சொன்னதுக்கும் மேல்சொல்லுகிறதுக்கும்ஹேது இக்குடிப்பிறப்பிறே. ஆய்என்கையாலே - இடைத்தனத்தில் (ங) புரையில்லாமைசொல்லுகிறது. ஆகையாலிறே "ரக்ஷ்யவர்க்கமானபசுக்கள் நலுங்கவொண்ணாது" என்று ஏழுநாள்ஒருபடிப்பட மலையைச்சுமந்துகொண்டுநின்று ரக்ஷித்தது.இப்படிமலையைச்சுமந்துநின்றவிடத்தில்ஓராயாஸம்தோற்றிற்றில்லையிறே-ரக்ஷ்யவர்க்கத்தில் ஒருவர்தந்தாமுடையரக்ஷணத்துக்கு ஒருயத்நம்பண்ணினாரில்லாமையாலே. (குழலூதியூதி) இதுவும் ஜாத்யுசித வ்ருத்தியிறே. (ச)வீப்ஸையாலே-பலகாலும்ஊதும் என்னுமிடம்சொல்லுகிறது. அதாவது - கன்றுகள்மேய்க்கைக்கும் கைகழியப்போகாதபடி (ரு) மறிக்கைக்கும் ஊரைநோக்கிமீளுகைக்குமுடலாகப்பலகாலு மூதுமிறே. (கன்றுகளித்யாதி) கன்றுகள்வயிறுநிறையும்படிமேய்த்து, கூடப்போன தன்னுடையதோழன்மாரோடே "அவர்களிலொருவன்" என்னலாம்படிகலந்து 'கூடவருகிறவனைத் தெருவிலேகண்டு. (என்றுமித்யாதி) ஒருகாலத்திலும் இவனையொப்பாரைக் கண்டறியேன்நங்காய். ஏடிவந்துகாணாயென்று-தனக்குத்தோழியானவளையும் காணவழைக்கிறாள். நங்காயென்கையாலே - நினைத்தகார்யம் தனக்குத்தலைக்கட்டித் தரவல்ல குணபூர்த்தியுடையவளென்னுமிடந்தோற்றச்சொல்லுகிறாள். ஏடியென்றது - தோழியென்றபடி. "எல்லேயுமேடியும் தோழியும்முன்னிலைப்பெயர்" என்னக்கடவதிறே. (ஒன்றித்யாதி) அவனைக்கண்டவநந்தரம் தனக்கு

(க) வர்ஷவாரணம் - மழையைத்தடுக்குமது. (உ) ரக்ஷ்யவர்க்கம் - ரக்ஷிக்கப்படுமவை. (ங) புரை - குற்றம். (ச) வீப்ஸை - மீமிசைச்சொல். (ரு) மறிக்கை -மடக்குகை.

ப்பிறந்த விக்ரியைச்சொல்லுகிறாள். (துகில் - கழன்று - வளை - ஒன்றுநில்லா) பரியட்டமுமரையிற்றங்காதபடிகன்று, கையில்வளைகளும் வலியநிறுத்திலும் ஒன்றும்நிற்கிறனவில்லை. (ஏந்திளமுலையுமென்வசமல்லவே) ஏந்துதலையும் இளமையையுமுடைத்தானமுலையும் என்னுடையவசத்தில்நிற்கிறதில்லை. "கொங்கைகிளர்ந்துகுமைத்துக்குதுகுலித்து ஆவியையாகுலஞ்செய்யும்" என்கிறபடியே தன்வசமாகக்கிளர்ந்து நலியாநின்றது. (ச)

மூ.—சுற்றிநின்றாயர்தழைகளிடச் சுருள்பங்கிநேத்திரத்தா லணிந்து, பற்றிநின்றாயர்கடைத்தலையே பாடவுமாடக்கண்டேனன்றிப்பின், மற்றொருவர்க்கென்னைப்பேசலொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால், கொற்றவனுக்கிவளாமென்றெண்ணிக்கொடுமின்கள்கொடீராகிற்கோழம்பமே.

ப-ரை.—ஆயர் - திருத்தோழன்மாரானவிடையர், சுற்றிநின்று - சூழ்ந்துநின்றுகொண்டு, தழைகள் - பீலிக்கண்களாற்செய்த குடைகளை, இட - திருமேனிக்கநுகுணமாகப்பிடித்துவர, சுருள் - சுருண்ட, பங்கி - திருக்குழலையெடுத்துக்கட்டி, நேத்திரத்தால் - பீலிக்கண்களாலே, அணிந்து - அலங்கரித்து, ஆயர் - இடையரானவர்கள், கடைத்தலையே - கலைக்கடையிலே, பற்றிநின்று - நெஞ்சுபொருந்திநின்று, பாடவும்—, ஆடவும்—, கண்டேன்—; அன்றிப்பின் - இப்படிப்பட்டவிவனுக்கொழிய, மற்றொருவர்க்கு - வேறொருவர்க்கென்று, என்னை—, பேசலொட்டேன் - சொல்லவொட்டேனென்ன; நீ எவனுக்கொழிய என்று சொல்லுகிறாயென்ன; மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையிலே, எம் - என்னைத்தனக்கு உரித்தாக்கிக்கொண்டவனாய், மாயற்கல்லால் - யாவராலும்வியக்கப்படத்தக்க செய்கையையுடையவனுக்கொழியவென்ன; ஆகில்என்செய்யச்சொல்லுகிறாயென்ன; கொற்றவனுக்கு-வெற்றியைஸ்வபாவமாகவுடையவனுக்கு, இவள்—, ஆம் - தகுந்தவள், என்று எண்ணி - என்று நினைத்து, கொடுமின்கள் - கொடுங்கோள்; கொடீராகில் - அப்படி கொடீர்களாகில், கோழம்பமே - உங்கள் குழப்பம் முடிவோடே தலைக்கட்டும்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (சுற்றிநின்றாயர்தழைகளிட) திருத்தோழன்மாரானவாயர் அத்யந்தஸ்நேஹிகளாய் சூழ்ந்துகொண்டுநின்று வர்ஷாதபபரிஹாரமானகுடைகளைத் தன்திருமேனிக்கு அநுகுணமாகப்பிடிக்க. (சுருள்பங்கி நேத்திரத்தாலணிந்து) சுருண்டதிருக்குழலையெடுத்துக்கட்டி,சூழப்பீலிக்கண்களாலே யலங்கரித்து. (பற்றிநின்றாயர்கடைத்தலையேபாடவுமாடக்கண்டேன்) ஆயர்தலைக்கடையிலே நெஞ்சுபொருந்திநின்றுபாடவும் ஆடவும்கண்டேன். அன்றிக்கே, பற்றிநின்றென்றது - தலைக்கடையைப்பற்றிநின்றென்னவுமாம். ஆயர்தலைக்கடையென்றது - நம்முடைய தலைக்கடை என்றபடி. (அன்றிப்பின்மற்றொருவர்க்கென்னைப்பேசலொட்டேன்) இப்படிப்பட்டவனுக்கொழிய வேறொருவர்க்கென்று என்னைச் சொல்லவொட்டேன். நீங்கள் நினைத்திருக்கிறது செய்யலாவ

தில்லை; நீங்கள் (க) வாய்விடில் நான்முடிவன். "மானிடவர்க்கென்று பேச்சுப்படில்வாழகில்லேன்" என்னுமாபோலே சொல்லுகிறாள். இப்படியிவள்சொன்னவாறே, இவள்தன்நினைவை இவள் வாயாலேகேட்கைக்காக "எவனுக்கொழிய என்றுநீசொல்லுகிறது" என்ன (மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால்)என்கிறாள். "க்ர்ஷ்ணனுக்கு" என்னாதே இப்படிசொல்லிற்று-இவனுக்கு (உ) ஓரடியுடைமைசொல்லுகைக்காக. அடியுடைமைசொல்லும்போது ஒருகோத்ர ஸம்பந்தம்சொல்லவேணுமிறே. மாலிருஞ்சோலைபோலே என்னையும்தனக்கு அஸாதாரணையாக்கிக்கொண்ட ஆச்சர்யசக்தியுக்தனுக்கொழியவென்றபடி. திருவாய்ப்பாடியிலுங்காட்டில் திருமாலிருஞ்சோலை அவனுக்கு அஸாதாரணதேசம்போலேகாணும். அவதாரகாலமித்தனையுமிறேயங்கு; நித்யஸந்நிதியிங்கேயிறே. (கொற்றவனுக்கு) கொற்றம் - வெற்றி. நீங்கள் கொடுத்திலிகோளாகிலும் தனக்கு என்றதுவிடாதவனுக்கென்கை. * அண்ணாந்திருக்கவேயாங்கவளைக் கைப்பிடித்தவனிறே. (இவளாம்என்றெண்ணிக்கொடுமின்கள்) * தனிவழிபோயினாளென்னும்சொல் வாராதபடி "துல்யசீல வயோவ்ருத்தாம்" "தந்மைத்ரீமேவயோவ்ருத்தாம்" என்கிறபடியே - "அவனுக்கு இவள் அநுரூபை" என்றுநினைத்து, "ஸஹதர்மசரீதவப்ரதீச்சைநாம்" "ஸஹாயார்த்தவசீ தவப்ரதீக்ஷ்வைநாம்"என்கிறபடியே கொடுங்கோள். (கொடீராகில்கோழம்பமே) அப்படி கொடீகோளாகில் நீங்கள் குழம்பினிகோளாமித்தனை; நான்போகைதவிரேன். (ங) சிந்தயந்திபோலே யிருப்பாளொருத்திபோலேகாணுமிவள். ஆனபின்பு, உங்கள்குழப்பம் நிஷ்ப்ரயோஜநம்; முடிவோடேதலைக்கட்டுமென்கிறாள். கோழம்பம் - குழப்பம். (ரு)

மூ.—சிந்துரமிலங்கத்தன் திருநெற்றிமேற்றிருத்திய கோறம்புந்திருக்குழலும், அந்தரமுழவத்தண்டழைக்காவின்கீழ் வருமாயரோடுடன்வளைகோல்வீச,அந்தமொன்றில்லாத வாயப்பிள்ளையறிந்தறிந்திவ்வீதிபோதுமாகில், பந்துகொண்டானென்று வளைத்துவைத்துப் பவளவாய்முறுவலுங்காண்போந்தோழி.

ப-ரை.—தன் - தன்னுலடைய, திருநெற்றிமேல் - திருநெற்றியிலே, அதுக்கு நிறம்கொடுக்கும்படி திலகமாகச்சாத்தின, சிந்துரம் - ஸிந்தூரசூர்ணமானது, இலங்க - விளங்கவும், திருத்திய - அதுக்குமேலே திருந்தச்சாத்தின, கோறம்பும் - குறம்பமும், திருக்குழலும் - அதுக்கு நிறங்கொடுக்கும்படிசாத்தின திருக்குழற்கற்றையும், இலங்க - விளங்கவும், அந்தரம் - ஆகாசமெல்லாம், முழவம்-வாத்யகோஷங்களாலே முழங்கவும், தண் - குளிர்ந்த, தழை - பீலிக்குடையாகிற, காவின்கீழ் - சோலையின்கீழே, வரும்-தன்னுடனேவருகிற, ஆயரோடுடன்-

(க) வாய்விடில் - சொல்லில். (உ) ஓரபியுடைமை - ஒருஹேது.
(ங) சிந்தயந்தி - ஓரிடைப்பெண்.

ன் - திருத்தோழன்மாரான ஆயரோடேகூட, வளைகோல்-வளைந்ததடிகளை, வீச- ஒருவர்க்கொருவர் வெற்றிகூறி யெறிந்துகொண்டுவர, ஒப்பனையழகுமுதலிய வற்றில், ஒன்று - ஒவ்வொன்றே, அந்தமில்லாத - அறிவிற்சிறந்தவர்களாலும் எல்லை காணவொண்ணாத, ஆயப்பிள்ளை - இடைப்பிள்ளையானவன், தன்னை யொழிய வெனக்குச்செல்லாமையையும் என்னையொழியத் தனக்குச்செல்லும் படியையும், அறிந்தறிந்து - நன்றாகத்தெரிந்திருந்தும், இவ்வீதி - இத்தெருவே, போதுமாகில் - வந்தானாகில், நாங்கள்விளையாடுகிறபோது, பந்து - எங்கள்பந் தை, கொண்டான் - பறித்துக்கொண்டுபோனான், என்று - என்றுசொல்லி, வளை த்துவைத்து - தடுத்துவைத்து, பவளம் - பவளம்போலேயிருக்கிற, வாயும் - திருவதரத்தையும், முறுவலும் - மந்தஸ்மிதத்தையும், தோழி—, காண்போம்- நாம்கண்டநுபவிக்கக்கடவோம் என்கிறாள்.

வ்யா.—ஆறும்பாட்டு. (சிந்துரமிலங்கத்தன்திருநெற்றிமேல்) "நாண்மன்னும்வெண்டிங்கள்கொல்நயந்தார்கட்குநச்சிலைகொல்" என்னும்படியான அழகையுடைய தன்திருநெற்றிக்குமேலே, அதுக்கு பரபாகமாம்படிசாத்தினஸிந்தூரசூர்ணமானது விளங்க. (திருத்திய கோறம்பும்திருக்குழலும்) அதுக்குமேலேதிருந்தச்சாத்தின(க)திரு க்குறம்பமும், அதுக்கு பரபாகமானதிருக்குழற்கற்றையும் விளங்க. கீழ், "இலங்க" என்றது இங்கும்வரக்கடவது. (அந்தரமுழவம்)ஆகா சமெல்லாம் வாத்யகோஷங்களாலேமுழங்க. முழவமென்று-மத்தள மாய், அதினுடையமுழக்கம் (உ) அத்யாஹார்யமாய்க்கிடக்கிறது. (தண்டழைக்காவின்கீழ்)குளிர்ந்த பீலிக்குடையாகிறசோலைக்கீழே. (வருமாயரோடுடன்) தன்னுடனேவருகிற திருத்தோழன்மாரான ஆயரோடேகூட. (வளைகோல்வீச)ஒருவர்க்கொருவர் வெற்றிகாட் டிவளைதடியெறிந்துகொண்டு. (அந்தமொன்றில்லாதவாயப்பிள்ளை) ஒப்பனையழகும்வருகிறஅலங்காரமும்லீலாவ்யாபாரமும்ஓரொன்றே எத்தனையேனுமளவுடையாராலும்எல்லைகாணவொண்ணாத இடைப் பிள்ளை. (அறிந்தறிந்திவ்வீதிபோதுமாகில்) தன்னையொழியவெனக் குச்செல்லாமையும் என்னையொழியத் தனக்குச்செல்லும்படியான தீம்புகளையுமறிந்தால் இத்தெருவில்வரக்கூடாது; இவற்றையறிந்து வைத்தும் இத்தெருவேவந்தானாகில். (பந்துகொண்டானென்று வளைத்துவைத்து) "திரளிலே நாம் அவனைவளைக்கும்படியென்" என்று நீ நினைக்கவேண்டா, "நாங்கள்விளையாடுகிறபோது எங்கள் பந்தைப் பறித்துக்கொண்டுபோனான்" என்றுசொல்லிப் போகாத படி தடுத்துவைத்து. (பவளவாய்முறுவலும்காண்போம்தோழி) நாம் இப்படிசெய்தவாறே, அவன்கால்வாங்கிப்போகாமேநின்று(௩) மந்தஸ்மிதம்பண்ணுமே, அப்போது அவனுடைய பவளம்போலே

(க) குறம்பம் - ஓர்வகையாபரணம். (உ) அத்யாஹார்யமாய் - வருவித்து. (௩) மந்தஸ்மிதம் - புன்சிரிப்பு.

யிருக்கிற திருவதாரத்துக்கு பரபாகமானமுறுவலையும், தோழீ, நாம் கண்டநுபவிக்கக்கடவோம் என்று (க) மநோரதிக்கிறாள். (கூ)

மூ.—சாலப்பன்னிரைப்பின்னேதழைக்காவின்கீழ்த்தன்றிருமேனி
நின்றொளிதிகழ, நீலநன்னறுங்குஞ்சிநேத்திரத்தாலணிந்து
பல்லாயர்குழாநடுவே, கோலச்செந்தாமரைக்கண்மிளிரக்
குழலூதி யிசைபாடிக்குனித்தாயரோ, டாலித்துவருகின்ற
வாயப்பிள்ளை யழகுகண்டென்மகளயர்க்கின்றதே.

ப-ரை.—சாலப்பல் - மிகவும்பலவான, நிரைப்பின்னே - பசுநிரையின்பின்னே, தழை - பீலிக்குடையாகிற, காவின்கீழ்-சோலைநிழலின்கீழே, தன் - தன்னுடைய, திருமேனி - திருமேனியானது, நின்று - நிலைபெற்று, ஒளிதிகழ-ஒளிவிளங்கும்படியான, நீலம் - நீலநிறத்தையும், நல் - சுருட்சியாலும் நீட்சியாலுமுண்டான நன்மையையுமுடைத்தாய், நறு - நன்னாற்றம் கமழாநின்றுள்ள, குஞ்சி - திருக்குழலை, நேத்திரத்தால் - பீலிக்கண்களாலே, அணிந்து - அலங்கரித்து, பல் - அநேகமான, ஆயர்குழாநடுவே - ஆயர்திரளுக்குநடுவே, கோலம்-அழகிதாய், செம் - சிவந்த, தாமரை - தாமரையிதழ்போலே யிருக்கிற, கண்-திருக்கண்களானவை, மிளிர - மிளிரும்படி, குழல் - வேய்ங்குழலை, ஊதி - தன்னோடிய பெண்களுடையசோபம்நிரும்படி ஊதிக்கொண்டும், இசை - அதுக்குத்தக்கவிசைகளை, பாடி - பாடிக்கொண்டும், குனித்து-ஆடிக்கொண்டும், ஆயரோடு - கீழ்ச்சொன்ன தோழன்மாரான ஆயரோடேகூட, ஆலித்துவருகின்ற - கர்வித்துவருகிற, ஆயப்பிள்ளை - இடைப்பிள்ளையுடைய, அழகுகண்டு - அழகைக்கண்டு, என் - என்னுடைய, மகள் - பெண்பிள்ளையானவள், அயர்க்கின்றது - அறிவழிகிறாள்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (சாலப்பன்னிரைப்பின்னே) மிகவும் பலவான பசுநிரைப்பின்னே. ஒரொரு(உ)திறமாகவெண்ணிலும்பரிகணிக்கவொண்ணாதபடியாய்த்து கோஸம்ருத்திதா னிருக்கும்படி. இப்படியிருக்கிறபசுநிரையை முன்நடக்கவிட்டு (உ)பிற்கூழையிலேயாய்த்து இவன்றான்வருவது. (தழைக்காவின்கீழ்) பீலிக்குடைச்சோலைக்கீழே. (தன்திருமேனிநின்றொளிதிகழ) பசுக்கள் வயிறுநிறையமேய்ந்துமீளப்பெறுகையாலும், "பெண்களோடே கலக்கைக்கீடான காலம்வந்தது" என்னுமத்தாலுமுண்டானவுகப்பாலும் தன்னுடையதிருமேனியானது நின்றொளிவிளங்க. (நீலநன்னறுங்குஞ்சிநேத்திரத்தாலணிந்து) நீலமானநிறத்தையுடைத்தாய் சுருட்சியாலும் நீட்சியாலுமுண்டான நன்மையையுடைத்தாய் பரிமளிதமாயிருந்துள்ளதிருக்குழலைப்பீலிக்கண்களாலே அலங்கரித்து.

(பல்லாயர்குழாநடுவே)அநேகமான ஆயர்திரளுக்குநடுவே. (கோலச்செந்தாமரைக்கண்மிளிர) தர்சநீயமாய்ச் சிவந்ததாமரைபோலேயிருக்கிற திருக்கண்களானவைமிளிர. இத்தால் - திருத்தோழன்மா

(க) மநோரதிக்கிறாள் - எண்ணமிடுகிறாள். (உ) திறமாக-கூறாக. (ங) பிற்கூழை - பிற்படை.

ருடையதிரளை இடம்வலங்கொண்டுபார்த்து மகிழ்ந்துகொண்டு வரும்படிசொல்லுகிறது. (குழலூதியிசைபாடிக்குனித்து) "ஆமரு வினநிரைமேய்க்க நீபோக்கு ஒருபகலாயிரமூழி,, என்னும்படி பக லெல்லாம் தன்னைப்பிரிந்து நோவுபட்டுக்கிடந்தபெண்கள் தான் வருகிறமையறிந்து கொந்தளிக்கும்படியாகவும், அவர்களைப்பிரிகை யாலே தனக்குண்டான ஆர்த்தியெல்லாம் தோன்றும்படியாகவும், (க) ப்ரணயரோஷம்கொண்டாடியிருப்பார்நெஞ்சில் (உ) மறம் தீரும்படியாகவும் தக்கபாசுரங்களைவைத்துத் திருக்குழலையூதி,அது க்கு அநுரூபமானவிசைகளையும்பாடி, "கூத்தன்கோவலன்" என்கிற படியே வருகிறபோதை நடையழகாலே வல்லாராடினாற்போலே யாடி.

(ஆயரோடாலித்து வருகின்றவாயப்பிள்ளை) இப்படியேகீழ்ச் சொன்ன தோழன்மாரான வாயரோடேகூடமேனாணிப்புத்தோன்ற கர்வித்துவருகிற இடைப்பிள்ளையுடைய. (அழகுகண்டென்மகள யர்க்கின்றதே) அவனுடைய வடிவழகைக்கண்டமாத்ரங்கொண்டு காணும் என்னுடையபெண்பிள்ளையானவள் தன்னுடையகுடிப்பிறப் பையும் (ங) ஸ்த்ரீத்வாபிமாநத்தையும் என்னுடைய (ச) நியந்த்ர் த்வத்தையும் (ரு) நிரூபிக்கக்கூடமையில்லாதபடி அறிவழிகிறது. (எ)

மூ.—சிந்துரப்பொடிக்கொண்டு சென்னியப்பித்திருநாம மிட்டங் கோரிலையந்தன்னால், அந்தரமின்றித்தன்னெறிபங்கியையழ கியநேத்திரத்தாலணிந்து, இந்திரன்போல்வருமாயப்பிள்ளை யெதிர்நின்றங்கினவளையிழவேலென்னச், சந்தியினின்றுகண் டீர்நங்கைதன்றுகிலொடுசரிவளைகழல்கின்றதே.

ப-ரை.—சிந்துரப்பொடிக்கொண்டு - சாதிலிங்கப்பொடிகொண்டு, செ ன்னி - திருமுடியிலே, அப்பி - சாத்தியும், அங்கு - ஒட்டினவிடத்தில் பற்றுமப டி, ஓர் - இளையதாய் நிறத்துநீண்டிருப்பதொரு, இலையதனால்-இலையாலே, திரு நாமமிட்டு-திருநெற்றியிலே திருநாமமாகச்சாத்தியும், தன்-தன்னுடைய, நெறி- நெறித்த, பங்கியை-திருக்குழலை, அழகிய—, நேத்திரத்தால்-பீலிக்கண்களாலே, அந்தரமின்றி - இடைவெளியில்லாதபடி, அணிந்து - அலங்கரித்துக்கொண்டும், தேவர்கள்சுற்றும் சூழ்ந்துஸேவித்துவர, இந்திரன்போல் - இந்த்ரன் தன்பெரு மையெல்லாம்தோற்ற அவர்கள்நடுவேவருமாபோலே, வரும் - திருத்தோழன் மார்சூழ்ந்து ஸேவித்துவர அவர்கள்நடுவே தன்பெருமைதோற்ற மேனாணித் துவருகிற, ஆயப்பிள்ளை - இடைப்பிள்ளைக்கு, எதிர் - எதிரே, அங்கு - அந்தஸ்த லத்திலே, நின்று—, இனவளை - உன்னுடைய இனவளையை, இழவேலென்ன - இழவாதேகொள்ளென்றுநான்சொல்ல, சந்தியில் - பல்லூர்ப்பொதுவானவன வருகிறவழியானசந்தியிலே, நின்றுகண்டீர் - நின்றன்றோ, நங்கைதன் - பெண்

(க) ப்ரணயரோஷம் - பிணக்காலுண்டானகோபம். (உ) மறம்-கோபம். (ங) ஸ்த்ரீத்வாபிமாநம் - நாம் ஸ்த்ரீ என்கிற அஹங்காரம். (ச) நியந்த்ர்த்வம்- நியமிக்கை. (ரு) நிரூபித்தல் - மூதலித்தல்.

டன்மையால் நிறைந்துள்ளவிவனுடைய, துகிலொடு - பரிவட்டமும், சரிவளை- சரியென்றுபேர்பெற்றவளையும், கழல்கின்றது - கழலாநின்றது.

வ்யா.— எட்டாம்பாட்டு. (சிந்துரப்பொடிக்கொண்டுசென்னியப்பி) சாதிலிங்கப்பொடிகொண்டு திருமுடியிலேசாத்தி. கீழ், "சிந்துரமிலங்கத்தன்திருநெற்றிமேல்" என்று - சிந்தூரசூர்ணத்தைத் திருநெற்றியிலேவிளங்கும்படி திலகமாகச்சாத்தினபடி சொல்லிற்று; இங்கே, "சென்னியப்பி" என்கையாலே திருமுடியில் திருக்குழல்மேலே அலங்காரமாகக்கொண்டு பரக்கச்செறியச்சாத்தினபடி சொல்லுகிறது. (திருநாமமிட்டங்கோரிலையந்தன்னால்) நேரியதாய்நீண்டு ஓட்டினவிடத்திலேபற்றும்படி இளையதாய்நிறத்திருப்பதொரு இலையாலே திருநெற்றியிலே திருநாமமாகவிட்டு. ஊர்த்வபுண்ட்ராகாரமாக அழுத்திவைக்குமாய்த்து. அங்கென்று - திருநாமத்துக்கு அநுரூபஸ்தலமான திருநெற்றியைச்சொல்லுகிறது. "இலையம்" என்கிறவிடத்தில், அம் - சாரியை. (க) அதவா, ஜாதிலிங்கப்பொடியை(உ)ஆஸ்யஜலத்தாலேநனைத்துத் திருநெற்றியிலே திருநாமமாகச்சாத்தியென்னவுமாம். அப்போதைக்கு, "ஓரிலயம்" என்றது, இல்லென்று - உள்ளாய், அயமென்று - ஜலமாய், ஓரிலயமென்றது - திருப்பவளத்துக்குட்பட்டதொரு ஜலமென்றபடி. "ஆயப்பிள்ளை" என்கிற இடைத்தனத்துக்கும் பிள்ளைத்தனத்துக்கும் சேருவதொரு வ்யாபாரமிறேயிது. (அந்தரமித்யாதி) தன்னுடைய நெறித்தகுழலையிடைவெளியில்லாதபடி அழகிய பீலிக்கண்களாலே அலங்கரித்து.

(இந்திரன்போல்வருமாயப்பிள்ளை) ஸஜாதீயரான தேவர்களடங்கலும்ஸேவிக்க அவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரன் அவர்கள்நடுவே தன்வைபவமெல்லாந்தோற்ற வருமாபோலே, * தன்னேராயிரம் பிள்ளைகளான திருத்தோழன்மாரடங்கலும் ஸேவிக்க அவர்கள்நடுவே தன்செருக்கும்பெருமையும் தோற்றும்படி வருமாயப்பிள்ளை. அன்றிக்கே, (௩) இந்த்ரசப்தத்துக்கு (௪) முக்யவ்ர்த்தி ஈச்வரவிஷயத்திலேயாகையாலே, (௫) பரமஸாம்யாபந்நரான ஸூரிகள்ஸேவிக்க அவர்கள் நடுவே ஸர்வேச்வரன்றான் வருமாபோலே வருகிறவனென்னவுமாம். (௬)தார்ம்யைக்யமுண்டேயாகிலும் (௭) அவதாரப்ரயுக்தமான நிலையைவிட்டு, "விஷ்ணுநா ஸத்ருசோ வீர்யே" "விஷ்ணுநாஸத்ருசோவீர்யே" என்றாற்போலே இப்படிசொல்

(க) அதவா - அன்றிக்கே. (உ) ஆஸ்யம் - திருப்பவளம். (௩) தன்வைபவம் - தன்பெருமை. (௪) முக்யவ்ர்த்தி - முதலாமிருப்பு. (௫) பரமஸாம்யாபந்நர் - எம்பெருமானோடொத்த நிலையையுடையவர்கள் (௬) தார்ம்யைக்யம்-பொருளின் ஒற்றுமை. (௭) அவதாரப்ரயுக்தமான - ஆயனாயவதரித்ததுக்குச்சேர்ந்ததொரு.

லலாமிறே. இப்படிவருகிறவாயப்பிள்ளேயுடைய. (எதிர்நின்றங்கின வளேயிழவேலென்ன) அவன்வரவுக்கு எதிராக அந்தஸ்தலத்திலே நின்று உன்னுடைய இனவளேகளே இழவாதேகொள்ளென்று நான் சொல்ல. "எதிர்நிற்கை" என்றும், "வளேயிழக்கை" என்றும் இரண்டில்லேபோலேகாணும். இனவளேயென்கையாலே - எதிர்நின்றவர்கள்கையில் ஒருவளேயும் தொங்காதென்னுமிடம் தோற்றுகிறது. இனவளேயென்கையாலே - ஸ்த்ரீத்வமழிகையிறே.

(சந்தியில்நின்றுகண்டீர்) என்சொல்கேளாமல் ஊர்ப்பொதுவான அவன்வருகிறவழியான சந்தியிலேநின்றுகிடீர். (நங்கைதன்துகிலொடுசரிவளேகழல்கின்றதே) முன்பு ஸ்த்ரீத்வத்தால் பரிபூர்ணேயாயிருந்த இவளுடைய பரியட்டத்தோடேகூடச்சரிவளேயும்கழலாநின்றது. "கோல்வளே, கழல்வளே, வரிவளே" என்னுமாபோலே, "சரிவளே" என்றும் ஒருவளேவிசேஷம். "கழல்வளேயைத்தாமும்கழல்வளேயேயாக்கினர்" என்கிறபடியே முன்பே "சரிவளே" என்று பேராயிருந்ததவித்தை, (க) நாமமாத்ரமன்றிக்கே, கையில்தொங்காமல் சரிந்து கழன்றுபோம்படி பண்ணிஞைய்த்து அவன் தன்னுடைய காட்சியாலே. இத்தால் - வினவப்புகுந்தவர்களுக்குத் தன்பெண்பிள்ளேயுடைய விக்ருதிக்கு ஹேதுவையும் விக்ருதி விசேஷணந்தன்னேயும் சொன்னுளாய்த்து. (அ)

மூ.—வலங்காதின் மேற்றோன்றிப் பூவணிந்து மல்லிகைவநமாலே மௌவன்மாலே, சிலிங்காரத்தாற்குழற்றாழவிட்டுத் தீங்குழல் வாய்மடுத்தூதியூதி, அலங்காரத்தால்வரு மாயப்பிள்ளேயழகுகண்டென்மகளாசைப்பட்டு, விலங்கிநில்லாதெதிர்நின்று கண்டீர்வெள்வளேகழன்றுமெய்மெலிகின்றதே.

ப-ரை.—வலங்காதில் - வலக்காதிலே, மேல்தோன்றிப்பூ - செங்காந்தட்பூவை, அணிந்து - அலங்காரமாகச் சாத்திக்கொண்டும், மல்லிகை - மல்லிகையாலாகிய, வநம் - அழகிய, மாலே - மாலேயையும், வநம் - அழகிய, மௌவல் - காட்டுமல்லிகையாலாகிய, மாலே - மாலேயையும், அணிந்து - அணிந்துகொண்டும், சிலிங்காரத்தால் - இவ்வலங்காரத்தோடேகூட, குழல் - திருக்குழலே, தாழவிட்டு-திருமுதுகிலேதாழவிட்டும், தீம் - யாவர்க்கும் இனிமையைத்தாராநின்றுள்ள, குழல் - வேய்ங்குழலே, வாய்மடுத்து - திருப்பவளத்திலேவைத்து, ஊதியூதி-பலகாலுமூதிக்கொண்டும், அலங்காரத்தால்-இத்தன்மைத்தான அலங்காரத்தோடே, வரும் - வருகிற, ஆயப்பிள்ளே - இடைப்பிள்ளேயுடைய, அழகு கண்டு - * கண்டவர்சிந்தைகவருமதானவழகைக்கண்டு, என்மகள் - என்னுடையபெண்பிள்ளேயானவள், ஆசைப்பட்டு—, விலங்கிநில்லாது-"இது கண்டவர்களே வருத்தும்" என்று கண்ணேமாறவைத்து வழிவிலங்கிநில்லாதே, எதிர்நின்றுகண்டீர் - அத்தைப்பார்த்துக்கொண்டு எதிரேநின்றன்றே, வெள்வளே - சங்குவளேகளும், கழன்று—, மெய் - சரீரமும், மெலிகின்றது - மெலிவுறுகின்றுள்.

(க) நாமமாத்ரமன்றிக்கே - பெயர்மாத்ரமன்றிக்கே.

வ்ய்.—ஒன்பதாம்பாட்டு. (வலங்காதில் மேல்தோன்றிப்பூ வணிந்து) வலக்காதிலே செங்காந்தள்பூவை யலங்காரமாகச்சாத்தி. இடக்காதுக்கு ஒன்றும் சொல்லாமையாலே ஒருகாதுக்குச்சாத்திக் கொண்டு வருகிறவிதுதானும் ஓரழகாகச்சாத்திக்கொண்டு வந்தானென்னுதல். ஒருகாதுக்குச் சாத்தினவளவிலே, மல்லிகைமாலையைக் காண்கையாலே அத்தைமறந்து இத்தைச்சாத்தி விட்டானென்னுதல். (மல்லிகைவநமாலை) "வநம்" என்கிறவித்தை, மல்லிகையோடேசேர்த்து – காட்டுமல்லிகைமாலையென்னுதல். அன்றிக்கே, வநமென்று - அழகாய், மல்லிகையாலுண்டான அழகிய மாலையென்னுதல். (மௌவல்மாலை) மௌவலாவது-மல்லிகையின் அவாந்தரபேதம். பூவை, காயா என்னுமிடத்தில், பூவையாவது-காயாவின் அவாந்தரபேதமானாற்போலே. மௌவல்மாலையென்று-இங்கும் அந்தவனப்புக்கூட்டிச்சொல்லவுமாம். கீழ், "அணிந்து" என்றத்தை இங்கும்கூட்டி இம்மாலைகளையுமணிந்து என்றுசொல்லக்கடவது. இவைதான் திருமார்புக்கு அலங்காரமாகச்சாத்துமவையிறே.

(சிலிங்காரத்தால் குழல்தாழவிட்டு) சிலிங்காரம் – ச்ருங்காரம்; அலங்காரமென்றபடி. இத்தால் – திருக்குழல்பணியாகச்சாத்தும் பூந்தொடைகளைச்சொல்லுகிறது. அந்த அலங்காரத்தோடேகூடத் திருக்குழலைத் திருமுதுகிலே,தாழவிட்டு. (தீங்குழல்வாய்மடுத்தூதியூதி) தீமென்று-இனிமை. "இன்னார்க்கு" என்று விசேஷியாமையாலே-தன்னோடுபிறரோடு வாசியற எல்லார்க்குமினிதாயிருக்கும் குழலென்றபடி. கேட்கிறவர்களிலும் தன் செவியணித்தாகையாலே "பேதுறுமுகம்செய்து நொந்துநொந்து" என்கிறபடியே முதல்தன்னைவருத்தி, பின்னையிறே யவ்வருகுபோவது. பிறரைவருத்துகையாவது-"அவியுணுமறந்துவானவரெல்லாம்" என்றும், "தும்புருவோடுநாரதனும் தந்தம்வீணைமறந்து" என்றும், "கோவலர் சிறுமியர் - வந்து கவிழ்ந்துநின்றனர்" என்றும், "பறவையின்கணங்கள் கூடுதுறந்துவந்துசூழ்ந்து" என்றும் "மரங்கள்நின்று மதுதாரைகள்பாயும்" என்றும் சொல்லுகிறபடியே – தேவமநுஷ்ய (க) திர்யக்ஸ்தாவரவிபாகமற எல்லாரையுமொக்கவருத்துகை. இப்படியிருக்கிற திருக்குழலைத் திருப்பவளத்திலேவைத்து பலகாலு மூதிக்கொண்டு.

( அலங்காரத்தால்வருமாயப்பிள்ளை ) (உ) ஏவம்ப்ரகாரங்களான அலங்காரங்களோடேவருகிற இடைப்பிள்ளையுடைய. "பிள்

---

(க) திர்யக்ஸ்தாவரவிபாகமற - மிருகம், அசையாப்பொருள் என்கிறபிரிவில்லாமல். (உ) ஏவம்ப்ரகாரங்களான - இவ்வகைகளான.

ளா'' என்கையாலே - ''யௌவநஸ்மர:'' ''யுவாகடாக்ஷ:'' என்கிறபரு வத்தைச் சொல்லுகிறது. (அழகுகண்டென்மகளாசைப்பட்டு) கண் டவர்கள் கண்ணையும் நெஞ்சையும் தன்வசமாக்கிக்கொள்ளும் அழ கைக்கண்டு என்னுடைய பெண்பிள்ளையானவளாசைப்பட்டு. (வில ங்கிநில்லாதெதிர்நின்றுகண்டீர்) ''இது கண்டவர்களைவருத்தும்'' என்று கண்ணை மாறவைத்து வழிவிலங்கிநில்லாதே அத்தைப் பார்த்துக்கொண்டு எதிரேநின்றுகிடீர். (வெள்வளைகழன்றுமெய்மெ லிகின்றதே) சங்குவளையும்கழன்று சரீரமும் மெலிகிறது. உடம்பு மெலிந்தன்றோவளையும் கழலுவது. வளைகழலுதலைமுந்துறச்சொல் லி, பின்புஉடம்புமெலிவுசொல்லுவானென்னென்னில்; வளைகழன்ற பின்பாய்த்து உடம்பில்மெலிவு இவளுக்குத்தோற்றிற்றென்னுதல். அன்றிக்கே, முந்துற வளைகழலுகைக்குத்தக்கவளவுமெலிந்து. அவ் வளவுமன்றிக்கே, ''இனிவளைக்கு ஆச்ரயமில்லை!'' என்னும்படி மேன்மேலும்மெலிந்துசெல்லுகிறபடியைச் சொல்லுகிறாளென்னு தல். இதுவும் (க) வினவவந்தவர்களுக்குத் தன்மகள் (உ) தசை யைத் தாயார்சொன்னவார்த்தை. (௯)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—விண்ணின்மீதமரர்கள்விரும்பித்தொழ மிறைத்தாயர்பாடியி ல்வீதியூடே, கண்ணன்காலிப்பின்னேயெழுந்தருளக் கண் டிளவாய்க்கன்னிமார்காமுற்ற, வண்ணம்வண்டமர்பொழிற் புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும், பண் ணின்பம்வரப் பாடும்பத்தருள்ளார்பரமானவைகுந்த நண் ணுவரே.

ப-ரை.—விண்ணின்மீது - பொன்னுலகுமுதலிய மேலுலகங்களிலுள்ள, அமரர்கள் - தேவர்களானவர்கள், விரும்பி - ஆசையுடையராய்க்கொண்டு, தொழ - ஸேவித்துநிற்க, மிறைத்து - அவர்களை யநாதரித்து, ஆயர்பாடியில் - திருவாய்ப்பாடியில், வீதியூடே - தெருவின்நடுவே, காலிப்பின்னே - பசுக்களி ன்பின்னே, கண்ணன் - க்ருஷ்ணனானவன், எழுந்தருள - கீழ்ச்சொன்னஒப்ப னையோடும் அவைதானும் குற்றமுடைத்தென்னத்தக்கஅழகோடும் எழுந்தருள, கண்டு—, இள-யௌவநபருவத்தரான, ஆய்க்கன்னிமார்-இடைப்பெண்கள், காமு ற்றவண்ணம் - ஆசைப்பட்டு மாறுபட்ட வண்ணத்தை யுடையரானபடியை, வண்டு - தேனில்நசையாலே பூவிற்படிந்துகிடக்கிறவண்டுகளானவை, அமர் - எப்பொழுதும் பொருந்திக்கிடக்கும்படியான, பொழில் - திருச்சோலைகளை யுடைய, புதுவையர்-ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு, கோன் - தலைவராய், விட்டு சித்தன்-எங்கும்நிறைந்திருப்பதனால் விஷ்ணுவென்னும் பெயருடையவனை திரு வுள்ளத்திலேயுடைமையால் ''விட்டுசித்தன்''என்னும் திருநாமத்தையுடையபெ ரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, மாலை - மாலையான, பத்தும் - இப்பத்

(க) வினவ - கேட்க. (உ) தசை - நிலைமை.

தையும், இன்பம்வர - இன்பமுண்டாம்படி, பண் - பண்ணிலே, பாடும் - பாடா நிற்கும், பத்தருள்ளார் - பக்திமான்களாயுள்ளவர்கள், பரமான - மேலானதுக்கும்மேலான, வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, நண்ணுவர் - கிட்டப்பெறுவர்.

வ்யா. — (விண்ணின்மீதமரர்கள்விரும்பித்தொழ) (க) ஸ்வர்காத்யுபரிதநலோகங்களில்தேவர்கள் ஆதரித்துக்கொண்டு தொழ. (உ)பூபாரநிரஸநார்த்தமாக(ஙு)ப்ரார்த்தித்துஅவதரிப்பித்தவர்களாகையாலே திருவவதாரகாலமேதுடங்கி இவனுடைய(ச)திவ்யசேஷ்டிதங்களெல்லாம்பார்த்துக்கொண்டுஅவ்வவசேஷ்டிதங்களைக்கண்டு (ரு) வித்தராயிறே தேவர்கள்தானிருப்பது. ஆகையாலே, உபய விபூதிநாதனானவிவன் கோபஜாதீயனாய், ஜாத்யுசித வ்ர்த்தியான கோரக்ஷணத்திலே அதிகரித்து, ஜாத்யுசிதமான அலங்காரத்தையுடையனாய்க்கொண்டு திரிகிறபடியைக்கண்டால் அவர்கள்விரும்பித் தொழாதிரார்களிறே. அன்றிக்கே, விண்ணின்மீதென்கிறது, "நாகஸ்ய ப்ருஷ்டே" "நாகஸ்யப்ருஷ்டே" என்கிற பரமபதத்தையாய், அங்குண்டான, அமரருண்டு – நித்யஸூரிகள், அவர்கள்தாங்களநுபவிக்கிற மேன்மைக்கெதிர்த்தட்டான இந்நீர்மையைக் காண்கையாலே அத்யாதரம்பண்ணித்தொழும்படியாக வென்னவுமாம். (மிறைத்து) மிறுக்குச்செய்து. அதாவது - அப்படிதொழுதுநிற்கிறவர்களுக்கு முகம்கொடாதே(சு)அநாதரித்து, பசுக்களையும் திருவாய்ப்பாடியிலுள்ளாரையும் ஆதரித்துக்கொண்டுபோகை. (ஆயர்பாடியில் வீதியூடேகண்ணன் காலிப்பின்னே யெழுந்தருளக்கண்டு) திருவாய்ப்பாடியில் தெருவின்நடுவேபசுக்களின்பின்னே கீழ்ச்சொன்னவொப்பனைகளோடும் அவைதானும்மிகையாம்படியான வடிவழகோடும் க்ர்ஷ்ணனெழுந்தருளக்கண்டு. (இளவாய்க்கன்னிமார் காமுற்றவண்ணம்) "சாலகவாசல்பற்றி நுழைவனர்நிற்பனராகி" என்றது முதலாக, "வெள்வளைகழன்று மெய்மெலிகின்றது" என்றது முடிவாகச்சொன்னபடியே யுவதிகளான இடைப்பெண்கள் ஆசைப்பட்டு (எ)விக்ர்தைகளான ப்ரகாரத்தை. (வண்டமர்பொழிலித்யாதி) மதுபாநார்த்தமாகப்படிந்த வண்டுகள் வேறொன்றைப் புரிந்துபாராமல் ஸர்வகாலமும் பொருந்திக் கிடக்கும்படியான திருச்சோலைகளையுடைய ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகராய், * அரவத்தமளிப்படியே ஸர்வேச்வரனை எப்போதும் தம்முடையதிருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்கையாலே "விஷ்ணுசித்தன்,, என்னும்

(க) ஸ்வர்காத்யுபரிதநலோகங்கள் - பொன்னுலகு முதலிய மேலுலகங்கள். (உ) பூபாரநிரஸநம் - பூமியின் பளுவைநீக்குதல். (ஙு) ப்ரார்த்தித்து - விரும்பி. (ச) திவ்யசேஷ்டிதங்கள் - அழகியசெய்கைகள். (ரு) வித்தராய் - ஈடுபட்டவராய். (சு) அநாதரித்து - அசட்டைசெய்து. (எ) விக்ர்தைகளான - வேறுபட்ட வடிவையுடையரான.

திருநாமத்தையுடையரான பெரியாழ்வாரருளிச்செய்த மாலையான இப்பத்தையும். (பண்ணின்பம்வரப்பாடும் பத்தருள்ளார்) கேட்கிறவர்களிலுங்காட்டில் பாடுகிறதங்களுக்கு இன்பம்வரும்படியாகப் பண்ணிலே பாடாநிற்கும் பக்திமான்களாயுள்ளவர்கள். (பரமான வைகுந்தம்நண்ணுவரே) "உத்க்ருஷ்டேஷு ஸர்வோத்க்ருஷ்டேஷு" "விஶிஷ்டஸ்ய விஶேஷோ ஹ்யதிஶயவிஶேஷோ" என்கிறபடியே - மேலானதுக்கெல்லாம்மேலாய். "பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு,, என்கிறபடியே பகவதநுபவமங்களாசாஸநங்களைப்பண்ணி காலதத்வமுள்ளதனையும் வர்த்திக்கலான தேசமான ஸ்ரீ வைகுண்டத்தை ப்ராபிக்கப்பெறுவர். (௧௦)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—தழைவல்லிசுரிகை குன்றுசுற்றுச் சிந்துரம்
சாலச்சிந்துரப்பொடி வலம்விண்ணட்டு.

---

ஆ திருமொழி உச-க்கு, பாட்டு-௨௬௧.

அ.—கீழ்ச்சொன்னபடியே தான்விரும்பி மேய்த்துக்கொண்டு போகிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும், தனக்கு அபிமதவிஷயங்களான கோபகோபீஜநங்களுக்கும் பாதகமாம்படி இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தைவர்ஷிப்பிக்க, "குன்றெடுத்தாநிரை காத்தபிரான்" என்கிறபடியே மலையையெடுத்து ரக்ஷ்யவர்க்கமானவற்றுக்கு ஒருநலிவுவாராதபடி நோக்கினவுபகாரம் திருவுள்ளத்திலே (க) பின்னாட்டி, மலையெடுக்கவேண்டின ஹேதுக்களையும், மலைதன்னிலுண்டான வளப்பங்களையும், மலையினுடைய பரப்பையும், அதினுடைய கனப்பாட்டையும், அத்தை அநாயாஸேநப்பிடுங்கியெடுத்த படியையும், அதுதன்னை ஏழுநாள் ஒருபடிப்படதரித்துக்கொண்டுநின்ற படியையும், அத்தால் திருக்கைக்கு ஒருவாட்டமின்றிக்கேயிருந்தபடியையுமெல்லாம் தத்காலம்போலே தர்சித்துப்பேசி, அவனுடைய(௨)ஆபத்ஸகத்வமாகிற மஹாகுணத்துக்கு ப்ரகாசகமான அந்த திவ்யசேஷ்டிதத்தினுடைய ரஸத்தையநுபவித்து இனியராகிறார் - இத்திருமொழியில்.

மூ.—அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும் தயிர்வாவியுநெய்யளறுமடங்கப், பொட்டத்துற்றுமாரிப்பகைபுணர்த்த பொருமாகடல்வண்ணன் பொறுத்தமலை, வட்டத்தடங்கண்மடமான் கன்றினை வலைவாய்ப்பற்றிக்கொண்டுகுறமகளிர், கொட்டை

---

(க)பின்னாட்டி - பின்னை தள்ளி. (௨) ஆபத்ஸகத்வம் - ஆபத்துவந்தபோது வுதவுகை.

த்தலைப்பால் கொடுத்துவளர்க்கும் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.

ப-ரை.—அட்டு - சமைத்து, குவி - குவித்த, சோற்றுப்பருப்பதமும் - சோறாகியபர்வதமும், தயிர்வாவியும் - அச்சோற்றுமலையின்மேலே தொட்டியாகக் கட்டிநிறைத்த தயிரோடையும், நெய்யளறும்-அதுக்குள்ளும்சுற்றெங்கும்நிறையவிடுகையாலே செறிந்துகிடக்கிற நெய்ச்சேறுமாகிய, அடங்க - இவற்றையடைய, பொட்டத்துற்று - சடக்கெனவமுதுசெய்து, மாரி-மழையாகிற, பகை-பகையை, புணர்த்த - உண்டாக்கினவனுய், பொரு-திரைபொருகிற, மாகடல் - கருங்கடல்போன்ற, வண்ணன் - திருநிறத்தையுடையவன், பொறுத்த - தரித்துக்கொண்டுநின்ற, மலை - மலையாவது; வட்டம் - விர்த்தமாய், தடம் - பெருத்திருந்துள்ள, கண் - கண்களையும், மடம் - தாய்க்குவசப்பட்டொழுகும் மடப்பத்தையுமுடைய, மான்கன்றினை-மான்கன்றை, அம்மலையில்வாழும் குறவரானவர்கள், வலைவாய் - வலையிலே, பற்றிக்கொண்டு - பிடித்துக்கொண்டுபோய்க்கொடுக்க, குறமகளிர் - குறப்பெண்களானவர்கள், கொட்டை - பஞ்சுச்சுருளின், தலை - தலையை, பால்கொடுத்து - தாய்முலைபோலேயுண்ணக்கொடுத்து, வளர்க்கும் - வளர்க்கநிற்பதாய், கோவர்த்தநமென்னும் - பசுக்களைப்பெருக்கிக்கொண்டு போருகையாலே கோவர்த்தநமென்னும்பேரையுடைத்தாய், கொற்றம் - அவற்றைநலிவதாகவந்த மழையைஜயித்து, குடை-ஒருவர்மேல் ஒருதுளி விழாதபடிகவிந்துநிற்கும் மலையாம்.

வ்யா.—முதற்பாட்டு. (அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும்) ஆக்கிக்குவித்த சோற்றுபர்வதமும். கோபஜநங்கள், வர்ஷார்த்தமாக இந்த்ரனைஆராதித்து, அவன்ப்ரீதனுய்வர்ஷிப்பிக்க, அத்தாலே பசுக்களுக்குப்புல்லும் தண்ணீருமுண்டாய், அத்தாலே பாலும் நெய்யும்மிகுந்து ஜாத்யுசிதமான ஸம்பத்தோடே வர்த்திக்கக்கடவராயிறே யிருப்பது. ஆகையாலிறே, “எழில்விழவில்பழநடைசெய் மந்திரவிதியிற் பூசனை” என்று இத்தை பழையதாகநடந்துபோரும் அநுஷ்டாநமாகச்சொல்லுகிறது. இப்படியாகையாலே, இந்த்ராராதநை பண்ணுகைக்காக, திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷங்குடியிலும் (க)வாசல்கள்தோறும் வரிவைத்துச்சமைத்து, “துன்னுசகடத்தாற் புக்கபெருஞ்சோறு” என்கிறபடியே சகடுகளிலேவைத்திழுத்துக்கொண்டுவந்தசோறெல்லாம்சேர,பெருந்திருப்பாவாடைபோலே குவிக்கையாலே பர்வதம்போலே உயர்ந்திருக்குமிறே; அத்தைப்பற்ற “அட்டுக்குவிசோற்றுப்பருப்பதம்” என்கிறது. பருப்பதமென்றது - பர்வதமென்றபடி. (தயிர்வாவியும்) தயிரோடையும். (நெய்யளறும்) நெய்ச்சேறும். அச்சோற்றுமலையின் மேலே தொட்டிபாகக்கட்டி தயிரை நிறையவிடுகையாலே, அத்தை அந்தமலைக்குண்டானவோடையாக நிரூபித்துச்சொல்லுகிறது. நெய்யையும் அப்படியே தொட்டிகளாசப்பிடித்து அதுக்குள்ளும் சுற்

(க) வாசல்கள்தோறும் - வீடுகள்தோறும்.

றெங்கும் நிறையவிடுகையாலே செறிந்துகிடக்கும்படியைப்பற்ற "அளறு" என்கிறது. இவையிரண்டையும்சொன்னது-மற்றுமுண்டான பால் பழங்கள் கறிகள்முதலானவற்றுக்கும் உபலக்ஷணம். (அடங்க) இவையடைய. (பொட்டத்துற்று) போரத்துற்று. சடக்கெனவமுதுசெய்து. தேவதாந்தரத்தை உத்தேசித்துச்சமைத்தவிது (௧) ததந்தர்யாமியாய்நின்றும் ஜீவிக்கவும்வல்ல தனக்கொழிய, "தனக்கு அநந்யார்ஹராயிருப்பார்க்காகாது" என்றுய்த்துஅடங்கத்தானே யமுதுசெய்தது. "நாங்கள்முன்புசெய்துபோந்தமர்யாதை செய்யவேணும், என்று மறுமநஸ்ஸுப்பட்டு இன்னமும் இவர்கள் விலக்கவும்கூடும்" என்றுய்த்துச் சடக்கெனவமுதுசெய்தது. (மாரிப்பகைபுணர்த்த) வர்ஷமாகிற பகையையுண்டாக்கின. அதாவது-இந்த்ரனுக்கென்று சமைத்தசோற்றை அவனுக்கு இடாதபடி விலக்கி, மலைக்கு இடச்சொல்லி, "[illegible]" "[illegible]" என்று தான் அடையஜீவித்துவிடுகையாலேயிறே அவன் பசிக்கோபத்தாலே புஷ்கலாவர்த்தகாதி மேகங்களையேவி வர்ஷிப்பிக்கவேண்டிற்று; ஆகையாலே வர்ஷமாகிறபகையையுண்டாக்கினன் இவன்றானேயென்கிறது. (பொருமாகடல்வண்ணன்) திரைபொருகிற கருங்கடல்போன்ற திருநிறத்தையுடையவன். தான்பிறந்தவூரிலுள்ளவர்களுக்கு அந்யசேஷத்வத்தை அறுக்கையாலுண்டான (௨) ஹர்ஷோத்ரேகத்தையும் திருமேனியின்புகரையும் சொல்லுகிறது. (பொறுத்தமலை) தரித்துக்கொண்டுநின்றமலை. ஏழுநாள் ஒருபடிப்படச்சுமந்துகொண்டிறேநின்றது. (வட்டத்தடங்கண்மடமான்கன்றினை) (௩) வட்டணித்துப்பெருத்தகண்களையும், தாயினுடைய வசத்திலேயொழுகும் (௪) பவ்யதையையுமுடைத்தான மான்கன்றை. (வலைவாய்பற்றிக்கொண்டு) வலையிடத்தேபிடித்துக்கொண்டு. அம்மலைமேல்வர்த்திக்கிறகுறவர், மான்கன்றுகளை (௫) சூழ்வலைக்குள்ளாக்கிப் பிடித்துக்கொண்டுபோய், தங்களிடங்களிலே குறப்பெண்கள்கையிலே காட்டிக்கொடுப்பர்களாய்த்து. (குறமகளிர்கொட்டைத் தலைப்பால்கொடுத்து வளர்க்கும்) அந்தக்குறப்பெண்களானவர்கள் பஞ்சுச்சுருளைப் பாலிலேதோய்த்து, அதினுடையதலையை தாய்முலைபோலே உண்ணக்கொடுத்து வளர்ப்பாகளாய்த்து. கொட்டை-பஞ்சுச்சுருள். (கோவர்த்தநமித்யாதி) புல்லும்தண்ணீரும் எப்போதுமுண்டாய், பசுக்களை (௬) வர்த்திப்பித்துக்கொண்டு போருகையாலே "[illegible]" "[illegible]" என்கிற பேரையுடைத்

---

(௧) ததந்தர்யாமியாய்-அதுக்குள்ளே நின்றவனாய். (௨) ஹர்ஷோத்ரேகம்-களிப்பின்மிகுதி. (௩) வட்டணித்து - வ்ருத்தமாய். (௪) பவ்யதை - கீழ்ப்படிகை. (௫) சூழ்வலை - தப்பாமல்அகப்படுத்தும்வலை. (௬) வர்த்திப்பித்தல் - பெருகப்பண்ணுதல்.

தாய், நலியவந்தவர்ஷத்தைஜயித்து ஒருவர்மேல்ஒருதுளிவிழாதபடி கவிந்துநிற்கையாலே "கோவர்த்தநமென்னும் கொற்றக்குடை" என்கிறது. (க)

மூ.—வழுவொன்றுமில்லாச்செய்கை வானவர்கோன் வலிப்பட்டு
முனிந்துவிடுக்கப்பட்ட, மழைவந்தெழுநாள்பெய்துமாத்த
டைப்பமதுசூதனெடுத்துமறித்தமலை, இழவுதரியாததோரீற்
றுப் பிடியிளஞ்சீயந்தொடர்ந்துமுடுகுதலும், குழவியிடைக்
காலிட்டெதிர்ந்துபொருங் கோவர்த்தநமென்னுங்கொற்றக்
குடையே.

ப-ரை.—இந்த்ரபட்டம் பெறுதற்காகச்செய்தஸாதநத்தில், ஒன்றும் - ஏக தேசமும், வழுவில்லா - நழுவுதலில்லாத, செய்கை - செய்கைகளையுடையனாய், வானவர் - ஆதித்தர்பன்னிருவரும் அச்விநீதேவதைகளிருவரும் உருத்திரர்பதினொருவரும் வஸுக்களானஎண்மருமாகிய முப்பத்துமுக்கோடிதேவர்களுக்கு, கோன்-தலைவனானஇந்த்ரனுடைய, வலிப்பட்டு-வசப்பட்டிருப்பனாவய், முனிந்து - தனது ஆயிரங்கண்களும் சிவக்கும்படிகோபித்து, விடுக்கப்பட்ட - ஏவப்பட்ட, மழை - மேகங்களானவை, வந்து —, எழுநாள் - ஏழுநாள், பெய்து - கல்வர்ஷமாகவர்ஷித்து, மாத்தடைப்ப - பசுக்களும் இடையரும் புறம்புபோகாதபடி தகைவைப்பண்ண, மதுசூதன் - மதுவை நிரஸித்த க்ர்ஷ்ணனானவன், எடுத்து —, மறித்த - தலைகீழாகப்பிடித்த, மலை - மலையாவது, இழவு - குழவியின் இழவை, தரியாதது - ஸஹிக்கமாட்டாததாகிய, ஓர் - ஒரு, ஈற்று - ஈன்ற, பிடி - பெண்யானையானது, இளம்சீயம் - சிங்கக்குட்டியானது, தொடர்ந்து - தன் குட்டியை நலிவதாகப்பின்றொடர்ந்து, முடுகுதலும் - கிட்டினவளவிலே, குழவி - தன்கன்றை, காலிடை - நாலுகாலுக்குமநடுவே, இட்டு - இட்டுக்கொண்டு, எதிர்ந்து - அந்தஸிம்ஹக்கன்றோடேயெதிர்த்து, பொரும் - போர்செய்யாநிற்கிற, கோவர்த்தநமென்னும்கொற்றக்குடையாம் —.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வழுவித்யாதி) (க) இந்த்ரபத ப்ராப்திக்குறுப்பானஸாதநத்தில் ஒன்றும் நழுவுதலில்லாதபடிசெய்து, அத்தாலே (உ) த்ரயஸ்த்ரிம்சத்கோடி தேவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரனுடையவசியிலே அகப்பட்டு. இத்தால்—மேகங்களுக்கு அவன்சொன்னதுசெய்தேநிற்க வேண்டும்படியான (ங) பாராதீநத்வம்சொல்லுகிறது. (முனிந்துவிடுக்கப்பட்ட) அவன்பலத்திலே யகப்பட்டுநிற்கிறவளவன்றிக்கே * பழநடைசெய் மந்திரவிதியில் பூசனைபெறுமையாலே தாமரைக்காடு வெடித்தாற்போலே ஆயிரங் கண்ணும்சிவக்கும்படி கோபித்து ஏவப்பட்ட. (மழைவந்து) புஷ்கலாவர்த்தகாதி மேகங்களானவைவந்து. (எழுநாள்பெய்து மாத் தடைப்ப) ஒருநாளிரண்டுநாளன்றிக்கே, ஏழுநாளொருபடிப்படக்

(க) இந்த்ரபதம் - இந்த்ரபட்டம். (உ) த்ரயஸ்த்ரிம்சத்கோடி - முப்பத்து மூன்றுகோடி. (ங) பாராதீநத்வம் - பிறர்வசப்பட்டிருக்கை.

கல்வர்ஷமாகவர்ஷித்து, பசுக்களுக்கும் இடையரிடைச்சிகளுக்கும் புறம்புபோக்கறும்படி தகைவைப்பண்ண. (மதுசூதனெடுத்துமறித்தமலை) விரோதிநிரஸநசீலனானவன் எடுத்து, பசுக்கள் எட்டிமேய்ந்துநிற்கலாம்படி தலைகீழாகமறித்தமலை. (இழவுதரியாததோரீற்றுப்பிடி) குழவியிழவுதரிக்கமாட்டாததொரு ஈன்றபெண்ணானையானது. (இளஞ்சீயம் தொடர்ந்துமுடுகுதலும்) வயஸ்ஸாலிளைய ஸிம்ஹமானது இத்தை நலிவதாகத்தொடர்த்துவந்து முடுகினவளவிலே. (குழவியிடைக்காலிட்டெதிர்ந்துபொரும்) தன்கன்றைத்தன்னுடைய நாலுகாலுக்கும்நடுவே யிட்டுக்கொண்டு, அந்த ஸிம்ஹக்கன்றோடே எதிர்ந்துபொராநிற்கிற.(கோவர்த்தநமென்னும்கொற்றக்குடையே.)

மூ.—அம்மைத்தடங்கண்மடவாய்ச்சியரு மானாயருமாநிரையுமலறி, எம்மைச்சரணென்று கொள்ளென்றிரப்ப விலங்காழிக்
கையெந்தையெடுத்தமலை, தம்மைச்சரணென்ற தம்பாவையரைப் புனமேய்கின்றமானினங்காண்மினென்று, கொம்மைப்
புயக்குன்றர்சிலைகுனிக்குங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்
குடையே.

ப-ரை.—அம் - அழகிதாய், மை - அஞ்சநத்தாலே அலங்க்ர்தமாய், தடம்- பெருத்திருந்துள்ள, கண் - கண்களையும், மடம் - மடப்பத்தையுமுடையரான, ஆய்ச்சியரும் - இடைச்சிகளும், ஆன் - பசுக்களைரக்ஷிக்கையே தொழிலாகவுடைய, ஆயரும் - இடையரும், ஆநிரையும் - அவர்களாற்காக்கப்படுமவையான பசுநிரையும், அலறி - மழையால்வரும்துன்பத்தால் வருத்தமுற்றுக்கூப்பிட்டு, எம்மை - எங்களை, சரணென்று - ரக்ஷிக்கக்கடவோமென்று, கொள்ளென்று - திருவுள்ளம்பற்றவேணுமென்று, இரப்ப - ப்ரார்த்திக்க, இலங்கு - *கருதுமிடம்பொரவல்லதேஜஸ்ஸையுடைய, ஆழி - திருவாழியை, கை-திருக்கையிலேயுடையனான, எந்தை - என்ஸ்வாமியானவன், எடுத்த - இவற்றைரக்ஷிக்கைக்காகவெடுத்த, மலை - மலையாவது; தம்மை - தங்களை, சரண்என்ற - ரக்ஷகனென்று பற்றியிருக்கிற, தம் - தங்களுடைய, பாவையரை-பெண்களை, புனத்திலேஸஞ்சரிக்கிறவர்களுடைய கண்களைக்கண்டு, புனம்-நம்புனத்தையழித்து, மேய்கின்ற-மேய்கிற, மான் - மான்களையுடைய, இனம் - ஸமூஹத்தை, காண்மின் - பாருங்கோள், என்று - என்றுஒருவர்க்கொருவர்காட்டி, சொம்மை - குவிவாகிய, புயம் - தோளையுடையராய், குன்றர் - பர்வதவாசிகளான குறவர், சிலை - விற்களை, குனிக்கும் - அவர்கள்மேலே சரத்தைவிடுவதாக வளையாநின்றுள்ள, கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையாம்—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (அம்மைத்தடமித்யாதி) வெறும்புறத்திலேஅழகியதாய், அதுக்குமேலே அஞ்சநத்தாலே அலங்க்ர்தமாய்ப்பெருத்திருந்துள்ள கண்களையும் ஸ்வாபாவிகமான மடப்பத்தையுமுடையரான' இடைச்சிகளும். (ஆனாயரும்) (க) கோரக்ஷணபரரான இடையரும். (ஆநிரையும்) அவர்களுக்கு ரக்ஷ்யமானபசுநிரை

(க) கோரக்ஷணபரர் - பசுக்களைக் காப்பாற்றுதலில் விருப்பமுள்ளவர்கள்.

யும். (அலறி) "ஸ்ரீஸ்ரீஜநஸஜ்ஜ-ஸ்ஸ்ரீவாரக்ஷ" "மொமொவீஜநவஜ்ஜ-உமூஷீவாரூ்" என்கிறபடியே (க) வர்ஷவேகத்தாலே க்லேசித்துக் கூப்பிட்டு. (எம்மைச்சரணென்றுகொள்ளென்றிரப்ப) எங்களை "ரக்ஷிக்கக்கடவோம்" என்று நீயேரக்ஷகனுயென்றுகொள்ளவேணு மென்றுப்ரார்த்திக்க. (இலங்காழிக்கை யெந்தையெடுத்தமலை) * கருதுமிடம்பொரவல்லதேஜஸ்ஸையுடைய திருவாழியைத் திருக்கையிலேயுடையனுன வென்ஸ்வாமியானவன் இவற்றைரக்ஷிக்கைக்காக வெடுத்தமலை. இப்போது, திருவாழியைத் திருக்கையிலே யுடையனுனமைசொன்னது - இந்த்ரனைத் தலையறுத்துப்பொகடவல்ல (உ) பரிகரமுண்டாயிருக்க, "உண்பதுகொண்டநாம் உயிரையும் கொள்ளவொண்ணுது, அநுகூலனுக்குவந்த கலக்கமாகையாலே தானே தெளிந்துவிடுகிருன்" என்று தன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்துக்கு நலிவுவாராமல் மலையையெடுத்துக்கொண்டு நின்றநீர்மையைச்சொல்லுகைக்காக. (தம்மைச்சரணென்றதம்பாவையரை) தங்களை "ரக்ஷகர்" என்று பற்றியிருக்கிற தங்கள்பெண்களை. (புனமேய்கின்றமானினங்காண்மினென்று) புனத்திலே (௩)வ்யாபரிக்கிறவர்கள்கண்களைக்காணு, "நம்புனத்தையழித்துமேய்கிற மானினம் பாரிகோள்" என்று ஒருவர்க்கொருவர்காட்டி. (கொம்மைப்புயக்குன்றர்சிலைகுனிக்கும்) அவர்கள்மேலே (௪) சரத்தைவிடுவதாக, பெரியதோளையுடையரானகுன்றுவர் விற்களை வளையாநின்றுள்ள. (கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே.) (௩)

மூ.—கடுவாய்ச்சினவெங்கட்களிற்றினுக்குக் கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல், அடிவாயுறக்கையிட் டெழப்பறித்திட்டமரர்பெருமான் கொண்டுநின்றமலை, கடல்வாய்ச்சென்று மேகங்கவிழ்ந்திறங்கிக்கதுவாய்ப்படநீர்முகந்தேறியெங்கும், குடவாய்படநின்று மழைபொழியுங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.

ப-ரை.— கடு - கொடிய, வாய் - வாயையும், கடுஞ்சினம்-மிக்ககோபத்தையும், வெம் - வெவ்விய, கண் - கண்களையுமுடைய, களிற்றினுக்கு - யானைக்கு, கவளம் - சோற்றுத்திரளையை, எடுத்து - திரட்டியெடுத்து, கொடுப்பானவன் போல் - கொடுக்கிறபாகனைப்போல, அடிவாய் - மலையின்வேர்ப்பற்றிலே, உற- உறும்படியாக, கை-திருக்கையை,இட்டு-கீழேசெலுத்தி, மற்றத்திருக்கையாலே மேலேபிடித்து, எழப்பறித்திட்டு - கிளரப்பிடுங்கி, அமரர்பெருமான் - * அயர்வறுமமரர்களதிபதியானவன், கொண்டுநின்ற-வல்லமையில்லாதாரைப்போலே தானேதரித்துக்கொண்டுநின்ற, மலை-மலையாவது ; மேகம் - மேகங்களானவை, கடல்வாய் - ஸமுத்ரத்திலே, சென்று - போய், இறங்கி - அதன்கரையிலே

(க) வர்ஷவேகத்தாலே - மழையின்கொடுமையால். (உ)பரிகரம் - கருவி. (௩) வ்யாபரிக்கிற - ஸஞ்சரிக்கிற. (௪) சரம் - அம்பு.

யிறங்கி, கவிழ்ந்து - கவிழ்ந்துகிடந்து, கதுவாய்ப்பட - கடல்வெறுந்தரையாம்படி, நீர் - அங்குள்ளஜலத்தையெல்லாம், முகந்து - மொண்டுகொண்டு, ஏறி - ஆகாசத்திலேயேறி, எங்கும்-எல்லாவிடங்களிலும், குடவாய்பட-குடத்திட்டுச் சொரிந்தாற்போலே, நின்று - ஏழுநாள் ஒருபடிப்படநின்று, மழை - மழையை, பொழியும் - சொரியாநின்றுள்ள, கோவர்த்தநமென்னும் கொற்றகுடையாம்—.

வ்யா.—நாலாம்பாட்டு. (கடுவாய்ச்சினவெங்கண் களிற்றினுக்கு) கொடியவாயையும் கோபத்தையும் வெவ்வியகண்ணையுமுடைய யானைக்கு. (கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல்) கவளத்தைத் திரட்டியெடுத்துக் கொடுக்கிறபாகனானவனைப்போலே. இத்தால் - மேகத்தை ஆனையினுடையஸ்தாநேயாகவும், மலையைக்கவளத்தினுடையஸ்தாநேயாகவும், அது எடுத்துப்பிடிக்கிற க்ர்ஷ்ணனைக் கவளமெடுத்துக்கொடுக்கிற பாகனுடைய ஸ்தாநேயாகவும் ரூபித்துக் கொண்டருளிச்செய்கிறார். மேகத்தையானையென்கிறது - ஆனையோடு அதுக்குஸாம்யமுண்டாகையாலே; "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" என்னக்கடவதிறே. "கடுவாய்ச்சினவெங்கண் களிறு" என்கையாலே - இங்கும் மத்தகஜமென்று தோற்றுநின்றதிறே. எங்ஙனேயென்னில்; கடுவாயென்று - க்ரூரமாயிருந்துள்ள பிளிறுதலாகிற சப்தத்தையும் க்ரோதத்தையும், வெங்கணென்று - நெருப்புப்பறந்தகண்களையும் சொல்லுகையாலே இத்தனையும் மேகத்துக்குமுண்டிறே. கேட்டவர்களுக்கு பயங்கரமாம்படியான முழக்கமும், அடர்த்துக்கொண்டு (க) வர்ஷிக்கநிற்கிற (உ) ஆக்ரஹமும், "திவளைத்துமின்னிலகும்" என்கிறபடியே (ந) கொள்ளிவட்டம் போலேயிருக்கிற மின்னினுடையசுழிப்பையுமுடைத்தாய், இருட்சியாலும் திரட்சியாலும் உயர்த்தியாலும் கண்டவர்களுக்கு (ச) "மத்தகஜம்" என்றே சொல்லலாம்படியிருக்கையாலே.

(அடிவாயுறக்கையிட்டெழப்பறித்திட்டு) மலையினுடைய வேர்ப்பற்றிலே உறும்படியாகத் திருக்கையைக் கீழேசெலுத்தி, மற்றத் திருக்கையாலே மேலேபிடித்துக் கிளரப்பிடுங்கி. (அமரர்பெருமான்கொண்டுநின்றமலை) * அயர்வறுமமரர்களதிபதி (ரு) இயற்றியில்லாதாரைப்போலே தானேதரித்துக்கொண்டுநின்றமலை. (கடல்வாய்ச்சென்றுமேகம்கவிழ்ந்திறங்கி) கடலிடத்தேசென்று மேகங்கள் இறங்கிக் கவிழ்ந்துகிடந்து. (கதுவாய்ப்படநீர்முகந்தேறி) கதுவாய்ப்படவென்றது - வடுப்படவென்றபடி. வடுப்படுகையாவது - குறைபடுகை. இத்தால் - கடல்குறைபடும்படியாக அங்குள்ளநீர்களெல்லாவற்றையும் முகந்துகொண்டு ஆகாசத்திலேயேறியென்கை.

---

(க) வர்ஷிக்கநிற்கிற - மழைபெய்யவிருக்கிற. (உ) ஆக்ரஹம் - அஹங்காரம். (ந) கொள்ளிவட்டம் - வ்ர்த்தமானகொள்ளி. (ச) மத்தகஜம் - மதித்தயானை. (ரு) இயற்றியில்லாதாரைப்போலே - வல்லமையில்லாதாரைப்போலே.

அன்றிக்கே, கதுவுதல் - கவ்வுதலாய், (க) அபிநிவேசயுக்தமானவாயையுடைத்தாய்க்கொண்டு "பெரும்பௌவம்மண்டியுண்ட" என்கிறபடியே கடல்வெறுந்தறையாம்படி அங்குள்ளநீரை முகந்துகொண்டு ஏறியென்னவுமாம். (எங்கும் குடவாய்படநின்று மழைபொழியும்) (உ) ஸார்வத்ரிகமாய்க்கொண்டு குடத்திட்டுச் சொரிந்தாற்போலே ஏழுநாள் ஒருபடிப்படநின்று வர்ஷத்தைச்சொரிகிற. (கோவர்த்தநமென்னும்கொற்றக்குடையே.) (௪)

ரூ.—வானத்திலுள்ளீர்வலியீருள்ளீரே லறையோவந்துவாங்குமினென்பவன்போல், ஏனத்துருவாகிய வீசனெந்தையிடவனெழ வாங்கியெடுத்தமலை, கானக்களியானை தன்கொம்பிழந்து கதுவாய்மதஞ்சோரத் தன்கையெடுத்துக், கூனற்பிறைவேண்டி யண்ணாந்துநிற்கும் கோவர்த்தந மென்னும் கொற்றக்குடையே.

ப - ரை—.வானத்திலுள்ளீர் - மேலுலகங்களில் வஸிக்கையாலே மனிதரிற்காட்டில் அறிவிலும் வல்லமையிலும் உங்களைமேலாகநினைத்திருப்பவர்களே, வலியீருள்ளீரேல் - நினைத்தது செய்துமுடிக்கத்தக்க வல்லமையுள்ளவர்களாயிருந்தீர்களாகில், அறை - வெற்றிக்குறிப்பான நாவல்கூறி, வந்து - இவ்விடம் வந்து, வாங்குமின் - இம்மலையையெடுத்துக்காணுங்கோள், என்பவன்போல் - என்றுசொல்வாரைப்போலே, பூமியிடிவிழுந்து கீழிலண்டபித்தியோடேசேர்ந்துகிடக்க, ஏனத்துருவாகிய - நீருக்கும் சேற்றுக்கும் இருயாதவராஹவேஷத்தையுடையனாய்க்கொண்டு பூமியை அண்டச்சுவரினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்தவனாய், ஈசன் - தன்னையொழிந்த வெல்லாப்பொருள்களும் தானிட்டவழக்காம்படி நடத்தவல்லனுமாய், எந்தை - ஸர்வகாரணபூதனானவன், இடவன் - ஒருமண்கட்டிபோலே, எழ - வேர்ப்பற்றோடேகிளரும்படி, வாங்கி—, எடுத்த- எடுத்துக்கொண்டுநின்ற, மலை - மலையாவது; கானம் - காட்டிலே, களி - மதித்துத்திரிகிற, யானை - ஆனையானது, தன் - தன்னுடைய, கொம்பு - கொம்பை, இழந்து-கரைபொருதுதிரிகையில் ஓரிடத்தில்குத்துண்டு முறிகையாலேயிழந்து, கதுவாய் - கொம்புமுறிந்துபுண்பட்டவாயிலே, மதம் - மதஜலமானது, சோர- ஒழுகாநிற்க, தன்-தன்னுடைய, கை-துதிக்கையை, எடுத்து—, கூனல்-வளைந்த, பிறை - மூன்றாம்பிறையை, தானிழந்தகொம்பாகநினைத்து, வேண்டி - அத்தை விரும்பி, அண்ணாந்துநிற்கும் - மேலேபார்த்தவண்ணமாக நில்லாநிற்கிற, கோவர்த்தநமென்னும் - பசுக்களைகாக்கையால்வந்த கோவர்த்தநமென்னும் பேரையுடையதாய், கொற்றம் - இந்த்ரன்பெய்வித்த மழையைத்தடுக்கையால் வந்த வெற்றியையுடைய, குடை - குடையாம்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (வானத்தித்யாதி) (௩)உபரிதநலோகங்களிலேவர்த்திக்கையாலே மநுஷ்யரிற்காட்டில் (௪) அதிசயித்தஜ்ஞாநசக்திகராகத்தந்தாமை அபிமாநித்துக்கொண்டிருக்கிறவர்

(க) அபிநிவேசயுக்தமான - விருப்பத்தோடேகூடின. (உ) ஸார்வத்ரிகமாய்க்கொண்டு - எல்லாவிடங்களிலும். (௩) உபரிதநலோகங்கள்-மேலுலகங்கள். (௪) அதிசயித்த - அதிகமான.

களே, நினைத்ததுசெய்துமுடிக்கவல்ல (௧) சக்திமான்களாயிருப்பாருள்ளிகோளாகில். (அறையோவந்துவாங்குமினென்பவன்போல்) "அறையோவறை இம்மலையைவந்து (௨) வாங்கிக்காணுங்கோள்" என்பாரைப்போலே. *[illegible]யானபூமி யிடிவிழுந்து கீழ் லண்டபித்தியோடேசேர்ந்துகிடக்க, நீருக்குஞ்சேற்றுக்குமிருயாத வராஹ வேஷங்கொண்டு "ஊன்றியிடந்து எயிற்றிற்கொண்ட" என்கிறபடியே மறுபாடுருவக்குத்தி அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்து ஆகாசத்திலேயேறிட்டுத் திருவெயிற்றிலேதரித்த சக்திமானாய், தன்னையொழிந்த ஸமஸ்தபதார்த்தங்களும் தானிட்டவழக்காம்படி நடத்தவல்லஸர்வநியந்தாவாய், அவற்றினுடையஸத்தை ஸ்வாதீநமாம்படியிருக்கும் ஸர்வகாரணபூதனானவன்.

(இடவனெழவாங்கியெடுத்தமலை) வேர்ப்பற்றோடே ஒருகட்டிபோலே கிளரும்படிவாங்கி யெடுத்துக்கொண்டு நின்றமலை. இடவனெழப்பறித்தென்னுதல், பேர்த்தென்னுதல்செய்யாதே, வாங்கியென்கையாலே-(௩) அநாயாஸேந எடுத்தமைசொல்லுகிறது. பர்வதங்களோடேகூட (௪) பாதாளகதையானபூமியைத் திருவெயிற்றாலே குத்தி ஒட்டுவிடுவித்தெடுத்த சக்திமானானவனுக்கு, ஒருகட்டியையிடந்தெடுத்தாற்போலே அம்மலையை யிடந்தெடுக்கையில்ஓரருமையில்லையிறே. (கானக்களியானைதன்கொம்பிழந்து) காட்டிலே மதித்துத்திரிகிறவானையானது களைபொருதுதிரிகையாலே ஓரிடத்திலே குத்தினவளவிலே தன்கொம்புமுறிய, அத்தாலே தன்கொம்பையிழந்து. (கதுவாய்மதஞ்சோர) கதுவுதல் - விடப்படுதலாய், கொம்புமுறிந்து புண்பட்டவாயிலே மதஜலமொழுக. (தன்கையித்யாதி) தன்னாற்றாமையாலே கையையெடுத்து வளைந்தபிறையை, தானிழந்தகொம்பாக (௫) ப்ரமித்து அத்தையபேக்ஷித்து மேலே பார்த்துக்கொண்டுநில்லாநிற்கும். (கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே.)

மூ.—செப்பாடுடையதிருமாலவன்றன் செந்தாமரைக்கைவிரலைந்தினையும், கப்பாகமடுத்து மணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக் கவித்தமலை, எப்பாடும்பரந்திழிதெள்ளருவியிலங்குமணி முத்துவடம்பிறழக், குப்பாயமெனநின்றுகாட்சிதருங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.

ப-ரை.—செப்பாடுடைய-பெரியபிராட்டியார் ஆச்ரிதரைக்குற்றம் சொல்லி விலக்கினாலும் அவர்கள்குற்றத்தை நற்றமாகக்கொள்ளும் செவ்வைப்பாட்டையுடைய, திருமால் - ஸ்ரீயப்பதியாய், அவன் - அப்படிப்பட்டகுணத்தை யுடைய

(௧) சக்திமான்கள் - வல்லமையுள்ளவர்கள். (௨) வாங்கி - கையில்வாங்கி. (௩) அநாயாஸேந - வருத்தமில்லாமல். (௪) பாதாளகதையான - பாதாளத்தை யடைந்த. (௫) ப்ரமித்து - மதிமருண்டு.

ஞனவன், தன் - தன்னுடைய, செம் - சிவந்த, தாமரை - தாமரைப்பூப்போலே யிருக்கிற, கை - திருக்கையின், விரலைந்தினையும் - விரல்களைந்தையும், கப்பாக - மலையாகிறகுடைக்குக் காம்படியிலுண்டான கப்பாகக்கொண்டு, மடுத்து-செறித்து, மணி - நீல ரத்நம்போன்ற நிறத்தையுடைத்தாய், நெடு - நெடியதாயிருக்கிற, தோள் - திருத்தோளை, காம்பாக - அதுக்குக்காம்பாக, கொடுத்து—, கவித்த - தலைகீழாகக்கவித்த, மலை - மலையாவது; எப்பாடும் - அவனைச்சூழ எல்லாப்பக்கங்களிலும், பரந்துஇழி - பரவித்தங்குகிற, தெள் - தெளிந்த, அருவி - சுனைநீரருவிகளானவை, இலங்கு - விளங்காநின்றுள்ள, மணி - அழகிய, முத்துவடம் - முக்தாஹாரம்போலே, பிறழ - தனித்தனியே ப்ரகாசிக்க, குப்பாயமென - அதுதான் அவனுக்கு ஓர்முத்துச்சட்டையென்று தோற்றும்படியாக, நின்று—, காட்சிதரும் - காட்சிகொடாநிற்கிற, கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையாம்.

வ்ரா.—ஆறாம்பாட்டு. — (செப்பாடுடையதிருமால்) செப்பாடாவது - செவ்வை. அதாவது - (க) ஆர்ஜவகுணம். "திருமால்" என்கையாலே, இவ்விடத்தில் அந்த ஆர்ஜவமாவது - * (உ) சிதகுரைத்தாலும் நன்றுசெய்தாரென்கை. அன்றிக்கே, இந்த்ரனுக்கிட்ட சோற்றைவிலக்கி மலைக்கிடுவித்து வர்ஷாபத்தைவிளைத்து "இவை பட்டதுபடுக" என்றிருக்கையன்றிக்கே, முன்பு "ரக்ஷகம்" என்று சொன்னமலைதன்னையேயெடுத்து ரக்ஷித்த செவ்வைப்பாட்டைச் சொல்லுகிறது. இப்படி ரக்ஷிக்கைக்கடி அவளோட்டை ஸம்பந்தமாகையாலே "திருமால்" என்கிறது, என்று இங்ஙனே யோஜிக்கவுமாம். (அவன்) அப்படிப்பட்டகுணத்தையுடையவன். (தன்செந்தாமரைக்கைவிரலைந்தினையும் கப்பாகமடுத்து) தன்னுடைய சிவந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கையில்விரல்களைந்தையும் மலையாகிறகுடைக்குக் காம்படியிலுண்டான கப்பாகக்கொண்டு செறித்து.

(மணிநெடுந்தோள்காம்பாகக்கொடுத்துக்கவித்தமலை) நீலரத்நம் போன்ற நிறத்தையுடைத்தாய் நெடியதாயிருக்கிற திருத்தோளை அதுக்குக் காம்பாகக்கொடுத்து, பஞ்சலக்ஷம் குடியிலுள்ளார்க்கும் பசுக்களுக்கும் மழையால் நலிவுவாராதபடியாகவும், பசுக்களுக்குச் (ங) சுவடுபடாத புல்லும்தண்ணீரு முண்டாம்படியாகவும் தலைகீழாகக்கவித்தமலை. (எப்பாடும்பரந்திழிதெள்ளருவி) "சுனைவாய்நிறைநீர் பிளிறிச்சொரிய" என்கிறபடியே அவனைச்சூழ எல்லாபார்ச்வத்திலும் இடைவிடாமல்தங்குகிற தெளிர்தசுனைநீரருவிகளானவை. (இலங்குமணிமுத்துவடம்பிறழ) விளங்காநின்ற அழகியமுத்துவடம் போலே தனித்தனியே ப்ரகாசிக்க. (குப்பாயமெனநின்றுகாட்சிதரும்) "அதுதான் அவனுக்கொருமுத்துச்சட்டை" என்று தோற்றும்

(க) ஆர்ஜவம் - நேர்மை. (உ) சிதகுரைத்தாலும் - பெரியபிராட்டியார் குற்றம் சொன்னாலும். (ங) சுவடுபடாத - மாடுசத்தமிடாத.

படியாகநின்றுகாட்சிகொடாநிற்கும். (கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே.) (௬)

மூ.—படங்கள்பலவுமுடைப்பாம்பணையன் படர்பூமியைத்தாங்கிக் கிடப்பவன்போல், தடங்கைவிரலைந்து மலரவைத்துத் தாமோதரன்றாங்குதடவரைதான், அடங்கச்சென்றிலங்கையை யீடழித்தவநுமன்புகழ்பாடித்தங்குட்டன்களைக், குடங்கைக்கொண்டு மந்திகள்கண்வளர்த்துங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.

ப-ரை.—பலபடங்களுடை - பலபணங்களையுடைய, பாம்பணையன் - நாகராஜனானவன், படர் - பரப்பையுடைத்தான, பூமியை—, தாங்கிக்கிடப்பவன்போல் - தன்தலைகளாலே தரித்துக்கொண்டு கிடப்பதுபோலே, தடம்-இடமுடைத்தான, கைவிரலைந்தும் - கையிலைந்துவிரலையும், மலரவைத்து—, தாமோதரன் - * கன்னிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டிருந்தவன், தாங்கு - தரித்துக்கொண்டுநின்ற, தடம்-பெரிய, வரை-மலையாவது; இலங்கையை - மூவகையரணையுடைய லங்கையை, சென்று - ஆகாசமார்க்கத்தாலே சென்று கிட்டி, அடங்க - அங்குள்ள பூஞ்சோலைகளையெல்லாம், ஈடழித்த - கட்டழித்துப்பொகட்ட, அநுமன் - சிறுத்திருவடியுடைய, புகழ் - கீர்த்தியை, மந்திகள் - பெண் குரங்குகளானவை, பாடி—, தம் - தந்தாமுடைய, குட்டன்களை - குட்டிகளை, குடங்கை - உள்ளங்கைகளிலே, கொண்டு - ஏந்திக்கொண்டு, கண்வளர்த்தும் - சீராட்டி யுறங்கப்பண்ணுகின்றுள்ள, கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையாம்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (படங்களித்யாதி) பலபணங்களையுமுடைய நாகராஜன், பரப்பையுடைத்தான பூமியைத்தன்தலைகளாலே தரித்துக்கொண்டு கிடக்குமவன்போலே. (தடங்கைவிரலைந்தும் மலரவைத்து) இடமுடைத்தான திருக்கையிலைந்துவிரலையும் மலரவைத்து. (தாமோதரன்தாங்குதடவரைதான்) ஓரபலைக்குக்கட்டவு மடிக்கவுமாம்படி யெளியனுமாய், அவள்கட்டினகட்டை யவிழ்த்துக்கொள்ள சக்தனுமன்றிக்கேயிருந்தவன் தரித்துக்கொண்டுநின்ற பெரியமலைதான். பஞ்சலக்ஷம்குடியும் ஊரிலுள்ள பசுநிரைகளுமெல்லாம்சேரவொதுங்கலாம்படியிறேமலையின்பரப்பு.தானென்று-அதின்கநத்தையும் அதின்மேலுண்டான வ்ருக்ஷங்களையும் ம்ருகவிசேஷங்களையும் அந்நிலத்துக்கடைத்த மநுஷ்யரையுமெல்லாம் நினைக்கிறது.

(அடங்கச்சென்றிலங்கையையீடழித்த) (க) துர்க்கத்ரயயுக்தமாய், தேவர்கள்கொடுத்த வரபலத்தாலும் ராவணனுடைய புஜபலத்தாலும் ஒருவரால்சென்று அழிக்கவொண்ணாதபடி யிருக்கிற லங்கையையெல்லாம் "ஓதமாகடலைக்கடந்தேறி" என்கிற படியே

(க) துர்க்கத்ரயம் - மூவகையரண்.

சென்று, "உயர்கொள்மாக்கடிக்காவையிறுத்து" இத்யாதிப்படியே கட்டழித்துப்பொகட்ட. (அநுமன்புகழ்பாடி) ஹநுமானுடைய கீர்த்தியைப்பாடி. (தம்குட்டன்களை) தந்தாமுடையகுட்டிகளை. குட்டனென்கிறது - ப்ரீதியாலே. (குடங்கைக்கொண்டு) (க) குடங்கைகளிலே யேந்திக்கொண்டு. (மந்திகள்கண்வளர்த்தும்) மந்திகளானவை சீராட்டியுறங்கப்பண்ணுநிற்கும். மந்தி - பெண்குரங்கு. (கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே.) (எ)

மூ.—சலமாமுகிற் பல்கணப்போர்க்களத்துச் சரமாரிபொழிந்தெங்கும் பூசலிட்டு, நலிவானுறக்கேடகங் கோப்பவன்போல் நாராயணன் முன்முகங்காத்தமலை, இலைவேய்குரம்பைத்தவமாமுனிவரிருந்தார் நடுவேசென்றணார் சொறியக், கொலைவாய்ச்சின வேங்கைகணின்றுறங்குங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.

ப-ரை.—பல்கணம் - பலதிரளாய்க்கொண்டு, சலம் - கடலைவறளாகப்பருகி நீர்கொண்டெழுந்த, மாமுகில் - காளமேகங்களானவை, போர்க்களத்து - யுத்தபூமியில், சரமாரி - பாணவர்ஷம்போலே, பொழிந்து - வர்ஷித்துக்கொண்டு, எங்கும் - திருவாய்ப்பாடியெங்கும், பூசலிட்டு - எங்களைத்தப்பவல்லாருண்டோவென்று இடித்து முழங்கிப் பூசலிட்டு, நலிவான் - வருத்துவதாக, உற - ஒருப்பட்டவளவிலே, அந்தசரவர்ஷத்தைத் தகைகைக்கு, கேடகம்கோப்பவன்போல் - கடகுகோத்துப்பிடிக்கு மவனைப்போலே, நாராயணன் - ஸர்வரக்ஷகனை நாராயணன் தன்கையிலேயெடுத்துக்கொண்டு, முன்-முந்திவருகிற, முகம்-மழைமுகத்தை, காத்த - தகைந்த, மலை - மலையாவது; இலை - இலையாலே, வேய் - செய்த, குரம்பை - குடில்களில்வஸிக்கிற, தவம் - தபஸ்ஸையுடைய, மாமுனிவர்-மஹர்ஷிகள், இருந்தார் - தவஞ்செய்கைக்காகத் திரளவிருந்தவர்கள், நடுவேசென்று—, அணர்-அவர்கள்தன்கழுத்தை, சொறிய—, கொலை - கொல்லுகிற, வாய் - வாயையும், சினம் - சினத்தையுமுடைத்தான, வேங்கைகள் - வேங்கைப்புலிகளானவை, அந்தஸுகத்தாலே, நின்று - நின்றபடியே, உறங்கும் - உறங்காநிற்கிற, கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையாம்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (சலமாமுகிலித்யாதி) பலதிரளாய்க் கடலை (உ) வறளாகப்பருகி நீர்கொண்டெழுந்த மஹாமேகங்களானவை, யுத்தபூமியில் (௩) சரவர்ஷம்போலே வர்ஷித்துக்கொண்டு திருவாய்ப்பாடியில் ஊரோடு பசுக்கள்மேயுமிடத்தோடுவாசியற எங்கும் "எங்களைத்தப்பவல்லாருண்டோ" என்று இடித்துமுழங்கிப் பூசலிட்டுநலிவதாகவொருப்பட்ட வளவிலே, அந்தசரவர்ஷத்தைத் தகைகைக்குக் (ச) கடகுகோத்துப் பிடிக்குமவன்போலே ஸர்வரக்ஷகனைநாராயணன் தன்கையிலே யெடுத்துக்கொண்டு

(க) குடங்கை - உள்ளங்கை. (உ) வறளாக - வரண்டுபோகும்படி. (௩) சரவர்ஷம் - பாணவர்ஷம். (ச) கடகு - கேடகம்.

முந்திவருகிற வர்ஷமுகத்தைத் தகைந்தமலை. (இலைவேய்குரம்பை) இலையாலே வேய்ந்தகுடில்; பர்ணசாலையென்றபடி. இத்தை வாஸஸ்தாநமாகவுடையராயிருந்துள்ள. (தவமாமுனிவர்) தபோநிஷ்டரான மஹர்ஷிகள். (இருந்தார்நடுவேசென்று) தபஸ்ஸுக்காக ஓரிடத்திலே திரளவிருந்தவர்கள் நடுவேசென்று. (அணர்சொறிய) "ஸர்வமும் பகவதாத்மகம்" என்று கண்டிருக்கையாலே ஒன்றிலுமொருபயமற்றிருக்குமவர்கள் தன்கழுத்தைச் சொறிய. (கொலைவாய்ச்சினவேங்கைகள்நின்றுறங்கும்) கொல்லுகிறவாயையும் சினத்தையுமுடைத்தானபுலிகளானவை அந்தஸுகத்தாலேநின்று உறங்காநிற்கும். (கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.) (அ)

௯.—வன்பேய் முலையுண்டதோர் வாயுடையன் வன்றாணெனநின்றதோர் வன்பரத்தைத், தன்பேரிட்டுக்கொண்டு தரணிதன்னிற் றாமோதரன்றாங்குதடவரைதான், முன்பேவழிகாட்ட முசுக்கணங்கள் முதுகில்பெய்து தம்முடைக்குட்டன்களைக், கொம்பேற்றியிருந்து குதிபயிற்றுங் கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.

ப-ரை.—வன் - வலிய, பேய் - பூதனையுடைய, முலை-நஞ்சூட்டினமுலையை, உண்டதோர் - உண்டதொரு, வாயுடையன் - வாயையுடையனாய், வன்-வலிய, பரத்தை - பாரத்தைத்தரித்துக்கொண்டு, நின்றதோர் - நின்றதொரு, வன் - வலிய, தூணென - தூணைப்போலே, தன்பேர் - "கோவர்த்தநன்" என்கிற தன் பேரை, இட்டுக்கொண்டு - அம்மலைக்கிட்டுக்கொண்டு, தரணிதன்னில் - நான்முகன்முதலானோர்க்கன்றிக்கே மநுஷ்யர்க்கும் காணலாம்படியான இந்நிலத்திலே, தாமோதரன் - ஆய்த்தாய்க்குக்கட்டிவைக்கலாம்படி கீழ்ப்படிந்திருந்தவன், தாங்கு - தரித்துக்கொண்டுநின்ற, தடம் - பெரிய, வரைதான் - மலையாவது; முசுக்கணங்கள் - குரங்குக்கூட்டங்களானவை, முன்பே - ஏற்கவே, வழிகாட்ட - ஒருகிளையில்நின்றும் மற்றொருகிளையில்பாயும் வழிகாட்டுகைக்காக, தம்முடை - தந்தாமுடைய, குட்டன்களை - குட்டிகளை, முதுகில் - முதுகிலே, பெய்து - கட்டிக்கொண்டுபோய், கொம்பு - கொம்பிலே, ஏற்றியிருந்து—, குதி-ஒருகொம்பில்நின்றும் மற்றொருகொம்பிலே குதிக்கும்படியை, பயிற்றும்-தான் முந்துறக்குதித்துக்காட்டிப் பழக்குவியாநிற்கிற, கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையாம்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வன்பேய்முலையுண்டதோர் வாயுடையன்) வலியபேயினுடைய முலையுண்டதொரு வாயையுடையவன். பேய்க்குவன்மையாவது-இவனுடைய (க) மௌக்த்யத்தையும் வடிவழகையும் கண்டவிடத்திலும் இளகாத நெஞ்சின்வலிமை. அன்றிக்கே, வன்மை முலைக்குவிசேஷணமாய் - அதின் விஷத்தினுடைய க்ரௌர்யத்தைச் சொல்லவுமாம். நஞ்சேற்றினமுலையிறே. ஓர்வா

(க) மௌக்த்யம் - குழவித்தன்மை.

யென்றது - அந்த நஞ்சைப்பொறுத்து உண்கையாலும் அவளைமுடிக்கையாலும் அத்விதீயமானவாயென்றபடி. (வன்தூணென நின்றதோர் வன்பாரத்தை) வலியபாரத்தை தரித்துநின்றதொரு வலிய தூணைப்போலே. "தரித்து" என்கிற வித்தனையும் (க) அத்யாஹார்யம்.

(தன்பேரிட்டுக்கொண்டு) "கோவர்த்தநன்" என்கிற தன் பேரை அதுக்கிட்டுக்கொண்டு. (தரணிதன்னில்) தேசாந்தரங்களில் வ்யாவ்ர்த்தி. அதாவது - பேரளவுடையரான (உ) ப்ர்ஹ்மேசாதிகள்போல்வார்க்கன்றிக்கே, க்ஷுத்ரமநுஷ்யரும் காணலாம்படியான இந்நிலத்திலே யென்றபடி. (தாமோதரன்) பெற்றதாய்க்குக் கட்டிவைக்கலாம்படி (ங) பவ்யனாயிருந்தவன். "வன்பேய்முலையுண்டதோர் வாயுடையன்" என்றும், "தாமோதரன்" என்றும் சொல்லுகையாலே-பேய்த்தாயைமுடித்து ஆய்த்தாய்க்குப் பவ்யனாயிருந்தபடி சொல்லுகிறது. (தாங்குதடவரைதான்) இப்படியிருக்கிறவன் தரித்துக்கொண்டுநின்ற பெரியமலைதான். (முன்பேயித்யாதி) முசுக்கணங்களானவை ஏற்கவே (ச) பணையோடுபணை பாயும்வழி காட்டுகைக்காகத் தந்தாமுடைய குட்டிகளை முதுகிலே கட்டிக்கொண்டுபோய், கொம்பிலே யேற்றியிருந்து ஒருகொம்பில் நின்றும் ஒருகொம்பிலேகுதிக்கும்படியை, தான்முந்துறக்குதித்துக் காட்டி (ரு) அப்யஸிப்பியாநிற்கும். (கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையே.) (கூ)

அ.—பத்தாம்பாட்டு. (கொடியித்யாதி) "மழைவந் தெழுநாள் பெய்து மாத்தடைப்ப" என்கிறபடியே - ஏழுநாள் ஒருபடிப்பட வர்ஷிக்கிறவளவில் ரக்ஷ்யவர்க்கத்துக்கு ஒருநலிவுவாராதபடிமலையை யெடுத்து தரித்துக்கொண்டுநின்று ரக்ஷித்த ப்ரகாரத்தையருளிச்செய்தார் - கீழ்; இப்படி யேழுநாள் மலையைச் சுமந்துகொண்டு நின்றவளவில் திருக்கையில் ஒருவாட்டமின்றிக்கே யிருந்தபடியை யநுபவித்து, மங்களாசாஸநபரராகையாலே ப்ரீதராயருளிச்செய்கிறார் - இதில்.

மூ.—கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில
வாடிற்றில, வடிவேறுதிருவுகிர் நொந்துமில மணிவண்ணன்
மலையுமோர் சம்பிரதம், முடியேறிய மாமுகிற்பல்கணங்கள்
முன்னெற்றிநரைத்தன போலவெங்கும், குடியேறியிருந்து
மழைபொழியுங் கோவர்த்தநமென்னுங்கொற்றக்குடையே.

(க) அத்யாஹார்யம் - வருவித்தது. (உ) ப்ர்ஹ்மேசாதிகள் - நான்முகன் சிவன்முதலானோர். (ங) பவ்யன் - கீழ்ப்படிந்தவன். (ச) பணை - கிளை. (ரு) அப்யஸிப்பித்தல் - பழக்குவித்தல்.

ப-ரை.—கொடி-துகில்கொடியை, ஏறு-வரிவடிவாகத்தரித்துக்கொண்டிருக்கிற, செந்தாமரை-செந்தாமரைமலர்போன்ற, கைவிரல்கள்-திருக்கையும் திருவிரல்களும், ஏழுநாள் ஒருபடிப்படமலையைச் சுமந்துகொண்டுநின்றவளவில், கோலமும் - இயற்கையாயுள்ளவழகும், அழிந்தில - அழிந்தனவில்லை ; வாடிற்றில - பாரம்பொறுமையாலே தளர்ந்து வாட்டத்தை யடைந்தனவுமில்லை ; வடிவு - அழகு, ஏறு - மிக்கிருந்துள்ள, திருவுகிர் - திருவுகிர்களானவை, நொந்துமில - நொந்தனவுமில்லை ; மணி - நீலரத்நம்போலேயிருக்கிற, வண்ணன் - வடிவையுடையவன் எடுத்த, மலையும் —, அத்தை யிவனெடுத்துக்கொண்டுநின்ற நிலையும், ஓர்சம்பிரதம் - ஒருகண்கட்டுவித்தையாயிருந்ததுஎன்ன; அப்படியிருந்தது எம்மலையென்னில் ; முடி - மலையின்கொடுமுடியிலே, ஏறிய-ஏறின, மாமுகில்-மஹாமேகங்களினுடைய, பல் - பலவகைப்பட்ட, கணங்கள் - ஸமூஹங்களானவை, முன்னெற்றி - தங்களுடைய முன்னெற்றியானது, நரைத்தனபோல - நரைத்தாற்போலே, எங்கும் - நாற்புறங்களிலும், குடியேறியிருந்து—, மழை - மழையை, பொழியும் - சொரியாநிற்கிற, கோவர்த்தநமென்னுங் கொற்றக்குடையாம்.

வ்யா.—(கொடியேறுசெந்தாமரைக்கைவிரல்கள்) "த்வஜவஜ்ராங்குசக்ருதசிஹ்நபாணிநா" "த்வஜவஜ்ராங்குசக்ருதசிஹ்நபாணிநா" என்கிறபடியே (௧) ஐச்வர்யஸூசகமான த்வஜவஜ்ராதி (௨) சிஹ்நங்களை (௩) ரேகாரூபேண உடைத்தாயிறே திருக்கைதானிருப்பது ; அதுக்கெல்லாமுபலக்ஷணமாக த்வஜமொன்றையு மருளிச்செய்கிறார். த்வஜத்தைரேகாரூபேண தரித்துக்கொண்டிருப்பதாய், நிறத்தாலும் செவ்வியாலும்மார்த்தவத்தாலும் செந்தாமரைபோலேயிருக்கிறதிருக்கையும் திருவிரல்களும். (கோலமுமழிந்திலவாடிற்றில) ஏழுநாள் ஒருபடிப்பட மலையைச் சுமந்துகொண்டுநின்றவளவில், ஸ்வாபாவிகமான வழகும் அழிந்தனவில்லை; பாரம் பொறுமையாலே தளர்ந்து வாட்டத்தை யடைந்தனவுமில்லை. (வடிவேறுதிருவுகிர்நொந்துமில) அழகுமிக்கிருந்துள்ளதிருவுகிர்களானவை நொந்தனவுமில்லை.

(மணிவண்ணன்மலையுமோர்சம்பிரதம்) நீலரத்நம்போலேயிருக்கிறவடிவையுடையவன் எடுத்தமலையும் அத்தையிவனெடுத்து நின்றநிலையும் ஒரு இந்த்ர்ஜாலம். அதாவது - மலையையெடுத்துச் சுமந்துகொடுநின்றதுமெய்யாகில் அதின்கார்யமானவிக்ருதிகளிலொன்று திருக்கையிலே காணவேண்டாவோ, அதில்லாமையால் இதொரு கண்கட்டுவித்யைபோலே யிருப்பதொன்றென்கை. எடுத்த திருக்கையில் ஒரு விக்ருதிகாணாமையாலே இந்த்ரஜாலமென்ற வித்தனையொழிய, அது பரமார்த்தமென்னுமிடத்தை யருளிச்செய்கிறார் மேல் ( முடியித்யாதி ) மலையின்கொடுமுடியிலேயேறின மஹாமேகங்களினுடைய பலவகைப்பட்ட ஸமூஹங்களானவை. (முன்னெற்றி நரைத்தனபோல வெங்குங் குடியேறியிருந்து மழைபொழி

(௧) ஐச்வர்யஸூசகம் - செல்வக்குறிப்பு. (௨) சிஹ்நங்கள் - அடையாளங்கள். (௩) ரேகாரூபேண - வரிவடிவாக.

யும்) அதினுடைய முன்னெற்றி நரைத்தாற்போலேசூழக் குடியேறி யிருந்து லோகத்துக்கெல்லாம் ஜல (க) ஸம்ர்த்தியுண்டாம்படி வர்ஷத்தைச்சொரியாநிற்கும். வர்ஷியாமல் வெளுத்திருக்கும் காலத்திலும் வஸ்தவ்யதேசம் மலைத்தலையோரமாகையாலே "முன்னெற்றி நரைத்தனபோல வெங்குங்குடியேறியிருந்து" என்கிறது. இப்படி மேகங்களிருந்துவர்ஷியாநிற்கும். (கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே) ஆகையால் இந்த்ரஜாலமன்று, பரமார்த்தமென்கை. ()

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றூர்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறூர்.

மூ.—அரவிற்பள்ளிகொண்டரவந்துரந்திட் டரவப்பகையூர்தியவனுடைய, குரவிற்கொடி முல்லைகணின்றுறங்கும் கோவர்த்தநமென்னும் கொற்றக்குடைமேல், திருவிற்பொலி மறைவாணர்புத்தூர்த் திகழ்பட்டர்பிரான் சொன்னமாலைபத்தும், பரவுமநநன்குடைப் பத்தருள்ளார் பரமானவைகுந்தநண்ணுவரே.

ப-ரை.—அரவில் - மென்மை குளிர்த்தி நாற்றங்களை ஸ்வபாவமாகவுடைய திருவநந்தாழ்வான்மேலே, பள்ளிகொண்டு-திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டு, அப்படுக்கையைவிட்டுத் திருவாய்ப்பாடியில்வந்து திருவவதரித்தவிடத்திலே இடையரிடைச்சிகளும் பசுக்களும் தண்ணீர்குடிக்கிறமடுவை விஷமாக்கிக்கொண்டுகிடந்த, அரவம் - காளியனுகிறஸர்ப்பத்தை, துரந்திட்டு-ஓட்டிவிட்டு, அரவம் - ஸர்ப்பஜாதிக்கெல்லாம், பகை-பகையான பெரியதிருவடியை,ஊர்தியவனுடைய-வாஹநமாகவுடையவனுடைய, குரவில் - குரவுமரத்திலே, கொடி - கொடியாய்ப் படர்ந்துகிடக்கிற, முல்லைகள் - முல்லைகளானவை, நின்று - நிலைபெற்று, உறங்கும் - உறங்கும்படியிருப்பதாய், கோவர்த்தநமென்னும் - கோவர்த்தநமென்கிற திருநாமத்தையுடைத்தாய், கொற்றக்குடைமேல்-மழையைத்தடுக்கைக்கு வெற்றிக்குடையான பர்வதவிஷயமாக, திருவின் - ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயால், பொலி - விளங்காநின்றவராய்க்கொண்டு, மறை - வேதத்துக்கு, வாணர் - வ்யாஸபதம் செலுத்தவல்லரானவர்கள் வர்த்திக்கிற, புத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரில், திகழ் - எல்லாப்படியாலும் உயர்ந்தோராய்க்கொண்டு விளங்காநின்றுள்ள, பட்டர்பிரான் - பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, மாலை - மாலாரூபமான, பத்தும் - இப்பத்தையும், பரவும் - அன்பின்வசப்பட்டவர்களாய்க் கொண்டுபேசுகிற, நன்கு - நல்ல, மநமுடை - மநஸ்ஸையுடைய, பத்தருள்ளார் - பக்திமான்களாயுள்ளவர்கள், பரமான - எல்லாவற்றிலுமுயர்ந்த, வைகுந்தம்-ஸ்ரீவைகுண்டத்தை, நண்ணுவர் - கிட்டப்பெறுவர்.

வ்யா.—(அரவிற்பள்ளிகொண்டு)மென்மை குளிர்த்தி நாற்றங்களை (உ) ப்ரக்ர்தியாகவுடைய திருவநந்தாழ்வான்மேலே திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டு. (அரவம்துரந்திட்டு) "[Grantha text] [Grantha text]" "நாம்வாரஜஸுந்த்ரஜோஹ்ராமதம்" என்கிறபடியே

(க) ஸம்ர்த்தி - நிறைவு. (உ) ப்ரக்ர்தி - சுபாவம்.

அப்படுக்கையைவிட்டுப்போந்துஅவதரித்தவிடத்திலே கோபஜாதியும்கோக்களும் தண்ணீர்குடிக்கிறமடுவை விஷதூஷிதமாக்கிக்கொண்டுகிடந்த காளியனுகிறஸர்ப்பத்தை அங்குநின்று மோட்டிவிட்டு. (அரவப்பகையூர்தியவனுடைய) "அரவம்" என்கிறஜாதிக்கெல்லாம் பகையான பெரியதிருவடியை வாஹநமாக நடத்துகிறவனுடைய.

(குரவிலித்யாதி) "குரவு" என்கிற வ்ர்க்ஷத்திலே கொடியாய்ப்படர்ந்து கிடக்கிறமுல்லைகளானவை நின்றுறங்கும்படியிருப்பதாய், கோவர்த்தநமென்கிற திருநாமத்தையுடைத்தாய், வர்ஷத்தைத்தகைகைக்குக் கொற்றக்குடையான பர்வதவிஷயமாக. "குரவக்கொடிமுல்லைகள்" என்றுபாடமானபோது-குரவாகிற வ்ர்க்ஷமும் அதின்மேலே படர்ந்த கொடியானமுல்லையும் நின்றுறங்குமென்று பொருளாகக்கடவது. (திருவிற் பொலியித்யாதி) ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயால்மிக்கு வேதத்துக்குவ்யாஸபதம்செலுத்தவல்லரானவர்கள் வர்த்திக்கிற ஸ்ரீவில்லிபுத்தூரில் (க) ஸர்வோத்தரராய்க்கொண்டு விளங்காநின்றுள்ள பெரியாழ்வாரருளிச்செய்த (உ) சப்தஸந்தர்ப்பமான விப்பத்தையும். (பரவுமநநன்குடைப்பத்தருள்ளார்) ப்ரீதிபரவசராய்க்கொண்டுபேசும் நல்லமநஸ்ஸையுடைய பக்திமான்களாயுள்ளவர்கள். (பரமானவைகுந்தம்நண்ணுவரோ) தங்களுடையஜ்ஞாநப்ரேமாநுகுணமாக (ந) பகவதநுபவகைங்கர்யங்களிலே அந்வயித்து * அடியார்கள்குழாங்களை யுடன்கூடிவாழலாம்படியிருக்கும் ஸர்வோத்தரமான ஸ்ரீவைகுண்டத்தை ப்ராபிக்கப்பெறுவர். (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—அட்டுவெழுவம்மைகடுவான்செப்பாடு படம்சலம் வன்பேய்கொடியரவில் நாவல்.

---

ஆ. திருமொழி உ௫-க்கு, பாட்டு-௨௭௨.

---

அ.—நாம்பிறந்துவளருகிறவூரிலே "ஒருத்ரவ்யத்தை ஒருதேவதாந்தரத்துக்கிடுகையாவதென்" என்று இந்த்ரனுக்கிடுகிற சோற்றைவிலக்கி மலைக்கிடுவித்து அத்தையடையத் தானமுதுசெய்துவிடுகையாலே அவன்க்ருத்தனாய், திருவாய்ப்பாடியையழிப்பதாக புஷ்கலாவர்த்தகாதிமேகங்களையேவிக் கல்வர்ஷத்தை வர்ஷிப்பிக்க, "கல்லெடுத்துக்கன்மாரிகாத்தாய்" என்கிறபடியே (ச) கோவர்த்தநோத்தரணம்பண்ணி, அந்தவர்ஷத்தை ரக்ஷ்யவர்க்கத்தின்மேலேவிழா

(க) ஸர்வோத்தரர் - எல்லாட்டடியாலும் உயர்ந்தவர்கள். (உ) சப்தஸந்தர்ப்பம் - சொல்மாலை. (ந) பகவதநுபவகைங்கர்யங்களிலே - எம்பெருமானையநுபவிக்கையிலும் கைங்கர்யம் பண்ணுகையிலும். (ச) கோவர்த்தநோத்தரணம் - கோவர்த்தநபர்வதத்தைக் குடையாகவெடுக்கை.

தபடி நோக்கின (க) திவ்யசேஷ்டிதரஸத்தையநுபவித்தார் – கீழ்; "குழல்கோவலர்" என்கிறபடியே - கோபர்க்குக்குழலூதுகை ஜாத்யுசித வ்ர்த்தியாகையாலே, ஸ்ரீநந்தகோபர்திருமகனுகையாலே தானும் அந்தவ்ர்த்தியிலே (உ) யதிகரித்துப் பலகாலும்குழலூதிக்கொண்டுபோருமவனுகையாலே, ஒருநாள் ஸ்ரீப்ர்ந்தாவநத்திலே நின்று திருக்குழலையூத, அந்தக்குழலோசைவழியே யுவதிகளான ஸ்ரீகோபிமாரிலேசிலர் தங்கள்பந்துக்கள்பண்ணிவைத்த காவல்களையும் கடந்து இவன்நின்றவிடத்தேவந்து சூழ்ந்துகொண்டுநின்றபடியையும், வேறேசிலர் அரைகுலையத்தலைகுலையவோடிவந்து ஸ்த்ரீத்வம் பின்னாட்டினபடியாலே ஒடுங்கி நெகிழ்ந்தவுடையை ஒருகையாலேதாங்கிஇவனளவிலேகண்ணுேடநின்றபடியையும்,(ங)உபரிதநலோகவர்த்திகளான ஸ்த்ரீகள் இக்குழலோசையைக் கேட்டுவந்து திரண்டு நெஞ்சுருகி கண்கள்பனிக்கை முதலான (ச) விக்ர்திகளோடே இதிலே செவிமடுத்துக்கொண்டு நின்றபடியையும், மேநகை திலோத்தமைமுதலான ந்ர்த்தகீதபரைகளாய்த்திரியும் (ரு) அப்ஸரஸ்ஸுக்கள், உலாவியூலாவிக்குழலூதுகிறவிவனுடைய வடிவையும் குழலோசையையும்கண்டு, "நாமும் சிலராயாடிப்பாடித்திரிகிறோமே" என்று (சு) லஜ்ஜித்து அறிவழிந்து தந்தாமுடைய ஆடல்பாடல்களைத் தாங்களே மாறினபடியையும், (எ) ஸததகீதபராய்த்திரியும் தும்புருநாரதரும் கிந்நரமிதுநங்களும் இந்தக்குழலோசையினுடைய (அ) ரஸத்திலேயீடுபட்டுத் தந்தாமுடைய வீணையைமறப்பார் கிந்நரம்தொடோமென்பாரானபடியையும், (கூ) ஆகாசசாரிகளான (க0) காந்தப்பரெல்லாரும் அம்ர்தம்போலேயிருக்கிற (கக) இக்கீதவலையிலே யகப்பட்டு (கஉ) சிதிலராய்க் (கங) கைமறித்து நின்றபடியையும், தேவர்களெல்லாரும் தங்கள் (கச) ஹவிர்ப்போஜநத்தைமறந்து திருவாய்ப்பாடிநிறையவந்துதிரண்டு இக்குழலோசையினுடைய ரஸத்தைபுஜித்து இவனைவிடாதேபின்பற்றித்திரிந்தபடியையும், (கரு) பக்ஷிஜாலங்கள் தந்தாம் கூட்டை

---

(க) திவ்யசேஷ்டிதம் - அழகியசெய்கை. (உ) அதிகரித்து - ப்ரவேசித்து. (ங) உபரிதநலோகங்கள் - மேலுலகங்கள். (ச) விக்ர்திகள் - வேறுபாடுகள். (ரு) அப்ஸரஸ்ஸுக்கள் - தேவலோகத்திலுள்ள ஓர்வகைப்பெண்கள். (சு) லஜ்ஜித்து - வெட்கப்பட்டு. (எ) ஸததகீதபராய் - எப்பொழுதும் பாடுகையில் விருப்பமுள்ளவர்களாய்க்கொண்டு. (அ) ரஸம் - சுவை. (கூ) ஆகாசசாரிகள் - ஆகாசத்திலே ஸஞ்சரிப்பவர்கள். (க0) காந்தப்பர் - கந்தர்வர். (கக) இக்கீதவலையிலே - இந்த இசையாகிறவலையிலே. (கஉ) சிதிலராய் - வருந்தினவர்களாய். (கங) கைமறித்து - கைதவிர்ந்து. (கச) ஹவிர்ப்போஜநம் - யாகங்களில் ப்ராஹ்மணர்களால் கொடுக்கப்படும்ஹவிஸ்ஸாகிற உணவு. (கரு) பக்ஷிஜாலங்கள் - பறவைக்கணங்கள்.

விட்டுவந்துசூழ்ந்து படுகாடுபோலேகிடந்தபடியையும், பசுத்திரள்கள் இக்குழலோசையைக்கேட்டு (க) பரவசமாய்க்கால்களைப்பரப்பித் தலைகளைநாற்றிக்கொண்டு செவியையசைக்கவும்மாட்டாமல்நின்றபடியையும், மான்திரட்சிகளானவை மேய்கைமுதலானவற்றை மறந்து (உ) நிச்சலமாய்க்கொண்டு (ந) சித்ரார்ப்பிதங்கள்போலேநின்றபடியையும், (ச) அசேதநமானமரங்களானவைசேதநங்களிலுங்காட்டில் (ரு) அத்யாச்சர்யமாம்படி (சு) ஈடுபட்டபடியையும் தனித்தனியேபேசி அவனுடையதிருக்குழ லோசையினுடைய (எ) வைசித்ரியையநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

மூ.—நாவலம்பெரிய தீவினில்வாழு நங்கைமீர்காளிதோ ரற்புதங் கேளீர், தூவலம்புரியுடைய திருமாலூயவாயிற் குழலோசை வழியே, கோவலர்சிறுமிய ரிளங்கொங்கை குதுகுலிப்பவுட லுள விழ்ந்தெங்கும், காவலுங்கடந்து கயிறுமாலையாகிவந்து கவிழ்ந்து நின்றனரே.

ப - ரை.—பெரிய - மற்ற த்தீவுகளைக்காட்டிலும் பெரிதென்று சொல்லத்தக்க, நாவலந்தீவினில் - ஜம்பூத்வீபத்திலே, வாழும் - க்ர்ஷ்ணகுணசேஷ்டிதங்களை யநுபவிக்கையாகிற வாழ்வையுடையவர்களாய், நங்கைமீர்கள்-அதுக்குத்தக்கவறிவு மன்புமாகிய விவற்றால் நிறைந்திருப்பவர்களே, இதோர் - இதொரு, அற்புதம் - ஆச்சரியத்தை, கேளீர் - கேளுங்கள் என்ன ; அஃதெனைத் துக்காணீரென்னச் சொல்லுகிறார்மேல்; தூ-உடையவன்நினைவறிந்து கார்யம் செய்யவல்லதூய்மையை யுடைத்தான, வலம்புரி-ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, உடைய - ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியாகவும் அநுகூலர் வாழும்படியாகவும் ஊதுகைக்குத் திருக்கையிலேயுடைய, திருமால் - ஸ்ரீயஃபதியானவன், தூய-அடுத்தவரை அழகியசொற்களாலே வாழப்பண்ணும் தூய்மையையுடைய, வாயில் - திருப்பவளத்தில்வைத்து ஊதுகிற, குழலோசைவழியே - திருக்குழலோசைவழியாலே, கோவலர் - ஆநிரைகாக்கவல்லரான ஆயருடைய, சிறுமியர் - சிறுப்பெண்களானவர்கள், இள - தங்கள்வசத்தில் நில்லாதபடி பக்குவமாயிருந்துள்ள, கொங்கை - முலைகளானவை, குதுகுலிப்ப - நாங்கள் முன்னேபோகிறோமென்று கௌதூஹலம்பண்ணுவதுமன்றி, உடல் - அம்முலைகளுக்கிருப்பிடமான சரீரமும், உள் - இந்த்ரியங்களெல்லாவற்றுள்ளும் முதன்மையானமநஸ்ஸும், அவிழ்ந்து - கட்டுக்குலைந்து, எங்கும்-எங்குமுள்ள, காவலும் - காவலையும், கடந்து - தாண்டி, கயிறு-கயிற்றிலே ஒழுங்குபடச்சேர்த்த, மாலையாகி - மாலைகள்போலே நிரைநிரையாக, வந்து—, கவிழ்ந்துநின்றனர் - இவனைக்கண்டவாறே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டுநின்றார்கள்.

வ்யா.—முதற்பாட்டு. (நாவலம்பெரியதீவினில்) நாவலையுடைத்தானபெரியதீவிலே. (அ)த்வீபாந்தரங்களில்பெருமையையுடைய

(க) பரவசமாய் - மெய்மறந்து. (உ) நிச்சலமாய்-அசையாமல். (ந) சித்ரார்ப்பிதங்கள் - சித்ரப்பதுமைகள். (ச) அசேதநம் - உயிரில்லாதது. (ரு) அத்யாச்சர்யம் - மிகவியக்கத்தக்கது. (சு) ஈடுபடுதல் - தோற்றுப்போதல். (எ) வைசித்ரி - ஆச்சரியத்தன்மை. (அ) த்வீபாந்தரம் - மற்றத்தீவுகள்.

(௧) ஜம்பூத்வீபத்திலேயென்றபடி. இந்தத்வீபத்தினுடைய(௨)வைபவம்வேறொரு த்வீபத்துக்கில்லையிறே. அதாவது-த்வீபாந்தரங்களெல்லாம் போகபூமியாயிருக்கு மித்தனையிறேயுள்ளது; ஆர்ஜநபூமியுள்ளதுஇதிலேயிறே; இதுதன்னிலும்நவமகண்டமான பாரதவர்ஷமிறே (௩) ஆர்ஜநபூமியாயிருப்பது; (௪) வர்ஷாந்தரங்களும் போகபூமிகளித்தனையிறே; அப்படியிருந்ததாகிலும் பாரதவர்ஷ (௫) ப்ராதாந்யத்தைப்பற்ற த்வீபாந்தரங்களிற்காட்டில் இந்தத்வீபத்துக்கு ஏற்றம்சொல்லக்குறையில்லை; த்வீபாந்தரங்களில்போகங்களுக்கும் (௬) உபரிதநபாதாளலோகங்களில்போகங்களுக்கும் மோக்ஷத்துக்கும் (௭) ஸாதநாநுஷ்டாநம்பண்ணலாவது இங்கேயாகையாலும், (௮) திவ்ய தேசங்களும் (௯) முமுக்ஷுக்களும் (௧௦) ப்ராசுர்யேணவுள்ளது இங்கேயாகையாலும் இந்த பாரத வர்ஷத்தோடேகூடியிருக்கையாலே ஜம்பூத்வீபத்தை "பெரியதீவு" என்றருளிச்செய்கிறார். (வாழும்நங்கைமீர்கள்) அவனவதரித்ததேசத்திலேபிறந்து அவனுடைய அவதாரகுண சேஷ்டிதங்களையெல்லாம் அநுபவிக்கையாகிற வாழ்வையுடையராய், (௧௧) அதுக்கிடான (௧௨) ஜ்ஞாநப்ரேமங்களால் பூர்ணகளாயுள்ளவர்களேயென்று தாமும் கோபஜந்மத்தை (௧௩) ஆஸ்தாநம்பண்ணினவராகையாலே திருவாய்ப்பாடியிலுள்ளாரோடு ஸஜாதீயராய்நின்று அங்குத்தை விசேஷஜ்ஞைகளான ஸ்த்ரீகளிலே சிலரை (௧௪) ஸம்போதித்து அருளிச்செய்கிறானென்னுதல்; அன்றிக்கே, "ఏవవాసుదేవో హ్యేక స్సు పురుష ఉచ్యతే। స్త్రీప్రాయమితరత్సర్వం" "ஸமெணவவாஸு-மெஃவொ ஸள ஸாக்ஷாத்பு-ரு-ஷஉவ்யெத । ஸ்ரீப்ராயமிதரத்ஸவ" என்கிறபடியே (௧௫) பகவத்வ்யதிரிக்தரெல்லாரையும் (௧௬) ஸ்வாதந்த்ர்யகந்தரஹிததயா ஸ்த்ரீப்ராயரென்றுநினைத்து ஜம்பூத்வீபத்தில் (௧௭) பகவதநுபவ பரரான (௧௮) விசேஷஜ்ஞரையுடைய "நங்கைமீர்" என்று (௧௯) ஸம்போதிக்கிறாராகவுமாம். (இதோரற்புதம்கே

---

(௧) ஜம்பு - நாவல். (௨) வைபவம் - பெருமை. (௩) ஆர்ஜநம் - ஸம்பாதித்தல். (௪) வர்ஷாந்தரஙகள் - மற்றவர்ஷங்கள். (௫) ப்ராதாந்யம் - முதன்மை. (௬) உபரிதநபாதாளலோகம் - ஸ்வர்க்கலோகமும் கீழுலகமும். (௭) ஸாதநம் - உபாயம். (௮) திவ்யதேசம் - உகந்தருளின நிலம். (௯) முமுக்ஷு - மோக்ஷத்தில் விருப்பமுள்ளவன். (௧௦) ப்ராசுர்யேண - பெரும்பாலும். (௧௧) அதுக்கிடான - அதுக்குத்தக்க. (௧௨) ஜ்ஞாநப்ரேமம் - அறிவும் அன்பும். (௧௩) ஆஸ்தாநம்பண்ணுதல் - அபிநயித்தல். (௧௪) ஸம்போதித்து - அழைத்து. (௧௫) பகவத்வ்யதிரிக்தர் - ஸர்வேச்வரனை யொழிந்தவர்கள். (௧௬) ஸ்வாதந்த்ர்யகந்தரஹிதர் - சற்றேனும் அஹங்காரமில்லாதவர்கள். (௧௭) பகவதநுபவபரர் - எம்பெருமானை யநுபவிக்கையில் விருப்பமுள்ளவர்கள். (௧௮) விசேஷஜ்ஞர் - அறிவுள்ளவர்கள். (௧௯) ஸம்போதித்தல் - அழைத்தல்.

ளீர்) இதோராச்சர்யம்கேளீர்கோள். (தூவலம்புரியுடையதிருமால்) தூய்தானவலம்புரியையுடைய ஸ்ரீயப்பதியானவன். இத்தால் - ப்ரதிகூலரைநிரஸிக்கவும் அநுகூலரைச் சேர்ப்பிக்கவும்வல்ல (க) பரிகரத்தையுடையவனென்கை. ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்குத் தூய்மையாவது - (௨) சேஷிநினைவறிந்து கார்யம்செய்யவல்ல சுத்தி. இப்படியிருக்கையாலே தன்னுடையத்வநிகொண்டே அவனுகந்தார் வாழ்வும் முனிந்தார்முடிவும்பண்ணுநிற்குமாய்த்து. (தூயவாயில் குழலோசைவழியே) திருப்பவளத்துக்குத் தூய்மையாவது - தன்னுடைய (௩) உக்திவிசேஷங்களாலே அநுகூலரைவாழப்பண்ண வல்லசுத்தி. இப்படியிருக்கிற திருப்பவளத்திலேவைத்து ஊதுகிற திருக்குழலோசைவழியே. அதாவது-க்ர்ஷ்ணன்கிடாய் பெண்கள்கிடாய் என்கிறவூராகையாலே உறவுமுறையாரானவர்கள் பலவகைப்பட்ட அரண்களிலே பெண்களைக்கொடுபுக்குக்கட்டிக்கொடு கிடவாநிற்கச்செய்தே அவர்களெல்லாரையுமுறக்கி, தங்கள் செவியிலேபுகுந்துஉணர்த்தி வாருங்கோள் என்பாரைப்போலே (௪) ஆகர்ஷிக்கிறகுழலோசை வழிகாட்டவாய்த்து இவர்கள்தாங்கள் வந்தது. (கோவலர்சிறுமியர்) கோரக்ஷணத்திலே ஸமர்த்தரானவர்களுடைய சிறுப்பெண்கள். (இளங்கொங்கைகுதுகுலிப்ப) தங்கள் வசத்தில் நில்லாதபடி (௫) பரிணதமானமுலைகளானவை, "தங்களைப் பிற்பாடராக்கி நாங்கள் முன்னேபோகிறோம்" என்று (௬) கௌதூஹலம்பண்ண. (இளங்கொங்கை) சொல்கேளா ப்ரஜைகளாய்த்து. குதுகுலிக்கையாவது - (௭) த்வராதிசயத்தால்வந்தகிளப்பம். (உடலுளவிழ்ந்து) கொங்கையில்குதுகுலிப்பு மாத்ரமன்றிக்கே கொங்கைக்கு (௮) ஆச்ரயமானசரீரமும், ஸர்வேந்த்ரியங்களுக்கும் (௯) ப்ரதாநமானமநஸ்ஸும் கட்டுக்குலைந்து. (எங்கும் காவலும்கடந்து) எங்குமுள்ளகாவலையும்கடந்து. அதாவது-அறைகளுக்குள்ளேயிட்டுத் தாய்மாரணைத்துக்கொண்டுகதவுகளையுமடைத்துப் புறக்காவலாக வேண்டும்பந்துக்களும்கிடக்க, அந்தக்காவல்களையெல்லாம் (௧௦) க்ஷுத்ரபாஷாணங்களைப்போலே (௧௧) ஒருசரக்காக நினையாமல் கடந்து. (கயிறுமாலையாகிவந்து) கயிற்றிலே யொழுங்குபடச்சேர்த்தமாலைகள்போலேநிரைநிரையாகவந்து. (கவிழ்ந்துநின்றனரோ) இவனைச்சூழ்ந்துகொண்டுநின்றார்கள். அன்றிக்கே, குழலோசைவழியேவந்து இவனைக்கண்டவாறே லஜ்ஜித்துக்

(க) பரிகரம் - துணை. (௨) சேஷி - உடையவன். (௩) உக்தி - சொல். (௪) ஆகர்ஷிக்கிற-இழுக்கிற. (௫) பரிணதமான-முதிர்ந்த. (௬) கௌதூஹலம் பண்ணல் - கொம்மாளமடித்தல். (௭) த்வராதிசயம் - மிக்கவிரைவு. (௮) ஆச்ரயம் - இருப்பிடம். (௯) ப்ரதாநம் - முதன்மை. (௧௦) க்ஷுத்ரபாஷாணம் - சிறியான கல்லைப்போலே. (௧௧) ஒருசரக்காக - ஒருபொருளாக.

கவிழ்த்தலையிட்டுநின்றார்களென்னுதல்; எதிர்செறிக்கமாட்டாமல் கவிழ்த்தலையிட்டு நின்றார்களென்னுதல். (௧)

மூ.—இடவணரையிடத்தோளொடுசாய்த் திருகைகூடப்புருவ நெரிந்தேறக், குடவயிறுபடவாய்கடைகூட்டக் கோவிந்தன் குழல்கொடூதினபோது, மடமயில்களொடுமான் பிணைபோலேமங்கைமார்கண்மலர்க்கூந்தலவிழ, உடைநெகிழவோர் கையாற்றுகில்பற்றியொல்கியோடரிக்கணோடநின்றனரே.

ப-ரை.—கோவிந்தன் - பசுக்கள் விலங்காமைக்கும் மேய்கைக்கும் மீளுகைக்கும் தகுதியாகவூதி ரக்ஷிக்குமத்தாலே "கோவிந்தன்" என்னும் பெயர்படைத்த க்ர்ஷ்ணன், இடவணரை - இடப்பக்கத்து ச்மச்ருவை, இடத்தோளொடு - இடத்திருத்தோளோடே, சாய்த்து—, இருகை - இரண்டு திருக்கைகளும், கூட - திருக்குழலோடேசேரவும், புருவம் - திருப்புருவங்களானவை, நெரிந்து - நெளித்து, ஏற - மேலேகிளரவும், வயிறு - திருவயிறு, குடம் - குடம்போலே, பட - தோற்றவும், வாய் - திருப்பவளம், கடை -இரண்டருகும் குவிந்து, கூட-திருக்குழல்துளைகளளவாகும்படியாகவும், குழல்கொடு- வேய்ங்குழலைக்கொண்டு, ஊதினபோது - திருப்பவளத்திலேவைத் தூதின காலத்திலே, மடம் - இளமையையுடைய, மயில்கள்போல் - மயில்கள்போலவும், பிணைமான்போல் - மான்பேடைகள்போலவும், மங்கைமார்கள் - யௌவநபருவத்தரான ஸ்த்ரீகளானவர்கள், மலர் - புஷ்பாதிகளாலே அலங்க்ர்தமான, கூந்தல் - குழல்கள், அவிழ - நெகிழ்ந்தலையவும், உடை - ஒப்பித்துடுத்த பரிவட்டம், நெகிழ - நெகிழவும், துகில் - நெகிழ்ந்த துகிலை, ஓர்கையால் - ஒருகையாலே, பற்றி-தாங்கிக்கொண்டு, ஒல்கி-லஜ்ஜையுற்றவர்களாயொடுங்கி, ஓடுஅரி - செவ்வரிகருவரியோடின, கண் - கண்கள், ஓட-அவன்பக்கலிலேயோடும்படி, நின்றனர் - நின்றார்கள்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (இடவணரையிடத்தோளொடு சாய்த்து) இடபார்ச்வத்தில் (௧) ச்மச்ருஸ்தாநத்தை இடத்திருத்தோளோடேசாய்த்து. (இருகைகூட) இரண்டு திருக்கையும் திருக்குழலோடே சேர. (புருவம்நெரிந்தேற) திருப்புருவங்களானவை நெளித்து மேலேகிளர. (குடவயிறுபட) திருவயிற்றிலே வாயுவைப் பூரித்து நிறுத்தித் திருப்பவளத்தாலே (உ) க்ரமசஃ விட்டு ஊதவேண்டுகையாலே திருவயிறு குடம்போலே தோற்ற. (வாய்கடைகூட) திருப்பவளம் இரண்டருகும்குவிந்து திருக்குழல் துளைகளளவாக. (கோவிந்தன்குழல்கொடூதினபோது) கோரக்ஷணத்திலே தீக்ஷிதனாய், அவை விலங்காமைக்கும் மேய்கைக்கும் மீளுகைக்கும் தகுதியாக வூதவல்லனுகையாலே "கோவிந்தன்" என்கிறது; அறியாதவனூதிலும் த்வநிவாய்ப்பாலே ஆகர்ஷகமாம்படியிருக்கையாலே "குழல்கொடு" என்கிறது. இத்தால் - ஊதுகிறவ

(௧) ச்மச்ரு - மீசை. (உ) க்ரமச: - முறையாக.

னுடைய ஸாமர்த்யமும், அதுக்கு உபகரணமான குழலினுடைய வைலக்ஷண்யமும் சொல்லிற்றாய்த்து. (மடமயில்களொடு மான் பிணைபோலே) மடப்பத்தையுடைத்தான மயில்கள்போலவும், நோக்கையுடைத்தான் மான்பேடைபோலவும். "மயில்கள்" என்கிற பன்மைக்கீடாக, "மான்பிணை" என்கிற ஏகவசநமும்-ஜாத்யபிப்ராயமாய், பன்மையிலேயாகக்கடவது. (மங்கைமார்கள்) யுவதிகளானஸ்த்ரீகள். (மலர்க்கூந்தலவிழ) புஷ்பாதிகளாலே அலங்க்ருதமான குழல்கள் நெகிழ்ந்தலைய. (உடைநெகிழ) ஒப்பித்துடுத்த பரியட்டம் நெகிழ. இப்படி அரைகுலையத்தலைகுலையக்குழலோசை வழியே யோடிவந்து. (ஓர்கையால் துகில்பற்றி) நெகிழ்ந்த துகிலை ஒருகையாலே தாங்கி. (ஒல்கி) ஸ்த்ரீத்வம் பின்னாட்டினபடியாலே ஒடுங்கி. (ஓடரிக்கணோட நின்றனரே) ஸ்த்ரீத்வம் பின்னாட்டினாலும் ஓடுகிறகண்ணை (க) நிஷேதிக்கப்போமோ. செவ்வரிகருவரியோடினகண்கள் அவன்பக்கலிலேயோட நின்றார்கள். "மடமயில்" "மான்பிணை" என்ற (உ) த்ருஷ்டாந்தத்வயத்துக்கும் "மலர்க்கூந்தலவிழ" "ஓடரிக்கணோட" என்ற இரண்டும் (௩) தார்ஷ்டாந்திகம். (உ)

மூ.—வானிளவரசுவைகுந்தக்குட்டன்வாசுதேவன் மதுரைமன்னனந்தர், கோனிளவரசுகோவலர்குட்டன்கோவிந்தன் குழல்கொடூதினபோது, வானிளம்படியர்வந்துவந்தீண்டிமநமுருகி மலர்க்கண்கள்பனிப்பத், தேனளவுசெறிகூந்தலவிழச் சென்னிவேர்ப்பச் செவிசேர்த்துநின்றனரே.

ப-ரை.—வான் - பரமபதத்துக்கு, இளவரசு - யுவராஜாவானவனாய், வைகுந்தம் - அத்திருநாட்டிலுள்ளார், குட்டன் - இவனுக்கு என்னகண்ணெச்சில் வருமோவென்று எப்பொழுதும் நோக்கிக்கொண்டேநிற்கவேண்டும்படியான சிறுப்பிள்ளையாய், வாசுதேவன் - ஸ்ரீவஸுதேவர்திருமகனாகையாலே வாசுதேவன் என்னும் பெயரையுடையனாய், மதுரை - வடமதுரைக்கு, மன்னன் - ராஜாவானவனாய், நந்தர்கோன் - ஸ்ரீநந்தகோபர்திருமகனான, இளவரசு - இளவரசானவனாய், கோவலர் - இடைச்சாதியெல்லாம் பரியவேண்டும்படியான, குட்டன் - இளமைப்பருவத்தையுடையனாய், கோவிந்தன் - கோரக்ஷைகாக்கையைத்தொழிலாக வுடையனானவன், குழல - எல்லாவற்றையும் தன்வசமாக்கிக்கொள்ளுதற்குரிய கருவியான வேய்ங்குழலை, கொடு - திருப்பவளத்திலே வைத்து, ஊதினபோது—, வான் - தேவலோகத்திலே வஸிப்பாராய், இள - அநுபவித்தற்குத் தகுதியாயிருந்துள்ள, படியர் - சரீரங்களையுடைய ஸ்த்ரீகள், வந்துவந்தீண்டி-குழலோசையாலேவந்து வந்துதிரண்டு, மநம் - மநஸ்ஸானது, உருகி - நீர்ப்பண்டம்போலேயுருகி, மலர் - மலர்போலேயிருக்கிற, கண்கள் - கண்களினின்றும், பனிப்ப - ஆநந்தபாஷ்பம் துளித்துவிழவும், தேன் - தேனை

(க) நிஷேதிக்க - தடுக்க. (உ) த்ருஷ்டாந்தத்வயம் - இரண்டுபமாநம். (௩) தார்ஷ்டாந்திகம் - உபமேயம்.

டே, அளவு - கூடின, செறி - செறிந்த, கூந்தல் - குழல்களானவை, அவிழ - அவிழவும், சென்னி - நெற்றியானது, வேர்ப்ப - வியர்க்கவும், செவி - காதுகளை, சேர்த்து - இக்குழலோசையிலே மடுத்துக்கொண்டு, நின்றனர் - நின்றார்கள்.

வ்யா.—மூன்றும்பாட்டு. (வானிளவரசு) பரமபதத்துக்கு இளவரசாயுள்ளவன். (க) வ்ருத்தமந்த்ரிகள்கீழே பாலராஜாவானவன் வர்த்திக்குமாபோலே யாய்த்து - "மூதுவராம் - விண்ணாட்டவர்" என்கிற நித்யஸூரிகளை ப்ரதாநராக்கி அவர்கள்கீழே தன்னையமைத்துக்கொண்டு இவர்களுக்கு சேஷியாயிருக்கும்படி. "திருவநந்தாழ்வான்மடியிலும் ஸ்ரீஸேநாபதியாழ்வான் பிரம்பின் கீழிலும் பெரியதிருவடி சிறகின்கீழிலுமாய்த்து இத்தத்த்வம்வளருவது" என்றிறேபட்டரருளிச்செய்வது. (வைகுந்தக்குட்டன்) அங்குள்ளார்க்குக் குறைசசரக்காகநினைத்து அஸ்தாநேபயசங்கைபண்ணி (உ) அநவரதம் நோக்கவேண்டும்படியான பருவத்தையுடையவன். (வாசுதேவன்) ஸ்ரீவஸுதேவர்திருமகன். இத்தால்-பிறப்பிலியானபரமபதத்தில் வ்யாவ்ருத்தி. (மதுரைமன்னன்) ஸ்ரீமதுரைக்குராஜாவானவன். பரமபதத்தில் (௩) ஸ்வதந்த்ரராயிருப்பாரொருவரில்லாமையாலே தன்னுடைய (௪) ஆச்ரிதபாரதந்த்ர்யம்தோற்ற விருக்கும்படியைப்பற்ற "இளவரசு" என்கிறது; இங்கு இருந்ததேகுடியாக ஸ்வதந்த்ரராகையாலே (௫) ஈரரசு அறுத்துக்கொண்டிருக்கும்படியைபற்ற "மன்னன்" என்றது. (நந்தர்கோனிளவரசு) "வாசுதேவன்" என்றதுக்கும் அவ்வருகேயொரு (௬) நீர்மையிறேயிது. அது ராஜகுலம், இது கோபகுலமிறே. ஸ்ரீநந்தகோபர் திருமகனானவிளவரசு. பஞ்சலக்ஷம்குடிக்கும்அரசு ஸ்ரீநந்தகோபராகையாலே இவனை "இளவரசு" என்கிறது. (கோவலர்குட்டன்) * வைகுந்தக்குட்டனில் (௭) வ்யாவ்ருத்தி. கோபஜாதியாகப்பரிந்துநோக்கவேண்டும்படியான பருவத்தையுடையவன். (கோவிந்தன்) ஜாத்யுசிதமான கோரக்ஷணமே யாத்ரையாயுள்ளவன். (குழல்கொடுதினபோது) (௮) ஸர்வவசீகாரபரிகரமான குழலைக்கொண்டுஊதினபோது. (வானிளம்படியர்) வானிலேவர்த்திப்பாராய் அந்தலோகமுள்ளவளவும் (௯) ஜராமரணங்களின்றிக்கே யிருக்குமளவன்றிக்கே, (௧௦) போகயோக்யமானசரீரங்களையுமுடைய ஸ்த்ரீகள். படி - சரீரம். (வந்து

(க) வ்ருத்தமந்த்ரி - கிழமந்த்ரி. (உ) அநவரதம் - எப்பொழுதும். (௩) ஸ்வதந்த்ரர் - தன்இச்சைப்படி நடப்பவர்கள். (௪) ஆச்ரிதபாரதந்த்ர்யம் - அடுத்தவர்களுக்கு வசப்பட்டிருக்கை. (௫) ஈரரசு - இரண்டு அரசு. (௬) நீர்மை - எல்லாருடைய கண்ணுக்கும் புலப்பட்டிருக்கை. (௭) வ்யாவ்ருத்தி - வேறுபாடு. (௮) ஸர்வவசீகாரபரிகரமான - எல்லாவற்றையும் தன்வசமாக்கத்தக்க. (௯) ஜராமரணம் - மூப்புஞ்சாக்காடும். (௧௦) போகபோக்யமான - அநுபவித்தற்குத்தக்க.

வந்திண்டி) குழலோசைவழியே வந்துவந்து திரண்டு. (மநமுருகி) மநஸ்ஸு நீர்ப்பண்டமாயுருகி. (மலர்க்கண்கள்பனிப்ப) மலர்போலேயிருக்கிறகண்களில் ஆநந்தாச்ருக்கள் துளித்துவிழ. (தேனளவுசெறிகூந்தலவிழ) ஓடிவந்தவிசையாலே புஷ்பாதிக் ளுதிர்ந்தாலும் அவைமுடிக்கையா லுண்டான தேன்சுவடு கிடக்குமிறே; ஆகையாலே தேனோடேகூடின செறிந்த குழல்க ளானவையவிழ. (சென்னிவேர்ப்ப) நெற்றிவேர்க்க. தேவஸ்த்ரீகளுக்கு வேர்ப்புண்டாமோ வென்னில்; வஸ்துக்களுக்கு ஸ்வபாவபேதங்களைப் பிறப்பிக்கும் திருக்குழலோசைபால்வந்த விக்ரிதியென்று கொள்வது. (செவிசேர்த்துநின்றனரே) இக்குழலோசையின்மேலே செவியைமடுத்துக்கொண்டுநின்றார்கள். (௩)

மூ.—தேனுகன்பிலம்பன் காளியனென்னுந் தீப்பப்பூடுகளடங்க வுழக்கிக், கானகம்படியுலாவியுலாவிக் கருஞ்சிறுக்கன்குழலூதினபோது, மேநகையொடுதிலோத்தமையரம்பையுருப்பசியரவர்வெள்கிமயங்கி, வானகம்படியில் வாய்திறப்பின்றியாடல்பாடலவைமாறினர் தாமே.

ப-ரை.—தேனுகன் - கழுதைவடிவுகொண்டு காட்டில்நலிவதாகவந்த தேநுகன், பிலம்பன் - * தன்னோராயிரம்பிள்ளைகளும் தானுமாய் விளையாடாநிற்க அவர்களோடொத்த வடிவையுடையனாய்க்கொண்டு சங்கவண்ணநம்பியுடன் விளையாடி அவனை நலியத்தேடினப்ரலம்பன், காளியன்-ஆனையரும் ஆநிரையும் தண்ணீர்குடிக்கிறமடுவை விஷதூஷிதமாக்கிக்கொண்டுகிடந்த காளியன், என்னும் - என்றுசொல்லப்பட்ட, தீப்ப - தீம்பினையுடைய, பூடுகள் - பூண்டுகளை, அடங்க - எல்லாம், உழக்கி - தலையழித்துப்பொகட்டு, கானகம்-காட்டுக்குள்ளே, படி - ஸ்வபாவமாக, தன்னிச்சையாலே நின்று, உலாவியுலாவி—, கரு - ச்யாமளமானதிருமேனியையும், சிறுக்கன் - இளமையையுமுடையவன், குழலூதினபோது—, மேலுலகங்களில் ஆசைக்கும் பாடுகைக்குந்தங்களுக்குமேற்பட்டா ரில்லையென்று ப்ரஸித்தைகளாயிருக்கும், மேநகையொடு-மேநகையும், திலோத்தமை - திலோத்தமையும், அரம்பை - ரம்பாஸ்த்ரீயும், உருப்பசி - உர்வசியுமான, அரவர் - அப்ஸரஸ்ஸுக்களானவர்கள், இவன்நடையழகையுங் குழலோசையையுங் கண்ணாலுஞ்செவியாலு மநுபவித்து, வெள்கி - "நாம்சிலராயாடிப்பாடித்திரிகிறோமே" என்று லஜ்ஜித்து, மயங்கி-லஜ்ஜையின் மிகுதியாலேமயங்கி, வானகத்தில் - தேவலோகத்திலும், படியில் - பூலோகத்திலும், ஆடப்பாடவென்கிறவிவற்றை, வாய்திறப்பின்றி - வாயாற்சொல்லக்கடவோமல்லோமென்று, ஆடல்பாடலவை - ஆடலும் பாடலுமாகிற விவற்றை, மாறினர் - தவிர்ந்துவிட்டார்கள்.

வ்யா.—நாலாம்பாட்டு. (தேனுகனித்யாதி) கழுதையானவடிவைக்கொண்டு காட்டுக்குள்ளே நலிவதாகவந்துநின்ற தேநுகன், இடைப்பிள்ளைகளும் தானுமாக விளையாடா நிற்கச்செய்தே அவர்களோடு ஸமாநரூபனாய்க்கொண்டு வந்துகலந்து (க) நம்பிமூத்தபிரா

(க) நம்பிமூத்தபிரான் - பலராமன்.

ஞெடொக்கவிளையாடி நலியத்தேடின ப்ரலம்பன், பசுக்களும் இடையரும் தண்ணீர்குடிக்கிறமடுவை விஷத்தாலே தூஷித்துக் கொண்டுகிடந்தகாளியன் என்றுசொல்லப்பட்ட துஷ்பூண்டுகளை யடங்கத் (க) தலையழித்துப்போகட்டு. தீப்பப்பூடென்றது - பரஹிம்ஸாரூபமான தீம்பையுடைத்தான பூண்டென்றபடி. ஒரொன்றே (உ) அதிப்ரபலமாயிருக்க, இவற்றை "பூடுகள்" என்று (௩) க்ஷுத்ரமாகச் சொல்லிற்று - நிரஸிக்கிறவனுடைய பலத்துக்கு இவை (ச) அத்யாபாஸங்கள் என்று தோற்றுகைக்காக. ஆகையாலிறே "அழித்து" என்னாதே, "உழக்கி" என்றது. (கானகம்படியுலாவியுலாவி) வாசியறிவாரில்லாத காட்டுக்குள்ளே "தன்னுடைய நடையழகு காட்டவேணும்" என்னும் கருத்தாலன்றிக்கே, ஸ்வாபாவிகமாகத் தன்னிச்சையாலேநின்று ஸஞ்சரித்து ஸஞ்சரித்து. எப்படியேயானாலும் அடிமாறி யிடப்புக்கால் (ரு) வல்லாராடினாற் போலே யிருப்பது. (கருஞ்சிறுக்கன் குழலூதினபோது) * கண்டவர்கள் கண்குளிரும்படி ச்யாமளமான திருமேனியையும் பருவத்தால்வந்த இளமையையுமுடையவன் குழலூதினபோது. இப்படியுலாவிக்கொண்டுநின்று திருக்குழலை யூதினவளவில். (மேநகையித்யாதி) "உபரிதநலோகங்களில் ஆடுகைக்கும் பாடுகைக்கும் தங்களுக்கு மேற்பட்டாரில்லை" என்று ப்ரஸித்தைகளாயிருக்கும் மேநகை திலோத்தமை ரம்பை உர்வசி என்கிற அப்ஸரஸ்ஸுக்களானவர்கள் இவன் நடையழகையும் குழலோசையையும் கண்ணாலும் செவியாலுமநுபவிக்கையாலே "நாமும் சிலராய் ஆடிப்பாடித்திரிகிறோமே" என்று லஜ்ஜித்து, லஜ்ஜையினுடைய முதிர்த்தியாலே மயங்கி. (வானகமித்யாதி) வானிடத்திலும் பூமியிடத்திலும் ஆடப்பாட என்கிறவிது நம்வாயாற் சொல்லக்கடவோமல்லோம் என்றுதங்களுடைய ஆடலும்பாடலுமாகிற விவற்றைத் தவிர்ந்தார்கள். இவர்கள் இப்படிதவிர்ந்தது, இரண்டினுடையவும் வாசியறிந்த மத்யஸ்தரானவர்கள் "இனி நீங்களாடவும் பாடவும்வேண்டா" என்று தவிர்க்கையாலேயோவென்னில்; அன்று (தாமே) தாங்களே தவிர்ந்துவிட்டார்கள். (ச)

மூ.—முன்னரசிங்கமதாகியவுணன் முக்கியத்தைமுடிப்பான்மூவுலகின், மன்னரஞ்சுமதுசூதநன்வாயிற் குழலினோசைசெவியைப்பற்றிவாங்க, நன்னரம்புடைய தும்புருவோடுநாரதனுந் தந்தம்வீணைமறந்து, கிந்நரமிதுநங்களுந் தந்தங்கிந்நரந் தொடுகிலோமென்றனரே.

(க) தலையழித்தல் - வேரோடுபிடுங்குதல். (உ) அதிப்ரபலமாயிருக்க - மிக்கவலிவுள்ளதாயிருக்க. (௩) க்ஷுத்ரம் - அற்பம். (ச) அத்யாபாஸம் - மிகத்தண்ணியது. (ரு) வல்லார் - ஆடவல்லவர்கள்.

ப-ரை.—முன் - முற்காலத்திலே, நரசிங்கமதாகி - நரத்வஸிம்ஹத்வங்களிரண்டையுஞ்சேர்த்து ஒருவடிவாக்கிக்கொண்டு, அவுணன் - "தானேயெல்லாவுலகுக்குந்தலைவன்" என்று விருதூதித்திரிந்த ஹிரண்யாஸுரனுடைய, முக்கியத்தை - பெருமையை, முடிப்பான் - அழித்துப்பொகட்டவனாய், மூவுலகில் - மூன்றுலோகங்களிலுமுண்டான, மன்னர் - ராஜாக்களும், அஞ்சும் - தன்னுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களைக்கண்டு உள்ளம்நடுங்கும்படி யிருக்கிறவனாய், மதுசூதனன் - மதுவையழித்துப் பொகட்டமையால் மதுஸூதநன் என்னும் பெயரையுடைய க்ருஷ்ணன், வாயில் - திருப்பவளத்தில்வைத்தூதின, குழலின் - திருக்குழலினுடைய, ஓசை - த்வநியானது, செவியை —, பற்றிவாங்க - பிடித்திழுக்க, நல் - கேட்டவர்களையெல்லாம் த்வநியாலே தன்வசமாக்கவற்றான நன்மையையுடைய, நரம்பு - வீணைநரம்பை, உடைய - தந்தாமுக்குப் பெரியவுடைமையாக நினைத்திருக்கும், தும்புருவோடு - தும்புருவும், நாரதனும் —, தந்தம் - தந்தாமுக்கு எப்பொழுதும் விரும்பத்தக்க, வீணை - வீணைகளை, மறந்து - மறந்ததுமன்றிக்கே, கிந்நரமிதுநங்களும் - கிந்நரங்கொண்டுபாடித்திரிகையாலே கிந்நரமிதுநங்களென்று சொல்லப்படுமவர்களும், தந்தம் - தந்தாமுடைய, கிந்நரம் - கிந்நரங்களை, தொடுகிலோமென்றனர் - இனித்தொடக்கடவோமல்லோமென்று விட்டார்கள்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (முன்நரசிங்கமதாகி) முற்காலத்திலே (க) "தேவாதிசதுர்விதஜாதியில் ஒன்றாலும் (உ) படக்கடவேனல்லேன்" என்று அவன்கொண்டவரத்துக்கு (௩) அவிருத்தமாக (௪) நிரஸிக்கைக்காக "నరస్యార్థతనుం కృత్వా సింహస్యార్థతనుం తథా" "நரஸ்யார்த்ததநுங்க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்ததநுந்ததா" என்கிறபடியே - நரத்வ ஸிம்ஹத்வங்களிரண்டையும் சேர்த்து ஒருவடிவாகக்கொண்டு. "அதாகி" என்றது, இப்படிநரத்வ ஸிம்ஹத்வங்களைச் சேர்த்து ஒருவடிவாக்கினவிடத்தில் சேராச்சேர்த்தியாயிருக்கையன்றிக்கே " அழகியான்தானே யரியுருவன்தானே " என்னும்படி இருந்த வழகினுடைய வதிசயத்தைச் சொல்லுகிறது. (அவுணன் முக்கியத்தை முடிப்பான்) எல்லையில்லாத பெரும்தவத்தாலே பலமிறுக்குக்களைப்பண்ணிநின்றுகொண்டு அமரரையல்லல்செய்துதானே ஜகத்துக்கெல்லாம் ப்ரதாநனாய், பகவந்நாமம்கேட்கப்பொறாமல் அதுசொன்னதுவே ஹேதுவாக "வயிற்றிற்பிறந்தபிள்ளை" என்று பாராதே (௫) வாசாமகோசரமான (௬) பீடைகளையெல்லாம் பண்ணின ஹிரண்யாஸுரனுடைய (௭) வேண்டப்பாட்டை யழித்துப் பொகட்டவன். (மூவுலகில்மன்னரஞ்சும்) மூன்றுலோகத்திலுண்டான ராஜாக்களும், அதிமாநுஷ சேஷ்டிதங்களால்வந்த தன்மதிப்

(க) தேவாதிசதுர்விதஜாதி - தேவர், மனிதர், விலங்கு, அசையாப்பொருள் என்கிற நால்வகைஜாதிகள். (உ) பட - சாக. (௩) அவிருத்தமாக - விரோதமின்றிக்கே. (௪) நிரஸிக்கைக்காக - கொல்லுகைக்காக. (௫) வாசாமகோசரமான - வாயாற்சொல்லக்கூடாத. (௬) பீடை - துன்பம். (௭) வேண்டப்பாடு - பெருமை.

யைக்கண்டால் உள்ளம் நடுங்கும்படியிருக்கிற. (மதுசூதநன்வாயிற் குழலினோசை செவியைப்பற்றிவாங்க) ஆச்ரிதவிரோதியான மதுவை நிரஸித்தவனுடைய திருப்பவளத்தில் வைத்தூதின திருக்குழலினுடையத்வநியானது செவியைப்பிடித்திழுக்க. (நன்னரம்பித்யாதி) செவிபடைத்தாரெல்லாரையும் தன்னுடையத்வநியாலே வசீகரிக்கவற்றானநன்மையையுடையவீணாநரம்பைத் தந்தாமுக்குப்பெரியவுடைமையாக நினைத்திருக்கும் தும்புருவும் நாரதனும். (க) "காநவித்யைக்கு தும்புருநாரதர்" என்று ஸர்வலோக ப்ரஸித்தராயிருக்குமவர்களிறே; இப்படி யிருக்கிறவர்களும். (தந்தம்வீணைமறந்து) தந்தாமுக்குஸர்வகாலமும் (உ) அபிமதமானவீணைகளையெடுத்துப் பாடாதவளவன்றிக்கே, அவைதன்னை நேராகமறந்து. (கிந்நரமித்யாதி) கிந்நரங்கொண்டுபாடித்திரிகையாலே "கிந்நரமிதுநங்கள்" என்று ஜகத்ப்ரஸித்தங்களா யிருக்கிறவர்களும் தந்தாமுடைய கிந்நரம் இனித்தொடக்கடவோமல்லோமென்றுவிட்டார்கள். (ரு)

மூ.—செம்பெருந்தடங்கண்ணன் றிரடோளன்றேவகி சிறுவன்றேவர்கள்சிங்கம், நம்பரமனிந்நாள் குழலூதக்கேட்டவர்க ளிடருற்றனகேளீர், அம்பரந்திரியுங்காந்தப்ப ரெல்லாமமுதகீதவலையாற்சுருக்குண்டு, நம்பரமன்றென்றுநாணிமயங்கி நைந்துசோர்ந்து கைமறித்துநின்றனரே.

ப-ரை.—செம் - சிவந்து, பெரும்தடம் - மிகவும் பெருத்திருக்கிற, கண்ணன் - திருக்கண்களையுடையனாய், திரள் - மூங்கில்போலே திரண்டிருக்கிற, தோளன் - திருத்தோள்களையுடையனாய், தேவகி - தேவகிப்பிராட்டிக்கு, சிறுவன் - புத்ரனாய், தேவர்கள் - துர்மாநிகளான தேவர்களுக்கு, சிங்கம் - ஸிம்ஹம்போலே அநபிபவநீயனாய், நம் - தன்னருளுக்கு பாத்ரபூதரானநமக்கு, பரமன் - தன்பெருமையெல்லா மறியலாம்படியிருக்குமவன், இந்நாள் - இற்றைநாள், குழலூத—, கேட்டவர்கள் - இக்குழலோசையைக் கேட்டவர்கள், இடருற்றன-இடருற்றப்ரகாரங்களை, கேளீர்-கேளுங்கள்; அம்பரம்-ஆகாசத்திலே, திரியும்-எப்பொழுதும் இசைபாடித்திரிகிற, காந்தப்பரெல்லாம்-கந்தர்வஜாதியரெல்லாம், அமுதம்-அம்ருதம்போலேயினிதான, கீதம் - இசையாகிற, வலையால்-வலையிலே, சுருக்குண்டு - கட்டுண்டு, நம்பரமன்றென்று - இனிப்பாட நம்மாலாகாதென்று, நாணி - கீழேபாடினதுக்கும் லஜ்ஜித்து, மயங்கி - ஒன்றையும் நினைக்கமாட்டாதபடி யறிவழிந்து, நைந்து - அறிவுக்குவாய்த்தலையான மநஸ்ஸும் சிதிலமாய், சோர்ந்து - சரீரமும் கட்டுக்குலைந்து, கைமறித்துநின்றனர் - ஒன்றுக்கும் க்ஷமரல்லோமென்று கையைமறித்துக்கொண்டு நின்றார்கள்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (செம்பெருந்தடங்கண்ணன்) சிவந்து மிகவும்பெருத்திருக்கிற திருக்கண்களையுடையவன். (திரடோளன்) (௩) கணையங்கள்போலே திரண்டிருக்கிற திருத்தோள்களையுடை

(க) காநவித்யை - இசைநூல். (உ) அபிமதம் - இஷ்டம். (௩) கணையங்கள்போலே - உழலைத்தடிபோலே.

யவன். (தேவகிசிறுவன்) தேவகிப்பிராட்டிக்கு (௧) விதேயனான புத்ரனானவன். (தேவர்கள்சிங்கம்) துர்மாநிகளான தேவர்களுக்கு ஸிம்ஹம்போலே (௨) அநபிபவநீயனாயிருக்குமவன். (நம்பரமன்) தன்னபிமாநாந்தர்ப்பூதரான நமக்குத் தன்பெருமையெல்லா மறியலாம்படி யிருக்குமவன். (இந்நாள்குழலூத) இற்றைநாள் குழலூத. (கேட்டவர்களிடருற்றனகேளீர்) இக்குழலோசையைக் கேட்டவர்கள் இதினுடையரஸத்தாலே வித்தரானபடியைக் கேளிகோள். கேட்டவர்கள்தான் ஆர், அவர்களிடருற்ற ப்ரகாரமென்னென்ன; சொல்லுகிறதுமேல் (அம்பரமித்யாதி) (௩) அந்தரிக்ஷசாரிகளாய் (௪) ந்ருத்தகீத பரராய்ப்போரும் கந்தர்வஜாதி யெல்லாம் அம்ருதம்போலே யினிதான காநவலையிலே கட்டுண்டு. (நம்பரமன்றென்று) இனிப்பாடவென்பதொன்று நமக்குபரமன்றென்று. (நாணி) கீழ் பாடிப்போனதுக்கும் லஜ்ஜித்து. (மயங்கி) கீழ்மேல்ஒன்றுதானும் நினைக்கமாட்டாதபடி யறிவழிந்து. (நைந்து) அறிவுக்கு த்வாரமான (௫) அந்தஃகரணம் (௬) சிதிலமாய். (சோர்ந்து) சரீரம் கட்டுக்குலைந்து தளர்ந்து. (கைமறித்து நின்றனரே) தங்கள்தளர்த்தி வாக்கால் சொல்லவும் பலமற்று "ஒன்றுக்கும்க்ஷமரல்லோம்" என்று கையைமறித்துக்கொண்டு நின்றார்கள். (௬)

மூ.—புவியுள்நான்கண்டதோரற்புதங்கேளீர் பூணிமேய்க்குமிளங்கோவலர்கூட்டத், தவையுள்நாகத்தணையான்குழலூத வமரலோகத்தளவுஞ்சென்றிசைப்ப,அவியுணாமறந்துவானவரெல்லா மாயர்பாடிநிறையப்புகுந்தீண்டிச், செவியுணாவின்சுவைகொண்டுமகிழ்ந்து கோவிந்தனைத்தொடர்ந்தென்றும்விடாரே.

ப-ரை.—புவியுள் - பூமியிலே, நான் —, கண்டதோர் - என்கண்ணால் கண்டதொரு, அற்புதம் - ஆச்சரியத்தை, கேளீர் - கேளுங்களென்ன; அத்தைச்சொல்லிக் காணீரென்னச்சொல்லுகிறார்மேல்; பூணி - கன்றுகள், மேய்க்கும் - மேய்த்துத்திரியும், இளங்கோவலர் கூட்டத்தவையுள் - கோபாலபாலர் மிக்கிருக்குமுள்ளஸபையிலே, நாகத்தணையான் - திருவநந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டருளும்ஸர்வேச்வரன், அச்சாதியனாய்நின்று, குழல் - திருக்குழலை, ஊத - திருப்பவளத்தில்வைத்தூத, அதின்த்வநியானது, அமரலோகத்தளவும் - தேவலோகத்தளவும், சென்று—, இசைப்ப - த்வநிக்க, வானவரெல்லாம்-தேவர்களெல்லாரும், அவி-யாகங்களிலே அந்தணராலளிக்கப்படுகிற ஹவிஸ்ஸுக்களை, உணா - உண்ண, மறந்து - மறந்ததுமன்றி, ஆயர்பாடி-திருவாய்ப்பாடியானது, நிறைய - நிறையும்படி, புகுந்து - வந்து, ஈண்டி-நெருங்கி, செவியுணா - செவி

(௧) விதேயன் - கீழ்ப்படிந்தவன். (௨) அநபிபவநீயன் - ஒருவராலும் ஜயிக்கப்படாதவன். (௩) அந்தரிக்ஷசாரிகள் - ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவர்கள். (௪) ந்ருத்தகீதபரர் - ஆடல்பாடலில் விருப்பமுள்ளவர்கள். (௫) அந்தஃகரணம் - மனது. (௬) சிதிலமாய் - உருமாய்ந்துபோய்.

யின் உள்நாவாலே, இன்சுவை - குழலோசையின் இனியரஸத்தை, கொண்டு - உட்கொண்டு, மகிழ்ந்து - களித்து, கோவிந்தனை - கோரக்ஷணபரனானவனை, தொடர்ந்து - அவன்போனவிடமெங்கும் தொடர்ந்து, என்றும் - ஒருக்ஷணகாலமும், விடார் - விடாமலிருந்தார்கள்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (புவியுள் நான்கண்டதோ ரற்புதம் கேளீர்) கார்காலத்திலே கருமுகைபூத்தாற்போலே இப்படியிருப்பதொன்று உண்டாகைக்கு(க) போக்யதையில்லாத பூமியிலே, "இது (உ) அகடிதம்" என்று அறிந்தநான் பிறர்வாயால் கேட்கையன்றிக்கே(ங)ப்ரத்யக்ஷமாகக்கண்டதோ ராச்சர்யம் கேளிகோள். (பூணிமேய்க்குமிளம் கோவலர்கூட்டத்தவையுள்) குழல்களூதிக்கொண்டு கன்றுகளும் பசுக்களும்மேய்த்துத்திரியும் இளங்காலிகளான விடையர் திரண்ட திரளில். (நாகத்தணையான்குழலூத) அநந்தசாயியாகையாலே ஸர்வாதிகனானவன் (ச) தத்ஸஜாதியனாய்நின்றுகுழலூத. (அமரலோகத்தளவும் சென்றிசைப்ப) அந்தக்குழலோசை தேவலோகத்தளவும்சென்று த்வநிக்க. (அவியுணாமறந்து வானவரெல்லாம்) தேவர்களெல்லாரும், தங்களுடைய (ரு) கௌரவாநுகுணமாக யாகங்களிலே ப்ராஹ்மணர் ஸமர்ப்பிக்கும் ஹவிஸ்ஸுக்களை புஜிக்கமறந்து. அவர்களுக்கு தாரகாதிகளெல்லாம் அம்ருதமாயிருக்க அதுமறந்தார்கள் என்னுதே, இத்தைச்சொல்லிற்று - தங்கள் (சு) வைபவத்துக்குறுப்பாகையாலே அதிலுங்காட்டில் அவர்கள்விரும்பி ஜீவிப்பது இதுவாகையாலே. (ஆயர்பாடிநிறையப்புகுந்தீண்டி) அவ்வளவன்றிக்கே மநுஷ்யகந்தம்பொறுமல் பூமியில்காலிட அருவருத்துத் திரியுமவர்கள் "இவன்பிறந்துவளருகிறஊர்" என்னுமத்தாலே திருவாய்ப்பாடி நிறையப்புகுந்து திரண்டு. (செவியுணாவின்சுவைகொண்டுமகிழ்ந்து) செவிக்குள்ளில் நாவாலே குழலில்பிறந்த இசையின் இனியரஸத்தைபுஜித்து ஆநந்தித்து. செவிக்குநாவுண்டோவென்னில்; "செவியுணாநீட்ட" எனக்கடவதிறே; சேதந (எ) ஸமாதியாலேசொல்லுகிறது. அன்றிக்கே, செவிக்கு உணவாயிருந்துள்ள இனிதானகாநரஸத்தை புஜித்து என்னவுமாம். "செவிக்குணவில்லாதபோது" என்றுனிறே. (கோவிந்தனைத்தொடர்ந்தென்றும்விடாரே) கோரக்ஷணபரனானவனை அவன்போனவிடமெங்கும் தொடர்ந்து ஒருக்ஷணகாலமும் விடுகிறிலர்கள். (அ) ஸர்வஸ்மாத்பரனானவன் கோபஸங்க மத்யத்திலே தத்ஸஜாதீயனாய் நின்று குழலூதுகையும், அந்தக்குழலோசை தேவலோகத்தளவும்

---

(க) போக்யதை - விஷயம். (உ) அகடிதம் - கூடாதது. (ங) ப்ரத்யக்ஷமாக - கண்முன்னே. (ச) தத்ஸஜாதியனாய் - அக்குலத்தனாகி. (ரு) கௌரவாநுகுணமாக - பெருமைக்குத்தக்கபடி. (சு) வைபவம் - பெருமை. (எ) ஸமாதியாலே - நினைவாலே. (அ) ஸர்வஸ்மாத்பரன் - எல்லாரிலுமுயர்ந்தவன்.

செல்லுகையும், அத்தைக்கேட்டுத் தேவர்களெல்லாரும் தாங்கள் விரும்பியிருக்கும் ஹவிர்ப்போஜநத்தை மறக்கையும், அவ்வளவன்றிக்கே மநுஷ்யகந்தம்பொறுதவர்கள் (க) கோபச்ரேணியிலேவந்து திரளுகையும், இந்தக்குழலோசையினுடைய ரஸத்தை புஜித்து (உ) ஆநந்திகளாய்க்கொண்டு இவனைவிடாதே பின்பற்றித் திரிகையுமாகிற இவையெல்லாம் (௩) அகடிதங்களாகையாலும், இதுக்குமுன்பு இந்தலோகத்தில் கண்டறியாமையாலுமிறே "புவியுள்நான்கண்டதோ ரற்புதங்கேளீர்" என்று அருளிச்செய்தது.

மூ.—சிறுவிரல்கடடவிப்பரிமாறச்செங்கண் கோடச்செய்யவாய்க்
கொப்பளிப்பக்,குறுவெயர்ப்புருவங்கூடலிப்பக்கோவிந்தன்
குழல்கொடூதினபோது, பறவையின்கணங்கள்கூடுதுறந்து
வந்துசூழ்ந்து படுகாடுகிடப்பக், கறவையின்கணங்கள்கால்
பரப்பிட்டுக்கவிழ்ந்திறங்கிச் செவியாட்டகில்லாவே.

ப-ரை.—சிறு-சிறுத்திருந்துள்ள, விரல்கள் - திருவிரற்களானவை, தடவி-தடவிக்கொண்டு, பரிமாற - வ்யாபரிக்கும்படியாகவும், செம் - சிவந்த, கண் - திருக்கண்களானவை, கோட - வளையும்படியாகவும், செய்ய - சிவந்த, வாய் - திருப்பவளமானது, கொப்பளிப்ப - குமிழ்க்கும்படியாகவும், குறுவெயர் - குறுவெயர்ப்பரும்பின, புருவம் - திருப்புருவமானது, கூடலிப்ப - மேலேகிளர்ந்து வளையும்படியாகவும், கோவிந்தன் - கோவிந்தனானவன், குழல்கொடு - திருக்குழலைக்கொண்டு, ஊதினபோது—, பறவையின்கணங்கள் - பக்ஷிகளினுடைய திரள்களானவை, கூடுதுறந்து - தந்தாமுடைய கூட்டைவிட்டு, வந்து - க்ர்ஷ்ணன்பக்கலிலேவந்து, சூழ்ந்து - சூழ்ந்துகொண்டு, படுகாடு - வெட்டிவிழுந்த காடுபோலே, கிடப்ப - மெய்மறந்துகிடக்க, கறவையின்கணங்கள் - பசுக்களினுடைய திரள்களானவை, கால்பரப்பிட்டு - கால்களைப்பரப்பி, கவிழ்ந்திறங்கி-தலைகளைமிகவும் தொங்கவிட்டுக்கொண்டு, செவி-காதுகளை, ஆட்டகில்லா-அசைக்கவும்மாட்டாதே நின்றன.

வ்யா.—எட்டாம்பாட்டு. (சிறுவிரல்கள்தடவிப்பரிமாற) "கருஞ்சிறுக்கன்" என்றபருவத்துக்குத் தகுதியாம்படி சிறுத்திருந்துள்ள திருவிரற்களானவை திருக்குழலின்துளைகளில் புதைக்கவேண்டுவது புதைத்துத் திறக்கவேண்டுவது திறக்கைக்காகக் குழலின் துளைகளைத் தடவிக்கொண்டு வ்யாபரிக்க. (செங்கண்கோட) * இடவணரையிடத்தோளொடுசாய்த்துத் துளைதோறும்கண்ணோடநின்று ஊதுகையாலே, சிவந்திருக்கிற திருக்கண்களானவை வக்ரிக்க. (செய்யவாய்கொப்பளிப்ப) "வாய்கடைகூட" என்கிறபடியே இரண்டு கடைவாயையும்குவித்து ஊதுகிறபோது சிவந்ததிருப்பவளமானது (ச) அகவாயிலுண்டான வாயுவினுடைய பூரிப்பாலே குமிழ்க்க. (குறுவெயர்ப்புருவங்கூடலிப்ப) உலாவியுலாவிக் குழலூ

(க) கோபச்ரேணி - இடைச்சேரி. (உ) ஆநந்திகளாய்-களித்து. (௩) அகடிதங்கள் - கூடாதவைகள். (ச) அகவாயில் - உள்ளே.

துகிற ஆயாஸம்பொறுமல் (க) ஸௌகுமார்யத்தாலே குறுவெயர்ப் பரும்பின திருப்புருவமானது மேலேகிளர்ந்துவளைய. (கோவிந்தன் குழல்கொடூதினபோது) கோரக்ஷணத்திலேதீக்ஷிதனுய் அவற்றை மேய்த்துக்கொண்டுதிரியுமவன் அவைமேய்ந்து வயிறுநிறைந்த (உ) ஹர்ஷத்தாலே (௩) ஸர்வஜந்துஜாதமநோஹரமான திருக்குழலைக் கொண்டு ஊதினபோது. (பறவையின்கணங்கள்) பக்ஷிகளினுடைய திரள்கள். (கூடுதுறந்து) தந்தாமுடையவஸ்தவ்யஸ்தலங்களைவிட்டு. (வந்துசூழ்ந்து படுகாடுகிடப்ப) குழலோசைவழியே ஊதுகிறவனளவும்வந்துசூழ்ந்துகொண்டு வெட்டிவிழுந்த காடுபோலே(ச) பரவசமாய்க்கிடக்க. (கறவையின்கணங்கள்) பசுக்களினுடைய திரள்களானவை. (கால்பரப்பிட்டு) பாரவச்யத்தாலே கால்களைப்பரப்பி. (கவிழ்ந்திறங்கி) தலைகளைமிகவும் (ரு) நாற்றிக்கொண்டு. (செவியாட்டகில்லாவே) "செவியையசைக்கில் இசைக்குப்ரதிபந்தகமாம்" என்று செவியையாட்டவும் மாட்டாதேநின்றன. (அ)

மூ.—திரண்டெழுதழைமழைமுகில்வண்ணன்செங்கமலமலர்சூழ் வண்டினம்போலே, சுருண்டிருண்டகுழல்தாழ்ந்த முகத்தானூதுகின்றகுழலோசைவழியே, மருண்டுமான்கணங்கள் மேய்கைமறந்து மேய்ந்தபுல்லுங்கடைவாய்வழிசோர, இரண்டுபாடுந்துலுங்காப் புடைபெயராவெழுதுசித்திரங்கள் போலநின்றனவே.

ப-ரை.—திரண்டு - கார்காலத்திலேதிரண்டு, எழு - மேலெழுந்து, தழை - தழைப்புண்டாயிருக்கிற, மழைமுகில் - காளமேகம்போன்ற, வண்ணன் - திருநிறத்தையுடையனானவன், செம் - சிவந்த, கமலமலர் - தாமரைப்பூவை, சூழ் - சூழப்படிந்த, வண்டினம்போலே - வண்டினுடையதிரள்போலே, சுருண்டிருண்ட - சுருட்சியையுமிருட்சியையு முடைத்தான, குழல்-திருக்குழல்கள், தாழ்ந்த—, முகத்தான் - முகத்தையுடையவன், ஊதுகின்ற - ஊதாநின்றுள்ள, குழலோசைவழியே - குழலோசை செவிப்பட்டவழியே, மான்கணங்கள் - மான்திரள்களானவை, மருண்டு - அறிவழிந்து, மேய்கை - மேய்ச்சலை, மறந்து - தவிருகையன்றிக்கே, மேய்ந்த - மேயக்கவ்வின, புல்லும்—, கடைவாய்வழி-கடைவாய்வழியே, சோர-நழுவிவிழ, இரண்டுபாடும் - முன்னும்பின்னுமான விரண்டருகும், துலுங்கா - அசையாமலும், புடை - பக்கங்களில், பெயரா-அடிபெயரமாட்டாமலும், எழுது-சுவர்முதலியவற்றில் எழுதப்பட்ட, சித்திரங்கள்போல—, நின்றன - ஒருசெயலற்று நின்றன.

வ்யா. — ஒன்பதாம்பாட்டு. (திரண்டெழு தழைமழைமுகில் வண்ணன்) (சு) கார்காலத்திலே தன்னிலே திரண்டுகிளர்ந்து அக

(க) ஸௌகுமார்யம்-மென்மைத்தன்மை. (உ) ஹர்ஷத்தாலே - ஸந்தோஷத்தாலே. (௩) ஸர்வஜந்துஜாதமநோஹரம் - எல்லாப்ராணிகளுடையவும் மனதைக்கவருமது. (ச) பரவசமாய் - மெய்மறந்து. (ரு) நாற்றிக்கொண்டு - தொங்கவிட்டுக்கொண்டு. (சு) கார்காலம் - மழைக்காலம்.

வாயில் நீர்க்கநத்தாலே தழைப்புண்டாயிருக்கிற (௧) வர்ஷுக வலாஹகம்போலேயிருக்கிற திருநிறத்தையுடையவன். (செங்கமல மித்யாதி) சிவந்ததாமரைப்பூவைச்சூழப்படிந்தவண்டினுடையதிரள் போலே சுருட்சியையுமிருட்சியையு முடைத்தான திருக்குழல்கள் தாழ்ந்த திருமுகத்தையுடையவன். (ஊதுகின்ற குழலோசைவழியே) ஊதாநின்றுள்ள திருக்குழலோசை செவிப்பட்டவழியே. (மருண்டித்யாதி) மான்திரள்களானவை(௨)ஸஜாதீயவிஜாதீய விபாகாதிகள்தோன்றாதபடி அறிவழிந்து, தனக்கு (௩) தாரகமாக எப்போதும்செய்து போரும்மேய்கையைத் தவிருகையன்றிக்கே, (௪) விஸ்மரித்துமேயக்கவ்வின புல்லும் இறக்குதல் உமிழ்தல்செய்யமாட்டாத பாரவச்யத்தாலே கடைவாய்வழியேநழுவிவிழ. (இரண்டு பாடுமித்யாதி) முன்னும்பின்னுமான விரண்டருகும் அசையாதே பக்கங்களில் போகவும்மாட்டாதே சித்ரத்திலெழுதினவைபோலே ஒருவ்யாபாரமற்றுநின்றன. (௯)

மூ.—கருங்கண்டோகை மயிற்பீலியணிந்துகட்டிநன்குடுத்த பீதக
வாடை, அருங்கலவுருவினாயர் பெருமானவனொருவன் குழ
லூதினபோது, மரங்கணின்றுமதுதாரைகள்பாயு மலர்கள்
வீழும் வளர்கொம்புகடாழும், இரங்குங்கூம்புந்திருமானி
ன்றநின்றபக்கநோக்கி யவைசெய்யுங்குணமே.

ப-ரை.—கரு - கறுத்த, கண் - கண்ணையுடைத்தான, தோகை - இறகுகளையுடைய, மயில்பீலி - மயில்பிச்சங்களை, அணிந்து - திருமுடியிலே சாத்திக்கொண்டு, நன்கு - நன்றாக, கட்டியுடுத்த - அழுந்தச்சாத்தின, பீதகவாடை - திருப்பீதாம்பரத்தையும், அரு - பெறுதற்கரிய, கலம் - திருவாபரணங்களையுமுடைய, உருவின் - திருமேனியையுடையனாய், ஆயர் - இடையர்க்கெல்லாம், பெருமானவன் - தலைவனானவனாய், ஒருவன் - ஒப்பற்றவனாயிருக்கிறவன், குழலூதினபோது—, மரங்கள் - மரங்களானவை, நின்று - ஒருபடிப்படநின்று, மதுதாரைகள் - மதுதாரைகளை, பாயும் - பாயாநிற்கும்; மலர்கள் - கொம்பில்நிற்கிற பூக்களெல்லாம், வீழும் - நிலைகுலைந்துவிழாநிற்கும்; வளர் - மேலேவளருகிற, கொம்புகள் - கொம்புகளானவை, தாழும் - கீழேபடியாநிற்கும்; இரங்கும் - தன்னிலைகுலைந்து ஈடுபடாநிற்கும்; திருமால் - ஸ்ரீய:பதியானவன், நின்றநின்றபக்கம்நோக்கி - குழலூதிக்கொண்டுநின்ற நின்றபக்கங்களைநோக்கி, கூம்பும் - அஞ்சலிசெய்வாரைப்போலே தாழ்ந்தகொம்புகளைக்குவியாநிற்கும்; அவை - அம்மரங்களானவை, செய்யும் - செய்த, குணமே! - குணமிருந்தபடியென்னென்று ஆச்சர்யப்படுகிறார்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (கருங்கண்டோகையித்யாதி) கருகின கண்ணையுடைத்தான தோகைமயிற்பீலியைத் திருமுடிக்கு அலங்

(௧) வர்ஷுகவலாஹகம் - மழைகாலத்துமேகம். (௨) ஸஜாதீயவிஜாதீய விபாகம் - தன்ஜாதி அந்யஜாதியென்கிற வேறுபாடு. (௩) தாரகம் - தரிக்கப் பண்ணுமது. (௪) விஸ்மரித்து - மறந்து.

காரமாகச்சாத்தி. (கட்டிநன்குடுத்த பீதகவாடையருங்கலவுருவின்) திருவரையூத்தாற்போலே அழுந்தக்கொண்டு நன்ருகச்சாத்தின திருப்பீதாம்பரத்தையும், பெறுதற்கரிய திருவாபரணங்களையுமுடைய திருமேனியை யுடையனுய். (ஆயர்பெருமானவனொருவன் குழலூதினபோது) ஆயர்க்கதிபதியான நீர்மையையுடையனுய், அழகாலும நீர்மையாலும் ப்ரஸித்தனுய் (க) அத்விதீயனுயிருக்கிறவன் திருக்குழலையூதினபோது. (மரங்கள்நின்று மதுதாரைகள்பாயும்) தேவமநுஷ்யதிர்யக்ஜாதிகள் உருகினவளவன்றிக்கே, அசேதநங்களானவ்ருக்ஷங்களானவை ஒருபடிப்பட நின்று உள்ளுருகினமை தோற்ற மதுதாரைகள்பாயாநிற்கும். (மலர்கள்வீழும்) கொம்பில்நிற்கிறபூக்களெல்லாம் நிலைகுலைந்துவீழாநிற்கும். (வளர்கொம்புகள்தாழும) மேலேவளருகிற (உ) சாகைகளானவை கீழேபடியாநிற்கும். (இரங்கும்) தன்னிலேநின்றலைந்து ஈடுபடாநிற்கும். (கூம்பும்திருமால்நின்ற நின்றபக்கம்நோக்கி) ஸ்ரீயபதியானவன் உலாவியுலாவிநின்று குழலூதினவழியே அவன் நின்றநின்றபார்ச்வங்களைநோக்கி, அஞ்சலிசெய்வாரைப்போலே தாழ்ந்த கொம்புகளைக் குவியாநிற்கும். (அவைசெய்யுங்குணமே) அவைசெய்தகுணமிருந்தபடி யென்ருன்! என்று ஆச்சரியப்படுகிருர். (௧௦)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்ருர்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிருர்.

மூ.—குழலிருண்டுசுருண்டேறியகுஞ்சிக்கோவிந்தனுடையகோமளவாயில், குழன்முழைஞ்சுகளினூடுகுமிழ்த்துக்கொழித்திழிந்த வமுதப்புனறன்னைக், குழன்முழவம்விளம்பும்புதுவைக்கோன் விட்டுசித்தன்விரித்ததமிழ்வல்லார், குழலைவென்ற குளிர்வாயினராகிச்சாதுகோட்டியுட்கொள்ளப்படுவாரே.

ப - ரை.—குழல் - திருநெற்றியில்தாழ்ந்த குழலையுடையனுய், இருண்டு - கறுத்து, சுருண்டு —, ஏறிய - மேலேநெடுகவளர்ந்த, குஞ்சி - மயிர்முடியையுடையனுய், கோவிந்தனுடைய - பசுக்களைரக்ஷிக்கையே தொழிலாகவுடையவனுடைய, கோமளம் - அழகிய, வாயில் - திருப்பவளத்தில், குழல் - திருக்குழலின், முழஞ்சுகளினூடு - துளைகளின்வழியே, குமிழ்த்து—, கொழித்தெழுந்த - அலையெறிந்துகுதித்த, அமுதப்புனல்தன்னை - அம்ருதஜலத்தை, குழல் - குழலினுடைய, முழவு - ஓசையாக, விளம்பும் - சொன்ன, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு, கோன் - தலைவரான, விட்டுசித்தன் - பெரியாழ்வார், விரித்த - விரிவாகச்சொன்ன, தமிழ் - தமிழ்ப்பாட்டுக்களானவிவற்றை, வல்லார் - கருத்துடன் கற்கவல்லவர்கள், குழலை - குழலோசையின்குளிர்த்தியை, வென்ற - கீழாம்படி பண்ணி, குளிர் - குளிர்ந்த, வாயினராகி - சொல்லையுடையராய்க்கொண்டு, சாதுகோட்டி - ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரளிலே, உட்கொள்ளப்படுவார் - முழுமனதோடே அங்கீகரிக்கப்பெறுவர்கள்.

(க) அத்விதீயன் - ஒப்பற்றவன். (உ) சாகைகள் - கிளைகள்.

வ்யா.—(குழலித்யாதி) "சுருண்டிருண்ட குழல்தாழ்ந்தமுகத்தான்" என்கிறபடியேதிருநெற்றிப்ரதேசத்திலே தாழ்ந்ததிருக்குழலாய் இருண்டுசுருண்டு மேலேநெடுகவளர்ந்த கேசபாசத்தையுடையனாய் கோரக்ஷணபரனாயிருக்குமவனுடைய அழகிய திருப்பவளத்தில். (குழல்முழஞ்சித்யாதி) திருக்குழலில் துளைகளின்வழியேகிளர்ந்து அலையெறிந்துகுதித்த அம்ருதஜலத்தைக் குழலோசையாகச்சொன்ன. இத்தால்-குழலோசையினுடைய ப்ரவாஹமும் (க) ரஸ்யதையுஞ் சொன்னபடி. (புதுவைக்கோன் விட்டுசித்தன் விரித்த தமிழ்வல்லார்) ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் இதினுடைய வைபவத்தை விஸ்தரேணப்ரதிபாதித்த (உ) த்ராவிடபாஷைகளான இவற்றை ஸாபிப்ராயமாகவல்லவர்கள். (குழலைவென்றகுளிர்வாயினராகி) திருக்குழலோசையினுடைய குளிர்த்தியையும் கீழ்ப்படுத்தித் தான்மேலாம்படி குளிர்ந்த வ்யவஹாரத்தையுடையராய். (சாதுகோட்டியுள்கொள்ளப்படுவாரே) ஸ்ரீவைஷ்ணவர்கள்திரளிலேபுகுந்தால் அவர்கள் (௩) ஸஹ்ருதயமாக (௪) பரிக்ரஹிக்கும்படியாவர்கள். (கக)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு—நாவல்இடவான் தேன்முன்செம்பெரும்புவி சிறுதிரண்டு கருங்குழலைய.

---

ஆ திருமொழி உரு-க்கு, பாட்டு-உஎ௩.

---

அ.—"போகத்தில்வழுவாதபுதுவையர்கோன்" என்கிறபடியே திருவவதாரஸமயமேதுடங்கி க்ர்ஷ்ணாவதார குணசேஷ்டிதங்களையொன்றொழியாமல் அநுபவித்துக்கொண்டுபோந்தார்-கீழ்; மற்றுள்ளவாழ்வார்களைக் குமிழ்நீருண்ணப்பண்ணும்அவனுடைய ஸௌகுமார்யமாகிற ஆழங்கால்தானேமேடாய் தரித்துநின்று மங்களாசாஸநம்பண்ணிப்போரும் ஸ்வபாவரானவிவர், இப்போது அவர்களைப்போலே அவனையநுபவிக்கவேணுமென்னு மாசைகிளர்ந்து (ரு)அவ்வாசாநுரூபமாகக்கிட்டி யநுபவிக்கப்பெறாமையாலே தாமானதன்மையழிந்து ஒரு (௬) கோபகந்நிகாவஸ்தையை ப்ராப்தராய், (எ) ஸ்வதசையை அந்யாபதேசத்தாலேபேசுகிறார். அதாவது - பருவம் நிரம்புவதுக்குமுன்னே க்ர்ஷ்ணவிஷயத்திலே ப்ரவணையாகாநின்ற தன்மகளுடையதசையைக்கண்டதிருத்தாயார். இவள்பருவத்தின்

---

(க) ரஸ்யதை - இனிமை. (உ) த்ராவிடபாஷை - தமிழ்ப்பாஷை. (௩) ஸஹ்ருதயமாக - முழுமனதோடு. (௪) பரிக்ரஹித்தல் - அங்கீகரித்தல். (ரு) அவ்வாசாநுரூபமாக - அந்தஆசைக்குத்தக்கபடி. (௬) கோபகந்நிகை - இடைப்பெண். (எ) ஸ்வதசை - தம்முடையநிலைமை.

இளமையையும், இப்படியிருக்கச்செய்தே அவன் விஷயத்திலே ப்ரவணையாய் அவனோடே இவள்கலந்துவருகிறபடியையும், இதுக்கடி ஸஜாதீயைகளாய் (க) தத்விஷயத்தில் ப்ரவணைகளாயிருக்கும் (உ) பாலைகளோடுண்டான (௩) ஸம்ஸர்க்கம் என்னுமதத்தையும், இவள்லீலாவ்யாபாரத்திலே அந்வயிக்கிலும் அவனுடைய (ச) சிஹ்நங்களொழிய வேறொன்றறியாளானபடியையும், இவையெல்லாவற்றுக்கும் (ரு) மூலமாகத்தோழிமார் இவளை வசீகரித்துக்கொண்டுபோய் அவன்பக்கலிலே அகப்படுத்தினபடியையும், இவள் தன்னுடைய் (சு) ப்ராவண்ய ப்ரகாரங்களையும், இத்தைக்கண்ட பந்துவர்க்கமும் அங்யரும்சொல்லுகிற வார்த்தைகளையுமெல்லாம், (எ) ஸந்நிஹிதரைக்குறித்தும் தன்னிலேயும் பேசின பாசுரங்களாலே யருளிச்செய்கிறார்.

மூ.—ஐயபுழுதியுடம்பளைந்திவள்பேச்சுமலந்தலையாய்ச்
செய்யநூலின்சிற்றாடைசெப்பனுடுக்கவும்வல்லளல்லள்
கையினிற்சிறுதூதையோடிவண்முற்றில்பிரிந்துமிலள்
பையரவணைப்பள்ளியானொடுகைவைத்திவள்வருமே.

ப - ரை.—இவள் - இளமைப்பருவத்துளாள வென்பெண்பிள்ளையானவள், உடம்பு - தன்சரீரமெல்லாம், ஐய - அழகிய, புழுதி - புழுதியாம்படி, அளைந்து —, அத்தைவாயாற்சொல்லமாட்டாமே, இவள்பேச்சும் - தன்சொல்லும், அலந்தலையாய் - கலங்கினதுமன்றி, செய்ய - சிவந்த, நூலின் - நூலாலேசமைக்கப்பட்ட, சிறு - சிறிய, ஆடை-ஆடையை, செப்பன்-நன்றாக, உடுக்கவும் —, வல்லளல்லள்- மாட்டிற்றிலளாய்க்கொண்டு, கையினில் - கையிலிருக்கும், சிறுதூதையோடு- சிறுதூதையையும், சிறுமுற்றில் - சிறு சுளகையும், பிரிந்துமிலள் - விடுவதும் செய்திலள்; பின்னையென்செய்யுமென்னில்; இவள் —, பை - பணத்தையுடைய, அரவு-திருவநந்தாழ்வானாகிற, அணை - அணையை, பள்ளியானொடு - திருப்படுக்கையாக வுடையவனோடே, கைவைத்து - கைகலந்து, வரும் - வாராநின்றாள்.

வ்யா.—முதற்பாட்டு. (ஐயபுழுதியுடம்பளைந்து) அழகியபுழுதியை யுடம்பெங்குமளைந்து. அதாவது-புழுதியிலேயிருந்துவிளையாடுகையாலே சரீரமெல்லாம் புழுதியாலே வ்யாப்தமாயிருக்கை. (இவள்பேச்சுமலந்தலையாய்) உடம்பெல்லாம்புழுதியாவானேனென்னென்றால்; விளையாடிப்புழுதியளைந்தேன்என்று சொல்லலாமிறே; அதுசொல்லாமல், பந்து கழல்அம்மானை யென்றாற்போலே சில (அ) அநந்விதபாஷணங்களைப் பண்ணுகையாலே இவள்பேச்சும் கலங்கி. (செய்யவித்யாதி) சிவந்தநூலாலே சமைக்கப்பட்ட சிறியவாடை

(க) தத்விஷயத்தில் - அவ்விஷயத்திலே. (உ) பாலைகள் - சிறுப்பெண்கள். (௩) ஸம்ஸர்க்கம் - இணக்கம். (ச) சிஹ்நம் - அடையாளம். (ரு) மூலமாக- வேருவாக. (சு) ப்ராவண்யம் - அன்பு. (எ) ஸந்நிஹிதர் - முன்நிற்பவர்கள். (அ) அநந்விதபாஷணங்களைப் பண்ணுகை - ஒன்றோடொன்று சேராமல் சொல்லுகை.

ளைபஉடுக்கு (௧) மடைவறிந்து நன்றாகவுடுக்கவும்மாட்டாள். (கையி ளிலித்யாதி) (௨) விளையாடுகலமாய்க்கொண்டு கையிலிருக்கும் மணற்சோறுக்கும் சிறு (௩) தூதையும் மணற்கொழிக்கும்சிறுசுள குமம் இவள் விடுவதும் செய்திலள். இவள்பருவமிது. (பையரவித் யாதி) "அரவணையாயாயரேறே" என்னும்படி திருவநந்தாழ்வானை ப்படுக்கையாக வுடையவனோடே யிவள்கைகலந்து வாராநின்றாள்()

மூ.—வாயிற்பல்லுமெழுந்திலமயிருமுடிகூடிற்றில
சாய்விலாதகுறுந்தலைச்சிலபிள்ளைகளோடிணங்கித்
தீயிணக்கிணங்காடிவந்திவடன்னன்னசெம்மைசொல்லி
மாயன்மாமணிவண்ணன்மேலிவண்மாலுறுகின்றாளே.

ப-ரை.—வாயில்—, பல்லும் - பற்களும், எழுந்தில - முளைத்தனவில்லை; மயிரும் —, முடி - சேர்த்துமுடிக்கலாம்படி, கூடிற்றில - கூடினவில்லை; இவள் - இத்தன்மையளான வென்பெண்பிள்ளையானவள், சாய்விலாத - ஒடுக்கமிலாதவர்களாய், குறுந்தலை - தண்மையில்தலைநின்ற, சில பிள்ளைகளோடு - சில பெண்களோடே, இணங்கி - கூடி, தீயிணக்கு - பொல்லாத விணக்கத்தோடே, இணங்காடி - கலந்து, வந்து—, இவள்—, தன்னன்ன - இப்படிசெய்துவந்த தன்னோடொத்த, செம்மை - செவ்வையை, சொல்லி - சொல்லிக்கொண்டு, மாயன் - ஆச்சர்யகுணத்தையும், மாமணி - நீலரத்நம்போன்ற, வண்ணன்மேல் - வடிவையுமுடையவன் விஷயத்திலே, மாலுறுகின்றாள் - பிச்சேறுகின்றாள்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வாயிற்பல்லுமெழுந்தில) வாயில்பல்லும் முளைத்தனவில்லை. இத்தால் - பெற்றதாயாகையாலே இவளைஅத்யந்த சிசுவாகநினைத்துச் சொல்லுகிறாள். (மயிரும்முடிகூடிற்றில) மயிரும் சேர்த்துமுடிக்கலாம்படி கூடினவில்லை. (சாய்விலித்யாதி) சாயல்-ஒடுக்கம். தாய்க்கடங்காதே (௪) தண்மையில்தலைநின்ற சிலபெண்பிள்ளைகளோடேகூடி. (தீயிணக்கிணங்காடிவந்து) பொல்லாதவிணக்கத்தோடே யிணங்கிவந்து. அதாவது-தன்னோடு கலந்தாரைத் தாய்க்கீழடங்காதபடி கலக்கறுக்கும்விஷயத்தோடே கலந்துவந்தென்கை. (இவள்தன்னன்னசெம்மைசொல்லி) இப்படி செய்துவந்த இவள், தன்னோடொத்த செவ்வையைச்சொல்லி. அதாவது - இத்தனைபோது எங்கேபோனாய் ஆரோடிணங்கிவந்தாய் என்றால், உண்மைசொல்லுகையன்றிக்கே தன்னுடைய (௫) க்ர்த்திமாநுகுணமாகச் சில (௬) குடிலோக்திகளைச் செவ்வைபோலே சொல்லியென்கை. (மாயன்மாமணிவண்ணன்மேல்) ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையும் நீலரத்நம்போன்ற வடிவையுமுடையவன் விஷயத்திலே. (இவள் மாலுறுகின்றாளே) இப்படிசெம்மைசொன்ன

(௧) அடைவு - ஒழுங்கு. (௨) விளையாடுகலம் - விளையாட்டுக்கருவி. (௩) தூதை - ஓர்விளையாட்டுக்கருவி. (௪) தண்மை - [illegible]. (௫) [illegible] - [illegible]. (௬) குடிலோக்தி - [illegible].

விவள், அதுக்குச்சேராதபடி அவன்குணசேஷ்டிதங்களைச் சொல்லுவது வடிவழகைச்சொல்லுவதாய்க்கொண்டு பிச்சேறாநின்றாள்.( )

மூ.—பொங்குவெண்மணற்கொண்டு சிற்றிலுமுற்றத் திழைக்கலு
றில், சங்குசக்கரந்தண்டு வாள்வில்லுமல்ல திழைக்கலுறாள்,
கொங்கையின்னங் குவிந்தெழுந்தில கோவிந்தனோடிவளைச்,
சங்கையாகியென்னுள்ளநாடொறுந் தட்டுளுப்பாகின்றதே.

ப-ரை.—முற்றத்து-முற்றத்திலே, பொங்கு-நுண்ணிதாய், வெண்-வெளுத்திருக்கிற, மணல்கொண்டு-மணலைக்கொண்டு, சிற்றிலிழைக்கல்-கொட்டகமிட, உறில் - முயன்றாளாகில், சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யமும், சக்கரம் - திருவாழியாழ்வானும், தண்டு - கதையும், வாள் - வாளும், வில்லுமல்லது - வில்லுமல்லாத மற்றொன்றை, இழைக்கலுறாள் - இடநினையாள்; கொங்கை - முலைகளானவை, இன்னம்—, குவிந்து - முகம்திரண்டு, எழுந்தில - கிளர்ந்தனவில்லை; கோவிந்தனோடு - கோரக்ஷண பரனானவனோடே, இவளை - இவளுக்கு, சங்கையாகி - "கலவியுண்டாகவேணும்" என்றுசங்கித்து, என் - என்னுடைய, உள்ளம் - மநஸ்ஸானது, நாடொறும் - நாள்தோறும், தட்டுளுப்பாகின்றது - தடுமாறிச்செல்லாநின்றது.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பொங்கித்யாதி) "புறம்பேபோய்த் *தீயிணக்கிணங்காதே முற்றத்திலேயிருந்து விளையாடு" என்று நான் நியமித்துவைத்தால், வண்டலிட்டதாகையாலே நுண்ணியதாய் வெளுத்திருக்கிற மணலைக்கொண்டு முற்றத்திலே கொட்டகமுமிடவொருப்பட்டாளாகில். உறில்என்கையாலே - இதில் இவளுக்கு மநஸ்ஸில்லாமையும் தன்னுடைய நிர்ப்பந்தத்துக்காகச்செய்கிறதித்தனையென்னுமதுதோற்றச்சொல்லுகிறாள். (சங்கித்யாதி) அவனுக்கு (க) அஸாதாரணசிஹ்நமாய் அழகுக்கும் விரோதிநிரஸநத்துக்குமுடலாயிருக்கும் ஸ்ரீபஞ்சாயுதமுமொழிய வேறொன்றுஇட நினையாள். (கொங்கையின்னம் குவிந்தெழுந்தில) "முலையோமுழுமுற்றும்போந்தில" என்கிறபடியே முலைகளானவை ஆண்முலைக்கும் பெண்முலைக்கும்வாசிதோற்ற முகம்திரண்டுகிளர்ந்தனவில்லை. இவள்தான் யுவதியானாலும் தாயார்க்கு இவளுடைய சைசவமிறே தோற்றுவது. (கோவிந்தனோடிவளைச்சங்கையாகி) பசுக்களோடும் பொருந்திவர்த்திக்கும் நீர்மையையுடையனானவனோடே யிவளுக்குக் கலவியுண்டாகவேணுமென்று சங்கித்து. (என்னுள்ளம்நாடொறும் தட்டுளுப்பாகின்றதே) என்னுடைய மநஸ்ஸானது நாள்தோறும் தடுமாறிச்செல்லாநின்றது. இவளுடைய சைசவத்தைப் பார்த்தவாறே "உண்டு" என்னப்போகிறதில்லை; இவளுடைய செயல்களைப்பார்த்தவாறே "இல்லை" என்னப்போகிறதில்லை; ஆகை

(க) அஸாதாரணம் - தனக்கேயுரியது.

ால், இன்னதென்று நிர்ணயிக்கமாட்டாமல் என்னுடைய ஹ்ர்தய மானது தடுமாறுநின்றதென்கை. தட்டுளுப்பு - தடுமாற்றம். (௩)

௪ —ஏழைபேதையோர்பாலகன் வந்தென்பெண்மகளையெள்கித்,
தோழிமார்பலர்கொண்டுபோய்ச் செய்தசூழ்ச்சியை யார்க்
குரைக்கேன், ஆழியானென்னு மாழமோழையிற் பாய்ச்சியக
பபடுத்தி, மூழையுப்பறியாததென்னு மூதுரையுமிலளே.

ப-ரை.—ஏழை - நல்லதுகண்டால் விடமாட்டாதவளும், பேதை - மேல் வருமதறியத்தக்க வறிவில்லாதவளும், ஓர் - ஒப்பற்ற, பாலகன் - இளமைப் பருவத்தளுமான, என் - என்னுடைய, பெண்மகளை - பெண்பிள்ளையை, தோழி மார்பலர் - அநேகம் தோழிமார், வந்து - நேராகவந்து, எள்கி - எத்தி, கொண்டு போய் - தங்களோடுகூடக் கொண்டுபோய், ஆழியானென்னும் - திருவாழியை யுடையவனென்று ப்ரஸித்தமாய், ஆழம் - ஒருவரால் நிலைகொள்ளவொண்ணாத ஆழத்தையுடைத்தாய், மோழையில் - அகப்பட்டாரை யுள்வாங்கிக்கொள்ளும் கீழாறுபோலேயிருக்கிற விஷயத்திலே, பாய்ச்சி - உள்ளேறத்தள்ளி, அகப்படு த்தி - அகப்படும்படிபண்ணி, செய்த—, சூழ்ச்சியை - க்ர்த்ரிமவ்யாபாரத்தை, ஆர்க்குரைக்கேன் - ஆர்க்குச்சொல்லுவேன். மூழை-முகந்து பரிமாறுகிற மூழை யானது, உப்பு - தான்முகக்கிற பதார்த்தத்தின் ரஸத்தை, அறியாது—, என் னும் - என்கிற, அது - அந்த, மூதுரையும் - பழைமொழியும், இலள் - தன்பக்க லில்லாதவளானாள்.

வ்யா.—நாலாம்பாட்டு. (ஏழை) நல்லதுகண்டால் விடமாட் டாத சபலை. (பேதை) மேல்விளைவது நிரூபிக்கத்தக்க வறிவில்லா தவள். (ஓர்பாலகன்) இரண்டுக்குமடியானபருவத்தின் இளமையை யுடையவள். (என்பெண்மகளை) இப்படியிருக்கிற வென்பெண்பிள் ளையை. (தோழிமார்பலர்-வந்து - எள்கி-கொண்டுபோய்)தோழிமா ரநேகராகவந்து "விளையாடப்போரு" என்று எத்தி, கூடக்கொண்டு போய். (ஆழியானென்னுமாழமோழையில்பாய்ச்சியகப்படுத்தி - செய்தசூழ்ச்சியையார்க்குரைக்கேன்) "அணியாராழி" என்கிறபடி யே ஸர்வாபரணங்களும் தானேயாகப்போரும்படியான திருவாழி யையுடையவனென்று ப்ரஸித்தமாய், ஒருவரால் நிலைகொள்ள வொண்ணாதபடியிருப்பதாய், அகப்பட்டாரை யுள்வாங்கிக்கொள் ளும் கீழாறுபோலே யிருக்கிறவிஷயத்திலே உள்ளேறத்தள்ளியகப் படும்படி பண்ணிச்செய்த க்ர்த்ரிமவ்யாபாரத்தையார்க்குச்சொல்லு வேன். (மூழையித்யாதி) இவள்படிபார்த்தால், "முகந்துபரிமாறு கிறமூழையானது தான்முகக்கிற பதார்த்தத்தின்ரஸமறியாது" என் னும் அந்த மூதுரையும் தன்பக்கல் இல்லாதவள்கிடீர். அதாவது— தாங்கள்கலந்து பரிமாறுகிறவிஷயத்தின் ரஸமறியாதாரை "உப்பறி யாமூழையாய்" என்று லோகம்சொல்லும்பழமொழிக்கும் யோக் யதையில்லாதவள்காணுமிவள். இப்படியிருக்கிறவிவளை இவர்கள் இவ்விஷயத்திலேகொண்டுபோய் அகப்படுத்தி மற்றொன்றறியாத படியாக்குவதே! என்று தன்னிலேநொந்து சொல்லுகிறாள். (௪)

மூ.—நாடுமூருமறியவேபோய்நல்லதுழாயலங்கல்
சூடிநாரணன்போமிடமெல்லாஞ்சோதித்துழிதருகின்றாள்
கேடுவேண்டுகின்றார்பலருளர்கேசவனோடிவளைப்
பாடுகாவலிடுமினென்றென்றுபார்தடுமாறினதே.

ப-ரை.—நாடும் - திருவாய்ப்பாடிசூழ்ந்த நாட்டிலுள்ளவர்களும், ஊரும் - திருவாய்ப்பாடியாகிற ஊரிலுள்ளவர்களும், அறிய - அறியும்படியாக, போய் - அகத்தைவிட்டுப்புறம்பேபோய், நல்ல - பசுமைநிறத்தையுடைய, துழாயலங்கல் - திருத்துழாய்மாலையை, சூடி - அணிந்துகொண்டு, நாரணன் - நாராயணனென்னும் திருநாமத்தையுடையக்ர்ஷ்ணன், போமிடமெல்லாம் - வ்யாபரிக்குமிடமெங்கும், சோதித்து - தேடி, உழிதருகின்றாள் - திரியாநின்றாள்; கேடு - இக்குடிக்குக்கேட்டை, வேண்டுகின்றார் - விரும்புகிறவர்கள், பலருளர் - பலருமுண்டு; ஆதலால், கேசவனோடு - அழகியமயிர்முடியை யுடையருளவனோடே, இவளை - அவன்வைலக்ஷண்யத்திலேயீடுபட்டுப் பின்பற்றித்திரிகிறவிவளை. பாடு காவலிடுமின் - அருகுகாவலிடுங்கோள், என்றென்று - என்று இத்தையேபலகாலும்சொல்லி, பார்-லோகத்திலுள்ள அநுகூலஜநங்களானவர்கள், தடுமாறினது - தளும்பாநின்றார்கள்.

வ்ய.—அஞ்சாம்பாட்டு. (நாடுமூருமறியவேபோய்) தானும் தன்னையணைந்தபந்துவர்க்கமும் அறிந்தவளவாக அவன்பக்கலிலே ப்ரவணையாய் அகம்விட்டுப்புறப்படாம லிருக்கையன்றிக்கே, திருவாய்ப்பாடிசூழ்ந்தநாடும் திருவாய்ப்பாடியான ஊர்தானும் இருந்ததேகுடியாகவறியும்படியாக க்ர்ஹத்தைவிட்டுப் புறம்பேபோய். (நல்லதுழாயலங்கல்சூடி) ஸம்ச்லேஷத்தாலேபிசகின திருத்துழாய் மாலையைச்சூடிக்கொண்டு. (நாரணனித்யாதி) நாராயணனென்னும் திருநாமத்தையுடைய க்ர்ஷ்ணன் வ்யாபரிக்குமிடம் பலவுண்டாகையாலே அவன்போமிடமெல்லாம் அவனைக்காண்கைக்காக ஆராய்ந்து திரியாநின்றாள். அதாவது-பசுமேய்க்கை பெண்களோடேகலக்கை விளையாடுகைதுடக்கமானவற்றுக்காக அவன் வ்யாபரிக்குமிடங்களெங்கும் தேடித்திரியாநின்றாளென்கை. (கேடுவேண்டுகின்றார் பலருளர்) இக்குடியின் மினுக்கம்பொறாமையாலே "இதுக்கோரவத்யம்வரகாணவல்லோமே!" என்று இக்குடிக்குக்கேடுவேண்டியிருக்கிறார் பலருண்டு. (கேசவனித்யாதி) ஆனபின்பு, ப்ரசஸ்த கேசனானவனோடே அவ்வைலக்ஷண்யத்திலேயெடுப்புண்டு பின்பற்றித் திரிகிறவிவளை தானேபோய்ச்சேர்ந்தாளாகாமல் நீங்களேகொண்டுபோய்ச்சேர்ந்து அருகுகாவலிடுங்கோள். அதாவது-அவனுக்கு (க) ஆஸந்நமான அந்தப்புரக்காவலிலே யாக்குங்கோளென்கை. (என்றென்றுபார்தடுமாறினதே) இப்படி இத்தைப்பலகாலும்சொல்லி, இக்குடிக்குத்தீங்குவரப்பொறாத லோகத்திலநுகூலஜநமானது நின்றுதளும்பிற்றென்கிறாள். (ரு)

(க) ஆஸந்நமான - கிட்டின.

மூ.—பட்டங்கட்டிப் பொற்றோடுபெய்திவள்பாடகமுஞ்சிலம்பும்,
இட்டமாகவளர்த் தெடுத்தேனுக்கென்னோ டிருக்கலுறாள்,
பொட்டப்போய்ப் புறப்பட்டுநின்றிவள் பூவைப்பூவண்ணா
வென்னும், வட்டவார்குழன்மங்கைமீ ரிவண்மா லுறுகின்
றாளே.

ப-ரை.—வட்டம் - சுருண்டு, வார் - நீண்ட, குழல் - குழலையும், மங்கைமீர் - பருவத்தால்வந்த இளமையையுமுடையவர்களே, பட்டம்-நுதலணியான பட்டத்தை, கட்டி - கட்டியும், பொன்தோடு - காதணியான பொன்னினாற்செய்ததோட்டையும், பாடகமும்சிலம்பும் - கழலணியான பாடகத்தையும்சிலம்பையும், பெய்து - இட்டும், இவள் இட்டமாக - இவளிஷ்டப்படி, வளர்த்து—, எடுத்தேனுக்கு - ஒக்கலையிலேயெடுத்துக்கொண்டு திரிந்தவெனக்கு, இவள்—, என்னோடு - இப்படி சீராட்டிவளர்த்தவென்னோடே, இருக்கலுறாள் - என்னருகிருக்கவுமாட்டேனென்கிறாளென்றுசொல்ல; ஆனபின்பு செய்வதுதானென்னென்ன; இவள்—, பொட்ட - திடீரென்றுவிரைவாக, போய் - என்னைக்கைவிட்டுப்போய், புறப்பட்டுநின்று - எல்லாரும்காணத்தெருவிலே புறப்பட்டுநின்று, பூவைப்பூவண்ணாவென்னும் - காயாம்பூப்போன்றநிறத்தையுடையவனேயென்று அவனுடையவழகைச்சொல்லி, மாலுறுகின்றாள்-பிச்சேறாநின்றாளென்கிறாள்.

வ்யா.—ஆறாம்பாட்டு. (பட்டமித்யாதி) லலாடபூஷணமான பட்டத்தைக்கட்டி, கர்ணபூஷணமான பொன்னின் தோட்டையிட்டு, பாதபூஷணமான பாடகத்தையும் சிலம்பையுமிட்டு. "பெய்து" என்கிறக்ரியை இங்கும்அந்வயிக்கக்கடவது. இவைதான் ஸர்வாபரணங்களுக்கு முபலக்ஷணம். (இட்டமாகவித்யாதி) நியமித்துவளர்க்கையன்றிக்கேஇவளுடையஇஷ்டத்திலேவளர்த்து, நிலத்திலேநடக்கவிடாமல் ஒக்கலையிலேயெடுத்துக்கொண்டுதிரிந்தவெனக்கு. (இவள்-என்னோடிருக்கலுறாள்) இப்படி நான்சீராட்டிவளர்க்கப்பட்டவிவள், இப்படிவளர்த்தவளன்றோவென்று ஸ்நேஹித்து எனக்கு பவ்யையாய் நடக்கவேணுமிறே; அது செய்யாவிட்டால், நான் தன்னைக்கண்டநுபவித்துக்கொண் டிருக்கும்படி நெஞ்சொழியவும் என்னருகுவிடாமலிருக்கலாமிறே; அதுவும் செய்கிறிலள். (பொட்டப்போயித்யாதி) அவ்வளவுமன்றிக்கே, சடக்கென என்னைவிட்டுப்போய், எல்லாரும்காணும்படி தெருவிலேபுறப்பட்டுநின்று, ஸ்த்ரீத்வத்தாலே வாய்திறவாமலிருக்கக்கடவவிவள் காயாம்பூவண்ணாவென்று அவனுடையவடிவழகை யநுபவிக்கையிலுண்டானவிடாய்தோற்றக் கூப்பிடாநிற்கும். (வட்டவார்குழல்மங்கைமீர்) சுருண்டுநீண்ட குழலையும் பருவத்தால்வந்த இளமையையுமுடையவர்களே. நீங்களுமெல்லாம் உங்கள்தாய்மார்க்கு நியாம்யைகளாய்ப்போருகிறீர்களே, இவளுமப்படி போரவேண்டாவோ, அது செய்யாமல் (இவள்மாலுறுகின்றாளே) இவள் அவன்விஷயத்திலே பிச்சேறாநின்றாள். (௬)

மூ.—பேசவுந்தெரியாத பெண்மையிற் பேதையேன் பேதையிவள், கூசமின்றிநின்றார்க டம்மெதிர்கோல்கழிந்தான் மூழையாய்க், கேசவாவென்றுங் கேடிலீயென்றுங் கிஞ்சுகவாய்மொழியாள், வாசவார்குழன் மங்கைமீரிவண்மாலுறுகின்ருளே.

ப-ரை.—வாசம்-பரிமளிதமாய், வார் - நீண்ட, குழல் - மயிர்முடியையும், மங்கைமீர்-பருவத்தால்வந்த இளமையையுமுடையவர்களே, பேதையேன்-செவ்வேநிறுத்தவுபாய மறியாதவென்னுடைய, பேதை - பெண்ணுய், பேசவுந்தெரியாத - ஒருவார்த்தைசொல்லவுமறியாத, பெண்மையின் - பெண்தன்மையையுடையளாய், கிஞ்சுகம் - கிளியோடொத்த, வாய் - வாயில்பழுப்பையும், மொழியாள் - இளஞ்சொல்லையுமுடையளான, இவள்—, நின்றார்கள்தம் - பெண்தன்மையிலும் தாய்க்குக்கீழ்ப்படிந்து நடக்கையிலும் தவருமல்நின்றவர்களுக்கு, எதிர் - முன்னே, கூசமின்றி - கூச்சமின்றிக்கே, கோல்கழிந்தான் - கோலினின்றுநீங்கின, மூழையாய் - அகப்பைபோலே, என்னேடே ஸம்பந்தமற்றவளாய்க்கொண்டு, கேசவாவென்றும் - அழகியமயிர்முடியை யுடையவனேயென்றும், கேடிலீயென்றும் - அடுத்தவரை யொருகாலுங் கைவிடாதவனே யென்றுஞ்சொல்லி, மாலுறுகின்ருள் - பிச்சேறுகின்ருள்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (பேசவும்தெரியாதபெண்மையின்)ஒருவார்த்தை சொல்லப்பெருத ஸ்த்ரீத்வத்தையுடைய. அதாவது - தன்னுடைய ஆசாரத்தால் ஸ்த்ரீத்வத்துக்கு ஒரு நழுவுதல்வாராதபடி வர்த்திக்குமளவன்றிக்கே, நழுவுதலுண்டாக ஒருவர் ஒரு வார்த்தைசொல்லிலும் அதுபொருமல் ( க ) மாந்தும்படியான ( உ ) ஸ்த்ரீத்வத்தையுடையவளென்கை. ஸ்த்ரீத்வமாவது - "நாண்மடம் அச்சம்பயிர்ப்பு" என்கிற (௩) ஆத்மகுணயோகம். (பேதையேன் பேதை) ஒரு (ச) விரகறியாத வென்னுடையபெண்பிள்ளை. அதாவது - தன் குலத்துக்கும் ஸ்த்ரீத்வத்துக்கும் (ரு) அநுகுணமாக நடத்துமதொழியப் பேர்ந்துபுரிந்துநிற்கைக்கு ஒரு விரகறியாத வென்வயிற்றிற்பிறந்தவளென்கை. (இவள்) இப்படி யிருக்கிறவிவள். (கூசமின்றிநின்ருர்கள்தம்மெதிர்) "தந்தாமுடைய்ஸ்த்ரீத்வத்திலும் (சு) மாத்ர்பவ்யதையிலும் தவருமல்நின்றவர்கள்தங்கள்ஸந்நிதியிலே நாமித்தைச்செய்யும்படியென்" என்கிற கூச்சமின்றிக்கே. (கோல்கழிந்தான்மூழையாய்) கோல்கழிந்தமூழைபோலே தனக்கு ஆச்ரயமானவென்னேடு (எ) ஒட்டற்றவளாய். இத்தால் - எனக்கு நியாம்யையல்லாதவளாயென்கை. (கேசவாவென்றும்) ப்ரசஸ்த கேசனனவனேயென்றும். (கேடிலீயென்றும்) உன்னலல்லது செல்

(க) மாந்தும்படியான - மனம்வருந்தும்படியான. (உ)ஸ்த்ரீத்வம் - பெண்தன்மை. (௩) ஆத்மகுணம் - தன்னுடையகுணம். (ச) விரகு - உபாயம். (ரு) அநுகுணமாக - தகுதியாக. (சு) மாத்ர்பவ்யதை - தாய்க்குக்கீழ்ப்படிந்துநடக்கை. (எ) ஒட்டற்றவளாய் - ஸம்பந்தமற்றவளாய்.

லாதவர்களை யொருநாளும் கைவிடாதவனேயென்றும். (கிஞ்சுகவாய் மொழியாள்) கிளியோடொத்தவாயிற் பழுப்பையும் பேச்சில் இளமையையுமுடையவள். தனக்கடங்காமல்கைகழிந்து அவன்பேரைச் சொல்லிநின்று கூப்பிடுகிற (௧) தசையிலும், இவளுடைய (௨) அதரசோபையும் (௩) மதுரபாஷணமும் திருத்தாயாருக்கு ஆகர்ஷகமாயிருக்கிறதுகாணும். (வாசவார்குழல்மங்கைமீர்) பரிமளிதமாய் ஒழுகுநீண்டமயிர்முடியையும் பருவத்தால்வந்த இளமையையுமுடையவர்களே. (இவள்மாலுறுகின்றாளே) இப்படி யிவள் அவன் விஷயத்திலே பிச்சேறாநின்றாள். (௭)

மூ.—காறைபூணுங்கண்ணாடிகாணுந்தன்கையில்வளைகுலுக்கும்
கூறையுடுக்குமயர்க்குந்தன்கோவைச்செவ்வாய்திருத்தும்
தேறித்தேறிநின்றாயிரம்பேர்த்தேவன்றிறம்பிதற்றும்
மாறின்மாமணிவண்ணன்மேலிவண்மாலுறுகின்றாளே.

ப-ரை.—காறை - பொன்னாற்செய்த காறையை, பூணும் - கழுத்திலேபூணாநிற்கிறாள்; காறையும்கழுத்துமானசேர்த்தியழகை, கண்ணாடி - கண்ணாடிப்புறத்திலே, காணும் - பாராநிற்கிறாள்; தன் - தன்னுடைய, கையில் - கையிலிருக்கிற, வளை - வளையை, குலுக்கும் - அசைத்துப்பாராநிற்கிறாள்; அவன் விரும்பிமேல்விழும்படி, கூறை - பரிவட்டத்தை, உடுக்கும் - நன்றாகவுடாநிற்கிறாள்; அயர்க்கும் - அவன்வாராமையாலே யறிவழியாநிற்கிறாள்; மீளவும் அறிவுகுடிபுகுந்து, கோவை - கோவைக்கனிபோலே, செம் - சிவந்திருக்கிற, தன் - தன்னுடைய, வாய் - அதரத்தை, திருத்தும் - மிகச்சிவக்கும்படி பண்ணாநிற்கிறாள்; இப்படியறிவழிந்தவிவள், தேறித்தேறி - மிகத்தெளிவுடையளாய், நின்று - தரித்துநின்று, ஆயிரம்பேர் - ஆயிரந்திருநாமங்களையுடையனாய், தேவன் - * கண்டவர்சிந்தைகவரத்தக்க வடிவழகையுடையனானவனுடைய, திறம் - ப்ரகாரங்களை, பிதற்றும் - அடைவுகெடப்பேசாநிற்கிறாள்; ஆகையால், மாறில் - ஒப்பில்லாத, மாமணி - நீலரத்நம்போன்ற, வண்ணன்மேல் - வடிவழகுடையவன்விஷயமாக, இவள் —, மாலுறுகின்றாள் - பிச்சேறாநின்றாளென்கிறாள்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (காறைபூணும்) தன்னாற்றாமையாலே "ஏதேனுமொன்றைச்செய்து நாமவனைப்பெறவேணும்" என்று நினைத்து, "அவனுக்கு (௪) ஆகர்ஷகமாம்படி நம்மை யலங்கரிக்கவே அவன்தானேவந்துமேல்விழும்" என்று தான் தன்னையலங்கரிக்கையிலே (௫) ப்ரவர்த்தையாய், (௬) ப்ரதமம், அவன்கண்டுப்ரியப்பட்டுக்கட்டிக்கொள்ளும்கழுத்துக்கு அலங்காரமாகக் காறையைப் பூணும். இதுதான் (௭) உத்தமாங்கத்துக்கும் உடம்புக்கும்நடுவாய்நின்று ஒளிவிடுவதோராபரணமிறே. (கண்ணாடிகாணும்) காறை

(௧) தசை - ஸமயம். (௨) அதரம் - உதடு. (௩) மதுரபாஷணம் - இனியபேச்சு. (௪) ஆகர்ஷகம் - மநம்கவரப்பண்ணுமது. (௫) ப்ரவர்த்தையாய் - புகுந்தவளாய். (௬) ப்ரதமம் - முதலிலே. (௭) உத்தமாங்கம் - தலை.

பூண்டதிருத்தம் தன்கண்ணுக்கு (௧) விஷயமல்லாமையாலே, அவனுகக்கும்படி வாய்த்ததோவில்லையோ என்னுமிடமறிகைக்காகக் காறையுங்கழுத்துமான சேர்த்தியழகைக் கண்ணாடிப்புறத்திலே பாராநிற்கும். இதுதான் அவயவாந்தரங்களிலாபரணங்களும் இவள் பூணுமதுக்குமுபலக்ஷணம். (தன்கையில்வளைகுலுக்கும்) இம்மநோரதமடியாக உடம்பிலே ஒரு பூரிப்புத்தோற்றுகையாலே அதறிகைக்காகக் கையில் வளையையசைத்துப் பாராநிற்கும். (௨) விரஹகார்ச்யத்தாலே கையில்வளைகள் கழன்றாலும் பின்னையும் எடுப்பது இடுவதாயிறே இவள்தானிருப்பது. இவள் எடுத்துஇட்டாலும் அவை கையில் (௩) தொங்காதே; இப்போது உடம்பில்தோன்றுகிற பூரிப்பாலே அவைகையில் தொங்கினமையறிகைக்காக அசைத்துப்பாராநிற்குமென்கை.

(கூறையுடுக்கும்) பரியட்டமும் அரையில் தொங்கும்படியாய்த்து (௪) இம்மநோரதநிபந்தநமான தேஹபௌஷ்கல்யத்தாலேயிறே; அல்லாதபோது, கையிலேயொரு*தலையும், காலிலும் தறையிலும் ஒரு*தலையுமாமிறே. வளையும் கலையும், (௫) க்ருதஸங்கேதரைப்போலே, கழலும்போதும் ஒக்கக்கழன்று, தொங்கும்போதும் ஒக்கத்தொங்காநிற்குமாய்த்து; காறைபூண்டதுக்குமேலே ஓரதிசயம் தேடுகைக்காகவிறே கூறையுடுக்கப்புகுந்தது. அதாவது-அவனுக்காகர்ஷகமாம்படி பரியட்டத்தை நன்றாகவுடாநிற்குமென்கை. இவளுடைய அழகிலேயாய்த்து அவனீடுபடுவது. ஆகையால், அவனுக்காகத்தக்கவுடைவாய்ப்புவருமளவும் குலைப்பது உடுப்பதாய்ச் செல்லாநிற்குமாய்த்து. (அயர்க்கும்) இப்படி அவன்வரவுக்குடலாகத் தன்னையலங்கரித்தவளவிலும் வரக்காணாமையாலே அறிவழியாநிற்கும்.

(தன்கோவைச்செவ்வாய்திருத்தும்) மீளவு மறிவுகுடிபுகுந்து "இன்னமும் அவனுக்காகர்ஷகமாம்படி யிருப்பதோரதிசயம் நம் பக்கலிலே உண்டாக்கக்கடவோம்" என்று, ஸ்வபாவமே கோவைப்பழம்போலே சிவந்திருக்கிற தன்னுடைய வதரத்தை (௬) ராகஜநகமான பதார்த்தஸேவைகளாலும் மிகவும் சிவக்கும்படிபண்ணுநிற்கும். அல்லாதவைபோலன்றிக்கே, இது அவனுக்கு வாய்புகுசோறாயிருப்பதொன்றிறே; "தொண்டையஞ்செங்கனிவாய்நுகர்ந்தான்" என்கிறபடியே. (தேறித்தேறிநின்று) தன்னுடைய அவயவ

(௧) விஷயமலலாமையாலே - தெரியாமையாலே. (௨) விரஹகார்ச்யம்-பிரிவாலுண்டானமெலிவு. (௩) தொங்காது - தங்காது. (௪) இம்மநோரதநிபந்தநமான - இவ்வெண்ணத்தை ஹேதுவாகவுடைய. (௫) க்ருதஸங்கேதர்-ஸங்கேதம் செய்துகொண்டவர்கள். (௬) ராகஜநகமான - சிவப்பையுண்டாக்கத்தக்க. * தலை - தலைப்பு - முன்தானை.

வாலங்காரத்தின்வாய்ப்பாலும் "[illegible]" "[illegible]" என்கிறபடியே இத்தசையில் வந்து உதவுகைக் கீடான அவன்குணங்களில் விச்வாஸத்தாலும் அயர்க்கைதவிர்ந்து மேன்மேலும் தெளிவையுடையளாய்,தெளிவுகைகொடுக்கத்தரித்து நின்று. (ஆயிரம்பேர்த்தேவன் திறம்பிதற்றும்) "தேவோ நாம ஸஹஸ்ரவாந்" "[illegible]" என்கிறபடியே தன்குண சேஷ்டிதங் களுக்கு வாசகமான ஆயிரம்திருநாமங்களையுடையனாய், அவையெ ல்லாவற்றிலும் மனோஹரமான வடிவழகை யுடையனானவனுடைய ப்ரகாரங்களை, அவற்றினுடைய ரஸ்யதையாலே கலங்கி அடைவு கெடப்பேசாநிற்கும். (மாறிலித்யாதி) ஆகையால், ஒப்பில்லாத நீல ரத்னம்போன்ற வடிவழகையுடையவன்விஷயமாக இவளிப்படி பிச் சேறுநின்றாள். (அ)

மூ.—கைத்தலத்துள்ள மாடழியக் கண்ணாலங்கள்செய் திவளை, வைத்துவைத்துக் கொண்டென்ன வாணிபநம்மை வடுப்படு த்தும், செய்த்தலையெழு நாற்றுப்போலவன்செய்வனசெய் துகொள்ள, மைத்தடமுகில்வண்ணன்பக்கல் வளரவிடுமின் களே.

ப - ரை.—இவள்விஷயமாக, கைத்தலத்துள்ள - கையிலுள்ள, மாடு - செல்வமெல்லாம், அழிய - செலவுசெய்து, கண்ணாலங்கள் - கல்யாணங்களை, செய்து —, இவளை - நமக்குக்கீழடங்காத பருவத்தளானவிவளை, வைத்து வைத்துக்கொண்டு - நியமித்துங் காவலிட்டும்வைத்துக்கொண்டிருந்து, என்ன வாணிபம் - என்ன ப்ரயோஜநமென்றால், நம்மை - நம்முடையகுடிக்கு, வடுப்படுத்தும் - பழியுண்டாக்காநிற்குமென்று தாயார்சொல்ல; இதைக்கேட்ட சுற்றத்தார், செய்த்தலை - கழனியிலே, எழு - வளர்ந்த, நாற்றுப்போல் - நாற் றை உடையவன் வேண்டினபடிசெய்யுமாபோலே, இவளையும், அவன் —, செய் வனசெய்துகொள்ள - வேண்டினபடி செய்துகொள்ளும்படிக்கீடாக, மை - கறுத்து, தடம் - பெருத்திருந்துள்ள, முகில் - மேகம்போலேயிருக்கிற, வண் ணன்பக்கல் - வடிவையுடையவன் பக்கலிலே, வளர - இவள்வளரும்படியாக, விடுமின்கள் - நீங்களேசேர்த்துவிடுங்கோளென்றார்கள்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கைத்தலத்துள்ளவித்யாதி) பந்து வர்க்கத்துக்கீடாகவும் ஐச்வர்யத்துக்கீடாகவும், இதொருபெண்ணு ம்ன்றோ நமக்குள்ளது என்னும் ஸ்நேஹத்தாலே லோகமெல்லாம் கொண்டாடும்படி கையிலுள்ளதநமெல்லாமழிய இவள்விஷயமாக வுண்டான கல்யாணங்களையெல்லாம்செய்து. (இவளையித்யாதி) "நம்முடைய கீழடங்காதபருவமான விவளையடக்கலாமோ" என்று பார்த்து, நியமித்தும் காவலிட்டும் வைத்துக்கொண்டிருந்து என்ன ப்ரயோஜநமுண்டு. நமக்குமிவளுக்கும் ஜாத்யுசிதமாகக்கொள்ள லாவதொரு ப்ரயோஜநமில்லையிறே. (நம்மைவடுப்படுத்தும்) இது

க்குமுன்பு ஒருபழிப்பற்றுப்போந்த நம்மை வடுப்படும்படி பண்ணும். அதாவது-"பந்துக்கள் உடன்படாதிருக்கத் தானேபுறப்பட்டுப்போனாள்" என்னும்படிபோய் நம்முடையகுடிக்கு அவத்யத்தைவிளைக்குமென்கை. (செய்த்தலையித்யாதி) செய்த்தலையிலே வளர்ந்தநாற்று உடையவன் வேண்டினபடி விநியோகம்கொள்ளுமாபோலே இவளையும் அவன்வேண்டினபடி செய்துகொள்ள. (மையித்யாதி) (௧) கழுத்தேகட்டளையாக நீரைப்பருகுகையாலே கறுத்துப்பெருத்திருந்துள்ள மேகம்போலேயிருக்கிற வடிவையுடையவன்பக்கலிலே இவள்வளரும்படியாக நீங்களேசேர்த்துவிடுங்கோள், என்று இப்படி பந்துக்கள் சொன்னார்கள் என்கிறவித்தனையும் இவ்விடத்தில் (௨) அபிப்ரேதம். அதுக்கடி "தாயுரைசெய்ததனை" என்று-திருமொழி முழுக்க, தாயார்வார்த்தையென்று (௩) நிகமிக்கையாலே. இது மேலிற்பாட்டுக்குமொக்கும். (௯)

மூ.—பெருப்பெருத்த கண்ணாலங்கள்செய்து பேணிநம்மில்லத்து
ள்ளே, இருத்துவா னெண்ணிநாமிருக்க விவளுமொன் றெ
ண்ணுகின்றாள், மருத்துவப்பதநீங்கினாளென்னும்வார்த்தை
படுவதன்முன், ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடை
க்கே.

ப-ரை.—பெருப்பெருத்த - உலகத்தார்செய்யுங் கல்யாணங்களிலும்பெரிதான, கண்ணாலங்கள் - கல்யாணங்களை, செய்து—, பேணி - குலமர்யாதையைப்பேணி, நம் - நம்முடைய, இல்லத்துள்ளே - க்ர்ஹத்துக்குள்ளே, இருத்துவான் - இருத்துவதாக, நாம்—, எண்ணியிருக்க - நினைத்துக்கொண்டிருக்க, இவள் - இப்பெண்பிள்ளையானவள், ஒன்று - நம்முடையஎண்ணத்துக்கு விரோதமானவொன்றை, எண்ணுகின்றாள் - எண்ணாநின்றாளென்றுதாயார்சொல்ல; இத்தைக்கேட்டபந்துக்கள், மருத்துவப்பதம் - வைத்தியனானவன் மருந்துப்பாகம்பார்த்துச் செய்யுமாபோலே இவள்பதம்பார்த்து நாம்செய்யாமையாலே, நீங்கினாள் - இவள்கைகழிந்தாள், என்னும் - என்கிற, வார்த்தை—, படுவதன்முன் - லோகத்திலுண்டாவதுக்குமுன்னே, உலகு - லோகத்தை, அளந்தானிடைக்கு - நீரேற்றளந்து தன்திருவடிகளின்கீழே யிட்டுக்கொண்டவனிடத்திலே, இவளை—, ஒருப்படுத்திடுமின் - நீங்களே சேர்த்துவிடுங்கோள் என்றார்கள்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (பெருப்பெருத்தகண்ணாலங்கள்செய்து) லோகத்திலுள்ளார் ஐச்வர்யச்செருக்காலே பெருக்கச்செய்யும் கல்யாணங்களிலும் பெரியதான கல்யாணங்களைச்செய்து. (பேணி) குலமர்யாதையைப்பேணி. (நம்மில்லத்துள்ளேயித்யாதி) நம்முடையக்ர்ஹத்துக்குள்ளே இருத்துவதாக நாம் மநோரதித்துக்கொண்டிருக்க. (இவளுமொன்றெண்ணுகின்றாள்) நம்முடைய எண்ணாத

(௧) கழுத்தேகட்டளையாக - கழுத்தளவும். (௨) அபிப்ரேதம் - அபிப்ராயவிஷயம்.

னுக்கு (௧) விபரீதமாக இவளுமொன்றையெண்ணாநின்றாள். அதாவது - இங்குத்தையிருப்பு (௨) காராக்ருஹவாஸமாய், அவன்பக்கலிலேபோகவே மநோரதியாநின்றாளென்கை. (மருத்துவப்பதமித்யாதி) மருத்துவனானவன் சமைக்கிறவௌஷதத்தில் (௩) பாகம்பார்த்துச்செய்யாதபோது அது கைதவறுமாபோலே, இவள்பதம் பார்த்துநாம்செய்யாமையாலே இவள்கைகழிந்தாளென்னும்வார்த்தை லோகத்திலுண்டாவதுக்கு முன்னே. (ஒருப்படுத்திடுமினித்யாதி) தன்னுடைமையை மஹாபலி "என்னது" என்றிருக்க, விரகாலே அவன்பக்கலில்நின்றும் வாங்கித் தன்திருவடிகளின்கீழே யிட்டுக்கொண்டவன்பக்கலிலே இவளை நீங்களேசேர்த்துவிடுங்கோள்; நீங்கள் சேராதபோது இவள்ஸ்வபாவத்தாலும் இரண்டுதலையும் சேர்ந்தேவிடும்; ஆனபின்பு, ஏற்கவே நீங்களே சேர்த்துவிடுங்கோளென்று த்வரிப்பிக்கிறார்கள். (௧௦)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஞாலமுற்றுமுண்டாலிலைத்துயினாராயணனுக்கிவள்
மாலதாகிமகிழ்ந்தனளென்றுதாயுரைசெய்ததனைக் [ன்ன
கோலமார்பொழில்சூழ்புதுவையர்கோன்விட்டுசித்தன்சொ
மாலைபத்தும்வல்லவர்கட்கில்லைவருதுயரே.

ப-ரை.—ஞாலம் - பூமிதுடக்கமான, முற்றும் - ஸகலலோகங்களையும், உண்டு - ப்ரளயத்திலழியாதபடி திருவயிற்றிலேவைத்து, ஆலிலை - ஓராலந்தளிரிலே, துயில் - கண்வளர்ந்தருளின, நாராயணனுக்கு - ஸ்ரீமானானநாராயணன் விஷயத்திலே, இவள் —, மாலதாகி - மிக்கவாசையுற்றவளாய்க்கொண்டு, மகிழ்ந்தனளென்று - மகிழ்ந்தாளென்று, தாய் - திருத்தாயார், உரைசெய்ததனை - சொல்லியதை, கோலம்ஆர் - அழகுமிக்கிருந்துள்ள, பொழில் - பொழிலாலே, சூழ் - சூழப்பட்ட, புதுவையர் - ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு, கோன் - நிர்வாஹகரான, விட்டுசித்தன் - பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, மாலை - சொன்மாலையான, பத்தும் - பத்துப்பாட்டையும், வல்லவர்கட்கு - கருத்துடன்கற்கவல்லவர்களுக்கு, வரு - எம்பெருமானை யநுபவிக்கைக்கு விரோதியாய்வருவதொரு, துயர் - து:க்கம், இல்லை - உண்டாகாது.

வ்யா.—(ஞாலமித்யாதி) பூமிதுடக்கமான ஸகலலோகங்களையும் ப்ரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலேவைத்து ஒருபவனான ஆலிலையிலே கண்வளர்ந்தருளின (௪) அகடிதகடநாஸாமர்த்யத்தையுடையனாய் ஸர்வஸ்வாமியான நாராயணனுக்கு. (இவள்மாலதாகி மகிழ்ந்தனளென்றித்யாதி) (௫) அதிபாலையானவிவள் (௬) அதிமா

(௧) விபரீதம் - வேறுபாடு. (௨) காராக்ருஹம் - சிறைச்சாலை. (௩) பாகம் - பக்குவம். (௪) அகடிதகடநாஸாமர்த்யம் - செய்யக்கூடாததைச் செய்துமுடிக்கும்வல்லமை. (௫) அதிபாலை - மிகவிளையள். (௬) அதிமாத்ரமான - மிகுந்த.

த்ரமான வ்யாமோஹத்தையுடையளாய் (க) தத்ஸம்ச்லேஷமநோரதத்தாலே ப்ரீதையானுளென்று தாயாரானவள் சொன்னசொலவை. (கோலமித்யாதி) அழகுமிக்கிருந்துள்ள பொழிலாலேசூழப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த, ஸந்தர்ப்பமாய் ச்லாக்யமாயிருந்துள்ள பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந்திக்கவல்லவர்களுக்கு. (இல்லை வருதுயரே) பகவதநுபவாதிகளுக்கு விரோதியாய்வருவதொரு துக்கமில்லை. (கக)

## பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு.—ஐயவாயில்பொங்கேழைநாடுபெட்டம்பேசவும் காறைகைத்தலப்பெருஞாலம்நல்லது.

---

### ஆ திருமொழி உசு-க்கு, பாட்டு-உஅச.

---

அ.—கீழ்திருமொழியிலே - தன்பெண்பிள்ளைக்கு அவன்பக்கல்செல்லுகிற ப்ராவண்யத்தைக்கண்ட திருத்தாயார் "கோவிந்தனோடிவளைச்சங்கையாகி" என்று அவனோடுஇவளுக்குக் கலவியுண்டாய்த்ததோவென்று முந்துறசங்கித்து, பின்பு பலஹேதுக்களாலும் ஸம்ச்லேஷம் ப்ரவ்ர்த்தமானமையைத்தானுமறிந்து, இவளுடைய ப்ராவண்யத்தின் (உ) முறுகுதலைக்கண்ட பந்துக்களும், "மருத்துவப்பதம் நீங்கினளென்னும் வார்த்தைபடுவதன்முன் ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடைக்கே" என்றுசொல்லி யிருக்கச்செய்தேயும், சடக்கெனவிளாந்து கொடாதொழிகையாலே, அவன் முற்பாடனாய்வந்து *கள்வன்கொல்லிற் பிராட்டியைக்கொண்டு போனாற்போலே இவளை (௩) அத்தவாளத்தலையாலே மறைத்துக்கொண்டு தன்னுடைய திவ்யநகரியான திருவாய்ப்பாடியிலே கொண்டுபோக, அந்தரங்கமாகக்காத்துக்கொண்டு கிடந்ததிருத்தாயார், படுக்கையில் பெண்பிள்ளையைக் காணாமையாலே "இவனையொழியக் கொண்டுபோவாரில்லை" என்றும் "இவன் கொண்டுபோவதுதான் திருவாய்ப்பாடியிலே" என்றும் அறுதியிட்டு; இவள்போகையாலே தன் திருமாளிகையெல்லாமழகழிந்து வெறியோடிற்றென்றும்; இவன் இப்படி யடைவுகேடாகக் கொண்டுபோனவிது இக்குடிக்கு ஏச்சாமோ குணமாமோவென்றும்; இவளுக்கு பாணிக்ரஹணார்த்தமான வுத்ஸவம் இப்படி நடக்குமோவென்றும்; மாமியாரான யசோதைப்பிராட்டி இவளைக்கண்டுகந்து மணவாட்டுப் பெண்பிள்ளையென்று ஸத்கரிக்குமோவென்றும்; மாமனாரான ஸ்ரீநந்தகோபர் உகந்தணைத்துக் கொண்டு இவள்வைலக்ஷண்யத்தைக்கண்டு இவளைப்பெற்றதாயார்

---

(க) தத் - அந்தஸர்வேச்வரனுடைய. (உ) முறுகுதல் - முதிர்த்தி. (௩) அத்தவாளத்தலை - முன்தானைத்தலைப்பு.

இனி தரிக்கமாட்டாரென்பரோ வென்றும்; அவன்றன் நிஹீநகுலத்திலுள்ளாரைப்போலே என்மகளைப்புணர்ந்து உடன்போகைக்கு ஹேதுவாகக்கொண்டு குடிவாழுமோ, நாடெல்லாமறியும்படி நன்றாகக் கண்ணாலஞ்செய்து கைப்பிடிக்குமோவென்றும்; தன்பெருமையாலே அவன் இவளுக்கு ரூபகுணதோஷங்களைச்சொல்லி வரிசையறுத்து ஆண்டிடுமோ, தனக்கு ஜாத்யுசிதமான மஹிஷியாகப் பட்டங்கட்டி பூர்வ மஹிஷிகள்முன்னே வைபவந்தோற்ற வைக்குமோவென்றும்; இவள்தான் தயிர்கடைகை முதலான வன்றொழில்கள்செய்து குடிவாழ்க்கைவாழவல்லளோவென்றும் இப்படி (௧) க்லேசித்தும் (௨) மநோரதித்தும் சென்றப்ரகாரத்தைச்சொல்லுகிறது - இத்திருமொழியில்.

மூ.—நல்லதோர்தாமரைப்பொய்கை நாண்மலர்மேற் பனிசோர,
அல்லியுந்தாதுமுதிர்ந்திட் டழகழிந்தா லொத்த தாலோ,
இல்லம்வெறியோடிற்றாலோவென்மகளையெங்குங்காணேன்,
மல்லரையட்டவன்பின்போய் மதுரைப்புறம் புக்காள்கொலோ.

ப-ரை.—தாமரை - தாமரைபூத்துக்கிடக்கையாலே, நல்லது - அழகிதாய், ஓர் - ஒப்பற்றிருக்கிற, பொய்கை - பொய்கையானது, நாள் - அப்போதலர்ந்த, மலர்மேல் - பூவின்மேலே, பனி - அதுக்குவிரோதமானபனியானது, சோர - விழுந்ததனால், அல்லியும் - உள்ளிதழும், தாதும் - மகரந்தமும், உதிர்ந்திட்டு - உதிர்ந்து, அழகழிந்தாலொத்தது - அழகழிந்தாற்போலே, இல்லம் - க்ருஹமானது, வெறியோடிற்று - வெளியாய்விட்டதுமன்றி, என்மகளை - என்பெண்பிள்ளையை, எங்கும் - எவ்விடத்திலும், காணேன் - காண்கிறிலேன்; இங்குக் காணாமையாலே, மல்லரை - சாணூரமுஷ்டிகரென்கிற மல்லரை, அட்டவன்பின் - நிரஸித்த வீரப்பாட்டையுடையவன்பின்னே, போய் —, மதுரைப்புறம்- மதுரைக்கு மிகவும்ஸமீபமாயிருந்துள்ள திருவாய்ப்பாடியிலே, புக்காள்கொலோ - புகுர்தாளோ என்று ஸந்தேஹிக்கிறாள்.

வ்யா.—முதற்பாட்டு. (நல்லதோர்தாமரைப்பொய்கை)பரப்புமாறத் தாமரைபூத்துக் கிடக்கையாலே, அழகியதாய் அத்விதீயமான பொய்கையானது. (நாண்மலர்மேற்பனிசோர)சிவப்பு, விகாஸம், செவ்வி, குளிர்த்தி, பரிமளம், (௩)மார்த்தவம், இவற்றையுடைத்தான நாட்பூவின்மேலே, அதுக்கு (௪) விருத்தமான பனியானது சொரிய. (அல்லியித்யாதி) அத்தாலே அல்லியும் தாதும் செவ்வி கெட்டுத் திர்ந்து அலங்காரமானபூ அழிகையாலே தானழகழிந்தாற்போலே யிராநின்றது. ஸ்தாவரஜாதிக்கெல்லா முபகாரகமாயிருந்ததேயாகிலும் தாமரைக்கு (௫) பாதகமாகை நியதஸ்வபாவ

(௧) க்லேசித்து - மநம்வருந்தி. (௨) மநோரதித்தல் - எண்ணமிடுதல். (௩) மார்த்தவம் - மென்மைத்தன்மை. (௪) விருத்தமான - பகையான. (௫) பாதகம் - பகை.

மிறேபனிக்கு. அப்படி பனியேறுண்ட தாமரையோடைபோலே யாய்த்து இத்திருமாளிகைகிடக்கிறது. ஆலும், ஓவும் - (க) விஷாதாதிசயஸூசகம். (இல்லம்வெறியோடிற் றுலோ) க்ர்ஹமானது வெறிபாய்ந்துவிட்டது. ஒருஜநஸஞ்சாரமற்று வெளியாய்க்கிடவா நின்றதென்கை. இக்ரஹம்முழுக்க இப்பெண்பிள்ளை யொருத்தியும்போலேகாணுமிருந்தாள்; எல்லாருமிருந்தாலும் இவளொருத்தியும்போகவே திருத்தாயார்க்கு அப்படி தோற்றுமிறே. மீளவும் "ஆலோ" என்கிறாள் - விஷாதாதிசயத்தாலே. (என் மகளையெங்குங்காணேன்) என்பெண்பிள்ளையை யோரிடத்திலும் காண்கிறிலேன். க்ர்ஹம்மாத்ரமன்றிக்கே, பண்டு இவளிருக்குமிடம் ஸஞ்சரிக்குமிடமெங்கும் தேடிக்காணாமையாலே சொல்லுகிறாள். (மல்லரையித்யாதி) இங்குக்காணாமையாலே "அவன்கொண்டுபோனான்" என்று அறுதியிட்டு, மல்லநிரஸநம்பண்ணின விரப்பாட்டையுடையவன்பின்னேபோய், மதுரைப்புறத்திலே புகுந்தாளோ வென்கிறாள். மதுரைப்புறமாவது - மதுரைக்கு (உ) அடுத்து அணித்தான திருவாய்ப்பாடி. "மதுரைப்புறம் புக்காள்கொலோ" என்றது - "அணியாலி புகுவர்கொலோ" என்றாற்போலே. அதாவது- ஒருவர்க்கொருவர் (ங) ஊமத்தங்காயாகையாலே கம்ஸநகரியான மதுரைதன்னிலே சென்று புகவும் கூடுமிறே; அது செய்யாதே, தனக்கு உத்தேச்யபூமியான திருவாய்ப்பாடியிலே போய்ப்புகுந்தாளோவென்று (ச) ஸம்சயிக்கிறாள். (க)

மூ.—ஒன்றுமறிவொன்றில்லாதவுருவறைக்கோபாலர்தங்கள்
கன்றுகான்மாறுமாபோலேகன்னியிருந்தாளைக்கொண்டு
நன்றுங்கிறிசெய்துபோனாநாராயணன்செய்ததீமை
என்றுமெமர்கள்குடிக்கோரேச்சுக்கொலாயிடுங்கொலோ.

ப-ரை.—ஒன்று - பொருந்தின, அறிவு - ஜ்ஞாநம், ஒன்றும் - ஏகதேசமும், இல்லாத—, உருவறை - ரூபஹீநரான, கோபாலர்தாங்கள் - இடையரானவர்கள், கன்றுகால்மாறுமாபோலே - நல்வழியாய்க் கண்ணுக்குநன்றாயிருந்துள்ள கன்றுகளை உடையவர்களறியாமல் களவிலேகொண்டுபோமாபோலே, கன்னி- கந்நிகையாய், இருந்தாளை - எனக்குக்கீழ்ப்படிந்திருந்தவென்மகளை, நன்றும் - மிகவும், கிறிசெய்து - உபாயம்பண்ணி, கொண்டுபோனான்—; நாராயணன்- எல்லாநற்குணங்களையுமுடையவனாகையாலே, நன்மையே செய்யக்கடவவன், செய்த—, தீமை - தீம்பு, எமர்கள்குடிக்கு - எங்கள்குடிக்கு, என்றும் - எக்காலத்திலும், ஓரேச்சாயிடுங்கொலோ-ஒருபழிப்பாமோ புகழாமோஎன்கிறாள்.

---

(க) விஷாதாதிசயஸூசகம் - துக்கமிகுதிக்குறிப்பு. (உ) அடுத்தணித்தான - மிகவும் ஸமீபமான. (ங) ஊமத்தங்காய் - ஆரைப்படத்தக்கவிஷயம். (ச) ஸம்சயிக்கிறாள் - ஸந்தேஹிக்கிறாள்.

வ்ரா.—இரண்டாம்பாட்டு. (ஒன்றுமறிவொன்றில்லாத) பொருந்தின வறிவு ஒன்றுமில்லாத. (க) லௌகிகவைதிகங்களோடு சேர்ந்தவறிவு அற்பமுமில்லாத; * அறிவொன்றுமில்லாத வாய்க்குலமிறே: காட்டிலே பசுமேய்க்கப்போன விடங்களிலே வழிதிகைத்தால் வழிகாட்டுவது பசுக்களாம்படியிறே யிவர்களறிவிருப்பது. (உருவறைக்கோபாலர்) ரூபஹீநரானகோபாலர். ஆத்மகுணமில்லாதாற்போலே ரூபகுணமில்லாதவர்களென்கை. (தங்கள்) "தாங்கள்" என்கிறவித்தைக் குறைத்துக்கிடக்கிறது. கோபாலர்தாங்களென்றபடி. இவர்களுடைய வறிவுகேடும் வடிவுகேடும் சொன்னது - இவை பார்த்தால் பொல்லாதாயிருக்குமாபோலே, இவர்களுடைய வ்ர்த்தியும் பார்த்தால் பொல்லாதா யிருக்குமென்கைக்காக. அந்தவ்ர்த்தி தன்னைச் சொல்லுகிறதுமேல் (கன்றுகால்மாறுமாபோலேயென்று) கன்று கால்மாறுகையாவது - தீதாயிருந்துள்ள தங்களுடையகன்றுகளை "உங்களது" என்று பிறர்க்குக்காட்டி, நல்லதாயிருந்துள்ள அவர்களுடையகன்றுகளைத் தங்களதாக்கிக் கொள்ளுகையும், நல்வழியாய்க்கண்ணுக்குநன்றாயிருக்கும்கன்றுகளை உடையவர்களறியாமல் களவிலே நிலைபேர்த்துக்கொண்டுபோகையுமிறே; இதில் பிற்பட்டதே இவ்விடத்துக்குச்சேருவது. இப்படி இவர்கள் செய்யுமாபோலே.

(கன்னியிருந்தாளை - நன்றும்கிறிசெய்து-கொண்டு- போனான்) கந்நிகையாய், விஷயரஸமென்பதொன்றறியாதே படிகடந்துபுறப்படாமல் என்கீழேயிருந்தவளை, முன்தீம்புசெய்து தன்சுவட்டையறிவித்துத் தன்வசமாக்கி, நானறியாதபடி மிகவும் விரகுசெய்து கொண்டுபோனான். (நாராயணன்செய்ததீமை) ஸமஸ்தகல்யாண குணாத்மகனாகையாலே நன்மையே செய்யக்கடவவன் இப்படி தீமையைச்செய்வதே! இவ்விடத்தில் தீமையாவது - தன்னுடைமையைத்தான்கொண்டுபோம்போது வரைந்து வெளிப்படக்கொண்டுபோகலாயிருக்க, இப்படி களவிலே கொண்டுபோனது. (என்றுமித்யாதி) இப்படியிவன்செய்ததீமை (உ) நிரவத்யமானவெங்கள் குடிக்கு எல்லாக்காலத்திலும் நிற்பதொரு பழிப்பாமோ; அன்றிக்கே, இக்குடியிற்பிறந்ததொருவிஷயத்தை வரைந்துகொடுக்கப் பெறாமல் அவன்முற்பாடனாய்வந்து கைக்கொண்டுபோனவிதுதன்னாலே இக்குடிக்கேற்றமாமோ. "கொல்லையென்பர்கொலோ குணம்மிக்கன ளென்பர்கொலோ" என்னுமாபோலே, இக்குடிக்கு இது பழியாமோ, புகழாமோவென்கிறாள். (உ)

---

(க) லௌகிகம் - லோகஸம்பந்தமானவிஷயம்; வைதிகம் - வேதஸம்பந்தமானவிஷயம். (உ) நிரவத்யமான - பழிப்பற்ற.

மூ.—குமரிமணஞ்செய்துகொண்டுகோலஞ்செய்தில்லத்திருத்தித்
தமரும்பிறருமறியத்தாமோதரற்கென்றுசாற்றி
அமரர்பதியுடைத்தேவியரசாணியைவழிப்பட்டுத்
துமிலமெழப்பறைகொட்டித்தோரணநாட்டிடுங்கொலோ.

ப - ரை.—குமரி - கந்யாப்பெண்ணுக்கு, மணஞ்செய்துகொண்டு - விவாஹத்துக்குமுன்னதாகச்செய்யுங்கலியாணஞ்செய்து, கோலஞ்செய்து-ஆடையாபரணங்களாலே யலங்கரித்து, இல்லத்து - விவாஹம்செய்யும் வீட்டிலே, இருத்தி - உட்காரவைத்து, தமரும் - பந்துக்களும், பிறரும் - மற்றுமுள்ளாரும், அறிய - அறியும்படி, தாமோதரற்கு - * கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டவனுக்கு, என்று - கொடுக்கப்புகுகிறோமென்று, சாற்றி - பறையறைந்ததனால், அமரர்பதியுடை - *அயர்வறுமமரர்களதிபதியுடைய, தேவி - தேவியானவிவள், அரசாணியை - ஜாதியினுசாரப்படி அரசங்கிளையை, வழிப்பட்டு - வலம்வர, துமிலமெழ - பெரிய ஆரவாரந்தோன்ற, பறை-பறையை, கொட்டி - முழக்கி, தோரணம் - மாவிலைத்தோரணம், மகரதோரணம், வாழை, கமுகுமுதலியன, நாட்டிடுங்கொலோ - ஊரெங்கும் நாட்டியலங்கரித்துக்கொண்டாடுவார்களோவென்று ஸந்தேஹிக்கிறாள்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (குமரிமணஞ்செய்துகொண்டு) குமரி-கந்நிகை. கந்நிகாவஸ்தையில்செய்யும் கல்யாணத்தைச் செய்துகொண்டு. அதாவது - விவாஹத்துக்கு பூர்வாங்கமாகச்செய்யும் உத்ஸவ விசேஷத்தைச்சொன்னபடி. (கோலஞ்செய்து) ஆபரணவஸ்த்ராங்கராகாதிகளாலே யலங்கரித்து. (இல்லத்திருத்தி) கல்யாணக்ருஹத்திலேயிருத்தி. (தமருமித்யாதி)பந்துக்களும் மற்றுமுள்ளாருமறியும்படி, “தாமோதரனுக்கு இவளைக்கொடுக்கப்புகாநின்றோம்” என்று ப்ரஸித்தமாக்கி. தாமோதரனென்றது - மாதாவானவள் கட்டினகட்டு அவிழ்த்துக்கொள்ள சக்தனன்றிக்கே அவள் நியமநம் தப்பாமலிருந்த நீர்மையையுடையவனென்றபடி. (அமரர்பதியுடைத்தேவி) அங்குத்தைக்கென்று ஸங்கல்பித்து * தமரும்பிறருமறியச்சாற்றினபோதே * அயர்வறுமமரர்களதிபதியானவனுடைய தேவியானவிவள். (அரசாணியைவழிப்பட்டு) ஜாத்யுசிதமாம்படி அலங்காரபீடத்துக்குத்தூணான அரசாணியைவலம்வந்து. அரசாணியாவது - அலங்காரபீடத்தின்மேலேநாட்டும் (க) அச்வத்ததண்டம். (துமிலமெழப்பறைகொட்டி) பெரிய (உ) ஆர்ப்பரவந் தோன்ற வாத்யத்தைமுழக்கி. “மத்தளங்கொட்ட” என்னக்கடவதிறே. (தோரணம்நாட்டிடுங்கொலோ) ஊரெங்கும் தோரணம்நாட்டுகை முதலானஅலங்காரங்களைக்கற்பித்துக் கொண்டாடுவார்களோ; குடியிற்பிறந்தார், கல்யாணத்துக்குக் கொண்டாட்டமென்செய்ய என்பர்களோ. (௩)

(க) அச்வத்ததண்டம் - அரசின்கிளை. (உ) ஆர்ப்பரவம் - ஆரவாரம்.

ரு.—ஒருமகடன்னையுடையே னுலக நிறைந்தபுகழால், திருமகள்
போல வளர்த்தேன் செங்கண்மாருன் கொண்டு போனுன்,
பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்ற யசோ
தைத், மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறஞ் செய்யுங்கொ
லோ.

ப-ரை.—ஒருமகள்தன்னை - ஓர் பெண்பிள்ளையை, உடையேன்-உடையே
னுன நான், தற்றுரோடுகல்லாதாரோடுவாசியற யாவரும் மெச்சிக்கொள்ளும்
படி, உலகம் - லோகமெங்கும், நிறைந்த - பரவின, புகழால் - புகழோடே,
திருமகள்போல-பெரியபிராட்டியாரைப்போல, வளர்த்தேன் - வளர்த்துக்கொ
ண்டிருந்த வென்பெண்பிள்ளையை, செம்-இடைவிடாமல் பார்த்துக்கொண்டிரு
க்கையாலே சிவந்த, கண் - திருக்கண்களையும், மால் - வ்யாமோஹத்தையு
முடையவன், தான் - தானே, கொண்டுபோனுன்—; பெருமகளாய் - பெரிய
பெண்பிள்ளையாய், குடிவாழ்ந்து - குடிவாழ்க்கைவாழ்ந்து, பெரும்பிள்ளை-பெரு
மைபொருந்திய பிள்ளையை, பெற்ற—, அசோதை - யசோதைப்பிராட்டியான
வள், மருமகளைக்கண்டு - நாட்டுப்பெண்ணைக்கண்டு, உகந்து - ஸந்தோஷித்து,
மணாட்டுப்புறம் செய்யுங்கொலோ-மணவாட்டிக்குச்செய்யத்தக்க சீர்மைகளைச்
செய்யுமோவென்கிறுள்.

வ்யா.—நாலாம்பாட்டு. (ஒருமகள்தன்னையுடையேன்) அத்வி
தீயையாயிருப்பாளொருபெண்பிள்ளையையுடையேன். ஒருமகளென்
கையாலே - ஏகபுத்ரியென்னுமிடமும், தன்னையென்கையாலே-(௧)
ஸௌந்தர்யாதிகளாலுண்டான இவளுடைய மதிப்பும், உடையே
னென்கையாலே-இவளைபுத்ரியாகவுடையளாகையாலுண்டான தன்
னுடைய வேற்றமுஞ் சொல்லுகிறது. (உலகம்நிறைந்தபுகழால்)
விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடுவாசியறத் தந்தாமுடைய
அளவுகளுக்கீடாக இருந்தவிருந்தவிடங்களிலே இவளுடையகுணங்
களைச்சொல்லி ச்லாகிக்கும்படி லோகமெல்லாம் வ்யாப்தமானபுக
ழோடே. (திருமகள்போலவளர்த்தேன்) "கடிமாமலர்ப்பாவையொ
ப்பாள்" என்கிறபடியே ஸர்வர்க்கும் வைலக்ஷண்யத்துக்கு (௨) உப
மாநபூமியாய் (௩) புருஷகாரத்வயுக்தையான (௪)* நாரீணாமுத்தமை
யோடு ஸத்ர்சஸ்வபாவையாம்படி வளர்த்தேன். (செங்கண்மால்
தான் கொண்டுபோனுன்) "𑌯𑌥𑌾 𑌕𑌪𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌮𑍍" "யதாகப்யாஸம்
புண்டரீகம்" என்கிறபடியே ஸ்வாபாவிகமான சிவப்புக்குமேலே
*பக்கநோக்கறியாமல் இவளைப்பார்த்துக்கொண்டிருக்கும் வ்யாமோ
ஹத்தாலும் சிவந்த திருக்கண்களையுடையனுய், இந்த வ்யாமோஹ
மே தனக்கு நிரூபகமாம்படியிருக்குமவன், (௫) ஆதிவாஹிகனை

(௧) ஸௌந்தர்யம் - அழகு. (௨) உபமாநபூமி - ஒப்புச்சொல்லுமிடம்.
(௩) புருஷகாரத்வயுக்தை - அங்கீகரிக்கும்படிபண்ணுமவள். (௪) நாரீணாமுத்
தமை - ஸ்த்ரீகளில் சிறந்தவள். (௫) ஆதிவாஹிகர் - முக்தனையிவ்விடத்திலின்
றும் விரஜையளவும் அழைத்துக்கொண்டுபோமவர்கள்.

வரக்காட்டியாதல், பெரியதிருவடியை வரக்காட்டியாதல் கொடு போகையன்றிக்கே, *கள்வன்கொல்லில்பிராட்டியைக்கொண்டுபோ னாற்போலே தானேகொண்டுபோனான். (க) "ஆழ்வான்திருநாட்டுக் கெழுந்தருளினபோது, உடையவர், விச்லேஷம் பொறுக்கமாட்டா மல், 'ஒருமகள்தன்னையுடையேன்' என்றும், 'உலகம்நிறைந்த புக ழால் திருமகள்போல வளர்த்தேன்' என்றும், 'செங்கண்மால் தான் கொண்டுபோனான்'என்று மருளிச்செய்தார்" என்று ப்ரஸித்தமிறே. "ఉపమానమశేషాణాం సాధూనాంయస్సదాభవేత్" "உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம்யஸ்ஸதாபவேத்" என்கிறபடியே - ஸாதுக்களுக் கெல்லா முபமாநபூமியாகச்சொல்லலாம்படியிருக்கையாலே உலகம்நிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே. (பெருமகளாய்க் குடிவாழ்ந்து) பெரியபெண்பிள்ளையாய்க் குடிவாழ்க்கைவாழ்ந்து. திருவாய்ப்பாடி யில் பஞ்சலக்ஷம் குடிக்கும் (உ) நிர்வாஹகரான பெருமையை யுடைய ஸ்ரீநந்தகோபர்மஹிஷியாகையாலே இவளை "பெருமகள்" என்கிறது. அவர் ஊர்க்காரியத்துக்கெல்லாம் அபிமாநியாய் நிர்வ ஹிக்குமாபோலே, இவள் க்ர்ஹகார்யத்துக்கெல்லாம் (௩) அபிமாநி நியாய் நிர்வஹிக்கையாலே "குடிவாழ்ந்து" என்கிறது. (பெரும்பிள் ளைபெற்றவசோதை) பெரியபிள்ளையைப்பெற்றவசோதை. ரூப குணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பரிபூர்ணனாய் "என்னநோன்பு நோற்றாள்கொலோ விவனைப்பெற்ற வயிறுடையாள்" என்னும்படி யிருக்கையாலே "பெரும்பிள்ளை" என்கிறது. தானும் பெருமகள், பெற்றதும் பெரும்பிள்ளைகாணுமிவள். (மருமகளைக்கண்டுகந்து) மருமகளைக்கண்டு ப்ரியப்பட்டு. "அவன்கொண்டுபோனான்" என்று வெறுத்தகாலத்திலும், போனால்பிறக்கும்முறையுறவுசொல்லவேண் டுகையாலே "மருமகள்" என்கிறாள். (கண்டுகந்து) பெண்பிள்ளை யுடைய ஸௌந்தர்யாதிகளையும் வ்யாமோஹத்தையும்கண்டு மடியி லேவைத்தணைத்து, "பெறுப்பேறுபெற்றோம்" என்றுப்ரியப்பட்டு. (மணாட்டுப்புறம்செய்யுங்கொலோ) மணவாட்டுப்பிள்ளையாக நினைத் துத் தான்செய்யக்கடவசீர்மைகள்செய்யுமோ; "கூடியகூட்டமன் றோ" என்று - லௌகிகத்துக்குத்தக்கவளவு (௪) அஹ்ர்தயமாகச் செய்துவிடுமோ. (௪)

மூ.—தன்மாமனந்தகோபாலன்றழீஇக் கொண்டென்மகடன்னைச், செம்மாந் திரேயென்றுசொல்லிச் செழுங்கயற் கண்ணுஞ் செவ்வாயும், கொம்மைமுலையு மிடையுங் கொழும்பணைத்

(க) ஆழ்வான் - கூரத்தாழ்வான். (உ) நிர்வாஹகரான - தலைவரான. (௩) அபிமாநிநி - அபிமாநத்தையுடையவள். (௪) அஹ்ர்தயமாக - மனமில் லாமல்.

தோள்களுங் கண்டிட், டிம்மகளைப்பெற்றதாய ரினித்தரியா ரென்னுங்கொலோ.

ப - ரை.—தன் - பெண்பிள்ளைதனக்கு, மாமன் - மாமனுரான, நந்தகோபாலன் - ஸ்ரீநந்தகோபர், என்மகள்தன்னை—, தழீஇக்கொண்டு - அணைத்துக்கொண்டு மடியிலேவைத்து, செம்மாந்திருவென்று- செவ்வேயிருவென்று, சொல்லி—, செழும் - அழகிய, கயல் - கயல்போன்ற, கண்ணும் - கண்களையும், செம் - சிவந்திருக்கிற, வாயும் - அதரத்தையும், கொம்மை - பருத்த, முலையும் - ஸ்தநங்களையும், இடையும் - உடுக்கைபோன்ற இடையையும், கொழும் - செழித்த, பணை - மூங்கிலையொத்த, தோள்களும் - தோள்களையும், கண்டிட்டு-தனித்தனியாக உற்றுப்பார்த்து, இம்மகளை - இப்பெண்பிள்ளையை, பெற்றதாயர் - பெற்றதாயாரானவள், இனி - இவளைப்பிரிந்தபின்பு, தரியார் - தரித்திருக்கமாட்டாள், என்னுங்கொலோ - என்றுசொல்லுவரோ.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (தன்மாமன்நந்தகோபாலன்) பெண்பிள்ளைதனக்குமாமனுரான ஸ்ரீநந்தகோபர். (தழீஇக்கொண்டென்மகள்தன்னை) "தனக்குமருமகள்" என்னும் ஸ்நேஹந்தோற்ற என்மகள்தன்னையணைத்துக்கொண்டு மடியிலேவைத்து. (செம்மாந்திரேயென்றுசொல்லி) இவள் (க) வ்ரீளையாலே நிலம்பார்க்க, செவ்வேயிருவென்றுசொல்லி. செம்மாப்பு - செவ்வை. முகம் முதலான அவயவங்களையும் ஸமுதாயசோபையையும் பார்க்கைக்காகவிறே — செவ்வேயிருவென்றது. (செழுங்கயற்கண்ணும்) அழகியகயல்போன்றகண்ணையும். (செவ்வாயும்) ஸ்வபாவமே சிவந்திருக்கிறஅதரத்தையும். (கொம்மைமுலையும்) பருவத்தினளவல்லாத பரிணமத்தையுடைத்தான முலைகளையும். கொம்மை - பெருமை. (இடையும்) முலையினுடையவளர்த்தியாலே நெருங்கி (உ) நேர்ந்திருக்கிறஇடையையும். (கொழும்பணைத்தோள்களும்) சுற்றுடைமையாலும் பசுமையாலும் செவ்வையாலும் வளர்ந்தமூங்கில்போலேயிருக்கிற தோள்களையும். கொழுமை - அழகும், பெருமையும். (கண்டிட்டு) தனித்தனியும் ஸமுதாயேநவும் தர்சித்து. என்னுடைய இழவு நெஞ்சிலேதோன்றி (இம்மகளையித்யாதி.) இப்பெண்பிள்ளையைப்பெற்ற தாயாரானவள் இவளைப்பிரிந்தபின்பு ப்ராணனோடே தரிக்கமாட்டாளென்று சொல்லுவரோ; அன்றிக்கே, அவிக்ர்தராயிருப்பரோ.

மூ.—வேடர்மறக்குலம்போலேவேண்டிற்றுச்செய்தென்மகளைக்
கூடியகூட்டமேயாகக்கொண்டுகுடிவாழுங்கொலோ
நாடுநகருமறியநல்லதோர்கண்ணாலஞ்செய்து
சாடிறப்பாய்ந்தபெருமான்றக்கவாகைப்பற்றுங்கொலோ.

ப - ரை.—வேடர்குலம்போல் - தண்ணிதான வேடச்சாதிபோலவும், மறக்குலம்போல் - மறக்குலத்திலுள்ளாரைப்போலவும், என்மகளை - என் பெண்

(க) வ்ரீளை - லஜ்ஜை. (உ) நேர்ந்திருக்கிற - நுண்ணிதாயிருக்கிற.

பிள்ளையை, வேண்டிற்று - வேண்டினபடி, செய்து—, கூடிய-ஆணும்பெண்ணும் நெஞ்சுபொருந்திக்கூடின, கூட்டமே - கூட்டரவுமாத்ரமே, ஆக - மணமாக, கொண்டு—, குடிவாழுங்கொலோ - குடிவாழ்க்கை வாழுமோ; அல்லது, சாடு-சகடத்தை, இற - முறியும்படி, பாய்ந்த - உதைத்த, பெருமான் - ஸ்வாமியானவன், நாடும் - திருவாய்ப்பாடிசூழ்ந்த நாடும், நகரும் - திருவாய்ப்பாடியாகிற நகரமும், அறிய - அறியும்படியாக, நல்லது - விலக்ஷணமாய், ஓர் - ஒப்பற்றிருப்பதொரு, கண்ணாலம் - கல்யாணத்தை, செய்து—, தக்கவா - தங்கள் ஜாதியினுசாரத்துக்குத்தக்கபடி, கைப்பற்றுங்கொலோ - கையைப் பிடிக்குமோவென்று தாயார் ஐயப்படுகிருள்.

வ்யா.—ஆரும்பாட்டு. (வேடர்மறக்குலம்போலே) தண்ணிய ஜாதியானவேடரையும் மறக்குலத்திலுள்ளாரையும் போலே. "கள்ளர், பள்ளிகள்"என்னுமாபோலே, வேடர் மறவர் என்கிறதும் தண்ணியஜாதியில் (க) அவாந்தரபேதம். (வேண்டிற்றுச்செய்து) இரண்டுதலையிலுமுண்டான குடிப்பிறப்பைப்பாராதே, ஒருசாஸ்த்ர மர்யாதையின்றிக்கே, தனக்கு வேண்டினபடிசெய்து. (என்மகளை) பழுதற்றகுலத்திலேயுள்ள என்வயிற்றிலேபிறந்த பெண்பிள்ளையை. (கூடியகூட்டமேயாகக்கொண்டு) புணர்ந்துடன்போக்கில் இரண்டுதலையும் நெஞ்சுபொருந்திக்கூடின கூட்டரவுமாத்ரமே மணமாகக்கொண்டு. (குடிவாழுங்கொலோ) குடிவாழ்க்கைவாழுமோ. (சாடிறப்பாய்ந்தபெருமான் – நாடுநகருமறியநல்லதோர்கண்ணாலம் செய்து – தக்கவா கைப்பற்றுங்கொலோ) அஸுராவேசத்தாலே தனியிடத்திலே நலியவந்த சகடத்தை, முலைவரவு தாழ்த்துச்சிறி நிமிர்த்த திருவடிகளாலே முறியவுதைத்துத் தன்னைநோக்கி, "தனியிடத்திலே பிள்ளையைவிட்டுவைத்துப் போகையாலே தாழ்வுவந்தது" என்றுதாயாருக்குப் பழிவாராதபடி நோக்கின குணாதிகனானவன், இரண்டுகுடிக்கும் பழிவாராதபடி, திருவாய்ப்பாடி சூழ்ந்த நாடும் திருவாய்ப்பாடியாகிறநகரமுமறியும்படியாக "இதுக்குமுன்பு இப்படியில்லை"என்னும்படி விலக்ஷணமாய் அத்விதீயமான கல்யாணத்தைச்செய்து, ஜாத்யுசிதமான தர்மத்துக்குத் தகுதியாக (உ) பாணிக்ரஹணஞ்செய்யுமோ. (௬)

மூ.—அண்டத்தமரர்பெருமானாழியானின்றென்மகளைப்
பண்டப்பழிப்புக்கள்சொல்லிப்பரிசறவாண்டிடுங்கொலோ
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்துகோவலர்பட்டங்கவித்துப்
பண்டைமணாட்டிமார்முன்னேபாதுகாவல்வைக்குங்கொலே

ப - ரை. — அண்டத்து - பரமபதத்திலே, அமரர் - நித்யஸூரிகளுக்கு, பெருமான் - தலைவனாய், ஆழியான் - திருவாழியைத்தரித்துக்கொண்டிருக்கும்

(க) அவாந்தரபேதம் - உட்பிரிவு. (உ) பாணிக்ரஹணம் - கையைப்பிடிக்கை.

பெருமையையுடையவன், என்-என்னுடைய, மகளை-பெண்பிள்ளையை, இன்று - இப்போது, பண்டம்-பதார்த்தங்களைப் பழிக்குமாபோலே, பழிப்புக்கள்-பழிப்பானசொற்களை, சொல்லி—, பரிசற - வரிசைகெட, ஆண்டிடுங்கொலோ-ஆளுவனோ; அன்றிக்கே, பண்டைமணாட்டிமார்முன்னே - முன்பேபட்டங்கட்டித் தனக்கு முதல்மணவாட்டியராயிருப்பவர்கள்முன்னே, கொண்டு - இவளைக் கொண்டு, குடிவாழ்க்கை - தன் க்ருஹகார்யங்களையெல்லாம், வாழ்ந்து-நடத்தி, கோவலர் - "இடைக்குலத்துக்குத்தலைவி" என்று தன்மனைவியானமைதோற்ற, பட்டம்கவித்து - பட்டங்கட்டி, பாதுகாவல்வைக்குங்கொலோ - அந்தப்புரக் காவலிலேவைப்பனோ.

வ்யா.—ஏழாம்பாட்டு. (அண்டத்தமரர்பெருமா னாழியான்) அப்ராக்ருதமான பரமபதத்திலே (க) அஸ்ப்ருஷ்டஸம்ஸார கந்தரான நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய், ஸர்வேச்வரத்வ சிஹ்நமான திருவாழியை தரித்துக்கொண்டிருக்கும் பெருமையையுடையவன். அந்தப்பெருமையால்வந்தசெருக்காலே (இன்றென் மகளைப் பண்டப்பழிப்புக்கள்சொல்லி) ஸர்வலக்ஷண ஸம்பந்நையான வென்னுடைய பெண்பிள்ளையை, இப்போது பதார்த்ததூஷணங்கள் சொல்லி. அதாவது - ரூபத்திலேயாதல், குணத்திலேயாதல், சில குறைகளைச்சொல்லி யென்கை. (பரிசறவாண்டிடுங்கொலோ) (உ) அபக்ருஷ்டபுத்தியாலே வரிசைகெட ஆண்டிடுமோ. அதாவது - அந்தரங்க வ்ருத்திகொள்ளாமல் புறத்தொழில்களைக்கொண்டு விடுமோ என்கை. (கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து) இவளைக்கொண்டு தன்னுடைய குடிவாழ்க்கையெல்லாம்வாழ்ந்து. அதாவது - (௩) இவள்முகப்பாகத் தன்னுடைய க்ருஹக்ருத்யமெல்லாம் நடத்தியென்கை. (கோவலர்பட்டங்கவித்து) "கோபகுலத்துக்கு ஸ்வாமிநி" என்று தன்மஹிஷியானமைதோற்றப் பட்டங்கட்டி. (பண்டைமணாட்டிமார் முன்னே) பண்டேபட்டங்கட்டி, தனக்கு மஹிஷிகளாயிருக்கிறவர்கள்முன்னே. (பாதுகாவல்வைக்குங்கொலே) அந்தப்புரக்காவலிலே வைக்குமோ. (எ)

மூ.—குடியிற்பிறந்தவர் செய்யுங் குணமொன்றுஞ் செய்திலனந்தோ, நடையொன்றுஞ்செய்திலனங்காய்நந்தகோபன்மகன் கண்ணன், இடையிருபாலும் வணங்க விளைத்திளைத்தென் மகளேங்கிக், கடைகயிறே பற்றிவாங்கிக் கைதழும்பேறிடுங் கொலோ.

ப - ரை.—நங்காய் - குலமர்யாதையையும் லோகமர்யாதையையுமறியும் குணபூர்த்தியுடையவளே, நந்தகோபன் - ஸ்ரீநந்தகோபருடைய, மகன் - திரு

(க) அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தர் - ஸம்ஸாரஸம்பந்தம் சற்றேனும்இல்லாதவர்கள். (உ) அபக்ருஷ்டம் - தண்ணிமை. (௩) இவள்முகப்பாக - இவளை முன்னிட்டுக்கொண்டு.

மகனான, கண்ணன் - க்ர்ஷ்ணன், குடியில் - உயர்ந்தகுடியிலே, பிறந்தவர் - பிறந்தவர்கள், செய்யும் - தங்கள்குடிக்குத் தகுதியாகச்செய்கிற, குணம்-குணத்தில், ஒன்றும் - ஒன்றேனும், செய்திலன் - செய்யாததுமன்றி, நடை - லோகநடத்தையிலும், ஒன்றும்-ஏகதேசமும், செய்திலன்-செய்யவில்லையே, அந்தோ-ஐயோவென்றுமநம்வருந்தி, இடை - இடையானது, இருபாலும் - இரண்டுபக்கங்களிலும், வணங்க - வளையும்படி, என்மகள் —, மூச்சுத்தாங்கிக்கடையமாட்டாமல், ஏங்கி - நடுநடுவேயேங்கி, இளைத்திளைத்து —, கடைகயிறே - கடைகயிற்றையே, பற்றி - பிடித்து, வாங்கி - வலிப்பதனால், கை - ம்ர்துவானகையானது, தழும்பேறிடுங்கொலோ - தழும்பேறிவிடுமோவென்று தாயார்சொல்லுகிறாள்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (குடியிற்பிறந்தவர் செய்யும் குணமொன்றும்செய்திலன்) உயர்ந்தகுடியிலே பிறந்தவர்கள் அக்குடிக்குத்தகுதியாகச் செய்யும் குணத்தில் ஒன்றும் செய்திலன். அதாவது - முறையிலே யிவளைவரைந்துகொண்டு வெளியில் கொண்டு போகாமையிறே. (அந்தோ) ஐயோ! என்று விஷண்ணையாகிறாள். (நடையொன்றும் செய்திலன்) குடியிற்பிறந்தவர்கள் செய்யுமது செய்யாவிட்டால் லோகத்தில்நடக்கும் மர்யாதைதான் செய்யவேணுமிறே; அதில் ஏகதேசமும் செய்திலன். அதாவது - லோகத்திலே யிப்படிசெய்வாரில்லையிறே யென்கை. (நங்காய்) குலமர்யாதையும் லோகமர்யாதையு மறியும் குணபூர்த்தி யுடையவளேயென்று, தனக்கு பந்துவாய் ஸந்நிஹிதையானவள்முகத்தைப்பார்த்துச்சொல்லுகிறாள். (நந்தகோபன்மகன்கண்ணன்) குடிப்பிறப்பில் வந்தால் ஸ்ரீநந்தகோபர்திருமகனாயிருக்கிற க்ர்ஷ்ணன். "நங்காய், நந்தகோபன்மகன் கண்ணன் - குடியிற்பிறந்தவர்செய்யும் குணமொன்றும்செய்திலன் - நடையொன்றும் செய்திலன் - அந்தோ" என்று - அவன் முறைகெடக் கொண்டுபோன ப்ரகாரத்தைச்சொல்லி விஷண்ணையாய், மேல் தன்னுடைய பெண்பிள்ளையினுடைய மார்த்தவத்தைநினைத்து நொந்து சொல்லுகிறாள் (இடையிருபாலும் வணங்க) இடம்வலங்கொண்டு கடைகையாலே, இடையானது இரண்டு பார்ச்வத்திலும்வணங்க. (இளைத்திளைத் தென்மகளேங்கி) ஸுகுமாரையான வென் பெண்பிள்ளை (க) பலஹாநியாலே மூச்சுத்தாங்கிக் கடையமாட்டாமல்ஏங்கி நடுநடுவே யிளைத்திளைத்து. (கடைகயிறித்யாதி) துடங்கினகார்யம் தலைக்கட்டுமளவும் இடைவிடாமல் கடைகயிற்றையே பிடித்துவலித்து, அத்தாலே தளிர்போலே ம்ர்துவானகையானது தழும்பேறிவிடுமோ வென்கிறாள். கோவலர்பட்டங்கட்டினாலும் கடைகயிறு வலிக்கவேணுமிறே யிடைச்சிகளுக்கு. தான் தன்பெண்ணின் மார்த்தவம் சொல்லுகிறா ளித்தனையிறே. (அ)

---

(க) பலஹாநி - பலமின்மை.

மூ.—வெண்ணிறத்தோய் தயிர்தன்னை வெள்வரைப்பின் முன்னெழுந்து, கண்ணுறங்காதேயிருந்து கடையவுந்தான் வல்லள்கொலோ, ஒண்ணிறத் தாமரைச்செங்க ணுலகளந்தானென் மகளைப், பண்ணறையாப் பணிகொண்டு பரிசறவாண்டிடுங்கொலோ.

ப-ரை.—தான் - மென்மைத்தன்மையளான என்பெண்ணனவள், வெள் - வெளுத்த, நிறம் - நிறத்தையுடைத்தாய், தோய் - செறியத்தோய்ந்த, தயிர்தன்னை - தயிரை, வெள்வரைப்பின்முன் - கிழக்குவெளுப்பதற்குமுன்னே, எழுந்து - எழுந்திருந்து, கண்ணுறங்காதேயிருந்து-விழித்துக்கொண்டு, கடையவும்-வருத்தமுற்றுக்கடையவும், வல்லள்கொலோ-வல்லளோ; இப்படியிருக்க, ஒண்-அழகிய, நிறம் - நிறத்தையுடைத்தான, தாமரை-தாமரைமலர்போன்ற, செம்-சிவந்த, கண் - திருக்கணகளையுடையனுய், உலகு - எல்லாலோகங்களையும், அளந்தான் - நீரேற்றளந்துகொண்டவன், என் - என்னுடைய, மகளை - பெண்பிள்ளையை, பண்ணறையாம்பணி - தாழ்ந்தபணிகளிலே, கொண்டு-ஏவிக்கொண்டு, பரிசற-பெருமைகெட, ஆண்டிடுங்கொலோ-ஆளுவனே, அறிகிலேனென்கிருள்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வெண்ணிறத்தோய் தயிர்தன்னை) செவ்விகுன்ருதபடி காய்ச்சித்தோய்க்கையாலே வெளுத்த நிறத்தையுடைத்தாய்ச் செறியத்தோய்ந்த தயிர்தன்னை. (வெள்வரைப்பின் முன்னெழுந்து) (க) ஆதித்யோதயத்துக்கு ஸூசகமான வெள்வரைப்புத் தோற்றுவதற்குமுன்னே யெழுந்திருந்து. வெள்வரைப்பு - கிழக்குவெளுக்கை. ப்ராஹ்மணர் ஸந்த்யாவந்தநார்த்தமாக அருணேதயத்துக்குமுன்னே யெழுந்திருக்குமாபோலேயிறே - இடைச்சிகளும் தயிர்கடைகைக்கு எழுந்திருக்கும்படி. (கண்ணுறங்காதேயிருந்து) எழுந்திருந்தாலும் நித்ராபகையாமிறே; அதின் வசமாகாதே விழித்திருந்து. (கடையவும் தான்வல்லள்கொலோ) ம்ருதுப்ரக்ருதியானதான் ஆயாஸித்துக்கடையவும்வல்லளோ. (ஒண்ணிறமித்யாதி) அலர்ந்தபோதை அழகிய நிறத்தையுடைத்தான தாமரைபோலே சிவந்ததிருக்கண்களை யுடையனுய், ஸமஸ்தலோகங்களையும் தன்திருவடிகளின்கீழே யாக்கிக்கொண்டவன். இத்தால் - தன் கண்ணழகாலே இவளை (உ) அநந்யார்ஹையாக்கித் தன்காற்கீழே யிட்டுக்கொண்டவனென்கை. (என்மகளைப் பண்ணறையாப்பணிகொண்டு) நான் * திருமகள்போலவளர்த்த வென்பெண்பிள்ளையை, பண்புகெடத்தாழ்ந்த பணிகளிலே யேவிக்கொண்டு. (பரிசற ஆண்டிடுங்கொலோ) இவளுடைய பெருமைகெடஆளுமோ, பெருமைகெடாதபடி யாளுமோ, அறிகிறிலேனென்கிருள். (கூ)

---

(க) ஆதித்யோதயம்-ஸூர்யோதயம். (உ) அநந்யார்ஹையாக்கி - பிறர்க்குரியளல்லாதபடிசெய்து.

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றூர்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறுர்.

மூ.—மாயவன்பின்வழிசென்றுவழியிடைமாற்றங்கள்கேட்டு
ஆயர்கள்சேரியிலும்புக்கங்குத்தைமாற்றமுமெல்லாம் [ன
தாயவள்சொல்லியசொல்லைத் தண்புதுவைப்பட்டன்சொன்
தூயதமிழ்பத்தும்வல்லார்தூமணிவண்ணனுக்காளரே.

ப-ரை.— மாயவன் - ஆச்சரியச்செய்கையுடைய ஸர்வேச்வரனுக்கு, பின்வழி - பின்னே, சென்று - போய், வழியிடை - போகிறவழியிடையிலே கண்ட, மாற்றங்கள் - அபூர்வபதார்த்தங்களின் விஷயவர்த்தாந்தங்களை, கேட்டு—, ஆயர்கள்சேரியிலும்புக்கு - திருவாய்ப்பாடியிலும் சென்றுபுகுந்து, அங்குத்தை - அங்குள்ளோர்க்குத்தக்கபடிசெய்த, மாற்றமுமெல்லாம் - தன்பெண்பிள்ளையின் சொலவுகளுமெல்லாவற்றையும், தாயவள் - திருத்தாயாரானவள், சொல்லிய - அருகுநின்றவர்களைப்பார்த்துச்சொன்ன, சொல்லை—, தண் - குளிர்த்தியையுடைய, புதுவை-திருப்புதுவைக்குத்தலைவரான, பட்டன் - பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, தூய் - பெண்ணுக்கும்பேதைக்கும் பொருளறியலாம்படியாய், தமிழ் - தமிழ்பாஷையான, பத்தும் - பத்துப்பாட்டையும், வல்லார் - கருத்துடன் கற்கவல்லவர்கள், தூ-பழிப்பற்ற, மணி - நீலரத்நம்போன்ற, வண்ணனுக்கு - வடிவழகை யுடையவனுக்கு, ஆளர் - அடிமைசெய்யப்பெறுவர்.

வ்யா.—(மாயவன்பின் வழிசென்று) தன்னுடைய பெண்பிள்ளையானவள், ரூபகுணசேஷ்டிதங்களால் ஆச்சர்யபூதனாய், அவற்றைக்காட்டித் தன்னைவசீகரித்துக்கொண்டவனுடையபின்னே, * கள்வன்கொல்லில்பிராட்டியைப்போலே வழிபோய். (வழியிடைமாற்றங்கள்கேட்டு) "கிளிபோல் மிழற்றிநடந்து" என்கிறபடியேபோகிறவழியிடையிலே அபூர்வபதார்த்தங்களைக் கண்டால் இவை யென்னென்று அவ்விஷயமாக அவனை வார்த்தைகள்கேட்டு. (ஆயர்கள் சேரியிலும்புக்கு) ப்ராப்யதேசமான திருவாய்ப்பாடியிலும் சென்று புகுந்து. இப்படியுண்டான செயல்களையும் (அங்குத்தை மாற்றமுமெல்லாம்) அவ்வூரிற் புகுந்தபின்பு, அங்குண்டான யசோதைப்பிராட்டி, ஸ்ரீநந்தகோபர், நாயகனான க்ர்ஷ்ணன், தன்பெண்பிள்ளையான விவள், தந்தாமுக்கு (க) அநுகுணமாகச் செய்யும் (உ) வ்ர்த்தாந்தமான சொலவுகளையும் எல்லாவற்றையும். "மாற்றமும்" என்கிற (௩) ஸமுச்சயவாசி சப்தத்தாலே-கீழுண்டானசெயல்களையும் கூட்டிக்கொள்வது. (தாயவள் சொல்லியசொல்லை) திருத்தாயாரானவள் தன்க்ர்ஹத்திலேயிருந்து தன்னிலே க்லேசித்தும் மனோரதித்தும் ஸந்நிஹிதனைக் குறித்துச் சொன்னசொலவுகளை.

(க) அநுகுணமாக - தகுதியாக. (உ) வ்ர்த்தாந்தம் - ஸமாசாரம். (௩) ஸமுச்சயம் - எண்ணும்மை.

(௧) அதவா, (மாயவனித்யாதி) தன்னுடைமையைத் தான் கொண்டுபோகையாலும், அதுதன்னை முறையிலே காட்டிக் கொடுக்கக்கொண்டுபோகாமையாலுமுண்டான குணதோஷங்களிரண்டும் (௨) உபாதேயமாய்த் தோற்றும்படியிருக்கிற ஆச்சர்யபூதனானவன் போனவழியிலே தானும் வழிப்பட்டுச்சென்று,வழியெதிர்வந்தாரை முன்போனவர்களுடைய (௩) ஸ்திதி கமந சயந ப்ரகாரங்களையும் வினவிக்கேட்டு. (ஆயர்கள்சேரியிலும் புக்கு) திருவாய்ப்பாடியில் ஸ்ரீநந்தகோபர்தெருவளவாகச்சென்று, அங்குநின்றவர்களை அங்குத்தை விசேஷங்களையும் வினவிக்கேட்டு. (தாயவள் சொல்லியசொல்லை) (௪) வழியெதிர்வந்தாரை "மதுரைப்புறம்புக்காள்கொலோ" என்றுகேட்டும், எமர்கள்குடிக்கு ஒரேச்சாமோ குணமாமோ என்றாற்போலே கேட்டும், திருவாய்ப்பாடியில் தோரணம்முதலான அலங்காரங்களும் வாத்யகோஷங்களும்கண்டு கேட்டிகோளோவென்று கேட்டும், ஆயர்கள்சேரியிலேசென்று யசோதை ஸ்ரீநந்தகோபருடைய ஆதரானாதரங்களெல்லாம் வினவிக்கேட்டு அவர்கள்சொன்ன விசேஷங்களுமெல்லாம் திருத்தாயாரானவள் சொன்னப்ரகாரங்களையென்று இங்ஙனே யோஜிக்கவுமாம். இதிலுங்காட்டில், பூர்வயோஜனைக்கு (௫) ஔசித்யமுண்டு.

(தண்புதுவைப்பட்டன்சொன்ன) ஸம்ஸாரச்ரமஹரமானகுளிர்த்தியையுடைய திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த. (தூயதமிழ்பத்தும்வல்லார்) ஸம்ஸ்க்ருத சப்தம்போலேயிருண்டு பொருள்தெரியாதபடி யிருக்கையன்றிக்கே, பெண்ணுக்கும் பேதைக்கும் அறியலாம்படி (௬) ஸ்வார்த்த ப்ரகாசகமாயிருக்கும் தூய்மையையுடைத்தான த்ராவிடபாஷையாய், ஒரொன்றே ஓராத்மாவினுடைய வுஜ்ஜீவநத்துக்குப் போருமென்னும்படியிருக்கிற பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந்திக்கவல்லவர்கள். (தூமணிவண்ணனுக்காளரே) பழிப்பற்ற நீலரத்நம்போன்ற வடிவழகையுடையவனுக்கு (௭) சேஷபூதரா யடிமைசெய்யப்பெறுவர். (௰)

## பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு.—நல்லதொன்றுகுமரியொருதம்மாமன்வேடரண்டக்குடிவெண்ணிறமாயவனென்னுதன்.

---

ஆ திருமொழி உஎ-க்கு, பாட்டு-உ௧௪.

---

(௧) அதவா - அன்றிக்கே. (௨) உபாதேயம் - ஏற்றுக்கொள்ளத்தக்கது. (௩) ஸ்திதி - நிலைமை. (௪) வழி - போகிறவழி. (௫) ஔசித்யம் - தகுதி. (௬) ஸ்வார்த்தம் - தன்னுடையபொருள். (௭) சேஷபூதர் - அடியார்.

அ.—க்ர்ஷ்ணாவதாரைகப்ரவணராய், (க) தத்குணசேஷ்டிதங்களையே யநுபவித்துக்கொண்டு போந்தார்-கீழ்; இப்போது, அந்த க்ர்ஷ்ணாவதாரகுணசேஷ்டிதங்களோடே, (உ) ஏதத்பூர்வ காலீநமான ராமாவதாரகுணசேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே யநுபவிக்கவேணுமென்னும் (ங) அபிநிவேசம்பிறந்து, அதுக்குடலாக இரண்டு ஸ்ரீகோபிமாரவஸ்தையை ப்ராப்தராய், அதிலே ஒருத்தி க்ர்ஷ்ணாவதாரகுண சேஷ்டிதமும், ஒருத்தி ராமாவதாரகுணசேஷ்டிதமுமாகக்கொண்டு, ஒருவர்க்கொருவர் எதிரியாய்க்கொண்டுசொல்லி, உந்திபறந்த பாசுரத்தாலே உபயாவதாரகுணசேஷ்டிதங்களையும்பேசி யநுபவிக்கிறார் - இத்திருமொழியில். இரண்டு கோபிமாரவஸ்தையை ஏககாலத்திலே யடையக்கூடுமோவென்னில்; பகவத்ப்ரஸாதவிசேஷத்தாலே ஜ்ஞாநத்தில் தடையற்றால் எல்லாம்சொல்லலாமிறே. "'மானமருமென்னோக்கி' என்கிற திருமொழியிலே 'இரண்டுபிராட்டிமார்தசை ஏககாலத்திலே கூடும்படியென்?' என்று ஜீயர் பட்டரைக்கேட்க; 'தேசவிசேஷத்தில் அநேக சரீரபரிக்ரஹம் ஏககாலத்திலே கூடுகிறபடி எங்ஙனே; அப்படியே இவரையும் பார்த்து அருளினால்கூடும்' என்றருளிச்செய்தார்" என்றுப்ரவஸித்தமிறே.

மூ.—என்னாதன்றேவிக்கன்றின்பப்பூவீயாதாள்
தன்னாதன்காணவேதண்பூமரத்தினை
வன்னாதப்புள்ளால்வலியப்பறித்திட்ட
என்னாதன்வன்மையைப்பாடிப்பற வெம்பிரான்வன்மையை [ப்பாடிப்பற.

ப-ரை.—என் - எனக்கு, நாதன் - சேஷியான ஸர்வேச்வரனுடைய, தேவிக்கு - தேவியானஸத்யபாமைப்பிராட்டிக்கு, அன்று - அவள் அபேக்ஷித்த ஸமயத்திலே, இன்பம் - மநோஹரமான, பூ-கற்பகப்பூவை, ஈயாதாள்தன் - கொடாதஇந்த்ராணியுடைய, நாதன் - நாயகனானஇந்த்ரன், காணவே - கண்டுநிற்கும்போதே, தண் - தழைத்துக்குளிர்ந்து, பூ - பூத்துக்கிடக்கிற, மரத்தினை - வ்ர்க்ஷத்தை, நாதம் - ஸாமவேதரூபனாய், வல் - வலியையுடைய, புள்ளால் - பெரியதிருவடியாலே, வலிய - பலவந்தமாக, பறித்து-பிடுங்கிக்கொண்டுவந்து, இட்ட - ஸத்யபாமைக்ர்ஹத்திலேநட்டவனாய், என்நாதன் - என்னையடிமைகொண்டவனுடைய, வன்மையை - நினைத்ததுமுடிக்கும் வல்லமையை, பாடி- ப்ரீதியாலேபாடிக்கொண்டு, பற - ஊதிபற; எம் - எனக்கு, பிரான் -உபகாரகனானவனுடைய, வன்மையை—, பாடிப்பற—. [இது, க்ர்ஷ்ணாவதாரத்தில் ஈடுபட்டவள் வார்த்தை].

வ்யா.—முதற்பாட்டு. (என்னாதன்தேவிக்கு) என்னுடையநாதனானவனுடைய தேவிக்கு. நாதனென்றது-சேஷியென்றபடி. (௪) ஸ்வரூபத்தையுணர்ந்தால் எல்லார்க்கும் தனித்தனியே "என்னாதன்,

(க) தத்குணசேஷ்டிதங்கள் - அவனுடையகுணங்களும் செய்கைகளும். (உ) ஏதத்பூர்வகாலீநமான - இதற்குமுன்காலமான. (ங) அபிநிவேசம் - விருப்பம். (௪) ஸ்வரூபத்தை - தன்னுடைய ஸ்வரூபத்தை.

என்னுதன்" என்னலாம்படியிறே வஸ்துவோட்டை ப்ராப்தி யிருக்கும்படி. இவ்வாத்மாவினுடைய சேஷத்வந்தான் கேவலம் அவனளவன்றிக்கே (க) மிதுநவிஷயமாயிறேயிருப்பது; ஆகையாலிறே "என்னுதன்தேவிக்கு" என்றது. "ஸ்ரீ:" "விஷ்ணுபத்நீ" என்கிறபடியே இவளுக்கு நிரூபகம் - அவனுடையதேவியென்னுமதிறே. "தேவி" என்கையாலே-ஸத்யபாமைப்பிராட்டியுடைய(உ)வால்லப்யம் சொல்லுகிறது. (அன்று) நரகாஸுரவதம்பண்ணி தங்களுக்குக் குடியிருப்புப் பண்ணிக்கொடுத்த க்ர்ஷ்ணனோடேகூடி தன்னுடைய க்ர்ஹத்திலே ஸத்யபாமைப்பிராட்டி யெழுந்தருளினவன்று. அபேக்ஷா நிரபேக்ஷமாக மஹாநிதி கைப்பட்டவன்று. (இன்பப்பூவீயாதாள்) போக்யமான கல்பகப்பூ வர, அத்தைக்கண்டு நாய்ச்சியார் (௩) அபேக்ஷிக்கவும்பெற்றுவைத்து நிர்ப்பாக்யையாகையாலே நிரர்த்தகமாகச் சிலஹேதுக்களைச் சொல்லிக் கொடாதஇந்த்ராணி. (தன்நாதன்) "அவனைத்தனக்கு நாதனாகவுடையோம்" என்னுமிதைதையிறே இவள் தனக்குக்கனக்கபலமாக நினைத்திருப்பது. (காணவே) "நான் முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் நிர்வாஹகனான இந்த்ரனல்லனோ" என்று தன்னைப் (௪) போரப்பொலிய அபிமானித்திருக்குமவன் கண்டுகொடுநிற்கவே. (தண்பூமரத்தினை) தழைத்துக்குளிர்ந்து பூத்துநிற்கிற கல்பகவ்ருக்ஷத்தை. (வன்நாதப்புள்ளால்) (௫) நாதப்ரதாநமான*வேதமயனாயிருக்கிற பெரியதிருவடியாலே. "ஸுபர்ணோऽஸி கருத்மாந்" "த்ரிவ்ருத்தே ஶிரோ காயத்ரம் சக்ஷு:" இத்யாதியாலே-இவனுடைய வேதமயத்வம் (௬) ஸுவ்யக்தமாகச்சொல்லப்படாநின்றதிறே. நாதத்துக்குவன்மையாவது-(எ) பாஹ்யகுத்ர்ஷ்டிகளால் சலிப்பிக்கவொண்ணாமை. வன்மை, பெரிய திருவடிக்கு விசேஷணமாகவுமாம், இவனுக்கு வலிமையாவது - நினைத்தகார்யம் செய்துமுடிக்கவல்லசக்தி. (வலியப்பறித்திட்ட) வலியாலேபிடுங்கிக்கொண்டுபோநத. அவன்றன்னை யபேக்ஷித்துக் கொள்ளுகை யன்றிக்கே, அவன்றான் அபேக்ஷித்துத்தரக் கொள்ளுகையன்றிக்கே, (அ) அவனுடைய அஸந்நிதியிலே பிடுங்குகையுமன்றிக்கே, அவன் பார்த்துநின்று விலக்கச்செய்தே, பலத்தாலேயிறே பிடுங்கிக்கொண்டுபோந்தது. (என்னுதன்வன்மையைப்பாடிப்பற) அபிமதையான ஸத்யபாமைப்பிராட்டிக்கு பரதந்த்ரனாய் கார்யஞ்செய்த ப்ரணயி

---

(க) மிதுநம் - இருவருமானசேர்த்தி. (உ) வால்லப்யம்-கணவனுகுகை. (௩) அபேக்ஷிக்கவும்பெற்றுவைத்து - கேட்கச்செய்தேயும். (௪) போரப்பொலிய - மிகவும். (௫) நாதப்ரதாநமான - ஸ்வரத்தை முதன்மையாகவுடைய. (௬) ஸுவ்யக்தமாக - மிகவும்வெளிப்படையாக. (எ) பாஹ்யகுத்ர்ஷ்டிகள்- வேதத்துமுப்புறம்பானவர்களும், அபார்த்தம்செய்யுமவர்களும். (அ) அவனுடைய அஸந்நிதியிலே - அவனில்லாமலிருக்கச்செய்தே. வேதம் - ஸாமவேதம்,

த்வகுணத்தாலே யென்னை யெழுதிக்கொண்டவனுடைய, நினைத்தது முடிக்கவல்ல பலத்தை ப்ரீதியாலே பாடிக்கொண்டுபற. (எம்பிரான்வன்மையைப் பாடிப்பற) (க) பிராட்டிக்குச்செய்த உபகாரம் தனக்குச்செய்ததாகநினைத்து "எம்பிரான்" என்கிறார். "வன்மையைப்பாடிப்பற" என்று மீளவும்சொல்லிற்று (உ) ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே. பறவென்றது - உந்திபறவென்றபடி. (க)

மூ.—என்வில்வலிகண்டுபோவென்றெதிர்வந்தான்
றன்வில்லினோடுந்தவத்தையெதிர்வாங்கி
முன்வில்வலித்துமுதுபெண்ணுயிருண்டான் [பாடிப்பற.
றன்வில்லின் வன்மையைப்பாடிப்பற தாசரதிதன்மையைப்

ப-ரை.—என் - என்னுடைய, வில் - வில்லின், வலி - வலியை, கண்டுபோவென்று —, எதிர்-எதிரே, வந்தான்றன்-வந்தபரசுராமனுடைய, வில்லினோடும்-வில்லையும், தவத்தையும்-தபஸ்ஸையும், எதிர்-அவன்கண்முன்னே, வாங்கி-அழித்தவனாய், முன் - இதுக்குமுன்னே, வில் - திருக்கையில்வில்லை, வலித்து - வளைத்து, முதுபெண் - தாடகியென்னும் ராக்ஷஸியுடைய, உயிர் - ப்ராணனை, உண்டான்றன் - முடித்தசக்ரவர்த்தித் திருமகனுடைய, வில்லின் - வில்லினது, வன்மையை —, பாடிப்பற—; தாசரதி - * தயரதற்குமகனானவனுடைய, தன்மையை-குணத்தை, பாடிப்பற—. [இது, ராமாவதாரத்திலீடுபட்டவள் வார்த்தை].

வ்யா.—இரண்டாம்பாட்டு. (என்னித்யாதி) "என்னுடையவில்லின்வலியைக் கண்டுபோ" என்று எதிரேவந்த பரசுராமனுடைய. அதாவது - (௩) மாஹேச்வர தநுர்ப்பங்கம்பண்ணி ஸ்ரீஜநகராஜன் றிருமகளைத் திருமணம்புணர்ந்து, பெரியசெருக்கோடே திருவயோத்யையைநோக்கி யெழுந்தருளாநிற்கச்செய்தே, இந்த விசேஷத்தைக்கேட்டு, குபிதஹ்ருதயனாய்த் தன்னுடைய வில்லையுமெடுத்துக்கொண்டு நடுவழியிலேவந்து தோன்ற, சக்ரவர்த்தியெதிரேசென்று பொற்பூக்களையும் காலிலேபொகட்டு அநுவர்த்தித்து "ஜலாநாம் ஸமஸ்புத்ராணாமபயம்தாதுமர்ஹஸி" "பாலாநாம்மம புத்ராணாம் அபயம் தாதுமர்ஹஸி" என்று அர்த்தித்தவளவிலும் அத்தை (௪) அதிக்ரமித்துத்தள்ளிக் கொடுபோந்து, தன்சீற்றமெல்லாந் தோற்றும்படி முகத்தைப்பார்த்து, "முன்பேமூரிப்போய் பலவிடங்களிலும் பூண்கட்டிக்கிடக்கிறதொரு சொத்தைவில்லைமுறித்தேன் என்று (௫) கர்வோத்தரனாய் வருகிற நீ என்கையில் வில்லைவாங்கி வளைத்தாயாகில் சமத்தன்" என்னும் நினைவாலே, "என்வில்வலிகண்டுபோ" என்று

(க) பிராட்டி - ஸத்யபாமைப்பிராட்டி. (உ) ப்ரீதிப்கர்ஷம் - அன்பின் மிகுதி. (௩) மாஹேச்வரதநுர்ப்பங்கம்பண்ணி - ஈச்வரனுடைய வில்லைமுறித்து. (௪) அதிக்ரமித்தல் - மீறுதல். (௫) கர்வோத்தரன் - மிகச்செருக்குடையவன்.

தன்னுடைய பூர்வபராக்ரமங்களையும் அதுக்கடியான தபஸ்ஸையும் கனக்கநினைத்து, "சக்ரவர்த்தித்திருமகன்" என்றுமதியாதே எதிரே அடர்ந்துவந்தபடியைச் சொல்லுகிறது.

(தன்வில்லினேடும் தவத்தையெதிர்வாங்கி) ஆனாலும், தன்னுடையவில்லைத்தந்துகாண் என்று வில்லை (க) வாங்குகிறவளவில், அந்தவில்லோடேகூட அவனுடைய கர்வஹேதுவான தபஸ்ஸையும், அவன் பார்த்துநிற்கச்செய்தே வாங்கி. எதிர்வந்தான்றன் வில்லென்று - எதிரேவந்தவன்றன்னுடைய வில்லென்னுதல்; எதிரே வந்த பரசுராமன்கையிலிருப்பதாய் வைஷ்ணவமான தநுஸ்ஸாகையாலே முன்பே தன்னுடையதாயிருக்கிற வில்லென்னுதல். இப்படியிருக்கிற வில்லோடே, அவனுடைய தபஸ்ஸை யெதிர்வாங்குகையாவது - அந்த வில்லைவாங்கி அதிலே சரத்தைத்தொடுத்து, "இத்தைக்கொண்டு உன் ப்ராணனைப் போக்கிவிட என்றால் நீ ப்ராஹ்மணனுயிராநின்றாய்; ஆனபின்பு, உன்னுடைய(உ)கதி பங்கத்தைப்பண்ணிவிடவோ, உன்னுடைய தப:பலங்களையழித்துப் பொகட்டுவிடவோ" என்று கேட்டவளவில்; "கதிபங்கம்பண்ணினல்எனக்கு வாஸஸ்தலமான மஹேந்த்ர பர்வதத்தேறப்போகாது, என்னுடைய தப:பலத்தையழித்துவிடும்" என்ன; அப்படிசெய்துவிட்டது. (௩) ஸ்வரூபாவேசாவதாரமாய், தசாவதாரமத்யேஸஹபடிதனுய்ப் போருகிற அப்பரசுராமன்றான் (ச) நிரதஸ்னனபடி யெங்ஙனேயென்னில்; ஸ்வரூபாவேசத்திலும்(ரு)ஸாக்ஷாதவதாரம் ப்ரபலமாகையாலே(௬) அத்யுத்கடத்வமுண்டானபோது இதினாலே அதுநிரஸ்தமாகக்குறையில்லை; சக்த்யாவேசத்தில் ஸ்வரூபாவேசம் ப்ரபலமானவோபாதி, ஸ்வரூபாவேசத்தில்ஸாக்ஷாதவதாரம் ப்ரபலமாகத்தில்லையிறே; சக்த்யாவேசத்தில் ஸ்வரூபாவேசம் ப்ரபலமாகையாலே தட்டியிறே (எ) ஸஹஸ்ரபாஹுவர்ஜுநன் பரசுராமனாலே நிரஸ்தனுய்த்து.

(முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான்) இதுக்கு பூர்வத்திலே விச்வாமித்ரமஹர்ஷியினுடைய (அ) அத்வரத்ராணர்த்தமாக மஹர்ஷியோடேகூட எழுந்தருளினவளவிலே, பரஹிம்ஸையிலேபழகி, யாகங்களையும் ப்ராஹ்மணரையும் தபஸ்ஸுக்களையு

(க) வாங்குகிறவளவில் - வளைக்கிறபோது. (உ) கதிபங்கம் - போகவொட்டாமல்தடுத்தல். (௩)ஸ்வரூபாவேசம்-தன்னுடையருபம் ஒன்றில்ஏறுதல். (ச) நிரஸ்தன் - தள்ளிவிடப்பட்டவன். (ரு) ஸாக்ஷாத் - நேரான. (௬) அத்யுத்கடத்வம் - அதிகமாயிருக்கை. (எ) ஸஹஸ்ரபாஹுவர்ஜுநன் - ஆயிரங்கைகளையுடைய கார்த்தவீர்யார்ஜுநன். (அ) அத்வரத்ராணர்த்தமாக - வேள்வியை காக்கும்பொருட்டு.

மழித்துக்கொண்டுதிரியும் ராக்ஷஸியான தாடகை, அதிரக்கூப்பிட்டுக் கைகளையுமெடுத்துக்கொண்டு மிகுந்தகோபத்தோடே நலிவதாகஅடர்ந்துவர, விச்வாமித்ர (க) நியோகத்தாலே திருக்கையில் வில்லைவளைத்து அவளுடைய ப்ராணனைமுடித்தவன். (தன்வில்லின் வன்மையைப்பாடிப்பற) அவன்றன்னுடைய வில்லின் வன்மையைப் பாடிக்கொண்டு பறஎன்று எதிரியைப்பார்த்துச் சொல்லுகிறாள். வில்லுக்கு வலிமையாவது-"காயுங்கடுஞ்சிலை" என்கிறபடியே ப்ரதிபக்ஷ நிரஸநத்தில் பெருமாள் கண்பார்க்கிலும் கண்பாராமல் கார்யம்செய்யும்திண்மை. (தாசரதிதன்மையைப்பாடிப்பற) இத்தால்-இவ்வதிமாநுஷசேஷ்டிதங்களைச் செய்யாநிற்கச்செய்தேயும், மீளவும் (உ)ஈச்வரகந்தமற ஐயர் "மகன்" என்றே தன்னைநினைத்துநின்று கார்யஞ்செய்தகுணத்தைச் சொல்லுகிறது. (உ)

மூ.—உருப்பிணிநங்கையைத்தேரேற்றிக்கொண்டு
விருப்புற்றங்கேகவிரைந்தெதிர்வந்து
செருக்குற்றான்வீரஞ்சிதையத்தலையைச் [பாடிப்பற.
சிரைத்திட்டான்வன்மையைப்பாடிப்பறதேவகிசிங்கத்தைப்

ப-ரை.—உருப்பிணிநங்கையை - ருக்மிணிப்பிராட்டியை, தேர் - திருத்தேரிலே, ஏற்றிக்கொண்டு—, அங்கு - அவ்வளவிலே, விருப்புற்று - விருப்புடையனாய், ஏக-போகாநிற்கச்செய்தே, எதிர்-எதிர்நின்றுபொருவதாக, விரைந்து—, வந்து - வந்தவனாய், செருக்குற்றான்-கர்வத்தையடைந்த ருக்மனுடைய, வீரம்-வீர்யமானது, சிதைய - அழியும்படி, தலையை—, சிரைத்திட்டான் - அம்பாலே சிரைத்துவிட்டவனுடைய, வன்மையை-வலியை, பாடிப்பற—; தேவகி-தேவகிவயிற்றிற்பிறக்கையாலே, சிங்கத்தை - சிங்கம்போன்ற வீரப்பாட்டையுடையவனை, பாடிப்பற—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு) "கண்ணாலங்கோடித்து" என்கிறபாட்டிற் சொல்லுகிறபடியே - தான் முன்புதேடின தநமெல்லாம் இதிலே செல்லும்படி கல்யாணத்தைப் பெருக்கக்கோடித்து, (௩) புதுப்பூமொக்கவேணும் என்று ஆசைப்பட்டிருப்பாரைப்போலே கந்யகையானவிவளைக் கைப்பிடிப்பதாகவிரும்பி, அதுக்கு பூர்வக்ரியைகளெல்லாம் செய்து "இனி இவ்விஷயம் நமக்குக்கைப்புகுந்தது" என்று நிச்சயித்திருந்த சிசுபாலன்தேஜோஹாநிப்பட்டு, ஒருவர்முகம்பார்க்க லஜ்ஜித்து அண்ணாந்துகொண்டிருக்கும்படியாக அங்கேசென்று கையைப்பிடித்தெடுத்து, ருக்மிணிப்பிராட்டியைத் திருத்தேரிலேயேற்றிக்

(க) நியோகம் - கட்டளை. (உ) ஈச்வரகந்தமற - ஸர்வேச்வரனென்று சற்றும் நினையாமல். (௩) புதுப்பூமொக்கவேணும் - நூதநரஸமநுபவிக்கவேணும்.

கொண்டு. (விருப்புற்றங்கேக) அவ்வளவிலே விருப்பத்தைப் பண்ணிக்கொண்டுபோராநிற்கச்செய்தே.அவ்வளவிலே(விரைந்தித்யாதி)ருக்மிணிப்பிராட்டியினுடைய தமையனான ருக்மன், "இப்படி செய்கையாவதென்" என்று எதிர்பொருது மீட்பானாக விரைந்து வந்து தன்னுடைய வீர்யத்தால்வந்த செருக்கையுடையனாய்க்கொண்டுதகைய. "இவனைக்கொல்லில் ருக்மிணிப்பிராட்டி மநஸ்ஸு (௧) பிசகும்" என்று அவனைப்பிடித்துத் தேர்க்காலோடேகட்டி அவனுடையவீரத்துக்கு(௨)பங்கமாக அவன்றலையை அம்பாலே சிரைத்துவிட்டவனுடையவலியை,ப்ரீதிப்போரிதையாய்க்கொண்டுபாடிப்பற. அன்றிக்கே, "வந்தசெருக்குற்றான்" என்று பாடமானபோது - "மீட்கவேணும்" என்னும் கறுவுதலாலேவிரைந்து எதிர்ந்து வந்த கர்வயுக்தனானவனுடையதலையைச் சிரைத்திட்டான்வன்மையைப் பாடிப்பறவென்கை. (தேவகிசிங்கத்தைப் பாடிப்பற) ருக்மிணிப் பிராட்டியைத் திருமணம்புணருகைக்குடலான தேவகிவயிற்றில் பிறப்பையும், ப்ரதிபக்ஷநிரஸநத்தில் ஸிம்ஹம்போலே யிருக்கும் வீரப்பாட்டையுமுடையவனைப் பாடிப்பற. (௩)

௪.—மாற்றுத்தாய்சென்றுவநம்போகேயென்றிட
ஈற்றுத்தாய்பின்றொடர்ந்தெம்பிரானென்றழக்
கூற்றுத்தாய்சொல்லக்கொடியவநம்போன
சீற்றமிலாதானைப்பாடிப்பற சீதைமணாளனைப்பாடிப்பற.

ப-ரை.—மாற்றுத்தாய் - மாற்றாந்தாயான ஸுமித்ரையார், சென்று—, வநமே-காட்டுக்கே, போகு - போ, என்றிட - என்றுநியமிக்கவும், ஈற்றுத்தாய்-பெற்றதாயாரான ஸ்ரீகௌஸல்யையார், எம்பிரான் - என்நாயனே, உம்மைப் பிரிந்துஎப்படிதரித்திருப்பேன்,என்று—,பின்தொடர்ந்து-பின்னேசென்று,அழ-அழவும், கூற்றுத்தாய் - கூற்றம்போன்ற கைகேயியுடைய, சொல்ல-சொல்லைக் கொண்டு, கொடிய—, வநம் - காட்டிலே, போன - எழுந்தருளினவனாய், சீற்றம் - "காட்டிலே போகவிட்டாள்" எனகிறகோபம், இலாதானை - சற்றேனுமில்லாதவனை, பாடிப்பற—; சீதை-ஏருழுகையில் நிலத்தினின்று வெளிப்பட்ட பிராட்டிக்கு, மணாளனை - வல்லபனானவனை, பாடிப்பற—.

வ்யா.—நாலாம்பாட்டு.(மாற்றுத்தாய்சென்று வநம்போகேயென்றிட) மாற்றுத்தாயென்றது - மற்றைத்தாயென்றபடி. அன்றிக்கே, மாறுஎன்று-ஒப்பாய், மாறான தாய் - பெற்றதாய்க்குப்போலியான தாயென்னவுமாம். ஸ்ரீகௌஸல்யையாரோபாதி, பெருமாள்பக்கல்அதிஸ்நேஹியாயிறேஸுமித்ரையாரிருப்பது. இப்படியிருக்கிற தாயாரானவள்சென்று "நீர்வநத்திலேபோம்" என்றுசொல்ல. அதாவது-திருவபிஷேக மங்களமஹோத்ஸவார்த்தமாகத் (௩) திருப்படைவீ

(௧) பிசகும் - வருந்தும். (௨) பங்கம் - அழிவு. (௩) திருப்படைவீடு - அயோத்யாநகரம்.

டெல்லா மலங்கரித்து (க) உத்ஸவமும்தொடங்கி புரோஹிதரான வஸிஷ்டாதிகளுந் தானுமாகக்கொண்டு, ராஜாவானசக்ரவர்த்தி, திருவபிஷேகார்த்தமாகப் பெருமாளுக்குக் காப்புக்கட்டி, (உ) புரச்சரணங்களும் செய்வித்து, "இனி அபிஷேகம்செய்யுமித்தனை" என்று முஹூர்த்தம்பார்த்திருக்கிறவளவிலே, கைகேயியானவள் (௩) குப்ஜைவார்த்தையாலே நெஞ்சுகலங்கி (௪) பர்த்தாவான சக்ரவர்த்தியைப்பார்த்து, "எனக்கு இரண்டுவரமுண்டே முன்னே தந்திருப்பது, அதிரண்டும் இப்போது செய்யவேணும்; அதாவது - ராமனை அபிஷேகம்செய்யாமல் காட்டிலே போகவிடவேணும், பரதனை அபிஷேகம் செய்யவேணும்" என்ன; (௫) ஸத்யதர்மபராயணனுகையால் "என்செய்வோம்" என்று இடிவிழுந்தாற்போலே இவ்வார்த்தையைக்கேட்டு க்லேசப்பட்டு, பெருமாளையழைத்துக்கொண்டுவரும்படியாக (௬) ஸுமந்த்ரனைப்போகவிட்டு, தான் கலங்கிக்கிடக்க; ஸுமந்த்ரன்சென்று "ஐயர்எழுந்தருளச்சொல்லுகிறுர்" என்கையாலே, பெருமாளும், திருவபிஷேகத்துக்கென்று (எ) அலங்க்ருத திவ்யகாத்ரராய்க்கொண்டு, பிராட்டிமங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு (அ) அந்தஃபுரத்வாரத்தளவும் பின்னேடேவர, திவ்யாந்தஃபுரத்தில்நின்றும் புறப்பட்டுப் பெரிய (௯) கோலாஹலத்தோடே எழுந்தருளிவந்து தமப்பனுரைக்காணப் புகுந்தவளவிலே, கலங்கிக்கிடக்கிறபடியைக்கண்டு "இதுக்கடியென்" என்று பயப்பட்டு, "ஐயர்க்கு இப்போது க்லேசமேது" என்று கைகேயியைக்கேட்க; "முன்பே யெனக்கு இரண்டுவரம் தந்திருப்பர்; அந்த இரண்டுவரமும் இப்போது பெறுகைக்காக உம்மைக் காட்டிலே போகவிடவேணுமென்றும், பரதனை அபிஷேகஞ்செய்யவேணுமென்றும் நானபேக்ஷித்தேன்; ஸத்யம் தப்பாதவராகையாலே அதுக்குஅநுமதிபண்ணி உம்மைக் காட்டிலேபோகவிடுவதாக அழைத்துவிட்டார்; இப்போது உம்மைக்கண்டவாறே வாய்திறந்துசொல்லமாட்டாமல்கிடக்கிறுர்" என்ன; "இப்படியோ நான் ஐயர்க்கு பரதந்த்ரனுய் வர்த்தித்தபடி, என்னைநியமிக்கும்போதைக்கும்இப்படி க்லேசிக்கவேணுமோ, நெருப்பிலேவிழச்சொன்னுல் அதுவும் நான் செய்யேனே" என்ன; "ஆனுல், அவர்க்காக நான் சொல்லுகிறேன் நீர் வந

---

(க) உத்ஸவம் - பட்டாபிஷேகஉற்சவம். (உ) புரச்சரணம் - முன்னே செய்யும்ஜபம். (௩) குப்ஜை - கூனி. (௪) பர்த்தா - கணவன். (௫) ஸத்யதர்மபராயணன் - ஸத்யத்தையும் தர்மத்தையும் தன்னிடத்திலேயுடையவன். (௬) ஸுமந்த்ரன் - மந்த்ரி. (எ) அலங்க்ருததிவ்யகாத்ரர் - அலங்கரிக்கப்பட்ட அழகிய திருமேனியையுடையவர். (அ) அந்தஃபுரம்-இராஜாத்திவஸிக்குமிடம். (௯) கோலாஹலம் - ஆரவாரம்.

வாஸார்த்தமாகப்போம்" என்ன; "அப்படி செய்யக்கடவேன்" என்று (௧) ஸங்கல்பித்துப் புறப்பட்டு திருத்தாயாரான கௌஸலையாரையும் வந்துகண்டு (௨) வநகமநார்த்தமாக (௩) உத்யோகிக்கிறவளவிலே, இளையபெருமாள், தம்முடைய திருத்தாயாரான ஸுமித்ராயார்பக்கலிலே வந்து, (௪) "ஐயர் சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே பெருமாள் காட்டிலே யெழுந்தருளாநின்றார், நானுங் கூடஸேவித்துக்கொண்டு போகிறேன்" என்ன; "సృష్టస్త్వం వనవాసాయ స్వనురక్తస్సుహృజ్జనే । రామే ప్రమాదం మాకార్షీః పుత్ర భ్రాతరి గచ్ఛతి" "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே । ராமே ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி" என்றும், "రామం దశరథం విద్ధి మాం విద్ధి జనకాత్మజామ్। అయోధ్యామటవీం విద్ధి గచ్ఛ తాత యథాసుఖమ్" "ராமம் தஶரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம் । அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாத யதாஸுகம்" என்றுஞ்சொல்லி இவனை (௫) ஒருப்படுத்தி, பெருமாள்பக்கலிலே சென்று, அவர்வநகமநார்த்தமாக வுத்யோகித்துநிற்கிறபடியைக்கண்டு, சக்ரவர்த்தியுங் கைகேயியுஞ்செய்த கொடுமையை நினைத்து நெஞ்செரிந்து "ஒருபெண்பெண்டாட்டி என்பிள்ளைக்குவேணுமென்று பறித்துக்கொண்டராஜ்யம் உமக்குவேண்டா, ஒருவரும் (௬) அபிமாநியாதவநமே உமக்கு அமையும், ஆனபின்பு வநத்திலே யெழுந்தருளும்" என்றுசொன்னது. வநம்போகேயென்றது-வநமே போகு என்றபடி. இந்த (௭) அவதாரணமிறே கீழ்ச்சொன்ன பொருளைக் காட்டுகிறது.

(ஈற்றுத்தாய்பின்றொடர்ந்து எம்பிரானென்றழ) பெற்ற தாயாரான ஸ்ரீகௌஸலையார் பின்னேதுடர்ந்து சென்று தன்னுடைய பிரிவாற்றாமை யெல்லாம்சொல்லி, "ஏகபுத்ரையான நான் உம்மைப்பிரிந்திருக்கமாட்டேன், என்னுடைய நாயனே" என்று கட்டிக்கொண்டு அழ. (கூற்றுத்தாய்சொல்ல) கூற்றம்போன்ற கைகேயியாகிற தாய் சொல்ல. பெருமாளுடையஸௌகுமார்யத்தையும், போகிறவிடத்திலுண்டான கொடுமையையும் பாராமல், பதினாலுஸம்வத்ஸரம் வநவாஸம் பண்ணச்சொன்ன (௮) க்ரௌர்யத்தைப்பற்ற - இவளைக் கூற்றுத்தாயென்கிறது. (௯) "பித்ர்வசநபரதந்த்ரராய்ப் போனார்" என்னா நிற்கச்செய்தே, இவள்சொன்னதுக்காகப் போனார் என்கி

(௧) ஸங்கல்பித்து - நினைத்து. (௨) வநகமநார்த்தமாக - காட்டுக்குப் போகும்பொருட்டு. (௩) உத்யோகித்தல் - முயலுதல். (௪) ஐயர் - தகப்பனார். (௫) ஒருப்படுத்தி - ஸம்மதிபண்ணுவித்து. (௬) அபிமாநியாத - விரும்பாத. (௭) அவதாரணம் - தேற்றேகாரம். (௮) க்ரௌர்யம் - கொடுமை. (௯) பித்ர்வசநபரதந்த்ரராய் - பிதாவின்சொல்லை மேற்கொண்டவராய்.

றது - அவன் வாய்விட்டுச் சொல்லமாட்டாதே அநுமதிபண்ணிக் கிடக்க, அதுதானும் சொன்னாள் இவளாகையாலேயிறே. மாற்றுத் தாய்சென்று வநம்போகேயென்றிடவும், ஈற்றுத்தாய் பின்தொடர்ந்து எம்பிரானென்றழவும், கூற்றுத்தாய்சொல்லடியாகக் கொடிய வநத்திலே போனவென்றபடி.

அதவா, மாற்றுத்தாயென்கிறது - கைகேயியாகவும், கூற்றுத் தாயென்கிறது - ஸுமித்ராயாராகவும் யோஜிக்கவுமாம். அப்போதைக்கு, மாற்றுத்தாயென்றது - (க) ஸபத்நியாகையாலே; ஸ்ரீகௌஸல்யாருக்குத் தன்நினைவாலே மாற்றாந்தாயென்றபடி. ஸ்ரீபரதாழ்வான்நினைவுக்கு மேல்பொருந்தாமையாலே மாற்றாந்தாயென்கிறதாகவுமாம். "மாறு" என்றுசொல்லி, "தாய்" என்னவேண்டுகிறது பெருமாள் நினைவாலேயிறே; "நடுவிலாச்சி" என்றிறே அவர் எப்போது மருளிச்செய்வது. (சென்றுவநம்போகேயென்றிட) வநமே சென்றுபோகு என்றுநியமிக்க. அதாவது-ராஜபோகத்தில் நெஞ்சுவையாதே வநத்தளவுஞ்சென்று அதிலேபோய்விடு என்று நியமிக்கவென்கை; "வா" என்கிறாளன்றே; "இன்னம்வந்தொருகால்கண்டுபோ" என்கிறாளன்றே; "போ" என்னுமதுவேயிறே இவள்சொல்லுவது. (ஈற்றுத்தாயித்யாதி) பெற்றதாயாரான கொஸல்யார், "என்நாயனே, ஏகபுத்ராயான நான் உம்முடைய (உ) விச்லேஷவ்யஸநம் பொறுக்கமாட்டேன், நான் எப்படி உம்மைப்போகவிட்டு தரித்திருப்பது" என்று பின்தொடர்ந்துசென்றழ.

(கூற்றுத்தாய்சொல்ல) ஸுமித்ராயாகிறதாய்சொல்ல. கூறுபட்ட(௩)ஹவிஸ்ஸைபுஜிக்கையாலே கூற்றுத்தாயென்னுதல்; சக்ரவர்த்திக்கு மூவரும்(ச) ஸஹதர்ம சாரிகளாகையாலே(ரு) யதாம்சத்தாலே கூற்றுத்தாயென்னுதல்; ஸ்ரீகௌஸல்யாரைப்போலே நிஷேதித்து அநுமதிபண்ணாமல் "(சா) அஹம் மமதைகளாலே ஒருத்தி 'எனக்கு' என்றது உமக்கென்செய்ய" என்று இவள்சொன்னத்தை மிகவும் திருவுள்ளம்பற்றுகையாலே விச்லேஷபீருக்கவபிப்ராயத்தாலே கூற்றம்போன்ற தாயென்னுதல். இப்படியிருக்கிறவள் வசநத்தைக்கொண்டு கொடியவநம்போன. முற்பட்ட யோஜநை, நாலூர்பிள்ளை யிட்டருளின வ்யாக்யாநப்ரக்ரியை; பிற்பட்ட யோஜநை, பிள்ளை யிட்டருளின வ்யாக்யாநப்ரக்ரியை. முற்பட்ட

(க) ஸபத்நி - சக்களத்தி. (உ) விச்லேஷம் - பிரிவு. (௩) ஹவிஸ்ஸு - ஹோமகுண்டத்தினின்றும் அக்நிபுருஷன்கொணர்ந்து கொடுத்தபாயஸம். (ச) ஸஹதர்மசாரிகள் - தர்மத்துக்குஸஹாயமாக இருப்பவர்கள். (ரு) யதாம்சம் - சரியானபங்கு. (சா) அஹம்மமதை - அஹங்காரமமகாரங்கள்.

யோஜனையில், "சென்றுவநம்போகே" என்கிற விதுக்கு ஸ்வரஸார்த்தம் ஸித்திக்கையும், * கூற்றுத்தாய் சொல்லக்கொடிய வநம்போனவிது "தண்டகநூற்றவள் சொற்கொண்டுபோகி" என்றும், "குலக்குமரா காடுறையப்போவென்றுவிடைகொடுப்ப விலக்குமணன்றன்னோடு மங்கேகியது" என்றும், "கொடியவள்வாய் கடியசொல்கேட்டு - கான்தொடுத்தநெறிபோகி" என்றும் கீழ்மேல் அருளிச்செய்தவற்றுக்குச் சேர்ந்திருக்கையுமுண்டு.

(க) ஸம்ப்ரதாயத்திலும்வந்தால், நம்பிள்ளைஸ்ரீபாதத்திலே கேட்ட சிறியாழ்வானப்பிள்ளைகுமாரர்பக்கலிலேகேட்ட நாலூர்பிள்ளையருளிச்செய்ததாகையாலேவந்த ப்ராபல்யமுண்டு. அவர்தாம் (உ) ஆச்சான்பிள்ளை திருத்தமப்பனாராகையாலே, (௩) பிள்ளைக்கு பரமாசார்யருமிறே; ஆகையாலே, அந்தயோஜனை முற்பட வெழுதி, பிள்ளையருளிச்செய்தயோஜனை பிற்படஎழுதப்பட்டது. இரண்டு யோஜனையிலும், ஸுமித்ராயார், பெருமாள் முகம்பார்த்துச்சொன்னதாகச் சொல்லப்பட்டவசநம் ஸ்ரீராமாயணத்தில் இல்லையேயாகிலும் இதிஹாஸாந்தர புராணாதிகளிலேயாதல், கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேணும் - * மயர்வறமதிநலமருளப்பெற்றவிவர் இப்படி யருளிச்செய்கையாலே.

(கொடியவநம்போன) "கன்னிறைந்துதீய்ந்துகழையுடைந்துகால்சுழன்று, பின்னும்திரைவயிற்றுப்பேயேதிரிந்துலவாக், கொன்னவிலும்வெங்கானம்" என்னும்படியிறே காட்டின் கொடுமைதானிருப்பது; இப்படியிருக்கிறகாட்டிலே, *நைவாயவேல்நெடுங்கண் நேரிழையுமிளங்கோவும் பின்புபோக வெழுந்தருளின. (சிற்றமிலாதானை) "கட்டினகாப்போடே காட்டிலே தள்ளிவிட்டாள்" என்னும் சீற்றம் (ச) ஏகதேசமும் திருவுள்ளத்திலில்லாதவனை. "మాచలక్ష్మణసన్తాపం కార్షీల్లక్ష్మవిపర్యయే ।, రాజ్యంవావనవాసోవా వనవాసోమహోదయః" "மாசலக்ஷ்மணஸந்தாபம் கார்ஷீர்லக்ஷ்மவிபர்யயே । ராஜ்யம்வாவநவாஸோவா வநவாஸோமஹோதய:" என்று - ஸந்தோஷத்தோடேயிறேயெழுந்தருளிற்று. (சீதைமணாளனைப்பாடிப்பற) வநவாஸந்தான் (ரு) ஸரஸமாய்த்தது அவள்கூடப்போகையாலேயிறே. பிராட்டியுந்தாமும் "ஏகாந்தரஸமநுபவிக்கலாம்தேசம்" என்றிறே காடுதன்னைவிரும்பிற்று. "దర్శనంచిత్రకూటస్య మన్దాకిన్యాశ్చశోభనే । అధికంపురవాసాచ్చ మన్యేతవదర్శనాత్" "தர்சநம்சித்ரகூடஸ்ய மந்தாகிந்யாச்ச சோபநே । அதி

(க) ஸம்ப்ரதாயம் - தொன்றுதொட்டுவந்தவழி. (உ) ஆச்சான்பிள்ளை - நாலூராச்சான்பிள்ளை. (௩) பிள்ளை-திருவாய்மொழிப்பிள்ளை. (ச) ஏகதேசம்- அற்பம். (ரு) ஸரஸம் - இன்பம்.

ஸம்வ-ஸாவாஸாவு ஃமெநுதவவஃஹு நாஸ" என்றிறேயருளிச்செய்தது. இப்படியிருக்கிறவனைப் பாடிப்பறவென்று (க) ப்ரதிகோடியான வளைப்பார்த்து நியமிக்கிறாள். (௪)

மூ.—பஞ்சவர் தூதனாய்ப் பாரதங்கைசெய்து
நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்
கஞ்சப்பணத்தின்மேற் பாய்ந்திட்டருள்செய்த
அஞ்சநவண்ணனைப்பாடிப்பற வசோதைதன்சிங்கத்தைப்பா [டிப்பற.

ப-ரை.—பஞ்சவர் - பாண்டவர்களைவர்க்கும், தூதனாய் - தூதனாய்க்கொண்டு, பாரதம் - பாரதயுத்தத்திலே, கைசெய்து - கையு மணியும் வகுத்து யுத்தத்தை நடத்தினவனாய், நஞ்சு - விஷத்தை, உமிழ் - உமிழாநின்ற, நாகம் - காளியனாகிற ஸர்ப்பம், கிடந்த—, நல் - கொடிய, பொய்கை - பொய்கைக் கரையில்ல, புக்கு - போய்ப்புக்கு, அஞ்ச - அவனஞ்சும்படி, பணத்தின்மேல்- பணங்களின்மேலே, பாய்ந்திட்டு - குதித்திளைப்பித்து, அவனும் அவன்மனைவியரும் சரணம்புக்கவாறே, அருள்செய்த - அவனைக்கொல்லாமல் விடுத்தருளினவனாய் அத்தாலே, அஞ்சநம்-மைபோன்ற,வண்ணனை-திருநிறத்தையுடையவனை, பாடிப்பற—; அசோதைதன் - யசோதைப்பிராட்டி சீராட்டிவளர்க்கையாலே, சிங்கத்தை - சிங்கம்போலே செருக்கியிருக்கிறவனை, பாடிப்பற—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பஞ்சவர் தூதனாய்) தர்மபுத்ராதிகளைவர்க்குத் தூதனாய். இவர்கள் ஐவரிலும், இவனை ஏவவுரியரல்லாதார் இல்லைபோலேகாணும். (தூதனாய்) ஸர்வாதிகனானதான் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோகிறவிடத்தில் புரையற்றிருந்தபடி. இது தன்னைப் பெருப்பேறாகவிறே யிவன்றானினைத்திருப்பது. "இன்னார் தூதனெனநின்றான்" என்கிறபடியே - "பாண்டவதூதன்" என்கிற ப்ரஸித்திபெற்றபின்பிறே (உ) பாரில்கால்பாவிதரித்துநின்றது. (பாரதம்கைசெய்து) "பத்தூர், ஓரூர்" என்றாற்போலே சொன்னவிடத்தில் அவர்கள் ஒன்றுக்கும் இசையாமையாலே, "ஆனால், யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் பூமியாளுங்கோள்" என்று அவர்களை யுத்தத்திலே பொருத்திப்போந்து, பாண்டவர்களுக்காய்நின்று, பாரத ஸமரத்தில் கையுமணியும் வகுத்து யுத்தத்தை நடத்தி. (நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு) அருகணைந்த வ்ருக்ஷங்கள் பக்ஷிகளெல்லாம்பட்டுவிழும்படி விஷத்தை யுமிழாநின்ற காளியனாகிற ஸர்ப்பங்கிடந்த * நச்சழல்பொய்கையிலேபுக்கு. "நற்பொய்கை" என்றது - "நல்லபாம்பு, நல்லநெருப்பு" என்பாரைப்போலே (௩) விபரீதலக்ஷணை. அதவா, காளியன் ப்ரவேசிப்பதுக்கு முன்புத்தை படியையிட்டுச் சொல்லிற்றாகவுமாம். (அஞ்சப் பணத்தின்

(க) ப்ரதிகோடி-எதிரி. (உ)பார-பூமி. (௩)விபரீதலக்ஷணை. மங்களவழக்கு.

மேல் பாய்ந்திட்டருள்செய்த) அப்பொய்கையைக்கலக்கி, காளியன் க்ருத்தனுய்த் தலையெடுக்கும்படிபண்ணி, பின்பு அவனஞ்சும்படியாக அவன் பணங்களின்மேலே சென்று குதித்து நின்ருடி அவனையிளைப்பித்து, "కృపామాత్రమనోవృత్తిః ప్రసీదమే" "க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீதமே" என்றும், "ధర్మేణాప్రదీయతామ్" "ஹர்த்ருஷீக்ஷாவ்ருத்தீயதாம்" என்றும் - அவனும் அவனுடைய ஸ்த்ரீகளும் சரணம்புகுந்தபின்பு அவன் ப்ராணன்பெற்றுப் போம்படி க்ர்பைபண்ணின. (அஞ்சநவண்ணனைப்பாடிப்பற) இப்படி சரணுகதரக்ஷணம்பண்ணுகையாலே அஞ்சநம்போன்ற தன்திருமேனிநிறம் ப்ரகாசிக்கும்படி நின்றவனைப் பாடிக்கொண்டுபற. (அசோதைதன் சிங்கத்தைப் பாடிப்பற) யசோதைப்பிராட்டி சீராட்டிவளர்க்கையாலே ஸிம்ஹக்கன்றுபோலே செருக்கியிருக்கிறவனைப் பாடிப்பறவென்று எதிரியைப்பார்த்து நியமிக்கிருள். (ரு)

மூ.—முடியொன்றிமூவுலகங்களுமாண்டுன்
னடியேற்கருளென்றவன்பின்ருெடர்ந்த
படியில்குணத்துப பரதநம்பிக்கன் [ப்பற.
றடிநிலையீந்தானைப்பாடிப்பற வயோத்தியர்கோமானைப்பாடி

ப-ரை.—முடி - திருமுடியை, ஒன்றி-சூடி, மூவுலகங்களும்-பூமி சுவர்க்கம் பாதாளமென்கிற மூன்றுலோகங்களிலும், ஆண்டு-அரசுசெய்துகொண்டு, உன்-தேவரீருடைய, அடியேற்கு - தாஸனுனவெனக்கு, அருள் - க்ர்பைபண்ணியருளவேணும், என்று - என்று அர்த்தித்து, அவன் - அச்சக்ரவர்த்தித் திருமகனுக்கு, பின் - பின்னேசென்று, தொடர்ந்த - அநுவர்த்தித்த, படியில் - ஒப்பில்லாத, குணத்து - குணங்களையுடையனுன, பரதநம்பிக்கு - ஸ்ரீபரதாழ்வானுக்கு, அன்று - அவன் மநம்வருந்திநின்ற அக்காலத்திலே, அடிநிலை - திருவடிநிலைகளை, ஈந்தானை - * அடிசூடும் அரசாக்கிவிடுத்தவனை, பாடிப்பற—; அயோத்தியர் - திருவயோத்திலுள்ளார்க்கு, கோமானை - ராஜாவானவனை, பாடிப்பற—.

வ்யா.—ஆரும்பாட்டு. (முடியித்யாதி) சக்ரவர்த்திக்கு சாஸ்த்ரார்த்தங்கள் பண்ணின (க) அன்று நாயிறுபாடு, ராஜகுலத்திலுள்ளாரும் (உ) பௌரஜாநபதமும் புரோஹிதரான வஸிஷ்டாதிகளும் எல்லாரும் திரளவிருந்து "பெருமாள் காடேறப்போனுர், சக்ரவர்த்தி (ந) துஞ்சினுன், நாடு (ச) அராஜகமாய்க்கிடக்கவொண்ணுது" என்று தன்னை முடிசூட்டுவதாக மங்களாவஹமான (ரு) தூர்யகோஷத்தையும் பண்ணிக்கொண்டிருக்க, அந்தத்வநி கேட்டபோதே கனக்கநோவுபட்டு, "విలలాప సభామధ్యే జగర్హే చ పురోహితమ్" "விலலாபஸபாமத்யே ஜகர்ஹேச புரோஹிதம்" என்கிறபடியே

(க) அன்றுநாயிறுபாடு - அன்றுஸாயங்காலம். (உ) பௌரஜாநபதமும் - நாட்டிலுள்ளவர்களும் நகரத்திலுள்ளவர்களும். (ந) துஞ்சினுன் - இறந்தான். (ச) அராஜகமாய் - அரசனில்லாமல் (ரு) தூர்யம் - பேரிவாத்யம்.

தன்னுற்றமையெல்லாம் தோற்றும்படி திரளிலேயிருந்து, "ஒருதிரளாக விருந்து என்னுடைய சேஷத்வத்தை (க) அபஹரிப்பதே!" என்று (உ) பெருமிடறுசெய்து கூப்பிட்டு, "నియమాతిక్రమం రఘూణాంబోధయేత్" "நியமாதிக்ரமம் ஹிலிலொயமெயஸ" என்கிற க்ரமமும் பாராதே, புரோஹிதனை வஸிஷ்டபகவானையும் "அழகிதாக இக்குடிக்கு முன்னோடிஹிதம்பார்த்தாய்" என்று அத்திரளிலே (௩) கர்ஹித்து, "రాజ్యఞ్చాహఞ్చ రామస్య ధర్మంవక్తుమిహార్హసి । కథందశరథాజ్జాతో భవేద్రాజ్యాపహారకః" "ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம்வக்துமிஹார்ஹஸி । கதம்தஶரதாஜ்ஜாதோ பவேத்ராஜ்யாபஹாரக:" என்று ஒருவனுக்கு இரண்டு வஸ்துசேஷமானால் ஒன்றை ஒன்று நிர்வஹிக்குமோ; ராஜ்யந்தான் என்னையாண்டாலோ, நாடு அராஜகமாய்க் கிடக்கவொண்ணாது என்கிறவித்தையே பார்க்குமித்தனையோ, இதுக்கு விஷயபூதனான என்னையும் பார்த்து வார்த்தை சொல்லவேண்டாவோ, அவர்போகட்டுப்போன ராஜ்யத்தை அபஹரித்தால், அவரைப்பிரிந்த வநந்தரம் முடிந்தவன்வயிற்றிலே பிறந்தவனும்படி யெங்ஙனே நான்" என்று சொன்னவாறே; "ஆனால் செய்யவடுப்பதென்" என்று அவர்களெல்லாரும் (ச) இவன்றன்னைக்கேட்க, "நாமெல்லாருங் கூடப்போய் பெருமாள்திருவடிகளிலேவிழுந்து அவரை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம் பண்ணுவிப்போம் வாருங்கோள்" என்று எல்லாரையும்கூடக்கொண்டு திருச்சித்திரகூடத்திலே போய், பெருமாள் திருவடிகளிலே தன்னார்த்தியை முன்னிட்டுச் சரணம்புகுந்து விண்ணப்பஞ்செய்த ப்ரகாரத்தைச்சொல்லுகிறது.

(முடியொன்றி) முடியைத்தவிர்ந்து ஜடையைப்புனைந்து நாட்டைவிட்டுக் காட்டிலே யெழுந்தருளின தேவரீர், இக்காட்டையும் (௫) தாபஸவேஷத்தையும் விட்டு நாட்டிலே திருவயோத்யையிலே யெழுந்தருளித் திருமுடிசூடி. (மூவுலகங்களுமாண்டு) "త్రైలోక్యమపి నాథేన యేన స్యాన్నాథవత్తరమ్" "த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்" என்கிறபடியே மூன்று லோகத்தையும் (௬) ஸநாதமாக்கியாண்டு. (உன்னடியேற்கருளென்றவன்பின்றொடர்ந்த) "శాధి శిష్యస్య దాసస్య ప్రసాదం కర్తుమర్హసి" "ஶாதி ஶிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்துமர்ஹஸி" என்று ப்ராதாவாய்க் கூறுகொள்ள இருக்கிறவனன்றிக்கே, (எ) அகிலரஹஸ்யமும் (அ) தேவரீரோடே (௯) அதிக

(க) அபஹரித்தல் - கவருதல். (உ) பெருமிடறுசெய்து - பெருங்குரலாய். (௩) கர்ஹித்து - நிந்தித்து. (ச) இவன்றன்னை - பரதாழ்வானை. (௫) தாபஸவேஷம் - தவவேடம். (௬) ஸநாதமாக்கி - தலைவனையுடைத்தாம்படிபண்ணி. (எ) அகிலரஹஸ்யமும் - ரஹஸ்யங்களையெல்லாம். (அ) தேவரீரோடே - தேவரீரிடத்திலே. (௯) அதிகரிக்கையாலே - கற்கையாலே.

ரிக்கையாலே சிஷ்யனாய், அவ்வளவுமன்றிக்கே, (க) க்ரயவிக்ரயார்ஹனாம்படி உமக்குதாஸனாயிருக்கிறவெனக்கு ப்ரஸாதத்தைப்பண்ணியருளவேணும் என்று அர்த்தித்து, பின்னேசென்று அநுவர்த்தித்த. (படியில்குணத்துப் பரதநம்பிக்கு) "இக்குடியில் மூத்தாரிருக்க இளையார்முடிசூடியறிவாரில்லை" என்ற குலமர்யாதையை நோக்குகையாலும், (உ) ஸ்வாதந்த்ர்யபீதியாலே முடிசூட (௩) வெருவி, தன்ஸ்வரூபத்தை நோக்குகையாலும், (ச) ஆர்த்தியோடேதிருவடிகளிலேவந்து விழுந்து "மீண்டு எழுந்தருளி திருவபிஷேகம்பண்ணியருளவேணும்" என்று அர்த்திக்கையாலும், ஒப்பில்லாதகுணத்தையுடையனான ஸ்ரீபரதாழ்வானுக்கு. (அன்றடிநிலையீந்தானை) அவன் ஆர்த்தனாய்நிற்கிற அக்காலத்திலே, "நீசொல்ல நாம் இப்போது மீண்டோமாகில், நம்மையர்சொன்னது செய்யாமல் ராஜ்யச்ரத்தையாலே மீண்டோமாவோம்; நீ நம்மைமீட்டுக்கொண்டுபோனாயாகில், 'ஸ்ரீபரதாழ்வான் இரண்டுஞ்செய்ய வல்லனாயிருந்தான் ;-முன்பு, (ரு) கீழோலைவைத்து தாயைக்கொண்டு ராஜ்யத்தை வாங்கித்தமையனைக் காடேறப்போகவிட்டான் ; இப்போது, (௬) லோகாபவாதம் முதிர்ந்தவாறே பின்துடர்ந்துசென்று கண்ணைப்பிசைந்து காலிலேவிழுந்து மீட்டுக்கொண்டுவந்தான்' என்னும் (எ) அவத்யமும் உனக்குவரும்; ஆனபின்பு, உன்னை ஸ்வதந்த்ரனாக்கி வார்த்தைசொன்னார்முன்னே, உன்ஸ்வரூபாநுரூபமான பாரதந்த்ரயத்தைப்பெற்று நீபோ" என்று, அவன் (அ) நிர்ப்பந்தியாதபடி வார்த்தைசொல்லி யிசைவித்து, "மரவடியைத்தம்பிக்கு வான்பணையம்வைத்து" என்கிறபடியே அவன் ஸ்வாதந்த்ர்யபயமெல்லாம் போம்படியாகவும், "மீண்டு எழுந்தருளுவர்" என்னு மதுக்கு (௯) விச்வாஸமாகவும் திருவடிநிலைகளைக்கொடுத்து * அடிசூடுமரசாக்கிவிட்டவனைப் பாடிப்பற. (அயோத்தியர்கோமானைப் பாடிப்பற) ஸ்ரீபரதாழ்வான் முடிசூடாமல் அடிசூடிப்போகையாலே திருவயோத்யையிலுள்ளார்க்கு தானேநிர்வாஹகனானவனைப்பாடிப்பற என்று எதிரியைப்பார்த்துச் சொல்லுகிறாள். (௬)

மூ.—காளியன்பொய்கைகலங்கப்பாய்ந்திட்டவன்
நீண்முடியைந்திலுநின்றுநடஞ்செய்து
மீளவவனுக்கருள்செய்தவித்தகன்
றோள்வலிவீரமேபாடிப்பற தூமணிவண்ணனைப்பாடிப்பற.

---

(க) க்ரயம் விக்ரயம் - வாங்குதலும் விற்றலும். (உ) ஸ்வாதந்த்ர்யம் - தன்வசப்பட்டிருக்கை. (௩) வெருவி - பயந்து. (ச) ஆர்த்தி - து:கம். (ரு) 'கீழோலைவைத்தல்' - மித்ரபேதம் செய்தல். (௬) லோகாபவாதம் - உலகப்பழிப்பு. (எ) அவத்யம் - பழிப்பு. (அ) நிர்ப்பந்தித்தல் - கட்டாயஞ்செய்தல். (௯) விச்வாஸம் - நம்பிக்கை.

ப - ரை.—காளியன்-காளியனுகிற ஸர்ப்பம்கிடந்த, பொய்கை - பொய்கையானது, கலங்க - கலங்கும்படி, பாய்ந்திட்டு - சென்றுகுதித்து, அவன் - அவனுடையதாய், நீள் - ஆகாசத்தளவும் கிளர்ந்திருக்கிற, முடியைந்திலும் - ஐந்துபணங்களிலும், நின்று - மாறிமாறி அடியிட்டு நின்று, நடஞ்செய்து - கூத்தாடி இளைப்பித்து, தன்னுடையப்ராணன் பெறும்படி அவன் சரணம்புக, மீள - மறுபடியும், அவனுக்கு—, அருள்செய்த-க்ருபைசெய்தருளின, வித்தகன்-ஆச்சர்யச் செய்கையுடையவனுடைய, தோள்வலி - புஜபலத்தையும், வீரம்-வீரப்பாட்டையும், பாடிப்பற—; தூ - பழிப்பற்ற, மணி- நீலரத்நம்போன்ற, வண்ணனை-வடிவழகையுடையவனை, பாடிப்பற—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (காளியன்பொய்கை) வெறும்புறத்திலே "காளியன்பொய்கை" என்னவமையுங்காணும் அதின் க்ரௌர்யத்துக்கு; "பாம்புப்பாழி" என்னுமாபோலே. அணுகின ஸ்தாவர ஜங்கமாதிகளெல்லாம் அழலாலேபட்டுவிழும்படியிறே பொய்கையின் விஷத்தினுடைய க்ரௌர்யமிருப்பது. "ஆயிரவாய்நச்சழல்பொய்கை" என்னக்கடவதிறே. (கலங்கப்பாய்ந்திட்டு) "காளியன் தடத்தைக்கலக்கி" என்கிறபடியே பொய்கைகலங்கும்படி ஓடிச் சென்றுகுதித்து. (அவனித்யாதி) பொய்கையைக் கலக்கினவாறே அதுக்குள்ளுக் கிடக்கிறவவன் அதிக்ருத்தனுய், தலையையெடுத்து ஆகாசத்திலேகிளர்ந்து (க) பணங்களை விரித்துக்கொண்டுநிற்க, அப்பணங்களின்மேலேஏறி ஐந்துபணங்களிலும் மாறிமாறிநின்று ந்ர்த்தஞ்செய்து. (மீளவவனுக்கருள்செய்தவித்தகன்) "ఫం ప్రభగ్న శిరో గ్రీవ మాస్యేభ్యస్స్రుతశోణితమ్" "தம்ப்ரபக்நசிரோக்ரீவ மாஸ்யேப்யஸ்ஸ்ருதசோணிதம்" என்கிறபடியே தலைகளும் கழுத்தும்நெரிந்து வாய்களாலே ரத்தம்சொரியும்படி அவன்இளைத்து, தன்னுடைய ப்ராணன் பெறுகைக்காகச் (உ) சரணம்புகுந்தவாறே, முன்பு அவனைக் கொல்லநினைத்த கோபத்தைவிட்டு, அவன் ப்ராணன்பெறும்படி, மீண்டு அவனுக்கு ப்ரஸாதத்தைப்பண்ணின விஸ்மயநீயனுனவனுடைய. விஸ்மயநீயமாவது - முன்பு, கோபத்துக்குவிஷயமாக்கி முடிக்கத்தேடின வவன்றன்னையே (௩) ப்ரஸாதத்துக்கு விஷயமாக்கி ரக்ஷித்த ஆச்சர்யம். (தோள்வலிவீரமே பாடிப்பற) இப்படியிருக்கிறவனுடைய, "பாம்பாலாப்புண்டு" என்கிறபடியே காளியன் தன்னுடலாலே நெருங்கச்சுற்றிக் கட்டினவிடத்திலும் அதிலீடுபடாதே உதறிப்பொகட்டு வாலைப்பிடித்துத்தூக்கி மேலேநின்றுடின தோள்வலியையும் வீரப்பாட்டையும் பாடிபற. (தூமணியித்யாதி) காளியனுக்கு ப்ராணனைக்கொடுத்துத் துரத்தி யோட்டிவிட்டு, விஷஜலமான பொய்கையை அம்ர்தஜலமாம்படி கடாக்ஷி

(க) பணம் - படம். (உ) சரணம் - அடைக்கலம். (௩) ப்ரஸாதம் - அருள்.

த்து, பசுக்களும் இடையரும் முன்புபோலே தண்ணீர்குடிக்கும்படி பண்ணுகையாலே, பழிப்பற்ற நீலரத்நம்போலே திருமேனியின் அழகுவிளங்கும்படி நின்றவனைப் (பாடிப்பற)என்று ப்ரதிகோடியானவளைப்பார்த்து நியமிக்கிருள். (எ)

மூ.—தார்க்கிளந்தம்பிக்கரசீந்துதண்டக
நூற்றவள்சொற்கொண்டுபோகிநுடங்கிடைச்
சூர்ப்பணகாவைச்செவியொடுமூக்கவள்
ஆர்க்கவரிந்தானைப்பாடிப்பறவயோத்திக்கரசனைப்பாடிப்பற.

ப-ரை.—தார்க்கு - மாலையிட்டு ராஜ்யம்பண்ணுகைக்கு, இளம் - தகுதியல்லாத, தம்பிக்கு - தம்பியான ஸ்ரீபரதாழ்வானுக்கு, அரசு - *அடிசூடுமரசை, ஈந்து - கொடுத்து, தண்டகம் - தண்டகாரண்யத்திலே வஸிக்கும்படி, நூற்றவள் - விசாரித்த கைகேயியுடைய, சொல் - சொல்லை, கொண்டு - சிரஸாவஹித்துக்கொண்டு, போகி-தண்டகாரண்யத்தேற வெழுந்தருளி, நுடங்கு-துவளாநின்றுள்ள, இடை - இடையையுடையளான, சூர்ப்பணகாவை - முறம்போன்ற நகத்தையுடையளான ராக்ஷஸியுடைய, செவியொடு - காதையும், மூக்கு - மூக்கையும், அவள்—, ஆர்க்க-கதறக்கதற, அரிந்தானை-அறுத்தவனை, பாடிப்பற—; அயோத்திக்கு—, அரசனை - ராஜாவானவனை, பாடிப்பற—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (தார்க்கிளந்தம்பிக்கரசீந்து) "அடியிலே சக்ரவர்த்தி (க) அநுமதி உண்டாகையாலும், பெருமாள் உடன்பட்டுப் போகையாலும், நாடு அராஜகமாய்க் கிடக்கவொண்ணுது, நீமுடிசூட வேணும்" என்று வஸிஷ்டாதிகளும் (உ) ராஜலோகாதிகளும் (ரு) அர்த்திக்கையாலும் அபிஷேகம் செய்யலாவதொரு (ச) புடையுண்டாயிருக்க, "மூத்தாரிருக்க இளையார்முடிசூடியறிவாரில்லை" என்கிற குலமர்யாதையைநினைத்து, "மாலையிட்டு ராஜ்யம்பண்ணுகைக்கு நான்இளையவன், தமையனுரிருக்க எனக்குமுடிசூட ப்ராப்தியில்லை" என்று மறுத்துத் திருச்சித்திரகூடத்தளவும்வந்து "மீண்டெழுந்தருளவேணும்" என்று அர்த்தித்த தம்பியான ஸ்ரீபரதாழ்வானுக்கு (ரு) அநுகுணமாக அடிசூடுமரசைக் கொடுத்து.

(தண்டகநூற்றவள்சொல்கொண்டுபோகி) "ராஜ்யத்தை விடுவித்து தண்டகாரண்யத்திலே போகவிடக் கடவோம்" என்று விசாரித்தவள்சொல்லைக் கைக்கொண்டுபோய். "கூற்றுத்தாய்சொல்லக் கொடியவநம்போன" என்றிறே கீழும் சொல்லிற்று. ஸ்ரீபரதாழ்வானேடே திருச்சித்திரகூடத்தளவும் சென்றவஸிஷ்டாதிகள்

---

(க) அநும்தி - ஸம்மதி. (உ) ராஜலோகாதிகள்-அரசரும்மற்றுள்ளாரும். (ரு) அர்த்தித்தல் - ப்ரார்த்தித்தல். (ச) புடை - ப்ரகாரம். (ரு) அநுகுணமாக - தகுதியாக.

துடக்கமானார், மீளுகைக்குடலாகச் சொன்ன வார்த்தைகளும் கேளாமல், இவள்சொன்னவார்த்தையைத் திருவுள்ளத்திலே கொண்டிறே ஸ்ரீபரதாழ்வானுக்கு அரசீந்து அநந்தரம் தண்டகாரண்யத்தேறவெழுந்தருளிற்று.

(நுடங்கிடையித்யாதி) (க) காமரூபிணியாகையாலே(உ) ஸ்வவேஷத்தை மறைத்து (ங) அத்யந்தாபிமதமானதொரு ஸ்த்ரீவேஷத்தைக்கொண்டு வருகையாலே, நுடங்கின இடையையுடையளான சூர்ப்பணகியை. தன்னழகைக்காட்டி "என்னை (ச) விஷயீகரிக்கவேணும்" என்று வந்தவளவில், பிராட்டியைக்காட்டி "நமக்கு இவளொருஸ்த்ரீயுண்டு, அங்கேபோ" என்று இளையபெருமாளைக்காட்ட, அங்கே சென்றவளவிலே, "நான் அவர்க்கு சேஷபூதனாயிருப்பானொருத்தன், இன்னம் அவர்தம்பக்கலிலேபோ" என்ன; இப்படி (ரு) உபாலம்பிக்கையாலே அவள் அதிக்ருத்தையாய், பழைய வேஷத்தைக்கொண்டு, எடுத்துக்கொண்டு போகப்புக்கவளவிலே, செவியோடேகூட அவள்மூக்கையும், அவள் கதறக்கதற அறுத்தவனை. "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" "[illegible]க்ஷிணோ பாஹு:" என்கிறபடியே இளையபெருமாள் (சு) கரணபூதராகையாலே அறுத்ததில் (எ) கர்த்ருத்வம் பெருமாளதாகச் சொல்லுகிறது. (பாடிப்பற.) (அயோத்தியித்யாதி) ஸ்ரீபரதாழ்வான் முடிசூடாமையாலும், திருவடிநிலை கொடுத்துப்போருகையாலும், திருவயோத்யைக்குத்தானே ராஜாவானவனைப் பாடிப்பறவென்னுமத்தை அவளை நியமிக்கிறாள். (அ)

மூ.—மாயச்சகடமுதைத்துமருதிறுத்
தாயர்களோடுபோயாநிரைகாத்தணி
வேயின்குழலூதிவித்தகனாய்நின்ற [ற.
ஆயர்களேற்றினைப்பாடிப்பறவாநிரைமேய்த்தானைப்பாடிப்ப

ப-ரை.—மாயம் - வஞ்சநத்தையுடைய, சகடம் - சகடத்தை, உதைத்து- கட்டுக்குலையும்படி திருவடிகளாலேயுதைத்தும், மருது - யமளார்ஜுநங்களாகிற இரட்டைமருதுகளை, இறுத்து - முறித்தும், ஆயர்களோடு - பசுமேய்க்கப்போகிற இடையரோடே, போய் - அவர்களில் தலைவனாகச்சென்றும், ஆநிரை - பசுநிரையை, காத்து - ரக்ஷித்தும், அணி - அழகிய, வேயின்குழல் - வேய்ங்குழலை, ஊதி - ஊதியும், வித்தகனாய் நின்ற - தன்னுடையவியப்புத்தோற்ற நின்றவனாய், ஆயர்கள் - இடையர்க்கு, ஏற்றினை - தலைவனான செருக்கையுடையவனை, பாடிப்பற—; ஆநிரைமேய்த்தானைப பாடிப்பற—.

(க) காமரூபிணி - தான்விரும்பியவடிவையடையத்தக்கவள். (உ) ஸ்வவேஷம்-தன்னுடையவேஷம். (ங) அத்யந்தாபிமதமானது - மிகவும் இஷ்டமானது. (ச) விஷயீகரித்தல் - அங்கிகரித்தல். (ரு) உபாலம்பிக்கை - வெறுக்கை. (சு) கரணபூதர் - அவயவமாயிருப்பவர். (எ) கர்த்ருத்வம் - செய்பவனாகை.

வ்ய.—ஒன்பதாம்பாட்டு. (மாயச்சகடமுதைத்து) "கள்ளச் சகடம் கலக்கழியக்காலோச்சி" என்கிறபடியே காவலாகவைத்த வதிலே அஸுரர்கள் ஆவேசித்து நலியவருகையாலே பாதகம் என்று தோற்றுதபடி க்ர்த்ரிமமானசகடத்தை, ஸ்தந்யார்த்தியாய் நிமிர்த்த திருவடிகளாலேயுதைத்து. அன்றிக்கே, சகடமானது உரு மாயும்படிஉதைத்து என்னவுமாம். (மருதிறுத்து) தாயார்கட்டி வைத்தவுரலையு மிழுத்துக்கொண்டு தவழ்ந்துபோகாநிற்க, நலிவ தாக வழியிலேநின்ற இரட்டை மருதுகளின்நடுவே நுழைந்து அப் புறத்தேபோய், உரல் தடைபடுகையாலே அத்தைவலித்துக் கொண்டு அம்மருதுகள் இரண்டருகும் சாய்ந்துவிழும்படிமுறித்து. (ஆயர்களோடுபோய் ஆநிரைகாத்து) பசுமேய்க்கப்போகிற இடைய ரோடே அவர்களில் ப்ரதாநனாய்க்கொண்டு போய், புல்லும் தண் ணீருமுள்ளவிடம்பார்த்து வயிறுநிறைய மேய்க்கையாலே பசுநிரை யைரக்ஷித்து. (அணிவேயின் குழலூதிவித்தகனாய்நின்ற) நாட்டிற் பசுக்களைப்போலே கேவலம் புல்லும்தண்ணீரும் தாரகமாக வளரு மவையன்றிக்கே, குழலோசையே தாரகமாக வளருமவையாகை யாலே, அவற்றைமேய்க்கைக்கும் சிதறிப்போகாமல் குவிக்கைக் கும் மீட்கைக்குமாக, அழகியவேய்ங்குழலையூதி, தன்னுடைய ஸாமர்த்யம் தோற்றநின்ற. (ஆயர்களேற்றினை) கோபர்க்குத் தலைவ னைசெருக்கையுடையவனை. (பாடிப்பற.) (ஆநிரைமேய்த்தானை) "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்கிறபடியே-பரமபதத்தி லிருப்பிலுங்காட்டில் உகந்து பசுநிரைமேய்த்தவனை. (பாடிப்பற) என்று எதிரியைப்பார்த்துச் சொல்லுகிறாள். (கூ)

மூ.—காரார்கடலையடைத்திட்டிலங்கைபுக்
கோராதான்பொன்முடியொன்பதோடொன்றையும்
நேராவவன்றம்பிக்கேநீளரசீந்த
ஆரார்வமுதனைப்பாடிப்பற வயோத்தியர்வேந்தனைப்பாடிப் [பற.

ப-ரை.—கார்ஆர்-ஆழத்தின்மிகுதியாலே கருமைமிக்கிருந்துள்ள, கடலை—, அடைத்திட்டு - மலைகளைக்கொண்டடைத்து, இலங்கை - லங்கையிலே, புக்கு - ப்ரவேசித்து, ஓராதான் - சக்ரவர்த்தித்திருமகனுடைய வீரப்பாட்டை நன்கு மதியாத ராவணனுடைய, பொன்முடி ஒன்பதோடொன்றையும் - கிரீடம்தரித்த அழகியபத்துத்தலைகளையும், நேரா - அறுத்துப்பொகட்டு, அவன் - அவனுடைய, தம்பிக்கே - தம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கே, நீள் - நெடுங்காலம் நடக்கும் படி, அரசு - லங்கைக்கு அரசாகிற ஐச்வர்யத்தை, ஈந்த - கொடுத்தவனாய், ஆரா-எவ்வளவுகாலம் புஜித்தாலும் த்ர்ப்திபிறவாத,அமுதனை-அம்ர்தம்போலே ஒப்பற்ற போக்யனானவனை, பாடிப்பற—; ராவணவதம்பண்ணி திருவயோத் யைசேர்ந்து திருவபிஷேகம்கொண்டருளி ஆளுகையாலே, அயோத்தியர்-திரு வயோத்தியுலுள்ளார்க்கு, வேந்தனை - ராஜாவானவனை, பாடிப்பற—.

வ்யா.—பத்தாம்பாட்டு. (காரார்கடலையடைத்திட்டு) ஆழத்தின்மிகுதியாலே கருமைமிக்கிருந்துள்ளகடலை; அகடிதகடநாஸாமர்த்யம் தோற்றும்படி, நீரைக்கண்டவாறே ஆழக்கடவமலைகளையிட்டுக் குரங்குகளைக்கொண்டடைத்து. (இலங்கைபுக்கு) "ஸமுத்ரம் ராவணஸ்யைவ" "ஸமுத்ரராவணவாஸிதா" என்கிறபடியே (௧) மண்பாடுதானே ஒருவர்க்கும் (௨) ப்ரவேசிக்கவரிதாய், அதுக்குமேலே உள்ளுநின்று நோக்குகிறவனுடைய பலத்தையுமுடைத்தாகையாலே (௩) துஷ்ப்ராபமாயிருக்கிற லங்கையிலே, எழுபதுவெள்ளம் வாநரஸேனையையுங்கொண்டு சென்றுபுக்கு. (ஓராதான்பொன்முடியொன்பதோடொன்றையும்நேரா) இந்த(௪) அதிமாநுஷசேஷ்டிதங்களைக்கண்டுவைத்தும் இவற்றில் ஒன்றையும்நிரூபியாதே, தன்னுடைய வரபலபுஜபலங்களைப்பெருக்கநினைத்து, "தான்போலுமேன்றெழுந்தான்தரணியாளன்" என்கிறபடியே-சக்ரவர்த்தித்திருமகன் என்னும் வீரப்பாட்டையறியாமல்(௫) ஆபாஸனாகநினைத்து, தான்வெல்லுவானாகவிருந்த ராவணனுடைய அபிஷேகயுக்தமான அழகையுடைய தலைகளை, திருச்சரங்களாலே, முன்பு, ஒரொருதலையாக அறுத்தாற்போலன்றிக்கே, "காலம் மிதுவென்றயன்வாளியினால் கதிர் நீண்முடிபத்துமறுத்தமரும்" என்கிறபடியே-"இனி இவனைமுடிக்கைக்குக்காலம்" என்று, ப்ரஹ்மாஸ்த்ரரூபமான சரத்தாலே, பத்தும் சேர ஒருகாலேவிழும்படி அறுத்துப்பொகட்டு.

(அவன்றம்பிக்கேஈளரசீந்த) "அநுஜோ ராவணஸ்யாஹம்" "ஸோஹம் ராவணஸ்யாநுஜ" என்கிறபடியே - (௬) ஸ்வநிகர்ஷத்துக்குடலாக, "ராவணன்பின்பிறந்தவன்" என்று சொல்லிக்கொண்டுவந்து திருவடிகளைச்சேர்ந்த ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கே, "என்னிலங்குநாமத்தளவுமரசு" என்று (௭) தீர்க்ககாலம் நடக்கும்படி, லங்கைக்கு அரசாகிற ஐச்வர்யத்தைக்கொடுத்த. (ஆராவமுதனை) இந்தகுணத்தாலே ஒருகாலும் (௮) த்ருப்திபிறவாமல் மேன்மேலன (௯) த்ருஷ்ணையைவிளைக்கும் அம்ருதம்போலே, அநுபவிப்பார்க்கு (௧௦) நிரதிசயபோக்யனானவனைப்பாடிப்பற. (அயோத்தியர்வேந்தனை) ராவணவதாநந்தரம் மீண்டு எழுந்தருளி, திருவபிஷேகம்பண்ணியிருந்து ஆளுகையாலே, திருவயோத்யையிலுள்ளார்க்கு ராஜாவானவனை. (பாடிப்பற) என்று ப்ரதிகோடியானவளை நியமிக்கிறாள். (௧௦)

(௧) மண்பாடு - நிலத்தின்ஸ்வபாவம். (௨) ப்ரவேசிக்க - உட்புக. (௩) துஷ்ப்ராபம் - அடையக்கூடாமை. (௪) அதிமாநுஷசேஷ்டிதம் - மனிதரைக் கடந்தசெய்கை. (௫) ஆபாஸன் - தண்ணியன். (௬) ஸ்வநிகர்ஷம் - தன்தாழ்ச்சி. (௭) தீர்க்ககாலம் - நெடுங்காலம். (௮) த்ருப்தி - நிறைவு. (௯) த்ருஷ்ணை - ஆசை. (௧௦) நிரதிசயபோக்யன் - ஒப்பற்ற சுவையாயிருப்பவன்.

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—நந்தன்மதலையைக்காகுத்தனைநவின்
றுந்திபறந்தவொளியிழையார்கள்சொல்
செந்தமிழ்த்தென்புதுவைவிட்டுசித்தன்சொல்
ஐந்தினோடைந்தும்வல்லார்க்கல்லலில்லையே.

ப-ரை.—நந்தன்மதலையை - ஸ்ரீநந்தகோபர் திருமகனான க்ர்ஷ்ணனையும், காகுத்தனை - ககுஸ்த சக்ரவர்த்தியின் வம்சஸ்தரான சக்ரவர்த்தித் திருமகனையும், நவின்று - ஒருவர்க்கொருவர் எதிரியாய்க்கொண்டுசொல்லி, உந்திபறந்த- உந்திபறக்கையாகிற லீலாரஸங்கொண்டாடின, ஒளி - அழகிய, இழையார்கள்- ஆபரணமணிந்த பெண்களுடைய, சொல் - சொல்லை, செம் - செவ்வையை யுடைய, தமிழ் - தமிழ்ப்பாஷையாலே, தென் - அழகிய, புதுவை - ஸ்ரீவில்லிபுத் தூர்க்குத்தலைவரான, விட்டுசித்தன் - பெரியாழ்வார், சொல் - அருளிச்செய்த, ஐந்தினோடு - க்ர்ஷ்ணாவதார விஷயமானவைந்தும், ஐந்தும் - ராமவதார விஷயமான வைந்துமான விப்பத்தையும், வல்லார்க்கு - கற்கவல்லவர்களுக்கு, அல் லல்-ஸம்ஸாரமாகிறதுக்கம், இல்லை - உண்டாகாது.

வ்யா.—(நந்தன்மதலையைக்காகுத்தனைநவின்று) ஸ்ரீநந்தகோபர் திருமகனையும், ககுஸ்தகுலோத்பவனான சக்ரவர்த்தித்திருமகனையும், ஒருவர்க்கொருவர் எதிரியாகக்கொண்டு சொல்லி. (உந்திபறந்த ஒளியிழையார்கள்சொல்) உந்திபறக்கையாகிற லீலாரஸம் கொண்டாடின அழகிய ஆபரணாலங்க்ருதைகளான பெண்களுடைய சொல்லை. (செந்தமிழ்த்தென்புதுவைவிட்டுசித்தன்சொல்) (க) ஆர்ஜவரூபமான த்ராவிட பாஷையாலே, அழகிய ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த. (ஐந்தினோடைந்தும் வல்லார்க்கு) க்ர்ஷ்ணாவதாரவிஷயமானவைந்தும், ராமாவதாரவிஷயமான வைந்துமான இப்பத்தையும் ஸாபிப்ராயமாக வல்லவர்க்கு. (அல்லலில்லையே) ஸாம்ஸாரிகதுக்கமொன்றுமில்லை. (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு —என்னாதன் என்வில்லுருப்பிணி மாற்றுத்தாய் பஞ்சவர் முடியொன்றி காளியன்தார்க் கிளம் மாயக்காரார்நந்தன்நெறிந்த.

---

ஆ திருமொழி உஅ-க்கு, பாட்டு-ஙுoடு.

---

(க) ஆர்ஜவம் - செவ்வை.

அ.—கீழ்த்திருமொழியிலே ராமாவதாரகுண சேஷ்டிதங்களை அநுபவித்தவிவர், "𑌰𑌾𑌘𑌵𑌤𑍍𑌵𑍇𑌽𑌭𑌵𑌤𑍍𑌸𑍀𑌤𑌾" "[illegible]" என்கிறபடியே அவ்வவதாராநுகுணமாக (க) ஒக்கவந்தவதரித்தபிராட்டி, தன்னுடைய (உ) புருஷகாரகத்வோபயோகியான க்ர்பாபாரதந்த்ர்யாநந்யார்ஹத்வங்களை சேதநரெல்லாருமறிந்து (௩) விச்வஸித்துத் தன்னைப்பற்றுகைக்குடலாக, "நம்முடைய அநுஷ்டாநத்தாலே வெளியிடக்கடவோம்" என்று திருவுள்ளம்பற்றி; அதில்ப்ரதமத்திலே தன்னுடைய க்ர்பையை வெளியிடுகைக்காக, "தண்டகாரண்யத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே ராவணன்பிரித்தான்" என்றொரு வ்யாஜத்தாலே லங்கையிலேயெழுந்தருள, "[illegible]" "[illegible]" என்கிற அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே பெருமாள் இவள்போனவிடமறியாமல், திருத்தம்பியாரும் தாமுமாகக்கொண்டு தேடித்திரியாநிற்கச்செய்தே, (௪) பம்பாதீரத்திலே எழுந்தருளினவளவிலே, (௫) மஹாராஜருடைய நியோகத்தாலே ஸ்வவேஷத்தைமறைத்து (௬) பரிவ்ராஜகவேஷபரிக்ரஹம் பண்ணிவந்து முகங்காட்டின திருவடியோடே முந்துற உறவுசெய்து, பின்பு அவர்கொடுபோய்ச்சேர்க்க, (௭) ராஜ்ய தாரங்களையிழந்து (௮) சுரமடைந்துகிடக்கிற மஹாராஜரைக்கண்டு, அவரோடே (௯) ஸக்யம்பண்ணி, அநந்தரம் அவர்க்கு விரோதியான வாலியைநிரஸித்து, அவரை ராஜ்ய தாரங்களோடேசேர்த்து வாநராதிபதியாக்கி கிஷ்கிந்தையேறப்போகவிட்டு, திருத்தம்பியாரும் தாமுமாகப் பெருமாள் வர்ஷாகாலமித்தனையும் மால்யவானிலேயெழுந்தருளியிருக்க, படைவீட்டிலேபோனவிவர், பெருமாள்செய்த உபகாரத்தையும் அவருடையதனிமையையும்மறந்து, விஷயப்ரவணராய் (௧௦) தாராபோகஸக்தராயிருந்துவிட, வர்ஷாகாலத்துக்குப்பின்பு, அவர் வரக்காணாமையாலே "[illegible]" "[illegible]" என்கிறபடியே கனக்க க்லேசித்தருளி, இளையபெருமாளைப்பார்த்து, "நீர்போய் (௧௧) வெதுப்பியாகிலும் மஹாராஜரையழைத்துக்கொண்டுவாரும்" என்றுவிட, அவர் (௧௨) கிஷ்கிந்தாத்வாரத்

(க) ஒக்க - கூட. (உ) புருஷகாரகத்வம் - கடகத்வம். (௩) விஸ்வஸித்தல் - நம்புதல். (௪) பம்பாதீரம் - ஓர்நதிக்கரை. (௫) மஹாராஜர் - ஸுக்ரீவன். (௬) பரிவ்ராஜகவேஷம் - ஸந்யாஸிவேஷம். (௭) ராஜ்யதாரங்களை - ராஜ்யத்தையும் மனைவியையும். (௮) சுரம் - பர்வதம். (௯) ஸக்யம்பண்ணி - நட்புக்கொண்டு. (௧௦) தாரா - வாலியின்மனைவி. (௧௧) வெதுப்பி - வருத்தி. (௧௨) கிஷ்கிந்தாத்வாரம் - கிஷ்கிந்தையின்வாயில்.

நிலேயெழுந்தருளி (க) ஜ்யாகோஷத்தைப்பண்ண, அத்தைக்கேட்டு மஹாராஜர்நடுங்கி, கழுத்தில் மாலையையும் அறுத்துப்பொகட்டு, (உ) காபேயமாகச்சில வ்யாபாரங்களைப்பண்ணி, அருகேநின்ற திருவடியைப்பார்த்து, "இவ்வளவில் நமக்குச்செய்யவடுப்பதென்" என்ன; "కృతాపరాధస్య హి తే నాన్యత్పశ్యామ్యహం క్షమమ్ । అన్తరేణాఞ్జలిం బద్ధ్వా లక్ష్మణస్య ప్రసాదనాత్" "க்ருதாபராதஸ்ய ஹி தே நாந்யத் பஶ்யாம்யஹம் க்ஷமம் । அந்தரேணாஞ்ஜலிம் பத்த்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத்" என்று-அபராதகாலத்திலே அநுதாபம்பிறந்து மீண்டோமாய், எளியன சில செய்கிறோமல்லோம், நிரக்கழிய அபராதம் பண்ணினபின்பு இனி ஓரஞ்சலிநேராமல் போகாதுஎன்ன; அவ்வளவிலும் தாம் முநதுறப் புறப்படபயப்பட்டு, "இளையபெருமாள் திருவுள்ளத்தில் (௩)சிவிட்கை, தாரையையிட்டு ஆற்றவேணும்" என்று தாரையைப் புறப்படவிட, அவள் "సాప్రస్ఖలన్తీ" "மதவிஹ்வலாக்ஷீ" இத்யாதிப்படியே இளையபெருமாள் ஸந்நிதியிலேவந்து,இளையபெருமாள்திருவுள்ளத்திற்சிவிட்குஆறும்படி வார்த்தைகள் விண்ணப்பஞ்செய்தபின்பு,மஹாராஜர் தாமும் புறப்பட்டுவந்து இளையபெருமாளைப் (௪) பொறைகொண்டு, இளையபெருமாளை முன்னிட்டுக்கொண்டு பெருமாளை ஸேவித்தவநந்தரம் தம்முடைய ஸர்வபரிகரத்தையும் திரட்டி, "యూథం కపీనాం సహస్రాణి సుబహూన్యయుతాని చ । దిక్షు సర్వాసు మార్గన్తే" "யூதம் கபீநாம் ஸஹஸ்ராணி ஸுபஹூந்யயுதாநி ச । திக்ஷு ஸர்வாஸு மார்கந்தே" என்கிறபடியே திக்குகள்தோறும் திரள்திரளாகப்பிராட்டியைத் தேடிப்போக விடுகிறவளவிலே, தக்ஷிணதிக்கில்போகிற (௫) முதலிகளுக்கெல்லாம் ப்ரதாநராகப்போருகிற அங்கதப்பெருமாள், ஜாம்பவான், மஹாராஜர், திருவடி, (௬) இவர்களில்வைத்துக்கொண்டு, "திருவடிகையிலொழிய இக்கார்யமருது" என்று திருவுள்ளம்பற்றி, பிராட்டியைக்கண்டால் விச்வாஸஜநகமாக விண்ணப்பஞ் செய்யத்தக்க அடையாளங்களையு மருளிச்செய்து திருவாழிமோதிரத்தையும் கொடுத்துவிட, எல்லாருங்கூடப்போய், தக்ஷிணதிக்கில் ஓரிடத்திலும் காணமல் க்லேசப்பட்டு, (௭) அநசநத்திலே தீக்ஷிதராய் முடிய நினைக்கிறவளவிலே, ஸம்பாதிவார்த்தையாலே "ராவணனிருப்பு ஸமுத்ரத்துக்குள்ளே லங்கையென்பதொரு படைவீடு"என்றுகேட்டு எல்லாரும் ப்ரீதராய், இக்கரையிலேயிருந்து திருவடியை

(க) ஜ்யாகோஷம் - நாணொலி. (உ) காபேயமாக-குரங்குச்சாதிக்குத்தக்கபடி. (௩) சிவிட்கு - கோபம். (௪) பொறைகொண்டு - க்ஷாபணம்பண்ணிக்கொண்டு. (௫) முதலிகள - வாநரமுதலிகள். (௬) இவர்களில்வைத்துக்கொண்டு-இவர்களிலே. (௭) அநசநத்தில் - பட்டினியிருக்கையில்.

ப்போகவிட, அவரும் (௧) ஸமுத்ரதரணம்பண்ணி அக்கரையேறி (௨) ப்ர்ஷதம்சகமாத்ரமாகவடிவைச்சுருக்கிக்கொண்டு ராத்ரியிலே ராவணாந்தஃபுரபர்யந்தமாக (௩) ஸர்வப்ரதேசத்திலும் பிராட்டியைத்தேடிக்காணாமையாலே க்லேசப்பட்டுக்கொண்டு இராநிற்கச் செய்தே,அசோகவநிகாப்ரதேசத்திலே சில (௪) ஆள்இயக்கத்தைக் கண்டு அங்கேசென்று, "ప్రియం జనమపశ్యన్తీం పశ్యన్తీం రాక్షసీగణమ్। స్వగణేన మృగీం హీనాం శ్వగణైరావృతామివ" "ப்ரியம் ஜநமபஶ்யந்தீம் பஶ்யந்தீம் ராக்ஷஸீகணம் । ஸ்வகணேந ம்ருகீம் ஹீநாம் ஶ்வகணைராவ்ருதாமிவ" என்கிறபடியே (௫) விக்ர்தவேஷைகளான எழுநூறுராக்ஷஸிகள் நடுவே மலங்கமலங்கவிழித்துக்கொண்டு நோவுபட்டிருக்கிற இவளைக் கண்டு, அநேகஹேதுக்களாலே "இவளேபிராட்டி" என்று அறுதியிட்டு, "இனி இங்குத்தை வ்ர்த்தாந்தமறியவேணும்" என்று ஸூக்ஷ்மரூபேண (௬) சிம்சுபாவ்ர்க்ஷத்துக்குள்ளே மறைந்திருக்க, அவ்வளவிலே, ராவணன் காமமோஹிதனாய்வந்து பிராட்டிஸந்நிதியிலே சிலவற்றை (௭) ஜல்பிக்க,அவள்இவனை முகம்பாராமலிருந்து (௮) திக்கரித்து வார்த்தைசொல்லிவிடுகையாலே, மீண்டு போகிறவன் ராக்ஷஸிகளைப்பார்த்து, "இவள் பயப்பட்டு நம்வசமாம்படிக்ரூரமாகநலியுங்கோள்" என்று சொல்லிப்போகையாலே, அவர்கள் "இதுக்குமுன்பு ஒருகாலமும் இப்படிநலிந்திலர்கள்" என்னும்படி (௯) தர்ஜநபத்ஸநாதிகளைப்பண்ணிநலிய, "இனி நமக்கு இருந்து ஜீவிக்கப்போகாது, முடிந்துவிடுமித்தனை" என்று (௧௦) வ்யவஸிதையாய், அந்தராக்ஷஸிகள் (௧௧) நித்ராபரவசைகளானவளவிலே, அங்குநின்றும்போந்து (௧௨) வேண்யுத்க்ரதநோத்யுக்தையாய் வ்ர்க்ஷத்தின் கொம்பைப்பிடித்துக்கொண்டு நிற்கிறவளவிலே, "இனிநாம்பார்த்திருக்கவொண்ணாது,இவ்வளவிலே யிவளை நாம்நோக்கவேணும்" என்று, "ఏవం బహువిధాం చిన్తాం చిన్తయిత్వా మహాకపిః। సంశ్రవే మధురం వాక్యం వైదేహ్యా వ్యాజహార హ" "ஏவம் பஹுவிதாம் சிந்தாம் சிந்தயித்வா மஹாகபி: । ஸம்ஶ்ரவே மதுரம் வாக்யம் வைதேஹ்யா வ்யாஜஹார ஹ" என்கிறபடியே - செவிப்பட்டபோதே ரஸிக்கும்படி ராமகுணசேஷ்டித விஷயமான வாக்யங்களைச்சொல்ல, "இத்தனைகாலமும் இல்லாததொன்று இப்போது உண்டாகைக்கடியென்" என்று சொல்வந்தவழியே

(௧) ஸமுத்ரதரணம் - கடலைத்தாண்டுதல். (௨) ப்ர்ஷதம்சகம் - பூனைக்குட்டி. (௩) ஸர்வப்ரதேசத்திலும் - எல்லாத்திசைகளிலும். (௪) ஆள்இயக்கம் - மனுஷ்யஸஞ்சாரம். (௫) விக்ர்தவேஷம் - விகாரவேஷம். (௬) சிம்சுபாவ்ர்க்ஷம் - ஓர்மரம். (௭) ஜல்பிக்க - பிதற்ற. (௮) திக்கரித்தல் - அவமதித்தல். (௯) தர்ஜநபத்ஸநம் - விரலாலும் வாயாலும் மிரட்டுகை. (௧௦) வ்யவஸிதையாய் - நிச்சயித்தவளாய்க்கொண்டு. (௧௧) நித்ராபரவசைகள்-தூக்கம் பிடித்தவர்கள். (௧௨) வேண்யுத்க்ரதநம் - குழலாகிய சுருக்கு.

சிம்சுபாவ்ருக்ஷத்தை யெங்குமொக்கப்பார்த்து அதின்மேலேயிருக்கிற வாநரரூபியான விவனைக்கண்டு, "இதுவேதோ" என்று ஏங்கி மோஹித்து விழுந்து, நெடும்போதோடே உணர்த்தி யுண்டாய், பின்னையும் இதேதோவென்று "ஸ்வப்நோ மயாயம்" "கிம்நுஸ்யாச்சித்தமோஹோயம்" இத்யாதிப்படியிலே விசாரிக்கிறவளவிலே, இவள்முன்னேவந்து கையும்அஞ்சலியுமாய்நின்று அநுவர்த்தநபூர்வகமாகச் சிலவார்த்தைகளைச்சொல்ல, அவள்பீதையாய், இவனை "ராவணன்" என்று அதிசங்கைபண்ணி, "இப்படி நலியலாகாதுகாண்" என்று (௧) தைந்யமாகப் பலவார்த்தைகளையும்சொல்ல, இவளுடைய அதிசங்கையைத் தீர்க்கைக்காக, பெருமாளருளிச்செய்துவிட்ட அடையாளங்களையெல்லாம் ஸுஸ்பஷ்டமாக இவள் திருவுள்ளத்திலேபடும்படி விண்ணப்பம்செய்து, தான் ராமதூதன் என்னுமிடத்தையறிவித்து, பின்பு, திருவாழிமோதிரத்தையும் கொடுத்து அவள் திருவுள்ளத்தை மிகவும் உகப்பித்தப்ரகாரத்தை யநுஸந்தித்து, அதில் தமக்குண்டான (௨) ஆதராதிசயத்தாலேஅவன் அப்போது விண்ணப்பஞ்செய்த அடையாளங்களையும் திருவாழிமோதிரம் கொடுத்தபடியையும், அதுகண்டு (௩) அவள் ப்ரீதையானபடியையுமெல்லாம் அடைவேபேசி யநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

மூ.—நெறிந்தகருங்குழன்மடவாய்நின்னடியேன்விண்ணப்பம்
செறிந்தமணிமுடிச்சநகன்சிலையிறுத்துநினைக்கொணர்ந்த
தறிந்தரசுகளைகட்டவருந்தவத்தோனிடைவிலங்கச்
செறிந்தசிலைகொடுதவத்தைச்சிதைத்ததுமோரடையாளம்.

ப-ரை.—நெறிந்த - நெறித்து, கரு - கறுத்த, குழல் - கூந்தலையும், மடவாய் - மடப்பத்தையு முடையவளே, நின் - தேவரீருக்கு, அடியேன் - தாஸபூதனுனநான், விண்ணப்பம் - விண்ணப்பம் செய்கிறவார்த்தையைக் கேட்டருளவேணுமென்ன; அதுதன்னைச்சொல் என்னச்சொல்லுகிறுன்; செறிந்த - நெருங்கின, மணி - நவமணிகள் அழுத்திச்சமைத்த, முடி - கிரீடந்தரித்த, சநகன் - ஜநகமஹாராஜா வானவர், சிலை - தேவரீருக்குசுல்கமாக வைத்திருந்தவில்லை, இறுத்து - முறித்து, நினை - தேவரீரை, கொணர்ந்தது - பாணிக்ரஹணம்பண்ணி அழைத்துக்கொண்டுபோனசெய்தியை, அறிந்து—, அரசு - இருபத்தொருதலைமுறை துஷ்ட ராஜாக்களாகிற, களைகட்ட - களையைப் பிடுங்கினவனுய், அரு - ஒருவர்க்கும் செய்யவொண்ணுத, தவத்தோன் - தபஸ்ஸையுடையனுனபரசுராமனுனவன், பெருமாள் திருப்படைவீடு நோக்கியெழுந்தருளா நிற்கச்செய்தே, இடை - நடுவழியிலேவந்து, விலங்க - தகைய, செறிந்த - அவனுடைய கர்வபங்கம் செய்தற்குத்தகுந்த, சிலைகொடு - வில்லைக் கொண்டு, தவத்தை - தபஸ்ஸை, சிதைத்ததும் - அழித்ததும், ஓரடையாளம் - அடியேன் பெருமாளுடைய அடியானென்று தேவரீரறிதற்கு ஓரடையாளமாம்.

---

(௧) தைந்யமாக - தண்மையாக. (௨) ஆதராதிசயம் - அன்பின்மிகுதி. (௩) அவள் - பிராட்டி.

வ்யா.—முதற்பாட்டு. (நெறிந்தகருங்குழல்மடவாய்) நெறித்துக்கருகின குழலையும் மடப்பத்தையு முடையவளே. கோரைமயிராயிராதே, சுருண்டு கடையளவும்செல்ல இருண்டிருக்கையிறே குழலுக்கு ஏற்றம். இதுதான் பூர்வத்திற்படியையிட்டுச் சொல்லுகிறான். "నీలనాగాభయా వేణ్యా జఘనం గతయైకయా" "நீலநாகாபயா வேண்யா ஜகநம் கதயைகயா" என்னும்படியிறே இப்போது கிடக்கிறது. நாயகரான பெருமாளோடேகூடிச் செவ்வைதோற்றச் செருக்கியிருக்க (க) ப்ராப்தையாயிருக்க, அவரைப்பிரிந்து, க்லேசத்தாலே துவண்டு ஒடுங்கியிருக்கிற படியைப்பற்ற "மடவாய்" என்கிறான். அதவா, மடப்பமாவது - பற்றிற்றுவிடாமையாய், (உ) இங்கேயிருக்கச்செய்தேயும் "అస్యా దేవ్యా మనస్తస్మిన్" "தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்" என்கிறபடியே பெருமாளையே நினைத்துக்கொண்டு மற்றொன்றறியாமலிருக்கிறபடியைச் சொல்லுகிறானாகவுமாம். (நின்னடியேன்விண்ணப்பம்) "దాసోహం కోసలేన్ద్రస్య" "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய" என்று - பெருமாளுக்கு அடியனானபோதே இவளுக்குமடியனாகையாலே, உனக்கடியனான வென்னுடைய விண்ணப்பமென்கிறான். இத்தால் - உனக்கு அடியனானநான் விண்ணப்பஞ்செய்கிற வார்த்தையைக் கேட்டருளவேணுமென்கை.

(செறிந்தமணிமுடிச்சநகன்சிலையிறுத்து) நெருங்கின ரத்நங்களோடேகூடின அபிஷேகத்தையுடைய ஜநகராஜன், தேவரீருக்கு (ங) சுல்கமாகவிட்டவில்லை முறித்து. "இந்தவில்லைவளைத்தார்க்கு இவளைக்கொடுக்கக்கடவோம்" என்று வீர்யசுல்கமாக அவன்கல்பித்துவைத்த வில்லிறேயது. அப்படியிருக்கிறவில்லை (ச) வளைக்கத்தானும் லோகத்தில்ஆளின்றிக்கேயிருக்க, திருக்கையில் பலத்துக்கு இலக்குப்போராமையாலே அத்தைமுறித்து. (நினைக்கொணர்ந்ததறிந்து) இந்தவீரப்பாட்டைக்கண்டு, "ఇయం సీతా మమ సుతా సహధర్మచరీ తవ। ప్రతీచ్ఛ చైనాం భద్రం తే పాణిం గృహ్ణీష్వ పాణినా" "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ। ப்ரதீச்ச சைநாம் பத்ரம் தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா" என்கிறபடியே - "இவளைக் கைக்கொண்டருளவேணும்" என்றுஸமர்ப்பிக்க, தேவரீர (ரு) பாணிக்ரஹணம்பண்ணிக்கொண்டு போந்தசேதியை யறிந்து. (அரசுகளைகட்ட வருந் தவத்தோனிடைவிலங்க) இருபத்தொருபடிகால் துஷ்டக்ஷத்ரியரானராஜாக்களாகிற களையை நிரஸித்தவனாய், ஒருவரால் செய்யவொண்ணாத

(க) ப்ராப்தையாயிருக்க - தகுந்தவளாயிருக்க. (உ) இங்கே - அசோகவநிகையிலே. (ங) சுல்கம் - க்ரயம். (ச) வளைக்கத்தானும் - வளைக்கவும். (ரு) பாணிக்ரஹணம் - கைப்பிடிக்கை.

தபஸ்ஸையுடையனா யிருந்துள்ள பரசுராமன், திருவயோத்யைக்கு (௧) எழுந்தருளாநிற்கச்செய்தே இடைவழியிலே "என்வில்வலி கண்டுபோ" என்று வந்துதகைய. "விலங்க" என்றது - விலக்க வென்றபடி. (செறிந்தவித்யாதி) அவன்கையினின்றும் வாங்கினதா யிருக்கச்செய்தேயும், வைஷ்ணவமான தநுஸ்ஸாகையாலே இத்த லேக்கநுரூபமாயிருக்கிற வில்லேக்கொண்டு அவனுடைய தபோபங் கத்தைப் பண்ணிவிட்டதுமோரடையாளம். "தவத்தைச் சிதைத்த தடையாளம்" என்னுதே, "சிதைத்ததுமோரடையாளம்" என்கை யாலே - இன்னமும்பலவடையாளங்களும் சொல்லுவதாக நினைத் துச்சொல்லுகிருனென்னு மிடந்தோற்றுகிறது. (௨) சங்காநிவர்த்தி பிறக்குமளவும் சொல்லவேணுமிறே. (௧)

மூ.—அல்லியம்பூமலர்க்கோதாயடிபணிந்தேன்விண்ணப்பம்
சொல்லுகேன்கேட்டருளாய்துணைமலர்க்கண்மடமானே
எல்லியம்போதினிதிருத்தலிருந்ததோரிடவகையில்
மல்லிகைமாமாலேகொண்டங்கார்த்ததுமோரடையாளம்.

ப-ரை.—அல்லி-உள்ளிதழ்விளங்கும்படி, மலர்-அலர்ந்த, அம்-அழகிய, பூ-மலரால்தொடுக்கப்பட்ட, கோதாய்-மாலேபோலே யிருப்பவளாய், துணைமலர்-இரண்டுதாமரைமலர்போன்ற, கண் - கண்களையும், மடம் - மடப்பத்தையு முடைய, மானே - மான்போலே யிருக்கிறவளே, அடி - தேவரீர்திருவடிகளிலே, பணிந்தேன் - பணிந்து, விண்ணப்பம் சொல்லுகேன் - யானொரு விண்ணப்பம் பண்ணிக்கொள்ளுகிறேன், கேட்டருளாய் - தேவரீர்கேட்டருளவேணுமென்ன; அந்தவிண்ணப்பந்தன்னேச் சொல்லாயென்ன; சொல்லுகிருன்;—எல்லியம்போது - ராத்ரிகாலத்திலே, இனிதிருத்தல் - பெருமாளும்தேவரீரும் இனிய இருப்பாக, இருந்ததோர் - இருந்ததொரு, இடவகையில் - ஸ்தலத்திலே, மா - சிறந்த; மல்லிகை மாலேகொண்டு - மல்லிகை மாலேயைக்கொண்டு, ஆர்த்ததும் - பெருமானைக் கட்டிவைத்ததும், ஓரடையாளம்—.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (அல்லியம்பூமலர்க்கோதாய்) (௩) அல்லிதோன்றும்படி விகஸிதமான அழகியபூவாலே கட்டப்பட்ட மாலேபோலே யிருக்கிறவளே. இத்தால்-திருமேனியுடைய (௪) தநுதையையும், (௫) மார்த்தவத்தையும், துவட்சியையும் சொல்லுகிறது. (அடிபணிந்தேன்விண்ணப்பம்) என்னுடைய ஸ்வரூபாநுரூபமாக தேவரீர்திருவடிகளிலேவணங்கி, தலேபடைத்த ப்ரயோஜநம் பெற் றேன், இனி வாய்படைத்த ப்ரயோஜநம்பெறும்படி விண்ணப்பம் செய்யத்தக்கதொன்றுண்டு என்ன; அதுகேட்கையிலுண்டான ஆத ரந்தோற்றக் கடாக்ஷித்துக்கொண்டிருக்கிறபடியைக்கண்டு (துணைம

(௧) எழுந்தருளாநிற்கச்செய்தே - பெருமாளெழுந்தருளாநிற்கச்செய்தே. (௨) சங்காநிவர்த்தி - ஸந்தேஹம்நீங்குதல். (௩) அல்லி - உள்ளிதழ். (௪) தநுதை - துவட்சி. (௫) மார்த்தவம் - மென்மைத்தன்மை.

லர்க்கண்மடமானே - சொல்லுகேன் கேட்டருளாய்) என்கிறுன். என்பக்கல் (க) வாத்ஸல்யந்தோன்ற என்னைக் கடாக்ஷித்துக்கொண்டிருக்கையாலும் பவ்யதையாலும் இணைமலர்போலே யிருக்கிற கண்களையுடையளாய், மடப்பத்தையுமுடைத்தான மான்போலே யிருக்கிறவளே, அந்தவிண்ணப்பந் தன்னைச்சொல்லுகிறேன் கேட்டருளவேணுமென்கை, மேல் அதுதன்னைச்சொல்லுகிறுன் (எல்லியித்யாதி) ராத்ரிகாலத்திலே பெருமாளும் தேவரீருமாய் ரஸோத்தரமான விருப்பாக இருந்ததொரு ஸ்தலத்திலே. (மல்லிகையித்யாதி) ச்லாக்யமான மல்லிகைமாலையைக்கொண்டு பெருமாளை பந்தித்து வைத்ததும் ஓரடையாளம். பெருமாளுடைய (உ) ப்ரணயித்வ பாரதந்த்ர்யப்ரயுக்தமாய் (ங) போகதசையில் நடப்பதொரு ரஸமாய்த்து இது; ஆகையாலே, அல்லாத வடையாளங்கள்போலன்றிக்கே, அத்யந்த ரஹஸ்யமாயிருப்பதொன்றிறே இதுதான். “సమాద్వాదశ తత్రాహం రాఘవస్య నివేశనే । భుఞ్జానా మానుషాన్ భోగాన్ సర్వకామసమృద్ధినీ” “ஸமா த்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே । புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ” என்று இவள்தானும் பெருமாளுமறியு மித்தனையிறே. (உ)

மூ.—கலக்கியமாமநத்தனளாய்க்கைகேயிவரம்வேண்ட
மலக்கியமாமநத்தனனாய்மன்னவனுமறாதொழியக்
குலக்குமராகாடுறையப்போவென்றுவிடைகொடுப்ப
இலக்குமணன்றன்னொடுமங்கேகியதோரடையாளம்.

ப-ரை.—கைகேயி-கேகயராஜன் மகளானவள், கலக்கிய-கூனியாலே கலக்கப்பட்ட, மா-பெரிய, மநத்தனளாய்-மநஸ்ஸை யுடையளாய்க்கொண்டு, வரம் வேண்ட-பெருமாளைக் காட்டிலேபோக விடுகையும், பரதாழ்வானைப் பட்டங்கட்டி அரசாளவைக்கையு மாகிற இரண்டுவரம் இப்போது தரவேணுமென்றுகேட்க, மலக்கிய-மலக்கப்பட்ட, மாமநத்தனனாய் - மஹா மநஸ்ஸையுடையனாய்க்கொண்டு, மன்னவனும்-சக்ரவர்த்தியும், மறாது ஒழிட-மறுக்கமாட்டாமல் சோகித்துக்கிடக்கச்செய்தே, ஸுமந்த்ரனைக்கொண்டு பெருமாளையழைப்பித்து, குலம் - இக்குலம்விளங்கும்படிவந்து பிறந்த, குமரா - குமாரரான நீர், காடுறையப்போவென்று - வநவாஸார்த்த மாகப்போமென்று, விடைகொடுக்க - ஏறப்படுத்த, இலக்குமணன்றன்னொடும் - இளையபெருமாளோடே, அங்கு - தண்டகாரண்யத்திலே, ஏகியது - எழுந்தருளினதும், ஓரடையாளம்—.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (கலக்கியமாமநத்தனளாய்) (ச) குப்ஜையாலே கலக்கப்பட்ட பெரியமநஸ்ஸையுடையளாய். முன்பு, புத்ரனான ஸ்ரீபரதாழ்வானிலுங்காட்டில் பெருமாள்பக்கல் ஸ்நேஹியாய், பர்த்தாவான சக்ரவர்த்தியினுடைய ப்ரியமேசெய்து போந்த

(க) வாத்ஸல்யம் - கன்றின்பக்கல் பசுவிருக்கு மிருப்பு தயையென்றபடி (உ) ப்ரணயித்வம் - அன்புடைமை. (ங) போகதசை - இருவருமானசேர்த்தி. (ச) குப்ஜை - கூனி.

வளாகையாலே "பெரியமநஸ்ஸையுடையவள்" என்கிறது. இப்படியிருக்கிற மநஸ்ஸை, (௧) மந்தரம் கடலைக் கலக்கினாற்போலேகாணும் - மந்தரை கலக்கினபடி. அதாவது - முற்பட இவள்சொன்னவை எல்லாம் (௨) அநிஷ்டமாய், "இப்படி சொல்லலாகாதுகாண்" என்று பெருமாள்பக்கல் தனக்குண்டான ஸ்நேஹத்தைச்சொல்லியும் பெருமாளுடைய குணங்களைச்சொல்லியு மிருந்தவளை, உத்தரோத்தரம் தான் சொல்லுகிறவசநங்களாலே பெருமாள்பக்கல் ஸ்நேஹத்தைக்குலைத்து, "அவனை அபிஷேகம்பண்ணவொண்ணாது, என்மகனை யபிஷேகம் பண்ணவேணும்" என்று சொல்லும்படி யாக்கினாள் (௩) இவளேயிறே. (கைகேயிவரம்வேண்ட) இப்படிகலக்கப்பட்ட மநஸ்ஸையுடையளாய்க்கொண்டு, கைகேயியானவள், தனக்குமுன்பே தருவதாகச் சொல்லிக்கிடக்கிறவரமிரண்டையும் இப்போது தரவேணுமென்றும்-அதுதான் பதினாலுஸம்வத்ஸரம் பெருமாளைக் காட்டிலேபோகவிடுகையும், ஸ்வபுத்ரனானபரதனைஅபிஷேகம்பண்ணுகையும் என்றுசொல்லி அபேக்ஷிக்க.

(மலக்கியவித்யாதி) அதுக்கு அவன் (௪)இசையாமையாலே, அறுபதினாயிரமாண்டு ஸத்யப்ரதிஜ்ஞனாய்ப்போந்தநீ, இப்போது அஸத்யப்ரதிஜ்ஞனானாயோ வென்றும், நீ இதுசெய்யாயாகில் நான் என் ப்ராணனைவிடுவேன் என்றும் அதிகுபிதையாய்க்கொண்டு இவள் சொன்ன சொலவுகளாலே மலக்கப்பட்ட மஹா மநஸ்ஸை யுடையனாய்க்கொண்டு, ராஜாவானவனும் மறுக்கமாட்டாதொழிய. மாமநத்தனாயென்றது-அறுபதினாயிரமாண்டு வஸிஷ்டாதிகளை ஸேவித்து தர்மாதர்மங்களெல்லாமறிந்து, ராஜ்யத்தில் ஒருவர் ஒருபழுதும்செய்யாதபடி நோக்கிக்கொண்டுபோந்தவனாகையாலே, ஒருவரால் கலக்கவொண்ணாதபடியான மநஸ்ஸிலிடமுடையவனென்றபடி. இப்படியிருக்கிற மநஸ்ஸையும் தன்னுடைய உக்திசேஷ்டிதங்களாலே "என்செய்வோம்" என்று (௫) தெகுடாடும்படிபண்ணினாளாய்த்து கைகேயி. மந்தரை தன்மநஸ்ஸைக்கலக்கினாற்போலேயாய்த்து-இவள் அவன்மநஸ்ஸைக்கலக்கினபடி. இப்படியான மநஸ்ஸையுடையனாய், இவள்சொன்னதுக்கு மறுத்து ஒன்றும் சொல்லமாட்டாதிருக்க.

(குலக்குமரா காடுறையப்போவென்று விடைகொடுப்ப) மறுக்கமாட்டாமையாலே ராஜாவானவன் சோகித்துக்கிடக்கச்செய்தே, பெருமாளையழைத்துக்கொண்டுவாவென்று ஸுமந்த்ரனைப்பார்த்து

(௧) மந்தரம் - ஓர்மலை. (௨) அநிஷ்டம-இஷ்டமில்லாமை. (௩) இவள் - கூனி. (௪) இசையாமையாலே - ஸம்மதியாமையாலே. (௫) தெகுடாடும்படி - வருந்தும்படி.

ச்சொல்லுவதாகநினைத்து, சோகவேகத்தாலே அதுதானும் மாட்டாதொழிய, இவள் அருகேயிருந்து, "ராஜா ராத்ரியெல்லாம் உத்ஸவபராக்காலே நித்ரையற்றிருக்கையாலே (க) ச்ராந்தராய், சற்றுஉறங்குகிறார்; நீ கடுகப்போய் பெருமாளையழைத்துக்கொண்டுவா" என்றுபோகவிடுகையாலே, அவன்போய், பெருமாளை யெழுந்தருளுவித்துக்கொண்டுவந்தவளவில், பிதாவானவன் சோகித்துக்கிடக்கிறபடியைக்கண்டு, "இதுக்கடியென்" என்று க்லேசப்பட்டுக்கேட்டவாறே, "முன்பே எனக்கு இரண்டுவரம் தந்திருப்பர்; அதிரண்டும் எனக்கு இப்போதுதரவேணும்; அதாவது - பதினாலுஸம்வத்ஸரம் உம்மைக் காட்டிலேபோகவிடவேணும், பரதனை அபிஷேகம் செய்யவேணும் என்று நான் சொன்னேன்; (உ) *ஸத்யதர்மபராயணனாகையாலே மறுக்கமாட்டாமல் அநுமதிசெய்து, உம்மைக் காட்டிலே போகவிடுவதாக அழைத்துவிட்டார்; உம்மைக்கண்டவாறே வாய்திறந்து சொல்லமாட்டாமல் கிடக்கிறார் காணும்" என்ன; "என்னை நியமிக்கும்போதைக்கும் இப்படி க்லேசிக்கவேணுமோ, யாதொன்று திருவுள்ளமானபடிசெய்யேனோநான்" என்ன; "ஆனால்,அவர்க்காக நான் சொல்லுகிறேன், இக்குலம் விளங்கவந்து பிறந்த குமாரரானநீர், உங்களையனைஸத்யப்ரதிஜ்ஞராக்கவேண்டியிருந்தீராகில்,அவருடைய வசநபரிபாலகராய்க்கொண்டு வநவாஸம் பண்ணும்படியாகப்போம்" என்று போக்கிலே (ங) ஒருப்படுத்த. (இலக்குமணன் றன்னோடெங்கேகிய தோரடையாளம்) "[illegible] पूर्वजस्यानुयात्रार्थे द्रुमचीरैरलंकृतः" "[illegible]" என்கிறபடியே-தாம் புறப்படுவதுக்குமுன்னே, கூடப்போவதாக மரவுரிசாத்தி ஒருப்பட்டுநிற்கிறஇளையபெருமாளோடே காடேறவெழுந்தருளினதோரடையாளம். ஏகுதல் - போகை. (ங)

மூ.—வாரணிந்தமுலைமடவாய்வைதேவீவிண்ணப்பம்
தேரணிந்தவயோத்தியர்கோன்பெருந்தேவீகேட்டருளாய்
கூரணிந்தவேல்வலவன்குகனோடுங்கங்கைதன்னில்
சீரணிந்ததோழமைக்கொண்டதுமோரடையாளம்.

ப-ரை.—வாரணிந்த - கச்சணிந்த, முலை - முலையையும், மடவாய்-மடப்பத்தையுமுடையளாய், வைதேவீ - விதேஹராஜன் திருமகளாய், தேர் - தேர்களாலே, அணிந்த - அலங்க்ருதமான, அயோத்தியர் - திருவயோத்யையிலுள்ளார்க்

(க) ச்ராந்தராய் - அலுத்தவராய். (உ) ஸத்யதர்மபராயணன் - ஸத்யத்தையும் தர்மத்தையும் ப்ராப்யமாகவுடையவன். (ங) ஒருப்படுத்தல் - ஒட்புவிக்கும்படிசெய்தல்.

கு, கோன் - நிர்வாஹக ரானபெருமாளுடைய, பெரு - பெருமைக்குத்தகுதியா ன, தேவீ —, விண்ணப்பம்-அடியேன்செய்யும்விண்ணப்பத்தை, கேட்டருளாய்- கேட்டருளவேணும்; கூரணிந்த - மிக்ககூர்மையையுடைய, வேல் - வேற்றொழிலில், வலவன் - வல்லவரான, குகனோடும் - ஸ்ரீகுஹப்பெருமாளோடே, கங்கை தன்னில் - கங்கைக்கரையிலுள்ள ஸ்ருங்கிபேரபுரத்திலே, சீரணிந்த - சீர்மை மிக்க, தோழமைக்கொண்டது மோரடையாளம்—.

வ்ய.—நாலாம்பாட்டு. (வாரணிந்தமுலைமடவாய்) கச்சணிந்தமுலைகளையும் மடப்பத்தையுமுடையவளே. ராஜாக்களுக்கு போக்யமானவஸ்துக்கள்கொண்டுதிரிவார், பிறர்கண்படாதபடி கட்டி முத்திரையிட்டுக்கொண்டு திரியுமாபோலே, "பெருமாளுக்குபோக்யமானவிவை பிறர்கண்படவொண்ணாது" என்னுமத்தாலேயாய்த்து- இவள்கச்சிட்டுக்கட்டி மறைத்துக்கொண்டிருப்பது. இப்படிஇருந்த முலைகள் இப்போது வெறும்புறத்திலே இருப்பதே! என்று க்லேசித்துச்சொல்லுகிறானுதல்; அன்றிக்கே, கச்சாலே அடக்கி ஆள வேண்டும்படிபரிணதமாய் தசைத்திருக்குமவை, இப்போது "உபவாஸக்ருஶாம்" "உபவாஸக்ருஶாம்" என்கிறபடியே திருமேனியிளைக்கையாலே (௧) சோஷித்திருக்கிறபடியைப்பற்றச் சொல்லுகிறானுதல். "மடவாய்" என்றதும்-ஸ்த்ரீத்வத்தால்வந்த ஒடுக்கமன்றிக்கே, பிரிவாற்றாமையால்வந்த துவட்சியைப்பற்றச் சொல்லுகிறானுதல். அன்றிக்கே, மடப்பமாவது-பற்றிற்றுவிடாமையாய், அநவரதம் பெருமாளளவிலே திருவுள்ளமாய், மற்றொன்றறியாதிருக்கிறபடியைப்பற்றச் சொல்லுகிறானுதல். (வைதேவீ) (௨)விதேஹபுத்ரியானவளே. இப்படிதேஹத்தை யுபேக்ஷித்திருக்கலாய்த்து இக்குடியில் பிறப்பிறேயென்ன. (தேரணிந்தவயோத்தியர்கோன்பெருந்தேவீ) தேர்களாலே அலங்க்ருதமான திருவயோத்யையிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெருமாளுடையபெருமைக்குத் தகுதியானதேவீ. "[Telugu-script quotation]" "தாஹம்ஶீலவயோவ்ருத்தாம் தாஹாபிஜநலக்ஷணாம் । ராகவோர்ஹதி வைதேஹீம் தம்சேயமஸிதேக்ஷணா" என்னக்கடவதிறே. அல்லது ஒரு சிறுத்தேவியுண்டாய், பெருந்தேவியென்கிறதன்றே; பெருமாள் (௩)ஏகதாரவ்ரதராகையாலே. (விண்ணப்பம்கேட்டருளாய்) நான்விண்ணப்பஞ்செய்கிறவித்தைக்கேட்டருளவேணும். (கூரணிந்தவேல்வலவன்) மிக்ககூர்மையையுடையவேல்தொழிலில்வல்லவன். ஸ்ரீகுஹப்பெருமாள் வேல்வாங்கினானொன்றால் சத்ருபக்ஷம் மண்ணு

(௧) சோஷித்தல் - சுருங்குதல். (௨) விதேஹன் - தேகத்தையிழந்த அரசன்குலத்திற்பிறந்த ஜநகமஹாராஜன். (௩) ஏகதாரவ்ரதர் - ஒரேமனையாளுடன்கூடியிருக்கையை நோன்பாகவுடையவர்.

ண்ணும்படியாய்த்து இவருடையசௌர்யமிருப்பது. (குகனேடுமித்யாதி) இப்படிவேலுங்கையுமாய்த் திரியுமதொழிய, "ஏழைஏதலன்" இத்யாதிப்படியே-அபிஜநவித்யாவ்ர்த்தங்களொன்றுமில்லாத ஸ்ரீகுஹப்பெருமாளோடே கங்காதீரமான ஸ்ரீங்கிபேரபுரத்திலே "மாழைமான்மடநோக்கி உன்தோழி உம்பிஎம்பி-தோழன்நீயெனக்கு" என்றருளிச்செய்தபடியே குணத்தோடேகூடின தோழமை கொண்டதும் ஓரடையாளம். (௪)

மூ.—மானமருமென்னேக்கிவைதேவிவிண்ணப்பம்
கானமருங்கல்லதர்போய்க்காடுறைந்தகாலத்துத்
தேனமரும்பொழிற்சாரற்சித்திரகூடத்திருப்பப்
பான்மொழியாய்பரதனம்பிபணிந்ததுமோரடையாளம்.

ப-ரை.—மானமரும் - மான்பெடைபோன்ற, மெல் - மெல்லிய, நோக்கி - நோக்கையுடையளாய், வைதேவீ-விதேஹராஜன்புத்ரியாய், பால்மொழியாய்-பால்போலும் இனியபேச்சையுடையவளே, விண்ணப்பம்—; கான் அமரும் - காடுசெறிந்திருப்பதாய், கல்லதர்-கல்கிளைந்துகிடப்பதானவழியிலே, போய்—, காடுறைந்தகாலத்து - வநவாஸம்பண்ணினகாலத்திலே, தேன் - வண்டுகளானவை, அமரும் - பொருந்திவர்த்திக்கிற, பொழில் - பொழில்களோடுசேர்ந்த, சாரல் - தாழ்வரையையுடைய, சித்திரகூடத்து - சித்ரகூடபர்வதத்திலே, இருப்ப, இளையபெருமாள்சமைத்தபர்ணசாலையிலே யெழுந்தருளியிராநிற்கச் செய்தே, நம்பி - பாரதந்த்ர்யத்தால்பூர்ணனான, பரதன் - ஸ்ரீபரதாழ்வான், பணிந்ததும் - "மீண்டெழுந்தருளவேணும்" என்று ப்ரபத்திபண்ணினதும், ஓரடையாளம்—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மானமருமித்யாதி) மானேடொத்திருந்துள்ள ம்ருதுவானநோக்கையுடையளாய், விதேஹராஜாவினுடையபுத்ரியானவளே. இத்தால் - "ప్రియంజనమపశ్యన్తీం పశ్యన్తీం రాక్షసీగణమ్। స్వగణేన మృగీం హీనాం శ్వగణైరావృతామివ" "வ்ருக்ஷமூலே வஸந்தீம் வஸந்தீம் ராக்ஷஸீகணை: । ஸுமணேந ம்ருகீம் ஹீநாம் ஸுமணைராவ்ருதாமிவ" என்கிறபடியே-தன்னினத்தைப்பிரிந்து அநேகம் நாய்களினுடைய திரள்களாலே வளைக்கப்பட்டு நடுவேநின்று மலங்கமலங்கவிழிப்பதொரு மான்பேடைபோலே, அநுகூலஜநத்தின்முகத்திலே விழிக்கப்பெறுமல் ப்ரதிகூலமான ராக்ஷஸிகணத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற விருப்பையும், அவர்களுடைய தர்ஜநபத்ஸநங்களாலே உளைந்து வெருண்டநோக்கையுடையளாயிருக்கிற தேஹத்தையுபேக்ஷித்தபடியையும் சொல்லுகிறது. (விண்ணப்பம்) அடியேன் விண்ணப்பம் செய்கிறவார்த்தையைத் திருவுள்ளம்பற்றியருளவேணும்.

(கானமருமித்யாதி) காடுசெறிந்திருப்பதாய் * கல்கிளைந்துகிடப்பதானவழியிலே திருவடிகளின் மார்த்தவம்பாராதேபோய் வநவா

ஸம்பண்ணினகாலத்திலே. (தேனமருமித்யாதி) வண்டுகள் மாறுமல் பொருந்திக்கிடக்கிற பொழில்களோடுசேர்ந்த பர்யந்தத்தையுடைய சித்ரகூட பர்வதத்திலே. "உடஜே ராமமாஸீநம் ஜடாமண்டலதாரிணம். க்ருஷ்ணாஜிநதரம் தந்து வீரவல்கலவாஸஸம்" என்கிறபடியே இளையபெருமாள்சமைத்த ஸ்ரீபர்ணசாலையிலே யெழுந்தருளியிராநிற்க. (பான்மொழியாய்) பால்போலே ரஸாவஹமான பேச்சையுடையவளே. இதுக்குமுன்பு இவள்சொன்னவார்த்தைகளில் ரஸ்யதையாலும் இது கேட்கையிலுண்டான ஆதரத்தாலும் சொல்லுகிறுன். (பரதனம்பி பணிந்தது மோரடையாளம்) பார்தந்த்ர்யத்தால் பூர்ணனான ஸ்ரீபரதாழ்வான்வந்து "மீண்டு எழுந்தருளவேணும்" என்று (௧) ப்ரபத்திபண்ணினது மோரடையாளம். (௫)

மூ.—சித்திரகூடத்திருப்பச்சிறுகாக்கைமுலைதீண்ட
அத்திரமேகொண்டெறியவனைத்துலகுந்திரிந்தோடி
வித்தகனேயிராமாவோ! நின்னபயமென்றழைப்ப
அத்திரமேயதன்கண்ணையறுத்ததுமோரடையாளம்.

ப — ரை.—சித்திரகூடத்து - சித்ரகூடபர்வதத்திலே, இருப்ப - பிராட்டிமடியிலே பெருமாள்கண்வளர்ந்தருளா நிற்கச்செய்தே, இந்த்ரன்மகனான ஜயந்தனானவன், சிறு - பக்ஷிஜாதியில்மிகத்தண்ணிதான, காக்கை - காக்கைவடிவாய்க்கொண்டு, முலை - திருமுலைத்தடத்திலே, தீண்ட - நலிய, அவ்வளவிலே பெருமாள்உணர்ந்தருளி, அத்திரம் - ப்ரஹ்மாஸ்த்ரத்தை, கொண்டு - ஒருதர்ப்பையிலேயேறிட்டு, எறிய - அக்காகத்தின்மேலேப்ரயோகிக்க, அது பின்தொடர்ந்துசெல்ல அத்தைத்தப்பவழிதேடி, அனைத்துலகும் - எல்லாலோகங்களிலும், ஓடித்திரிந்து - ஒருகால்போலே ஒன்பதின்கால் ஓடித்திரிந்தவிடத்திலும், தனக்கொருபுகலிடம் காணுமையாலேமீண்டுவந்து, வித்தகனே - யாவரும்வியக்கத்தக்கவனாய், இராமா - யாவரையும்ரமிப்பிக்கவல்லவனானவனே, நின்-உனக்கு, அவயம் - அபயம், ஓ! என்று அழைப்ப-அடைக்கலம்புகுந்தமை தோற்றக்கூப்பிட, அத்திரமே - முன்பு தலையையறுப்பதாகத்துடர்ந்த அஸ்த்ரந்தானே, அதன் -அதினுடைய, கண்ணை - ஒருகண்ணை, அறுத்ததும் - அறுத்ததும், ஓரடையாளம்—.

வ்யா.—ஆரும்பாட்டு. (சித்திரகூடத்திருப்ப) சோலைகளும்ஆறுகளும் சிலாதலங்களுமாய்க்கொண்டு போகஸ்தாநமாயிருக்கும் சித்ரகூடபர்வத ப்ரதேசத்திலே, "தஸ்யோபவநஷண்டேஷு நாநாபுஷ்பஸுகந்திஷு। விஹ்ருத்ய ஸலிலே க்லிந்நா மமாங்கே ஸமுபாவிஶ:" "தஸ்யோபவநஷண்டேஷு நாநாபுஷ்பஸுகந்திஷு। விஹ்ருத்ய ஸலிலே க்லிந்நா மமாங்கே ஸமுபாவிஶ:" என்கிறபடியே பெருமாளும் தேவரீருமாய்க்கொண்டு ஏகாந்தரஸமநு

(௧) ப்ரபத்தி - ஈசவரனையே உபாயமாகப்பற்றுகை.

பவித்து ஒருவர்க்கொருவர்மாறிமாறி மடியிலேகண்வளர்ந்து ரஸோத்தராராயிராநிற்கச்செய்தே. (சிறுகாக்கைமுலைதீண்ட) இந்த்ரன்மகனானஜயந்தன் தமோகுணப்ரசுரனாகையாலே (௧) ப்ராப்தாப்ராப்தவிவேகசூந்யனாய் தேவவேஷத்தைமறைத்து க்ஷுத்ரமான காகவேஷத்தை பரிக்ரஹித்துக்கொண்டுவந்து பெருமாளும் மடியிலே பள்ளிகொண்டருளாநிற்கச்செய்தே, "[illegible]" "வாயஸஸ்ஸஹஸாமத்ய விததார ஸ்தநாந்தரே" என்கிறபடியே (௨)ஜநநியென்றறியாதே தேவரீர்திருமுலைத்தடத்திலேநலிய. (அத்திரமேகொண்டெறிய) அவ்வளவிலே பெருமாளுணர்ந்தருளி, "[illegible]" "ஸக்ரோதமுதிதஸ்தேந ராக்ஷஸேந வதேக்ஷணஹோமிநா" என்று அதிக்ருத்தராய், "[illegible]" "ஸதர்ப்பம்ஸம்ஸ்தராத்க்ருஹ்ய ப்ராஹ்மேணாஸ்த்ரேண யோஜயத்। ஸதீப்தஇவகாலாக்நிர்ஜஜ்வாலாபிமுகோத்விஜம்। ஸதம்ப்ரதீப்தம்சிக்ஷேப தர்ப்பம்தம்வாயஸம்ப்ரதி" என்கிறபடியே ஒருதர்ப்பத்தையெடுத்து, அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தை யோஜித்து, அத்தை அந்தகாகத்தின்மேலேசெலுத்திவிட.(அனைத்துலகுமித்யாதி)அந்த அஸ்த்ரம் மந்தகதியாக விடுகையாலே பின்துடர்ந்துசெல்ல, அத்தைத்தப்பவழிதேடி, "[illegible]" "ஸபித்ராச பரித்யக்தஸ் ஸுரைஸ்ச ஸமஹர்ஷிபி:। த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய" என்கிறபடியே முந்துறபித்ர்க்ருஹத்திலே சென்றவளவில், பிதாவாலும் மாதாவாலும் கைவிடப்பட்டு, பந்துக்களானவர்கள் கைக்கொள்ளுவர்களோவென்று அவர்கள்பக்கலிலே சென்றவளவில் அவர்களாலும் (௩) பரித்யக்தனாய், (௪) ஆந்ருசம்ஸ்ய ப்ரதாநரான ரிஷிகள்தான்கைக்கொள்ளுவர்களோ வென்று அவர்கள் பக்கலிலே சென்றவளவில் அவர்களும் கைவிடுகையாலே, திறந்துகிடந்த வாசல்கள்தோறும் ஒருகால் நுழைந்தாற்போலே ஒன்பதின்கால் நுழைந்து மூன்றுலோகங்களையும் வளைய ஓடித் திரிந்தவிடத்திலும், ஒருவரும் கைக்கொள்ளாமையாலே "[illegible]" "தமேவ ஸரணம் கத:" என்கிறபடியே சீறினாலும் காலைக்கட்டிக்கொள்ளலாம்படியிருக்கும் ஸ்வபாவனாகையாலே (௫) விஸ்மயநீயனாய், எல்லாரையும் குணத்

(௧) ப்ராப்தாப்ராப்தவிவேகசூந்யனாய் - தகுந்தது தகாதது என்கிற அறிவில்லாதவனாய். (௨) ஜநநீ-தாய். (௩) பரித்யக்தனாய் - கைவிடப்பட்டவனாய். (௪) ஆந்ருசம்ஸ்யப்ரதாநர்-தயையைமுக்யமாக வுடையவர்கள். (௫) விஸ்மயநீயன் - யாவராலும் ஆச்சரியப்படத்தக்கவன்.

தாலே ரமிப்பிக்கவல்லவனே யென்று (௧) சரண்யரான பெருமாள்குணத்தைச்சொல்லி, "ஓ!" என்று தன்னுடைய (௨) அநந்யகதித்வத்தை முன்னிட்டுக்கொண்டு "உனக்கு அபயம்" என்று (௩) சரணாகதனானமை தோற்றக்கூப்பிட. (அத்திரமே யித்யாதி) இப்படிசரணம்புகுகையாலே "సతం నిపతితం భూమౌ శరణ్యశ్శరణాగతమ్ । వధార్హమపి కాకుత్స్థః కృపయా పర్యపాలయత్" "ஸதம் நிபதிதம் பூமௌ ஶரண்யஶ்ஶரணாகதம் । வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்" என்கிறபடியே க்ருபையாலே பெருமாள் ரக்ஷித்தருளுகிறவளவில், காகத்துக்கு ப்ராணப்ரதாநம்பண்ணி, அஸ்த்ரத்துக்கு ஒரு கண்ணழிவு கற்பிக்கையாலே, முன்பு தலையறுப்பதாகத் துடர்ந்த அஸ்த்ரந்தானே அதினுடையவொருகண்ணை யறுத்துவிட்டதும் ஓரடையாளம். (௬)

மூ.—மின்னொத்தநுண்ணிடையாய்மெய்யடியேன்விண்ணப்பம்
பொன்னொத்தமானொன்றுபுகுந்தினிதுவிளையாட
நின்னன்பின்வழிநின்றுசிலைபிடித்தெம்பிரானேகப்
பின்னேயங்கிலக்குமணன்பிரிந்ததுமோரடையாளம்.

ப - ரை.—மின்னொத்த - மின்னோடொத்திருந்துள்ள, நுண் - நுண்ணிய, இடையாய் - இடையையுடையவளே, மெய் - குற்றமற்ற, அடியேன் - சேஷபூதனான நான்செய்கிற, விண்ணப்பம் - விண்ணப்பத்தைக் கேட்டருளவேணும்; பொன்னொத்த-பொன்போன்றநிறத்தையும் பலவகைப்பட்டரத்நங்கள்போன்ற புள்ளியையுமுடைய, மானொன்று-ஒருமானானது, புகுந்து-பெருமாளும்தேவரீருமாய் எழுந்தருளியிருக்கிற ஆச்ரமத்தின்முன்னேவந்துபுகுந்து, இனிது - மநோஹரமாம்படி, விளையாட - துள்ளிவிளையாட, "இத்தைப்பிடித்துத்தரவேணும்" என்று தேவரீர்பெருமாளைக்கேட்க, அருகுநின்ற இளையபெருமாள் "இது மாயாம்ர்கம்" என்றுநிற்கச்செய்தேயும், தேவரீர் நிர்ப்பந்தித்துக்கேட்டதனால், நின் - தேவரீருடைய, அன்பின்வழி - ஆசையின்வழியிலே, நின்று—, சிலைபிடித்து - பிடித்தவில்லும் தாமுமாய்க்கொண்டு, எம்பிரான் - பெருமாள், ஏக- அத்தைப்பிடிப்பதாக நெடுந்தூரமெழுந்தருள, பின்னே - பிற்பாடு, அங்கு - அங்கே, இலக்குமணன் - இளையபெருமாள், பிரிந்ததும்-பிரிந்துபோனதும், ஓரடையாளம்—.

வ்யா.—ஏழாம்பாட்டு. (மின்னித்யாதி) மின்னோடொத்திருந்துள்ள நுண்ணிய இடையையுடையாய். இடையினுடைய நுண்மையும், விரஹதசையில்நோவுபாடாற்றவொண்ணாமைக்கு உடலாயிருக்குமிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறான். (மெய்யடியேன் விண்ணப்பம்) புரையற்றசேஷபூதனான நான் விண்ணப்பஞ்செய்கிற

(௧) சரண்யர் - அடைக்கலமாயிருப்பவர். (௨) அநந்யகதித்வம் - வேறேகதியில்லாமை. (௩) சரணாகதன் - அடைக்கலம்புகுந்தவன்.

த்தைத் திருவுள்ளம்பற்றியருளவேணும். மெய்யடியானுகையாவது- எதிர்த்தலையில் (௧) ஸம்ர்த்தியே புருஷார்த்தமாயிருக்குமதொழிய, ஸ்வப்ரயோஜநபரனன்றிக்கேயிருக்கை. (பொன்னொத்தமானித்யாதி) (௨) மாயாவியானமாரீசன் இதுக்குமுன்பு லோகத்தில்கண்டறியாததொரு வடிவையெடுத்துக்கொண்டுவந்ததாகையாலே, பொன்போலிருக்கிறநிறத்தையும் நாநாரத்நங்கள்போலிருக்கிற புள்ளியையும்மற்றுமநேகம்வைசித்ரியையுமுடைத்தாயிருப்பதொருமானுனது, (௩) எழுந்தருளியிருக்கிற ஆச்ரமத்தின்முன்னேவந்துபுகுந்து மநோஹரமாம்படி நின்று துள்ளிவிளையாட. (நின்னன்பின்வழிநின்று) "இத்தைப்பிடித்துத்தரவேணும்" என்று பெருமாளைப்பார்த்து தேவரீர் அருளிச்செய்தவிடத்தில், இளையபெருமாள் அருகேநின்று, "லோகத்தில் இப்படி யிருப்பதொரு ம்ர்கமில்லை, மாரீசன் இங்ஙனே சிலமாயாரூபங்களைக்கொண்டுதிரியும் என்றுப்ரஸித்தம்; ஆகையால், இது மாயாம்ர்கம்" என்னுநிற்கச்செய்தேயும், தேவரீருடைய ஆசையின்வழியிலேநின்று. (சிலைபிடித்தெம்பிரானேக) இளையபெருமாளை இங்குத்தைக்குக் காவலாகநிறுத்தியிருக்கையாலே, பிடித்தவில்லும் தாமுமாய்க்கொண்டு அத்தைப்பிடிப்பதாக, பெருமாள் நெடுந்தூரமெழுந்தருள. பின்பு தங்களையெல்லாரையும் விஷயீகரித்த உபகாரத்தைநினைத்து "எம்பிரான்" என்கிறுன். (பின்னேயித்யாதி) நெடுந்தூரம் பின்பற்றிப்போனவிடத்திலும் பிடிகொடாமல் அதுதப்பித்திரிகையாலே "இதுமாயாம்ர்கம்" என்று திருவுள்ளம்பற்றி அதின்மேலேசரத்தைவிட, அதுபட்டுவிழுகிறபோது "ஹாஸீதே ஹாலக்ஷ்மண" என்றுபெருமாள் மிடற்றோசைபோலே கூப்பிட்டுக்கொண்டுவிழ, அத்தை தேவரீர்கேட்டருளி, பெருமாளுக்கேதேனும் அபாயம்வந்ததாகநினைத்து, "இத்தைச்சடக்கெனப்போய் அறியும்" என்று அருளிச்செய்யச்செய்தேயும், இங்குத்தைக்குக் காவலாகநிறுத்திப்போகையாலும், பெருமாளுடைய சௌர்யத்தையறிகையாலும் "அங்குத்தைக்கு ஒன்றும்வாராது, தேவரீர் பயப்பட்டருளவேண்டா" என்று விண்ணப்பம்செய்து, தாம்போகமாட்டாமல் சுற்றிக்கொண்டுநிற்க, அவர் நில்லாமல் போகவேண்டும்படி தேவரீர் சிலவருளிச்செய்கையாலே, பிற்பாடு அங்கே இளையபெருமாள் பிரிந்துபோனது மோரடையாளம். (௭)

மூ.—மைத்தகுமாலர்க்குழலாய்வைதேகீவிண்ணப்பம்
ஒத்தபுகழ்வாநரக்கோனுடனிருந்துநினைத்தேட
அத்தகுசீரயோத்தியர்கோனடையாளமிவைமொழிந்தான்
இத்தகையாலடையாளமீதவன்கைமோதிரமே.

(௧) ஸம்ர்த்தி - நிறைவு. (௨) மாயாவி - ஆச்சர்யச்செய்கையுடையவன். (௩) எழுந்தருளியிருக்கிற - பெருமாளெழுந்தருளியிருக்கிற.

ப-ரா.—மைத்தகு-மைபோலேகறுத்து, மா - சிறந்த, மலர் - மலரோடே கூடின, குழலாய் - கூந்தலையுடையளாய், வைதேவீ - விதேஹராஜன்குலம்விள ங்கவந்தவதரித்தவளே, விண்ணப்பம் - அடியேன்செய்யும் விண்ணப்பத்தைத் திருவுள்ளம்பற்றியருளவேணும்; ஒத்த - ஸுகது:கங்களில் பெருமாளோ டொத்தவரென்கிற, புகழ்-புகழையுடையராய், வாநரக்கோன் - வாநராதிபதி யானமஹாராஜர், உடனிருந்து - பெருமாளுடன்கூடியிருந்து, நினை - தேவரீரை, தேட - தேடுகைக்காக, அ - அந்தநிலைக்கு, தகு - தகுதியான, சீர் - குணத்தை யுடைய, அயோத்தியர் - திருவயோத்யையிலுள்ளார்க்கு, கோன் - ராஜாவான பெருமாள், இவையடையாளம் - இவ்வடையாளங்களெல்லாம், மொழிந்தான்- அருளிச்செய்தார்; ஆனபின்பு, அடையாளம் - அடியேன்விண்ணப்பஞ்செய்த அடையாளங்களித்தனையும், இத்தகையால் - இந்தப்ரகாரத்தாலேவந்ததென்று அறிவித்து, ஈது - இது, அவன்கை - அவர்கையில்தரித்தமோதிரமென்று, மோ திரம் - திருவாழிமோதிரத்தையும் கொடுத்தானுய்த்து.

வ்ரா.—எட்டாம்பாட்டு. (மைத்தகுமாமலர்க்குழலாய்) மை போலேஇருண்டு ச்லாக்யமானமலரோடேகூடியிருக்கும் குழலை யுடையவளே. இந்தவிசேஷணங்கள் இப்போதிருக்கிற இருப்புக்குச் சேராமையால், இப்படியிருக்கைக்கு யோக்யமான குழலென்று சொல்லுகிறானித்தனை. பிரிவாற்றாமையாலே (க) பேணாமலிருக் கையால் புழுதிபடைத்துப் பூமாறியிறேயிப்போதுகிடக்கிறது. (வை தேவீ) தேஹத்தை உபேக்ஷித்திருக்கிறபடியைக்கொண்டு சொல் லுகிறான். (விண்ணப்பம்)இந்தவிண்ணப்பத்தைத் திருவுள்ளம்பற்ற வேணுமென்கை.

(ஒத்தபுகழ்வாநரக்கோன்) காண்பதுக்கு முன்னே "సుగ్రీవం నాథమిచ్ఛతి" "సుగ్రీవం శరణం గతః" "ஸுக்ரீவம் நாயமிச்சதி" "ஸுக்ரீவம் ஶரணம் கத:" என்று இளையபெருமாள் அருளிச்செய்யும்படி தாமே பஹுமாநம் பண்ணிக்கொண்டுவந்து, கண்டபின்பு அக்நி ஸாக்ஷிக மாகஸக்யம்பண்ணி, "రోచయస్వ సఖిత్వం మే హ్యేకం దుఃఖం సుఖఞ్చ నౌ" "ஸம்வயமெஸுராஸிஹ்ருதெஹ்ராமெஹெ்ருகஷ்டு:க்கஸம்ஸுகஞ்சநௌ" என் று இளையபெருமாள் அருளிச்செய்தபின்பு, "பெருமாளோடு (உ) சோகஹர்ஷங்கள் ஒத்துப்போந்தவர்" என்னும் புகழையுடைய ராய் வாநராதிபதியான மஹாராஜர். இப்போது, வாநராதிபதி யென்றது-ஸாபிப்ராயம். அதாவது - தேவரீரைத்தேடுகைக்காக "యూథం కపీనాం సహస్రాణి" "யாம் கபீநாம்ஸஹஸ்ராணி" என்கிறபடியே திககுக்கள் தோறும் திரள்திரளாகப் போகவிடத்தக்க வாநரஸே நையை யுடையவரென்கை. (உடனிருந்து) மால்யவானிலும் கிஷ்

(க) பேணாமல் - ஆதரியாமல். (உ) சோகஹர்ஷங்கள் - து:கஸுகங்கள்.

கிந்தையிலுமாகப் பிரிந்திருந்ததுபோய், பெருமாளுடன் கூடியிருந்து. (நினைத்தேட) தேவரீரைத் தேடுகைக்காக. ஸர்வ திக்குக்களிலும் ஆள்விடுகிறவளவிலே, "விசேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவாந்" 'விசேஷேண து ஹநூமதி ஹரீச்வரோ ஹநுமத்யர்த்த முக்தவாந்' என்கிறபடியே எல்லாரையும்போலன்றிக்கே விசேஷித்து என்னையபிமானித்து "இவன்இக்கார்யத்துக்கு ஸமர்த்தன்" என்று மஹாராஜர் திருவுள்ளம்பற்றினவநந்தரம்.

(அத்தகுசிரயோத்தியர்கோ னடையாளமிவை மொழிந்தான்) தேவரீரைப்பிரிந்தபின்பு ஊணுமுறக்கமுமற்று கடித்ததும்ஊர்ந்ததுமறியாதே ஏதேனுமொரு போக்யபதார்த்தங்களைக்கண்டால் தேவரீரைநினைத்து ஈடுபடாநின்றுள்ள அந்தநிலைக்குத் தகுதியான ப்ரணயித்வகுணத்தை யுடையராய், ஸ்ரீபரதாழ்வான் * அடிசூடுமரசாய்த் திருவடிநிலைகொண்டுபோகையாலே திருவயோத்யையிலுள்ளார்க்குத் தாமேராஜாவானபெருமாள், விண்ணப்பஞ் செய்த இந்தவடையாளங்களெல்லாம் அடியேனுக்குத் தம்முடைய திருப்பவளத்தாலே யருளிச்செய்தார். அல்லாதபோது * மல்லிகைமாலை கொண்டு அங்கார்த்தது அடியேனுக்கு அறியக்கூடுமோ. (இத்தகையாலடையாளம்) ஆனபின்பு, விண்ணப்பஞ்செய்த வடையாளமித்தனையும் இப்ப்ரகாரத்தாலேவந்ததென்று அறிவித்து. (ஈதவன்கைமோதிரமே) இது அவர்திருக்கையில் திருவாழிமோதிரமென்று, "ராமநாமாங்கிதம் சேதம் பஶ்ய தேவ்யங்குலீயகம்" 'ராமநாமாங்கிதம் சேதம் பஶ்ய தேவ்யங்குலீயகம்' என்கிறபடியே பெருமாளுடைய திருநாமத்தாலே அங்கிதமாயிருக்கிற திருவாழிமோதிரத்தைக் கொடுத்தானுய்த்து. (அ)

மூ.—திக்குநிறைபுகழாளன்றீவேள்விச்சென்றநாள்
மிக்கபெருஞ்சவைநடுவேவில்லிறுத்தான்மோதிரங்கண்
டொக்குமாலடையாளமநுமானென்றுச்சிமேல்
வைத்துக்கொண்டுகந்தனளான்மலர்க்குழலாள்சீதையுமே.

ப-ரை.—மலர் - மலர்களணிந்த, குழலாள் - கூந்தலையுடையளான, சீதை- பிராட்டியானவள்; திக்கு - எல்லாத்திசைகளிலும், நிறை - நிறைந்த, புகழாளன் - புகழையுடையனான ஸ்ரீஜநகராஜனுடைய, தீ - முத்தீவளர்க்கிற, வேள்வி- யாகத்தில், சென்றநாள் - விச்வாமித்ரமஹர்ஷி அழைத்துக்கொண்டு செல்ல எழுந்தருளினகாலத்திலே, மிக்கபெரும் - மிகவும்பெரிதான, சவைநடுவே - ஸபாமத்யத்திலே, வில் - தனக்குசுல்கமாகக் கற்பித்திருந்தவில்லை, இறுத்தான் - முறித்தபெருமாளுடைய திருக்கையிலே கிடக்குமதான, மோதிரம் - திருவாழிமோதிரத்தை, கண்டு—, அநுமான் - அநுமானே, அடையாளம் - நீமுன்பு சொன்ன

அடையாளங்களும் திருவாழிமோதிரத்தி னடையாளமும், ஒக்குமென்று - சரியாயிராநின்றதென்றுசொல்லி, உச்சிமேல் - தன்தலையின்மேல், வைத்துக்கொண்டு-திருவாழிமோதிரத்தை வைத்துக்கொண்டு, உகந்தனள் - ப்ரீதையானாள்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (திக்கித்யாதி) (க) தத்த்வஜ்ஞாநத்தாலும்,(உ)ப்ராக்ர்தவிஷயவைராக்யத்தாலும், முமுக்ஷுவாய்(௩) பலாபிஸந்திரஹிதமாக கர்மாநுஷ்டாநங்களைப் பண்ணிக்கொண்டு போருகையாலும்,ஸர்வதிக்குக்களிலும்நிறைந்த புகழையுடையனான ஸ்ரீஜநகராஜனுடைய (ச) ஆஹவநீயாத்யக்நித்ரயத்தோடே பண்ணும் யாகத்திலே விச்வாமித்ரமஹர்ஷி கொண்டுசெல்ல (ரு) எழுந்தருளினகாலத்திலே. (மிக்கபெரும்சவைநடுவே) மிகவும்பெரிய ஸபாமத்யத்திலே. (வில்லிறுத்தான்மோதிரங்கண்டு) தனக்கு சுல்கமாகக் கல்பித்திருந்த வில்லைமுறித்த பெருமாளுடைய திருக்கையிலே அப்போதுகிடந்ததாய், பின்பு பாணிக்ரஹணம் பண்ணுகிறபோது தன்கையிலே உறுத்தினதாய், ஸர்வகாலமும் பெருமாள் திருக்கையிலே கிடக்குமதான திருவாழிமோதிரத்தைக்கண்டு.

(ஒக்குமித்யாதி) அநுமானே! நீமுன்பு சொன்னவடையாளங்களும் திருவாழிமோதிரத்தி லடையாளமும் ஒக்குமென்று அவன் முகத்தைப் பார்த்துச்சொல்லி, "గృహీత్వా ప్రేక్షమాణా సా భర్తుః కరవిభూషణమ్ । భర్తారమివ సంప్రాప్తా జానకీ ముదితాభవత్" "க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா பர்த்து: கரவிபூஷணம் । பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதாபவத்" என்கிறபடியே - அத்திருவாழிமோதிரத்தை வாங்கி அதினுடைய கௌரவமும் தன்னுடைய ஆதரமும்தோற்றத் தலைமேலேவைத்துக்கொண்டு, பின்னை, அத்தைக் கையிலேயேந்தி வைத்த கண்மாறாமல் பார்த்துக்கொண்டிருக்கையாலே அத்திருவாழிமோதிரத்தோடு சேர்ந்த திருவிரலையும் அத்தோடுசேர்ந்த திருக்கையையும் அத்தோடுசேர்ந்த திருத்தோள்களையும் நினையாநின்றுகொண்டு, அவ்வழியாலே திருமேனியெல்லாவற்றையும் நினைத்து, பாவநாப்ரகர்ஷத்தாலே பெருமாள் அலங்கரிக்கப் பூமுடித்து ஒருபடுக்கையிலே யிருந்தாற்போலே தோன்றி, பிராட்டி மிகவும் ப்ரீதையானாளென்று ஆச்சர்யப்பட்டருளிச்செய்கிறார். ஆல்-ஆச்சர்யம்.()

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

---

(க) தத்த்வஜ்ஞாநம் - மெய்யறிவு. (உ) ப்ராக்ர்தவிஷயவைராக்யம் - இதரவிஷயங்களில் ஆசையின்மை. (௩) பலாபிஸந்திரஹிதமாக - பலத்தில் ஆசையின்றி. (ச) ஆஹவநீயாதி அக்நித்ரயம் - ஆஹவநீயம், கார்ஹபத்யம், தக்ஷிணாக்நியென்கிற மூன்றுஅக்நிகள். (ரு) எழுந்தருளின - பெருமாளெழுந்தருளின.

மூ.—வாராருமுலைமடவாள்வைதேவிதனைக்கண்டு
சீராருந்திறலநுமன்றெரிந்துரைத்தவடையாளம்
பாராரும்புகழ்ப்புதுவைப்பட்டர்பிரான்பாடல்வல்லார்
ஏராரும்வைகுந்தத்திமையவரோடிருப்பாரே.

ப-ரை.—வாராரும் - கச்சோடுகூடின, முலை - ஸ்தநங்களையும், மடவாள்-மடப்பத்தையு முடையளாய், வைதேவிதனை - விதேஹராஜன் திருமகளான பிராட்டியை, கண்டு—, சீர் - நல்லஅறிவுமுதலியகுணங்களாலே, ஆரும் - நிறைந்தவனாய், திறல் - நினைத்ததுமுடிக்கவல்ல சக்திமானான, அநுமன் - சிறியதிருவடி, தெரிந்து - பெருமாளருளிச்செய்த அடையாளங்களை யாராய்ந்து, உரைத்த - நம்பும்படிசொன்ன, அடையாளம் - அடையாளங்களை, பார் - பூமியெங்கும், ஆரும் - நிறைந்த, புகழ் - புகழையுடையரான, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூரில், பட்டர் பிரான்-பெரியாழ்வார் அருளிச்செய்த, பாடல் - பாடலானவிவற்றை, வல்லார் - கருத்துடன் கற்கவல்லவர்கள், ஏராரும் - எல்லாநன்மைகளும் சேர்ந்த, வைகுந்தத்து - பரமபதத்திலே, இமையவரோடு - நித்யஸூரிகளோடே, இருப்பார்-ஒருகோவையா யிருக்கப்பெறுவர்.

வ்யா.—(வாராருமித்யாதி) வாரோடுசேர்ந்திருக்கைக்கு யோக்யமாயிருக்கச்செய்தே, இப்போது வெறும்புறத்திலே யிராநிற்பதானமுலையையுடையளாய், (க) விரஹத்தால்வந்த துவட்சியையுமுடையளாய், தேஹத்தில் (உ) உபேக்ஷையாலே விதேஹபுத்ரியானமை தோற்ற விருக்கிற பிராட்டியைக்கண்டு. (சீராருந்திறலநுமன்) முதலிகளெல்லாருமுண்டாயிருக்க "இவனேயிக்கார்யம் செய்யவல்லான்" என்று பெருமாள் திருவுள்ளம்பற்றி, அடையாளங்களும் சொல்லித் திருவாழிமோதிரமும் கொடுத்துவிடும்படி ஜ்ஞாநாதிகுணங்களால் பரிபூர்ணனாய், நினைத்தது முடிக்கவல்ல சக்திமானாயிருக்கிற திருவடி. (தெரிந்துரைத்தவடையாளம்) பெருமாளருளிச்செய்தபடிகளில் ஒன்றும் தப்பாமல் ஆராய்ந்து, பிராட்டிக்கு (ந) விச்வஸநீயமாக விண்ணப்பம்செய்த அடையாளங்களை. (பாராருமித்யாதி) பூமியெங்கும் நிறைந்த புகழையுடையரான ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாரருளிச்செய்தபாடலானவிவற்றை ஸாபிப்ராயமாகவல்லவர்கள். (ஏராருமித்யாதி) எல்லாநன்மைகளும்சேர்ந்த பரமபதத்திலே, "அடியரோடிருந்தமை" என்கிறபடியே - நிரந்தரபகவத்தநுபவபரரான நித்யஸூரிகளோடு ஒரு கோவையாயிருக்கப்பெறுவர். (க0)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு.—நெறியல்லி கலக்கியவாரணிமான்
சித்திரமின்மைத்த திக்குவாராருங்கதிர்.

---

ஆ திருமொழி உக-க்கு, பாட்டு-ௗகரு.

---

(க) விரஹம் - பிரிவு. (உ) உபேக்ஷை - அசட்டை. (ந) விச்வஸநீயம்-நம்பத்தக்கது.

## நாலாம்பத்து - மூதற்றிருமொழி.

அ.—(க) க்ர்ஷ்ணவதாரைகப்ரவணராய், திருவவதார ஸமய மேதுடங்கி அவ்வவதாரரஸமே அநுபவித்துக்கொண்டு போந்தவர், க்ர்ஷ்ணவதார சேஷ்டிதங்களையும் ராமாவதார சேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே அநுபவிக்கவேணுமென்னும்படியா யிருப்பதொரு அபிநிவேசம்பிறந்து,அவைதன்னை(உ)ஏகாச்ரயத்திலிட்டு அநுபவிக்கப்போகாமையாலே இரண்டுவடிவுகொண்டு ஒன்றுக்கொன்று எதிரியாகப்பேசி அநுபவித்தவநந்தரம்,ராமாவதாராநுகுணமாகவந்தவதரித்தருளினபிராட்டி,தன்னுடைய புருஷகாரத்வத்துக்கு ப்ரதாநகுணமானக்ர்பையை வெளியிடுகைக்காக"ராவணன்பிரித்தான்"என்று ஒருவ்யாஜத்தாலே லங்கையிலே யெழுந்தருள, அவ்வவதாரத்தின் மெய்ப்பாட்டாலே பெருமாள் அவள்போனவிடம் இன்னவிடமென்றறியாமல் தேடிக்கொண்டுதிரியாநிற்க, மஹாராஜரோடே உறவு செய்தவநந்தரம் அவருடைய ஸர்வபரிகரத்தையுந்திரட்டி திக்குக்கள்தோறும் தேடும்படி வகைவகையாகப் போகவிடுகிறவளவிலே, பெருமாள்,திருவடியினுடைய புத்திசக்த்யாதிகளைக்கண்டு "இவனே இக்கார்யம்செய்துமுடிக்கவல்லான்" என்று திருவுள்ளம்பற்றி, பிராட்டியைக்கண்டால் விண்ணப்பஞ்செய்யத்தக்க வடையாளங்களையுமருளிச்செய்து திருவாழிமோதிரத்தையும் கொடுத்துப்போகவிட, திருவடியும் லங்கையிலேசென்று பிராட்டியைக்கண்டு திருவடித்தொழுது, ராவணன்மாயையால்வரு மதிசங்கைதீரும்படி பெருமாளருளிச்செய்த அடையாளங்களையெல்லாம் விண்ணப்பம்செய்து, திருவாழிமோதிரத்தையும் கொடுத்து, பிராட்டிதிருவுள்ளத்தை மிகவும்உகப்பித்த ப்ரகாரத்தை அநுஸந்தித்து, அந்தஃபுரகைங்கர்யரஸத்திலுண்டான ஆசையாலே பிராட்டிக்குத் திருவடிவிண்ணப்பஞ்செய்த அடையாளங்களையும், திருவாழிமோதிரம் கொடுத்தபடியையும், அதுகண்டு பிராட்டிதிருவுள்ள முகந்தபடியையுமெல்லாம் அடைவேபேசி யநுபவித்துப்ரீதரானார் - கீழில் திருமொழியிலே; ராமக்ர்ஷ்ணவதாரங்களோடு அவதாராந்தரங்களோடு வாசியற தர்மைக்யத்தாலே எல்லாம் ஏகாச்ரயமாகையாலே "இப்படியிருக்கிறவிஷயத்தைக் கண்ணாலேகண் டநுபவிக்கவேணும்" என்று தேடுகையாகிறவிது தமக்கு ஒருபுடை செல்லுகிறபடியையும், மாநஸாநுபவத்தினுடைய கனபுரட்சியாலே அவ்விஷயந்தன்னை ஸாக்ஷாத்ஸ்பஷ்டமாகக் கண்டதாகவே ஒருபுடை தோற்றியிருக்கிறபடியையு மநுஸந்தித்து, அவையிரண்டையும், (௩) அவ

(க) க்ர்ஷ்ணவதாரைகப்ரவணராய்-க்ர்ஷ்ணவதாரமொன்றிலேயே அன்புடையராய். (உ) ஏகாச்ரயம் - ஒன்றையேயிடமாகவுடையது. (௩) அவதாராதிவிசிஷ்டன்-அவதாரத்தோடுகூடினவன்.

தாராதிவிசிஷ்டனாக ஸர்வேச்வரனைக் கண்ணாலே காணவேணுமென்று தேடித்திரிகிறார் சிலரும், அப்படிதேடுகிறிகோளாகில் "அவனை உள்ளபடிகண்டாருளர்" என்று சொல்லுகிறார் சிலருமாகக்கொண்டு, தம்மை இரண்டுவகையாக வகுத்துநின்றுபேசி இனியராகிறார் - இத்திருமொழியில். "நாடுதிரேல்" என்றும், "கண்டாருளர்" என்றும் பன்மையாகவருளிச்செய்தது - * கட்கண்ணாற்காண்கையில் அபேக்ஷாரூபஜ்ஞாநவ்க்திகளும், *உட்கண்ணால்கண்டு அறிவூற்றத்தாலே (க) பாஹ்யாநுபவமும் ஸித்தித்ததென்று தோற்றும்படியான ஜ்ஞாநவ்யக்திகளும் பலவுமுண்டாகையாலே. ... *

மூ.—கதிராயிரமிரவிகலந்தெறித்தாலொத்தநீண்முடியன்
எதிரில்பெருமையிராமனையிருக்குமிடநாடுதிரேல்
அதிருங்கழற்பொருதோளிரணியனாகம்பிளந்தரியாய்
உதிரமளைந்தகையோடிருந்தானையுள்ளவாகண்டாருளர்.

ப-ரை.—கதிர் - எண்ணில்லாத கிரணங்களையுடைய, ஆயிரமிரவி - ஆயிரம் ஆதித்யர்கள், கலந்து - சேர்ந்து, எறித்தாலொத்த - ப்ரகாசித்தாற்போலேயிருக்கும் தேஜஸ்ஸையுடைய, நீள் - உயர்ந்த, முடியன் - திருவபிஷேகத்தை யுடையனாய், எதிரில் - ஒப்பில்லாத, பெருமை - பெருமையையுடைய, இராமன் - சக்ரவர்த்தித்திருமகன், இருக்குமிடத்தை-எழுந்தருளி யிருக்குமிடத்தை, நாடுதிரேல் - தேடுகிறிகோளாகில், சொல்லுகிறேன்;—அதிரும் - சப்தியாநின்றுள்ள, கழல் - வீரக்கழலையும், பொரு - போர்செய்யப்பதைக்கிற, தோள்- தோள்களையு முடைய, இரணியன் - ஹிரண்யனுடைய, ஆகம் - மார்வை, அரியாய் - ந்ருஸிம்ஹரூபியாய்க்கொண்டு, பிளந்து-இருபிளவாக்கி, கூருகிராலே குடைந்துகுடலைப்பிடுங்கி யெடுக்கையாலே, உதிரமளைந்த—, கையோடு - கையோடே, இருந்தானை - சீற்றந்தோற்றவிருந்தவனை, உள்ளவா - உள்ளபடி, கண்டாருளர் - கண்டவர்களுளர்.

வ்யா.—முதற்பாட்டு. (கதிரித்யாதி) ஸஹஸ்ரகிரணங்களான ஆயிரமாதித்யர்கள் சேரப்ரகாசித்தாற்போலேயிருக்கும் தேஜஸ்ஸையுடைத்தாய் (௨) ஆதிராஜ்யஸூசகமான ஒக்கத்தையுடைத்தான திருவபிஷேகத்தையுடையவன். இத்தால் - ராவணவதம் பண்ணி ஸ்ரீவிபீஷணாழ்வானை லங்கைக்கு ராஜாவாக அபிஷேகஞ்செய்து பிராட்டியும்தாமுமான சேர்த்தியோடே திருவயோத்யையிலே யெழுந்தருளித் திருவபிஷேகம்பண்ணியிருந்த படியைச்சொல்லுகிறது. (எதிரில்பெருமையிராமனை) ரூபகுணங்களாலும் ஆத்மகுணங்களாலும் அதிமாநுஷசேஷ்டிதங்களாலும் ஒப்பில்லாத வைபவத்தையுடையனாய், எல்லாருடைய நெஞ்சுகளையும் ஸ்வவைலக்ஷ

(க) பாஹ்யாநுபவம் - கண்ணாற்கண்டநுபவிக்கை. (௨) ஆதிராஜ்யஸூசகம் - அரசுத்தலைமைத்தன்மைக்குறிப்பு.

ஸயத்தாலே ரமிப்பிக்கும் ஸ்வபாவதையாலே “ராமன்” என்னும் திருநாமத்தையுடையவனை. (இருக்குமிடம்நாடுதிரேல்) எழுந்தருளியிருக்குமிடம் தேடுகிறீகோளாகில்.

(அதிருங்கழல்பொருதோளிரணியனைகம்பிளந்தரியாய்) ப்ரஹ்மலோகபர்யந்தமாக எல்லாரையும் தன்கீழாக்கி ஈரரசறவிருந்தவனுகையாலே, த்வநியாநின்றுள்ள வீரக்கழலையுடையனாய், தனக்கு ஒரெதிரியில்லாமையாலே யுத்தகண்டூதி வர்த்தியாநின்றுள்ள தோள்களையுடையனாயிருந்துள்ள ஹிரண்யனுடைய வரபலபுஜபலங்களாலே பூண்கட்டியிருந்த மார்வை, தேவர்கள் கொடுத்த வரத்துக்கு விரோதம் வாராதபடியாக நரஸிம்ஹ ரூபத்தைக்கொண்டு இருபிளவாக்கி. (உதிரமளைந்தகையோடிருந்தானை) பிளந்தவளவில் நில்லாதே உதிரத்தையளையும் “வெஞ்சினத்தரி” என்கிறபடியே மிகுந்த சீற்றத்தாலே அவனுடைய சரீரமெங்கும் *குருதிகுழம்பியெழும்படி கூருகிராலே குடைந்து குடலைப்பிடுங்கியெடுக்கையாலே, உதிரமளைந்த கையோடே சீற்றந்தோற்றவிருந்தவனை. (உள்ளவாகண்டாருளர்) (௧) ஸம்சயவிபர்ய யரஹிதமாக உள்ளபடி கண்டாருளர். உள்ளவாகாண்கையாவது - அவதாரப்ரயுக்தமான ஆகாரங்களையிட்டு வேறுபடக்காணுதே, “ராமாவதாரமாய் ராவணவதம் பண்ணினவனும், ந்ருஸிம்ஹாவதாரமாய் ஹிரண்யவதம் பண்ணினவனும் ஒருவனே” என்று வஸ்துவினுடையபடியறிந்துகாண்கை. முன்பு ஹிரண்யனனவன்றானேயிறே பின்பு ராவணனாய்ப்பிறந்தவன். ப்ரஹ்மாதிகள்பக்கல் ஹிரண்ய ராவணர்களிருவரும் கொண்டவரங்களுக்கு விரோதம் வாராதபடி நிரஸிக்க வேண்டுகையாலேயிறே ரூபபேதம் கொள்ளவேண்டிற்று. அதாவது - “தேவாதி சதுர்விதஜாதியி லொன்றாலும் படக்கடவேனல்லேன்” என்றுவரங்கொள்ளுகையாலே நரஸிம்ஹமாக வேண்டிற்று - அங்கு; “தேவாதிகள் ஸுரர்கள் ராக்ஷஸர் முதலானரொருவராலும் படக்கடவேனல்லேன்” என்று வரங்கொள்ளுகையாலும், மநுஷ்யரை ஒன்றாக கணியாமற்போருகையாலும், மநுஷ்யனாய்நின்று கொல்லவேண்டிற்று - இங்கு; ஆகையால், கார்யாநுகுணமாகக்கொண்ட ரூபபேதமாத்ரமேயாய், ப்ரகாரி ஒன்றேயாகையாலே இந்த ஐக்யமறிந்து காண்கையாயிற்று - உள்ளபடிகாண்கையாவது. (௧)

அ.—இரண்டாம்பாட்டு. (நாந்தகமித்யாதி) கீழ்ப்பாட்டிலே ஈச்வரத்வம் தோற்றிற்றிறே; “ஈச்வரன்” என்றறுதியிட்டால் பின்னை ஸ்ரீபஞ்சாயுத'தரத்வம் சொல்லலாமிறே: ராவணவதத்தளவுமிறே

(௧) ஸம்சயவிபர்யயம் - ஸந்தேகமும், ஒன்றைமற்றொன்றாக நினைக்கையும்.

ஈச்வரத்வந்தான் மறைக்கவேண்டுவது ; ஆகையாலிறே, ராவணவ தாநந்தரம் வந்தப்ரஹ்மாதிதேவர்கள், "பவாந் நாராயணோ தேவ ஶ்ரீமாம்ஶ் சக்ராயுதோ விபு:" "[illegible]" என்றது. பின்னையும், "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" "[illegible]" என்று இவரருளிச்செய்தது-முன்புநின்றநிலையில் புரையறுதிதோற்றுகைக்காகவிறே.

மூ.—நாந்தகஞ்சங்குதண்டுநாணொலிச்சார்ங்கந்திருச்சக்கரம்
ஏந்துபெருமையிராமனையிருக்குமிடநாடுதிரேல்
காந்தண்முகிழ்விரற்சீதைக்காகிக்கடுஞ்சிலைசென்றிறுக்க
வேந்தர்தலைவன்சநகராசன்றன்வேள்வியிற்கண்டாருளர்.

ப-ரை.—நாந்தகம்-ஸ்ரீநந்தகமென்னும் திருக்குத்துடைவாளையும், சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், தண்டு - ஸ்ரீகௌமோதகியென்னும் கதையையும், நாணொலி - நாணொலியையுடைய, சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கமென்னும்வில்லையும், திருச்சக்கரம் - திருவாழி யாழ்வானையும், ஏந்து - தரித்துக்கொண் டிருக்கிற, பெருமை - பெருமையையுடைய, இராமனை இருக்குமிடம் நாடுதிரேல்—, காந்தள் - செங்காந்தளினுடைய, முகிழ் - முகிழிதழ்போலிருக்கிற, விரல் - விரற்களையுடைய, சீதைக்காகி - பிராட்டிக்காக, வேந்தர்தலைவன் - ராஜாக்களுக்கெல்லாம் தலைவனான, சநகராஜன்றன்-ஸ்ரீஜநகராஜனுடைய, வேள்வியில்-யாகத்திலே, விச்வாமித்ரமுனி அழைத்துக்கொண்டுசெல்ல - சென்று—, கடுஞ்சிலை - வலியவில்லை, இறுக்க - முறிக்க, கண்டாருளர் - கண்டவர்களுளர்.

வ்யா.—(நாந்தகம்) திருக்கையில் பிரியாதேயிருந்து எதிரிகளை அறச்செய்யும் திருக்குத்துடைவாள். (சங்கு) வாய்கரையிலே யிருந்து தன்னோசையாலே எதிரிகளை முழுக்காயாக அவியப்பண்ணும் ஸ்ரீபாஞ்சஜந்யம். (தண்டு) கைவிடாமலிருந்து எதிரிகளை நெரியவடிக்கும் ஸ்ரீகதை. (நாணொலிச்சார்ங்கம்) ஜ்யாகோஷஸஹிதமாய் எதிரிகள் மேலே சரவர்ஷத்தைவர்ஷிக்கும் ஸ்ரீசார்ங்கம். (திருச்சக்கரம்) *கருதுமிடம்பொருது கைவந்திருக்கும் திருவாழி. (ஏந்துபெருமையிராமனை) இவற்றை யழகுக்குடலாகவும விரோதி நிரஸநத்துக்குடலாகவும் தரித்துக்கொண்டிருக்கும் பெருமையையுடையனாய், இவைமிகையாம்படி தன் வடிவழகாலே யெல்லாரையும் ரமிப்பிக்கவல்லவனை. (இருக்குமிடம் நாடுதிரேல்) இந்த சௌர்யாதிகளும் ஸௌந்தர்யாதிகளும் அவனிருக்குமிடத்தேசென்று காணவேணுமென்று, இருக்குமிடம் தேடுகிறிகோளாகில். (காந்தளித்யாதி) செங்காந்தள் முகிழிதழ்போலேயிருக்கிற திருவிரற்களையுடைய பிராட்டிக்காகி. (கடுஞ்சிலைசென்றிறுக்க) விச்வாமித்ரமஹர்ஷி கொடுசெல்லச்சென்று, ஔத்ரமாய் ஒருவரால் எடுக்கவும் வளைக்கவும் அரிது என்றுகிடந்த வலியவில்லைமுறிக்க.

கக. கடுமை - திண்மை. (வேந்தரித்யாதி) ராஜதர்மத்தோடே தத்த்வஜ்ஞாநங்களையு முடையவனுகையாலே ராஜாக்களுக் கெல்லாம்தலைவனுன ஸ்ரீஜநகராஜனுடைய யாகத்திலே கண்டாருளர்.

இங்கு, "இராமனைநாடுதிரேல் - வேள்வியில்கண்டாருளர்" என்கிறதில் வேறுபாடுதோன்ருதாற்போலேயிறே - "இராமனைநாடுதிரேல் - உதிரமளைந்தகையோடிருந்தானை - கண்டாருளர்" என்கிறதும். (௨)

மூ.—கொலையானைக்கொம்புபறித்துக்கூடலர்சேனைபொருதழியச்
சிலையான்மராமரமெய்ததேவனைச்சிக்கனநாடுதிரேல்
தலையாற்குரக்கினந்தாங்கிச்சென்று தடவரைகொண்டடைப்ப
அலையார்கடற்கரைவீற்றிருந்தானையங்குத்தைக்கண்டாருளர்.

ப-ரை.—கொலை - ஆளைக்காணில் கொல்லுமதான, யானை - குவலயாபீடமாகிற ஆனையினுடைய, கொம்பு - கொம்பை, பறித்து - பறித்தவனுய், கூடலர் - ஜநஸ்தாநத்திலுள்ள ராக்ஷஸருடைய, சேனை - ஸேனையானது, அழிய - அழியும்படி, பொருது - பொருதவனுய், சிலையால் - வில்லாலே, மராமரம்-மராமரங்களை, எய்த - மறுபாடுருவவெய்தவனுய், தேவனை - தெய்வத்தன்மையுடையனுனவனை, சிக்கன - திண்ணிதாகவிருந்து, நாடுதிரேல் - தேடுகிறீர்களாகில்; குரக்கினம் - ஸ்ரீவாநரவீரருடைய திரள்களானவை, தலையால்தாங்கி - சிரஸா வஹித்துக்கொண்டு, சென்று —, தடவரைகொண்டு-பெரியமலைகளைக்கொண்டு, அடைப்ப - அணையாகவடைக்க, அலைஆர் - அலைமிக்கிருந்துள்ள, கடல்கரை - கடற்கரையிலே, அவர்கள்செய்கிற அடிமையைப் பார்த்துக்கொண்டு, வீற்றிருந்தானை - பெருமைதோற்ற எழுந்தருளியிருந்தவனை, அங்குத்தை - அந்தஸ்தலத்திலே, கண்டாருளர் - கண்டவர்களுளர்.

வ்யா.—மூன்ரும்பாட்டு. (கொலையானைகொம்புபறித்து) "கவளக்கடாக்களிறு" என்கிறபடியே துர்த்ரவ்யங்களைப்பருகுவித்துப் பிச்சேற்றி மதஜலமொழுகும்படி நிறுத்துகையாலே, ஆளைக்காணில் கொல்லுமதான குவலயாபீடமாகிற ஆனையினுடைய கொம்புகளை அநாயாஸேந பறித்து. (கூடலர்சேனைபொருதழிய) மஹர்ஷிகளை நலிகையாலே சத்ருக்களான ஜநஸ்தாந வாஸிகளான ராக்ஷஸருடைய ஸேனையானது (க) விசேஷம் சொல்லவும் ஒருவரில்லாதபடி அழியும்படியாகப் பொருது. (சிலையால் மராமரமெய்ததேவனை) "సుగ్రీవశ్శ్రద్దధాత్యాసి నిత్యం వీర్యేణ రాఘవే" "ஸுக்ரீவஶ்ஶ்ரத்ததாஸி நித்யம் வீர்யேண ராகவே" என்கிறபடியே மஹாராஜருடைய அதிசங்கையைத் தீர்க்கைக்காக வில்லாலே மராமரங்களை மறுபாடுருவஎய்து, அவரதிசங்கையைத்தீர்த்த ஹர்ஷத்தாலே திருமேனியிற்பிறந்த புகரையுடையவனை. (சிக்கனநாடுதிரேல்) "அதொரு வ்யக்தி, இதொரு வ்யக்தி" என்று பிரித்து ப்ரதிபத்திபண்ணுதே, தர்மியொன்றுஎன்றே அத்யவஸித்து அவனிருந்தவிடம் தேடுகிறீர்களாகில்.

(க) விசேஷம் - வ்ர்த்தாந்தம்.

(தலையித்யாதி) ஸ்ரீவாநரவீரர்களுடைய திரள்களானவை "பெருமாள்திருவடிகள் படப்புகுகிறதன்றோ" என்னும் கௌரவ புத்தியாலே சிரஸாவஹித்துக்கொண்டுசென்று, பெரியமலைகளைக் கொண்டு கடலை யூடறுத்து அணையாகவடைக்க. (அலையித்யாதி) அலைமிக்கிருந்துள்ள கடற்கரையிலே அவ்வலைநீர் தெறிக்கும்படி ஆஸந்நமாக அவர்கள்செய்கிற அடிமையைப்பார்த்து உகந்துகொண்டு அவர்களை அடிமைகொள்ளுகையால் வந்த (க) வ்யாவ்ர்த்தி தோற்ற எழுந்தருளியிருந்தவனை அந்தஸ்தலத்திலே கண்டவர்களுளர். (௩)

மூ.—தோயம்பரந்தநடுவுசூழலிற்றொல்லைவடிவுகொண்ட
மாயக்குழவியதனைநாடுறில்வம்மின்சுவடுரைக்கேன்
ஆயர்மடமகள்பின்னைக்காகியடல்விடையேழினையும் [ர்.
வீயப்பொருதுவியர்த்துநின்றானைமெய்ம்மையேகண்டாருள

ப-ரை.—பரந்த - பரவின, தோயம் - ஜலத்தினுடைய, நடுவு - மத்யத்திலே, ரக்ஷ்யவர்க்கம் ப்ரளயத்திலழியாதபடி ரக்ஷிக்கைக்கீடான, சூழலின் - உபாயத்தாலே, தொல்லை - பழையதான, வடிவு-தன்திருமேனியை, கொண்ட-சுருக்கிக்கொண்ட, மாயம் - ஆச்சர்யத்தையுடைய, குழவியதனை - அந்தக்குழவியை, நாட - தேடுகையிலே, உறில் - பொருந்துவீர்களானால், வம்மின்-வாருங்கோள், சுவடு - உங்களுக்கு ஓரடையாளம், உரைக்கேன் - சொல்லுகிறேன்; ஆயர் - கோபரான ஸ்ரீகும்பருடைய, மகள் - பெண்பிள்ளையாய், மடம்-மடப்பத்தையுடையளான, பின்னைக்காகி - நற்பின்னைப்பிராட்டிக்காக, அடல்-போர்செய்ய எதிர்த்துவாராநின்றுள்ள, விடையேழினையும் - ரிஷபங்களேழையும், வீய - முடியும்படியாக, பொருது—, வியர்த்துநின்றானை - அந்தவருத்தத்தாலே குறுவெயர்ப்பரும்பினவடிவும் தானுமாய்நின்றவனை, மெய்ம்மையே - உண்மையாகவே, கண்டாருளர் - கண்டாருண்டு.

வ்யா.—நாலாம்பாட்டு. (தோயம்பரந்த நடுவுசூழலில்) நடுவு சூழலில் தோயம்பரந்தபோது. அதாவது - சுற்றும்ஸமுத்ரமாய், அதுக்குநடுவே வ்ர்த்தாகாரமாயிருக்கிற பூமியெங்கும் ஜலத்தாலே வ்யாப்தமானகாலத்திலே யென்கை ; "பரந்த" என்கிறதுக்குமேலே, "போது" என்கிற வித்தனையும் அத்யாஹார்யம். அன்றிக்கே, தோயம்பரந்தநடுவு ஜலம்பரந்தநடுவே; அதாவது-பரந்த ஜலத்தினுடைய மத்யத்திலே யென்றபடி. (சூழலில் தொல்லைவடிவுகொண்ட) ரக்ஷ்யவர்க்கம் ப்ரளயத்திலே யழியாதபடி ரக்ஷிக்கைக்கீடான விரகாலே, பழையதான (உ) அப்ராக்ர்த விக்ரஹத்தைச் சுருக்கிக்கொண்ட. மேல், "குழவி" என்கையாலே வடிவைச் சுருக்கிக்கொண்டஎன்று (௩) நியமித்துச் சொல்லவேணும். (மாயமித்யாதி)

(க) வ்யாவ்ர்த்தி - வேறுபாடு. (உ) அப்ராக்ர்தவிக்ரஹம் - திவ்யமங்கள விக்ரஹம். (௩) நியமித்து - நிஷ்கர்ஷித்து.

சிறுவடிவைக்கொண்டு பெரியலோகங்களை வயிற்றிலேவைத்து ஒரு பவனான ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்யத்தால்வந்த ஆச்சர்யத்தையுடைய அந்தக்குழவியை. "ముగ్ధస్మిత వటదళేశయితోసితన్వా తన్వాజగన్తి బిభృషే సపదా సమేవ । ఐశ్వర్యమా స్తవతు శ్రీమత్యద్భుతవ్యాం అవ్యాజతమ ప్రథయసేమహావతీర్ణః" "ஶாஶ்ஶிஶாஸ்யஜெஶயிதொவஸிதந்நா தந்நாஜகந்தி பிப்ருஷெ ஸவிகாஸமெவ வைஶ்வர்யமேதத் த்வத்ரஜயேகிஞ்ச ஸக்திகரீதவ்யாம் சவ்யாஜதவ யயஸேகிஹாவதீர்ண:" என்றுணிறே-ஆழ்வான். "குழவி" என்கிறதுக்கிடாக - "அதனை" என்கிறது. அவனையென்றபடி. (நாடுதில்) தேடுகையிலே அத்யவஸிக்கில். (வம்மின் சுவடுரைக்கேன்) வாருங்கோள் உங்களுக்கு ஓரடையாளம் சொல்லுகிறேன். சுவடாவது - அகடிதகடநாஸாமர்த்ய ஸூசகமான வ்யாபாரம். அதாவது - அஸுராவிஷ்டமான ரிஷபங்களேழையும் ஒருகாலே ஊட்டியாக நெரித்துப்பொகட்டதிறே.

(ஆயர்மடமகள் பின்னைக்காகி) கோபரான ஸ்ரீகும்பருடைய பெண்பிள்ளையாய், ஆத்மகுணமான மடப்பத்தையுடையளான நற்பின்னைப்பிராட்டியை லபிக்கைக்காக. (அடல்விடையேழினையும்) அஸுராவிஷ்டமாய் யுத்தோந்முகமாய் நின்ற ரிஷபங்களேழையும். (வியப்பொருது வியர்த்துநின்றானை) முடியும்படியாகப்பொருது, அந்த ஆயாஸத்தாலே குறுவியர்ப்பரும்பின வடிவும் தானுமாய் நின்றவனை. (மெய்ம்மையேகண்டாருளர்) உண்மையாகவே அவ்விடத்திலே கண்டவர்களுண்டு. இத்தால் - வடதளசயநாபதாநத்துக்கும் க்ருஷ்ணாவதாரத்துக்கு முண்டான தர்ம்யைக்யம் சொல்லப்பட்ட தாய்த்து. "வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுள்" என்றும், "ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்" என்றும் இவ்வைக்யந்தான் கீழும் பலவிடங்களிலும் சொல்லப்பட்டதிறே. (ச)

மூ.—நீரேறுசெஞ்சடைநீலகண்டனுநான்முகனுமுறையால்
சீரேறுவாசகஞ்செய்யநின்றதிருமாலைநாடுதிரேல்
வாரேறுகொங்கையுருப்பிணியைவலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றிச்சேனைநடுவுபோர்செய்யச்சிக்கனக்கண்டாருளர்.

ப-ரை.—நீர் - திருவுலகளந்தருளுகிறபோது ப்ரஹ்மா திருவடிவிளக்கின ஸ்ரீபாததீர்த்தம், ஏறு - தரித்த, செம் - சிவந்த, சடை - ஜடையையுடைய, நீலகண்டனும் - கறுத்தமிடற்றையுடைய் ருத்ரனும், நான்முகனும் - எம்பெருமானை ஸ்தோத்ரம்பண்ணுகைக்கிடாக நான்குமுகங்களையுடைய ப்ரஹ்மாவும், முறையால்-அவன்சேஷி நாம்சேஷபூதர் என்கிறமுறையாலே, சீரேறு-சீர்மைமிக்க வசநங்களைக்கொண்டு, வாசகம் செய்ய - ஸ்தோத்ரம்பண்ணும்படி, நின்ற—, திருமாலை - ஸ்ரீய:பதியை, நாடுதிரேல் - தேடுகிறீர்களாகில்; வாரேறு - கச்சணிந்த, கொங்கை - திருமுலைத்தடத்தையுடைய, உருப்பிணி - ருக்மி

ணிப்பிராட்டியை, வலிய - பலவந்தமாக, பிடித்துக்கொண்டு—, தேரேற்றி - தேரிலேயேற்றி, சேனைநடுவு - ருக்மனுலெடுத்துவிடப்பட்டஸேனைக்கு நடுவே நின்று, போர்செய்ய - யுத்தம்பண்ண, சிக்கன - திடமாக, கண்டாருளர் - அந்தமணக்கோலத்தையும் வீரக்கோலத்தையும் கண்டவர்களுளர்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (நீரேறுசெஞ்சடை நீலகண்டனும்) "దస్యుః శితికంఠస్య దధార శిరసా హరః । పావనార్థం జటామధ్యే యోగ్యత్వేప్యవధారణాత్" "த³ஸ்யு: ஶிதிகண்ட²ஸ்ய த³தா⁴ர ஶிரஸா ஹர: । பாவநார்த²ம் ஜடாமத்⁴யே யோக்³யத்வேப்யவதா⁴ரணாத்" என்கிறபடியே - திருவுலகளந்தருளுகிறபோது, ப்ரஹ்மா திருவடிவிளக்கின ஜலம்விழுகிறதைக்கண்டு, (க) பாவநார்த்தமாக அத்தை சிரஸ்ஸாலேதரிக்கையாலே அந்தஜலத்தோடே கூடியிருப்பதாய், (உ) சிரகாலம் தபஸ்பரனாய்ப் (௩) பேணுதலற்றிருக்கையாலே சிவந்திருக்கிற ஜடையையுடையனாய். "నారాయణాజ్ఞయా తేన నీలకణ్ఠత్వమాప్యయాత్" "நாராயணாஜ்ஞயா தேந நீலகண்ட²த்வமாப்யயாத்" என்கிறபடியே (௪) ஸமுத்ரமதந ஸமயத்தில் முந்துறக்கிளம்பினதீவ்ரமானவிஷத்தை "நீஇத்தை க்ரஸி" என்று ஸர்வேச்வரன் நியமிக்க (௫) க்ரஸிக்கையாலும், அதுதான் ஹ்ருதயத்திலே கருடத்யாநமும் சிரஸ்ஸிலே சந்த்ரகலையுமாகையாலே கண்டத்தளவிலே நின்று விடுகையாலும் கறுத்திருந்துள்ள கண்டத்தை யுடையனான ருத்ரனும். (நான்முகனும்) ஸ்தோத்ரம்பண்ணுகைக்கீடான பலமுகத்தையுடைய ப்ரஹ்மாவும். (முறையால் சீரேறுவாசகம்செய்யநின்ற) ப்ரஹ்மபாவனை தலையெடுத்து, தான் சேஷியும் தாங்கள் சேஷபூதருமானமுறையால், தன்னுடைய குணங்களால் ப்ரசுரமான வசநங்களைக்கொண்டு ஸ்தோத்ரம்பண்ணும்படி நின்ற. (திருமாலை நாடுதிரோல்) (௬) தத்ததபீஷ்டப்ரதனை ஸ்ரீய:பதியை, அவனும் அவளுமான சேர்த்தியோடே காணவேணும் என்று தேடுகிறிகோளாகில்.

(வாரேறுகொங்கை யுருப்பிணியை) "க்ருஷ்ணனுக்கு போக்யமான விவை பிறர்கண்படவொண்ணாது" என்று, "செங்கச்சுக்கொண்டு கண்ணாடையார்த்து" என்கிறபடியே கச்சாலே மறைத்துக்கொண்டிருக்கிற திருமுலைத்தடங்களையுடைய ருக்மிணிப்பிராட்டியை. (வலியப் பிடித்துக்கொண்டு தேரேற்றி) பந்துக்களையுமுடன் படுத்தி * கண்ணாலமும் கோடித்துக் கைப்பிடிப்பதாகத் திண்ணாந்

(க) பாவநம் - பரிசுத்தம். (உ) சிரகாலம் - நெடுங்காலம். (௩) பேணுதல் - ஆதரித்தல். (௪) ஸமுத்ரமதநம் - பாற்கடலைக்கடைகை. (௫) க்ரஸிக்கை-பாநம்பண்ணுகை. (௬) தத்ததபீஷ்டப்ரதன்-அவரவர்கள்விரும்பியதைக்கொடுக்குமவன்.

திருந்த சிசுபாலன் (க) லஜ்ஜாவிஷ்டனாய் அண்ணாந்திருக்கும்படியாக (உ) ஆரூடிவருகிற ஸமயத்திலே சென்று, அவளுக்கும் தனக்குமுண்டான மநப்பொருத்தமே ஹேதுவாக, பந்துக்களுடன்படவன்றிக்கே பலத்திலே பிடித்துக்கொண்டு தேரிலேயேற்றி. (சேனைநடுவுபோர்செய்ய) ருக்மிணிப்பிராட்டி தமயனானருக்மன் இந்த பரிபவம் பொறாமையாலே அநேக ராஜாக்களும் தானும் பருஸேனையோடேவந்து போகாதபடி வழிகட்டிச் சூழ்ந்துகொள்ள, அந்த ஸேனைக்குநடுவே நின்று அவர்களோடே யுத்தம்பண்ண. (சிக்கனக் கண்டாருளர்) அந்த மணக்கோலத்தையும் வீரக்கோலத்தையும் த்ர்டமாகக் கண்டவர்களுளர். (ரு)

மூ.—பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்சப்புணர்முலைவாய்மடுக்க
வல்லானைமாமணிவண்ணனைமருவுமிடநாடுதிரேல்
பல்லாயிரம்பெருந்தேவிமாரொடுபௌவமெறிதுவரை
எல்லாருஞ்சூழச்சிங்காசனத்தேயிருந்தானைக்கண்டாருளர்.

ப-ரை.—பொல்லா - கோரரூபமான, வடிவுடை - வடிவையுடைய, பேய்ச்சி - பூதனையானவள், துஞ்ச - முடியும்படியாக, புணர் - தன்னில்தான்சேர்ந்திருந்துள்ள, முலை - முலையிலே, வாய்மடுக்கவல்லானை - வாயைமடுத்து உண்ணவல்லனாய், மாமணி - நீலரத்நம்போன்ற, வண்ணன் - வடிவை யுடையவன், மருவும்-திருவுள்ளம்பொருந்திவர்த்திக்கிற, இடத்தை-ஸ்தலத்தை, நாடுதிரேல்-தேடுகிறீர்களாகில்; பல்லாயிரம்பெருந் தேவிமாரொடு - பதினாறாயிரந் தேவிமாரோடேகூட, பவ்வம் - ஸமுத்ரத்திவலைகள், எறி - வீசாநின்றுள்ள, துவரை - ஸ்ரீமத்வாரகையிலே, எல்லாரும்-தேவிமாரெல்லாரும், சூழ்-சுற்றுஞ் சூழ்ந்துநிற்க, சிங்காசநத்து - ஸிம்ஹாஸநத்திலே, இருந்தானை - எழுந்தருளியிருந்தவனை, கண்டார் - அச்சமயத்திலேகண்டவர்கள், உளர் - உண்டு.

வ்யா.—ஆறும்பாட்டு. (பொல்லாவடிவுடைப் பேய்ச்சிதுஞ்ச) வரண்டுவளைந்து நரம்பும் எலும்பும் தோன்றும்படியிருக்கையாலே பொல்லாதானவடிவையுடைய பேய்ச்சியானவள் முடியும்படியாக. (புணர்முலைவாய்மடுக்கவல்லானை) அந்தவடிவைமறைத்து "பெற்ற தாய்போல்வந்தபேய்ச்சி" என்கிறபடியே யசோதைப்பிராட்டியோடொத்த வடிவைக்கொண்டுவருகையாலே தன்னில்தான்சேர்ந்திருந்துள்ளமுலையிலே, அவள் முலைகொடாவிடில் தரியாதாளாய்க்கொண்டு "முலைப்பாலுண்" என்றுகொடுத்தாற்போலே, தானும் முலையுண்ணாவிடில் தரியாதானாய்க்கொண்டு பெரிய (ங) அபிநிவேசத்தோடே வாயைமடுத்து உண்ணவல்லவனை. "உள்ளத்தினுள்ளேயவளையுறநோக்கி" என்கிறபடியே வருகிறபோதே அவள்க்ர்த்ரிமமெல்லாம் திருவுள்ளத்திலே ஊன்றதர்சித்திருக்கச்செய்தே, அவள்

(க) லஜ்ஜாவிஷ்டனாய் - வெட்கமுடையனாய். (உ) ஆரூடிவருகிற - மணக்கோலமாய்வருகிற. (ங) அபிநிவேசத்தோடே - ஊற்றத்தோடே.

தாயாகவேயிருந்து முலைகொடுத்தாற்போலே, தானும் பிள்ளையாக வேயிருந்து முலையுண்டு அவளைமுடித்தஸாமர்த்யத்தைச் சொல்லு கிறது-வல்லானையென்று. (மாமணிவண்ணனை) "விடப்பாலமுதா வதுமுசெய்திட்ட" என்கிறபடியே-அவளுடையவிஷப்பாலை அம்ர்த மாகவமுதுசெய்து அவளைமுடித்து, ஜகத்துக்கு சேஷியானதன்னை நோக்கிக்கொடுக்கையாலே, நீலரத்நம்போலே உஜ்வலமானதிருமே னியையுடையனுயிருந்தவனை. (மருவுமிடம்நாடுதிரேல்) திருவுள் ளம்பொருந்தி வர்த்திக்கிறஸ்தலம் தேடுகிறிகோளாகில்.

(பல்லாயிரம்பெருந்தேவிமாரொடு) நரகவதாநந்தரம் கொண் டுவந்து பாணிக்ரஹணம் பண்ணப்பட்டவர்களாய், ஒரொருத்தரே அத்யந்த விலக்ஷணைகளாயிருக்கும் பதினாறாயிரந் தேவிமாரோடே. ஆயிர மிரண்டாயிர மன்றிக்கே, பதினாறாயிர முண்டாகையாலே - "பல்லாயிரம் என்கிறது. (பவ்வமெறிதுவரை) க்ரமஹாரமாம்படி ஸமுத்ரத்தின்திவலைகள் வீசாநிற்கும் ஸ்ரீமத்வாரகையிலே. (எல் லாரு மித்யாதி) தேவிமாரெல்லாருஞ்சூழ ஸிம்ஹா ஸநத்திலே ரஸோத்தரனுயெழுந்தருளியிருந்தவனை அவ்விருப்பிலேகண்டவர்க ளுளர். (௬)

மூ.—வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்த்திருச்சக்கரமேந்துகையன்
உள்ளவிடம்வினவிலுமக்கிறைவம்மின்சுவடுரைக்கேன்
வெள்ளைப்புரவிக்குரக்குவெல்கொடித்தேர்மிசைமுன்புநின்று
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்கைசெய்யக்கண்டாருளர்.

ப-ரை.—வெள்ளை - வெண்மையையுடையதாய், "அநுபவகைங்கர்யங்க ளில் ருசியுடையார்வாருங்கோள்" என்று விளி-தன்த்வநியாலேஅழையாநிற்கிற, சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், வெம் - வெவ்விதான, சுடர் - சுடரையுடைய, திருச்சக்கரம் - திருவாழியையும், ஏந்து - தரித்துக்கொண்டிருக்கும், கையன்- திருக்கைகளையுடையவன், உள்ளவிடம்-வர்த்திக்கிறஸ்தலத்தை, வினவில்-கேட் கிறிகோளாகில், உமக்கு - உங்களுக்கு, அவன் வர்த்திக்கிறவிடத்துக்கு, இறை சுவடு - அற்பமடையாளம், உரைக்கேன் - சொல்லுகிறேன்; அர்ஜுநனுடைய, வெள்ளை - வெளுத்த, புரவி - புரவிபூண்டிருப்பதாய், குரக்கு - வாநரமான, வெல்கொடி - வெற்றிக்குடையை புடைத்தாயிருக்கிற, தேர்மிசை - தேரின் மேலே, முன்புநின்று - அவனுக்குஸாரதியாய் முன்னேநின்று, படை - ஸைந்ய த்துக்கு, கள்ளத்துணையாகி - க்ர்த்ரிமத்துணையாய், பாரதம் - பாரதயுத்தத்தை, கைசெய்ய - கையுமணியுமாய்வந்துநடத்த, கண்டார் - அந்தஸமயத்திலே கண் டவர்கள், உளர் - உண்டு.

வ்யா.—ஏழாம்பாட்டு. (வெள்ளைவிளிசங்கு) ச்யாமளமான திருமேனிக்கு (க) பரபாகமான வெண்மையையுடைத்தாய், அநுப வகைங்கர்யங்களில் ருசியுடையார் வாருங்கோள் என்று தன்த்வநியா

(க) ப்ரபாகமான - நிறங்கொடுக்குமதான.

லே அழையாநிற்கும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும். (வெஞ்சுடர்த்திருச் சக்கரம்) ஆச்ரிதவிரோதிகள்விஷயத்தில், லௌகிகாக்நி, நரகாக்நி, தண்ணீர் என்னும்படி வெவ்விதானசுடரையுடைய திருவாழியை யும். (ஏந்துகையன்) அழகுக்கும் விரோதிநிரஸநத்துக்குமுடலாக ஸர்வகாலமும் பூவேந்தினாற்போலே தரித்துக்கொண்டிருக்கும் திரு க்கைகளையுடையவன். (உள்ளவிடம்வினவில்) வர்த்திக்கிறஸ்தலம் கேட்கிறிகோளாகில். (உமக்கிறைவம்மின்சுவடுரைக்கேன்) வாருங் கோள், உங்களுக்கு அவன்வர்த்திக்கிறவிடத்துக்கு அல்பமடை யாளம்சொல்லுகிறேன்.

(வெள்ளையித்யாதி) சரணாகதனாய் தனக்கபிமதனான அர்ஜுந னுடைய, வெளுத்த (க) புரவிபூண்டிருப்பதாய், வாநரமானவெற் றிக்கொடியையுமுடைத்தாயிருக்கிற தேரின்மேலே அவனுக்குஸார தியாய் முன்னேநின்று. (கள்ளப்படைத்துணையாகி) க்ர்த்ரிமப்ப டைத்துணையாகி. அதாவது - படைத்துணையாகிறவிடத்தில் இர ண்டுதலையு மறியும்படி செவ்வையிலன்றிக்கே, பகலையிரவாக்கியும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும், எதிரியுடைய உயிர் நிலையைக்காட்டிக்கொடுத்தும் செய்தவை. (பாரதம் கைசெய்யக் கண்டாருளர்) பாரதஸமரத்தைக் கையுமணியும் வகுத்துநடத்த அத்தசையிலேகண்டவர்களுளர். (எ)

மூ.—நாழிகைகூறிட்டுக்காத்துநின்றவரசர்கடம்முகப்பே
நாழிகைபோகப்படைபொருதவன்றேவகிதன்சிறுவன்
ஆழிகொண்டன்றிரவிமறைப்பச்சயத்திரதன்றலையைப்
பாழிலுருளப்படைபொருதவன்பக்கமேகண்டாருளர்.

ப-ரை.—நாழிகை - நாழிகையை, கூறிட்டு - விபஜித்து, காத்துநின்ற - காத்துக்கொண்டுநின்ற, அரசர்கள்தம்முகப்பே - ராஜாக்களுக்குமுன்னே, நா ழிகை - பகல்முப்பதுநாழிகையும், போக - போய்த்தென்றுதோற்றும்படியாக, படை - திருவாழியாழ்வானைக்கொண்டு, பொருதவன் - பொருதவனான, தேவ கிதன் - தேவகிப்பிராட்டியுடைய, சிறுவன் - பிள்ளையாய், அன்று - அவர்கள் காத்துக்கொண்டுநின்றவன்று, ஆழிகொண்டு - திருவாழியைக்கொண்டு, இரவி- ஆதித்யனை, மறைப்ப - மறைக்க, சயத்திரதன் - ஜயத்ரதனுடைய, தலையை—, பாழில் - பாழிலே, உருள - உருளும்படி, படை - அம்பாலே, பொருதவன் - பொருத அர்ஜுநனுடைய, பக்கமே - அருகே, கண்டாருளர்—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (நாழிகையித்யாதி) "ஜயத்ரதனை அஸ்தமிப்பதற்குமுன்னே கொல்லக்கடவேன்" என்று அர்ஜுநன் ப்ரதிஜ்ஞைபண்ண, அதுக்கிடமறும்படி ஒருபுருஷப்ரமாணமன்றி யே தீர்க்கனானவனை ஒருபுருஷப்ரமாணமாகக் குழிக்குள்ளேநிறுத்தி, "நீங்கள் இன்னதனைநாழிகை காத்துக்கொள்ளுங்கோள், நாங்கள்

(க) புரவி - குதிரை.

இன்னதனை நாழிகை காத்துக்கொள்ளுகிறோம்" என்று பகல்முப்பது நாழிகையும் இவனுக்கு ஒருநலிவுவாராதபடி காத்துக்கொண்டுநின்ற அதிரத மஹாரதரானராஜாக்கள் தங்கள்முன்னே. (நாழிகை போகப்படைபொருதவன் தேவகிதன்சிறுவன்) பகல் நாழிகைமுப்பதும் போய்த்ததென்று தோற்றும்படியாகப் படைபொருதவனான தேவகிபுத்ரன். நாழிகைபோகப் படைபொருகையாவது - திருவாழியைக்கொண்டு ஆதித்யனைமறைக்கை. அதுதான் மேலேசொல்லப்படாநின்றதிறே. கீழ்ப்பாட்டில், "திருச்சக்கரமேந்துகையனுள்ளவிடம்வினவில்" என்றாற்போலே, இங்கும், "தேவகிதன்சிறுவன்-உள்ளவிடம்வினவில்" என்று கூட்டிக்கொள்வது. அதுக்கடி - பூர்வோத்தரங்களுக்குச் சேரவேண்டுகையாலே.

(ஆழிகொண்டன் றிரவிமறைப்ப) அப்படி அவர்கள்காத்துக்கொண்டு நின்றவன்று பகல்நாழிகை சென்றதாகத்தோற்றும்படி நினைவறிந்து கார்யஞ்செய்யும் திருவாழியைக்கொண்டு ஆதித்யனை மறைக்க. (சயத்திரதனித்யாதி) "ஆதித்யனஸ்தமித்தான்" என்று அவனைக்குழியினின்றும் அவர்கள்கிளப்பி நிறுத்தினவளவிலே, இருள்பரப்பினதிருவாழியைப் பேரநிறுத்தி, ஜயத்ரதனுடையதலையைப் பாழியிலேகிடந்துருளும்படி அம்பாலேபொருத அர்ஜுநனுடைய வருகே கண்டாருளர். நிரவதிகதேஜோரூபமான திருவழியாலே, ஆதித்யனைமறைத்தால் லோகத்துக்கு மிகவும்வெளிச்செறிப்புண்டாமித்தனையன்றோ, "ஆதித்யனஸ்தமித்தான்" என்னும்படி கண்களுக்கு இருண்டுதோற்றுவானென்னென்னில்; இந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்படி அளவுபட்டிருக்கையாலே தமஸ்ஸுப்போம்படியா யிருக்கும்; அங்ஙனன்றிக்கே, திருவாழியாழ்வானுடைய தேஜஸ்ஸு நேர்கொடுநேர் கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடி மிக்கிருக்கையாலே பளபளத்துக் கண்ணையிருளப்பண்ணிற்று. இதுதான் "ஆழியாலன்றங்காழியை மறைத்தான்" என்கிறவிடத்திலே பூர்வர்களருளிச்செய்தார்களிறே. (அ)

மூ.—மண்ணுமலையுமறிகடல்களுமற்றுமியாவுமெல்லாம்
திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனைச்சிக்கனநாடுதிரோல்
எண்ணற்கரியதோரேனமாகியிருநிலம்புக்கிடந்து
வண்ணக்கருங்குழன்மாதரோடுமணந்தானைக்கண்டாருளர்.

ப-ரை.—மண்ணும்-பூமியையும், மலையும்-பர்வதங்களையும், மறி-அலையெறிகிற, கடல்களும் - ஸமுத்ரங்களும், மற்றும் - மற்றுமுண்டான, யாவும் - எல்லாப்பொருள்களுமான, எல்லாம் - இவையெல்லாவற்றையும், திண்ணம் - நிச்சயமாக, விழுங்கி - ப்ரளயத்திலழியாதபடி திருவயிற்றினுள்ளேவைத்து, உமி

ழ்ந்த - ப்ரளயங்கழிந்தவாறே வெளிநாடுகாணவுமிழ்ந்த, தேவனை—, சிக்கன - ஊற்றத்துடனே, நாடுதிரேல்—, எண்ணற்கு அரியது - மநஸ்ஸால் பகுத்தறியக்கூடாததாய், ஓர் - ஒப்பற்ற, ஏனமாகி - மஹாவராஹமாய், இருநிலம் - பெரிதானபூமியை, புக்கு - ப்ரளயத்திலேமுழுகி, இடந்து - அண்டச்சுவரினின்று மொட்டுவிடுவித்தெடுத்து, வண்ணம் - அழகியதாய், கரு - கறுத்திருந்துள்ள குழல் - குழலையுடைய, மாதரோடு - ஸ்ரீபூமிப்பிராட்டியோடே, மணந்தானை - திருமணம்புணர்ந்தவனை, கண்டாருளர்—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (மண்ணுமித்யாதி) ஸர்வாதாரையான பூமியும், அதுதனக்காதாரமான பர்வதங்களும், பூமிக்குரக்ஷகமாகச் சூழ்ந்து திரைமறிகிறஸமுத்ரங்களும், மற்றுமுண்டான ஸர்வபதார்த்தங்களுமான இவையெல்லாவற்றையும். (திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனை) ஐந்த்ரஜாலகரைப்போலன்றிக்கே, நிச்சயமாக ப்ரளயத்திலழியாதபடி திருவயிற்றினுள்ளே வைத்து, ப்ரளயம்கழிந்தவாறே வெளிநாடுகாண உமிழ்ந்து, இப்படி, ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்தைப்பண்ணுகையால் வந்தபுகர், வடிவிலே தோற்றும்படியிருந்தவனை. (சிக்கனநாடுதிரேல்) மேலெழத்தேடி "கண்டிலோம்" என்று மீளுகையன்றிக்கே, "கண்டேவிடவேணும்" என்னும் ஊற்றத்துடனே தேடுகிறிகோளாகில்.

(எண்ணற்கரியதோரேனமாகி) அழகாலும் வடிவிற்பெருமையாலும் மநஸ்ஸாலே (க) பரிச்சேதிக்கவொண்ணாதபடி யிருக்கையாலே, அத்விதியமான மஹாவராஹமாய். (இருநிலம்புக்கிடந்து) மஹாப்ரிதிவியை ப்ரளயத்திலேமுழுகி அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்து. (வண்ணமித்யாதி) தன்னுடைய அபிமாநாந்தர்ப்பூதையான பூமியை, இப்படி ப்ரளயத்தினின்று மெடுத்தமையைக்கண்ட ஹர்ஷத்தாலே, அதுக்கு அபிமாநிநியான ஸ்ரீபூமிப்பிராட்டிவந்தணைக்க, அழகியதாய்க் கறுத்திருந்துள்ள திருக்குழலையுடையவளோடே கலந்தவனைக்கண்டாருளர். (௯)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றூர்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறூர்.

மூ.—கரியமுகில்புரைமேனிமாயனைக்கண்டசுவடுரைத்துப்
புரவிமுகஞ்செய்துசெந்நெலோங்கிவிளைகழனிப்புதுவைத
திருவிற்பொலிமறைவாணன்பட்டர்பிரான்சொன்னமாலைப
பரவுமநமுடைப்பத்தருள்ளார்பரமனடிசேர்வர்களே.[த்தும்

ப - ரை.—கரியமுகில் - காளமேகத்தை, புரை - ஒத்த, மேனி - வடிவையுடையனாய், மாயனை - ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையவனை, கண்ட—, சுவடு - அடையாளங்களை, உரைத்து - சொல்லி, செந்நெல் - செந்நெற்க

(க) பரிச்சேதிக்க - அளவிட.

ளானவை, ஓங்கி - உயரவளர்ந்து, புரவிமுகஞ்செய்து - குதிரைமுகம்போலே தலைவணக்கி, விளை - விளையாநின்றுள்ள, கழனி - கழனிகளையுடைய, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்குத்தலைவராய், திருவின் - ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயால், பொலி - மிக்கிருப்பாராய், மறைவாணன் - வேதத்துக்குநிர்வாஹகரான, பட்டர்பிரான்- பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, மாலை - மாலையான, பத்தும் - இப்பத்தையும், பரவும் - அடைவுகெடப்பேசும், மநமுடை - மநஸ்ஸையுடைய, பத்தருள்ளார் - பக்தராயுள்ளவர்கள், பரமன் - ஸர்வஸ்மாத்பரனுடைய, அடி - திருவடிகளை, சேர்வர்கள் - சேரப்பெறுவர்கள்.

வ்யா.—(கரியமுகில்புரைமேனிமாயனை) காளமேகம்போன்ற வடிவையுடையனாய், ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையனானவனை. (கண்டசுவடுரைத்து) "காணவேணும்" என்று தேடுகிறவர்களுக்கு, கண்டவடையாளங்களைச்சொல்லி. தேடுகிறவர்களுடைய (க) அவஸ்தையையும், கண்டவர்களுடைய அவஸ்தையையுமடைந்துபேசினார் - தாமேயிறே. (புரவியித்யாதி) செநநெற்களானவை யுயரவளர்ந்து கதிர்க்கநத்தாலே குதிரைமுகம்போலே தலைவணங்கி விளையாநின்றுள்ள கழனிகளையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய், "பரமனைப்பயிலும் திருவுடையார்" என்கிறபடியே (உ) பகவதாஸக்திருபையான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயால் மிக்கிருப்பாராய், *வேதப்பயன் கொள்ளவல்லவராகையாலே வேதத்துக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த மாலையானவிப்பத்தையும். (பரவுமித்யாதி) ப்ரீதிபரவசராய்க்கொண்டு அடைவுகெடப்பேசும் மநஸ்ஸையுடைய பக்தராயுள்ளவர்கள். (பரமனடிசேர்வர்களே) காண்கைக்குத்தேடவேண்டாதே நித்யாநுபவம் பண்ணலாம்படி, ஸர்வஸ்மாத்பரனானவனுடைய திருவடிகளைச் சேரப்பெறுவர்கள். (௰)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு.—கதிர்நாந்தகம் கொலைதோயம் நீரோறுபொல்லா வெள்ளைநாழிகை மண்கரியவலம்பா.

---

ஆ திருமொழி ௩0-க்கு, பாட்டு-௩உ௫.

---

(க) அவஸ்தை - நிலைமை. (உ) பகவதாஸக்தி - எம்பெருமானிடத்தில ஆசையுடைமை.

அ.—க்ர்ஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களை நெடுக அநுபவித்துக்கொண்டுபோந்து, அத்துடனே ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும் அநுபவித்தவநந்தரம், "தத்ததவதாரவிசிஷ்டனான ஸர்வேச்வரனைக் கண்ணாலேகண்டு அநுபவிக்கவேணும்" என்னும் அபேக்ஷைபிறந்து தமக்கு ஒருபுடைநடந்து செல்லுகிறபடியையும், தமக்கு மாநஸாநுபவ (க) வைசத்யத்தாலே அவன்றன்னைக் கண்ணாலே கண்டாற்போலே ஒரு புடைப்ரகாசிக்கிறபடியையு மநுஸந்தித்து, அவையிரண்டையும் "அவனைக்காணவேணும்" என்று தேடுகிறார்சிலரும், "அப்படிதேடுகிறிகோளாகில் கண்டார் சிலருளர்" என்று சொல்லுகிறார் சிலருமாக, தம்மை இரண்டுவகை யாக்கிக்கொண்டு பேசினாராய்நின்றார் - கீழ்; "அவதாராந்தரங்கள் தன்னைக் கண்ணாலேகண் டநுபவிக்கவேணும்" என்னும் ஆசை பிறந்தாலும் பெருக்காறுபோலே அவை தத்காலத்திலுள்ளார்க்கு அநுபாவ்யமாய், பிற்காலத்திலுள்ளார்க்குக் கிடையாததாயிருக்கிறபடியையும், "பின்னானார்வணங்குஞ்சோதி" என்கிறபடியே அவதாரத்தில் பிற்பாடரானவர்களுக்கும் இழக்கவேண்டாதபடி ஸர்வேச்வரன் அர்ச்சாவதாரமாய்க்கொண்டு (உ) உகந்தருளின நிலங்களிலே அந்தஅவதாரகுணசேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படியாக எழுந்தருளிநிற்கிறபடியையு மநுஸந்தித்து, உகந்தருளினநிலங்களிலே அவனையநுபவிக்கக்கோலி, அவையெல்லாவற்றிலும், "தென்னனுயர்பொருப்பும் தெய்வவடமலையுமென்னு மிவையே முலையாவடிவமைந்த" என்கிறபடியே - ஸ்ரீபூமிப்பிராட்டிக்குத் திருமுலைத்தடங்களாம்படியிருக்கையாலே அவனுக்கு அத்யந்தாபிமதஸ்தலங்களா யிருக்கிற திருமலைகளிரண்டிலும்வைத்துக்கொண்டு, தெற்குத்திருமலையிலே நிற்கிறநிலையிலே அநுபவிப்பதாக முந்துறஇழிந்து, ராமக்ர்ஷ்ணாத்யவதாரசேஷ்டிதங்களெல்லாம் அந்நிலையிலே ப்ரகாசிக்கிறபடியை அநுபவியாநிற்கச்செய்தே, (௩) தத்விஷயத்திலும் (ச) ததீயவிஷயமே (ரு) ப்ராப்யத்துக்கு (சா) சரமாவதியாக அறுதியிட்டிருக்குமவராகையாலே, *கிளரொளியிளமையில் (எ) ஆழ்வாரநுபவித்தாற்போலே, "அங்கேயெழுந்தருளிநிற்கிற அழகரிலுங்காட்டில் அவர் விரும்பியெழுந்தருளிநிற்கிற திவ்யஸ்தலமான திருமலையே பரமப்ராப்யம்" என்று அநுஸந்தித்து, அத்திருமலையினுடைய வைபவத்தை (அ) பஹுமுகமாகப்பேசி யநுபவிக்கிறார் - இத்திருமொழியில். ... ... ... ... ... *

(க) வைசத்யம் - ப்ரகாசம். (உ) உகந்தருளின நிலம் - திவ்யதேசம். (௩) தத்விஷயம் - ஸர்வேச்வரவிஷயம். (ச) ததீயவிஷயம் - பாகவதவிஷயம். (ரு) ப்ராப்யம் - அடையத்தக்கது. (சா) சரமாவதி - கடைசியெல்லை. (எ) ஆழ்வார் - நம்மாழ்வார். (அ) பஹுமுகமாக - பலபடியாக.

மூ.—அலம்பாவெருட்டாக்கொன்றுதிரியுமரக்கரைக்
குலம்பாழ்படுத்துக்குலவிளக்காய்நின்றகோன்மலை·
சிலம்பார்க்கவந்துதெய்வமகளிர்களாடுஞ்சீர்ச்
சிலம்பாறுபாயுந்தென்றிருமாலிருஞ்சோலையே.

ப-ரை.—தெய்வமகளிர்கள் - தேவஸ்த்ரீகளானவர்கள், சிலம்பு-பாதச்சிலம்புகள், ஆர்க்க-த்வநிக்கும்படியாக, வந்து—, ஆடும் - நீராடாநின்றுள்ள, சீர் - பெருமையையுடைய, சிலம்பாறு - நூபுரகங்கையானது, பாயும் - இடைவிடாமல்பெருகாநிற்பதாய், தென் - தென்திசையில், திரு - அழகிதாய், மால் - உயர்த்தியையும், இரு - பரப்பையுமுடைத்தான, சோலை - திருச்சோலையையுடைய மலையானது; அலம்பா - ப்ராணிகளையலையச்செய்தும், வெருட்டா - பயப்படுத்தியும், கொன்று - கொன்றும், திரியும் - திரியாநின்றுள்ள, அரக்கர் - ராக்ஷஸருடைய, குலத்தை—, பாழ்படுத்து - பாழாம்படிபண்ணி, குலம் - இக்ஷ்வாகு வம்சத்துக்கு, விளக்காய்நின்ற - ப்ரகாசகனாய்நின்ற, கோன் - ஸர்வஸ்வாமியானவன்நித்யவாஸம்பண்ணுகிற, மலை - தேசமாம்.

வ்யா.—முதற்பாட்டு. (அலம்பா) ப்ராணிகளை யிருந்தவிடத்திலிருக்கவொண்ணாதபடியலைத்து. அதாவது - "இவர்கள்கீழ் நமக்கு வர்த்திக்கப்போகாது, எங்கேபோவோம்" என்று நின்று தளும்பும்படி பண்ணுகை. (வெருட்டா) வெருளப்பண்ணி. அதாவது- தங்களுடைய உக்ரவேஷங்களையும் உக்ரவ்யாபாரங்களையும் கண்டு பயப்படும்படி பண்ணுகை. அன்றிக்கே, "அலம்பாவெருட்டா" என்றதுக்கு - ஆரவாரித்துச்(க)சிவிட்கைவிளைத்து அஞ்சப்பண்ணியென்னவுமாம். (கொன்றுதிரியும்) அவ்வளவுமன்றிக்கே, கொலைக்கஞ்சாமல்கொன்று, அதுதானேயாத்ரையாய்த் திரியாநிற்கும். (அரக்கரை) கீழ்ச்சொன்னவையெல்லாவற்றுக்குமடியான ஜந்மத்தையுடையவர்களை. கள்ளர், பள்ளர், வலையர்முதலானார்க்கு ப்ராணிகளையலைக்கையும் பயப்படுத்துகையும் கொல்லுகையும் ஜந்மஸித்தமாய் வருமாபோலே, இவர்களுக்குமிது ஜந்மஸித்தமாய்வருமாய்த்து. கரதூஷணாதிகளும் ராவணாதிகளுமான ராக்ஷஸர் த்ரைலோக்யத்தையும் இப்படி(உ)பீடித்துக்கொண்டிறேதிரிந்தது. (குலம்பாழ்படுத்து) அவர்களை நிரஸிக்கிறவிடத்தில் அவர்கள்தங்க ளளவன்றிக்கே மறுகிளையறும்படி குட்டிக்கொலையாகவறுத்துப் பொகடுகையாலே, குலமாகப்பாழ்பட்டுப் போம்படிபண்ணி. ஸ்ரீவிபீஷணனும் அவனோடேசேர்ந்தவர்களும் அவர்களுக்குக் கூட்டல்லர்களிறே. "பொல்லாவரக்கனைக்கிள்ளிக்களைந்தானை" என்றது – "நல்லவரக்கருமுண்டு" என்று திருவுள்ளம்பற்றியிறே. "இலங்கையரக்கர்குலம் முருடுதீர்த்தபிரான்" என்றாரிறே ஆழ்வாரும். ஜந்மமதுவானாலும் அதுக்கீடான வ்யாபாரமில்லாதபோது அவர்களில் வ்யாவ்ர்த்த

(க). சிவிட்கு - கோபம். (உ) பீடித்தல் - வருத்துதல்.

ஞய்விடுமிறே. "விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டித:" "விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டித:" என்றார்களிறே அவர்கள்தாங்களே. "அஹம் ஹி மநஸா த்யக்த்வா ராக்ஷஸாநாம் பலாபலம்" "அஹம் ஹி மநஸா த்யக்த்வா ராக்ஷஸாநாம் பலாபலம்" என்று-இக்ஷ்வாகுவம்சயனுகநினைத்து, பெருமாள் கைக்கொண்டருளினபோதே அந்தஜந்மந்தானும்மாறிப் போய்த்திறே. ஆகையால், இவ்விடத்திற்சொன்னவரக்கர்-ராவணாதிகளும் அவர்களோடேசேர்ந்தவர்களும்; ஆதலால், "குலம்பாழ்படுத்து" என்னக்குறையில்லை. (குலவிளக்காய்நின்ற) ராவணன் திக்விஜயம்பண்ணினவன்றுதுடங்கி ஒளிமழுங்கிக்கிடந்த இக்ஷ்வாகுவம்சம், பெருமாள்திருவவதரித்து, ராவணாதிகளைக் கிழங்கெடுத்துப் பொகட்டபின்பாய்த்து ப்ரகாசமாய்த்து; ஆகையாலே, குலத்துக்கு ப்ரகாசகனாய்நின்றவென்கிறது. "வெங்கதிரோன்குலத்துக் கோர்விளக்காய்த்தோன்றி" என்றாரிறே - ஸ்ரீகுலசேகரப்பெருமாள். இவர்கள்தாம் பேசிற்றேபேசும் (க) ஏககண்டரிறே. (கோன்மலை) ஸர்வஸ்வாமியானவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம். "குலவிளக்காய் நின்றகோன்மலை" என்கையாலே - இன்னம் அங்ஙனேத்தவிரோதிகளைநிரஸித்து ஆச்ரிதரக்ஷணம்பண்ணுகைக்காக எழுந்தருளிநிற்கிற ஸ்தலமென்கிறது. ஆகையால், ஸர்வஸ்வாமித்வம் (உ) வீறுபெற்றது - இங்கேயிறே.

(சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடும்) முன்பு - தேவஸ்த்ரீகள் திருச்சிலம்பாற்றில் ஸ்நாநம்பண்ணிவரும்போது ராவணாதிகளுக்கு அஞ்சி சிலம்பொழிந்தும் பஞ்சடையிட்டும் வருவர்களாய்த்து; இப்போது - அங்ஙனன்றிக்கே, அரக்கரைக்குலம் பாழ்படுக்கையாலே, சிலம்புகள் த்வநிக்கும்படி வந்து, தேவஸ்த்ரீகளானவர்கள் ஸ்நாநம்பண்ணுநிற்கிற. இவர்கள் ஏதுக்காக இப்படிஸ்நாநம் பண்ணுகிறதென்னில்; ஸ்வர்க்கத்திலிருப்புக்கு (௩) ஸாதநமாக. சாலில்நீர்மாண்டாற்போலே, முன்பு ஆர்ஜிதபுண்யம்மாண்டால், தேடிக்கொள்ளும்தேசம் இதுவாய்த்து. (சீரித்யாதி) இப்படியிருந்துள்ள கௌரவத்தையுடைய திருச்சிலம்பாறனது (ச) அவிச்சிந்நஸ்ரோதோரூபேண ப்ரவஹியாநிற்கும். "க்வசித் த்வசித்ர மாலிநீ க்வசந்நமத்த மத்தலஸா" "க்வசித் த்வசித்ர மாலிநீ க்வசந்நமத்தமத்தலஸா" என்றுதுடங்கி ஒருச்லோகத்தாலே திருச்சிலம்பாற்றினுடைய (ரு) கதியைவர்ணித்து அருளிச்செய்தாரிறே - ஆழ்வான். (தென்திருமாலிருஞ்

(க) ஏககண்டர் - ஒருவழிப்பட்டவர். (உ) வீறு - பெருமை. (௩) ஸாதநம் - கருவி. (ச) அவிச்சிந்நஸ்ரோதோரூபேண - இடைவிடாமல் அருவியாய்க்கொண்டு. (ரு) கதியை - செல்லுகையை.

சோலையே) தென்னென்று - அழகாதல்; தெற்குத்திக்கிலேயான வென்னுதல். ''மால்'' என்றும், ''இருமை'' என்றுமிரண்டும்-பெருமைக்குவாசகமாய், சோலையினுடைய ஒக்கத்தையும் பரப்பையும் சொல்லுகிறது. இப்படி இருக்கிறசோலைகளை யுடைத்தாகையாலே மாலிருஞ்சோலையென்றுஅத் தேசத்துக்கு நிரூபகம். ∗ஸ்ரீயிறே·()

மூ.—வல்லாளன்றோளும்வாளரக்கன்முடியுந்தங்கை
பொல்லாதமூக்கும்போக்குவித்தான்பொருந்துமலை
எல்லாவிடத்திலுமெங்கும்பரந்துபல்லாண்டொலி
செல்லாநிற்குஞ்சீர்த்தென்றிருமாலிருஞ்சோலையே.

ப-ரை.—பல்லாண்டொலி - மங்களாசாஸநத்வநியானது, எல்லாவிடத்திலும் - எல்லாரிடங்களிலும், எங்கும் - திருமலையின்பரப்பெங்கும், பரந்து - பரவி, செல்லாநிற்கும்-செல்லாநின்றுள்ள, சீர்-பெருமையையுடைத்தாய், தென் - அழகிதாயிருந்துள்ள, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையானது; வல் - வலிய, ஆளன் - ஆண்பிள்ளைத்தனத்தையுடையனாய், வாள் - ருத்ரனிடத்திற்பெற்றவாளையுமுடையனான, அரக்கன்-ராவணனுடைய, தோளும் - தோள்களையும், முடியும் - தலைகளையும், தங்கை - அவன்றங்கையான சூர்ப்பணகியுடைய, பொல்லாத - கொடிதான, மூக்கும் - மூக்கையும், போக்குவித்தான் - அறுப்புண்டு போம்படிபண்ணினவன், பொருந்தும் - நித்யவாஸம்பண்ணுகிற, மலை - மலையாம்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (வல்லாளன்) வலிய ஆண்மையுடையவன். ஆண்பிள்ளைத்தனத்தில்வந்தால் ப்ரபலனானவனென்கை. (க) திக்கஜங்களோடே பொருதுந்திக்பாலர்களை ஜயித்துமிருக்குமவனிறே. ''ஹிமவாந் மந்த3ரோ மேரு: த்ரைலோக்யம் ஸஸுராஸுரம் । ஶக்யம் பு4ஜாப்4யாமுத்34ர்தும்'' ''ஹிமவாந்த3ரோ ...'' என்றவனிறே. (வாளரக்கன்) அதுக்குமேலே, ருத்ரன்பக்கலிலேபெற்ற வாளையுமுடையவன். இத்தால் - இந்தத்தோள்வலியும் வாள்வலியுமுடையனாகையாலே ஒருவராலும் ஜயிக்கவொண்ணாதவனென்கை. இப்படியிருக்கிறவனுடைய. (தோளும் - முடியும்) இத்தால் - அவனையழியச்செய்கிறவிடத்தில் ஓரம்பாலே அழியச்செய்துவிடலாயிருக்க, தோளைக்கழித்துத் தலையையறுத்துப் போதுபோக்காகநின்று கொன்றபடிசொல்லுகிறது. (தங்கைபொல்லாதமூக்கும்) ''மன்னனிராவணன்றன்நற்றங்கை'' என்கிற பலங்கொண்டு ஸ்வைரம்ஸஞ்சரித்துத்திரிந்த ∗கொல்லையரக்கியானசூர்ப்பணகியினுடைய ஹேயமான மூக்கையும். (போக்குவித்தான்) அறுப்புண்டுபோம்படி பண்ணினவன். இவள்மூக்கையரிந்தவோபாதிபோலே காணும் - அவனுடைய தோளும்முடியுமறுத்த

(க) திக்கஜங்கள் - எட்டுத்திசைகளிலுமுள்ளயானைகள்.

அநாயாஸமும். (பொருந்தும்மலை) இப்படி அவனுக்கு ப்ராணஹாநியையும் இவளுக்கு (க) அங்கஹாநியையும் பண்ணினவன், அவதாரம்போலே (உ) தீர்த்தம் ப்ரஸாதியாதே, நித்யவாஸம்பண்ணுகிறமலை.

(எல்லாமித்யாதி) (௩) அநந்யப்ரயோஜநரோடு, (௪) ப்ரயோஜநாந்தரபரரோடு, அநந்யஸாதநரோடு, (௫)ஸாதநாந்தரபரரோடுவாசியற, எல்லாருடையவிடங்களிலும் திருமலையிலுள்ளபரப்பெங்கும் (௬) வ்யாப்தமாய்க்கொண்டு (எ) மங்களாசாஸநத்வநிநடந்து செல்லாநிற்கும். ப்ரயோஜநாந்தரபரர்க்கும் இது கூடுமோவென்னில்; அவர்களையுமிங்கேவந்து புகுரக்கொள்ள, (அ) இந்நிலமிதிதானே தங்கள்ப்ரயோஜநத்தைமறந்து மங்களாசாஸநத்திலேமூளும்படிபண்ணுமாய்த்து. *புனத்தினைக்கிள்ளிப் புதுவவிகாட்டுகிற குறவரும் "உன்பொன்னடிவாழ்க" என்று மங்களாசாஸநம்பண்ணும்படியிறே நிலத்தின்மிதிதானிருப்பது. (சீர்த் தென்திருமாலிருஞ்சோலையே) இப்படியிருந்துள்ள கௌரவத்தையுடைத்தாய் அழகிதாயிருந்துள்ள திருமாலிருஞ்சோலையென்கை. (உ)

மூ.—தக்கார்மிக்கார்களைச்சஞ்சலஞ்செய்யுஞ்சலவரைத்
தெக்காநெறியேபோக்குவிக்குஞ்செல்வன்பொன்மலை
எக்காலமுஞ்சென்றுசேவித்திருக்குமடியரை
அக்கானெறியைமாற்றுந்தண்மாலிருஞ்சோலையே.

ப-ரை.—எக்காலமும் - ஸர்வகாலமும், சென்று—, சேவித்திருக்கும் - ஸேவித்துக்கொண்டிராநின்றுள்ள, அடியரை - அடியாரை, அ - அந்த, கான்நெறியை - காட்டுவழியினின்றும், மாற்றும்-தவிர்ப்பிப்பதாய், தண் - ஸம்ஸாரதாபத்தையாற்றுகின்றுள்ள, மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையானது; தக்கார்களை - ஈச்வரனோடொத்த அருளாளரையும், ஆச்ரிதர்குற்றங்கண்டுவிலக்காமையாலே, மிக்கார்களை-அவனிலும்மேற்பட்டவர்களையும், சஞ்சலம்செய்யும் - கலங்கப்பண்ணுகிற, சலவரை-ப்ரதிகூலரை, தெக்காம் - தெற்குத்திக்கிலேயான, நெறியே - யமலோகத்தின்வழியே, போக்குவிக்கும்-போம்படிபண்ணுகின்றுள்ள, செல்வன் - ஸ்ரீயப்பதியானவன் நித்யவாஸம்பண்ணுகிற, பொன் - சிறந்த, மலை - தேசமாம்.

வ்யா.—மூன்றும்பாட்டு. (தக்கார்) ஈச்வரனோடொக்க க்ருபையொத்திருக்குமவர்கள். (தக்கார்) ஈச்வரனுக்குத்தகுதியா

(க) அங்கஹாநி-அவயவத்தில ஊனம். (உ)தீர்த்தம்ப்ரஸாதியாதே-தன்னுடைச்சோதிக்கெழுந்தருளாதே. (௩) அநந்யப்ரயோஜநர்-எம்பெருமானையே ப்ரயோஜநமாகப் பற்றியிருப்பவர். (௪) ப்ரயோஜநாந்தரபரர் - வேறொருப்ரயோஜநத்தை விரும்புமவர்கள் (௫) ஸாதநாந்தரபரர்-வேறொருஸாதநத்தையுடையவர்கள். (௬) வ்யாப்தமாய் - பரவினதாய். (எ) மங்களாசாஸநம் - வாழ்த்துதல். (அ) இந்நிலமிதி - இந்நிலத்தின்ஸ்வபாவம்.

னவர்கள். அதாவது - நினைவு ஒன்றுயிருக்கை. "ஸர்வாத்மாக்களு முஜ்ஜீவிக்கவேணும்" என்கிறகர்ஷை ஒத்திருக்கை. (மிக்கார்களை) அவனைப்போலே ஸ்வதந்த்ரராய், அபராதங்களைக் கண்டவாறே "க்ஷமாமி" "க்ஷிபாமி" "ந க்ஷமாமி" "நக்ஷமாமி" என்கையன்றிக்கே, எப்போதுமொக்க அநுக்ரஹசீலரா யிருக்கையாலே அவனிலுங்காட்டில் அதிகராயிருக்குமவர்களை. ஆகையாலிறே, இவர்களைப்பற்றுமிடத்தில் புருஷகாரநிரபேக்ஷமாகப் பற்றலாயிருக்கிறது. "சலிப்பின்றியாண்டெம்மைச் சங்மசங்மாந்தரம் காப்பர்" என்கிறபடியே-ஆச்ரயித்தவர்களை (க) சலநமறநோக்குவாரும், "வருமையுமிம்மையும் நம்மையளிக்கும்பிராக்கள்" என்று-இம்மைக்கும் மறுமைக்கும் ரக்ஷிப்பாரும் இவர்களேயிறே. ஆகையால், ஈச்வரனருளிலும் இவர்களருளிறேநன்றுயிருப்பது. "நல்லருளாயிரவர் நலனேந்தும் திருவல்லவாழ்"என்னக்கடவதிறே. (சஞ்சலம்செய்யும்சலவரை) பகவத்விஷயத்திலேவைத்தநெஞ்சைக் கலங்கப்பண்ணும் க்ர்த்ரிமரை. ஸ்ரீதண்டகாரண்யவாஸிகளானரிஷிகள் பகவத்யாநம்குலைந்து "பச்யஸ்வசரீராணி" "வனஹிம்ஸ்ரஸரீராணி" என்று-உடம்புக்குமன்றுடும்படியாய்த்திறே-ராக்ஷஸர்கள்கலக்கினபடி. சலவர் - அநுகூலரைப்போலேயிருந்து (உ) ப்ராதிகூல்யம்பண்ணுமவர்கள். (தெக்காநெறியே) நரகத்துக்குப்போம்வழியே. யமபுரம் தக்ஷிணதிக்கிலேயாகையாலும்,நரகத்துக்குப்போவார்போவது அவ்வழியாலேயாகையாலும் "தெக்காநெறி" என்று - (ங) யாம்யமார்க்கத்தைச்சொல்லுகிறது. (போக்குவிக்கும்) மீட்சியில்லை. (செல்வன்) இப்படிபோம்படி பண்ணுகைக்குஹேது - ஸ்ரிய:பதியாகையிறே. "அசுரர்க்குத்தீங்கிழைக்கும்திருமால்" என்னக்கடவதிறே. ராவணாதிகளைக் கொல்லுகைக்குதபஸ்ஸுபண்ணுமவனிறே. (பொன்மலை) இப்படியிருக்கிறவன் வர்த்திக்கிற ச்லாக்யமானதிருமலை.

(எக்காலமுமித்யாதி) அநந்யப்ரயோஜநராய், புறம்பு (ச) அந்யபரதையில்லாமையாலே ஸர்வகாலமும்சென்று ஸேவித்திருப்பர்கள். ப்ரயோஜநாந்தரபரர்க்கிறே-காலநியதியுள்ளது; இவர்களுக்கு காலநியதிஇல்லை; அதுக்கடி - *அடியாராகையாலே. "எழுவார் விடைகொள்வா ரீன்றுழாயானை,வழுவாவகைநினைந்துவைகல், தொழுவார்" என்னக்கடவதிறே. (அக்கான்நெறியைமாற்றும்) அக்காட்டுவழியைமாற்றும். * பாவக்காடிறே. (தண்மாலிருஞ்சோலையே) தட்பமாவது - ஸம்ஸாரதாபத்தை யாற்றுமதாயிருக்கை. அழகர், ப்ரதிகூலரை*தெக்காநெறியே போக்குவிப்பர்; திருமலையாழ்வார்,

(க) சலநமற - ஊற்றத்துடனே. (உ) ப்ராதிகூல்யம்பண்ணுமவர்கள் - தீங்குசெய்யுமவர்கள். (ங) யாம்யமார்க்கம் - யமபுரத்துக்குச்செல்லும்வழி. (ச) அந்யபரதை - பராக்கு.

அநுகூலனை*அக்காரனெறியைமாற்றுவிப்பர். "பிணிவீயுமாறுசெய்வான் திருவேங்கடத்தாயன்" "சமன்கொள்வீடுதரும் தடங்குன்றம்" என்னக்கடவதிறே. அழகனைப்பற்றுகையிலும் * அயன்மலையடைவதுவிறேகருமம். (௩)

மூ.—ஆனுயர்கூடியமைத்தவிழவையமரர்தம்
கோனார்க்கொழியக்கோவர்த்தநத்துச்செய்தான்மலை
வானாட்டினின்றுமாமலர்க்கற்பகத்தொத்திழி
தேனாறுபாயுந்தென்றிருமாலிருஞ்சோலையே.

ப-ரை.— வான்நாட்டில் - ஸ்வர்க்கலோகத்திலுள்ளதாய், மா - பெரிய, மலர் - பூக்களையுடைத்தான, கற்பகம் - கல்பகவ்ருக்ஷத்தினுடைய, தொத்தினின்று - பூங்கொத்துக்களினின்றும், இழி - கீழ்நோக்கிப்பாயாநின்றுள்ள, தேன்- தேனானது, ஆறுபாயும் - ஆறாய்க்கொண்டு ஓடாநிற்கும், தென்-அழகையுடைய, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையானது; ஆன் - பசுக்களையுடைய, ஆயர் - இடையரானவர்கள், கூடி - திரண்டு, அமைத்த - இந்த்ரனுக்காகச் சமைத்த, விழவை - உத்ஸவத்தை, அமரர்தம்-தேவர்களுடைய, கோனார்க்கு - ராஜாவான இந்த்ரனுக்கு, ஒழிய - ஆகாமல், கோவர்த்தநத்து - கோவர்த்தநமலைக்கு ஆம்படி, செய்தான் - செய்தவனுடைய, மலை - மலையாம்.

வ்யா.—நாலாம்பாட்டு. (ஆனுயரித்யாதி) (க) கோதநரான இடையர், வர்ஷார்த்தமாக (உ) வத்ஸரந்தோறும் ஒரு (௩) திவஸம் இந்த்ரனை ஆராதித்துப்போரக்கடவர்களாய், அதுக்குடலாக அவர்கள், (ச) வாசல்கள்தோறும் ஆக்கியெடுத்துச்செல்லுகிறபடியைக் கண்டு, "நீங்கள்செய்கிறதென்" என்று (ரு) கேட்க; "வர்ஷார்த்தமாக இந்த்ரனுக்குச்சோறிடுகையாயிருக்கும்" என்ன; "நாம்பிறந்து வளருகிறவூரிலே ஒரு (சு) த்ரவ்யத்தை ஒருதேவதாந்தரம் கொள்ளுகையாவதென்" என்றுநினைத்து அத்தைவிலக்குகைக்காக, "இந்த்ரனாகிறவனெவன், அவனை நீங்கள்கண்டறிவதுண்டோ, அவன்றான் நீங்களிட்டசோற்றை உண்ணக்கண்டறிவிகோளோ, ஒன்றுமறியிகோளாயிருந்திகோள்; ஆனபின்பு, மேகங்களும்வந்துபடிந்து வர்ஷிக்கும்ஸ்தாநமாய், என்றுமொக்கப் பசுக்களுக்குப்புல்லும் தண்ணீருமுண்டாய், நமக்கு மழைக்கும் காற்றுக்குமொதுங்கிடமாய், கோக்களைவர்த்திப்பிக்கையாலே "கோவர்த்தநம்"என்னும் பேரையுடைத்தாயிருக்கிற இம்மலையன்றோ நமக்குத்தெய்வம், இதின்முன்னே நீங்கள் சமைத்தவையெல்லாம் கொண்டுவந்திடுங்கோள்" என்ன; பஞ்சலக்ஷம்குடியிலுள்ள இடையரெல்லாம்திரண்டு இந்த்ரார்த்

(க) கோதநர் - பசுக்களை செல்வமாகவுடையவர்கள். (உ) வத்ஸரந்தோறும் - வருஷந்தோறும். (௩) திவஸம் - திநம். (ச) வாசல்கள்தோறும் - வீடுகள் தோறும். (ரு) கேட்க - க்ர்ஷ்ணன்கேட்க. (சு) த்ரவ்யம் - ப்தார்த்தம்.

தமாகக்கல்பித்த உத்ஸவத்தை, முப்பத்துமுக்கோடி தேவர்களையும் கும்பீடுகொள்ளுமேற்றத்தை யுடையராய், தம்மை (க) போரப் பொலிய நினைத்திருக்குமவர்க்கொழிய, அசேதநமாயிருப்பதொரு பர்வதமான கோவர்த்தநத்துக்காம்படிசெய்தவனுடையமலை. அப்படி தன்னபிமாநத்திலே ஒதுங்கினவர்களை அந்யசேஷமாகாதபடி நோக்கி, திருமலையாழ்வார்க்கு சேஷமாக்குகைக்காக அவனெழுந் தருளி யிருக்கிறதேசமென்கை.

(வானாட்டிலித்யாதி) ஸ்வர்க்கலோகத்தில் நின்றும், பெரிய பூக்களையுடைத்தான கல்பகத்தினுடைய பூங்கொத்துக்களினின்றும் கீழ்நோக்கி ப்ரவஹியாநின்றுள்ள தேனானது ஆறுய்க்கொண்டு பரம்பி ஓடாநிற்கு மழகையுடைய திருமாலிருஞ் சோலையென்கை.

மூ.—ஒருவாரணம்பணிகொண்டவன்பொய்கையிற்கஞ்சன்ற
னொருவாரணமுயிருண்டவன்சென்றுறையுமலை
கருவாரணந்தன்பிடிதுறந்தோடக்கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியுந்தண்மாலிருஞ்சோலையே.

ப - ரை.—கரு - கறுத்த, வாரணம் - ஆனையானது, தன் - தன்னுடைய, பிடி - பிடியானது, துறந்து - தன்னைவிட்டு, ஓட - திரும்பிப்பாராமல் கடுநடையிட்டுப்போகப் புக்கவாறே, கடல்வண்ணனாணை - கடல்வண்ணனாணையென்றும், திருவாணை - பெரியபிராட்டியாராணையென்றும், கூற - சொல்ல, திரியும் - அப்புறம்போகமாட்டாமே மீளாநின்றுள்ள, தண் - குளிர்ந்த, மாலிருஞ்சோலை- திருமாலிருஞ்சோலைமலையானது; பொய்கையில் - பெரிதானதடாகத்திலுள்ள, தாமரைமலரைப்பறித்துத் திருவடிகளிலிடத்தேடின, ஒரு-ஒப்பற்ற, வாரணம்- ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, பணி - கைங்கர்யத்தை, கொண்டவன் - அங்கீகரித் தவனாய், கஞ்சன்றன் - கம்ஸனுடைய, ஒருவாரணம் - ஓரானையான குவலயாபீடத்தினுடைய, உயிர் - உயிரை, உண்டவன் - முடித்தவன், சென்று - வந்து, உறையும் - நித்யவாஸம்பண்ணுகிற, மலை - மலையாம்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (ஒருவாரணம் பணிகொண்டவன் பொய்கையில்) சாபத்தாலே கஜயோநியிலே பிறந்திருக்கச் செய்தேயும், (உ) பூர்வஜந்ம ஸ்ம்ர்தி குலையாமையாலே, மிகவும் பகவத் பக்தியை யுடைத்தாய் (ங) திருப்படித் தாமம்பறித்து (ச) இட்டுத்திரியாநிற்க, (ரு) ஜகத்திலே ஒருபூமலர் கிடையாதபடி (சு) வர்ஷாபாவமாய் வரண்டவளவிலே, "எங்கேயொரு பூக்காணலாம்" என்றுதேடித் திரியச்செய்தே "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிறபடியே தூரத்திலே ஒருகுளிர்ந்த சோலையும் பூத்த

(க) போரப்பொலிய - மிகவும் உயர்ந்தவனாக. (உ) பூர்வஜந்மம் - முற்பிறப்பு. (ங) திருப்படித்தாமம் - திருமேனிக்குத்தகுந்தபுஷ்பம். (ச) இட்டுகையிலேவைத்துக்கொண்டு. (ரு) ஜகத்தில் - உலகில். (சு) வர்ஷாபாவமாய்- மழையில்லாமல்.

பொய்கையுமாய்த் தோற்றக்கண்டு ஓடிச்சென்று "உள்ளே துஷ்ட ஸத்த்வம் கிடக்கிறது" என்றறியாமலிழிந்து "காமருபொய்கை வைகுதாமரை வாங்கியவேழம்" என்கிறபடியே தன் (க) அபிநிவே சாநுகுணமாக பூவைவாரிப்பறித்துக் கரையிலே யேறுவதற்கு முன்னே, நெடுங்காலமெல்லாம் "(உ) நம் சாபமோக்ஷத்துக்கு ஒரு (ங) கறையடிகாண வல்லோமே" என்று கிடக்கிறதொரு முதலை வந்து காலைப்பிடித்துக் கொள்ளுகையாலே, அது நீர்க்கிழுக்க, தான் கரைக்கிழுக்க, இங்ஙனே நெடுங்காலம் நின்றலைந்து தன்னாற்செய்ய லாவதற்றவாறே, (ச) திருவடிகளை நினைத்துக் கூப்பிட்டதோரானை யை, அந்தத்வநி வழியே அதித்வரையோடே அது இடர்பட்ட பொய்கையிலே சென்று முதலையின் வாயினின்றும் ஆனையை விடு வித்து, அதின் கையிற்பூ செவ்வியழியாமல் திருவடிகளிலே இடு வித்துக்கொண்டு அடிமை கொண்டவன். (கஞ்சனித்யாதி) "தீய புந்திக்கஞ்சன்" என்கிறபடியே-துர்ப்புத்தியான கம்ஸன், ஆஸுர ப்ரக்ருதிகளை (ரு) ப்ரச்சந்நரூபராக்கி வரவிட்டு பகுமுகமாக நலி யப்பார்த்தவளவில், வந்தவர்கள் ஒருவரும் விசேஷம் சொல்லவும் (சு) மீண்டுசெல்வாரைக் காணாமையாலே, "இனி இதுகொண்டு இவனை வெல்லப்போகாது" என்று விட்டு, "வில்விழவுக்கென்று அழைத்து நலியக்கடவோம்" என்று தன்னுடைய மந்த்ரிகளில் அநுகூலரான அக்ரூரரை (எ) வரவிட, அவரும் வந்தழைத்துக் கொண்டு போகாநிற்கச்செய்தே, வழியிலே நலிவதாக மதகரமான த்ரவ்யங்களைத் (அ) தீற்றிப் பிச்சேற்றி "புகுவாய் நின்றபோதகம்" என்கிறபடியே - புகுகிற வாசலிலே நிறுத்திவைத்ததோ ரானையை மதியாமல்சென்று அடர்த்து, அதினுடைய கொம்புகளைப் பிடுங்கி ப்ராணனை முடித்தவன். (சென்றுறையும்மலை) தன்னுகப்பெல்லாந் தோற்றும்படி வந்து, "நங்கள் குன்றம் கைவிடான்" என்கிறபடியே நித்யவாஸம்பண்ணுகிறமலை. ஆநுகூல்யமுடைய ஆனையைரக்ஷித்து, ப்ராதிகூல்யம்பண்ணின ஆனையை நிரஸித்தவன் வர்த்திக்கிறதேச மாகையாலே, அநுகூலமான ஆனைகளெல்லாம் வர்த்திக்கும் தேச மாய்த்து. "மழக்களிற்றினஞ்சேர் மாலிருஞ்சோலை" என்னக்கடவ திறே.

(கருவாரணம்) கறுத்த நிறத்தையுடைய ஆனையானது. (தன் பிடிதுறந்தோட) இந்நிறத்தைக் கண்ட தன்னுடைய பிடியானது,

(க) அபிநிவேசம் - பாரிப்பு. (உ) நம்சாபமோக்ஷத்துக்கு - நம்முடைய சாபம் நீங்குகைக்கு. (ங) கறையடி - யானையின்அடி. (ச) திருவடிகளை - ஜகத்காரணபூதனை. (ரு) ப்ரச்சந்நரூபர் - மறைக்கப்பட்ட வடிவையுடையவர் கள். (சு) மீண்டுசெல்வார் - திரும்பிவருமவர்கள். (எ) வரவிட - அனுப்ப. (அ) தீற்றி - உண்பித்து.

"நம்மையொழிய வேறேகலந்து பெற்ற நிறமாயிருந்தது" என்று ப்ரணய ரோஷத்தாலே தன்னை ஸங்யஸித்துப் புரிந்து பாராமல் கடுநடையிட்டுப்போக. இப்படி யிது ஓடப்புக்கவாறே, இது மீளு கைக்கீடான உபாயங்களிலே யிழிந்து, "பெருகுமதவேழம்" இத்யாதிப்படியே சில (க) உபஹாரங்களைப் பண்ணப்பார்க்க, "அத்தை உனக்குவேண்டுவார்க்குக் கொடாய்" என்று போகப்புக்கவாறே, "உபாயாந்தரம் பலித்ததில்லை, இனி (உ) சரமோபாயத்தை யநுஷ்டிப்போம்" என்று பார்த்து (கடல்வண்ணன்திருவாணைகூற) அழகர் ஸ்ரீபாதமே போவாயென்ன. (திரியும்) அந்த (ங) திவ்யாஜ்ஞைக்கு இளைத்து, போகமாட்டாமல் மீளும். "సున్దరదోర్ద్వన్ద్వ లబ్ధనికాన్తరవశానుయాయినికరిణి । ప్రణయజకలహసమాధిర్యత్రవనాద్రిస్సఏష సున్దరదోష్ణః" "ஸுந்தரதோர்த்வந்த்வலப்த நிகாந்தரவசாநுயாயி நிகரிணி । ப்ரணயஜகலஹஸமாதிர்யத்ர வநாத்ரிஸ்ஸ ஏஷ ஸுந்தரதோஷ்ண:" என்று-இவ்வர்த்தாந்தத்தையருளிச் செய்தாரிறே - ஆழ்வான். (தண்மாலிருஞ்சோலையே) தட்பமாவது - ஸகல வஸ்துக்களுக்கும் நின்ற நின்ற நிலைகளிலே தாபத்தை ஆற்ற வற்றாயிருக்கை. (ரு)

மூ.—ஏவிற்றுச்செய்வானேன்றெதிர்ந்துவந்தமல்லலரைச்
சாவத்தகர்த்தசாந்தணிதோட்சதுரன்மலை
ஆவத்தநமென்றமரர்களுநன்முனிவரும்
சேவித்திருக்குந்தென்றிருமாலிருஞ்சோலையே.

ப-ரை.—அமரர்களும் - ப்ரஹ்மாதிதேவர்களும், நன்முனிவரும் - ஸநகாதி மஹர்ஷிகளும், ஆவத்து - தங்களுடைய ஆபத்துக்குரக்ஷகமான, தநமென்று - தநமென்றுநினைத்து, சேவித்திருக்கும்-ஸேவித்துக்கொண்டிராநிற்கும், தென்- விலக்ஷணமான, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையானது; ஏவிற்று- கம்ஸன் ஏவினகார்யங்களை, செய்வான் - செய்யும்பொருட்டு, ஏன்று - துணிந்து, எதிர்ந்து - எதிர்ந்து, வந்த—, மல்லலரை - சாணூரமுஷ்டிகராகிற மல்லர்களானவர்கள், சாவ - சாம்படியாக, சாந்துஅணி - கூனியாலிடப்பட்ட சாந்தணிந்த, தோள் - தோள்களாலே, தகர்த்த - முறித்துப்போகட்ட, சதுரன்- சதுரனுடைய, மலை - மலையாம்.

வ்யா.—ஆறும்பாட்டு. (ஏவிற்றுச் செய்வானேன்றெதிர்ந்து வந்த மல்லலரை) ஸ்வதந்த்ரராய் வந்து மேல்விழிலிறே, முடியாது என்று கைவாங்கலாவது; கம்ஸனுக்கு பரதந்த்ரராய் வருகையாலே, இங்குத் தோற்றார்களாகில் அவன் அங்கே தோள்களைக்கழிக்கு மாய்த்து; ஆனபின்பு, கோழைகளாய்க் கொலையுண்பதில் புகழோடே முடியவமையும் என்று மேலிட்டார்கள். ஏன்றெதிர்ந்து வருகையாவது - "பொரக்கடவோம்" என்று நெஞ்சிலேதுணிந்து பிற்காலி

(க) உபஹாரம் - பச்சை. (உ) சரமோபாயம் - கடைசி உபாயம். (ங) திவ்யாஜ்ஞை - சிறந்தகட்டளை.

யாதே எதிரே நடந்துவருகை ; இப்படியிருந்துள்ள மல்லரை. (சாவத்தகர்த்த) (க) குற்றுயிராக்கி விடுகையன்றிக்கே, பசுங்கல முடைத்தாற்போலே அநாயாஸேந தகர்த்துப்பொகட்ட. (சாந்த ணிதோள் சதுரன்) கூனி சாத்திவிட்ட சாந்து குறியழியாதே காணும் அவர்களோடு வ்யாபரித்தது. மல்லரோடேகூட ஸர்வாவ யவங்களும் பொருந்தி வ்யாபரியாநிற்கச்செய்தே, சாத்தின சாந்து குறியழிந்ததில்லைகாணும். கூனிசாத்திவிட்ட வநந்தரத்திலே, பெ ண்கள், கண்ணாலே இலச்சினையிட்டு விடுகையாலே இவனாலழிக் கவும் போகாதிறே. அவர்கள் கண்ணாலே யிலச்சினை யிடுகையா வது - இவன்தோளிலே (உ) சேலுங்கயலு மிடுகையிறே. இவன் மல்லரோடே அழித்தானாகிலும் மற்றெங்கேனு மழித்தான் என் றிறே அவர்களிருப்பது. இது அழித்துப் போனானாகில், பின்பு பெ ண்கள் கோஷ்டிக்காளாகானே. (மலை) இப்படி ப்ரதிகூலரை நிர ஸித்து அநுகூலரையுகப்பிக்குமவன் வர்த்திக்கிறமலை.

(ஆவத்தநமென்று) நமக்கு ஆபத்துக்கு ரக்ஷகமான தநமெ ன்று நினைத்து. (அமரர்களும் நன்முனிவரும் சேவித்திருக்கும்) உபயபாவநா நிஷ்டரான ப்ரஹ்மாதி தேவர்களும், ப்ரஹ்மபாவ நைக நிஷ்டரான ஸநகாதி மஹர்ஷிகளும் சேவித்துக்கொண்டு இரா நிற்கும். "ஆவத்தநம்" என்று ஒருகால் நினைத்தால் அதுக்கு பலம் அநவரதம் ஸேவித்துக் கொண்டிருக்கையாய்த்து. (தென்திருமா லிருஞ் சோலையே) தென்னென்று - அழகாய், ஸர்வப்ரகார விலக்ஷ ணமான தேசமென்றபடி. (௬)

மூ.—மன்னர்மறுகமைத்துனன்மார்க்கொருதேரின்மேல்
முன்னங்குநின்றுமோழையெழுவித்தவன்மலை
கொன்னவிற்கூர்வேற்கோனெடுமாறன்றென்கூடற்கோன்
தென்னன்கொண்டாடுந்தென்திருமாலிருஞ்சோலையே.

ப-ரை.—கொல்நவில் - கொல்லுகையைத் தொழிலாகவுடைய, கூர்-கூரிய, வேல் - வேலையுடையனாய், கோன் - ராஜநீதி தவறாமல்நடத்துமவனாய், நெடுமா றன் - பாண்டிமண்டலத்துக்குச்சிறந்த ராஜாவாய், தென் - அழகிய, கூடல்- கூடலென்னும்பேரையுடைய மதுரைக்கு, கோன் - தலைவனாய், தென்னன்- தக்ஷிணதிக்குக்குப்ரதாநனான மலயத்வஜசக்ரவர்த்தியாலே, கொண்டாடும் - கொண்டாடப்பட்ட, தென் - அழகிய, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ் சோலைமலையானது; மன்னர் - ராஜாக்களெல்லாம், மறுக - "நாம் இவனைவெல் லக்கூடுமோ" என்று குடல்மறுகும்படியாக, மைத்துனன்மார்க்கு - மைத்துன ன்மாரான பாண்டவர்களுக்காக, ஒரு - ஒப்பற்ற, தேரின்மேல்-தேரின்மேலே,

(க) குற்றுயிராக்கிவிடுதல் - கொஞ்சம்ப்ராணனோடே விட்டுவிடுதல்.
(உ) சேலுங்கயலுமிடுகை - சேல்போலவும் கயல்போலவும் எழுதுகை.

முன் - ஸாரத்யம்பண்ணுகைக்கேற்க அத்தேரின்முகப்பாக, அங்கு - அவ்விடத்திலே, நின்று—, நீர்நரம்பில்விட்ட வாருணாஸ்த்ரத்தின்வழியே, மோழை - கீழுண்டானஜலமானது, எழுவித்தவன் - குமிழியெறிந்துகிளரும்படி பண்ணுவித்தவன் நித்யவாஸம்பண்ணுகிற, மலை - மலையாம்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (மன்னர்மறுக) அர்ஜுநனுடைய தேரிலே பூண்ட குதிரைகள் தண்ணீருக்குவிடாய்த்து இளைத்தவளவிலே, (க) கடிநஸ்தலத்திலே நீர்நரம்பு அறியுமவனுகையாலே, வாருணாஸ்த்ரத்தை விடுவித்து அங்கே நீரையுண்டாக்கி, குதிரைகளை விட்டு நீரூட்டி, புரட்டி யெழுப்பிக்கொண்டு போந்து, பூட்டிக்கொண்டு வந்து முன்னே நிறுத்தின இத்தைக்கண்ட (உ) ராஜலோகமடைய "இவனுடைய பக்ஷபாத மிருந்தபடியால் நாமிவனை வெல்லுகை யென்றுண்டோ" என்று குடல்மறுகும்படியாக. (மைத்துனன்மார்க்கு) "కృష్ణాశ్రయాః కృష్ణబలాః కృష్ణనాథాశ్చ పాండవాః" "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவா:" என்கிறபடியே தன்னையே ஸர்வமுமாகப் பற்றியிருக்கும் பாண்டவர்களுக்கு. (ஒரு தேரின்மேல்) ஆயுதமெடுக்கவொண்ணாது என்கையாலே, "கொல்லாமாக்கோல் கொலைசெய்து" என்கிறபடியே உழவுகோலும் கையுமாய் நின்று தேரை நடத்துகிற ஸாமர்த்யத்தாலே தேர்க்காலாலே எதிரிகளை யடங்கலும் நெரித்துப் பொகடும்படி தனக்கு உபகரணமாயுள்ள அத்விதீயமான தேரின்மேலே. (முன்னங்குநின்று) ஸாரத்யம் பண்ணுகைக்கு அநுரூபமாக அத்தேரின் முகப்பான அவ்விடத்திலே நின்று. (மோழையெழுவித்தவன்) நீர்நரம்பில் விட்ட வாருணாஸ்த்ரத்தின் வழியே கீழுண்டான ஜலமானது குமிழி யெறிந்து கிளரும்படி பண்ணியருளினவன். (மலை) இப்படி ஆச்ரித பக்ஷபாதியானவன் நித்யவாஸம்பண்ணுகிற மலை.

(கொன்னவிலித்யாதி) "మలయధ్వజభూమీశః పాండ్యదేశమహీపతిః" "மலயத்வஜபூமீஶ: பாண்ட்யதேஶமஹீபதி:" என்கிற மலயத்வஜ சக்ரவர்த்தி இத்தேசத்தை (ங) உபலாளித்துக்கொண்டு போந்தானென்னும் ப்ரீதியாலே அவனை (ச) ச்லாகிக்கிறார் மேல்.கொலைக்குப் பரிகரமென்னும்படியான கூரிய வேலையுடையனாய், ராஜநீதி குலையாமல் தர்ம யுத்தமே செய்யுமவனாய், தபஃபலத்தாலே நித்யம் கங்காஸ்நாநஞ் செய்து வரவல்ல பெருமையை யுடையனாய், பாண்டிமண்டலத்துக்கு ராஜாவாய், கட்டளைப்பட்டு நான்மாடக்கூடல் என்னும் பேரையுடைத்தாயிருக்கும் மதுரைக்கு நிர்வாஹகனாய், தக்ஷிணதிக்குக்குப்ரதாநனான மலயத்வஜ சக்ரவர்த்தியாலே கொண்

(க) கடிநம் - வன்மை. (உ) ராஜலோகமடைய - அரசர்களெல்லாரும். (ங) உபலாளநம் - கொண்டாடுதல். (ச) ச்லாகிக்கிறார் - கொண்டாடுகிறார்.

டாடப்பட்ட தேசமாய்த்து.—அதாவது - அகஸ்த்யன் வர்த்திக்கிற மலய பர்வதத்திலே சென்று அகஸ்த்ய மஹர்ஷி முன்னே "தர்மமே நடத்தக்கடவேன்" என்று மலயபர்வதத்தை யெழுதிக் கொடியெடுத்தவன், கங்கையிலே ஸ்நாநம் செய்யப் போகா நிற்கச்செய்தே, * மதிதவழ் குடுமி யளவிலே சென்றவாறே, தேர் வடக்கு ஓடாமல் நின்றதாய், அவ்விடத்திலே தேரைநிறுத்தி, "இங்கே தீர்த்த விசேஷமும் தேவதா ஸந்நிதியுமுண்டாக வடுக்கும்" என்று இறங்கி ஆராய்ந்து பார்த்தவளவிலே, அவ்விடத்திலே அழகர் ஸந்நிதிபண்ணி, "இவ்வாற்றிலே ஸ்நாநம்செய்" என்ன; நாமம் கேட்டு ஸ்நாநம்பண்ண வேண்டுகையாலே "இதுக்குப்பேர்என்" என்று கேட்க; "முன்பே நம்மை ப்ரஹ்மா காலைக்கழுவுகிற காலத்திலே நம் சிலம்பில்நீர் இதிலே தெறித்து 'சிலம்பாறு' என்று இதுக்குப் பேராய்த்து" என்ன; அங்கே ஸ்நாநஞ்செய்து, கங்கா ஸ்நாநம் தவிர்ந்து இங்கே ப்ரவணனாயிருந்து, அழகர்க்கு வேண்டு மடிமைகளெல்லாம் செய்தான் என்று ஒருப்ரஸித்தியுண்டிறே; அத்தையருளிச்செய்தாராய்த்து.— (தென் திருமாலிருஞ்சோலையே) இப்படி அவனாலே கொண்டாடப்பட்டிருப்பதாய்தெற்குத் திக்கிலேயானதிருமாலிருஞ்சோலை யென்கை. (எ)

மூ,—குறுகாதமன்னரைக்கூடுகலக்கிவெங்கானிடைச்
சிறுகானெறியேபோக்குவிக்குஞ்செல்வன்பொன்மலை
அறுகால்வரிவண்டுகளாயிரநாமஞ்சொல்லிச்
சிறுகாலைப்பாடுந்தென்திருமாலிருஞ்சோலையே.

ப-ரை.—அறுகால் - ஆறுகால்களையுடைத்தாய், வரி - அழகிதாயிருந்துள்ள, வண்டுகள் - வண்டுகளானவை, சிறுகாலை - ஸத்வம்தலையெடுக்கும்காலமான விடியற்காலத்திலே, ஆயிரநாமம் - ஸர்வேச்வரனுடைய ஆயிரந்திருநாமங்களையும், சொல்லி - ஆளத்திவைத்து, பாடும் - பாடாநின்றுள்ள, தென் - அழகையுடைத்தான, திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையானது; குறுகாத - திருமலையைக்கிட்டி ஆச்ரயியாத, மன்னரை - ராஜாக்களுடைய, கூடு - இருப்பிடத்தை, கலக்கி - குலைத்து, வெம் - வெவ்விய, கான் இடை - காட்டின் நடுவே, சிறுகால்நெறியே - சிற்றடிப்பாடே, போக்குவிக்கும் - போம்படியாகப்பண்ணும், செல்வன் - ஸ்ரீயப்பதியானவனுடைய, பொன் - சிறந்த, மலை - தேசமாம்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (குறுகாதமன்னரை) திருமலையைக் கிட்டாத ராஜாக்களை. அநுகூலராய்ச்சேர்ந்து வாழ்ந்துபோகலாயிருக்க, ப்ரதிகூலராய்ச்சேராதேயிருக்குமவர்களை. (கூடுகலக்கி) இருப்பிடத்தைக்குலைத்து. அதாவது - போக்ய போகோபகரண போகஸ்தாநங்களெல்லாவற்றாலும் விலக்ஷணமாம்படி அவர்கள் பண்ணிக்கொண்டிருக்கும் நகரிகளிலிருப்பைக் குலைத்தென்கை.

(வெங்கானிடை) வெவ்வியகாட்டின்நடுவே. (க) நிலவனுக்கும் ஸஞ்சரிக்கவொண்ணுதபடியாய்த்து காட்டின் வெம்மையிருக்கும்படி; "வெம்மினொளிவெயில்கானகம்" என்கிறபடியே. (சிறுகானெறியேபோக்குவிக்கும்) கெட்டுப்போம்போது பின்துடருகிறுர்களென்னு மச்சத்தாலே, வழியானவிடம்கிடக்க சிற்றடிப்பாடே நுழைந்துபோம்படியாகப்பண்ணும். (செல்வன்) இதுக்கடி, ஸ்ரீயஃபதியாகையாலே. அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமும் பண்ணுவது அவனுக்காகவிறே. (பொன்மலை) இப்படி யிருந்துள்ள ஸ்ரீயஃபதியானவன் வர்த்திக்கிற ச்லாக்யமானமலை. (அறுகால்வரிவண்டுகள்) ஷட்பதங்களான அழகியவண்டுகள். இத்தால்-இவற்றினுடைய ரூபகுணம்சொல்லிற்று. (ஆயிரநாமம்சொல்லிச்சிறுகாலைப்பாடும்) "ஸஹஸ்ரநாமஸஹஸ்ரவான்" "தேவாநாமேஸஹஸ்ரவாந்" என்கிற அவனுடைய ஆயிரம் திருநாமங்களையும் ஸத்வோத்தரமான காலத்திலே ப்ரீதிக்குப் போக்குவிட்டுப் பாடாநிற்கும். (தென்றிருமாலிருஞ்சோலையே) இப்படியிருந்துள்ள அழகையுடைத்தான திருமாலிருஞ்சோலையென்கை. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. அந்த தேசவர்த்திகளான ஸ்ரீவைஷ்ணவ பூதங்களினுடைய வ்ர்த்தமிருக்கும்படி சொல்லுகிறது. அழகருடைய செயல்போலேயாய்த்து - இவற்றினுடைய செயலுமிருக்கும்படி. அதாவது-ப்ரதிகூலராளவர்களைக் காணப்பொறுதாய்த்து.

மூ.—சிந்தப்புடைத்துச்செங்குருதிகொண்டுபூதங்கள்
அந்திப்பலிகொடுத்தாவத்தஞ்செயப்பன்மலை
இந்திரகோபங்களெம்பெருமான்கனிவாயொப்பான்
சிந்தும்புறவிற்றென்றிருமாலிருஞ்சோலையே.

ப-ரை.—இந்திரகோபங்கள்-சிவந்தநிறத்தையுடைய இந்த்ரகோபமென்னும்பூச்சிகளானவை, எம்பெருமான் - ஸர்வஸ்வாமியானஅழகருடைய, கனி - கொவ்வைக்கனிபோன்ற, வாய் - திருவதரத்துக்கு, ஒப்பான் - போலியாகைக்காக, சிந்தும் - சண்டவிடமெங்கும் சிதறிப்பறக்கிற, புறவின் - தாழ்வரையையும், தென் - அழகையுமுடைத்தான; திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையானது; பூதங்கள் - அங்கேவர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவபூதங்களானவை, "ஊன்மல்கிமேடுபருப்பார்,, என்கிறபடியே-கேவலம்தேஹபோஷணபரராய்த்திரியும் ஜநங்களைக்கண்டால், சிந்த - அவயவங்கள்சிதறும்படியாக, புடைத்து - அடித்துக்கொன்று, அவர்கள் தேஹத்தினின்றும் புறப்படுகிற, செங்குருதிகொண்டு - சிவந்தரக்தத்தைக்கொண்டு, அந்தி - அந்திப்பொழுதில், பலிகொடுத்து - ஆராதநரூபேணஸமர்ப்பித்து, ஆவத்தநம் - தங்களுடையஆபத்துக்கு ரக்ஷகமானதநமாக நினைத்து, செய் - ஸேவித்துக்கொண்டுபோருகிற; அப்பன் - ஸர்வகாரணபூதனானவன் நித்யவாஸம்பண்ணுகிற, மலை - தேசமாம்.

(க) நிலவன் - அந்நிலத்திலே வஸிக்குமவன்.

வ்யா.—(சிந்தப்புடைத்து) சிதறப்புடைத்து. ஆஸ்திகராய், த்யாஜ்யோபாதேய விவேகமுடையராய், அழகரளவிலும் திருமலையாழ்வாரளவிலும் (௧)ப்ரேமமுடையராய்வர்த்திக்குமவர்களைக்கண்டால் அவர்கள ஸந்நிதியில் நில்லாதே அஞ்சலிவந்தநாதிகளைப் பண்ணித் தந்தாமைக்கொண்டு மறைந்துவர்த்தித்து, நாஸ்திகராய், த்யாஜ்யோபாதேய விவேகஶூந்யராய், தேஹ போஷணாதிகளைப் பண்ணி (௨) ஸ்வைரம்ஸஞ்சரித்துத்திரியும் (௩) ப்ரதிகூலஜநங்களை, தாந்தாம் ஸஞ்சரிக்கிறதேசத்திலே (௪) காலத்திலேகண்டால், அவயவங்கள் சிதறவடித்துக்கொன்று பொகடாநிற்குமாய்த்து. (செங்குருதிகொண்டு) தாந்தாம் அடித்துக்கொன்றவர்களுடைய தேகத்தில்நின்றும், செவ்வியிலேசிவந்துபுறப்படுகிற ரக்தத்தைக்கொண்டு.(பூதங்கள்)பூதயோநியாயிருக்கச்செய்தேயும், வைஷ்ணவநாமரூபங்களோடேகூடி, பகவத் பாகவத பக்தியுக்தங்களாய்க் கொண்டுதிரியும் பூதங்களானவை. (அந்திப்பலிகொடுத்து) "[illegible]" "[illegible]" என்று ஸமர்ப்பித்த கண்டாகர்ணனைப்போலே, தங்களுடைய (௫) ஜாத்யுசிதமாக ஜீவிக்குமத்தை, ஸந்த்யாகாலங்களிலே ஆராதநரூபேண ஸமர்ப்பித்து. (ஆவத்தநம்செய்) தங்களுக்கு ஆபத்துக்கு ரக்ஷகமான தநமாகநினைத்து ஸேவித்துக்கொண்டு போரும்படியிருக்கிற. (அப்பன்மலை) ஸர்வகாரண பூதனானவன் நித்யவாஸம்பண்ணுகிறமலை. "அப்பன்" என்றது-இவற்றுக்கும் இப்படிகிட்டி வர்த்திக்கலாம்படியிருக்கிறது காரணபூதனான (௬) குடற்றுடக்காலேயென்னு மிடம்தோற்ற.

(இந்திரகோபங்கள்)சிவந்தநிறத்தையுடையவாய், (௭) "இந்த்ரகோபம்" என்கிற நாமத்தையுடைத்தாயிருக்கிற ஜந்துக்களானவை. (எம்பெருமான்கனிவாயொப்பான்) ஸர்வஸ்வாமியான அழகருடைய, கொவ்வைக்கனிபோலேயிருக்கிற திருவதரத்துக்குப்போலியாம்படி. (சிந்தும்புறவில்) கண்டவிடமெங்கும் சிதறிப்பறக்கும் (௮) பர்யந்தத்தையுடைய. "சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் - இந்திரகோபங்களேயெழுந்தும் பரந்திட்டன" என்றாரிறே - இவர்திருமகளாரும். (தென்றிருமாலிருஞ்சோலையே) இப்படியிருந்துள்ள அழகையுடைத்தான திருமாலிருஞ்சோலையென்கை. (௯)

---

(௧) ப்ரேமம் - அன்பு. (௨) ஸ்வைரம் - தன்இஷ்டப்படி. (௩) ப்ரதிகூலர் - விரோதிகள். (௪) காலத்திலே - அந்திப்பொழுதில். (௫) ஜாத்யுசிதமாக - ஜாதிக்குத்தகுதியாக. (௬) குடல்துடக்கு - சரீரஸம்பந்தம். (௭) இந்த்ரகோபம் - பட்டுப்பூச்சி; தம்பலப்பூச்சியென்றும்சொல்லுவர். (௮) பர்யந்தம் - தாழ்வரை.

௰.—எட்டுத்திசையுமெண்ணிறந்தபெருந்தேவிமார்
விட்டுவிளங்கவீற்றிருந்தவிமலன்மலை
பட்டிப்பிடிகள்பகடுறிஞ்சிச்சென்று மாலைவாய்த்
தெட்டித்திளைக்குந்தென்றிருமாலிருஞ்சோலையே.

ப-ரை.—மாலைவாய் - ராத்ரிகாலத்திலே, பட்டி - தன்னிஷ்டப்படி திரியா நின்றுள்ள, பிடிகள் - பெண்யானைகளானவை, பகடு - ஆண்யானைகளோடே, உறிஞ்சிச்சென்று - உராய்ந்துசென்று, தெட்டி - அப்புணர்ச்சியாலுண்டான ஆநந்தம்முற்றி, திளைக்கும் - களியாநின்றுள்ள, தென்திருமாலிருஞ்சோலை - தென்திருமாலிருஞ்சோலைமலையானது ; எண்இறந்த - இத்தனைபேரொன்றெண்ணிச்சொல்லமுடியாதவர்களாய், பெரு - வடிவழகாலும் ஆத்மகுணத்தாலும் வந்த பெருமையையுடையரான, தேவிமார் - தேவிமாரானவர்கள், எட்டுத்திசையும் - எண்டிசைகளிலும், விட்டுவிளங்க - மிகவும்ப்ரகாசிக்க, அவர்கள்நடுவே, வீறு - தன்பெருமைதோற்றும்படி, இருந்த - ஸ்ரீமத்த்வாரகையிலேயெழுந்தருளியிருக்கிற, விமலன் - பரிசுத்தனானவன்வர்த்திக்கிற, மலை - தேசமாம்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (எட்டுத்திசையும்) எட்டுதிக்கிலும். (எண்ணிறந்தபெருந்தேவிமார்) அஸங்க்யாதராய், ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும்வந்த பெருமையையுடையராய், சாஸ்த்ரோக்தமான ப்ரகாரத்திலே பரிக்ரஹிக்கப்பட்ட தேவிமாரானவர்கள். (விட்டுவிளங்க) மிகவும்ப்ரகாசிக்க. அதாவது - பார்த்த பார்த்தவிடமெங்கும் இவர்களுடைய திரளின் ப்ரகாசமேயாயிருக்கை. (வீற்றிருந்த) இவர்கள்நடுவே தன்வ்யாவ்ர்த்தி தோற்றும்படி ஸ்ரீமத்த்வாரகையிலே யெழுந்தருளியிருந்த. அதாவது - இத்தனை பேரோடும் பரிமாறுகிறவிடத்தில் ஓரொருத்தரே "என்னையொழியவறியான், என்னையொழியவறியான்" என்னும்படி பரிமாறுகையால்வந்த வீறுடைமைதோற்றவிருந்தவனென்கை. (விமலன்) இப்படி பரிமாறினவிதில் (க) ஸ்வார்த்தப்ரதிபத்தியாகிற தோஷமில்லாதவனென்கை. இவனுடைய ஸமஸ்தவ்யாபாரங்களும் ஆச்ரிதரை ரஸிப்பிக்கைக்கு உறுப்பாயிறேயிருப்பது. இப்படியிருந்துள்ள (உ) பாரதந்த்ர்யந்தான் (ங) ப்ரணயித்வ ப்ரயுக்தமாகையாலே இவன்றனக்கு ஏற்றத்துக்குடலாமித்தனையிறே. (மலை) (ச) ஏவம்பூதனானவன் இந்த ஸ்வபாவமெல்லாம் ப்ரகாசிக்கும்படி வர்த்திக்கிற மலை.

(பட்டிப்பிடிகள்) ஸ்வைரஸஞ்சாரிகளான பிடியானைகளானவை. (பகடுறிஞ்சிச்சென்று) * களிற்றானையோடே ஸ்பர்சித்துச்சென்று. ஸ்பர்சத்தால் - (ரு) ஸம்ச்லேஷத்தைச்சொல்லுகிறது.

(க) ஸ்வார்த்தப்ரதிபத்தி-தனக்குஎன்கிறபுத்தி. (உ) பாரதந்த்ர்யம்-பிறர்வசப்பட்டொழுகுகை. (ங) ப்ரணயித்வம் - அன்பு. (ச) ஏவம்பூதனானவன் - இப்படிப்பட்டவன். (ரு) ஸம்ச்லேஷம்-புணர்ச்சி. * களிற்றானை-ஆண்யானை.

"சென்று" என்று - அதிலுண்டான (க) காலதைர்க்யத்தைச்சொல்லுகிறது. (மாலைவாய்) ராத்ரியிடத்திலே. (தெட்டித்திளைக்கும்) அந்த ஸம்ச்லேஷரஸம் முற்றிக் களியாநிற்கும். தெட்டல்-முற்றல். திளைத்தல் - களித்தல். (தென்திருமாலிருஞ் சோலையே) இப்படியிருந்துள்ள சிறப்பையுடைய திருமாலிருஞ்சோலைமலையென்கை.()

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—மருதப்பொழிலணிமாலிருஞ்சோலைமலைதன்னைக்
கருதியுறைகின்றகார்க்கடல்வண்ணனம்மான்றன்னை
விரதங்கொண்டேத்தும்வில்லிபுத்தூர்விட்டுசித்தன்சொல்
கருதியுரைப்பவர்கண்ணன்கழலிணைகாண்பரே.

ப-ரை.—மருதப்பொழில் - மருதஞ்சோலைகளாலே, அணி - அலங்கரிக்கப் பட்டிருப்பதாய், மாலிருஞ்சோலைமலைதன்னை - திருமாலிருஞ்சோலையென்னும் திருநாமத்தையுடையமலையை, கருதி - நித்யவிபூதியிலும் மேலானஸ்தாநமாக விரும்பி, உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுமவனாய், கார்க்கடல் - கருங்கடல்போன்ற, வண்ணன் - திருநிறத்தையுடைய, அம்மான்றன்னை - ஸ்வாமியானவனை, விரதம்கொண்டு - வாழ்த்துகையே வ்ரதமாகக்கொண்டு, ஏத்தும் - திருப்பல்லாண்டுபாடுமவரான, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரில் எழுந்தருளியிருக்கும், விட்டுசித்தன் - பெரியாழ்வார், சொல் - அருளிச்செய்தத்தை, கருதி - மநநம்பண்ணி, உரைப்பவர் - அநுஸந்திக்குமவர்கள், கண்ணன் - ஆச்ரித ஸுலபனான க்ர்ஷ்ணனுடைய, கழலிணை - திருவடிகளை, காண்பர் - கண்டநுபவிக்கப்பெறுவர்.

வ்யா.—(மருதமித்யாதி) மருதஞ்சோலைகளாலே அணியப்பட்டிருப்பதாய், "திருமாலிருஞ்சோலை" என்னும் திருநாமத்தையுடைத்தாயிருந்துள்ள திருமலைதன்னை. "தன்னை" என்கையாலே - இதினுடைய (உ) போக்யதாதிசயத்தைச்சொல்லுகிறது. (கருதியுறைகின்ற) நித்யவிபூதியிலுங்காட்டில் இதுவே நமக்குவாஸஸ்தாநமென்று விரும்பி, "நங்கள்குன்றம்கைவிடான்" என்கிறபடியே நித்யவாஸம்பண்ணுகிற. (கார்க்கடல்வ்ண்ண னம்மான்றன்னை) கருங்கடல்போலேயிருண்டு ச்ரமஹரமானநிறத்தையுடைய ஸ்வாமியானவனை. (விரதமித்யாதி) ஸ்வசேஷத்வாநுரூபமான மங்களாசாஸநமே தமக்குவ்ரதமாகக்கொண்டு திருப்பல்லாண்டுபாடி யேத்துமவரான ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாரருளிச்செய்தத்தை. அன்றிக்கே, அர்ச்சாவதாரம் "அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீர்" என்னப்படும் விஷயமாகையாலே, "இவ்விஷயத்தை யேத்தக்கடவோம்" என்னும் வ்ரதத்தையுடையராய்க்கொண்டு, மங்களாசாஸந

(க) காலதைர்க்யம் - காலத்தின்மிகுதி. (உ) போக்யதாதிசயம் - மிக்க இனிமை.

ரூபேண ஏத்துமென்னவுமாம். (கருதியுரைப்பவர்) ஸாபிப்ராய மாக புத்திபண்ணி அநுஸந்திக்குமவர்கள். (கண்ணன்கழலிணை காண்பரோ) அத்யந்தஸுலபனான க்ர்ஷ்ணன்றிருவடிகளைக் கண்டநுப விக்கப் பெறுவர். (கக)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு.—அலம்வல்லாளன் தக்காராநுயர் ஒரு ஏவிற்று மன்னர்குறுகாத சிந்தவெட்டு மருத உருப்பிணி.

ஆ திருமொழி ௩க-க்கு, பாட்டு-௩௩௬.

அ.—கீழிற்றிருமொழியிலே, ராமாவதாரகுண சேஷ்டிதங்களும் க்ர்ஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களு மெல்லாம் ப்ரகாசிக்கும்படி அழகர் திருமலையிலே யெழுந்தருளியிருக்கிறபடியை அநுபவித்துக்கொண்டு, "அவரிலுங்காட்டில் அவர்விரும்பி யெழுந்தருளி நிற்கிற திருமலையேபரமப்ராப்யம்" என்று அநுஸந்தித்து, திருமலையாழ்வாருடைய வைபவத்தை (க) பஹுமுகமாகப்பேசி யநுபவித்தார்; அப்படி அநுபவித்த வளவால் தமக்கு (உ) பர்யாப்தி பிறவாமையாலே மீளவும் அவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி அழகர் திருமலையில் நிற்கிற நிலையை, கீழ்ச்சொன்ன க்ரமமன்றிக்கே, (௩) முகபேதேநபேசி, திருமலையாழ்வாருடைய வைபவத்தையும் (ச) கீழ்உக்த ப்ரகாரமன்றியே, முகபேதேந பலபடியாகப்பேசி யநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.—கீழ்-ராமாவதாரகுணசேஷ்டிதம் முன்னாக க்ர்ஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களையும் அழகர்பக்கலிலே கண்டநுபவித்தார்; இதில் - க்ர்ஷ்ணாவதாரகுண சேஷ்டிதம் முன்னாக ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும் அவதாராந்தர சேஷ்டிதங்களையுமெல்லாம் அழகர்பக்கலிலே தர்சித்தநுபவிக்கிறார்.

முத்துக்கோக்கவல்லவன் முகம்மாறிக் கோத்தவாறே அது விலைபெறுமாபோலே, அவதாரகுண சேஷ்டிதங்களுக்கும், விசேஷஜ்ஞரான இவர் சேர்த்தநுபவிக்கிற வாசியாலே நிறமும் ரஸமுமுண்டாயிருக்குமிறே. ததியவிஷயத்திலும் விசேஷணபேதத்தாலே விசேஷ்யத்துக்கு ரஸவிசேஷ முண்டாகக் கடவதிறே. ஆக, இது கீழிற்றிருமொழிக்கும் இத்திருமொழிக்கு முண்டானவிசேஷம். ... ... ... ... ... ... *

(க) பஹுமுகமாக - பலபடியாக. (உ) பர்யாப்தி - த்ர்ப்தி. (௩) முகபேதேந - வேறுவகையாலே. (ச) கீழ் உக்தப்ரகாரம் - கீழ்ச்சொன்னபடி.

மூ.—உருப்பிணிநங்கைதன்னைமீட்பான் றுடர்ந்தோடிச் சென்ற, உருப்பனையோட்டிக் கொண்டிட் டுறைத்திட்ட வுறைப்பன் மலை, பொருப்பிடைக் கொன்றைநின்று முறியாழியுங் காசுங் கொண்டு, விருப்பொடு பொன்வழங்கும் வியன்மாலிருஞ் சோலையதே.

ப-ரை.—கொன்றை - கொன்றைகளானவை, பொருப்பிடை - மலையினிடத்திலே, நின்று—, பொன் - பொன்னினாற்செய்யப்பட்டு, முறி - முறிந்த, ஆழியும் - மோதிரங்களையும், பொன்காசும் - பொற்காசுகளையும், கொண்டு - கையால்வாரி, விருப்பொடு - விருப்பத்தோடே, வழங்கும் - கொடுப்பாரைப் போலேயிருக்கையாலே, வியன் - ஆச்சர்யப்படத்தக்கதாய், மாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையென்னும் பேரையுடைத்தான, அதே - அம்மலையே; உருப்பிணிநங்கைதன்னை - ருக்மிணிப்பிராட்டியை, மீட்பான் - யுத்தம்பண்ணிமீட்பதாக, துடர்ந்து - பின்றொடர்ந்து, ஓடிச்சென்ற - ஓடிவந்த, உருப்பனை - அவள் தமயனானருக்மனை, ஓட்டி—, கொண்டு - பிடித்துக்கொண்டு, இட்டு - தேர்த்தட்டிலேயிட்டு, உறைத்திட்ட - மாநபங்கம்செய்த, உறைப்பன்-மிடுக்கையுடையவனுடைய, மலை - தேசமாம்.

வ்யா.—முதற்பாட்டு. (உருப்பிணிநங்கைதன்னை) ருக்மிணிப்பிராட்டிதன்னை. "நங்கை" என்று - இவளுடைய குணபூர்த்தியைச் சொல்லுகிறது. அதாவது - பித்ராதிகளெல்லாம் புறம்பே கொடுப்பதாக ஸங்கல்பித்து, அதுக்கீடான உத்ஸவமும் நடத்திச்செல்லாநிற்க, அந்த அந்யசேஷத்வத்துக்கு வெருவி "இவ்வளவிலே க்ர்ஷ்ணன்வந்து கைக்கொண்டிலனாகில் நான் முடிவன்" என்று (க) வ்யவஸிதையா யிருந்த குணபூர்த்தியிறே. இப்படி அவள் வ்யவஸிதையாயிருக்கிற வளவிலே, புறச்சோலையிலே நின்று ஸ்ரீபாஞ்சஜந்யத்தை முழக்கி அந்த த்வநியாலே அவளுக்கு (உ) ப்ராணப்ரதிஷ்டையைப் பண்ணி, விரைந்துசென்று கைக்கொண்டு தேரிலேயேற்றிக்கொண்டு போராநிற்கச்செய்தே (மீட்பான் துடர்ந்தோடிச் சென்ற) "இப்படி பலத்திலே கொண்டு போகையாவதென்" என்று யுத்தம்பண்ணி மீட்பதாகப் பின்பற்றி யோடிவந்த. (உருப்பனையோட்டிக்கொண்டிட்டு) ருக்மனை ஓட்டிப்பிடித்துக்கொண்டு தேர்த்தட்டிலேயிட்டு. அதாவது-ருக்மிணிப் பிராட்டிக்குத் தமையனாகையாலே, "இவனைக் கொல்லில் இவள்முகம் கருகும்" என்று அவனைப் பிடித்துக்கொண்டு வந்து தேர்த்தட்டிலே கட்டியிட்டுவைத்தமையைச் சொல்லுகிறது. (உறைத்திட்ட) சிக்கன (௩) பரிபவித்திட்ட. அதாவது - தேஜோவதமாம்படி தலையைச் சிரைக்கை முதலான பரிபவங்களைப் பண்ணுகையிறே. (உறைப்பன் மலை)

---

(க) வ்யவஸிதையாயிருந்த-நிச்சயித்திருந்த. (உ) ப்ராணப்ரதிஷ்டையைப்பண்ணி-உயிர்நிற்கும்படிபண்ணி. (௩) பரிபவித்திட்ட - மாநபங்கம்செய்த.

ருக்மிணிப் பிராட்டியைச், சிக்கனக் கைக்கொண்டு, மீட்கவந்த ருக்மனையும் பங்கித்துவிட்ட மிடுக்கையுடையவன் வர்த்திக்கிற மலை.

(பொருப்பிடைக் கொன்றை நின்று) கொன்றைகளானவை மலையிடத்திலே நின்று. (பொன் - முறியாழியும் காசுங்கொண்டு) பொன்னாலுண்டான முறிந்த மோதிரத்தையும் காசையுங்கொண்டு. முறிந்த பொன்மோதிரமும் பொற்காசும்போலே யாய்த்து-இதினுடைய பூவினுள்ளநரம்பும் இதழுமிருக்கும்படி. (விருப்பொடு வழங்கும்) இவற்றை விருப்பத்தோடே கொடாநிற்கும். பொன் மோதிரங்களையும் பொற்காசுகளையும் வாரிக்கொண்டு ஆதரத்தோடே பிறர்க்குக் கொடுப்பாரைப்போலே யாய்த்து - இவை பூச்சொரியும்படி. (வியன்மாலிருஞ் சோலையதே) இப்படி யிருந்துள்ள வளப்பத்தை யுடைத் தாகையாலே (க) விஸ்மயநீயமாய், "திருமாலிருஞ்சோலை" என்னும்பேரை யுடைத்தாயிருக்கிற வதுவே. அதுவென்று - ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. (க)

மூ.—கஞ்சனுங்காளியனுங்களிறுமருதுமெருதும்
வஞ்சனையின்மடியவ்வளர்ந்தமணிவண்ணன்மலை
நஞ்சுமிழ்நாகமெழுந்தணவிநளிர்மாமதியைச்
செஞ்சுடர்நாவளைக்குந்திருமாலிருஞ்சோலையதே.

ப-ரை.—நஞ்சு - விஷத்தை, உமிழ் - உமிழுகையாலேபசித்துக்கிடக்கிற, நாகம் - மலைப்பாம்பானது, அந்தச்சிகரத்தின்மேலேதவழுகிற, நளிர் - குளிர்ந்த, மாமதியை - பூர்ணசந்த்ரனை, தனக்குஉணவாகநினைத்து, எழுந்து - கிளர்ந்து, அணவி - கிட்டி, செம் - சிவந்த, சுடர் - தேஜஸ்ஸையுடைத்தான, நா - நாவாலே, அளைக்கும் - அளையாநின்றுள்ள, திருமாலிருஞ்சோலையதே - திருமாலிருஞ்சோலையாகிறவதுவே; கஞ்சனும் - கம்ஸனும், காளியனும் - காளியனென்னும்நாகமும், களிறும் - குவலயாபீடமென்னும்யானையும், மருதும்-யமளார்ஜுநமென்னும் இரட்டை மருதமரங்களும், எருதும்-அரிஷ்டாஸுரனுகிற ரிஷபமும், வஞ்சனையின்-தந்தாமுடைய வஞ்சனைகளாலே, மடிய - தாந்தாம் முடியும்படியாக, வளர்ந்த - திருவாய்ப்பாடியிலே வளர்ந்த, மணிவண்ணன் - நீலரத்நம்போன்ற வடிவையுடையவனுடைய, மலை - மலையாம்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) *சாதுசநத்தை நலியும் கம்ஸனும், பசுக்களும் இடையரும் தண்ணீர் குடிக்கிற பொய்கையை விஷத்தாலே தூஷித்துக் கிடந்த காளியனும், "புகுவாய்நின்ற போதகம்" என்கிறபடியே-கம்ஸனுடைய க்ரஹத்துக்குப்புகுகிற வழியிலேநின்று நலியத்தேடின ஆனையும், தவழ்ந்துபோகாநிற்க, வழியிலே நலிவதாக நின்ற யமளார்ஜுநமும், "வம்பவிழ் கானத்து மால்விடை" என்கிறபடியே - காட்டிலே நலிவதாகவந்த அரிஷ்டனுகிற ரிஷபமும். (வஞ்சனையின்மடிய வளர்ந்த) தந்தாம்

(க) விஸ்மயம் - ஆச்சர்யம்.

வஞ்சனைகளாலே தாந்தாம் முடியும்படியாகத் திருவாய்ப்பாடியிலே வளர்ந்த. காளியனுக்கு வஞ்சநமும் மடிவும் - (க) ஆத்மாபஹாரமும், (உ) அபிமாநபங்கமுமாகக் கடவது. (மணிவண்ணன் மலை) இப்படி விரோதிகள் * தேய வளர்ந்தவன் நீலரத்நம்போன்ற வடிவோடே நித்யவாஸம் பண்ணுகிற மலை.

(நஞ்சித்யாதி) * மதிதவழ்குடுமி ப்ரதேசத்திலே, நஞ்சையுமிழ்ந்து பசித்துக்கிடக்கிற மாசுணமானது, அந்தச் சிகரத்தின்மேலே தவழுகிற குளிர்ந்த பூர்ண சந்த்ரனை, தனக்கு(ங)ஆமிஷமாகக்கருதிகிளர்ந்து கிட்டி, சிவந்த தேஜஸ்ஸையுடைத்தான நாவாலே அவனையளையாநிற்கும் திருமாலிருஞ் சோலையாகிற வதுவே - மணிவண்ணன்மலை. (உ)

மூ.—மன்னுநரகன்றன்னைச்சூழ்போகிவளைத்தெறிந்து
கன்னிமகளிர்தம்மைக்கவர்ந்தகடல்வண்ணன்மலை
புன்னைசெருந்தியொடுபுனவேங்கையுங்கோங்குநின்று
பொன்னரிமாலைகள்சூழ்பொழில்மாலிருஞ்சோலையதே.

ப-ரை.—பொன்னிறத்தவான பூக்களையுடைய, புன்னையொடு - புன்னையும், செருந்தியொடு-செருந்தியும், புனம் - புனத்திலுண்டான, வேங்கையும்—, கோங்கும்—, நின்று - ஒழுங்குபடநின்று, பொன்னரிமாலைகள்—, சூழ்-சுற்றினாற்போலே யிருக்கும், பொழில் - சோலைகளையுடைய, மாலிருஞ் சோலையதே-திருமாலிருஞ்சோலையாகிறவதுவே; ஆள்வலியாலுந் தோள்வலியாலும் நமக்கழிவில்லை யென்று, மன்னு-பொருந்தியிருந்த, நரகன்றன்னை-நரகாஸுரனை, சூழ் போகி-நிரஸிக்கும் ப்ரகாரங்களை ஆராய்ந்து, வளைத்து-அவனைத் தப்பவொண்ணாதபடி வளைத்து, எறிந்து-கொன்று, அவன் கல்யாணஞ் செய்வதாகப் பொறுக்கித் திரட்டிவைத்த, கன்னி-கந்நிகைகளான, மகளிர்தம்மை-பதினாறாயிரத்தொருநூறு ஸ்த்ரீகளையும், கவர்ந்த-கொள்ளைகொண்டு தேவிமாராக்கியருளின, கடல் - கடல்போன்ற, வண்ணன் - திருநிறத்தையுடையவனுடைய, மலை-மலையாம்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (மன்னுநரகன்றன்னை) "ஆள்வலியாலும் தோள்வலியாலும் நமக்கோரலைச்சலில்லை" என்று ப்ரதிஷ்டிதனாயிருந்த நரகாஸுரனை. அதவா, விபரீதத்திலே நிலைநின்ற நரகாஸுரனை யென்னவுமாம். அதாவது-தேவர்களையடர்த்து, தேவஸ்த்ரீகளைப் பிடித்து, (ச) அதிதியினுடைய குண்டலமளவாகப் பறித்துக் கொண்டு போந்து, குடியிருக்கமாட்டாமல் இந்த்ரன் வந்து ஸ்ரீமத் த்வாரகையிலே கூப்பிடும்படி பண்ணினவனிறே. (சூழ்போகிவளைத்தெறிந்து) இந்த்ரன் வந்து விண்ணப்பஞ்செய்த வநந்தரம், "இனி யிவனை நிரஸிக்கக் கடவோம்" என்று

(க) ஆத்மாபஹாரம்-ஸ்வதந்த்ரனென்கிறநினைவு. (உ) அபிமாநம்-கர்வம். (ங) ஆமிஷம் - உணவு. (ச) அதிதி - கச்யப்ரஜாபதியின் மனைவி.

நிரவிக்கும் ப்ரகாரமும் திருவுள்ளத்திலே விசாரித்து, ஸத்ய பாமைப் பிராட்டியோடே கூடப் பெரியதிருவடியை மேற்கொண்டு திருவாழி தொடக்கமான திவ்யாயுதங்களோடே ப்ராக்ஜ்யோதிஷ புரத்திலே எழுந்தருளி, தப்பவொண்ணாதபடி அவனைவளைத்துக் கொன்று. சூழ்ச்சியாவது -(க) விசாரம்;வளைத்தல்-போக்கறுத்தல் ; எறிதல் -(உ) சேதிந்தலாய், திருவாழியாலே யறுத்துப் பொகட்டமையைச் சொல்லுகிறது. (கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்த) அவன்றான் பாணிக்ரஹணம் பண்ணுவதாக அங்குமிங்கும் தெரிந்து பொறுக்கிக்கொண்டுவந்து திரட்டிவைத்த கந்நிகைகளான பதினாறாயிரத் தொருநூறு ஸ்த்ரீகளையும் கைக்கொண்டுபோந்து,ஸ்ரீமத்த்வாரகையிலே பாணிக்ரஹணம் பண்ணி, தனக்கு தேவிமாராக்கியருளின. (கடல்வண்ணன் மலே)நரகவதம்பண்ணி இந்த்ராதி தேவர்களை ரக்ஷிக்கையாலும், அவன் திரட்டிவைத்த கந்நிகைகளைக் கைக்கொண்டு திருமணம் புணர்ந்து அவர்களை யுகப்பிக்கையாலுமுண்டான ஹர்ஷத்தாலே, கடல்போன்ற திருநிறத்தையுடையனாயிருந்தவன் நித்யவாஸம்பண்ணுகிற மலே.

(புன்னையித்யாதி) (ங) பொற்கென்றபூக்களையுடைத்தான புன்னையும் செருந்தியும் புனத்திலுண்டான வேங்கையும் கோங்கும் ஒருங்குபடநின்றுபூக்கையாலே, திருமலையாழ்வார்க்குப்பொன்னரிமாலைகள் சுற்றினாற்போலே யிருக்கும் பொழில்களையுடைய மாலிருஞ் சோலையாகிற வதுவே-கடல்வண்ணன்மலே. (ங)

மூ.—மாவலிதன்னுடையமகன்வாணன்மகளிருந்த
காவலேக்கட்டழித்ததனிக்காளேகருதுமலே
கோவலர்கோவிந்தனேக்குறமாதர்கள்பண்குறிஞ்சிப்
பாவொலிபாடிநடம்பயின்மாலிருஞ்சோலேயதே.

ப-ரை.—கோவலர் - கோரக்ஷணம்பண்ணும் இடைச்சாதியிலே பிறந்து, கோவிந்தனே - கோவிந்தாபிஷேகம் பண்ணினவன் விஷயமாக, குறமாதர்கள்-குறப்பெண்களானவர்கள், குறிஞ்சிப்பண் - குறிஞ்சிராகத்தோடுகூடின, பாபாட்டுக்களாலே, ஒலி-இசைபெறும்படி,பாடி—, நடம்பயில்-பாட்டுக்கநுரூபமாகக்கூத்தாடாநின்றுள்ள, மாலிருஞ் சோலேயதே - திருமாலிருஞ் சோலேயாகிற வதுவே ; மாவலிதன்னுடைய - மஹாபலியினுடைய, மகன்-புத்ரனான, வாணன்மகள் - பாணஸுரன்மகளான வுஷைக்கு, இருந்த - அவள் தகப்பனாலேசெய்யப்பட்டிருந்த, காவலே - காவலேயெல்லாம், தன் திருப்பேரனான அநிருத்தாழ்வான் அவளைக்களவிலே புணருகையால் வந்த சிறையை மீட்கைக்காக, கட்டழித்த-அரணழித்துப் பொகட்ட, தனி-ஒப்பற்ற, காளே-யௌவநத்தையுடையவன், கருதும்-பரமபதத்திலும் மேலான ஸ்தாநமாக நினைத்து நித்யவாஸம்பண்ணுகிற, மலே - மலேயாம்.

---

(க) விசாரம் - ஆராய்ச்சி. (உ) சேதித்தல் - அறுத்தல். (ங) பொற்கென்ற - பொன்னேடொத்த.

வ்ா.—நாலாம்பாட்டு. (மாவலியித்யாதி) மஹாபலிபுத்ரனை பாணனுடைய மகளானஉஷை யிருந்த. இத்தால் - அவளுக்கு பிதாவாய் அபிமாநியானவனுடைய பலமும், அவன் இவளுடைய வைலக்ஷண்யத்துக்கீடாக வைத்தஅரணும் தோற்றுகிறது. (காவலைக்கட்டழித்த) அவளிருந்த கந்யாக்ர்ஹத்தில் பிதாவானவன்செய்துவைத்த காவலையெல்லாவற்றையும், பேரனை அநிருத்தாழ்வானுக்காகச்சென்று, அரணழித்த. அதாவது - அநிருத்தாழ்வானைச் சிறைவைத்த நிமித்தமாகவிறே வாணபுரத்துக்கெழுந்தருளி வாணனைஜயித்தது. அவனைஜயித்தபின்பிறே உஷை அநிருத்தனுக்கு சேஷமாய்த்து. அத்தைப்பற்ற- "காவலைக்கட்டழித்த" என்கிறது. (தனிக்காளைகருதும்மலை) "காமனைப்பயந்தகாளை" என்னுமாபோலே, காமனைப்பெற்றபின்பும் அத்விதீயமான யௌவநத்தையுடையனாயிருந்தவன், "பரமபதத்திலுங்காட்டில் இதுவே நமக்குவாஸஸ்தாநம்" என்று கருதி நித்யவாஸம்பண்ணுகிற மலை.

(கோவலர்கோவிந்தனை) கோரக்ஷணம்பண்ணுகிற ஜாதியிலே பிறந்து அவர்களிலே ஒருவனாய், கோவிந்தாபிஷேகம்பண்ணினவனை. (குறமாதர்கள்) குறப்பெண்களானவர்கள். (பண்குறிஞ்சிப்பாவொலிபாடிநடம்பயில்மாலிருஞ்சோலையதே) குறிஞ்சிப்பண்ணோடேகூடின பாட்டுக்களாலே ஒலிபெறப்பாடி, அப்பாட்டுக்கநுரூபமான ந்ர்த்தத்தைப் பண்ணுநின்றுள்ள மாலிருஞ்சோலையாகிற வதுவே - தனிக்காளைகருதும்மலை. (ச)

மூ.—பலபலநாழஞ்சொல்லிப்பழித்தசிசுபாலன்றன்னை
அலைவலைமைதவிர்த்தவழகனலங்காரன்மலை
குலமலைகோலமலைகுளிர்மாமலைகொற்றமலை
நிலமலைநீண்டமலைதிருமாலிருஞ்சோலையதே.

ப - ரை.—குலமலை - * தொண்டக்குலத்துக்குத் தலையானமலையாயும், கோலம்மலை - அழகியமலையாயும், ரக்ஷ்யவர்க்கம்பெருமையாலும் ரக்ஷகனைப் பெருமையாலும் சேஷி சேஷபூதர்களுக்குண்டானவெப்பத்தை ஆற்றவற்றான, குளிர் - குளிர்த்தியானது, மா - மிக்கிருந்துள்ள, மலை - மலையாயும், தன்னடியாரை ஸம்ஸாரம் மேலிடாதபடி நோக்கும், கொற்றம் - வெற்றியையுடைய, மலை - மலையாயும், நிலம் - மரம்முதலியன முளைக்கைக்குத்தக்க மண்பாட்டையுடைய, மலை - மலையாயும், நீண்ட - ஓக்கத்தையுடைய, மலை - மலையாயுமிருந்துள்ள, திருமாலிருஞ்சோலையதே - திருமாலிருஞ்சோலையாகிற வதுவே; பலபலநாழம் - பலபலகுற்றங்களை, சொல்லி—, பழித்த - நிந்தித்த, சிசுபாலன்றன்னை - சிசுபாலனை, அலைவலைமை தவிர்த்த - அலைவலைத்தனத்தைப்போக்கி ரக்ஷித்த, அழகன் - அழகையுடையனாய், அலங்காரன் - அலங்காரத்தையுமுடையனானவன் நித்யவாஸம்பண்ணுகிற, மலை - தேசமாம்.

வ்ா.—அஞ்சாம்பாட்டு. (பலபலவித்யாதி) பலபலகுற்றங்களைச்சொல்லி நிந்தித்தசிசுபாலன்றன்னை. இவன்சொல்லும் தோஷ

ங்கள் அநுகூலர்வாக்கால் சொல்லத்தக்கதல்லாமையாலே "நாழ்" என்கிறது. நாழ் - குற்றம். அதுதனக்கு ஒருஸங்க்யையில்லாமையாலே "பலபல" என்கிறது. அதுதன்னை நெஞ்சால்நினைத்திருக்குமளவன்றிக்கே, பிறரறியும்படி வாய்விட்டுச்சொல்லுவதே! என்று "சொல்லி" என்கிறது. "கேட்பார்செவிசுடுகீழ்மை வசவுகளே வையும்" என்றாரிறே - ஆழ்வார். அதாவது - பகவந்நிந்தைக்கு ஜீவநம்வைத்துக் கேட்குமவர்களுடைய செவிக்கும் சுடும்படியான தண்ணியவசவுகளேசொல்லி வைகை. "சேட்பால்பழம்பகைவன்" என்று அதுக்கடியும் அருளிச்செய்தாரிறே - அவர்தாமே; அதாவது- ஹிரண்யராவணஜந்மங்களேதுடங்கி மிகவும் ஸ்வபாவமாய்க்கொண்டுவருகிற பழையதான பகையை யுடையவனென்றபடி. இவன் ஓரோஜந்மங்களிலேபண்ணின ப்ராதிகூல்யத்துக்கு ஓரளவில்லையிறே. அவ்வவஜந்மங்களிலுண்டான காலத்தின்மிகுதியையும், பண்ணினப்ராதிகூல்யத்தினுடைய மிகுதியையும்,இவையெல்லாவற்றையும் நினைக்கிறது - பகையினுடைய பழமையாலே. அந்தவாஸநையாய்த்து - இந்தஜந்மத்தில் இவன் இப்படிநிந்தைபண்ணித் திரிகைக்குஹேது. இப்படி இவன்செய்துதிரிந்த கொடுமையைநினைத்திறே - "சிசுபாலனை" என்னாதே, "தன்னை" என்று இவர் ஊன்றியருளிச்செய்தது. (அலைவலைமைதவிர்த்தவழகன்) சரமதசையிலே தன்னழகைக்காட்டித் தன்னளவில் த்வேஷத்தை மாற்றுகையாலே, "தான்" என்றால் நிந்தித்துக்கொண்டுதிரியும் அலைவலைத்தனத்தைப் போக்கி ரக்ஷித்தவன். (அலங்காரன்மலை) இப்படியிருந்துள்ள அழகுக்குமேலே * முடிச்சோதிப்படியே உண்டான அலங்காரத்தையுமுடையவன் நித்யவாஸம்பண்ணுகிற திருமலை.

(குலமலை) * தொண்டக்குலத்துக்குத் தலையானமலை. (கோலமலை) அழகர்க்கும் ஆச்ரிதர்க்கும் அநவரதாநுபாவ்யமான அழகையுடையமலை. (குளிர்மாமலை) ரக்ஷகனானவனுக்கு ரக்ஷ்யவர்க்கம் பெறுமையால்வரும் தாபத்தையும், ரக்ஷ்யபூதரான விவர்களுக்கு ரக்ஷகனைப் பெறுமையால்வரும் தாபத்தையும் ஆற்றும்படியான குளிர்த்தி மிக்கிருக்கிற மலை. (கொற்றமலை) தன்னபிமாநத்திலேயொதுங்கினாரை ஸம்ஸாரம் மேலிடாதபடிநோக்கும் வெற்றியையுடைத்தான மலை. (நிலமலை) மணிப்பாறையாயிருக்குமளவன்றிக்கே, ஸூரிகளுக்கும் முமுக்ஷுக்களுக்கும் புஷ்ப பல த்ருமாதிகளாய் முளைக்கவும், "முளைக்கவேணும்" என்று ப்ரார்த்திக்கைக்கும் யோக்யமான மலை. (நீண்டமலை) பரமபதத்துக்கும் ஸம்ஸாரத்துக்கும் இடைவெளியற்று ஒரு கோவையாம்படியான ஓக்கத்தையுடையமலை. இப்படியிருக்கிற திருமாலிருஞ்சோலையாகிற வதுவே- அலங்காரன்மலை. (ரு)

மூ.—பாண்டவர்தம்முடையபாஞ்சாலிமறுக்கமெல்லாம்
ஆண்டங்குநூற்றுவர்தம்பெண்டிர்மேல்வைத்தவப்பன்மலை
பாண்டகுவண்டினங்கள்பண்கள்பாடிமதுப்பருகத்
தோண்டலுடையமலைதொல்லைமாலிருஞ்சோலையதே.

ப-ரை.—பாண் - ஆளத்திவைத்துப்பாடுகைக்கு, தகு - தகுதியான, வண்டினங்கள் - வண்டினங்களானவை, களிப்பின்மிகுதியாலே, பண்கள்-பலவகைப்பட்ட பண்களை, பாடி - பாடிக்கொண்டு, மது - மதுவை, பருக - பானம்பண்ணிச் செல்லும்படியாக, திருச்சோலைகள் ஒருகாலும் வாடாமல்வளர்ந்து செல்லத்தக்க, தோண்டலுடைய - ஊற்றுடைத்தான, மலை - மலையாய், தொல்லை - அநாதியாய்க்கொண்டு, மாலிருஞ்சோலையதே - திருமாலிருஞ்சோலையென்னும் திருநாமத்தையுடைத்தாயிருக்கிற அம்மலையே; பாண்டவர்தம்முடைய-பாண்டு மஹாராஜாவின் புத்ரர்களான தர்மபுத்ரர், அர்ஜுநன், பீமன், நகுலன், ஸஹாதேவனென்பவர்களுடைய மனைவியான, பாஞ்சாலி - பாஞ்சாலராஜாவின் மகளுடைய, மறுக்கமெல்லாம் - வருந்துதலையெல்லாம், ஆண்டு - திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருந்து, அங்கு - அவள்பரிபவப்பட்டபோதுண்டானதுன்பங்களையெல்லாம், நூற்றுவர்தம் - துர்யோதநனது நூறுதம்பிமாருடைய, பெண்டிர்மேல்வைத்த - ஸ்த்ரீகள்பக்கலிலேயாம்படிபண்ணி, அப்பன்-த்ரௌபதிக்கு மாநபங்கம்வாராதபடி புடைவைசுரக்கும்படிபண்ணினஉபகாரகனுடைய, மலை - தேசமாம்.

வ்யா.—ஆறும்பாட்டு. (பாண்டவரித்யாதி) பாண்டுபுத்ரர்களுடைய (க) மஹிஷியாய், பாஞ்சாலராஜ புத்ரியாயிருக்கிறவளுடைய மறுகுதலெல்லாவற்றையும். இத்தால் - இவள்புகுந்தவிடத்தின் பெருமையும் பிறந்தவிடத்தின் பெருமையும் பார்த்தால், இம்மறுக்கம் வருகைக்கு (உ) யோக்யதை யில்லாதவளென்கை. "பாண்டவருடைய" என்னாதே, "தம்முடைய" என்றது - ஓரொருத்தரோ தன்னை ரக்ஷிக்கைக்கீடான சக்திமான்களானவர்களை பர்த்தாக்களாகவுடையவளென்று தோற்றுகைக்காக. ஆனால், இவர்கள்தான் இப்படி இவளை ரக்ஷியாமல் மறுகவிட்டிருப்பானென்னென்னில்; "பொய்ச் சூதில்தோற்ற பொறையுடைமன்னர்"என்கிறபடியே-க்ர்த்ரிம த்யூதத்திலே இவளையும் தோற்றவர்களாகையாலே (௩) தர்மபீருக்களாய்ச் செய்யலாவதற்று, தங்கள்பொறையாலே நிலத்தைக்கீறி யிருந்தார்க ளித்தனையிறே. ஸந்நிஹிதரான பர்த்தாக்கள் கைவாங்கியிருக்கையாலும், பிதாவானவன் அஸந்நிஹித னாகையாலும், தான் (ச) அபலையாகையாலும், (ரு) ப்ரபலரானவர்கள் நலிகையாலும் வந்த மறுக்கமிறே யிது. "மறுக்கமெல்லாம்" என்றது - "அந்தகன் சிறுவனரசர்தமரசற்கிளையவனணியிழையைச்சென்று - எந்தமக்

(க) மஹிஷி - மனைவி. (உ) யோக்யதை - ஹேது. (௩) தர்மபீருக்கள் - தர்மத்துக்கு அஞ்சிநடப்பவர்கள். (ச) அபலை - பெண்பிள்ளை. (ரு) ப்ரபலர் - வலியுடையவர்கள்.

குரிமை செய்யென" என்கிறபடியே-குருடன் பெற்ற பிள்ளையாகை யாலே அறிவுகேடு வழிவழியாய்,பிதாவானவன் கண்ணஞ்ச வளர்க்க வளருகையன்றிக்கே, தான்கண்டபடி மூலையடியே திரிந்தவனாய், அதுக்குமேலே, ராஜராஜனான துர்யோதநனுக்குப்பின்பிறந்தவனாய், அவன் கொண்டாடி வளர்த்த செருக்காலே தீம்பிலே தகணேறின (க) துச்சாஸநனென்கிற முரட்டுப்பயல், மஹோத்ஸவமாகையாலே ஆபரணங்களாலே அலங்க்ருதையாய் (உ) ஆர்த்தவ தோஷயுக்தை யாயிருக்கிறவள் பக்கலிலே கிட்டி, "சூதிலே உன்னையும் தோற்றார் கள், நீ போந்து எங்களுக்கு இழிதொழில் செய்" என்று சொல்ல; அவள், "రజస్వలైకవస్త్రాహం నతుమాన్నేతుమర్హసి । గురూణాం పురస్థాతుం సభాయాం నాహముత్సహే" "ரஜஸ்வலைகவஸ்த்ராஹம் நதுமாந்நேதுமர்ஹஸி। குரூணாம்புரஸ்தாதும் ஸபாயாம் நாஹமுத்ஸஹே" என்றவள வில், விடாதே மயிரைப்பிடித்து இழுத்துக் கொண்டுபோந்து மஹாஸபையிலே நிறுத்தி, (ந) பரிபவோக்திகளைப்பண்ணி (ச) வஸ்த்ரத்தை அபஹரித்துச் செய்கிறபோது அவள் பட்டமறுக்கங் கள் அநேகமாகையாலே.—(ஆண்டு) அவை யெல்லாவற்றையும் ஒன் றொழியாமல் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருந்து. (அங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல்வைத்த) அவள் பரிபவப்பட்ட அத் தசையிலே அவளைப் பரிபவிப்பித்த துர்யோதநாதிகள் நூற்றுவரு டையவும்ஸ்த்ரீகள்பக்கலிலேயாம்படி பண்ணின. "சந்தமல் குழ லாளலக்கண் நூற்றுவர்தம்பெண்டிரு மெய்தி" என்றாரிறே - திரு மங்கையாழ்வாரும். இனி நூலிழந்ததிறே இவளில் அவர்களுக்கே ற்றம். (அப்பன்) (ரு) சரணாகதையான (சா) த்ரௌபதிக்குச் செய் த உபகாரம் தமக்குச் செய்ததாக நினைத்து "அப்பன்" என்கிறார்; ஆச்ரிதரிலே ஒருவர்க்குச் செய்தது தமக்குச் செய்ததாக நினைத்தி ராதவன்று பகவத்ஸம்பந்தம் இல்லையாகக் கடவதிறே. (மலை) இப் படியிருக்கிற வுபகாரகனானவன் (எ) ஆச்ரித ஸம்ரக்ஷணார்த்த மாக நித்யவாஸம் பண்ணுகிற மலை.

(பாண்டகு வண்டினங்கள்) பாண்-பாட்டு. பாட்டுக்குத்தகுதி யான வண்டினங்கள். அதாவது-பிறப்பே பிடித்து பாட்டே யொழி யவேறொன்றறியாததா யிருக்கை. (பண்கள்பாடி மதுப்பருக) ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே நாநாவான பண்களைப் பாடிக்கொண்டு மதுபாநம்

(க) துச்சாஸநன் - துர்யோதநனுடையதம்பி. (உ) ஆர்த்தவதோஷயு க்தை-ருதுதோஷமுடையவள். (ந) பரிபவோக்தி - அவமானச்சொற்கள். (ச) வஸ்த்ரத்தையபஹரித்து - துகிலுரிந்து. (ரு) சரணாகதை - அடைக்கலம்புகுந்த வள். (சா) த்ரௌபதி - த்ருபதமஹாராஜாவின்மகள். (எ) ஆச்ரிதஸம்ரக்ஷணார் த்தமாக - அடுத்தவரைக்காப்பாற்றுகைக்காக.

பண்ணிச் செல்லும்படியாக. (தோண்டலுடையமலை) திருச்சோலைகள் ஒருகாலும் வாடாமல் நித்யவஸந்தமாய்ச் செல்லும்படி ஊற்றுடைத்தான மலை. (தொல்லைமாலிருஞ் சோலையதே) திருவநந்தாழ்வானே திருமலையாழ்வாராய் வந்து நிற்கையாலே, அநாதியாய்க்கொண்டு பழையதாய் மாலிருஞ்சோலையென்னும் திருநாமத்தை யுடைத்தா யிருக்கிற வதுவே - அப்பன்மலை. தோண்டல்-ஊற்று. (௬)

மூ.—கநங்குழையாள்பொருட்டாக்கணைபாரித்தரக்கர்தங்கள்
இனங்கழுவேற்றுவித்தவெழிற்றோளெம்மிராமன்மலை
கநங்கொழிதெள்ளருவிவந்துசூழ்ந்தகன்ஞாலமெல்லாம்
இனங்குழுவாடுமலையெழின்மாலிருஞ்சோலையதே.

ப-ரை.—கநம் - பொன்னை, கொழி - கொழித்துக்கொண்டு வாராநின்றுள்ள, தெள் - தெளிந்த, அருவி - அருவியிலே, அகல் - பரப்பையுடைத்தான, ஞாலமெல்லாம் - பூமியிலுள்ளாரெல்லாரும், வந்து —, சூழ்ந்து-சூழ்ந்துகொண்டு, இனங்குழு - திரள்திரளாக, ஆடும் - நீராடாநின்றுள்ள, மலை - மலையாய், எழில் - எல்லாநன்மைகளும் வாய்ந்த, மாலிருஞ்சோலையதே - திருமாலிருஞ்சோலையாகிற வதுவே; கநம்-பொன்னாற்செய்யப்பட்ட, குழையாள்பொருட்டா - காதணியையுடைய பிராட்டிக்காக, கணை - திருச்சரங்களை, பாரித்து - பரப்பிக்கொண்டு, அரக்கர்தங்கள் இனம் - ராக்ஷஸருடைய திரள்களை, கழு - அம்புகளாகிற கழுக்களிலே, ஏற்றுவித்த - ஏறும்படி செய்த, எழில் - வீரஸ்ரீயால்வந்த அழகிய, தோள் - தோளையுடையனாய், எம் - நமக்கெல்லா முபகாரகனாய், இராமன் - எல்லாரையும்ரமிப்பிக்குமவன் வர்த்திக்கிற, மலை - தேசமாம்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (கநங்குழையாள் பொருட்டா) கநம்-பொன். பொன்னாலே செய்யப்பட்ட காதுப்பணியை யுடையவள் காரணமாக. இவள்காதும் காதுப்பணியுமான சேர்த்தி எப்போதும் பெருமாள்திருவுள்ளத்திலே கிடக்கும்போலே காணும்; "[illegible]" "[illegible]" என்று-இவர்தம்முடைய காதுப்பணியும் முகமுமானசேர்த்தியை அநுகூலர்காண ஆசைப்பட்டிருக்குமாபோலே. (கணைபாரித்து) அவளைப்பிரிந்தநாள்துடங்கி, நினைத்தநினைத்தபோதெல்லாம் பிரித்தவர்களைநிரஸிக்கையி லுண்டான கறுவுதலாலே திருச்சரங்களைத்தெரிந்து பரப்பிப் பாரித்துக்கொண் டிருந்தென்னுதல். அன்றிக்கே, யுத்தகாலந்தன்னிலே "வாளிபொழிந்த" என்கிறபடியே - திருச்சரங்களை யுத்தபூமியெங்கும் பரப்பி யென்னுதல். (அரக்கர்தங்களினம் கழுவேற்றுவித்த) ராக்ஷஸருடைய திரளை, * கூர்வாயம்புகளான கழுக்களிலே யேற்றுவித்த. கழுப்போலே உடலைப்பிளந்து மறுபாடுருவ நிற்கையாலே, அம்பை

"கழு" என்கிறது. அன்றிக்கே, "கழுகேற்றுவித்த" என்று பாடமாகில் - ராக்ஷஸருடைய திரளைக் கொன்று கழுகுகளேறி ஜீவிக்கும்படி பண்ணினவனென்கை. (எழில்தோளெம்மிராமன்மலை) வீரஸ்ரீயால் வந்த அழகையுடைத்தான தோளை யுடையனாய், ஜநநியான பிராட்டிக்கு உதவுகையாலே அவளுடைய ப்ரஜைகளான நமக்கெல்லாம் உபகாரகனாய், அழகாலுங் குணங்களாலும் ஸர்வரையும் ரமிப்பிக்கையாலே "ராமன்" என்னும் திருநாமத்தை யுடையவன், அவதாரத்திற் பிற்பாடர்க்கும் உதவுகைக்காக எழுந்தருளி நிற்கிற மலை.

(கநங்கொழிதெள்ளருவி) பொன்னைக்கொழித்துக்கொண்டு வாராநின்றுள்ள தெளிந்த அருவியிலே. (வந்து சூழ்ந்தகன் ஞாலமெல்லாம்) பரப்பையுடைத்தானபூமியிலுள்ளா ரெல்லாரும் வந்து சூழ்ந்து கொண்டு. (இனங்குழுவாடும்மலை) திரள் திரளாக தீர்த்தமாடாநிற்கும் மலையான. (எழில்மாலிருஞ்சோலையதே) ஸர்வப்ரகாரவிலக்ஷணமா யிருந்துள்ள மாலிருஞ்சோலையாகிற வதுவே - இராமன் மலை. (எ)

மூ.—எரிசிதறுஞ்சரத்தாலிலங்கையினைத்தன்னுடைய
வரிசிலைவாயிற்பெய்துவாய்க்கோட்டந்தவிர்த்துகந்த
அரையனமருமலையமரரொடுகோனுஞ்சென்று
திரிசுடர்சூழுமலைதிருமாலிருஞ்சோலையதே.

ப - ரை.—அமரரொடு - தேவர்களோடேகூட, கோனும் - அவர்களுக்கு அரசனான இந்த்ரனும், திரி - இரவும் பகலும் சஞ்சரியாநின்றுள்ள, சுடரும் - சந்த்ர ஸூர்யர்களும், சென்று - வந்து, சூழும் - ப்ரதக்ஷிணம்பண்ணுநிற்கும், மலை - மலையாய், திருமாலிருஞ்சோலையதே - திருமாலிருஞ்சோலையாகிற வதுவே; எரி - நெருப்பை, சிதறும் - சிதறுநின்றுள்ள, சரத்தால் - அம்பாலே, இலங்கையினை - லங்கைக்குத்தலைவனான ராவணனை, தன்னுடைய—, வரி - வரியை யுடைத்தாயிருந்துள்ள, சிலை - ஸ்ரீசார்ங்கத்தினது, வாயில் - வாயிலே, பெய்து - புகுவித்து, வாய்க்கோட்டம் - "நநமேயம்" என்ற அவன்வாய்மதத்தை, தவிர்த்து - நீக்கி, உகந்த - ஸந்தோஷித்த, அரையன் - அரசனானவன், அமரும் - நித்யவாஸம்பண்ணுகிற, மலை - மலையாம்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (எரிசிதறும் சரத்தால்) நெருப்பைச் சிதறுநின்றுள்ள அம்பாலே. தொடுத்துவிடும்போதாய்த்து "அம்பு" என்றறியலாவது. தைக்கும்போது உடம்பிலே நெருப்பைச் சொரிந்து கொண்டாய்த்துத் தைப்பது. "தீப்தபாவகஸங்காசை:" "தீப்தபாவகஸங்காசை:" என்றானிறே. அதாவது-எதிரிகள் மேலேபடும்போது ஜ்வலித்த அக்நியோடு துல்யங்களாயிருக்கு மென்கை. (இலங்கையினை) (க) அந்தகனுங்கூட ப்ரவேசிக்க அஞ்சும்படியான

(க) அந்தகன் - இயமன்.

ஆனை. வரங்கொடுத்த ப்ரஹ்மாதிகளும் இவ்வூரின்பேர் கேட்டால் குடல்கரிந்து கிடக்கும்படியாயிறே யிருப்பது. ஆதித்யனும், இவ்வூரில் புழுங்க வுலர்த்துகை முதலானவற்றுக்கு வேண்டுமளவு தன்கிரணங்களை ப்ரகாசிப்பித்து, நடுங்கியொடுங்கிக் கொண்டிறே போருவது; ஆகையாலிறே, ராவணன் பட்டுக்கிடக்கிறபோது மண்டோதரி "ஸூர்யதேஜஸ் ப்ராப்தே பரிபவே நவே। அத்யைவ நிர்வ்யஸநாம் லங்காம் ப்ரவிஷ்டாஸ் ஸூர்யரச்மய:" "உத்திஷ்டோத்திஷ்ட கிம்ஶேஷே ப்ராப்தேவாஹவே நவே। கஸ்மாத்வநிர்ஜயாம் லங்காம் ப்ரவிஷ்டாஸ் ஸூர்யரச்மய:" என்றது. இப்படி யிருக்கிற வூனையாய்த்து மனுஷ்ய ரூபமாய் நின்று சரங்களாலே யழியச்செய்தது. (தன்னுடைய வரிசிலை வாயில் பெய்து) (க) தனக்கு அஸாதாரணமாய், அழகுக்குடலான வரியை யுடைத்தா யிருந்துள்ள ஸ்ரீசார்ங்கத்தினுடைய வாயிலே புகுவித்து. வில்லுக்கு வாய் - அம்பிறே. வாயான அம்பிலே புகும்படி ப்ரவேசிப்பித்து. ஸர்ப்பம் நாவாலே விழுங்குமாபோலே யாய்த்து - வில்லும் அம்பாலே க்ரஸிக்கும்படி. இத்தால் - ஈச்வரத்வப் (உ) பிடாரலன்றிக்கே, "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" "ஸுதாநாம் ஶோக நஷ்டம் ஶோகேந்த்ர" என்கிற அவதாரத்தின் மெய்ப்பாடு தோன்ற நின்று, அம்புகளாலே அழியச் செய்தபடி சொல்லுகிறது.(வாய்க்கோட்டம்தவிர்த்து) வாக்கின், கோடுதலுண்டு - விலங்குதல், அத்தைத்தவிர்த்தானுய்த்து. 'நநமேயம்'' "நநமேயம்" என்றிருந்த விருப்பைத் தவிர்த்தானுய்த்து. [ஸ்ரீஹரி-கவஸ்விசு] இவர் தம்மை இதரஸஜாதீயராக்கி வைக்கையாலே "மனுஷ்யர்" என்றே யிருந்தான். "இவனோ யன்றிக்கே, 'ஈச்வரன்' என்று சொல்லுகிறவவன்றான் வந்தாற்றான் வணங்குவனோ" என்றானிறே. ஸ்வரூபம் கைப்புகுந்தால் "நம இத்யேவவாதிந:" "நமேஜ தேவவாதிநம்" என்றாய்த்திருப்பது; "மம" என்றிருக்கையாய்த்து ஸ்வரூபவிரோதி. (௩) அநுகூலபாஷணம் பண்ணுகை ப்ராப்தமாயிருக்க, "எனக்கு" என்ற பேச்சில் விலங்குதலைத் தவிர்த்தானுய்த்து. (உகந்தவனையன்) ஈரரசு தவிர்த்த பின்பு உகந்தபடி. இவன்றான் "எனக்கு" என்றிருக்குமத்தைத் தவிர்த்தோமாகில், இனிநம்மதேயன்றோவென்று இனியனானன்; இவன் "என்னது" என்றிருக்குமது தவிர்ந்தால், பின்பு உள்ளதடையத் திருவிடையாட்டமா யிருக்குமிறே. (அனையன்) இவன்பக்கல் அல்பாநுகூல்ய மமைகிறது உடையவனாகையிறே. இவன் ப்ராதிகூல்யத்திநின்றும் நிவர்த்தனானளவுகொண்டு உகக்கும்படியாய்த்து ஸ்வாபாவிக ஸம்பந்தம் இருப்பது. (அமருமலை) இப்படி யிருக்கிறவன், பின்பு எல்லாருடைய

(க) தனக்கு அஸாதாரணமாய்-தனக்கேயுரியதாய். (உ) பிடார் - பெருமை. (௩) அநுகூலபாஷணம் - நல்வார்த்தை.

வும் ஸ்வாதந்த்ர்யத்தைப் போக்கி ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற மலை.

(அமரரொடுகோனும்) தேவர்களோடேகூட அவர்களுக்கு நிர்வாஹகனை இந்த்ரனும். (திரிசுடரும்) லோகோபகாரமாக பகவதாஜ்ஞையாலே இரவுபகல் வெளிச்செறிப்பைப்பண்ணிக்கொண்டு ஸஞ்சரியாநின்றுள்ள சந்த்ர ஸூர்யர்களும். கீழ்ச்சொன்ன (க) அபிசப்தம் இங்கும் கூட்டிக்கொள்ளக்கடவது. (சென்று-சூழும் மலை) வந்து, தந்தாமுடைய (உ) ஸ்தைர்யார்த்தமாக ப்ரதக்ஷிணம்பண்ணாநிற்கும்மலை. தங்களை நெருக்கிக்கொண்டுதிரிந்த ராவணனை நிரஸித்த உபகாரஸ்ம்ர்தியாலும் வந்து ப்ரதக்ஷிணம்பண்ணாநிற்பர்களிறே. (திருமாலிருஞ்சோலையதே) இப்படியிருந்துள்ள திருமாலிருஞ்சோலையாகிறவதுவே-அணாயனமரும்மலையென்கை. (அ)

மூ.—கோட்டுமண்கொண்டிடந்து குடங்கையின் மண்கொண்டளந்து
மீட்டுமதுண்டுமிழ்ந்துவிளையாடுவிமலன்மலை
யீட்டியபல்பொருள்களெம்பிரானுக்கடியிறையென்
றோட்டருந்தண்சிலம்பாறுடைமாலிருஞ்சோலையதே.

ப-ரை.—ஈட்டிய - பெருகிவரும்போது வாரிக்கொண்டுவருகிற, பல்பொருள்கள் - பொன் முத்து அகில் சந்தநம் முதலிய பலவகைப்பட்ட பொருள்களெல்லாம், எம் - என்னுடைய, பிரானுக்கு - நாதனானவனுக்கு, அடியிறையென்று-ஸ்ரீபாதகாணிக்கையென்று, இவற்றை ஸமர்ப்பிக்கையிலுண்டான விரைவாலே, ஒட்டரும் - ஓடிவாராநிற்பதாய், தண் - நீராடுமவர்களுடையவருத்தமெல்லாம்திரும்படி குளிர்ந்திருப்பதான, சிலம்பாறுடை - திருச்சிலம்பாற்றையுடைய, மாலிருஞ்சோலையதே - திருமாலிருஞ்சோலையாகிறவதுவே; மஹாவராஹமாய்க்கொண்டு, மண் - ஹிரண்யாக்ஷனாலே தள்ளப்பட்டு ப்ரளயகதையான பூமியை, இடந்து-அண்டச்சுவரினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்து, கோடு-தன் திருஎயிற்றிலே, கொண்டு - தரித்தும், பின்பு * குறட்பிரமசாரியாய்க்கொண்டு, மண் - மஹாபலியாலே அடஹரிக்கப்பட்ட பூமியை, குடங்கையில் - உள்ளங்கையிலே, கொண்டு - நீரேற்றுவாங்கிக்கொண்டு, அளந்து - அளந்தும், மீட்டும் - மறுபடியும், அது - அந்தபூமியை, ப்ரளயங்கொள்ளாதபடி, உண்டு-தன்திருவயிற்றினுள்ளேவைத்துநோக்கி, உமிழ்ந்து-வெளிநாடுகாண உமிழ்ந்தும், விளையாடும் - விளையாடாநின்றுள்ள, விமலன் - நிர்மலனானவனுடைய, மலை-மலையாம்.

வ்ா.—ஒன்பதாம்பாட்டு. (கோட்டுமண் கொண்டிடந்து) ஹிரண்யாக்ஷனாலே தள்ளப்பட்டு (ங) ப்ரளயகதையான பூமியை, நீருக்கும் சேற்றுக்கும் இறாயாத வராஹவேஷத்தைக் கொண்டு புக்கு அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுத்துத் திருவெயிற்றிலேகொண்டு. (குடங்கையில் மண்கொண்டளந்து) பின்பு மஹா

(க) அபிசப்தம் - உம்மைச்சொல். (உ) ஸ்தைர்யம் - நிலைகெடாமை.
(ங) ப்ரளயகதை - ப்ரளயத்தில் அகப்பட்டவள்.

பலியாலே (க) அபஹ்ருதையாய் அந்யசேஷப்பட்டுக் கிடந்த பூமியை, சரணாகதனான இந்த்ரனுக்கு வாங்கிக் கொடுக்கைக்காக (உ) வாமநவேஷ பரிக்ரஹத்தைப் பண்ணி அர்த்தியாய்ச் சென்று "தன் குடங்கை நீரேற்றான்" என்கிறபடியே கொடுத்துவளர்ந்த கையைக்கொண்டு நீரேற்று பரிக்ரஹித்து, கையிலே நீர்விழுந்த வநந்தரம் திருமேனியை வளர்த்து எல்லைநடப்பாரைப்போலே திருவடிகளாலே யளந்து. (மீட்டுமதுண்டுமிழ்ந்து) திரியவும் அவாந்தர ப்ரளயத்திலே அழியப்புக, "பெருவெள்ள முண்ணாமல் தான் விழுங்கி" என்கிறபடியே அந்த பூமியைத் தன் திருவயிற்றிலே வைத்துநோக்கி, ப்ரளயாநந்தரம் வெளிநாடுகாண வுமிழ்ந்து. (விளையாடும்) இப்படி லீலைகொண்டாடும். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் அவனுக்கு லீலையாயிறே யிருப்பது; அத்தைப்பற்ற, ஜகத்ரக்ஷணம் பண்ணின வித்தை லீலையாக வருளிச்செய்கிறார். (விமலன்) (ங) ஹேயப்ரத்யநீகன். அதாவது- "ஒரு ஸ்வரூபஸ்வரூபாய" "ஸமெகரூபரூபாய" என்கிற திவ்ய மங்கள விக்ரஹத்தை இதரஸஜாதிய மாக்குவது, சிறுக்குவது, பெருக்குவதாக்காநிற்கச்செய்தே, (ச) ஐச்சிகமாகவும்(ரு)பரார்த்தமாகவும் செய்கையாலே விகாராதி தோஷாஹிதனா யிருக்கை. (மலை) ஏவம்பூதனானவன் ஸம்ஸார ப்ரளயகதனை யெடுக்கைக்கும், அந்ய சேஷத்வத்தை யறுத்துத் திருவடிகளின்கீழேயிட்டுக் கொள்ளுகைக்கும், மேல் ஸம்ஸார ப்ரளயத்தில் அகப்படாதபடி நோக்குகைக்குமாக எழுந்தருளிநிற்கிறமலை.

(ஈட்டிய வித்யாதி) பெருகி வரும்போது திருமலையில் இரண்டருகிலுமுள்ள பதார்த்தங்களையும் வாரிக்கொண்டு வருகையாலே, * பொன் முத்து மரியுகிரும் புழைக்கைமாகரிக்கோடும் அகில் குறடும் சந்தனமும் முதலாக, தான் திரட்டின பல பதார்த்தங்களையும், என்னுடைய நாதனானவனுக்குத் திருமுன்காணிக்கை யென்று இத்தைஸமர்ப்பிக்கையி லுண்டான த்வரையாலே மிகவும் விரைந்து வாராநிற்பதாய், தன்பக்கல் (சு) அவகாஹித்தாருடைய ஸகல ச்ரமங்களு மாறும்படி குளிர்ந்திருப்பதான திருச்சிலம்பாற்றையுடைய திருமாலிருஞ் சோலையாகிறவதுவே-விமலன்மலை. (சு)

மூ.—ஆயிரந்தோள்பரப்பிமுடியாயிரமின்னிலக
ஆயிரம்பைந்தலையவநந்தசயநனாளுமலை
ஆயிரமாறுகளுஞ்சுனைகள்பலவாயிரமும்
ஆயிரம்பூம்பொழிலுமுடைமாலிருஞ்சோலையதே.

(க) அபஹ்ருதையாய் - பறித்துக்கொள்ளப்பட்டதாய். (உ) வாமநவேஷம் - சிறியவடிவு. (ங) ஹேயப்ரத்யநீகன் - தோஷங்களைப் போக்குமவன். (ச) ஐச்சிகமாக - தன் இஷ்டத்துக்காக. (ரு) பரார்த்தமாக - பிறருக்காக. (சு) அவகாஹித்தல் - உட்புகுதல்.

ப-ரை.—ஆயிரமாறுகளும் - அநேகம்நதிகளையும், பலவாயிரம் - அநேகமாயிரங்களான, சுனைகளும் - சுனைகளையும், பூ - புஷ்பங்கள் விகஸிபாநின்றுள்ள, ஆயிரம் பொழிலும் - அநேகம்சோலைகளையும், உடை - உடைத்தாயிருக்கிற, மாலிருஞ்சோலையதே - திருமாலிருஞ்சோலையாகிற வதுவே; ஆயிரம் - அநேகமான, தோள் - திருத்தோள்களை, பரப்பி - பரப்பிக்கொண்டும், முடியாயிரம்-ஆயிரம்திருமுடிகளும், திருவபிஷேகத்தின் ரத்நாதிகளாலே, மின்னிலக - ஒளிவிடவும், பை - பரந்த, ஆயிரம் தலைப-ஆயிரம் தலைகளையுடைய, அநந்தசயனன் - திருவநந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டருளுமவன், ஆளும்-தனக்கு வாஸஸ்தாநமாகக்கொண்டாளுகிற, மலை - தேசமாம்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (ஆயிரம்தோள்பரப்பி) ஆயிரம் திருத்தோள்களையும் பரப்பிக்கொண்டு. (முடியாயிரம் மின்னிலக) திருமுடிக ளாயிரமும் திருவபிஷேகத்திலுண்டான ரத்நாதிகளாலே ஒளிவிட. இவ்விடத்தில், "ஆயிரம்" என்றது-ஸஹஸ்ர ஸங்க்யையைச் சொன்னபடி யன்று, அநேகத்வ பர்யாயம்; அல்லாதபோது, தோள்கள் ஆயிரமானல் முடிகள் ஆயிரமாகக் கூடாமையாலே. "தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி" என்றாரிறே-ஆழ்வார். (ஆயிரம் பைந்தலைய வநந்தசயந ளுளும்மலை) இவ்விக்ரஹத்தினுடைய பரப்பெல்லாம் தன்னுள்ளே யடங்கும்படியாகக் கொண்ட வடிவாகையாலே ஆயிரம் பரந்த தலைகளையுடைய திருவநந்தாழ்வான்மேலே பள்ளிகொண் டருளுகிற; அந்தத் திருவநந்தாழ்வானேபாதி, தனக்கபிமதமான வாஸஸ்தாநமாக அபிமாநித்தாளுகிறமலை. அத்திருவநந்தாழ்வான்றானே திருமலையாழ்வாராய் நிற்கையாலே அப்படி அபிமாநித்து ஆளக்குறையில்லையிறே.

(ஆயிர மித்யாதி) இங்கும் எடுத்தது ஆயிரமாக வருளிச் செய்கிறார் - தம்முடைய ப்ரேமாதிசயத்தாலும் அவற்றினுடைய பன்மையாலும். (ஆயிரமாறுகளும்) திருச்சிலம்பாறென்றுமிறே சீழ்ச்சொல்லி வந்தது. "சந்தொடு மணியும் அணிமயில்தழையும் தழுவி வந்தருவிகள் நிறைந்து வந்து" என்கிறபடியே திருமலைப் பரப்பிலே பெருகிவரும் காளுறுகள் அநேகமாயிறே யிருப்பது; அத்தைப்பற்றச் சொல்லுகிறது. (சுனைகள் பலவாயிரமும்) திருமலைப்பரப்பிலே பார்த்தால், அவ்வாறுகள் நீர் தேங்கி நிற்கும் திருச்சுனைகளும் அப்படி பலவாயிறே யிருப்பது. திருநாராயணப் பொய்கை, நலந்திகழ்நாரணன், ஆராவமுது என்றாற்போலே சொல்லுகிறவை திருமலையடிவாரத்தி லுள்ளவையிறே. மேலும் இப்படி அநேகமுள்ளது கண்டு கொள்வது. (ஆயிரம்பூம்பொழிலும்) அந்த ஆறுகளின்நீராலும் சுனைகளின்நீராலும் வளர்ந்து ஸர்வகாலமும் பூமாறாமல் செல்லும் திருச்சோலைகளும் அநேகமாயிறே யிருப்பது. "சோலைமலை" என்றிறே திருமலைதனக்கு நிருபகம். (ஆயிர

மாறுகளு மித்யாதி) “షడ్భిశ్శతసాహస్రైః శృఙ్గైర్వ్యాపృతః । అనేక శతసాహస్రై రుద్యానై రుపలక్షితః” “நதீபிஸ் ஸ்தலஸாஹஸ்ரைஸ் ஸரோபிஶ்ச ஸஹஸ்ரஶ: । ஸந்நகரத ஸாஹஸ்ரை ர்நாநாவ்ருக்ஷைஸ் ஸமாவ்ருதா” என்றிறே ப்ரமாண ப்ரஸித்தி. (உடை) இவையெல்லாவற்றையு முடைத்தா யிருக்கிற திருமாலிருஞ்சோலையாகிற வதுவே-அநந்தசயநனுளும் மலை. (கo)

அ.—நிகமத்தில், இத்திருமொழியாலே அழகருடைய வைபவத்தை, தாம் ப்ரகாசிப்பித்தமையை யருளிச் செய்து, இதுக்கு வேறொரு பலம் சொல்லாதே இத்தை யறிகைதானே பலமாகத் தலைக்கட்டுகிறார்.

மூ.—மாலிருஞ்சோலையென்னுமலையையுடையமலையை
நாலிருமூர்த்திதன்னைநால்வேதக்கடலமுதை
மேலிருங்கற்பகத்தைவேதாந்தவிழுப்பொருளின்
மேலிருந்தவிளக்கைவிட்டுசித்தன்விரித்தனவே.

ப-ரை.—மாலிருஞ்சோலையென்னும் - திருமாலிருஞ்சோலையென்னும் திருநாமத்தையுடைய, மலையை - திருமலையை, உடைய - தனக்குவாஸஸ்தாநமாகவுடையனாய், இந்நிலையைவிடாமையாலும் வடிவிற்பெருமையாலும், மலையை- மலைபோலேயிருக்கிறவனாய், நால் - வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிய நாலுவகைப்பட்டிருக்கிற, இரு-பெரிய, மூர்த்திதன்னை - வடிவுகளையுடையனாய், நால் - இருக்குமுதலியவேற்றுமையாலே நாலுவகைப்பட்டிருந்துள்ள, வேதம் - வேதமாகிற, கடல் - ஸமுத்ரத்தின்ஸாரமான, அமுதை - அம்ர்தமானவனாய், மேல் - மேலான, இரும் - பெரிய, கற்பகத்தை-கற்பகத்தருவை யொத்தவனாய், வேதாந்தம் - வேதாந்தங்களாலே சொல்லப்படுமவையாய், விழு - சீரியதான, பொருளில் - அர்த்தங்களுக்கெல்லாம், மேலிருந்த - மேலாய்க்கொண்டு, விளக்கை - தனக்குத்தானேவிளங்குமவன்விஷயமாக, விட்டுசித்தன் - பெரியாழ்வாராலே, விரித்தன-விரிவாகச்சொல்லப்பட்டவை.

வ்யா.—(மாலிருஞ்சோலையென்னும் மலையையுடையமலையை) திருமாலிருஞ்சோலையென்னும் திருநாமத்தையுடைய திருமலையை. ஸ்ரீவைகுண்டம் க்ஷீராப்தி துடக்கமான ஸ்தலங்களெல்லாவற்றிலும் தனக்கு அபிமதமான வாஸஸ்தலமாக வுடையனாய், இந்நிலையை விட்டு ஒருகாலுஞ் சலியாமையாலும் வடிவில் பெருமையாலும் போக்யதாதிசயத்தாலும் மலைபோலே யிருக்கிறவனை. (நாலிருமூர்த்திதன்னை) ஷாட்குண்ய ப்ரகாசகமாயும் அதிலே இவ்விரண்டு குணங்களுக்கு ப்ரகாசகமாயு மிருந்துள்ள வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்நாநிருத்தரூபேண நாலுவகைப்பட் டிருக்கிற பெரிய வடிவுகளை யுடையவனை. “గుణైష్షడ్భిస్త్వేతైః ప్రథమతరమూర్తిస్తవ బభౌ తతస్తిస్రస్తేషాం త్రియుగయుగళైర్హి త్రిభిరభూః” “ஷாட்குண்யாத் வாஸுதேவ

ஹ்ருயஸ்தாநஸ்தித்வ ஸமஹதத்வஸ்ய ஸ்ரேஷ்டாம் ஸ்ரீயாமயாநமமே ஹ்ரீஸ்திரஹிதாம்" என்றருளிச் செய்தாரிறே - ஆழ்வான். அதவா, திருவஷ்டாக்ஷர ரூபியானவனே யென்னவுமாம். "ऋक्संहिताथर्वान्तेष स्वाध्यायनारायणस्स्वयम् । अष्टाक्षरस्वरूपेण मुखेषु परिवर्तते" "வ்ருத்தம்ஹி ஹமவாநேவ ஸ்யாக்ஷா நாராயணஸ்யம் । க்ஷராக்ஷரஸ்யாஷ்டவேண ஸஹ வேஷ்டவரிவர்த்தே" என்னக்கடவதிறே. (நால்வேதக்கடலமுதை) ரிகாதி பேதத்தாலே நாலுவகைப்பட்டிருந்துள்ள வேதமாகிற ஸமுத்ரத்தில் ஸாரமான அம்ர்தமானவனே; "வேதியர் முழுவேதத்தமுதத்தை" என்னுமாபோலே. அன்றிக்கே, "நால்வேதக்கடலமுது" என்று - ஸகலவேதஸாரமான திருமந்த்ரத்தைச் சொல்லுகிறதாய், (க) ஸாமாநாதிகரண்யத்தாலே அத்தை இவனாகச் சொல்லுகிறதாகவுமாம். ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் ப்ரதிபாத்ய ப்ரதிபாதகபாவ ஸம்பந்தம். இவ்விடத்துக்கு இப்படி பொருளாமிடத்தில், "நாலிருமூர்த்திதன்னை" என்கிறவிடத்துக்கு முற்பட்ட யோஜனையொன்றுமே யாகக்கடவது. (மேலிருங்கற்பகத்தை) மேலான பெரிய கல்பகத்தை. இத்தால்-ஸ்வர்க்கத்தில்கல்பகத்தில் வ்யாவர்த்தி சொல்லுகிறது. அதாவது - அந்தகல்பகம் தன்னையொழிந்தவற்றைக் கொடுக்கு மித்தனையிறே; இது தன்னையுங் கொடுக்குமிறே. அந்த கல்பகம் அபேக்ஷித்தார்க்கிறே கொடுப்பது; இது அதிகாரியையு முண்டாக்கிக் கொடுக்கும். ஆகையாலிறே "என்னையாக்கிக் கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்றுஆழ்வாரருளிச் செய்ததும். (வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை) வேதாந்த ப்ரதிபாத்யங்களான சீரிய அர்த்தங்களுக்கெல்லாம் மேலாயிருந்துள்ள ஸ்வயம் ப்ரகாசவஸ்துவானவனே. வேதாந்த ப்ரதிபாத்யமான சீரிய வர்த்தங்களாவன - "भोक्ता भोग्यं प्रेरितारञ्च मत्वा" "क्षरं प्रधानममृताक्षरं हरः" "क्षरात्मानावीशते देव एकः" "प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेशः" "ஹோத்தாஹோமஸ்யம் ப்ரவிதாரஞ்ச க்ஷ்வா" "க்ஷரம்ப்ரயாநமம்ருதாக்ஷரம்ஹர:" "க்ஷராத்மாநாவீஶதே தேவ ஏக:" "ப்ரயாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶ:" இத்யாதிகளாலே சொல்லப்படுகிற தத்த்வத்ரயமும். மேலிருந்தவென்றது-இந்த தத்த்வத்ரயத்திலும்வைத்துக்கொண்டு மேலாயிருந்துள்ளவென்றபடி. அதாவது-சேதநாசேதநங்களிரண்டும் ப்ரகாரமாக, தான் ப்ரகாரியாய், "पतिं विश्वस्यात्मेश्वरं" "நதத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே" என்னும்படி ஸர்வஸ்மாத்பரனா யிருக்கை. (விட்டுசித்தன் விரித்தனவே) இப்படி யிருக்கிறவனே, *அரவத்தமளிப்படியே திருவுள்ளத்திலே வைத்துக்கொ

(க) ஸாமாநாதிகரண்யம் - ஒன்றாகச்சொல்லுகை.

ண்டிருக்கையாலே "விஷ்ணுசித்தன்" என்னும் திருநாமத்தையுடைய பெரியாழ்வார் விஸ்தரேண அருளிச்செய்தவை. இதுக்கு பலம்சொல்லாமைக்கடி, இவ்வர்த்தத்தை அறிகிறதுதானே இது கற்கிறதுக்கு ப்ரயோஜநமாகையாலே. (௧௧)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

அடிவரவு.—உருக்கஞ்சன்மன்னு மாவலிபலபாண்டவர் கனவெரிகோட்டாயிரம் மாலிருஞ்சோலைநாவ.

ஆ திருமொழி ௩௨-க்கு, பாட்டு-௩௪௭.

அ.—கீழ் இரண்டு திருமொழியிலே – ராமக்ருஷ்ணாத்யவதார குண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி ஸர்வேச்வரன் (௧) திருமலையில் நிற்கிறநிலையை அநுபவியாநின்றுகொண்டு, அவன்றன் ப்ராப்யத்தில் ப்ரதமாவதியாகையாலே (௨)தச்சரமாவதியான திருமலையாழ்வார்பக்கலிலே திருவுள்ளமூன்றி, திருமலையாழ்வாருடைய வைபவத்தை விஸ்தரேணபேசி யநுபவித்து ப்ரீதரானார்; அவ்வளவிலே, ஸர்வேச்வரன், திருமலையில்நிற்கிற நிலையிலுங்காட்டில், * பள்ளியிலோதிவந்த தன்சிறுவனை ப்ரஹ்லாதன், திருநாமஞ்சொன்னதுவே ஹேதுவாக, பிதாவானவன் சத்ருவாய்க்கொண்டு பஹுமுகமாகநலிய, நலிவுபடுகிற ஆபத்தசையிலே (௩) நிருபாதிகபிதாவான (௪) பந்தாஸக்தியாலே "அடுத்ததோருருவாய்" என்கிறபடியே இரண்டுவடிவைச் சேர்த்துக்கொண்டுவந்துதோன்றி, ப்ரதிகூலனான ஹிரண்யனை நிரஸித்து, பாலனான ப்ரஹ்லாதனை ரக்ஷித்தருளின மஹாகுணம்தோன்றத் திருக்கோட்டியூரிலே எழுந்தருளிநிற்கிற நிலையை இவர்க்குப்ரகாசிப்பிக்க; அத்தைக்காண்கையாலும், திருப்பல்லாண்டிலும் * வண்ணமாடத்திலும் செல்வநம்பியோட்டை ஸம்பந்தத்தையிட்டும் க்ருஷ்ணவதார (௫) கந்தமானது கொண்டும் தாம் விரும்பியருளிச்செய்த தேசமாகையாலும், திருக்கோட்டியூரிலே திருவுள்ளம்சென்று அங்கே யெழுந்தருளிநிற்கிறவன்படிகளை யநுபவிக்கிறவிவர்; அவ்வநுபவஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே, அவன் கொடுத்த கரணங்களைக்கொண்டு அவனை யநுபவித்து வாழலாயிருக்க (௬) த்ரிவிதகரணங்களாலும் அவனோடு ஒட்டற்றுத்திரிகிற

(௧) திருமலை - தெற்குத்திருமலை. (௨) தச்சரமாவதி - அதின்கடைசியெல்லை. (௩) நிருபாதிகம் - ஒருஹேதுஇல்லாமை. (௪) பந்தாஸக்தி - ஸம்பந்தத்தில்விருப்பு. (௫) கந்தம் - மூலம். (௬) த்ரிவிதகரணம் - உள்ளமும்உரையும் செயலும்.

பாபகாரிகளானவர்களை நிந்தித்தும், (க) ஆத்மகுணோபேதராய் (உ) ஆசார்யப்ரேமயுக்தராய் அவ்வாசார்யனுகக்கும் விஷயமென்று "திரிதந்தாகிலும்" என்கிறபடியே அவன்பக்கலிலே ப்ரவணராய் அவனை அநுபவியாநின்றுள்ள மஹாத்மாக்களை ச்லாகித்தும் செல்லுகிறார் - இத்திருமொழியில்.

திருமங்கையாழ்வாரும், பெரியதிருமொழியில்-திருமலையிலெழுந்தருளிநிற்கிறநிலையை யநுபவித்த வநந்தரம், திருக்கோட்டியூரிலெழுந்தருளிநிற்கிற நிலையையிறே யநுபவித்தது. பெரிய திருமடலிலும், "மன்னனைமாலிருஞ்சோலைமணாளனை" என்று திருமலையில்நிற்கிற நிலையை யருளிச்செய்த வநந்தரம், "கொன்னவிலுமாழிப்படையானைக்கோட்டியூ-ரன்னவுருவினரியை" என்று திருக்கோட்டியூரில் நிற்கிறநிலையையிறே யருளிச்செய்தது. அப்படியே இவரும், திருமலையிலெழுந்தருளிநிற்கிறநிலையை அநுபவித்தவநந்தரம், திருக்கோட்டியூரிலெழுந்தருளிநிற்கிறநிலையையநுபவிக்கிறார்.

இவர்களிருவருமிறே திருக்கோட்டியூர் விஷயமாக ஓரொரு திருமொழி யருளிச்செய்தவர்களும். ... ... ... *

மூ.—நாவகாரியஞ்சொல்லிலாதவர்நாடொறும்விருந்தோம்புவார்
தேவகாரியஞ்செய்துவேதம்பயின்றுவாழ்திருக்கோட்டியூர்
மூவர்காரியமுந்திருத்துமுதல்வனைச்சிந்தியாதவப்
பாவகாரிகளைப்படைத்தவனெங்ஙனம்படைத்தான்கொலோ.

ப-ரை.—நா அகாரியம் - நாவாற்சொல்லொணாத அஸத்யங்களை, சொல்லிலாதவர் - ஒருகாலும் சொல்லாதவர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள், அங்கே நித்யவாஸம்பண்ணுமவர்களை, விருந்து - அன்று அமுதுசெய்யவெழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களைப்போலே, நாடொறும் - நாள்தோறும், ஓம்புவார்-ஆதரித்துக்கொண்டும், தேவகாரியம்செய்து - பகவத்ஸமாராதநம் பண்ணிக்கொண்டும், வேதம் - வேதப்ரதிபாத்யனான ஸர்வேச்வரனை, பயின்று - நெருங்கவநுஸந்தித்துக்கொண்டும், வாழ் - கண்ணாலேகண்டநுபவிக்கிறவர்கள் நித்யவாஸம்பண்ணுகிற, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில்; மூவர்-ப்ரஹ்மா, ருத்ரன், இந்த்ரனென்னும் மூவர்க்கும், காரியமும் - மதுகைடபர்கள்கையினின்று வேதத்தை மீட்டுக்கொடுக்கையும், கபாலவிமோசநம்பண்ணுகையும், மஹாபலிபக்கலில்நின்று ராஜ்பத்தை மீட்டுக்கொடுக்கையுமாகிய மூன்றுகார்யங்களையும், திருத்தும்- செய்த, முதல்வனை - ஸர்வகாரணபூதனை, சிந்தியாத - அநுஸந்தியாத, அ - அப்படிப்பட்ட, பாவகாரிகளை - பாவம்செய்யுமவர்களை, படைத்தவன் —, எங்ஙனம் - என்னப்ரயோஜநத்துக்காக, படைத்தான்கொலோ - படைத்தானோ.

வ்யா.—முதற்பாட்டு. (நாவகாரியம்) நாவுக்கு அகார்யமாவது- சப்தங்கள் (ங) நாரத்தளவிலே (ச) பர்யவஸிக்கையும், பொய்சொ

(க) ஆத்மகுணம் - சமதமாதிகள். (உ) ஆசார்யப்ரேமம் - ஆசார்யனிடத்துஅன்புடைமை. (ங) நாரத்தளவிலே - அசித்திலே. (ச) பர்யவஸிக்கை - முடிகை.

ல்லுகையும், பிறர்க்கு (௧) க்லேசாவஹமான ஹேதுக்களைச் சொ[illegible]
லுகையும். [நா வாயிலுண்டே இத்யாதி] அல்லாத திருநாம[illegible]
இடையிலே இளைப்பாறவேணும். (௨) கொங்கிலே திருக்குரு[illegible]
பிரான்பிள்ளா னெழுந்தருளி ஒரு ஸ்ரீவைஷ்ணவர்திருமா[illegible]
லே விட்டவளவிலே பிறந்த வார்த்தையை ஸ்மரிப்பது.—அநந்தாழ்வான், (௩) சரமஸமயத்திலே "பட்டருக்குத் திருநாமமேது" என்று கேட்க; "அழகியமணவாளப்பெருமாளென்கிற திருநாமம்" என்று சொல்ல; "இது (௪) பர்த்ர்நாம க்ரஹணம்பண்ணுமாபோலே இராநின்றது, ஆகிலும் பட்டர்விரும்பின திருநாமமன்றோ" என்று இத்திருநாமத்தைச்சொன்ன வநந்தரத்திலே திருநாட்டுக்குப்போனான்.—உடையவ ரெழுந்தருளியிருக்கிற காலத்திலே, வடுகநம்பியருகே ஒரு ஸ்ரீவைஷ்ணவ ரெழுந்தருளியிருந்து "ஓம்நமோநாராயணாய" என்று இத்தைச்சொல்ல; இத்தைக்கேட்ட வடுகநம்பி "நாவகாரியம்" என்று எழுந்திருந்து கடக்கப்போனார்.—ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர்சரமகாலத்திலே உடையவரெழுந்தருளி, "இப்போது திருவுள்ளத்தி லநுஸந்தாநமேது" என்றுகேட்க; "பகவந்நாமங்களாயிருப்பன அநேகம் திருநாமங்களுண்டாயிருக்க, 'திருவரங்கம்' என்கிற நாலைந்து திருவக்ஷரமும் கோப்புண்டபடியே! என்று நினைத்திருந்தேன் காணும்" என்று அருளிச்செய்ய; அத்தை "ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர் விரும்பின திருநாமம்" என்று உடையவர் விரும்பியிருப்பர்.= "[illegible]" "[illegible]" என்று ஈச்வரஸங்கல்பம்; *யாதானும்பற்றி நீங்கும்விரதம் ஸம்ஸாரிகள்வ்ரதம்; "விரதங்கொண்டேத்தும்" என்று முமுக்ஷுக்கள வ்ரதம்; முமுக்ஷுக்களுக்குக் கூறுயிறே அர்ச்சாவதாரமிருப்பது. "அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீரிந்தளூரீரோ" என்னக்கடவதிறே. "எண்ணுதேயிருப்பாரை யிறைப்பொழுதுமெண்ணோமே" என்று கழித்து, "ஆரொண்ணும்நெஞ்சுடையா ரவரெம்மையாள்வாரோ" என்று அருளிச்செய்தாரிறே; நம்மாழ்வார், "ஒழிவில்காலமெல்லாம்" என்று அடிமையை யபேக்ஷித்து, *புகழுநல்லொருவனிலே-வாசிகமானவடிமைசெய்து, *மொய்ம்மாம்பூம்பொழிலிலே-அடிமையிலிழியாதாரை (௫) நிஷேதித்து, *செய்யதாமரைக்கண்ணனிலே - பகவத்ஜ்ஞாநத்தை யுபதேசித்து, * பயிலும்சுடரொளியிலே - பண்டேதிருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டு உகந்தாற்போலே; இவரும், திருக்கோட்டியூரிலே யெழுந்தருளிநிற்கிற ஸர்

(௧) க்லேசாவஹம் - துன்பத்துக்கிடமானது. (௨) குருபரம்பராப்ரபாவம் - உடையவர்வைபவத்தில் கொங்கில்பிராட்டிவ்ர்த்தாந்தத்தைநினைப்பது. (௩) சரமஸமயம் - திருநா டலங்கரிக்குங்காலம். (௪) பர்த்ர்நாமம் - மணவாளன்பெயர். (௫) நிஷேதித்தல் - நிந்தித்தல்.

வேச்வரனை யநுபவித்த வநந்தரம், அவன்றிருவடிகளில் அடிமையி [illegible] (க) அந்யபரராய்த் திரிகிறவர்களை நிந்தித்து, அவன் திருவ[illegible] [illegible]மையயுகந்து அவனையநுபவிக்கையே யாத்ரை [illegible] ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டுகக்கிறார்.

(நாவகாரியம்) [illegible] ப்ரயோஜநம் திருநாமம் சொல்லுகையிறே. [illegible] மாவது - அஸத்யம்சொல்லு[illegible] [illegible] சொல்லுகை. "ஆவியையரங்கமாலை - [illegible] - [illegible] யில்தொண்டனேன்நான் சொல்லினேன்தொல்லைநாமம் - பாவி யேன்பிழைத்தவாறு" என்று-"அயோக்யன் திருநாமம்சொல்லுகை யும் பாபபலம்" என்றாரிறே; "திருவாகம் தீண்டிற்றுச்சென்று" என்று - அவனைப்பார்க்குமத்தனையோ, தன்னையும்பார்க்கவேண்டா வோ வென்று திருவுள்ளத்தை கர்ஹித்தாரிறே; "கொடுமாவினை யேன்" என்று - *பொய்ந்நின்றஞானந்துடங்கி, *நெடுமாற்கடிமை யளவும் கர்மபலமென்று அநுஸந்தித்தாரிறே. (சொல்லிலாதவர்) இவைபுகுந்து கழியாதவர். (நாடொறும்விருந்தோம்புவார்) நித்ய வாஸம்பண்ணுகிற ஸ்ரீவைஷ்ணவர்களை, அப்போது அமுதுசெய்ய வெழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களைப்போலே (உ) ஆதரிப்பர்கள். (தேவகாரியம் செய்து) இவர்களுக்கு உகப்பாக (ங) பகவத்ஸமா ராதநம் பண்ணிப் போருமவர்கள். "திரிதந்தாகிலும்" என்னக்கட வதிறே. (வேதம்பயின்றுவாழ்) பகவத்பாகவத கைங்கர்யங்களு க்கு ஏகாந்தமான ப்ரதேசங்களை நெருங்க வநுஸந்தித்து, வேதப்ர திபாத்ய வஸ்துவைக் கண்ணாலேகண் டநுபவிக்கிறவர்கள். "ஓத்தி ன்பொருண் முடிவுமித்தனையே உத்தமன்பேரோத்தும் திறமறிமின்" என்னக்கடவதிறே. (திருக்கோட்டியூர்) இவற்றை நினைத்திறே இவ ர்தாம் "அல்வழக்கொன்றுமில்லா வணிகோட்டியர்கோ னபிமாந துங்கன், செல்வனைப்போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடி யேன்" என்றது. இவரைப்போலே தம்மையும் அங்கீகரிக்கவேணு மென்னும்படியிறே இவர்கள் (ச) ஓரம்.

(மூவர்காரியமும் திருத்தும்) அவர்களுக்குவந்த ஆபத்துக்களை ப்பரிஹரிக்கும். "వేదాపహార గురుపాతక దైత్యపీడాద్యాపద్విమోచన" "வேதா பஹார[illegible] தைத்யபீடாத்யாபத்விமோசந" இத்யாதி. மதுகைடபர்கள்கையிலே வேதத்தைப் பறிகொடுக்க அத்தை மீட் டுக் கொடுக்கையும், குருவான பிதாவினுடைய (க) சிரச்சேதம்

---

(க) அந்யபரர் - வேறொன்றில் ஊற்றமுடையவர். (உ) ஆதரித்தல் - உப சரித்தல். (ங) பகவத்ஸமாராதநம் - எம்பெருமானை ஆராதிக்கை. (ச) ஓரம் - பக்ஷபாதம். அதாவது - கருத்து.

பண்ணுகையால் வந்த (க) பாதகத்தைப் போக்கிக் கொடுக்கை யும், மஹாபலிபோல்வார்கையிலே ராஜ்யத்தைப் பறிகொடுக்க அத்தை மீட்டுக் கொடுக்கையும்; இவையிறே - மூவர் கார்யமும் திருத்துகையாவது. (முதல்வனே) திருத்துகைக்கடி - ஸம்பந்தம். (சிந்தியாத அப்பாவகாரிகளே)துர்மாநிகளாய் எதிரிட்டுப் போருகிற விவர்கள்தண்மை பாராதே, இவர்கள்கார்யம் செய்த வுபகாரத் துக்குத் தோற்று அநுஸந்தியாத பாபகர்மாக்களே. (படைத்தவ னெங்ஙனம் படைத்தான்கொலோ) என்ன ப்ரயோஜநத்துக்குப் படைத்தான் என்று அறிகிறிலோமிறே. "முந்நீர்ஞாலம் படைத்த வெம்முகில்வண்ணன்" என்று - ஜலஸ்தல விபாகமற வர்ஷிக்கு மவ னிறே. "சோம்பாதிப் பல்லுருவையெல்லாம் படர்வித்த" என்னக் கடவதிறே. (க)

மூ.—குற்றமின்றிக் குணம்பெருக்கிக் குருக்களுக்கநுகூலராய்ச், செற்ற மொன்றுமிலாத வண்கையினர்கள் வாழ்திருக்கோட் டியூர், துற்றியேழுல குண்ட தூமணிவண்ணன்றன்னைத் தொழாதவர்,பெற்றதாயர்வயிற்றினைப்பெருநோய்செய்வான் பிறந்தார்களே.

ப-ரை.—குற்றமின்றி - சாஸ்த்ரம்விதித்தவற்றைச் செய்யாதொழிகையும் விலக்கியவற்றைச் செய்கையுமாகிய குற்றமின்றிக்கே, குணம்-சமம் தமம் முத லியகுணங்களை, பெருக்கி-மிகும்படிபண்ணி, குருக்களுக்கு - தங்கள்ஆசார்யனு க்கு, அநுகூலராய்—, ஒன்றும்-சற்றேனும், செற்றம்-பொறாமை, இலாத-இல் லாதவர்களுமாய், வண்கையினர்கள்-மிக்ககொடையையுடையருமாயிருப்பவர் கள், வாழ்-நித்யவாஸம்பண்ணுகிற, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில்; ஏழுலகு - ஸகலலோகங்களையும்; ப்ரளயங்கொள்ளாதபடி, துற்றி - திரளப்பி டித்து, உண்ட - அமுதுசெய்த, தூ - பழிப்பற்ற, மணிவண்ணன்றன்னை - நீல ரத்நம்போன்ற வடிவையுடையவனே, தொழாதவர் - * தலைவணக்கிக்கைகூப்பி யேத்தாதவர்கள், ஏதுக்காகப்பிறந்தார்களென்றால்; பெற்ற - தம்மைப்பெற்ற, தாயர் - மாதாவினுடைய, வயிற்றினை - உதரத்தை, பெருநோய்செய்வான் - மிகவும்நோவு படுத்துகைக்காக, பிறந்தார்கள் - பிறந்தார்க ளித்தனை.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (குற்றமின்றி)குற்றமாவது-தோஷ குணஹாநிகள். இதில் தோஷமாவது-(உ) அக்ர்த்யகரணம்; குண ஹாநியாவது - க்ர்த்யாகரணம். (ந) "இதம் குர்யாத்" (ச) "இதம் நகுர்யாத்" என்று - விதிநிஷேதாத்மக மாயிறே (ரு) சாஸ்த்ரந் தானிருப்பது. அதில், (எ) விஹிதத்தைச் செய்து, (சு) நிஷித்த

(க) பாதகம் - பாவம். (உ) அக்ர்த்யகரணம் - சாஸ்த்ரம் விலக்கியவற் றைச் செய்கை., (ந) இதம்குர்யாத் - இதுசெய்யக்கடவன். (ச) இதம்நகுர் யாத்-இது செய்யாதொழியக்கடவன். (ரு) சாஸ்த்ரம்-விதிக்ரமது. (சு) விஹி தம் - விதிக்கப்பட்டது. (எ) நிஷித்தம் - விலக்கப்பட்டது.

த்தைத் தவிர்ந்து போர வேணுமே (க) சாஸ்த்ரவச்யனானவனுக்கு; அல்லாதபோது, "శ్రుతిస్స్మృతిర్మమైవాజ్ఞా" "ச்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா" என்கிறபடியே - (உ) பகவதாஜ்ஞாநுரூபமான சாஸ்த்ரத்தை அதிக்ரமித்தானாகையாலே (ங) பகவந்நிக்ரஹத்துக்கு விஷயமாமிறே. இப்படியிருந்துள்ள குற்றமின்றிக்கே. (குணம்பெருக்கி) (ச) சமதமாத்யாத்ம குணங்களை மேன்மேலும் (ரு) அபிவ்ருத்தமாக்கி. ஆத்மகுணங்க ளெல்லாவற்றுக்கும் ப்ரதாநம் சமதமங்களிறே; இவையிரண்டு முண்டானாலிறே ஆசார்யன் இவனுக்குக் கைப்புகுந்து திருமந்த்ராதிகளை யுபதேசிப்பது; ஆகையால், சமதமங்கள், "జాయమానం హి పురుషమ్" "ஜாயமாநம் ஹி புருஷம்" இத்யாதிப்படியே யுண்டான பகவத் கடாக்ஷத்தாலே ஆசார்யாங்கீகாரத்துக்கு முன்னே அங்குரித்து, பின்பு ஆசார்யோபதேசாதிகளாலே வர்த்தித்து வரக்கடவதா யிருக்கும்; அவற்றினுடைய அபிவ்ருத்தி இவனுடைய குறிக்கோளடியாக வரக்கடவதா யிருக்கையாலே, "குணம்பெருக்கி" என்று - அதிகாரிக்ருத்யமாகச் சொல்லுகிறது. "శమదమనియతాత్మా" "ஶமதமநியதாத்மா" இத்யாதி. (குருக்களுக்கநுகூலராய்) "குருக்கள்" என்கிற பஹுவசநம் - (சு) பூஜ்யதையைப் பற்ற வித்தனை; ஆசார்யனுக்கு அநுகூலரா யென்கை. அன்றிக்கே, "அநுகூலராய்" என்று - பலரையும் சொல்லுகையாலே, தந்தாமாசார்ய விஷயத்துக்கு அநுகூலராயென்கிறதாகவுமாம். அநுகூலராகையாவது - "దేవమివాచార్యముపాసీత" "தேவமிவாசார்யமுபாஸீத" என்கிறபடியே - பகவத்விஷயத்தோபாதி கௌரவபுத்தி பண்ணி ஸேவிக்கும் தங்கள் ஸேவையாலே உகப்பித்துக்கொண்டு போருகை. (எ) உபஜீவநமும் (அ) ப்ரதிபத்தியும் (கூ) கிஞ்சித்காரமு மெல்லாம் ஒருமடை கொண்டபோதிறே (க0) யதாப்ரதிபத்தி விளைந்ததாவது. "தேவுமற்றறியேன்" என்று இருக்க வேணுமிறே. "ఆస్తికో ధర్మశీలశ్చ శీలవాన్ వైష్ణవశ్శుచిః । గంభీరశ్చతురో ధీర శ్శిష్య ఇత్యభిధీయతే" "ஆஸ்திகோ தர்மஶீலஶ்ச ஶீலவாந் வைஷ்ணவஶ்ஶுசி: । கம்பீரஶ்சதுரோ தீர: ஶிஷ்ய இத்யபிதீயதே" என்றும், "శరీరం వసు విజ్ఞానం వాసః కర్మ గుణానసూన్ । గుర్వర్థం ధారయేద్యస్తు స శిష్యో నేతరస్స్మృతః"

---

(க) சாஸ்த்ரவச்யன் - சாஸ்த்ரத்துக்குக் கட்டுப்பட்டவன். (உ) பகவதாஜ்ஞா-எம்பெருமானுடையகட்டளை. (ங) பகவந்நிக்ரஹம் - எம்பெருமான் வெறுக்கை. (ச) சமம் - மநதைஜயித்தல்; தமம் - கண்முதலிய இந்த்ரியங்களைஜயிக்கை. (ரு) அபிவ்ருத்தம் - மேல்மேலனட்பெருகுகை. (சு) பூஜ்யதை - நன்குமதித்தல். (எ) உபஜீவநம் - ஜீவநத்துக்குக்கருவியாயிருப்பது. (அ) ப்ரதிபத்தி - நம்பிக்கை. (கூ) கிஞ்சித்காரம் - சிறிதுபொருளுதவுகை. (க0) யதாப்ரதிபத்தி - அறிவுக்குத்தக்கநடத்தை.

"ஶரீரவஸு-விஜ்ஞாநம் வாஸஃகர்ம-குணாநஸூந் । குர்வர்த்தம் தாரயேத்யஸ்து ஸஶிஷ்யோ நேதரஸ்ம்ருத:" என்றும் சாஸ்த்ரங்களிற் சொல்லுகிற சிஷ்யலக்ஷணமெல்லா முடையவனு யிருக்கையிறே - குருக்களுக்கு அநுகூலரா யிருக்கையாவது. (செற்ற மொன்று மிலாத) செற்றமாவது - பொறாமை. அதாவது - (க) பரஸம்ர்த்யஸஹதை. ஒன்றுமில்லாமை யாவது - முதலிலேஅதில் (உ) அந்வயமின்றிக்கே யிருக்கை. கீழ்ச்சொன்னவையெல்லா முண்டானுலும் உண்டாக வரிதாயிருப்ப தொன்றிறே யிது. (வண்மையினர்கள்) (ங) உதாரமான கொடையையுடையவர்கள். அதாவது - ஒருவர்க்கு ஒன்றைக்கொடுக்கு மிடத்தில், கொள்ளுகிறவன் சிறுமையையும் கொடுக்கிறவன் சீர்மையையும் பாராமல் கொடுக்குமவர்களென்கை. த்ர்ஷ்டாத்ர்ஷ்டங்க ளிரண்டுக்கும் ஒக்குமிறே யிவர்களுக்கிது. (வாழ்திருக்கோட்டியூர்) இத்தேசவாஸந் தானே இவர்களுக்கு வாழ்வு. "நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" என்றும், "வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்" என்றும் சொல்லக்கடவதிறே. இப்படி யிருக்கிறவர்கள் வர்த்திக்கிற திருக்கோட்டியூரில்.

(துற்றியேழுலகுண்ட) ப்ரளயத்தி லழியாதபடி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைக்கிறவிடத்தில் ஒரொன்ருக வன்றிக்கே, திரளப்பிடித் தமுதுசெய்த. (தூமணிவண்ணன்றன்னே) இவற்றைவயிற்றிலே வைத்து நோக்கினபின்பு திருமேனியிற் பிறந்த புகரைச் சொல்லுகிறது. உண்டார்மேனி கண்டால் தெரியுமிறே. பழிப்பற்ற நீலமணிபோலே யிருக்கிற வடிவை யுடையவன்றன்னே. (தொழாதவர்) இவ்வுபகாரத்துக்குத் தோற்று எப்போது மொக்கத் தொழவேண்டி யிருக்க, இவ்விஷயத்தில் தலைவணக்காமல் திரியும் (௪) க்ர்தக்நரானவர்கள். (பெற்றதாயரித்யாதி) பெற்றமாதாவினுடைய உதரத்தை மிகவும் நோவுபடுத்தப் பிறந்தார்க ளித்தனே. இவன்(ரு)பகவத்பரனுன போதிறே, "ஜநநீக்ருதார்த்தா" "ஜநநீக்ருதார்த்தா" என்கிறபடியே - அவளும் (சு) உத்தரிக்கைக் குறுப்பாவது; அல்லாதபோது, இவனுல் ஒரு ப்ரயோஜநம் அவளுக்கு இல்லாமையாலே, ப்ரஸவகாலத்திற் பட்ட வேதனையே சேஷித்துவிடு மித்தனையிறே. (உ)

(க) பரஸம்ர்த்யஸஹதை - பிறர்மினுக்கம்பொறுமை. (உ) அந்வயம் - ஸம்பந்தம். (ங) உதாரமானகொடை - பெருங்கொடை. (௪) க்ர்தக்நர் - நன்றிமறந்தவர்கள். (ரு) பகவத்பரன் - எம்பெருமானிடத்து அன்புடையவன். (சு) உத்தரிக்கை - உஜ்ஜீவிக்கை.

மூ.—வண்ண நன்மணியும் மரதகமும் மழுத்திநிழலெழும் திண்ணைசூழ் திருக்கோட்டியூர் திருமாலவன் றிருநாமங்கள் எண்ணக்கண்ட விரல்களா லிறைப்பொழுது மெண்ணகிலாதுபோய், உண்ணக்கண்டதம்மூத்தைவாய்க்குக்கவளமுந்து கின்றார்களே.

ப-ரை.—நல் - நல்ல, வண்ணம் - நிறத்தையுடைத்தான, மணியும் - மாணிக்கங்களையும், மரதகமும்-மரதகங்களையும், அழுத்தி - ஒழுங்குபடவழுத்தினதினால், நிழலெழும்-நிழலெழாநின்றுள்ள, திண்ணை-திண்ணைகளாலே, சூழ்-சூழப்பட்ட, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரி லெழுந்தருளியிருக்கிற, திருமாலவன் - ஸ்ரீய꞉பதியினுடைய, திருநாமங்கள்-திருநாமங்களை, எண்ண-எண்ணுகைக்காக, கண்ட-படைக்கப்பட்ட, விரல்களால்-விரற்களாலே, இறைப்பொழுதும்-ஒருக்ஷணகாலமும், எண்ணகிலாது - எண்ணாமல், போய்-புறம்பேபோய், உண்ணக்கண்ட-சரீரபோஷணத்துக்கு வேண்டுவனதின்கிற,தம்-தங்களுடைய, ஊத்தை - அசுத்தமான, வாய்க்கு - வாயிலே, கவளம் - சோற்றுத்திரளைகளை, உந்துகின்றார்கள் - தள்ளாநின்றார்கள்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (வண்ண நன்மணியும் மரதகமுமழுத்தி) நல்ல நிறத்தை யுடைத்தான மாணிக்கங்களையும் அப்படியிருந்துள்ள மரதகங்களையும் பகைத்தொடையாகக் கொண்டு ஒழுங்குபட வழுத்தி. (நிழலெழும் திண்ணைசூழ்) திண்ணைகளைப் பளிங்குபோலே பளபளக்கும்படி சாந்திட்டுத் தீற்றி அதிலே நிழலெழும்படி இவற்றைப் பதித்து வைப்பர்களாய்த்து. இப்படி தாம் செய்கிறதென்னென்னில்; சொக்கநாராயணர் திருவீதியிலே யெழுந்தருளும்போது அலங்காரமாக. "திருவிழவில் மணியணிந்த திண்ணைதோறும்" என்னக்கடவதிறே. அல்லது, பகவதேக பராயிருக்கிறவர்கள், ஸ்வப்ரயோஜநமாக தந்தாமகங்களை அலங்கரித்துவைக்கிறார்களன்றே. "யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்குமவர்களாகையாலே. இவர்களுடைய (க) ஆத்மாத்மீயங்க ளெல்லாம் (உ) அங்குத்தைக்கு சேஷமாயிறே யிருப்பது. இப்படி யிருந்துள்ள திண்ணைகளாலே சூழப்பட்ட திருக்கோட்டியூரில்.

(திருமாலவன்றிருநாமங்கள்) ஸ்ரீய꞉பதியானவனுடைய திருநாமங்களை. திருநாமத்தில் ஏதேனுமொருபடி அந்வயமுண்டானமாத்ரத்திலே அவனபிமாநித்து ரக்ஷிக்கும்படியாகப் பண்ணும் புருஷகாரபூதையான பிராட்டியோடே-கூடி யெழுந்தருளியிருக்கிறவனுடைய திருநாமங்களையென்கை. திருநாமந்தான் ரஸிப்பதும் - இருவருமான சேர்த்தியின் ரஸமறிந்து அநுஸந்திப்பார்க்கிறே. "எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால்திருநாமம்" என்று

(க) ஆத்மாத்மீயங்கள்-தானும், தன்னுடைமையும். (உ) அங்குத்தைக்கு - ஸர்வேச்வரனுக்கு.

ரிறே - திருமங்கையாழ்வார். (எண்ணக்கண்டவிரல்களால்) இப்படியிருந்துள்ள தன்னுடையதிருநாமங்களை எண்ணுகைக்காக வாய்த்து - ஸர்வேச்வரன் இவர்களுக்கு விரற்களை ஸ்ர்ஷ்டித்தது. எண்ணுகையாவது - திருநாமங்களை "இன்னது, இன்னது" என்று பரிகணிக்கை. "ஓராயிரமாயுலகேழளிக்கும் - பேராயிரங்கொண்டதோர்பீடுடையன்" என்கிறபடியே ஓரோதிருநாமங்களிலே ஸஹஸ்ரமுகமாய்நின்று ஜகத்தையெல்லாவற்றையும் ரக்ஷிக்கவற்றான திருநாமங்களாயிரமுடையனுகையாலேவந்த பெருமையையுடையனுயிறேயவனிருப்பது. "దేవో నామసహస్రవాన్" "தேவோநாமஸஹஸ்ரவாந்" என்னக் கடவதிறே. "பேராயிரங் கொண்டதோர்பீடுடையன்" என்ன; "இவற்றையுடையவன் ஆர்?" என்னும் அபேக்ஷையிலே "நாராயணன்" என்றுரிறே. இங்கும், சொக்கநாராயணரிறே யெழுந்தருளியிருக்கிறவர். "நாராயணன்" என்கிற திருநாமம் அவ்வஸ்துவுக்கு நிரூபகமாய், இத்தாலே (க)நிரூபிதமானவஸ்துவுக்கு விசேஷணமாயாய்த்து அல்லாத திருநாமங்கள்தானிருப்பது. ஆகையாலே, "நாமமாயிரமேத்தநின்ற நாரணு" என்றும், "நாமம்பலவுமுடைநாரணநம்பி" என்றும், "நாராயணன்றன்நாமங்கள்" என்றும் எல்லாருமருளிச்செய்தது. இப்படியிருக்கிற திருநாமங்கள்தான் அவனுடைய ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களுக்கு வாசகமாயிறேயிருப்பது. அவற்றின்விசேஷமறிந்து ஆதராதிசயத்தாலே "இன்னது இன்னது" என்றுபரிகணிக்கையாய்த்து திருநாமங்களையெண்ணுகையாவது. இப்படி, இவற்றை யெண்ணுகையே ஸ்வபாவமாயிருக்கக் கடவ விரல்களாலே. (இறைப்பொழுதுமெண்ணகிலாது) ஒருக்ஷணகாலமும் இவற்றையெண்ணுதே. (உ) அநவரதம் எண்ணவேண்டுமவற்றை க்ஷணகாலமும் எண்ணுதொழிவதே! என்கை. (போய்) இத்தைவிட்டுப்புறம்பேபோய். (உண்ணக்கண்ட தம் ஊத்தைவாய்க்கு) சரீரபோஷணத்துக்கு வேண்டுவது தின்னக்கடவ தங்களுடையஊத்தைவாய்க்கு. (கவளமுந்துகின்றார்களே) திரளைகளைத்திரட்டி வாய்க்குள்ளே தள்ளாநின்றார்கள். "கணைநாணிலோவாத் தொழிற்சார்ங்கன் தொல்சீரைநன்னெஞ்சே யோவாதவூணுகவுண்" என்று- அவன் குணங்களை யநுபவிக்கை யுணவாகவும், குணங்களுக்கு வாசகமான திருநாமங்களையெண்ணுகை கையில்விரல்களுக்கு ப்ரயோஜநமாகவுமிறே இவர்தாம் நினைத்திருப்பது. (ங) துல்யந்யாயத்வாயும் திருநாமம்சொல்லக் (ச) கண்டதிறே. இப்படியிருக்கிறவாயை, சரீரபோஷணத்துக்கானது ஜீவிக்கைக்கே கரணமாக்கி, சோ

---

(க) நிரூபிதமான - மூதலிக்கப்பட்ட. (உ) அநவரதம் - எப்பொழுதும். (ங) துல்யந்யாயம் - இரண்டும்ஒத்திருக்கிறந்யாயம். (ச) கண்டது - படைக்கப்பட்டது.

ற்றை தாரகமாக்கி, கையையும் அதுபிடித்து உண்கைக்குஸாதநமாக்குவதே! என்று இன்னாதாகிறார். (ஙு)

மூ.—உரகமெல்லணையான் கையி லுறைசங்கம்போன் மடவன்னங்கள், நிரைகணம் பரந்தேறுஞ் செங்கமலவயற் றிருக்கோட்டியூர், நரகநாசனை நாவிற்கொண் டழையாத மானிடசாதியர் பருகுநீருமுடுக்குங்கூறையும்பாவஞ்செய்தனதான்கொலோ

ப-ரை.—உரகம் - திருவநந்தாழ்வானை, மெல் - ம்ர்துவான, அணையான் - படுக்கையாக உடையவனுடைய, கையில் —, உறை-வர்த்திக்கிற, சங்கம்போல்-ஸ்ரீபாஞ்ச ஜந்யம்போலே வெள்ளியதாய், மடம் - மடப்பத்தையுடைத்தான, அன்னங்கள்-ஹம்ஸங்களானவை, நிரை - ஒழுங்குபட, கணம்-திரளவந்து, பரந்து-பரவி, ஏறும் - ஏறி வர்த்திக்கிற, செம் கமலம்-செந்தாமரைமலரை யுடைத்தான, வயல் - வயல்களோடு சேர்ந்த, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரிலே; முற்பிறப்பில் செய்த வினையின்படி வருகிற, நரகம் - நரகத்தை, நாசனை-நசிப்பிக்குமவனை, நாவில் கொண்டு - நாவிலே கொண்டு, அழையாத - சொல்லாதவர்களாய், மானிட சாதியர் - பெறுதற்கரிய மநுஷ்ய ஜந்மத்திலே பிறந்தவர்கள், பருகும் - குடிக்கின்ற, நீரும் - தண்ணீரும், உடுக்கும் —, கூறையும்-புடவையும், பாவம் செய்தனதான்கொலோ - பாவஞ்செய்தனவோதான்.

வ்யா.—நாலாம்பாட்டு. (உரகமெல்லணையான்) திருவநந்தாழ்வானை ம்ர்துவானபடுக்கையாக வுடையவன். (க) சைத்ய மார்த்தவ ஸௌரப்யங்கள் ப்ரக்ர்தியாயிருக்குமிறே-ஸர்ப்பஜாதிக்கு. ஆகையாலிறே, திருவநந்தாழ்வான்றான், (உ)சேஷியான ஸர்வேச்வரனுடைய திருமேனியின் (ங) மார்த்தவாநுகுணமாக இந்தவடிவைக்கொண்டு திருப்படுக்கையாயிருக்கிறது. அங்குப்பள்ளிகொள்ளுகிறவனுடைய திருநாமம் "உரகமெல்லணையான்" என்றிறே. (கையிலுறைசங்கம்போல்) "கைவண்ணம்தாமரை" என்னும்படியான திருக்கையிலே வர்த்திக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யம்போலே. (மடமித்யாதி) மடப்பத்தையுடைத்தான அன்னங்களானவை ஒழுங்குபடத் திரளவந்து பரந்தேறிவர்த்திக்கிற சிவந்தகமலங்களையுடைத்தான வயலோடுசேர்ந்த திருக்கோட்டியூரிலே. இத்தால்-அன்னங்களானவை தாமரைமேலேயிருக்கும்போது, காண்பார்க்கு திருக்கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமும் போலே யிருக்குமென்கை. "செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல்" என்று-திருக்கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமுமான சேர்த்திக்கு இதுதன்னை (ச) த்ர்ஷ்டாந்தமாகவிறே இவர்திருமகளாரும் அருளிச்செய்தது. (ரு) ஸர்வதாஸத்ர்சமானவற்றில் த்ர்ஷ்டாந்த

(க) சைத்யம் - குளிர்ச்சி; மார்த்தவம்-மென்மைத்தன்மை; ஸௌரப்யம்-வாஸனை. (உ) சேஷி-உடையவன். (ங) மார்த்தவாநுகுணமாக - மென்மைக்குத்தக்கபடி. (ச) த்ர்ஷ்டாந்தம் - உதாரணம். (ரு) ஸர்வதாஸத்ர்சம் - எல்லாப்படியாலும்ஒப்பு.

தார்ஷ்டாந்திகங்கள்மாற்றிக் கொள்ளலாயிருக்குமிறே. "மதயானை போலெழுந்த மாமுகில்காள்" "திணரார்மேகமெனக் களிறுசேரும்" இத்யாதிகளிலே இதுகண்டுகொள்வது.

(நரகநாசனை) நாவில்கொண்டழைப்பார்க்கு பூர்வகர்மாநுகுணமாகவரும் நரகத்தை நசிப்பிக்குமவனை. இவனோடு ஓரந்வயமுண்டாகவே யமவச்யதை தன்னடையேமாறுமிறே; "[illegible]" "நவ[illegible]ஹாமவதாயவிஷயம்மஹி" என்னக்கடவதிறே. (நாவில்கொண்டழையாத) அவனைச் சொல்லுகைக்காக அடியிலே (க) ஸ்ர்ஷ்டமானநாவிலே கொண்டுசொல்லாத. அன்றிக்கே, (உ) அஹ்ர்தயமாகவாகிலும் நாவிலேகொண்டு சொல்லாதவென்னவுமாம். (மானிடசாதியர்)பெறுதற்கரிதான மநுஷ்யஜந்மத்திலே பிறந்துவைத்து (௩) வ்யர்த்தஜந்மாக்களாய்த் திரிகிறவர்கள். (௪) இதுக்கு யோக்யமானஜந்மத்தைப் பெற்றுவைத்து இழந்துபோவதே! என்று வெறுத்தருளிச்செய்கிறார். (பருகுநீருமுடுக்கும்கூறையும் பாவஞ்செய்தனதான்கொலோ) அவர்கள்குடிக்கும் தண்ணீரும் உடுக்கும் புடவையும் பாபத்தைச்செய்தனவோதா னென்கிறார். "[illegible]" "[illegible]" என்று - வ்யஷ்டிஸ்ர்ஷ்டியுந்முக பகவத்ஸங்கல்பமாகையாலே நாமரூபவிசிஷ்டமான ஸகலவஸ்துக்களிலும் ஓரோஜீவாதிஷ்டாந முண்டென்று கொள்ளவேணும். (௫) கடபடாதிகளாயிருந்துள்ள பதார்த்தங்களில் (௬) ஜீவாதிஷ்டாநமுண்டென்று தோற்றுதிருக்கிறது - கர்மாநுகுணமான (எ) ஜ்ஞாநஸங்கோசாதிசயத்தாலே. "[illegible]" "தயாதிரோஹித[illegible]" என்னக்கடவதிறே. ஆகையாலே, "பாவம்செய்தனதான்கொலோ" என்கிறது. அதாவது - இவைபண்ணின பாபமிறே இவர்களுக்கு சேஷமாகைக்கடியென்கை. விலக்ஷணரானவர்களுக்கு சேஷமானபதார்த்தங்களுக்கு அவ்வழியாலே மேலொருநன்மையுண்டாகவும், ஹேயரானவர்களுக்கு சேஷமானவற்றுக்கு ஒருநன்மையின்றிக்கே பூர்வபாபபலமேயாய்ப்போமித்தனையாகவும் சொல்லாநின்றதிறே. "[illegible]

(க) ஸ்ர்ஷ்டமான - படைக்கப்பட்ட. (உ) அஹ்ர்தயமாக - நினைவின்றிக்கே. (௩) வ்யர்த்தஜந்மாக்கள் - பயனில்லாதபிறப்பையுடையவர்கள். (௪) இதுக்கு - எம்பெருமானைஸ்துதிக்கைக்கு. (௫) கடபடாதிகள் - பானை, வஸ்த்ரம் முதலியன. (௬) ஜீவாதிஷ்டாநம் - உயிருக்கிருப்பிடம். (எ) ஜ்ஞாநஸங்கோசாதிசயம் - அறிவின்மிகக்குறைவு.

க்ரீடந்த்யோஷதயஸ்ஸர்வா யாஸ்யாம: பரமாங்கதிம்" "வெதவெத்யாவ்ரதஸ்நாதெ ஶ்ரொத்ரியெ க்ருஹமாகதெ । க்ரீடந்த்யொஷதயஸ்ஸர்வா யாஸ்யாம: பரமாங்கதிம்" என்றும் "நஷ்டஶௌசே வ்ரதப்ரஷ்டே விப்ரே வேதவிவர்ஜிதே । தீயமாநம் ருதத்யந்நம் கிம்மயா துஷ்க்ருதங்க்ருதம்" "நஷ்டஶௌசெ வ்ரதப்ரஷ்டெ விப்ரெ வெதவிவர்ஜிதெ । தீயமாநம் ருதத்யந்நம் கிம்மயா துஷ்க்ருதங்க்ருதம்" என்றும் ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே சொல்லப்பட்டதிறே. (ச)

மூ.—ஆமையின் முதுகத்திடைக் குதிகொண்டு தூமலர்சாடிப் போய்த், தீமைசெய்திள வாளைகள் விளையாடுநீர்த் திருக்கோட்டியூர், நேமிசேர்தடங் கையினானை நினைப்பிலா வலிநெஞ்சுடைப், பூமிபாரங்க ளுண்ணுஞ் சோற்றினைவாங்கிப் புல்லைத் திணிமினே.

ப-ரை.—இள-பருவத்தால் இளையதா யிருந்துள்ள, வாளைகள் - வாளையென்னும் மஹாமத்ஸ்யங்களானவை, ஆமையின் முதுகத்திடை-ஆமையின் முதுகிலே, குதிகொண்டு - சென்று குதித்தும், அருகே மலர்ந்து கிடக்கிற, தூ - தூய்தான, மலர் - தாமரை முதலிய மலர்களை, சாடி - உழக்கிக்கொண்டும், போய்—, தீமைசெய்து - க்ஷுத்ர ஜந்துக்களைக் கலக்கி ஓட்டுகையாகிற தீம்புகளைச் செய்தும், விளையாடு - விளையாடாநின்றுள்ள, நீர் - நீர்வளப்பத்தையுடைய, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில்; நேமி - திருவாழியோடே, சேர் - சேர்ந்திருக்கிற, தடம் - பெரிய, கையினானை - திருக்கையை யுடையவனை, நினைப்பிலா- ஒருகாலும் சிந்தியாத, வலி - திண்ணிதான், நெஞ்சுடை-நெஞ்சை யுடையராய், பூமி-பூமியால்சுமக்கவொண்ணாதபடி, பாரங்கள் - பாரமா யிருந்துள்ள பாபிகளானவர்கள், உண்ணும் - உண்கிற, சோற்றினை - சோற்றை, வாங்கி - பறித்து, புல்லை - புல்லைக்கொண்டு, திணிமின் - துற்றுவிடுங்கோள்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (ஆமையித்யாதி) ஒருகாலும் ஜலஸம்ருத்திமாறாத ஸ்தலங்களில்,ஆமைகளும் மத்ஸ்யங்களும் வர்த்திக்கக்கடவதாய், தாமரை செங்கழுநீர் ஆம்பல் நெய்தல் முதலானபுஷ்பங்களுமுண்டாயாய்த் திருப்பது. அதில், மத்ஸ்யங்களிலே க்ஷுத்ர மத்ஸ்யங்களும் மஹாமத்ஸ்யங்களு முண்டிறே. மஹாமத்ஸ்யமிறே- வாளையாவது. அதுதன்னிலும் முதிர்ந்து வயஸ்ஸுப்புகுந்தவை பிறழவும் குதிக்கவும் மாட்டாதே திரியாநிற்கும்; இளையவையாய்த்து - களித்துவிளையாடித்திரிவன. அப்படி பருவத்தாலிளையதாயிருந்துள்ள வாளைகளானவை,செருக்காலேஉகளித்து நீருக்குள்ளே முதுகுதோற்றும்படி கிடக்கிற ஆமையின்முதுகிலே சென்றுகுதித்து, பின்பு அருகே மலர்ந்துநிற்கிற தூய்தான தாமரை செங்கழுநீர் முதலான பூக்களை உழக்கிக்கொண்டுபோய் ஒன்றோடொன்று எதிர்பொருது க்ஷுத்ரஜந்துக்களைக்கலக்கி ஓட்டி ஸ்வைரஸஞ்சாரம்பண்ணுகையாகிற தீம்புகளைச்செய்து விளையாடாநின்றுள்ள ஜலஸம்ருத்தியையுடைய திருக்கோட்டியூரில். ப்ராப்யபூமியிலுள்ளதெல்லாம்

(க) ச்லாக்யமாயிருக்குமிறே யிவர்க்கு; ஆகையால், இதினுடைய வ்யாபாரத்தை ஊர்ச்சிறப்பாகக்கொண் டருளிச்செய்கிறார்.

(நேமிசேர்தடங்கையினானை) திருவாழியோடே சேர்ந்திருக்கிற பெரிய திருக்கையையுடையவனை. வெறும்புறத்திலே, திருக்கையி னழகுதானே யமைந்திருக்க, அதுக்குமேலே திருவாழியோட்டைச் சேர்த்தியுமுண்டானால் அழகு இரட்டித்திருக்குமிறே. ✻அணியாரா ழியிறே. ஸர்வாபரணங்களும் தானேயாகப் போரும்படியிறே திரு வாழிதானிருப்பது. "சக்கரத்தண்ணலே" என்று-கையும்திருவாழி யுமான அழகை நினைத்தால் தறைப்பட்டுக் கண்ணும் கண்ணீருமாய்க் கிடக்கும்படியாயிறேயிருப்பது. (நினைப்பிலா வலிநெஞ்சுடை)இவ் விஷயத்தை ஒருகாலும் நினைத்தல்செய்யாத திண்ணிய நெஞ்சையு டைய. (உ) அநவரத சிந்தநா விஷயமான வித்தைக் (ஙு) காதாசித் கமாகவும் நினையா தொழிவதே ! என்னும் (௪) இன்னாப்பாலே யரு ளிச்செய்கிறார். கையும் திருவாழியுமான சேர்த்திதானும், (ரு)உபே யபரானவனுக்கும் (சு) உபாயபரானவனுக்கும் வேணுமிறே. உபேயபரானவனுக்கு அழகுக்குடலாகவேணும்; உபாயபரான வனுக்கு விரோதிநிரஸநத்துக் குடலாகவேணும். "எப்போதும் கைகழலா நேமியான் நம்மேல்வினைகடிவான்" என்னக்கடவதிறே. இப்படி யிருக்கிற விஷயத்தை ஒருகாலும் நினையாதிருகைக்கு மேற் பட்ட நெஞ்சில் வன்மையுண்டோ. நெஞ்சில் வலிமைதான்-தானாக நினையாத வளவன்றிக்கே, (எ) ஹிதபரரானவர்கள் "(அ) ஸதாத்யே யவிஷயங்காண், ஒருகாலாகிலும் நினைக்கமாட்டாயோ" என்றால், "எனக்கு நினைக்கைக்கு வேறேவிஷயமுண்டுகாண்" என்று உத்தரி விடும்படியாயிறே யிருப்பது. (பூமிபாரங்கள்)இப்படி (கூ)பகவத்ஸ் மரண கந்தரஹிதராகையாலே(க0)விச்வம்பரையான பூமியால்(கக) பரிக்கவொண்ணாத பாரமாயிருந்துள்ள பாபிகளானவர்கள். தாங்க ளறியாதே யிருக்கச் செய்தேயும் தானறிந்த ஸம்பந்தமே ஹேது வாகத் தங்களை ரக்ஷித்துக்கொண்டு திரியும் ஈச்வரவிஷயத்தில் க்ருத க்நரானவர்களை யிறே - பூமிபாரமென்கிறது. (உண்ணும் சோற் றினைவாங்கிப் புல்லைத்திணிமினே) "மநுஷ்யயோநியிலே பிறந்துவை

(க) ச்லாக்யம் - கொண்டாடத்தக்கது. (உ) அநவரதசிந்தநாவிஷயம் - எப்பொழுதும் மநநம்பண்ணத்தக்க விஷயம். (ஙு) காதாசித்கமாகவும் - அரு மையாகவும். (௪) இன்னாப்பு - வெறுப்பு. (ரு) உபேயபரன்-ப்ரயோஜநத்தில் ஊற்றமுடையவன். (சு) உபாயபரன் - ஸாதநத்தில் ஊற்றமுடையவன். (எ) ஹிதபரர் - நன்மையில் ஊற்றமுடையவர்கள். (அ) ஸதாத்யேயவிஷயம்-எப் போதும் சிந்திக்கத்தக்கவிஷயம். (கூ) பகவத்ஸ்மரணகந்தரஹிதர் - எம்பெரு மானை ஒருகாலும் நினையாதவர்கள். (க0) விச்வம்பரையான-உலகத்தைச்சுமக் கிற. (கக) பரிக்க - சுமக்க.

த்தே அறிவிலிகளாகையாலே அந்த ஜந்மபலமில்லாத வுங்களுக்கு மநுஷ்யர் ஜீவிக்கிறஜீவநமேதுக்கு?" என்று பறித்து, அறிவில்லாத பசுக்கள் தின்கிற ஜீவநமான புல்லைக் கொண்டுவந்து திணியுங்கோள். (க) ஆஹாரநித்ராதி சதுஷ்டயமும் பசுக்களுக்கும் மநுஷ்யர்களுக்கும் ஸமாநமாயிருக்க, ஜ்ஞாநமிறே பசுக்களிற்காட்டில் இவர்களுக்கு அதிகமான விஷயம்; அந்தஜ்ஞாநமில்லாதார் (உ) பசுஸமரிறே; அத்தைப்பற்ற, மநுஷ்யர் ஜீவிக்கிற சோற்றைத் தின்னாதபடிவாங்கி பசுக்கள்தின்கிற புல்லைத் திணியுங்கோளென்கிறார். "மிண்டர் பாய்ந்துண்ணும் சோற்றை விலக்கி நாய்க்கிடுமினீரே" என்று - தங்கள்திறத்தில் அவன் செய்த உபகாரத்தையறிந்து அவனெழுந்தருளி யிருக்கிற தேசத்தை வாய்புலத்த வேண்டியிருக்க, அது செய்யாதே க்ருதக்நராய் (ங) மிண்டடித்து பலத்தாலே ஜீவித்துத்திரிகிறவர்கள் ஜீவிக்கிற சோற்றைவிலக்கி, ஒருநாள் ஒருபிடி சோறிட்டவன்வாசலைப்பற்றிக்கிடக்கும் (ச) க்ருதஜ்ஞமான நாய்க்கிடுங்கோள் நீங்கள் என்றாரிறே - ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார். இவர்கள் இப்படி "திணிமின்" "இடுமின்" என்கிறது ஆரைக்குறித்தென்னில்; (ரு) விசேஷஜ்ஞராய் இது செய்கைக்கீடான சக்திமான்களா யிருப்பவரைக் குறித்திறே; இப்படி இவர்கள்தானருளிச்செய்கிறது இதுதன்னைக் கேட்டாகிலும் (சா) லஜ்ஜாபயங்களுண்டாய் பகவத்விஷயத்தில் (எ) நெஞ்சுபுரிவர்களோ என்னும் (அ) க்ருபையாலேயிறே. (ரு)

அ.—ஆறும்பாட்டு. கீழ் ஐந்துபாட்டாலும் - அவைஷ்ணவர்களுடைய ஹேயதை சொல்லிற்று; இப்பாட்டுத்தொடங்கி மேலைந்துபாட்டாலும்-ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஏற்றம் சொல்லுகிறது.

மூ.—பூதமைந்தொடு வேள்வியைந்து புலன்களைந்து பொறிகளால்
ஏதமொன்றுமிலாதவண்கையி னார்கள்வாழ்திருக் கோட்டி-
யூர், நாதனைநரசிங்கனை நவின்றேத்துவார்க ளுழக்கிய
பாததூளிபடுதலா லிவ்வுலகம் பாக்கியஞ் செய்ததே.

ப-ரை.—பூதமைந்தொடு - பஞ்சபூதமயமான சரீரத்தாலும், வேள்வியைந்து - பஞ்சமஹாயஜ்ஞங்களாலும், புலன்களைந்து - ஐம்புலன்களாலும், பொறிகளால் - ஐம்பொறிகளாலும், ஏதமொன்றுமிலாத - குற்றமற்றவர்களுமாய், வண்கையினார்கள் - மிக்ககொடையாளருமாயிருப்பவர்கள், வாழ் - நித்யவாஸம்பண்ணுகிற, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூருக்கு, நாதனை - நாத

(க) ஆஹாரநித்ராதி சதுஷ்டயமும் - உணவும், நித்ரையும், அச்சமும், புணர்ச்சியுமாகிய நான்கும். (உ) பசுஸமர் - மிருகத்துக்குஒப்பானவர்கள். (ங) மிண்டடித்து - இஷ்டப்படிதிரிந்து. (ச) க்ருதஜ்ஞமான - நன்றியுள்ள. (ரு) விசேஷஜ்ஞர் - அறிவுடையவர்கள். (சா) லஜ்ஜாபயங்கள் - வெட்கமும், அச்சமும். (எ) நெஞ்சுபுரிதல் - மனம்வைத்தல். (அ) க்ருபை - தயை.

னைசொக்கநாராயணராயும், நரசிங்கனை - தெக்காழ்வாராயு மெழுந்தருளி யிருக்கிறவனை, நவின்று - வாயாரச்சொல்லி, ஏத்துவார்கள் - ஸ்தோத்ரம்பண்ணுமவர்கள், உழக்கிய - ஸஞ்சரிக்கிற, பாததுளி - திருவடித்தூள்கள், படுதலால்—,இவ்வுலகம்-ஸர்வேச்வரனைச் சிந்தியாத கல்மனத்தர் வர்த்திக்கிற இந்த லோகமானது, பாக்கியம்செய்தது - பாக்யத்தைப் பண்ணிற்று.

வ்யா.—(பூதமைந்தொடு) இத்தால் - பஞ்சபூதாரப்தமான தேஹத்தைச் சொல்லுகிறது. * மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம் புண்ணாராக்கையிறே. இத்தோடே(வேள்வியைந்து) பஞ்சமஹாயஜ்ஞங்கள். (புலன்களைந்து) சப்தாதிகளான விஷயங்களைந்து. "புலன்" என்று-புலப்படும் விஷயங்களைச் சொல்லுகிறது. "பொறிகள்" என்று - ச்ரோத்ரேந்த்ரியங்களான இந்த்ரியங்களைந்தையும் சொல்லுகிறது. இவற்றை "பொறி" என்கிறது - இவனை சப்தாதிகளிலே கொடுபோய் விழவிட்டு முடிக்குமதாகையாலே. "புலனைந்துமேயும் பொறியைந்து" என்னக்கடவதிறே. இவற்றால் (ஏதமொன்றுமிலாத) இவற்றோடே கூடியிருக்கச்செய்தே தோஷமின்றிக்கே யிருக்கை. ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது-ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு என்றிருக்கை. (வேள்வி யைந்துமேதமொன்றுமிலாத) ஸ்வர்க்காதி ஸாதநமாக அநுஷ்டிக்கை - ஏதம்; மோக்ஷ ஸாதநமாக வநுஷ்டிக்கை - ஏதமின்றிக்கே யிருக்கை; பகவத்பாகவதப்ரீதிஎன்றிருக்கை - ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. (புலன்களைந்து மேதமொன்றுமிலாத) சப்தஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களைத் தனக்கு என்றிருக்கை-ஏதம்; இவற்றை பகவத்விஷயத்துக் கென்றிருக்கை-ஏதமின்றிக்கே யிருக்கை; பாகவத விஷயத்துக் கென்றிருக்கை-ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. (பொறிகளைந்து மேதமொன்றுமிலாத) இந்த்ரியங்களை இதர விஷயங்களில் மூட்டுகை - ஏதம்; பகவத்விஷயத்திலே மூட்டுகை-ஏதமின்றிக்கே யிருக்கை; பாகவதவிஷயத்துக்கென்றிருக்கை-ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. (வண்கையினார்கள்) அதாவது - (க) ஔதார்யம். அதாவது - "பூமிபாரங்களுண்ணும் சோற்றினைவாங்கி" என்கிறபடியே அப்பதார்த்தங்கள் நசியாதபடியாக வாங்குகையும், இவற்றை ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கொடுக்கையும். ஈச்வரனையு முட்படப்பறித்திறே பாகவதகைங்கர்யம்பண்ணிற்று - திருமங்கையாழ்வார்; அதுக்கு உபாயமாகவிறே ஈச்வரன் திருமந்த்ரத்தை யுபதேசித்தது. "துன்னுசகடத்தாற்புக்க பெருஞ்சோற்றை - தான்துற்றிய தெற்றனவும்" என்று - ஸ்ரீவைஷ்ணவர்களுக்கிடாதே 'தானே யுண்டானென்றிறே ஆழ்வார் கர்ஹித்தது,

---

(க) ஔதார்யம் - உதாரகுணம்.

“பொதுவாக வுண்பதனைப் புக்குநீயுண்டக்கால்-சிதையாரோ உன்னோடு” என்று ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானையு முட்பட கர்ஹித்தாளிறே (க) பெண்மகள்; அவ்வளவு மன்றிக்கே, “சாதுகோட்டி யுட்கொள்ளப்படுவாரோ” என்கிறபடியே-தங்கள்திரளில் கூட்டாதே * பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடே கூட்டிவிட்டது. அவதாரத்திலுண்டானவிழவு திரவிறே - அர்ச்சாவதாரத்தில் அமுதுசெய்தாற்போலே குறையாமல் கொடுக்கிறது. (வாழ்) கண்ணாலேகண்டு அநுபவிக்கப் பெற்றவர்கள். (திருக்கோட்டியூர்நாதனை) ஸ்ரீவைகுண்டநாதன் திருப்பாற்கடல்நாதன் என்பதிலும், “திருக்கோட்டியூர்நாதன்” என்பதிறேயேற்றம். நாதனையென்றது - சொக்கநாராயணரை. (நரசிங்கனை) என்றது - தெக்காழ்வாரை. (நரசிங்கனை நவின்றேத்துவார்கள்) * மார்விரண்டு கூறாகக்கீறிய கோளரியை வேறாகவேத்தி யிருக்குமவர்களிறே இவர்கள். ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானை “திருநாமம் சொல்லவொட்டேன்” என்ற * வாயைத் தகர்த்திறே மார்வை இடந்தது. (உழக்கிய பாததூளி படுதலால்) (உ) அநுபவஜநிதப்ரீதிக்குப் போக்குவிட்டு ஸஞ்சரிக்கிற தூளிபடுதலால். (இவ்வுலகம்) * நினைப்பிலாவலி நெஞ்சுடைப் பூமிபாரங்கள் வர்த்திக்கிறலோகம். (பாக்கியம்செய்ததே) திருவுலகளந்த திருவடிகளின் தூளிபட்டதன்று பாக்யம், ஸ்ரீவைஷ்ணவர்கள்ஸ்ரீபாததூளிபட்டது பாக்யம். கல்லைப் பெண்ணாக்கி சரீரத்தைப் பூண்கட்டிற்றித்தனை - அவன்றிருவடிகள்; * கடல்வண்ணன் பூதங்கள்ஸ்ரீபாததூளி பட்டால் “போயிற்று வல்லுயிர்ச்சாபம்” என்று - ஸ்வரூபத்தைப் பற்றிவரும் விரோதிகளும் போமிறே. * பேர்த்தகரம் நான்குடையான் றிருவடிகள் படுவதிலும் * பேரோதும் தீர்த்தகரர் ஸ்ரீபாததூளி படுகையிறே பாக்யம். (கூ)

மூ.—குருந்தமொன்றொசித்தானொடுஞ்சென்று கூடியாடி விழாச்செய்து, திருந்துநான்மறையோரிராப்பக லேத்திவாழ்திருக்கோட்டியூர், கருந்தடமுகில் வண்ணனைக் கடைக்கொண்டு கைதொழும் பத்தர்கள், இருந்தவூரி லிருக்குமானிட ரெத்தவங்கள்செய்தார்கொலோ.

ப-ரை.—திருந்து - திருத்தமான, நான்மறையோர்-இருக்குமுதலியநான்கு வேதங்களையும் அர்த்தத்தோடு அப்யஸித்த ஸ்ரீவைஷ்ணவர்கள், ஒன்று - ஒப்பற்ற, குருந்தம் - குருந்தமரத்தை, ஒசித்தானொடும் - முறித்தகண்ணனோடே, சென்று —, கூடி - கிட்டி, ஆடி - அவன் குணங்களிலேபடிந்து, விழாச்செய்து - உத்ஸாஹத்தை யுடையராய், இராப்பகல் - இரவும்பகலும், ஏத்தி-ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு, வாழ் - நித்யவாஸம்பண்ணுகிற, திருக்கோட்டியூர் - திருக்

(க) பெண்மகள் - ஆண்டாள். (உ) அநுபவஜநிதப்ரீதி - எம்பெருமானை யநுபவிக்கையாலுண்டான அன்பு.

கோட்டியூரிலெழுந்தருளியிருக்கிற, கரு - கறுத்து, தடம்-பெருத்திருக்கின்ற, முகில் - மேகம்போலேயிருக்கிற, வண்ணனை - திருமேனியையுடையவனை, கடைக்கொண்டு - தங்கள்தாழ்மையை முன்னிட்டுக்கொண்டு, கைதொழும் - கைதொழாநின்றுள்ள, பத்தர்கள் - பக்திமான்களான ஸ்ரீவைஷ்ணவர்கள், இருந்த - வர்த்திக்கிற, ஊரில் - ஊரிலே, இருக்கும் - வஸிக்கிற, மானிடர் - மநுஷ்யர், எத்தவங்கள் - எப்படிப்பட்டதபஸ்ஸுக்களை, செய்தார்கொலோ - பண்ணினார்களோ.

வ்யா.—ஏழாம்பாட்டு. (குருந்தமொன்று) அத்விதீயமான குருந்தம். பூ முட்டாக்கிட்டாற்போலே யிருக்கையாலே க்ர்ஷ்ணன் விரும்பியிருக்கும். "பூங்குருந்தேறியிராதே" என்னக்கடவதிறே. "இதில் க்ர்ஷ்ணன்வந்து ஏறக்கூடும்,பின்னை நலிகிறோம்" என்றிறே- அஸுரன் ப்ரவேசித்தது. (ஒசித்தான்) விரோதி நிரஸநம்பண்ணினான். (ஒசித்தானொடுஞ்சென்று கூடியாடி விழாச்செய்து) விரோதி நிரஸநசீலனைச்சென்று கிட்டி இருவர்நினைவு மொன்றாய் அவன் குணங்களிலே யவகாஹித்து, அநந்தரம் இவர்களுக்கு விக்ரஹாநுபவத்தைக் கொடுக்கும். அங்கும் (௧) * ஸதாபச்யந்தியிறே. (திருந்துநான்மறையோர்) வேதத்துக்குத் திருத்தமாவது - (௨) பகவத்ஸ்வரூபாதிகளைஉள்ளபடி ப்ரதிபாதிக்கை. இதில் இவர்கள் செய்வது குணவிக்ரஹாநுபவத்துக்கு ஏகாந்தமான ப்ரதேசங்களில் சொல்லுகிறபடியே அநுஷ்டிக்கை. (இராப்பகலேத்தி) வேறு அந்யபரதை யில்லாமையாலே இதுமாறுமல்நடக்கும். (வாழ்) அநந்யப்ரயோஜநராகையாலே இதுதானே பலமாயிருக்கும். (திருக்கோட்டியூர்) அவர்கள் வர்த்திக்கிற தேசம். (கருந்தடமுகில்வண்ணனை) கறுத்துப் பெருத்திருக்கிற முகில்போலேயிருக்கிற திருமேனியை யுடையவனை. (கடைக்கொண்டுகைதொழும்) தங்கள் நைச்யத்தை முன்னிட்டுத் தொழுமவர்கள். அன்றிக்கே, (௩) உத்க்ர்ஷ்டன்பக்கல் (௪) அபக்ர்ஷ்டன் செய்யுந்தொழில் என்னவுமாம். அன்றிக்கே, "கடை" என்று - முடிவாய், மேல் "விற்கவும் பெறுவார்கள்" என்கையாலும் (௫) "ததீயசேஷத்வமே தங்களுக்கு ஸ்வரூபம்" என்றுகொண்டு அவர்களுக்கு உகப்பாக பகவத்விஷயத்தைத் தொழுமவனென்னவுமாம். (பத்தர்கள்) (௬) வைதமாகவன்றிக்கே, (௭) ராகமாகத்தொழுமவர்கள். (இருந்த வூரிலிருக்குமானிடர்) என்கையாலே - மநுஷ்யஜந்மத்துக்கு ப்ரயோஜநம்

---

(௧) ஸதாபச்யந்தி - எப்பொழுதும் ஸேவித்துக்கொண்டிருக்கிறார்கள். (௨) பகவத்ஸ்வரூபாதிகளை - எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலியவற்றை. (௩) உத்க்ர்ஷ்டன் - உயர்ந்தவன். (௪) அபக்ர்ஷ்டன் - தாழ்ந்தவன். (௫) ததீயசேஷத்வம் - பாகவதசேஷத்வம். (௬) வைதமாக - விதியாக. (௭) ராகமாக - ஆசையாலே.

ஸ்ரீவைஷ்ணவர்களிருந்த வூரிலிருக்கையென்னு மிடத்தைக் காட்டுகிறது. அங்குப்போகிறதும் "வானவர்நாடு" என்றிறே. "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்கையாலே - அவர்களில் இவர்களுக்கு வாசியுண்டானாற்போலே, தேசத்துக்கும் வாசியுண்டு. "இருந்தவூரிலிருக்கும் மானிடர்" என்கையாலே - அவர்களல்லர் (௧) உத்தேச்யர், அவர்களிருந்ததேசம். "வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்."

ஆழ்வானுக்கு, "ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருவடிச்சார்ந்தார்" என்று விண்ணப்பம்செய்ய; "பாகவத கைங்கர்யமே (௨)யாத்ரையாய்ப்போந்தவனை அப்படி சொல்லலாகாது, 'திருநாட்டுக்குப் போனார்' என்றுசொல்லவேணுங் காணும்" என்றருளிச் செய்தாராம். ஸ்ரீவைஷ்ணவர்களை "நீராட" என்றும், ஆசார்யனை "திருமஞ்சநம்பண்ண" என்றும் சொல்லுகிறது - (௩) உத்தேச்யதாரதம்யத்தை யிட்டிறே. "வடுகநம்பி திருநாட்டுக்குப் போனார்" என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர், அருளாளப்பெருமாளெம்பெருமானாருக்கு விண்ணப்பம்செய்ய; சிறிதுபோது மோஹித்துக்கிடந்து உணர்ந்தருளி, அவரைப்பார்த்து "திருநாட்டுக்குப் போனார்" என்னலாகாதுகாணும், 'உடையவர்ஸ்ரீபாதத்துக்குப்போனார்' என்னவேணுங்காணும்" என்றருளிச்செய்தாராம். (௪) ஸ்ரீசபரியும் (௫) பெருமாள்திருவடிகளிலே ப்ரார்த்தித்தது இதுவிறே. ஆழ்வான், ஸம்ஸாரத்தில் ஆர்த்தியின் கனத்தாலேகலங்கி, (௬) பெருமாள் திருவடிகளிலே, "அடியேனைத்திருநாட்டேறப்போம்படி திருவுள்ளமாகவேணும்" என்று விண்ணப்பம்செய்ய; பெருமாள் திருவுள்ளமாய், ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர்திருமாளிகையிலே (௭) புறவீடுவிட்டிருக்கிறவளவிலே, இத்தைஉடையவர் கேட்டருளி, பஞ்சுக்கொட்டன் திருவாசலளவாகவெழுந்தருளி, "பெருமானுக்குவிண்ணப்பம்செய்தால் விண்ணப்பம் செய்தது பெருமானும் செய்தருளுவர், நாமடியாகப்பெருமாள் இரண்டுவார்த்தையருளிச்செய்தாராக வொண்ணாது" என்று, மீண்டும் ஆழ்வானிருக்கிற விடத்தேற வெழுந்தருளி "என் ஆழ்வான்" என்ன; "அடியேன் மறந்தேன்" என்று விண்ணப்பம் செய்தான். மறக்கைக்கடி - (௮) ஸம்ஸாரத்தின் ஆர்த்தியின் கனம்.

---

(௧) உத்தேச்யர் - விரும்பப்படுமவர். (௨) யாத்ரையாய் - போதுபோக்காய். (௩) உத்தேச்யதாரதம்யம் விரும்புதலின் ஏற்றத்தாழ்வு. (௪) சபரி-ஒரு வேடஸ்த்ரீ. (௫) பெருமாள் - சக்ரவர்த்தித்திருமகன். (௬) பெருமாள் - நம்பெருமாள். (௭) புறவீடுவிடல் - பரஸ்தாநம்பண்ணல். (௮) ஸம்ஸாரத்தின் ஆர்த்தியின்கனம் - ஸம்ஸாரத்தினாலுண்டான துக்கத்தின்மிகுதி.

(எத்தவங்கள் செய்தார்கொலோ) "அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் - இவற்றின் புறத்தாளொன்றெண்ணேன்" என்கிறபடியே-அவன் காவலுக்குள்ளே கிடக்கிறதுதானேயிறே தவமாவது. "நீர் நிலைநின்ற தவமிதுகொல்" என்று - பகவத்விஷயத்தைக் கிட்டுகைக்குத் தவம் ஒன்று; பாகவதவிஷயத்தைக் கிட்டுகைக்கு அநேகம் தபஸ்ஸு வேணுமிறே. (கொலோ) பகவத்விஷயத்தைக் கிட்டுகைக்கு தபஸ்ஸு அறிவர்; பாகவதவிஷயத்தைக்கிட்டும் தபஸ்ஸுக்களிறே இவர்க்கு அறியப்போகாதிருப்பது. (எ)

மூ.—நளிர்ந்தசீல னயாசல னபிமாநதுங்கனை நாடொறும், தெளிந்தசெல்வனைச் சேவகங்கொண்ட செங்கண்மால்திருக் கோட்டியூர், குளிர்ந்துறைகின்றகோவிந்தன்குணம்பாடுவாருள்ள நாட்டினுள், விளைந்ததானிய முமிராக்கதர் மீதுகொள்ள கிலார்களே.

ப-ரை.—நளிர்ந்தசீலன் - குளிர்ந்தசீலத்தையுடையவராய், நயாசலன் - ஒருகாலும்நீதிதவறாதவராய், அபிமாநம் - எம்பெருமானை யநுபவிக்கையால் வந்தசெருக்கில், துங்கனை - உயர்ந்தவராய், நாடொறும் - நாள்தோறும், தெளிந்த - தெளிந்துவாராநின்றுள்ள, செல்வனை - கைங்கர்யஸ்ரீயையுடையரான செல்வநம்பியை, சேவகன் - அடியானாக, கொண்ட - திருவுள்ளம்பற்றியருளினவனாய், செம் - செந்தாமரைமலரையொத்த, கண் - திருக்கண்களையுடையனாய், மால் - பிராட்டிபக்கல்வ்யாமுக்தனான ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்கிற, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில், குளிர்ந்து - உள்ளங்குளிர்ந்து, உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுகிற, கோவிந்தன்-கோவிந்தனுடைய, குணம்-கல்யாணகுணங்களை, பாடுவார் - பாடுமவர்கள், உள்ள - வர்த்திக்கிற, நாட்டினுள்-நாட்டிலே, விளைந்த—, தானியமும்-தானியத்தையுங்கூட, இராக்கதர்—, மீதுகொள்ளகிலார்கள் - அபஹரிக்கமாட்டார்களித்தனை.

வ்யா.—எட்டாம்பாட்டு. (நளிர்ந்தசீலன்) குளிர்ந்தசீலத்தையுடைய செல்வநம்பி. ஈச்வரன்சீலம் கொதித்திருக்கும். அதுக்கடி, "வாள்கொள் நீள்மழுவாளி யுன்னாகத்தான்" என்றும், "ஆளராய்த் தொழுவாரு மமரர்கள்" என்றும் - (க) துர்மாநியான ருத்ரனும், சாவாமைக்கு மருந்துதின்னும் தேவஜாதியுமிறே இவனுக்கடிமை செய்வது. "அக்கும்புலியி னதளுமுடையா ரவரொருவர்பக்கம்நிற்க நின்றபண்பரூர்" என்றும், "தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும் சூழரவும் பொன்னாணும்தோன்றுமால்" என்றும்- * இரண்டுருவு மொன்றாயிசைந்து தோற்றுகையாலே "ஏறாளு மிறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளும்தனியுடம்பன்" என்று - இவனுடம்பு தேவதாந்தரமும் திருவிடையாட்ட

(க) துர்மாநி - கெட்ட அஹங்காரமுடையவன்.

முமாயிறே யிருப்பது. இப்படியன்றியே, "காணிலுமுருப்பொலார் செவிக்கினாதகீர்த்தியார்" என்றிறே - (௧) இவரிருப்பது. (நயாசலன்) நயமென்று-நீதியைச் சொல்லுகிறது. அங்கும், "நீதிவானவன்" என்னக்கடவதிறே. (அசலன்) நீதிக்குக் குலைத்தலில்லாதவன். சேஷசேஷிபாவஸம்பந்தம், "ஒண்டொடியாள் திருமகளும்நீயும்" என்கிறபடியே அடைவுபட்டிறே அங்கிருப்பது; இங்கு (௨) மனையடைவே "யானே யென்றனதே" என்று - அடைவுகெட்டிருக்கும். (௩) உக்ரஸேநனை முடியைச்சூட்டி ஆஸநத்திலே உயர வைத்து தான்திருக்கையாலே வெண்சாமர மிடுமிடமிறே இவ்விடம். "விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறுமைம்புலன்" என்று - * மயர்வறமதிநல மருளப் பெற்றவரும் அதிசங்கை பண்ணவேண்டு மிடமிறே யிது. இந்நிலத்திலே குறையாதிருக்கை. பாபம்மாண்டால் பண்ணும் (௪) க்ர்பையிறே பாபம் வந்தவாறேகுலைவது, பாபம்கிடக்கப்பண்ணும் க்ர்பையாகையாலே குலையாது. (அபிமாநதுங்கன்) "என்னில்மிகுபுகழார்யாவரோ" "மாறுளதோ விம்மண்ணின்மிசையே" "யாவர்நிகரகல்வானத்தே" [யான்பெரியன் நீபெரியையென்பதனை யாரறிவார்] என்று - பகவதநுபவத்தால்வந்த (௫) செருக்கும் (௬) கர்வமிறே அபிமாநிக்கிறது. [புவியுமிருவிசும்பும் நின்னகத்த] இது வன்றோ உன்படி. [நீயும்] சேதநாசேதநங்களை உன்திருவயிற்றிலே வைத்த நீயும்; [என்செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய்] என்று - (௭) தத்த்வத்ரயத்தையும் அணுபரிமாணனை என்னுடைய நெஞ்சுக்குள்ளே யடக்கின நானோ நீயோபெரியாரென்னு மிடத்தை, உனக்கு பக்ஷபாதியுமாய்க் கையாளுமாய்க் கைப்பட்டவனோடே விசாரி. "சிறியேனுடைச் சிந்தையுள் மூவுலகும் தன்நெறியா வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தார்" என்னக்கடவதிறே. "நளிர்ந்தசீலன்" என்று - குணம். "நயாசலன்" என்று - அநுஷ்டாநம். "அபிமாநதுங்கன்" என்று - இவற்றால்வந்த செருக்குக்கடி ஜ்ஞாநகார்ய மென்கிறது. (நாடொறும்தெளிந்த) என்று - இச்செருக்கோடே விபரீதச் செருக்கு ஒருநாளும் கலசாதென்கிறது. "கலக்கமில்லாநற்றவர்" என்றுகலங்காதிருக்கைதான் அரிதாயிறேயிருப்பது. "தெளிவுற்று வீவின்றி நின்றவர்" என்கிறபடியே-இத்தெளிவுதான் குலையாதிருக்கைதான் ஏற்றமாயிருப்பது. இப்படியன்றிக்கே, நாடொறும்தெளிந்துவாராநிற்குமவர்க்கு. (செல்வனை) "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நஃ" "அந்த

(௧) இவர் - பெரியாழ்வார். (௨) மனையடைவே - வீடுகள்தோறும். (௩) உக்ரஸேநன் - கம்ஸனுடைய தகப்பன். (௪) க்ர்பை - தயை. (௫) செருக்கு - கர்வம். (௬) கர்வம் - செருக்கு. (௭) தத்த்வத்ரயம் - சித்தும், அசித்தும், ஈச்வரனும்.

ணோ லக்ஷ்மிஸம்பந்ந:” என்றும், “அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமாந்” “அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந்” என்றும், “ஸது நாகவரஶ்ஶ்ரீமாந்” “ஸது நாகவரஸ்ஸ்ரீமாந்” என்றும்சொல்லுகிற மூன்று ஸ்ரீயுமிவர்க்குண்டு. “லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:” “லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:” என்று - பெருமாள் ராஜ்யத்தை இழந்தார்; இவர் (க) கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்றார். * சுற்றமெல்லாம் பின்தொடர எல்லாவடிமையும்பெற்றார். “ஸம்பந்ந:” என்கையாலே - பாகவதகைங்கர்யபர்யந்தமாகையிறே பூர்த்தி. பகவத் கைங்கர்யஞ்செய்தது தம்முடைய ஸத்தை பெறுகைக்காக; அந்தஸத்தையை யழியமாறியிறே பாகவதகைங்கர்யம் பண்ணிற்று. [அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமாந் - அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந்] பிராட்டியையும் பெருமாளையும் கண்டன்றிறே - இவர்படைவீடுவிட்டுப் புறப்பட்டது; ஆகாசமிறே இவர்க்குள்ளது. இளையபெருமாளும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் படைவீட்டைவிட்ட பின்பிறே ஸ்ரீமான்களாய்த்து. பிராட்டி லங்கைக்குள்ளே யெழுந்தருளி யிருக்கச்செய்தேயும் ஸஹவாஸ தோஷத்தாலே பிராட்டி கடாக்ஷம்பெற்றதில்லை; லங்கையைவிட்டுக் கிளம்பின பின்பிறே “ஸ்ரீமான்” என்றது. “ஸது நாகவரஶ்ஶ்ரீமாந்” “ஸது நாகவரஸ்ஸ்ரீமாந்” என்று - ஸ்ரீகஜேந்த்ராழ்வான் (உ) ஸ்வரக்ஷணத்தில் (ரு) ஸ்வவ்யாபாரத்தைப் பொகட்ட பின்பிறே ஸ்ரீமானாய்த்து. முதலையல்ல விரோதி, அஹங்காரம். இவற்றால் பலித்தது - (ச) ப்ராப்யத்தை (ரு) லபித்தபடியும், ப்ராப்திவிரோதி நிவ்ருத்தமானபடியும், ப்ராபகவிரோதி நிவ்ருத்தமானபடியும் சொல்லிற்று. (சேவகங்கொண்ட) இவன்செய்தான் என்றால் இவனுக்கு உகப்பாம்; “கொண்ட” என்கையாலே - ஈச்வரனுகப்பென்கிறது. சேவகங்கொண்டது ஸ்வரூபத்தைக் காட்டியோவென்னில்; அன்று, கண்ணழகைக்காட்டி யென்கிறது (செங்கண்மால்) “சேவியேனுன்னையல்லாற் சிக்கனச் செங்கண்மாலே” என்னக் கடவதிறே. (திருக்கோட்டியூர் குளிர்ந்துறைகின்ற) பரமபதத்தில் ஸம்ஸாரிகளிழவிலே திருவுள்ளம் குடிபோய் உள்ளுக்கொதிததிருக்கும்; அவ்விருப்பு நித்யமானாலும்; “இருந்தாலும முள்மேலிருப்பு” என்னக்கடவதிறே; ப்ரீதியோடேபொருந்தி வர்த்திப்பதிங்கேயிறே. “அந்தாமத்தன்புசெய்தென்னுவிசேரம்மானுக்கு” என்று - காட்டுத்தீயிலே யகப்பட்டவன் தடாகத்திலேவந்து விழுமாபோலேயிறே வந்துவிழுந்தது. “வெள்ளத்தினுள்ளானும் வேங்கடத்து

---

(க) கைங்கர்யஸாம்ராஜ்யம் - கைங்கர்யம் பண்ணுகைக்குத் தலைமையானகை. (உ) ஸ்வரக்ஷணம் - தன்னைத் தான் காப்பாற்றிக்கொள்ளல். (ரு) ஸ்வவ்யாபாரம் - தன்னுடையவேலை. (ச) ப்ராப்யம் - பலம். (ரு) லபித்தல்-அடைகை.

மேயானு, முள்ளத்தினுள்ளான்" என்னக்கடவதிறே. "பள்ளிகொள்ளும்சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்னக்கடவதிறே. (கோவிந்தன் குணம்பாடுவாருள்ளநாட்டினுள்) "செங்கண்மால்" என்று (க) வாத்ஸல்யம்; "சேவகன்கொண்ட" என்று - (உ) ஸௌசீல்யம்; "கோவிந்தன்" என்று - (ங) ஸௌலப்யம்; "அவதாரம்பரத்வம்" என்னும்படியிறே - அர்ச்சாவதாரஸௌலப்யம். இதுக்கு ஏகாந்தமான குணங்களை ஸ்நேஹத்தோடே சொல்லுவாருள்ளநாட்டினுள். அவர்களளவல்ல, அவர்கள் ஸம்பந்தமுடையா ரளவல்ல, அவர்களிருந்த ஊரளவல்ல, அவ்வூரோடேசேர்ந்தநாட்டினுள். (விளைந்ததானியமு மிராக்கதர் மீதுகொள்ளகிலார்களே) தனக்கும் தன்பந்துக்களுக்கு மென்னிலிறே அவர்கள்கொள்ளுவது; பகவத்பாகவதவிஷயங்களுக் கென்றால் அவர்களுக்குக்கொள்ள சக்தியில்லை. "புனத்தினைக்கிள்ளிப் புதுவவிக்காட்டியுன் பொன்னடிவாழ்க" என்றிறே இவர்களிருப்பது. (அ)

மூ.—கொம்பினார்பொழில் வாய்க்குயிலினம்கோவிந்தன்குணப்பாடுசீர்ச், செம்பொனார்மதிள்சூழ் செழுங்கழனியுடைத் திருக்கோட்டியூர், நம்பனைநரசிங்கனை நவின்றேத்துவார்களைக் கண்டக்கால், எம்பிரான்றன சிந்நங்களிவரிவரென் றாசைகடீர்வனே.

ப-ரை.—கொம்பின் - பணைகளாலே, ஆர் - நெருங்கின, பொழில்வாய் - சோலையினிடத்தில், குயிலினம் - குயிலினங்களானவை, கோவிந்தன் - கோவிந்தனுடைய, குணம் - குணங்களை, பாடு - பாடாநின்றுள்ளதாய், சீர் - சிறந்த, செம்பொன் - செம்பொன்னாலே, ஆர்-சமைந்த, மதிள் - மதிளாலே, சூழ் - சூழப்பட்டு, செழும் - அழகிய, கழனியுடை - கழனிகளையுடைத்தாயிருந்துள்ள, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில், நம்பனை-ஆச்ரிதர் "நமக்குத்தஞ்சமாமவன்" என்று நம்பத்தககவனாய், நரசிங்கனை-ந்ருஸிம்ஹாவதாரம் பண்ணினவனை, நவின்று ஏத்துவார்களை - ப்ரீதிக்குப்போக்குவிட்டுச் சொல்லுமவர்களை, கண்டக்கால் - கண்டால், இவரிவர் - இவர்கள், எம் - எமக்கு, பிரான்றன-உபகாரகனான ஸர்வேச்வரனுடைய, சிந்நங்களென்று - அடையாளமாமவர்களென்று, ஆசைகள் —, தீர்வன் - தீர்வேன்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கொம்பினாரித்யாதி) பணைகளாலேநெருங்கினசோலையிடத்துக்குயில்கள். "குயிலாலும்வளாபொழில்சூழ்" (கோவிந்தன்குணம்பாடு) குயிலினங்களானவை, "தாழ்ந்த குலத்திலேயவதரித்துத் தாழ்ந்தார்காரியம்செய்வதே!" என்று அவனுடைய ஸௌலப்யத்தை யநுஸந்தித்து, ப்ரீதிக்குப் போக்குவிட்டுப் பாடா

(க) வாத்ஸல்யம்-கன்றின்பக்கல் பசுவிருக்குமிருப்பு. (உ) ஸௌசீல்யம்-உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு புரையறக்கலந்திருக்கை. (ங) ஸௌலப்யம்-கண்ணுக்கு விஷயமாகாத தான் கண்ணாலேகண்டு கிட்டலாம்படியிருக்கை.

நிற்கும். *கூட்டிலிருந்து கிளியெப்போதும் கோவிந்தாகோவிந்தா என்று சொல்லுவது - சிலர் பயிற்றுவித்தாலிறே; அங்ஙனன்றிக்கே இவை தானேபாடாநிற்கும். "நாராயணனே வரக்கூவாயேலிங்குத்து நின்றும்துரப்பன்" என்னும்படி - இதுவொழிந்த நாமாந்தரங்கள் சொல்லுவதில் இங்குநின்றும் போகவமையும் என்னும்படியிறே இவற்றின்படி. "இன்னடிசிலொடுபாலமுதூட்டியெடுத்தவென்கோலக்கிளியை, யுன்னொடு தோழமைக்கொள்ளுவன் குயிலே"என்று-கைக்கூலிபெற்றாலிறே கூவுவது; இவை அப்படியன்று. (சீர்ச்செம்பொனார்மதிள்சூழ்செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர்) (க)ச்லாக்யமாய்ச் சிவந்தபொன்னாலேசமைத்த மதிள்களாலே சூழப்பட்டு அழகிய கழனிகளையுடைத்தான திருக்கோட்டியூர். உள்ளூப்புக்கநுபவிக்கவேண்டாதபடி கொம்புகளாலே ஆர்ந்த சோலையும், குயில்கள் பாடுகையும், சிவந்தபொன்னாலே சமைந்த திருமதிள்களும், அழகிய கழனிக்கட்டளையும் கண்டநுபவிக்கவேண்டும்படி நிரதிசய போக்யமாயிருந்துள்ள தேசம்.

(நம்பனை) (உ) விச்வஸநீயனை. (நரசிங்கனை) விச்வாஸத்துக்கடி இந்த (ங) அபதாநம். "அடுத்ததோருருவாயின்று நீவாரா யெங்ஙனந்தேறுவருமர்" என்னக்கடவதிறே. ஸ்ரீப்ரஹ்லாதனுக்கு உதவினது ஸம்ஸாரிகள் விச்வஸிக்கைக்குடல். ஆழ்வார்க்குதவினதிறே - ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விச்வஸநீயம். "அங்கப்பொழுதேயவன்வீயத்தோன்றிய, வென்சிங்கப்பிரான்" என்று - ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு விச்வஸிக்கைக்கிறே - தோன்றிற்று. எம்பாரருளிச்செய்யும் வார்த்தை;—"ஈச்வரனுக்கு மூன்று ஆபத்துவந்து கழிந்தது" என்றருளிச்செய்வர். அதாவது - த்ரௌபதிக்கும் ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கும் ஸ்ரீப்ரஹ்லாதனுக்கும் உதவிற்றிலனாகில், ஸம்ஸாரிகள் "ஈச்வரத்வமில்லை" என்று எழுதி எழுத்திடுவர்களிறே. ஆழ்வாரும் "எங்ஙனந்தேறுவருமர்" என்று - தம்முடைய இழவிலும் "ஸ்ரீவைஷ்ணவர்கள் (ச) அத்யவஸாயங்குலைகிறதோ" என்றிறே அஞ்சுகிறது. "பிழைக்கின்றதருள்" என்றிறே அஞ்சுகிறது. "பிழைக்கின்றதருளென்று பேதுறுவன்" என்று - தம்முடைய இழவுக்கு நோகையன்றியிலே, ஈச்வரனருளுக்கிறே - இவர்நோவது. (நவின்றேத்துவார்களைக்கண்டக்கால்) ப்ரீதிக்குப் போக்குவிட்டுச் சொல்லுவார்களைக்கண்டக்கால், கண்படைத்தப்ரயோஜநம் பெறலாம். "ஈட்டங்கண்டிடக்கூடுமேல் அதுகாணும்கண்பயனாவது" என்னக்கடவதிறே. (எம்பிரான்றனசிந்நங்களிவரிவரொன்று) சிந்நமென்று-அவனுடைய அடையாளம். இவர்களைக் கண்டக்கால் "அவன்

(க) ச்லாக்யமாய் - கொண்டாடத்தக்கதாய். (உ) விச்வஸநீயன் - நம்பத்தக்கவன். (ங) அபதாநம் - வ்ருத்தாந்தம். (ச) அத்யவஸாயம் - நிச்சயம்.

(க) ஸாத்த்விகஸேவ்யன்" என்று தோன்றும். (உ) "அவிநீத ப்ர்த்யவர்க்கன்" என்றிறே அவனைக்கழித்தது. "கூராராழிவெண் சங்கேந்தி - வாராய்" என்று - அவற்றோடு வாராதபோது "போ காய்" என்றிறே இவரிருப்பது. "என்னுவிசேரம்மானுக்கு அந்தாம வாண்முடிசங்காழிநூலாரமுள" என்னக்கடவதிறே. (ஆசைகள்தீர் வனே) "ஆசைகள்" என்று - காண என்றும், கிட்ட என்றும், கூட விருக்க என்றுமிறே இவருடைய ஆசைகள். "அவனைக் காணவே ணும்" என்கிற ஆசைகள் தீரும் உகந்தருளின நிலங்களை யநுபவித் தால். "அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்கிற இழவுகள் தீரும் இங்கே ஸ்ரீவைஷ்ணவர்கள்திரளைக் கண் டால். "கண்ணாரக்கண்டு கழிவதோர்காதல்" என்கிறபடியே கண்ட வாறே ஆசைகள்தீருமிறே. ஈச்வரனைக்கண்டால் ஆசைகள்தீராது, இவர்களைக்கண்டால் ஆசைகள்தீரும். "கடிவார்தண்ணந் துழாய்க் கண்ணன்" இத்யாதி, "அடியேன்வாய்மடுத்துப் பருகிக்களித்தே னே" என்று - பூர்ணாநுபவம்பண்ணினபின்பிறே "அடியார்கள்குழா ங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்று ப்ரார்த்தித்தது. "தேர்கடவியபெருமான் கனைகழல்காண்பதென்றுகொல்கண்களே" என்று ஆசைகள்தீர்ந்தது - *பயிலுஞ்சுடரொளியிலேயிறே. "திரு நாவாயவையுள் புகலாவதோர்நாள்" என்று அத்திரளிறே (ங) உத் தேச்யம். "ஓணவிழவிலொலியதிரப்பேணிவரு வேங்கடவாவெ ன்னுள்ளம்புகுந்தாய்" என்று - அவன் வருமிடத்திலே அவர்க ளும் மங்களாசாஸநம்பண்ணிக்கொண்டு கூடவந்து புகுருவர்கள்.()

மூ.—காசின்வாய்க்கரம் விற்கிலுங்கரவாது மாற்றிலிசோறிட்டுத், தேசவார்த்தைபடைக்கும் வண்கையினார்கள் வாழ்திருக் கோட்டியூர்க், கேசவாபுருடோத்தமா கிளர்சோதியாய்குற ளாவென்று, பேசுவாரடியார்களெந்தம்மைவிற்கவும் பெறு வார்களே.

ப-ரை.—காசின் வாய் - ஓரிடங் காசுக்கு, கரம் - ஒருபிடி நெல், விற்கி லும் - விற்கும் காலத்திலும், கரவாது - தாம் தேடிய பொருள்களை மறைத்து வையாமல், தங்களைத் தேடிவந்த விருந்தினர்க்கு, மாறு இலி - ப்ரத்யுபகாரத் தை விரும்பாமல், சோறு இட்டு —, அத்தாலே, தேசவார்த்தை - புகழை, படை க்கும் - பெற்றவர்களாய், வண் - உதாரமான, கையினார்கள் - கொடையை யுமுடையவர்சள், வாழ் - நித்யவாஸம் பண்ணுகிற, திருக்கோட்டியூர் - திருக் கோட்டியூரில் எழுந்தருளியிருக்கிறவனே, கேசவா - அழகிய மயிர் முடியை யுடையவனே, புருடோத்தமா - புருஷரிற்சிறந்தவனே, கிளர் - மிக்க, சோதி

(க) ஸாத்த்விகஸேவ்யன் - ஸத்த்வகுணம் தலையெடுத்தவர்களாலே தொழப்படுமவன். (உ) அவிநீதப்ர்த்யவர்க்கன் - தனக்குக் கீழ்ப்படியாத பரி ஜநங்களையுடையவன். (ங) உத்தேச்யம் - விருப்பம்.

யாய் - தேஜஸ்ஸையுடையவனே, குறளா - வாமநவேஷங் கொண்டவனே, என்று—, பேசுவார் - கொண்டாடுமவர்களுக்கு, அடியார்கள் - சேஷபூதரான வர்கள், எந்தம்மை - எங்களை, விற்கவும் - வேண்டினபடி விற்றுக்கொள்ளவும், பெறுவார்கள் - உரியரானவர்கள் என்கிறார்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (காசின்வாய்கரம்விற்கிலும்) ஓரிடங் காசுக்கு ஒரு பிடிநெல்லு விற்கும்காலத்திலும். (க) ஸுபிக்ஷமான காலத்தில் (உ) அதிதிஸத்காரம்பண்ணிப்போருமது ஓரேற்றமன்றிறே; (ங) துர்ப்பிக்ஷகாலத்திலும் தனக்குள்ள (ச) அம்சத்தை அதிதிகள்விஷயத்திலே ஸமர்ப்பிக்குமதிறே - ஏற்றமாவது. *காசின்வாய்கரம்விற்கிறதுக்கு மேற்பட்டதொரு துர்ப்பிக்ஷமில்லையிறே; அத்தைப்பற்ற இப்படி யருளிச்செய்கிறார். (கரவாது) தந்தாமுக்குள்ள தநதாந்யங்களை "பின்புத்தைக்குநமக்குவேணும்"என்னும் நினைவாலே மறைத்துவையாதே, "இக்காலத்துக்கு இவ்விஷயங்களிலே விநியோகப்படுகைக்கன்றோ இவைகண்டது" என்று வெளியிட்டுக் கொண்டிருந்து. (மாற்றிலிசோறிட்டு) (ரு) ப்ரத்யுபகாரநிரபேக்ஷமாகச் சோற்றையிட்டு. அதாவது-அதிதிஸத்காரந்தான் (சா) விஹிதமாகையாலும், (எ) பகவத்விபூதிபூதரன்றோவென்னும் ப்ரதிபத்தியாலும், எதிர்த்தலையில் (அ) தைந்யதர்சநத்தால்வந்த க்ருபையாலும் இடுகை. (கூ) ஸர்வாதித்யம்பண்ணுமவர்களுக்கு (க0) விஷயவிபாகம்பண்ணவொண்ணாதிறே. ஆகையால் (கக) லுப்தர்க்கும் தரித்ரர்க்கும் பசியர்க்குமெல்லாமிடவேணுமிறே. இவர்கள்விஷயத்தில் ஒரு ப்ரத்யுபகாரத்தைக் கடாக்ஷித்தன்றிறேயிடுவது. ஆகையால் "மாற்றிலிசோறிட்டு" என்கிறது. "நாடொறும் விருந்தோம்புவார்" என்றாற்போலே இத்தையும் (கஉ) விசேஷவிஷயமாக்கினாலோவென்னில்; "சோறு" என்றும், "இட" என்றும் சொல்லுகையாலே, இத்தை வைஷ்ணவவிஷயங்களி லாக்கப்போகாது; ஆன பின்பு, இது(கங)ஸாமாந்யவிஷயமாமித்தனை. இதுதானும் சாஸ்த்ரஸித்தமாகையாலே தேசத்துக்கு ஒருவளப்பம் சொல்லுகையிறே இப்போது இவர்க்கு (கச) அபேக்ஷிதம். (தேசவார்த்தைபடைக்

---

(க) ஸுபிக்ஷம் - செழிப்பு. (உ) அதிதிஸத்காரம் - விருந்தினரையுபசரிக்கை. (ங) துர்ப்பிக்ஷம் - கருப்பு. (ச) அம்சம் - பங்கு. (ரு) ப்ரத்யுபகாரம் - கைம்மாறு. (சா) விஹிதம்-விதிக்கப்பட்டது. (எ) பகவத்விபூதிபூதர்-எம்பெருமானுக்கு சேஷப்பட்டவர்கள். (அ) தைந்யதர்சநம் - எளிவரவைக்காண்கை. (கூ) ஸர்வாதித்யம் பண்ணுகை - விருந்தினரெல்லாரையும் உபசரிக்கை. (க0) விஷயவிபாகம்பண்ணல் - நற்குணமுடையவன், தீக்குணமுடையவன் என்று வகுக்கை. (கக) லுப்தர் - கொடாதவர்கள். (கஉ) விசேஷவிஷயம்-ஸ்ரீவைஷ்ணவவிஷயம். (கங) ஸாமாந்யவிஷயம் - தாழ்ந்தவர்கள்விஷயம். (கச) அபேக்ஷிதம் - விருப்பம்.

கும்) (க) யசஸ்கரமான வார்த்தைகளைப் (உ) படைக்கும். அதாவது-இருந்தாரிருந்தவிடங்களிலே தங்களுடைய (ஈ) ஔதார்யம் க்ர்பைமுதலான குணங்களைச் சொல்லிக் கொண்டாடும்படியாகை. இவர்கள் புகழை (ச) நச்சிச்செய்யாதிருந்தாலும் தன்னடையே வந்துண்டாமிறே இது. (வண்மையினார்கள்) உதாரமானகொடையையுடையவர்கள். அதாவது - "உள்ளதெல்லாம் (ரு) பரார்த்தமாகவே (சு) விநியோகிக்கவேணும்" என்னுமௌதார்யமுடையவர்களென்கை. (வாழ்திருக்கோட்டியூர்) இப்படியிருந்துள்ளவர்கள் இத்தேசவாஸமே தங்களுக்கு வாழ்வாகக்கொண்டுவர்த்திக்கிற திருக்கோட்டியூர்.

(கேசவா) அழகிய திருக்குழற்கற்றையையுடையவனே. (புருடோத்தமா) அவ்வழகை (எ) ஆச்ரிதர்க்கு எப்போது மநுபவிக்கக் கொடுக்கும் ஔதார்யத்தையுடையவனே. (கிளர்சோதியாய்) "அது தன்பேறு" என்னுமிடம்தோற்றும்படியான மிக்கதேஜஸ்ஸையுடையவனே. (குறளா) உன்னுடைமை பெறுகைக்கு நீ யிரப்பாளனுமவனே. (என்றுபேசுவாரடியார்கள்) என்று இப்படி அவன்ஸ்வபாவங்களுக்குத்தோற்றுப் பேசுமவர்களுக்கு அடியாரானவர்கள். இப்படிபேசுமவர்களேயன்று நமக்குஉத்தேச்யர் இவர்கள் இவ்வாசி; யறிந்துபேசுவதே! என்று அவர்கள் ஸ்வபாவத்துக்குத்தோற்று அடிமையா யிருக்குமவர்களே நமக்கு உத்தேச்யரென்கை. இவர்களுக்கு உத்தேச்யராவது எவ்வளவென்னில் (எந்தம்மைவிற்கவும்பெறுவார்கள்) என்கிறார்; - இவர்களுக்கு சேஷமாகையே புருஷார்த்தமென்றிருக்கும் எங்களை, தங்களுக்கு (அ) இஷ்ட விநியோகத்துக்குறுப்பாக விற்றுக்கொள்ளவும் உரியவர்கள். "తద్భృత్యై ఘృణినాం క్రయవిక్రయార్హైః" "தத்ப்ருத்யநிவ்ருநவஸாம் க்ரயவிக்ரயார்ஹை:" என்னக்கடவதிறே. (௧0)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—சீதநீர்புடைசூழ்செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர்
ஆதியானடியாரையு மடிமையின்றித் திரிவாரையும் [ல்
கோதில்பட்டர்பிரான் குளிர் புதுவைமன்விட்டுசித்தன்சொ
ஏதமின்றியுரைப்பவ ரிருடீகேசனுக்காளரே.

(க) யசஸ்கரமான - புகழை யுண்டுபண்ணுமதான. (உ) படைக்கும்- பெறுவர்கள். (ஈ) ஔதார்யம் - உதாரகுணம். (ச) நச்சி - விரும்பி. (ரு) பரார்த்தமாக - பிறருக்காக. (சு) விநியோகித்தல் - கொடுத்தல். (எ) ஆச்ரிதர் - அடைக்கலம் புகுந்தவர்கள். (அ) இஷ்டவிநியோகம் - இஷ்டப்படி கொடுக்கை.

ப-ரை.--சீதம் - குளிர்ந்த, நீர் - ஜலத்தாலே, புடை - சுற்றும், சூழ் - சூழப்பட்டிருப்பதாய், செழும் - அழகிய, கழனி - கழனிகளையும், உடை - உடைத்தான, திருக்கோட்டியூர் - திருக்கோட்டியூரில் எழுந்தருளி யிருக்கிற, ஆதியான்-காரணபூதனானவனுக்கு; அடியானையும்-அடிமைசெய்து போருமவர்களையும், அடிமையின்றி- அவன்றிருவடிகளிலடிமை செய்யாமல், திரிவானையும் - விஷயப்ரவணராய்த் திரிகிறவர்களையும்; கோதில் - குற்றமற்றவராய், பட்டர் - ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, பிரான்-உபகாரகராய், குளிர் - ஸம்ஸாரதாபத்தைப் போக்கும் குளிர்த்தியை யுடைய, புதுவை - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, மன் - தலைவருமான, விட்டுசித்தன் - பெரியாழ்வார், சொல் - புகழ்ந்தும் பழித்தும் அருளிச் செய்த விப்பத்துப் பாட்டையும், ஏதமின்றி - குற்றமின்றிக்கே, உரைப்பவர் - சொல்லுமவர்கள், இருடீகேசனுக்கு - இந்த்ரியங்களை நியமிக்க வல்லவனுக்கு, ஆளர் - அடிமைசெய்யப் பெறுவர்.

வ்யா.—(சீதநீரித்யாதி) (க) அகாதமாய் (உ) வாதாதபப்ரவேசத்தால் வரும் உஷ்ணம் தட்டாமையாலே எப்போது மொக்கக்குளிர்த்தி மாறாத ஜலத்தாலே சுற்றும் சூழப்பட்டிருப்பதாய், அழகியகழனிகளையு முடைத்தா யிருக்கிற திருக்கோட்டியூரிலே. பார்த்த பார்த்த விடமெங்கும் ஜலஸம்ருத்தியும் விளைகழனியுமாய்க் கிடக்குமாய்த்து. (ஆதியானடியானையு மடிமையின்றித் திரிவானையும்) கரணகளேபரங்களை யிழந்து * அசிதவிசேஷித மாய்கிடக்கிற (ங) தசையிலே * தயமாந மநாவாய்க்கொண்டு, "[Telugu-script quotation, illegible] விவித்ராஹ்யஸ்ய [illegible] தா" என்கிறபடியே - தன்னை ஆச்ரயிக்கைக் குறுப்பான கரணகளேபரங்களைக்கொடுத்தருளி, ஆச்ரயணீயத்வே ஸாலபனாய்க் கொண்டு ஸந்நிஹிதனாய் நிற்கிற காரணபூதனானவனுக்கு, அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு (ச) வ்யபிசரியாதே (ரு) சேஷபூதராய் அடிமைசெய்து வர்த்திக்கிறவர்களையும், "முதல்வனைச் சிந்தியாதவப்-பாவகாரிகள்" என்கிறபடியே அவன் பண்ணின உபகாரத்தை யறிந்து அநுஸந்தியாதே பாபகர்மாக்களாய் அவன்றிருவடிகளிலடிமையில் (சு) அந்வயமற்று கரணத்ரயத்தையும் (எ) அந்ய பர மாக்கிக்கொண்டு திரிகிறவர்க

---

(க) அகாதம் - மிக்கஆழம். (உ) வாதாதபப்ரவேசம் - காற்றும்வெய்யிலும் படிகை. (ங) தசை - நிலைமை. (ச) வ்யபிசரித்தல் - இதரவிஷயப்ரவணமாக்குதல். (ரு) சேஷபூதர் - அடியார். (சு) அந்வயம் - ஸம்பந்தம். (எ) அந்யபரமாக்கல் - பிறருக்குரித்தாக்கல்.

ளையும். (கோதிலித்யாதி) கீழ்ச்சொன்ன இரண்டு தலையையும் (க) ச்லாகித்தும் (உ) நிந்தித்தும்சொன்ன விதுக்கு அநுரூபமான (ந) நிஷ்டை யில்லாமையாகிற குற்ற மின்றிக்கே யிருப்பாராய், வைதிகோபகாரகராய், ஸாம்ஸாரிக ஸகல தாபஹரமான குளிர்த்தியையுடைய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த இப்பத்துப் பாட்டையும். (ஏதமின்றியுரைப்பவர்) நிர்த்தோஷமாகச் சொல்லுமவர்கள். அதாவது - இவர்திருவுள்ளக் கருத்தை யறிந்து அதில் பழுதறச் சொல்லுகை. (இருடீகேசனுக்காளரோ) இந்த்ரியங்களை அந்யபர மாகாதபடிநியமித்து அடிமை கொள்ள வல்லவனுக்கு அடிமை செய்யு மாளாகப் பெறுவர்.()

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—நாவகுற்றம் வண்ணவுரகம் ஆமைபூதம் குருந்தம் நளிர்ந்த கொம்பின் காசின் சீதநீர் ஆசை.

---

ஆ திருமொழி நந-க்கு, பாட்டு-நஙுஅ.

---

அ.—கீழில் திருமொழியிலே - "ஆதியானடியாரையும் அடிமையின்றித் திரிவாரையும்" என்று - ஸம்ஸாரிகள்பொல்லாங்கும் ஸ்ரீவைஷ்ணவர்க ளேற்றமுமிறே சொல்லிற்று; ஸம்ஸாரிகளுக்கு பகவத்ஸம்பந்த மொத்திருக்க, அவர்களைக் கழிக்கைக் கட்டி - (ச) ஸம்பந்த ஜ்ஞாந மில்லாமையிறே. "வணக்கொடு மாள்வது வலமே" என்று சரமஸமயத்திலே (ரு) பகவத்ஸமாச்ரயணம் பண்ணுகை (சு) ச்ரேஷ்ட மாகையாலே ஸம்ஸாரிகளைப் பார்த்து (எ) ஹிதோபதேசம் பண்ணியருளுகிறார்-இத்திருமொழியில் .........*

அ.—முதற்பாட்டு. திருநாமங்களைச்சொல்லு மவர்கள் பெறும் பேறு என்னுற் சொல்லப்போகா தென்கிறார்.

மூ.—ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி யன்னையத்தனென்புத்திரர்பூமி, வாசவார்குழலாளென்று மயங்கிமாளுமெல்லைக்கண் வாய்திறவாதே, கேசவாபுருடோத்தமாவென்றுங் கேழலாகியகேடிலீயென்றும், பேசுவாரவரெய்தும்பெருமை பேசுவான்புகில்நம்பரமன்றே.

ப-ரை.—என் அன்னை - என்னுடைய தாய், என் அத்தன் - என்னுடைய தமப்பன், என் புத்திரர் - என்னுடைய பிள்ளைகள், என் பூமி - என்னுடைய பூமி, வாசம் வார் - பரிமளம் மிக்க, என் குழலாள் - மயிர்முடியை யுடைய

---

(க) ச்லாகித்தல் - கொண்டாடுதல். (உ) நிந்தித்தல் - இகழ்தல். (ந) நிஷ்டை - பொருத்தம்.

என்னுடைய மனைவி, என்று-என்றுவாய் வெருவும்படி, ஆசைவாய் - ஆசையின் வழியே, சென்ற - போன, சிந்தையராகி - மநஸ்ஸையுடையராய், மயங்கி—, மாளுமெல்லைக்கண் - ப்ராணன் விடுமளவிலே, வாய்திறவாது-அவர்கள் பேரைச்சொல்லி யழையாமல், கேசவா என்றும் - அடியாரிடரைத் தீர்க்குமவனே என்றும், புருடோத்தமா என்றும் - புருஷோத்தமனே என்றும், பூமியின் ஆபத்தைப் போக்குகைக்காக, கேழலாகிய-வராஹரூபமாய்க் கொண்டு தன்னை அழிய மாறியும், கேடிலீ என்றும் - தன் ஸ்வரூபங் கெடாதவனே என்றும், பேசுவாரவர் - சொல்லுமவர்கள், எய்தும் பெருமை - பெறும்பேற்றை, பேசுவான்புகில் - பேசப்புக்கால், நம்பரமன்று - நம்மால் பேசித் தலைக்கட்டப் போகாது என்று ஸம்ஸாரிகளைப் பார்த்து ஹிதோபதேசம் பண்ணி யருளுகிறார்.

வ்யா.—(ஆசையித்யாதி) (க) ஸ்நேஹமிருந்தவிடத்திலே கைகழிந்த மநஸ்ஸை யுடையராய். *அன்னையென்று துடங்கி, *வாசவார்குழலாளளவும் ஆசையிருக்குமிடம். (மயங்கி) இவர்கள் பேரும் சொல்லமாட்டார்தே மயங்கி. (மாளுமெல்லைக்கண்) "வைத்த நாள்வரை யெல்லை குறுகி" என்கிறபடியே (உ) சரமகாலத்திலே. (வாய்திறவாதே) அவ்வளவிலே கீழ்ச்சொன்னவர்கள் பேர்களைச் சொல்லி யழையாதே.

அவர்கள்பேர் சொல்லவொண்ணாதாகில் பின்னையார்பேரைச் சொல்லுவதென்னில் (கேசவா) உங்கள்மரணவேதனைபோகவேணுமாகில் "ஃஃஃஃஃ" "கேஶவக்லேஶநாஶந:" என்னப்பாருங்கோள். "கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன" என்று சொல்லக் கடவதிறே. (புருடோத்தமா) ஔதார்யம். அதாவது-(ந) அநிஷ்ட நிவர்த்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணுகை. (கேழலாகியகேடிலீயென்றும்) இவர்கள் கேடுபோனால் தன்கேடு போச்சுதாக நினைத்திருக்கை. (பேசுவாரவரெய்தும் பெருமை) அவர்களேற்றத்துக்குப் பாசுரமிடப் போகாது; "அவர்" என்னுமித்தனையிறே. அவர்கள் பெறும்பேற்றை நம்மாற் பேசப்போகாது (பேசுவான்புகில) பேசப்புக்கோமாகில். (நம்பரமன்றே) நம்மால் பேசித் தலைக்கட்டப்போகாது. கொடுக்கிறவன்றானறியு மித்தனை. அதாவது - இதரஸங்கம் குலையப்பெறுவதாம்; சரம காலத்தில் அவர்களை யழையா தொழியப் பெறுவதாம்; நம்முடைய பேர்களைச் சொல்லப்பெறுவதாம்; "இதென்னவேற்றம் இதென்னவேற்றம்" என்றுஇதினேற்ற மறிந்து ஈடுபடுவானவனிறே. (க)

அ.—இரண்டாம்பாட்டு. திருநாமஞ்சொன்னவர்கள் மோக்ஷத்தைப்பெறுவர்களென்கிறார்.

---

(க) ஸ்நேஹம் - நட்பு. (உ) சரமகாலம்-முடியுங்காலம். (ந) அநிஷ்ட நிவர்த்தி - விருப்பில்லாதவைகழிகை.

மூ.—சீயினாற்சிறந்தேறிய புண்மேற் செற்றலேறிக்குழம்பிருந்தெங்கும், ஈயினாலரிப்புண்டுமயங்கி யெல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம், வாயினானமோ நாரணவென்று மத்தகத்திடைக் கைகளைக்கூப்பிப், போயினாற்பின்னை யித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே.

ப-ரை.—சீயினால் - சீயாலே, சிறந்து ஏறிய - மிகவும் நிறைந்த, புண்மேல் - புண்ணின்மேலே, செற்றலேறி - ஈயிருந்து முட்டையிட்டு, குழம்பிருந்து - புழுத்து நீராய்ப்பாயுமளவில், ஈயினால் - ஈயாலே, அரிப்புண்டு - அரிக்கப்பட்டு, மயங்கி — அது பொறுக்கமாட்டாமல் மூர்ச்சித்து, எல்லைவாய் - சரமகாலத்தை, சென்று சேர்வதன்முன்னம் - சென்று கிட்டுவதற்கு முன்னே, வாயினால் - வாயாலே, நமோநாரண வென்று - நமோ நாராயணாய என்று சொல்லிக்கொண்டு, மத்தகத்திடை - உச்சியில், கைகளைக் கூப்பி - கூப்பினையராய், போயினால் - போனால், பின்னை —, பிணைக்கொடுக்கிலும் - நித்யரையும் முக்தரையும் உத்தரவாதிகளாக்கினாலும், பரமபதத்திலுள்ளார், இத்திசைக்கு - இவ்வுலகத்திற்கு, என்றும் - எக்காலத்திலும், போகவொட்டார் - இவர்களை வரவொட்டார்கள்.

வ்யா.—(சீயினாற்சிறந்தேறியபுண்மேல்) சீயானதுவிஞ்சிப்புடைபட்ட புண்ணின்மேலே. (செற்றலேறி) ஈயிருந்து முட்டையிட்டு. (குழம்பிருந்து) அவைபுழுத்து நிராய்ப்பாயுமளவிலே. (ஈயினாலரிப்புண்டு மயங்கி) ஈயினாலே அரிப்புண்டு, அது பொறுக்கமாட்டாமல் (க) மூர்ச்சித்து. (எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம்) சரமகாலத்தைச்சென்று கிட்டுவதுக்குமுன்னே.

(வாயினால் நமோநாரணவென்று) வாய்படைத்த ப்ரயோநம் பெறும்படி. "எனக்கு நானுரியேனல்லேன்; உனக்குரியேன்" என்று சொல்லுகையிறேவாய்படைத்ததுக்குப்ரயோஜநம். (மத்தகத்திடைக்கைகளைக்கூப்பி) தலைபடைத்த ப்ரயோஜநம்பெற்று. (போயினால்) இப்படிசெய்துபோனால். போயினாலென்றது - வழிப்போக்குத்தானே ப்ரயோஜநமென்கை. இவன் ஒருகால்தொழுதால், இதுக்கு பலம் - வழிபோக்கில், "மற்றெல்லாம் கைதொழப்போய்" என்றும், "தொழுதனருலகர்கள்" என்றும் சொல்லுகிறபடியே இவன் பார்த்தபார்த்தவிடமெல்லாம் (உ) அஞ்ஜலிக்காடாயிறே யிருப்பது. அங்குப்புக்காலும் "ப்ரஹ்மாலங்காரேண" "ஸாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:" என்றதிறேபலம். இவன் ஒருகால் ஆத்மஸமர்ப்பணம் பண்ண, "ஆண்மின்கள்வானகம் ஆழியான்றமர்" என்று - (ந) த்ரிபாத்விபூதியாக (ச) ஸமர்ப்பிப்பர்கள். ஒருகால் "நம:" என்ன, காலதத்த்வமுள்ளதனையும் *நமோநாராயணாயவென்று சூழ்ந்திருந்தேத்துகை

(க) மூர்ச்சை - நினைவுமயங்கிக்கிடத்தல். (உ) அஞ்சலி - கைகூப்புகை. (ந) த்ரிபாத்விபூதி - பரமபதம். (ச) ஸமர்ப்பித்தல் - உரிமையாக்கல்.

யிறேபலம். (பின்னேயித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே) (க) நித்யமுக்தரைப்பிணையிலும் போகவொட்டார்கள். அதுக்கடி - * விண்ணுளார்பெருமாற்கடிமை செய்வாரையும் செறுந்தேசமாகையாலே. அவன்றானும் * ஏற்றிவைத்தேணிவாங்குமவனிறே. இத்தால்-கர்மமடியாக மீட்சியில்லையென்றபடி. (உ)

அ.—மூன்றும் பாட்டு. ஆத்மஸமர்ப்பணம் பண்ணினார்க்கு (உ) யமவச்யதை யில்லையென்கிறார்.

மூ.—சோர்வினாற்பொருள் வைத்ததுண்டாகிற் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து, ஆர்வினவிலும்வாய்திறவாதே யந்தகாலமடைவதன்முன்னம், மார்வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தைநாட்டி, ஆர்வமென்பதோர்பூவிட வல்லார்க்கரவ தண்டத்திலுய்யலுமாமே.

ப-ரை.—சோர்வினால்-புத்திமறதியாலே, பொருள்-பொருள்களை, வைத்ததுண்டாகில் - புதைத்துவைத்ததுண்டானால், சொல்லுசொல்லென்று—, சுற்றத்தார்; சுற்றும்-நாற்புறத்திலும், இருந்து - சூழ விருந்து, வினவிலும் - கேட்டாலும், ஆர்-அருமைப்பட்டுத்தேடி சுற்றத்தார் முதலியோர்க்குக்கொடாமல் மறைத்துவைத்தபொருள் கொடுத்துவேட்ட இளையாள், வினவிலும் - கேட்டாலும், வாய்திறவாது-வாய்திறவாதபடி, அந்தகாலம்-முடியுங்காலம், அடைவதன்முன்னம் - வருவதுக்குமுன்னே; மார்வமென்பது - மநமென்று சொல்லப்படுவதாய், ஓர் - ஒப்பற்ற, கோயில் - ஸ்தாநத்தை, அமைத்து-உண்டாக்கி, மாதவனென்னும் - ஸ்ரீயப்பதியென்றுப்ரஸித்தமாய், தெய்வத்தை - அத்விதீயமானவஸ்துவை, நாட்டி - நிலைநிற்கச்செய்து, ஆர்வமென்பது - அன்பாகிற, பூ-புஷ்பங்களை, இடவல்லார்க்கு - ஸமர்ப்பிக்கவல்லவர்களுக்கு, அரவர் - யமபடருடைய, தண்டத்தில் - தண்டனையினின்றுநீங்கி, உய்யலுமாம் - பிழைக்கவுமாம்.

வ்யா.—(சோர்வினால் பொருள்வைத்ததுண்டாகில்) முன்பு இவன்கையில் (ந) கண்டவையடைய "அட்டைகள்போல் சுவைப்பர்" என்கிறபடியே இவன்கையிலுள்ளவை (ச) நிச்சேஷமாக வாங்கிக்கொள்ளுவர்கள். இவர்களைக்காணாமல் வைத்ததுண்டாகில். (சொல்லுசொல்லென்று) ஒருகாற்சொன்னாற்போலே (ரு) ஒன்பதின்கால் சொல்லி. (சுற்றுமிருந்து) "இவன் ஒருத்தரை ஒருத்தரறியாமல் கொடுக்கிற்செய்வதென்" என்று விடாதே சுற்றுமிருப்பர்கள். ஆத்ம பந்துக்களாகிலிறே - "திருமாலைப்பாடக்கேட்டு வளர்த்ததனால் பயன்பெற்றேன்" என்பது. "துஞ்சும்போதழைமின்" இத்

(க) நித்யமுக்தரைப்பிணையிடினும் - நித்யரையும் முக்தரையும் உத்ரவாதமாக்கினும். (உ) யமவச்யதை - யமதண்டனைக்குட்படுதல். (ந) கண்டவை-உள்ளவை. (ச) நிச்சேஷமாக - முழுமையும். (ரு) ஒன்பதின்கால் - பலகால்.

யாதி. (ஆர்வினவிலும்வாய்திறவாதே) பகவத்பாகவத விஷயங்களை யும் ஆசார்யனையும்ப்ரக்ர்திபந்துக்களையும் மறைத்துவைத்த (க) அர்த்தங்கொடுத்து (உ) வேட்ட இளையாள்வினவிலும் வாய்திறவா தே. இவர்களுக்கும் இவளுக்கும் "இவனையிழக்கப் புகுகிறோமென் கிற (ங) பயமன்று, இவன்வைத்தஅர்த்தம் ஒருவருமறியாமல் மண் தின்றுபோகிற் செய்வதென்" என்கிறபயம். இவ்வர்த்தத்தை (ச) நச்சிவரும்போதும் அக்காலத்திலே "அவன் முகத்திலே விழிக்க வருகிறோம்" என்றிறேவருவது. (அந்தகாலமடைவதன்முன்னம்) சரமகாலம் வருவதுக்குமுன்னே.

(மார்வமென்பதோர்கோயிலமைத்து) (ரு) ஹ்ர்தயமென்றுப்ர ஸித்தமாய் அத்விதீயமானஸ்தாநத்தையுண்டாக்கி. (மாதவனென் னும் தெய்வத்தைநாட்டி) ஸ்ரீயஃபதியென்று ப்ரஸித்தமாய் அத்வி தீயமான வஸ்துவை (சு) ப்ரதிஷ்டிப்பித்து. "திருமாலிருஞ்சோ லைமலையென்றேனென்னத் திருமால்வந்தென் னெஞ்சுநிறையப்புகுந் தான்" என்று - இவர் (எ) அஹ்ர்தயமாகச்சொன்னத்தை (அ) ஸஹ்ர்தயமாகக்கொண்டுவந்து புகுந்தான். இவர் "இப்போதே அஹ்ர்தயமாகச்சொன்னேன்" என்னவும்வல்லர். அதுக்கு முன்னே இவர்நெஞ்சில் இடமறப்புகுந்துகொள்ளுங் கிடீ) ஒன்று பிராட்டி யுங் கூடக்கொண்டுபுகுந்தான். இவர்நெஞ்சு திருந்துவதுக்குமுன் பிறே - அல்லாதவிடங்களில்நிற்பது; "நின்றதெந்தையூரகத்து" இத்யாதி. உகந்தருளினநிலங்களில் கண்டநுபவிக்கு மாபோலே இவர் திருவுள்ளத்திலிருப்பும் கண்டநுபவிக்கலாம்படி யிருக்குமிவ ர்க்கு. "சலசயநத்துள்ளுமெனதுள்ளத்துள்ளுமுறைவானை" என் னக்கடவதிறே. "வந்தாயென்மநம்புகுந்தாய்" என்றிறேபுகுந்தது. "வந்துவந்தெனமநத்திருந்து" என்கிறபடியே இவர் இசையாமல் தடிடினநாளுக்கு ஓர் (கூ) அவதியில்லையிறே. "அடியார்மநத்தா யோ" "வெள்ளத்தான்வேங்கடத்தானேலும்கலிகன்றி உள்ளத்தி னுள்ளேயுளன்" என்று - உகந்தருளினநிலங்களோ டொக்குமிறே- இவர்திருவுள்ளமும். (ஆர்வமென்பதோர்பூவிடவல்லார்க்கு) "சோர் வினல்பொருள்வைத்ததுண்டாகில்" என்று - தேஹபந்துக்களை யும் ஆத்மபந்துக்களையும்மறைத்து வைத்தபொருளையிட்டுக் கோ யில்சமைத்துத் திருநந்தவநத்தையுமுண்டாக்கித் திருப்பள்ளித்தா மத்தையும்தேடுளென்று இவனைஅரியதேவைகளையிடானிறே.* நாடா தமலர்நாடிநாடோறும் நாரணன்றன் வாடாதமலரடிக்கீழ்வைக்க

(க) அர்த்தம் - பணம். (உ) வேட்ட - கல்யாணம்செய்த. (ங) பயம் - அச்சம். (ச) நச்சி - விரும்பி. (ரு) ஹ்ர்தயம் - மநஸ்ஸு. (சு) ப்ரதிஷ்டித் தல் - நிலைநிறுத்தல். (எ) அஹ்ர்தயமாக - மநஸ்வில்லாமல். (அ) ஸஹ்ர்தய மாக - முழுமனதோடே. (கூ) அவதி - முடிவு.

விறே-இவனையடியிலே ஸ்ர்ஷ்டித்தது. இப்படி பூவோடே பூவைச் சேர்க்கவல்லார்க்கு. (அரவதண்டத்திலுய்யலுமாமே) யமபடரால் வரும்க்லேசம். அதாவது - "வெஞ்சொலாளர்கள் நமன்றமர்கடியர் கொடியசெய்வனவுள" என்னக்கடவதிறே. * நெடுஞ்சொலால் மறுத்ததுக்குபலம் கடுஞ்சொல்கேட்கையிறே. (உய்யலுமாம்) ப்ராப்யத்திலும் இதுபோகையிறே ப்ரதானமென்கிறார். (௩)

அ.—நாலாம்பாட்டு. ப்ரணவார்த்தம்நெஞ்சில்பட்டவர்கள் *அடியார்கள் குழாங்களுடன் கூடுவரென்கிறார்.

மூ.—மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்துமேன்மிடற்றினையுள் ளெழ வாங்கிக், காலுங்கையும் விதிர்விதிர்த் தேறிக் கண்ணுறக்க மதாவதன்முன்னம், மூலமாகிய வொற்றை யெழுத்தை மூன்றுமாத்திரை யுள்ளெழவாங்கி, வேலைவண்ணனை மேவுதி ராகில்விண்ணகத்தினின் மேவலுமாமே.

ப-ரை.—மேலெழுந்ததோர்வாயு - ஊர்த்வஸ்வாஸமானது, கிளர்ந்து - மேலெழுந்து, மேல்மிடறு - நெஞ்சு, உள்ளெழவாங்கி - கீழேயிடியவிழுந்து, காலும்கையும்—, விதிர்விர்த்தேறி - பதைத்து, அதுகண்ணுறக்கம் - தீர்க்க நித்ரை, ஆவதன்முன் - உண்டாவதுக்குமுன்னே, மூலமாகிய-ஸகலவேதங்களுக்கும் காரணமானதிருமந்த்ரத்தில், ஒற்றையெழுத்தை-முதல்பதத்தை, மூன்று மாத்திரையுள்ளெழவாங்கி - அளபெடுத்துச்சரித்து, வேலைவண்ணனை - ஸ்ரீவைகுண்டநாதனை, மேவுதிராகில் - கிட்டவல்லிகோளாகில், விண்ணகத்தினில் - பரமபதத்தை, மேவலாம் - கிட்டலாமென்கிறார்.

வ்யா.—(மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்து) மேல்மூச்செறிந்து. (மேல்மிடற்றினையுள்ளெழவாங்கி) நெஞ்சுகீழேயிடியவிழுந்து. (காலும்கையும்விதிர்விதிர்த்தேறி) ப்ராணவாயு மேல்நோக்கினவாறே காலும்கையும்பதைக்கத்துடங்கிற்று. (கண்ணுறக்கமதாவதன் முன்னம்) (க) தீர்க்கநித்ரைகொள்ளுதற்குமுன்னே. (மூலமாகிய வொற்றையெழுத்தை) ஸகலவேதங்களுக்கும் காரணமான திருமந்த்ரத்தில் ப்ரதமபதத்தை (உ) உச்சாரணக்ரமம்தப்பாம லுச்சரித்து. (வேலைவண்ணனைமேவுதிராகில்) ஸ்ரீவைகுண்டநாதனைக் கிட்டவல்லிகோளாகில். (விண்ணகத்தினில்மேவலுமாமே) * அடியார்கள் குழாங்களுடன்கூடலாமென்கிறார். (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. விரோதிநிரஸநசீலனையேத்துவார்க்கு முன் புக்லேசப்பட்டுப்போனவழி இனிப்போக வேண்டாவென்கிறார்.

மூ.—மடிவழிவந்துநீர்ப்புலன்சோர வாயிலட்டியகஞ்சியுமீண்டே, கடைவழிவாரக்கண்டமடைப்பக் கண்ணுறக்கமதாவதன் மு

(க) தீர்க்கநித்ரை - நெடுந்துயில். (உ) உச்சாரணக்ரமம் - சொல்லும் முறை.

ன்னம், துடைவழியும்மைநாய்கள்கவரா சூலத்தாலும்மைப் பாய்வதுஞ்செய்யார், இடைவழியினீர் கூறையுமிழவீரிருடீ கேசனென்றேத்தவல்லீரே.

ப-ரை.—யமபடரைக்கண்டபயத்தாலே, மடிவழி - மடியின்கண்ணுள்ள, நீர்ப்புலன் - இலிங்கத்தின்வழியாக, சோர - சிறுநீர்பெருகவும், வாயில் - வாயிலே, அட்டிய - பெய்த, கஞ்சியும் - பொரிக்கஞ்சியும், கண்டமடைப்ப - கண்டமடைக்கையாலே, மீண்டு - மீண்டும், கடைவழி - கடைவழியாலே, வார - வழியாநிற்கவும், கண்ணுறக்கமது - தீர்க்கநித்ரையானது, ஆவதன்முன்னம் - உண்டாவதுக்குமுன்னே; இருடீகேசனென்று - இந்த்ரியங்களை நியமிக்கவல்லவனென்று, ஏத்தவல்லீர் - ப்ரீதியோடே ஸ்தோத்ரம்பண்ணுவீராகில், யம லோகத்திலே, உம்மை - உங்களுடைய, துடைவழி - துடையில், நாய்கள் - செந்நாய்களானவை, கவரா-கவ்வுதலும்செய்யா; யமபடரானவர்கள், உம்மை- உங்களை, சூலத்தால் - சூலத்தாலே, பாய்வதுஞ்செய்யார் - குத்தவும்மாட்டார்கள்; நீர் - நீங்கள், இடைவழியில் - நடுவழியிலே, கூறையும் - வஸ்த்ரத்தையும், இழவீர் - இழக்கமாட்டீர்கள்.

வ்ய᳚.—(மடிவழிவந்துநீர்ப்புலன்சோர) யமபடரைக்கண்டபயத்தாலே (க) ஓரிந்த்ரியவிசேஷத்தாலே ஜலம்ப்ரவஹிக்க. (வாயிலட்டியகஞ்சியு மீண்டேகடைவழிவாரக்கண்டமடைப்ப) பொரிக்கஞ்சியைக்கொடுத்தால், கண்டமடைக்கையாலே உள்ளுப்புகாதே மீண்டும் கடைவழியாலேவழியாநிற்கும். (கண்ணுறக்கமதாவதன் முன்னம்) தீர்க்கநித்ரைகொள்ளுவதற்குமுன்னே.

(துடைவழியும்மை நாய்கள்கவரா) "நாயினத்தொடும் திளைத்திட்டு ஓடியுமுழன்றும்" என்றதுக்குபலம். (சூலத்தாலும்மைப் பாய்வதுஞ்செய்யார்) "உயிர்களேகொன்றேன்" என்று - ஆயுதத்தாலேநலிந்ததுக்குபலம். (இடைவழியில் நீர்குறையுமிழவீர்) வழியில்நின்று (௨) சீரையுரிந்ததுக்கு பலம். என்றுஎன்றுசொல்லியிறே அவர்கள் வழியில்நலிவது. இது தப்பவேண்டியிருந்திகோளாகில் (இருடீகேசனென்றேத்தவல்லீரே) இந்த்ரியங்களை நியமிக்குமவனென்று ப்ரீதியோடேகூடஸ்தோத்ரம்பண்ணினால் இவைவாரா. யமவச்யதைக்கடி இந்த்ரியவச்யதையிறே. இதுக்குஸாதநமாகவிறே (௩) பரஹிம்ஸாதிகள்பண்ணுவது. அத்தைக்குலைக்குமவனென்கிறார். (௫)

அ.—ஆறும்பாட்டு. (அங்கமித்யாதி) இப்பாட்டில், ஒருகால் (௪) உபாயவரணம் பண்ணினார்க்கு*ஸதாபச்யந்தி பண்ணலாமென்கிறார்.

---

(க) ஓரிந்த்ரிய விசேஷம் - இலிங்கம். (௨) சீரை - வஸ்த்ரம். (௩) பரஹிம்ஸை - பிறரைவருத்துதல். (௪) உபாயவரணம்பண்ணல் - ஸாதநமாகப் பற்றுகை.

மூ.—அங்கம்விட்டவையைந்துமகற்றி யாவிமூக்கினிற் சோதித்த பின்னைச், சங்கம்விட்டவர்கையைமறித்துப் பையவேதலை சாய்ப்பதன்முன்னம், வங்கம்விட்டுலவுங் கடற்பள்ளிமாயனை மதுசூதனைமார்பிற் றங்கவிட்டு வைத்து, ஆவதோர்கருமஞ் சாதிப்பார்க்கென்றுஞ் சாதிக்கலாமே.

ப-ரை.—அவையைந்தும் - பஞ்சப்ராணனும், அங்கம்விட்டு அகற்றி - சரீரத்தைவிட்டுநீங்கி, அவர் - அருகிருந்தவர்கள், மூக்கினில் - மூக்கில்கைவைத்து, ஆவிசோதித்தபின்னை - ப்ராணனில்லையென்று அறிந்தபின்பு, சங்கம்விட்டு - இனிஇவன்பிழைப்பன் என்கிறஆசையைவிட்டு, இவனையிழந்த இழவுதோற்ற, பைய - மெள்ள, தலைசாய்ப்பதன்முன் - தலையைத் தொங்கவிடுவதுக்குமுன்பு; வங்கம் - மரக்கலங்களானவை, விட்டுலவும் - இடைவிடாமல் உலாவாநின்றுள்ள, கடல் - கடலில், பள்ளி - கண்வளர்ந்தருளுகிற, மாயனை - ஆச்சர்யச்செய்கையுடையவனுய், மதுசூதனை - மதுவைநிரஸித்தாப்போலே ஆச்ரிதவிரோதியைப்போக்குமவனை, மார்வில் - நெஞ்சிலே, தங்கவிட்டுவைத்து - தங்கும்படி நிற்கச்செய்து, ஆவது - ப்ராப்தமுமாய், ஓர் - ஸுகரமுமான, கருமம் - உபாயவரணம், சாதிப்பார்க்கு - ஒருகால்பண்ணுமவர்களுக்கு, என்றும் - காலமுள்ளதனையும், சாதிக்கலாம் - அவனைஸேவித்திருக்கலாமென்கிறார்.

வ்யா—.(அங்கம்விட்டவையைந்துமகற்றி) (க) பஞ்சவ்ர்த்திப்ராணன்சரீரத்தை விட்டகன்று. (ஆவிமூக்கினில் சோதித்த பின்னை) இவனுக்கு ப்ராணனில்லையென்று அறிந்தபின்பு. (சங்கம் விட்டு) இனி இவன்பிழைக்குமென்கிற ஆசையைவிட்டு. "சங்கம் விட்டு" என்று-*சொல்லுசொல்லென்று சுற்றுமிருக்கிறதிரள்குலைந்தென்னுதல். அன்றிக்கே, இவன்பக்கல் சிலகிடைக்குமென்கிற ஆசையை விட்டென்னுதல். (கையைமறித்து) அங்கிருந்தவர்களை, "அவன்செய்ததென்" என்று வந்தவர்கள்கேட்க; கையைமறித்து. (பையவேதலைசாய்ப்பதன்முன்னம்)மெள்ள இவனருகுநின்றுமெழுந்திருந்து (உ) விடப்போய், இவனை இழந்தஇழவுதோற்ற கவிழ்தலையிட்டிருப்பர்களாய்த்து. ( வங்கம்விட்டுலவும்கடல்பள்ளிமாயனை ) மரக்கலமுலாவாநின்றுள்ள கடலில்கண்வளர்ந்தருளுகிறவாச்சரியபூதனை. அன்றிக்கே, "மாயனை" என்றது - ஜ்ஞாநமாய், தன்னிச்சையாலே கண்வளர்ந்தருளுகிறவனென்றபடி. "குரைகடல்மேல் அரவணைமேல் குலவரைபோல்பள்ளிகொண்டு" என்னக் கடவதிறே, (மதுசூதனை)மதுவைநிரஸித்தாற்போலே(ங)ஆச்ரிதவிரோதியைப் போக்குமவனை. "வெள்ளைநீர்வெள்ளத்தணைந்தவரவணைமேல், துள்ளுநீர்மெள்ளத்துயின்றபெருமானே, வள்ளலே உன்றமர்க்கென்றும் நமன்றமர்கள்ளர்போல்" என்னக்கடவதிறே. (மார்வில்தங்கவிட்டு

(க) பஞ்சவ்ர்த்திப்ராணன் - ஐந்துவாயுக்களுடன் கூடிய உயிர். (உ) விடப்போய்- தூரமாகப்போய். (ங) ஆச்ரிதவிரோதி - அடுத்தவரின்பகை.

வைத்து) தங்கவிடுகையாவது - ஓரிடத்திலேயிருக்கை. (ஆவதோர் கருமம்) ஸுகரமுமாய் ப்ராப்தமுமான ஆத்மஸமர்ப்பணம். "நம வென்னலாங்கடமை" என்னக்கடவதிறே. (சாதிப்பார்க்கென்றும்சாதிக்கலாமே)உபாயம் ஸக்ருத்கர்த்தவ்யம்; உபேயம்சதாகர்த்தவ்யம். "ஆவத்தநம்" என்று - ஸக்ருத்; "சேவித்திருக்கும்" என்று-ஸதா.

அ. — ஏழாம்பாட்டு. (தென்னவனித்யாதி) இப்பாட்டில், விரோதிநிரஸநசீலனை யநுஸந்திப்பார் நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஸ்ரீவைகுண்ட நாதனோடே மன்றாடுவர்களென்கிறார்.

மூ.—தென்னவன்றமர் செப்பமிலாதார் சேவதக்குவார் போலப்
புகுந்து, பின்னும்வன்கயிற்றாற்பிணித்தெற்றிப்பின்முன்னாக
விழுப்பதன்முன்னம், இன்னவ னினையானென்று சொல்லி
யெண்ணியுள்ளத் திருளறநோக்கி, மன்னவன்மதுசூதநனெ
ன்பார் வானகத்து மன்றாடிகடாமே.

ப-ரை.—தென்னவன் - தெற்குத்திக்குக் கடவனானயமனுக்கு, தமர் - சேஷபூதராய், செப்பம் இலாதார் - கரணத்ரயத்திலும் ஒருசெவ்வையில்லாதவர்கள், சே - எருதுகளை, அதக்குவார்போல - தங்கள்வசப்படும்படி அவற்றின் செருக்கைக்குலைக்கும் நீசஜாதிகளைப்போலே, புகுந்து—, பின்னும் - பின்னையும், வன் - வலிய, கயிற்றால் - பாசங்களாலே, பிணித்து - கட்டி, எற்றி - வருத்தி, பின்முன்னாக - முகம்கீழ்பட, இழுப்பதன்முன்னம் - யமபுரத்தளவும் இழுப்பதற்குமுன்னே; மன்னவன் - தென்னவனுக்கு மன்னவனானவனை, இன்னவன் என்று - இன்னான் என்றும், இனையான் என்று - ஏகாந்தமானகுணங்களையுடையவன் என்றும், சொல்லியெண்ணி - அநுஸந்தித்து, உள்ளத்து - நெஞ்சில், இருள் - ஜ்ஞாநாந்தகாரம், அற - போக, நோக்கி - பார்த்து, மதுசூதநன் - ஆச்ரிதவிரோதிகளைப்போக்குமவன், என்பார் - என்றுசொல்லுமவர்கள், தாமே - வேறுதுணையின்றிக்கேதாங்களே, வானகத்து - பரமபதத்தில், நித்யஸூரிகள் கார்யத்துக்கும், மன்றாடிகள் - ஸ்ரீவைகுண்டநாதனோடே மன்றாடுவர்களென்கிறார்.

வ்யா.—(தென்னவன்தமர்) தெற்குத்திக்குக்கடவனான யமனுடைய சேஷபூதர். (செப்பமிலாதார்) செவ்வையில்லாதார். கரணத்ரயமும் அடைவு கெட்டிருக்குமவர்கள். (சேவதக்குவார்போலப்புகுந்து) எருதுகள் தங்கள்வசப் படுகைக்கு இவற்றின் செருக்கைக்குலைக்கும் நீசஜாதிகளைப்போலே புகுந்து து:காநுபவம் பண்ணுவிக்கை. (பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றி) சேவதக்குவார் அதக்கும் ப்ரகாரம். து:காநுபவத்துக்குத் தங்கள் தர்சநமாத்ரமே யமைந்திருக்க, பின்னையும் யமபடர், பாசங்களாலே, (க) சூரியிலே வரிவாரைப்போலே வரிந்து. (எற்றி) "நமன்றமர் செய்யும்வேதனை"என்கிறபடியே எற்றி. (பின்முன்னாக இழிப்பதன்

---

(க) சூரி - மடக்குக்கத்தி.

முன்னம்) மூக்கும் முகமும் உதடும் பல்லும் தகரும்படி முகம் கீழ்ப்பட யமபுரத்தளவும் இழுப்பதற்கு முன்னே. (இன்னவனினை யானென்று சொல்லியெண்ணி) அவன் இன்னானென்னு மதுக்கு ஏகாந்தமான குணங்களையு மநுஸந்தித்து, நெஞ்சில் ஜ்ஞாநாந்தகாரம்போகப்பார்த்து. (மன்னவன்) தென்னவனுக்கும் மன்னவனான வன். (மதுசூதநனென்பார்) ஆச்ரிதவிரோதிகளைப் போக்குமவன் என்று சொல்லுமவர்கள். (வானகத்து மன்றூடிகள்தாமே) பரமபதத்தில் நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஸ்ரீவைகுண்ட நாதனோடே மன்றாடுவா ரிவர்களிறே. (தாமே) வேறு (க) ஸஹகாரிகளில்லை.()

அ.—எட்டாம்பாட்டு. (கூடியித்யாதி) இப்பாட்டால் - மூன்றெழுத்தை உச்சரிப்பார், ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி அவனுக்கு (உ) ஆதரணீயரென்கிறார்.

மூ.—கூடிக்கூடி யுற்றார்களிருந்து குற்றநிற்க நற்றங்கள் பறைந்து, பாடிப்பாடியோர் பாடையிலிட்டு நரிப்படைக்கொரு பாகுடம்போலே, கோடிமூடியெடுப்பதன்முன்னங் கௌத்துவமுடைக்கோவிந்தனோடு, கூடியாடிய வுள்ளத்தரானாற் குறிப்பிடங்கடந் துய்யலுமாமே.

ப-ரை.—இவனுக்கு சரமகாலம்வந்தவாறே, உற்றார்கள் - பந்துக்கள் எல்லாரும், கூடிக்கூடியிருந்து - திரள்திரளாகவிருந்து, குற்றம்நிற்க - இவன் பண்ணின பல ப்ராதிகூல்யம் கிடக்க, நற்றங்கள் - அநுகூலமாயுள்ள சிலவற்றை, பறைந்து - சொல்லி, பாடிப்பாடி - ப்ரலாபித்து, ஓர் - ஒரு, பாடையில்- ஆசந்தியிலே, இட்டு - இவனையிட்டு, நரிப்படைக்கு - நரிக்கூட்டத்துக்கு, ஒரு பாகுடம்போலே - ஒருபாகுக்குடத்தைப் பச்சையாகக்கொடுப்பாரைப்போலே, கோடி - கோடிப்புடவையையிட்டு, மூடி--, எடுப்பதன்முன்னம் - எடுப்பதற்குமுன்னே; கௌத்துவம் - ஸ்ரீகௌஸ்துபத்தை, உடை-தரித்திருக்கிற, கோவிந்தனோடு - ஸர்வஸுலபனான க்ர்ஷ்ணனோடே, கூடி - ஒருமிளைவாய், ஆடிய - அவன்குணங்களிலே அவகாஹித்த, உள்ளத்தரானல் - நெஞ்சையுடையரானல், குறிப்பு - அநுபவித்தேபோக்கக்கடவதான, இடம் - யமபுரத்தை, கடந்து - விட்டு, "ஒண்டாமரையாள்கேள்வனொருவனையேநோக்கும்" என்கிறதேசத்தேறப்போய், உய்யலுமாம் - உஜ்ஜீவிக்கவும்கூடுமென்கிறார்.

வ்யா.—(கூடிக்கூடி யுற்றார்களிருந்து) இவனுக்கு சரமகாலம் வந்தவாறே, பந்துக்களெல்லாரும்திரண்டு திரள்திரளாக விருந்து. (குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து) இவன் பண்ணின (ங) ப்ராதிகூல்யம் கிடக்க, அல்பாநுகூல்யங்களுள்ளவற்றைச் சொல்லாநிற்பர்கள். மஹாராஜர், வாலி (ச) பட்டவளவிலே, அவன் முன்புபண்ணின ப்ராதிகூல்யங்களை மறந்து, "நான் முற்பட அகப்பட்ட

(க) ஸஹகாரிகள் - உதவிசெய்வோர். (உ) ஆதரணீயர் - விரும்பத்தக்கவர்கள். (ங) ப்ராதிகூல்யம் - தீங்கு. (ச) பட்டவளவிலே - இறந்தபோது.

போதே என்னைக் கொல்லலாயிருக்கக் கொல்லாதே விட்டவனை யிறே நான் கொல்லுவித்தேன்" என்று அழுதானிறே; அத்தைக் கண்டு, பெருமாளும் சோகித்தாரிறே. பெருமாள், ராவணன் (க) பூசல்தலையில் நிராயுதனாய்நின்றபடியைக்கண்டு கொல்லாதே. "இன்றுபோய் நாளைவா" என்றாரிறே. க்ர்ஷ்ணன், கம்ஸனை நிரஸித்தவநந்தரம் அவன்ஸ்த்ரீகள்படுகிற க்லேசத்தைக்கண்டு, "நான் என்னகார்யம்செய்தேன்!" என்று வெறுத்தானிறே. இப்படி எல்லார்க்கும் க்ர்பை (உ) ஜநிக்கும்படியாயிறே (ங) அத்தசை யிருப்பது. (பாடிப்பாடி) இவர்கள் ப்ரலாபிக்கும்போது, ஒரு ப்ரபந்தம் பாடினாற்போலேயாய்த் திருப்பது. (ஓர் பாடையிலிட்டு) ஓர் (ச) ஆசந்தியிலே இவனை இட்டு. (நரிப்படைக்கொரு பாகுடம்போலே) நரிப்படை - நரிக்கூட்டம். பாகுடம் - பாகுக்குடம். (கோடிமூடி யெடுப்பதன் முன்னம்) கோடிப்புடவையையிட்டு மூடியெடுத்தென்னுதல்; அன்றிக்கே, ஆசந்தியைக்கோடித் தென்னுதல்; இப்படி செய்வதற்கு முன்னே. (கௌத்துவமுடைக் கோவிந்தனோடு) இவ்வாத்மவர்க்கத்தை தரித்தது(ரு) நிரூபகமாக வுடையனுமாய் ஸர்வஸுலபனுமான க்ர்ஷ்ணனோடே. (கூடியாடிய வுள்ளத்தரானால்)ஈச்வரனும் சேதநனும் ஒரு நினைவாய் அவன்குணங்களிலே அவகாஹித்த நெஞ்சை யுடையரானால். (குறிப்பிடங்கடந்துய்யலுமாமே) "அவஶ்யமநுபோக்தவ்யம்" "க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி" என்கிறபடியே-(சு) அநுபவ விநாச்யமான தேசத்தைக்கடந்து. (உய்யலுமாமே) "உயிரும் தருமனையே நோக்கும்" என்கிற தேசத்தைவிட்டு "தாமரையாள்கேள்வனொருவனையே நோக்கும்" என்கிற தேசத்தேறப்போகப் பெறுவர்களென்கிறார். "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்டசதிர்" என்னக்கடவதிறே. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு.—(வாயித்யாதி) இப்பாட்டில் - ஸர்வவித பந்துவாக அவனைப் பற்றினால், பின்னை யமவச்யதை யில்லையென்கிறார்.

மூ.—வாயொருபக்கம் வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக்கண்கள் மிழற்றத், தாயொருபக்கந் தந்தையொருபக்கந் தாரமுமொருபக்கமலத்தத், தீயொருபக்கஞ் சேர்வதன்முன்னஞ் செங்கண்மாலொடுஞ் சிக்கனச்சுற்ற, மாயொருபக்கநிற்கவல்லார்க் கரவதண்டத்தி லுய்யலுமாமே.

---

(க) பூசல்தலை - போர்செய்யுமிடம். (உ) ஜநிக்கும்படி - உண்டாம்படி. (ங) அத்தசை - சரமதசை. (ச) ஆசந்தி - பாடை. (ரு) நிரூபகம் - மூதலிக்கை. (சு) அநுபவவிநாச்யம் - அநுபவித்துக்கழியத்தக்கது.

ப-ரை.—வாய் - வாயானது, வாதவிகாரத்தாலே, ஒருபக்கம்வாங்கி - ஒருக்கடுத்து, வலிப்ப - வலிக்கவும், பந்துக்களைவிட்டுப் போகிறேன் என்று அழுகையாலே, வார்ந்த - பெருகின, நீர் - நீரையுடைத்தாய், யமபடரைக்கண்ட பயத்தின் கனத்தாலே, குழி - உள்ளே இடிய இழிந்த, கண்கள் - கண்களானவை, மிழற்ற - அல்மார்ந்து நிற்கவும், ஒருபக்கம் - ஓரருகே, தாய் - தாயாரும், ஒருபக்கம்—, தந்தை - தமப்பனும், ஒருபக்கம்—, தாரமும்-மனைவிமுதலியோரும், அலத்த - இருந்துகதற, தீ - நெருப்பை, ஒருபக்கம்—, சேர்வதன் முன்னம் - இடுவதற்கு முன்னே; செம் - சிவந்த, கண் - திருக்கண்களை யுடையனாய், மாலொடும் - வ்யாமோஹத்தையு முடைய ஸர்வேச்வரனை, சிக்கன - நிருபாதிகமான, சுற்றமாய் - பந்துவாகக்கொண்டு, ஒருபக்கம் - ஸம்ஸாரிகளோடுள்ள உறவைக்கலசாதே எல்லாமவனேயாக, நிற்கவல்லார்க்கு - பற்றி நிற்கவல்லவர்களுக்கு, அரவதண்டத்தில் - யமபடரையும் அவர்கள்க்ரூரமான தண்டங்களையும் தப்பி, உய்யலாம் - உஜ்ஜீவித்துப் போகலாமென்கிறார்.

வ்யா.—(வாயொருபக்கம் வாங்கிவலிப்ப) (க) வாதவிகாரத்தாலே வாயானது (உ) ஒருக்கடுத்து வலிக்க. (வார்ந்த நீர்க் குழிக்கண்கள் மிழற்ற) "பந்துக்களைவிட்டுப் போகிறேன்" என்று இவர்கள் பக்கல் (ங) ஸங்கத்தாலே அழுகிற வளவிலே, யமபடரைக்கண்டவாறே பயத்தின் கனத்தாலே கண் உள்ளே இடிய இழிந்து (ச) அலமராநிற்கும். (தாயொருபக்க மித்யாதி) தன்னை உண்டாக்கினரும், தானுண்டாக்கினவர்களும், ஓரோரருகே யிருந்து கதற. அநந்தரம், (தீயொருபக்கம் சேர்வதன் முன்னம்) (ரு) ஸம்ஸ்கரிப்பதற்கு முன்னே. (செங்கண்மாலொடும்) வாத்ஸல்யத்தையும் வ்யாமோஹத்தையு முடைய ஸர்வேச்வரனை. (சிக்கனச்சுற்றமாய்) (கூ) நிருபாதிக ஸர்வவித பந்துவுமாகப் பற்ற வல்லாருமாய். (ஒருபக்கம் நிற்க வல்லார்க்கு) ஸம்ஸாரிகளோடுள்ள வுறவைக் கலசாதே (எ) அவனேயாகப் பற்றி நிற்கவல்லார்க்கு. (அரவதண்டத்திலுய்யலுமாமே) யமபடரையும் அவர்கள் க்ரூரமான தண்டங்களையும் தப்பி உஜ்ஜீவித்துப் போகலாம். "மாதாவினைப் பிதுவைத்திருமாலே வணங்குவன்" என்றும் "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய்தந்தையுமவரே" என்றும் பற்றுவார்க்கு உஜ்ஜீவித்துப்போகலா மென்கிறார். (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழி அப்யஸித்தவர்கள், ஸ்ரீயஃபதி பக்கலிலே பெரியாழ்வார்பெற்ற வரிசைகளைப் பெறுவரென்கிறார்.

மூ.—செத்துப்போவதோர் போதுநினைந்து செய்யுஞ் செய்கைகள்
டேவபிரான்மேல், பத்தராயிறந்தார் பெறும் பேற்றைப்பா
ழித்தோள்விட்டுசித்தன்புத்தூர்க்கோன், சித்தநன்கொருங்

(க) வாதம் - வாயு. (உ) ஒருக்கடுத்து - ஒருவழிப்பட்டு. (ங) ஸங்கம்-ஸம்பந்தம். (ச) அலமரல் - வருந்துதல். (ரு) ஸம்ஸ்கரித்தல் - கொளுத்துதல். (கூ) நிருபாதிகம் - ஒருஹேதுவில்லாதது. (எ) அவன் - ஸர்வேச்வரன்.

கித் திருமாலைச்செய்தமாலை யிவைபத்தும்வல்லார், சித்தந
ன்கொருங்கித்திருமான்மேற்சென்ற சிந்தைபெறுவர்தாமே.

ப-ரை.—செத்துப்போவதோர்போது - இறந்துபோம்போது, செய்யும் - யமபடர்செய்யும், செய்கைகள் - செயல்களை, நினைந்து - நினைத்து, தேவபிரான்மேல் - * அயர்வறுமமரர்க ளதிபதிபக்கலிலே, பத்தராய் - ப்ரேமத்தைப்பண்ணி, இறந்தார்-பின்பு இறந்தவர்கள், பெறும்பேற்றை—, பாழி - ஸம்ஸாரத்தைவென்ற மிடுக்கையுடையனவான, தோள் - தோள்களையுடையராய், புத்தூர்க்கோன் - ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத்தலைவரான, விட்டுசித்தன்-பெரியாழ்வார், சித்தம் - கரணத்ரயத்தையும், நன்கு - நன்றாக, ஒருங்கி - ஒருபடிப்படுத்தி, திருமாலை - ஸ்ரீய:பதிவிஷயமாக, செய்த - அருளிச்செய்த, மாலை இவைபத்தும் - இப்பத்துப்பாட்டையும், வல்லார் - அப்யஸித்தவர்கள், ஆழ்வாரைப்போலே, சித்தம் - கரணத்ரயமும், நன்கு ஒருங்கி-ஒருபடிப்பட உடையராய், திருமால் மேல் - ஸ்ரீய:பதிபக்கலிலே, சென்ற—, சிந்தை - மநஸ்ஸை, பெறுவர் - உடையராவர்கள்.

வ்ரா.—(செத்துப்போவதோர்போது - செய்யும்செய்கைகள்-நினைந்து) (க) சரீராவஸாந ஸமயத்தில் யமபடர் செய்யும்செயல்களை நினைத்து. (தேவபிரான்மேல் பத்தராய்) * அயர்வறுமமரர்களதிபதிபக்கலிலே ப்ரேமத்தைப்பண்ணி. (இறந்தார் பெறும்பேற்றை) பத்தராய், பின்பு இறந்தார் பெறும்பேற்றை. (பாழித்தோள் விட்டுசித்தன்) ஸம்ஸாரத்தைவென்ற மிடுக்கையுடைய தோள்களையுடைய ஆழ்வார், (புத்தூர்க்கோன்) சரம காலத்திலே இவர்களைப் போலே பக்தியுண்டாகை யன்றிக்கே, (உ) ஸதா மநோரதம் பண்ணும் நித்யஸூரிகளைப் போலே யிருக்கிற ஆழ்வாரை ஸ்வாமியாகப் பற்றி யிருக்கும் ஸ்ரீவில்லிபுத்தூரையு முடையரானவர். (சித்தம் நன்கித்யாதி) "ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி" என்கிறபடியே-கரணத்ரயமும் புறம்புபோதல் கலந்திருத்தல் செய்யாதே ஸ்ரீய:பதி விஷயமாகச் செய்த இப்பத்துப்பாட்டும் அப்யஸித்தவர்கள். (சித்தம்நன்கொருங்கித் திருமால்மேல் சென்ற சிந்தை பெறுவர்தாமே) ஆழ்வாரைப்போலே கரணத்ரயமும் ஒரு படிப்படவுடையராய், ஸ்ரீய:பதிபக்கலிலே சென்ற மநஸ்ஸை யுடையராவர்கள். (கo)

## பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—ஆசை சீசோர்வு மேல்மடி அங்கம் தென்னவன் கூடிவாய் செத்துக்காசு.

ஆ திருமொழி ௩௪-க்கு, பாட்டு-௩௬அ.

---

(க) சரீராவஸாநம் - உடம்புமுடியுங்காலம். (உ) ஸதாமநோரதம்பண்ணல் - எப்பொழுதும் நினைக்கை.

அ.—*நாவகாரியத்திலே, (க)பகவத்விமுகராய்த் தம்மாலே(உ) நிந்திதரானவர்களையும் விடமாட்டாதபரமக்ருபையாலே அவர்களைக் குறித்து ஹிதத்தை உபதேசிப்போமென்றுபார்த்து, "மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலம்" என்கிறபடியே-சரமதசையிலேயாகிலும் பகவத்ஸமாச்ரயணத்தைப்பண்ணினால் தப்பாமல் உஜ்ஜீவிக்கலாம்படியிருக்கையாலே, இந்தவாசியை அவர்களுக்கறிவித்தால், சேதநராகையாலே பகவத்ஸமாச்ரயணத்திலே யிழிவர்களென்று திருவுள்ளம்பற்றி, ப்ராக்ருதவிஷயங்களிலுண்டான வாசையாலே அவற்றின்பக்கலிலேசென்ற நெஞ்சையுடையராய் அவற்றின்பேரைச்சொல்லி, பின்னை அதுதானும்மாட்டாதே கலங்கி முடிந்து போங்காலத்திலே அவற்றின்பேர்களைச்சொல்லாமல் பகவந்நாமத்தைப்பேசுமவர்கள்பெறும் பேற்றின்கனம் நம்மால்சொல்லித்தலைக்கட்டப்போகாது என்றுதுடங்கி, (ங) அந்திமதசையில்வரும் க்லேசபரம்பரைகளையும், அத்தசைவருவதற்குமுன்னே ஏதேனுமொருவழியாலேயாகிலும் பகவத்ஸமாச்ரயணத்தைப்பண்ணி சரீரத்தைவிட்டால் (ச) அதிக்ரூரமாக யமபடர்பண்ணும்தண்டங்களையும் தப்பி அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலேபோய் பகவதநுபவத்தைப்பண்ணி (ரு) புநராவ்ருத்தியின்றிக்கே (சு) காலதத்த்வமுள்ளதனையும் நித்யஸூரிகள்திரளிலேகூடியிருந்து வாழலாம் என்னுமிடத்தை அவர்கள்நெஞ்சிலே படும்படியாகவூன்ற உபதேசித்தார் - கீழ்த்திருமொழியில்; இப்படி (எ) இதரவிஷயஸங்கமற்று பகவத்ப்ரேமபூர்வகமாக அவன்திருநாமங்களைப்பேசத்தக்க பரிபாகமில்லாதாரையும் ஒருவழியால் அவன்திருநாமத்திலே அந்வயிப்பித்து உஜ்ஜீவிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, (அ) த்ருஷ்டப்ரயோஜநங்களை நச்சி பெற்ற பிள்ளைக்கு ப்ராக்ருதவிஷயங்களின்பேரை யிடுமவர்களைக்குறித்து, நீங்கள் இப்படி ப்ராக்ருதவிஷயங்களின்பேரிட்டால் இம்மையில் நீங்களாசைப்படுகிற (கூ) க்ஷுத்ரப்ரயோஜநங்கள்தானும் (கo) ஸித்திப்பதுபணியில்லை மறுமைக்குத்தானேயொன்றுக்குமுறுப்பன்று, ஆனபின்பு அத்தைவிட்டு பிக்ஷையைப்புகுந்தாகிலும் ஜீவித்துத் தன்திருநாமத்திலே (கக) அந்வயித்தாருடைய (கஉ) ஸகலக்லேசங்களையும்போக்கும் ஸர்வே

(க) பகவத்விமுகர் - எம்பெருமானைக்கிட்டாதவர்கள். (உ) நிந்திதரானவர்கள் - பழிக்கப்பட்டவர்கள். (ங) அந்திமதசை - முடியுங்காலம். (ச) அதிக்ரூரமாக - சாலக்கொடிதாக. (ரு) புநராவ்ருத்தி - மீளுகை. (சு) காலதத்த்வமுள்ளதனையும் - காலமுள்ளவளையில். (எ) இதரவிஷயஸங்கம் - எம்பெருமானை யொழிந்தவர்களின் ஸம்பந்தம். (அ) த்ருஷ்டப்ரயோஜநம் - இவ்வுலகத்தில் பெறும்பயன். (கூ) க்ஷுத்ரம் - அற்பம். (கo) ஸித்திப்பதுபணியில்லை- ஸித்தியாது. (கக) அந்வயித்தல் - படிதல். (கஉ) ஸகலக்லேசங்களும் - துயரங்களெல்லாம்.

ச்வரனுடைய திருநாமத்தை, நீங்கள்பெற்றபிள்ளைக்கிட்டு வாயார வாழ்ந்து ப்ரீதராயிருங்கோள்; இவ்வளவே (க) பற்றுசாக அந்த ப்பிள்ளையுடைய மாதாவானவள் "ஜநநீக்ரு தாஹ்" "ஜநநீக்ருதாஹ்" என்கிறபடியே - நரகத்திற் புகாமல் உஜ்ஜீவித்துப்போமென்று ஒருகால்போலே ஒன்பதின்காலுபதேசித்து,பகவந்நாமங்களையிடும் படியாக அவர்கள்நெஞ்சைத் தெளிவிக்கிறார் - இத்திருமொழியில்*

மூ.—காசுங்கறையுடைக்கூறைக்குமங்கோர்கற்றைக்கும்
ஆசையினாலங்கவத்தப்பேரிடுமாதர்காள்
கேசவன்பேரிட்டுநீங்கடே னித்திருமினோ
நாயகனாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

ப-ரை.—காசுக்கும்—, கறையுடை - தலைகளில் கறையையுடைய, கூறைக்கும் - புடைவைக்கும், அங்கு - அங்கே, ஓர் - ஒரு, கற்றைக்கும் - நெற்கற்றைக்கும், ஆசையினால் - ஆசையாலே, அங்கு - அவர்களுடைய, அவத்தம் - மிகத் தண்ணிதான, பேர் - பேர்களை, இடும் - உங்கள்பிள்ளைக்கு இடுகிற, ஆதர்காள் - அறிவுகேடர்களே; நீங்கள் உஜ்ஜீவிக்கவிரும்பி யிருந்திகோளாகில், கேசவன் - ஆச்ரிதர்மனத்துன்பத்தைப்போக்குமவனாய், நாயகன் - ஸர்வசேஷியான, நாரணன் - நாராயணனென்கிற, பேர் - திருநாமத்தை, இட்டு - உங்கள்பிள்ளைகளுக் கிட்டு, நீங்கள்—, தேனித்திருமின்-ஸாதோஷசித்தராயிருங்கோள்; தம்மன்னை- அந்தப்பிள்ளையின் தந்தைதாயர்கள், நரகம்புகாள் - நரகத்தையடையமாட்டா ர்களென்கிறார். மாதாவைச்சொன்னது பிதாவுக்குமுபலக்ஷணம்.

வ்யா.—முதற்பாட்டு. (காசித்யாதி) பிறர்பேரிடுகிறது-அவர்களுக்குஉத்தேச்யராய், ஸ்வயம்ப்ரயோஜநமாகவன்றே; (உ) அத்ருஷ்டப்ரயோஜநத்துக்காகவுமன்றே; த்ருஷ்டப்ரயோஜநங்களில் சில வற்றைநச்சியிறே. ஆகையால், நாலிரண்டுகாசுகிடைக்கும் என்றும், (ங) தலைகளில்கறையையுடைத்தாயிருப்பதொரு (ச) சீரைகிடைக் குமென்றும், அங்கே ஒரு கட்டுக்கற்றை கிடைக்குமென்றுமுண்டா ன வாசையாலே. உங்களுடைய ஆசையொழிய அதுதான் (ரு) ஸித்திக்கிலுமாம், ஸித்தியாதொழியிலுமாம் என்னும் படியிறே அவர்கள் (சு) லுப்ததையிருக்கும்படி. (அங்கவத்தப்பேரிடும்ஆதர் காள்) ப்ராக்ருதரான இவர்கள்பக்கலுண்டான (எ) ஹேயமான நாமங்களையிடும் அறிவுகேடர்காள். "அங்கு" என்று - இவர்கள் உபகாரமாக நினைத்திருக்கும் விஷயங்களினுடைய க்ஷுத்ரதை யைச் சொல்லுகிறது. அவர்கள்தான் க்ஷுத்ரராலும் நாமந்தான் நன்றாயிருக்கையன்றிக்கே, அதுவும் தீயதாயிருக்குமென்னு மிடம் சொல்லுகிறது - "அவத்தப்பேர்" என்று. ஆதர் - குருடரும்,

(க) பற்றுசு - ஆதாரம். (உ) அத்ருஷ்டப்ரயோஜநம் - மறுமைப்பயன். (ங) தலை - தலைப்பு. (ச) சீரை - புடைவை. (ரு) ஸித்தித்தல் - கிடைத்தல். (சு) லுப்ததை - கொடாமை. (எ) ஹேயம் - தண்ணிது.

அறிவிலோரும். (கேசவன்பேரிட்டு) "కఇతిబ్రహ్మణోనామ ఈశోహం సర్వదేహినాం। ఆవాం తవాఙ్గేసమ్భూతౌ తస్మాత్కేశవనామవాన్" "𑌕𑌇𑌤𑌿𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌨𑌾𑌮 𑌈𑌶𑍋𑌹𑌂𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂। 𑌆𑌵𑌾𑌂𑌤𑌵𑌾𑌙𑍍𑌗𑍇𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑍌 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑍇𑌶𑌵𑌨𑌾𑌮𑌵𑌾𑌨𑍍" என்கிறபடியே - ஸர்வகாரண பூதனாய், "క్లేశవఘ్నక్లేశనాశనః" "𑌕𑍍𑌲𑍇𑌶𑌵𑌘𑍍𑌨𑌕𑍍𑌲𑍇𑌶𑌨𑌾𑌶𑌨𑌃" என்கிறபடியே - (க) க்லேசநாசனா யிருக்கிறவனுடைய திருநாமத்தையிட்டு "கேசவா" என்றழைத்து. (நீங்கள்தேனித்திருமினோ) நீங்கள் அந்தப்பிள்ளையளவிலே ஸ்நேஹித்து ஸந்தோஷத்தோடே யிருங்கோள். தேனித்திருக்கையாவது - இனியராயிருக்கை. (நாயகன்நாரணன்) "நாயகன்" என்றது-ஸர்வசேஷியென்றபடி. "நாரணன்" என்றது - (உ) ஸமஸ்தகல்யாணகுணாத்மகனென்றபடி. இத்தால் - (ங) ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்கீடான ப்ராப்தியையும் குணயோகத்தையு முடையவனென்கை. (தம்மன்னை) தாயாரானவள். "தமப்பன்" என்னுமாபோலே, "தம்மன்னை" என்கிறது. (நரகம்புகாள்) பிள்ளைக்கு "நாராயணன்" என்றுபேரானால் அவனைப் பெற்றவளுக்கு எங்ஙனே யமவச்யதைகூடுவது? பிள்ளைபெற்று "நாராயணன்" என்று பேரிட்டது யமவச்யதைகூடுகைக்கோ. பெற்றவருத்தமும் பிள்ளையளவில் ஸ்நேஹம் மிக்கிருப்பதும் மாதாவுக்காகையாலே-இவளை ப்ரதானையாகச்சொல்லுகிறது. இப்படிபேரிட்டழைத்த பிள்ளையளவிலே ஸ்நேஹித்துப் போரும் பித்ராதிகளுக்கும் இப்பேறு ஒக்குமிறே. (க)

மூ.—அங்கொருகூறையரைக்குடுப்பதனாசையால்
மங்கியமானிடசாதிப்பேரிடுமாதர்காள்
செங்கணெடுமால்சிரீதரா வென்றழைத்தக்கால்
நங்கைகாணாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

ப-ரை.—அங்கு - செல்வர்களிடத்து, ஒருகூறை - ஒருபுடைவைபெற்று, அரைக்கு உடுப்பதனாசையால் - அரைக்கு உடுக்கவேணுமென்னு மாசையாலே, மங்கிய - அழிந்துகிடக்கிற, மானிடசாதி - மநுஷ்யஜாதியுடைய, பேரிடும் - பேரையிடாநின்றுள்ள, ஆதர்காள் - குருடர்களே; நங்கைகாள் - சொன்னவற்றை யறியத்தக்க பூர்த்தியையுடையவர்களே; செம் - வாத்ஸல்ய ப்ரகாசகமான, கண் - திருக்கண்களையும், நெடுமால் என்று - மிக்கவ்யாமோஹத்தையு முடையவனே யென்றும், சிரீதரா - ச்ரீதரனே யென்றும்பேரிட்டு, அழைத்தக்கால் - அழைத்தால், நாரணன் - நாராயணனென்னும் பேரையுடைய அப்பிள்ளையின், தம்மன்னை நரகம்புகாள்—.

---

(க) க்லேசநாசன் - அடுத்தவர்களின் துயரத்தைப்போக்குமவன். (உ) ஸமஸ்தகல்யாணகுணாத்மகன் - எல்லாநற்குணங்களையும் தன்னிடத்தில் உடையவன். (ங) ஆச்ரிதர் - அடுத்தவர்கள்.

வ்ருா.—இரண்டாம்பாட்டு. (அங்கொருகூறையரைக்குடுப்பத ஞசையால்) அங்கேபெற்று ஒருபுடைவை அரைக்கு உடுக்கவேணு மென்னும் ஆசையாலே. இவ்விடத்திலும் "அங்கு" என்று உபகார விஷயத்தினுடைய க்ஷேத்ரதையைச்சொல்லுகிறது. "ஒருகூறை" என்றும், "அரைக்குடுப்பது" என்றும் சொல்லுகையாலே, உடுக் கும்சீரைக்கு இணைச்சீரைவேறேதேடவேணுமென்கை. "ஆசை யால்" என்கையாலே-அதுதானும் உங்களாசையேயுள்ளது, கிடைக் கிலுமாம், கிடையாதொழியிலுமாமென்கை. (மங்கியமானிடசாதிப் பேரிடுமாதர்காள்) "அஸந்நேவ" என்கிறபடியே அழிந்துகிடக்கிற மநுஷ்யஜாதியுடையபேரை யிடாநிற்கும் அறிவுகேடர்காள். "ஆன்வி டையேழன்றடர்த்தாற்காளானா ரல்லாதார்மானிடவரல்லர்" என் னும்படியானவர்கள்பேரையிறேயிடுகிறது. (க) த்ர்ஷ்டத்துக்கும் அத்ர்ஷ்டத்துக்கும் உறுப்பன்றிக்கேயிருக்கிறவர்கள்பேரை யிடுகி றது உங்களறிவுகேடிறே. (செங்கணெடுமால்சிரீதராவென்றழைத் தக்கால்) வகுத்தசேஷியானவனுடைய திருநாமத்தையிட்டு, செங்க ணெடுமாலே, சிரீதரனேயென்று அழைத்தால். "செங்கணெடு மால்" என்றது - வாத்ஸல்யப்ரகாசகமான திருக்கண்களையும், ஆச் ரிதவிஷயத்தில் மிக்க வ்யாமோஹத்தையுமுடையவனென்கை. அன் றிக்கே, "மால்" என்றது - பெரியோனென்றபடியாய், * நெடுமை யால் - ஸர்வாதிகத்வம்சொல்லுகிறதாகவுமாம். அப்போதைக்கு, "செங்கண்" என்றது - (உ) ஐச்வர்யஸூசகம். "சிரீதரன்" என் றது-கீழ்ச்சொன்ன இரண்டுயோஜநைக்கும் பொது. நீர்மைக்கும் மேன்மைக்கு முடலாயிறே லக்ஷ்மீஸம்பந்தந்தானிருப்பது. (நங் கைகாள்) சொன்னவையறியத்தக்க பூர்த்தியை யுடையவர்களே. (நாரணன்றம்மன்னைநரகம்புகாள்) (ங) பூர்வவத். (உ)

மூ.—உச்சியிலெண்ணெயுஞ்சுட்டியும்வளையுமுகந்து
எச்சம்பொலிந்தீர்காளென்செய்வான்பிறர்பேரிட்டீர்
பிச்சைபுக்காகிலுமெம்பிரான்றிருநாமமே
நச்சுமினாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

ப-ரை.—எச்சம் பொலிந்தீர்காள்-பிள்ளைபெற்று அபிவ்ர்த்தரானவர்களே, பிள்ளைக்கு, உச்சியில் - உச்சியிலே தடவத்தக்க, எண்ணெயும் - எண்ணெயை யும், நெற்றியில் அலங்காரமாகத்தொங்கவிடத்தக்க, சுட்டியும் - சுட்டியையும், கைக்கு அலங்காரமாக இடத்தக்க, வளையும் - வளையையும், உகந்து - ஆசைப் பட்டு, என்செய்வான் - ஏதுக்காக, பிறர் - ஸர்வேச்வரனை யொழிந்தவர்க ளுடைய, பேர் - பேரை, இட்டீர் - இட்டீர்கள்; பிச்சைபுக்காகிலும் - பிச்சை யெடுத்து ஜீவித்தாகிலும், எம்பிரான் - எனக்குஸ்வாமியானவனுடைய, திரு

(க) த்ர்ஷ்டம் - இம்மை. (உ) ஐச்வர்யம் - செல்வம். (ங) பூர்வவத்- முன்போலே.

நாமமே - திருநாமத்தையே சாத்தி, நச்சுமின் - விருப்பத்தோடே யழைப்பீராயின், நாரணன்தம்மன்னை நரகம்புகாள் —.

வ்யா.—மூன்றும்பாட்டு. (உச்சியிலெண்ணெயும் சுட்டியும் வளையும்) பிள்ளைக்கு உச்சியிலே தடவத்தக்கஎண்ணெயையும், நெற்றியிலே அலங்காரமாகத் தூங்கும்படி கட்டத்தக்க சுட்டியையும், கைக்கு அலங்காரமாக இடத்தக்க வளையையும். இத்தால் - பிள்ளை தலைகாயாமல் (க) தப்புகைக்கு எண்ணெய் பெறலாம், பிள்ளைப் பணிகளானவை பெற்றுப் பூட்டலாமென்றுய்த்து பிறர்பேரிடுகையி லிழிகிறது. (உகந்து) இவற்றை யாசைப்பட்டு. இவர்களாசையே யொழிய இதுதானும் கிடையாதபடியிறே எதிர்த்தலையில் லுப்ததை பார்த்தாலிருப்பது. (எச்சம்பொலிந்தீர்காள்) பிள்ளைபெற்று அபிவ்ர்த்தரானவர்களே. எச்சம் - ஸந்தாநம். (என்செய்வான் பிறர்பேரிட்டீர்) இந்தப் பிள்ளையை முழுக்கரக்ஷித்துத் தலைக்கட்ட வல்லனென்றோ; உங்கள் (உ) மிடிதீர்க்க வல்லனென்றோ; அத்ர்ஷ்டத்துக்குத்தான் உறுப்பாவனென்றோ; ஏதுக்காகப்பிறர்பேரிட்டீர். (பிச்சை புக்காகிலும்) நாடு பரப்புண்டே, அதிலே பிக்ஷையைப் புகுந்து ஜீவித்தாகிலும். (எம்பிரான்றிருநாமமே நச்சுமின்) எனக்கு ஸ்வாமியானவனுடைய திருநாமத்தையே விருப்பத்தோடே (ங) சாற்றியழையுங்கோள். "ஒரு ப்ராஹ்மணன், தன்பிள்ளையைப் பேரிடுகிற ஸமயத்திலே, 'ஐச்வர்யம் தரவல்லானொருவன்பேரிடவேணும்' என்ன; 'வைச்ரவணன் பேராயிடு' என்றவளவிலே, 'ஐளி பிளி' என்று (ச) இட்டு அழைத்து ஜீவிப்பதில் 'நாராயணன்' என்கிற திருநாமத்தைச் சாற்றி, பிக்ஷபுக்கு ஜீவிக்க வமையுமென்றான்" என்று ஆச்சான்பிள்ளை யருளிச்செய்ததாகப் (ரு) பிள்ளையருளிச் செய்வர். இத்தால்-பிக்ஷையைப் புகுந்தாகிலும் என்னுடைய நாதனானவனுடைய திருநாமத்தையே நான்சொன்னபடியே உங்கள் பிள்ளைக்கு விரும்பியிடுங்கோள்; பிக்ஷபுகவேண்டாதபடி த்ர்ஷ்டமும் அவன் ப்ரஸாதத்தாலே தன்னடையே ஸித்திக்கு மென்று கருத்து. (நாரணன் தம்மன்னை நரகம்புகாள்) ஆகையாலே அத்ர்ஷ்டத்தில் தானே குறையில்லையென்கை. (ங)

மூ.—மானிடசாதியிற்றேன்றிற்றோர்மானிடசாதியை
மானிடசாதியின்பேரிட்டான்மறுமைக்கில்லை
வானுடைமாதவாகோவிந்தாவென்றழைத்தக்கால்
நானுடைநாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

(க) தப்புகை - தடவுகை. (உ) மிடி - வறுமை. (ங) சாற்றி - பேரிட்டு. (ச) இட்டு - பேரிட்டு. (ரு) பிள்ளை - திருவாய்மொழிப்பிள்ளை.

ப-ரை.—மானிடசாதியில் - மநுஷ்யஜாதியிலே, தோன்றிற்று-தோன்றின, ஓர் - ஒரு, மானிடசாதியை - மநுஷ்யஜாதியை, மானிடசாதியின் - கர்மபலம் அநுபவிக்கைக்குப்பிறந்த மநுஷ்யஜாதியின், பேரிட்டால் - பேரையிட்டால், மறுமைக்கு - மோக்ஷத்துக்கு, இல்லை - உடலாகாது; நானுடை - என்னுடைய, நாரணன் - நாராயணன்பேரையிட்டு, வானுடை-பரமபதத்தைக் கலவிருக்கையாகவுடைய, மாதவா - ஸ்ரீமானே, லீலாவிபூதியை ரக்ஷிக்கைக்காக இடைச்சாதியிலேபிறந்து, கோவிந்தா - பசுக்களை ரக்ஷிக்குமவனே, என்று—, அழைத்தக்கால் - அழைத்தால், தம்மன்னை நரகம்புகாள்—.

வ்யா.—நாலாம்பாட்டு. (மானிடசாதியில் தோன்றிற்றோர் மானிடசாதியை) மநுஷ்ய ஜாதியில் (க) உத்பந்நமானதொரு மநுஷ்ய ஜந்துவை. ஆத்மா (உ) கர்மாநுகுணமாக தேவாதியோநிகள்தோறும் பிறக்கக்கடவ தாகையாலே, புண்யபாபங்களிரண்டையும் அநுபவிக்கைக்கும் (ங) ஆர்ஜிக்கைக்கு முறுப்பாக வாய்த்து மநுஷ்ய யோநியிலே பிறந்தது. ஆகையால் இப்படியிருக்கிற மநுஷ்ய ஜாதியிலே உத்பந்நமானதொரு ஜந்துவை. (மானிடசாதியின் பேரிட்டால் மறுமைக்கில்லை) த்ர்ஷ்ட ப்ரயோஜநத்தைநச்சி, கர்மவச்யமான மநுஷ்யஜாதியிலே ஒன்றின்பேரிட்டால் ஐஹிகத்தில் சில ப்ரயோஜநம் ஸித்திக்கிலும் மறுமைக்கு ஒரு ப்ரயோஜநமில்லை. மறுமையாவது - அத்ர்ஷ்டம். (வானுடையித்யாதி) தன்னோடு ஸம்பந்தித்தாரை (ச) உத்தரிப்பிக்கும் ஸர்வேச்வரனுடைய திருநாமத்தையிட்டு, (ரு) நித்ய விபூதியையுடைய ஸ்ரீமானே, லீலாவிபூதியைவிரும்பி ரக்ஷிக்கிற கோவிந்தா வென்று அழைத்தால். (நானுடை நாரணன்) என்னுடைய நாராயணன். "மானிடசாதி" என்று எடுத்தவதுக்கு நாலாமடியாகையாலே "என்னுடை" என்கிற ஸ்தாநத்திலே, "நானுடை" என்கிறது; "ஊனுடைச் சுவர்வைத்து" என்கிற பாட்டிலே, "நானுடை" என்னுமாபோலே. பகவந்நாமமிட்ட பிள்ளையைச் சொல்லுகிறதா யிருக்கச்செய்தே, "நாயகன் நாரணன்" என்றும், "நானுடை நாரணன்" என்று மருளிச்செய்கிறது, பகவத் விஷயத்தில் தமக்குண்டான ப்ரேமாதிசயத்தாலே. (தம்மன்னை நரகம்புகாள்.) (ச)

மூ.—மலமுடையூத்தையிற்றோன்றிற்றோர்மலவூத்தையை
மலமுடையூத்தையின்பேரிட்டான்மறுமைக்கில்லை
குலமுடைக்கோவிந்தாகோவிந்தாவென்றழைத்தக்கால்
நலமுடைநாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

---

(க) உத்பந்நமான - உண்டான. (உ) கர்மாநுகுணமாக - செய்வினைக்குத்தக்கபடி. (ங) ஆர்ஜித்தல் - ஸம்பாதித்தல். (ச) உத்தரிப்பிக்கும் - உஜ்ஜீவிப்பிக்கும். (ரு) நித்யவிபூதி - பரமபதம்.

ப-ரை.—மலமுடை - மலத்தோடுகூடியதாய், ஊத்தையில் - ஹேயமாயிருக்கிறசரீரத்திலே, தோன்றிற்றோர் - தோற்றினதொரு, மலவூத்தையை - ஜந்துவான தங்கள்பிள்ளைக்கு, மலமுடை - கீழ்ச்சொன்னபடியே மலத்தையுடைத்தாய், ஊத்தையின் - ஹேயமான சரீரத்தையுடைத்தாயிருப்ப தொருஜந்துவின், பேர் - பேரை, இட்டால் - சாற்றினால், மறுமைக்கு - அத்ருஷ்டத்துக்கு, இல்லை - ஒருப்ரயோஜநமுண்டாகாது; குலமுடை - எல்லாவுயர்த்தியுமுடைய, கோவிந்தா கோவிந்தா என் றழைத்தக்கால்—, நலமுடை நாரணன்தம்மன்னை நரகம்புகாள்—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (மலமுடை யூத்தையில் தோன்றிற்றோர் மலவூத்தையை) "మాంసాసృక్పూయవిణ్మూత్ర స్నాయుమజ్జాస్థిసంహతౌ। దేహే" "மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ர ஸ்நாயுமஜ்ஜாஸ்திஸம்ஹதே । தேஹே" என்கிறபடியே மாம்ஸாஸ்ர்காதி மலயுக்தமாய் (க) ஹேயமாயிருக்கிற (உ) சரீரத்திலே தோன்றினதொன்றாய், தானும் அப்படியான சரீரத்தோடே கூடி யிருக்கிற ஜந்துவை. காரணாநுகுணமாயிறே கார்யமிருப்பது. (ங) உத்பாதகரான மாதாபிதாக்களுடைய சுக்ல சோணிதங்களாலே பரிணதமானதாகையாலே, உத்பந்நமான ஜந்துவினுடைய சரீரமும் (ச) தத்ஸ்வரூபமா யிருக்குமிறே. அத்தைத்திருவுள்ளம்பற்றியாய்த்து இப்படியருளிச் செய்தது. (மலமுடை யூத்தையின் பேரிட்டால் மறுமைக்கில்லை) கீழ்ச்சொன்னபடியே மலத்தையுடைத்தாய் ஹேயமா யிருந்துள்ள சரீரத்தை (ரு) பரிக்ரஹித்துக்கொண் டிருக்கிறதொரு கர்மவச்ய ஜந்துவின் பேரிட்டால், (சூ) இம்மையில் சில ப்ரயோஜநங்களுண்டாய்த்த தாகிலும், மறுமையாகிற அத்ர்ஷ்டத்துக்கு ஒரு ப்ரயோஜநமில்லை. (குலமுடையித்யாதி) (எ) ஹேயப்ரதிபடனானவனுடைய திருநாமத்தையிட்டு கோபகுலத்திலேபிறந்து கோவிந்தாபிஷேகம் செய்த கோவிந்தா கோவிந்தா வென்றழைத்தக்கால். (நலமுடை நாரணன்) திருநாமம் சொன்னாரை உத்தரிப்பிக்கும் நன்மையையுடையனான நாராயணன். அன்றிக்கே, இப்படி கோவிந்தாகோவிந்தாவென்றழைக்கும் ஸ்நேஹத்தையுடைய திருவுடையளான நாராயணன் தம்மன்னை என்று மேலே கூட்டவுமாம். (ரு)

மூ.—நாடுநகருமறியநாட்டுமானிடப்பேரிட்டுக்
கூடியழுங்கிக்குழியில்வீழ்ந்துவழுக்காதே
சாடிறப்பாய்ந்ததலைவாதாமோதராவென்று
நாடுமினாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

(க) ஹேயம் - தண்ணிது. (உ) சரீரம் - . (ங) உத்பாதகர் - உண்டாக்குமவர். (ச) தத் - அந்த. (ரு) பரிக்ரஹித்தல் - மேற்கொள்ளுதல். (சூ) இம்மை - இப்பிறப்பு. (எ) ஹேயப்ரதிபடன் - ஆச்ரிதருடைய தண்ணிமையைப் போக்குமவன்.

ப-ரை.—நாடும் - நாட்டிலுள்ளவர்களும், நகரும் - நகரத்திலுள்ளவர்களும், அறிய - இவன் உயர்ந்தவனென்று அறியும்படி, மானிடப்பேரிட்டு - மநுஷ்யர் பேரையிட்டு, கூடி - அவர்களோடே கூடி, அழுங்கி - அவர்கள்பக்கல காலதாழ்ந்து, குழியில்வீழ்ந்து - அவர்கள் விழுந்தகுழியிலேவிழுந்து, வழுக்காதே - தவறிப்போகாமல்; ஸர்வேச்வரன்பேரையிட்டு, சாடு - சகடாஸுரன், இற - முடியும்படி, பாய்ந்த தலைவா - பாய்ந்தவனே, தாமோதராவென்று - தாமோதரனேயென்று, நாடுமின் - வாழ்த்திக்கொண்டுதிரிவீராயின், நாரணன் தம்மன்னை நரகம்புகாள்—.

வ்ா.—ஆறும்பாட்டு. (நாடித்யாதி) நாட்டிலுள்ளாரோடு நகரத்திலுள்ளாரோடு வாசியற எல்லாரும் "இவன் அஸாதாரணன்" என்று அறியும்படி க்ஷுத்ரமநுஷ்யர்பேரையிட்டு, அவர்களோடேகூடி அவர்கள் பக்கலிலே கால்தாழ்ந்து அவர்கள் விழுந்த குழியிலே விழுந்து தவறவர்த்தியாதே. (சாடிறவித்யாதி) ஸர்வேச்வரனுடைய திருநாமத்தையிட்டு, சகடாஸுரனைமுறியப் பாய்ந்த தலைவனே, தாமோதரனே என்று வாயார வாழ்த்திக்கொண்டு திரியுங்கோள். (நாரணன் தம்மன்னை) நாராயணனானவனுடைய மாதாவானவள் நரகம்புகாள். (௬)

மூ.—மண்ணிற்பிறந்துமண்ணாகுமானிடப்பேரிட்டங்
கெண்ணமொன்றின்றியிருக்குமேழைமனிசர்காள்
கண்ணுக்கினியகருமுகில்வண்ணனாமமே
நண்ணுமினாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

ப-ரை.—மண்ணில்பிறந்து - மண்ணினின்றுமுண்டாய், மண்ணாகும் - மண்ணாய்விடுகிற, மானிடப்பேரிட்டு - க்ஷுத்ரமநுஷ்யருடைய பேரையிட்டுக்கொண்டு, அங்கு - அத்ருஷ்டபலத்திலே, ஒன்றுமின்றி யிருக்கும் - ஒருவிசாரமற்றிருக்கிற, ஏழை - அறிவிலிகளான, மனிசர்காள் - மநுஷ்யர்களே, கண்ணுக்கு—, இனிய - இனிதாயிருந்துள்ள, கரு - கறுத்த, முகில் - மேகம்போன்ற, வண்ணன் - வடிவையுடையனாயிருக்கிறவனுடைய, நாமம் - திருநாமத்தை, உங்கள்பிள்ளைக்கு இட்டு அத்தாலே அவனை, நண்ணுமின் - கிட்டப்பாருங்கோள்; நாரணன்தம்மன்னை நரகம்புகாள்—.

வ்ா.—ஏழாம்பாட்டு. (மண்ணிற்பிறந்து) "மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம் புண்ணாராக்கை" என்கிறபடியே-(௧) தேஹோபாதாநம் (௨) பூதபஞ்சகமேயாகிலும் (௩) ப்ரசுரமாயுள்ளது (௪) ப்ருதிவித்ரவ்யமாகையாலே அதில் நின்றும் (௫) தேஹத்துக்கு (௬) உத்பத்தியாக வருளிச்செய்கிறார். (மண்ணாகும்) தேஹந்தான் உருக்குலைந்தால், கார்யத்துக்கு காரணத்திலே

(௧) தேஹோபாதாநம் - சரீரத்துக்குமுதற்காரணப்பொருள். (௨) பூதபஞ்சகம் - மண்ணும், நீரும், நெருப்பும், காற்றும், ஆகாசமுமாம். (௩) ப்ரசுரம் - வெளிட்டையாயுள்ளது. (௪) ப்ருதிவித்ரவ்யம் - மண். (௫) தேஹம்-சரீரம். (௬) உத்பத்தி - உண்டாகை.

(௧) லயமாகையாலே, மீளவும் மண்ணாய்ப்போகக் கடவதிறே; அத்தைப்பற்ற வருளிச்செய்கிறார். (மானிடப்பேரிட்டு) ஆக இப்படி மண்ணிலே பிறந்து மண்ணாய்ப்போகாநிற்கும் (௨) க்ஷுத்ர மநுஷ்யருடைய பேரையிட்டு. இத்தால் - அவர்கள் பரிக்ரஹித்திருக்கிற சரீரத்தினுடைய பொல்லாங்கையும் (௩) அஸ்திரதையையும் க்ஷுத்ரதையையும்சொல்லி, இப்படியிருக்கிறவர்கள்பேரை யிடுவதே! என்கிறார். (அங்கெண்ணமொன்றின்றி யிருக்கு மேழை மனிசர்காள்) அவ்விஷயத்திலே ஒரு விசாரமற்றிருக்கிற அறிவிலி மநுஷ்யர்காள். அதாவது - முன்பு அப்படி செய்தால், பின்பு (௪) தத்விஷயமாக ஒரு (௫) விசாரமுண்டாய் "என்னகார்யம் செய்தோம்!" என்று அநுதபிக்கலாமிறே. அதின்றிக்கே (௬) நிர்ப்பரராயிருக்கிறது உங்களறிவு கேடிறே யென்கை. (கண்ணுக்கித்யாதி) வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டிருக்கும்படி (௭) த்ர்ஷ்டிப்ரியமான காளமேகம் போன்ற வடிவையுடையனா யிருக்கிறவனுடைய திருநாமத்தை நண்ணுங்கோள். அதாவது - அவன்திருநாமத்தை உங்கள் பிள்ளைக்கு இட்டு அழையாநின்று கொண்டு, அத்திருநாமத்தில் செறிவுடையராய்ப் போருங்கோ ளென்கை. அந்தநாரணன் தம்மன்னை நரகம்புகாள். (௭)

அ.—எட்டாம்பாட்டு. (நம்பியித்யாதி) லோகத்தில் இன்னநம்பி இன்னநம்பி என்று ஒரு க்ராமத்துக்கும் ஜநபதத்துக்கும் ப்ரதாநராய் ப்ரஸித்தராயிருக்குமவர்களுடைய நாமங்களை, த்ர்ஷ்டப்ரயோஜநங்களை நச்சி, பிள்ளைகளுக்கு இட்டுத்திரியு மவர்களைப்பார்த்தருளிச்செய்கிறார்.

மூ.—நம்பிபிம்பியென்றுநாட்டுமானிடப்பேரிட்டால்
நம்பும்பிம்புமெல்லாநாலுநாளிலழுங்கிப்போம்
செம்பெருந்தாமரைக்கண்ணன்பேரிட்டழைத்தக்கால்
நம்பிகாள்நாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

ப-ரை.—நம்பிபிம்பியென்று—, நாடு - நாட்டிலுண்டான, மானிடம் - மநுஷ்யருடைய, பேரிட்டால் - பேரையிட்டால், நம்பும்பிம்புமெல்லாம்—, நாலுநாளில் - நாலுபோதில், அழுங்கிப்போம் - நசித்துப்போம்; நம்பிகாள் - அறிவினால் குறைவில்லாத பூர்ணர்களே, செம்-சிவந்து, பெரு - பெருத்த, தாமரை- தாமரைமலர்போன்ற, கண்ணன் - திருக்கண்களை யுடையவனுடைய, பேரிட்டு - திருநாமங்களை யிட்டு, அழைத்தக்கால் - அழைத்தால், நாரணன் தம்மன்னை நரகம்புகாள்—.

(௧) லயம் - அழிவு. (௨) க்ஷுத்ரமநுஷ்யர் - தண்ணியரானமனிதர்கள். (௩) அஸ்திரதை - நிலையில்லாமை. (௪) தத்விஷயமாக - அந்தவிஷயமாய். (௫) விசாரம்-ஆராய்ச்சி. (௬) நிர்ப்பரர் - சுமையில்லாதவர்கள். (௭) த்ர்ஷ்டிப்ரியம் - கண்ணுக்கினிமை.

வ்யா.—(நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப் பேரிட்டால்) பிம்பிக்கு ஒரு பொருளுண்டாகிலாய்த்து நீங்கள்சொல்லுகிற நம்பிக்கும் ஒருபொருளுண்டாவது! என்று (க) க்ஷேபித்து, நம்பிக்கு எதிர்த்தட்டாக ஒரு பிம்பியையருளிச்செய்கிறார். இப்படி சில நாட்டிலுண்டான க்ஷுத்ரமநுஷ்யருடைய பேரையிட்டால். (நம்பும் பிம்புமெல்லாம் நாலுநாளிலழுங்கிப்போம்) "நம்பி, பிம்பி" என்கிறபேருக்கடியான முதன்மையெல்லாம் நாலுபோதில் (உ) நசித்துப்போம். அதாவது - (ங) கர்மநிபந்தநமாக வந்த தாகையாலே, "வாழ்ந்தார்கள் வாழ்ந்தேநிற்ப ரென்பதில்லை" என்கிறபடியே அழிந்துபோம். பின்னை யார்பக்கலிலே நாங்கள்ஜீவநம்பெற்று ஜீவிப்பதென்ன (செம்பெரு மித்யாதி) சிவந்து பெருத்த தாமரை போலே யிருக்கிற திருக்கண்களை யுடையவனுடைய திருநாமத்தை யிட்டு அழைத்தக்கால். அதாவது - திருநாமஞ் சொன்னவர்களுக்கு ஸகலஸம்பத்துக்களுமுண்டாம்படி கடாக்ஷிக்கும் திருக்கண்களை யுடையவன்றிருநாமத்தை உங்கள்பிள்ளைக்கிட்டு (ச) ஆதரம் தோற்ற அழைத்தக்காலென்கை. (நம்பிகாள்) * அறிவினால் குறைவில்லாதபூர்ணர்காள். (நாரணன் தம்மன்னை நரகம்புகாள்.) (அ)

மூ.—ஊத்தைக்குழியிலமுதம்பாய்வதுபோலுங்கள்
மூத்திரப்பிள்ளையையென்முகில்வண்ணன்பேரிட்டுக்
கோத்துக்குழைத்துக்குணலமாடித்திரிமினோ
நாத்தகுநாரணன்றம்மன்னைநரகம்புகாள்.

ப-ரை.—ஊத்தைக்குழியில் —, அமுதம் - அம்ர்தமானது, பாய்வதுபோல் - பாய்ந்தாற்போலே, உங்கள் - உங்களுடைய, மூத்திரப்பிள்ளையை - சுக்லசோணித பரிணமரூபமான பிள்ளைக்கு, என் - எனக்குக்கீழ்ப்படிந்தவனாய், முகில் - மேகம்போன்ற, வண்ணன் - திருநிறத்தை யுடையவனுடைய, பேரிட்டு - திருநாமங்களையிட்டு, கோத்து - ஸர்வேச்வரனோடே ஒரு கோவையாகக்கூடி, குழைத்து - கலந்து, குணலமாடித் திரிமின் - களித்துத் திரியுங்கோள்; பிள்ளைக்குத் திருநாமத்தையிட்டு அத்தைப்பலகாலும் சொல்லுகை, நா-உங்கள் நாவுக்கு, தகும் - சேரும்; நாரணன் தம்மன்னை நரகம்புகாள்—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (ஊத்தைக்குழியில் அமுதம் பாய்வதுபோல்) அசுத்தமாய் யோக்யர்க்கு (ரு) ஸ்பர்சிக்கைக்கு (சு) அர்ஹமல்லாதபடி யிருக்கும் ஊத்தைக்குழியிலே, பரிசுத்தமாய் யோக்யர்க்கு போக்யமா யிருக்கும் அம்ர்தமானது பாய்ந்தாற் போலே. (உங்கள் மூத்திரப்பிள்ளையை) உங்களுடைய சுக்லசோணித பரிணமரூபமான பிள்ளையை. (என்முகில்வண்ணன்பேரிட்டு)

(க) க்ஷேபித்து - நிந்தித்து. (உ) நசித்தல் - அழிதல். (ங) கர்மநிபந்தநமாக - கர்மமடியாக. (ச) ஆதரம் - அன்பு. (ரு) ஸ்பர்சிக்கை - தொடுகை. (சு) அர்ஹம் - தகுதி.

எனக்கு (௧) பவ்யனாய் (௨) காளமேக நிபச்யாமமான வடிவையுடையனானவனுடைய விலக்ஷணபோக்யமான திருநாமத்தையிட்டு. இத்தால் - அத்திருநாமமிடுகிற விஷயத்தினுடைய (௩) வைபவமருளிச் செய்தாராய்த்து. ஊத்தைக்குழியிலே அம்ர்தம்பாய்ந்தால், தானும் அசுத்தமாய் யோக்யர்க்கு போக்யமாகாதபடியாய்ப்போம்; இங்கு அத்திருநாமம் (௪) ஸ்பர்சவேதியாகையாலே, தனக்கு ஒருஸ்பர்சதோஷமின்றிக்கே, தான்புக்கவிடத்தை பரிசுத்தமாக்கி விலக்ஷணபரிக்ராஹ்யமாம்படிபண்ணும். இதில், த்ர்ஷ்டாந்தமான அம்ர்தத்திற்காட்டில் தார்ஷ்டாந்திகமான திருநாமத்துக்குள்ள வாசி. (கோத்துக் குழைத்துக்குணலமாடித் திரிமினோ) ஸர்வேச்வரனோடே ஒருகோவையாகக் கூடிக் (௫) குணலையிட்டுத் திரியுங்கோள். அதாவது - பிள்ளைபெற்றுத் திருநாமமிட்டபோதே நீங்கள் (௬) பகவத்பரிக்ரஹமாய்விடுகையாலே, அந்த ஸம்பந்தமடியாக அவனோடே கூடிக்கலந்துகளித்துத் திரியுங்கோளென்கை. (நாத்தகும்) பிள்ளைக்குத் திருநாமத்தையிட்டு அத்தைப் பலகாலும் சொல்லுகையாகிறவிது உங்கள் நாவுக்குச் சேரும். திருநாமம் சொல்லுகைக்கிறே நாக்கண்டது. அன்றிக்கே, "நாத்தகுநாரணன்" என்றுமேலே கூட்டி "𑌸𑌾 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾 𑌯𑌾 𑌹𑌰𑌿𑌂 𑌸𑍍𑌤𑍌𑌤𑌿" "ஸாஜிஹ்வாயா ஹரிம் ஸ்தௌதி" என்கிறபடியே - நாவுக்கு அநுரூபவிஷயம் நாராயணனென்னவுமாம். (நாரணன் தம்மன்னை நரகம்புகாள்.) (௯)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—சீரணிமாற்றிருநாமமேயிடத்தேற்றிய
வீரணிதொல்புகழ்விட்டுசித்தன்விரித்த
வோரணியொண்டமிழொன்பதோடொன்றும்வல்லவர்
பேரணிவைகுந்தத்தென்றும்பேணியிருப்பரே.

ப-ரை.—சீர்-கல்யாணகுணங்களை, அணி-ஆபரணமாக வுடையனாய், மால்-ஆச்ரிதவ்யாமுக்தனானவனுடைய, திருநாமமே - திருநாமங்களையே, இட - தாந்தாம்பெற்ற பிள்ளைகளுக்குச் சாற்றும்படியாக, தேற்றிய - தெளிவித்து, வீரம் - இந்த்ரியங்களை வெல்லுகையாகிற வீரப்பாட்டை, அணி - ஆபரணமாக வுடையராய், தொல் - அநாதிஸித்தமான, புகழ் - மங்களாசாஸநப் புகழையுடையரான, விட்டுசித்தன்-பெரியாழ்வார், விரித்த - விளங்கச்சொன்னதாய், பயின்றவர்களுக்கு, ஓர் - ஒப்பற்ற, அணி - ஆபரணமாய், ஒண் - தன்பொருளைவிளக்குமதாய், தமிழ் - யாவரும் கற்பதற்கு யோக்யமா யிருந்துள்ள,

(௧) பவ்யன் - கீழ்ப்படிந்தவன். (௨) காளமேகம் - கறுத்தமேகம். (௩) வைபவம் - பெருமை. (௪) ஸ்பர்சவேதி - சேரும்பொருள்தன்மையதாகை. (௫) குணலை - ஓர்வகைக்கூத்து. (௬) பகவத்பரிக்ரஹம் - எம்பெருமானாலே ஏற்றுக்கொள்ளப்படுமது.

ஒன்பதோடொன்றும் - இப்பத்துப்பாட்டையும், வல்லவர் - கருத்துடன்பயில வல்லவர்கள், பேர் - பெரிய, அணி - அழகையுடைய, வைகுந்தத்து - ஸ்ரீவைகுண்டத்திலே, என்றும் - எல்லாக்காலமும், பேணியிருப்பர் - ஆதரத்தோடே வர்த்திக்கப்பெறுவர்.

வ்யா.—(சீரணிமால்) குணங்களை ஆபரணமாக வுடையனாய் ஆச்ரித வ்யாமுக்தனானவனுடைய. அன்றிக்கே, "சீரணி" என்றது - குணங்களினுடைய திரளை யுடையவனென்றாய், அக்குணங்கள் புறம்பொரு வ்யக்தியில் கிடவாமையாலே, கல்யாண குணங்களுக்கெல்லாம் (க) ஆச்ரயமானவனென்னவுமாம். "ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததௌ" "யாதஞ்சநாதிவமெலெமஹநா மஙாநாஜகரொாஉஹாநு" என்னக்கடவதிறே. மால் - பெரியவன்; ஸர்வேச்வரனென்னவுமாம். (திருநாமமேயிட்டுத்தேற்றிய) இதரநாமங்களை மாற்றி ✻ நாரணன்றன் நாமங்களே தாந்தாம் பெற்ற பிள்ளைகளுக்குச் சாற்றும்படியாகப் பலஹேதுக்களாலும் தெளிவித்து. (வீரணிதொல்புகழ் விட்டுசித்தன் விரித்த) (உ) ஜிதேந்த்ரியத்வமாகிற வீரப்பாட்டை ஆபரணமாக வுடையராய், ஸூரிகளைப்போலே அநாதிஸித்த மங்களாசாஸநப் புகழை யுடையரான பெரியாழ்வார் பரப்பின. (ஓரணியித்யாதி) அப்யஸித்தார்க்கு அத்விதீயமான ஆபரணமாய், அர்த்தப்ரகாசகமாய், ஸர்வாதிகாரமான த்ராவிடரூபமா யிருந்துள்ள இப்பத்துப் பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (பேரணி வைகுந்தத்து) பெரிய அழகையுடைய ஸ்ரீவைகுண்டத்திலே. அதாவது - பகவதநுபவ கைங்கர்யங்களுக்கு அநுரூபமாகையாலே மிகவும் விலக்ஷணமான தேசத்திலே யென்கை. (என்றும் பேணியிருப்பரே) ஸர்வகாலமும் ஆதரத்தோடே வர்த்திக்கப் பெறுவர். அதவா, பேணுகையாவது - ஈச்வரனைப் பேணுகையாய், மங்களாசாஸந பரராய் வர்த்திக்கப்பெறுவ ரென்னவுமாம். (க0)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—காசுமங்கொருவுச்சிமாணிட மலநாடு மண்நம்பி யூத்தைசீரணிதங்கை.

---

ஆ திருமொழி ௩ச-க்கு, பாட்டு-௩சுஅ.

---

அ.—பகவத்வைமுக்யாதி தோஷமடியாகத் தம்மாலே நிந்திதரான ஸம்ஸாரிசேதநரையும் விடமாட்டாத தம்முடைய பரம

(க) ஆச்ரயம் - இருப்பிடம். (உ) ஜிதேந்த்ரியத்வம் - 'இந்த்ரியங்களைத் தன்வசப்படுத்தும் தன்மை.

க்ர்பையாலே, அவர்களைத்திருத்தியாகிலும் உஜ்ஜீவிப்பிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, அவர்கள் திருந்துகைக்குறுப்பான ஹிதத்தை உபதேசித்தருளினர் - கீழிரண்டு திருமொழியாலே; அதுசெய்து தலைக்கட்டினவநந்தரம், "முன்பு, திருமலை திருக்கோட்டியூரில் அநுபவித்தாற்போலே இன்னமும் அவன் உகந்தருளின நிலங்களிலே எழுந்தருளிநிற்கிற நிலையை அநுபவிக்கவேணும்" என்னுமாசைகிளர்ந்து "வடதிசை மதுரை சாளக்கிராமம்" இத்யாதிப்படியே தனக்கு அபிமதமான தேசங்கள் பலவற்றிலுமுள்ள விருப்பத்தை யெல்லாவற்றையும் ஒருமடைகொள்ளப் பண்ணி வர்த்திக்கிற ஸ்தலமாய், திருவுலகளந்தருளுகிறபோது தன்திருவடிகளில்பிறந்த ஏற்றத்தாலே ஸகலலோகபாவநபூதையாய்க் கொண்டு ஸர்வகாலமும் ப்ரவஹியாநிற்கிற கங்கையினுடைய கரையிலேயுள்ளதான திருக்கண்டங்கடிநகரிலே அநேகாவதார குணசேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி யெழுந்தருளி நிற்கிற புருஷோத்தம சப்தவாச்யனை ஸர்வேச்வரனை யநுபவியா நின்றுகொண்டு, அவனிலுங்காட்டில் அவன் வர்த்திக்கிற தேசமே ப்ராப்யத்தில் சரமாவதி யாகையாலே அத்தேசத்தினுடைய வைபவத்தையும் பகுமுகமாகப்பேசி யநுபவிக்கிறர் - இத்திருமொழியில்......... *

மூ.—தங்கையைமூக்குந் தமையனைத்தலையுந் தடிந்தவெந்தாசரதி போய், எங்குந்தன்புகழா விருந்தரசாண்ட வெம்புருடோத்தமனிருக்கை, கங்கைகங்கையென்ற வாசகத்தாலே கடுவினைகளைந்திடகிற்கும், கங்கையின்கரைமேற் கைதொழநின்ற கண்டமென்னுங்கடிநகரே.

ப-ரை.—உலகத்தார் நீராடும்தீர்த்தங்களை கங்கையாக பரதிபத்திபண்ணி ஸ்நாநம்செய்வார்களேயானல், கங்கைகங்கையென்றவாசகத்தாலே—, கடுவினை-அவரவர்களுடைய க்ரூரமானபாபங்களை, களைந்திடகிற்கும்-போக்கவல்ல, கங்கையின்கரைமேல்-கங்கையினுடைய கரையிலே,பகவத்ஜ்ஞாநமுடையாரெல்லாரும், கைதொழநின்ற-கையெடுத்துத் தொழும்படிநின்ற, கண்டமென்னும் - கண்டமென்கிற, கடி - சிறப்பையுடைய, நகர் - நகரமானது; தங்கை - தங்கையான சூர்ப்பணகியுடைய, மூக்கையும்—, தமையன்-அவள்தமையனை ராவணனுடைய, தலையையும்—, தடிந்த-அறுத்த, எம் - நம்முடைய, தாசரதி - சக்ரவர்த்தித்திருமகன், போய் - ராவணவதாநந்தரம் திருவயோத்யையிலெழுந்தருளித் திருவபிஷேகம் செய்தருளி, எங்கும் - எல்லாவிடத்திலும், தன் - தன்னுடைய, புகழா - கீர்த்தியேயாம்படி, இருந்து - பதினோராயிரம் ஸம்வத்ஸரமிருந்து, அரசாண்ட - ராஜ்யம்பண்ணியருளின, எம் - நம்முடைய, புருடோத்தமன் - புருஷோத்தமனுக்கு, இருக்கை - வாஸஸ்தாநமாம்.

வ்யா.—முதற்பாட்டு. (தங்கையைமூக்கும் தமையனைத்தலையும்தடிந்த) தங்கையான சூர்ப்பணகியுடைய மூக்கையும், தமையனை ராவணனுடைய தலையையுமறுத்த. "வாளரக்கன்முடியும் தங்

கைபொல்லாதமூக்கும் போக்குவித்தான் பொருந்தும்மலே" என்று-திருமலையில் நிற்கிறநிலையில் கண்டநுபவித்த ராமாவதாரகுணத்தை, திருக்கண்டங்கடிநகரில் நிற்கிறநிலையிலும் கண்டநுபவிக்கிறார். "త్వం మాతా సర్వలోకానాం దేవదేవో హరిః పితా" "𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌤𑌾 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑍋 𑌹𑌰𑌿𑌃 𑌪𑌿𑌤𑌾" என்று-ஸர்வலோகத்துக்கும் மாதாவும் பிதாவுமாய்க்கொண்டிருக்கும் (க) மிதுநத்தை முறையிலே விரும்பாமல் முறைகெடவிரும்புவார் பெறும்பேறு இது என்னுமிடம் தோற்றவிறே-தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடிந்தது. அதாவது - (உ) முக்யவிசேஷணபூதையான பிராட்டியை(ந) உபேக்ஷித்து, விசேஷ்யபூதரான பெருமாளை விரும்பின சூர்ப்பணகிக்கு (ச) முக்யாங்கஹாநியே பலமாய்த்து; அவளுக்கு விசேஷ்யபூதராய்க்கொண்டு ஸர்வர்க்கும் ப்ராணனாயிருக்கிற பெருமாளை உபேக்ஷித்து, விசேஷணபூதையான பிராட்டியை, (ரு) விபரீதபுத்யா விரும்பின ராவணனுக்கு ப்ராணஹாநியே பலமாய்விட்டதென்கை. இவ்வர்த்தத்தை ப்ரகாசிப்பிக்கைக்காகவாய்த்து - இவர் பலவிடங்களிலுமருளிச்செய்தது. (எம்தாசரதி) "எம்" என்று - ஆச்ரிதரொல்லாரையுங் கூட்டிக்கொண்டு அருளிச்செய்கிறார். இவ்வர்த்தத்தை வெளியிட்டருளினது ஆச்ரிதரொல்லார்க்கு மொக்குமிறே. "தாசரதி" என்றது - ராவணவதாநந்தரம் ப்ரஹ்மாதிதேவர்கள் வந்து "భవాన్నారాయణో దేవః" "𑌭𑌵𑌾𑌨𑍍𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍋 𑌦𑍇𑌵𑌃" என்றது (சு) அஸஹ்யமாய், "ఆత్మానం మానుషం మన్యే రామం దశరథాత్మజమ్" "𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌰𑌾𑌮𑌂 𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑌮𑍍" என்று நின்றநீர்மையை ப்ரகாசிப்பிக்கைக்காக. (போயெங்கும்தன்புகழாவிருந்தரசாண்ட) (எ) ராவணவதாநந்தரம் லங்கையில்நின்றும் மீண்டு திருவயோத்யையிலேயெழுந்தருளித் திருவபிஷேகம்பண்ணியருளி, "రామో రామో రామ ఇతి ప్రజానామభవన్ కథాః। రామభూతం జగదభూద్రామే రాజ్యం ప్రశాసతి" "𑌰𑌾𑌮𑍋 𑌰𑌾𑌮𑍋 𑌰𑌾𑌮 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌮𑌭𑌵𑌨𑍍 𑌕𑌥𑌾𑌃। 𑌰𑌾𑌮𑌭𑍂𑌤𑌂 𑌜𑌗𑌦𑌭𑍂𑌦𑍍𑌰𑌾𑌮𑍇 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌤𑌿" என்கிறபடியே நாடடங்கத் தன்னுடைய குணங்களையே வாய்புலத்தி (அ) ராமாத்வைதமாம்படி பண்ணுகையாலே எல்லாவிடத்திலும் தன்னுடைய கீர்த்தியேயாம்படி பதினோராயிரம் ஸம்வத்ஸரமிருந்து ராஜ்யம்பண்ணியருளின. (எம்

---

(க) மிதுநம் - பெருமாளும் பிராட்டியுமானசேர்த்தி. (உ) முக்யம்-முதன்மை. (ந) உபேக்ஷித்து - அசட்டைசெய்து. (ச) முக்யாங்கஹாநி - முதன்மையான அவயவங்களறுப்புண்கை. (ரு) விபரீதபுத்தி - துர்ப்புத்தி. (சு) அஸஹ்யமாய் - பொறுக்கக்கூடாமல். (எ) ராவணன் - உலகத்தாரை அழும்படிசெய்தவன். (அ) ராமாத்வைதமாம்படி - ராமன்ராமன்என்று யாவரும் சொல்லும்படி.

புருடோத்தமனிருக்கை) "எம்" என்று - ஆச்ரிதரெல்லாரையும் கூட்டிக்கொண் டருளிச்செய்கிறார். "புருடோத்தமன்" என்றது- (க) ஸர்வஸ்மாத்பரனென்றபடி. "யஸ்மாத்க்ஷரமதீதோஹம் அக்ஷராதபிசோத்தமஃ। அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தமஃ" "யஸ்மாத் க்ஷரமதீதோஹம் அக்ஷராதபி சோத்தமஃ। அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தமஃ" என்றருளிச்செய்தானிறே தானே. தாசரதியான புருஷோத்தமனென்கையாலே-மநுஷ்யத்வேபரத்வம் சொல்லுகிறது. "இருக்கை" என்றது - வாஸஸ்தலமென்றபடி.

(கங்கையித்யாதி) ஏதேனுமோரிடத்திலே ஸ்நாநம்பண்ணுமவர்கள் (உ) அவகாஹிக்கிற ஜலத்தை கங்கையாகநினைத்து, "கங்கை கங்கை" என்கிற சப்தத்தைச்சொல்ல, இந்தவாசகத்தாலே, அவர்களுடைய (ங) அவச்யமநுபோக்தவ்யமான பாபத்தைப் போக்கவல்ல. (கங்கையின்கரைமேல் கைதொழநின்ற) இப்படியிருந்துள்ள கங்கையினுடைய கரையிலே (ச) விசேஷஜ்ஞரெல்லாரும் கையெடுத்துத்தொழும்படியாகநின்ற. (கண்டமென்னும்கடிநகரே) கண்டமென்கிற சிறப்பையுடைத்தான நகரம். கடி - சிறப்பு. இத்தால்-ப்ராப்யபூதனான புருஷோத்தமனிலுங்காட்டில் அவன் வர்த்திக்கிற தேசமே சரமாவதியாகையாலே, அத்தேசத்தை வர்ணித்துக்கொண்டநுபவிக்கிறார். (க)

மூ.—சலம்பொதியுடம்பிற் றழலுமிழ்பேழ்வாய்ச் சந்திரன்வெங்கதிரஞ்ச, மலர்ந்தெழுந்தணவு மணிவண்ணவுருவின் மால் புருடோத்தமன்வாழ்வு, நலந்திகழ்சடையான் முடிக்கொன்றைமலரு நாரணன்பாதத்துழாயுங், கலந்திழிபுனலாற் புகர்படுகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே.

ப-ரை.—திருவுலகளந்தருளுகிறபோது ப்ரஹ்மாதிருவடி விளக்கின தீர்த்தத்தை தரிக்கையால் வந்த, நலந்திகழ் - நன்மை விளங்காநின்றுள்ள, சடையான் - ஜடாதாரியான ருத்ரன், முடி - சிரஸ்ஸில்தரித்த, கொன்றைமலரும் - சிவந்த நிறத்தையுடைய கொன்றைப்பூவோடும், நாரணன் - அவனுக்கு சேஷியுமாய் சரீரியுமான நாராயணனுடைய, பாதம் - திருவடிகளில் புனைந்த, துழாயும் - பசுத்த நிறத்தையுடைய திருத்துழாயோடும், கலந்து—, இழி - ஆகாசத்தினின்றும் பூமியினிடத்து இழியாநின்றுள்ள, புனலால் - ஜலத்தாலே, புகர்படு- ஒளியை யுடைத்தா யிருந்துள்ள, கங்கை - கங்கைக்கரையிலே யிருக்கிற, கடி - பெருமை பொருந்திய, கண்ட மென்னும் நகர் - கண்டமென்னும் நகரமானது; சலம் - ஜலத்தை, பொதி - பொதிந்து கொண்டிருக்கிற, உடம்பின்- வடிவையுடைய, சந்திரன் - சந்த்ரனும், தழல் - நெருப்பை, உமிழ் - உமிழாநி

(க) ஸர்வஸ்மாத்பரன் - எல்லாரிலுமுயர்ந்தவன். (உ) அவகாஹிக்கிற- ஸ்நாநம்செய்கிற. (ங) அவச்யமநுபோக்தவ்யம் - அநுபவித்தே கழியவேண்டியது. (ச) விசேஷஜ்ஞர் - அறிவுடையோர்.

ன்ற, பேழ் - பெரிய, வாய் - கிரணங்களையுடையனாய், வெம் - வெம்மையை ஸ்வபாவமாக வுடைய, கதிர் - ஸூர்யனும், அஞ்ச - பயப்படும்படியாக, மலர்ந்து - மிகப்பரம்பிக்கொண்டு, எழுந்து - கிளர்ந்து, அணவு - அவர்களிருப்பிடத்தைச் சென்று கிட்டின, மணி - நீலரத்நம்போன்ற, வண்ணம் - நிறத்தையுடைத்தான, உருவின் - வடிவையுடையனாய், மால் - வ்யாமுக்தனான, புருடோத்தமன் - புருஷோத்தமனுக்கு, வாழ்வு - ப்ராப்யதேசமாம்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (சலமித்யாதி) அம்ர்தகிரணனாகையாலே ஜலத்தைப் பொதிந்துகொண்டிருக்கிற வடிவையுடைய சந்த்ரனும், உஷ்ண கிரணனாகையாலே அக்நியை யுமிழாநின்ற பெரிய கிரணங்களையுடையனாய் வெம்மையே ஸ்வபாவமாகவுடைய ஆதித்யனும், திருவுலகளந்தருளுகிறபோது அத்ர்ஷ்ட பூர்வமாய் அநேக புஜாயுதமாய் அதிசீக்ரமாக வளருகிறபடியைக் கண்டு "என்னாகிறதோ!" என்று அஞ்சும்படியாக. (மலர்ந்தெழுந்தணவு மணிவண்ண வுருவின்) "எண்டிசையும் பேர்த்தகர நான்குடையான்" என்கிறபடியே - (க) அதிவிஸ்த்ர்தமாய்க் கொண்டு கிளர்ந்து அவர்களிருப்பிடங்களைச் சென்று கிட்டின நீலரத்நத்தின் நிறத்தையுடைத்தான வடிவையுடையனாய். (மால்) [ஓண்மிதியில் புனலுருவிஒருகால் நிற்ப] என்கிறபடியே-கீழ்மிதித்த திருவடிகளாலே பூமிமுதலாகக் கீழுள்ள லோகங்களெல்லாவற்றையும், [ஒருகாலுமித்யாதி] அப்படிமேலெடுத்த திருவடியாலே (உ) ஊர்த்வலோகங்களெல்லாவற்றையும் பெறுப்பேறு பெற்றுப்போலே பதறியளந்துகொண்ட வ்யாமோஹத்தை யுடையனான. (புருடோத்தமன் வாழ்வு) இந்த வ்ர்த்தாந்தத்தாலே - எல்லாருடைய (௩) அந்ய சேஷத்வ (௪) ஸ்வஸ்வாதந்த்ர்யங்களைப் போக்கி எல்லா ஜகத்துக்கும் தானே சேஷி யென்னுமிடம் தோற்ற நின்ற ஸர்வாதிகனான புருஷோத்தமனுக்கு (௫) ப்ராப்யமானதேசம்.

(நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும்) "𑌪𑌾𑌵𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌜𑌟𑌾𑌮𑌧𑍍𑌯𑍇 𑌯𑍋𑌗𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌮𑍀𑌤𑍍𑌯𑌵𑌧𑌾𑌰𑌣𑌾𑌤𑍍" "பாவநார்த்தம்ஜடாமத்யே யோக்யோஸ்மீத்யவதாரணாத்" என்கிறபடியே திருவடி விளக்கின தீர்த்தத்தை தரித்துக்கொண்டிருக்கிற நன்மை விளங்காநின்ற ஜடையையுடைய ருத்ரனுடைய சிரஸ்ஸில் கொன்றைப்பூவும். (நாரணன் பாதத்துழாயும்) அவனுக்கு சேஷியும் சரீரியுமான நாராயணனுடைய திருவடிகளில்திருத்துழாயும். (கலந்திழிபுனலால்) சிவந்த

---

(க) அதிவிஸத்ர்தம் - மிகப்பரப்புள்ளது. (உ) ஊர்த்வலோகம் - மேலுலகம். (௩) அந்யசேஷத்வம் - ஸர்வேச்வரனை யொழிந்தவர்களுக்கு உரிமைப்படுகை. (௪) ஸ்வஸ்வாதந்த்ர்யம் - தான்தன்வசப்பட்டவனாகநினைக்கை. (௫) ப்ராப்யமானதேசம் - அடையத்தகுமிடம்.

நிறத்தையும் பசுத்த நிறத்தையு முடைத்தான அவை யிரண்டோடும் கலந்து ஆகாசத்தில் நின்றும் பூமியிலே யிழிந்து ப்ரவஹிக்கிற ஜலத்தாலே. (புகர்படு கங்கை) ஒளியையுடைத்தா யிருந்துள்ள கங்கையினுடைய கரையில். (கண்டமென்னுங்கடிநகரே) "கண்டம்" என்று - தேசத்துக்குத் திருநாமம். கடி - பெருமை. நகரென்கிறது - புருஷோத்தமனும் ததீயரும் வர்த்திக்கிறதேசமாகையாலே. "அரங்கமாநகர்" என்னுமாபோலே. (உ)

மூ.—அதிர்முகமுடைய வலம்புரிகுமிழ்த்து வழலுமிழாழிகொண் டெறிந்தங், கெதிர்முகவசுரர் தலைகளையிடறு மெம்புருடோத்தமனிருக்கை, சதுமுகன்கையிற் சதுப்புயன்றாளிற் சங்கரன்சடையினிற் றங்கிக், கதிர்முகமணிகொண் டிழிபுனற் கங்கைக் கண்டமென்னுங்கடி நகரே.

ப-ரை.—திருவடிகள் விளக்குகிறபோது, சதுமுகன் - நான்முகனான ப்ரஹ்மாவினுடைய, கையில் - கையிலும், பின்பு, சதுப்புயன் - நான்கு திருத்தோள்களையுடையனான த்ரிவிக்ரமனுடைய, தாளில் - திருவடிகளிலும், பின்பு, சங்கரன் - ருத்ரனுடைய, சடையினில் - ஜடையிலும், தங்கி—, கதிர் - ஒளியையுடைத்தாய், முகம் - சிறந்திருந்துள்ள, மணி - ரத்நங்களை, கொண்டு - கொழித்துக்கொண்டு, இழி - இழிகிற, புனல் - புனலையுடைத்தான, கங்கை - கங்கைக்கரையிலுள்ள, கண்டமென்னும் கடிநகர்—; அதிர் - த்வநியாநின்றுள்ள, முகம் - முகத்தை, உடைய - உடைத்தான, வலம்புரி - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, குமிழ்த்து - திருப்பவளத்திலே வைத்தூதியும், அழல் - நெருப்பை, உமிழ் - உமிழாநின்றுள்ள, ஆழிகொண்டு - திருவாழியைக்கொண்டு, எறிந்து - எறிந்தும், அங்கு - அவ்விடத்திலே, எதிர்-போர்செய்வதாகவெதிர்த்த, முகம்-முகத்தையுடையரான, அசுரர் - அஸுரர்களுடைய, தலைகளை—, இடறும் - உருட்டினவனாய், எம் - ஆச்ரிதரான நமக்கு அடைக்கலமாமவனான, புருடோத்தமன் - புருஷோத்தமனுக்கு, இருக்கை - வாஸஸ்தாநமாம்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (அதிர்முகமுடைய) திருவுலகளந்தருளுகிறபோது (க) நமுசி ப்ரப்ருதிகளான அஸுரர்கள் (உ) ப்ரதிபந்திக்கையாலே த்வநியாநின்றுள்ள முகத்தை யுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலே வைத்தூதி, நெருப்பை யுமிழாநின்றுள்ள திருவாழியைக் கொண்டெறிந்து, அவ்விடத்திலே யுத்தோத்யுக்தராய்க் கொண்டு எதிர்ந்த முகத்தை யுடையரான அஸுரர்களுடைய தலைகளை யுருட்டினவனாய், ஆச்ரிதரான நமக்கு ப்ராப்யபூதனான புருஷோத்தமனுடைய வாஸஸ்தாநம்.

(சதுமுகனித்யாதி) "గృహీత్వా ధర్మపానీయం పాదం నాథస్య తుష్టయే। పూజితం పరయా భక్త్యా పాద్యార్ఘ్యాదిభిరర్చితమ్" "க்ருஹீத்வாயுர்வாநீயம் வாரம் நாயஸ்ய துஷ்டயே। க்ஷாலிதம் வாரயாஸ த்ரு வாத்ராண ப்ராதிஹிர

(க) நமுசி - மஹாபலிபுத்ரன். (உ) ப்ரதிபந்திக்கை - தடுக்கை.

ஸிதழ்" என்கிறபடியே-திருவடிகள் விளக்குகிறபோது, அது சதுர் முகனான ப்ர்ஹ்மாவின் கையிலும், அநந்தரம் விளக்கப்பட்டது சதுர் புஜனான ஸர்வேச்வரன் திருவடிகளிலும், அநந்தரம் "[illegible]" "[illegible]" என்கிறபடியே திருவடிகளினின்றும் விழுகிற வித்தை சிரஸ்ஸாலே தரித்த ருத்ரனுடைய ஜடையிலும் தங்கி. (கதிரித்யாதி) ஒளியை யுடைத்தாய் ச்ரேஷ்டமா யிருக்கிற ரத்நங்களைக் கொழித்துக்கொண்டு இழிகிற புனலை யுடைத்தான கங்கையினுடைய கரையிலே. (கண்டமென்னும் கடிநகரே). (ங)

மூ.—இமையவரிறுமாந் திருந்தரசாள வேற்றுவந்தெதிர்பொரு சேனை, நமபுரநணுகநாந்தகம் விசிறு நம்புருடோத்தம நகர் தான், இமவந்தந்தொடங்கி யிருங்கடலளவு மிருகரை யுலகி ரைத்தாடக், கரையுடைப் பெருமைக் கங்கையின்கரைமேற் கண்டமென்னுங்கடிநகரே.

ப-ரை.—இமவந்தம் தொடங்கி - ஹிமவானுடைய உச்சிதொடங்கி, இரு - பெரிய, கடலளவும் - கடலளவுமுள்ள, உலகு - லோகத்தார், இருகரை - இரண்டுகரையிலும், இரைத்து-ஆரவாரித்துக் கொண்டு, ஆட-நீராட, கரையுடை - அவர்கள்பாபங்களைப் பொறுக்கும்பொறை யுடைமையால் வந்த, பெருமை-பெருமையை யுடைத்தான, கங்கையின் கரைமேல்-கங்காதீரத்திலுள்ள, கண்டமென்னுங் கடிநகர்—; இமையவர்-இந்திரன்முதலிய தேவர்கள், இறுமாந்திருந்து-செருக்கியிருந்து, அரசாள-ராஜ்யம் பண்ணும்படியாக, ஏற்று வந்து-ஏன்றுகொண்டுவந்து, அவர்கள்மேலும் அவர்களுக்கு ரக்ஷகனான தன்மேலும், எதிர்பொரு - எதிர்ந்துபொருகிற, சேனை-சேனையானது, நமபுரம்-யமபுரத்தை, நணுக - கிட்டும்படியாக, நாந்தகம்-ஸ்ரீநந்தகமென்னும் திருக்குற்றுடைவாளை, விசிறும்-வீசாநின்றுள்ள, நம் - நம்முடைய, புருடோத்தமன் - புருஷோத்தமனுக்கு, நகர் - வாஸஸ்தாநமாம்.

வ்யா.—நாலாம்பாட்டு. (இமையவ ரிறுமாந்திருந் தரசாள) இந்த்ராதிதேவர்கள் (க) ப்ரதிபக்ஷபயமற்று மாலையிட்டு மார்வுந் தோளும் பார்த்து கர்வோத்தரராயிருந்து ராஜ்யம் பண்ணும்படியாக. (ஏற்றுவந்தித்யாதி) அவர்கள் ஜீவிக்கிறதுகண்டு பொறுக்க மாட்டாமல் அழியச் செய்வதாக ஏன்றுகொண்டுவந்து, அவர்கள் மேலும் அவர்களுக்கு ரக்ஷகனான தன்மேலும் எதிர்ந்து பொருகிற அஸுரராக்ஷஸ ஸேனையானது. (நமபுரம்நணுக நாந்தகம் விசிறும்) யமபுரத்தை ப்ராபிக்கும்படியாக ஸ்ரீநந்தகமென்கிற திருநாமத்தை யுடைத்தான *கொற்றவொள்வாளை வீசும். (நம்புருடோத்தமநகர் தான்) இப்படி ஆச்ரிதரக்ஷணம் பண்ணும் ஸ்பாவனான நம்முடைய புருஷோத்தமனுடைய நகர்தான்.

(க) ப்ரதிபக்ஷபயம் - பகைவருக்கு அஞ்சுதல்.

(இமவந்தமித்யாதி) (க) ஹிமவானுடைய உச்சிதொடங்கி பெரிய கடலளவும், இரண்டு கரையிலுள்ள லோகத்தாரும் ஆரவாரித்துக்கொண்டு தீர்த்தமாட. (கரையுடைப் பெருமைக் கங்கையின் கரைமேல்) க்ஷமாவத்தையால் வந்த பெருமையை யுடைத்தான கங்காதீரத்தில். அதாவது - ஸர்வலோகரும் பாபக்ஷயார்த்தமாக வந்து தன்னுடைய ஜலத்திலே அவகாஹித்தால் அவையெல்லாவற்றையும் பொறுத்து அவர்களைப் பரிசுத்தராக்கிவிடும் பெருமையைச் சொல்லுகிறது. (கண்டமென்னும் கடிநகரே). (ச)

மு.—உழுவதோர்படையு முலக்கையும்வில்லு மொண்சுடராழியுஞ்சங்கும், மழுவொடுவாளும் படைக்கலமுடைய மால்புருடோத்தமன் வாழ்வு, எழுமையுங்கூடி யீண்டியபாவ மிறைப்பொழு தளவினிலெல்லாங், கழுவிடும்பெருமைக் கங்கையின்கரைமேற் கண்டமென்னுங் கடிநகரே.

ப-ரை.— தன்னுடையஜலத்தில் படிந்தவர்களுடைய, எழுமையும்-ஏழுஜந்மங்களிலும், கூடி—, ஈண்டிய-திரண்ட, பாவமெல்லாம் - பாவங்களையெல்லாம், இறைப்பொழு தளவினில் - க்ஷணகாலத்திலே, கழுவிடும் - கழுவிவிடாநிற்கும், பெருமை - பெருமையையுடைத்தான, கங்கையின்கரைமேல் கண்டமென்னும் கடிநகர்—; உழுவதோர்படையும் - கலப்பையையும், உலக்கையும் - முஸலத்தையும், வில்லும் - ஸ்ரீசார்ங்கத்தையும், ஒண்-அழகிய, சுடர் - தேஜஸ்ஸை யுடைத்தான, ஆழியும் - திருவாழியையும், சங்கும் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், மழுவொடு - கோடரியையும், வாளும் - ஸ்ரீநந்தகத்தையும், படைக்கலம் உடைய - ஆயுதமாகவுடையனாய், மால் - ஸர்வேச்வரனான, புருடோத்தமன் - புருஷோத்தமனுக்கு, வாழ்வு - வாஸஸ்தாநமாம்.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (உழுவதோர்படையும்) கலப்பையும். (உலக்கையும்) முஸலமும். (வில்லும்) ஸ்ரீசார்ங்கமும். (ஒண்சுடராழியும்) அழகிய தேஜஸ்ஸையுடைத்தான திருவாழியும். (சங்கும்) ஸ்ரீபாஞ்சஜந்யமும். (மழுவொடுவாளும்) (உ) பரசுவும், நந்தகமும். (படைக்கலமுடைய) இவற்றை ஆயுதமாகவுடைய. (மால்புருடோத்தமன்வாழ்வு) ஆச்ரிதவிரோதிநிரஸநஸாதநங்களான இவற்றையுடையனான தானே தனக்குப்பெருமையாயிருக்கும் புருஷோத்தமனுக்கு ப்ராப்யமான ஸ்தலம்.

(எழுமையுங்கூடி யீண்டியபாவம்-எல்லாம்)அநேகஜந்மங்கூடித்திரண்ட பாபங்களெல்லாவற்றையும். (இறைப்பொழுதளவினில் - கழுவிடும்பெருமைக் கங்கையின்கரைமேல்) தன்னுடையஜலத்திலே அவகாஹித்தவர்களுக்கு க்ஷணகாலமாத்ரத்திலே கழுவி

---

(க) ஹிமவான் - இமயமலை. (உ) பரசு - கோடரி.

விடாநிற்கும் பெருமையையுடைத்தான கங்கையினுடையகரையி ன்மேல். (கண்டமென்னும்கடிநகரே). (ரு)

மூ.—தலைப்பெய்துகுமுறிச் சலம்பொதிமேகஞ் சலசலபொழிந் திடக்கண்டு,மலைப்பெருங் குடையான் மறைத்தவன் மதுரை மால்புருடோத்தமன் வாழ்வு, அலைப்புடைத்திரைவா யருந் தவமுனிவ ரவபிரதங்குடைந்தாடக், கலப்பைகள் கொழிக் குங் கங்கையின்கரைமேற் கண்டமென்னுங் கடிநகரே.

ப-ரை.—அலைப்புடை - கரையெறியாநின்றுள்ள, திரைவாய் - அலையினிட த்திலே, அரு - அரிய, தவம் - தபஸ்ஸுக்களை யுடையராய், முனிவர் - மநந சீலரா யிருக்கு மவர்கள், பகவதாராதநரூபமான யாகத்தின்முடிவிலே, அவபி ரதம் குடைந்தாட - அவப்ர்தஸ்நாநம் செய்கையாலே, கலப்பைகள் - யாகபூ மியிலுண்டான கலப்பை முதலிய கருவிகளையெல்லாம், கொழிக்கும் - தள்ளிக் கொண்டு போகாநிற்கிற, கங்கையின்கரைமேல் கண்டமென்னும் கடிநகர்—; மேகம் - மேகங்களானவை, சலம் - ஸமுத்ர ஜலத்தை, பொதி - தன்னிடத் தில்பொதிந்துகொண்டு, தலைப்பெய்து - திருவாய்ப்பாடியிலே வந்து கிட்டி, தன் த்வநியைக்கேட்டவர்கள் குடல் குழம்பும்படி, குமுறி - இடித்து முழக்கி, சலசல - சளசளவென்று, பொழிந்திட - வர்ஷிக்க, கண்டு - மேகங்களுடைய பகைமையையும் திருவாய்ப்பாடியிலுள்ளா ரெளிமையையும் கண்டு, மலை - கோவர்த்தந பர்வதமாகிற, பெரு-பெரிய, குடையால் - குடையாலே, மறைத் தவன் - ஒருவர்மேல் ஒருதுளிவிழாதபடி மறைத்தவனாய், மதுரை - ஸ்ரீமதுரை யில், மால் - ஆச்ரிதர்பக்கல் வ்யாமோஹ முடையனாய், புருடோத்தமன் - புருஷோத்தம னானவனுக்கு, வாழ்வு - மிகக் களிப்புற்று வஸிக்கும் தேச மாம்.

வ்யா.—ஆறும்பாட்டு. (தலைப்பெய்தித்யாதி) (சலம்பொதி மேகம் - தலைப்பெய்து குமுறி) இந்த்ரன்ஏவற்படியே ஸமுத்ரம் தறையாம்படி ஜலத்தையெல்லாம் தன்பக்கலிலேபொதிந்துகொண் ட மேகங்களானவை திருவாய்ப்பாடியிலே வந்து கிட்டி, கேட்டவர் கள் குடல்குழம்பும்படி யிடித்து முழங்கி. தலைப்பெய்கை-கிட்டுகை. (சலசலபொழிந்திட)சலசலவென,குடமிட்டுச்சொரிந்தாற்போலே வர்ஷிக்க. சலசலவென்கிறது - அநுகாரத்வநி. (கண்டு) மேகங்க ளினுடைய பகைப்பையும், திருவாய்ப்பாடியிலுள்ளார்எளிமையை யுங்கண்டு. (மலைப்பெருங்குடையால்மறைத்தவன்) மலையாகிறபெரி யகுடையாலே, ஒருதுளி ஒருகல் ஒருஇடி என்கிறவிவை ஒருவர்மே லேவிழாதபடி மறைத்தவன். (மதுரைமால்)விரோதியான கம்ஸனை யழியச்செய்து மாதாபிதாக்கள் சிறையையும் விடுத்து உக்ரஸே நனை யபிஷேகம்பண்ணி அங்கு வர்த்தமாநரானவர்களெல்லாரையும் வாழ்வித்துநோக்கிக்கொண்டுபோரும்படி திருவவதரித்ததேசமான ஸ்ரீமதுரையில் வ்யாமோஹத்தையுடையவன். (புருடோத்தமன்வா ழ்வு)இப்படி தான்வளர்ந்தவிடத்தோடு பிறந்தவிடத்தோடு வாசியற

இரண்டிடத்திலுள்ளாரையும் ரக்ஷித்தருளின ஏற்றத்தையுடையனான புருஷோத்தமனுக்கு நிரதிசயபோக்யமான தேசம்.

(அலைப்புடைத்திரைவாய்) அலைக்கிறதிரையிடத்திலே. (அருந்தவமுனிவர்) அரியதபஸ்ஸுக்களையுடையராய் பகவந்மநநசீலராயிருக்குமவர்கள். (அவபிரதம்குடைந்தாட) பகவத்ஸமாராதநரூபங்களானயாகங்களை (க) அவிகலமாக அநுஷ்டித்து, அதினுடைய (உ) சரமதிவஸத்திலே அவப்ர்தஸ்நாநஞ்செய்ய. (கலப்பைகள்கொழிக்கும்) அநந்தரம் பெருக்காறாய் யாகபூமியிலுண்டான கலப்பை முதலான (ங) உபகரணங்களெல்லாவற்றையும் எடுத்துத் தள்ளிக்கொண்டு போகாநிற்கிற. (கங்கையின்கரைமேல் கண்டமென்னும்கடிநகரே). (சா)

மூ.—விற்பிடித்திறுத்து வேழத்தைமுறுக்கி மேலிருந்தவன்றலைசாடி, மற்பொருதெழப்பாய்ந் தரையனையுதைத்த மால்புருடோத்தமன் வாழ்வு, அற்புதமுடைய வைராவதமதமு மவரிளம்படியரொண் சாந்தும், கற்பகமலருங் கலந்திழிகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே.

ப - ரை.—அற்புதமுடைய - யாவரும் ஆச்சரியப்படத்தக்கதான, ஐராவதம்-ஐராவதமென்னும் யானையுடைய, மதமும் - மதஜலமும், அவர் - பொன்னுலகத்தவர் ஆசைப்படத்தக்கவர்களாய், இளம்படியர் - அந்தப்பதமுள்ளவளவும் யௌவநப்பருவம் குலையாத தேவஸ்த்ரீகள் அணியும், ஒண் - சிறந்த, சாந்தும் - சந்தநமும், கற்பகமலரும் - அவர்கள்குழலில்சொருகின கற்பகப்பூக்களும், கலந்து - சேர்ந்து, இழி - இழியாநின்றுள்ள, கங்கைக்கண்டமென்னும் கடிநகர்—; கம்ஸன் மிகவும் ஆசையுறத்தக்கதான, வில் - வில்லை, பிடித்து—, இறுத்து - முறித்தும், அவனது க்ரஹத்தின்வாயிலிலேநின்ற, வேழத்தை - குவலயாபீடத்தினுடையகொம்பை, முறுக்கி-முறித்தும், மேலிருந்தவன் - யானைப்பாகனுடைய, தலை - தலையை, சாடி - அந்தக்கொம்பாலே சிதறவடித்தும், மல்-சாணூரமுஷ்டிகராகிற மல்லருடல்கள் நெரியும்படி, பொருது - அவர்களுடன் போர்செய்தும், அரையனை - உயர்ந்தகட்டிலிலிருக்கிற ராஜாவான கம்ஸனை, மயிரைப்பிடித்திழுத்துக் கீழேதள்ளி, எழப்பாய்ந்து - அவன்மேலே குதித்து, உதைத்த - திருவடிகளாலே யுதைத்தும், இவற்றால்வந்த, மால் - பெருமையை யுடையனான, புருடோத்தமன் - புருஷோத்தமனுக்கு, வாழ்வு - அபிமதமானதேசமாம்.

வ்யா—ஏழாம்பாட்டு. (விற்பிடித்திறுத்து) கம்ஸன் "வில்விழவுக்கு" என்று (ச) உறவிலே அழைத்துவிட, தானும் அதுக்கென்னப்போகிறானாய் மதுரையிலேசென்று அவனுடைய ஆயுதசாலையிலேபுக்கு அவனுக்கு (ரு) அபிமதமானவில்லைப்பிடித்து முறித்து. (வேழத்தைமுறுக்கி) அநந்தரம் "புகுவாய்நின்றபோதகம்" என்கிற

(க) அவிகலமாக - குறைவின்றி. (உ) சரமதிவஸம் - கடைசிநாள். (ங) உபகரணம் - கருவி. (ச) உறவு - ஸ்நேஹம். (ரு) அபிமதம்-இஷ்டம்.

படியே - அவனுடைய (க) க்ர்ஹத்வாரத்திலேநின்று தன்மேலே யடர்த்துவந்த (உ) மத்தகஜமான குவலயாபீடத்தை ச்ர்ங்கபங்கம் பண்ணி. (மேலிருந்தவன்தலைசாடி) கொம்புமுறிந்து தளர்ந்து விழுந்தத்தை சிக்ஷாபலத்தாலேயெழுப்பி அதின்மேலேயிருந்து நடத்திக்கொடுவந்த பாகனுடையதலையை அந்த ஆனைக்கொம்பாலே சிதறவடித்து. (மற்பொருது) ஆனையின்கொம்பையும் கையிலே கொண்டு உள்ளே புகுந்தவளவிலே அந்தச்செருக்குப் பொறுமல் வந்தெதிர்ந்த சாணூரமுஷ்டிகரான மல்லருடல்கள் நெரிந்துவிழும்படியாக அவர்களோடேபொருது. (எழப்பாய்ந்தரையனை யுதைத்த) அநந்தரம், கம்ஸனிருக்கிற மஞ்சத்தின் முற்றவெளியிலே சென்று "తుఙ్గమఞ్చవ్యవస్థితః" "துங்கமஞ்சஸ்திதம்" என்கிறபடியே உயர்ந்தமஞ்சத்திலேயிருக்கிற வவனைக்கண்டு, அவனிருக்கிறவிடத்திலே கிளரக்குதித்து, ராஜாவாய்க்கொண்டு அபிஷேகமும்தானுமாயிருக்கிறவனை, "కేశేష్వాకృష్య విగళత్ కిరీటమవనీతలే । సకంసంపాతయామాస తస్యోపరిపపాతచ" "கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத் கிரீடமவநீதலே । ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாதச" என்கிறபடியே - அபிஷேகத்தைத்தட்டிப் பொகட்டு மயிரைப் பிடித்திழுத்து மஞ்சத்துக்குக்கீழேதள்ளி அவன்மேலே குதித்துத் திருவடிகளாலே யுதைத்த. (மால்புருடோத்தமன்வாழ்வு) இப்படி ஆஸுரப்ரக்ர்தியான கம்ஸனை நிரஸித்த பெருமையையுடையனான புருஷோத்தமனுக்கு அபிமதமானதேசம்.

(அற்புதமுடைய ஐராவதமதமும்) ஆச்சர்யமான ரூபசேஷ்டிதாதிகளையுடைய ஐராவதத்தினுடைய மதஜலமும். (அவரிளம்படியரொண்சாந்தும்) ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்கு அபிமதைகளாய், அந்தப்பதமுள்ளவளவும் யௌவநம் குலையாத வடிவையுடையரான தேவஸ்த்ரீகள் தங்களுக்கு அலங்காரமாகவணிந்த சாந்தும். (கற்பகமலரும்) அவர்கள்குழலில் சொருகின கற்பகப்பூக்களும். (கலந்திழிகங்கை) இவற்றையெல்லாம் சேர்த்துக்கொண்டு இழியாநிற்கிற கங்கையினுடைய கரைமேல். (கண்டமென்னும்கடிநகரே). (எ)

மூ.—திரைபொரு கடல்சூழ் திண்மதிட்டுவரைவேந்து தன்மைத்துனன்மார்க்காய், அரசனையவிய வரசினையருளு மரிபுருடோத்தமனமர்வு, நிரைநிரையாக நெடியன யூப நிரந்தரமொழுக்குவிட் டிரண்டு, கரைபுரைவேள்விப் புகைகமழ் கங்கைக் கண்டமென்னுங்கடி நகரே.

---

(க) க்ரஹத்வாரம் - வீட்டுவாசல். (உ) மத்தகஜம் - மதித்தயானை.

ப-ரை.— பசுக்கள் கட்டப்படுகிறனவாய், நிரைநிரையாக - ஒழுங்காய், நெடியன-நெடியனவா யிருந்துள்ள, யூபம்-யூபஸ்தம்பங்களானவை, நிரந்தரம்-இடைவிடாமல், ஒழுக்குவிட்டு-நெடுகச்சென்றிருப்பதாய், வேள்விப்புகை-யாகதூமமானது, இரண்டு கரைபுரை-இரண்டுகரையுமொத்து, கமழ்-கந்தியாநின்றுள்ள, கங்கைக் கண்டமென்னுங் கடிநகர்—; திரைபொரு - அலையெறியாநின்றுள்ள, கடல் - கடலாலே, சூழ் - சூழப்பட்டிருப்பதாய், திண் - திண்ணிதான, மதிள் - மதிளையுடைத்தாயிருக்கிற, துவரை - ஸ்ரீமத்த்வாரகைக்கு, வேந்து-அரசனான கண்ணன், தன் மைத்துனன்மார்க்கு - தன் மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு, ஆய் - பக்ஷபாதியாய் நின்று, அரசனை-துர்யோதநன் முதலிய அரசர்களை, அவிய - அழியச்செய்து, அரசினை - ராஜ்யத்தை, அருளும்- பாண்டவர்களுக்குக் கொடுத்தருளுமவனாய், அரி - நினைத்தவர்களுடைய பாவங்களையெல்லாம் போக்குமவனான, புருடோத்தமன் - புருஷோத்தமனானவன், அமர்வு - பொருந்தி வர்த்திக்கும் ஸ்தலமாம்.

வ்யா.—எட்டாம்பாட்டு. (திரைபொருகடல்சூழ் திண்மதிள் துவரைவேந்து) கடலைச் (க) செறுத்துப் படைவீடுசெய்ததாகையாலே திரைபொருகடலாலே சூழப்பட்டிருப்பதாய், திண்ணியதான மதிளையுடைத்தா யிருக்கிற ஸ்ரீமத்த்வாரகைக்கு ராஜாவானவன். * வண்டுவராபதி மன்னனிறே. (தன் மைத்துனன்மார்க்காய்) "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:" "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:" என்கிறபடியே தன்னையேதங்களுக்கு ஆச்ரயமும் பலமும் நாதனுமாகப் பற்றியிருக்கிற தன் மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு பக்ஷபாதியாய் நின்று. (அரசனையவிய அரசினையருளும்) * பொய்ச்சூதிலே (உ) அவர்களைத் தோற்பித்து அவர்கள்ராஜ்யத்தைத் தாங்கள் பறித்துக்கொண்டு, பத்தூர் ஒரூர் கொடுக்கச் சொன்னவிடத்திலும் கொடோமென்று தாங்களே அடைய புஜிப்பதாக விருந்த துர்யோதநாதி ராஜாக்கள் விளக்குப்பிணம்போலே விழுந்து போகப்பண்ணி ராஜ்யத்தைப் பாண்டவர்களுக்குக் கொடுத்தருளும். (அரிபுருடோத்தமன் அமர்வு) "ஸம்ஸ்ம்ருதஸ் ஸர்வபாபக்நம் ஹரிஸ் த்வாம் புருஷோத்தம:" "ஸஹஸ்ரநாமஸ்ம்ருதிமாத்ர ஸர்வபாபஹரம் ஹரி:" என்று (ங) ஆபத்தசையிலே (ச) ஸ்மரிக்கப்படுமவனாக ஸ்ரீவஸிஷ்டபகவானாலே த்ரௌபதிக்குச் சொல்லப்பட்டவனாய், "ஹரிர்ஹரதி பாபாநி துஷ்டசித்தைரபி ஸ்ம்ருத:" "ஹரிர்ஹரதிபாபாநி துஷ்டசித்தைரபிஸ்ம்ருத:" என்கிறபடியே ஸ்மரித்தவர்களுடைய ஸகலபாபங்களையும் போக்குமவனான புருஷோத்தமன் பொருந்திவர்த்திக்கிற ஸ்தலம்.

---

(க) செறுத்து - அணைகட்டி. (உ) அவர்களை - பாண்டவர்களை. (ங) ஆபத்தசை - ஆபத்துவந்தகாலம். (ச) ஸ்மரித்தல் - நினைத்தல்.

(நிரைநிரையாக நெடியனயூபம்) ஓரொழுங்காய்க் கொண்டு நெடியதாயிருந்துள்ள, பசுக்கள் (க) பந்திக்கிற (உ) யூபங்களானவை. (நிரந்தரமொழுக்குவிட்டு) இடைவிடாமல் நெடுகச்சென்றிருப்பதாய். (இரண்டுகரைபுரை வேள்விப்புகைகமழ் கங்கை) இருகரையுமொத்து யாக (ஙு) தூமம் கந்தியாநிற்கிற கங்கையினுடைய கரையில். (கண்டமென்னும் கடிநகரே.) (அ).

மூ.—வடதிசைமதுரை சாளக்கிராமம் வைகுந்தந் துவரையயோத்தி, இடமுடைவதரி யிடவகையுடையவெம் புருடோத்தமனிருக்கை, தடவரையதிரத் தரணிவிண்டிடியத் தலைப்பற்றிக் கரைமரஞ்சாடிக், கடலினைக் கலங்கக்கடுத்திழி கங்கைக்கண்டமென்னுங் கடிநகரே.

ப-ரை.—உயர்ந்த நிலத்தில் நின்றும் வந்து இழிகிறவேகத்தாலே, தடவரை - மந்தரம்முதலிய பெரிய மலைகளானவை, அதிர - சலிக்கவும், தரணி - பூமியானது, விண்டு—, இடிய - இடிந்துவிழவும், தலைப்பற்றி-மரங்களினுடைய தலையளவும் செல்லக் கிளம்பி, கரை - கரையில்நிற்கிற, மரம் - மரங்களை, சாடி - மோதிமுறித்தும், கடல்-ஒன்றாலும்கலங்காத கடலுங்கூட, கலங்க - கலங்கும்படி, கடுத்து - வேகமாய்க்கொண்டு, இழி - இழியாநின்றுள்ள, கங்கை - கங்கைக்கரைமே லிருக்கிற, கண்டமென்னும் கடிநகர்—; வடதிசை - வடதிசையிலுள்ள, மதுரை - மதுரையும், சாளக்கிராமம் - ஸாளக்ராமமும், வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டமும், துவரை - ஸ்ரீமத்த்வாரகையும், அயோத்தி - அயோத்யையும், இடமுடை - இடமுடைத்தாயிருந்துள்ள, வதரி - ஸ்ரீபதரிகாச்ரமமுமாகிய இவற்றை, இடவகையுடைய - வாஸஸ்தாநமாக வுடையனும், எம் - எமக்கு ஸ்வாமியான, புருடோத்தமன் - புருஷோத்தமனுடைய, இருக்கை - இருப்பிடமாம்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வடதிசைமதுரை) வடக்குதிக்கில் மதுரை. தென்திசைமதுரை உண்டாகையாலே (ச) விசேஷிக்கிறது. (சாளக்கிராமம்) புண்யக்ஷேத்ரங்களில் ப்ரதாநமாக எண்ணப்படும் ஸ்ரீஸாளக்ராமம். (வைகுந்தம்) (ரு) அப்ராக்ர்தமாய் நித்யவாஸஸ்தலமான ஸ்ரீமத்வைகுண்டம். (துவரை) * பதினாறுமாயிரவர்தேவிமார்பணிசெய்ய மணவாளராய் வீற்றிருந்த ஸ்ரீமத்த்வாரகை. (அயோத்தி) "அயோத்திநகர்க் கதிபதி" என்கிறபடியே ராமாவதாரஸ்தலமாய் (சு) அத்யந்தாபிமதமா யிருந்துள்ள திருஅயோத்யை. (இடமுடைவதரி) நரநாராயணரூபியாய்க் கொண்டு திருமந்த்ரத்தை வெளியிட்டருளி உகப்புடனே யெழுந்தருளியிருக்கும் ஸ்தலமாய், இடமுடைத்தா யிருந்துள்ள ஸ்ரீபதரி. (இட

(க) பந்திக்கிற - கட்டுகிற. (உ) யூபம் - யாகபட்டகூவைக்கட்டும்தறி. (ஙு) தூமம் - புகை. (ச) விசேஷித்தல - அடைமொழிகொடுத்தல். (ரு) அப்ராக்ர்தம் - சிறந்தது. (சு) அத்யந்தாபிமதம் - மிகவிருப்புறத்தக்கது.

வகையுடைய) இவற்றை வாஸஸ்தாநமாக வுடையனை. (எம்புருடோத்தமனிருக்கை) ஆச்ரிதரான நமக்கு இனியனை புருடோத்தமனுடைய இருப்பிடம்.

(தடவரையித்யாதி) பகீரதன் தபோபலத்தாலே இறக்கிக்கொடுவருகிறபோது வந்திழிகிற (க) வேகத்தைச் சொல்லுகிறது.

(தடவரையதிர) உயர்ந்த நிலத்தில் நின்றும் வந்திழிகிற வேகத்தாலே மந்தராதிகளான பெரிய மலைகள் சலிக்கும்படியாக. (தரணிவிண்டிடிய) பர்வதத்தில்நின்றும்பூமியிலே குதிக்கிற வளவில் பூமி விண்டு இடிந்துவிழ. (தலைப்பற்றிக்கரைமரஞ்சாடி) வ்ர்க்ஷங்களினுடைய தலையளவும் செல்லக் கிளம்பி, கரையில் நிற்கிறமரங்களை மோதிமுறித்து. (கடலினைக் கலங்கக்கடுத்திழி கங்கைக்கண்டமென்னும் கடிநகரே) ஒன்றாலும் கலங்காத கடலும் கலங்கும்படி வேகித்துக்கொண்டு இழியாநின்ற கங்கையினுடைய கரைமேலே, (கண்டமென்னுங் கடிநகரே.) (௬)

மூ.— மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி மூன்றெழுத்தை, என்றுகொண்டிருப்பார்க் கிரக்கநன்குடைய வெம்புருடோத்தமனிருக்கை, மூன்றடிநிமிர்த்து மூன்றினிற்றோன்றி மூன்றினில் மூன்றுருவானான், கான்றடம்பொழில்சூழ் கங்கையின் கரைமேற் கண்டமென்னுங் கடிநகரே.

ப-ரை.—கான் - நன்றாற்றம்கமழா நின்றுள்ள, தடம் - பெரிய, பொழில் - பொழில்களாலே, சூழ் - சூழப்பட்டிருப்பதாய், கங்கையின்கரைமேல் - கங்காதீரத்திலுள்ளதான, கண்டமென்னும் கடிநகர் —; மூன்றடிநிமிர்த்து - திருமந்த்ரத்தை மூன்றுபாதமாக வளர்த்து, மூன்றினில்-அந்தமூன்றுபாதத்திலும், அநந்யார்ஹசேஷத்வம் அநந்யசரணத்வம் அநந்யபோக்யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும், தோன்றி - தோன்றுவித்து, மூன்றினில்-சேதநனுடைய ஆகாரத்ரயத்தையும், மூன்றுருவானான் - சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயத்தையுமுடையனானவனாய், மூன்றெழுத்ததனை - அகார உகார மகாரங்களாகிய மூன்றெழுத்துக்களை, மூன்றெழுத்ததனால் - "நிருக்தம்" என்னும் பேரையுடைய மூன்றக்ஷரத்தாலே, மூன்றெழுத்தாக்கி - மூன்றர்த்தத்துக்கு வாசகமாயிருக்கும் மூன்றெழுத்தாகப் பிரித்து, மூன்றெழுத்தை - அந்த மூன்றெழுத்தையும், என்றுகொண்டிருப்பார்க்கு - "நமக்குத்தஞ்சம்" என்றுதங்கள்நெஞ்சிலே தரிக்குமவர்களுக்கு, நன்கு இரக்கமுடைய - தன்பேறாகச் செய்யும் தயையுடையனாய், எம் - எனக்குஸ்வாமியான, புருடோத்தமன் - புருஷோத்தமனுக்கு, இருக்கை - வாஸஸ்தாநமாம்.

வ்யா.—பத்தாம்பாட்டு. (மூன்றெழுத்ததனை) "[illegible] ஸஹஸ்ரசீர்ஷா புருஷ:" இத்யாதிப்படியே வேத

(க) வேகம் - விசை,

த்ரயத்தினின்றும் வ்யாஹ்ர்தித்ரயத்தையும் தோன்றுவித்து, பரிசுத்தமான வ்யாஹ்ர்தித்ரயத்தையும் ஸ்வஸங்கல்பத்தாலே பொன்ஓடவைக்குமாபோலே ஓடவைத்து, அந்த வ்யாஹ்ர்தி த்ரயத்தினின்றும் அகார உகார மகாரங்களாகிற அக்ஷரத்ரயத்தையும் ஸம்ஹிதாகாரத்தாலே "ஓம்" என்று ஏகாக்ஷர மாக்கப்பட்டதாகையாலே அக்ஷரத்ரயாத்மகமா யிருக்கிற அந்த ப்ரணவத்தை. "அதனை" என்றது - அதினுடைய கௌரவத்தைப்பற்ற. "𑌤𑌦𑍇𑌤𑌤𑍍 𑌤𑍍𑌰𑍍𑌯𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍍𑌰𑌯𑍋 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾𑌃 । 𑌸 𑌗𑍁𑌹𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑍃𑌦𑍍𑌵𑍇𑌦𑍋 𑌯𑌸𑍍𑌤𑌂 𑌵𑍇𑌦 𑌸 𑌵𑍇𑌦𑌵𑌿𑌤𑍍" "ருஜுஸாமத்ரயாக்ஷரப்ரஹ்ம த்ரயீயஸ்மிந்ப்ரதிஷ்டிதா । ஸஹ்ருஹ்யாந்யஸ்த்ரிவ்ருத்வேதோ யஸ்தம்வேதஸவேதவித்" என்னும்படியிறே இதினுடையவைபவம். (மூன்றெழுத்ததனால்)பதஸமதிகமஹேதுவாய் "நிருக்தம்" என்று மூன்று அக்ஷரமானபேரையுடைத்தாயிருக்கிறவதினாலே. (மூன்றெழுத்தாக்கி) ப்ரக்ரியைபண்ணும் க்ரமத்தாலே ப்ரக்ரியை பண்ணி, மூன்று பதமாய் மூன்றர்த்தத்துக்கு வாசகமா யிருக்கும் மூன்றெழுத்தாகப் பிரித்து. ப்ரணவந்தான் ஸம்ஹிதாகாரத்தாலே மூன்றக்ஷரமாய் மூன்றுபதமாய் மூன்றர்த்த ப்ரதிபாதகமாயிறே யிருப்பது. (மூன்றெழுத்தை யேன்றுகொண்டிருப்பார்க்கு) அந்த மூன்றெழுத்தையும், நமக்குத் தஞ்சமான அர்த்தத்தை ப்ரதிபாதிக்கிற தாகையாலே நமக்கு உத்தேச்யம் என்று தங்கள் நெஞ்சிலே தரிக்குமவர்களுக்கு. அதாவது - அகாரமானது ஸ்வரூபேணவும் தாது நிஷ்பந்நரூபேணவும் ப்ரத்யயவேஷேணவும் - ஈச்வரனுடைய காரணத்வ ரக்ஷகத்வ சேஷித்வங்களையும், அர்த்த பலத்தாலே-ஸ்ரீயபதித்வத்தையும் ஏவம்பூதனான ஈச்வர விஷயத்தில் சேதநனுடைய சேஷத்வத்தையும் ப்ரதி பாதிக்கையாலும், உகாரமானது அவதாரணவாசகமாய்க் கொண்டு அந்த சேஷித்வத்தினுடைய அநந்யார்ஹதையை ப்ரதிபாதிக்கையாலும், மகாரமானது "𑌮𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇" "மந ஜ்ஞாநே" என்கிற தாதுவிலே நிஷ்பந்நமாய்க்கொண்டு ஜ்ஞாநவாசியுமாய், அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு ஆச்ரயமான ஆத்மாவினுடைய தேஹாதிரிக்தாதிகளை ப்ரதிபாதிக்கையாலும், அக்ஷரத்ரயமும் நமக்குத் தஞ்சமான அர்த்தத்தையே சொல்லுகிறதென்று தங்கள் நெஞ்சில் எப்போதும் அநுஸந்தித்திருக்கை. (இரக்கம் நன்குடையவெம் புருடோத்தமனிருக்கை) இவர்களளவிலே தன்பேறாக க்ருபை பண்ணுமவனாய் எனக்கு ஸ்வாமியான புருஷோத்தமனுடையவாஸஸ்தாநம்.

(மூன்றடி நிமிர்த்து) இந்த ப்ரணவந்தான் "𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌗𑍍𑌰𑍇 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌤𑍍" "ஓமிதி த்ரிர்வ்யாஹரேச்" என்கிறபடியே பதத்ரயாத்மகமா

ன திருமந்த்ரத்தில் ப்ரதமபதமாகையாலே இத்தோடே-கூட மேலி ரண்டு பதத்தையுங் கூட்டி மூன்று பாதமாக வளர்த்து. (மூன்றி னிற்றோன்றி) அந்த மூன்று பாதத்திலும் ஆத்மாவினுடைய அநந்யார்ஹசேஷத்வம் அநந்யசரணத்வம் அநந்யபோக்யத்வமாகிற ஆகார த்ரயத்தையும் தோன்றுவித்து. "தோன்றி" என்றது - தோன்றுவித்து என்றபடி. (மூன்றினில் மூன்றுருவானுன்) பதத்ரய ப்ரதிபாத்யனான சேதநனுடைய ஆகாரத்ரயமும் விஷயமாக தத் ப்ரதிஸம்பந்திதயா, தானும் சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்க ளாகிற ஆகாரத்ரயத்தையுமுடையனானவன். இம்மந்த்ரத்தை பத த்ரயாத்மகமாய் சேதநனுடைய ஆகாரத்ரயத்தையும் தன்னுடைய ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கும்படி அவன் அடியிலே உண்டா க்கி வைத்தான். ஈச்வரனுகையாலே இவையெல்லாவற்றையும் அவ ன் செயலாக வருளிச் செய்கிறுர். (கான்றடம் பொழில்சூழ் கங்கை யின் கரைமேல்) "கான்" என்று-நாற்றம். தடம்என்று-பெருமை. நறுநாற்றத்தை யுடைய பெரிய பொழில்களாலே சூழப்பட்டிருப்ப தாய், கங்கையினுடைய கரையிலேயான. (கண்டமென்னும் கடி நகரே.) (கo)

அ.—நிகமத்தில், இத்திருமொழி கற்றூர்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறுர்.

மூ.—பொங்கொலி கங்கைக்கரைமலி கண்டத்துறைபுருடோத்தம னடிமேல், வெங்கலிநலியா வில்லிபுத்தூர்க்கோன் விட்டுசி த்தன் விருப்புற்றுத், தங்கியவன்பாற் செய் தமிழ்மாலை தங்கிய நாவுடையார்க்குக், கங்கையிற்றிருமால் கழலிணைக் கீழே குளித்திருந்த கணக்காமே.

ப-ரை.—பொங்கு - ஜலத்தினுடைய கொழிப்பால்வந்த கிளர்த்தியையும், ஒலி - கோஷத்தையு முடைத்தான, கங்கைக்கரை - கங்கையினுடைய கரையி லேயாய், மலி - எல்லாப்படியாலுமுண்டான ஏற்றத்தையுடைத்தா யிருக்கிற, கண்டத்து - திருக்கண்டங்கடி நகரிலே, உறை - நித்யவாஸம்பண்ணுகிற, புரு டோத்தமன் - புருஷோத்தமனுடைய, அடிமேல் - திருவடிகளிலே, வெம்- கொடிய, கலி - கலியுகத்தால்வந்த, நலியா - நலிவென்பதொன்றில்லாத, வில் லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, கோன் - நிர்வாஹகரான, விட்டுசித்தன் - பெரியாழ்வார், விருப்புற்று - ஆசைப்பட்டு, தங்கிய - நிலைநின்ற, அன்பால் - அன்பினலே, செய் - செய்த, தமிழ்மாலை - தமிழ்த்தொடையானவிது, தங்கிய - ஒருகாலும் நீங்காதிருக்கிற, நாவுடையார்க்கு - நாவையுடையவர்களுக்கு, கங் கையில் - கங்காநதியிலே, குளித்து-நீராடி, திருமால்-ஸ்ரியப்பதியுடைய, இணை- ஒன்றுக்கொன் றுெட்டான, கழல்கீழ் - திருவடிகளின்கீழே, இருந்த கணக்காம்- நிரந்தரஸேவை பண்ணியிருந்ததோடு ப்ரயோஜந மொக்கும்.

வ்ரா.—(பொங்கித்யாதி) ஜலத்தினுடைய கொழிப்பால் வந்த கீர்த்தியையும் (க) கோஷத்தையு முடைத்தான கங்கையினுடைய கரையிலேயாய், ஸர்வ ப்ரகாரத்தாலுமுண்டான ஏற்றத்தையுடைத்தா யிருக்கிற திருக்கண்டங் கடிநகரிலே நித்யவாஸம் பண்ணுகிற புருஷோத்தமனுடைய திருவடிகளிலே. (வெங்கலி நலியா வில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன் விருப்புற்று) விபரீதஜ்ஞாநாதிகளை ஜநிப்பிக்கும் க்ரூரமான கலியுகத்தால் வந்த நலிவென்பதொன்றில்லாத ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் ஆசைப்பட்டு. (தங்கியவன்பால்செய் தமிழ்மாலை) நிலைநின்ற ப்ரேமத்தாலே செய்த தமிழ்த்தொடையானவிது. (தங்கியநாவுடையார்க்கு) ஒருகாலும் நீங்காதே வர்த்திக்கும்படியான நாவையுடையவர்களுக்கு. அதாவது - எப்போதும் இத்தையே சொல்லிக்கொண்டு திரியுமவர்களுக் கென்கை. (கங்கையிலித்யாதி) (கங்கையில்-குளித்து-திருமால் கழலிணைக்கீழே-இருந்த கணக்காமே) அதாவது - இத்திருமொழி தங்கின நாவுடையவர்களுக்கு ஏதேனுமோரிடத்திலே இருந்தாலும்,ஸர்வேச்வரன் திருவடிகளில் பிறப்பால் வந்த ஏற்றத்தையுடைய கங்கையிலே ஸ்நாநம்பண்ணி, திருக்கண்டங் கடிநகரிலே எழுந்தருளி யிருக்கிற ஸ்ரீயஃபதியானவன்திருவடிகளின் கீழே நிரந்தர ஸேவைபண்ணி யிருந்தத்தோடு ப்ரயோஜநமொக்கு மென்கை. பகவத்ப்ரீதியிறே அதுக்கு ப்ரயோஜநம்; அது இவர்களுக்கு மொக்குமென்றதாய்த்து. (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—தங்கை சலமதிர் இமையவருழுதலே வில்திரை வடமூன்றுபொங்கு மாதவத்தோன்.

---

ஆ திருமொழி ௩எ-க்கு, பாட்டு-௩அக.

---

அ.— "போகத்துவழுவாத புதுவையர்கோன்" என்கிறபடியே திருவவதார ஸமயமே துடங்கி க்ர்ஷ்ணாவதார குணசேஷ்டிதங்களையெல்லாம் முற்றூட்டாக வநுபவித்துக்கொண்டு வந்த விவர், *என்னுதல் தேவியிலே அந்தக்ர்ஷ்ணாவதார சேஷ்டிதங்களோடே ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும் அநுபவிக்கையி லுண்டான வாசையாலே இரண்டையும் ஒன்றுக் கொன்று எதிராக்கிப்பேசி நின்று அநுபவித்து, பின்பு *சதிராயிர மிரவியிலே 'ராமக்ர்ஷ்ணாவ

---

(க) கோஷம் - சப்தம்.

தாரகுண சேஷ்டிதங்களையும் அவதாராந்தர குண சேஷ்டிதங்களை யும் கலப்பிலேயநுபவித்தவநந்தரம் இவ்வவதார குண சேஷ்டிதங்க ளெல்லாம் ப்ரகாசிக்கும்படி உகந்தருளின நிலங்களிலே எழுந்தரு ளிநிற்கிற நிலைகளை யநுபவிக்க வேணுமென்னுமாசை பிறந்து, (க) ப்ரதமம், ராமக்ருஷ்ணாத்யவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் (உ) ப்ரகாசிக்கும்படி திருமலையிலே யெழுந்தருளிநிற்கிற அழகரை யும், அவரிலுங் காட்டில் ப்ராப்யத்தில் சரமாவதியான திருமலையா ழ்வாரையு மநுபவித்து, பின்பு திருக்கோட்டியூரிலே நிறகிறநிலை யையும் அநுபவிக்கையிலே (ங) ப்ரவ்ருத்தரான விவர்; அங்கேயெ ழுந்தருளி நிற்கிற நிலையில் தங்களுக்கு ஆதரணீய மன்றிக்கே அந்ய பரராய்த்திரிகிற ஸம்ஸாரிகளை நிந்தித்தும், அந்நிலையின்வாசியறிந்து (ச) ப்ரவணரா யநுபவிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை (ரு) ச்லாகித்தும், இப்படி யிருந்துள்ள செருக்கோடே கூடி யநுபவித்து, தாம்நிந்தித் தவர்களையும் விடமாட்டாத பரமக்ருபையாலே அவர்களைக்குறித்து இரண்டு திருமொழியாலே பரோபதேசத்தைப் பண்ணி, மீளவும் உகந்தருளின நிலங்களிலே நிற்கிற நிலையை யநுபவிக்கையிலுள்ள வாசையாலே "வடதிசை மதுரை" இத்யாதிப்படியே அநேக தேச த்திலுண்டான விருப்பத்தையெல்லாம் பண்ணிக்கொண்டு திருக் கண்டங்கடி நகரிலே அவதாரகுண (சு) சேஷ்டிதங்கள் எல்லாம் ப்ரகாசிக்கும்படி எழுந்தருளி நிற்கிறபடியையும், அத்தேசவைபவந் தன்னையும் அநுபவித்து இனியராய் நின்றார் - கீழ்: அவையெல் லாம்போலன்றிக்கே, "வடிவுடை வானோர்தலைவனே" என்றும், "கடலிடங்கொண்ட கடல்வண்ணா" என்றும், "கட்கிலீ" என்றும், "காகுத்தா கண்ணனே" என்றும் சொல்லுகிறபடியே - பரத்வாதி களிலுண்டான குணங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி வர்த்திக்கிற ஸ்தலமாய், "பொங்கோதஞ் சூழ்ந்தபுவனியும்" இத்யாதிப்படியே- உபயவிபூதியையும் தனிக்கோல் செலுத்துகிறதும் இங்கேயிருந்தே என்றுதோற்றும்படி யிருப்பதாய், "மாலிருஞ்சோலை மணாளர் பள்ளிகொள்ளுமிடம்" என்றும், "பொன்னிசூழரங்கநகருள் முனை வன்திருமாலிருஞ்சோலைநின்றான்" என்றும், "பயின்றதரங்கம் திரு க்கோட்டி" "தேனார் திருவரங்கம் தென்கோட்டி" என்றும் சொ ல்லுகிறபடியே - முன்பு அநுபவித்த திருமலை திருக்கோட்டியூரில் நிலைகளுக்கு வேர்ப்பற்றான விடமுமாய், "ஆராமஞ்சூழ்ந்த வரங் கம்" என்கிறபடியே-உகந்தருளின நிலங்களெல்லாம் (எ) பகலிரு

---

(க) ப்ரதமம் - முதலில். (உ) ப்ரகாசிக்கும்படி - விளங்கும்படி. (ங) ப்ரவ்ருத்தரான - புகுந்த. (ச) ப்ரவணராய் - அன்புடையராய். (ரு) ச்லா கித்தும் - புகழ்ந்தும். (சு) சேஷ்டிதங்கள் - செய்கைகள். (எ) பகலிருக் கை - பகலில்வஸிக்குமிடம்.

க்கை யென்னும்படி ஆச்ரிதரக்ஷணத்துக்கு ஏகாந்தமான விடமென்று நித்யவாஸம் பண்ணுகிற ஸ்தலமான * திருவரங்கந்திருப்பதியிலே; "வன்பெருவானகம்" இத்யாதிப்படியே - ஸகல தேசத்திலுள்ளாரும் உஜ்ஜீவிக்கும்படியாகவும், "தென்னாடும் வடநாடும் தொழநின்ற" என்றும், "யாவரும் வந்தடிவணங்க" என்றும் சொல்லுகிறபடியே-ஸகல தேசத்திலும் ருசிபிறந்தவர்களெல்லாரும் வந்து அநுபவிக்கும்படியாகவும் ஆச்ரயிக்கும்படியாகவும், "அன்பொடு தென்திசைநோக்கி" என்கிறபடியே * மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண் வைத்து, "திருவாளனினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற" என்கிறபடியே-ஸ்ரிய:பதியாகையால் வந்த பெருமை தோற்றத் திருவுள்ளத்திலுகப்புடனே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள்பக்கலிலே, விசேஷித்து க்ர்ஷ்ணவதாரகுணசேஷ்டிதங்களும் ராமாவதாரகுணசேஷ்டிதங்களும் அவதாராந்தரகுணசேஷ்டிதங்களு மெல்லாம் (க) ஒருமடைகொள்ள ப்ரகாசிக்கிறபடிகளை *திருவேங்கட மதனைச்சென்று அநுபவியாநின்றுகொண்டு, அவர் தம்மிலுங்காட்டில் அவர் விரும்பிக் கண்வளர்ந்தருளுகிற தேசமே பரமப்ராப்யமாகையாலே அத்தேசத்தினுடைய வைபவத்தையும் (உ) பஹுமுகமாகப்பேசி யநுபவித்து ப்ரீதராகிறார்-இத்திருமொழியில். ... ... ... *

அ.—முதற்பாட்டு. (ங)ஸாந்தீபிநிபுத்ராநயநம் பண்ணினவன் வர்த்திக்கிறதேச மிதுவென்கிறார்.

மூ.—மாதவத்தோன்புத்திரன்போய்மறிகடல்வாய்மாண்டானை
ஓதுவித்ததக்கணையாவுருவுருவேகொடுத்தானூர் [ம்
தோதவத்தித்தூய்மறையோர் துறைபடியத்துளும்பியெங்கு
போதில்வைத்ததேன்சொரியும்புனலரங்கமென்பதுவே.

ப-ரை.—தோதம் - பரிசுத்தமாகத்தோய்த்துலர்த்தின, வத்தி - வஸ்த்ரங்களை தரிக்குமவராய், தூய் - தூய்தான, மறையோர் - வேதத்தையே தங்களுக்கு நிரூபகமாகவுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள், துறை - *கங்கையிற் புநிதமாய காவிரியில் திருமுக்த்துறைமுதலிய துறைகளிலே, படிய - திரள்திரளாகஸ்நாநம் பண்ணுகையாலே, எங்கும்—, துளும்பி - அலையெறிந்து, புஷ்பங்களின் நாளங்களை யலைக்க, போதில்வைத்த - அந்தப்பூக்களில்வைத்த, தேன் - தேனானது, சொரியும் - சொரியும்படியான, புனல் - புனலையுடைத்தாய், அரங்கம் என்பது - திருவரங்கமென்னும் திருநாமத்தையுடைய திவ்ய நகரமானது; மறி - திரைமறிகிற, கடல்வாய் - கடலிடத்திலே, போய் - புகுந்து, மாண்டான் - முதலைவாயில் அகப்பட்டு மாய்ந்தவனை; மாதவத்தோன்-மிக்கதபஸ்

(க) ஒருமடைகொள்ள - ஓரிடத்திலேசேரும்படி. (உ) பஹுமுகமாக - பலபடியாக. (ங) ஸாந்தீபிநிபுத்ராநயநம்பண்ணுதல் - ஸாந்தீபிநியின் பிள்ளையைக்கொண்டுவருகை.

ஸையுடைய ஸாந்தீபிநியென்னும் அந்தணனுடைய, புத்திரனை-பிள்ளையை, ஓது வித்த - தன்னை அத்யயநம் பண்ணுவித்ததுக்கு, தககணையா - குருதக்ஷிணை யாக, உருவுருவே-அப்புதல்வன் இறந்தபோதி லிருந்தவடிவின்படியே, கொடுத் தான் - கொண்டுவந்து கொடுத்தவன் நித்யவாஸம்பண்ணுகிற, ஊர்-தேசமாம்.

வ்யா.—(மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை) மஹாதபஸ்ஸை யுடையனான ஸாந்தீபிநிபுத்ரன், நெடுங்காலத்திலே திரைமறிகிற கடலிடத்திலே புகுந்து மடிந்தவனை. (ஓதுவித்த தக்கணையா) அத்யயநம் பண்ணின வநந்தரம் குருதக்ஷிணை கொடுக்கத் தேடுகிறவளவிலே, இவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களை யறிந்தவனாகையாலே "காதலென்மகன் புகலிடம் காணேன் கண்டு நீ தருவாயெனக்கு" என்று-முன்பே ஸமுத்ரத்தில் (க) ம்ருதனான என்புத்ரனைக்கொண்டு வந்து தரவேணும்என்று அபேக்ஷிக்க; "அப்படியே செய்கிறோம்" என்று, அவன் அத்யயநம் பண்ணுவித்ததுக்கு தக்ஷிணையாக. (உருவுருவே கொடுத்தானூர்) "தஞ்சாஸம் யாதநாஸம்ஸ்தம் யதாபூர்வஶரீரிணம் । பித்ரே ப்ரதத்தவாந் க்ருஷ்ண:" "தம்பாலம் யாதநாஸம்ஸ்தம் யதாவச்சரீரிணம் । பித்ரே ப்ரதத்தவாந் க்ருஷ்ண:" என்கிறபடியே - பூர்வதேஹத்தில் ஒன்றும் விசேஷமறக் கொண்டு வந்து கொடுத்தவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

(தோதவத்தித் தூய்மறையோர்) (உ) ஸமாசாரபர ராகையாலே, பரிசுத்தமாகத் தோய்த்து உலர்த்தின வஸ்த்ரங்களை தரித்துக் கொண்டிருப்பாராய்,தூய்தானமறையையே தங்களுக்கு நிரூபகமாக வுடையராயிருக்குமவர்கள்.மறைக்குத் தூய்மையாவது-(ங)அபௌருஷேயமாய், (௪) நித்ய நிர்த்தோஷமாயிருக்கையாலே (ரு) ஸர்வப்ரமாணவிலக்ஷணமாய், பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளைஉள்ளபடி ப்ரதிபாதிக்கவற்றா யிருக்கை. இத்தை இவர்கள் நிரூபகமாக வுடையரா யிருக்கையாவது - "ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" "ஷடங்கோ வேதோ(அ)த்யேயோ ஜ்ஞேயஶ்ச" என்கிற விதிப்ரகாரம் தப்பாமல் அத்யயநம்பண்ணி, அதில் அர்த்தஜ்ஞாநத்தையும் அதுக்கு அநுரூபமான அநுஷ்டாநத்தையுமுடையரா யிருக்கையாலே வைதிகர்என்றே நிரூபகமாம்படி யிருக்கை. (துறைபடிய) "கங்கையிற் புனிதமாய காவிரி" என்கிறபடியே - * சலந்திழி புனலான கங்கையிலுங்காட்டில் பரிசுத்தமான காவேரியிலே, பெரியபெருமாளுடைய திருக்கண்நோக்கான திருமுகத்துறை முதலான துறைகளிலே, திரள்திரளாக அவகாஹித்து

(க) ம்ருதனான - இறந்துபோன. (உ) ஸமாசாரபரர் - நல்லொழுக்கத்தில்விருப்பமுள்ளவர்கள். (ங) அபௌருஷேயம் - புருஷனால் செய்யப்படாதது. (௪) நித்யநிர்த்தோஷமாய் - அநாதியாய் குற்றமற்றதாய். (ரு) ஸர்வப்ரமாணவிலக்ஷணம் - எல்லாப்ரமாணங்களிலும் சிறந்தது.

ஸ்நாநம்பண்ண. (துளும்பியித்யாதி) அப்படி அவர்கள் திரள்திரளாகப்புகுந்து ஸ்நாநம் பண்ணுகையாலே எங்கும் அலைமெறிந்து, ஆஸந்நமான புஷ்பங்களின் (க) நாளங்களையலைக்க, அந்தப்பூக்களில் வைத்த தேனானது சொரியும்படியான புனலையுடைத்தாய், திருவரங்கம்என்கிற திருநாமத்தை யுடைத்தாயிருக்கிற திவ்யநகரி. "க்ஷீராப்தேர்மண்டலாத்பாநோர்யோகிநாம்ஹ்ருதயாதபி । ரதிங்கதோ ஹரிர்யத்ர தஸ்மாத்ரங்கமிதீர்யதே" "க்ஷீராப்தேர்மண்டலாத்பாநோ: யோகிநாம்ஹ்ருதயாதபி । ரதிங்கதோ ஹரிர்யத்ர தத்ரங்கம்முநயோவிது:" என்கிற ஏற்றத்தை யுடைத்தாயிருக்கையாலே "அரங்கமென்பதுவே" என்று-ப்ரஸித்திதோற்ற வருளிச்செய்கிறார். (க)

அ.—இரண்டாம்பாட்டு. வைதிகபுத்ராநயநம்பண்ணினவன் வர்த்திக்கிறதேசமிது வென்கிறார்.

மூ.—பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும், இறைப்பொழுதிற் கொணர்ந்துகொடுத்தொருப்படுத்த வுறைப்பனூர், மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தையளித்திருப்பார், சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே.

ட-ரை.—மறை-வேதத்திற்சொல்லியபடியே, பெரு-சிறந்த, தீ-முத்தீகளை, வளர்த்திருப்பார் - வளர்க்குமவர்களாய், வரு - தந்தாம் திருமாளிகைக் கெழுந்தருளுகிற, விருந்தை - அதிதிகளான ஸ்ரீவைஷ்ணவர்களை, அளித்திருப்பார் - ஸ்வரூபாநுரூபமாக ஆதரித்துக்கொண்டு போருமவர்களாய், சிறப்புடைய-இவ்வகையான நன்மையையுடையராய், மறையவர் - வேத தாத்பர்யமறிந்திருக்குமவர்கள், வாழ் - பெரியபெருமாளை யநுபவித்துக்கொண்டு வாழாநின்றுள்ள, திருவரங்கமென்பதுவே—; பிறப்பகத்தே - ஸூதிகாக்ர்ஹத்திலேயே, மாண்டொழிந்த - மாண்டுபோய்விட்ட, பிள்ளைகள் நால்வரையும் - நாலுபிள்ளைகளையும், இறைப்பொழுதில் - காலைக்கடமைமுடிந்து பகல்கடமைதொடங்குகைக்கு முனபுள்ள அற்பகாலத்திலே, கொணர்ந்து - பரமபதத்தில் நாய்ச்சிமார்கையினின்றும் வாங்கிக்கொண்டுவந்து, கொடுத்து - தந்தை தாயர்கையிலேகொடுத்து, ஒருப்படுத்த - எங்கள்பிள்ளைதான் என்று சொல்லும்படி ஸம்மதிபண்ணுவித்த, உறைப்பன்-சக்தியையுடையவன் வர்த்திக்கிற, ஊர் - தேசமாம்.

வ்யா.—(பிறப்பித்யாதி) "ஒருப்ராஹ்மணனுக்கு முன்பேமூன்றுபிள்ளைகள் பிறந்தபோதேகாணவொண்ணாதபடிபோய்விடுகையாலே, நாலாம்பிள்ளையை (உ) ஸ்த்ரீ ப்ரஸவிக்கத்தேடுகிறவளவிலே, க்ர்ஷ்ணன்பக்கலிலேவந்து, 'இந்தவொருபிள்ளையையும் தேவரீர் ரக்ஷித்துத்தந்தருளவேணும்' என்று அபேக்ஷிக்க; க்ர்ஷ்ணனும், 'அப்படி

(க) நாளம் - காம்பு. (உ) ஸ்த்ரீ - மனையாள்; ப்ரஸவிக்க - பொறையுயிர்க்க.

யேசெய்கிறோம்' என்று அநுமதிசெய்தவநந்தரம், (க) ஏகாஹதீக்ஷையானக்ரதுவிலே தீக்ஷிதராயிருக்கிறவிவர் எழுந்தருளவொண்ணாது என்னுமத்தைப்பற்ற, 'நான்போய்ரக்ஷிக்கிறேன்' என்று அர்ஜுநன் ஏன்றுகொண்டு ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய் ஸூதிகாக்ர்ஹத்தைச்சுற்றும் காற்றுமுட்பட ப்ரவேசிக்கவொண்ணாதபடி சரக்கூடமாகக் கட்டிக் காத்துக்கொண்டு நிற்கச்செய்தே, அந்தப் பிள்ளை பிறந்தவளவிலே பழையபடியே காணவொண்ணாதபடிபோய்விட்டவளவிலே, ப்ராஹ்மணன்வந்து அர்ஜுநனை 'க்ஷத்ரியாதமா! உன்னாலேயன்றோ பிள்ளைபோகவேண்டிற்று, க்ர்ஷ்ணனெழுந்தருளி ரக்ஷிக்கிறவித்தை நீயன்றோகெடுத்தாய்' என்று (உ) பத்ஸித்து, க்ர்ஷ்ணன்பக்கலிலே தள்ளிக்கொண்டுவர; க்ர்ஷ்ணன் இத்தைக்கண்டு (ந) மந்தஸ்மிதம்பண்ணி, 'அவனைவிடு, உனக்குப்பிள்ளை நாம் கொடுவந்து தருகிறோம்' என்று ப்ராஹ்மணனுக்கருளிச்செய்து, போனபிள்ளைகளை மீளக்கொண்டுவந்து கொடுத்தான்'' என்கிற கதையை ஸங்க்ரஹேண வருளிச்செய்கிறார்.

(பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளைநால்வரையும்) ''என்னுடைமனைவி காதல்மக்களைப்பயத்தலுங்காணாள்'' என்கிறபடியே பெற்றவளுமுட்பட முகத்தில் விழிக்கப்பெறாதபடி (ச) ஸூதிகாக்ர்ஹத்திலே, ''இன்னவிடத்திலே போய்த்து'' என்று தெரியாதபடி மாண்டுபோய்விட்ட நாலுபிள்ளைகளையும். (இறைப்பொழுதில் கொணர்ந்துகொடுத்து) தீக்ஷிதனாய்நிற்கிற காலமாகையாலே (ரு) ப்ராதஸ்ஸவநம் தலைக்கட்டி (சா) மாத்யந்திநஸவநத்துக்கு முன்னான அல்பகாலத்திலே, ''எல்லாவுலகுங்கழியப் படர் புகழ்பார்த்தனும் வைதிகனுமுடனேறத் திண்டேர்கடவி'' என்கிறபடியே - ப்ராஹ்மணனையும் அர்ஜுநனையுங்கூடத் தேரிலே கொண்டேறி, (எ) அர்ஜுநனைத் தேரைநடத்தச்சொல்லி, அண்டத்துக்குள்ளுண்டான லோகங்களும் ஆவரணங்களுமாகிற எல்லாவற்றுக்கும் அவ்வருகுபடும்படியாக, கார்யரூபமானவைதாம் காரண ரூபமான தத்த்வங்களுக்குள்ளே போகிறவிடத்தில் உருக்குலையாமல் தேருக்குத்திண்மையைக் கொடுத்து நடத்திக்கொண்டுபோய், (அ) தமஸ்ஸளவில் சென்றவாறே தேரையும் இவர்களையும் நிறுத்தி, ''சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதி'' என்கிறபடியே ஜலத்திலே மத்ஸ்யமுலாவுமாபோலே (கூ) தேசிகரோ ஸஞ்சரிக்க வே

(க) ஏகாஹதீக்ஷை - ஒருநாளைதீக்ஷை. (உ) பத்ஸித்து - நிந்தித்து. (ந) மந்தஸ்மிதம் - புன்சிரிப்பு. (ச) ஸூதிகாக்ர்ஹம் - ப்ரஸவிக்குமறை. (ரு) ப்ராதஸ்ஸவநம்-காலையில்செய்யும் கருமம். (சா) மாத்யந்திநஸவநம்-உச்சியில் செய்யும் கருமம். (எ) அர்ஜுநன் - தன்புகழாலே உலகத்தை வெண்ணிறமாக்குமவன். (அ) தமஸ்ஸு - மூலப்ரக்ருதி. (கூ) தேசிகர் - தேசத்தின் மர்மமறிந்தவர்கள்.

ண்டும்படி நிரவதிகதேஜோரூபமான பரமபதத்திலே, தன்னிலமாகையாலே தானேபோய்ப்புக்கு, நாய்ச்சிமார், தங்கள் ஸ்வாதந்த்ர்யம் காட்டுகைக்காக அங்கே அழைப்பித்திட்டுவைத்த அந்தப்பிள்ளைகளை அங்குநின்று மெடுத்துக்கொண்டுவந்து மாதாபிதாக்கள் கையிலேகொடுத்து. (ஒருப்படுத்தஉறைப்பனூர்) "தாயொடுகூட்டிய" என்கிறபடியே (க) பூர்வரூபத்தில் ஒன்றும் குலையாமல், "என்னுடையபிள்ளைகள்" என்று தாயார்எடுத்தணைத்து உச்சிமோந்துகொள்ளும்படி சேர்த்துவிட்ட (௨) சக்திமானவன் வர்த்திக்கிற தேசம்.

(மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார்) (௩) வேதோக்தமான மஹாக்நிகளை (௪) பலஸாதநமாகவன்றிக்கே பகவத் ஸமாராதநபுத்தியாலே அவிச்சிந்நமாக வளர்த்துக்கொண்டிருக்குமவர்கள். (வருவிருந்தையளித்திருப்பார்) வரும்விருந்தினரை ரக்ஷித்துக்கொண்டிருப்பார். அதாவது - தந்தாம் திருமாளிகையிலே எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களை, ஸ்வரூபாநுரூபமாக (௫) ஆதரித்து அமுது செய்யப்பண்ணுகை. (சிறப்புடையமறையவர்வாழ்) இப்படிவைதிக கர்மாநுஷ்டாநத்தையும் பகவத்ஸமாராதநத்தையும் அநந்யப்ரயோஜநமாகச் செய்கையாகிற நன்மையையுடையராய், இதுக்கு உடலாக (௬) வேத தாத்பர்யத்தை யறிந்திருக்குமவர்கள், பெருமாளையநுபவித்துக்கொண்டு வாழாநிற்கிற திருவரங்கமென்பதுவே. ()

அ.—மூன்றும்பாட்டு. கரிக்கட்டையைப் பிள்ளையாக்கியும், பாண்டவர்களுடையதேஹம் பாரதயுத்தத்தில் அழியாதபடி நோக்கியும்செய்தவன் வர்த்திக்கிறதேசமிதுவென்கிறார்.

மூ.—மருமகன்றன்சந்ததியையுயிர்மீட்டுமைத்துனன்மார்
உருமகத்தேவீழாமேகுருமுகமாய்க்காத்தானூர்
திருமுகமாய்ச்செங்கமலந்திருநிறமாய்க்கருங்குவளைப்
பொருமுகமாய்நின்றலரும்புனலரங்கமென்பதுவே.

ப-ரை.—செங்கமலம் - செந்தாமரைமலரானது, திருமுகமாய் - பெரிய பெருமாளுடைய திருமுகத்துக்குப்போலியாய், கரு - கறுத்த, குவளை-நீலோற்பலமானது, திருநிறமாய் - அவருடைய திருநிறத்துக்குப்போலியாய், பொரு-ஒன்றுக்கொன்று எதிர்பொருகிற, முகமாய்நின்று - முகத்தை யுடைத்தாய்க்கொண்டு, அலரும் - அலராநின்றுள்ள, புனல் - நீர்வளப்பத்தையுடைய, அரங்கமென்பதுவே—; மருமகன்றன் - மருமகனான அபிமந்யுவினுடைய, சந்ததியை - புத்ரனாய் கரிக்கட்டையாய்க்கிடந்த பரிக்ஷித்தின்சரீரத்தை, திருவடிக

(க) பூர்வரூபம் - முன்பிருந்தவடிவு. (௨) சக்திமான் - வல்லவன். (௩) வேதோக்தமான - வேதத்திற்சொல்லிய. (௪) பலஸாதநமாக - ஒருப்ரயோஜநத்துக்குறுப்பாக. (௫) ஆதரித்து - விரும்பி. (௬) வேததாத்பர்யம் - வேதத்தின் உட்கருத்து.

ளாலே ஸ்பர்சித்து, உயிர்மீட்டு - உயிர்பெறும்படிபண்ணி, மைத்துனன்மார் - மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய, உரு - சரீரமானது, மகத்து-பாரதயுத்தமாகிற மனிதவேள்வியில், வீழாமே - விழுந்துநசித்துப்போகாமே, குருமுகமாய் - குருமுகமாய்நின்று ஹிதோபதேசங்களைப்பணணி, காத்தான்-ரக்ஷித்தவன், ஊர் - தன் அபிமாநத்திலே ஒதுங்கினவர்களை ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம்பண்ணும் தேசமாம்.

வ்யா.—(மருமகனித்யாதி) மருமகனான அபிமந்யுவினுடைய புத்ரனான பரிக்ஷித்தின்ப்ராணனைமீட்டு. அதாவது - கரிக்கட்டையாய்ப்போனவனை, "యదిమే బ్రహ్మచర్యం స్యాత్, మయి సత్యంచ-నిష్ఠితి. అవ్యాహతం మమైశ్వర్యం-తేన జీవతు బాలకః" "യദി മേ ബ്രഹ്മചര്യഞ്ച സത്യഞ്ച മയി തിഷ്ഠതി, അവ്യാഹതം മമൈശ്വര്യം-തേന ജീവതു ബാലകഃ" என்றருளிச்செய்து, "పాదేన కమలాభేన బ్రహ్మరుద్రార్చితేన చ । పస్పర్శ పుణ్డరీకాక్షః ఆపాదతలమస్తకమ్" "പാദേന കമലാഭേന ബ്രഹ്മരുദ്രാർചിതേന ച । പസ്പർശ പുണ്ഡരീകാക്ഷഃ ആപാദതലമസ്തകം" என்கிறபடியே திருவடிகளாலே சரீரத்தை எங்குமொக்க ஸ்பர்சித்து, மீளவும் உயிர் பெறுத்துகை. (மைத்துனன்மாருரு மகத்தே வீழாமே) மைத்துனன்மாரான பாண்டவர்களுடையதேஹம் பாரதயுத்தமாகிற (க)நரமேதயஜ்ஞத்திலே விழுந்து நசித்துப்போகாமே. மகம்-யஜ்ஞம். (குருமுகமாய்க் காத்தான்) குருமுகமாய்நின்று ஹிதோபதேசாதிகளைப் பண்ணி ரக்ஷித்தவன். இத்தால் - "எல்லாச்சேனையு மிருநிலத்தவித்த" என்கிறபடியே உபயஸேனையிலும் (உ) பூபாரமானவர்களையெல்லாம் நசிப்பிப்பதாக ப்ரவர்த்திக்கப் பட்டதாய், * மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தவனுடைய திருவுள்ளத்துக்கு உகப்பாக விருக்குமதாகையாலே - பாரதயுத்தத்தை நரமேதயஜ்ஞமாக அருளிச்செய்தது. இதில் இவர்கள்விழுந்து நசியாமலிருந்தது, அடியே பிடித்து இவர்களை அபிமாநித்துக்கொண்டு குருமுகமாய் நின்று, (ங) வநஸ்தரானகாலத்தோடு புரஸ்தரான காலத்தோடு வாசியற ஹிதத்தையே உபதேசித்துக்கொண்டு தீயவழிகளிலே போகாமல் விலக்கி நல்லவழிகளிலேநடத்தி இப்படி அபிமாநியாய் நின்று ரக்ஷித்துக்கொண்டு போருகையாலே என்னு மிவ்வர்த்தத்தை வெளியிட்டருளினாராய்த்து. (ஊர்) இப்படி குருமுகமாய் நின்று பாண்டவர்களை ரக்ஷித்தவன், தன்னபிமாநத்திலே யொதுங்கின வர்க ளெல்லாரையும் தீய வழிபோய் நசியாமல் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

(திருமுகமாய்ச் செங்கமலம்) செங்கமலமானது, பெரியபெருமாளுடைய திருமுகத்துக்குப் போலியாய். (திருநிறமாய்க் கருங்

(க) நரம்மதம் - மநுஷ்யயாகம். (உ) பூபாரமானவர்கள் - பூமிக்குச் சுமையாயிருப்பவர்கள். (ங) வநஸ்தரானகாலம் - காட்டில்வஸித்தகாலம்.

குவளை) கருங்குவளையானது அவருடைய திருநிறத்துக்குப் போலியாய். (பொருமுகமாய் நின்றலரும் புனலரங்க மென்பதுவே) (க) பரபாகத்தாலே ஒன்றுக்கொன்று எதிர்பொருகிற முகத்தையுடைத்தாய்க் கொண்டு விகஸிக்கும்படியான ஜலஸம்ம்ருத்தியையுடைய அரங்கமென்பதுவே. (௩)

அ.—நாலாம்பாட்டு. கைகேயிவசநமடியாக நாட்டைவிட்டுக் காட்டிலேபோய் (உ) கண்டகரான ராக்ஷஸரை நிரஸித்தவன் வர்த்திக்கிறதேச மிதுவென்கிறார்.

மூ.—கூன்றொழுத்தைசிதகுரைப்பக்கொடியவள்வாய்கடியசொற்
கேட்டீன்றெடுத்ததாயரையுமிராச்சியமுமாங்கொழியக்
கான்றொடுத்தநெறிபோகிக்கண்டகரைக்களைந்தானூர்
தேன்றொடுத்தமலர்ச்சோலைத்திருவரங்கமென்பதுவே.

ப-ரை.—தேன்தொடுத்த - தேன்மாறுத, மலர் - மலர்களையுடைத்தான, சோலை - சோலைசூழ்ந்த, திருவரங்கமென்பது—;கூன் - கூனியாகிற, தொழுத்தை - அடியாட்டியானவள், சிதகு - திருவபிஷேகமஹோத்ஸவத்துக்குஅழிவான கடுஞ்சொற்களை, உரைப்ப - சொல்ல, அத்தையுட்கொண்டு பெருமாளைக்காடேற வெழுந்தருளச்சொன்ன, கொடியவள்-கொடியளானகைகேயியுடைய, வாய் - வாயினிடத்துண்டான, கடிய - வெட்டிய, சொல் - சொல்லை, கேட்டு—, ஈன்றெடுத்ததாயரையும் - பெற்றதாயாரான ஸ்ரீகௌஸலையாரையும், இராச்சியமும் - ராஜ்யத்தையும், ஒழிய - கைவிட்டு, பிராட்டியும் இளையபெருமாளும் பின்னேஸேவித்துவர, கான்தொடுத்த - காடுஅடர்ந்திருக்கிற, நெறி- வழியே, போகி - ஸ்ரீதண்டகாரண்யத்திலே யெழுந்தருளி, கண்டகரை - கண்டகராய்ஜநஸ்தாநவாஸிகளான ராக்ஷஸர்களை, களைந்தான் - நிரஸித்தவன், ஊர் - ஆர்சிதரக்ஷணார்த்தமாக நித்யவாஸம்பண்ணுகிற தேசமாம்.

வ்யா.— (கூன்தொழுத்தை சிதகுரைப்ப) கூனியாகிற அடியாட்டியானவள் திருவபிஷேக மஹோத்ஸவத்துக்கு அழிவான (௩) துருக்திகளைச் சொல்ல. அதாவது - "ஜ்ஞாதிதாஸீ யதோஜாதா கைகேய்யாஸ்து ஸஹோஷிதா। ப்ராஸாதம் சந்த்ரஸங்காஶம் ஆருரோஹ யத்ருச்சயா" "ஜ்ஞாதிதாஸீ யதோஜாதா கைகேய்யாஸ்து ஸஹோஷிதா। ப்ராஸாதாஞ்சந்த்ரஸங்காஶம் ஆருரோஹ யத்ருச்சயா" என்கிறபடியே ஜ்ஞாதிதாஸியான இவள் (ச) யாத்ருச்சிகமாக மாளிகைத் தளத்தின்மேலேயேறிப் பார்த்தவாறே, பெருமாளுடைய திருவபிஷேகத்துக்குத் திருப்படைவீடெல்லாம் கோடித்துக்கிடக்கிற படியையும், "ஸிக்தஸம்ம்ருஷ்டரத்யாஞ்ச" "ப்ருந்தப்ருந்தைரயோத்யாயாம்" என்கிறபடியே - திரள்திரளாக வந்து கிடக்கிற (௫) ஜநஸம்மர்த்தத்தையும் மங்களவாத்யகோஷங்

(க) பரபாகம் - நிறத்தின்உயர்த்தி. (உ) கண்டகரான - துஷ்டரான. (௩) துருக்தி - கடுஞ்சொல். (ச) யாத்ருச்சிகமாக - திடீரென்று. (௫) ஜநஸம்மர்த்தம் - மனிதரின்நெருக்கம்.

களையு மெல்லாங் கண்டு ஸஹிக்கமாட்டாதே (க) தளத்தினின்றுபி றங்கிவந்து கைகேயியைபர்த்ஸித்து, "உன்மாற்றாட்டிமகன்அபிஷே கம் செய்யத் தேடுகிறான், உன் மகன் அவனுக்கு இனிஇழிதொழில் செய்திருக்கு மித்தனையிறே, இத்தைப் பார்த்துக்கொண்டு நீ யிருக் கிறதேது, அவனுடைய அபிஷேகத்தைக் குலைத்து உன்மகனை அபி ஷேகம் பண்ணுவிக்கும்படி ராஜாவோடே சொல்லு; அதுக்கு உபாயம்,—முன்பே உனக்குத் தந்திருப்பது இரண்டுவரமுண்டே, அவை யிரண்டையும்; உன் மகனை அபிஷேகம் பண்ணுவிக்கையும், ராமனைக் காடேறப்போக விடுகையும், என்று வேண்டிக்கொள்; ஸத்ய தர்மபரரான ராஜாவால் செய்யாதொழியப் போகாதுகாண்" என்று திருவபிஷேகத்துக்கு (உ) விக்நமான துருக்திகளைச் சொன் னளிறே. (கொடியவள் வாய்க் கடியசொல்கேட்டு) இப்படி (ங) குப்ஜை சொன்ன வார்த்தையாலே கலங்கி, பின்பு ராஜாவுடனே "முன்புசொன்ன விரண்டுவரமும் எனக்கு இப்போது தரவேணும்; அதாவது-என்மகனை அபிஷேகம் பண்ணுவிக்கையும், ராமனைப் பதி னாலு ஸம்வத்ஸரம் வநவாஸார்த்தமாகப் போகவிடுகையும்" என்ன; இத்தைக்கேட்டு ராஜா இதுக்கு (ச) இசையாமை தோற்றவிருக்க; "அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் ஸத்யதர்மத்தைத்தப்பாமல் போந் தவன் இப்போது ஸத்யத்தை அதிக்ரமிக்கிறான், ஸகலதேவதைக ளும் இத்தை அறியுங்கோள்" என்று இவள் கூப்பிட்டவாறே; அவன் செய்யலாவதற்று அநுமதிபண்ண; அவ்வளவிலே, அவள் ஸுமந்த்ரனைப்போகவிட்டு பெருமாளை அழைத்துவிட, அவர் எழு ந்தருளி வந்து, ராஜா கலங்கிக்கிடக்கிறபடியைக்கண்டு, "இதுக்கடி யென்?" என்று (ரு) இவளைக்கேட்க, இச்செய்திகளையெல்லாம் சொல்லி, "உம்மைக்காடேறப்போகவிடுவதாகஅழைத்துவிட்டார், உம்மைக் கண்டவாறே சொல்ல மாட்டாமல் கிடக்கிறாரித்தனை; உங்கள் ஐயர் ஸத்யதர்மத்தை நோக்கவும் நீர் அவர்க்கு (சு) ப்ரியம் செய்யவும் வேண்டி யிருந்தீராகில் அவர் நினைவு நான் சொல்லுகி றேன் - நீர் கடுகக்காடேறப்போம்" என்று சொன்ன கொடுமையை யுடையளான கைகேயிவாயில் இந்த வெட்டிய சொல்லைக்கேட்டு. (ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமு மாங்கொழிய) "ஏகபுத்ரை யான நான் உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன், கூடப்போரு மித்த னை" என்று பின்றொடர்ந்த பெற்றதாயாரான கௌஸலையாரையும், ஸ்தாவரங்களோடு ஜங்கமங்களோடு வாசியறத் தன் குணங்களிலே யீடுபட்டு பிரியில் தரிக்கமாட்டாதபடி யிருக்கிற ராஜ்யத்தையும்

(க) தளம் - மச்சு. (உ) விக்நம் - தடை. (ங) குப்ஜை - கூனி. (ச) இசையாமை - ஸம்மதியாமை. (ரு) இவளை - கைகேயியை. (சு) ப்ரியம் - இஷ்டமானவை.

கைவிட்டு. (கான்தொடுத்த நெறிபோகி) "[illegible]" "தே வநெநவநாமகா" என்கிறபடியே காட்டோடுகொடு தொடுத்துக்கிடக்கிறவழியே, "நெய்வாயவேல் நெடுங்கண்நேரிழையு மிளங்கோவும் பின்புபோக" என்கிறபடியே-பிராட்டியும் இளையபெருமாளும் பின்னே ஸேவித்துக் கொண்டுவர ஸ்ரீதண்டகாரண்யத்திலே எழுந்தருளி. (கண்டகரைக் களைந்தான்) "[illegible]" "[illegible]" என்கிறபடியே ராக்ஷஸர்தின்றவுடம்பைக்காட்டி வந்து நின்ற தண்டகாரண்ய வாஸிகளான ரிஷிகளுக்காக, அவர்களை நித்யபீடை செய்து போந்த (க) கண்டகராய் ஜநஸ்தாநவாஸிகளான ராக்ஷஸர் முதலானோரை நிரஸித்தருளினவன். (ஊர்) (உ) ஏவம்பூதனானவன் இங்ஙனொத்த விரோதிகளை நிரஸித்து ஆச்ரித ரக்ஷணம் பண்ணுகைக்காக நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

(தேனித்யாதி) தேன்மாறாத மலர்களை யுடைத்தான சோலை. அன்றிக்கே, "தேன்" என்று - வண்டாய், வண்டுகள் மாறாமல் படிந்து கிடக்கிற புஷ்பங்களையுடைத்தான சோலை யென்னுதல்; அன்றிக்கே, "கோல்தேன் பாய்ந் தொழுகும்" என்கிறபடியே - கொம்புகளில் தேன் வைக்கப்பட்டிருப்பதாய்ப் பூமாறாத சோலை யென்னுதல். இப்படி யிருந்துள்ள சோலைகளையுடைய திருவரங்கமென்னும் திருநாமத்தையுடைய வதுவே. (௪)

அ.—அஞ்சாம்பாட்டு. ராவணவதம்பண்ணி இந்த லோகத்தை ரக்ஷித்தருளினவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—பெருவரங்களவைபற்றிப்பிழக்குடையவிராவணனை
உருவரங்கப்பொருதழித்திவ்வுலகினைக்கண்பெறுத்தானூர்
குரவரும்பக்கோங்கலரக்குயில்கூவுங்குளிர்பொழில்சூழ்
திருவரங்கமென்பதுவேயென்றிருமால்சேர்விடமே.

ப-ரை.—குரவு - குரவுகளானவை, அரும்ப - அரும்பிச்செல்லவும், கோங்கு - கோங்குகளானவை, அலர-அலர்ந்துசெல்லவும், குயில் - குயில்களானவை, கூவும் - களிப்பினாலேகூவும்படியான, குளிர் - குளிர்ந்த, பொழில் - சோலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, திருவரங்கமென்பது—; பெரு - பெரிய, வரங்களவை - வரங்களானவற்றை, பற்றி - தனக்குபலமாகக்கொண்டு, தேவர் ரிஷிகள்முதலானோரிடத்து, பிழக்கு - பிழைசெய்கையையே, உடைய-ஸ்வபாவமாகவுடைய, இராவணன் - இராவணனுடைய, உரு - ரூபமானது, அரங்க - சின்னபின்னமாம்படி, பொருது—, அழித்து - ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே ப்ராணனையழித்து, இவ்வுலகினை - இந்தலோகத்தை, கண்பெறுத்தான் - ரக்ஷித்தவனாய், என் - என்னுடைய, திருமால் - ஸ்ரீயஃபதியானவன், சேர்விடம் - பரமபதத்திலுங்காட்டில்விரும்பிச்சேருமிடமான, ஊர் - ஊராம்.

(க) கண்டகர் - துஷ்டர். (உ) ஏவம்பூதன் - இப்படிப்பட்டவன்.

வ்யா.—(பெருவரங்களவைபற்றி) ப்ரஹ்மாதிகள் கொடுத்த பெரிய வரங்களானவற்றைத் தனக்கு பலமாகக்கொண்டு. இந்த வர பலமாய்த்து இவன் (க) அடித்து அழிவுசெய்து திரிகைக்குஹேது. (பிழக்குடைய விராவணனை) "இவ்வரமுள்ள வளவும் நமக்கு ஓரழிவு வாராது" என்று நினைத்து தேவதைகள் ரிஷிகள் முதலானொல்லாரளவிலும் செய்து திரிந்த பிழைகளை யுடையனான (உ) ராவணனை. பிழக்கு - பிழை. "𑌰𑌾𑌵𑌣𑍋 𑌲𑍋𑌕𑌰𑌾𑌵𑌣𑌃" "ராவணோ லோகராவண:" என்கிறபடியே லோகத்தை யெல்லாம் (ங.) பட அடித்து கிடந்து கூப்பிடும்படி பண்ணியிறே இவன் திரிவது. (உருவரங்கப் பொருதழித்து) இப்படி யிருக்கிறவனை அழியச்செய்யு மிடத்தில், "தோள்கள்தலை துணிசெய்தான்" என்கிறபடியே-"அகப்படாதவன் அகப்பட்டான், தப்பாமல் கொன்றுவிடுவோம்" என்று, பாராதே, தோள்களைக்கழித்தும் தலையைச்சிறைத்தும் போதுபோக்காக நின்றுகொல்லுகையாலே ரூபமானது அவயவங்கள் (ச) சிந்நம் பிந்நமாம்படி பொருது, பின்பு ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே ப்ராணபர்யந்தமாக அழித்து. (இவ்வுலகினைக்கண் பெறுத்தான்) இந்த லோகத்தைக் கண்பெறுவித்தவன். "கண்" என்று-நிர்வாஹக வஸ்துவைச் சொல்லுகிறது. இத்தால்-விரோதியான ராவணனைநிரஸித்து, அவனாலே நெருக்குண்ட ப்ராணிகளையெல்லாம் ரக்ஷிக்கையாலே, இந்த லோகத்துக்குத் தானே ரக்ஷகனென்னு மிடத்தை யறிவித்தவனென்கை.

(குரவித்யாதி) குரவுகளானவை யரும்பிச் செல்லவும், கோங்குகளானவையலர்ந்து செல்லவும், குயில்களானவை ஹர்ஷத்தாலேயிருந்து கூவும்படியான குளிர்ந்த சோலைகளாலே சூழப்பட்டிருக்கிற. (திருவரங்க மென்பதுவே) திருவரங்கமென்று ப்ரஸித்தமாயிருக்கிற வதுவே. இத்தால் - அநேக புராண ப்ரசஸ்தமாகையாலும் ஆழ்வார்களெல்லாரும் ஒருமிடறாக அருளிச் செய்கையாலுமுண்டான ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. (என்திருமால்சேர்விடமே) ராவணவதாநந்தரம் "திருமகளோடினிதமர்ந்த" என்கிறபடியே - பிராட்டியோடே கூடி ரஸோத்தரனாயிருந்த என்னுடைய ஸ்ரீயஃபதியானவன் பரமபதாதிகளெல்லாவற்றிலுங் காட்டில் விரும்பி, விடாயர் மடுவிலே சேருமாபோலேசேருகிற ஸ்தலம்.

"இவ்வுலகினைக் கண்பெறுத்தானை - என்திருமால் சேர்விடமானவூர் - திருவரங்க மென்பதுவே" என்று அந்வயம். (ரு)

(க) அடித்து - தன்மனம்போனபடியே. (உ) ராவணன் - உலகத்தாரை அழச்செய்யுமவன். (ங) பட - அழியும்படி. (ச) சிந்நம்பிந்நமாம்படி - சிதறுண்டு போம்படி.

அ.—ஆரும்பாட்டு. பாதாளவாஸிகளான அஸுரர்களை, தேவர்களுக்காகத் திருவாழியை யேவி, கிழங்கெடுத்துப் போகட்டவன் வர்த்திக்கிறதேச மிதுவென்கிறார்.

மூ.—கீழுலகிலசுரர்களைக்கிழங்கிருந்துகிளராமே
ஆழிவிடுத்தவருடையகருவழித்தவழிப்பனூர்
தாழைமடலூடுரிஞ்சித்தவளவண்ணப்பொடியணிந்து
யாழினிசைவண்டினங்களாளம்வைக்குமரங்கமே.

ப-ரை.—யாழ் - யாழோசைபோலிருக்கிற, இன் - இனிய, இசை - இசையையுடைய, வண்டினங்கள் - வண்டின் திரள்களானவை, தாழைமடலூடு - மலரத்தொடங்குகிற தாழம்பூமடலினுள்ளே, உரிஞ்சி - உடம்பை உரோசிக்கொண்டு, அதிலுண்டான, தவளம் - வெளுத்த, வண்ணம் - நிறத்தையுடைத்தான, பொடி - சுண்ணத்தை, அணிந்து - உடம்பெங்குமணிந்துகொண்டு, அந்தக்களிப்பாலே, ஆளம்வைக்கும் - "தெனதென" என்று ஆளத்தியையாகின்றுள்ள, அரங்கம் - அரங்கமாநகரானது; கீழுலகில் - பாதாளலோகவாஸிகளான, அசுரர்களை - அஸுரர்களை, கிழங்கிருந்து - அடிக்கிடந்து, கிளராமே-கிளராதபடியாக, ஆழி - திருவாழியாழ்வானை, விடுத்து - ஏவிவிட்டு, அவருடைய-அவர்களுடைய, கரு-கருவளவாக, அழித்த - அழிந்துப்போகட்ட, அழிப்பன்-பகைவரையழிக்கும் ஸ்வபாவமுடையவன், அப்படிப்பட்டவிரோதிகளை யழிக்கைக்காக, ஊர் - நித்யவாஸம்பண்ணும் தேசமாம்.

வ்யா.—(கீழுலகிலசுரர்களை) பாதாளலோக வாஸிகளான அஸுரர்களை. பாம்புக்குப் புற்றுப்போலே, என்று மொக்க அஸுரர்களுக்கு (க) வாஸஸ்தாநமாயிறே பாதாளந்தானிருப்பது. இப்படி யிங்கே யிருந்துவந்து தேவர்களோடே யுத்தம் செய்யாநிற்பர்களாய்த்து. அப்படி அவர்கள் வந்து தேவர்களை அடர்க்குங்காலத்தில், தேவர்களுக்காக நின்று அவர்களை யழியச்செய்யக் கடவனாயிறே ஸர்வேச்வரன்றானிருப்பது. இப்படி பலகாலும் வர, அழியச்செய்துவிடச்செய்தேயும், பின்னையும் அடிக்கெடாமல் கிளர்ந்து வரப்புக்கவாறே (கிழங்கிருந்து கிளராமே) அப்படி அடிக்கிடந்து கிளராதபடியாக. (ஆழிவிடுத்து அவருடைய கருவழித்தவழிப்பன்) *கருதுமிடம் பொரும் திருவாழியாழ்வானை யேவிவிட்டு, அவர்களுடைய கருவளவாக அழித்துப் போகட்ட ப்ரதிபக்ஷ நிரஸந ஸ்வபாவன். (ஊர்) பின்பும் அங்ஙனொத்த விரோதிகளை நிரஸிக்கைக்காக நித்யவாஸம் செய்கிற தேசம்.

(தாழை மடலூடுரிஞ்சி) மலரத் தொடங்குகிற தாழம்பூ மடலினுள்ளே பரிமளத்தில் லோபத்தாலே உடம்பை உரோசிக் கொண்டு புகுந்து. (தவளவண்ணப் பொடியணிந்து) அதினுள்ளிலுண்டான வெளுத்த நிறத்தை யுடைத்தான சுண்ணத்தை உடம்பெங்கும்

(க) வாஸஸ்தாநம் - இருப்பிடம்.

அணிந்து கொண்டு: (யாழினிசை வண்டினங்கள்ஆளம் வைக்கும்) அந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, (க) யாழோசைபோலே யிருக்கிற இனிய இசையை யுடைய வண்டினுடைய திரள்களானவை பாடுகைக்கு அடிக்கொண்டு "தென, தென" என்று ஆளத்தி வையாநிற்கு மரங்கமே. (சு)

அ.—ஏழாம்பாட்டு. (உ) லோகபீடை பண்ணித்திரியும் பாபராள அஸுரர்களை நசிப்பித்துப் பொகட்டவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—கொழுப்புடையசெழுங்குருதிகொழித்திழிந்துகுமிழ்த்தெறி
பிழக்குடையவசுரர்களைப்பிணம்படுத்தபெருமானூர் [யப்
தழுப்பரியசந்தநங்கள்தடவரைவாயீர்த்துக்கொண்டு
தெழிப்புடையகாவிரிவந்தடிதொழுஞ்சீரரங்கமே.

ப-ரை.—தடம் - பெரிய, வரைவாய் - மலையிலேவளருகையாலே, தழுப்பு அரிய - ஒருவ ரிருவரால் தழுவவரிதாம்படியிருக்கிற, சந்தநங்கள் - சந்தந மரங்களை, வேரோடே பிடுங்கி, ஈர்த்துக்கொண்டு - இழுத்துக்கொண்டு, தெழிப்புடைய - "இத்தைக்கொண்டருள வேணும்" என்னுமா போலே யிருக்கிற த்வநியை யுடைய, காவிரி - காவிரியானது, வந்து - ஆரவாரத்தோடே வந்து, அடி - திருவடிகளை, தொழும் - தொழாநிற்கும், சீர் - சிறப்பையுடைத்தான, அரங்கம்—; கொழுப்புடைய - கொழுப்புடைத்தாய், செழும் - அழகியதாயிருந்துள்ள, குருதி - ரக்தமானது, கொழித்து - ஊற்றுமாறுமல் கிளர்ந்து, இழிந்து - அருவி குதித்தாற்போலே நிலத்திலே இழிந்து, குமிழ்த்து - குமிழிகிளம்பி, எறிய - அலையெறியும்படியாக, பிழக்குடைய - லோகத்தை வருத்தித் திரியும் பிழையையுடையரான, அசுரர்களை - அஸுரர்களை, பிணம்படுத்த - நாசமாக்கி விட்ட, பெருமான் - ஸர்வேச்வரன் நித்யவாஸம்பண்ணுகிற, ஊர் - தேசமாம்.

வ்யா.—(கொழுப்புடைய செழுங்குருதி) (ங) ஊட்டுப்பன்றி போலே (ச) நிணம்கொழுக்கும்படி போஷகபதார்த்தங்களை ஜீவித்து உடம்பை வளர்த்துக்கொண்டு திரிகையாலே, ரக்தமும் கொழுப்புடைத்தாய் அழகிதாயிருக்குமிறே; அத்தைப்பற்ற "கொழுப்புடைய செழுங்குருதி" என்று அருளிச் செய்கிறார். (கொழித்திழிந்து குமிழ்த்தெறிய) இப்படி யிருந்துள்ள ரக்தமானது ஊற்றுமாறுமல் கிளர்ந்து அருவி குதித்தாற்போலே நிலத்திலே யிழிந்து குமிழி கிளம்பி அலையெறியும்படியாக. (பிழக்குடைய வசுரர்களை) லோகத்தை யடைய பீடித்துக்கொண்டு திரியும் பிழைகளை யுடையரானஅஸுரர்களை. இத்தால் - அஸுர யோநியில் பிறந்தாரெல்

(க) யாழ் - வீணை. (உ) லோகபீடைபண்ணல் - உலகத்தாரைத் துன்பப்படுத்தல். (ங) ஊட்டுப்பன்றி - நல்லஆஹாரத்தால் கொழுக்கச்செய்தபன்றி. (ச) நிணம் - மாம்ஸம்.

லாரையும் நிரஸிக்கவேணு மென்னும் நிர்ப்பந்தமில்லையிறே; அவர்கள்செய்தபிழைகளைக் கணக்கிட்டே நிரஸிப்பதென்னுமிடந்தோற்றுகிறது. (பிணம்படுத்த பெருமானூர்) இப்படி யிருக்கிறவர்களை நிரஸிக்கிற விடத்தில், ஒரு (க) அங்கவைகல்யங்களைப் பண்ணிவிடுதல், குற்றுயிராக்கி விடுதல்செய்கை யன்றிக்கே, நிரந்வயவிநாசமாக்கி விட்ட ஸர்வேச்வரன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

(தழுப்பரிய சந்தநங்கள் தடவரைவா யீர்த்துக் கொண்டு) பெரிய மலையிடத்திலே வளர்ந்து, ஒருவரிருவரால் தழுவ வரிதாம்படி யிருக்கிற சந்தந மரங்களை வேரோடே (உ) அகழ்ந்து இழுத்துக்கொண்டு. (தெழிப்புடைய காவிரிவந்தடிதொழும்) "இத்தைக் கைக்கொண்டருள வேணும்" என்னுமாபோலே யிருக்கிற முழங்கின த்வநியை யுடைய காவேரியானது, ஆதரத்தோடே வந்து, தான் கொண்டு வந்த சாத்துப்படியையும் பெரியபெருமாளுக்கு ஸமர்ப்பித்துத் திருவடிகளைத் தொழாநிற்கும். (சீரரங்கமே) இப்படி யிருந்துள்ள சிறப்பை யுடைத்தான அரங்கமே. (எ)

அ.—எட்டாம்பாட்டு. ஸ்ரீவராஹமும் ஸ்ரீநரஸிம்ஹமுமாய் (ங) பூம்யுத்தரணமும் ஹிரண்ய (ச) விதாரணமும் பண்ணினவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—வல்லெயிற்றுக்கேழலுமாய்வாளெயிற்றுச்சீயமுமாய்
எல்லையில்லாத்தரணியையுமவுணனையுமிடந்தானூர்
எல்லியம்போதிருஞ்சிறைவண்டெம்பெருமான்குணம்பாடி
மல்லிகைவெண்சங்கூதும்மதிளரங்கமென்பதுவே.

ப-ரை.—இரு - பெரிய, சிறை - சிறகையுடைய, வண்டு - வண்டானது, எல்லியம்போது - அந்திப்போதிலே, எம் - ஸர்வஸ்வாமியான, பெருமான் - பெரிய பெருமாளுடைய, குணம் - திவ்யகுணங்களை, பாடி - மிக்கஅன்போடே பாடிக்கொண்டு, மல்லிகை - மல்லிகைப்பூவாகிற, வெண் - வெள்ளிய, சங்கு - சங்கை, ஊதும் - ஊதாநின்றுள்ளதாய், மதிள் - அரணாகப்போரும்படியானமதிளையுடைய, அரங்கமென்பது—; வல் - வலிதான, எயிறு - எயிறுகளையுடைய, கேழலுமாய் - வராஹமுமாய், வாள் - ஒளியையுடைத்தான, எயிறு - எயிறுகளையுடைய, சீயமுமாய் - ஸிம்ஹமுமாய், எல்லையில்லா - எல்லையில்லாத பரப்பையுடைய, தரணியையும் - பூமியையும், எல்லையில்லாத தவத்தையுடைய, அவுணனையும் - ஹிரண்யாஸுரனையும், இடந்தான் - திருவெயிற்றாலும் திருவுகிராலும் அடர்த்தவன், ஊர் - பின்புள்ளாரையும் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசமாம்.

வ்யா.—(வல்லெயிற்றுக்கேழலுமாய்) வலிதான எயிறுகளையுடைய வராஹமுமாய். *எயிற்றுக்குவன்மையாவது - "ஊன்றியிடந்

(க) அங்கவைகல்யங்களைப்பண்ணல் - அவயவங்களை மூளியாக்கிவிடுதல். (உ) அகழ்ந்து - தோண்டி. (ங) பூம்யுத்தரணம்-உலகத்தை யுயரவெடுக்கை. (ச) விதாரணம் - கிழித்தல்.

தெயிற்றிற்கொண்ட" என்கிறபடியே அண்டபித்தியிலே ஒட்டின பூமியை மறுபாடுருவக்குத்தி யிடந்தெடுத்து, தன்பக்கலிலே தரிக்கத்தக்க (க) பலம். * கேழலாகவேண்டிற்று, ப்ரளயங்கதையான பூமியை யெடுக்கும்போது நீருக்கும் சேற்றுக்கும் இறுயாதவடிவு கொண்டு எடுக்கவேண்டுகையாலே. நீரும் சேறும் காணப் (உ) பணைக்கும்படியிறே வராஹஜாதியிருப்பது. "ஆய்" என்றது - அவ்வவதாரத்தில் புரையற்றிருக்கை. மாயாம்ருகத்தை மோந்துபார்த்து "ராக்ஷஸகந்தமுண்டு" என்றுவெருவியோடிப்போயிற்றினவிறே மற்றுண்டான ம்ருகங்கள்; அப்படியன்றிக்கே, ஸஜாதீயங்கள் மோந்துபார்த்து "தன்னினம்" என்று விச்வஸிக்கும்படியிருக்கை. மநுஷ்யயோநியிலே அவதரித்தவிடத்தில் ஈச்வரத்வாபிமாந கந்தமற்று, "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றிருந்தாற்போலேயாய்த்து (ங) திர்யக்யோநியிலே அவதரித்தாலுமிருக்கும்படி. "மாநமிலாப்பன்றியாம்" என்றாரிறே-இவர்திருமகளார். மாநமிலாமையாவது - ஈச்வரத்வாபிமாநம் மறந்தும் இல்லாதபடியிருக்கை. "(ச) வராஹகல்பம் வாசியாநிற்கச்செய்தே, 'ஸ்ரீவராஹநாயனார்க்கு(ரு)முத்தக்காசையமுதுசெய்விப்பது' என்று கிடந்ததாய், 'இதென்ன (சு) மெய்ப்பாடுதான்!' என்று நஞ்சீயர் வித்தராயருளுவர்" என்று ப்ரவஸித்தமிறே. (வாளெயிற்றுச்சீயமுமாய்) ஒளியையுடைத்தான எயிறுகளையுடைய ஸிம்ஹமுமாய். கீழ், "வல்லெயிறு" என்றார் - பூமியை யெடுக்கத்தக்கபலம் சொல்லுகைக்காக; இங்கு, "வாளெயிறு" என்றார் - அழகுக்குடலாகையாலே. "அலைத்தபேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய்" "ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய்" என்று இவ்வவதாரத்துக்கு எயிறு சொல்லுமிடமெல்லாம் அழகுக் குடலாகவிறே சொல்லுவது. "சீயம்" என்றது - நரஸிம்ஹமென்றபடி. "தேவாதிசதுர்விதஜாதியில் ஒன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று அவன் கொண்டவரத்துக்கு விரோதமற அழியச்செய்கைக்காகவிறே இவ்வவதாரமாக வேண்டிற்று. "నరస్యార్థతనుం కృత్వా సింహస్యార్థతనుం తథా" "நரஸ்யார்த்ததநும் க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்ததநும் ததா" என்னும்படியிறே அப்போது அவதரித்தது. ஆகையாலே கேவலம் ஸிம்ஹமென்றாலும் நரஸிம்ஹமென்னுமிடம் அர்த்தாத்ஸித்தமாய் வரும். "ஆய்" என்கிற இது - இப்படி இரண்டுவடிவையும் சேர்த்துக் கொண்டு வந்தவிடத்தில் சேராச்சேர்த்தியாயிருக்கையன்றிக்கே,

(க) பலம் - வன்மை. (உ) பணைத்தல் - பருத்தல். (ங) திர்யக்யோநியிலே - ம்ருகத்தின் வயிற்றிலே. (ச) வராஹகல்பம் - வராஹ அவதாரவிஷயமான ஒருக்ரந்தம். (ரு) முத்தக்காசு - கோரைக்கிழங்கு. (சு) மெய்ப்பாடு- யாதார்த்யம் - மெய்யாக்குகை.

(க)சேர்ப்பாலும்கண்டசர்க்கரையும்சேர்ந்தாற்போலே ஒன்றுக்கொன்று ரஸாவஹமாய்ச் சேர்ந்து, அநுபவிப்பார்க்கு அத்யந்தபோக்யமாயிருக்கையாலே. "அழகியான்றானேயரியுருவன்றானே" என்றாரிறே திருமழிசையாழ்வார். அங்காந்தவாயும் மொறாந்தமுகமும் நா மடிக்கொண்டவுதடும் குத்தமுறுக்கினகையும் அதிர்ந்த அட்டஹாஸமுமாயிருக்கிற விருப்பிறே இவர்க்கு அழகியதாய்த் தோற்றுகிறது. ஆச்ரிதவிரோதி நிரஸநார்த்தமாகக்கொண்ட வடிவாகையாலே, அவ்வடிவும் அதிலுண்டான வ்யாபாரங்களுமெல்லாம், பகவத்குணஜ்ஞாநமுடையவர்களுக்கு அழகுக்குடலாய்த் தோற்றுமிறே. (எல்லையில்லாத்தரணியையு மவுணனையும்)எல்லையில்லாத பரப்பையுடைய பூமியையும், எல்லையில்லாத பெருந்தவத்தையுடையனான ஹிரண்யாஸுரனையும். பூமிக்கு எல்லையில்லாமையாவது - த்வீபங்களும் ஸமுத்ரங்களும் போலன்றிக்கே, எல்லாம் தன்னுள்ளேயாம்படி பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையாயிருக்கை. ஹிரண்யனுடைய தபஸ்ஸுக்கு எல்லையில்லாமையாவது-இவன்கொண்டவரம் ஒரொன்றே (உ) அவதி காணவொண்ணுதபடி யிருக்கை. (இடந்தான்) திருவெயிற்றாலும் திருவுகிராலும் இடந்தவன். திருவெயிற்றாலே பூமியை யிடக்கையாவது-அண்டபித்தியினின்றும் ஒட்டுவிடுவித்தெடுக்கை. திருவுகிராலே ஹிரண்யனையிடக்கையாவது - "பொன்னன் பைம்பூண்நெஞ்சிடந்து" என்கிறபடியே - தேவர்களுடைய வரபலத்தாலே பூண்கட்டியிருக்கிற மார்வை, அகவாயில் ரக்தம் குதிகொண்டு "இவ்வையமூடுபெருநீரில் மும்மைபெரிது" என்கிறபடியே எங்கும் பெருகும்படியாக "பிளவெழவிட்டகுட்டம்"என்னும்படி இருபிளவாக்குகை. ஆக, ஹிரண்யாக்ஷனாலும் ஹிரண்யனாலும் ப்ரணயிநியான பூமிப்பிராட்டிக்கும் பக்தனான ப்ரஹ்லாதனுக்கும் வந்த (ங) ஆபத்துக்களை, இரண்டவதாரமாய் வந்து போக்கினபடி சொல்லிற்று. ஸ்ரீவராஹமாய் ஸ்ரீபூமிப்பிராட்டிக்குப்பண்ணின ரக்ஷணம்,அல்லாத ரக்ஷணங்கள்போலன்றிக்கே முக்யமானரக்ஷணமிறே எல்லார்க்குமேல. ஸ்ரீந்ருஸிம்ஹமாய் ப்ரஹ்லாதனுக்குப் பண்ணின ரக்ஷணமும், எல்லார்க்கும் கண்டு தெளியலாம்படியிருக்குமிறே. (ஊர்) இப்படி நித்யாச்ரிதையானபிராட்டியோடு இன்று ஆச்ரயித்த ப்ரஹ்லாதனோடு வாசியற தன்னை அழியமாறிவந்து ரக்ஷித்தவன், பின்புள்ளாரையும் ரக்ஷிக்கைககாகவந்து வாஸம்பண்ணுகிற தேசம்.

(எல்லியம்போதிருஞ் சிறைவண்டு எம்பெருமான்குணம்பாடி) "அறுகால்வரிவண்டுக ளாயிரநாமஞ்சொல்லிச், சிறுகாலைப்பாடும்" என்றாரே அங்கே; இங்கே இப்படியருளிச்செய்கிறார். இத்தால் -

(க) சேர்ப்பால் - குழம்புப்பால். (உ) அவதி - அளவு. (ங) ஆபத்து- மிகுந்தவருத்தம்.

திவ்யதேசங்களில்வர்த்திக்கும் வண்டுகளானவை,காலாநுகுணமாக, பண்களிலே, பகவத்குணங்களை, நியமேந பாடும்படி சொல்லுகிறது. எல்லியம்போது - அந்தியம் போதிலே. இருஞ்சிறைவண்டு - பெரியசிறகையுடைத்தான வண்டுகளானவை. பகவத்ப்ரவணமான விஷயங்களினுடைய ரூபகுணங்களும் உத்தேச்யமென்று இருக்குமவராகையாலேயிறே இவற்றினுடைய சிறகை வர்ணித்துக்கொண்டருளிச்செய்கிறார். (எம்பெருமான் குணம்பாடி) ஸர்வஸ்வாமியான பெரியபெருமாளுடைய, கீழ்ச்சொன்ன ஆச்ரித ரக்ஷணங்களாலுண்டான திவ்யகுணங்களை ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே பாடி. (மல்லிகை வெண்சங்கூதும்) மல்லிகைப்பூவாகிற வெள்ளிய சங்கை ஊதாநிற்கும். அதாவது - ஸாயங்கால புஷ்பமான மல்லிகையினுடைய பூவை அது இருந்து ஊதும்போது, அந்தப்பூவானது அலருவதுக்கு முன்பு தலைகுவிந்து மேல்பருத்து காம்படி நேர்ந்து வெளுத்தநிறத்தையுடைத்தாய் சங்குபோலேயிருக்கையாலே, வெள்ளிய சங்கை இருந்து ஊதுமாபோலே யிருக்குமாய்த்து. அத்தைப்பற்ற இப்படியருளிச்செய்கிறார். (மதிளரங்க மென்பதுவே) இப்படி யிருந்துள்ள சோலைச் சிறப்பையுடைத்தாய் அரணுகப் போரும்படியான திருமதிளை யுடைத்தாயிருக்கிற திருவரங்க மென்பதுவே. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. அநேகத்ர்ஷ்டாந்தமிட்டுச் சொல்ல வேண்டும்படியான விக்ரஹ வைலக்ஷண்யத்தை யுடையனாய் ஆச்ரித வ்யாமுக்தனானவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—குன்றாடுகொழுமுகில்போற்குவளைகள்போற்குரைகடல்போல்
நின்றாடுகணமயில்போல்நிறமுடையநெடுமாலூர்
குன்றூடுபொழில்நுழைந்துகொடியிடையார்முலையணவி
மன்றூடுதென்றலுலாம்மதிளரங்கமென்பதுவே.

ப-ரை.—தென்றல் - தென்றற்காற்றானது, குன்று - மலயபர்வதத்தில், பொழிலூடு - சந்தந வ்ருக்ஷங்களையுடைய பொழில்களூடே, நுழைந்து—, கொடி - வஞ்சிக்கொடிபோன்ற, இடையார் - இடையையுடையரான ஸ்த்ரீகளுடைய, முலை - கலவைச் சார்த்தணிந்த முலைகளை, அணவி - ஸ்பர்சித்து, அங்குள்ள பரிமளத்தை யளைந்துகொண்டு போந்து, மன்றூடு - மன்றுகளினூடே, உலாம் - உலாவாநின்றுள்ளதாய், மதிளரங்கமென்பதுவே—; கொழு - கழுத்தே கட்டளையாக நீரைப்பருகி, குன்றூடு - மலையினுச்சியிலே சார்ந்த, முகில்போல் - மேகம்போன்ற குளிர்த்தியையும், குவளைகள் போல் - கருநெய்தல் போன்ற பளபளப்பையும், குரை - சப்தியாநின்றுள்ள, கடல்போல் - கடலையொத்த இருட்சியையும், நின்று ஆடு - களிப்பாலே நின்று ஆடாநின்றுள்ள, கணமயில்போல் - மயில்திரள் போன்ற புகரையும், நிறமுடைய - வடிவழகையுமுடையனாய், நெடுமால் - அடுத்தவர்கள்பக்கல் மிக்க வ்யாமோஹத்தையுமுடையனானவன், ஊர் - நித்யவாஸம்பண்ணும் தேசமாம்.

வ்யா.—(குன்றுடு கொழுமுகில்போல்) கழுத்தே கட்டளையாக நீரைமுகந்து, போகமாட்டாதே மலையின் உச்சியிலேசார்ந்த மேகம்போலேயும். (குவளைகள்போல்) கண்ணாலேமுகந் தநுபவிக்கும் குவளைகள்போலேயும். (குரைகடல்போல்) அநுபவித்து முடிக்கவொண்ணுமைக்கு கோஷிக்கிற கடல்போலேயும். (நின்றுடுகணமயில்போல்) வைத்தகண் வாங்கவொண்ணுமைக்கு ஹர்ஷத்தாலே நின்று ஆடாநின்றுள்ள மயில்திரள்போலேயும். (நிறமுடைய) வடிவழகையுடைய. நிறம் - அழகு. அன்றிக்கே, திருமேனிநிறந்தன்னையே சொல்லிற்றனபோது, கண்டகண்மயிர்க்குச்சிவிடும்படியான குளிர்த்திக்கு - நீர்கொண்டெழுந்த காளமேகத்தின் நிறத்தையும், செய்ப்புக்கு - குவளைப்பூவின் நிறத்தையும், இருட்சிக்கு - கடலின் நிறத்தையும், (க) புகர்ப்புக்கு - மயில் கழுத்தின் நிறத்தையும் த்ர்ஷ்டாந்தமாகச் சொல்லுகிறதென்று (உ) நியமித்துக்கொள்ள வேணும். ஒன்றே உபமாநமாகப் போருவதல்லாமையாலே அங்கும் இங்கும் கதிர்பெறுக்கிச் சொல்லுகிறார். (நெடுமாலூர்) "வ்யாமோஹ" "ஹ்ரூதநாத" என்கிறபடியே - இவ்வடிவழகை ஆச்ரிதர்க்கு (ங)முற்றூட்டாகக்கொடுக்கும் நிரதிசய வ்யாமோஹத்தையுடையவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம்.

(குன்றித்யாதி) "தென்னன்பொதியில் செழும்சந்தின்தாதளைந்து" என்கிறபடியே-மலயபர்வதத்தில் சந்தந வ்ருக்ஷங்களையுடைய பொழில்களூடே நுழைந்து அங்குண்டான பூக்களின் தாதுகளை அளைந்து (ச) அரிமிதியான பரிமளத்தைக் கொய்துகொண்டு போந்து. (கொடியிடையார்முலையணவி) நேர்மைக்கும் நுடங்குதலுக்கும் கொடிபோலே யிருக்கும் இடையையுடையரான ஸ்த்ரீகளுடைய சந்தந குங்குமாத்யலங்காரயுக்தமான முலைகளை ஸ்பர்சித்து அங்குண்டான பரிமளத்தையும் அளைந்துகொண்டு போந்து. (மன்றூடுதென்றலுலா) அது கைப்புகுந்தகர்வத்தாலே வெளிநிலத்திலே புறப்பட்டு மன்றுகளினூடே தென்றலானது உலாவாநிற்கும். (மதிளரங்கமென்பதுவே) இப்படி தென்றலுலாவுவதுமாய் அரணாகப் போரும் மதிளையுடைத்தான அரங்கமென்பதுவே. (சு)

---

(க) புகர்ப்பு - பளபளப்பு. (உ) நியமித்துக்கொள்ளல் - சிக்ஷித்துக்கொள்ளல். (ங) முற்றூட்டு - பூர்ணாநுபவம். (ச) (அரிமிதியான பரிமளத்தைக்கொய்துகொண்டு) - அதாவது—அரிஎன்று - வண்டாய், வண்டாலேமிதிக்கப்பட்ட - இளப்பப்பட்ட பரிமளமென்று ஸ்வபாவம். அறுத்தவுடனே மிதித்தநெல்என்றுசாடு. அரி - அரிந்தென்றபடி. அதுச்லாக்யமாம்போலே இங்கு ச்லாக்யமான பரிமளமென்றபடி. அரியைமிதித்த நெல்என்றும்மாம். கொய்துகொண்டு - சுற்றிக்கொண்டு.

அ.—நிகமத்தில், இத்திருமொழியைக்கொண்டு பெரியபெருமாளை யேத்துமவர்கள்விஷயத்தில் தமக்குண்டான சேஷத்வப்ரதிபத்தியை யருளிச்செய்கிறார்.

மூ.—பருவரங்களவைபற்றிப்படையாலித்தெழுந்தானைச்
செருவரங்கப்பொருதழித்ததிருவாளன்திருப்பதிமேல்
திருவரங்கத்தமிழ்மாலைவிட்டுசித்தன்விரித்தனகொண்டு
இருவரங்கமெரித்தானையேத்தவல்லாரடியோமே.

ப-ரை.—நான்முகன் முதலியோரிடத்துப் பெற்ற, பரு-பெரிய, வரங்களவைபற்றி-வரங்களான வற்றைக்கொண்டு, படையாலித்து - தன்னைப் போரப்பொலிய நினைத்து, எழுந்தானை-யுத்தவிஷயமாக கர்வித்துக் கிளர்ந்துவந்த ராவணனை, செரு - யுத்தத்திலே, அரங்க - அவனபிமான மெல்லா மழியும்படி, பொருது—; அழித்த - முடிக்கையால்வந்த, திருவாளன் - வீர ஸ்ரீயையுடையவனது, திருப்பதிமேல் - திருப்பதிவிஷயமாக, விட்டுசித்தன் - பெரியாழ்வார், விரித்தன-விஸ்தரேண வருளிச்செய்த வையாய், திருவரங்கம் - பாட்டுத்தோறும் திருவரங்கமென்கிற திரு நாமத்தையுடைத்தாய், தமிழ்மாலைகொண்டு - தமிழ்த்தொடையான விப்பத்தையுங் கொண்டு, இருவர் - மதுகைடபர்களாகிற இருவருடைய, அங்கம் - சரீரத்தையும், எரித்தானை - திருவநந்தாழ்வானுடைய மூச்சுவெப்பத்தாலே கொளுத்திப்பொகட்ட வனை, ஏத்த வல்லார்-ஏத்தவல்லவர்களுக்கு, அடியோம் - நாங்கள் சேஷபூதர்.

வ்யா.—(பருவரங்களவைபற்றி) ப்ரஹ்மாதிகள்பக்கலிலே பெற்ற பெரியவரங்களானவற்றைத் தனக்கு பலமாகப்பிடித்து. (படையாலித்தெழுந்தானை) "தான்போலுமேன்றெழுந்தான்" இத்யாதிப்படியே தன்னைப்போரப்பொலிய நினைத்து, யுத்தவிஷயமாக கர்வித்துக்கிளர்ந்துவந்த ராவணனை. (செருவரங்கப்பொருதழித்த)யுத்தத்திலே அவனுடைய அபிமாநமெல்லாமழியும்படி பொருதுமுடித்துப்பொகட்ட. (திருவாளன்திருப்பதிமேல்) வீரஸ்ரீயையுடையவன் திருப்பதிவிஷயமாக. தேசிகரானபெருமாளைச் சொன்னதெல்லாம் (க) உபஸர்ஜநகோடியிலேயாய், அத்தேசமேயாய்த்து இத்திருமொழிக்குவிஷயம். (திருவரங்கத்தமிழ்மாலையித்யாதி)பாட்டுத்தோறும் திருவரங்கமென்கிறதிருநாமத்தையுடைத்தானதமிழ்த்தொடையாக பெரியாழ்வார் விஸ்தரேணவருளிச்செய்த விப்பத்தையுங்கொண்டு. (இருவரங்கமெரித்தானை) மதுகைடபர்களாகிற இருவருடைய சரீரத்தையும் திருவநந்தாழ்வானுடைய (உ) ச்வாஸோஷ்ணத்தாலே தக்தமாக்கிப் பொகட்டவனை. "காய்ந்திருளைமாற்றிக்கதிரிலகுமாமணிகள், ஏய்ந்தபணக்கதிர்மேல்வெவ்வுயிர்ப்ப, வாய்ந்த, மதுகைடபரும் வயிறுருகிமாண்டார்" என்னக் கடவதிறே. (ஏத்தவல்லாரடி

(க) உபஸர்ஜநம் - உபயோகமின்மை. (உ) ச்வாஸோஷ்ணம் - மூச்சின் வெப்பம்.

யோமே) இத்திருமொழியைக்கொண்டு, இப்படி விரோதிநிரஸநசீல ரான பெரியபெருமாளை, வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி ஏத்தவல்லவர்களுக்கு அடியராயுள்ளவர்கள் நாங்களென்று தம்முடைய ஸம்பந்திகளையும் கூட்டிக்கொண்டு அருளிச்செய்கிறார். இத்தால் - இத்திருமொழியைக்கொண்டு பெரியபெருமாளை யேத்துமவர்கள் விஷயத்தில் தமக்குண்டான ப்ரதிபத்தி விசேஷத்தை யருளிச்செய்தாராய்த்து. (கo)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

---

அடிவரவு—மாதவப்பிறப்பு மருமகன்கூன் பெருங்கீழ் கொழுவல்லெயிற்று குன்றுபருமரவடி.

---

ஆ திருமொழி ஙசு-இ, பாட்டு-ஙகக.

---

அ.—கீழில் திருமொழியிலே - க்ருஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களும் ராமாவதாரகுண சேஷ்டிதங்களும் அவதாராந்தரகுணசேஷ்டிதங்களுமெல்லாம் பெரியபெருமாள்பக்கலிலே ப்ரகாசிக்கையாலே அவற்றையடையத்தனித்தனியேபேசி யநுபவியாநின்றுகொண்டு, தத்விஷயத்திலும் ததீயவிஷயமே உத்தேச்யமென்னும் ப்ரதிபத்தியாலே அவர்விரும்பி வர்த்திக்கிற திவ்யதேசமான திருவரங்கம்திருப்பதியினுடைய வைபவத்தை பஹுமுகமாகப் பேசியநுபவித்தார்; இப்படி யநுபவித்திருக்கச்செய்தேயும் இவ்வளவில் தமக்கு (க) பர்யாப்திபிறவாமையாலே மீளவும் ததுபயவிஷயாநுபவதத்பரராய், முன்பு அநுபவித்தப்ரகாரமன்றியே முகபேதேந பெரியபெருமாளுடைய திவ்யசேஷ்டித ரஸவிசேஷங்களை (உ)அத்யாதரேண அநுபவித்து வித்தராகாநின்றுகொண்டு தத்ஸம்பந்திதயா பரமப்ராப்யமான திருவரங்கத்திருப்பதியினுடைய வைபவவிசேஷங்களையும், முன்பு உக்தமான ப்ரகாரமன்றிக்கே ப்ரகாராந்தரேண பேசியநுபவித்து ப்ரீதராய்ச் செல்லுகிறார் - இத்திருமொழியில்.

அ.—முதற்பாட்டு. மீண்டு எழுந்தருளுமதுக்குவிச்வாஸமாக ஸ்ரீபரதாழ்வானுக்குத் திருவடிநிலைகளைக் கொடுத்துப்போய், தேவர்களுக்கு விரோதியான ராவணாதிகளை நிரஸித்து மீண்டுவந்து லோகத்தையாண்டருளினவன் வர்த்திக்கிறதேச மிதுவென்கிறார்.

---

(க) பர்யாப்தி - த்ருப்தி. (உ) அத்யாதரேண - மிக்கஅன்பினாலே.

மூ.—மரவடியைத்தம்பிக்குவான்பணயம்வைத்துப்போய்வானோர் வாழச், செருவுடையதிசைக்கருமந் திருத்திவந்துலகாண்ட திருமால்கோயில், திருவடிதன்றிருவுருவுந்திருமங்கைமலர்க் கண்ணுங் காட்டிநின்று, உருவுடையமலர்நீலங்காற்றாட்ட வோசலிக்கு மொளியரங்கமே.

ப-ரை.—உருவுடைய - அழகையுடைத்தான, நீலமலர்-கருநெய்தல்மலரானது, திருவடிதன் - பெரியபெருமாளுடைய, திரு - அழகிய, உருவும் - திருமேனிநிறத்தையும், திருமங்கை - பெரியபிராட்டியாருடைய, மலர் - விகஸிதமான, கண்ணும் - திருக்கண்களின்நிறத்தையும், காட்டிநின்று-ப்ரகாசிப்பித்துநின்றதாய், காற்று—, ஆட்ட - அசைக்க, சலிக்கும் - அசையாநின்றுள்ள, ஒளி - ஒளியையுடைத்தான, அரங்கம்—; "மீண்டெழுந்தருளித் திருமுடிசூடி ராஜ்யம்பண்ணியருளவேணும்" என்று திருவடிகளிலேவிழுந்து சரணம்புக்க, தம்பிக்கு - தம்பியானஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு, மரவடியை - திருவடிநிலைகளை, வான்பணயம் - மீண்டெழுந்தருளுகையை மிகவும்நம்புவதற்கு அடகாக, வைத்து—, வானோர் - ராவணன்முதலிய ராக்ஷஸரால் நலிவுபட்ட தேவர்கள், வாழ - அலைச்சலற்று வாழும்படியாக, போய் - சித்ரகூடபர்வதத்தினின்றும் அவ்வருகே யெழுந்தருளி, செருவுடைய - யுத்தம் செய்கைக்கு இட்டுப்பிறந்த, திசை - தக்ஷிணதிக்கிலே சென்று, கருமம்திருத்தி-ராவணன்முதலியோரை நிரஸித்து ஸ்ரீவிபீஷணாழ்வானை .லங்கைககு ராஜாவாக அபிஷேகம் பண்ணிவைத்து, வந்து - பிராட்டியோடு கூடி புஷ்பக விமாநத்திலேயேறி மிகவும் விரைவாகத் திருவயோத்யையிலே யெழுந்தருளி, திருவபிஷேகம் செய்தருளி பதினோராயிரம் ஸம்வத்ஸர மிருந்து, உலகு - லோகத்தை, ஆண்ட - ஆண்டருளின, திருமால் - ஸ்ரீயஃபதியானவன், கோயில் - ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற ஸ்தாநமாம்.

வ்யா.—(மரவடியைத்தம்பிக்கு வான்பணயம்வைத்துப்போய்) கைகேயி, "ராஜந்" "ராஜநு"என்று ஸ்வாதந்த்ர்யத்தை ஆரோபித்து வார்த்தை சொன்னபோதே பிடித்து (க) தக்தசித்தனாயிருந்து, சக்ரவர்த்திக்கு சாஸ்த்ரார்த்தங்களைப் பண்ணிவிட்ட வநந்தரம் தன்னை அபிஷேகம் செய்வதாக (உ) உத்யோகித்துக் கொண்டிருந்த (ங) ராஜலோகத்திலுள்ளாரும் பௌரஜாந பதங்களுமாயுள்ள ஸபா மத்யத்திலேவந்து, தன்னுடைய ஆற்றாமைதோற்ற (ச) ப்ரலாபித்து, புரோஹிதனை ஸ்ரீவஸிஷ்ட பகவானையும் கர்ஹித்து, "பெருமாளுக்கு சேஷபூதனானநான் முடிசூடி ராஜ்யம் பண்ணுகைக்கு அர்ஹனல்லேன்" என்னு மிடத்தை யறிவித்து, பின்பு எல்லாரையுங் கூட்டிக்கொண்டு திருச்சித்திரகூடத்திலேவந்து தன்னுடைய

(க) தக்தசித்தன் - கொளுத்தப்பட்ட மனதுடையவன். (உ) உத்யோகித்து - முயற்சிசெய்து. (ங) ராஜலோகத்தி லுள்ளாரும் பௌரஜாநபதங்களும் - ராஜக்ர்ஹத்தி லுள்ளவர்களும் பட்டணத்திலுள்ளவர்களும். (ச) ப்ரலாபித்து - அழுது.

(க) ஆர்த்திதோற்றத் திருவடிகளிலே விழுந்து சரணம்புகுந்து, தான் விண்ணப்பம்செய்தது மாறாமல் செய்கைக்கீடான(உ)ப்ராப்தி களையெல்லாம் (ங) புரஸ்கரித்து, "தேவரீர் மீண்டெழுந்தருளித் திருவபிஷேகம்பண்ணி யருளவேணும்" என்று கண்ணும் கண்ணீருமாய்க்கொண்டு ப்ரார்த்தித்த தம்பியான ஸ்ரீபரதாழ்வானுக்கு; "பிள்ளாய், நீ நம்மை நிர்ப்பந்திக்கக் கடவையல்லை, உன்னை ஸ்வதந்த்ரனாக்கி வார்த்தைசொன்னாெதிரோ உன் ஸ்வரூபாநுரூபமான பாரதந்த்ர்யத்தைப்பெற்று நீபோ, நாம் பதினாலு ஸம்வத்ஸரமும் கழிந்தாலொழிய மீளுவதில்லை" என்று ஒருபடிப்பட அருளிச்செய்கையாலே; "திருவுள்ளக்கருத்து இது, ஆனபின்பு நாம்இனிநிர்ப்பந்திக்கக்கடவோமல்லோம்"என்றுமநஸ்ஸூமீண்டு, "அடியேனுடைய ஸ்வாதந்த்ர்யநிவர்த்திக்கும், தேவரீர்மீண்டெழுந்தருளுவீரென்னும் விச்வாஸத்துக்கும் ஹேதுவானதுதானேது" என்ன; "இரண்டுக்குமாக இத்தைக்கொண்டுபோ" என்று திருவடிநிலைகளைக் கொடுத்து, "పాదుకే చాస్య రాజ్యాయ న్యాసం దత్త్వా పునః పునః । నివర్తయామాస తతో భరతం భరతాగ్రజః" "பாதுகே சாஸ்ய ராஜ்யாய ந்யாஸம் தத்வா புந: புந: । நிவர்த்தயாமாஸ ததோ பரதம் பரதாக்ரஜ:" என்கிறபடியே இத்தைப் பலகாலு மருளிச்செய்து ஸ்ரீபரதாழ்வானை உகப்பித்து (ச) மீளவிட்டு எழுந்தருளுகையாலே "மரவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய்" என்கிறார். பணயமாவது - விச்வாஸ ஹேதுவாயுள்ளது. "வான்பணயம்" என்கையாலே- மஹா விச்வாஸ ஹேதுவாயுள்ள தென்னுமிடம் தோற்றுகிறது. "வான்" என்று - வலியாதல்; பெருமையாதல். (போய்) அவனை மீளவிட்டபின்பு திருச்சித்திரகூடத்தினின்றும் அவ்வருகே யெழுந்தருளினபடியைச் சொல்லுகிறது. இத்தால் - தண்டகாரண்யத்திலே யெழுந்தருளினது முதலாக லங்காபர்யந்தமாக எழுந்தருளின தூரமெல்லாம் சொல்லுகிறது.

(வானோர்வாழ) "స హి దేవైరుదీర్ణస్య రావణస్య వధార్థిభిః । అర్థితో మానుషే లోకే జజ్ఞే విష్ణుస్సనాతనః" "ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: । அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந:" என்கிறபடியே-ராவணனாலே பீடிதராய் தத்விஷயார்த்திகளாய்சரணம்புகுந்து அவதரிப்பித்த தேவர்களானவர்கள் தந்தாம்பதங்களிலே அலைச்சலற்றிருந்து வாழும்படியாக. (செருவுடைய திசைக்கருமம்திருத்தி) "செரு" என்று-யுத்தம். "செருவுடைய திசை"

(க) ஆர்த்தி - துக்கம். (உ) ப்ராப்தி - ஸம்பந்தம். (ங) புரஸ்கரித்து - முன்னிட்டு. (ச) மீளவிட்டு எழுந்தருளுகையாலே - பரதாழ்வானை அயோத்திக்குப் போகச்செய்து, தாம்காட்டுக்கு எழுந்தருளுகையாலே.

என்று - தக்ஷிணதிக்கைச் சொல்லுகிறது. இத்திக்கிலேயிறே - ராவணாதி ராக்ஷஸரெல்லாருங் கூடிக்கொண்டிருந்தது. இந்தத் திசைக்கருமம் திருத்துகையாவது - "நாட்டை நலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு" என்கிறபடியே - தன்னுடைய அபிமாநாந்தர்ப்பூதமான நாட்டை நலிந்து திரிகிற ராக்ஷஸரானவர்களை, இருந்த விருந்தவிடங்களிலே தேடிச்சென்று கொன்று, ஜநஸ்தாநத்திலிருந்த ராக்ஷஸரை முதலறமுடித்த விசேஷத்தைக்கேட்டு, ராவணன்வந்து, தண்டகாரண்யத்திலே எழுந்தருளியிருக்கச் செய்தே பிராட்டியைப் பிடித்துக்கொண்டுபோக, அது (க) நிமித்தமாக, "కరిష్యే మైథిలీహేతో రపిశాచమరాక్షసమ్" "கரிஷ்யே மைதிலீஹேதோ ரபிஶாசமராக்ஷஸம்" என்று ஸங்கல்பித்து அவர்களைத் தேடித் திரியச்செய்தே, ராஜ்யதாரங்களை யிழந்து (உ) சுரமடைந்துகிடந்த மஹாராஜரைக்கண்டு அவரோடே உறவுகொண்டு அவருக்கு சத்ருவான வாலியை நிரஸித்து அவரை ராஜ்யதாரங்களோடே கூட்டி, பின்பு அவரையும் அவருடைய பரிகரத்தையும் துணையாகக் கொண்டு கடலையணைசெய்து, "மறுகரை யதனூலேறி" என்கிறபடியே - அவ்வழியாலே லங்கையிலே போய்ப்புக்கு, "எரிநெடுவேலரக்கரொடு மிலங்கைவேந்த னின்னுயிர்கொண்டு" என்கிறபடியே- * இலங்கை பாழாளாம்படி, ராவணனுடைய பரிகரமான ராக்ஷஸரை யடையக்கொன்று, பின்பு ராவணன்றன்னையும்முடித்து, லங்கைக்கு ராஜாவாக விபீஷணாழ்வானை அபிஷேகம்பண்ணிவைக்கை.

(வந்து) ராவணவதாநந்தரம் பிராட்டியோடே கூடியிருந்து, "చతుర్దశే హి సమ్పూర్ణే వర్షేహని రఘూద్వహ । న ద్రక్ష్యామి యది త్వాం తు ప్రవేక్ష్యామి హుతాశనమ్" "சதுர்தஶே ஹி ஸம்பூர்ணே வர்ஷேஹநி ரகூத்வஹ । ந த்ரக்ஷ்யாமி யதி த்வாம் து ப்ரவேக்ஷ்யாமி ஹுதாஶநம்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணிப்போன ஸ்ரீபரதாழ்வானை ஆழியக்கொடுக்கவொண்ணாதுஎன்று புஷ்பகவிமாநத்திலேயேறி பெரிய (௩) த்வரையோடேமீண்டு திருவயோத்யையிலே யெழுந்தருளி. (உலகாண்ட) எழுந்தருளினாற்போலே திருவபிஷேகம் பண்ணியருளி, பதினாலாண்டுபிரிந்து (௪) உருவிக்கிடந்த திருவயோத்யையிலும் கோஸலஜநபதத்திலுமுள்ள ப்ராணிகளானவை வாழும்படியாகவும், "రామమేవానుపశ్యన్తో నాభ్యహింసన్ పరస్పరమ్" "ராமமேவாநுபஶ்யந்தோ நாப்யஹிம்ஸந் பரஸ்பரம்" என்கிறபடியே - சிறியத்தைப்பெரியது நலியாதபடியாகவும், "రామో రామో రామ ఇతి ప్రజానామభవన్ కథాః" "ராமோ

(க) நிமித்தமாக - காரணமாக. (உ) சுரம் - மலை. (௩) த்வரை - விசை. (௪) உருவிக்கிடந்த - வருத்தமுற்றிருந்த.

ராமோராஜதி ப்ரஜாநாஹிதகாம்யயா" என்கிறபடியே-நாட்டைக் தன்னுடைய (க) குணஜிதராய்த் திருநாமமேசொல்லி வாய்புலத் தும்படியாகவும், "దశవర్ష సహస్రాణి దశవర్ష శతానిచ। రామో రాజ్యముపాసిత్వా" "தஶவர்ஷ ஸஹஸ்ராணி தஶவர்ஷ ஶதாநிச। ராமோராஜ்யமுபாஸித்வா" என்கிறபடியே - பதினோராயிரம் ஸம்வத்ஸரமிருந்து லோகத்தை ஸவிநயமாக ஆண்டருளின. (திருமால்கோயில்) இப்படி ராஜ்யத்தை நிர்வஹிக்கிறவளவில், பிராட்டியைப்பிரிந்து நெடுங்காலமிருந்த இழவுதீர "திருமால்" என்னும்படி பின்பு அவளோடே கூடினவன், ஆச்ரித ஜநங்களையெல்லாம் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிறகோயில்.

(திருவடியித்யாதி) ஸர்வஸ்வாமியான பெரியபெருமாளுடைய அழகியதிருமேனிநிறத்தையும், பெரியபிராட்டியாருடைய விகஸிதமான திருக்கண்களின் நிறத்தையும் ப்ரகாசிப்பித்துநின்று, அழகையுடைத்தான நீலமலரானது, காற்றுஅசைக்க அசையாநிற்கும் ஒளியையுடைத்தான திருவரங்கம். "ஓ சலிக்கும்" என்கிறவிடத்தில், ஓகாரம் - (உ) சிறப்பிலேயாதல்; (ங)அவ்யயமாதல். "அரங்கமே' என்கிறவிடத்தில், ஏகாரம் - (ச) அவதாரணவாசகமாய், ஸ்தலாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறதாதல்; ஈற்றசையாதல். (க)

அ.—இரண்டாம்பாட்டு. புருஷகாரபூதையானபிராட்டிதானே சிதகுரைக்கிலும் அவளோடே மறுதலைத்துநின்று ஆச்ரிதரை ரக்ஷித்தருளும் பெரியபெருமாள்குணத்தை யருளிச்செய்து, இப்படியிருக்கிறவிவர்க்கொழிய வேறொருவர்க் காளாவரோ வென்கிறார்.

மூ.—தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக் குமேல், என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்றுசெய் தாரென்பர்போலும், மன்னுடையவிபீடணற்காய் மதிளிலங் கைத்திசைநோக்கிமலர்க்கண்வைத்த, என்னுடையதிருவரங் கர்க்கன்றியு மற்றொருவர்க்காளாவரோ.

ப-ரை.—தாமரையாளாகிலும் - ஆச்ரிதர்குற்றங்களைக் காணுக்கண்ணிட்டு "இறையும் - அகலகில்லேன்" என்றிருக்கும் பெரியபிராட்டியாரே யாகிலும், தன் அடியார்திறத்தகத்து - *தன் பொன்னடியன்றி மற்றொன்றில் தாழ்வுசெய்யாத அன்பர்விஷயமாக, சிதகு உரைக்குமேல் - அவர்கள்குற்றங்களைக் கணக்கிட்டுச்சொல்லத் தொடங்கினளாகில், என்னடியார்-எனக்கு சேஷபூதர், *மறந்தும் புறந்தொழாதவர்களாதலால், அது-பேர்சொல்லவுங்கூடக் கூசவேண்டும்படியான அக்குற்றங்களை, செய்யார் - ஒருகாலும் செய்யமாட்டார்கள், செய்தாரேல் - "பொறுக்கைக்கு நாமுண்டு" என்னும் நினைவாலே ப்ராமாதிகமாகச்

(க) குணஜிதராய் - குணங்களில் ஈடுபட்டவர்களாய். (உ) சிறப்பு-பாதபூரணம். (ங) அவ்யயம் - சாரியை. (ச) அவதாரணம் - தேற்றேகாரம்.

செய்தார்களே யாகிலும், நன்று செய்தார் - அவை நற்றங்கிடீர், என்பர் போலும் - என்றாற்போலே சில உதாஹரணங்களை அவளோடே மறுதலைத்து வாய்திறந்து சொல்லுமவராய், மன் உடைய - செல்வம்மாறாத, விபீடணர்க்காய்-ஸ்ரீவிபீஷணாழ்வானை முடிசூடுகைக்காக, புற்றுபாம்பறாதாப்போலே ராவணனுதிராக்ஷஸவர்க்கம் மாறாதிருக்கையாலே அவர்களை நிரஸித்து "அவர்கள் கைவிஞ்சில் செய்வதென்" என்று, மதிள் - மும்மதிளையுடைத்தான, இலங்கைத்திசைநோக்கி - "தென்திசை யிலங்கை நோக்கி" என்கிறபடியே இலங்கை முகமாக, மலர்க்கண் வைத்த-ஆச்ரிதர்விடாயெல்லாம் தீரும்படி குளிர்ந்த கண்களும் தானுமாய், "குடதிசை முடியைவைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்புகாட்டி" என்கிறபடியே பள்ளிகொண்டருளுமவனாய், என்னுடைய - ஆச்ரிதர் உகந்து அடிமைசெய்யும் துறையான, திருவரங்கர்க்கன்றியும்- பெரியபெருமாளை யொழிய, மற்றொருவர்க்கு - வேறொருவர்க்கு, ஆளாவரோ - அடிமை செய்வர்களோ.

வ்யா.—(தன்னடியாரித்யாதி) பிராட்டி (க) சிதகுரைத்தாலும் "குணத்தை தோஷமாகப்ரமித்தாயோ" என்றிறே அவன் பாசுரம். பெரியபெருமாளுடைய ஆச்ரிதபக்ஷபாதாதிசயஞ் சொல்லுகிறது. இருவரும் (உ)இசலி ஆச்ரிதரைநோக்கும்படி சொல்லுகிறது. "என்னடியாரதுசெய்யார்" என்பதிலும், "சிதகுரைக்கும்" என்கிறதிறே உத்தேச்யம்;- கைக்கொள்ளுகைக்குச்சொல்லும்வார்த்தைபோலன்றிறே கைவிடாமைக்குச் சொல்லும்வார்த்தை. "அடியார்" என்று-ஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தி; "தன்னடியார்" என்று - அந்யசேஷத்வநிவ்ருத்தி. "அடியார்" என்பது-சேஷியும் உபாயமும் உபேயமும் தானாகப்பற்றினவர்களை, "அடியார்" என்று நிரூபகம் - இவர்களுக்கு; குல சரண கோத்ராதிகள் நிரூபகம்-மற்றையார்க்கு. (ங)ஔபாதிகமுமாய் அநித்யமுமாயிருக்கும் அது; நிருபாதிகமுமாய் நித்யமுமாயிருக்கும் இது. "பலசதுப்பேதிமார்" என்று நிரூபகம் அவர்களுக்கு; "திருநாரணன்தொண்டர்" என்றிறே இவர்களுக்கு நிரூபகம். ஒருமிதுநம் சேஷியானால் "தம்மடியார்" என்னவேண்டாவோவென்னில்; "தன்" என்கிறதுக்குள்ளே, தானும்அந்தர்ப்பூதையாகையாலே, அவன் ஸ்வரூபரூபகுணவிபூதியித்தனையும் இவள் (ச) தோயல்வாசியிறேயென்னுதல்; "அடியார்" என்பதுக்குள்ளே அடிமையில் அந்தர்ப்பாவம் தனக்குமுண்டாகையாலே யென்னுதல்; இத்தால்-நாரகோடிகடிதையென்கை. "மித்ரபாவேந" "ஸீதாஸஹாயேந" என்றும் "உகந்ததோழன்" என்றும் அவன் நினைவாகையாலே அவன்முன்னே "நம்மடியார்" என்னமாட்டாளே, தானும் "மித்ரமௌபயிகம்" "ஸீதௌவயிகழ்" என்றாளே, அத்தாலேயென்னுதல். "அடியா

(க) சிதகு - குற்றம். (உ) இசலி - நான் நான் என்றுமேவிழுந்து. (ங) ஔபாதிகம் - ஒருகாரணம்பற்றி வருமது. (ச) தோயல் - ஸம்பந்தம்.

ர்" என்கிற (க) பஹுவசநம் - ஊர் இரண்டிட்டவாறே அடியாரு மிரண்டிட்டதே. "மேலாத்தேவர்களும்நிலத்தேவரும்" என்று-(உ) இந்நிலத்தேவர்விஷயமாகவிறே சிதகுரைப்பது. * அருள்புரிந்த சிந்தை அடியார்மேல்வைத்துப் பொருள்தெரிந்து காண்குற்றவப் போது இருள்தெரிந்துநோக்கின அடியார்விஷயமிறே இது. திறத் தகத்து - அவர்விஷயமாக. தாமரையாளாகிலும் - பெரியபிராட்டி யாரேயாகிலும். (௩) அபிசப்தம் - ஆச்ரிதவிச்லேஷம் பொறுக்கமா ட்டாத மார்த்தவபரம்; "தன்னடியார்"என்னும்படி காட்டிக்கொடுக் கையாலும் சொல்லக்கூடாது. வெந்நீரைக் குளிர்நீர் ஆக்குமத்தனை யல்லது தான்சுடக்கூடாதிறே; அப்படியே இவள் சிதகுரைக்கக் கூடுமோ. "தன்னுகத்திருமங்கைதங்கியசீர்மார்வன்" என்று - தான் ஸத்தைபெறவிறே அவளநுபவிப்பது; இப்படி ஸத்தைபெறும்படி யான போகத்திலே புருஷகாரமாம்போது தெளிவுண்டாகவேணும்; அப்போது ப்ரணயித்வத்துக்கு (ச) நமஸ்காரமிறே. ஆனல் புரு ஷகாரமும் போகமும் சேரும்படி யென்னென்னில்; இவளைப் போலே அவன்றானும் "பித்தர்பனிமலர்மேற்பாவைக்கு" என்று - இவள் விஷயத்தில் ப்ரேமம்கனத்திருக்கும். இருவர்க்கு முண்டான ப்ரேமம் இவர்கள்பாசுரத்திலே தெரியுமிறே. "ந ஜீவேயம் க்ஷணமபி" "நஜீவெயம க்ஷணமவி"என்னும்ஒருதலை; "இறையும் - அகலகில்லே ன்"என்னும் ஒருதலை. அவன் வைச்வரூப்யமெல்லாங்கொண்டு இவ ளையநுபவிக்கவிழிந்தாலும், தன்குணரூபசேஷ்டிதங்களாலேகுமிழி நீருண்ணப்பண்ணும்; இவ்வநுபவஜநிதப்ரீதிக்குப் போக்குவீடாக "உனக்கென்செய்கேன்" என்று ஒன்றுகொடுத்தல்லது தரிக்க மாட்டாதவளவிலே, "நாம் இவன்பக்கலிலே ஒன்றுகொள்ளாதபோ து இவன்முடியும்" என்று பார்த்து, அவன் "உனக்குவேண்டுவதெ ன்?"என்றவளவிலே, "சேதநரபராதத்தைப் பொறுக்கவேணும்" என்ன; தன் ஸ்வாதந்த்ர்யத்தையும் இவர்கள்அபராதத்தையும் சாஸ்த்ர மர்யாதையையும் மறந்து "பொறுத்தேன்" என்ன; "இவன்பொறுத்ததுநமக்காகவோ, இவர்களுக்காகவோ, தன் போக த்துக்காகவோ" என்று ஆராய்கைக்காகச் சிதகுரைக்கத் துடங்கிறு ளாகில்; "என்னடியாரதுசெய்யார்"என்னும் அவன்; நீ சிதகுரைக்க க்கூடாதாப்போலே அவர்கள்செய்யவுங் கூடாது, "ஸாக்ஷியுண்டு" என்னிலும் அவர்கள்செய்யக்கூடாது, (ரு) உன்ப்ரமமாமித்தனை (என்னடியாரதுசெய்யார்) ஸ்வதந்த்ரரும் அந்யசேஷபூதரும் செய் யுமத்தை என்னடியாரும் செய்வர்களோ. "செய்தார்கள்" என்று

(க) பஹுவசநம் - பன்மையெண். (உ) இந்நிலத்தேவர் - இங்குள்ளஸ்ரீ வைஷ்ணவர்கள். (௩) அபிசப்தம் - உம்மை. (ச) நமஸ்காரம் - ப்ரயோஜந மில்லை. (ரு) உன்ப்ரமம் - உன்னுடையமதிமயக்கம்.

நிர்ப்பந்தித்தாயாகில்; அவர்கள் என்னடியாராகிறார், உன்னடியாரன்றே, நீசெல்லநில்லு. (அதுசெய்யார்) ஆச்ரயணத்துக்கு முன்பு இவள் மன்றாடும், பின்பு அவன் மன்றாடும். "அன்றின்றுதனசெய் சிசுபாலன்" என்றாற்போலேயும், "இவள் சிதகுரைக்கும்" என்றாற்போலேயும், ஈச்வரனும் "அது செய்யார்" என்று - அதின்பேர் சொல்லக் கூசினபடி. (செய்தாரேல் நன்றுசெய்தார்) "நாமுண்டு" என்றும், "ஒரு ப்ரமாணமுண்டு" என்றும், "நாம் பொறுப்போம்" என்றும் நினைத்துச் செய்தார்களாகில், அழகிதாகச்செய்தார்கள். "ஒருதர்மாதர்மமும் பரலோகமுமில்லை" என்று செய்தார்களன்றே. (க) "ப்ராமாதிகத்துக்குநாமுளோம்" என்றன்றோசெய்தது. அதாவது - மடலெடுக்கையும், காமன்காலிலேவிழுகையும். "செய்யுங்கிரிசைகள்" இத்யாதி. (என்பர்) "நாம்நெஞ்சாலே பொறுத்து இவளுக்கு முகம்கொடுத்துக்கேட்கில் இவள் இன்னமும் குறைசொல்லக்கூடும்" என்று, வாய்திறந்தருளிச்செய்வர். (போலும்) "ஓங்காண், போம்" என்றாற்போலே (உ) உதாஸீநோக்தி.

(மன்னுடைய விபீடணர்க்காய்) கீழ் அருளிச்செய்த அர்த்தத்தை மூதலிக்கிறார். ஐச்வர்யம்மாறாத விபீஷணர்க்காக, பிராட்டியையும்விட்டுப் பற்றவேண்டும்படியான மஹாராஜரையும் விட்டு, "விபீடணற்கு வேறாக நல்லானை" என்னும்படியிறே விபீஷணபக்ஷபாதம். ஆகையாலே சேர்க்கைக்கீடான பாசுரங்கேட்கு மித்தனையொழிய பிரிப்பார் பாசுரங்களோ னென்கிறது. "குற்றமுண்டு" என்ற மஹாராஜரையும், "குற்றமில்லை" என்ற திருவடி இளையபெருமாளையும் பூர்வபக்ஷமாக்கி, "குற்றமுண்டு, நான் கைக்கொள்ளக்கடவேன்" என்றாரிறே பெருமாள். "சிதகுரைக்கும்" என்றது மஹாராஜர் கோடி; "என்னடியார் அதுசெய்யார்" என்றது திருவடி இளையபெருமாள்கோடி. சிதகுரைக்கை புருஷகாரக்ர்த்யம்; "அடியார் அதுசெய்யார்" என்றது (௩) சரணாகத க்ர்த்யம்; "நன்றுசெய்தார்" என்றது சரண்யக்ர்த்யம். (மதிளிலங்கைத் திசைநோக்கி) விபீஷணனையும் லங்கையையும் மதிளையும் அத்திக்கையும் நோக்கியிறே கண்வளர்ந் தருளுகிறது. (மலர்க்கண்) பெரியபெருமாள்திருக்கண்கள் ஆச்ரிதனைக் கண்டவாறே மலர்ந்தபடி. (மலர்க்கண்) * கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டதிறே திருப்பாணாழ்வாரைக் கண்டவாறே. (என்னுடைய திருவரங்கர்க்கு) இச்செயலுக்குத் தோற்று அடிமைபுக்கு எழுதிக்கொடுக்கிறார். (மற்றொருவர்க் காளாவரே) "மற்றொன்றினைக்காணா"

(க) ப்ராமாதிகம் - தன்னையறியாமல் வருவது. (உ) உதாஸீநோக்தி - அசட்டைச்சொல். (௩) சரணாகதக்ர்த்யம் - அடைக்கலமாமவன் தொழில்.

என்கிறபடியே - பெரியபெருமாளையொழிய வேறொருத்தர்க்கு ஆளாவரோ. ஆகையாலே, சிதகுரைத்தார் ஸ்ரீரங்கநாயகியாரும் "நன்றுசெய்தார்" என்று மன்றாடினார் பெரியபெருமாளாயு மிருந்ததிறே. * அன்றேதந்தையும் தாயுமாவார் திருவரங்கத்துள்ளோ ம்குமொளியுளார்தாமேயிறே. (ஆளாவரோ) "ஆட்கொள்வா னமருமூரணியரங்கம்" என்று - ஆட்கொள்வார் பெரியபெருமாளிறே. "அணியார்பொழில்சூழ் அரங்கநகரப்பா." (உ)

அ.—மூன்றாம்பாட்டு. விரோதிநிரஸநசீலனாய், அடியாரானவர்களை (க) புநராவ்ர்த்தி யில்லாதபடி பரமபதத்திலேகொடுபோய் வைத்துஅடிமைகொள்ளுமவன்வர்த்திக்கிறதேசமிதுவென்கிறார்.

மூ.—கருளுடைய பொழின்மருதுங் கதக்களிறும் பிலம்பனையுங் கடியமாவும், உருளுடைய சகடரையு மல்லரையுமுடைய விட்டோசைகேட்டான்,இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்து டேற்றிவைத் தேணிவாங்கி, அருள்கொடுத்திட் டடியவரை யாட்கொள்வா னமருமூரணியரங்கமே.

ப-ரை.—கருளுடைய - அகவாயில் "இவனை நலியவேணும்" என்னும் சீற்றத்தையுடைத்தாய், பார்த்தவர்கள் மதிமயங்கும்படி, பொழில் - புறம்பில் சோலைசெய்து நிற்கிற, மருதும்-யமளார்ஜுநங்களாகிற இரட்டைமருத மரங்களையும், கதம் - மிக்ககோபத்தாலே எதிர்ந்துவந்த, களிறும் - குவலயாபீடமென்னும் யானையையும், * தன்னேராயிரம் பிள்ளைகள்நடுவே நம்பிமூத்தபிரானும் தானுமாய் விளையாடாநிற்கச்செய்தே நலியத்தேடின, பிலம்பனையும் - ப்ரலம்பாஸுரனையும், கடிய - அதிக்ரூரமாய் வாயை அங்காந்துகொண்டுவந்த, மாவும் - கேசியாகிற அஸுரனையும், உருளுடைய - கண்வளராநிற்கச்செய்தே நலிவதாக உருண்டுவந்த, சகடரையும் - சகடாஸுரனையும், மல்லரையும்-சாணூர முஷ்டிகர்களாகிற மல்லர்களையும், உடையவிட்டு - சிந்நபிந்நமாக்கி, ஓசை கேட்டான் - அவற்றை நிரஸித்தப்ரகாரங்களை அறிவுடையோர் ஸ்தோத்ரம் பண்ணும் ப்ரஸித்தியைக்கேட்டவன்; அடியவரை - சேஷத்வமே நிரூபகமாம்படி யிருக்கிறவர்களை; இருள் - அந்தகாரத்தை, அகற்றும் - நீக்காநின்றுள்ளவனாய், எறி - வீசுகின்ற, கதிரோன் மண்டலத்தூடு - கிரணங்களை யுடையனான ஆதித்யமண்டலத்தூடே கொடுபோய், ஏற்றி - பரமபதத்திலேயேற்றி, வைத்து - ஆநந்தமயமான திருமாமணிமண்டபத்திலே நித்யஸூரிகளோடேகூட வைத்து, ஏணிவாங்கி - தன்னுடைய உபாயபாவத்தை நிவர்த்திப்பித்து, மறுபடிமீளாமைக்கும் கைங்கர்யலாபத்துக்கு முடலாக, அருள் - தன்னுடையப்ரஸாதத்தை, கொடுத்திட்டு - இவர்களுக்குக்கொடுத்து, ஆட்கொள்வான் - அடிமை கொள்ளுகைக்காக, அமரும் - நித்யவாஸம்பண்ணுகிற, ஊர் - ஊராவது, அணி - ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கம் - திருவரங்கம் திருப்பதியாம்.

வ்யா.—(கருளுடைய பொழில்மருதும்) "கருள்" என்று-கறுப்பாய், அத்தாலே சீற்றத்தைச் சொல்லுகிறது. "கறுப்பும் சிவப்

(க) புநராவ்ர்த்தி - மீளுகை.

பும் வெகுளிப்பொருள்" என்னக் கடவதிறே. "இவனை நலியவேணும்" என்னும் அகவாயில் சீற்றத்தையுடைத்தாய், புறம்பு ஆகர்ஷகமாம்படி சோலைசெய்துநின்ற யமளார்ஜுநங்களையும். (கதக்களிறும்) (க) மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப்பிச்சேற்றி நிறுத்துகையாலே அதிகுபிதமாய்வந்த குவலயாபீடத்தையும். (பிலம்பனையும்) நம்பிமூத்தபிரானும்தானும் இடைப் பிள்ளைகளோடேகூடி விளையாடாநிற்கச்செய்தே அவர்களுக்குள்ளே ஒருவனாய்க் கலந்துவந்து தன்னோடொக்க விளையாடி நலியநினைத்த ப்ரலம்பாஸுரனையும். (கடியமாவும்) "ஸ்ருகிணீஸ்ஸகஸக்ஷ:" "வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ர:" என்கிறபடியே ஸ்ரீப்ரந்தாவநத்துக்குப் போகிற வழியிலே நலிகைக்காக அதிக்ரூரமாய் வாயை (உ) அங்காந்துகொண்டுவந்த கேசியாகிற அஸுரனையும். (உருளுடைய சகடனையும்) கண்வளராநிற்கச்செய்தே நலிவதாக உருண்டுவந்த சகடாஸுரனையும். (மல்லனையும்) குவலயாபீடத்தினுடைய ச்ருங்கபங்கத்தைப் பண்ணி, ரங்கமத்யத்திலேவந்துபுகுந்த செருக்குக்கண்டு பொறுக்கமாட்டாமல் மேலிட்டுவந்த மல்லனையும். (உடையவிட்டு) சிதிலராக்கி. நிரஸநப்ரகார பேதமுண்டானாலும் நிரஸநமொத்திருக்கையாலே "உடையவிட்டு" என்று ஒருசொல்லாலே யருளிச்செய்கிறார். "உடையவிட்டு" என்கையாலே - பசுங்கல முடைத்தாற்போலே நிரஸித்த அநாயாஸத்தைச் சொல்லுகிறது. (ஓசைகேட்டான்) இவற்றை நிரஸித்த ப்ரகாரங்களைச்சொல்லி, விசேஷஜ்ஞர்ஸ்தோத்ரம் பண்ணுகிற ப்ரஸித்தியைக் கேட்டான்.

மேலே - மோக்ஷப்ரதத்வமிறே சொல்லுகிறது. அதுதான் விரோதி நிரஸந பூர்வகமாயிறேயிருப்பது. "அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்கள்" என்று - விரோதிகள்தான் அநேகமிறே. "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" "வாஸுதேவாவெஹ்யொஹோ க்ஷயிஷ்யாமி" என்று அவற்றையெல்லாம் (௩) ஏகோத்யோகேந நிரஸித்துப் பொகட்டிறே கொடுபோவது. ஆகையால் கீழ்ச்சொன்ன விரோதிநிரஸநத்துக்கு (௪) ஸூசகம் (இருளகற்று மெறிகதிரோன்மண்டலத்தூடேற்றி) (ரு) திமிரஹரமாய்க்கொண்டு வீசுகிற கிரணங்களை யுடையனான ஆதித்யனுடைய மண்டலத்தூடே கொடுபோய் பரமபதத்திலேயேற்றி. ஆதித்ய மண்டலத்தூடே கொடுபோய் என்றவிது - (௬) "அர்ச்சிராதி மார்க்கத்தாலே

---

(க) மதகரமான - மதம்பிடிக்கத்தக்க. (உ) அங்காந்துகொண்டு - திறந்துகொண்டு. (௩) ஏகோத்யோகேந - ஓரேமுயற்சியாலே. (௪) ஸூசகம் - குறிப்பு. (ரு) திமிரஹரம் - இருளைப்போக்குமது. (௬) அர்ச்சிராதிமார்க்கம் - அக்நிலோகத்தை முதலாகவுடையவழி.

கொடுபோம்" என்னுமதுக்கு உபலக்ஷணம். "போம்வழியைத் தரும்" என்கிறபடியே - அங்குப்போய் அநுபவிக்கு மநுபவம் (க) பரிச்சிந்நமென்னும்படியிறே அர்ச்சிராதி மார்க்கத்தில் அநுபவ ஸுகம். ஆகையாலே, முந்துற இந்த ரஸத்தை அநுபவிப்பித்துக் கொண்டாய்த்து ப்ராப்யபூமியான பரமபதத்தில் ஏற்றுவது. (வைத்து) "மாமணிமண்டபத் தந்தமில் பேரின்பத் தடியரோடிருந்தமை" என்கிறபடியே ஆநந்தமயமான திருமாமணி மண்டபத்திலே நிரதிசய ஆநந்தயுக்தராய்க்கொண்டு நித்யஸூரிகளோடே கூடியிருக்கும்படிவைத்து. (ஏணிவாங்கி) ஏணியாவது - ஏறுகைக்கு ஸாதநமா யுள்ளதிறே; அத்தை வாங்குகையாவது - இவர்கள் விஷயத்தில் தன்னுடைய உபாயபாவத்தை (உ) நிவர்த்திப்பிக்கை. ப்ராப்தி யளவுமிறே உபாயமாகவேண்டுவது, மேல் உபேயமாயிருந்தே அநுபவிப்பிக்கு மித்தனையிறே. (அருள்கொடுத்திட்டு) புநராவ்ர்த்யபாவத்துக்கும் நித்யகைங்கர்யலாபத்துக்கு முடலான தன்னுடைய ப்ரஸாதத்தை இவர்களுக்குக்கொடுத்து. (அடியவரை) சேஷத்வமே நிரூபகமாகவிருக்கிற விவர்களை. ஔபாதிகமான நிரூபகங்களெல்லாம் ஸம்ஸார தசையில்வந்து கழிந்துபோமவையிறே. (௩) ஆவிர்ப்பூதஸ்வரூபனுனல் சேஷத்வமே நிரூபகமாகவிறேயிருப்பது. (ஆட்கொள்வான்) ஸ்வரூபாநுரூபமான வ்ர்த்தி விசேஷத்தைக் கொள்ளுமவன். "அடியவரை யாட்கொள்வான்" என்கையாலே - ராஜபுத்ரன்றலையிலே முடியைவைக்குமாபோலே, சேஷபூதரான விவர்களுக்கு கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைக் கொடுக்கும்படி சொல்லுகிறது. அவன்றனக்கும் ஸ்வரூபஸித்தி-ஆட்கொள்ளுகையாலேயிறே. இவன், அடிமைசெய்து ஸ்வரூபம்பெறும்; அவன், அடிமைகொண்டு ஸ்வரூபம்பெறும். சேஷபூதனுக்கு ஸ்வரூபஸித்தி கிஞ்சித்காரத்தாலே யானாற்போலே, சேஷிக்கு ஸ்வரூபஸித்தி கிஞ்சித்கார ப்ரதிஸம்பந்திதையாலேயிறே. (அமருமூர்) அப்படிசெய்யுமவன், அதுக்குஉறுப்பாக சேதநரைத் திருத்தும்படி நித்யவாஸம்பண்ணுகிறவூர். (அணியரங்கமே) "அணி" என்று - ஆபரணமாய், ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான தேசமென்கை. அன்றிக்கே, "அணி" என்று - அழகாய், மாடங்களும் மாளிகைகளும் திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருச்சோலைகளும் முதலானவற்றோடேகூடி (௪) தர்சநீயமா யிருக்கும்படியைச் சொல்லுகிற தாகவுமாம். "'பிள்ளை திருநறையூரரையரும் பட்டரும் ப்ரதக்ஷிணம் பண்ணுநிற்க பின்னே ஸேவித்துக்கொண்டு போனேன்; அல்லாதா ரெல்லாரும்

(க) பரிச்சிந்நம் - அளவுபட்டது. (உ) நிவர்த்திப்பிகை - தப்புவிக்கை. (௩) ஆவிர்ப்பூதஸ்வரூபன் - உண்டானஸ்வரூபத்தை யுடையவன். (௪) தர்சநீயம் - அழகு.

கடுங்குதிரைபோலே வாராநிற்க, இவர்கள் திருக்கோபுரங்களையும் திருமாளிகைகளையும், கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்து வாழ்ந்துகொண்டு வருகிறபடியைக்கண்டு, 'அல்லாதார்க்கும் இவர்களுக்கும் செயல்ஒத்திருக்க, இவர்களான வாசிதோற்ற விருந்தபடி யென்! என்று இருந்தேன்காணும்' என்று நஞ்சீயர் நம்பிள்ளைக்கு அருளிச்செய்தார்'' என்று ப்ரஸித்தமிறே. ப்ராப்யபூமியி லுள்ளவை யெல்லாம் விசேஷஜ்ஞரானவர்களுக்கு (க) போக்யமாயிறேயிருப்பது. (௩)

அ.—நாலாம்பாட்டு. ஸ்ரீமத்த்வாரகையிலே * பதினாறுமாயிரவர்தேவிமார் பணிசெய்யவிருந்தவன் வர்த்திக்கிறதேசமிதுவென்கிறார்.

மூ.—பதினாறுமாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரையென்னு,
மதிலநாயகராகி வீற்றிருந்த மணவாளர் மன்னுகோயில், புது
நாண்மலர்க் கமல மெம்பெருமான் பொன்வயிற்றிற் பூவே
போல்வான், பொதுநாயகம்பாவித் திறுமாந்து பொற்சாய்க்
கும் புனலரங்கமே.

ப-ரை.—துவரையென்னும் - ஸ்ரீமத்த்வாரகையாகிற, மதில் - ப்ரஸித்தமான திருப்படைவீட்டிலே, பதினாறுமாயிரவர்தேவிமார் - ராஜகந்நிகைகளான பதினாறுயிரம் தேவிமாரானவர்கள், பணிசெய்ய - தங்கள் தங்கள் அன்புக்குத் தக்கபடி நித்யகைங்கர்யம்பண்ண, நாயகராகி - அவர்களுக்கு நாயகராய்க்கொண்டு, வீறு - தன்பெருமைதோற்றும்படி, இருந்த - எழுந்தருளியிருந்த, மணவாளர் - மணவாளரானவர், அழகியமணவாளப் பெருமாளாய்க்கொண்டு, மன்னு - நித்யவாஸம்பண்ணுகிற, கோயில் - கோயிலாவது; நாள் - அப்போதலர்ந்த, புது - செவ்விகுன்றாத, கமலமலர் - தாமரைப்பூவானது, எம்பெருமான் - ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரனுடைய, பொன் - ஸ்ப்ருஹணீயமான, வயிற்றில் - திருநாபியிலுள்ள, பூவே - பூவையே, போல்வான் - போலுகைக்காக, பொதுநாயகம் - ஸர்வநிர்வாஹகத்வத்தை, பாவித்து - உடைத்தானதாய் நினைத்து, இறுமாந்து - அத்தாலே கர்வித்து, பொன் - மற்றுண்டானதாமரைகளினுடைய அழகை, சாய்க்கும் - தள்ளிவிடாநின்றுள்ள, புனல் - நீர்வளப்பத்தையுடைய, அரங்கமே - திருவரங்கமேயாம்.

வ்யா.—(பதினாறுமாயிரவர்தேவிமார் பணிசெய்ய) நரகாஸுரன்திரட்டிவைத்த ராஜகந்நிகைகளாய், அவனைநிரஸித்தவநந்தரம் அங்குநின்றும் கொண்டுவந்து திருமணம்புணர்ந்தருளின பதினாறுயிரந் தேவிமாரானவர்கள் தங்களுடைய ப்ரேமாநுகுணமாகவும் ப்ராப்யாநுகுணமாகவும் (உ) நித்யபரிசர்யைபண்ண. (துவரையென்னுமதில்) ஸ்ரீமதுரையிலே யெழுந்தருளி யிருக்கச்செய்தே

(க) போக்யம் - அநுபவிக்கத்தக்கது. (உ) நித்யபரிசர்யைபண்ண - தினந்தோறும் கைங்கர்யம்பண்ண.

இங்குள்ளா ரெல்லாரையும் அங்கேகொடுபோய்வைக்கத் திருவுள்ளம்பற்றி, ஸ்வஸங்கல்பத்தாலே யுண்டாக்கினதாகையாலே (க) அத்யந்தவிலக்ஷணமாய், ஸ்ரீமத்த்வாரகையென்று ப்ரதிதமாயிருந்துள்ள (உ) திருப்படைவீட்டிலே. (நாயகராகிவீற்றிருந்த மணவாளர்) அவர்களுக்குத்தனித்தனியே "என்னை யொழியவறியார், என்னையொழியவறியார்" என்னும்படி நாயகராய்க்கொண்டு, தம்முடைய வ்யாவ்ர்த்திதோற்ற வெழுந்தருளியிருந்த மணவாளரானவர். (மன்னுகோயில்) எட்டிழையாய் மூன்றுசரடாயிருக்கும் மங்களஸூத்ரத்தைதரித்து, தமக்குஅநந்யார்ஹராய் அநந்யபோகராயிருக்கு மவர்களோடே கலந்து அடிமை கொள்ளுகைக்காக அழகிய மணவாளப்பெருமாளாய்க்கொண்டு, அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம்பண்ணுகிறகோயில்.

(புதுநாண்மலர்க்கமலம்) அப்போதலர்ந்த செவ்வித்தாமரைப்பூவானது. (எம்பெருமான்பொன்வயிற்றில் பூவேபோல்வான்) ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரனுடைய ஸ்ப்ர்ஹணீயமானதிருவயிற்றில் பூவையொப்பான். பூவையேபோல்வதாகவென்றபடி. (பொதுநாயகம்பாவித்து) (ந) ஸர்வநிர்வாஹகத்வத்தை பாவித்து. அது ஜகத்காரணதயாஸர்வநிர்வாஹகமாயிருக்கிற விருப்பைத் தானுமுடைத்தாக பாவித்தென்கை. (இறுமாந்து) இந்தநினைவாலே கர்வித்து. (பொன்சாய்க்கும்) மற்றுண்டானதாமரைகளினுடைய அழகைத்தள்ளிவிடாநிற்கும். (புனலரங்கமே) இப்படியிருந்துள்ள ஜலஸம்ர்த்தியையுடைத்தாயிருந்துள்ள திருவரங்கமே. (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. ஸ்ரீநாரதபகவானுக்குத் தன்வைபவத்தைப்ரகாசிப்பித்த ஸர்வேச்வரன், அவன் பலகாலும் ஸ்தோத்ரம் பண்ணி வணங்க, கண்வளர்ந்த தேசமிதுவென்கிறார்.

மூ.—ஆமையாய்க்கங்கையா யாழ்கடலாயவநியா யருவரைகளாய்,
நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த்
தானுமானான், சேமமுடைநாரதனார் சென்றுசென்று துதித்
திறைஞ்சக் கிடந்தான்கோயில், பூமருவிப்புள்ளினங்கள் புள்
ளரையன் புகழ்குழறும் புனலரங்கமே.

ப-ரை.—புள்ளினங்கள் - அன்னங்கள் வண்டுகள்முதலிய பக்ஷிஸமூஹங்களானவை, பூ - நீர்ப்பூமுதலிய புஷ்பங்களில், மருவி - பொருந்தி, புள் அரையன் - தங்களுடையஜாதிக்குராஜாவான பெரிய திருவடியுடைய, புகழ் - புகழை, குழறும் - அக்ஷரஸமாகப் பேசாநின்றுள்ள, புனல் - நீர்வளப்பத்தையுடைய, அரங்கம் - திருவரங்கமானது; ஸ்ரீ நாரதபகவானுக்குத் தன்னு

(க) அத்யந்தவிலக்ஷணம் - மிகச்சிறந்தது. (உ) திருப்படைவீடு-அழகிய பட்டணம். (ந) ஸர்வநிர்வாஹகத்வம் - எல்லாவற்றையும் ஆளுந்தன்மை.

டைய ஸ்வாதந்த்ர்யத்தைக் காட்டுகைக்காக, ஆமையாய் - சங்காஜலத்துக்குள்ளே ஆமையாயும், கங்கையாய்-அந்த ஆமைமுதலிய ஸத்த்வங்களுக்கு வாஸஸ்தலமான கங்கையாயும், அந்தகங்கைமுதலிய நதிகளுக்குப் புகலிடமாய்க்கொண்டு, ஆழ் - அகாதமாயிருந்துள்ள, கடலாய் - ஸமுத்ரமாயும், அவனியாய் - அந்தஸமுத்ரந்தனக்கும் வாஸஸ்தாநமான பூமியாயும், அருவரைகளாய் - அந்தபூமிக்கும் ஆதாரங்களான பெரியமலைகளாயும், நான்முகனாய் - அந்தப்பதினான்கு உலகங்களையும் படைக்குமவனான நான்முகனாயும், நான்மறையாய்-அவனுக்கும் அந்தப்பதவிஸித்தி முதலானவற்றுக்கடியான நான்குவேதங்களாயும், அந்தவேதங்களும் தன்னைப்பற்றவே உண்டாக்கப்பட்டன வென்னும்படி, வேள்வியாய் - ஸகலர்க்கும் பலஸாதநமான யாகங்களாயும், தக்கணையாய்அந்தயாகங்களுக்கும் வீர்யத்தைக்கொடுக்கும் தக்ஷிணையாயும், தானுமானான் - அந்ததக்ஷிணைகள்முகமாக எல்லார்க்கும் அவரவர்கள் விரும்பின பலத்தைக்கொடுக்கும் அஸாதாரணவிக்ரஹவிசிஷ்டனான தானுமானவன், சேமமுடை - ப்ரஹ்மபாவநாநிஷ்டராகிய, நாரதனார் - ஸ்ரீநாரதபகவானானவர், சென்றுசென்று - பலகாலும்வந்து தம்முடைய சேஷத்வத்துக்கு அநுகுணமாக, இறைஞ்சி - ப்ரணாமாதிகளைப்பண்ணி, ஸேவித்து, துதித்து ஸ்தோத்ரம்பண்ணும் படியாகவும், ஆச்ரயணருசியுடையா ரெல்லாரும் கண்ணாலேகண்டு அநுபவிக்கும்படி யாகவும், கிடந்தான் - கண்வளர்ந்தருளுமவ னுடைய, கோயில் - தேசமாம்.

வ்யா.—துர்யோதநாதிகளுடைய யாகத்தில்வந்த ராஜாக்களெல்லாரும், ஸ்ரீமத்த்வாரகையாகிற திருப்படைவீட்டிலுண்டான அரணும்அதிலுண்டானஸம்ர்த்தியும் அங்குக்ர்ஷ்ணனெழுந்தருளியிருக்கிற மதிப்புமெல்லாம் துர்யோதநாதிகள்சொல்லக்கேட்டு, “க்ர்ஷ்ணனோடே நாம் உறவுசெய்துகொண்டு இருக்கவேணும்” என்னுமத்தைப்பற்ற, துர்யோதநாதிகளும் பாண்டவர்களும் தாங்களுமெல்லாரும் தந்தாமுடைய பரிகரங்களோடே கூடவந்து “ரைவதகம்” என்கிறபர்வதத்தைச் சூழவிட்டிருந்து, தாங்கள் ஸேவார்த்தமாகவந்த செய்தியை க்ர்ஷ்ணனுக்குவிண்ணப்பஞ்செய்து போகவிட; க்ர்ஷ்ணனும், ‘இவர்கள்ஸபரிகரராய்த்திரளவருகைக்குஹேதுவென்’’என்று சிந்தித்து, (க) நம்பிமூத்தபிரான், ஸாத்திகியாழ்வான், இவர்கள் முன்னாக, (உ) ஸபரிகரராய் ஸாயுதராய்க்கொண்டு இவர்களிருக்கிற விடத்திலே எழுந்தருளி எல்லாரையும் குசலப்ரச்நம்பண்ணி, அவர்களுடைய வயஸ்ஸுக்களுக்கும் பலங்களுக்கும் மதிப்புக்களுக்குமநுகுணமாக ஆஸநமிடவேண்டுவார்க்கெல்லா மாஸநமிடுவித்து, தாமும் தமக்கநுகுணமானதொரு திவ்யஸிம்ஹாஸநத்திலே யெழுந்தருளி யிராநிற்கச்செய்தே, ஸ்ரீநாரதபகவான் வந்து ஸேவித்து, “ఆశ్చర్యస్థఖలుదేవానా మేక స్త్వం పురుషోత్తమ। ధన్యశ్చాసిమహాబా

(க) நம்பிமூத்தபிரான் - பலராமன். (உ) ஸபரிகரராய் - பரிவாரங்களுடனே.

హో లోకే నాన్యోస్తి కశ్చన" "ஆஸ்சர்யஸ்த்வமசேஷேண புரு ஷோத்தம | யதாத்வம் ஹி மஹாபாஹோ லோகே நாந்யோஸ்தி கஸ்சந" என்று விண்ணப்பஞ்செய்ய; "ఏవముక్తస్స్మితం కృత్వా ప్రత్యువాచ మునిం ప్రభుః। ఆశ్చర్యశ్చైవ ధన్యశ్చ దక్షిణాభిస్సహేతితః" "ஏவமுக்தஸ்ஸ்மிதங்க்ருத்வா ப்ரத்யுவாசமுநிம் ப்ரபு: | ஆஸ்சர்யஸ்சைவதந்யஸ்ச தக்ஷிணாபிஸ்ஸஹேதி த:" என்று - இப்படி மஹர்ஷிசொன்னத்தைக் கேட்டு (க) ஸ்மிதம்பண்ணி, மஹர்ஷியைப்பார்த்து "தக்ஷிணைகளோடேகூட, நான் ஆச்சர்யனுகவும் (உ) தந்யனுகவும் சொல்லப்பட்டவன்" என்று அருளிச்செய்ய; இத்தைக்கேட்டு ஸந்தோஷித்து, "ఏవముక్తో మునిశ్రేష్ఠః ప్రాహమధ్యే మహీక్షితామ్। కృష్ణపర్యాప్తవాక్యోస్మి గమిష్యామి యథాగతమ్" "ஏவமுக்தோ முநிஸ்ரேஷ்ட: ப்ராஹமத்யே மஹீக்ஷிதாம் | க்ருஷ்ணபர்யாப்தவாக்யோஸ்மி கமிஷ்யாமி யதாகதம்" என்று-"இருக்கிற ராஜாக்களுடைய மத்யத்திலே தேவரீரருளிச்செய்த வாக்யத்தினுலே நான் (ந) பர்யாப்த னுகாநின்றேன், இனி வந்தவழியே போகிறேன்" என்று விண்ணப்பம் செய்து போகப்புக; இப்படி போகத்தேடுகிற நாரதபகவானைக்கண்டு, அவராலே சொல்லப்பட்ட இந்த ரஹஸ்யத்தைத் தாங்க எறியாமையாலே, க்ர்ஷ்ணனுடைய திருமுகமண்டலத்தைப்பார்த்து, "'ஆச்சர்யராகாநின்றீர், தந்யராகாநின்றீர்' என்று மஹர்ஷி சொன்னவளவிலே 'தக்ஷிணைகளோடேகூட, இப்படியே' என்று தேவரீரருளிச்செய்தஇந்த மஹாரஹஸ்யமெங்களுக்குத் தெரிகிறதில்லை, இத்தையருளிச்செய்யவேணும்" என்ன; "மஹர்ஷி தன்னைக் கேளுங்கோள், அவர் உங்களுக்குச் சொல்லக்கடவர்" என்று அருளிச்செய்து, அவரையும் "நீர் இவர்களுக்குச் சொல்லும்" என்ன; அவரும் இவர்களைப்பார்த்து, "ஆனல் கேட்கலாகாதோ" என்று சொல்லி, "అహం కదాచిద్గంగాయాం స్రోత్రిషవణాదిభిః" "அஹங்கதாசித்கங்காயாம் ஸ்ரோத்ரிஷவணாதிபி:" என்று தொடங்கி, நான் ஒருகால் கங்கைக்கரையிலே (ச) த்ரிஷவண ஸ்நாநாதிகளைப்பண்ணி வர்த்தியாநிற்கச்செய்தே, ஒருநாள் ராத்திபோய், ஆதித்ய னுதித்தவளவிலே, கூப்பீடுவழியகலமும் அதிலேரட்டி நீளமுமாய் நீருக்குள்ளேநனைந்து உடம்பெங்கும் பாசிபற்றி, கண்ணுக்கு ப்ரியமாயிருப்பதொரு (ரு) கூர்மத்தைக்கண்டு, "త్వమాశ్చర్యశరీరోసి కూర్మధన్యోసి మే మతః। యస్త్వమేవమహో దృఢాభ్యాం కపాలాభ్యాం సమావృతః॥ తోయే చరసి నిశ్శంకః కిఞ్చిదన్యమచిన్తయన్" "த்வமாஸ்சர்யஸரீரோஸிகூ

(க) ஸ்மிதம்பண்ணி - சிரித்து. (உ) தந்யன் - பாக்யவான். (ந) பர்யாப்தி - த்ர்ப்தி. (ச) த்ரிஷவணஸ்நாநம் - த்ரிகாலஸ்நாநம். (ரு) கூர்மம் - ஆமை.

ஸ்யஜெநூ்ராஸ்ஜெசித்தம் । யஸ்த்வஜெவஜெஹொதாஜஹூ்ரம் கவொலாஜஹூ்ரவஃஜெவஸ் தம் ॥ தொயெவாஸித்ஸுக்ஷ்ம் கிஞ்சிநூஜவிஷயநு" என்று - அந்தக் கூர்மத்தைப்பார்த்து, "யாதொரு இப்படி (க) கபால த்வய ஸமா வ்ர்தனுய்க்கொண்டு இந்தஜலத்துக்குள்ளே ஒன்றையும் சிந்தியாமல் (உ) நிச்சங்கனுய்க்கொண்டு ஸஞ்சரியாநின்ருய்; இப்படி யிருக்கிற நீஆச்சர்யமான சரீரத்தை யுடையனுகாநின்ருய், தந்யனுகாநின்ருய் என்று எனக்கு மதம்" என்று நான்சொல்ல; அந்தக்கூர்மந்தான், என்னைப்பார்த்து, ஒருமநுஷ்யன் சொல்லுமாபோலே, "வாராய் மஹர்ஷியே, என்பக்கல் ஆச்சர்யமேது, நான் எங்ஙனே தந்யனுகா நின்றேன், யாதொன்றிலே என்னைப்போலே பதினுயிரம் ஸத்த்வ ங்களெல்லாம் ஸஞ்சரியாநின்றன, அப்படியிருக்கிற கங்கையாகிற நதியன்றே (ங) ஆச்சர்யையும் தந்யையும்" என்றுசொல்ல; அந்த கங்கையைக்குறித்து, நான் "ஆச்சர்யையாகாநின்ருய், தந்யையா காநின்ருய்" என்று சொல்ல; அந்தகங்கையானது ஒரு வடிவுகொ ண்டுநின்று, "நான்ஆச்சர்யையுமல்ல, தந்யையுமல்ல; யாதொன்றி லே யென்னைப்போலே அநேகமாயிருந்துள்ள நதிகளெல்லாம் சென்று புகுராநின்றன, அப்படியிருந்துள்ள ஸமுத்ரமன்றே ஆச் சர்யமும் தந்யமும்" என்று சொல்ல; அநந்தரம், நான் அந்தஸமு த்ரத்தைப்பார்த்து, "லோகத்தில்வைத்துக்கொண்டு நீ ஆச்சர்யமா காநின்ருய், தந்யமாகாநின்ருய்" என்று சொன்னவாறே; அந்த ஸமு த்ரம் என்னைப்பார்த்து, "நீசொன்னஆச்சர்யமும் தந்யதையும் என க்கில்லை; நான்ருன் யாதொன்றின்மேலே வஸியாநின்றேன், அப் படியிருக்கிற பூமிக்கன்றே அவையிரண்டுமுள்ளது" என்ன; அநந் தரம், நான் பூமியைப்பார்த்து ஸ்துதித்துக்கொண்டு, "ஆச்சர்யையா காநின்ருய், தந்யையாகாநின்ருய்" என்ன; நான்சொன்ன ஸ்தோத்ர வசநத்தாலே லஜ்ஜித்து, பூமியானது என்னைப்பார்த்து, "நான் ஆச் சர்யையுமன்று, தந்யையுமன்று; எனக்கு ஆதாரங்களா யிருந்துள்ள பர்வதங்களுக்கன்றே அவையிரண்டுமுள்ளது" என்ன; அநந்தரம், நான் அந்த பர்வதங்களைக்கிட்டி, "லோகங்களில்வைத்துக்கொண்டு நீங்கள் ஆச்சர்யங்களும் தந்யங்களுமாகாநின்றிகோள்" என்ன; அந்த பர்வதங்கள், என்னைப்பார்த்து, "நாங்கள் தந்யங்களுமன்று, ஆச்சர் யங்களுமன்று; (ச) ப்ரஜாபதியான ப்ரஹ்மாவானவன் இவையிரண் டுமுடையனுகாநின்ருன்" என்ன; அநந்தரம், ப்ரஹ்மாவைச்சென்று கிட்டி (ரு) அநுவர்த்திக்கும் க்ரமத்திலே அநுவர்த்தித்து, ஸர்வ

(க) கபாலத்வயம் - இரண்டுகபாலம். (உ) நிச்சங்கனுய் - கலக்கமில்லா தவனுய். (ங) ஆச்சர்யை - ஆச்சர்யத்தையுடையவள். (ச) ப்ரஜாபதி - பிர மன். (ரு) அநுவர்த்தித்தல் - பின்செல்லுதல்.

ஸ்ரஷ்டாவான அவனுடைய வைபவத்தையெல்லாம் சொல்லிக்கொண்டு, "ஆச்சர்யனும் தந்யனுமாகாநின்றாய், உன்னையொப்பார் லோகத்தில் ஒருவருமில்லை" என்ன; அந்த லோகபிதாமஹனான ப்ரஹ்மாவானவன், என்னைப்பார்த்து, "ஆச்சர்யனென்றும் தந்யனென்றும் என்னை ஸ்துதிக்கிறதென்; ரிக்யஜுஸ்ஸாமாதர்வண ரூபங்களாய், தத்த்வார்த்த தர்சகங்களாய், லோகங்களையும் என்னையும் தரியாநின்றன யாவை சிலவேதங்கள், அவற்றுக்கன்றோ யிவையிரண்டுமுள்ளது" என்ன; அநந்தரம், நான் வேதங்களைக்கிட்டி, அவற்றினுடைய வைபவத்தைச்சொல்லி ஸ்துதித்துக்கொண்டு, "நீங்களன்றோ தந்யரும்ஆச்சர்யபூதரும்" என்ன; அந்தவேதங்கள், என்னைப்பார்த்து, "நாங்கள் (க) யஜ்ஞார்த்தமாக (உ) ஸ்ர்ஷ்டங்களென்பது யாதொன்று, ஆகையாலே அஸ்மத்பராயணங்களா யிருக்கிற யஜ்ஞங்களுக்கன்றோ அவையிரண்டுமுள்ளது" என்ன; அநந்தரம், நான் அந்த யஜ்ஞங்களைப்பார்த்து ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு, "லோகத்தில் உங்களிற்காட்டில் தந்யங்களுமில்லை, ஆச்சர்யங்களு மில்லை" என்ன; அந்த யஜ்ஞங்கள், என்னைபபார்த்து, "ఆశ్చర్యశ్చైవ నాన్యోఽస్తి ధన్యశ్చైవ మహామునే। ఆశ్చర్యం పరమం విష్ణుస్సహ్యస్మాకం పరా గతిః ॥ యదాజ్యం చ యజామస్స్మ హుతమగ్నిషు పావనమ్। తత్సర్వం పుణ్డరీకాక్షో లోకమూర్తిః ప్రయచ్ఛతి" "ஆஶ்சர்யஶ்சைவ நாந்யோஸ்தி தந்யஶ்சைவ மஹாமுநே। ஆஶ்சர்யம் பரமம் விஷ்ணுஸ்ஸஹ்யஸ்மாகம் பராகதி: ॥ யதாஜ்யம் ச யஜாமஸ்ஸ்ம ஹுதமக்நிஷு பாவநம்। தத்ஸர்வம் புண்டரீகாக்ஷோ லோகமூர்த்தி: ப்ரயச்சதி" என்று - "ஆச்சர்ய சப்தமும் தந்யசப்தமும் எங்கள்பக்கலில்லை, விஷ்ணுவாயிருக்கும் பரமமான ஆச்சர்யம் அவனேயாயிருக்கும் எங்களுக்கு (ங) பரையானகதி; அக்நிகளில் (ச) ஹுதமாயிருந்துள்ள யாதொரு ஆஜ்யத்தை நாங்கள் புஜியாநின்றோம், அதினுடைய பலத்தையெல்லாவற்றையும், புண்டரீகாக்ஷனாய் லோகமூர்த்தியான வவனன்றோ கொடுக்கிறான்" என்ன; இத்தைக்கேட்டு, நான் பூமியிலேவந்து, உங்கள்திரளுக்கு நடுவேயிருக்கிற க்ர்ஷ்ணனைக்கண்டு ஸேவித்து, "நீர் ஆச்சர்யரு மாகாநின்றீர், தந்யருமாகாநின்றீர்" என்றுகொண்டு என்னாலே விண்ணப்பம் செய்யப்பட்டவார்த்தை யாதொன்று, அதுக்கு ப்ரத்யுத்தரமாக; "దక్షిణాభిస్సహోచితః" "தக்ஷிணாபிஸ்ஸஹோசித:" என்றுகொண்டு, க்ர்ஷ்ண னருளிச்செய்தவார்த்தை எனக்கு (ரு) பர்யாப்தமான வசநம்.

---

(க) யஜ்ஞார்த்தமாக - வேள்விக்காக. (உ) ஸ்ர்ஷ்டங்கள் - படைக்கப்பட்டவை. (ங) பரையானகதி - மேலானகதி. (ச) ஹுதமாயிருந்துள்ள - சொரியப்பட்ட. (ரு) பர்யாப்தமான - த்ர்ப்திகரமான.

எங்ஙனே யென்னில் ; — [illegible] [யஜ்ஞா நாம் ஹி மதி ஷ்ட்டோ ஸர்வேஷாம் ஸ்வஸ்தக்ஷிண: । தக்ஷிணாபிஸ் ஸஹைதேய்வம் ப்ரச்நம் ஸமாப்தவாந்] என்று-எல்லா யஜ்ஞங்களுக்கும் தக்ஷிணைகளோடே கூடி யிருந்துள்ள ஸர்வேச்வரன் கதியாகையாலே, "[illegible]" "தக்ஷிணாபிஸ் ஸஹைதேய்வம்" என்கிற இதினுலே என்னுடைய (க) ப்ரச்நமானது பரிஸமாப்த மாய்த்ததென்று சொல்லி; "[illegible]" "க்ருஷ்ணாபிஹித உக்தம் வாக்யம் ப்ராஹ்மணம் । ஸதக்ஷிணே ஸ்வயம் புருஷே தத்ப்ரதிபாதிதம்" என்று - கூர்மத்தாலே முன்பு சொல்லப்பட்டதாய், (உ) பாரம்பர்யத்தாலே இவ்வளவும் வந்திருப்பதாய், "ஆச்சர்யனுகாநின்றுய், தங்யனுகாநின்றுய்" என்கிறவாக்யம், (ங) ஸதக்ஷிணனுன க்ர்ஷ்ணனுகிற இந்தப் புருஷன்பக்கலிலே என்னுலே (ச) ப்ரதிபாதிக்கப்பட்டது. "[illegible]" "யந்நாம் ஹவத ப்ருச்சந்தி வாக்யஸ்யாஸ்ய விநிர்ணயம் । ததேதத் ஸர்வமாக்யாதம் ஸாதயாமி யதாகதம்" என்று"-இந்தவாக்யத்தினுடைய யாதொருநிர்ணயத்தை நீங்கள் ப்ரச்நம் பண்ணினிகோள், அதெல்லாம் என்னுலே சொல்லப்பட்டது ; இனி, நான்வந்தவழியேபோகிறேன் என்று ஸ்ரீநாரதபகவான் சொன்னதாக, (ரு) ஸ்ரீஹரிவம்சத்திலே நூற்றைம்பத்தொன்பதா மத்யாயத்திலே சொல்லப்பட்டகதையை இப்பாட்டிலே இவர் ஸங்க்ரஹேணை வருளிச்செய்கிறுர்.

(ஆமையித்யாதி) ஸ்ரீநாரதபகவானுக்குத் தன்னுடைய (சு) ஸர்வாதிகத்வத்தை (எ) ப்ரகாசிப்பிக்கைக்காக, ப்ரதமம் கங்காஜலத்துக்குள்ளே (அ) ப்ர்ஹத்ரூபமாய் ப்ரியகரமாய் ஆச்சர்யமாயிருப்பதோ ராமையாய் ; அநந்தரம், அந்த ஆமைக்கும் அநேகமாயிரம் ஸத்த்வங்களுக்கும் வாஸஸ்தலமாம்படியான பெருமையையுடையகங்கையாய் ; அந்த கங்கைக்கும் மற்றும் அநேகமாயிருந்துள்ள நதிகளுக்கும் புகலிடமாய்க்கொண்டு, (கூ) அகாதமாயிருக்கும் பெருமையையுடைய ஸமுத்ரமாய்; அநந்தரம், அந்தஸமுத்ரந்தனக்

(க) ப்ரச்நம் - கேள்வி. (உ) பாரம்பர்யத்தாலே - தொன்றுதொட்டு வருகையாலே. (ங) ஸதக்ஷிணன் - தக்ஷிணையோடுகூடினவன். (ச) ப்ரதிபாதிக்கப்பட்ட - சொல்லப்பட்ட. (ரு) ஹரிவம்சம் - ஸ்ரீமஹாபாரதத்தின் ஓர் பிரிவு. (சு) ஸர்வாதிகத்வம் - எல்லாவற்றிலும் உயர்ந்திருக்கை. (எ) ப்ரகாசிப்பித்தல் - வெளிப்படுத்தல். (அ) ப்ர்ஹத்ரூபம் - பெரியவடிவு. (கூ) அகாதம் - மிகுந்த ஆழம்.

கும் தன்னுள்ளே வாஸஸ்தாநமாம்படியான பெருமையையுடைய பூமியாய்; அநந்தரம், அந்தபூமிக்கும் ஆதாரங்களான பெருமையையுடைய பர்வதங்களாய்; அநந்தரம், (க) சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவானபெருமையையுடையசதுர்முகனாய்; அநந்தரம், அவன்றனக்கும் அந்தபதவித்திமுதலானவற்றுக்கடியான பெருமையையுடைய சதுர்வேதங்களாய்; அநந்தரம், அந்தவேதங்களும் தன்னைப்பற்றவே ஸ்ரஷ்டங்களாய்த்தின என்னும்படியாய், ஸகலர்க்கும் பலஸாதநமான பெருமையையுடைய யாகங்களாய்; அநந்தரம், அவற்றுக்கும் வீர்யத்தைக் கொடுக்கும் பெருமையையுடைய தக்ஷிணையாய்; அநந்தரம், அந்த தக்ஷிணைகளுடைய த்வாரா, ஸர்வர்க்கும் தத்த தபேக்ஷாநுகுணமாக (உ) ஸர்வாபீஷ்டங்களையும் கொடுக்கும் பெருமையையுடையனாய் (ங) அஸாதாரண விக்ரஹவிசிஷ்டனான தானுமானவன். இதில் (ச) ப்ரதமோக்தமான கூர்மம், இவன்றன்னுடைய ஆவிர்ப்பாவ விசேஷமாகையாலே, இவன்றனாகச் சொல்லிற்று. நடுவேசொன்னவை யெல்லாவற்றுக்கும் ஒன்றுக்கொன்று அதிகமாகச் சொன்ன (ரு) மாஹாத்ம்யம் இவனுடைய (சு) புத்யதீநமாகையால், தந்நிர்வாஹ்ய நிர்வாஹக ஸம்பந்த நிபந்தநமான ஸாமாநாதிகரண்யத்தாலே அவற்றை யெல்லாம் இவனாகச் சொல்லிக்கொடுபோந்தது.

(சேமமுடைநாரதனார் சென்றுசென்று துதித்திறைஞ்ச) இது கீழோடும் மேலோடும் அந்வயித்துக்கிடக்கிறது. சேமம் - ரக்ஷை. சேமமுடையனாகையாவது-கர்மபாவனையன்றிக்கே, ப்ரஹ்மபாவநாநிஷ்டனாயிருக்கை. "நாரதனார்" என்றது-"𑌸𑌰𑍍𑌵𑌸𑌂𑌶𑌯𑌨𑌿𑌰𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌨𑌾𑌰𑌦𑌃 𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌵𑌿𑌤𑍍" "ஸர்வஸம்ஶயநிர்முக்தோ நாரதஸ்ஸர்வதர்மவித்" என்கிற (எ) ஜ்ஞாநாதிக்யத்தாலும், பகவத்ஸந்நிதியிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாகாநிற்கும் (அ) ப்ரேமாதிக்யத்தாலு முண்டான (கூ) கௌரவாதிசயத்தாலே. "சென்றுசென்று துதித்திறைஞ்ச" என்றது - கீழோடே அந்விதமானபோது, கூர்மாதிகளான வ்யக்திகள் தோறும் சென்று அவற்றினுடைய ஆச்சர்ய தந்யதைகளைச்சொல்லி ஸ்துதித்துக்கொண்டு போந்தபடி சொல்லுகிறது; மேலோடே அந்வயித்தபோது, "சென்று சென்று" என்கிற வீப்ஸை -

---

(க) சதுர்த்தசபுவநம் - பதினான்குலகம். (உ) ஸர்வாபீஷ்டங்களையும் - அவர்கள் விரும்பினவற்றையெல்லாம். (ங) அஸாதாரணவிக்ரஹம் - திவ்யமங்களவிக்ரஹம். (ச) ப்ரதமோக்தமான - முதலிற்சொன்ன. (ரு) மாஹாத்ம்யம் - பெருமை. (சு) புத்யதீநம் - அறிவின்வசமாயிருப்பது. (எ) ஜ்ஞாநாதிக்யம் - சிறந்த அறிவு. (அ) ப்ரேமாதிக்யம் - அன்பின் மிகுதி. (கூ) கௌரவாதிசயம் - மிகவும் நன்குமதிக்குந்தன்மை.

பலகாலும்வந்து ஸேவிக்கும்படியைச் சொல்லுகிறது. "இன்பத் தும்புருவு நாரதனும் இறைஞ்சியேத்த" என்றும், "தும்புருநாரதர் புகுந்தனர்" என்றும் இந்தஸ்தலத்திலே பலகாலும்வந்து ஸேவிக் கும்படியைச் சொல்லிற்றிறே. துதிக்கையாவது - வீணாபாணியாய்க் கொண்டு ஸந்நிதியிலேவந்து (க) காநமுகேந ஸ்தோத்ரம்பண்ணு கை. இறைஞ்சுகையாவது - தன்னுடைய (உ) சேஷத்வத்துக்கும் எதிர்த்தலையில் (ங) சேஷித்வத்துக்கும் அநுகுணமாகத் திருவடி களிலே ப்ரணாமாதிகளைப் பண்ணுகை. (கிடந்தான்கோயில்) இப் படி ஸ்ரீநாரதபகவான் ஸேவிக்கும்படியாகவும், ருசியுடையாரெல் லார்க்கும் கண்ணாலேகண்டு ஆச்ரயிக்கைக்கும் அநுபவிக்கைக்கு முடலாகவும், "கிடந்ததோர்கிடக்கை" என்கிறபடியே-(ச) கிடை யழகால்வந்த மினுக்கம் தோற்றும்படியாகக் கண்வளர்ந்தருளின வனுடையதேசம்.

(பூமருவிப்புள்ளினங்கள்) "நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ" என்கிற பூக்களின் குளிர்த்தியாலும் (ரு) மார்த்தவத்தாலும் பரிம ளத்தாலும் மதுவாலுமுண்டான போக்யதையாலே விடமாட்டா தேபொருந்தி, அன்னங்கள் வண்டுகள்முதலான பக்ஷிஸமூஹங்க ளானவை தங்களுடைய ஜாதிக்கு ராஜாவான பெரியதிருவடியுடை யபுகழை, (சு) அநக்ஷரரஸமாகப் பேசாநிற்கும்படியாய், அவற்று க்கு போக்யமான புஷ்பங்கள் மிகவுமுண்டாகைக்கடியான ஜலஸம் ர்த்தியை யுடைத்தாயிருக்கிற திருவரங்கமே. கீழ்ச்சொன்னபடி யே ஸ்ரீநாரதபகவானுக்குத் தன்னுடைய ஸர்வாதிகத்வத்தை ப்ர காசிப்பிக்கைக்காக, கூர்மாதிகளான (எ) வ்யக்திகள்தோறும் அவ ன்வந்து ஸ்துதித்திறைஞ்ச பாரம்பர்யேணவந்து தானுமானவனாய், பின்பு அவனுக்கும் பலகாலும்ஸேவ்யனாய்க்கொண்டு கண்வளர்ந்தரு ளினவனுடைய கோயில் - திருவரங்கம் என்றந்வயம். (ரு)

அ.—ஆறும்பாட்டு. த்ரௌபதியைக் குழல்முடிப்பித்து, பா ண்டவர்களையே ராஜாக்களாக்கி, உத்தராதநயனையும் உஜ்ஜீவிப் பித்தவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசமிதுவென்கிறார்.

மூ.—மைத்துனன்மார்காதலியை மயிர்முடிப்பித் தவர்களையே
மன்னராக்கி, உத்தரைதன்சிறுவனையு முய்யக்கொண்ட வுயி
ராள னுறையுங்கோயில், பத்தர்களும் பகவர்களும் பழமொ
ழிவாய்முனிவர்களும் பரந்தநாடும், சித்தர்களுந் தொழுதி
றைஞ்சத் திசைவிளக்காய்நிற்கின்ற திருவரங்கமே.

---

(க) காநம் - பாட்டு. (உ) சேஷத்வம் - உடைமையாகுகை. (ங) சேஷி த்வம் - உடையவனாகுகை. (ச) கிடையழகு - பள்ளிகொண்டருளுமழகு. (ரு) மார்த்தவம் - மென்மைத்தன்மை. (சு) அநக்ஷரம் - எழுத்தில்லாமை. (எ) வ்யக்திகள் - வடிவுகள்.

ப-ரை.—பத்தர்களும் - பக்தர்களும், பகவர்களும் - ஸந்யாஸிகளும், பழமொழி - பழமொழியாயிருந்துள்ள வேதத்தை, வாய் - வாக்கிலேயுடையரான, முனிவர்களும் - ரிஷிகளும், பரந்த - விஸ்தீர்ணமான, நாடும் - நாட்டிலுள்ளாரும், சித்தர்களும் - நித்யமுக்தரும், தொழுது - அஞ்சலிசெய்து, இறைஞ்ச - ஸாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணும்படி, திசை - எல்லாத்திசைகளுக்கும், விளக்காய் நிற்கின்ற - ப்ரகாசகமாய்க்கொண்டு நிற்கிற, திருவரங்கம் - அரங்கமா நகரமானது; மைத்துனன்மார் - மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு, காதலியை - அபிமதையான த்ரௌபதியை, மயிர்முடிப்பித்து - குழல் முடிப்பித்து, அவர்களையே—, மன்னராக்கி - அரசாளவைத்து, உத்தரைதன் - அபிமந்யுவின் மனைவியான உத்தரையென்பவளுடைய, சிறுவனை - பிள்ளையாய்க் கரிக்கட்டையாய்க் கிடந்த பரிக்ஷித்தை, உய்யக்கொண்ட - திருவடிகளாலேஸ்பர்சித்து உயிர்பெற்று எழுந்திருக்கும்படி பண்ணினவனாய், உயிராளன் - எல்லாவுயிர்களுக்கும் நாதனானவன், உறையும் - நித்ய வாஸம்பண்ணுகிற, கோயில் - தேசமாம்.

வ்யா.—(மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித்து) மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு (க) அபிமதையான த்ரௌபதியைக் குழல்முடிப்பித்து. "[Telugu-script quotation]" "ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா வஸிஷ்டா ஸஹாமதா" என்கிறபடியே துச்சாஸநன்வந்து மயிரைப்பிடித்திழுக்க, அன்றுமுதலாக "என்னையிதுசெய்தவனையும் இதுக்கு (உ) ப்ரவர்த்தகரானவர்களையும் கொன்று களப்படுத்தினலொழிய குழல்முடியேன்" என்றிறே யிவளிருந்தது. பதினலு ஸம்வத்ஸரம் காட்டிலே திரிந்தகாலத்தோடு நாட்டிலே வந்தகாலத்தோடு வாசியற, இவள், விரித்ததலையுந் தானுமாய்த் திரிகிறபடியைக்கண்டு, "இவள்ஸங்கல்பத்தின்படியே கார்யம்செய்துகொடுத்து இவள் குழல்முடித்தவன்றிறே நாம் சரணாகதரக்ஷகனென்னும்பேர்படைப்பது" என்றிறே க்ர்ஷ்ணன் திருவுள்ளமிருந்தது. தூதுபோனதும், ஸாரத்யம் பண்ணிற்றும், பரமரஹஸ்யமான ப்ரபத்தியை உபதேசித்ததுமெல்லாம் இதுக்காகவிறே. எங்ஙனேயென்னில்; - தூதுபோனது, *பொய்ச்சுற்றம் பேசிச்சென்று பேதஞ்செய் தெங்கும் பிணம்படுத்துகைக்காக. ஸாரத்யம் பண்ணிற்று, "ஆயுதமெடுக்க வொண்ணாது" என்கையாலே, *கொல்லாமாக்கோல் கொலைசெய்து எல்லாச்சேனையு மிருநிலத்து அவிக்கைக்காக. ப்ரபத்யுபதேசம் பண்ணிற்று, * [Telugu-script quotation] * க்ஷுத்ரம்ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப என்று, "[Telugu-script quotation]" "நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண" என்று-காண்டீவத்தையும்பொகட்டு யுத்தாந் நிவர்த்தனை னவிவனை, "[Telugu-script quotation]" "கரிஷ்யே வசநம்தவ" என்று-(ங) யுத்தேப்ரவர்த்தனும்படி பண்ணுகைக்காக.

---

(க) அபிமதையான - காதலியான. (உ) ப்ரவர்த்தகர் - முயன்றவர்கள். (ங) யுத்தேப்ரவர்த்தனும்படி - யுத்தத்தில்ப்ரவேசிக்கு.

ஆகையால் இவையெல்லாம் இவள்குழலை முடிப்பிக்கைக்காகச் செய்தவையென்னக் குறையில்லை, ... ஐதஸ்த்ரைஸ்ரைக்ஷம்ப்ரதிஜ்ஞாய' 'ஐதுர்ப்பாகதுஷ்டஸ்தக்ஷ்யாமி' என்றவோபாதி, 'ஐதந்த்ரோத்த ஸ்பரிக்ஷ' 'ஐதுஷ்டநாதவஸ்யாய' என்கிறவிதுவும் முன்னே சொல்லிக் கொள்ளவிறே யடுப்பது; அங்ஙன்செய்யாதே, முந்துற, அர்த்தத்தை யருளிச்செய்து வைத்து, பின்னை இத்தை யருளிச்செய்வானென்?" என்று ஜீயர் பட்டரைக் கேட்க; "த்ரௌபதி குழல்விரித்துக்கிடக் கையாலே செய்வதறியாமல், மூலையில்கிடந்தாரை முற்றத்திலே யிடுவாரைப்போலே, பரமரஹஸ்யமானத்தை வெளியிட்டுக்கொண்டு நின்றான்; பின்னை அர்த்தத்தின்சீர்மையை (க) அநுஸந்தியா, 'கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே பொகட்டோம்!' என்று பதண் பதணென்றான்காணும்" என்றிறே யருளிச்செய்தது.

(அவர்களையே மன்னராக்கி) கீழே, "மைத்துனன்மார்" என்கையாலே, "அவர்களையே" என்று (உ) பராமர்சிக்கிறார். "நாடுடைமன்னர்" என்கிறபடியே - ராஜ்யப்ராப்தரிவர்களாயிருக்க, *பொய்ச்சூதிலே தோற்பித்து, இவர்கள்ராஜ்யத்தைத் தாங்களே வாங்கிக்கொண்டு, இவர்களைக்காட்டிலே தள்ளிவிட்டு, மீண்டு நாட்டிலே வந்தவிடத்திலும், "இவர்களுக்கு ஒரு கோல்குத்து நிலமும் கொடோம்"என்று தாங்களே எல்லாம் ஆளுவதாகஇருந்த துர்யோதநாதிகளைக் கிழங்கெடுத்துப்பொகட்டு, ராஜ்யத்துக்கு ப்ராப்தரானவர்களையே ராஜாக்களாக்கி. (உத்தரைதன் சிறுவனையு முய்யக் கொண்ட) கீழ் - "மருமகன்றன் சந்ததி" என்றார்; இங்கு - "உத்தரைதன் சிறுவன்" என்கிறார். அங்கு - பித்ர்ஸம்பந்தத்தை யிட்டுச் சொன்னார்; இங்கு - மாத்ர்ஸம்பந்தத்தை யிட்டுச் சொல்லுகிறார். பிதாவான (ங) அபிமந்யு யுத்தத்திலே பட்டுப்போகையாலே, "இவனை யிழந்தோம்" என்னும் க்லேசம் அவனுக்கு இல்லையிறே; மாதாவிறே இருந்து க்லேசப்படுகிறவள்; இப்ப்ரஜை பிழைத்தால் உள்ளப்ரியமும் அவளுக்கேயிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறது. (உய்யக்கொண்ட) கரிக்கட்டையாய்ப் போனவனையும், ஸத்ய வசநத்தாலும் திருவடிகளினுடைய ஸ்பர்சத்தாலும், போனவுயிரை மீட்டு எழுந்திருக்கப்பண்ணின. "உய்யக்கொண்ட" என்றது - உஜ்ஜீவிப்பித்த வென்றபடி. (உயிராளன்) ஸர்வாத்ம ஸாதாரண நாதனானவன். (உறையும்கோயில்) அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம்செய்கிற கோயில்.

---

(க) அநுஸந்தியா - நினைத்து. (உ பராமர்சித்தல் - நினைத்தல். (ங) அபிமந்யு - அர்ஜுநன்மகன்.

(பத்தர்களும்) "மாலேயுற்றெழுந் தாடிப் பாடித்திரிந்தரங்க னெம்மானுக்கே, மாலேயுற்றிடும் தொண்டர்" என்கிற பக்தர்களும். (பகவர்களும்) "சிற்றெயிற்று முற்றல்மூங்கில் மூன்று தண்டரொன் றின ரற்றபத்தர்" என்கிறஸந்ந்யாஸிகளும். (பழமொழிவாய் முனிவர்களும்) அபௌருஷேயமாய் நித்யமாயிருக்கையாலே பழமொழியா யிருந்துள்ள வேதத்தை எப்போதுமொக்க வாக்கிலே யுடையரா யிருக்கும் ரிஷிகளும். (பரந்தநாடும்) "தென்னாடும் வடநாடும்" என்னும்படி விஸ்தீர்ணமான நாட்டிலுள்ளாரும். (சித்தர்களும்) நித்ய விபூதியிலே ஆநந்த நிர்ப்பரராயிருக்கும் நித்யமுக்தரும். (தொழுதிறைஞ்ச) அஞ்சலிப்ரணாமாதிகளைப் பண்ணும்படியாக. (திசைவிளக்காய்நிற்கின்ற)ஸர்வதிக்குக்களுக்கும் ப்ரகாசமாய்க்கொண்டு நிற்கிற. ஏதேனு மோரிடத்திலே இருந்தாலும் அத்திக்கை நோக்கி வணங்கும்படியிறே இதினுடைய ப்ரகாசமிருப்பது. "దేశాన్తరగతో వాపి ద్వీపాన్తరగతోపివా । శ్రీరఙ్గాభిముఖో భూత్వా ప్రణిప్రత్యనసీదతి" "ஜெஶாந்தரகதொவாபி த்வீபாந்தரகதொபிவா । ஸ்ரீரங்காபிமுகொபூத்வா ப்ரணிபத்ய நஸீததி" என்னக்கடவதிறே. (திருவரங்கமே) இப்படியிருந்துள்ள திருவரங்கமே - உயிராளனுறையுங் கோயில். (கூ)

அ.—ஏழாம்பாட்டு. ஸ்ரீவாமநனாய் மாவலியைக்குறும்பதக்கி ராஜ்யத்தைவாங்கி அவனைப்பாதாளத்திலே வைத்தவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—குறட்பிரமசாரியாய் மாவலியைக் குறும்பதக்கி யரசுவாங்கி,
இறைப்பொழுதிற் பாதாளங் கலவிருக்கை கொடுத்துகந்த
வெம்மான்கோயில், எறிப்புடைய மணிவரைமே லிளநாயி
றெழுந்தாற்போ லரவணையின்வாய்ச், சிறப்புடைய பணங்
கண்மிசைச் செழுமணிகள் விட்டெறிக்குந் திருவரங்கமே.

ப-ரை.—எறிப்புடைய - மிக்கவொளியையுடைத்தா யிருப்பதொரு, மணிவரைமேல் - நீலரத்நபர்வதத்தின்மேலே, இள நாயிறு - பாலஸூர்யர்கள், எழுந்தாற்போல் - உதித்தாற்போலே, அரவணையின்வாய் - திருவநந்தாழ்வானிடத்தில், சிறப்புடைய - அழகிய, பணங்கள்மிசை - படங்கள்மேலுண்டான, செழு-பெரிய, மணிகள் - ரத்நங்களானவை, விட்டு எறிக்கும் - மிகவும் ப்ரகாசியாநின்றுள்ள, திருவரங்கம்—; மாவலியை-மஹாபலியிடத்திலே, குறட்பிரமசாரியாய்-சிறியப்ரஹ்மசாரியாய்ச் சென்று, குறும்பு அதக்கி - "மூவுலகுக்கும் நாமேகடவோம்" என்று அவன்கொண்ட செருக்கைக்குலைத்து, அரசு - ராஜ்யத்தை, வாங்கி - அவன்கையில் நீரேற்றுவாங்கி இந்த்ரனுக்குக்கொடுத்து, இறைப்பொழுதில் - அற்பகாலத்திலே, பாதாளம் - பாதாளலோகத்தை, கலவிருக்கைகொடுத்து - அவனுக்கு இருப்பிடமாக்கி, உகந்த - "அடைக்கலம்புகுந்த இந்த்ரனிழவுதீரப் பெற்றோம்" என்று ப்ரீதனான, எம்மான்-என்ஸ்வாமியானவன், கோயில் - நித்யவாஸம்பண்ணும் கோயில்.

வ்யா.—(குறட்பிரமசாரியாய்)வாமநப்ரஹ்மசாரியாய். (குறள்) கோடியைக் காணியாக்கினாற்போலே, பெரியவடிவைக்கண்ணாலே முகந்து அநுபவிக்கலாம்படி சுருக்கினபடி. சேர்ப்பால்சுருங்கின தனையும் ரஸிக்குமாபோலே, வடிவும் சுருங்கினதனையும் ரஸாவஹமாயிருக்குமாய்த்து. "புலங்கொள்மாணாய்" என்றாரிறே (க) ஆழ்வார். இவ்வடிவழகாலேயிறே மஹாபலியை வசீகரித்தது. (பிரமசாரியாய்) அதுக்குமேலே ஒருவசீகாரஸாதநமிறேயிது. "பொங்கிலங்குபுரிநூலும் தோலுந்தாழ" என்கிறபடியே - யஜ்ஞோபவீதமும் க்ர்ஷ்ணாஜிநமும் முஞ்சியுமானவிநீதவேஷம். இந்த்ரன், "என்னுடையராஜ்யத்தையிழந்தேன், அத்தைமீட்டுத்தரவேணும்" என்று கண்ணும் கண்ணீருமாய்வந்து சரணம்புகுந்து நின்றான்;"ப்ரபலனாயிருப்பா னொருவனுடையராஜ்யத்தைப் பறித்துக்கொண்டான், ராவணாதிகளைப்போலே அழியச்செய்யப் போகாதாய்த்து ஔதார்யமென்றொரு குணலேசத்தை யேறிட்டுக்கொண்டிருக்கையாலே, இனிஇரண்டுக்கும் அவிருத்தமாகச்செய்வதென்" என்றுபார்த்து, "அவன் கொடுக்க உகந்திருக்குமாகில் நாம்சென்று இரக்கக்கடவோம்" என்றிறே இரப்பிலே (உ) தகணேறின ப்ரஹ்மசாரியாய்த்து. (மாவலியை) "கோவாகியமாவலியை" என்கிறபடியே - ஸர்வேச்வரன் இந்த்ரனுக்குக்கொடுத்த த்ரைலோக்யைச்வர்யத்தை பலத்தாலேபறித்துக்கொண்டு, ஒருத்தர்கீழடங்காமல் தன்னரசாயிருந்த மஹாபலியை. (குறும்பதக்கி) கள்ளர், பள்ளிகள், ஸாதுக்களுடைய ஸ்வத்தை அடித்துத் தங்களதாக்கிக்கொண்டு ஒருத்தர்கீழடங்காதேயிருக்குமாபோலே, பரஸ்வாபஹாரத்தைப்பண்ணி அதில் ஒரு பயமற்று, தன்னுடைமையை தான்ஜீவிக்குமாபோலே ஜீவித்திருந்த, குறும்பையடக்கி-செருக்கைவாட்டி. (அரசுவாங்கி) கீழ்ச்சொன்ன வடிவழகையும் (ஙு) விநீதவேஷத்தையும் முன்னிட்டுக்கொண்டுசென்று அவனை சித்தாபஹாரம்பண்ணி, "கொள்வன், நான், மாவலி, மூவடி, தா" என்று சில அநந்வித பாஷணங்களைப் பண்ணி, இந்த (ச) மௌக்த்யத்தாலும் அவன்நெஞ்சை யிளகப்பண்ணி, சுக்ராதிகள், "இவன் தேவகார்யம் செய்யவந்தான், உன் ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கவந்தான்" என்று சொல்லுகிறவார்த்தையும் அவன்செவியில்படாமல் உதகம்பண்ணித் தரும்படியாக்கி, "பொற்கையில்நீரேற்று" என்கிறபடியே-கொடுத்துவளர்ந்த பொலிவையுடைத்தான கையிலே (ரு) உதகத்தையேற்று, இந்த்ரனதான ராஜ்யத்தை அவன்பக்கல்நின்றும் வாங்கி. (இறைப்பொழுதில) இதுதான் செய்கிறவளவில், காலதைர்க்யமன்றிக்கே, அல்பகாலத்தி

(க) ஆழ்வார் - நம்மாழ்வார். (உ) தகண் - தழும்பு. (ஙு) விநீதம்-கீழ்ப்படிகை. (ச) மௌக்த்யம் - பேதைமைத்தன்மை. (ரு) உதகம்-ஜலம்.

லே செய்து. (பாதாளம்கலவிருக்கைகொடுத்து) "மூன்றடி" என்று வாங்கி, இரண்டடியாலே ஸர்வலோகத்தையு மளந்து, "ஒன்றும் தருகவென மாவலியைச் சிறையில்வைத்த" என்கிறபடியே - மற்ற ஓரடியும்தருமளவும், சிறை வைப்பாரைப்போலே, பாதாளத்தை அவனுக்கு இருப்பிடமாக்கி. "பாதாளத்தேதள்ளி" என்னாதே, "கலவிருக்கைகொடுத்து" என்றது - அவ்விருப்பு சிறையிருப்பாக வன்றிக்கே போகபூமியாகக் கொடுத்தபடியைப்பற்ற. கலவிருக்கை யாவது-நெஞ்சுகலந்திருக்கும் இருப்பிறே. கலவிருக்கையாகக் கொடுத்தென்றபடி. (உகந்த) இவனுக்கு இவ்விருப்பைக்கொடுத்து, இந்த்ரனுக்கு அவனிழந்த ராஜ்யத்தைக்கொடுத்து, "சரணாகதனை னவனிழவுதீரப்பெற்றோம்"என்று ப்ரீதனானான். (எம்மான்கோயில்) என்னுடைய ஸ்வாமியானவன் அநந்யப்ரயோஜந ரானவர்களுக்குத் தன்னைக்கொடுக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிறகோயில்.

(எறிப்புடையமணிவரைமேல்) அதிப்ரகாசமாயிருப்பதொரு நீலரத்ந பர்வதத்தின்மேல். (இளஞாயிறெழுந்தாற்போல்) பாலாதித்யர்கள் உதித்தாற்போலே. (அரவணையின்வாய் சிறப்புடைய பணங்கள்மிசைச் செழுமணிகள் விட்டெறிக்கும்) திருவநந்தாழ்வானிடத்தில் அழகிய பணங்களின்மேலுண்டான பெரிய ரத்நங்களானவை மிகவும் ப்ரகாசியாநிற்கும். இத்தால் - திருவரவணையின் மேலே, * பச்சைமாமலைபோலே யிருக்கும் திருமேனியோடே பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாளை யநுபவிப்பார்க்கு அத் திருவநந்தாழ்வானுடைய ஒளிதானே ப்ரகாசகமா யிருக்கும்படி சொல்லுகிறது. (திருவரங்கமே) கீழ்ச்சொன்ன விதுவேயாய்த்து இத்தேசத்துக்குச் சிறப்பு. (எ)

அ.—எட்டாம்பாட்டு. அதிக்ரூரனை ஹிரண்யனை யடர்த்துப் பிடித்து நிரஸித்தவன் வர்த்திக்கிறதேசமிதுவென்கிறார்.

மூ.—உரம்பற்றி யிரணியனையுகிர்நுதியாலொள்ளிய மார்புறைக்க வூன்றிச், சிரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க வாயலரத் தெழித்தான்கோயில், உரம்பெற்ற மலர்க்கமல முலகளந்த சேவடிபோலுயர்ந்துகாட்ட, வரம்புற்றகதிர்ச்செந்நெல்தாள் சாய்த்துத் தலைவணக்குந் தண்ணரங்கமே.

ப-ரை.—உரம்பெற்ற - செழிப்புடைத்தான, கமலமலர் - தாமரைப்பூவானது, உலகளந்த - திருவுலகளந் தருளினபோது உயரவெடுத்த, சேவடிபோல் - திருவடிகளைப்போலே, உயர்ந்துகாட்ட - வளரவளர்ந்து ப்ரகாசிக்க, வரம்புற்ற-வரம்புசேர்ந்து விளைந்து நிற்பதாய், கதிர் - கதிரையுடைத்தான, செந்நெல்-செந்நெற்களானவை, தாள் - தாள்களை, சாய்த்து - நீட்டி, தலை - தலையை, வணக்கும் - வளையாநின்றுள்ளதாய், தண்-குளிர்த்தியையுடைய, அரங்கம்-திரு

வரங்கமானது; உரம்பற்றி - தேவர்களால்பெற்ற வரபலத்தையுடைய, இரணியனை - ஹிரண்யனை, உகிர்நுதியால் - திருவுகிரின்கூர்மையாலே, ஒள்ளிய மார்பு - அவனுடைய அழகியமார்விலே, உறைக்க - மறுபாடுருவும்படியாக, ஊன்றி—, முடி - கிரீடமானது, இடிய - பொடிபடும்படியாகவும், கண் - கண்களானவை, பிதுங்க - பிதுங்கும்படியாகவும், வேதனைகள் பொறுமையால், வாய்—, அலர -அலரும்படியாகவும், சிரம் - தலையை, பற்றி - பிடித்து நெரித்து, "ப்ரஹ்லாதன் விரோதிபோகப் பெற்றோம்" "என்னும் களிப்பாலே, தெழித்தான் - ஆரவாரம் செய்தவன் நித்யவாஸம்பண்ணுகிற, கோயில்-கோயிலாம்.

வ்யா.—(உரம்பற்றியிரணியனை) தேவர்கள்கொடுத்த வரபலங்களையும் தன்னுடையபுஜபலத்தையும் நினைத்து, "ஒருவராலுமோரழிவில்லை"என்று, வரங்கொடுத்த தேவர்களோடு அல்லாதாரோடு வாசியற எல்லாரையும் நெருக்கித்தன்கீழேயாக்கி, "தன்னுடைய நாமமேயொழிய பகவந்நாமம் அத்தேசத்தில் நடக்கவொண்ணாது" என்றுவிலக்கி, திருநாமம்சொன்னதுவே ஹேதுவாக, * பள்ளியிலோதிவந்த தன்சிறுவனை ப்ரஹ்லாதனை வாசாமகோசரமான பீடைகளைப்பண்ணின ஹிரண்யன், "பிள்ளாய், நீசொல்லுகிறவன் எங்கேயுளன்?" என்று கேட்டபோது, "எங்குமுளன்"என்று ப்ரஹ்லாதன்சொல்ல, "இங்குமுளனோ" என்று * தானளந்திட்ட தூணிலேயடிக்க, "ஆங்கேவளர்ந்திட்டு வாளுகிர்ச்சிங்கவுருவாய்" என்கிறபடியே-தேவர்கள்கொடுத்தவரத்தில் அகப்படாததொரு வடிவைக்கொண்டு, அத்தூணைப் பிளந்துகொண்டு புறப்பட்டு, "அடித்தகைபிடித்தபெருமாள்" என்னும்படி அத்தூணில் அடித்தகை வாங்குவதற்கு முன்னே பலத்தாலேவந்து அமுக்கிப்பிடித்து. (உகிர்நுதியால்) "அஸ்த்ர சஸ்த்ரங்களொன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொள்ளுகையாலே, அவற்றால் நிரஸிக்கப்போகாமையால் திருவாழி துடக்கமானவையும் அழகுக்குடலா யிருந்துவிட, திருவுகிரை ஆயுதமாகக்கொண்டு அதினுடைய கூர்மையாலே. (ஒள்ளியமார்புறைக்கவூன்றி) ஆபரணங்கராகாதிகளாலே அலங்கரித்து, அவன் பலகாலும்பார்த்து அநுபவித்துக் கொண்டிருந்த அழகியமார்விலே மறுபாடுருவும்படியாகவூன்றி. (சிரமித்யாதி) அபிஷேகமானது பொடிபடும்படியாகவும், கண்கள் பிதுங்கும்படியாகவும், வேதனைகள் பொறாமல் வாய்அலரும்படியாகவும், தலையைப்பிடித்துநெரித்து, "ப்ரஹ்லாதனுடைய விரோதிபோகப்பெற்றோம்" என்னும் ப்ரீதியாலே (க) ஆர்ப்பரவம்செய்து, அவன் இங்ஙனொத்தவிரோதிகளைப்போக்கி ஆச்ரிதரைரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிறதேசம்.

---

(க) ஆர்ப்பரவம் - ஆரவாரம்.

(உரம்பெற்றவித்யாதி) சேற்றுவாய்ப்பாலே உரம்பெற்றிருக்கிற தாமரைப்பூவானது, திருவுலகளந்தருளினபோது மேலெடுத்த திருவடிகளைப்போலே கிளரவளர்ந்து ப்ரகாசியாநிற்க. (வரம்புற்றவித்யாதி) அப்போது, "ப்ரஹ்வாஸ்ஸுராணாம்" "ஸமேக்ஷ்யஸுராணாம்" என்கிறபடியே - தேவர்கள்முதலானவர்கள் திரண்டு காலைநீட்டித் தலையைவணக்கித் தண்டனிட்டுக் கிடந்தாற்போலே, வரம்புசேர்ந்து விளைந்துநிற்கிற செந்நெற்களானவை தாள்களைநீட்டித் தலையைவணக்கும் சிறப்பையும், ஸர்வர்க்கும் தாபஹரமான குளிர்த்தியையுமுடைத்தான திருவரங்கமே. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. தசாவதாரமாய்க்கொண்டு ஜகத்ரக்ஷணம்பண்ணுமவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசமிதுவென்கிறார்.

மூ.—தேவுடையமீநமாயாமையாயேனமாயரியாய்க் குறளாய், மூவுருவிலிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான் கோயில், சேவலொடுபெடையன்னஞ் செங்கமல மலரேறி யூசலாடிப், பூவணைமேல்துதைந்தெழுசெம்பொடியாடிவிளையாடும்புனலரங்கமே.

ப-ரை.—சேவலொடு - புருஷஹம்ஸத்தோடே, பெடையன்னம் - ஸ்த்ரீஹம்ஸமானது, செங்கமலமலர்-செந்தாமரைப் பூவின்மேலே, ஏறி-ஏறியிருந்து, ஊசலாடி - அத்தையசைத்து ஊசலாடி, பூவணைமேல் - அந்த புஷ்பசயநத்தின் மேலே, துதைந்து - ஒன்றுக்கொன்று பிணங்கி உழறுதலாலே, எழு - கிளர்ந்த, செம்பொடி - சுண்ணமாகிற சிவந்தபொடியிலே, ஆடி - முழுகி, விளையாடும் - விளையாடாநின்றுள்ள, புனல் - நீர்வளப்பத்தையுடைய, அரங்கம் - திருவரங்கமானது; தேவுடைய - தேஜஸ்ஸையுடைய, மீநமாய் - மத்ஸ்யாவதாரம் செய்தருளியும், அம்ர்தம்கடையும்போது மந்தரபர்வதமாகிற மத்து அசையாமைக்கு ஆதாரமான, ஆமையாய் - கூர்மாவதாரம் செய்தருளியும், ப்ரளயார்ணவ மக்நையான பூமிப்பிராட்டியை யுயரவெடுக்கைக்காக, ஏனமாய் - வராஹாவதாரம் செய்தருளியும், "தேவர்முதலியோரால் சாகக்கடவேனல்லேன்" என்று வரங்கொண்ட ஹிரண்யனைக் கொல்லுகைக்காக, அரியாய் - ந்ர்ஸிம்ஹாவதாரம் செய்தருளியும், மஹாபலியாலே பறித்துக்கொள்ளப்பட்ட ராஜ்யத்தை இந்த்ரனுக்கு மீட்டுக்கொடுக்கைக்காக, குறளாய் - வாமநாவதாரம் செய்தருளியும், துஷ்டராஜாக்களை யழிக்கைக்காகவும் ராவணவதார்த்தமாகவும் அஸுரத்தன்மையுள்ள அரசர்களை நிரஸிக்கைக்காகவும், மூவுருவிலிராமனாய் - பரசுராமன் தசரதராமன் பலராமன் என்கிற மூன்றவதாரம் செய்தருளியும், கண்ணனாய் - பூமிப்பொறையை நீக்குகைக்கு க்ர்ஷ்ணாவதாரம் செய்தருளியும், கலிகல்கஷிதரான துஷ்டரை நிரஸிக்கைக்காக, கற்கியாய் - கல்க்யாவதாரம் செய்தருளியும், முடிப்பான் - துஷ்டவர்க்கங்களை முடிக்குமவன் நித்யவாஸம்பண்ணுகிற, கோயில் - கோயிலாம்.

வ்யா.—(தேவுடைய) தேஜஸ்ஸையுடைய. இது, ஸகலாவதாரவிசேஷணம். சேதநனுடைய ஜந்மம், கர்மநிபந்தநமாய்ஸ்வா

ர்த்தமா யிருக்கையாலே பிறக்கப்பிறக்க ஒளிமழுங்கிவாராநிற்கும்; ஈச்வரனுடைய ஜந்மம், ஐச்சமாய் பரார்த்தமா யிருக்கையாலே பிறக்கப்பிறக்க ஒளிபெற்று வாராநிற்கும். "பல்பிறப்பாய் ஒளி வரும்" என்றருளிச் செய்தாரிறே. "ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:" "ஸஉஶ்ரேயாநுஹவதிஜாயமாநஃ" என்னக்கடவதிறே. உகாரம் (க) அவதாரண வாசகமாய், (உ) ஸஏவச்ரேயாந் என்றபடி. அதாவது - அவனே ஜாயமாநனுய்க்கொண்டு ச்ரேயாநுகாநின்றவனென்கை. அவதாரணத்தாலே - சேதநனை (ந) வ்யாவர்த்திக்கிறது. (மீநமாய்) * வானோரளவும் முதுமுந்நீர் வளர்ந்தகாலம் வந்துய்யக் கொண்ட மத்ஸ்யாவதாரமாய். (ஆமையாய்) தேவகார்யார்த்தமாக அம்ர்தமதநம் பண்ணுகிறபோது மந்தாநமான மந்தரத்துக்கு ஆதாரமான கூர்மாவதாரமாய். (ஏனமாய்) ப்ரளயங்கதையாய் அண்டபித்தியிலே சேர்ந்த பூமியை உத்தரிக்கைக்கிடான வராஹாவதாரமாய். (அரியாய்) "தேவாதி யோநிகளொன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொண்ட ஹிரண்யனை நிரஸிக்கைக்கிடான நரஸிம்ஹாவதாரமாய். (குறளாய்) மஹாபலியாலே அபஹ்ர்தமான ராஜ்யத்தை இந்த்ரனுக்கு வாங்கிக்கொடுக்கைக்காக வாமநாவதாரமாய். (மூவுருவிலிராமனாய்) அதாவது - துஷ்டக்ஷத்ரிய நிரஸநார்த்தமாக பரசுராமாவதாரமாய், ராவணவதார்த்தமாக தசரதராமாவதாரமாய், அஸுரப்ரக்ர்திகளான க்ஷத்ரியாதிகளை நிரஸிக்கைக்காக பலபத்ரராமாவதாரமாய். இதில் நடுவுசொன்ன ராமாவதாரம் முக்யம்-ஸ்வரூபேணுவதரித்த தாகையாலே; பூர்வோத்தரங்களிரண்டும் கௌணம்-ஆவேசாவதாரங்களாகையாலே. ஆனல் இவைதன்னை முக்யாவதாரங்களோடே கூட பரிகணிப்பானென்னென்னில்; ஸ்வரூபாவேசமாகையால் வந்த (ச) உத்கர்ஷத்தாலே; இவற்றில் பரசுராமாவதாரம், அஹங்கார யுக்தஜீவனை (ரு) அதிஷ்டித்து நிற்கிறதாகையாலே, முமுக்ஷுக்களுக்கு (சா) அநுபாஸ்யம்; பலபத்ர ராமாவதாரம், அஹங்கார கந்தரஹிதமாய் ஈச்வரனுக்கு (எ) அத்யந்தாபிமதவிஷயமாயிருக்கையாலே, முக்யாவதாரங்களோபாதி உபாதேயம். அநுபாஸ்யமான அவதாரந்தன்னை இவரருளிச்செய்வானென்னென்னில்; தசாவதாரமு மருளிச்செய்கிறவராகையாலும், அவ்வவதாரத்தில்பண்ணின விரோதிநிரஸநம் தமக்கு அபிமதமா யிருக்கையாலு மருளிச்செய்தார். "மன்னடுங்க

(க) அவதாரணம் - தேற்றேகாரம். (உ) ஸஏவச்ரேயான் - அவனேச்ரேயஸ்ஸையுடையவன். (ந) வ்யாவ்ர்த்திக்கிறது - வேறுபடுத்துகிறது. (ச) உத்கர்ஷம் - உயர்த்தி. (ரு) அதிஷ்டித்துநிற்கை - உள்புகுந்திருக்கை. (சா) அநுபாஸ்யம் - நினைக்கத்தகாதது. (எ) அத்யந்தாபிமதவிஷம் - மிகவும் விரும்பும்படியான விஷயம்.

மழு வலங்கைக்கொண்ட விராமநம்பி" என்றிறே மேலும் இவரருளிச்செய்தது. (கண்ணனாய்) பூபாரநிரஸநார்த்தமாக க்ர்ஷ்ணனாய். (கற்கியாய்) (க) கலிகல்கதூஷிதரான துஷ்டரை நிரஸிக்கைக்காக கல்க்யாவதாரமாய். (முடிப்பான்) இப்படி இவ்வவதாரங்களாய்க் கொண்டு துஷ்க்ர்த்துக்களை முடிக்குமவன். (கோயில்) அவதாரத்துக்குப் பிற்பாடரானவர்களையும் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

(சேவலித்யாதி) அபிமதவிஷயமான சேவலோடேகூட அதுதனக்கு அபிமதமாயிருந்துள்ள பெடையன்னமானது, சிவந்ததாமரைப் பூவின்மேலே யேறியிருந்து, (உ) ஸ்வவ்யாபாரங்களாலே முழுகி, அத்தைபசைத்து ஊசலாடி. (பூவணையித்யாதி) பூப்படுக்கையின்மேலே பரஸ்பர ஸம்ச்லேஷ கார்யரூபமான உழறுதலைச் செய்து, அத்தாலே அதினின்றும் கிளர்ந்த சுண்ணமாகிற சிவந்த பொடியிலேமுழுகி, இப்படியிருந்துள்ள லீலாவ்யாபாரங்களைப் பண்ணும்படியான ஜலஸம்ர்த்தியையுடைய திருவரங்கமே. (கூ)

அ.—பத்தாம்பாட்டு. ஸர்வநிர்வாஹகனாய் ஸ்ரிய:பதியானவன் ஸரஸமாகக் கண்வளர்ந்தருளுகிற தேசமிதுவென்கிறார்.

மூ.—செருவாளும்புள்ளாளன் மண்ணாளன் செருச்செய்யுநாந்தகமென்னு, மொருவாளன் மறையாளனோடாதபடையாளன் விழுக்கையாளன், இரவாளன்பகலாளனென்னையாளனேழுலகப் பெரும்புரவாளன், திருவாளனினிதாகத் திருக்கண்கள்வளர்கின்ற திருவரங்கமே.

ப-ரை.—செருஆளும் - துணைதேட்டமின்றித்தானே போர்செய்யவல்ல, புள் - பெரியதிருவடியை, ஆளன் - ஆளுமவனாய், மண்ணாளன் - லீலாவிபூதியை யாளுமவனாய், செருச்செய்யும் - ஆச்ரிதவிரோதிகள்மேலே பூசல்செய்யாநிற்பதாய், நாந்தகமென்னும் - நந்தகமென்னும் திருநாமத்தையுடைத்தாய், ஒரு - ஒப்பற்ற, வாளன் - கொற்றவொள்வாளை யுடையனாய், மறையாளன் - நான்கு வேதங்களையும் ஆளுமவனாய், ஓடாத - யுத்தத்தில் முதுகுகாட்டியோடாத, படையாளன் - இப்படிப்பட்ட பரிகரத்தையுடையனாய், விழு - சீர்மையோடேகூடின, கையாளன் - கொடையையுடையனாய், இரவாளன் பகலாளன் - இரவு பகலாகிய காலங்களுக்குத் தலைவனாய், என்னையாளன் - என்னையாளுமவனாய், ஏழுலகம் - ஸப்தலோகங்களாகிற, பெரு - பெரிய, புரவு - ஸக்ஷேத்ரங்களை, ஆளன் - ஆளுமவனாய், திருவாளன் - பெரியபிராட்டியாரை திவ்யமஹிஷியாக வுடையனுமானவன், இனிதாக - திருவுள்ளத்தி லுகப்போடே, திருக்கண்கள் வளர்கின்ற - திருக்கண் வளர்ந்தருளுகிற கோயில, திருவரங்கமே - திருவரங்கந் திருப்பதியாம்.

---

(க) கலிகல்கதூஷிதர் - கலியின்பாபத்தாலே நிந்திக்கப்பட்டவர்கள்.
(உ) ஸ்வவ்யாபாரம் - தன்னுடையசெயல்.

வ்யா. — (செருவாளும் புள்ளாளன்) யுத்தத்தை ஸ்வயமேவ நிர்வஹியாநிற்கும் பெரியதிருவடியை ஆளுகிறவன். ஆச்ரித விரோதிகளான அஸுரராக்ஷஸரோடே யுத்தம்பண்ணுமிடத்தில், அந்த யுத்தத்தைப்பெரியதிருவடிதானேநடத்த, இவன் காணவந்த சோழரோபாதி அத்தைக்கண்டுகொண்டு அவன்றோளிலே இருக்குமத்தனையாய்த்து. "பாறிப்பாறி யசுரர்தம்பல்குழாங்கள் நீறெழப் பாய்பறவையொன்றேறிவீற்றிருந்தாய்" என்றாரிறேஆழ்வார். அதாவது- அஸுரவர்க்கத்தினுடைய பலவகைப்பட்டகுழாங்களானவை, பாறிப்பாறி நீறெழுந்துபோம்படியாக, ப்ரதிபக்ஷத்தின்மேலே பாயாநின்றுள்ள அத்விதீயமான பெரியதிருவடியை மேற்கொண்டு தன்னுடைய வ்யாவ்ர்த்திதோற்ற விருந்தவனென்றபடி. "புகழ்நின்ற புள்ளூர்தி" என்று - விரோதி நிரஸநத்தால்வந்த புகழடங்கலும் கிடப்பது அவன்பக்கலிலே. "அவனை வாஹநமாக வுடையனென்கிறதே யவனுக்கேற்றம்" என்றருளிச்செய்தாரிறே.

(மண்ணாளன்) நித்யஸூரிகளில் தலையான பெரியதிருவடியை வாஹநமாகவுடையவ னென்கையாலே - நித்யவிபூதியையாளுமவனென்னுமிடம் சொல்லிற்றாய், இத்தால் - லீலாவிபூதியை ஆளும்படி சொல்லுகிறது. ஆச்ரிதாநாச்ரித விபாகமற மண்ணிலுள்ளாரெல்லாரையும் ஆளுகிறவன். ஆச்ரிதரை, "நம்மோட்டை ஸம்பந்தமறிந்தவர்கள்" என்று ஆளும்; ஆநாச்ரிதரை, தானறிந்தஸம்பந்தத்தாலே ஆளும். பூமியைச்சொன்னவிது - அல்லாத லோகங்களுக்கு முபலக்ஷணம். (செருச்செய்யும் நாந்தகமென்னு மொருவாளன்) கீழ், "புள்ளாளன்" என்று - ஆச்ரிதரக்ஷணத்துக் குடலான வாஹநத்தைச்சொல்லிற்று; இங்கு, ஆயுதத்தைச் சொல்லுகிறது. ஆச்ரிதவிரோதிகள்மேலே பூசலைச்செய்யாநிற்பதாய், நந்தகமென்னும் திருநாமத்தையுடைத்தாய், அத்விதீயமாயிருந்துள்ள கொற்றவொள்வாளை யுடையவன். திவ்யாயுதங்கள்தான் (க) ஸர்வஜ்ஞமாய், நினைவறிந்து கார்யஞ்செய்யுமவையாயிறே யிருப்பது.

(மறையாளன்) இப்படிஆயுதத்தாலே அழியச் செய்யவொண்ணாத பாஹ்ய குத்ர்ஷ்டி மதங்களை யழியச்செய்கைக்கு பரிகரமான வேதத்தை ஆளுகிறவன். (உ) சஸ்த்ரத்தாலும் சாஸ்த்ரத்தாலுமிறே ப்ரதிபக்ஷநிரஸநம்பண்ணுவது. சஸ்த்ரத்தாலே நிரஸிக்குமளவில், சரீர விநாசபர்யந்தமாம்; சாஸ்த்ரத்தாலே நிரஸிக்குமளவில், அவர்களுடைய விபரீத ஜ்ஞாநாதிகள்போய், இச்சரீரந்தன்னோடே யிருக்கச்செய்தே திருந்தி உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாம்.

(க) ஸர்வஜ்ஞமாய் - எல்லாவற்றையுமறிந்தவையாய். (உ) சஸ்த்ரம்- ஆயுதம்.

இதிரண்டுக்கும் விசேஷம். (ஓடாதபடையாளன்) யுத்தத்தில் புகுந்தால் (க) பிற்காலியாதபடியான பரிகரத்தை யுடையவன். அன்றிக்கே, "[illegible]" "[illegible]" என்கிறபடியே-லோகத்தில் வழங்காத ஆயுதவிசேஷங்களை யுடையவனென்னவுமாம். (விழுக்கையாளன்) "[illegible]" "[illegible]" இத்யாதிப்படியே - ஆத்மாத்மீயங்களடைய ஆச்ரிதார்த்தமாக்கிவைக்கும் சீர்மையையுடையவன். விழுக்கை - சீர்மை. அன்றிக்கே, விழுப்பத்தையுடைத்தான கையையுடையவன்; - சீர்மையோடேகூடின கொடையையுடையவ னென்றபடி. "[illegible]" "[illegible]" என்னக்கடவதிறே.

(இரவாளன் பகலாளன்) (உ) திவாராத்ரரூபமான காலத்துக்கு நிர்வாஹகனானவன். இத்தால் - சேதநர்க்கு (ங) ஜ்ஞாநஸங்கோச ஹேதுவாயும் ஜ்ஞாநவிகாஸ ஹேதுவாயுமிருந்துள்ள காலங்களை ஸ்வாதீநமாக வுடையவனென்கை. (என்னையாளன்) "எயிற்றிடைமண்கொண்ட வெந்தையிராப்பக லோதுவித் தென்னைப்பயிற்றிப் பணிசெய்யக்கொண்டான்" என்கிறபடியே - தானேதிருத்தி, திவாராத்ரவிபாகமற என்னையாளுகிறவன். (ஏழுலகப் பெரும்புரவாளன்) ஸமஸ்தலோகங்களுமாகிற பெரியபுரவை ஆளுகிறவன். புரவு-ஸக்ஷேத்ரம். இத்தால் - ஸமஸ்தலோகங்களையும் ஆளுமிடத்தில், அல்பக்ஷேத்ரவானானவன் இரவுபகல்நோக்கி ஆளுமாபோலே, ஆண்டுகொண்டு போருமவனென்கை. "பொங்கோதம் சூழ்ந்தபுவனியும் விண்ணுலகுமங்காதுஞ் சோராமேயாள்கின்ற" என்னக்கடவதிறே.

(திருவாளன்) பெரியபிராட்டியாரை திவ்யமஹிஷியாக வுடையவன். கீழ்ச்சொன்ன லோகத்தையெல்லா மாளுவது இருவருமான சேர்த்தியிலேயாய்த்து. (இனிதாகத் திருக்கண்கள்வளர்கின்ற திருவரங்கமே) "க்ஷீராப்திதுடக்கமான ஸ்தலங்களெல்லாவற்றிலுங் காட்டில் (ச) அபிமதஸித்திக் குடலானதேசம்" என்று திருவுள்ளத்திலுகப்போடேகூடக் கண்வளர்ந்தருளுகிறகோயில், திருவரங்கமே. "[illegible]" "[illegible]" என்னக்கடவதிறே.

---

(க) பிற்காலியாதபடியான - பின்வாங்காதபடியான. (உ) திவாராத்ரம்-இரவுபகல். (ங) ஜ்ஞாநஸங்கோசம் - அறிவுமழுங்குதல். (ச) அபிமதஸித்தி-இஷ்டஸித்தி.

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—கைந்நாகத் திடர்கடிந்த கனலாழிப் படையுடையான் கருதுங் கோயில், தென்னாடும்வடநாடுந் தொழநின்ற திருவரங்கத் திருப்பதியின்மேல், மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டு சித்தன் விரித்ததமி ழுரைக்கவல்லார், எஞ்ஞான்று மெம்பெருமா னிணையடிக்கீ ழிணைபிரியா திருப்பர்தாமே.

ப-ரை.—கைந்நாகத்து - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, இடர் - து:க்கத்தை, கடிந்த - போக்கினதாய், கனல் - ஜ்வலியாநின்றுள்ள, ஆழி - திருவாழியை, படையுடையான் - ஆயுதமாகவுடையவன், கருதும் - விரும்பி வர்த்திக்கும், கோயில் - கோயிலாய், தென்னாடும் - தென்னாட்டி லுள்ளவர்களும், வடநாடும் - வடநாட்டிலுள்ளவர்களும், தொழ - தொழும்படியாக, நின்ற—, திருவரங்கத்திருப்பதியின்மேல் - திருவரங்கமென்கிற திருநாமத்தையுடைய திருப்பதிவிஷயமாக; மெய்ந்நாவன் - மெய்யேசொல்லும் நாவுடையவரும், மெய்யடியான் - அநந்யப்ரயோஜநமாக அடிமைபூண்டவரும், விட்டுசித்தன்-ஸர்வேச்வரனைத்திருவுள்ளத்திலேயுடையவருமானபெரியாழ்வார், விரித்த-விஸ்தரித்துச செய்த, தமிழ் - தமிழ்மாலையான இத்திருமொழியை, உரைக்கவல்லார்தாம் - சொல்லவல்லவர்கள், எம் - எனக்குசேஷியான, பெருமான் - ஸ்ரீவைகுண்டநாதனுடைய, இணை - ஒன்றுக்கொன்றொப்பான, அடிக் கீழ் - திருவடிகளின் கீழே, எஞ்ஞான்றும் - எல்லாக்காலத்திலும், * அடியார்கள் குழாங்களோடே, இணைபிரியாது—, இருப்பர் - இருக்கப்பெறுவர்.

வ்ய.—(கைந்நாகத்திடர்கடிந்த) ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய து:க்கத்தைப் போக்கின. "ஆனைக்கும் தனக்குத் தக்க வாதம்" என்னுமாபோலே வடிவின் கநத்துக்குத்தக்கபடியிறே து:கத்தின் (க) கநமிருப்பது. "ஆனையின்துயரம்" என்றாரிறே. ஆனைக்கு வாசகமானசப்தங்கள்பலவுமுண்டாயிருக்க, "கைந்நாகத்திடர்" என்றது - "கைம்மாதுன்பம்" என்கிறபடியே துதிக்கையைமுழுத்தின ஆபத்தென்று தோற்றுகைக்காக. அதாவது - நெடுங்காலம் (உ)வர்ஷாபாவத்தாலேவரண்டு, லோகத்தில் ஒருபூக் காணக் கிடையாத படியாகையாலே, "எங்கே யொரு திருப்பள்ளித்தாமம்கிடைக்குமோ" என்று தடுமாறாநிற்க, "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிறபடியே - தூரத்திலே குளிர்ந்தசோலையும் பூத்தபொய்கையுமாய்த் தோற்றக்கண்டு, பெரியஅபிநிவேசத்தோடே ஓடிச்சென்று, "உள்ளே துஷ்டஸத்த்வங்கிடக்கிறது" என்றறியாமல் பொய்கையிலேயிழிந்து பூவைவாரிப்பறித்துக் கரையிலேயேறத் தேடுகிறவளவிலே, முதலைவந்து காலைப்பிடிக்க; "ஒருநீர்ப்புழுநிமித்தமாக

(க) கநம் - மிகுதி. (உ) வர்ஷாபாவம் - மழையில்லாமை.

(க) ஈச்வரனை யழைக்கவேணுமோ, நாமே தள்ளிப்போகிறோம்" என்று போகப்பார்த்தவளவில்; பிடித்தமுதலை ப்ரபலமாகையாலே "[Grantha text]" "[Grantha text]" என்கிறபடியே இங்ஙனே ஆயிரம் தேவஸம்வத்ஸரம் சென்றவளவில்; முதலைக்கு தன்னிலமாகையாலும் அபிமதலாபத்தாலும் "முழுவலிமுதலை" என்கிறபடியே பலம் (உ) அபிவ்ருத்தமாய், ஆனைக்கு தன்னிலமல்லாமையாலும் அபிமதாலாபத்தாலும் (ங) பலம்க்ஷீணமாகையாலேதுதிக்கைமுழுத்தும்படியாய்த்ததிறே; இப்படியானவாறே தன்னுற்செயலற்று, "[Grantha text]" "[Grantha text]" என்கிறபடியே ஸர்வேச்வரனையே ரக்ஷகனாக வநுஸந்தித்து, "நாராயணா ஓஒ மணிவண்ணா நாகணையாய் வாராய்" என்ன; இந்த ஆர்த்தத்வநி செவிப்பட்டவாறே, "[Grantha text]" "[Grantha text]" இத்யாதிப்படியே, "[Grantha text]" "[Grantha text]" என்று-அறிவுடையார் ஈடுபடும்படி பெரியத்வரையோடே மடுவின்கரையிலே வந்து, ஆனையை ஒருகையாலும் முதலையைஒருகையாலுமாக எடுத்தணைத்துக்கொண்டு கரையிலேயேறி, கையில் திருவாழியாலே முதலையின்வாயைப் பிளந்துவிடுவித்து, சாத்தியருளின திருப்பரியட்டத் தலையைச்சுருட்டித் திருப்பவளத்திலேவைத்து அதினுடைய புண்வாயை வெதுகொண்டு, நெடுநாள்பட்ட க்லேசமெல்லாம் திரும்படி திருக்கையாலே குளிரஸ்பர்சித்துத் திருக்கண்களாலே குளிரக்கடாக்ஷித்து, அதின்கையில் பூவைத்திருவடிகளிலே யிடுவித்துக்கொண்டு அதினுடையதுக்கத்தைப் போக்கினபடியைச் சொல்லுகிறது - "இடர்கடிந்த" என்று. (கனலாழிப்படையுடையான்) ஜ்வலியாநின்றுள்ள திருவாழியை ஆயுதமாகவுடையவன்.

"இடர்கடிந்த கனலாழிப்படையுடையான்" என்கையாலே- கையும் திருவாழியுமாய்க் கொண்டுவந்து தோற்றியாய்த்து முதலையை விடுவித்ததும் ஆனையைரக்ஷித்ததும். "தொழுங்காதல்களிறளிப்பான் - மழுங்காத வைநுதிய சக்கரநல்வலத்தையாய்-தோன்றினையே" என்று அறிவுடையார் ஈடுபடும்படியிறே அப்போது வந்து தோன்றினபடி. (கருதுங்கோயில்)பரமபதம் க்ஷீராப்தி துடக்கமான ஸ்தலங்களெல்லாவற்றிலுங்காட்டில், ஆச்ரிதரை அநுபவிப்பிக்கைக்கும் ரக்ஷிக்கைக்குமுடலான ஸ்தலம் என்றுவிரும்பி வர்த்திக்குங்கோயில். (தென்னாடும் வடநாடும் தொழநின்ற) த்ராவிடபாஷாப்ரதாநமான தென்னாடும், ஸம்ஸ்க்ருத பாஷாப்ரதாநமான

(க) ஈச்வரனை - ஸர்வேச்வரனானநாராயணனை. (உ) அபிவ்ருத்தமாய்- மேன்மேலனப்பெருகி. (ங) பலம்க்ஷீணமாகை - வலிவுகுறைகை.

வடநாடும், இருந்ததேகுடியாகத் தொழும்படி நின்ற. (திருவரங்கத்திருப்பதியின்மேல்) திருவரங்கமென்கிற திருநாமத்தை யுடைத்தான திருப்பதிவிஷயமாக.

(மெய்ந்நாவன்) மெய்சொல்லும் நாவையுடையவன். அஸத்யமென்பது ஒன்றும் கலசாத நாவையுடையவனென்கை; "பொய்ம்மொழியொன் றில்லாத மெய்ம்மையாளன்" என்னுமா போலே. இத்தால் - பகவத்வைபவம் தேசவைபவம் கீழருளிச்செய்தவற்றில் ஒன்றிலும் ஒருபொய்யில்லாமை சொல்லுகிறது. (மெய்யடியான்) (க) அநந்யப்ரயோஜநனான வடியான். "அடியான்" என்றுபேரிட்டு ப்ரயோஜநத்துக்கு மடியேற்குமவர்கள் பொய்யடியாரிறே; சேஷத்வம் ஸ்வரூபமானால் சேஷிக்கு அதிசயத்தை விளைக்குமதொழிய, ஸ்வாதிசயந்தேடுகை சேராதிறே. அங்ஙனன்றிக்கே, சேஷிக்கு மங்களத்தை ஆசாஸித்துக்கொண்டு திரியும் ஸ்வபாவராகையாலே, தம்மை "மெய்யடியான்" என்கிறார். இவையிரண்டும்-தாமருளிச்செய்த வசநங்களை அப்யஸிப்பார்க்கு (உ) ஆப்திக்குடலாக வருளிச்செய்தாராய்த்து. (விட்டுசித்தன்) * அரவத்தமளிப்படியே - ஸர்வேச்வரனைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண் டிருக்கிறவர். (விரித்த தமிழுரைக்கவல்லார்) விஸ்தரேண ப்ரதிபாதித்த த்ராவிடரூபமான இத்திருமொழியைச் சொல்லவல்லவர்கள். (எஞ்ஞான்றுமித்யாதி) எல்லாக்காலத்திலும், எனக்கு சேஷியான ஸ்ரீவைகுண்டநாதனுடைய, ஒன்றுக்கொன் றொப்பான திருவடிகளின்கீழே (ங) விச்லேஷரஹிதராய், அடியார்கள்குழாங்களோடே தாங்களிருக்கப்பெறுவர். (கக)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு—மரவடிதன் கருள்பதினாருமை மைத்துனன் குறளுரங்கேதவு செருக்கைந்நாகத்துப்பு.

---

ஆ திருமொழி ங-கூ-இ, பாட்டு-சக0.

அ.—கீழ் இரண்டு திருமொழியிலே - பெரியபெருமாளுடைய திவ்ய வைபவத்தையும், பெரியகோயிலான திருவரங்கத் திருப்பதியினுடைய வைபவத்தையும், பெரிய அபிநிவேசத்தோடே பேசியநுபவித்து ப்ரீதரானார்; "தன்னடியார்" இத்யாதியிற் சொன்னபடியே-புருஷகாரபூதையான பிராட்டிதானே சிதகுரைக்கிலும் அவளோடே மறுதலைத்து ஆச்ரிதரக்ஷணம்பண்ணும் வாத்ஸல்யாதி

(க) அநந்யப்ரயோஜநன் - வேறொரு ப்ரயோஜநத்தை விரும்பாதவன். (உ) ஆப்தி - விச்வஸித்தல். (ங) விச்லேஷரஹிதராய் - பிரியாதவராய.

சயயுக்தராய், "இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்தூடேற்றி" இத்யாதிப்படியே - அநந்யப்ரயோஜநராய், திருவடிகளை ஆச்ரயித்தவர்களை அர்ச்சிராதிமார்க்கத்தாலே (க) அபுநராவ்ருத்திலக்ஷணமான பரமபதத்திலே கொடுபோய், * அருள்கொடுத்திட்டு அடிமைகொள்ளும் ஸ்வபாவரான பெரியபெருமாளுடைய திவ்யகுணத்தை யநுஸந்தித்தவராகையாலே, அவர்க்கும் திருந்தினசேதநரை இங்குநின்றும் கொடுபோய் அடிமைகொள்ளுகை திருவுள்ளமாகையாலே, "நாம் இனி அங்கேபோய் அடிமைசெய்யவேணும்" என்னும் அபேக்ஷைபிறந்து, அதுக்கு தேஹஸம்பந்த மற்றுப்போகவேண்டும்படியை (உ) அநுஸந்தித்து, இந்தப்ரஸங்கத்திலே சரீரவிச்லேஷஸமயத்தில் ஸம்ஸாரிகளானவர்களுக்கெல்லாம் யமபடரால்வரும் நலிவைநினைத்து, "அதுநமக்கு வாராதொழியும்போது ஸர்வேச்வரனானவனே போக்கித் தந்தருளவேணும்" என்று (ங) அத்யவஸித்து, "அதுதன்னை ஏற்கவே அவன் திருவடிகளிலேவிழுந்து அர்த்தித்துச் செய்வித்துக்கொள்வோம்" என்று ஒருப்பட்டு, சரமதசையில் கர்மாநுகுணமாக யமபடர்வந்து என்னை நலியும்போது, அந்த க்லேசத்தாலே தேவரீருடைய திருவடிகளை ஒருபடியாலும் நினைக்கவும் ஒன்றுசொல்லவும் க்ஷமனல்லேன் என்று அத்தைப்பற்ற அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்; ஆனபின்பு, அக்காலத்தில் அவர்கள் என்னைநலியாதபடி தேவரீர் ரக்ஷித்தருளவேணும் என்று பெரியபெருமாள்திருவடிகளிலே சரணம்புக்கு விண்ணப்பம்செய்து செல்லுகிறார் - இத்திருமொழியில்.

இதுதானிருந்தபடியென், "ந க²லு பா⁴க³வதா யமவிஷயம் க³ச்ச²ந்தி" "நவஹோஹாமவதாயவிஷயம்ஹூஷி" என்று சாஸ்த்ரம் சொல்லுகையாலும், "வேண்டாமைநமன்றமரொன்றமரை வினவப்பெறுவாரலர்" என்கிற பகவதுக்தியாலும், "உன்றமர்க்கென்றும் நமன்றமர் கள்ளர்போல்" என்று (ச) அபியுக்தர் சொல்லுகையாலும், "பரிஹர மது⁴ஸூத³ந ப்ரபந்நாந்" "ப்ரபு⁴ரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" என்று யமன்றானே சொல்லுகையாலும், பாகவதரானவர்களுக்கு யமவச்யதை வரக்கூடாதென்னுமிடம் ப்ரஸித்தமாயிருக்க, "சரமதசையிலே யமபடர்வந்து நலிவர்கள்" என்று பயப்பட்டுத் திருவடிகளிலே சரணம்புகுந்து, "அத்தசையிலே என்னைரக்ஷித்தருளவேணும்" என்று இவர் அர்த்திக்கிறவிது, கீழ்ச்சொன்ன வசநங்களோடு விருத்தமன்றோவென்னில்; ஆழ்வார்கள்தாங்கள், * மயர்வறமதிநல மருளப்பெற்று அவனைஉள்ளபடியறிந்து அநுபவியா

(க) அபுநராவ்ருத்தி - மீளாமை. (உ) அநுஸந்தித்து - நினைத்து. (ங) அத்யவஸித்து - நிச்சயித்து. (ச) அபியுக்தர் - சிஷ்டர்.

நிற்கச்செய்தே ஓரோதசைகளிலே வந்தவாறே, அநாதிகாலம் (௧) ஸம்ஸரண ஹேதுவாய்க்கொண்டு போந்த கர்மபலத்தையும், அந்த கர்மாநுகுணமாகவே நிர்வஹித்துக்கொண்டு போந்தவனாய் பந்த மோக்ஷோபாய நிர்வாஹகனாயிருக்கிற ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்ய பலத்தையு மநுஸந்தித்து, "நிரங்குச ஸ்வதந்த்ரனானவன் இன்னம் நம்மை ஸம்ஸரிப்பிக்கில் செய்வதென்" என்று, "மக்கள்தோற்ற க்குழி தோற்றுவிப்பாய்கொல்" என்றும், இன்னம் "ஆற்றங்கரை வாழ்மரம்போ லஞ்சுகின்றேன்" என்றும், "வைத்தசிந்தை வாங்குவித்து நீங்குவிக்க நீயின்னம் மெய்த்தன்வல்லை - உய்த்துநின் மயக்கினில் மயக்கலென்னைமாயனே" என்றும் அவனைக்குறித்து விண்ணப்பம்செய்யும் ப்ரகாரத்திலே; இவரும், ஈச்வரஸ்வா தந்த்ர்யத்தையும், அநாதிகாலம் அவன்றிருவடிகளைக் கிட்டாதபடி அகலவடித்த கர்மபலத்தையும் அநுஸந்தித்து, "ஸ்வதந்த்ரனானவன் நம்முடைய கர்மாநுகுணமாகவிட்டு உபேக்ஷித்திருக்குமாகில், முன்புபோலே யமபடரால்வரும் நலிவு நமக்குவரில்செய்வதென்" என்று அஞ்சி, அவன்றிருவடிகளிலே சரணம்புகுந்து, அத்தசையில் என்னை ரக்ஷித்தருளவேணும் என்று அர்த்திக்கிறார். ஆகையால், இந்தபயமும் ப்ரார்த்தநையும் இவருடைய அதிசங்கா மூலமான கலக்கமடியாகவந்ததாகையாலே, கீழ்ச்சொன்ன வசநங்களோடு விரோதமில்லை. ... ... ... ... ... *

மூ.—துப்புடையாரை யடைவதெல்லாஞ் சோர்விடத்துத் துணையாவரென்றே, ஒப்பிலே னாகிலுநின்னடைந்தே னானைக்கு நீயருள் செய்தமையால், எய்ப்பென்னை வந்து நலியும்போதங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தே னரங்கத் தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—துப்புஉடையாரை - அடுத்தவரைக் காக்குந்திறமுடைய வுன்னை, அடைவது - அடைக்கலமாகப் பற்றுவது, எல்லாம் - என்னுடைய இந்த்ரியங்களும் மநஸ்ஸும், சோர்விடத்து - சோர்ந்தகாலத்திலே, துணையாவரென்று - நீ துணையாவாயென்று என்ன ; அதுசெய்வது ஒருகால் ப்ரபத்தி பண்ணினவர்களுக்கன்றோ என்ன ; அவர்களுக்கு, ஒப்பிலேனாகிலும் —, நின் - உன்னை, அடைந்தேன் - சரணமாகவடைந்தேனென்ன; நாம் யாரை ரக்ஷிக்கக்கண்டு நம்மை வந்தடைந்தீரென்ன ; ஆனைக்கு - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு, நீ - தேவரீர், அருள்செய்தமையால்-க்ருபைபண்ணினபடியாலேயென்ன ; அவ்வானையைப்போல உமக்குத்தளர்த்திவந்தபோது நினையும், அப்போதுவந்து ரக்ஷிக்கிறோமென்ன; எய்ப்பு - மூன்றுதோஷத்தாலுமுண்டான இளைப்பானது, என்னை —, வந்து —, நலியும்போது - வருத்துங்காலத்திலுண்டான, அங்கு - அவ்வவஸ்தையில்,

(௧) ஸம்ஸரணஹேது - ஸம்ஸாரஹேது.

ஏதும் - சற்றாயினும், நான் உன்னை—, நினைக்கமாட்டேன் - ஸ்மரிக்கமாட்டேனென்ன ; ஆனால் செய்யத்தக்கதேதென் என்ன; அப்போதைக்கு - அந்தக்காலத்துக்குறுப்பதிலாக, இப்போதே - கரணகளேபரங்கள் தெளிவுபெற்றிருக்கிறவிப்போதே, சொல்லிவைத்தேன் - சொல்லிவைத்தேனென்ன; நீர்சொல்லிவைத்தத்தை நினைத்திருந்து ரக்ஷிக்கவேண்டும் நிர்ப்பந்தம் நமக்குண்டோவென்ன; அரங்கத்து - கோயிலிலே, அரவு - திருவநந்தாழ்வானுகிற, அணை - திருப்படுக்கைமேலே, பள்ளியானே - பள்ளிகொண்டருளுகிறது தாழ்ந்தாரை ரக்ஷிக்கைக்காக வன்றோவென்கிறுர்.

வ்யா.—முதற்பாட்டு. (துப்புடையாரை யடைவது) துப்பு - ஸாமர்த்யம். (க) ரக்ஷண ஸாமர்த்ய முடையாரை ஆச்ரயிப்பது. இது முன்னிலைப் படர்க்கையாய், ஈச்வரன்றன்னையே சொல்லுகிறது. பஹுவசநம் - பூஜாவாசி. ரக்ஷண ஸாமர்த்யந்தான் வ்யக்த்யந்தரத்திலே யில்லையிறே; “నసంపదాంసమాహారే విపదాంచనివర్తనే। సమర్థో దృశ్యతే కశ్చిత్తం వినా పురుషోత్తమమ్” “నహిపాలనసామర్థ్యమృతే సర్వేశ్వరం హరిమ్” “స్థితే స్థితం మహాత్మానం భవత్యన్యస్య కస్యచిత్” “நவஸ்த்ராணி நவாஸாம்ஸி நாஹாரோ விவிதாம்ஸ்ததா । ஸமர்த்தாந்யஸ்ய தேஹஸ்ய த்ராதும் விநா வாஸுதேவம்” “ந ஹி பாலநஸாமர்த்யம் ருதே ஸர்வேஸ்வரம் ஹரிம்” “ஸ்ரீதேவி ஸ்வஸ்தா ஹ்ருதாநம் ஸவஸ்யாந்யஸ்ய கஸ்யசித்” என்கிறபடியே. (எல்லாம்சோர்விடத்து) இந்த்ரியங்களுடைய அழிந்து மநஸ்ஸும் அழிந்தவிடத்து. (௨) அந்திமதசையைச் சொன்னபடி. (துணையாவ ரொன்றே) (௩) * காஷ்ட பாஷாண ஸந்நிபமாய்க்கிடக்கிற தசையில் “அஹம் ஸ்மராமி” “நயாமி பரமாம் கதிம்” என்கிறபடியே துணையாவரென்றே. அது நாம்செய்வது, தங்களுடைய இழவு பேறுகள் நம்மதாம்படியிருக்கும் நம்மோட்டை ஸம்பந்தத்தையறிந்து நம்பக்கலிலே “ஸ்ம்ருதா” “ஸ்மர்த்தா” என்கிறபடியே (௪) ஸக்ருத்கரண ப்ரபத்தியைப் பண்ணினவர்களுக்கன்ருே, நீர் அவர்களுக்கு ஒப்போவென்ன (ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன்) அவர்களுக்கு ஸத்ருசனல்லேனாகிலும், என்னுடைய து:காதிசயத்தாலே, அந்த து:கநிவர்த்திக்குறுப்பாக, எதிர்த்தலையில் போக்யதைபாராதே ரக்ஷிக்கும் உன்னை சரணமாக அடைந்தேன். நாம் இப்படி யாரை ரக்ஷித்ததுகண்டு நீர் நம்மை யடைந்ததென்ன (ஆனைக்கு நீயருள் செய்தமையால்) (௫) ஆர்த்தியும் (௬) அநந்யகதித்வமு மொழிய வேறொரு யோக்யதையு மின்றிக்கே யிருக்கிற ஆனைக்கு நீ யருள்பண்ணினபடியினாலே. ஆனால் அவ்வானை யோபாதி, நீரும் உடக்குத் தளர்த்திவந்த

(க) ரக்ஷணஸாமர்த்யம் - காப்பாற்றும்வல்லமை. (௨) அந்திமதசை - சாமகாலம். (௩) காஷ்டபாஷாணம் - மரமும் கல்லும். (௪) ஸக்ருத்கரணம் - ஒருகால்செய்வது. (௫) ஆர்த்தி - து:கம். (௬) அநந்யகதித்வம்-வேறொருகதியில்லாமை.

போது நினையும், அப்போது வந்து ரக்ஷிக்கிறோம் என்ன (எய்ப் பென்னை வந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்க மாட்டேன்) வாத பித்த ச்லேஷ்ம தோஷத்ரயமும் ஒக்க (௧) உல்பணித்து நெருக்குகையா லுண்டான இளைப்பானது என்னை வந்து நலியும் காலத்தில், அவ்வவஸ்தையில் ஏகதேசமும் நான் உன்னை நினைக்கமாட்டேன். ஆனால் செய்யவடுப்ப தென் என்ன (அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்) அக்கா லத்துக்கு உடலாக, கரணகளேபரங்கள் இளைப்பற்றுத் தெளிந் திருக்கிற இப்போதே சொல்லிவைத்தேன். இப்படி நீர் சொல்லி வைத்தால் இத்தை நினைத்திருந்து உம்மை ரக்ஷிக்கவேண்டும் நிர்ப் பந்தமேது நமக்கு என்ன (அரங்கத் தரவணைப் பள்ளியானே) இப் படி ரக்ஷிக்கைக்காக வன்றோ, (௨) தேச விப்ரக்ர்ஷ்டமான க்ஷீரா ப்தியைப்போலன்றிக்கே, கோயிலிலே திருவநந்தாழ்வானாகிற திருப் படுக்கையின்மேலே கண்வளர்ந்தருளுகிறது. அந்த (௩) யோக நித்ரைபோலேயோ இந்த யோகநித்ரை; தாழ்ந்தாரை ரக்ஷிக்கைக் கன்றோ. (௧)

மூ.—சாமிடத்தென்னைக் குறிக்கொள் கண்டாய் சங்கொடு சக்கர மேந்தினானே, நாமடித் தென்னை யநேகதண்டஞ் செய்வ தாநிற்பர் நமன்றமர்கள், போமிடத் துன்றிறத் தெத்தனை யும் புகாவண்ண நிற்பதோர் மாயைவல்லை, ஆமிடத்தே யுன்னைச் சொல்லிவைத்தே னரங்கத் தரவணைப் பள்ளி யானே.

ப-ரை.—சங்கொடு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், சக்கரம் - திருவாழியாழ் வானையும், ஏந்தினானே - திருக்கையிலே தரித்தவனாய்க்கொண்டு, ஆச்ரிதரக்ஷ ணார்த்தமாக, அரங்கத்து - கோயிலிலே, அரவு - திருவநந்தாழ்வானாகிற, அணை- திருப்படுக்கையிலே, பள்ளியானே - பள்ளிகொண்டருளுகிறவனே யென்ன; நீர் இப்படிஓலமிடும்படி உமக்குண்டான பயஹேதுவென் என்ன; அருளிச்செய் கிறார்; நமன்றமர்கள்—, மிக்ககோபத்தாலே, நா - நாக்கை, மடித்து - மடித் துக்கொண்டு, முன்செய்வினைக்குத்தக்கபடி, என்னை—, அநேகதண்டம்-அநேக தண்டங்களை, செய்வதாநிற்பர் - பண்ணாநின்றவர்களாய், போமிடத்து - இழு த்துக்கொண்டு போமளவில், இவ்வாத்மாவினுடைய மநஸ்ஸானது, உன்திற த்து - உன்விஷயத்திலே, எத்தனையும் - ஏகதேசமாயினும், புகாவண்ணம் - உள் புகுராதபடி, நிற்பது - உன்னைக்கொண்டு மறைகையாகிற, ஓர் - ஒப்ப ற்ற, மாயை - வஞ்சனையில், வல்லை - நீஸமர்த்தனாகாநின்றாய்; ஆதலால், ஆமி டத்தே - கரணங்கள் என்வசமாய்ச் செல்லத்தக்க இக்காலத்திலேயே; சாமிட த்து - சரீரவிச்லேஷ ஸமயத்தில், என்னை - உன்னை நினைக்கைக்கு சக்தியற்ற

---

(௧) உல்பணித்து - அதிகமாய். (௨) தேசவிப்ரக்ர்ஷ்டம் - தூரதேசம் (௩) யோகநித்ரை - த்யாநமாகிறநித்ரை.

வென்னை, குறிக்கொள்கண்டாய் - திருவுள்ளம்பற்றி யருளவேணுமென்று, உன்னைச் சொல்லிவைத்தேன் - உன்னைக்குறித்துச் சொல்லிவைத்தேனென்றார்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (சாமிடத்து) சரீரவிச்லேஷ ஸமயத்திலே. கீழ் "எல்லாம்சோர்விடம்" என்றத்தை இங்கேஸ்பஷ்டமாகவருளிச்செய்கிறார். (என்னை) (௧) தோஷத்ரயஎௗல்பண்யத்தாலேகலங்கி, உன்னை நினைக்க க்ஷமனன்றிக்கே யிருக்கிற வென்னை. (குறிக்கொள்கண்டாய்) நான் கலங்கிக் கிடந்தேன் என்று நீ உபேக்ஷித்திராதே திருவுள்ளம்பற்றி யருள்கிடாய். அன்றிக்கே, யமபடரால் வந்த நலிவுக்கு அஞ்சி, திருவடிகளிலே இப்போது சரணம்புகுந்த வென்னை, அப்போது திருவுள்ளம் பற்றியருள்கிடா யென்னவுமாம். (சங்கொடு சக்கர மேந்தினனே) (௨) ஆச்ரித ரக்ஷணத்தில் (௩)விளம்பாஸஹத்வத்தாலே(௪)அநவரதம் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் திருவாழியையும் திருக்கையிலேயேந்திக்கொண் டிருக்கிறவனே. ரக்ஷ்யரக்ஷக பாவத்தைமாறடி, அவனுக்கு தாம் மங்களாசாஸநம் பண்ணும் ஸ்வபாவராய், திவ்யாயுதங்களையும் அழகுக்குடலாகநினைத்து அவற்றுக்கு மங்களாசாஸநம் பண்ணுமவர், இப்போது, அவனை ரக்ஷகனாகவும் திவ்யாயுதங்களை ரக்ஷணபரிகரமாகவும் அநுஸந்திக்கும்படியாய்த்துச் (௫) செல்லுகிற பயம். பயஹேதுதன்னை யருளிச்செய்கிறார் (நாமடித்தித்யாதி) (௬) க்ரோதாதிசயத்தாலேநாவைமடித்துக்கொண்டு, என்னை கர்மாநுகுணமாக அநேக (௭) தண்டங்களைச் செய்யக் கடவதாக நில்லாநிற்பர் யமபடரானவர்கள். சரீர விச்லேஷ ஸமயத்தில் வேறொருவர்க்குத் தோற்றாமல் இச்சேதநனொருவனுக்குமே தோன்றும்படி இப்படி வந்து புகுந்து நில்லாநிற்பர்களாய்த்து.

(போமிடத்து) அவர்கள் இழுத்துக்கொண்டு போமளவில். (உன்திறத் தெத்தனையும் புகாவண்ணம் நிற்பதோர் மாயைவல்லை) இவ்வாத்மாவினுடைய மநஸ்ஸு உன் விஷயத்தில் ஏகதேசமும் உள்புகுராதபடி உன்னைக்கொண்டு மறைய நிற்பதொரு வஞ்சநத்தை வல்லை. (ஆமிடத்தே யுன்னைச் சொல்லிவைத்தேன்) ஆனபின்பு, கரணங்கள் வசமாய்ச் செல்லலான தசையிலே, சாமிடத்தென்னைக் குறிக்கொள்கண்டாய் என்று - உன்னைக்குறித்துச் சொல்லிவைத்தேன். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) இவ்வாத்மாக்களுடைய ரக்ஷணார்த்தமாக முற்கோலி வந்து, இவற்றினுடைய

(௧) தோஷத்ரயம் - வாதபித்தகபங்கள். (௨) ஆச்ரிதரக்ஷம் - அடுத்தவரைக் காப்பாற்றுகை. (௩) விளம்பாஸஹத்வம் - தாமஸத்தைஸஹியாமை. (௪) அநவரதம் - எப்பொழுதும். (௫) செல்லுகிற - மனதில் ஓடுகிற. (௬) க்ரோதாதிசயம் - கோபத்தின்மிகுதி. (௭) தண்டம் - தண்டனை.

ரக்ஷணசிந்தையைப் பண்ணிக் கொண்டு, திருவரங்கத்திருப்பதியிலே திருவரவணையின் மேலே பள்ளிகொண் டருளுகிறவனே. ()

மூ.—எல்லையில் வாசல் குறுகச்சென்று லெற்றிநமன்றமர் பற்றும்போது, நில்லுமினென்ன வுபாயமில்லை நேமியுஞ் சங்கமு மேந்தினனே, சொல்லலாம்போதே யுன்னும மெல்லாம்சொல்லினேனென்னைக் குறிக்கொண்டென்றும், அல்லல்படாவண்ணங்காக்க வேண்டு மரங்கத் தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—ஆச்ரிதவிரோதி நிரஸநத்துக்கு பரிகரமான, நேமியும் - திருவாழியையும், சங்கமும் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், ஏந்தினனே - திருக்கையிலே யேந்திக்கொண் டிருக்கிறவனே, எல்லையில் - அடியேனுடைய ஆயுஸ்ஸின் எல்லையான சரமதசையில், வாசல் - யமபுரத்துக்குப்போகும் வழியானது, குறுகச்சென்றால் - கிட்டினால், நமன்றமர் - யமபடரானவர்கள், எற்றி - அடித்து, பற்றும்போது - பிடிக்குங்காலத்தில், நில்லுமினென்ன - தூர்நில்லுங்களென்று தகைகைக்குத்தக்க, உபாயம் - ஒருபாயமும், இல்லை-என்கையிலில்லை; ஆதலால், சொல்லலாம்போதே - கரணங்கள் என்வசப்பட்டிருக்கிற காலத்திலே, உன் - தேவரீருடைய, நாமமெல்லாம் - திருநாமங்களை யெல்லாம், சொல்லினேன் - சொன்னேன் ; என்னை—, என்றும் - எல்லாக்காலத்திலும், குறிக்கொண்டு - திருவுள்ளம்பற்றி, அல்லல்படாவண்ணம் - யமபடர்கையிலே யகப்பட்டு வருந்தாதபடி, காக்கவேண்டும் - ரக்ஷித்தருளவேணும்; அரங்கத்தரவணைப் பள்ளியானே—.

வ்யா.—மூன்றும்பாட்டு. (எல்லையில்) ஆயுஸ்ஸினுடைய எல்லையான மரணதசையில். (வாசல் குறுகச்சென்றால்) வாசல்-வழி. (க) யாம்ய மார்க்ககதி இனி (உ) ஆஸந்நம் என்னு மளவாகச் சென்றால். (எற்றிநமன்றமர் பற்றும்போது) யமபடரானவர்கள் பிடிப்பதற்குமுன்னே மதிமயங்க எற்றிவந்து பிடிக்கும்போது. பிடித்தல்ல அடிப்பது, அடித்தாய்த்துப் பிடிப்பது. இப்படி யமபடர் வந்து கொடுபோவதாகப் பிடிக்குங் காலத்தில். (நில்லுமினென்ன வுபாயமில்லை) நில்லுமின் என்று அவர்களைத் தகைகைக்குத் தக்க உபாயமொன்றும் என் கையிலில்லை. இத்தால் - தம்முடைய (ங) ஸர்வோபாய சூந்யதையைச் சொல்லுகிறார். (நேமியும் சங்கமு மேந்தினனே) விரோதி நிரஸநபரிகரமான திவ்யாயுதங்களை ஸர்வகாலமும் திருக்கையிலே யேந்திக்கொண்டிருக்கிறவனே. இப்படி யிருக்கையாலே, *பற்றிலார்பற்ற நின்றனை யிருக்கிற தேவரீரை யொழிய எனக்கொரு ரக்ஷகரில்லை யென்கை. கீழே - "சங்கொடுசக்கர மேந்தினனே" என்றார்; இங்கே - "நேமியும் சங்கமு மேந்தினனே" என்கிறார். இதுவாய்த்து இவர் கை

(க) யாம்ய மார்க்கம் - யமலோகத்துக்குப் போகும்வழி. (உ) ஆஸந்நம் - கிட்டம். (ங) ஸர்வோபாயசூந்யதை - ஒரு உபாயமும் இல்லாமை.

கண்டிருக்குமுபாயம். "எப்போதும் கைகழலா நேமியான்" என்றிறே இவரிருப்பது. "நில்லுமினென்ன வுபாயமில்லை" என்பானென், நம்முடைய நாமங்களை எப்போதும் சொல்லாநின்றீரோ, அதுதான் உபாயமானலோவென்ன; அது நான் ஸாதநமாகச் சொன்னேனே (சொல்லலாம்போதே யுன்னுமமெல்லாம் சொல்லினேன்) கரணங்கள் வசவர்த்தியா யிருக்கிறபோதே உன் திருநாமங்களையெல்லாம் ப்ராப்யமாக வநுஸந்தித்த வித்தனையன்றே, மங்களாசாஸந பரனாய் உன்னுடைய ஸம்ர்த்தியை (க) ஆசாஸித்துக்கொண்டுதிரியும் நான் என்னுடைய (உ) ஸம்ர்த்திக்கு உறுப்பாக ஏதேனுமொன்று செய்கைக்கு யோக்யதையுண்டோ, நீயறிய உன்னை ரக்ஷகனாக அநுஸந்தித்திருக்கிற விதுதானும் என்னுடைய (ங) செயலறுதியாலே இப்போதுசெய்கிற வித்தனையன்றே. (என்னைக் குறிக்கொண்டென்றும்) இப்படி யிருக்கும் ஸ்வபாவனான வென்னை, ஸர்வகாலமும் திருவுள்ளம்பற்றி. (அல்லல்படா வண்ணம் காக்கவேண்டும்) என்னுடைய புருஷார்த்தத்துக்கு விரோதியான யமபடரால் வரும் நலிவிலே அகப்பட்டு துக்கப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) இதுக்காகவன்றே தேவரீர்(ச) அணித்தாக வந்து கண்வளர்ந்தருளுகிறது.(ங)

மூ.—ஒற்றை விடையனு நான்முகனு முன்னையறியாப் பெருமையோனே, முற்றவுலகெல்லா நீயேயாகி மூன்றெழுத்தாய முதல்வனேயோ!, அற்றதுவாழ் ளிவற்கென் றெண்ணியஞ்ச நமன்றமர் பற்றலுற்ற, வற்றைக்கு நீயென்னைக் காக்கவேண்டுமரங்கத்தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—ஒன்று - ஒப்பற்ற, விடையனும் - ரிஷபவாஹநனான ருத்ரனும், நான்முகனும் - நான்குமுகங்களை யுடையப்ரஹ்மாவும், உன்னை—, அறியா - ஸர்வகாரணபூதன் ஸர்வரக்ஷகன் ஸர்வசேஷி ஸர்வசரீரியென்று அறியவொண்ணாத, பெருமையோனே - பெருமையையுடையனாய், முற்ற - ஒன்றொழியாதபடி, எல்லாவுலகும் - ஸகலலோகங்களும், நீயேயாகி - நீயேயாய், மூன்றெழுத்து - அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்துக்கு, ஆய - வாச்யனாய்க்கொண்டு, முதல்வனே - ஸர்வகாரணபூதனா யிருக்கிறவனே; நமன்றமர் - யமபடரானவர்கள், இவற்கு - இவனுக்கு, வாழ்நாள் - ஆயுஸ்ஸு, அற்றதென்றெண்ணி - முடிந்ததென்றுநினைத்து, அஞ்ச - பிடிக்கிறபிடியிலே அஞ்சும்படியாக, பற்றலுற்ற - பிடிக்கையிலே யொருப்பட்ட, அற்றைக்கு - அன்றைக்கு, நீ - அடுத்தவனாக்காக்கு மவனான நீ, என்னை—, காக்கவேண்டும் - அவர்கள்கையில் காட்டிக்கொடாதே ரக்ஷித்தருளவேணும்; அரங்கத்தரவணைப் பள்ளியானே—.

---

(க) ஆசாஸித்தல் - ப்ரார்த்தித்தல். (உ) ஸம்ர்த்தி - நிறைவு. (ங) செயலறுதி - செயல்அறுகை. (ச) அணித்தாக - ஸமீபமாக.

வ்யா.—நாலாம்பாட்டு. (ஒற்றை விடையனும்) "நுண்ணுணர்வில் நீலார்கண்டத் தம்மானும்" என்கிறபடியே ப்ரஹ்மபாவனை தலையெடுத்தபோது, அல்லாதாரைப்போலன்றிக்கே, தத்வத்தை (க) யதாவாகதர்சிக்கவல்ல (உ) ஸூக்ஷ்ம ஜ்ஞாநத்தையுடையவனான அத்விதீய ரிஷபவாஹநனும். "ஒற்றைவிடையனும்" என்றது-லோக வ்யாவர்த்தமாகையாலே அத்விதீயமாய் அவனுக்கு அபிமதமாயிருக்குமென்னு மிடம் தோற்றுகைக்காக. இத்தையிறே, அவன் தனக்கு பெருத்தவுடைமையாக நினைத்திருப்பது. (நான்முகனும்) "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை" "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிறபடியே (ந.) அவ்யவதாநேந திருநாபீகமலத்திலே பிறந்து, பிதாவான தேவரீர்தம்மாலே கொடுக்கப்பட்ட நாலுவேதங்களையுமுடையனாய், "அமரர்க்குமறிவீந்த" என்கிறபடியே-இவ்வருகுள்ளார்க்கெல்லாம் (ச) ஜ்ஞாநப்ரதனுமாயிருக்கு மேற்றத்தை யுடைய சதுர்முகனும். (உன்னையறியாப் பெருமையோனே) ஸர்வ காரணபூதனாய் ஸர்வரக்ஷகனாய் ஸர்வசேஷியாய் ஸர்வசரீரியாயிருக்கு முன்னை, உள்ளபடி யறியவொண்ணாநிற்கும் பெருமையை யுடையவனே. "யஸ்ய தேவா ந முநயோ ந சாஹம் ந ச ஶங்கர:। ஜாநந்தி பரமேஶஸ்ய தத்விஷ்ணோ: பரமம் பதம்" "யந்நதேவா நமுநயோ நசாஹம் நசஶங்கர:। ஜாநந்தி பரமேஶஸ்ய தத்விஷ்ணோ: பரமம்பதம்" என்று விஷ்ணுவினுடைய (ரு) பரமமான ஸ்வரூபத்தை தானும்ருத்ரனும் மற்றுமுண்டான தேவர்களும்ரிஷிகளும் அறியார்களென்னுமிடம் ப்ரஹ்மாதானே சொன்னானிறே. "கார்செறிந்த கண்டத்தான் எண்கண்ணான்காணான் அவன்வைத்த பண்டைத்தாநத்தின்பதி" என்று - அவனெழுந்தருளியிருக்கிற தேசத்தையுமுட்பட இவர்களறியமாட்டார்களென்றிறே திருமழிசைப்பிரா னருளிச்செய்தது.

(முற்றவுலகெல்லாம் நீயேயாகி) (சு) ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் (எ) ப்ரகாரமாகத் தான்ப்ரகாரியா யிருக்கையாலே, ஒன்றொழியாதபடி ஸகலலோகங்களும் நீயேயாய். "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "புருஷ ஏவேதம் ஸர்வம்" "புருஷ ஏவேதம் ஸர்வம்" என்னக் கடவதிறே. (மூன்றெழுத்தாய முதல்வனே) அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்துக்கு வாச்யனாய்க்கொ

---

(க) யதாவாகதர்சிக்கவல்ல - உள்ளபடியறியவல்ல. (உ) ஸூக்ஷ்மம்-நுண்ணியது. (ந) அவ்யவதாநம் - இடைவெளி. (ச) ஜ்ஞாநப்ரதன் - அறிவைக்கொடுக்குமவன். (ரு) பரமமான - மேலான. (சு) ஸ்வவ்யதிரிக்த - தன்னில் வேறான. (எ) ப்ரகாரம் - விசேஷணம்.

ண்டு ஸர்வகாரண பூதனாயிருக்கிறவனே. "மூன்றெழுத்தாய" என்கிற (க) ஸாமாநாதிகரண்யம், வாச்யவாசக பாவஸம்பந்த நிபந்தநம். ப்ரணவந்தான் சப்தப்ராதாந்யத்தாலே ஜீவபரமாய் அர்த்தப்ராதாந்யத்தாலே பகவத்பரமாயிறே யிருப்பது. "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" "ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" என்றும், "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்" "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்" என்றும் சொல்லக்கடவதிறே. அதில் (உ) ப்ரதமாக்ஷரத்தில் (ங) ப்ரக்ருத்யர்த்தமிறே ஸர்வகாரணத்வம். (ஓ) இப்படி நீயே நிர்வாஹகன்என்று இருப்பாரிடத்திலும் யமபடரால்வரும் நலிவு வரக்கடவதோ! என்று (ச) விஷண்ணராகிறார். (அற்றதுவாணாளிவர்க்கென்றெண்ணி) ஜீவிக்குங்காலமெல்லாம் பொகட்டிருந்து இவனுக்கு ஆயுஸ்ஸு அற்றதென்றெண்ணி. (அஞ்ச நமன்றமர் பற்றலுற்றவற்றைக்கு) மேல் ஒருவேதனை செய்வதுக்குமுன்னே பிடிக்கிறபிடியிலே அஞ்சும்படியாக யமபடரானவர்கள்வந்து, பிடிக்கையிலே யொருப்பட்டவன்றைக்கு. (நீயென்னைக் காக்கவேண்டும்) ஸர்வாதிகனாய் (ரு) சரணாகதரக்ஷகனான நீ, உனக்குப் பரிந்தன்றியுளனாகாதபடியிருக்கும் என்னை அவர்கள்கையிலே காட்டிக்கொடாதே ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்காகவன்றோ அணித்தாகவந்து கோயிலிலே சாய்ந்தருளிற்று. (ச)

மூ.—பையரவினணைப் பாற்கடலுட் பள்ளிகொள்கின்ற பரமமூர்த்தி, உய்யவுலகு படைக்கைவேண்டி யுந்தியிற்றோற்றினாய் நான்முகனை, வையமனிசரைப் பொய்யென்றெண்ணிக்காலனையு முடனேபடைத்தாய், ஐயவினியென்னைக் காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—பாற்கடலுள் - திருப்பாற்கடலிலே, பை - பரந்தபடங்களையுடைய, அரவினணை - திருவநந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே, பள்ளிகொள்கின்ற - கண்வளர்ந்தருளுகிற, பரமமூர்த்தி - பரமசேஷியானவனே; உய்ய-ஸகலாத்மாக்களும் ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கைக்குறுப்பான, உலகு-லோகத்தை, படைக்கை - ஸ்ருஷ்டிக்கையிலே, வேண்டி - விருப்பத்தையுடையனாய், நான்முகனை - நான்குமுகங்களையுடையனான ப்ரஹ்மாவை, உந்தியில் - திருநாபீகமலத்திலே, தோற்றினாய் - தோற்றுவித்தநீ, வையம் - பூமியிலுண்டான, மனிசர் - மநுஷ்யர், பொய்யென்று-நம்முடையகட்டளையான சாஸ்த்ரமர்யாதையில் நிற்கமாட்டார்களென்று, எண்ணி - திருவுள்ளம்பற்றி, காலனையும்-அவ

(க) ஸாமாநாதிகரண்யம் - ஓரிடத்தில் இருப்பு. (உ) ப்ரதமாக்ஷரம்-முதலெழுத்து. (ங) ப்ரக்ருதி - பகுதி. (ச) விஷண்ணராகிறார் - இன்னாதாகிறார். (ரு) சரணாகதரக்ஷகன் - அடைக்கலம்புகுந்தவரைக் காப்பாற்றுமவன்.

ர்கள்மீறிநடக்கும் காலத்தில் சிக்ஷிக்கைக்கீடான காலனையும், உடனே—, படைத்தாய் - ஸ்ர்ஷ்டித்தவனாய், ஐய-பரமபந்துவானவனே, இனி—, என்னை-உனக்குமங்களாசாஸநம் பண்ணித் திரியுமடியேனை, காக்கவேண்டும் - யமபடரால்வரும் நலிவில் அகப்படாதபடி ரக்ஷித்தருளவேணும்; அரங்கத்தரவணைப் பள்ளியானே—.

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பையரவினணைப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமமூர்த்தி) திருப்பாற்கடலிலே (௧) ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமான பணங்களையுடையனாய், மென்மை குளிர்த்தி நாற்றங்களை (௨) ப்ரக்ர்தியாகவுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே. "உள்ளப் பல்யோகுசெய்தி" என்கிறபடியே-ஸம்ஸாரிகளான ஆத்மாக்களை உஜ்ஜீவிப்பிக்கைக் கீடான பலஉபாயங்களையும் திருவுள்ளத்திலேசிந்தித்துக்கொண்டு கண்வளர்ந்தருளாநின்ற பரமசேஷியானவனே. * மூர்த்திசப்தம் - ஐச்வர்யத்துக்கும் விக்ரஹத்துக்கும் வாசகமாகையாலே, இவ்விடத்தில் ஐச்வர்யவாசகமாய்க்கொண்டு சேஷித்வத்தைச் சொல்லுகிறது. இத்தால் - (௩) இவை அறியாதிருக்க, தான் அறிந்ததாக இவற்றினுடைய (௪) ரக்ஷணோபாயசிந்தை பண்ணுகைக் கடியான ப்ராப்தியைச் சொல்லுகிறது. இப்படி ஸ்ர்ஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாகவந்து கண்வளர்ந்தருளின வளவன்றிக்கே, ஜகத்துக்கு, தன்னை முதலிலே ஸ்ர்ஷ்டித்தருளின உபகாரந்தன்னை யருளிச்செய்கிறார் (உய்யவித்யாதி) கரண களேபர விதுரராய் போகமோக்ஷசூந்யராய்*அசிதவிசேஷிதராய்க்கிடக்கிற ஆத்மாக்கள் கரணகளேபரங்களைப்பெற்று, திருவடிகளை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கைக்குறுப்பாக லோகத்தை ஸ்ர்ஷ்டிக்கையிலே விருப்பத்தையுடையனாய், (ரு) வ்யஷ்டி ஸ்ர்ஷ்டிக்கு கர்த்தாவான சதுர்முகனைத் திருநாபீகமலத்திலே தோற்றுவித்தவனே.

(வையமித்யாதி) ஜகத்ஸ்ர்ஷ்டி பண்ணுகிறபோதே, "பூமியிலுண்டான மநுஷ்யர் நம்முடைய ஆஜ்ஞாரூபமான சாஸ்த்ரமர்யாதையில்நிற்பார்சிலரல்லர், க்ர்த்ரிமராய் விபரீதப்ரவ்ர்த்தராமவர்கள்" என்று திருவுள்ளம்பற்றி, "அப்படி அதிப்ரவ்ர்த்தரான தசையில் அதுக்கீடாக சிக்ஷித்தாகிலும் ரக்ஷிக்கவேணும்" என்று காலனையுமுடனே ஸ்ர்ஷ்டித்தவனே. "பொய்யர்" என்கிறவித்தை, "பொய்" என்று குறைத்துக்கிடக்கிறது. (ஐய)ஐயனே;—பரமபந்துவானவனே. இத்தால் - ரக்ஷிக்கைக்கீடான ப்ராப்தியைச் சொல்

(௧) ஸ்வஸ்பர்சம் - தன்னுடையபரிசம். (௨) ப்ரக்ர்தி - இயல்பு. (௩) இவை - ஆத்மாக்கள். (௪) ரக்ஷணோபாயம் - காப்பாற்றும் விரகு. (ரு) வ்யஷ்டிஸ்ர்ஷ்டி - தனிஸ்ர்ஷ்டி.

லுகிறது. (இனியென்னைக் காக்கவேண்டும்)அந்தவையத்திலுள்ளார் படியன்றிக்கே, உன்னுடைய அங்கீகாரவிசேஷத்தாலே வ்யாவ்ர்த்தனாய் உனக்கு மங்களாசாஸநம் பண்ணியன்றி தரியாதபடியான பின்பு, இப்படியிருக்கிற வென்னை, என்னுடைய புருஷார்த்தத்துக்கு விரோதியான யமபடரால்வரும் நலிவில் அந்வயமில்லாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) ஜகத்ஸ்ர்ஷ்டியைப்பண்ணி,ஸ்ர்ஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளின வளவன்றிக்கே,இங்குவந்து சாய்ந்தருளிற்று - (க) அநந்யகதிகளாய் (உ) ஆர்த்தராய்த் திருவடிகளிலேவந்து விழுந்தாரை ரக்ஷிக்கைக்காகவன்றோ. (ரு)

சூ.—தண்ணனவில்லை நமன்றமர்கள் சாலக்கொடுமைகள் செய்யாநிற்பர், மண்ணொடுநீரு மெரியுங்காலு மற்றுமாகாசமு மாகி நின்றாய், எண்ணலாம்போதே யுன்னுமமெல்லா மெண்ணினே னென்னைக்குறிக் கொண்டென்றும், அண்ணலேநீயென்னைக் காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—நமன்றமர்கள்-யமபடரானவர்கள், தண்ணனவில்லை - தயையில்லாதவர்களாய்க்கொண்டு, சால - மிகவும், கொடுமைகள் - கொடிதான தண்டங்களை, செய்யாநிற்பர் - பண்ணுகிறார்கள்; மண்ணொடு - பூமியும், நீரும் - ஜலமும், எரியும் - அக்நியும், காலும் - வாயுவும், ஆகாசமும் - ஆகாசமுமாகிற பஞ்சபூதங்களும், மற்றும் - கார்யரூபமான ஜகத்துத்தானும், ஆகி-உனக்கு ப்ரகாரமாக, நின்றாய் - அவற்றுக்கு ப்ரகாரியாய்க்கொண்டு நின்றவனாய், அண்ணலே - ஸர்வஸ்வாமியானவனே, எண்ணலாம்போதே - கரணங்கள் கீழ்ப்படிந்து அநுஸந்திக்கலான காலத்திலே, உன்-உன்னுடைய, நாமமெல்லாம்-திருநாமங்களையெல்லாம், எண்ணினேன் - எனக்கு தாரகமாகவும் போக்யமாகவும் அநுஸந்தித்தேன்; என்னை - உனக்கு மங்களாசாஸநம் பண்ணாதபோது தரியாதவென்னை, நீ—, என்றும் - எக்காலத்திலும், குறிக்கொண்டு - திருவுள்ளம்பற்றி, என்னை—, காக்கவேண்டும் - யமபடரால்வரும் நலிவில் அகப்படாதபடி ரக்ஷித்தருளவேணும்; அரங்கத்தரவணைப் பள்ளியானே—.

வ்யா.—ஆறும்பாட்டு. (தண்ணனவில்லை) மெத்தனவில்லை. (ங) உக்தி வ்ர்த்திகளெல்லாம் கடிநமாயாய்த்திருப்பது. "கடுஞ்சொலார் கடியார்" என்னக் கடவதிறே. அன்றிக்கே, தண்ணனவாவது - தணிதலாய், அது இல்லை யென்கையாலே - நலிகையில் ஓவுதலில்லாமையைச் சொல்லுகிறது. ஒருகால் விட்டுப் பற்றுவதில்லையென்கை. (நமன்றமர்கள்) ப்ரதாநனான யமன்றானாகில் கண்குழிவுகண்டாறே ஒருகாலாக விட்டிருக்கவுங்கூடும்; இவர்கள்

(க) அநந்யகதிகளாய் - வேறுகதியில்லாதவர்களாய். (உ) ஆர்த்தராய்-துக்கமுற்றவர்களாய். (ங) உக்திவ்ர்த்திகள் - சொலவும் செயலும்.

அவனுடைய படராணையாலே "அவன்சொன்னதில் ஒன்றும் தப்பாதே செய்யவேணும்" என்னும் நினைவாலே (க) கண்பாராதே க்ரூரமாக நலியாநிற்பர்களாய்த்து. (சாலக்கொடுமைகள் செய்யாநிற்பர்)மிகவும்கொடிதான தண்டனைகளைப்பண்ணுநிற்பர்கள். அதாவது - இந்த (உ) தேஹவிச்லேஷத்துக்குமுன்னே, சிவந்தமயிரும் எரிந்தவிழியும் பொறிபறக்கிற முகமும் நா மடிக்கொண்ட வுதடுமான (ந) உக்ரவேஷத் தோடே, * சேவதக்குவாரைப் போலே, கையும் சூலமும் பாசமும் முதலானவற்றோடேவந்து நிற்கும் நிலைதன்னாலே வயிறு எரிகொளுந்தும்படி பண்ணுகையும், "நமன்றமர் பாசம்விட்டால் அலைப்பூணுண்ணும்" என்னும்படி இந்த சரீரந்தன்னை விடுவிக்கிறஸமயத்தில் அலைச்சல்படுகையும், பின்பு யாதநாசரீரத்திலே புகுரச்சொல்லி மோதுகையும், "பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றிப் பின்முன்னாக விழுப்பதன்முன்னம்" என்கிறபடியே - வலியகயிற்றால் காலிலேகட்டித் தியங்கவடித்து தலைபின்னும் கால்முன்னுமாக யாம்யமார்க்கத்தாலே யிழுத்துக் கொண்டுபோகையும், நாய்களையேவித் துடைவழிகவருவிக்கையும், சூலத்தாலே பாய்கையும், முதலாகச்செய்யுங் கொடுமைகளுக்கு ஒரு முடிவில்லையிறே. "செய்யாநிற்பர்" என்கிறவர்த்தமானத்தாலே-(ச) உத்தரோத்தரம் செய்யும் கொடுமைகளையெல்லாம் சொல்லுகிறது.

(மண்ணீத்யாதி) பூமியோடே ஜலமும் அக்நியும் வாயுவும் ஆகாசமுமாகிற ஜகத்காரணமான பூதபஞ்சகமுமாய், மற்றும் கார்யரூபமான ஜகத்துத்தானும் "நீ" என்கிற சொல்லுக்குள்ளே யடங்கும்படி உனக்குப்ரகாரமாக இவற்றுக்கு ப்ரகாரியாய்க்கொண்டு நின்றவனே. இத்தால் - ஸர்வகாரணபூதனாய் ஸர்வப்ரகாரியா யிருக்கையாலே உனக்கு விதேய மல்லாததொன்று இல்லையிறே. ஆனபின்பு இந்தயமபட்ரால்வரும் நலிவை நீயேமாற்றவேணும். (எண்ணலாம்போதே யுன்னுமமெல்லா மெண்ணினேன்) இத்தால்-தம்முடைய ப்ராப்யநிஷ்டையைச் சொல்லுகிறார். கரணங்கள் விதேயமாய் அநுஸந்திக்கலானபோதே, உன்னுடைய திருநாமமெல்லாம் எனக்கு தாரகமாகவும் போக்யமாகவும் அநுஸந்தித்தேன். நாராயண சப்தத்துக்குள்ளே ஸகலநாமங்களு மந்தர்ப்பூதமாகையாலே, அதொன்றையும் சொல்லவே எல்லா நாமங்களையும் சொன்னாராவரிறே. இவர்தாம் அதொழிய வேறொன்றறியாரிறே. "நன்மை தீமைக ளொன்றுமறியேன் நாரணாவென்னு மித்தனையல்லால்" என்றும், "ஓவாதே நமோநாரணாவென்பன்" என்றுமிறே இவரிருப்

(க) கண்ப்பாராதே - தயையில்லாமல். (உ) தேஹவிச்லேஷம் - உடல்நீங்குங்காலம். (ந) உக்ரம் - கொடுமை. (ச) உத்தரோத்தரம்-மேன்மேலும்.

பது. மங்களாசாஸநத்துக்கும் இதுதானேயிறே இவர்க்கு வாசகம். "நமோநாராயணாய வென்று - பரமாத்துமனைச் சூழ்ந்திருந்து - பல்லாண்டு - ஏத்துவர்" என்றாரிறே. ஆகையால், இத்திருநாமமொழிய இவர் ஒருக்ஷணமும் தரிக்கமாட்டார். "உண்ணுநாள் பசியாவதொன்றில்லை - நமோ நாரணாவென்றெண்ணா நாள் - எனக்கு - பட்டினிநாள்" என்னுமவரிறே. ஆக, இப்படி உன்னுமமெல்லா மெண்ணினேன்.

(என்னைக் குறிக்கொண்டு) இப்படி யுன்றிருநாமத்தைச் சொல்லி உனக்கு மங்களாசாஸநம்பண்ணுதபோது க்ஷணகாலமும் தரிக்கமாட்டாதவென்னைத் திருவுள்ளம்பற்றி. (என்றும்) ஸர்வகாலத்திலும். இந்தநிலைதான் இவர்க்கு (க) காதாசித்கமன்றே. (அண்ணலே) ஸர்வஸ்வாமியானவனே. இத்தலையிழவுபேறுகள் உன்னதாம்படியன்றோ (உ) குடற்றுடக்கிருப்பது. (நீ யென்னைக் காக்கவேண்டும்) இப்படியிருந்துள்ள நீ, கீழ்ச்சொன்ன புருஷார்த்த நிஷ்டையையுடையேனானவென்னை, இப்புருஷார்த்தத்துக்கு விரோதியாக யமபடரால்வரும் நலிவில் அகப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) இதுதான் நான் இன்று விண்ணப்பம் செய்யவேணுமோ, இதுக்கு முற்கோலிவந்தன்றோ தேவரீரிங்கேவந்து கண்வளர்ந்தருளுகிறது. (௬)

௭.—செஞ்சொன் மறைப்பொரு ளாகிநின்ற தேவர்களாயகனே
யெம்மானே, யெஞ்சலிலென்னுடை யின்னமுதே யேழுல
கமுடையா யென்னப்பா, வஞ்சவுருவினமன்றமர்கள் வலிந்
துநலிந்தென்னைப் பற்றும்போது, அஞ்சலமென்றென்னைக்
காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—செம் - செவ்விய, சொல் - சொல்லையுடைத்தான, மறை - வேதத்தினுடைய, பொருளாகிநின்ற - அர்த்தபூதனாய் நின்றவனாய், தேவர்கள் - நித்யஸூரிகளுக்கு, நாயகனே - தலைவனானவனாய், எம்மானே - அவர்களைப் போலே யென்னையு மெழுதிக்கொண்டவனாய், எஞ்சலில் - சுருங்குத லில்லாததாய், இன் - பரமபோக்யமாய், என்னுடை அமுதே - அம்ர்தம்போலேஎனக்கு ரஸாவஹமாய் நின்றவனாய், ஏழுலகமுடையாய் - ஸமஸ்தலோகங்களுக்கும் கடவனான ஸ்வாமியாய், என் - எனக்கு, அப்பா - உபகாரகனானவனே, வஞ்சம் - ஒருவர்க்கும் தெரியாதபடி மறைத்துக் கொண்டுவரும், உருவின் - ரூபத்தையுடைய, நமன்றமர்கள் - யமபடரானவர்கள், வலிந்து - பலாத்கரித்து, நலிந்து - பீடித்துக்கொண்டுவந்து, என்னை—, பற்றும்போது - பிடிக்கும்காலத்தில், அஞ்சலமென்று - அஞ்சாதேகொள்ளென்று, என்னைக் காக்கவேண்டும்—; அரங்கத்தரவணைப் பள்ளியானே—.

(க) காதாசித்கம் - ஓரொருகாலம். (உ) குடல்துடக்கு-சரீரஸம்பந்தம்.

வ்யா.—ஏழாம்பாட்டு. (செஞ்சொல் மறைப் பொருளாகி நின்ற) செவ்வியசொல்லை யுடைத்தான வேதத்தினுடைய அர்த்த பூதனாய்நின்ற. சொல்லுக்குச் செவ்வையாவது-(௧) யதாபூதவாதித்வம். நாஸ்திகரா யிருப்பார்க்கு (௨) ஸ்வார்த்தத்தை மறைக்கையாலே, இத்தை "மறை" என்கிறது. இதுதான் பூர்வபாகமென்றும் உத்தரபாகமென்றும் இரண்டுகூறாய்; அதில் (௩) பூர்வபாகம் (௪) கர்மப்ரதி பாதகமாய், (௫) உத்தரபாகம் ப்ரஹ்ம ப்ரதிபாதகமாயிருந்ததேயாகிலும், ஆராதநஸ்வரூபத்தையும் ஆராத்யஸ்வரூபத்தையும் சொல்லுகிறதாகையாலே, "వేదైశ్చ సర్వైరహమేవ వేద్యః" "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்கிறபடியே எல்லாவேதங்களுக்கும் இவனே ப்ரதிபாத்யன் என்னத்தட்டில்லையிறே. "సర్వే వేదా యత్పదమామనన్తి" "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" என்னக்கடவதிறே. பூர்வபாகத்தில், இவனை (௬) ஸத்வாரகமாக (௭) ப்ரதிபாதியாநிற்கும்; உத்தரபாகத்தில், அத்வாரகமாக ப்ரதிபாதியாநிற்கும்; அத்தைப்பற்றவிறே "శ్రుతిశిరసి విదీప్తే" "ஶ்ருதிஶிரஸி விதீப்தே" என்றருளிச்செய்தது. (தேவர்கள்நாயகனே) "యత్ర పూర్వే సాధ్యాః సన్తి దేవాః" "யத்ர பூர்வே ஸாத்யா: ஸந்தி தேவா:" என்கிறநித்யஸூரிகளுக்கு (௮) நிர்வாஹகனானவனே. அவர்களுக்கு நிர்வாஹகனாகையாவது-(௯) அஹ்ர்தய ஸஹஜதாஸ்யராகையாலே தன்னுடைய அநுபவகைங்கர்யங்களை யொழிய அரைக்ஷணமும் செல்லாதபடியாய், அஸ்தாநே பயசங்கிகளாய்க் கொண்டு மங்களாசாஸநபரராய்ப் போருகிறவர்களுடைய ப்ரக்ர்தியறிந்து விநியோகங்கொண்டு போருகை. (எம்மானே) அவர்களைப் போலே என்னையும் உன்றிருவடிகளுக்குப் பரிவனாக்கி அடிமை கொண்டு போருகிறவனே. (எஞ்சலி லென்னுடையின்னமுதே) (௧௦) ப்ராக்ர்தமான அம்ர்தத்தில் வ்யாவ்ர்த்தி. எஞ்சல் - சுருங்கல். "இல்" என்பது - இல்லாமை. அதாவது - தேசகாலங்களால் வரும் ஸங்கோசரஹிதமாயிருக்கை. அது எல்லாதேசத்திலு மின்றிக்கே எல்லாக் காலத்திலும் புஜிக்கவொண்ணாதபடியா யிருக்குமிறே. "என்னுடையமுது" என்கையாலே - புஜித்தார்க்கு, உடம்பைப் பூண்கட்டுமதுபோலன்றிக்கே உயிரைப் பூண்கட்டுமதாயிருக்கை. "இன்னமுது" என்கையாலே - புஜித்தார்க்கு, த்ர்ப்தியைப் பிறப்பி

---

(௧) யதாபூத வாதித்வம் - உண்மையைச்சொல்லுகை. (௨) ஸ்வார்த்தத்தை - தன்பொருளை. (௩) பூர்வபாகம் - முன்பங்கு. (௪) கர்மப்ரதிபாதகம் - சேதநன்பண்ணத்தக்க கர்மங்களைப்பற்றிச் சொல்லுமது. (௫) உத்தரபாகம் - பின்பாதி. (௬) ஸத்வாரகமாக - நேர்கொடுநேரே. (௭) ப்ரதிபாதித்தல்-சொல்லுதல். (௮) நிர்வாஹகன் - தலைவன். (௯) அஹ்ர்தயம்-மநமில்லாமை. (௧௦) ப்ராக்ர்தமான - பழையதான.

க்குமதுபோலன்றிக்கே, "அப்பொழுதைக் கப்பொழுதென் னாரா வமுதம்" என்கிறபடியே-புஜிக்க புஜிக்க மேன்மேலன (க) த்ர்ஷ்ணையைவிளைக்குமதா யிருக்கை. கீழ்ச்சொன்ன நித்யஸூரிகளும், "அப்பால்முதலாய்நின்ற அளப்பரியவாரமுது" என்று - இவ்வம்ர்தத்தையிறே புஜிப்பது. அவ்வம்ர்தந்தான் "அரங்கமேய வந்தணனே" என்னும்படி (உ) ஆஸந்நமாய்த்தே இவர்க்கு. (ஏழுலகமுடையாய்) இத்தால் - லீலாவிபூதியோகத்தைச் சொல்லுகிறது. "ஸர்வேஶ்வரஸ்ய" "பதிம்விஶ்வஸ்ய" என்கிறபடியே - ஸமஸ்தலோகங்களுக்கும் கடவனான ஸ்வாமியானவனே. (என்னப்பா)இங்கும் ஒரு கூறுண்டே· இவர்க்கு. ஆந்தராளிகராகையாலே இரண்டிடத்திலுமந்வய முண்டிறே. * பொருளல்லாத வென்னைப் பொருளாக்குகையாலே எனக்கு ஸத்தாகாரணமானவனே. (வஞ்சவுருவின் நமன்றமர்கள்) தங்கள்வரவு ஒருவருக்கும்தெரியாதபடி ரூபத்தைமறைத்துக்கொண்டு வரும் யமபடரானவர்கள். (வலிந்துநலிந்தென்னைப் பற்றும்போது) (ங) பலாத்கரித்து (ச) பீடித்துக்கொண்டுவந்து என்னைப் பிடிக்கும்போது. (அஞ்சலமென் றென்னைக்காக்க வேண்டும்) அஞ்சாதேகொள்என்று உன்திருமிடற்றோசை கேட்கும்படியருளிச்செய்து, கீழ்ச்சொன்னபடியே உன்னையநுபவித்து உனக்கு மங்களா சாஸநம் பண்ணுதபோது தரிக்கமாட்டாத வென்னை, இப்புருஷார்த்தத்தைக் கலக்கும் யமபடரால்வரும் (ரு) பாதையில் அந்வயியாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) இப்படிரக்ஷிக்கைக்காக வன்றோ கீழ்ச்சொன்ன இரண்டு விபூதியிலும் வ்யாவர்த்தமாய்க் கொண்டு த்ர்தீயவிபூதியான திருவரங்கத் திருப்பதியிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது. (எ)

மூ.—நானேதுமுன்மாய மொன்றறியே னமன்றமர்பற்றி நலிந்திட்டிந்த, வூனேபுகேயென்றுமோதும்போதங்குன்னை நானொன்றும்நினைக்கமாட்டேன், வானேய்வானவர்தங்களீசா மதுரைப்பிறந்த மாமாயனேயென், னாய்நீ யென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—முன் நடந்தவற்றிலும் இனிநடக்குமவற்றிலும் ஒன்றுமறியாத, நான்—, உன் - எல்லாம் வல்லவனான வுன்னுடைய, மாயம் - மாயைகளில், ஏதொன்றும் - ஏதேனுமொன்றும், அறியேன்—; நமன்றமர் - யமபடரானவர்கள், பற்றி - பிடித்து, நலிந்திட்டு - இந்தசரீரத்தோடே நலியத்தக்கதெல்லாம் நலிந்து, பின்பு, இந்தவூன் - இந்தயாதநாசரீரத்திலே, புகுஎன்று - ப்ரவேசியென்று, மோதும்போது - அடிக்குங்காலத்தில், அங்கு - அத்தசையில், உன்னை-பெருந்துன்பம் தீர்ப்பவனானவுன்னை, நான்—, ஒன்றும் - ஒருவகையா

(க) த்ர்ஷ்ணை - ஆசை. (உ) ஆஸந்நமாய்த்து - கிட்டிற்று. (ங) பலாத்கரித்து - வலிந்து. (ச) பீடித்தல் - வருத்தல். (ரு) பாதை - துன்பம்.

னும், நினைக்கமாட்டேன் - ரக்ஷகனாக நினைக்கமாட்டேன்; வான் - பரமபதத்திலே, ஏய் - பொருந்திவர்த்திக்கிற, வானவர்தங்கள் - நித்யமுக்தர்க்கு, ஈசா-தலைவனாய், அப்படி எல்லாரிலும் உயர்ந்தவனா யிருந்துவைத்து இங்குள்ளாரை யடிமைகொள்ளுகைக்காக, மதுரை - ஸ்ரீமதுரையிலே, பிறந்த - திருவவதரித்த, மா - மிக்க, மாயனே - ஆச்சர்யச் செய்கையுடையனாய், என் - மங்களாசாஸநபரனான வெனக்கு, ஆனாய் - பாகன்வசப்பட்டொழுகும் ஆனைபோலே வசீகர்தனாய், நீ - ஸர்வரக்ஷகனானநீ, என்னைக் காக்கவேண்டும்—, அரங்கத்தரவணைப்பள்ளியானே—.

வ்யா.—எட்டாம்பாட்டு. (நானித்யாதி) (௧) அதீதாநாகதங்களில் ஒன்றுமறியாத நான், ஸர்வசக்தியான உன்னுடைய மாயைகளிலேதேனு மொன்றுமறியேன். இப்போது இவர் "உன்மாயம்" என்கிறது, "போமிடத்துன் திறத்தெத்தனையும் புகாவண்ணம்நிற்பதோர் மாயைவல்லை" என்றுசொன்னதுபோலே யிருக்குமவற்றையிறே. அதாவது - (௨) கர்மாநுகுணமாக இச்சேதநர் விஷயத்தில் அவன்பண்ணிவைக்கும் வஞ்சநங்க ளநேகங்களிறே; அவையெல்லாம் அவன்றானறியுமத்தனையொழிய, எதிர்த்தலைக்குத் தெரியாதபடியிறே யிருப்பது; அத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (நமன்றமர் பற்றி நலிந்திட்டு) கர்மங்களைப் பத்தும்பத்தாகக் கணக்கிட்டு நலியக்கடவ யமபடரானவர்கள்வந்து பிடிக்கிறபோதே எல்லாதுக்கங்களும் விளையும்படிவந்துபிடித்து, (௩)வாசாமகோசரமாம்படி, இந்த சரீரத்தோடே நலியத்தக்கதெல்லாம் நலிந்து. (இந்தவூனேபுகேயென்று மோதும்போது) அநந்தரம் (௪) யாதநாசரீரத்தைக்காட்டி "இந்த சரீரத்திலேபுகு" என்பர்களாய்த்து. "இந்தவூன்" என்று - விட்ட சரீரத்திற் காட்டில் (ரு) ப்ரவேசிக்கிற சரீரத்தினுடைய கொடுமையைச் சொல்லுகிறது. அதாவது-(௬) சேதநபேதநாதிகளிலும் விடக்கடவதன்றிக்கே அத்யந்த து:காவஹமாயிருக்குமிறே; அத்தைப்பற்றவிறே "யாதநா சரீரம்" என்றுபேராய்த்து. "యాతనాతీవ్రవేదనా" "யாதநாதீவ்ரவெதநா" என்னக்கடவதிறே. இப்படியிருக்கிறசரீரத்தைக் காட்டி "இதிலேபுகு"என்றால், இவன் வெருவிப்பிற்காலியாநிற்குமிறே. "இதிலே புகு" என்று கண்பாராதே மோதாநிற்பர்களாய்த்து. அதிலே ப்ரவேசிக்கவேணுமே யவர்களுக்கு, மேலுண்டான து:கங்களையெல்லாம் இவனை யநுபவிப்பிக்க. இப்படி "இதிலே புகு" என்று அவர்கள் மோதுங்காலத்தில். (அங்குன்னை நானொன்றும் நினைக்கமாட்டேன்) அவ்விடத்தில், ஆப

(௧) அதீதம் - கடந்துபோனது. (௨) கர்மாநுகுணமாக - செய்வினைக்குத்தக்கபடி. (௩) வாசாமகோசரம்-வாயாற்சொல்லக்கூடாமை. (௪) யாதநாசரீரம் - துன்பமநுபவிக்கும் உடம்பு. (ரு) ப்ரவேசிக்கிற - புகுகிற. (௬) சேதநபேதநாதிகள் - அறுத்தலும், பிளத்தலும்.

த்விமோசகனான உன்னை நான் ஒருப்ரகாரத்தாலும் ரக்ஷகனாக நினைக்கமாட்டேன். "அங்கேதும்நானுன்னைநினைக்கமாட்டேன்" என்று பாடமானபோது - அவ்விடத்தில் ஏகதேசமும் நானுன்னை நினைக்கமாட்டேனென்று பொருளாகக்கடவது. அவர்கள் நலிகிறநலிவிலே யகப்பட்டு மநஸ்ஸு கலங்குகிறதசையிலே தேவரீரை நினைக்கப்போமோ. (வானேய்வானவர்தங்களீசா) பரமபதத்திலே பொருந்தி வர்த்திக்கிற நித்யமுக்தர்க்கு, ஸ்வரூபாநுரூபமான வடிமைகொள்ளும் நியந்தாவானவனே. ஏய்கை - பொருந்துகை. (மதுரைப்பிறந்த மாமாயனே) அப்படி ஸர்வஸ்மாத்பரனாயிருந்துவைத்து இங்குள்ளாரை ஆட்கொள்ளுகைக்காக ஸ்ரீமதுரையிலே இதரஸஜாதீயனாய்வந்தவதரித்த ஆச்சர்யபூதனே. அங்கு நியந்தாவாய்நின்று ஆட்கொள்ளும்; இங்கு நியாம்யனாயிருந்து ஆட்கொள்ளும். "ஆட்கொள்ளத்தோன்றிய ஆயர்தம்கோ" என்றாரிறே. (என்னனாய்) தன்னுடைய ஸ்வாபாவிகமான பலத்தால் வந்த பெருமதிப்பைப்பாராதே, (க) அல்பபலவிசிஷ்டனான பாகன்கையிலே (உ) வசீக்ர்தமான (ந) மத்தகஜம்போலே, மங்களாசாஸநபரனான வெனக்கு வசீக்ர்தனானவனே. (நீயென்னைக்காக்கவேண்டும்) ஸர்வரக்ஷகனான நீ, உனக்கு மங்களாசாஸநம்பண்ணுதபோது க்ஷணகாலமும் தரிக்கமாட்டாத வென்னை, இதுக்குவிக்நமாக யமபடர்பண்ணும் நலிவால்வந்த கலக்கத்தில் அர்வயியாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப்பள்ளியானே) பயிர்த்தலையிலே குடில்கட்டிக்கிடக்குமாபோலே, பரமபதாதிகளைவிட்டு கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது, அபிமாநாந்தர்ப்பூதரானவர்களை அழிவறநோக்குகைக்காகவன்றோ.

மூ.—குன்றெடுத்தாநிரை காத்தவாயா கோநிரைமேய்த்தவனே யெம்மானே, அன்றுமுதலின்றறுதியாவாதியஞ் சோதிமறந்தறியேன், நன்றுங்கொடிய நமன்றமர்க ணலிந்துவலிந்தென்னைப்பற்றும்போ, தன்றங்குநீ யென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே.

ப-ரை.—குன்று-கோவர்த்தந பர்வதத்தை, எடுத்து-குடையாகவெடுத்து, ஆநிரை - ஆநிரையை, காத்த - ரக்ஷித்த, ஆயா - ஆயனாய், கோநிரை-பசுநிரையை, மேய்த்தவனே - புல்லுந்தண்ணீரு முள்ளவிடந்தேடி மேய்த்தவனாய், அம்மானே - ஸர்வஸ்வாமியானவனே, அன்றுமுதல் - உனக்குப் பல்லாண்டுபாடுமவ னாக்கிக்கொண்டநாளதுடங்கி, இன்றறுதியா - இன்றளவாக, ஆதி - ஸர்வகாரணபூதனான வுன்னுடைய, அம் - விலக்ஷணமான, சோதி - தேஜஸ்ஸையுடைய விக்ரஹத்தை, மறந்தறியேன் —; நன்றுங்கொடிய-மிகவுங் கொடி

(க) அற்பபலம் - சொற்பபலம். (உ) வசீக்ர்தமான-வசப்பட்டிருக்கிற. (ந) மத்தகஜம் - மதயானை.

யரான, நமன்றமர்கள் - யமபடரானவர்கள், என்னை—, நலிந்து - நலிந்துகொண்டு, வலிந்து - பலாத்கரித்து, பற்றும்போது - பிடிக்குங்காலமான, அன்று - அப்போது, அங்கு - அத்தசையிலே, நீ - சேஷியாய் ரக்ஷகனான நீ, என்னை - எப்பொழுதும் வாழ்த்துமவனான வென்னை, காக்கவேண்டும் - ரக்ஷித்தருளவேணும்; அரங்கத்தரவணைப்பள்ளியானே—.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (குன்றித்யாதி) இந்த்ரன்பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தை வர்ஷித்தபோது, நின்றதொருமலையைக் குடையாகவெடுத்து, அந்தவர்ஷாபத்தில் (௧) ஈடுபடாதபடி பசுநிரையை ரக்ஷித்தஆயனானவனே. இதுதான், கோபகோபீஜநங்களை ரக்ஷித்ததுக்கு முபலக்ஷணம். ஆனால் அவர்கள் தன்னைச் சொல்லாதே, "ஆநிரைகாத்தஆயா" என்று இத்தைச் சொல்லுவானென்னென்னில்; எல்லாவற்றிலும் ப்ரதாந ரக்ஷ்யவர்க்கம் இவையேயாகத் திருவுள்ளம்பற்றி யிருக்கையாலே. * ஆயனாயன்றுகுன்ற மொன்றெடுத்தான் அரங்கமாநகரமர்ந்தானிறே. (கோநிரைமேய்த்தவனே) ஆபத்தசையில் ரக்ஷித்தவளவன்றிக்கே, அவதாரத்தின் மெய்ப்பாட்டுக்கீடாக அல்லாத இடையரோபாதி கையிலேகோலெடுத்துப் பசுநிரைமேய்த்தவனே. "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்று - பரமபதத்திலிருப்பிலுங் காட்டில் பசுநிரைமேய்க்க உகந்திறேயவதரித்தது. (எம்மானே) இந்த குணசேஷ்டிதங்களாலே என்னை யெழுதிக்கொண்டவனே. "அம்மானே" என்று பாடமாகில் - ஸர்வஸ்வாமியானவனேயென்று பொருளாகக்கடவது. அப்போது, கீழ்ச்சொன்ன ரக்ஷணத்துக்கடியான ப்ராப்தியைச் சொல்லுகிறது. (அன்றுமுதல்) (௨) * கருவரங்கத்துள் கிடந்தவன்றுமுதலென்னுதல்; திருப்பல்லாண்டுபாட நீ விஷயீகரித்தவன்று முதலென்னுதல். (இன்றறுதியா) இன்றளவாக. (ஆதியஞ் சோதிமறந்தறியேன்) ஸர்வகாரணமாய் விலக்ஷணதேஜோரூபமான உன்னுடைய விக்ரஹத்தை மறந்தறியேனென்னுதல்; ஸர்வகாரணபூதனான வுன்னுடைய, விலக்ஷணமான தேஜஸ்ஸையுடைய விக்ரஹத்தை, மறந்தறியேனென்னுதல். (நன்றுங்கொடிய நமன்றமர்கள்) மிகவும்கொடிய யமபடரானவர்கள். "நன்றும்" என்றது - மிகவும் என்றபடி. (நலிந்துவலிந்தென்னைப் பற்றும்போது) நலிந்துகொண்டு பலாத்கரித்து என்னைப்பிடிக்கும்போது. (அன்றங்கு நீயென்னைக்காக்கவேண்டும்) அவர்கள் நலியுங்காலத்திலே, அவ்விடத்திலே சேஷியாய் ரக்ஷகனான நீ; உன்பக்கல் (௩) விஸ்ம்ருதியின்றிக்கே, மங்களாசாஸநபரனாய்க் கொண்டு போருமென்னை, இப்புருஷார்த்தத்துக்கு விரோதியானவர்கள் நலிவில் அகப்படாதபடி ரக்ஷி

(௧) ஈடுபடாதபடி - வருந்தாதபடி. (௨) கருவரங்கம் - கர்ப்பக்குழி. (௩) விஸ்ம்ருதியின்றிக்கே - மறவாமல்.

த்தருளவேணும். (அரங்கத்தரவணைப்பள்ளியானே) "அரவணை மேல்பேராயற்காட்பட்டார்பேர்-நமன்றமராலாராயப்பட்டறியார்" என்னும்படி "நமன்றமனொன்றமனை வினவப்பெறுவாரலர்" என்று அபிமாநித்து நோக்கிக்கொண்டுபோரும் தேவரீருடைய அபிமாநாந்தர்ப்பூதரானவர்களுக்கு இதுதான்வருகைக்கு(க)ப்ரஸங்கமுண்டோ. என்னுடைய அதிசங்காமூலமான கலக்கத்தால்வந்தபயத்தாலே அடியேன் விண்ணப்பஞ்செய்த வித்தனையன்றே. (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழிகற்றூர்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறூர்.

மூ.—மாயவனை மதுசூதநனை மாதவனை மறையோர்க ளேத்தும்,
ஆயர்களேற்றினை யச்சுதனை யரங்கத்தரவணைப்பள்ளியானை,
வேயர்புகழ் வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்சொன்ன மாலை
பத்தும், தூயமநத்தனராகி வல்லார் தூமணி வண்ணனுக்
காளர்தாமே.

ப-ை.—மாயவனை - ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையனாய், மதுசூதநனை - மதுவை நிரஸித்தவனாய், மாதவனை - பெரிய பிராட்டியார்க்கு வல்லபனாய், மறையோர்கள் - வேததாத்பர்யமறிந்தவர்கள், ஏத்தும் - எப்பொழுதும்ஸ்துதிக்கும்படி, ஆயர்கள் - இடையர்க்கெல்லாம் தலைவனாகையால் வந்த, ஏற்றினை - மேனாணிப்பையுடையனாய், அச்சுதனை - அடுத்தவரை ஒருகாலும் நழுவ விடாதவனாய், உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் முதன்மையாய், அரங்கத்து - ந்ர்த்தஸ்தலமா யிருக்கையாலே "ரங்கம்" என்கிற திருநாமத்தை யுடைத்தாயிருக்கிற கோயிலிலே, அரவு - திருவநந்தாழ்வானாகிற, அணை- திருப்படுக்கையிலே, பள்ளியானை - பள்ளிகொண்டருளுகிற அழகிய மணவாளன் விஷயமாக; வேயர் - தாம் திருவவதரித்த குடியிலுள்ளா ரெல்லாரும், புகழ் - புகழும்படியா யிருப்பாராய், வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூருக்கு, மன் - தலைவராய், விட்டு - ஸர்வ வ்யாபகனான ஸர்வேச்வரனை, சித்தன் - திருவுள்ளத்திலே யுடையரான பெரியாழ்வார், சொன்ன - அருளிச்செய்த, மாலை- மாலா ரூபமான, பத்தும் - பத்துப்பாட்டையும், தூய - பரிசுத்தமான, மநத்தனராகி - மநஸ்ஸை யுடையராய்க்கொண்டு, வல்லார்தாம் - பயில வல்லவர்கள், தூ - பழிப்பற்ற, மணி - நீலமணிபோலே யிருக்கிற, வண்ணனுக்கு - வடிவழகை யுடையவனுக்கு, ஆளர் - அடிமைசெய்யப்பெறுவர்.

வ்யா.—(மாயவனை) ஆச்சர்யரூபகுண சேஷ்டிதங்களையுடையவனை. இத்தால் - விக்ரஹகுணமான ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களாலும், ஆத்மகுணமான வாத்ஸல்யஸௌசீல்ய ஸௌலப்யாதிகளாலும், ஆச்ரிதரக்ஷணார்த்தமான மநோஹாரி சேஷ்டிதங்களாலும், (உ) அநுபவிதாக்களான (ங) ப்ரேமயுக்தர்க்கு அநவரத

(க) ப்ரஸங்கம் - ஹேது. (உ) அநுபவிதாக்கள் - அநுப்விக்குமவர்கள். (ங) ப்ரேமயுக்தர் - அன்புடையவர்கள்.

மங்களாசாஸநம் பண்ணவேண்டும்படியான வைலக்ஷண்யத்தையு டையவனென்கை. (மதுசூதநனே) அநுபவிப்பார்க்குவரும் விரோ திகளை, மதுவை நிரஸித்தாற்போலே நிரஸித்துக்கொடுக்குமவனே. இத்தால் - அநுபவவிரோதியான யமவச்யதைக்கு அஞ்சவேண் டாதபடியான விஷய மென்கை. "పరిహర మధుసూదనప్రపన్నాన్" "ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" என்று யமன்றனும் நடுங்கும் படியான விஷயமிறே. (மாதவனே) ஆச்ரிதரானவர்களுக்கு (க) உபாயதசையில் புருஷகாரபூதையாய், உபேயதசையில் ப்ராப்ய பூதையாயிருக்கும் பெரியபிராட்டியாருக்கு வல்லபனானவனே. இத் தால் - அச்சேர்த்திக்கு என்வருகிறதோ! என்று ஸர்வகாலமும் "வடிவாய் நின் வலமார்பினில்வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு' என்று மங்களாசாஸநம் பண்ணவேண்டும்படியிருக்குமவனென்கை.

(மறையோர்களேத்து மாயர்களேற்றினே) (உ) அபௌரு ஷேயமாய் (ங) நித்ய நிர்த்தோஷமாய் பகவத்வைபவயாதார்த்ய ப்ரதிபாதகமாயிருந்துள்ள வேதத்தினுடைய தாத்பர்யத்தை யறிந் திருக்குமவர்கள், (ச) பரத்வத்திலுங் காட்டில் (ரு) நீர்மையிலே யீடுபட்டு (சு) அநவரதம் ஸ்துதிக்கும்படி ஸ்ரீநந்தகோபர்திருமக னாய்க்கொண்டு, கோபர்க்கெல்லாம் தலைவனாகையால்வந்த (எ) மேனாணிப்பை யுடையவனே. மேன்மைக்கு "அமரர்" என்னுமா போலேயிறே, நீர்மைக்கு "ஆயர்களேறு" என்கிற விது. பெரிய பெருமாளை க்ர்ஷ்ணாவதாரமாகவிறே நம் பூர்வாசார்யர்கள் அநு ஸந்திப்பது. "கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெ யுண்டவாயன் என்னுள்ளங் கவர்ந்தானை" என்றாரிறே திருப்பாணா ழ்வார். திருப்பவளத்தைமோந்து பார்த்தால் இப்போதும் வெண் ணெய் மணக்கு மாய்த்து. "కూర్మ్యాస్త్రీస్తనఖపరిమళత్వఙ్ఘ్చహీతీయశోదా స్తన్యాస్తన్యాభరణమధికం స స్వమాధంధనోతి" "[illegible]" என்று - "யசோதைப்பிராட்டி பிள்ளைப்பணியாகச்சாத்தின திரு வாபரணம் இப்போதும் பெரியபெருமாள் திருக்கழுத்திலேகிடக் கிறது" என்று கண்டநுபவித்தாரிறே பட்டர். ஆகையால் இவ்வி டத்தில் "மறையோர்கள்" என்கிறது - திருப்பாணாழ்வார், பட்டர் போல்வாரானவர்களை. (அச்சுதனே) ஆச்ரிதரை ஒருகாலும் நழுவ

(க) உபாயம் - ஸாதநம். (உ) அபௌருஷேயம் - புருஷனால்செய்யப் படாதது. (ங) நித்யநிர்த்தோஷம் - என்றும் குற்றமற்றது. (ச) பரத்வம்- பரமபதத்திலிருக்குமிருப்பு. (ரு) நீர்மை - உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு வேற் றுமையின்றிக் கலந்திருத்தல். (சு) அநவரதம் - எப்பொழுதும். (எ) மேனா ணிப்பு - கர்வம்.

விடாதவனே. "பச்சைமாமலைபோல்மேனி பவளவாய்கமலச்செங் கணச்சுதா" என்றாரிறே-தொண்டரடிப்பொடி யாழ்வார். "அச்சுதா" என்றவநந்தரம், "ஆயர்தங்கொழுந்தே" என்று மருளிச்செய்தாரிறே. (அரங்கத்தரவணைப் பள்ளியானே) உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் (க) ப்ரதாநமாய், பெரியபிராட்டியார்க்கு ந்ருத்தஸ்தாநமாகையாலே "ரங்கம்" என்கிற திருநாமத்தை யுடைத்தாயிருக்கிற கோயிலிலே, மென்மை குளிர்த்தி நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே, கீழ்ச்சொன்னகுணங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி பள்ளிகொண் டருளுகிறவனே. (வேயர்புகழ் வில்லிபுத்தூர்மன் விட்டுசித்தன்) தாம்திருவவதரித்தகுடியிலுள்ளாரெல்லாரும், தம்முடையவைபவத்தைச்சொல்லிப் புகழும்படியா யிருப்பாராய், ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய், (உ) ஸர்வவ்யாபகனான ஸர்வேச்வரனை, * அரவத்தமளிப்படியே தந்திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டு, *உறகலுறகல்படியே மங்களாசாஸநம்பண்ணும் பெரியாழ்வார். (சொன்னமாலைபத்தும்) அநுபவத்துக்கும் மங்களாசாஸநத்துக்கும் விரோதியானவற்றைப் போக்கிக் கொள்ளுகைக்காக அருளிச்செய்த சப்தஸந்தர்ப்பரூபமான இப்பத்துப்பாட்டையும். (தூயமநத்தனராகிவல்லார்) ப்ராப்யாந்தரத்திலும் ப்ராபகாந்தரத்திலும் அந்வயமில்லாமையாலே (௩) நிர்த்துஷ்டாந்தஃகரணராய், இவரபிமாநத்திலே யொதுங்கி அப்யஸிக்கவல்லவர்கள். (தூமணிவண்ணனுக் காளர் தாமே) பழிப்பற்ற நீலமணிபோலேயிருக்கிற வடிவழகை யுடையவனுக்கு, "மணிவண்ணா வுன்சேவடி செவ்விதிருக்காப்பு" என்று ஸர்வகாலமும் மங்களாசாஸநம் பண்ணுமவர்கள் தாங்களாவர். இங்கிருந்தநாளும் பெரியபெருமாள் திருவடிகளிலே மங்களாசாஸநம்பண்ணிக்கொண் டிருந்து, சரீராவஸாநத்தில் பரமபதத்திலேபோய் நித்யஸூரிகள் திரளிலேபுகுந்து, "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்கிறபடியே அங்கே யெழுந்தருளியிருக்கிற விருப்பையநுபவித்து, காலதத்த்வமுள்ளதனையும் மங்களாசாஸநம் பண்ணிக் கொண் டிருக்கப் பெறுவரென்கை. (௧௦)

பெரியஜீயர்திருவடிகளேசரணம்.

அடிவரவு.—துப்புச் சாமிடம் எல்லே ஒற்றைப் பை தண் செஞ்சொல் நானேது குன்று மாய வாக்கு.

---

ஆ திருமொழி ௩௯-இ, பாட்டு-௪௨௦.

---

(க) ப்ரதாநம் - முதன்மை. (உ) ஸர்வவ்யாபகன் - எங்கும்நிறைந்திருப்பவன். (௩) நிர்த்துஷ்டாந்தஃகரணராய் - குற்றமற்ற மநதுடையவர்களாய்.

## அஞ்சாம்பத்து.

கீழில் திருமொழியிலே - "சொல்லலாம்போதே யுன்னாமமெல்லாம் சொல்லினேன்" என்று - திருநாமத்தின் போக்யதையை யநுபவித்து, "இத்தை அநாதிகாலம் இழக்கைக்கடியென்" என்றுநிரூபித்தவாறே, அதுக்குஹேது, "இதரவிஷயங்களிலே 'ஆவியேயமுதே' என்று திரிகையாலேயிழந்தது" என்றுவெறுத்து, இப்போது "ஆவியையரங்கமாலை" என்றும், "ஆவியேயமுதே யென்றனுருயிரனையவெந்தாய்" என்றும், தப்பைப் பொறுத்தருளவேணும் என்று, பெரியபெருமாள் போக்யதையிலே தம்முடைய கரணத்ரயமும் மேல்விழுகிறபடியைச் சொல்லுகிறது.

மூ.—வாக்குத்தூய்மை யிலாமையினாலே மாதவாவுன்னை வாய்க்கொள்ளமாட்டேன், நாக்குநின்னையல்லாலறியாது நானதஞ்சுவ னென்வசமன்று, மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலுமென் னாவினுக்காற்றேன், காக்கைவாயிலுங் கட்டுரைகொள்வர் காரணா கருளக்கொடியானே.

ப-ரை.—மாதவா-பெரியபிராட்டியார்க்கு வல்லபனானவனே, உன்னை—, ஸ்தோத்ரம்பண்ணத்தக்க, தூய்மை-பரிசுத்தம், வாக்கு-என்னுடைய வாக்குக்கு, இலாமையினாலே - இல்லாமையாலே, வாய்க்கொள்ள மாட்டேன் - உன்னை ஸ்தோத்ரம்பண்ண சக்தியற்றவனா யிராநின்றேனென்ன; மாட்டீராகில் தவிரும் என்ன; நாக்கு - ரஸமறிந்த நாக்கானது, நின்னையல்லால் - உன்னை யொழிந்தாரை, அறியாது - சொல்லவறியாதென்ன; ஆகில் நீரும் நாக்கோடேகூடிச் சொல்லுமென்ன; அது - அந்நாக்கின் தோஷத்தை நினைத்து, நான்—, அஞ்சுவன் - பயப்படாநின்றேனென்ன; அத்தை வும்முடையவசமாக்கினாலோ வென்ன; அது, என்வசமன்று—; என் பாசுரத்தைப்பார்த்து, இவன்—, மூர்க்குப் பேசுகிறான் என்று—, முனிவாயேலும்-கோபித்துக்கொள்வாயே யாகிலும், என் - என்னுடைய, நாவினுக்கு - நாக்குக்கு, ஆற்றேன் - ஸஹிக்கப் போகாதுஎன்ன; அது நமக்கு அவத்யமன்றோவென்ன; அறிவுடையோர், காக்கை-காக்கையினுடைய, வாயிலும் - வாயினிடத்துண்டாகும் சொற்களையும், கட்டுரை - தங்களுக்கு நல்ல சொற்களாக, கொள்வர் - கொள்ளாநின்றார்கள்; அப்படியே, காரணா - ஸர்வகாரண பூதனாய், கருளன் - பெரியதிருவடியை, கொடியானே - த்வஜமாக வுடையநீயும், என்னைக்கைக்கொண்டருள வேணுமென்கிறார்.

வ்யா.—முதற்பாட்டு. (வாக்கித்யாதி) வாக்குக்கு அசுத்தியாவது - பகவத்ஸந்நிதியிலே அஸத்யஞ்சொல்லுகையும், ப்ரயோஜநத்தைக் (இனிமேல்துடங்கி பூர்வர்க்ஙவ்யாக்யாநம்) கணிசிக்கையும், (க) பரஸ்தோத்ரம் பண்ணுகையும். "பாவியேன் பிழைத்தவாறு." வாக்கு - சொலவு. (மாதவாவுன்னை வாய்க்கொள்ளமாட்டேன்) திருநாமம்சொல்லுகைக்கு முடிந்தவதிகாரிகள் - பிராட்டி

(க) பரஸ்தோத்ரம் - எம்பெருமானை யொழிந்தவர்களை ஸ்துதிக்கை.

யும் நித்யஸூரிகளுமிறே. "பரதனுந்தம்பி" இத்யாதி. உன்போக்யதைக்குத்தோற்று பெரியபிராட்டியார் துடக்கமானூர் சொல்லும் பாசுரத்தை, இதரவிஷயங்களின் போக்யதைக்குத்தோற்று ஸ்தோத்ரம்பண்ணின நாக்காலே சொல்லமாட்டேன். "மாட்டீராகில்தவிரும்" என்ன (நாக்குநின்னையல்லாலறியாது) (க) ரஸமறிந்தநாக்கு, * ஸர்வரஸமான நின்னையல்லாலறியாது. "அத்தால் வரும்குற்றமும் உம்மதன்றோ" என்ன; அது விஷயதோஷம். "அகலகில்லேன்" என்றது மார்வின் குற்றமானாற்போலே. "ஆனால்நீரும் நாக்கோடேகூடிச்சொல்லும்" என்ன (நான்அதஞ்சுவன்) நாக்கின்தோஷத்தை யநுஸந்தித்து நான் அஞ்சாநின்றேன். அது ரஸஜ்ஞமாகையாலே மேல்விழாநின்றது, கரணியான உம்முடையவசமாக்கினாலோவென்ன (அதுஎன்வசமன்று) உன்வசம். "நாக்கு நின்னையல்லா லறியாது" என்பது, "நானதஞ்சுவன்" என்பதாகாநின்றீர், இது மூர்க்கர்சொல்லும் பாசுரமாயிராநின்றதீ யென்ன (மூர்க்குப்பேசுகின்றா னிவனென்று முனிவாயேலும்) என்பாசுரத்தைப் பார்த்தால் மூர்க்கர்சொல்லும் பாசுரம்போலேதோற்றி, முனிகைக்கு (உ) யோக்யதையுண்டு; ஆகிலும். (என்னாவினுக்காற்றேன்) உன்முனிவுக்கு (ங) ஆற்றலாம், என்நாவுக்கு ஆற்றப்போகாது. ஆனால் அது நமக்கு அவத்யமாகாதோவென்ன (காக்கைவாயிலும் கட்டுரைகொள்வர்) அறிவுடையார், குற்றமாகாத வளவன்றிக்கே குணமாகவும் கொள்ளுவர்கள். அது ஓரிடத்தேயிருந்து தனக்கு வேண்டினது பிதற்றிப்போகவும், அத்தை அறிவுடையார், "நமக்கு நன்மை சொல்லுகிறது" என்று கொள்ளுவர்களிறே. கட்டுரை- நற்சொல்லு. அப்படியே நான் வேண்டிற்றுச் சொன்னத்தையும் குணமாக்கிக்கொள்ளவேணுமென்ன; "நான் கைக்கொள்ள வேண்டுகிறதென்" என்ன; நீஸாபேக்ஷனுகையாலே யென்கிறார் மேல் (காரணு கருளக்கொடியானே) ஜகத்தையுண்டாக்கிற்று அவர்கள் பக்கலிலே ஒருகார்யங் கொள்ளுகைக்கிறே. "[illegible]" "விசித்ராதேஹஸம்பத்தி꞉" "வாழ்த்துவார்பலராக" இத்யாதி. ரக்ஷகத்வத்துக்குக் கொடிகட்டியன்றோ கிடக்கிற தென்கிறார் (காரணு கருளக்கொடியானே) உடையவனுகையாலே எல்லாம்பொறுக்கவேணும். (க)

மூ.—சழக்குநாக்கொடு புன்கவிசொன்னேன் சங்குசக்கரமேந்து கையானே, பிழைப்பராகிலுந் தம்மடியார்சொற்பொறுப்பது பெரியோர்கடனன்றே, விழிக்குங்கண்ணிலேன்நின் கண்

(க) ரஸம் - சுவை. (உ) யோக்யதை - காரணம். (ங) ஆற்றலாம் - பொறுக்கலாம்.

மற்றல்லால் வேறொருவரோ டென்மனம்பற்றாது, உழைக்கோர்புள்ளி மிகையன்றுகண்டா யூழியேழுல குண்டுமிழ்ந்தானே.

ப-ரை.—சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், சக்கரம் - திருவாழியாழ்வானையும், ஏந்து - தரித்த, கையானே - திருக்கையை யுடையவனே, உன் விஷயமாக, சழக்கு - உன்னை யொழிந்தாரை ஸ்துதிக்கும் குற்றமுடைய, நாக்கொடு - நாக்கோடுகூட, புன்கவி சொன்னேன் - கவிகளை நான் குற்றமுறச் சொன்னேன்; பிழைப்பராகிலும் - தப்புச்செய்தார்களேயாகிலும், தம் - தம்முடைய, அடியார் - அடியாருடைய, சொல் - சொல்லை, பொறுப்பது - பொறுத்துக்கொள்வது, பெரியோர் - அறிவுடையோர்க்கு, கடனன்றே - கடமையன்றோ; நின் - உன்னுடைய, கண் அல்லால் - கடாக்ஷமொழிய, மற்று - வேறொரு, விழிக்கும் கண் - ரக்ஷகரை, இலேன் - உடைத்தாகாதவனா யிருப்பதுமன்றி, வேறொருவரோடு - மற்றொருவருடன், என் - என்னுடைய, மநம் - மநஸ்ஸானது, பற்றாது - பொருந்தாது; உழைக்கு - புள்ளிமானுக்கு, ஓர்புள்ளி - ஒரு புள்ளியேறினால், மிகையன்றுகண்டாய் - அதிகமன்று கிடாய்; ஊழி - ப்ரளய காலத்தில், ஏழுலகு - ஸகலலோகங்களையும், உண்டு - ப்ரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலே வைத்து, உமிழ்ந்தானே - பின்பு வெளிநாடுகாண வுமிழ்ந்து ரக்ஷித்தது போல என்னையும் ரக்ஷித்தருள வேணு மென்கிறார்.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (சழக்கு) பொல்லாங்கு. நாக்குக்கு தோஷமாவது - (க) ஸ்வோத்கர்ஷம்சொல்லுகையும், பகவத்பாகவதஸந்நிதியிலே அஸத்யஞ்சொல்லுகையும், பரஸ்தோத்ரம் பண்ணுகையும். (புன்கவிசொன்னேன்) கவிக்குக்குற்றமில்லை, நான் சொல்லுகையாலே குற்றமாகச் சொன்னேன். நெஞ்சாலே நினைக்கையேபிடித்து அவத்யமாயிருக்க, சொல்லுவதுஞ் செய்தேன். (சங்குசக்கரமேந்துகையானே) இப்படி அநுதபிக்கைக்கடி - உன் ஸர்வாதிகத்வம்; அதுக்கு அடையாளமிறே - கையிலேந்தின ஆழ்வார்கள். (பிழைப்பராகிலுமித்யாதி) நம்பெருமையையும் உம்முடைய சிறுமையையும் பார்த்தால், பின்னைச்சொல்லப் பெறுவீரோ வென்ன (பிழைப்பராகிலும்) தப்புச்செய்தார்களேயாகிலும். (தம்மடியார்சொல்) அநந்யார்ஹசேஷபூதர்சொன்ன சொல்லாகையாலே பெரியோர்க்குப்பொறுக்கைக்கு உசிதம், அடியாராகையாலும் பொறுக்கவேணும், பெருமையாலும் பொறுக்கவேணும். நாம் பொறுக்கிறோம், நம்மையொழிய ரக்ஷகர் உமக்குப் புறம்பு அற்றிருந்ததோவென்னில் (விழிக்குங்கண்ணிலேன் நின்கண்மற்றல்லால்) உன்னுடைய கடாக்ஷமொழிய, வேறு நோக்குகைக்கு ஒரு மறுவிழியுடையேனல்லேன்; உன்னையொழிய வேறொரு ரக்ஷகரையுடையேனல்லேன். நம்மைப்போலே ரக்ஷகருமாய் போக்யருமா யிருப்பாருண்டானால் பற்றக்குறையில்லையே என்ன (வேறொருவரோ

(க) ஸ்வோத்கர்ஷம் - தன்பெருமை.

டென்மநம் பற்றுது) குணக்ர்ததாஸ்யமன்றிக்கே ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமாகையாலே, புறம்புபோகாது. உமக்குப் புறம்புபோக்கில்லையாகில், உம்மைக் கைக்கொண்டவாறே நமக்கு அவத்யமாகாதோவென்ன (உழைக்கோர்புள்ளி மிகையன்றுகண்டாய்) புள்ளிமானுக்கு, ஒருபுள்ளி ஏறியென், குறைந்தென்; ஸர்வாத்மாக்களுடையவும் அபராதங்களைப்பொறுக்கிற வுனக்கு என்னுடைய அபராதம் பொறுக்கை அவத்யமாகப் புகுகிறதோ. குறைவாளரை அங்கீகரிக்கையன்றோ உனக்கு நிருபகம். "நாம் அப்படி அங்கிகரித்ததுண்டோ" என்னில்; உண்டென்கிறார் (ஊழியேழுலகுண்டுமிழ்ந்தானே) ஸம்ஸாரிகளில் உனக்கு அபராதம் பண்ணுதிருப்பாரொருவருண்டோ, அவர்களபராதங்களைப் பாராதே யன்றோ அவர்களை வயிற்றிலேவைத்து ரக்ஷித்தது; அப்படியே என்னை ரக்ஷிக்கவேணுமென்கிறார். (உ)

அ.—மூன்றும்பாட்டு. (நன்மைதீமையித்யாதி) "காரணு" என்று - நம்முடைய ஸ்ர்ஷ்டிக்கு ப்ரயோஜநம் "வாழ்த்துவார் பலராக" என்றீர், அதுவும் மாசூணும்படியன்றோ நம்முடைய படியென்ன; அது ஒக்கும்; அப்படியன்றே நான், "கோயிலில்வாழும் வைட்டணவன்" என்னும் வன்மைகண்டாயென்கிறார்.

மூ.—நன்மைதீமைகளொன்றுமறியே ஞரணுவென்னுமித்தனையல்லால், புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப் புகழ்வானன்று கண்டாய்திருமாலே, உன்னுமாறுன்னையொன்றுமறியேனே வாதேநமோநாரணுவென்பன், வன்மையாவதுன்கோயிலில் வாழும்வைட்டணவனென்னும்வன்மைகண்டாயே.

ப-ரை.—திரு - பெரியபிராட்டியார் பக்கல், மாலே - வ்யாமுக்தனானவனே, நாரணுவென்னு மித்தனையல்லால் - திருமந்த்ரஞ் சொல்லுகையொழிய, நன்மைதீமைகள் ஒன்றும் - வேருெரு நன்மைதீமைகளையும், அறியேன் - அறிகிறிலேன்; உன்னை - ஸர்வாதிகனானவுன்னை, புன்மையால் - ப்ரயோஜநாபேக்ஷையாலே, புள்ளுவம்பேசி - வஞ்சனையான வார்த்தைகளைச்சொல்லி, புகழ்வானன்று - ஸ்தோத்ரம் பண்ணுமவனல்லேன்; உன்னை—, உன்னும் - சாஸ்த்ரோக்தமாக நினைக்கைக்கு, ஓராறும் - ஒருவழியும், அறியேன்—; ஓவாது - இடைவிடாமல், நமோநாரணுஎன்பன் - நமோநாராயணுயஎன்று சொல்லாநின்றேனென்ன; நீர் இங்ஙன் சொல்லாநின்றீர், இது நல்ல வன்மையாயிருந்ததீ! என்ன; எனக்குண்டான, வன்மையாவது—, உன் - உன்னுடைய, கோயிலில் - கோயிலிலே, வாழும் - வாழுகிற, வைட்டணவனென்னும் - ஸ்ரீவைஷ்ணவனென்கிற, வன்மைகண்டாய் - வன்மைகிடாயென்கிறார்.

வ்யா.—(நன்மையித்யாதி) நான் திருநாமம் சொல்லுகை அத்தலைக்கு நன்மையாய்த் தலைக்கட்டுகிறதோ, தீமையாய்த் தலைக்கட்டுகிறதோ, அறிகிறிலேன். இவனைப்பார்த்தால் தோஷமாய், அவ

னைப்பார்த்தால் குணமாயிருக்கும்; இத்தலையைப்பார்த்தால் (க) அபராதமாய், அத்தலையைப்பார்த்தால் (உ) அபராதஸஹமாயிருக்கும். (நாரணனென்னு மித்தனையல்லால்) "நல்கத்தானாகாதோ நாரணனைக் கண்டக்கால்" என்று - அபராத ஸஹத்வத்தைக் காட்டும் திருநாமமிறே. ஸம்ஸாரிகள்குற்றங்களைப்பொறுத்து, விடமாட்டாதே நிற்கிறவிடமிறே. (புன்மையால்) தண்மையாலே. (உன்னை) ஸர்வாதிகனானவுன்னை. (புள்ளுவம்பேசி) (ங) க்ர்த்ரிமம்சொல்லி. * என்கொள்வ னுன்னைவிட்டென்னும் வாசகங்கள் சொல்லுகிறேனல்லேன். புன்மை - ப்ரயோஜநத்தை ஆசைப்படுகை; நன்மை - மோக்ஷத்தை ஆசைப்படுகை. "பெருமக்கள்" என்று - * பேராளன் பேரோதும் பெரியோரிறே. "மாசூணாவான் கோலத்தமரர்கோன்." (திருமாலே) "மைதிலியும் துதிசெய்ய நின்ற" என்று - ஸ்தோத்ரத்துக்கு அதிகாரி பிராட்டியிறே. ப்ரீதிக்குத்தோற்றுச் சொல்லுமவளிறே. "தன்னகத்திருமங்கை" என்று - அவளுக்கு அநுபவம் (ச) ஸத்தாஸித்தியானாற்போலே, எனக்கும் திருநாமஞ்சொல்லுகை ஸத்தாஸித்தி. அன்றிக்கே, ஸர்வாதிகத்வம்; "வானவர்சிந்தையுள்வைத்துச் சொல்லும்செல்வன்." ப்ரயோஜநத்தோடேசொல்லில் பகவந்மந்த்ரங்களும் கழியுண்கிறதிறே, இதரபலங்களைவிட்டு மோக்ஷத்துக் குறுப்பாகச்சொல்லப்பாரும் என்ன (உன்னுமாறுன்னை யொன்றுமறியேன்) சாஸ்த்ரோக்தமான (ரு) நிரந்தர ஸ்ம்ர்திபண்ணவறியேன். (ஓவாதே நமோநாரணவென்பன்) ப்ரயோஜநம் பெற்றவாறே குலையும் ஐச்வர்யகாமர்க்கு; அங்கி கைப்பட்டவாறே குலையும் உபாஸகர்க்கு; இதுதானே ப்ரயோஜநமாகையாலே, ப்ரபந்நர்க்குக் குலையாது. (ஓவாதே) இதுமாறினல் எனக்குஸத்தைகுலையும். சொல்லாதபோது ஸத்தை குலையுமென்பது, சொல்லில் உனக்கு அவத்யம் என்பதாகாநின்றீர், நல்ல வன்மையாயிருந்தது! என்ன; அவ்வன்மைக்குக் குறையென் என்கிறார்மேல் (உன்கோயிலித்யாதி) வன்மை - மிடுக்கு. கோயிலில்வாழும் என்று - புறம்புள்ள அபிமாநம் குலைகையாலும், தாம் அநந்யப்ரயோஜநராகையாலும், இவருடைய ராஜகுலமிருக்கிறபடி. (கோயிலில்வாழும்) "஭ஜவதீயலயவாஸிநஃ" "ஹவதிஷயவாஸிநஃ" "இவற்றின் புறத்தாளென்றெண்ணே" என்று-பகவதபிமாநமுள்ள தேசத்தே கிடக்கையிறே தங்களுக்குப் பேறாகநினைத்திருப்பது. உன்னல் - நினைத்தல். (ங)

(க) அபராதமாய் - குற்றம்செய்யுமிடமாய். (உ) அபராதஸஹம் - குற்றத்தைப் பொறுக்குமிடம். (ங) க்ர்த்ரிமம் - வஞ்சனை. (ச) ஸத்தாஸித்தி - ஸ்வரூபம்ஸித்திப்பது. (ரு) நிரந்தரஸ்ம்ர்திபண்ணல் - எப்பொழுதும் த்யாநித்தல்.

அ.—நாலாம்பாட்டு. (நெடுமை) கீழிற்பாட்டிலே "புன்மையாலுன்னைப் புள்ளுவம்பேசிப் புகழ்வானன்றுகண்டாய்" என்ற தம்முடைய அநந்யப்ரயோஜநத்வத்தை மேலிரண்டுபாட்டாலே யருளிச்செய்கிறார். கீழே-ப்ராப்தியையும் ரக்ஷகத்வத்தையுஞ்சொல்லிற்று ; இப்பாட்டில்-(க) அநந்யப்ரயோஜநத்வம் சொல்லுகிறது.

மூ.—நெடுமையாலுலகேழுமளந்தாய் நின்மலா நெடியாயடியேனைக், குடிமைகொள்வதற் கையுறவேண்டா கூறைசோறிவை வேண்டுவதில்லை, அடிமையென்னுமக்கோயின்மையாலேயங்கங்கே யவைபோதருங்கண்டாய், கொடுமைக்கஞ்சனைக்கொன்று நின்தாதைகோத்தவன்றளைகோள்விடுத்தானே.

ப-ரை.—நெடுமையால் - த்ரிவிக்ரமாவதாரஞ்செய்தருளி, உலகேழும் - ஸகலலோகங்களையும், அளந்தாய் - திருவடிகளாலே அளந்துகொண்டவனாய், நின்மலா - பரிசுத்தனாய், நெடியாய் - ஸர்வாதிகனானவனாய், கொடுமை - கொடுந்தன்மையையுடைய, கஞ்சனை - கம்ஸனை, கொன்று —, நின் - உன்னுடைய, தாதை - தந்தையான வஸுதேவருடையதாளிலே, கோத்த - பூட்டப்பட்ட, வன் - வலிய, தளைகோள் - விலங்கின்பூட்டை, விடுத்தானே - தறித்துப் போகட்டவனே, அடியேனை - தாஸபூதனானவென்னை, குடிமைகொள்வதற்கு - அடிமைகொள்வதற்கு, ஐயுறவேண்டா - ஸந்தேஹிக்கவேண்டுவதில்லை ; ஏனெனில் ; கூறைசோறிவை - கூறையும்சோறுமாகிய இவைகள், வேண்டுவதில்லை - உன்னிடத்து அபேக்ஷிப்பதில்லை ; அடிமையென்னும் - தாஸ்யமென்று சொல்லுகிற, அ - அந்த, கோயின்மையாலே - வேண்டப்பாட்டாலே, அவை - அந்தக் கூறையும்சோறும், அங்கங்கே—, போதருங்கண்டாய் - வருங்கிடாயென்கிறார்.

வ்யா.—(நெடுமையா லுலகேழுமளந்தாய்) அபேக்ஷிக்கைக்குச் சிறியனானாற்போலே, அளக்கைக்கும் நெடியனானபடி. "ஓங்கியுலகளந்த" இத்யாதி. ஏகரூபமான வடிவையிறே (உ) பரிணமிக்கப்பண்ணிற்றும், கொடுக்கும் கையைக்கொண்டு ஏற்றதுவும். நெடுமையான திருவடிகளைக் கொண்டல்லகாணும் அளந்தது, நெடுமையால். (நின்மலா) பரப்ரயோஜநமாகையாலே கீழ்ச்சொன்னவிரண்டுதோஷமுமில்லை. (நெடியாய்) இந்நிலையிலே அநாச்ரிதர்க்குக்கிட்டவொண்ணாதே ஆச்ரிதர்க்குக் கிட்டலாயிருக்கும். [அமரர்க்கரியானைத் தமர்கட்கெளியானை] ப்ரயோஜநாந்தரபரர்க்கு அரியனாய் அநந்யப்ரயோஜநர்க்கு எளியனாயிருக்கும். (அடியேனை) மஹாபலியைப்போலே ஔதார்ய மாசைப்பட்டவனல்ல, இந்த்ரனைப்போலே(ங) த்ரைலோக்யமாசைப்பட்டவனல்ல, என்ஸ்வரூபம் ஸபலமாக்கவமையும். (குடிமை) அடிமைகொள்வதற்கு, என்ஸ்வரூபாநுரூபமான (ச) சேஷவர்த்தியைக் கைக்கொண்டருளவேணும்.

(க) அநந்யப்ரயோஜநத்வம் - வேறொருபயனை விரும்பாமை. (உ) பரிணமித்தல் - வ்ருத்தியடைதல். (ங) த்ரைலோக்யம் - மூவுலகுக்கும் தலைவனாகுகை. (ச) சேஷவ்ருத்தி - அடிமைத்தொழில்.

கொள்ளுமிடத்தில் (ஐயுறவேண்டா) (க) ஸ்வாதந்த்ர்யமும் ஸ்வப்ரயோஜநமு முண்டென்று (உ) ஸந்தேஹிக்கவேண்டா, நான் அநந்யப்ரயோஜநன் என்ன; நீர் அநந்யப்ரயோஜந ரானபடியென், உமக்கு தேஹம் கிடந்ததாகில், அந்நபாநாதிகள் தாரகமா யிராநின்றதாகிலென்ன (கூறைசோறிவை வேண்டுவதில்லை) நான் ராஜகுலம் புகுகையாலே, எனக்கு, அவ்வவகைங்கர்ய ரஸத்துக்குள்ளே எல்லா ரஸங்களுமுண்டு;—தன் ஸ்வரூபத்தை யாதொன்றாக நினைத்தான், அதுக்கிடாகவிறே தாரக போஷகாதிகளிருப்பது. தேஹாதிவிலக்ஷணனாகையாலே சப்தாதிகள் புருஷார்த்தமாக மாட்டாது, பரதந்த்ரனாகையாலே ஸ்வாநுபவம் புருஷார்த்தமாக மாட்டாது, ஸ்வரூபம் நித்யமாகையாலே ஸ்வரூபவிச்சேதம் புருஷார்த்த மாகமாட்டாது, (ஙா) நித்யஜ்ஞாந குணகனாகையாலே குணநாசம் புருஷார்த்த மாக மாட்டாது, இனி சேஷபூதனுக்கு சேஷவ்ர்த்தியே புருஷார்த்தமென்கிறார். ஆனால் நாம் உமக்குச் செய்யவேண்டுவதென் என்ன; அவற்றின் ஸங்கங்களையும் அதுக்கடியான கர்மங்களையும் போக்க வேணுமென்கிறார் மேல். இரண்டுக்கும் இரண்டு த்ர்ஷ்டாந்தம் (கொடுமைக் கஞ்சனைக்கொன்று) * மக்களறுவரைக் கல்லிடைமோதின க்ரூராத்மாவைக் கொன்றாற்போலே அவற்றின் (ச) ஸங்கங்களைப் போக்கவேணும். (நின்தாதை) * தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றினாற்போலே, அதுக்கடியான கர்மங்களையும் போக்கியருளவேணும். இவ்விடத்தில், கர்மங்களாவன-அவித்யா கர்ம வாஸநாருசிகளாலே கட்டுண்டிறே ப்ரக்ர்தி கிடக்கிறது, அத்தைவிடுவித்துத் தந்தருளவேணு மென்கிறார். (கூறைசோறிவை வேண்டுவதில்லை) ஆசைப்படுவதில்லை யென்னுதல்; உன்னை அபேக்ஷிப்பதில்லை யென்னுதல். நீர் ஆசைப்படுவதும் (ரு) அபேக்ஷிப்பது மேதென்னில்; * அடிமையென்னுமக்கோயின்மையே ஆசைப்படுவதும் அபேக்ஷிப்பது மென்னுதல். கோயின்மை - வேண்டப்பாடு. (அங்கங்கே-கூறைசோறிவை-போதரும்) (அங்கங்கே) எங்கேயிருக்கிலென். தேவமநுஷ்யாதி ஜந்மந்தோறு மென்றுமாம். "அடிமை-போதரும்" என்று - (சு) யதாந்வயந்தானே பொருளாகவுமாம். "நின்னையேதான்வேண்டி" இத்யாதி. (ச)

---

(க) ஸ்வாதந்த்ர்யம் - தன்வசமாயிருக்கை. (உ) ஸந்தேஹித்தல் - ஐயுறுதல். (ஙா) நித்யஜ்ஞாநகுணகன் - நிலைநின்ற அறிவையும் குணத்தையுமுடையவன். (ச) ஸங்கம் - ஸம்பந்தம். (ரு) அபேக்ஷித்தல் - விரும்புதல். (சு) யதாந்வயம் - நேரானபொருள்கோள்.

அ.—அஞ்சாம்பாட்டு. (தோட்டமித்யாதி) கீழ்ப்பாட்டினால் "கூறைசோறிவை வேண்டுவதில்லை" என்று - தாரகபதார்த்தம் கைங்கர்ய ரஸத்துக்குள்ளே உண்டென்றார்; இப்பாட்டில்-போஷக போக்யங்களும் உன் திருவடிகளை அநுபவிக்கிற ரஸத்துக்குள்ளே உண்டென்கிறார்.

மூ.—தோட்டமில்லவளாத் தொழுவோடைத் துடவையுங்கிணறுமிவையெல்லாம், வாட்டமின்றி யுன்பொன்னடிக் கீழே வளைப்பகம்வகுத்துக்கொண் டிருந்தேன், நாட்டுமானிடத் தோடெனக்கரிதுநச்சுவார்பலர் கேழலொன்றாகிக், கோட்டுமண்கொண்ட கொள்கையினானே குஞ்சரம்விழக் கொம்பொசித்தானே.

ப-ரை·—ஸர்வலோகங்களும் ப்ரளயங்கொண்ட காலத்தில், ஒன்று - ஒப்பற்ற, கேழலாகி-வராஹரூபியாய்க்கொண்டு, கோடு - தன்கொம்பினாலே, மண் - பூமிப்பிராட்டியை, கொண்ட - உயரவெடுத்தருளின, கொள்கையினானே - ஸ்வபாவத்தையுடையவனாய், குஞ்சரம் - குவலயாபீடமென்னும் யானையானது, விழ - அழியும்படி, கொம்பு - அதன்கொம்பை, ஒசித்தானே - முறித்தவனே, உன் - உன்னுடைய, பொன் - அழகிய, அடிக்கீழ் - திருவடிகளிலே, தோட்டம் - தோட்டமும், இல்லவள் - மனையாளும், ஆ - பசுக்களும், தொழு - பசுக்கள்நிற்கும் தொழுவமும், ஓடை - குளமும், துடவையும்-விளைநிலமும், கிணறும் - தோட்டத்துக்குறுப்பாகக் கிணறும், இவையெல்லாம் வாட்டமின்றி - இவற்றிலொன்றும் குறையாமல், அகம்-நான், வளைப்பு வகுத்துக்கொண்டிருந்தேன்-திரளவகுத்துக்கொண்டிருந்தேன்; நாடு-நாட்டிலுள்ள, மானிடத்தோடு-மநுஷ்யருடையஸஹவாஸம், எனக்கு—, அரிது - துஸ்ஸஹம்; பலர்—, நச்சுவார் - இத்தைஆசைப்படாநின்றார்கள்.

வ்யா.—(தோட்டம்) (க) கார்ஹஸ்த்யதர்ம மநுஷ்டிக்கைக்காக (உ) க்ர்ஷிபண்ணும் தோட்டம். (இல்லவள்) க்ர்ஹிணி. (ஆ) பசு. (தொழு) பசு நிற்கிற ப்ரதேசம். (ஓடை) குளம். (துடவை) விளை நிலம். விளைநிலத்துக்கு ஹேதுவிறே குளம். (கிணறும்) தோட்டத்துக் குறுப்பாகக் கிணறும். (இவையெல்லாம் வாட்டமின்றி) இவற்றிலொன்றும் குறையாமல். (உன் பொன்னடிக்கீழே) நிரதிசயபோக்யமான உன்றிருவடிகளிலே, இவற்றிலொன்றும் குறையாமல் திரள, வகுத்துக்கொண்டிருந்தேன்-என்னெஞ்சாலே வளைத்துக்கொண்டிருந்தேன். அகம் – நான். வகுத்து - பிரித்து. இனி உமக்கொரு குறையில்லையே யென்ன; ஒரு குறையுண்டு (நாட்டு மானிடத் தோடெனக்கரிது)உன்னை யொழியப்புறம்பே தாரகபோஷக போக்யங்களா யிருப்பாரோட்டை ஸஹவாஸம் எனக்கு துஸ்ஸஹம்; இத்தை ஆசைப்படுவார் பலர். (கேழலொன்றாகிக் கோட்டு

(க) கார்ஹஸ்த்யதர்மம் - க்ர்ஹத்திலிருப்பவள் செய்யவேண்டிய தர்மம்.
(உ) க்ர்ஷி - முயற்சி.

மண்கொண்ட) ஸர்வலோகங்களும் ப்ரளயத்திலே அகப்பட * ஊன்றி யிடந்தெடுத்து "தானத்தே வைத்தானல்" என்கிறபடியே ஸ்வஸ்தாநத்திலே வைத்தானென்கை. (கொள்கையினன்) இதுதானே ஸ்வபாவமானவ னென்கை. (குஞ்சரமித்யாதி) குவலயாபீடத்தை நிரஸ்தமாம்படி கொம்பையொசித்தவனே. இத்தால் பலித்தது - ஸம்ஸாரிகள்பக்கல்நின்றுமெடுத்து, ஸ்வஸ்தாநமானவுன் திருவடிகளிலே வைத்து, அதுக்கு விரோதியான கர்மங்களையுங்கழித்துத்தரவேணு மென்கிருர். (ரு)

அ.—ஆரும்பாட்டு. (கண்ணவித்யாதி) கீழிற் பாட்டில் - தாரகாதிகளெல்லாம் அவன் திருவடிகளே யென்ருர்; ப்ரக்ருதி கிடக்க அதுசெய்யப் போமோவென்ன; அதில் தமக்கு அந்வயமில்லாதபடியை இப்பாட்டிலே யருளிச்செய்கிருர்.

மூ.—கண்ண நான்முகனைப்படைத்தானே காரணகரியா யடியேனன், உண்ணநாள்பசியாவ தொன்றில்லை யோவாதேநமோ நாரணவென், றெண்ணநாளு மிருக்கெசுர்ச் சாமவேதநாண் மலர்கொண்டுனபாதம், நண்ணநாளவை தத்துறுமாகிலன் றெனக்கவை பட்டினிநாளே.

ப-ரை.—கண்ண-ஸர்வஸுலபமான க்ருஷ்ணவதாரஞ் செய்தருளினவனாய், நான்முகனை—, படைத்தானே - ஸ்ருஷ்டித்தவனாய், காரண - ப்ரஹ்மாவுக்கு முன்னுண்டான ப்ராக்ருதஸ்ருஷ்டியைப் பண்ணினவனாய், கரியாய் - நீலரத்நம் போன்ற வடிவழகையுடையவனே, அடியேன் - உனக்கு அநந்யார்ஹசேஷபூதனான, நான்—, உண்ணநாள் - உண்ணுகநாளில், பசிஆவதொன்றில்லை - பசியுண்டாவதில்லை யென்ன; உமக்குப்பசிப்படுதெப்போ தென்ன; ஓவாது - இடைவிடாமல், நமோ நாரணவென்று—, எண்ணநாளும் - எண்ணுகநாளும், இருக்கெசுர்ச்சாமவேதம் - ரிக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதமென்கிற இவற்றைச்சொல்லி, நாள் - அப்போதலர்ந்த, மலர்கொண்டு - புஷ்பங்களைப் பணிமாறி, உன - உன்னுடைய, பாதம்-திருவடிகளை, நண்ணநாளும் - நண்ணுகநாட்களும், உண்ணநாள்; அவைதத்துறுமாகில் - திருமந்த்ராநுஸந்தாநமும் நாண் மலர்கொண்டு ஸமர்ப்பித்தலும் தட்டுப்பட்டால், அன்று—, அவை—, எனக்கு—, பட்டினிநாள் - பட்டினிவிட்ட நாளாகும்.

வ்யா.—(கண்ண) "க்ருஷ்ணனாய் வந்தவதரித்துத் தண்ணியரோடே நின்றான்" என்னும்படி ஸுலபனானவனே. (நான்முகனைப்படைத்தானே) இப்படி ஸுலபனானவன்றான் ஒன்னில்; ப்ரஹ்மாவைத் திருவுந்தியிலே ஸ்ருஷ்டித்தவன். (காரண) ப்ரஹ்மாவுக்கு முன்புண்டான (க) ப்ராக்ருத ஸ்ருஷ்டியைப் பண்ணினவனே. (கரியாய்) காரணத்வமும் ஸௌலப்யமு மன்றிக்கே, துர்லபனானாலும் விடவொண்ணாத வடிவழகு. "காரண - நான்முகனைப் படைத்தா

(க) ப்ராக்ருதஸ்ருஷ்டி - ஸமஷ்டிஸ்ருஷ்டி.

னே - கண்ணு - கரியாய்" என்றந்வயம். இது என்ஸ்வரூபம், உம்முடைய ஸ்வரூபமிருந்தபடி யென்னென்ன (அடியேன் நான்) உனக்கு அநந்யார்ஹ சேஷபூதனுன நான். ஆனாலும் தேஹங் கிடக்கையினுலே இதுக்கு தாரகமென்னென்னில் (உண்ணுநாள் பசி ஆவதொன்றில்லை) பசிப்பதெப்போதோ வென்னில் (ஓவாதே) மாருதே. (நமோநாரணு வென்றெண்ணு நாளும்) "நமோநாரணு" என்கையாலே - தேஹாத்மாபிமாநத்தையுங் குலைத்துக்கொண்டு திருநாமத்தை யநுஸந்திக்கிருர். (இருக்கெசுர்ச் சாமவேத நாண் மலர் கொண்டு) "நமோநாரணு" என்றது போராமே, பெருந்திருப்பாவாடையிலே மண்டுகிருர். திருமந்த்ரம் ஸங்க்ரஹமும், வேதம் விவரணமுமாயிறே யிருப்பது. "மாதவன்பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு". "அவைதத்துறுமாகில்" என்கையாலே - அவை கூடாது. "உண்ணுநாள் பசியாவ தொன்றில்லை" என்கையாலும், "ஓவாதே நமோநாரணு" என்கையாலும் கூடாது; கூடில், நாளும் அது, பட்டினியும் அது. நாண்மலர்கொண்டு நண்ணுகைக்கு ப்ரமாணம்-வேதம். "நாடாதமலர்நாடி". த்ர்ஷ்டாத்ர்ஷ்ட மிரண்டும் புறம்பே - ஸம்ஸாரிகளுக்கு; உபாயோபேய மிரண்டும் புறம்பே - ஸம்ஸாரிகளுக்கு; உபாஸகர்க்கு உபாயம் தங்கள் கையிலே; உபேயம் ஈச்வரன். உண்ணுநாள், உனபாதம் நண்ணுநாள்; - உண்ணும் நாள், உனபாதம் நண்ணும் நாள். (பசிஆவது) பசிப்பதென்றபடி; ஓவாதே நண்ணும் நாள் பசிகெடுவது. ஓவாதே யெண்ணு நாள் இருக்கெசுர்ச்சாமவேத நாண்மலர் கொள்ளாநாள், அவன் கொள்ளா நாள். (அவைதத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினிநாளே) தத்துறுகை - தட்டுப்படுகை. இத்தால் - மாறுமாகிலென்றபடி. தத்துறுமாகில் - மாருட்டப்படுமாகி லென்னவுமாம். மாருட்டப்படுகையாவது - அநந்யப்ரயோஜந மாகையன்றிக்கே, ப்ரயோஜநாந்தரங்களைக் கணிசிக்கை. (சு)

அ.—ஏழாம்பாட்டு. (வெள்ளைவெள்ளம்) கீழ்ப்பாட்டில் - "உண்ணுநாள்பசியாவ தொன்றில்லை" என்ருர்; இப்பாட்டில் - "துயிலணைகொள்ளேன்" என்கையாலே - உறக்கமுந்தா னில்லை யென்கிருர்.

மூ.—வெள்ளை வெள்ளத்தின்மேலொரு பாம்பை மெத்தையாக விரித்ததன்மேலே, கள்ளநித்திரை கொள்கின்றமார்க்கங் காணலாங்கொலென் னுசையினுலே, உள்ளஞ்சோர வுகந்தெதிர்விம்மி யுரோமகூபங்களாய்க் கண்ணநீர்கள், துள்ளஞ்சோரத்துயிலணைகொள்ளேன் சொல்லாயா னுன்னைத்தத்துறுமாறே.

ப-ரை.—வெள்ளை - நிர்மலமான, வெள்ளத்தின்மேல் - ஜலத்தின்மேலே, ஒரு - ஒப்பற்ற, பாம்பை - திருவநந்தாழ்வானை, மெத்தையாக - படுக்கையாக, விரித்து—, அதன்மேலே—, கள்ளநித்திரைகொள்கின்ற - யோகநித்ரை கொள்கிற, மார்க்கம் - ப்ரகாரத்தை, காணலாங்கொல் - பார்க்கலாகுமோ, என் - என்கின்ற, ஆசையினாலே - ஆசையாலே, உள்ளஞ்சோர - நெஞ்சழியவும், உகந்து - களிப்பின்மிகுதியாலே, எதிர் - எதிரோ, விம்மி - விம்மியும், உரோம கூபங்களாய் - உடம்பெல்லாம் மயிர்குச்செறியவும், அநுஸந்திக்கையாலே உருவெளித்தோற்றமாகி கையை நீட்டியணைக்கத்தேடிக் காணாமையால் வந்த இழவாலே, கண்ணநீர்கள் - கண்ணீரானது, துள்ளம்சோர - துளிசோர்ந்து, அணை - படுக்கையிலே, துயில்கொள்ளேன் - நித்ரைகொள்ளாதவனா யிராநின்றேன்; யான்—, உன்னை—, தத்துறுமாறு - கிட்டும்வழி, சொல்லாய் - அருளிச்செய்யவேணும்.

வ்யா.—(வெள்ளைவெள்ளத்தின்மேல்) நிர்மலமான ஜலத்தின் மேலே. (ஒருபாம்பை) நாற்றம் மென்மை குளிர்த்திதுடக்கமான குணங்களுக்கு (க) ஆச்ரயமாகையாலே அத்விதீயமான பாம்பைப் படுக்கையாக விரித்து. (அதன்மேலே) ப்ரஹ்ம ருத்ராதிகள், படுக்கைவாய்ப்பாலே யுறங்குகிறான் என்னும்படியாய், "உலகெல்லாம் நன்கொடுங்கயோகணைவான்" என்னும்படி (கள்ளநித்திரைகொள்கின்ற) கண்வளராநின்ற, மார்க்கம் – வழி. அதாகிறது - இன்னது என்று அறிகிற ஜ்ஞாநம். (காணலாங்கொலென் னாசையினாலே) காணவேணுமென்கிற ஸ்நேஹத்தினாலே. (உள்ளஞ்சோர) நெஞ்சழிய. "பாலாழிநீகிடக்கும் பண்பையாங் கேட்டேயும், காலாழும் நெஞ்சழியும்." (உகந்தெதிர்விம்மி) ப்ரீத்யதிசயத்தாலே வார்த்தை சொல்லவொண்ணாதபடி எதிரோ விம்மி. (உரோமகூபங்களாய்) உடம்பெல்லாம் மயிர் குச்செறிந்து இவ்வநுஸந்தாநம் ப்ரத்யக்ஷம் போலே ப்ரகாசித்து, கையைநீட்டி யணைக்கத்தேடிக் காணாமையால் வந்த இழவாலே கண்ணீர் துளிசோர்ந்து. (துயிலணைகொள்ளேன்) படுக்கைச்சேர்த்தியை யநுஸந்தித்தேன், படுக்கையி லெனக்குப் பொருந்துகிறதில்லை. (சொல்லாயானுன்னைத்தத்துறுமாறே) தத்துறுமாறு - கிட்டும்வழி. "கண்ணநீர்கள்துள்ளஞ்சோர" என்று அழுகைபோவது, அநுபவத்தாலே; அநுபவிப்பது, கிட்டினால். கிட்டுகைக்கு உபாயம் சிந்திக்கிற நீ, நான்கிட்டுகைக்கு சிந்திக்கிற உபாயம் சொல்லாய். (உ) நான்விமுகனானதசையிலும் என்னைச் சேர்த்துக்கொள்ளுகைக்கு உபாயம் சிந்திக்கிற நீ, நான் (ங) அபிமுகனான இத்தசையில் உன்னைக் கிட்டும் (ச) விரகு சொல்லலாகாதோ. "பாற்கடல்யோகநித்திராசிந்தைசெய்த வெந்தாய் உன்னைச் சிந்தைசெய்துசெய்தே" என்று இவர் நினைவுக்கு அவன் நினைவிறே. (எ)

---

(க) ஆச்ரயம் - இருப்பிடம். (உ) விமுகன் - உபேக்ஷித்தவன். (ங) அபிமுகன் - தனக்கு ஒத்துவருமவன். (ச) விரகு - உபாயம்.

அ.—எட்டாம்பாட்டு. (வண்ணமால்வரையே) கீழ்ப்பாட்டிலே - கிட்டும்ப்ரகாரஞ் சொல்லாயென்றார்; இப்பாட்டில் - கிட்டுந்தனையும் ஸ்தோத்ரம் மாறாதபடி பண்ணியருளவேணுமென்கிறார்.

மூ.—வண்ணமால்வரையே குடையாகமாரிகாத்தவனே மதுசூதா, கண்ணனே கரிகோள் விடுத்தானே காரணா களிறட்டபிரானே, எண்ணுவாரிடரைக் களைவானே யேத்தரும்பெருங் கீர்த்தியினானே, நண்ணிநானுன்னை நாடொறுமேத்து நன்மையேயருள்செய்யும்பிரானே.

ப-ரை.—காரணா - ஜகத்காரண பூதனாய், எண்ணுவார் - உன்னையே யெப்பொழுதும் சிந்திக்குமவர்களுடைய, இடரைக்களைவானே - விரோதியைப்போக்குமவனாய், மதுசூதா - மதுவை நிரஸித்தவனாய், கரி - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, கோள் - ஆபத்தை, விடுத்தானே - போக்கினவனாய், கண்ணனே - ஆச்ரிதஸுலபனான க்ர்ஷ்ணனாய் திருவவதரித்தருளி, வண்ணம் - பலவகைப்பட்ட காவிக்கற்களையுடைய, மால் - பெரிய, வரை - கோவர்த்தந பர்வதத்தை, குடையாக - குடையாகக்கொண்டு, மாரி - இந்த்ரனேவுதலால் வந்த கல்வர்ஷத்தை, காத்தவனே - தடுத்து ஆநிரையையும் ஆயரையும் ரக்ஷித்தவனாய், களிறு - குவலயாபீடமென்கிற யானையை, அட்ட - நிரஸித்த, பிரானே-உபகாரகனாய், ஏத்தரும் - இப்படிப்பட்டவனென்று ஸ்தோத்ரம்பண்ண வரிய, பெரு - நிரதிசயபோக்யமான, கீர்த்தியினானே - கல்யாணகுணங்களையுடையவனாய், பிரானே - ஸர்வோபகாரகனானவனே, நான்—, உன்னை—, நண்ணி-ஆச்ரயித்து, நாடொறும் - எல்லாக்காலத்திலும், ஏத்தும் - ஸ்தோத்ரம் பண்ணுகைக்கீடான, நன்மை - அருளை, அருள்செய்யும் - தந்தருளவேணும்.

வ்யா.— (வண்ணமால்வரையே) நாநாவர்ணமான தாதுக்களையுடைத்தான பெரியமலையே உபாயமாக. "ஆயரொருப்படுத்த வடிசிலுண்டதும்" என்று நினைத்த மலையே குடையாகக் கல்வர்ஷத்தைக் காத்தவனே. (மதுசூதா) முதல்களையான மதுவை நிரஸித்தவனே. (கண்ணனே) ஸர்வஸுலபனே. (கரிகோள்விடுத்தானே) ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுபத்தைப் போக்கினவனே. (காரணா)ஜகத்தை ஸ்ர்ஷ்டித்திறே வந்தவதரிப்பது. "இருவரவர்முதல்வன்தானே" இத்யாதி. (களிறட்டபிரானே) குவலயாபீடத்தை நிரஸித்தவனே. (எண்ணுவாரிடரைக்களைவானே) அநுஸந்தாநவிரோதியைப் போக்குகிறவனே. பரபக்தி பரஜ்ஞாந பரமபக்த்யாதிகளை இவன் வேணுமென்று எண்ணினபோதே இவற்றுக்கு விரோதியானவற்றைப் போக்குமவனே. (ஏத்தரும்பெருங்கீர்த்தியினானே) (௧) அபரிச்சேத்யமாய் (௨) நிரதிசயபோக்யமான குணங்களை யுடைய

---

(௧) அபரிச்சேத்யம் - அளவிடக்கூடாதது. (௨) நிரதிசயபோக்யமான - மிகவும் போக்யமான.

வனே. (நண்ணியித்யாதி) உன்னைக் கிட்டினவன்றோடு கிட்டாதவன்றோடுவாசியற ஏத்தும்படிக்கிடான அருளைத் தந்தருளவேணும்.

"காரணா - எண்ணுவாரிடரைக்களைவானே - மதுசூதா - கரிகோள்விடுத்தானே - கண்ணனே - வண்ணமால்வரையேகுடையாக மாரிகாத்தவனே - களிறட்டபிரானே - ஏத்தரும்பெரும் கீர்த்தியினனே, நண்ணினானுன்னை நாடொறுமேத்தும் நன்மையே யருள்செய்யும், பிரானே" என்று அந்வயம். ஆக, இப்பாட்டால் - (க) அஸாதாரணரக்ஷகத்வமும் (உ) ஸர்வஸுலபத்வமும் (ங)ப்ராப்யத்வமும் சொல்லிற்றாய்த்து. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. (நம்பனே) கீழ்ப்பாட்டிலே - ஸாதாரண ரக்ஷகத்வமும் அஸாதாரண ரக்ஷகத்வமும் சொன்னார்; இப்பாட்டில்-சரமகாலத்திலே திருநாமஞ்சொல்லவல்லேனும்படி பண்ணிரக்ஷிக்கவேணு மென்கிறார்; விச்வஸநீயனானநீ ரக்ஷிக்கவேணு மென்கிறார்.

மூ.—நம்பனே நவின்றேத்தவல்லார்களுநதனே நரசிங்கமதானாய்,
உம்பர்கோ னுலகேழுமளந்தாயூழியாயின யாழிமுன்னேந்
திக், கம்பமாகரி கோள்விடுத்தானே காரணா கடலைக்கடைந்
தானே, எம்பிரா னென்னையாளுடைத்தேனே யேழையே
னிடரைக்களையாயே.

ப-ரை.—நம்பனே - எல்லாரும் நம்பத்தக்கவனாய், நவின்று - வாயாரச் சொல்லி, ஏத்தவல்லார்கள் - ஸ்துதிக்கவல்லவர்களுக்கு, நாதனே - தலைவனானவனாய், ஆச்ரிதனான ப்ரஹ்லாதனுக்கு விரோதியான ஹிரண்யனை நிரஸிக்கைக்காக, நரசிங்கமதானாய் - நரஸிம்ஹாவதாரம் செய்தருளினவனாய், உம்பர் - தேவர்களுக்கு, கோன் - அரசனான இந்த்ரன் ராஜ்யத்தை மீட்டுக்கொடுக்கைக்காக, மஹாபலி பக்கலிலே * குறட்பிரமசாரியாய்ச்சென்று, உலகேழும்-ஸகல லோகங்களையும், அளந்தாய் - அளந்துகொண்டவனாய், ஊழி - ப்ரளயகாலத்துக்குப் பின்பு சேதநோஜ்ஜீவநார்த்தமாக, ஆயினாய் - உலகங்களை ஸ்ருஷ்டித்தவனாய், முன் - விரோதி வருவதற்குமுன்னமே, ஆழி - திருவாழியை, ஏந்தி-தரித்தவனாய்க்கொண்டு, மாகம்பம் - மிகவும் நடுக்கமுற்ற, கரி - கஜேந்த்ராழ்வானுடைய, கோள் - துன்பத்தை, விடுத்தானே - போக்கினவனாய், காரணா - ஜகத்காரணபூதனாய், தேவர்களுக்கு அமர்தம் கொடுக்கைக்காக, கடலைக் கடைந்தானே-திருப்பாற்கடலைக் கடைந்தவனாய், எம்பிரான்-எனக்கு உபகாரகனாய், என்னை—, ஆளுடை-அடிமையாகக் கொண்டவனாய், தேனே - தேன்போலே ரஸாவஹமானவனே, ஏழையேன - சபலனான வெனக்குவரும், இடரை - துன்பத்தை, களையாய் - போககியருளவேண்டும்.

(க) அஸாதாரணம் - தனக்கேயுரியது. (உ) ஸர்வஸுலபத்வம் - யாவர்க்கும் எளியனாயிருக்குந்தன்மை. (ங) ப்ராப்யத்வம் - அடையத்தக்கதன்மை.

வ்யா.—(நம்பனே) விச்வஸநீயனே. தனக்கு தானும் ரக்ஷக னன்று, பிறரும் ரக்ஷகரன்று. நான் "நன்மை" என்று(க)ப்ரமித்துப் பண்ணும் நன்மை, தீமையாய்த் தலைக்கட்டும். பிறர் தந்தாமுக்கு நன்மை தேடிவரு மித்தனையல்லது இவனுக்கு நன்மைதேடார்கள். (நவின்றேத்தவல்லார்கள்நாதனே) (உ) ஸ்நேஹபூர்வகமாக ஏத்த வல்லவர்களுக்கு ஸ்வாமியானவனே. தன்னுடைமை யாகையா லே அவர்களை நழுவவிடாதவனே. (நரசிங்கமதானாய்) ஈச்வரனை யொழிய, பிதாவாகிலும் ரக்ஷகனாக நம்பப்போகா தென்கிறது. விச்வஸநீயனுமாய் ஸ்தோத்ரங்களினாலே நெருங்க ஏத்துவதுக்கு ப்ரதிபாத்ய ஸ்வாமியுமாய் ஸர்வகாரணமானவனைப் பேர்சொல் லப்பொறுத்திலனிறே ஹிரண்யன். (நவின்றேத்த வல்லார்கள் நாதனே நரசிங்கமதானாய்) "நம்பனை நரசிங்கனை நவின்றேத்து வார்களைக் கண்டக்கால் எம்பிரான்றனசின்னங்கள்" என்றும், * நாத னைநரசிங்கனைநவின்றேத்துவார்களுழக்கிய பாததூளிபடுதலால் பா க்கியம்பண்ணப்பெற்றோம் என்றும் கொண்டாடவேண்டின விஷ யத்திலேயிறே ஹிரண்யன் அபராதம்பண்ணிற்று. (உம்பர்கோன்) இங்குள்ளார் ஸ்வரூபத்துக்கு அஞ்சியும் தண்டத்துக்கு அஞ்சியு மிறே ஏத்துவது. "பரவிவானவரேத்த நின்றபரமனை" என்று - ராகப்ராப்தமாக ஏத்துவார் அங்குள்ளாரிறே. (உலகேழுமளந் தாய்) "ஏத்தவேழுலகுங்கொண்ட". (உம்பர்கோனுலகேழுமளந் தாய்) இந்த்ரனுக்காக உலகேழுமளந்தாயென்னுதல். "நான்முக னார்பெற்றநாடு" என்கிறபடியே - ப்ரஹ்மாவதான சதுர்த்தசபுவ நத்தையு மளந்தாயென்னுதல். (ஊழியாயினாய்) ஊழி - காலம். ஸ்ருஷ்டி. "வாழ்த்துவார்பலராக" இத்யாதி. (ஆழிமுன்னேந்தி) விரோதிவருவதற்கேற்கவே திருவாழியைதரித்து. (கம்பமாகரிகோ ள்விடுத்தானே) "கோள்முதலை துஞ்சக்குறித்தெறிந்த சக்கரம்" என்கிறபடியே திருவாழியைக்கொண்டு கார்யங்கொண்டபடி. கம் பம்-நடுக்கம். நடுங்காநின்றவர்களையென்னுதல்; அசையாநின்றவர் களை யென்னுதல். முதலை நீரிலேயிழுக்க, ஆனை கரையிலேயிழுக்க, பட்ட அசைவென்னுதல். மா - பெருமை. துக்கம் (ங) பாடாற்ற மாட்டாமைக்கு விரோதியைப் போக்கினவனே. "தடமலர்ப்பொ ய்கைபுக்கு நாகத்தின் நடுக்கம்தீர்த்தாய்," "என்னாரிடரைநீக்காய்." கோள் – சிறை. "கோள்விட்டது" என்னக்கடவதிறே. (காரணா) மூன்றுபத்திலே ஒன்றிறே இது. இப்போது காரணத்வம் - ஸ்ரீக ஜேந்த்ராழ்வானைப் பெற்றதும், ஈச்வரத்வம் நிலைநின்றதும் இப்போ தென்கை.

---

(க) ப்ரமித்து - மதிமயங்கி. (உ) ஸ்நேஹபூர்வகமாக - அன்புடன்கூட. (ங) பாடாற்றமாட்டாமை - ஸஹிக்கமாட்டாமை.

(கடலைக் கடைந்தானே) "அமரர்கள் தொழுதெழ அலை கடல்கடைந்தவன்" என்கிறபடியே - ஸ்துத்யனாய்க்கொண்டுநின்று கடைந்தபடி. (எம்பிரான்) அச்செயலாலே என்னை யெழுதிக்கொண்டவனே. (என்னையாளுடை) என்னை இவ்வளவு புகுரநிறுத்தினவனே. (தேனே) எனக்குத் தேன்போலே என்றும் நிரதிசய போக்யனானவனே. (என்னையாளுடைத்தேனே) போக்யதைக்குத் தோற்றபடி. "தேட்டருந் திறல்தேனினை." (ஏழையேன்) (க) சபலன். இதுக்கு முன்பு விஷயங்களில் சபலன்; இப்போது போக ரூபமான திருநாமங்களிலே சபலன். (இடரைக்களையாயே) இவர்க்கு இடராவது - சரமகாலத்தில் திருநாமஞ்சொல்லமாட்டாதிருக்கையிறே. இதுக்கு அஞ்சியிறே "அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்" என்றும் "ஐயார்கண்டமடைக்கிலும்நின்கழல் எய்யாதேத்த" என்றும் ப்ரார்த்தித்துவைப்பது. இவர்க்கு க்லேசம் அப்போதை வேதனையன்று, திருநாமஞ்சொல்லப்போகாதிருக்கில் செய்வதென் என்கிற பயமிறே திருவுள்ளத்திற் செல்லுகிறது. (கூ)

அ.—நிகமத்தில், இப்பத்தை அப்யஸித்தவர்கள், இவரைப்போலே சரமகாலத்திலே திருநாமஞ்சொல்லவேணுமென்று கரையவேண்டா, இப்பாசுரமாத்ரமே யமையுமென்கிறார். இத்திருமொழிதான், "மாதவா நாரணா" இத்யாதியாலே திருநாமமிறே சொல்லிற்று.

மூ.—காமர்தாதை கருதலர்சிங்கங் காணவினிய கருங்குழற்குட்டன், வாமநனென்மரதகவண்ணன் மாதவன் மதுசூதன் றன்னைச், சேமநன்கமரும் புதுவையர்கோன் விட்டுசித்தன் வியன்றமிழ்பத்தும், நாமமென்றுநவின்றுரைப்பார்கள் நண்ணுவாரொல்லை நாரணனுலகே.

ப-ரை.—காமர்தாதை - காமனுக்கு உத்பாதகனாய், கருதலர் - தன்னை நினையாதவர்களுக்கு, சிங்கம் - சிங்கம்போலே கிட்ட வொண்ணாதவனாய், காண - தன்னையே நினைத்திருப்பார் கண்டு களிக்கைக்கு, இனிய - இனியனாய், கரு - கறுத்த, குழல் - குழலையுடைய, குட்டன் - சிறுக்கனாய், வாமநன் - சிறியப்ரஹ்மசாரியாய், என் - எனக்கு, மரதகம் - மரதகப்பச்சைபோலே, வண்ணன் - ஆச்ரிதர் தாபம் தீர்க்கும் வடிவையுடையனாய், மாதவன் - பெரியபிராட்டியார்க்கு வல்லபனாய், மதுசூதன்றன்னை-மதுவைநிரஸித்தவன்விஷயமாக, நன்கு-நல்ல, சேமம் அமரும்-அரணை யுடைத்தான, புதுவையர்-ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு, கோன் - தலைவரான, விட்டுசித்தன் - பெரியாழ்வாரருளிச்செய்த, வியம் - ஆச்சர்யமான, தமிழ் - தமிழாயிருந்துள்ள, பத்தும்-பத்துப்பாட்டையும், நாமமென்று - திருநாமமென்று, நவின்று - நெஞ்சார நினைத்து, உரைப்பார்கள் - வாயாரவாழ்த்துமவர்கள், நாரணன் - ஸர்வஸ்மாத்பரனான

(க) சபலன் - மிகுந்த ஆசையுள்ளவன்,

நாராயணனுடைய, உலகு - பரமபதத்தை, ஒல்லை - சீக்ரமாக, நண்ணுவார்-கிட்டப்பெறுவர்.

வ்யா.—(காமர்தாதை) இவரகப்பட்ட துறை யிருக்கிறபடி. *தெரிவைமாருருவமே மருவிப்போந்த விவனைமீட்டது "காமனுர் தாதை" என்கிறவடிவிறே. (கருதலர்சிங்கம்) இவ்வடிவு காணவேண்டாதார் சத்ருக்களிறே. "அலைவலைமைதவிர்த்தவழகன்" என்று-ப்ரதிகூலனையும் அநுகூல்னுக்கிச் சேர்த்துக்கொண்ட வழகிறே. (காணவினியகருங்குழற்குட்டன்) (காணவினிய) ராவணுதிகளுக்கு மகப்பட, "ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" "ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்று - கண்டபோதே ரஸிக்கை. "கண்ணுக்கினியான்" "மநத்துக்கினியான்" என்றும் - உட்கண்ணுக்கும் புறக்கண்ணுக்கும் இனியவிஷயமிறே. (கருங்குழற்குட்டன்)அழகுக்கு முற்படவெடுப்பது "குழலழகர்" என்றிறே. (குட்டன்) அவ்வடிவை அமைத்துக்கொடுத்து அநுபவிக்கும்படி பண்ணுகை. "காணவினியகருங்குழல்" என்று-குழலுக்கே விசேஷணமாகவுமாம். (வாமநன்) "கரியகுழல்செய்ய வாய்முகத்து - வாமநனம்பீவருக" என்னக்கடவதிறே. (என்மரதக வண்ணன்) குளிர்ந்த திருமேனியையுடையவன். "உலகளந்தமாணிக்கமே யென்மரதகமே" என்னக்கடவதிறே. (மாதவன்) இவ்வடிவைத் (க) தலைநீர்ப்பாட்டிலே அநுபவிப்பாள் பிராட்டியிறே. "வடிக்கோல வாணெடுங்கண் மாமலராள் செவ்விப் படிக்கோலங் கண்டகலாள்" என்னக்கடவதிறே. (மதுசூதன்றன்னை) அநுபவ விரோதியைப் போக்கினபடி. "வானர்சோதிமணிவண்ணமதுசூதா நீயருளாய்" என்னக்கடவதிறே.

(சேமநன்கமரும்புதுவையர்கோன்) ரக்ஷைபொருந்தின ஸ்ரீவில்லிபுத்தூரார்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த பதத்தும். (நாமமென்று) திருநாமமென்று. "நாமமாயிரம்" என்முற்போலே. (நவின்றுரைப்பார்கள்) ஸ்நேஹத்தோடே ஸ்தோத்ரம்பண்ண வல்லவர்கள். (நண்ணுவாரொல்லைநாரணனுலகே) பரமபதத்தைச்சடக்கெனக்கிட்டப்பெறுவர்கள். அதாவது-ஈச்வரனுக்குப் பரிவராய்ப் போருகை. "சேமநன்கமரும்" என்று சொல்லிற்றும் இவ்வர்த்தத்தையிறே. சேமத்துக்கு நன்மையாவது - அத்தலைக்கு மங்களாசாஸநம் பண்ணுகையிறே. இவ்வர்த்தம் இவ்வூரிலே நடக்கை, "பொன்றிகழ்மாடம் பொலிந்துதோன்றும் புதுவை" என்று - பொன்னுலகோடொக்கத் திருப்பல்லாண்டு பாடுகையிறே. "ஒல்லை" என்றது- "ஓவாதேநமோநாரண" என்று சொல்லுகையாலே ஒருக்காற்சொல்லி அநந்தரம்சொல்லுகைக்கு உதவ அங்கேயாம்படிவைக்கை.

(க) தலைநீர்ப்பாடு - முதல்மடை.

(நாரணனுலகே) இங்கிருந்தநாள் *நாரணனென்னு மித்தனையல்லால் வழிபோக்கிலும் *பாதே²யம் புண்ட³ரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ருதம் * வாமயெ யம்வடீண்ணீகாக்ஷ நாஙேஷீத்ர நாதேதத் ; வழியிலுள்ளார்கண்டு உகப்பதும் "நாரணன்றமர்" என்றிறே ; அங்குப்புக்காலும் *நமோநாராயணாயவென்று சூழ்ந்திருந்திறே யேத்துவது. இங்கிருந்தநாளோடு வழிப்போக்கோடு திவ்யதேசப்ராப்தியோடு வாசியற இதுவேயிறே பலம். வியந்தமிழ் - விஸ்மயநீயமானதமிழ். "வியந்தமிழ்" என்றபோது, "அமரர்க்குமறிவியந்து" என்னுமாபோலே, வியந்ததமிழென்னவுமாம். (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அடிவரவு.—வாக்குச்சழக்கு நன்மைநெடுமை தோட்டம் கண்ணுவெள்ளைவண்ணம் நம்பன் காமர்நெய்.

---

ஆ திருமொழி - சO-இ பாட்டு - சஙO.

---

அ.—கீழே, "அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்" என்று - அந்திமகாலத்திலே யமபடர்நலியும்போது ஸ்தோத்ரம் பண்ணவொண்ணுதென்று ஏற்கவே சொல்லிவைத்தேன் என்ற இவர், "சழக்குநாக்கொடுபுன்கவிசொன்னேன்" என்று - தம்முடைய அயோக்யதையை அநுஸந்தித்தகல, இவர் கரணங்கள்மேல் விழுந்தபடி கண்டு க்ஷமைகொள்ள, இவர் தோஷம்பார்த்து க்ஷமைகொள்ளவேண்டுவது நாம் கடக்கநிற்கிலன்றே என்று தான் மேல் விழுந்து வந்து புகுந்து கிடந்தபடி சொல்லுகிறுர் - இத்திருமொழியில். ... ... ... ... ... *

அ.—முதற்பாட்டு. "அப்போதென்றும் இப்போதென்றும் உமக் கிரண்டுகாலமுண்டோ" என்று அவன் வந்து கைக்கொண்ட பின்பு,(க) அவித்யையையும் கர்மத்தையும் வ்யாதிகளையும்இந்த்ரியங்களையும் யமபடரையும் பார்த்து, "பண்டைதேஹமும் ஆத்மாவும்" என்றிருக்கவேண்டா, அவன் உகந்தருளின நிலங்களில் பண்ணும் விருப்பத்தையெல்லாம் என்தேஹத்திலும் ஆத்மாவிலும் பண்ணிக்கொடுவந்து புகுந்தான், நீங்கள் உஜ்ஜீவிக்கவேண்டி யிருந்தீராகில் போகப்பாருங்கோ ளென்கிறுர்.

மூ.—நெய்க்குடத்தைப்பற்றி யேறுமெறும்புகள் போல்நிரந்தெங்கும், கைக்கொண்டுநிற்கின்ற நோய்காள் காலம்பெற வுய்யப்போமின், மெய்க்கொண்டுவந்து புகுந்து வேதப்பிரானர்

---

(க) அவித்யை - அஜ்ஞாநம்.

கிடந்தார், பைக்கொண்டபாம்பணையோடும் பண்டன்று பட்டினங்காப்பே.

ப-ரை.—நெய் - நல்லநெய்வைத்திருக்கும், குடத்தை—, பற்றி - பிடித்துக்கொண்டு, ஏறும் - ஏறுகிற, எறும்புகள்போல் - எறும்புகளைப்போலே, எங்கும்—, நிரந்து - பரந்து, கைக்கொண்டு நிற்கின்ற-உடன்வந்தியாயிருக்கிற, நோய்காள்-வியாதிகளே,உய்ய-நீங்கள் உஜ்ஜீவிக்கவேண்டி யிருந்திகோளாகில், காலம்பெறப்போமின் - சடக்கெனப் போய்விடுங்கோள்; வேதப்பிரானார் - ப்ரஹ்மாவுக்கு வேதத்தை உபகரித்த ஸர்வேச்வரன், பைக்கொண்ட - பரப்பையுடைய, பாம்பு - திருவநந்தாழ்வானாகிற, அணையோடும் - திருப்பள்ளியோடு கூட, மெய் - என்னுடைய சரீரத்தை, கொண்டு-போக்யமாகக்கொண்டு, வந்து புகுந்து கிடந்தார்—; ஆதலால், என்னுடைய சரீரமும் ஆத்மாவும், பண்டன்று - பழையபடியிலுமையை யுடையதல்ல; பட்டினம் - இந்த ஆத்மாவானது, காப்பு-ஸர்வேச்வரனால் காக்கப்படுகிறது; ஆதலால் உங்களுக்குப் புகுரவிடமில்லை யென்கிறார்.

வ்யா.—(நெய்க்குடத்தைப்பற்றி யேறுமெறும்புகள்போல்) (௧) அக்நிஹோத்ரஸமாராதநயோக்யமாய் போக்யமுமான பதார்த்தமிருக்கிற கடத்தை (௨) ஸ்பர்சித்துக்கொண்டேறுகிற க்ஷுத்ர ஜந்துக்களைப்போலே. (நிரந்து) பரந்து. இடைவிடாதே. (எங்கும்) (௩) தர்மபூத ஜ்ஞாநமுள்ள விடமெங்கும். "[illegible]" "[illegible]." (கைக்கொண்டு) (௪) உடன்வந்திபோலே; (௫) கைக்கூட்ட மிட்டாற்போலே யென்னவுமாம். (நிற்கின்ற) போக்குவரவின்றியிலே. (௬) அவஸரப்ரதீக்ஷமாய்க்கொண்டு நிற்கிறவென்னவுமாம். (நோய்காள்) த்ர்ஷ்டாந்தத்தில் ஏறுமெறும்புகள்போலே நோய்களும் பலவிறே. "கைக்கொண்டு நிற்கின்றநோய்காள்" என்று - பகவதாஜ்ஞையாலே உள்ளுப்புகப்பெறாதேநின்றாலும் வேதனை ஸ்வரூபஸ்பர்சியிறே. விசிஷ்டவேஷத்தில் த்ர்ஷ்டாந்தத்தில் எறும்பால் கடத்துக்கு வருவதொரு துக்கமில்லை. "மொய்த்தவல்வினை" என்கிறபடியே. (காலம்பெற) சடக்கெனப்போமின். அநாதிகாலம் வாஸனை பண்ணின நாங்கள் போகிறதென் என்ன; உங்களுக்கு உஜ்ஜீவநார்த்தமாகப் போங்கோளென்ன; ஆனால் மெள்ளப் போகிறோமென்ன (காலம்பெற) கடுகப்போங்கோள். "மடியடக்கிநிற்பதனில்-மண்டடியெடுப்பதன்றோவழகு" என்கிறார். "[illegible]

(௧) அக்நிஹோத்ர ஸமாராதநயோக்யமாய் - அக்நியை ஆராதிப்பதற்குத் தகுதியாய். (௨) ஸ்பர்சித்தல் - பற்றுதல். (௩) தர்மபூதஜ்ஞாநம் - நாற்புறமும் பரவுமறிவு. (௪) உடன்வந்தி - கூடவருமது. (௫) கைக்கூட்டமிடுதல்-அணிவகுத்தல். (௬) அவஸர ப்ரதீக்ஷமாய்க்கொண்டு - எதிர்பார்த்துக்கொண்டு.

யஸ்மிந்பூர்வஸ்ஸுப்தா:। அந்யேஷ்க்ஷுமிச்சாமி'' ''உபதிஷ்டந்தி ராஜாநோ ஹ்யா யஸ்மிந் ஸர்வஸம்ஹிதா:। தந்த்ரேணாதஸ்ய சிந்தி'' என்று - இவர்க்கு ரணமில்லையிறே. ''வேங்கடத்துறைவார்க்குநம'' என்றபோதே கடங்கள் வெந்ததிறே. போங்கோளென்னவும்வேண்டா; இவர், பிணமெழுந்துகடிக்கிறதோ என்னு மதிசங்கையாலும் பூர்வவாஸனையாலும் பயப்பட்டுச் சொல்லுகிருரித்தனை. இப்போது நாங்கள் போகிறது என் என்ன; ஹேதுசொல்லுகிருர்மேல் (மெய்க்கொண்டுவந்துபுகுந்து) என்னுடையதேஹத்தை போக்யமாகக்கொண்டு, அதுக்குமேலே வந்து, அதுக்குமேலே புகுந்து, அதுக்குமேலே கிடந்தார். கிடந்தவர்தாமாரென்னில் (வேதப்பிரானுர்) வேதத்திலேகேட்டுப் போகிற தன்னை நான் கண்ணுலே கண்டு அநுபவிக்கலாம்படி தன்னை (க) உபகரித்தவன். * வந்தாய், அதுக்குமேலே நின்றுய், அதுக்குமேலே மன்னிநின்றுய், அதுக்குமேலே என்மனம் புகுந்தாய், அதுக்குமேலே போயறியாய்! என்றிறே இவர்களீடுபடுவது. ''பிரான்'' என்று - உபகாரகத்வம். அதாவது - ப்ரமாண ப்ரமேயங்களை உபகரிக்கையாலே. (பைக்கொண்டபாம்பணையோடும்) பகவதநுபவத்தால்வந்த விகாஸமன்றிக்கே, ஆழ்வாரை அங்கீகரித்த ப்ரீதியால்வந்தவிகாஸம். (பாம்பணையோடும்) அந்தப்புரபரிகரத்தோடும். *திருமாற்கரவிறே. (பண்டன்று) பழையதேஹமும் பழைய ஆத்மாவுமென்று நினையாதேயென்ன; ''அதுக்கடியென்'' என்ன (பட்டினங்காப்பே) ''பட்டினம்'' என்கிறது-பத்தநமென்றபடி. அதாவது-நிதிகிடக்குமிடம்; ராஜதாநி. இங்கு, ஈச்வரனுக்கு நிதியாவது - ஆத்மாவிறே. (காப்பே) ஆளிட்டுக்காவாதே தானே காத்துக்கொண்டு கிடக்கையாலே பண்டன்று. அவன் இவரைக் காத்துக்கொண்டு கிடக்குமாபோலே இவரும்*வைத்தமாநிதியையிறே காப்பது. (க)

அ.—இரண்டாம்பாட்டு. (சித்திரகுத்தனெழுத்தால்) கீழே ''நில்லுமினென்னவுபாயமில்லை'' என்று அஞ்சினவர் உபாயமறிந்து அச்சம்கெட்டபடியைச் சொல்லுகிறது இப்பாட்டில்.

மூ.—சித்திரகுத்தனெழுத்தாற்றென்புலக்கோன்பொறியொற்றி
வைத்தவிலச்சினைமாற்றித்தூதுவரோடியொளித்தார்
முத்துத்திரைக்கடற்சேர்ப்பன்மூதறிவாளர்முதல்வன்
பத்தர்க்கமுதனடியேன்பண்டன்றுபட்டினங்காப்பே.

ப - ரை.— தென்புலக்கோன் - தென்திசைக்குத்தலைவனை இயமன், பொறியொற்றி - மேலெழுத்திட்டு, இலச்சினைவைத்த - முத்திரை வைக்கப்பட்டிருந்த, சித்திரகுத்தன் - கணக்கனை சித்ரகுப்தனுடைய, எழுத்து -

(க) உபகரித்தவன் - தந்தவன்.

கணக்குச்சுருணையை, மாற்றி - சுட்டுப்போகட்டு, தூதுவர் - அவனுடைய தூதர்கள், ஓடி - ஓடிப்போய், ஒளித்தார் - ஒளித்துக்கொண்டார்கள்; முத்து - முத்துக்களை, திரை - திரையானதுகொண்டு கரையிலேசேராநின்றுள்ள, கடற்சேர்ப்பன் - கடலிலே கண்வளர்ந்தருளுமவனும், மூதறிவாளர்-முதிர்ந்த அறிவையுடைய நித்யஸூரிகளுக்கு, முதல்வன் - தலைவனும், பத்தர்க்கு - ஆச்ரிதர்க்கு, அமுதன் - ஒப்பற்றவுணவாமவனுக்கு, அடியேன் - நான்சேஷபூதன்; யமவச்யதை குலைகையாலே, பண்டன்று - பழையதேஹமும் பழையஆத்மாவுமல்ல; பட்டினம் - ஆத்மாவுக்கும் சரீரத்துக்கும், காப்பு - ரக்ஷையுண்டாய்த்து; இனி நீங்கள்சடக்கெனப் போகப்பாருங்கோ ளென்கிறார்.

வ்ய.—(சித்திரகுத்தனெழுத்தால்) ஸர்வாத்மாக்களும் பண்ணும் புண்யபாபங்கள், பதினலுபேர் ஸாக்ஷியாக, யமனுடையகணக்கன் பட்டோலைபட்டிறே கிடப்பது. (தென்புலக்கோன் பொறியொற்றி) தெற்குத்திக்கிலேயான யமபுரத்துக்கு ஸ்வாமியானயமன் இவனெழுதின பட்டோலைக்கு மேலெழுத்திட்டபடி. (வைத்த விலச்சினைமாற்றித் தூதுவரோடி யொளித்தார்) அநாதிகாலார்ஜிதங்களான புண்யபாபங்க ளெழுதின கணக்குச் சுருணையை இலச்சினையோடேசுட்டு ஓடியொளித்தார்கள். "வள்ளலே யுன்றமர்க்கென்றும் நமன்றமர் கள்ளர்போல்" என்னக்கடவதிறே. "நமன்றமராலாராயப்பட்டறியார்கண்டீர்" என்கிறபடியே இவன்பட்டோலைபுரட்டிப் பாராதவளவன்றிக்கே சுட்டுப் போனர்களாய்த்து. "உயிருந் தருமனையேநோக்கும்" என்கிறபடியே பருப்பருத்த ப்ரஹ்மாதிகளையொழிய ஸர்வாத்மாக்களும் யமவச்யராயிறேயிருப்பது. இந்தயமவச்யதைகுலைவது பின்னைஆர்க்கென்னில்; "நமன்றமரென்றமரை வினவப்பெறுவாரலர்" என்றுஅவன்அபிமாநித்தார்க்கிறே. (முத்துத்திரைக்கடற்சேர்ப்பன்) முத்துக்களைத் திரையானது கொண்டுவந்துகரையிலே சேராநின்றுள்ள கடலிலே கண்வளர்ந் தருளுகிறவன். *வெள்ளைநீர்வெள்ளத்தணைந்து *கள்ளநித்திரை கொள்கின்ற மார்க்கங்காண்கையிலே இவர்க்குமநோரதம். (மூதறிவாளர்முதல்வன்) * அயர்வறுமமரர்களதிபதி. (பத்தர்க்கமுதன்) ஆச்ரிதர்க்கு நிரதிசயபோக்யனனவன். "அடியேன்மேவி யமர்கின்றவமுதே". (அடியேன்) "மூதறிவாளர் முதல்வன்" என்று - நித்யவிபூதியோகஞ்சொல்லி, "முத்துத்திரைக்கடற்சேர்ப்பன்" என்று - லீலாவிபூதியோகஞ்சொல்லி, "அடியேன்" என்று - உபயவிபூதிநாதனுடைய போக்யதையிலே தோற்ற வடியேன் என்கையாலே (பண்டன்று) யமவச்யதை குலைகையாலே, பண்டைதேஹமும் ஆத்மாவுமல்ல. (பட்டினங்காப்பே) ஆத்மாவுக்கும் தேஹத்துக்கும் ரக்ஷையுண்டாய்த்து. இனி நீங்கள்போகப் பாருங்கோளென்கிறார், (உ)

அ.—மூன்றாம்பாட்டு. (வயிற்றில்தொழுவையித்யாதி) கீழ்ப்பாட்டிலே - யமவச்யதையில்லையென்றார் ; இப்பாட்டிலே - அதுக்கடியான தேஹஸம்பந்தமும் * இல்லை என்கிறார். அதவா, "மூதறிவாளர்முதல்வன்" என்றார் - கீழ் ; இதில் - தமக்கு அறிவைப்பிறப்பித்தபடி சொல்லுகிறதொன்றுமாம். "அடியேன்" என்றார் - கீழ் ; இதில் - அடிமைகொண்டபடி சொல்லுகிறதொன்றுமாம்.

மூ.—வயிற்றிற்றொழுவைப்பிரித்து வன்புலச்சேவையதக்கிக், கயிற்றுமக்காணிகழித்துக் காலிடைப் பாசங்கழற்றி, எயிற்றிடைமண்கொண்ட வெந்தையிராப்பக லோதுவித்தென்னைப், பயிற்றிப்பணிசெய்யக் கொண்டான் பண்டன்று பட்டினங் காப்பே.

ப-ரை.—வராஹாவதாரஞ் செய்தருளி, மண் - பூமியை, எயிற்றிடை - தன்கொம்பினிடத்திலே, கொண்ட-எடுத்தருளிய, எந்தை-என்ஸ்வாமியானவன், வயிற்றில் தொழுவை - கர்ப்பவாஸமாகிற சிறைக்கூடத்தை, பிரித்து - கழித்து, புலம் - இந்த்ரியங்களாகிற, வன்-வலிய, சேவை - ரிஷபங்களை, அதக்கி - நெருக்கி, கயிறும் - நரம்பும், அக்கும்- எலும்புமான, ஆணி - ஸ்தூலசரீரத்தை, கழித்து-நீக்கி, காலிடைப்பாசம் - ஆத்மாவை வரிந்து கொண்டிருக்கிற ஸூக்ஷ்ம சரீரத்தை, கழற்றி - போக்கி, இராப்பகல் - இரவும்பகலும், ஓதுவித்து - எனக்கு சேஷத்வம்ஸ்வரூபமென்னு மிடத்தை யறிவித்து, பயிற்றி - அத்தை அநுஷ்டாந பர்யந்தமாக்கி, பணிசெய்ய - நித்யகைங்கர்யம் பண்ணும்படி, என்னை —, கொண்டான் - அங்கீகரித்தருளினான்; பண்டன்று—; பட்டினங் காப்பு—.

வ்யா. — (வயிற்றில்தொழுவைப்பிரித்து) கர்ப்பவாஸமாகிற சிறைக்கூடத்தைக் கழித்து. தொழு - விலங்கு. விலங்கிலே ஒருவிசேஷமிறே தொழுவிலேயடைக்கையும். (வன்புலச்சேவையதக்கி) இந்த்ரியங்களாகிற வலியசேக்களை, அதக்கி - நெருக்கி. "சேவதக்குவார்போல" என்னக்கடவதிறே. "காவலில்புலனைவைத்து". (கயிற்றுமக்காணிகழித்து) நரம்பும் எலும்புமான சரீரத்தில் நசையறும்படிபண்ணி. அக்கு - எலும்பு. (காலிடைப்பாசங்கழற்றி) யமபடர் கையும்பாசமுமாய்வந்துபுகுந்து, இவன்காலிலே துவக்கி முகம் கீழ்பட விழாதபடிபண்ணி. "பின்முன்னாக விழுப்பதன்முன்னம்" என்னக்கடவதிறே. அன்றிக்கே, "காலிடைப்பாசங்கழற்றி" என்றது, "கால்" என்று - காற்றாய், "பாசம்" என்றது - ஆத்மாவை வரிந்துகொண்டிருக்கிற ஸூக்ஷ்மசரீரமாய், இச்சரீரம் பஞ்சவ்ருத்தி ப்ராணனாலே ப்ரேரிதமாயிருக்கும். "அக்காணி" என்றது-ஸ்தூல சரீரம் ; "காலிடைப்பாசம்" என்றது - ஸூக்ஷ்மசரீரம். ஆக, "స్థూలసూక్ష్మరూపాం విసృజ్య" "ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய" என்கிறபடியே - (க) உபயசரீரப்ராப்தியு மறும்படிபண்ணி. "காலி

* "அற்றபடிசொல்லுகிறார்"என்று சிலஸ்ரீகோசங்கள். (க) உபயம்-இரண்டு.

டைப்பாசம்" என்று - காற்கட்டானஸ்நேஹமென்றுமாம். அன்றிக்கே, "காலிடைப்பாசம்" என்று - (க) *ஹரிணீகுரமாத்ரமான சர்மவிஷயஸ்நேஹமென்னவுமாம். (எயிற்றிடைமண்கொண்டவெந்தை) ப்ரளயார்ணவத்திலே யகப்பட்டுக்கிடக்கிற பூமியை யெடுத்தாற்போலே, சரீரவச்யனான வென்னை யெடுத்த ஸ்வாமி. (இராப்பகலோதுவித்து) திவாராத்ரவிபாகமற ஸர்வகாலமுமென்றபடி. (ஓதுவித்து) சிக்ஷிப்பித்து. அதாவது - கர்ப்பவாஸமும், இந்த்ரியவச்யத்வமும், கர்மவச்யத்வமும், யமவச்யத்வமும் த்யாஜ்யமென்னுமத்தையறிவித்து. கீழ்ப்பாட்டிற்சொன்ன தன்னுடைய ஸர்வசேஷித்வத்தையும், நிரதிசயபோக்யதையையும், தமக்கு சேஷத்வம் ஸ்வரூபம் என்னுமிடத்தையுமாய்த்து ஓதுவித்தது. (பயிற்றி) இத்தை அநுஷ்டாநபர்யந்தமாக்கி. "செய்யேல்தீவினையென்று" இத்யாதி. (பணிசெய்யக் கொண்டான்) ஓதுவித்த ப்ரயோஜநம்பெற்றபடி. "நித்யகைங்கர்யங்கொள்ளக்கடவோம்" என்று திருவுள்ளத்தாலே அறுதியிட்டு, கொண்டபடி. (பண்டன்று) இந்த்ரியங்களுக்கு (உ) சேஷவ்ருத்திபண்ணிப்போந்த பண்டுபோலன்று. "என்னையாளும் வன்கோ" என்னக்கடவதிறே. (பட்டினங்காப்பே) இன்று ரக்ஷையுண்டாகையாலே. "என்கோலாடுகுறுகப்பெறா" என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது. "இராப்பகல்" என்று-மூதறிவாளர்படியாய், திவாராத்ர விபாகமற்றபடியால் அகாலகால்யமான தேசம்போலேயென்றபடி. (௩)

அ.—நாலாம்பாட்டு. (மங்கிய) நீங்கள், ஹிரண்யன்பட்டது படாதே போகப்பாருங்கோளென்கிறார்.

மூ.—மங்கியவல்வினைநோய்காளுமக்குமோர்வல்வினைகண்டீர்
இங்குப்புகேன்மின்புகேன்மினெளிதன்றுகண்டீர்புகேன்மின்
சிங்கப்பிரானவனெம்மான்சேருந்திருக்கோயில்கண்டீர்
பங்கப்படாதுய்யப்போமின்பண்டன்றுபட்டினங்காப்பே.

ப-ரை.—மங்கிய-உருத்தெரியாதபடி மங்கிக்கிடக்கிற, வல் - வலிய, வினை-பாபத்தால்வந்த, நோய்காள்-வ்யாதிகளே, உமக்கும்-உங்களுக்குங்கூட, ஓர் - ஒப்பற்றதாய், வல் - வலிதாயிருந்துள்ள, வினை-பாபபலமான நோயாயிராநின்றது, கண்டீர் - பார்த்தீர்களே, இங்கு-எங்களிடத்தில், புகேன்மின்புகேன்மின்-வாராதேகொள்ளுங்கோள் வாராதேகொள்ளுங்கோள்; நீங்கள் எங்களைக்கிட்டுகை, எளிதன்று - ஸுலபமன்று; கண்டீர் - ஹிரண்யன்பட்டது கண்டீர்களே; ஆகையால், புகேன்மின்-தூரநில்லுங்கோளென்றுசொல்லி, புகுராமைக்குஹேது அருளிச்செய்கிறார்; சிங்கம் - ந்ருஸிம்ஹாவதாரஞ்செய்தருளி, பிரானவன் - ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு உபகரித்தவனாய், அத்தாலே, எம்மான்-என்னையெழு

(க) ஹரிணீகுரம் - மானின்குளம்பு. (உ) சேஷவ்ருத்தி - அடிமைத் தொழில்.

கொண்ட ஸ்வாமியானவன், சேரும் - நித்யவாஸம்பண்ணும், திருக்கோயில் கண்டீர் - திருக்கோயிலாயிராநின்றது ; ஆதலால், பங்கப்படாது - பரிபவப்படாமல், உய்யப்போமின் - பிழைத்துப்போங்கோள் ; பண்டன்று—;பட்டினங்காப்பே—.

வ்யா.—(மங்கியவல்வினைநோய்காள்) தெரியாதபடி மங்கிக்கிடக்கிற வலியபாபங்களால் பலிதமான நோய்காள். (க) விபஜிக்கவொண்ணாதபடி மங்கிக்கிடக்கை. "சார்ந்தவிருவல்வினைகள்" என்னுமாபோலே. "இங்குப்புகேல்மின் புகேல்மின்" என்று (உ) ப்ரதிவிஷயங்காட்டுகிறார். ஆத்மாவை மங்கப்பண்ணுமதாய், இவனால் கழித்துக்கொள்ளவொண்ணாததுமாய், அவனே கழிக்கவேண்டும்படியான நோய்காள். (உமக்குமோர்வல்வினைகண்டீர்) (ங) ம்ர்த்யுவுக்கும் ம்ர்த்யுவென்கிறார். (இங்குப்புகேல்மின்புகேல்மின்) இவற்றின்நெஞ்சிலே படுகைக்காகப் பலகாற்சொல்லுகிறார். (இங்கு) "'இங்கு' என்று - திருப்பல்லாண்டோடே அந்வயமுடையாரெல்லாரையும் கூட்டிக்கொள்ளுகிறார்" என்று பட்டர். (எளிதன்று) உங்களுக்குப் பண்டுபோலெளிதன்று. ஆவதென் என்ன (கண்டீர்) ஹிரண்யன்பட்டபடிகண்டிகோளே. (புகேல்மின்) நில்லுங்கோள். புகுராமையென்னென்ன (சிங்கப்பிரானவனெம்மான் சேருந்திருக்கோயில்கண்டீர்) ஸிம்ஹங்கிடந்த (ச) முழஞ்சிலே புகுவாருண்டோ. "ப்ரஹ்லாதன்விரோதியைப் போக்கினதும் தமக்கு" என்றிருக்கிறார். ஹிரண்யன்பட்டது படாதே போகப்பாருங்கோள். (பங்கம்) பரிபவம். பிழைத்துப்போங்கோள். பண்டுபோல் உங்களுக்கு எளிதன்று, உறைப்பானகாவலுண்டாய்த்து. (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. (மாணிக்குறளுருவாய) தேவகார்யம் செய்யவந்தாற்போலே என்கார்யம் செய்யவந்தான் ; (ரு) நமுசி (சு) சுக்ராதிகள்பட்டது படாதேபோங்கோளென்று இந்த்ரியங்களுக்குச் சொல்லுகிறார். கீழ்ப்பாட்டில் - "புண்ணிரந்த" என்றார்; இப்பாட்டில் - மண்ணிரந்தவனைச் சொல்லுகிறார்.

மூ.—மாணிக்குறளுருவாய மாயனையென்மநத்துள்ளே
பேணிக்கொணர்ந்து புகுதவைத்துக்கொண்டேன்பிறிதின்றி
மாணிக்கப்பண்டாரங் கண்டீர் வலிவன்குறும்பர்களுள்ளீர்
பாணிக்கவேண்டாநடமின் பண்டன்று பட்டினங்காப்பே.

ப-ரை.—மாணி - அழகுமிக்கிருந்துள்ள, குறளுருவாய - வாமநாவதாரஞ்செய்தருளி லோகத்தையளந்துகொண்ட, மாணிக்கப்பண்டாரம் - மாணிக்கங்களுக்கிருப்பிடமான, மாயனை - ஆச்சர்யபூதனை, பேணி - ஸ்நேஹத்தோடே,

(க) விபஜித்தல் - பிரித்தல். (உ) ப்ரதிவிஷயம் காட்டுகை - நோய்களைத் தனித்தனி குறித்துச்சொல்லுகை. (ங) ம்ர்த்யு - இயமன். (ச) முழஞ்சு - குஹை. (ரு) நமுசி - மஹாபலிபுத்ரன். (சு) சுக்ரன் - அஸுரகுரு.

கொணர்ந்து - கொண்டுவந்து, என்—, மநத்துள்ளே-நெஞ்சுக்குள்ளே, புகுத-புகுரும்படி, பிறிதின்றி - பிரிவில்லாமல், வைத்துக்கொண்டேன் கண்டீர்—; வலி வன் - மிகவும்வலிதாய், குறும்பர்கள் - மூலையடியேநடந்துதிரியும் இந்த்ரியங்களே, உள்ளீர் - பிழைக்கநினைத்தீர்களாகில், பாணிக்கவேண்டா - தாமஸிக்கவேண்டா; நடமின் - கால்வாங்கிப்போகப்பாருங்கோள்; பண்டன்று—; பட்டினங்காப்பே—.

வ்யா.—(மாணிக்குறளுருவாய மாயனை) இரப்பிலேதகணேறி, நிரதிசயபோக்யனுமாய், தன்னுடைய தேஹகுணங்களாலும் ஆத்ம குணங்களாலும் அவனைவசீகரித்தபடி. மாணி - அழகு. குறள் - சேர்ப்பால்போலே. (உருவாய மாயனை) மாயந்தான் ஒரு வடிவுகொண்டாற்போலேயிருக்கை. அழகுதான்ஒருவடிவுகொண்டு உலாவுமாப்போலே யிருக்கை. உரு - வடிவு. (பேணி) ஸ்நேஹத்தோடே,கொடுவந்து என்னெஞ்சுக்குள்ளே வைத்துக்கொண்டேன். பேணி - ஆசைப்பட்டு; ஆதரித்தென்னவுமாம். (பிறிதின்றி) திருவுலகளந்தருளினவன்று அவன்ஸாபேக்ஷனாய் நான் நிரபேக்ஷனாகையாலே பிரிவுண்டாய்த்து; இன்று இருவரும் ஸாபேக்ஷராகையாலே (பிறிதின்றி) இரண்டின்றி. (மாணிக்கப்பண்டாரங் கண்டீர்) மாணிக்குறளுருவாயமாயன் - மாணிக்கப்பண்டாம். "உலகளந்த மாணிக்கம்" என்னக்கடவதிறே. (வலிவன்குறும்பர்களுள்ளீர்) மிகவும் வலிதாய் மூலையடியே நடந்துதிரிகிற குறும்பர்களாயுள்ளீர். குறும்பர் - இந்த்ரியங்கள். வலி - பலம்; வன்மை - தொன்மைக்கேடு. "வன்கையர்" என்னக்கடவதிறே. குறும்பர்கள் - கள்ளர்கள். "ఏకవిస్రియదస్యూనాం" "ஹஷீஇந்த்ரியதஸ்யூநாம்". "கோவாயைவரென்மெய்குடியேறி" என்று இவர்களதிறே குடியிருப்பு. இவர் குடிமைசெய்திறேபோந்தது. (உள்ளீர்) உண்டாகில். (பாணிக்கவேண்டா) விளம்பிக்கவேண்டா. (நடமின்) கால்வாங்கிப்போகப்பாருங்கோள். "ஈண்டடியெடுப்பதன்றோ வழகு". அதுக்கடியென்னென்ன (பண்டன்று) நீங்கள் மெய்குடியேறினகாலமன்று, இன்று வ்யாவர்த்தியுண்டென்கிறார். (௫)

அ.—ஆறும்பாட்டு. (உற்றவுறுபிணிநோய்காள்) பசுக்களுக்கு இந்த்ராதிகளால்வந்த ஆபத்தைப்போக்கினாற்போலே, உங்களாலே நான் பட்ட க்லேசம் போக்கவந்தான்; நீங்கள் கம்ஸாதிகள்பட்டது படாதே போங்கோளென்று நோய்களைப்பார்த்துச் சொல்லுகிறார்.

மூ.—உற்றவுறுபிணி நோய்காளுமக்கொன்று சொல்லுகேன்கேண்மின், பெற்றங்கண் மேய்க்கும்பிரானார் பேணுந்திருக்கோயில்கண்டீர், அற்றமுரைக்கின்றேனின்ன மாழ்வினைகாளுமக்கிங்கோர், பற்றில்லைகண்டீர் நடமின் பண்டன்று பட்டினங்காப்பே.

ப-ரை.—உற்ற - மிகக்கொடிதான, நோய்காள் - வியாதிகளே, உறு - மறு பாடுருவக்கொண்ட, பிணிகாள்—, உமக்கு - உங்களுக்கு, ஒன்று - ஒருவார்த்தை, சொல்லுகேன் - சொல்லுகிறேன், கேண்மின் - கேளுங்கோளென்ன; அதென்னென்ன; பெற்றங்கள் - பசுக்களை, மேய்க்கும் - மேய்க்கின்ற, பிரானூர் - உபகாரகனானவன், பேணும் - விரும்பிவர்த்திக்கிற, திருக்கோயில் கண்டீர் - திருக்கோயிலாயிராநின்றது; ஆழ்-பிறவிக்கடலில் ஆழப்பண்ணின, வினைகாள் - பாபங்களே, இன்னம் - மீண்டும், உங்களுக்கு, அற்றமுரைக்கின்றேன்- அறுதி சொல்லுகிறேன்; உமக்கு - உங்களுக்கு, இங்கு—, ஓர்பற்றில்லை - ஒரு ப்ரயோஜநமுமில்லை; கண்டீர் - பெற்றங்கள் மேய்க்கிறவனைக் கண்டிகோளே, நடமின் - இவ்விடம் விட்டுப் போகப்பாருங்கோள்; பண்டன்று—; பட்டினம் காப்பே—.

வ்யா.—(உற்றவுறுபிணிநோய்காள்) அநாதிகாலமே பிடித்து என்னைவிடாதே நலிவுசெய்கிற நோய்காள். (உற்ற-நோய்காள், உறுபிணிகாள்) அஸாதாரணமென்னும்படியான நோய், மறுபாடுருவக்கொண்டபிணி. உங்களுக்கு ஒருவார்த்தைசொல்லுகிறேன் புத்திபண்ணிக்கேளுங்கோள். அதென்னென்ன (பெற்றங்கள்மேய்க்கும் பிரானூர்பேணுந் திருக்கோயில்கண்டீர்) யசோதைப்பிராட்டிக்கு பவ்யனாய்வந் தவதரித்தாற்போலே எனக்கு பவ்யனாய்வந்து உபகரித்தபடி. (பேணுந்திருக்கோயில்) தம்முடைய திருமேனியை விரும்பிவந்து புகுருகையாலே, உகந்தருளின நிலங்களோடொக்க அருளிச்செய்கிறார். (கண்டீர்) இது (க) ப்ரத்யக்ஷமன்றோ. (இன்னம்-அற்றமுரைக்கின்றேன்) இன்னம் - மீண்டும், உங்களுக்கு அறுதி சொல்லுகிறேன். (ஆழ்வினைகாள்) அநாதிகாலம் ஈச்வரனைவிட்டுத் தறைப்பட்டுப்போம்படி பண்ணினவர்களே. (ஆழ்வினை) (உ)துரவகாஹமான வினையென்றுமாம். உமக்கிங்கொரு ப்ரயோஜநமில்லை கண்டீர். பெற்றங்கள் மேய்க்கிறவனைக் கண்டிகோளே. தாம் கண்டவாறே இவையும் கண்டதாக நினைத்திருக்கிறார். (நடமின்) போகப்பாருங்கோள். (பண்டன்று) *மாயன்படைத்த மயக்கிலே அகப்பட்ட பண்டுபோலன்று. "ஸர்வ" "பாபேப்ய:" என்கிறவின்று, ஸர்வபாபங்களும் * மோக்ஷயிஷ்யாமியிலே அந்வயித்தது. (சூ)

அ.—ஏழாம்பாட்டு. (கொங்கைச்சிறுவரையித்யாதி) யமவச்யதைக்கடி (ங) இந்த்ரியவச்யதை யென்கிறார் - இப்பாட்டில்.

மூ.—கொங்கைச்சிறுவரையென்றும் பொதும்பினில் வீழ்ந்துவழுக்கி, அங்கோர்முழையினிற் புக்கிட்டழுந்திக் கிடந்துழல்வேனை, வங்கக்கடல்வண்ண னம்மான் வல்வினையாயின மாற்

(க) ப்ரத்யக்ஷம் - கண்ணாற்காணத்தக்கது. (உ) துரவகாஹமான - இப்படிப்பட்டதென்று அறியக்கூடாத. (ங) இந்த்ரியவச்யதை - ஐம்பொறிகளுக்குவசப்பட்டொழுகுகை.

றிப், பங்கப்படாவண்ணஞ் செய்தான் பண்டன்று பட்டினங் காப்பே.

ப-ரை.—கொங்கையென்றும் - முலைகளிருக்கும்படியே ! என்றும், சிறுவ ரையென்றும் - சிற்றிடையிருக்கும்படியே! என்றும் கொண்டாடி, பொதும்பி னில் - அல்குலாகிற குழியிலே, வழுக்கி—, வீழ்ந்து - விழுந்து, அத்தாலே, ஓர்- ஒப்பற்ற, முழையினில் - நரகத்திலே, புக்கிட்டு - புகுந்து, அழுந்திக்கிடந்து—, உழல்வேனை - ஸஞ்சரியாநின்றுள்ள வென்னை, வங்கம் - மரக்கலமுலாவாநின் றுள்ள, கடல் - கடல்போன்ற, வண்ணன் - திருநிறத்தை யுடையனான, அம் மான் - ஸர்வேச்வரன், இதுக்கடியான, வல்வினையாயின - க்ரூரமானகர்மங் களை, மாற்றி - போக்கி, பங்கப்படாவண்ணம் செய்தான் - எளிவரவுபடாத படி பண்ணினன்; பண்டன்று—; பட்டினங்காப்பே—.

வ்யா.—(கொங்கைச்சிறுவரையென்றும்) கவிச்வந்தோற்ற முலைமலை என்கிறார். "முலைமலைமேல்நின்றும் ஆறுகளாய்" என்னக் கடவதிறே. (பொதும்பினில்வீழ்ந்துவழுக்கி) குழியிலே வழுக்கி விழுந்து. குழியென்றது -இவனை ஆழப்பண்ணுமது. இவன் தானாக விழுந்திலன், அதுதான் விழப்பண்ணிற்று. (அங்கோர்முழையினில் புக்கிட்டு) சாஸ்த்ரஞ்சொல்லும் ஸ்தாநத்திலேபுக்கு. (அழுந்திக் கிடந்துழல்வேனை) அதிலேகிடந்து க்லேசிக்கிற வென்னை. அங்கு, ஓர் என்றது - அத்விதீயம். இவன்தப்பிலும் தப்பவொண்ணாத படி தன்வசத்திலே யிழுத்துக்கொள்ளுகை. அதவா, கொங்கை - முலை; சிறுவரை-சிற்றிடை; பொதும்பு - (க) அக்ராம்யமான அந் தஸ்தாநத்தைச் சொல்லுகிறார். "என்றும்" என்று-முலையிருக்கும் படியே! இடையிருக்கும்படியே! என்று முந்துற இவற்றையிறே கொண்டாடுவது. பொதும்பு - விஷயப்ராவண்யஸ்தாநம். (அங் கோர்முழை) பின்னை அதொருமுழஞ்சிறே. "முழை" என்று - நரகம். விஷயப்ராவண்யத்தால் பலிப்பது நரகமிறே. (அழுந்திக் கிடந்துழல்வேனை) பின்னை, கர்ப்பவாஸத்தோடு (உ) யமகர்த்தமத் தோடு ஸஞ்சரியாநிற்கு மத்தனையிறே. (வங்கமித்யாதி) *தெரிவை மாருருவமேமருவி * அவரவர் பணைமுலையைத் துணையென்றிருந்த விவரை யெடுத்தது வடிவழகாலேயிறே. (அம்மான்) அதுக்கடி உடையவனாகையாலே. வங்கத்தையுடைத்தான கடலின்நிறம்போ லேயிருக்கிற திருமேனியையுடைய ஸர்வேச்வரன். "வங்கமாமுந் நீர்" என்னக்கடவதிறே. (வல்வினையாயினமாற்றி) இதுக்கடியான கர்மங்களைப் போக்கி. (பங்கப்படாவண்ணஞ்செய்தான்) என்னை எளிவரவுபடாதபடி பண்ணினன். பங்கம் - பரிபவம். கடலுக்கு

(க) அக்ராம்யமான - மறைக்கப்பட்ட. (உ) யமகர்த்தமம் - யமலோக த்திலுண்டான சேறு.

வங்கம்போலே இவன்வடிவழகை அநுபவிப்பார்க்கு திவ்யாயுதங்களிலே நின்று அநுபவிக்கைக்கு ஒரு த்ர்ஷ்டாந்தம்.

அதவா, (கொங்கையித்யாதி) இதுதன்னை கர்ப்பவாஸமென்றுஞ் சொல்லுவர்கள். "அங்கோர்முழை" என்று - கர்ப்பவாஸம். (எ)

அ.—எட்டாம்பாட்டு. (ஏதம்) கீழிற்பாட்டிலே - *மாதரார் கயற்கணென்னும் வலையில்பட்ட விவனாமீட்டது வடிவழகென்றார்; இப்பாட்டில் - *ஐயப்பாடறுத்ததும் அழகென்கிறார். அன்றிக்கே, கீழே "இராப்பகலோதுவித்து" என்றது சாஸ்த்ரமுகத்தாலேயோ, ஈச்வரமுகத்தாலேயோ, ஆசார்யமுகத்தாலேயோவென்னில்; ஆசார்யமுகத்தாலேயென்கிறது - இப்பாட்டில்.

மூ.—ஏதங்களாயினவெல்லாமிறங்கலிடுவித்தென்னுள்ளே
பீதகவாடைப்பிரானார்பிரமகுருவாகிவந்து
போதிற்கமலவன்னெஞ்சம்புகுந்துமென்சென்னித்திடரிற்
பாதவிலச்சினைவைத்தார்பண்டன்றுபட்டினங்காப்பே.

ப-ரை.—பீதகவாடைப்பிரானார் - திருப்பீதாம்பரத்தையுடைய ஸர்வேச்வரன், பிரமம் - ப்ரஹ்மத்தையுபதேசிக்கும், குருவாகி - ஆசார்யனாய், வந்து—, போது - அறிவுக்கு, இல் - இருப்பிடமாய், வல் - உள்ளிருப்பவனை யறியவொட்டாதவலிமையையுடைய, நெஞ்சம் - ஹ்ர்தயமாகிற, கமலம் - தாமரைமலரிலே, புகுந்தும்—, என் - என்னுடைய, உள் - மநஸ்ஸிலுள்ள, ஏதங்களாயின வெல்லாம் - தேஹமே ஆத்மாஎன்று நினைக்கைமுதலிய குற்றங்களையெல்லாம், இறங்கலிடுவித்து - போம்படிபண்ணி, என் - என்னுடைய, சென்னித்திடரில் - உத்தமாங்கத்தில், பாதம் - திருவடிகளாகிற, இலச்சினை - முத்திரையை, வைத்தார் - வைத்தருளினான்; ஆதலால், பண்டன்று—; பட்டினங்காப்பே—.

வ்யா.—(ஏதங்கள்) ஏதம் - குற்றம். ஏதங்களானவையெல்லாம். தேஹாத்மாபிமாநமும், (க) ஸ்வாதந்த்ர்யமும், (உ) அந்யசேஷத்வமும், (ங) ஸ்வரக்ஷணமும், ஸ்வப்ரயோஜநமும். (ச) பூர்வாகமும், (ரு) உத்தராகமும், ப்ராரப்தமுமென்னவுமாம். நிஷ்க்ர்தியில்லாதவையும் (சு) நிஷ்க்ர்தியுள்ளவையு மென்றுமாம். [illegible] [illegible] (எ) ஆர்த்ரமானவையும் (அ) சுஷ்கமானவையுமென்றுமாம். (இறங்கலிடுவித்து) இவை போம்படிபண்ணி. என்னெஞ்சுக்குள்ளே. (பீதக

(க) ஸ்வாதந்த்ர்யம் - தன்வசமாயிருக்கை. (உ) அந்யசேஷத்வம் - பிறர்க்குரிமைப்படுகை. (ங) ஸ்வரக்ஷணம் - தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ளல். (ச) பூர்வாகம் - ஸ்வரூபஜ்ஞாநம் உண்டாவதற்கு முன்செய்தபாபம். (ரு) உத்தராகம் - ஜ்ஞாநம்பிறந்தபின்பு தன்னையறியாமல் வரும்பாபம். (சு) நிஷ்க்ர்தி - ப்ராயச்சித்தம். (எ) ஆர்த்ரம் - பச்சை. (அ) சுஷ்கம்-உலருதல்.

வாடைப்பிரானுர்) ஸர்வேச்வரத்வ (க) சிஹ்நமுமாய் புருஷோத்தமத்வ லக்ஷணமுமாயிருக்கும் திருப்பீதாம்பரத்தையுடைய ஸர்வேச்வரன். (பிரமகுருவாகிவந்து) ப்ரஹ்மத்தை யுபதேசிக்கிறவன். "ఉత్పాదకబ్రహ్మపిత్రోర్గరీయాన్ బ్రహ్మదః" "உத்பாதகப்ரஹ்மபித்ரோ ர்கரீயாநுப்ரஹ்மத:" என்னக்கடவதிறே. ப்ரஹ்மசப்தம் (உ) ஜ்ஞாநவாசி. ஈச்வரத்வப் பிடார்கொண்டு திருத்தவொண்ணுமல் ஆசார்யனுயிறே திருத்துவது. (போதில்கமலவன்னெஞ்சம்புகுந்தும்) போது - அறிவு. இல் - இருப்பிடம். "கமலம்" என்று - ஹ்ருதயகமலம். வன்மை - (ங) அந்தர்யாமியையும் அறியவொட்டாதவலிமை. ஜ்ஞாநப்ரஸரத்வாரமான நெஞ்சை யிருப்பிடமாகவுடைய கமலம். (புகுந்தும்) இப்படிக்கொத்த நெஞ்சுக்குள்ளே புகுந்து திருத்தினபடி. (பீதகவாடைப்பிரானுர் பிரமகுருவாகிவந்து போதில்கமலவன்னெஞ்சம்புகுந்து - ஏதங்களாயினவெல்லாமிறங்கலிடுவித்து) "ஏதங்கள்" என்றது - மகாரத்தாலே - (ச) தேஹாத்மாபிமாநத்தைக்கழித்து, சதுர்த்தியாலே - ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைக் கழித்து, உகாரத்தாலே - (ரு) அந்யசேஷத்வத்தைக் கழித்து, நமஸ்ஸாலே - ஸ்வயத்நத்தைக் கழித்து, நாராயணபதத்தாலே - ஸ்வப்ரயோஜநத்தைக் கழித்தபடி. ஈச்வரனுக்குப் பிரிவின்றிக்கேயிருக்க, "பிரிந்தான்" என்கைக்கடி அந்த ஜ்ஞாநமில்லாமையிறே. ஜ்ஞாநமில்லாதபோது "அஸந்நேவ" "அஸந்நேவ" என்றும், ஜ்ஞாநமுண்டானவாறே "ஸந்தமேநம்" "ஸந்தமேநம்" என்னவுங்கடவதிறே. ஈச்வரனுய்ச்செய்யுமதன்று, ஆசார்யனுய்வந்து செய்யவேணும். இவனுக்குத் திருத்தலாவது - இவன்பண்ணும் க்ர்த்யங்கள் ஓரொன்றே (சு) ஸத்தையை (எ) நசிப்பிக்கப் (அ) போந்திருக்க, அத்தைப்பொறுத்து ஸத்தையைநோக்கிப் போருகையாலேயிறே இன்று இவனுக்கு உபதேசிக்கலாகிறது. "ஒத்தார்மிக்காரையிலையாயமாமாயா" என்று படாததெல்லாம்பட்டாலும் * அறியாதனவறிவித்திறே திருத்துவது. ஸாபேக்ஷனல்லாதவன் நாலுவகைப்பட்ட ஜந்மத்திலே வந்தவதரித்து ஸத்தையைநோக்கி, உபதேசத்துக்கு (கூ) யோக்யமான (க0) கரணப்ரதாநத்தையும் பண்ணி, அதுக்கு யோக்யமான சரீரத்தையும் உண்டாக்கி, மாதாபிதாக்களுக்கு அந்தர்யாமியாய்நின்றும் ஆசார்யனுமாய் நின்றும்

---

(க) சிஹ்நம் - அடையாளம். (உ) ஜ்ஞாநவாசி - அறிவைச்சொல்லுமது. (ங) அந்தர்யாமி - உள்ளிருப்பவன். (ச) தேஹாத்மாபிமாநம் - சரீரமேஆத்மாஎன்று நினைக்கை. (ரு) அந்யசேஷத்வம் - பிறர்க்கு உரிமைப்படுகை. (சு) ஸத்தை - ஆத்மா. (எ) நசிப்பிக்க - அழிப்பதற்கு. (அ) போந்திருக்க-போருமாயிருக்க. (கூ) யோக்யமான - தகுதியான. (க0) கரணப்ரதாநம் - மெய்வாய்முதலிய கரணங்களைக் கொடுத்தல்.

உபதேசித்த உபகாரத்தை நினைத்து "பீதகவாடைப்பிரானுர்" என்கிருர். (என்சென்னித்திடரில்) என் (க) உத்தமாங்கத்திலே. திருவடிகளாகிற இரண்டுகாலும் ஏறிப்புயாதமேட்டிலே. "நீள்கழல் சென்னிபொருமே" என்று பூசல்பொருதிறே*பாதவிலச்சினைவைத்தது. தோளுக்குத் திருவாழிபோலே தலைக்குத் திருவடிநிலை. "[illegible]" "[illegible]" இத்யாதி. (பண்டன்று) இந்த்ரியங்களுக்குப் பொதுவான பழையகாலம்போலன்று. திருவாழிக்கல்நாட்டித் திருவிடையாட்டமாய்த்து. "ஒருகாலிற் சங்கொருகாலிற்சக்கரமுள்ளடிபொறித்து" என்னக்கடவதிறே. காவலும் படைத்தது. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. கீழ் - ஈச்வரன் தமக்குக்காவலானபடி சொன்னுர்; இப்பாட்டில் - தாம் அவனுக்குக் காவலானபடி யருளிச்செய்கிருர்.

மூ.—உறகலுறகலுறகலொண்சுடராழியேசங்கே
அறவெறிநாந்தகவாளேயழகியசார்ங்கமேதண்டே
இறவுபடாமலிருந்தவெண்மருலோகபாலீர்காள்
பறவையரையாவுறகல்பள்ளியறைகுறிக்கொண்மின்.

ப-ரை.—ஒண் - அழகிதான நிறத்தையும், சுடர் - ஒளியையுமுடைய, ஆழியே—, சங்கே—, அற - சத்ருக்கள்சரீரமறும்படியாக, எறி-எறிகிற, நாந்தகம்-ஸ்ரீநந்தகமென்னும்பேரையுடைய, வாளே—, அழகியசார்ங்கமே—,தண்டே—, இருந்த - ஈச்வரன் வைக்க இருக்குமவர்களாய், எண்மர் - எட்டுத்திக்குக்குங் காவலராய்க்கொண்டு, உலோகபாலீர்காள் - உலகத்தைக் காக்குமவர்களே, இறவுபடாமல் - தப்பாமல், உறக லுறக லுறகல் - உறங்காதே கொள்ளுங்கோள், உறங்காதே கொள்ளுங்கோள், உறங்காதே கொள்ளுங்கோள; பறவையரையா - பக்ஷிராஜனே, உறகல் - தூங்காதேகொள்ளும்; நீங்களெல்லாரும், பள்ளியறை - அவனுடைய பள்ளியறையான என் சரீரத்தை, குறிக்கொள்மின் - குறிக்கொண்டு நோக்குங்கோளென்கிருர்.

வ்யா.—(உறகலுறகலுறகல்) அவர்கள் புத்திபண்ணி நோக்குகைக்காகப் பலகாலு மருளிச்செய்கிருர். ஆரைத்தான் உறங்காதிருக்கச் சொல்லுகிறதென்னில், அநிமிஷரையாய்த்து. ப்ரயோஜநாந்தரபரரான மஹாராஜருமகப்படப் பரியும்விஷயத்துக்கு நித்யர்பரியக் கேட்கவேண்டாவிறே. அவர்களையு மகப்பட, உறங்காதே கொள்ளுங்கோள் என்னும்படியிறே இவர்பரிவு. இவர்களுக்கு உறக்கமாவது -(உ) குணவித்தராய் (ங)நஞ்சுண்டாரைப்போலே தந்தாமையறியாதிருத்தல்; அநுபவத்திலே யிழிந்து கைங்கர்யபரராயிருத்

(க) உத்தமாங்கம் - சிரஸ்ஸு. (உ) குணவித்தராய் - குணங்களிலே ஈடுபட்டவர்களாய். (ங) நஞ்சுண்டார் - விஷத்தையுண்டவர்கள்.

தல். (ஒண்சுடராழியேசங்கே) அழகிதான நிறத்தையும் ஒளியையும் அநுபவத்துக்குறுப்பாக்காதே, ரக்ஷைக்கு உறுப்பாக்கப்பாருங்கோள். (அறவெறிநாந்தகவாளே) சத்ருக்கள் சரீர மறும்படியாக வெறிகிற, நாந்தகம்-நந்தகமென்கிற திருநாமமவன்வாளுக்கு. (அழகியசார்ங்கமே) அழகாவது - ஈச்வரன் ஒருகால்நோக்கினால், பின்பு "சார்ங்கமுதைத்தசரமழை" என்னும்படி சரவர்ஷமாகச் சொரியும். (தண்டே) விரோதிவர்க்கத்திலே எப்போதும் (க) ஒக்கினபடியேயிருக்கும். நித்யவிபூதியிலுள்ளாரைக் காவலடைத்து, லீலாவிபூதியிலுள்ளாரைக் காவலடைக்கிறார்மேல் (இறவுபடாமலிருந்த வெண்மருலோகபாலீர்காள்) இறவுபடாமல்-தப்பாமல், ஈச்வரன் வைக்கவிருந்த எட்டுத்திக்குக்கும் காவலான லோகபாலகர்காள். பாலநஸாமர்த்யத்தை நிரூபகமாகவுடைய நீங்கள், உங்கள்பெருமைக்கீடாகக்காக்கவேணும். (பறவையரையா) இவர்களெல்லாம் தாம்தாம் நின்றநின்றவிடங்கள் குலையாதே நின்றிறே காப்பது. ஓரிடத்தில்நில்லாதே எங்கும் வ்யாபரித்துநோக்கும் பெரியதிருவடியை, உறங்காதேகொள்ளென்கிறார். * நீண்ட வசுரருயிரெல்லாந் தகர்த்துண்டுழலும்புள்ளிறே. (பள்ளியறைகுறிக்கொள்மின்) தம்முடைய திருமேனியைக்குறிக்கொண்டு நோக்குங்கோளென்கிறார். (௯)

அ.—பத்தாம்பாட்டு. தம்முடைய திருமேனி திருப்பள்ளியறையானபடி சொல்லுகிறார் - இப்பாட்டில்.

மூ.—அரவத்தமளியினோடுமழகியபாற்கடலோடும்
அரவிந்தப்பாவையுந்தானுமகம்படிவந்துபுகுந்து
பரவைத்திரைபலமோதப்பள்ளிகொள்கின்றபிரானைப்
பரவுகின்றான்விட்டுசித்தன்பட்டினங்காவற்பொருட்டே.

ப-ரை.—அரவம் - திருவநந்தாழ்வானுகிற, அமளியினோடும் - படுக்கையும், அழகிய—, பாற்கடலோடும் - திருப்பாற்கடலும், அரவிந்தப்பாவையும் - செந்தாமரைமலரைப் பிறப்பிடமாகவுடைய பெரியபிராட்டியாரும், தானும்—, அகம்படி - அடியாரோடே, வந்துபுகுந்து—, பல—, பரவைத்திரை - ஸமுத்ரத்திவலைகள், மோத—, தம்முடைய திருவுள்ளத்திலே, பள்ளிகொள்கின்ற-கண்வளர்ந்தருளுகிற, பிரானை - உபகாரகனை, விட்டுசித்தன் - பெரியாழ்வார், பட்டினம் - தமதுசரீரத்தை, காவல்பொருட்டு - காக்கும்படிக்கீடாக, பரவுகின்றான்-போற்றுகிறார்.

வ்யா.—(அரவத்தமளியினோடும்) திருவநந்தாழ்வானுகிற படுக்கையோடும், திருப்பாற்கடலோடும், நிரதிசயபோக்யதையையுடையளாய் நிருபாதிகஸ்த்ரீத்வத்தையு முடையளான பிராட்டியோடும். (தானும்) உபயவிபூதிவிசிஷ்டனான தானும். (அகம்படி

(க) ஒக்குகை - உயரவெடுக்கை.

வந்துபுகுந்து) * அடியார்கள்குழாங்களோடேவந்து புகுந்து. (பரவையித்யாதி) தான், இவர் திருவுள்ளத்திலே கண்வளர்ந்தருளுகிறபடிக்கு (௧) ஸ்மாரகமாக, அதைகேட்கும்படி கண்வளர்ந்தருளுகிற உபகாரத்துக்குத்தோற்று, (பரவுகின்றான்விட்டுசித்தன்) தம் ஸத்தைக்காகப் போற்றுகையன்றிக்கே, காவலுக்குறுப்பாகப்போற்றுகிறார். (பட்டினங்காவல்பொருட்டே)(௨) ரக்ஷையின்பொருட்டு.

ஆக, இத்திருமொழியால் - திருப்பல்லாண்டிலர்த்தத்தை நிகமிக்கிறார். "சேவடிசெவ்வி திருக்காப்பு" என்றவர்த்தம், *உறகலுறகலிலேநிகமித்தார்; 'அடியோமோடும்நின்னோடும்" என்கிற பாட்டினர்த்தத்தை *அரவத்தமளியிலே நிகமித்தார். (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அடிவரவு.—நெய்சித்திரவயிற்றில் மங்கியமாணி உற்ற கொங்கை ஏதமுறகல் அரவத்துக்க.

---

ஆ திருமொழி ௪௧-இ, பாட்டு-௪௪௦.

---

அ.—கீழிற்றிருமொழியிலே - *திருமாலிருஞ்சோலைமலையிலும் *சூழ்விசும்பணிமுகிலிலும் சொன்னவர்த்தத்தைச் சொல்லிற்று; இத்திருமொழியிலே - * முனியேநான்முகனில் ஒன்பதுபாட்டிற் சொல்லுகிறவர்த்தத்தைச் சொல்லுகிறது; * சென்னியோங்கில்- பத்தாம்பாட்டி லர்த்தத்தைச்சொல்லும். "பரவுகின்றான் விட்டுசித்தன்" என்று-ஸத்தைக்கும் போகத்துக்கு மன்றிக்கே ரக்ஷக்கு உறுப்பாகச்சொல்லுகை பலம் என்றீர்; "அரவத்தமளியினோடும்" என்று-நாம் உம்முடைய உடம்பிலேபுகுந்து அநுபவித்தோமாகில் இனிப்போக வமையாதோவென்ன; இனிப்போகவொட்டேனமென்கிறார். கீழில்திருமொழியிலே - "நெய்க்குடத்தைப்பற்றி" என்று துடங்கி, "நோய்காள்"என்று - அநிஷ்டநிவர்த்தியைச் சொல்லி, இதில் - இஷ்டப்ராப்தியைத் தரவேணுமென்று திருவாணையிட்டுத் தடுக்கிறாரென்றுமாம்.

மூ.—துக்கச்சுழலையைச் சூழ்ந்துகிடந்த வலையை யறப்பறித்துப், புக்கினிற்புக்குன்னைக் கண்டுகொண்டே னினிப்போக விடுவதுண்டே, மக்களறுவரைக் கல்லிடைமோத விழந்தவடன் வயிற்றில், சிக்கனவந்து பிறந்துநின்றாய் திருமாலிருஞ்சோலையெந்தாய்.

---

(௧) ஸ்மாரகமாக - நினைப்பூட்டுமதாக. (௨) ரக்ஷை - காவல்.

ப-ரை.—மக்களறுவரை - இதுக்குமுன்பிறந்த ஆறுபிள்ளைகளையும், கல்லிடை - கல்லிலே, மோத - மோதிமுடிக்க, இழந்தவள்தன்வயிற்றில் - இழந்தவளான தேவகிப்பிராட்டிவயிற்றிலே, சிக்கன - சடக்கென, வந்து—, பிறந்து நின்றாய் - திருவவதரித்து நின்றவனாய், திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கிற, எந்தாய் - என் ஸ்வாமியானவனே, சுழலை-சுழலாறுபோலே வளையவளையவருகிற, துக்கத்தை—, சூழ்ந்துகிடந்த - சுற்றிக்கொண்டிருக்கிற, வலையை - சரீரத்தை, அறப்பறித்து - ஸவாஸநமாகப்போம்படி பண்ணி, புக்கினில் - புகுமிடங்களிலெல்லாம், புக்கு—, உன்னைக்கண்டுகொண்டேன்—; இனி—, போகவிடுவதுண்டே - போகவொட்டுவேனோ; போகவொட்டேனென்கிறார்.

வ்யா.—முதற்பாட்டு. (துக்கச்சுழலையை) வ்யாதிகளுக்கெல்லாம் கொள்கலமான சரீரம். வ்யாதிகள்கிடப்பது சரீரத்தைப்பற்றியிறே. "நோயெலாம் பெய்ததோராக்கை" என்னக்கடவதிறே. சுழலாறுபோலே வளையவளைய வருகிற துக்கத்தை. "ஆத்யாத்மிகாதி" "ஆத்யாத்மிகாதிதாபத்ரயவலயிதம்" "மொய்த்தவல்வினை" என்கிறபடியே-இவனைச்சுற்றிக்கிடக்கிற துக்கங்களையென்றுமாம். "தாயே-நோயே, தந்தையே-நோயே, தாரமே-நோயே, கிளையே-நோயே, மக்களே-நோயே" என்னக்கடவதிறே. (சூழ்ந்துகிடந்தவலையை) துக்கத்தைத் தப்பவொண்ணாதபடி வீசிக்கிடக்கிறசரீரத்தை. "வலை" என்கிறது-தப்பவொண்ணாமையைப்பற்ற. வலையாவது - கயிறுமணியுமா யிருப்பதொன்று; இதுவும் நரம்புமெலும்புமாயிருப்பதொன்று. அதவா, ஆத்மாவைச்சுற்றிக்கொண்டுகிடக்கிற அவித்யாகர்ம வாஸநாருசிகளென்னவுமாம். இவற்றை "வலை" என்கிறது, ஒன்றுக்கொன்று காரணமுமாய் கார்யமுமா யிருக்கையாலே. (அறப்பறித்து) ருசிவாஸநைகளோடேகூடப் போம்படிபண்ணி. (புக்கினில் புக்குன்னைக் கண்டுகொண்டேன்) புக்கவிடமெல்லாம் புக்கு உன்னைக்கண்டுகொண்டேன். அந்தர்யாமித்வம் பரத்வம் வ்யூஹம் விபவம் அர்ச்சாவதாரமளவாக. "அறப்பறித்து" என்று - அநிஷ்டநிவர்த்தியும், "கண்டுகொண்டேன்" என்று - இஷ்டப்ராப்தியும் பண்ணித்தந்தோமாகில், இனிப்போய் வரவமையாதோவென்ன (இனிப்போகவிடுவதுண்டே) இனிப்போகவிடுவதுண்டோ. "அறப்பறித்து" என்றும், "கண்டுகொண்டேன்" என்றும் தாம்செய்தாராகைக்கடி-பிதா தேடினவர்த்தத்தை "தன்னது" என்னும் புத்ரனைப்போலே. இனிப்போய் வரவமையாதோவென்ன (இனிப்போக விடுவதுண்டே) விரோதியிலேசிறிதுகிடத்தல், ப்ராப்தியிலேசிறிதுகிடத்தல், இவையிரண்டுக்கும் மூலமான ஸுக்ருதம் என்கையிலே கிடத்தல்செய்யிலன்றோ நான் போகவிடுவது. உன்னாலேபெற்றநான் என்னால் இழப்பனோ: பேறு உன்னாலே, இழவு இவனாலே. அவன் பெறு

கைக்கு (௧) க்ர்ஷிபண்ணும். இவனுடைய அநுமதி பேற்றுக்கு ஹேதுவல்லாதாற்போலே அவனுடைய அநுமதியும் இழவுக்கு ஹேதுவன்று. (போகவிடுவதுண்டே) "இனி நான்போகலொட்டேன்" என்று - போக்கு முண்டாய், "ஒட்டேன்" என்கையன்றிக்கே, போகவென்று ஒருபொருளுண்டோவென்கிறார். (உண்டே?) உனக்குத் தெரியாதோ போகைக்கு ஹேதுஉண்டாகில் என்று அவனைக் கேட்கிறாராகவுமாம். போகாதபடி பெற்றுத் தம்மிழவு தீர்ந்தமையையருளிச்செய்கிறார் (மக்களறுவரைக் கல்லிடைமோத இழந்தவள் தன்வயிற்றிற் சிக்கனவந்து பிறந்து) இழந்தவளிழவு தீர்த்தாற்போலே என்னுடைய இழவு தீர்க்கவேணுமென்கிறார். தேவகிப்பிராட்டிக்கு அஷ்டமகர்ப்பமிறே க்ர்ஷ்ணன். காலநேமியோடே ஸம்பந்தமுடையராய், ஹிரண்யசாபத்தாலே பாதாளத்திலே வர்த்திப்பார் ஆறு ராக்ஷஸரை யோகநித்ரையாலே ப்ரவேசிப்பிக்க, தேவகியார்வயிற்றிலே பிறந்த ஆறு ராக்ஷஸரை. (கல்லிடைமோத) கம்ஸனாலே நிரஸிக்கப்பட, ஏழாம் கர்ப்பமான நம்பிமூத்தபிரானை ரோஹிணியார்வயிற்றிலே அவதரிப்பித்து, தான் எட்டாம்கர்ப்பமாயிறே வந்தவதரித்தது. (இழந்தவள்தன்வயிற்றில்) அவள் முன்பு இழந்தஇழவுதீரவந்து சிக்கனவந்து பிறந்து நின்றாய். (திருமாலிருஞ்சோலையெந்தாய்) அங்கு - ஆச்ரிதபாரதந்த்ர்யம்; இங்கு - ஸ்வாமித்வம். தேவகிப் பிராட்டியார்வயிற்றில் க்ர்ஷ்ணனெழுந்தருளியிருந்த இருப்புப்போலேயிறே * பீடுறைகோயிலில் அழகரெழுந்தருளியிருந்த விருப்பும் இவர்க்கு. (௧)

அ.—இரண்டாம்பாட்டு. (வளைத்துவைத்தேன்) கீழ்ப்பாட்டிலே - உன் ஸ்வரூபம் பெறவேண்டி யிருந்தாயாகில் என்கார்யம் செய்யவேணுமென்றார்; இப்பாட்டில்-(௧) உன் ப்ரணயித்வகுணம் பெறவேண்டி யிருந்தாயாகில் என்கார்யஞ் செய்யவேணுமென்கிறார்.

மூ.—வளைத்துவைத்தேனினிப் போகலொட்டே னுன்றனிந்திர ஞாலங்களால், லொளித்திடில்நின்திருவாணைகண்டாய் நீயொருவர்க்கும் மெய்யனல்லை, அளித்தெங்குநாடு நகரமுந் தம்முடைத் தீவினைத்தீர்க்கலுற்றுத், தெளித்துவலஞ்செய்யுந் தீர்த்தமுடைத் திருமாலிருஞ் சோலையெந்தாய்.

ப - ரை.—நாடும்-அறிவில்லாதவர்களையும், நகரமும்-அறிவுடையோரையும், எங்கும் - உற்றாரையும் மற்றாரையும், அளித்து - ரக்ஷித்து, தம்முடை - அவர்களுடைய, தீவினை - கொடியபாபங்களை, தீர்க்கல்-போக்குகையிலே, உற்று-ஒருப்பட்டிருப்பதாய், தெளித்து-தெளிவையுடைத்தாய், வலஞ்செய்யும் - பலத்தைக்

(௧) க்ர்ஷி - முயற்சி.

கொடுக்குமதான, தீர்த்தமுடை-தீர்த்தத்தையுடைய, திருமாலிருஞ்சோலையெந்தாய்—; வளைத்துவைத்தேன் - உன்னைச்சுற்றிக்கொண்டேன்; இனி - உன் சுவடறிந்தபின்பு, போகலொட்டேன் - போகவிடுவேனோ; உன்றன் - உன்னுடைய, இந்திரஞாலங்களால் - இந்த்ரஜாலவித்யையாலே, ஒளித்திடில் - உன்ஸ்வரூபத்தை மறைத்தாயாகில்; நின் - உனக்கு சேஷபூதையான, திருவாணைகண்டாய் - பெரியபிராட்டியாராணைகிடாய் என்ன; நீர்வளைப்பதுமுதலிய செய்கைக்குஹேது வென்னென்ன; நீ—, ஒருவர்க்கும்—, மெய்யனல்லை-உண்மை பேசும்வனல்லையே அதுக்காகவென்கிறார்.

வ்யா.—(வளைத்துவைத்தேன்) உதாரர்வாசலிலே தரித்ரருமாய் (க) அந்தருமாயிருப்பார், "பெற்றன்றிப்போகோம்" என்று கிடக்குமாபோலே, வளைத்துக்கிடக்கிறார். ஸ்ரீபரதாழ்வான் பர்ணசாலைவாசலிலே வளைத்துக்கிடந்தானிறே. (இனிப் போகலொட்டேன்) உன்சுவடறிந்தபின்பு போகவிடுவேனோ. (உன்றனிந்திரஞாலங்களா லொளித்திடில்) அதாவது - பொய்யை மெய்யென்னும்படி ப்ரமிப்பிக்கை; அபோக்யங்களைபோக்யமாக்குகை. "ஸஂஸாரஂ கூ ஶ்யஂ" "ஐஐாயாஜ-ஈவதர்யா". (ஒளித்திடில்)* அற்பசாரங்களவை சுவைத்தல் மறக்கப்பண்ணுகை. "அகற்றநீவைத்த மாயவல்லைம் புலன்களாமவை" என்னக்கடவதிறே. அவைதான்*இன்னமுதெனவிறே தோற்றுவது. அகற்றுகையாவது - பகவத்ஸம்பந்தத்தையுங் குலைத்து, கர்ப்பவாஸத்தையும் விளைத்திறேயிருப்பது. (ஒளித்திடில்) நீ மறையநிற்கில். (நின்றிருவாணைகண்டாய்) உனக்கு அநந்யார்ஹசேஷபூதையுமாய் நிரதிசயபோக்யபூதையுமாயிருக்கிற பெரியபிராட்டியாராணைகிடாய். "மாயஞ்செய்யேல்" இத்யாதி. நீர், வளைப்பது, திருவாணையிடுவது, "ஒளித்திடில்" என்பதாகிறதென் என்ன; நீ பொய்யனுகையாலே என்ன; நாம் ஆரளவிலே பொய் செய்தோமென்ன (நீ யொருவர்க்கும் மெய்யனல்லை) "கருமலர்க் கூந்தல்" இத்யாதி. (அளித்தித்யாதி) (உ) அஜ்ஞரோடு விசேஷஜ்ஞரோடு அநுகூலரோடு (ங) ப்ரதிகூலரோடு வாசியற ரக்ஷித்து. (தம்முடைத்தீவினைத் தீர்க்கலுற்று) தந்தாமாலே பண்ணப்பட்ட துஷ்கர்மங்களைப் போக்குகையிலே ஒருப்பட்டிருக்கிறதீர்த்தங்களை; (தெளித்துவலஞ்செய்யும்)அவர்களுக்குத் தீர்க்கலுற்ற தீர்த்தங்களையுடைத்து உன்றிருமலை. அதிலேவர்த்திக்கிறநீ என்கார்யஞ்செய்ய வேணுமென்கிறார். (உ)

அ.—மூன்றாம்பாட்டு. ஸ்வரூபம் பெறவேண்டி யிருந்தாயாகில் ரக்ஷியென்றார் – முதற்பாட்டில்; இரண்டாம்பாட்டில் – ப்ரண

---

(க) அந்தர் - குருடர். (உ) அஜ்ஞர் - அறிவிலார். (ங) ப்ரதிகூலர் - விரோதிகள்.

யித்வம்; இப்பாட்டில் - உனக்கு தேஜோஹானிவாராமல் ரக்ஷி யென்கிறார்.

மூ.—உனக்குப்பணிசெய்திருக்குந் தவமுடையேனினிப் போ யொருவன்,றனக்குப்பணிந்து கடைத்தலைநிற்கை நின்சாயை யழிவுகண்டாய், புனத்திணைக்கிள்ளிப் புதுவவிக்காட்டியுன் பொன்னடிவாழ்கவென், றினக்குறவர்புதியதுண்ணுமெழின் மாலிருஞ் சோலையெந்தாய்.

ப-ரை.—இனக்குறவர் - குறவரும் குறத்திகளும், உன் பொன்னடிவாழ்க—, என்று - என்று பல்லாண்டுபாடி, புனம் - புனத்திலுண்டான, திணை-புதிய திணைகளை, கிள்ளி - முறித்துக்கொண்டுவந்து, புது - புதிய, அவி - ஹவிஸ்ஸை, காட்டி - அமுதுசெய்யப்பண்ணி, புதியதுண்ணும்-புதியதுண்கின்ற, எழில்-அழகையுடைததான, மாலிருஞ்சோலையெந்தாய்—; உனக்கு-சேஷியானவுனக்கு, பணிசெய்து - அடிமைத்தொழில்செய்து, அது செய்யாதபோது, இருக்கும் - ஸத்தைகுலையும்படியிருக்கும், தவமுடையேன் - உன்திருவருள்பெற்றவடியேன், இனி—, போய் - புறமபேபோய், ஒருவன்றனக்கு - ப்ரஹ்மாமுதலியோரிலொருவனை, பணிந்து - வணங்கி, கடைத்தலை - அவனுடைய கடைத்தலையிலே, நிற்கை—, நின் - உன்னுடைய, சாயை - தேஜஸ்ஸுக்கு, அழிவுகண்டாய் - அழிவன்றோ.

வ்யா.—(உனக்குப் பணிசெய்திருக்குந் தவமுடையேன்) முதலில் சேஷத்வஜ்ஞானம்பிறந்து, பின்பு சேஷவ்ருத்தியிலே ஆசைபிறந்து, கைங்கர்யமேயாத்மாயாய், அது செய்யாதபோது ஸத்தை குலையும்படியா யிருக்கும்; இவைநாலும் ஸம்ஸாரிகளுக்கில்லை. நமக்கு உபாயமநுஷ்டித்து உபேயத்தி லாசையுமேயுள்ளது. ஆழ்வார்களுக்கு இவைநாலுமுண்டு. (தவமுடையேன்) உன் ப்ரஸாதமுடையேன். (இனிப்போய்) இந்நாலுதசையும் பிறந்தபின்பு இவற்றைப் பொகட்டுப் புறம்பேபோய். போகையாவது - இந்திரஜாலங்கள் காட்டிப் புறம்பே தள்ளினுயாகிலும். (ஒருவன்றனக்குப்பணிந்து) ப்ரஹ்மாமுதலாக பிபீலிகாந்தமாக அதிக்ஷுத்ரரிறே; அவர்களிலே ஒருத்தனுக்கு. (கடைத்தலைநிற்கை) “உன்கடைத்தலையிருந்துவாழும்” என்கிறசெயலை அங்கேசெய்கை உனக்கு (க) அவத்யமிறே. (உன்சாயையழிவுகண்டாய்) உனக்கு தேஜோஹானியிறே. எனக்கு இது புதுமையன்று (புனத்திணையித்யாதி) புனத்தில் புதுத்திணையைமுறித்து ஹவிஸ்ஸுக்காட்டிப் புதியது அமுதுசெய்யப் பண்ணி. இப்படி அமுதுசெய்யப்பண்ணினால் வேண்டிக்கொள்ளும்படியேதென்னில் (உன்பொன்னடிவாழ்கவென்று) இந்ததேசந்தான், “அமுதுசெய்திடப் பெறில்பின்னு மாளுஞ்செய்வன்” என்னும் தேசமிறே. இப்படி சொல்லுகிறாரொன்னில் (இனக்குறவர்)

(க) அவத்யம் - தீங்கு.

புருஷர்களோடு ஸ்த்ரீகளோடு வ்ர்த்தர்களோடு வாசியற எல்லாரும * பல்லாண்டொலி செல்லாநிற்கும். * குறமாதர்கள் பண்குறிஞ்சிப் பாவொலிபாடும் தேசமிறே. (புதியதுண்ணும்) பிதாவுக்குப் பொருந்தும்நாள் பார்த்திறே புத்ரன்புதியதுண்பது. (எழில்மாலிருஞ்சோலை) எழில் - அழகு. திவ்யதேசங்களுக்கு அழகாகிறது - அநந்யப்ரயோஜநராய் அத்தலைக்கு மங்களாசாஸநம் பண்ணுமவர்கள் வர்த்திக்கை. (எந்தாய்) புத்ரஸம்பந்தமிருக்கிறபடி. "ஒண்டொடியாள்" இத்யாதி. "நின்னலா லறிகின்றிலேன்" "உனக்குப் பணிசெய்திருக்கும்." (௩)

அ.—நாலாம்பாட்டு. (காதம் பலவும்) * இனிப்போ யொருவன்றனக்குப் பணிந்து நிற்கைக்கும் போகைக்கு மிடமுண்டோ உன்றிருவடிகளை யொழியவென்கிறார்.

மூ.—காதம்பலவுந் திரிந்துழன்றேற்கங்கோர் நிழலில்லைநீருமில்லை யுன்,பாதநிழலல்லான்மற் றோருயிர்ப்பிடநானெங்குங காண்கின்றிலேன், தூதுசென்றாய் குருபாண்டவர்க்காயங்கோர் பொய்சுற்றம் பேசிச்சென்று, பேதஞ்செய்தெங்கும் பிணம் படுத்தாய் திருமாலிருஞ் சோலையெந்தாய்.

ப - ரை.—குரு - குருவம்சத்திற்பிறந்த, பாண்டவர்க்காய் - பாண்டுமஹாராஜாவின் புத்ரர்களான தர்மபுத்ராதிகளுக்காக, தூதுசென்றாய்-துர்யோதநாதிகளிடத்தில் தூதுசென்றவனாய், அங்கு - அவர்களிடத்தில், உங்களோடு பாண்டவர்களோடு வாசியில்லையென்று, ஓர் - ஒரு, பொய்ச்சுற்றம்பேசிச்சென்று - பொய்யுறவுசொல்லி, பேதஞ்செய்து - ஆச்ரிதரொன்றும் அநாச்ரிதரொன்றும் பேதப்படுத்தி, அவர்கள்ஸேனையையெல்லாம், எங்கும்-கண்டவிடமெங்கும், பிணம் படுத்தாய் - பிணமாய்ப்பட்டுவிழும்படி செய்தவனாய், திருமாலிருஞ்சோலை - தெற்குத்திருமலையிலெழுந்தருளியிருக்கிற, எந்தாய் - என்னுடையஸ்வாமியானவனே; காதம்பலவும் - நெஞ்சுக்கும் கண்ணுக்கும் எட்டினவிடமெல்லாம், உழன்று - வருத்தமுற்று, திரிந்தேற்கு - திரிந்தவெனக்கு, அங்கு - அவ்விடத்தில், ஒதுங்குகைக்கு, ஓர் - ஒரு, நிழல்—, இல்லை - இல்லாமற்போனதுமன்றி, நீரும்- தாபந்தீர்க்கும் தண்ணீரும், இல்லை - காணப்படவில்லை; ஆராய்ந்துபார்த்தவிடத்தில், உன்பாதநிழலல்லால் - உன்திருவடிச்சாயையொழிய, உயிர்ப்பு - மூச்சுவிடுகைக்கு, மற்று ஓரிடம்—, நான்—, எங்கும் - எவ்விடத்திலும், காண்கின்றிலேன் - கண்டிலேனென்கிறார்.

வ்யா.—(காதம்பலவுந் திரிந்துழன்றேற்கு) நெஞ்சுக்கும் கண்ணுக்கு மெட்டின விடமெல்லாம் அலமர்ந்து திரிந்தவிடத்து. ஸம்ஸாரத்துக்குள், அலமாவாத இடமில்லை - படாத க்லேசமில்லை, அவ்விடத்தில் ஒருநிழலாதல், துளிநீராதல் கண்டிலேன். உண்டாகில் உள்ளது (க) மரீசிகாஜலமிறே. நிழலும், விஷவ்ர்க்ஷநிழலிறே. (உன்பாதமித்யாதி) "அவனடிநிழல்தடம்" என்னக்கட

(க) மரீசிகாஜலம் - கானலாகிறஜலம்.

வதிறே. (க) * வாஸுதேவ தருச்சாயையையொழிய வேறுநிழலுண்டோ; மூச்சுவிடுகைக்கு ஓரிடங்காண்கிறிலேன் உன்திருவடிகளையொழிய. (தூதுசென்றாய் குருபாண்டவர்க்காய்) திருவடிகளைப் பற்றினார்க்குக் கார்யஞ்செய்தபடி சொல்லுகிறது. குருவம்சத்திற் பிறந்த பாண்டவர்களுக்காகக் கார்யம் செய்ததில்லையோ. (பொய்ச்சுற்றம்) உங்களோடு பாண்டவர்களோடு வாசியில்லையென்று. (பொய்ச்சுற்றம்) பொய்யுறவு சொல்லுகை. (பேதஞ்செய்து) ஆச்ரிதனென்றும் அநாச்ரிதனென்றும் இரண்டிட்டு. "எங்களுக்குப்பிணங்காதொழியப்பெறில் ஒரூரமையும்" என்று, அவர்களை, "பத்தூர் பெறாது" என்னும்படி பண்ணி அவர்களுறவைக்குலைத்து * எல்லாச்சேனையு மிருநிலத்தவித்த வெந்தைவர்த்திக்கிறதேசம் திருமலை. (௪)

அ.—அஞ்சாம்பாட்டு. (காலுமெழா) திருவடிகளை யொழிய புகலில்லையென்றார் - கீழ்ப்பாட்டில்; இப்பாட்டில் - தாம்பெற்ற பேற்றை யருளிச்செய்கிறார். பெற்ற அம்சத்தில் க்ருதஜ்ஞதை வேணுமிறே மேலும் கார்யம்செய்கைக்கு.

மூ.—காலுமெழாகண்ணநீருநில்லா வுடல் சோர்ந்து நடுங்கிக்கு
ரல், மேலுமெழா மயிர் கூச்சுமறா வென தோள்களும் வீழ்
வொழியா, மாலுகளாநிற்கு மென்மநமேயுன்னை வாழத்
தலைப் பெய்திட்டேன், சேலுகளாநிற்கு நீள்சுனைசூழ் திரு
மாலிருஞ் சோலையெந்தாய்.

ப-ரை.—சேல் - மத்ஸ்யங்கள், உகளாநிற்கும் - துள்ளிவிளையாடத்தக்க, நீள் - பரப்பையுடைய, சுனை - சுனைகளாலே, சூழ் - சூழப்பட்ட, திருமாலிருஞ்சோலையெந்தாய்—, காலும்-கால்களும், எழா - அடிபெயருகிறனவில்லை; கண்ணநீரும்—, நில்லா - இடைவிடாமல் பெருகாநின்றது; உடல் - சரீரமானது, சோர்ந்து - பரவசமாய், நடுங்கி - தடுமாறி, குரலும் - மிடற்றோசையும், மேலெழா - மேலெழுகிறதில்லை; மயிர்கூச்சும் - மயிர்கூச்செறிதலும், அறா - ஒழிகிறதில்லை; என - எனனுடைய, தோள்களும்—, வீழ்வொழியா—; என் மநம் - என்னுடையமநஸ்ஸானது, உன்னுபகாரத்தைநினைத்து, மால் உகளாநிற்கும் - பிச்சேறாநின்றது; இப்படியிருக்க, உன்னை—, வாழ - அநுபவித்துவாழுகைக்கு, தலைப்பெய்திட்டேன் - முடிசூடாநின்றேன்.

வ்யா.—(காலுமெழா) "காலாழும்" என்று - பரவசமானபடி. (கண்ணநீரும்நில்லா) "கண்சுழலும்" என்றபடி. (உடல்சோர்ந்து) சரீரமானது பரவசமாய். (நடுங்கி) தடுமாறி. (குரல்மேலுமெழா) "நெஞ்சழியும்" என்கிறபடியே கூப்பிடுகைக்கும் க்ஷமமல்ல. (மயிர்கூச்சுமறா) மயிர்குழிகளெறிந்து (உ) புளகித காத்ரமாயிருக்

(க) வாஸுதேவதரு - வாஸுதேவனென்கிறவ்ருக்ஷம். (உ) புளகிதகாத்ரம்- மயிர்கூச்செறிந்தவுடம்பு.

கும். (எனதோள்களும் வீழ்வொழியா) நிர்விகாரமாய். (மால்உகளாநிற்குமென்மநமே) என்மநஸ்ஸானது உன்னுபகாரத்தை நினைத்து மேன்மேலும் பித்தேறுகின்றது; உன்னை யநுபவித்து வாழுகையிலே (க) மூர்த்தாபிஷிக்தனானேன். இவர்க்கு வாழ்ச்சியாவது இவ்வவஸ்தைகள் பிறக்கை. * உன்தாளிணைக்கீழ் வாழ்ச்சியென்கிறதும் இத்தையிறே. (சேலுகளாநிற்கும்) சேல் (உ) உகளும்படி பரப்பை யுடைத்தாயிருக்கும் தடாகங்கள் சூழப்பட்டிருக்கிற திருமலையிலேவர்த்திக்கிற. இத்தால் - ஜலத்தைப்பிரிந்த மத்ஸ்யம்போலே உன்னைப்பிரிந்து ஆற்றமாட்டேனென்கிறார். (ரு)

அ.—ஆறும்பாட்டு. (எருத்துக்கொடியுடையானும்) கீழ்ப்பாட்டில் - * உன்பாதநிழலல்லால் மற்றோரிடம் மூச்சுவிட இல்லையென்றார்; ப்ரஹ்மருத்ராதிகளோ வென்ன; அவர்களுடைய அசக்தியைச் சொல்லுகிறார். அதவா, "உன்னை வாழத் தலைப்பெய்திட்டேன் - எனமநம் - மால் உகளாநிற்கும்" என்றார்; அது ஸம்ஸாரத்திலிருப்பிலே பிறந்த தொன்றாகையாலே அத்தையும் அதிசங்கைபண்ணி, அதுக்கு விரோதியான ஸம்ஸாரத்தை யறுத்து * உன்கடைத்தலையிருந்து வாழப் பண்ணவேணு மென்கிறாராகவுமாம்.

மூ.—எருத்துக்கொடி யுடையானும் பிரமனுமிந்திரனும் மற்று, மொருத்தருமிப் பிறவியென்னு நோய்க்குமருந்தறி வாருமில்லை, மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணா மறுபிறவிதவிரத், திருத்தியுன்கோயிற் கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலையெந்தாய்.

ப - ரை.—திருமாலிருஞ்சோலையெந்தாய்—, எருத்துக்கொடியுடையானும்-ரிஷபத்வஜனான ருத்ரனும், பிரமனும்-அவனுக்கு பிதாவானப்ரஹ்மாவும், இந்திரனும் - இந்த்ரனும், மற்றும் - தேவர்களும், ஒருத்தரும் - ஒருசேதநரும், இ - இந்த, பிறவியென்னும் - ஜந்மமாகிற, நோய்க்கு - வ்யாதிக்கு, மருந்து—, அறிவார் - அறிபவர்கள், இல்லை—; மருத்துவனாய்நின்ற-ஆசார்யனாய் நின்றவனாய், மா-ச்லாக்யமான, மணிவண்ணா-நீலரத்நம்போன்ற திருநிறத்தையுடையவனே, மறுபிறவி - எனக்கு இனிவரும்ஜந்மத்தை, தவிரத்திருத்தி-நீக்கிவிட்டு, உன்—, கோயில் - கோயிலினுடைய, கடை - கடைத்தலையிலே, புக - இருந்துவாழும்படி, பெய் - ஆக்கியருளவேணும்.

வ்யா. —(எருத்துக்கொடி யுடையானும்) அறிவுகேட்டுக்கு எல்லைநிலமான ரிஷபத்தை த்வஜமாகவுடையருத்ரனும். [காரணாகருளக்கொடியானே] ஸம்ஸார காரணமான அவித்யையைப்போக்

(க) மூர்த்தாபிஷிக்தன்-பட்டாபிஷேகத்தைப் பெற்றவன். (உ) உகளல்-பாய்தல்.

போக்குகையிலே கொடிகட்டினு னென்கையாலே, இவன்கொடி ஜ்ஞாநஹீநமான கொடியாகையாலே-தாமஸதேவதை யென்கிறது. (பிரமனும்) அவனுக்கும் பிதாவாய், "அமரர்க்குமறிவியந்து" என்கிறபடியே - ஜ்ஞாநமுடைய ப்ரஹ்மாவும். (இந்திரனும்) த்ரைலோக்யத்துக்கு ராஜாவான இந்த்ரனும். (மற்றும்) (க) முமுக்ஷுக்களாக பாவித்திருக்கிற தேவஜாதியும். (ஒருத்தரும்) ஒருசேதநரும், இஜ்ஜந்மமாகிற வ்யாதிக்கு ஔஷதமறிவாரில்லை. ஸம்ஸாரத்துக்கு மருந்தறியுமித்தனை. அத்தை வெளியிடுகைக்காகவாய்த்து - கைலாஸயாத்ரையிலே கண்டாகர்ணனுக்கு மோக்ஷத்தைக்கொடுத்து, ருத்ரன்பக்கலிலே பிள்ளைவேண்டிச்சென்றது. ஆகையாலே, ஸம்ஸாரவர்த்தகர். பின்னை * உருவுருவே கொடுத்தவனைப்போலே கொடுக்கப் பெற்றதில்லையே; அங்கஹீநமாகவிறே கொடுத்தது. ஸம்ஸாரத்துக்குமருந்தாவது - ஸர்வேச்வரனை உள்ளபடி அறிகையிறே. இவர்கள் அவனை அறியார்களென்றபடி. * கடிக்கமலத்துள்ளிருந்தும் கண்ணனடிக் கமலந்தன்னைக் கண்டிலனென்றபடி. * கார்செறிந்த * நீருடிதான்வணங்கும் பேரளவிறே சொல்லுவது. (மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணா) மருந்தாயிருக்கையன்றிக்கே மருந்து அறிவதுஞ்செய்யும். இதுதான் * மலைமேல்மருந்துமாய் ஏக மூலிகையுமாய் (உ) ஸக்ருத்ஸேவ்யமுமாய். பலியாதமருந்து பலகால்ஸேவித்தாலும் பலியாதே. இவ்வௌஷதந்தான் வேறொருஔஷதத்தைப் பொறுதவளவன்றிக்கே, மீண்டு தன்னையும் பொறுது. "மருத்துவன்" என்று - ஆசார்யன். "ஆய்" என்று - ஏறிட்டுக்கொண்டானென்கிறது. ஆகையாலிறே * பீதகவாடைப் பிரானாய்வந்து இவரை * இராப்பகலோதுவித்தது. (மாமணிவண்ணா) மருந்திருக்கிறபடி. "மணிமந்த்ரௌஷதம்" "மணிமந்த்ரௌஷதாதிவத்" என்னக்கடவதிறே. மணியும் மந்த்ரமும் ஔஷதமும் நாட்டுக்கு வெவ்வேறிறே. இங்கு, எல்லாம் ஒருதலைத்தவிஷயம். "அந்தணர்மாட் டந்திவைத்தமந்திரம்" என்று - நெஞ்சுக்கு இனியமந்த்ரமும் * மறவாதமந்திரமும் * வாழும்மந்திரமும் இதுவிறே. * அச்சுதனமலனிறே * நச்சுமாமருந்தம். நழுவவிடாததுமாய் ஹேயத்தைக் கழிக்குமதுமாய் ஆசைப்படும் மருந்திறே. "வைப்பாம்மருந்தாம்" என்று-இரண்டும் ஒன்றானமருந்திறே. "மருந்தும்பொருளு மமுதமுந்தானே" என்று-மூன்றும் ஒன்றான மருந்திறே. [பொருள்] உபாயம். "ஸமஸ்தவஸ்துவிஹீநோऽபி அம்ருதம் ப்ராப்ய" "ஸமஸ்தவஸ்துவிஹீநோऽபி அம்ருதம்ப்ராப்ய". [மருந்து] விரோதிநிவர்த்தகம். "பந்தமறுப்பதோர்

(க) முமுக்ஷுக்கள் - மோக்ஷத்திலே இச்சைபிறந்தவர்கள். (உ) ஸக்ருத்ஸேவ்யம் - ஒருகால் ஸேவிக்கத்தக்கது.

மருந்து" என்னக்கடவதிறே. என்றும் ஒன்றுனமருந்திறே. [தீர்மருந்தில்லாவைந்துநோய்க்கு ஆர்மருந்தாகுவார்] "மருந்து" என்று அஞ்சவேண்டாதபடி தீர்மருந்தான மருந்திறே. [தீர்க்கும்மருந்து] ஊருகிறபாம்புக்குத் தடையிடுமாபோலே, வருகிற நரகத்தைத்தீர்க்கும் மருந்து. "அற்றவர்கட் கருமருந்து" என்னக்கடவதிறே. ஆனே தன்பலமறியாதாப்போலே; "அருமருந்தாவதறியாய்" என்னக்கடவதிறே. ஆர்க்குமறிய வொண்ணாத ப்ரேமவ்யாதியு மகப்படத் தீருமென்னும்படி கைகண்டமருந்திறே. "போகமகிழ்ச்சிக்கு - மருந்து" என்று - (க) ஒருவிபூதியாகக் கொண்டாடும் மருந்திறே. மறுபிறவி தீர்க்கும்மருந்து. மருத்துவனேச்சொல்லி, மருந்துசெய்யுங் கார்யஞ் சொல்லுகிறதுமேல். வருகிற ஜந்மங்களைப் போக்கித் தவிர்க்கையாவது - வீடறுக்கை. "மறுமைக்குமருந்தினே" என்று சொல்லக்கடவதிறே. "மநம்வைக்கத்திருத்தி" என்னுமாபோலே திருத்துகை உபாயக்ர்த்யம். (உன்கோயில் கடைப்புகப்பெய்) "கொடியணிநெடுமதிள் கோபுரங்குறுகினர்" என்னக்கடவதிறே. * உன் கடைத்தலேயிருந்து வாழுமதுதானேயிறே ப்ரயோஜநம். "உன்கோயிலில்வாழும் வைட்டணவன்" என்னக்கடவதிறே. (திருமாலிருஞ்சோலேயெந்தாய்) "மங்கவொட்டு" இத்யாதி. (சுா)

அ.—ஏழாம்பாட்டு. (அக்கரை) ஜ்ஞாநத்தைப் பிறப்பித்தாற்போலே ப்ராப்தியையும் பண்ணித் தரவேணுமென்கிறுர்.

மூ.—அக்கரையென்னு மநத்தக்கடலு ளழுந்தி யுன் பேரருளால்,
இக்கரையேறி யிளேத்திருந்தேனே யஞ்சேலென்று கைகவியாய், சக்கரமுந் தடக்கைகளுங் கண்களும்பீதக வாடையொடும், செக்கர்நிறத்துச் சிவப்புடையாய் திருமாலிருஞ் சோலேயெந்தாய்.

ப - ரை.—சக்கரமும் - திருவாழியாழ்வானும், தடம் - தடவிதான, கைகளும் - திருக்கைகளும், கண்களும்-திருக்கண்களும், பீதகவாடையொடும்-திருப்பீதாம்பரத்தோடும்கூட, செக்கர்நிறத்து -செவ்வானநிறம்போன்ற, சிவப்புடையாய் - திருநிறத்தையுடையவனுய், திருமாலிருஞ்சோலேயெந்தாய்—, அநத்தம்-தீங்கையுண்டுபண்ணுமதான, அக்கரையென்னும் - ஸம்ஸாரமாகிற, கடலுள் - ஸமுத்ரத்திலே, அழுந்தி - தறைப்பட்டு, உன் - உன்னுடைய, பேரருளால்-பரமக்ருபையாலே, இக்கரையேறி - நித்யவிபூதியை நினேத்து, இளேத்திருந்தேனே - இளேத்துக்கிடக்கிறவென்னே, அஞ்சேலென்று - பயப்படாதேகொள்ளென்று, கைகவியாய் - அபயப்ரதாநம் பண்ணியருளவேணும்.

வ்யா.—(அக்கரை) ஸம்ஸாரத்திலே யிருக்கச்செய்தே ஜ்ஞாநம்பிறந்தபோது அது துரமானபடி. விபீஷணனுக்கு அக்கரை

(க) ஒருவிபூதியாக - ஒருவிபூதிமுழுதும்.

இக்கரை யாய்த்திறே. ஸம்ஸாரம் அநர்த்தமென்னும் ப்ரஸித்தி. "விஷயாகூராஜதலைதவாழ்" "விஷயாகூராஜவெதவார்". (அழுந்தி)தறைப்பட்டு. "ஶ்ரீமத்வார்ஷண்ணவ-வஶித:" "ஸ்ரீமத்வாஷ்ணெவாஷ்ரெ-வதிதழ்." (உன்பேரருளால்) *விஷ்ணுபோதமிறே. இரண்டுகரையு மொத்திருக்கும். (இக்கரை) என்றது - தமக்கணித்தானபடி. (இளைத்திருந்தேனை) மாஸோபவாஸி சோற்றை விரும்புமாபோலே, ப்ராப்தி கிடையாதவிளைப்பு. சேஷத்வ ஜ்ஞாநம் பிறந்தால் சேஷிசெய்தபடி கண்டிருக்க வொட்டாதே பதறப்பண்ணுகிறது. தானடியாக பகவத்ஜ்ஞாநம் பிறந்ததாகிலிறே ஆறியிருக்கலாவது. ஜ்ஞாநலாபத்தைப் பண்ணித் தந்தாற்போலே ப்ராப்தியையும் பண்ணித் தரவேணுமென்கிறார். உபாயத்துக்கு "ஸாக்ஷ:" "ஸாஷ:" என்றாப்போலே, உபேயத்துக்கு "ஸாக்ஷ:" "ஸாஷ:" என்னவேணும். ஸம்ஸாரமாகிறகடலிலே விழுந்தாரை யெடுப்பது-திவ்யாயுதங்களாலும், வடிவழகாலுமிறே. "ஆவாரார்துணை" இத்யாதி. "அங்கைத் தலத்திடை யாழிகொண்டான்." வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டும்படியிறே திருக்கையிலழகு; அதிலே ஆழ்வார்களுமாலும் சொல்லவேண்டாவிறே. "அஞ்சுடராழியுன் கையகத்தேந்துமழகா" என்னக்கடவதிறே. க்ர்பைக்குநிரூபகமான திருக்கண்களும், பெருக்காற்றிலே தெப்பத்தைப்பறிப்பாரைப்போலே அநுபவபரிகரமான நெஞ்சைப் பறித்துக்கொள்ளுந் திருப்பீதாம்பரமும்; "அரைச்சிவந்தவாடை." (செக்கர்நிறத்துச் சிவப்புடையாய்)திருவாழியில் சிவப்பும், திருமேனியில் நிறமும், கை வாய் கண் அவயவங்களில் சிவப்பும், ஸந்த்யாராகரஞ்ஜிதமான ஆகாசம்போலே திருநிறத்தை யுடையையாய்க் கொண்டு திருமலையிலே நிற்கிறவேற்றம். "முடிச்சோதி" "கலந்துமணியிமைக்குங்கண்ணா." (திருமாலிருஞ்சோலை) அழகருடைய வடிவழகுக்கு ப்ரகாசகமான திருமலை. (எந்தாய்) விரோதியில் (க) அருசியும், உபாயமும், ஜ்ஞாநமும், ப்ராப்தியில் ஆர்த்தியும், ப்ராப்யத்தில் போக்யதையும் த்வரையும் விளைப்பித்தவனே. (எ)

அ.—எட்டாம்பாட்டு. (எத்தனை) * அநத்தக்கடலுளழுந்திக்கிடந்த காலத்தின் பெருமையைச் சொல்லுகிறார். கடந்தகாலத்துக் கொரு முடிவுண்டோவென்கை.

மூ.—எத்தனைகாலமு மெத்தனையூழியு மின்றொடு நாளையென்றே,யித்தனைகாலமும் போய்க்கிறிபட்டே னினியுன்னைப் போகலொட்டேன், மைத்துனன்மார்களை வாழ்வித்துமாற்ற

(க) அருசி - விருப்பின்மை.

லர் நூற்றுவரைக் கெடுத்தாய், சித்தநின்பால தறிதியன்றே
திரு மாலிருஞ்சோலை யெந்தாய்.

ப - ரை.—திருமாலிருஞ்சோலையெந்தாய்—, இன்றேடு - இன்றென்றும், நாளையென்றும்—, நேற்றென்றுமாய்க்கழிந்தகாலம், எத்தனைகாலம் - எவ்வளவுகாலமோ, எத்தனையூழியும் - எத்தனை மஹாப்ரளயங்களோ, இத்தனைகாலமும் - நாளாயும் பக்ஷமாயும் மாஸமாயும் ஸம்வத்ஸரமாயுமுள்ள கல்பகாலமெல்லாம், போய்—, கிறி - தப்பவொண்ணுதயந்த்ரத்திலே, பட்டேன் - அகப்பட்டேன் ; இனி-இது உன்மாயமென்றறிந்தபின்பு, உன்னை-ஸர்வரக்ஷகனுனவுன்னை, போகலொட்டேன் - போகவிடுவனே; போகலொட்டோனென்கிற தென்கொண்டென்ன ; மைத்துனன்மார்களை - மைத்துனன்மாரான பாண்டவர்களை, வாழ்வித்து - அரசாளவைத்து, மாற்றலர் - அவர்களுக்குப் பகைவரான, நூற்றுவரை - துர்யோதநாதிகளை, கெடுத்தாய் - அழியச்செய்த நீ, சித்தம் - என்மநஸ்ஸு, நின்பாலது - உன்விஷயத்தில் ப்ரவணமாயிருப்பதை, அறிதியன்றே - அறிவாயன்றேவென்கிருர்.

வ்யா.—(எத்தனைகாலமித்யாதி) இன்றென்றும், நாளையென்றும், நேற்றென்றுமாய்க் கழிந்தகாலம், எத்தனைகாலமும், எத்தனையூழியும். (இத்தனைகாலமும்போய்) ஒருநாளாய், ஒருபக்ஷமாய், ஒருமாஸமாய், ஒருஸம்வத்ஸரமாய், இப்படிகல்பம் கல்பமாகக்கழிந்ததுக்கொரு முடிவில்லை. (போய்) காலத்துக்கு முடிவில்லாதாப்போலே போனவிடத்துக்கும் முடிவில்லை. (கிறிபட்டேன்) கிறியாவது - விரகு. அதாவது - யந்த்ரம். ஸர்வபூதங்களும் ப்ரமிக்கும்படி (க) ரூடமாயிருப்பதொரு யந்த்ரம். அஜ்ஞாநாவர்தமா யிருப்பதொன்று. (பட்டேன்) "ஷ்ஹீக" "சுவஷெநவ" என்னும்படி அகப்பட்டேன். நசித்தேனென்னவுமாம். "தெரிந்துணர் வொன்றின்மையால்" "பழுதேபலபகலும்" இத்யாதி. (இனி) கரணகளேபரங்களைத் தந்து, அஜ்ஞாதஸுக்ர்தத்தைப் பிறப்பித்து, இதரவிஷயத்தில் ருசியைக் குலைப்பித்து, உன்பக்கலிலே ருசியைப் பிறப்பித்து, அபிமதமும் நீயே யென்னுமிடமும் பிறப்பித்தபின்பு. (இனி) * நானேது முன்மாயமொன்றறியேன் ; இது உன்மாயமென்றறிந்தபின்பு. (உன்னை) ரக்ஷகனுமாய், உபாயபூதனுமாய், ப்ராப்யபூதனுமாயிருக்கிற வுன்னை. (போகலொட்டேன்) "பெற்றினிப்போக்குவனே வுன்னை" என்கிறபடியே - உபாயாந்தரத்திலே அந்வயமுண்டாதல், ப்ராப்யாந்தரத்திலே அந்வயமுண்டாதல், "இரண்டும்நீயானுல் பெற்றபோதுபெறுகிறேம்" என்ருறியிருத்தல்செய்யிலிறே உன்னைப்போக (உ) ஸம்வதிப்பது.

இப்படி போகவொட்டேனென்கிறது என்கொண்டென்ன (மைத்துனன்மாரித்யாதி) நீ ஆச்ரித ஸம்ஶ்லேஷைக ஸ்வபாவ

(க) ரூடமாய் - த்ர்டமாய். (உ) ஸம்வதிப்பது - உடன்படுவது.

னுகையாலே என்கிருர். (மாற்றலர்) சத்ருக்கள். "த்விஷதந்நம்" "த்விஷந்த:" "ஸம்ப்ரீதிபோஜ்யாந்யந்நாநி" "ஸம்ஹ்ருதி ஹேராஜ்யாந்யந்நாநி". (கெடுத்தாய்) "கொத்துத்தலைவன்குடிகெடத்தோன்றிய," "சிஷ்யஸ்தே ஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்" "ப்ரியத்வேந ஸம்ஸாரதிஸ்வாம் ப்ருவந்த:" என்று அவன்றானுஞ் சொல்லி, "ய இமம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷு" "யஇதம்வாஇதம் மஹ்யம் உக்தே த்வஷ" என்று தாமும் சொல்லும்படி காணென்று. *தாழ்ந்த தநஞ்சயனைப்போலே உமக்கு நம்பக்கலிலே அந்தரங்கமாக வொன்றுண்டோவென்ன (சித்தம்நின்பாலது) அவனைப்போலேயோ நான்? அவன், கைகோத்து, ஒக்கவுண்டு, ஒரு படுக்கையிலே கிடந்து கைகழன்றுபோனுன்; நான், என் நெஞ்சுக்கு ஒத்துக் கலந்துண்ணுதல், "ஸ்ரஜ்ஞ்யூதே" "ஸோஸ்நாதே" என்று ஒக்கவுண்ணுதல், உனக்குப் பூவிடுதல், முடித்தபூவை முடித்தல், முடித்துக்கொடுத்தல், பல்லாண்டிசைத்தல், அடிகொட்டுதல், மாறியிட்ட அடிக்குத் தோற்று எழுதிக் கொடுத்தல் செய்யும்படி உன் பக்கலிலே ப்ரவண சித்தனன்றே?. மைத்துனன்மாரென்றது - தோற்புரையிலே ஒரு ஸம்பந்தமன்றே உள்ளது. "திருமாலே நானு முனக்குப்பழவடியேன்" என்று - *ஒழிக்கவொழியாதபடி (க) மஜ்ஜாவிலே தட்டினவுறவன்றே இது. நீ சொன்ன*மெய்ம்மைப் பெருவார்த்தை கேட்டும் கேளாதானுய்ப்போனு னவன், கேட்டு விச்வஸித்திருந்தேன் நானன்றே? என்ன; உம்முடைய விச்வாஸத்தை நாமறியும்படியென்? என்ன (அறிதியன்றே) ஸர்வஜ்ஞனை நீதானே யறியாயோ. * விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலனை உனக்குத்தெரியாதோ. [விட்டுசித்தன்மனம்] உன்னுடைய வ்யாப்தி, விபூதியளவிலே; என்னுடைய மநோவ்யாப்தி, உன் ஸ்வரூபரூபகுணவிபூதிகளிலே. (அரவத்தமளி) இவ்வளவும் பண்ணினஸுக்ர்தம், மேலும்உமக்கு எல்லாம் பண்ணித்தாராதோ? என்ன; அந்த ஸுக்ர்தமும் நீயென்கிருர் (திருமாலிருஞ்சோலையெந்தாய்) ரக்ஷகாந்தரமும், உபாயாந்தரமும், உபேயாந்தரமும் என் நெஞ்சைவிட்டு, இவைமூன்றும் நீயே என்னுந் தெளிவைப்பிறப்பித்தது இந்நிலையன்றே என்கிருர். (எந்தாய்) இவற்றுக்கடியான பந்தமிருக்கிறபடி. "சதிரிளமடவார்" இத்யாதி. (திருமாலிருஞ்சோலையெந்தாய்) "வெற்பென்றிருஞ்சோலை" இத்யாதி, "திருமாலிருஞ்சோலை" இத்யாதி. (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. (அன்றுவயிற்றில்) "எத்தனைகாலமும் எத்தனையூழியும்"என்ற காலவிசேஷத்திலே ஈச்வரன் பண்ணிவைத்ததோர் காலத்தைச் சொல்லுகிருர்.

---

(க) மஜ்ஜா - சரீரத்தின் மாம்ஸவிசேஷம்.

மூ.—அன்றுவயிற்றிற்கிடந்திருந்தே யடிமைசெய்யலுற்றிருப்பன், இன்றுவந்திங்குன்னைக் கண்டுகொண்டே னினிப்போக விடுவதுண்டே, சென்றங்குவாணனை யாயிரந்தோளுந் திருச்சக்கரமதனால், தென்றித் திசைதிசைவீழச்செற்றாய் திருமாலிருஞ் சோலையெந்தாய்.

ப - ரை.—அங்கு-சோணிதபுரத்திலே, சென்று—, வாணனை - பாணாஸுரனுடைய, ஆயிரந்தோளும் - ஆயிரந்தோள்களும், திசைதிசை - திக்குக்கள்தோறும், தென்றிவீழ - சிதறிவிழும்படி, திருச்சக்கரமதனால் - திருவாழியாலே, செற்றாய் - நிரஸித்தவனாய், திருமாலிருஞ்சோலையெந்தாய் - திருமாலிருஞ்சோலைமலையி லெழுந்தருளியிருக்கிற ஸர்வஸ்வாமியே, வயிற்றில்-தாயார் கர்ப்பத்திலே, கிடந்திருந்து - கிடக்கிற, அன்றே - அக்காலத்திலேயே, அடிமைசெய்யல்- உனக்கு அடிமைசெய்கைக்கு, உற்றிருப்பன் - துணிந்திருப்பன்; அப்படியே, இன்று—, இங்கு - திருமலையிலே, வந்து—, உன்னைக்கண்டுகொண்டேன்—; இனி - அடிமைகொள்ளுகைக்குஸமலபனான இப்போது, போகவிடுவதுண்டே - போகவிடுவனோ.

வ்யா.—(அன்றுவயிற்றில்)கர்ப்பத்திலே கிடக்கிறகாலத்திலே, "அடிமைசெய்கையே புருஷார்த்தம்" என்று துணிந் திருப்பன். (இன்றுவந்திங்குன்னைக்கண்டுகொண்டேன்) அன்றுநான் ப்ரார்த்தித்தபடியே திருமலையிலேவந்து, என்விரோதியைப்போக்கி ஜ்ஞானத்தைப்பிறப்பித்த வுன்னைவந்து கண்டுகொண்டேன். "புக்கினில் புக்கு". (இனிப்போகவிடுவதுண்டே) கர்ப்பத்திலே க்லேசப்படுகிறவன்று, அடிமையிலே உற்றிருந்தநான், அடிமை கொள்ளுகைக்கு ஸமலபனானவின்று போகவிடுவனோ. ஸ்வஸ்வாதந்த்ர்யத்தையும், அந்யசேஷத்வத்தையுங் கழித்துக்கொண்டபடியை மூதலிக்கிறார் (சென்றங்கித்யாதி) சோணிதபுரத்திலே, ஸ்ரீமத் த்வாரகையில்நின்றுஞ் சென்றுபுக்கு, வாணனுடையபுஜவநத்தைத்திக்குக்கள்தோறும் விழும்படி யறுத்தாய்; அந்தச்ரமம் தீரவந்து நிற்கிறவிடம் திருமலையாய்த்து. (கூ)

அ.—நிகமத்தில், இத்திருமொழியை யப்யஸித்தவர்கள் அவனுக்கு சேஷபூத ராவரொன்கிறார்.

மூ.—சென்றுலகங் குடைந்தாடுஞ் சுனைத்திருமாலிருஞ் சோலைதன்னுள், நின்றபிரானடி மேலடிமைத்திறம் நேர்பட விண்ணப்பஞ்செய்,பொன்றிகழ்மாடம் பொலிந்துதோன்றும்புதுவைக்கோன்விட்டுசித்தன், ஒன்றினோ டொன்பதும் பாடவல்லா ருலகமளந்தான்றமரே.

ப - ரை.—பொன் - பொன்னாலே, திகழ் - விளங்காநின்றுள்ள, மாடம் - மாடங்களாலே, பொலிந்து - நிறையப்பட்டு, தோன்றும் - தோற்றுகிற, புது

வை - ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு, கோன் - தலைவரான, விட்டுசித்தன் - பெரியாழ்வார்; உலகம் - கற்றோரும் மற்றோரும், சென்று—, குடைந்து - ஆழவிழிந்து, ஆடும் - நீராடாநின்றுள்ள, சுனை - சுனைகளாலேசூழப்பட்ட, திருமாலிருஞ்சோலைதன்னுள் - தெற்குத்திருமலையிலே, நின்ற - பொருந்திவர்த்திக்கிற, பிரான் - உபகாரகனுடைய, அடிமேல் - திருவடிகளிலே, அடிமைத்திறம் - அடிமைவிஷயமாக, நேர்பட - வாய்க்கும்படி, விண்ணப்பஞ்செய் - அருளிச்செய்த, ஒன்றினோடொன்பதும் - பத்துப்பாட்டுக்களையும், பாடவல்லார்-ப்ரீதிப்ரோதிராய்ப்பாட வல்லவர்கள், உலகம் - மூன்றுலோகங்களையும், அளந்தான் - அளந்துகொண்டவனுக்கு, தமர் - அடியாராகப்பெறுவர்.

வ்யா.—(சென்றுலகம்குடைந்தாடுஞ்சுனை) லோகத்தில் அஜ்ஞரோடு, விசேஷஜ்ஞரோடு, அநுகூலரோடு, ப்ரதிகூலரோடு வாசியறச்சென்று, ஆழஇழிந்து (க) அவகாஹிக்குஞ் சுனைகளாலே சூழப்பட்ட திருமலையிலே ஸந்நிதிபண்ணின உபகாரகன். [மறுவில்வண்சுனை சூழ்மாலிருஞ்சோலை] ஸம்ஸாரிகள் மறுப்போனல் தனக்குப் போய்த்ததாக நினைத்திருக்கையும், அபேக்ஷிதங்களைக்கொடுக்கையுமுடைத்தான வவனைப்போலேயாய்த்து இச்சுனைகளும். (நின்றபிரானடிமேல்) அவன்றிருவடிகளிலே. (அடிமைத்திறம்) அடிமைவிஷயமாக. இவருடையதீர்த்தம் இவரிருந்த விடத்தேவரும். [காலநன்ஞானத்துறைபடிந்தாடி] * அப்பன்றிருவருளிறேமுழுகுவது. இவர்க்குப் புறம்பு நிழலுமில்லை, நீருமில்லை. "அவனடிநிழற்றடம்" என்னக்கடவதிறே. (அடிமேல்) அடிமைவிஷயமாக ; (நேர்பட) வாய்க்க; (விண்ணப்பஞ்செய்) ஆழ்வாரருளிச்செய்த.

(பொன்றிகழித்யாதி) பொன்னாலே திகழப்பட்ட மாடங்களாலே நிறைபட்டுத் தோற்றுகிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான ஆழ்வாரருளிச்செய்த. "பொன்னுலகு" என்று சொல்லுகிற பரமபதம்போலேயிறே ஆழ்வாரெழுந்தருளியிருக்கிறதேசம். "வைகுந்தமாகும்தம்மூர்" என்னக்கடவதிறே. (ஒன்றினோடொன்பதும்) "ஒளித்திடில் நின்றிருவாணை" என்றத்தோடே மற்றை யொன்பதையும். இதொன்றுமிறே ப்ரதாநம், மற்றையொன்பதும் ஈச்வரன் பெருவாணையென்ன ; அன்றென்றுஸாதித்தவையிறேயிவை. "சொல்லவல்லார்" என்கிற ஸ்தாநத்திலே, "பாடவல்லார்" என்கிறது. "[illegible]" "[illegible]." பலம் - ஸ்வ. ஸ்வாதந்த்ர்யமும், அந்யசேஷத்வமும் குலையுமென்கிறார். இவை யிரண்டையுங் குலைத்த அபதாநமிறேதிருவுலகளந்தருளினவிடம். "சதுமுகன்கையில்" இத்யாதி. ஸ்வரூபஸாதந புருஷார்த்தங்கள் மூன்றும் இத்திருவடிகளிறே. "உலகளந்தபொன்னடியே" என்றும்,

(க) அவகாஹித்தல் - நீராடுதல்.

"விண்மண்ணளந்த-பொன்னனங்கழல்" என்றும், "பொதுநின்ற பொன்னங்கழல்" இத்யாதி.

"பொன்றிகழ்மாடம் பொலிந்துதோன்றும் புதுவைக்கோன் விட்டுசித்தன் - சென்றுலகங்குடைந்தாடுஞ் சுனைத்திருமாலிருஞ் சோலைதன்னுள்நின்ற பிரானடிமேலடிமைத்திறம்நேர்பட விண்ணப்பஞ்செய் - ஒன்றினோடொன்பதும் பாடவல்லாருலக மளந்தான் றமரே" என்றந்வயம். (கo)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அடிவரவு.—துக்கவளைத்துனக்குக் காதம் காலும் எருத் தக்கறை எத்தனையன்று சென்று சென்னி.

ஆ திருமொழி சஉ-இ பாட்டு-சஙo.

அ.—பரவ்யூஹவிபவாந்தர்யாமித்வார்ச்சாவதாரங்களான விடங்களி லெழுந்தருளிநின்றது - சேதநரைத் திருத்துகைக்கும், திருந்தினரை யடிமைகொள்ளுகைக்குமிறே; அது பூர்ணமாகக் காணலாவது, திருமலையி லெழுந்தருளிநிற்கிற நிலையிலேயிறே. (க) ப்ரதமஸுக்ர்தமு மிவர்க்குத்தானேயிறே. "திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்னத் திருமால்வந்தென் நெஞ்சுநிறையப் புகுந்தான்" என்றாற்போலே; "வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி நிற்கின்றேன்" என்று இவர் அஹ்ர்தயமாகச்சொல்லிலும், "ஸஹ்ர்தயமாக விவர்சொன்னர்" என்றிறே அவன் புகுந்தது. "வெற்பென்றிருஞ்சோலை வேங்கடமென்றிவ்விரண்டும்" இத்யாதி. ஆகையால், ஈச்வரன், (உ) ஸௌஹார்த்தம் முதலான ஆத்மகுணங்களைப் பிறப்பித்து, ஆசார்யனோடே சேர்த்து விரோதியில் அருசியையும், ப்ராப்யத்தில் ருசியையும் பிறப்பித்துக் கார்யஞ் செய்யும்; ஆழ்வார்களுக்கு, ப்ரதமகாலத்திலே யிவை யித்தனையும் பிறப்பித்துக் கார்யஞ்செய்யும். இவர்கள் பின்பு இருக்கிறது பகவதிச்சையாலேயிறே. நமக்கு சரீராவஸாநத்திலே இவை யித்தனையும் பிறப்பித்துக் கார்யஞ்செய்யும்; எல்லார்க்கும், பிறக்கும் க்ரமமொழியப்பிறப்பியான். "ஊரவர்" இத்யாதி. [ஊரவர்]. நித்யஸூரிகள். [கவ்வைபெருவிட்டு] அவர்கள் கவ்வி மேல்விழுந்து அநுபவிக்கிற அநுபவமாகிற எருவையிட்டு, ஆசார்யோபதேசஜ்ஞாநமாகிற நீரைத் தேக்கி, ஸங்கமாகிற நெல்லை வித்தியிறே பிறப்பிப்பது. இப்படி திருந்தின விவரைக்கண்டு அவனுகக்க, அவனுகப்

(க) ப்ரதமஸுக்ர்தம் - முதல்ஸுக்ர்தம். (உ) ஸௌஹார்த்தம்-அன்புபாராட்டுகை.

யைக் கண்டு இவருகக்க, "இவ்வுகப்புக்குமேல் இனி வேறொரு பேறுமில்லை" என்று இவரிருக்க, "இவர் கார்யத்திலே நாம் முதல டியிட்டிலோம்" என்று அவன் பதறுகிற பதற்றத்தைக் கண்டு, "விரோதிகளடையப் போச்சுதாகில், அபேக்ஷிதங்களில் பெறவே ண்டுமம்சங்க ளடையப்பெற்றதாகில், இனி தேவர்பதறுகிறதென்?" என்று அவன் பதற்றத்தை அமைக்கிறார்.

மூ.—சென்னியோங்கு தண்டிருவேங்கடமுடையாயுலகு, தன்னை வாழநின்ற நம்பீ தாமோதரா சதிரா, என்னையு மென்னுடை மையையுமுன் சக்கரப்பொறி யொற்றிக்கொண்டு, நின்ன ருளேபுரிந்திருந்தேனினியென்திருக்குறிப்பே.

ப - ரை.—ஓங்கு - ஆகாசத்தளவுமுயர்ந்திருக்கிற, சென்னி - கொடுமுடிக ளையும், தண்-குளிர்ச்சியையுமுடைய, திருவேங்கடம்-திருவேங்கடத்தை, உடை யாய் - வாஸஸ்தாநமாகவுடையனாய், உலகுதன்னை-லோகத்தாரை, வாழநின்ற- வாழ்வித்தருளுகிற, நம்பீ - குணபூர்த்தியையுடையனாய், தாமோதரா - யசோ தைப்பிராட்டியால் கட்டுண்டவனாய், சதிரா-ஆச்ரிதர்குற்றத்தைக் கண்ணிட்டுப் பாராதசதிரையுடையவனே, என்னையும் - என் ஆத்மாவுக்கும், என்னுடைமை யையும் - என்னுடைமையான சரீரத்துக்கும், உன்-உன்னுடைய, சக்கரப்பொறி யொற்றிக்கொண்டு - திருவிலச்சினையையிடுவித்து, நின் - உன்னுடைய, அருளே- க்ர்பையையே, புரிந்திருந்தேன்-விரும்பியிருக்கிறேன்; இனி-இப்படி ஆனபின்பு, திருக்குறிப்பு - திருவுள்ளக்கருத்து, என்-என்ன?, அத்தையருளிச்செய்ய வேணு மென்கிறார்.

வ்யா.—முதற்பாட்டு. (சென்னியோங்கு) திருமலையில் கொடு முடிகள் ஆகாசத்திலே முட்டிநிற்கும். இத்தால் - உபயவிபூதிக்கும் முகங்காட்டுகைக்காக நிற்கிற நிலையிறே. உதயகிரியிலே ஆதித்யன் கிளம்பினால் எல்லார்க்கும் ப்ரகாசிக்குமாபோலே, திருமலையில் நிற்கிறநிலை உபயவிபூதியுங் கண்டு வாழுகைக்கிறே. "வேங்கடம் கோயில்கொண்டதனோடும்-அருக்கன்மேவி நிற்பார்க்கு" என்னக்க டவதிறே. "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு." *மண்ணோர்க் கும் விண்ணோர்க்கும் - என்றும் - கண்ணாவான்-தண்ணார்வேங்கட விண்ணோர்வெற்பனிறே; அங்குள்ளார், திருமலையில் கொடுமுடியி லேவந்துஇளைப்பாறுவர்கள்; இங்குள்ளார், *மொய்த்தசோலையிலும் மொய்பூந்தடந்தாழ்வரையிலும் இளைப்பாறுவர்கள். *பூவியல்பொ ழிலுந் தடமுமவன்கோயிலுங் கண்டிறே *உள்ளுளாவி யுலர்ந்துலர் ந்து * ஆவிஉள்குளிருவது. (தண்திருவேங்கடம்) தட்பத்தை யுடைத்தான வேங்கடம். "குளிரருவிவேங்கடம்." இருவர் விடா யையுந்தீர்க்கும். ரக்ஷகனுக்கு ரக்ஷ்யத்தைப் பெறுதவிடாயும், ரக்ஷ் யத்துக்கு ரக்ஷகனைப் பெறுதவிடாயும். * எங்நாளே நாம் மண்ண ளந்த விணைத் தாமரைகள் காண்பதற்கு என்று சீலாதிகுணங்களை

யநுபவிக்கப்பெருத நித்யஸூரிகள் விடாயையுந் தீர்க்கும். (திருவேங்கடமுடையாய்) நிதியுடையாய், ஸ்ரீகௌஸ்துப முடையாய் என்னுமாபோலே.

(உலகுதன்னைவாழநின்றநம்பீ) "அடிக்கீழமர்ந்து புகுந்தடியீர் வாழ்மி னென்றென்றருள்கொடுக்கும்," "கானமும் வாநரமும் வேடுமுடைவேங்கடம்" என்கிறபடியே - ஸர்வரையும் வாழ்விக்கும் படி. (நம்பீ) குணபூர்த்தி. "நிகரில்புகழாய்" என்று-வாத்ஸல்யம்; "உலகமூன்றுடையாய்" என்று - ஸ்வாமித்வம்; "என்னையாள்வானே" என்று - ஸௌசீல்யம்; "திருவேங்கடத்தானே" என்று - ஸௌலப்யம். இது இங்குள்ளார்க்கு முகங்கொடுத்தபடி. [நீசனேன் நிறைவொன்றுமிலேன்] நீசனேன் - (க) அநாத்மகுணபரிபூர்ணன்; நிறைவொன்றுமிலேன் - ஆத்மகுணகந்தரஹிதன். "நிகரிலமரர்முனிக்கணங்கள் விரும்பும்" என்று - அங்குள்ளார்க்கு முகங்கொடுத்தபடி. (தாமோதரா) "நம்பீ" என்று - பூர்த்திகீழ்; அக்குணங்களும் க்ரயம் சென்றபடி இந்தபூர்த்தி. வெண்ணெய் களவுகாண்கையாலே அபூர்த்தி; கட்டுண்கையாலே அசக்தி; தப்பவிரகறியாமையாலே அஜ்ஞன். (சதிரா) ஆச்ரிததோஷங் காணுத சதிர். * தமக்கடிமைவேண்டுவார் தாமோதரனுரிறே. "சூழ்ந்தடியார் வேண்டினக்கால்" இத்யாதி.

(என்னையு மென்னுடைமையையும்) ஆத்மாவையும், சரீரத்தையுந் திருவிலச்சினை சாத்தி. ஆத்மாவுக்குச் சாத்துகையாவது-அநந்யார்ஹசேஷத்வஜ்ஞாநம் பிறப்பிக்கை; அதுபிறந்தமை தோற்றவிறே தோளுக்குத் திருவிலச்சினையிடுவது. (நின்னருளே) இவரடியாகிலிறே புதைத்துவார்ப்பது; அவனடியாக வரில் "விதிவாய்க்கின்று காப்பாரார்" என்னும்படியிறெ பெருகுவது. (புரிந்து) "எத்தனையும் வானமறந்த காலத்தும்" இத்யாதி. (இருந்தேன்) உபாயாந்தரமும், உபேயாந்தரமுங் குலைகை. அநந்யார்ஹ சேஷத்வஜ்ஞாநமும் பிறந்து, விரோதிநிவர்த்தியும்பிறந்து, அபேக்ஷிதமும் பெற்றதாகில் இனிப்பதறுகிறதென் (இனியென் திருக்குறிப்பே) "என்கொ லம்மான்திருவருள்கள்". (திருக்குறிப்பு) திருவுள்ளத்தில் நினைவு. (க)

அ.—இரண்டாம்பாட்டு. (பறவை) கீழிற்பாட்டிலே, "இனியென்திருக்குறிப்பே" என்று - எனக்குச் செய்யவேண்டுவதெல்லாஞ் செய்திருக்க, இனிப்பதறுகிற தென்னென்ன: நீர் எல்லாம் பெற்றீரோ, உம்மை நெடுநாள் பற்றிப்போந்த கர்மங்கிடந்தது,

(க) அநாத்மகுணபரிபூர்ணன் - தோஷகுணங்களால் நிறைந்தவன்.

மேலே ப்ராப்திக்கடியான பரமபக்தி பிறந்ததில்லையே, அர்ச்சிராதிமுதலாக மேல்செய்யவேண்டும் அம்சங்கள் பிறந்ததில்லையே என்ன; தமக்குஇவையித்தனையும் பிறந்தபடியை யருளிச்செய்கிறார்.

மூ.—பறவையேறுபரம்புருடாநீயென்னைக்கைக்கொண்டபின்
பிறவியென்னுங்கடலும்வற்றிப்பெரும்பதமாகின்றதால்
இறவுசெய்யும்பாவக்காடுதீக்கொளீஇவேகின்றதால்
அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றிவாய்க்கொண்டதே.

ப - ரை.—பறவை - பெரியதிருவடியை, ஏறு - வாஹநமாகவுடைய, பரம்புருடா - புருஷோத்தமனே, நீ-ஸர்வரக்ஷகனான நீ, என்னை - அநந்யகதியான வென்னை, கைக்கொண்டபின் - அங்கீகரித்தபின்பு, பிறவியென்னும் - ஸம்ஸாரமாகிற, கடலும் - பெருங்கடலும், வற்றி—, பெரும்பதமாகின்றது - பெரியதரம்பெற்றது; இறவுசெய்யும் - இவ்வாத்மாவைமுடிக்கிற, பாவக்காடு - பாபஸமூஹமானது, தீக்கொளீஇ - நெருப்புப்பட்டு, வேகின்றது - வெந்திட்டது; அறிவென்னும் - ஜ்ஞாநமாகிற, அமுதவாறு - அம்ர்தநதியானது, வாய்பற்றி-வாயளவால், தலைக்கொண்டது - தலைக்குமேலே போகாநின்றது.

வ்யா.—(பறவையேறுபரம்புருடா) பெரியதிருவடியை வாஹநமாகவுடைய புருஷோத்தமனே; திருவேங்கடமுடையான் பெரியதிருவடிமேலே யெழுந்தருளிவந்து இவரை பரமபதத்துக்குக் கொடுபோகையிலே (க) த்வரிக்கிறபடி. விரோதிநிவர்த்தியைப் பிறப்பித்ததும் திருவேங்கடமுடையான் பெரியதிருவடியின்மேலே வந்திறே. "நங்கள் வரிவளை" "இலங்கைப்பதி" "பாடுங்குயில்காள்." (நீ) ஆச்ரித ஸம்ச்லேஷைகஸ்வபாவனான நீ. (என்னை) "விழிக்குங் கண்ணிலேன் நின்கண்மற்றல்லால்" என்றும், "உனக்குப் பணி செய்திருக்குந் தவமுடையேன்" என்றும், "அங்கோர் நிழலில்லை நீருமில்லை" என்றும் அநந்யகதியுமாய், அநந்யோபாயனுமாய், அநந்ய போகனுமான வென்னை. (கைக்கொண்டபின்) அங்கீகரித்த பின்பு. நானுன்னைப் பற்றும்போதிறே, * ஜந்மாந்தர ஸஹஸ்ரங்களிலே தபோஜ்ஞாந ஸமாதிருபேண பிறப்பது; * நீ யென்னைக் கைக்கொண்டபின் எல்லாம் ஏககாலத்திலே பிறக்குமிறே. * அடியானிவனென்றெனக்காரருள் செய்யும் நெடியானை நிறைபுகழஞ் சிறைப்புள்ளின் கொடியானிறே. * கைக்கொண்டபின் பிறந்த விசேஷஞ் சொல்லுகிறார்மேல் (பிறவியென்னுங் கடலும்வற்றி) ஸம்ஸாரமாகிற பெரியகடலும் சுவறி. (பெரும்பதமாகின்றதால்) பெரியதரம்பெற்றபடி. மேல்சாத்தும் பரியட்டமும்பெற்று, * திருப்பொலிந்த சேவடி யென் சென்னியின்மேல் பொறிக்கப்பெற்றுத் திருப்பல்லாண்டு பாடினபடி. "உடுத்துக்களைந்த" இத்யாதி. (ஆகி

(க) த்வரித்தல் - விரைதல்.

ன்றதால்) இது மேன்மேலன வளர்ந்துவருகிறபடி. "எத்திறத்து மின்பம்," "எங்குந் திருவருள்பெற்று." இழவுக்கு ஸம்ஸாரமும், அதுக்கடியான கர்மமும்போலே, மோக்ஷத்துக்கு ஜ்ஞானமும் பக்தியும்.

"பிறவியென்னுங் கடலும்வற்றி" என்று - ஸம்ஸாரம்போனபடி சொன்னார்; இனி அதுக்கடியான கர்மம்போனபடி யருளிச்செய்கிறார் (இறவுசெய்யுமித்யாதி) இவ்வாத்மாவை முடிக்கிற கர்மஸந்தானம் பெருநெருப்புக்கொளுத்தி வெந்திட்டதால். ஆழ்வாரும் ஈச்வரனும் ஸம்ச்லேஷித்தவளவிலே, அநுமதிவேண்டாதே வெந்ததாய்த்து; காண்டாவநம் வெந்தாப்போலே. (அறிவையித்யாதி) அமுதம் - ஜலம்; ஜ்ஞாநாம்ர்தமாகிறஆறுபெருகி, வாயளவாய்த் தலைக்குமேலே போகாநின்றது. "அதனில்பெரிய வென்னவா" என்றபடி. நீயென்னைக் கைக்கொண்டவென்றது - "என்தலைமிசையாய் வந்திட்டு" என்றபடி. அநுகூலஜ்ஞாநமாகிற பெருக்காறு. (தலைப்பற்றி) சேதநகதமாகவந்த ஜ்ஞாநமாகிலிறே பின்பு வற்றிவருவது; ஸஹ்யம்பற்றி வருகிற ஆறிறே. திருமலையிறே ஸஹ்யம்; வர்ஷிக்கிறது ஒருகாளமேகமிறே. *கார்முகில்போலும் வேங்கடநல்வெற்பன் என்னமுதமிறே. "பற்பநாபன்" இத்யாதி. (வாய்க்கொண்டதே) எல்லாம் மேன்மேலே ஒருமுகமாய்ப் பெருக்கிடாநின்றது. (உ)

அ.—மூன்றாம்பாட்டு. (எம்மனா) கீழிற்பாட்டில், "பிறவியென்னுங் கடலும்வற்றி" என்றும், "இறவுசெய்யும் பாவக்காடு தீக்கொளீஇவேகின்றதால்" என்றும் - உம்முடைய அபேக்ஷிதம்பெற்றீராகச் சொன்னீர், ஒருத்தனுக்குப் பேறாகிறது - தன்விரோதி போகையன்றிக்கே தன்னோடு ஸம்பந்தமுடையார்க்கும் விரோதி போகையாய்த்து; அப்படி நீர்பெற்றதுண்டோ? என்ன; என்னளவன்றிக்கே, என்ஸம்பந்திகளளவன்றிக்கே, அவர்கள்நாட்டிலுள்ளார் பாவமும் போய்த்தென்கிறார்.

மூ.—எம்மனாவென்குலதெய்வமேயென்னுடைநாயகனே
நின்னுளேனாய்ப்பெற்றநன்மையிவ்வுலகினிலார்பெறுவார்
நம்மன்போலவீழ்த்தமுக்குநாட்டுளபாவமெலாம்
சும்மெனாதேகைவிட்டோடித்தூறுகள்பாய்ந்தனவே.

ப-ரை.—எம்மனா - எனக்கு அரசனானவனாய், என் குலம் - என் குலத்துக்கு, தெய்வமே - பரதேவதையானவனாய், என்னுடைநாயகனே - எனக்கு நாதனானவனே, நின்-உன் அபிமாநத்திலே, உள்ளேனாய்-அந்தர்ப்பூதனாய், பெற்ற - நான்பெற்ற, நன்மை-ப்ரயோஜநம், இவ்வுலகினில்-இந்தஸம்ஸாரத்திலே, ஆர்பெறுவார் - நித்யர்கள்தான்பெறுவர்களோ; நம்மன்போல - பூதப்ரேத

பிசாசங்களைப்போலே, வீழ்த்து - விழவிட்டு, அமுக்கும் - அமுக்காநின்றுள்ள, நாட்டுள்ள பாவமெல்லாம்—, சும்மெனாது - மூச்சுவிடாமல், கைவிட்டு - ஸவாஸநமாகவிட்டு, ஓடி—, தூறுகள் - ஸம்ஸாரமாகிறபுதர்களிலே, பாய்ந்தன - பாய்ந்துபோயினவென்கிறார்.

வ்யா.—(எம்மனா) "எம்அனா" என்று - தாயாரைச்சொன்னபடி. எனக்குத் தாய்போலே பரிவனானவனே. என்அபிமதப்ரதனே. தாய்முலைப்பால்போலே, எனக்கு ஜ்ஞாநப்ரதனானவனே. அன்றிக்கே, "எம் மனா" என்று - ராஜாவாய், ஈரரசுதவிர்த்தவனேயென்றுமாம். என்ஸ்வாதந்த்ர்யத்தைக் குலைத்தவனே. துராத்மாவான வெனக்கு சாஸ்தாவானவனே. "[Grantha]" "ராஜா ஶாஸ்தா து:ராத்மநாம்" என்னக்கடவதிறே. (என்குலதெய்வமே) என்குலத்துக்கு பரதேவதையானவனே. இவர்குலத்தை யிட்டிறே இவனைவிஷயீகரித்தது. "ஏழாட் காலும்பழிப்பிலோம் நாங்கள்" என்றாரிறே. "குடிக்கிடந்தாக்கஞ் செய்து" என்னக்கடவதிறே. "எந்தைதந்தை தந்தைதந்தை தம்மூத்தப்பன்." (என்னுடைநாயகனே) "குலதொலடியேன்" என்கிற ஸம்பந்தத்துக்குமேலே இவர்க்கு அவனால்வந்த தன்னேற்றம். அவர்களுக்கும் இவராலே பேறும்படியிறே இவர் திருந்தினபடி. ஆக, "'எம்மனா, என்குலதெய்வமே, என்னுடைநாயகனே' என்கிற இம்மூன்றாலும்-ஜ்ஞாநவிரோதியும், ஆச்ரயணவிரோதியும், மோக்ஷவிரோதியும் போனபடி" என்று ஆளவந்தார். "தேஹாத்மாபிமாநமும், அந்யசேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமுங் கழிந்தபடி" என்று உடையவர். உபாயமும், உபேயமும், பரதேவதையும் என்றுமாம். (நின்னுளேனாய்) உன்னபிமாநத்திலே அந்தர்ப்பூதனாய். (பெற்றநன்மை) பெற்ற ப்ரயோஜநம். (இவ்வுலகினில்) இஸ்ஸம்ஸாரத்தில். (ஆர்பெறுவார்) நித்யர்க்குங் கிடைக்குமோவிது. "விண்ணுளார்பெருமான்" இத்யாதி. அவன்றனக்கும் கிடைக்குமோ!.

(நம்மன்போலவீழ்த்தமுக்கும் நாட்டுளபாவமெலாம்) இவனுக்குத் தோற்றாதபடிவந்து, இவனைப் போகவுந் திரியவு மொட்டாதபடி அமுக்கும் பூதப்ரேதபிசாசங்கள்போலேயாய்த்து, கர்மங்கள் இவனை (க) அபிபவிப்பது. *இன்னமுதெனத்தோன்றி முடிக்கும் விஷயங்கள். இவை சில பாபவிசேஷங்கள், தோன்றாமல் வந்து விழவிட்டுப் பாரமேற்றினாற்போலே அமுக்குமாய்த்து. (நாட்டுளபாவமெலாம்) லோகத்திலுள்ள பாபங்களெல்லாம். சாஸ்த்ரங்களில் சொல்லுகிற பாபங்களெல்லாம். "[Grantha]" "ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே" இத்யாதி. (சும்மெனாதே)மூச்சு

(க) அபிபவித்தல் - அவமதித்தல்.

விடாதே, போகத்துடங்கிற்று. "வஞ்சித்துத்தடமோற்றற்ற." (கைவிட்டு) சிறைவெட்டிவிட்டதென்பானைப்போலே. (ஓடி) "கைக்கொண்டுநிற்கின்ற நோய்காள் - உய்யப்போமின்" என்னவும் வேண்டிற்றில்லை; யுத்தத்திலே கெட்டவன் கொலைக்கஞ்சி ஓடுமாப்போலே. (தூறுகள்பாய்ந்தனவே) "கானே வொருங்கிற்றுக் கண்டிலமால்." "'தூறு' என்கிறது - ஸம்ஸாரிகளை" என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர். *பாரிலோர்பற்றையிறே. தூறென்பது - செடியாய், ஸம்ஸாரத்தைச் சொல்லுகிறது. "முற்றவிம்மூவுலகும்பெருந்தூறாய்" என்னக்கடவதிறே. "கொடுவினைத்தூறு." ... (௩)

அ.—நாலாம்பாட்டு.—(கடல்) "இறவுசெய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்" என்று - தம்முடைய பாபம்போனபடி சொன்னார்; "நாட்டுள பாவமெலாம்" என்று - தாமிருந்த தேசத்திலுள்ளார் பாபங்களும் போனபடி சொன்னார்; தமக்கு யமவச்யதையும் போனபடி சொன்னார்: இதில் - தம்முடைய ஆஜ்ஞைநடக்கு மிடமெல்லாம் யமவச்யதை புகுரப்பெறுதென்கிறார்.

மூ.—கடல்கடைந்தமுதங்கொண்டுகலசத்தைநிறைத்தாற்போல்
உடலுருகிவாய்திறந்துமடுத்துன்னைநிறைத்துக்கொண்டேன்
கொடுமைசெய்யுங்கூற்றமுமென்கோலாடிகுறுகப்பெறா
தடவரைத்தோட்சக்கரபாணீசார்ங்கவிற்சேவகனே.

ப-ரை.—தடம் - பெரிய, வரை-மலைபோன்ற, தோள் - திருத்தோள்களையுடையனாய், சக்கரம்-திருவாழியாழ்வானை, பாணீ-திருக்கையிலே யுடையனாய், சார்ங்கம்-ஸ்ரீசார்ங்கமென்னும், வில்-தநுஸ்ஸையுடைய, சேவகனே—, கடல்-திருப்பாற்கடலை, கடைந்து—, அமுதம் - அம்ர்தத்தை, கொண்டு - வாங்கி, கலசத்தை-கலசத்திலே, நிறைத்தாற்போல்-நிறைத்தாற்போலே,உடலுருகி—, வாய்திறந்து—, மடுத்து - இரண்டுகையையும்மடுத்து, உன்னை - நிரதிசயபோக்யனான வுன்னை, நிறைத்துக்கொண்டேன் - தேக்கிக்கொண்டேன்; ஆனபின்பு, கொடுமை செய்யும் - கொடிதாக தண்டிக்கிற, கூற்றமும் - யமனும், என் - என்னுடைய, கோல் ஆடி - செங்கோல்நடக்கு மிடமெல்லாம், குறுகப்பெறா - கிட்டப்பெறான்.

வ்யா.—(கடல்கடைந்தமுதங்கொண்டு கலசத்தைநிறைத்தாற்போல்) (௧) மஹத்தானகடல் (௨) க்ஷுபிதமாம்படிபண்ணி, அதில் ஸாரமான அம்ர்தத்தைவாங்கிக் கலசத்திலே நிறைத்தாற்போலே. கடலினுடையஸ்தானே ஸம்ஸாரம்; கலசத்தின்ஸ்தானே சேதநன். "குடம்நிறைக்கும்" என்றும், "ஏற்றகலங்கள்" என்றும் சொல்லக்கடவதிறே. அம்ர்தத்தின்ஸ்தானே ஈச்வரன். அசேதநமான வித்

(௧) மஹத்தான - பெரிதான. (௨) க்ஷுபிதமாம்படி - கலங்கும்படி.

தோடே சேதநரான தம்மை த்ர்ஷ்டாந்தமிடுவானென்னென்னில்; உபாயதசையில் அப்படியாய்க்கிடக்கவும், உபேயதசையில் *பவளவாய்காணவும் வல்லனுயிறே யிருப்பது. உபாயதசையில் பாரதந்த்ர்யமும், உபேயதசையில் ஜ்ஞாத்ர்த்வமும் வேணுமிறே.

(உடலுருகிவாய்திறந்து மடுத்துன்னைநிறைத்துக்கொண்டேன்) "கலசம்" என்று-அசித்ப்ராயமாகச் சொன்னார்-அங்கு; இங்கு-சைதந்யகார்யஞ் சொல்லுகிறார். சைதந்யம் ஈச்வரன் செய்தவளவறிகைக்கும், நினைவறிந்து பரிமாறுகைக்குமிறே. சந்தந (க) குஸுமாதிகள்போலே மிக்கஅம்சம்கழிக்கவேணும். "தனக்கேயாக." ஆத்மா பகவதநுபவாதிசயத்தாலே வெள்ளக்கேடாகாதபடி யிட்ட கரையிறே சரீரம். "நினைதொறுஞ் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்று - அமூர்த்தமான நெஞ்சு உருகுகிறபடிகண்டால், இத்தனைதண்மையுடையவுடல் உருகச்சொல்லவேணுமோ. "ஆராவமுது" இத்யாதி.

(வாய்திறந்து) வாய்திறவாதே மௌநியாய் புஜிக்கும் அம்ர்தமுமுண்டு போலேகாணும். (மடுத்து) பெருவிடாய்ப்பட்டவன் இரண்டுகையையும் மடுக்குமாய்த்து. (உன்னை) நிரதிசயபோக்யனுன வுன்னை. (நிறைத்துக்கொண்டேன்) தேக்கிக்கொண்டேன். "கடிவார்தண்ணந்துழாய்க் கண்ணன்விண்ணவர்பெருமான்" இத்யாதி. "அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே." ஸர்வஜ்ஞனுய், ஸர்வசக்தியாயிருக்குமவனிறே கடல்கடைவான். "'நெஞ்சிடிந்துகும்' என்று, நெஞ்சுமழிந்து, உடலுமுருகுமென்று - இட்டகரையுமழிந்து ஸ்வரூபமு மளவுபட்டிருக்க, இவர் தேக்கிக்கொண்டபடி எங்ஙனே?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க; "'விட்டுசித்தன்மநம்' என்று - அவ்வம்ர்தம் வ்யாபித்தவிடமெல்லாம் திருவுள்ளம் வ்யாபிக்கும்" என்று அருளிச்செய்தார். அவன் கொடுத்தது பரமபக்தியிறே. "அறிவையென்னு மமுதவாறு" என்று - பரமபக்தி பிறந்தபடிசொன்னார்; இங்கு, பிறப்பித்த க்ரமம் சொல்லுகிறார் (உன்னைநிறைத்துக்கொண்டேன்) என்று.

(கொடுமைசெய்யுங் கூற்றமும்) உக்ரதண்டங்களை மாறுமே புஜிப்பிக்கிற யமனும். அக்நி ருத்ரன் யமன்என்னும் மூவரிறே ஸம்ஹாரகர்த்தாக்கள். "[illegible]" "[illegible]" என்னக்கடவதிறே. யமனையொழிந்த மற்றை யிருவர்க்கும்(உ)காதாசித்கமிறே ஹிம்ஸை; யமனுக்கு நித்யம். "பாதிக்கைக்கு சக்தனிவன்" என்றிறே இவனையிட்டது. *வையத்தையும், மநிசனையும்

(க) குஸுமம் - புஷ்பம். (உ) காதாசித்கம் - ஒருகாலவிசேஷம்.

பொய்யென்றிறே காலனையு முடனே படைத்தது. வையமும் மனிசரும் பொய்யாகில் இவனோ மெய்யனு யிருக்கிறுன் என்னில்; [உடனே படைத்தாய்] இவற்றுடனே அவனையும் நசிப்பிக்குமென்று தோற்றுகிறது. அவனைப் பொய்யனும்படி பண்ணிற்று இவன்பாப விசேஷமிறே. சிறைக்கூடத்திலே பிறந்து சிறைக்கூடத்திலே சாவாரைப்போலே, ஸ்ர்ஷ்டி துடங்கி ஸம்ஹாரமறுதியாக நரகாநுபவமிறே பண்ணுவது. (என்கோலாடி குறுகப்பெறு) என்னுடைய ஆஜ்ஞை நடக்குமிடமெல்லாம் புகுரப்பெறுது. (குறுகப்பெறு) புகுந்து போகையன்றிக்கே, அருகும் வரப்பெறுது.

காதாசித்கமாகப் புகுந்ததாகில் செய்வதென்னென்ன; அது என்னையோ கேட்பது உன்கையிலே ஆயுதமிருக்க (தடவரை யித்யாதி) தூரஸ்தரை நெட்டம்பாலே யுருட்டும்; கிட்டநின்றவர்களைக் கையில் திருவாழியாலே கொல்லும். ஆழ்வானையேவியும், அம்பையேவியுமிறே முடிப்பது. (தடவரைத்தோள்) பெரிய மலைபோலேயுள்ள தோள். மலைபோலே பெரியதோளென்னவுமாம். தடம் - பெருமை. தடம்போலேயும், வரைபோலேயு மென்னவுமாம். தடம் - ஸமுத்ரம். (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. (பொன்) கீழே - அம்ர்த த்ர்ஷ்டாந்தமிட்டார்; இதிலே - பொன்னை த்ர்ஷ்டாந்தமாக இடுகிறுர். கீழ்ப்பாட்டிலே - போக்யதை சொன்னுர்; இதிலே - (க) பாவநத்வஞ் சொல்லுகிறுர். "மடுத்துன்னை நிறைத்துக் கொண்டேன்" என்று- அதினுடைய ச்லாக்யதையைச் சொல்லுகிறுர். (௨) *அக்ஷோப்யமுமாய், (ஙு) அகாதமுமான கடலில் அம்ர்த த்ர்ஷ்டாந்த மிட்டார்; இதில், த்வீபாந்தர பதார்த்த த்ர்ஷ்டாந்த மிடுகிறுர். *வாக்குத்தூய்மையிற்படியே அயோக்யதாநுஸந்தாநம்பண்ணி இவரகலப்புக; "நாமிருவரும் ஏகதத்த்வம் என்னும்படிகலந்தபின்பு அதுவென்?" என்று ஈச்வரன் ஸமாதாநம்பண்ண; ஸமாஹிதராய், செய்த வுபகாரத்துக்குத் தோற்று ஸ்தோத்ரரூபத்தாலே ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகிறுர்.

மூ.—பொன்னைக்கொண்டுரைகன்மீதேநிறமெழவுரைத்தாற்போல்,
உன்னைக்கொண்டென் னுவகம்பான் மாற்றின்றி யுரைத்துக்
கொண்டேன், உன்னைக்கொண் டென்னுள்வைத்தே னென்
னையு முன்னிலிட்டேன், என்னப்பா வென்னிருடீகேசா
வென்னுயிர் காவலனே.

---

(க) பாவநத்வம் - பரிசுத்தமாக்குமது. (௨) அக்ஷோப்யம் - கலக்கக்கூடாதது. (ஙு) அகாதம் - மிக்க ஆழமுள்ளது.

ப-ரை.—என் - எனக்கு, அப்பா - தந்தையானவனுய், என்னிருடீகேசா - என் இந்த்ரியங்களுக்கு விஷயபூதனுய், என் - என்னுடைய, உயிர் - ஆத்மாவை, காவலனே - அந்யசேஷமாகாதபடி காக்குமவனே; பொன்னே—,நிறமெழ - நிறம்பார்க்க, உரைகல்மீது - உரைகல்லிலே, உரைத்தாற்போல் - உரைக்குமாபோலே, உன்னைக்கொண்டு—, என்—, நாவகம்பால் - நாக்குள்ளே, மாற்று இன்றி - மாற்றழியும்படி, உரைத்துக்கொண்டேன் - பேசிக்கொடு நின்றேன்; உன்னைக்கொண்டு - உன்னுடைய அங்கீகாரங்கொண்டு, என் உள்வைத்தேன் - என்னுடைய அநுபவத்துக்கு விஷயமாக்கினேன்; என்னையும்—, உன்னில் - உன் திருவடிகளிலே, இட்டேன் - ஆத்ம ஸமர்ப்பணம்பண்ணினேன்.

வ்யா.—(பொன்னித்யாதி) பொன்னை நிறம்பார்க்க உரைகல்லிலே உரைக்குமாபோலே. (நிறமெழ) நிறமறிய. பொல்லாப்பொன்னை உரைகல்லிலேயுரைத்த போதாக நல்லநிறமுண்டாகிறதன்றே; உள்ளமாற்றிறே காட்டுவது. நல்ல பொன்னையும் பொல்லாப்பொன்னையும் உரைகல்லிலே நிறம்பார்க்க வுரைக்கக்கடவதிறே; அப்படியே. (உன்னைக்கொண்டு) வேதங்களாகிற வுரைகல்லிலே யுரைத்தாலும் “நிறமுயர்கோலமும்” என்கிறபடியே அவ்வருகான வுன்னை. (என்நாவகம்பால்) * அற்பசாரங்களிலே மண்டினவென்நாக்கிலே; அஸத்கீர்த்தந காந்தாரத்திலே புக்கு அலமர்ந்தவென்நாக்கிலே. திருப்பல்லாண்டுதொடங்கி இவ்வளவும்வர க்ர்ஷ்ணநுபவம் பண்ணினத்தையு மறிகிறிலர். பூர்வவ்ர்த்தத்தைப் பார்த்து * வாடினேன்வாடி துடங்கி திருப்பதிகளிலே மண்டி அநுபவித்த திருமங்கையாழ்வாரும்,*மாற்ற முளவிலே அஞ்சினரிறே. (என்நாவகம்பால்) என்நாக்குள்ளே. அகம்-உள். (மாற்றின்றியுரைத்துக்கொண்டேன்) மாற்றழியும்படி பேசிக்கொடுநின்றேன். நல்ல பொன்னை நல்லகல்லிலே உரைத்தாலிறே அறியுலாவது. தரமல்லாத கல்லிலே யுரைப்பாரைப்போலே, உன்னை யென்நாக்காலே தூஷித்தேன். “பொன்” என்கிறது-ஈச்வரனை; “கல்” என்கிறது-நாக்கை. (மாற்றின்றியுரைத்துக்கொண்டேன்)ஒன்றுந்தப்பாதபடி சொன்னேனென்னவுமாம்.

(உன்னையித்யாதி) வாரீர் ஆழ்வீர், நீரிப்படி சொல்லக்கடவீரோ;* உம்மை இராப்பகலோதுவித்து, சொல்பயிற்றிப் பணிசெய்யும்படி பண்ணி, “வயிற்றில் தொழுவைப்பிரித்து” என்று - விரோதிகளையும் போக்கி, *சேருந் திருக்கோயிலாம்படி பண்ணி, * அரவிந்தப்பாவையுந் தானுமாய் * அரவத்தமளியுள்ளிட்ட அகம்படியோடே புகுந்த நம்மைக்கண்டு களித்துக் காப்பிட்டு, “உறகல்” என்று - நித்யரையும் அதிசங்கைபண்ணும்படியான ப்ரேமம் விளையும்படிபண்ணின நம்முன்பே க்ர்தக்நரைப்போலே சொல்லுவீரோவென்ன; பயப்பட்டு (உன்னைக்கொண்டென்னுள்வைத்தேன்) என்

கிறார். (உன்னைக்கொண்டு) நிரதிசயபோக்யபூதனாய், ஸ்ப்ருஹணீயனான வுன்னுடைய அங்கீகாரங்கொண்டு. (என்னுள்வைத்தேன்) "விட்டுசித்தன்மனத்தேகோயில்கொண்ட" என்னும்படி, என்னுடைய அநுபவத்துக்கு விஷயமாக்கினேன். (என்னையும்) நீ இப்படி மேல்விழுந்து ஆதரிக்கைக்கு யோக்யனான வென்னையும். (உன்னிலிட்டேன்) உன் திருவடிகளிலே ஆத்மஸமர்ப்பணம் பண்ணினேனென்று ஆத்மஸமர்ப்பணம்பண்ணுகிறார். "[Grantha text]" 'நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா: நம இத்யேவவாதிந:' என்று, அநுபவஜநிதப்ரீதி தலைமண்டையிட்டால் பண்ணுமதிறே. "உண்டுகளித்து" இத்யாதி.

என்னப்பா, மாற்றின்றி-கலப்பின்றி, பொன்னை நிறமெழவுருக்கி பரீக்ஷார்த்தமாக உரைகல்லிலே உரைக்குமாபோலே, மாற்றின்றியுரைத்துக்கொண்டேன் - கலப்புப்படாதபடி யுருக்கி என் நாக்காகிற உரைகல்லிலே உரைத்துக்கொண்டேன். அவன்பண்ணின வுபகார பரம்பரைகளைச் சொல்லுகிறார் (என்னப்பா) எனக்கு ஜநகனானவனே. (என்னிருடீகேசா) என்னிந்த்ரியங்களுக்கு நீயே விஷயபூதனானவனே. "நாக்கு நின்னையல்லாலறியாது" என்றும், "கண்டு நானுன்னையுகக்க" என்றும், "வேறொருவரோ டென்மனம்பற்றாது" என்றும், "மற்றோருயிர்ப்பிடம்நானெங்குங்காண்கின்றிலேன்" என்றும், "உண்ணாநாள்பசியாவதொன்றில்லை" இத்யாதி. "இருடீகேசனெம்பிரான்" என்னக்கடவதிறே.

(என்னுயிர்காவலனே) "மாலருளால்" என்று - மீண்டும் அவன் ப்ரஸாதத்தாலே தாமுளரான நம்மாழ்வாரைப்போலே, அயோக்யதாநுஸந்தாநத்தாலே அகன்று முடியாதபடி பண்ணினவனே என்கிறார். அங்ஙனன்றிக்கே, "கருவிருந்தநாள்முதலாக்காப்பு" என்கிறபடியே, யோக்யதையில்லாதகாலத்திலும் ஸத்தையை நோக்கினவனே என்றுமாம்.

அதவா, (பொன்னித்யாதி) நிறமுண்டான பொன்னை உரைகல்லிலே உரைத்தாற்போலே, "பொன்னிவர்" என்றும், "செம்பொனே திகழுந்திருமூர்த்தி" என்றும் சொல்லுகிற வுன்னை என் நாக்காலே உரைத்து, "மாற்றுமுரையுமுற்ற நல்லபொன்போலே நானுமானேன்" என்று ஸாம்யாபத்தியைச் சொல்லுகிறதென்றுஞ் சொல்லுவர்கள். (ரு)

அ.—ஆறும்பாட்டு. (உன்னுடையவித்யாதி) கீழிற்பாட்டில் - "உன்னைக்கொண் டென்னுள் வைத்தேன்" என்றார்; வைத்த ப்ரகாரம் சொல்லுகிறது - இப்பாட்டில்.

மூ.—உன்னுடையவிக்கிரமமொன்ருெழியாமலெல்லாம்
என்னுடையநெஞ்சகம்பால்சுவர்வழியெழுதிக்கொண்டேன்
மன்னடங்கமழுவலங்கைக்கொண்டவிராமனம்பீ
யென்னிடைவந்தெம்பெருமா னினியெங்குப்போகின்றதே.

ட-ரை.—உன்னுடைய—, விக்கிரமம்-திருவிளையாட்டுக்களில், ஒன்று - ஒன்றும், ஒழியாமல் - தப்பாதபடி, எல்லாம் - எல்லாவற்றையும், சுவர்வழி - சுவரிலெழுதும்சித்ரம்கண்ணுக்குத்தோற்றுமாப்போலே, என்னுடைய—, நெஞ்சகம்பால் - நெஞ்சிலே, எழுதிக்கொண்டேன் - ப்ரகாசிக்கும்படி பண்ணிக்கொண்டேன்; மன் - துஷ்ட க்ஷத்ரியர்கள், அடங்க - இருந்தவிடம் தெரியாதபடி அழிகைக்கிடாக, மழு - மழுவை, வலங்கைக்கொண்ட - வலதுகையில் தரித்த, இராமன் - பரசுராமாவதாரஞ்செய்தருளின, நம்பீ-குணபூர்ணனாய், எம்பெருமான் - எனக்கு உபகாரகனானவனே, என்னிடை - சேஷபூதனான என்னிடத்திலே, வந்து—, இனி—, எங்குப்போகின்றது - எங்கேபோகப்புகுகிருயென்கிருர்.

வ்யா.—(உன்னித்யாதி) உன்னுடைய திவ்யாபதாநங்கள் ஒன்ருெழியாமலெல்லாவற்றையும், சுவரிலே சித்ரமெழுதினால் அது கண்ணுக்குத் தோற்றுமாபோலே, என்னுடைய நெஞ்சிலே யிவையெல்லாம் ப்ரகாசிக்கும்படி பண்ணிக்கொண்டேன். உன்னுடைய ஸ்வரூபரூப குணங்களையன்று, உன்னுடைய அபதாநங்களையிறே. "எல்லாம்" என்னுநிற்க, "ஒன்ருெழியாமல்" என்றது - வ்யாஸ வால்மீகிகளுக்கு ப்ரகாசியாதவையு மிவர்க்கு ப்ரகாசிக்கையாலே. "சீமாலிகன்," "மல்லிகைமாமாலை." ப்ரகாசியாமைக்கடி ஸத்த்வதாரதம்யம்; அதுக்கடி-ப்ரஸாததாரதம்யம். கர்மவச்யருமாய், அசுத்த க்ஷேத்ரஜ்ஞருமான ப்ரஹ்மாதிகளுடைய ப்ரஸாதமிறே - அவர்களுக்கு; இவர்க்கு, * திருமாலால் * திருமாமகளால் * பீதகவாடைப் பிரானுருடைய ப்ரஸாதத்தாலேயிறே. ஸர்வஜ்ஞனுக்கும் "உனக்கொன்றுணர்த்துவன் நான்" என்றும், "அவனெனக்கு நேரான்" என்றும், "என்மதிக்கு விண்ணெல்லாமுண்டோ விலை" என்றும் இவர்கள் சொல்லும்படியிறே ஸத்த்வ தேவதையான ஸர்வேச்வரனுடைய ப்ரஸாதத்தாலே பெற்ற ஜ்ஞாநம்.

(உன்னுடைய விக்கிரமமித்யாதி) "மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா" என்று துடங்கி இவ்வளவாக அநுபவித்த அபதாநங்களை அருளிச்செய்கிருர்; * கோவை வாயாளிலும் * குரவையாய்ச்சியரிலும் தன்னுடைய ப்ரணயித்வ குணத்தைக்காட்டி நம்மாழ்வாரையனுபவிப்பித்தாப்போலே. ரிஷிகளுக்குப்போலே புண்யமென்ருெரு கையாலே புதைத்துவிடுகிற ஜ்ஞாநமல்லாமையாலேஇவர்க்கு முற்றூட்டாக்கிக் கொடுக்குமிறே. ஸகலார்த்தங்களும் பகவத்ப்ரேமமுடையார்க்கிறே ப்ரகாசிப்பது. ரிஷிகளைப்போலே கேவல

ஜ்ஞாநமே யன்றிக்கே ப்ரேம தசையிலேயிறே இவர்களிருப்பது. இதுதான் அவன்கொடுத்த ப்ரேமமிறே. * மதியோபாதி நலத்தை யுமருளினனிறே. முற்பட்ட ப்ரேமம் அவனது ; இதுகண்டுகந்த ப்ரேமம் இவரது. "கிடந்திருந்து நின்றளந்து" "ஆனானயன் மீனோடேனமுந் தானானன்" என்கிறபடியே, அவன்அவ்வபதாநங் களை ப்ரகாசிப்பிக்கைக்கடி யென்னென்னில்; "என்னில்தானாய சங்கே" என்றருளிச் செய்தாரிறே.

(மன்னடங்க) நம்முடைய அபதாநங்கள் இப்படி ப்ரகாசித்த வளவில் உம்முடைய விரோதிசெய்த தென்னென்ன ; என்னளவன் றிக்கே * எந்தை தந்தையிற்படியே மூவேழிருபத்தொரு படிகால், •ఃసలంపిష్టపరిగ్రహః" ••கூ-ஈ ஸம்விஷ்ணவேஸி ஹதே" •ఃసలచవిత్రంజనస్నీకృతా ஸ்" * கூ-ஸம்வஷித்ருஜநநீக்ருதா ஏா விற்படியே ஆச்சுதென்கைக்கு த்ர்ஷ்டாந்தம் (மன்னடங்க) என்று. அஹங்காரக்ரஸ்தரான ராஜா க்களை நிரஸிக்கைக்கடியான வேஷத்தையும் ஆயுதத்தையும், அதுக் கடியான ஜ்ஞாநசக்த்யாதி குணங்களால் பரிபூர்ணனானவனே. (மழு வலங்கைக்கொண்ட) மழுப்பிடித்த பிடியிலே விரோதிகள் முடிந்த படி; வ்யாபரிக்கவேண்டிற்றில்லை. "வற்புடையவரைநெடுந்தோள்" இத்யாதி. அநேகாயுததரராய்க்கொண்டு எதிர்ந்த அநேக ராஜாக் களை ஓராயுதங் கொண்டிறே நிரஸித்தது.

(என்னித்யாதி) என் சேஷத்வத்தையும், உன் சேஷித்வத்தை யும் உதறிப்படுத்தபின்பு உனக்குப்போக்கு இனியெவ்விடத்திலே? என் ஸ்வயத்நத்தாலே வந்ததாகிலிறே உனக்குப் போகலாவது ; உன்னருளாலே புகுந்த நீ போகக்கடவையோ. (இராமன் நம்பீ - எங்குப்போகின்றதே) "மன்னஞ்ச வாயிரந்தோள் மழுவில் துணி த்தமைந்தா, என்னெஞ்சத்துள்ளிருந்திங் கினிப்போய்ப் பிறரொரு வர், வன்னெஞ்சம்புக்கிருக்க வொட்டேன் வளைத்துவைத்தேன்" என்று - அவருமொருவர் வளைத்தாரிறே. போனால் என்செய்வீ ரென்ன ; இதேதேனும் தன்னரசுநாடோ, பெண்ணரசுநாடோ. "நன்னெஞ்சவன்னம்மன்னும்" இத்யாதி. "மழுவினால் மன்ன ராருயிர் வவ்வியமைந்தனும் வாரானால்" என்று-*உன் வரவுபார்த்தி ருந்த நான் போக ஸம்வதிப்பனோ. "வென்றிநீள்மழுவா வியன்ஞா லமுன்படைத்தாய்," "வடிவாயமழுவேந்தியுலகமாண்டு" "இருநில மன்னர்தம்மை யிருநாலுமெட்டும்- மழுவாளில் வென்றதிறலோன்- பெருநிலமுண்டுமிழ்ந்த பெருவாயர்" என்று - யோக்யதையில்லாத காலத்தே ஸ்ர்ஷ்டித்தும் ரக்ஷித்தும், ஆபத்தசையிலே வயிற்றிலே வைத்துநோக்கியும் போருமவனல்லேயோ நீ.

(எம்பெருமான்) உன் ஸ்வாமித்வத்துக்குப் போருமோ. (இனி) உன் க்ர்ஷிபலித்துத் திருப்பல்லாண்டு துடங்கி இவ்வளவும்

வந்தபின்பு போக்குவரத்துண்டாம்படியோ நாமிருவருங்கலந்தபடி. "உன்னைக்கொண் டென்னுள் வைத்தேன்" இத்யாதி. "கொண்டதாளுறி கோலக்கொடுமழு" என்று இடையர்க்கும் மழுஆயுதம்; ஆயுதஸாம்யத்தாலே இவனையும் க்ர்ஷ்ணனோடொக்க அங்கீகரிக்கிறார். "தெவ்வாய மறமன்னர்" இத்யாதி; * திருக்குலத்தி லிறந்தோர்க்கோ த்ர்ப்திபண்ணலாவது, எங்களுக்கு த்ர்ப்திபண்ணலாகாதோ.

ஆக, இப்பாட்டால் - அவன் வந்து புகுந்த ப்ரகாரத்தையும், அவன்போனால் தாம்முடியும்படியான அவஸ்தை பிறந்தபடியையும், அவனுக்குப் போக்கின்றிக்கே நிற்கிறநிலையையும், நிர்ஹேதுகமாக விஷயீகரித்த ப்ரகாரத்தையும் சொல்லுகிறது. (௬)

௭.—ஏழாம்பாட்டு. (பருப்பதத்துக் கயல்பொறித்த) கீழ்ப்பாட்டிலே - "என்நாவகம்பால் மாற்றின்றியுரைத்துக்கொண்டேன்" என்றது அவன் நிர்ஹேதுகக்ர்பையாலே என்னுமிடத்தை இப்பாட்டிலே யருளிச்செய்கிறார்.

மூ.—பருப்பதத்துக்கயல்பொறித்தபாண்டியர்குலபதிபோல்
திருப்பொலிந்தசேவடியென்சென்னியின்மேற்பொறித்தாய்
மருப்பொசித்தாய்மல்லடர்த்தாயென்றென்றுன்வாசகமே
உருப்பொலிந்தநாவினேனையுனக்குரித்தாக்கினையே.

ப-ரை.—பருப்பதத்து - மஹாமேருவிலே, கயல்-தனது மகரத்வஜத்தை, பொறித்த-நட்ட, பாண்டியர்குலபதிபோல்-பாண்டியவம்சத் தரசனைப்போலே, திரு - அழகு, பொலிந்த - விஞ்சியிருப்பதாய், சே - செவ்விதாயிருந்துள்ள, அடி - திருவடிகளை, என்சென்னியின்மேல் - என்தலையின்மேலே, பொறித்தாய்- அலங்க்ரித்தவனே, மருப்பு-குவலயாபீடத்தின்கொம்பை, ஒசித்தாய் - முறித்தவனே, என்று - என்றும், மல் - சாணூரமுஷ்டிகரான மல்லரை, அடர்த்தாய் - நிரஸித்தவனே, என்று-என்றும், உன்வாசகம்-உன்குணங்களுக்கு வாசகமான திருநாமங்களை, உருப்பொலிந்த-உருச்சொல்லாநின்றுள்ள,நாவினேனை-நாக்கையுடைய வென்னை, உனக்கு—, உரித்தாக்கினையே - உரித்தாம்படிசெய்தாயே! என்று ஈடுபடுகிறார்.

வ்யா.—(பருப்பதமித்யாதி) பாண்ட்யவம்சத்துக்கு நிர்வாஹகனாயிருப்பானொருராஜா தானிருந்த தேசத்தில் நின்றும் மஹாமேருவளவும் வழியிலுள்ள காடு (௧) சீய்த்து வன்னியமறுத்துத் தனக்குந் தன்பரிகரத்துக்கும் போகலாம்படி பெருவழியாக்கிக்கொண்டு சென்று, மஹாமேருவிலே தன்வெற்றியெல்லாந்தோற்றும்படி தன்னடையாளத்தையுமிட்டுப் போந்தான். "పురూరవసుతశ్శ్రీమాన్ నిర్ద్యు మ్నో మహాబలః । తస్య పుత్రో మహాభాగో మలయాచలకేతుమాన్ ॥ సవిజిత్యాన్యనృపాన్

(௧) சீய்த்து - வெட்டி.

సర్వాన్ మేరోర్దక్షిణపార్శ్వగాన్ । మేరోస్స్వనామచిహ్నాంశ్చ లిఖిత్వాన్యపసత్ప్రభుః” “[illegible] ॥ [illegible]” என்னக்கடவதிறே. அப்படியே, பரமபதம் கலவிருக்கையான ஈச்வரன் அங்குநின்று மிவர் பக்கலிலே வருமளவுமுண்டான *பாவக் காட்டையும் சீய்த்து இவர் வன்னியத்தையு மறுத்து இவர் *சென்னித்திடரிலே பாதவிலச்சினை வைத்தபடிக்குத்ருஷ்டாந்தமாகிறது. இவர் வருதல் இருவரும் பாதிபாதிவழிவருதல் செய்கையன்றிக்கே, அவன்தானே வந்தானுய்த்து. மலைக்குள்ளது விலக்காமையிறே. அப்படியே, வருவானும், வழியிலுள்ள விரோதிகளைப் போக்குவானும், தன்விஜயத்துக்கு அடையாளமிடுவானும்தானேயிறே. இவர்க்கும் * ஏதங்களாயின வெல்லா மிறங்கலிடுவித்துப் பாதவிலச்சினை வைத்தான். தான் பரமபதத்தில் நின்று மிவர்பக்கல்வந்த ப்ரகாரமிருக்கிறபடி. “விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்- நீண்மதிளரங்கத்தம்மான் திருக்கமலபாதம்வந்தென் கண்ணினுள்ளன” என்னக்கடவதிறே.

(திருப்பொலிந்தசேவடி) அழகு விஞ்சியிருப்பதாய் ருஜுவான திருவடிகள். ஆர்ஜவகுணமிருக்கிறபடி. இவன் செவ்வைக்கேடே தனக்குச் செவ்வையாகை. ஐச்வர்ய சிஹ்நங்களையுடைத்தான திருவடிகள். * கதாபுநவில் சொல்லுகிறபடியே * பார்த்திவவ்யஞ்ஜநாங்கிதமான திருவடிகள். (என்சென்னியின்மேல் பொறித்தாய்) அநாதிகாலம் அப்ராப்தவிஷயங்களின் காற்கடையிலே துவண்ட வென்தலையின்மேலே, “அமரர்சென்னிப்பூ” என்றும் “வானவருச்சிவைத்தபெருமணி” என்றும் நித்யஸூரிகளுக்குத் தலையலங்காரமான பொன்னும் பூவுமான உன் திருவடிகளை யென்தலையிலே அலங்கரித்தாய். “நீள்கழல்சென்னிபொருமே.” பொருமே-பொருந்துமே; (க) கொக்கிவாயும் படுகண்ணியும்போலே. தன் வெற்றிக்கும் என்தோல்விக்கு மடையாளம் - ஸ்வாதந்த்ர்யம்போகையும், சேஷத்வம்பெறுகையும் இவர்க்குகப்பிறே; “ராஜந்” “ராஜந” என்றது போகையும் சேஷத்வம் பெறுகையும் ஸ்ரீபரதாழ்வானுக்கு உகப்பிறே. இதுதான் தானுமவனு மறிந்தவளவுபோராது; “மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்” என்று - அவனும் தானுமறியில் ஸ்வரூபஹாநி யில்லையென்றிருக்கிலும் பிறர்சொல்லில் ஸ்வ

(க்) கொக்கிவாயும் படுகண்ணியும் - ஆபரணங்களின் கொக்கியினுடைய வாயும் குளைச்சான கண்ணியும்.

ரூபஹாநியானுற்போலே, புறம்புள்ளாருமறிய சேஷபூதனுகவேணும். பெருமாளும், ஸ்ரீபரதாழ்வானைப்பார்த்து "நம்மை மீட்டுக்கொண்டு போகையிலும், உன்னை 'ஸ்வதந்த்ரன்' என்றவர்கள்முன்னே உன் பாரதந்த்ர்யத்தைப் பெற்றுப் போகப்பார்" என்று திருவடிநிலைகளைக் கொடுத்தாரிறே. "என்தலைமிசையாய்" என்கிறதசை. (பொறித்தாய்) கர்மபாரதந்த்ர்யத்தால் பொறித்த பொறிபோலன்றே ஈச்வர பாரதந்த்ர்யமாகப் பொறித்த பொறி.

(மருப்பொசித்தாய்) தோற்ருரிறே வென்ருரை ஸ்தோத்ரம் பண்ணுவார். "ஏத்துகின்ருேம் நாத்தழும்ப விராமன் திருநாமம்" என்னக்கடவதிறே. இவரும் அவனுடைய வீரவாதங்களைச் சொல்லி ஸ்தோத்ரம்பண்ணுகிருர். தானே சென்று விரோதி நிரஸநம் பண்ணினபடி. (மருப்பொசித்தாய் மல்லடர்த்தா யென்றென்று) மருப்பொசித்தா யென்றும், மல்லடர்த்தா யென்றும், உன் குணங்களுக்கு வாசகமான திருநாமங்களைப் பலகால்சொல்லி. (உருப்பொலிந்த நாவினேனை) செவ்வாய்க்கிழமையை "மங்களவாரம்" என்னுமாபோலே, விபரீதலக்ஷணை. இதர விஷயங்களிலேயிறே என் நாக்கு உருப்பொலிந்தது. உருப்பொலிகை - தழும்பேறுகை. "நாத்தழும்பெழ நாரணவென்றழைத்து" என்னக்கடவதிறே. (உனக்குரித்தாக்கினையே) இப்படிசெய்தாயே!; நான் சொன்னபடியாகவோ நீ விஷயீகரித்தது. அன்றிக்கே, நிர்ஹேதுகமாக விஷயீகரித்தா யென்கிருர். (எ)

அ.—எட்டாம்பாட்டு. (அநந்தன்பாலும்) அத்வேஷந்துடங்கி பரபக்தியளவாக இடையிலுள்ள ஆத்ம குணங்களைப்பிறப்பித்து, அநந்தரம் பரஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, விரோதியை அசல்பிளந்தேறிட்டு மாநஸ ஸம்ச்லேஷமாத்ர மன்றிக்கே பாஹ்ய ஸம்ச்லேஷமாம்படி பண்ணினு னென்ருர் - கீழ்; ஸத்தையே பிடித்து பகவதநுபவமே யாத்ராயாய்ப் போந்தவர்களன்ருே என்றும், இவர் அநாதி காலமே பிடித்து நித்யஸம்ஸாரியாய் இதர விஷயங்களோடே கலந்து பரிமாறிப் போந்தவரன்ருே என்றும், அவர்களேற்றமும், இவர் தண்மையும் இவர் நெஞ்சில் படாதபடி அவன் அநுபவிப்பித்தபடியை அருளிச்செய்கிருர் - இப்பாட்டில்.

மூ.—அநந்தன்பாலுங்கருடன்பாலுமைதுநொய்தாகவைத்தென்
மநந்தனுள்ளேவந்துவைகிவாழச்செய்தாயெம்பிரான்
நினைந்தென்னுள்ளேநின்றுநெக்குக்கண்களசும்பொழுக
நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேனேமிநெடியவனே.

ப-ரை.—நேமி - திருவாழியைத்திருக்கையிலேயுடைய, நெடியவனே - ஸர்வாதிகனானவனாய், எம்பிரான் - எனக்கு உபகாரகனானவனே, அநந்தன்பா

லும் - திருவநந்தாழ்வானிடத்திலும், கருடன்பாலும் - பெரியதிருவடியிடத்தி லும், ஐது நொய்தாகவைத்து - ஸ்நேஹத்தைஅத்யல்பமாகவைத்து, என்மநந் தன்னுள்ளே - என் மநஸ்ஸிலே, வந்து - ஒருகாரணமில்லாமல் வந்து, வைகி - பொருந்திநின்று, வாழச்செய்தாய் - என்னை வாழ்வித்தருளினாய்; இப்படிப் பட்ட வுன்னை, என்னுள்ளே - என் மநஸ்ஸிலே, நினைந்துநின்று - நினைத்து நின்று, நெக்கு - நெஞ்சுசிதிலமாய், கண்கள்—, அசும்பு ஒழுக - அசறுபாயும் படி, நினைந்திருந்து-நீ பண்ணின உபகார பரம்பரைகளை அநுஸந்தித்துக்கொண் டிருந்து, சிரமம் - என்னுடைய இளைப்பெல்லாம், தீர்ந்தேன்-தீரப்பெற்றேன்.

வ்யா.—(அநந்தனித்யாதி) த்ரிபாத்விபூதியிலுள்ளாரெல்லாரு மொத்திருக்கச் செய்தே இவர்களுக் கோரேற்றம் - ஸர்வகாலமும் திருமேனியோடே ஸ்பர்சிக்கையும், தர்சநீயத்தி னினிமையாலே மோம்பழம்போலே முன்னே வைத்துக்கொண் டிருக்கையுமிறே; இப்படிக்கொத்த விவர்கள் பக்கலிலே ஸ்நேஹத்தை அத்யல்பமாக வைத்து. இவ்வளவுதான் வைக்கிறது-இவர்பககல் வரும்போதைக்கு * சென்றால் குடையா மிருந்தால் சிங்காசனமாம், *நின்றால் மரவடி யாகைக்கும், மணிவிளக்காகைக்கும், பூம்பட்டாகைக்கும். * பொரு சிறைப்புள்ளுவந்தேறி இவர்பக்கல் வருகைக்கு வாஹநமாகைக் கும். சேர விடுகைக்குப் பெரியபிராட்டியாரும் வேணுமிறே; அது க்குறுப்பாக வாய்த்து அவர்களை விஷயீகரித்தது. இவர்களை விஷ யீகரித்ததுதானிவர்க் குறுப்பானால் மற்றுள்ளாரைச் சொல்லவே ண்டாவே.

(என்மநந்தனுள்ளே) அநாதிகாலம் இதர விஷயத்திலே மண் டினவென் மநஸ்ஸிலே. (வந்து) (க) அஹேதுகமாகவந்து. (வைகி) அவஸரித்து; பொருந்தி யென்னவுமாம். "வந்தாயென் மநம்புகுந் தாய் மன்னிநின்றாய்" "போயறியாய்" என்றிறே ஈடுபடுவது. (வா ழ) "அநந்தன் பாலுங் கருடன் பாலும் ஐதுநொய்தாகவைத்து" என்றது - ப்ரதம விவாஹத்துக்குச் செங்கற் சீரை கட்டி கூப்பிடா மைக்குச் சோறு வைப்பாரைப்போலே. த்விதீயவிவாஹத்திலே யிறே போக்யமுள்ளது. (வாழச்செய்தா யெம்பிரான்) என்னையன் செய்தபடியென்!. (எம்பிரான்) இவர்தண்மைபாராதே உபகரித்த வுபகார மிருக்கிறபடி. த்ரிபாத்விபூதியிலுள்ளாரெல்லாரோடும் பரி மாறும் பரிமாற்றமெல்லாம் இவரொருவரோடும் பரிமாறின வுபகா ரம். "கருளப்புட் கொடிச்சக்கரம் - அடிமைகொண்டாய்" என்று- நித்யஸூரிகளை விட்டு நித்யஸம்ஸாரிகளுக்குப் புறம்பான தம்மை அடிமைகொண்ட வுபகாரம்.

(நினைந்தென்னுள்ளே நின்று) இவர் ப்ராயச்சித்த குடிபோலே, அவர்களேற்றத்தையும், தம்முடைய தண்மையையும், நினைத்துக்

(க) அஹேதுகமாக - ஒருஹேதுவில்லாமல்.

கூசாதபடி பண்ணினபடியும், அவர்கள் பக்கல் ஆதரம் குளப்படி யென்னும்படி தம்பக்கல் கடல்போலே அவன் பண்ணின ஆதராதிசயத்தையும், இவர்தண்மை பாராதே இவர்நெஞ்சில் புகுந்தபடியையும் நினைத்து, என்னிலே நினைத்துநின்று. (நெக்கு) "நினைதொறும் - நெஞ்சிடிந்துகும்" என்கிறபடியே, நெஞ்சுசிதிலமாய். (கண்கள் அசும்பொழுக) உள்ளுருகினது புறவெள்ளமிட்டபடி. அசும்பு ஒழுக - அசறுபாய.

(நினைந்திருந்தே சிரமந்தீர்ந்தேன்) நீ பண்ணின வுபகாரபரம்பரைகளை அநுஸந்தித்திருந்தே சிரமந்தீர்ந்தேன். ஓடியாடின இளைப்பெல்லாம் இருந்தவிடத்தேயிருந்து ஆறினேன். சிரமம்-ச்ரமம்; இளைப்பு. ஸம்ஸாரிகள்பக்க லுபகாரபரம்பரைகளைப்பண்ணிக்கொண்டு போராநிற்க, காதாசித்கமாக வுபகாரத்திலே ஒன்று குறைதல் ஒரு உபகாரம் புகுருதல் செய்தால், முன்புபண்ணின வுபகாரங்களையும்மறந்து இதொன்றையுமே நினைத்துக் கொண்டிருப்பர்கள்: அநாதிகாலமேபிடித்து இவர்கள்பண்ணும் ப்ராதிகூல்ய பரம்பரைகளொன்றையும் பாராதே, ஓரவகாசத்திலே (க) அபுத்திபூர்வகமாக (உ) ஓராநுகூல்யைகதேசத்தைக் கொண்டு, முன்பு பண்ணினவற்றைப் பொறுத்துரக்ஷிக்கும் ஈச்வரன் என்றநுஸந்தித்து, அவ்விழவு தீர்ந்தேன்-நெஞ்சாறல் கெட்டேன். (நேமிநெடியவனே) இவர்தாம்பற்றிற்று நிர்விசேஷவஸ்துவையன்றே. (நெடியவனே) கையும் திருவாழியுமான வழகுக்கு எல்லைகாண வொண்ணாதவனே. *நிமிர் சுடராழி நெடுமாலிறே *அமுதிலுமாற்றவினியன். விரோதியற்ற பின்பு அழகுக்குடலிறே திருவாழி. (நெடியவன்) ஆழ்வார்பக்கல் ப்ரேமம் விளைந்தபடி யென்றுமாம். (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. (பனிக்கடலித்யாதி) கீழ்ப்பாட்டில்- "அநந்தன்பாலும் கருடன்பாலும்" என்று - தன்னை புஜிக்கைக்கு போக்தாக்கள் ஒருவிபூதியாக வுண்டாயிருக்கக் கிடீர் அவர்களை விட்டு என்னை விரும்பிற்றென்கிறார்; இப்பாட்டில் - போகஸ்தாநங்கள் பலவுமுண்டாயிருக்கக்கிடீர்அவற்றை (ங) உபேக்ஷித்து என்நெஞ்சை போகஸ்தாநமாகக் கொண்டபடி யென்கிறார்.

மூ.—பனிக்கடலிற்பள்ளிகோளைப்பழகவிட்டோடிவந்தென்
மனக்கடலில்வாழவல்லமாயமணாளநம்பீ
தனிக்கடலேதனிச்சுடரேதனியுலகேயென்றென்
றுனக்கிடமாயிருக்கவென்னையுனக்குரித்தாக்கினையே.

---

(க) அபுத்திபூர்வகமாக - தன்னையறியாமல். (உ) ஓராநுகூல்யைகதேசம் - ஒரு அற்பமானநன்மை. (ங) உபேக்ஷித்து-அசட்டைசெய்து

ப-ரை.—பனி - குளிர்ச்சியே ஸ்வபாவமான, கடலில் - திருப்பாற்கடலில், பள்ளிகோளை - பள்ளிகொள்ளுதலை, பழகவிட்டு - மறந்துவிட்டு, ஓடிவந்து—, என் மநக்கடலில் - என் மநஸ்ஸாகிற கடலிலே, வாழவல்ல - வாழவல்லவனாய், மாய - ஆச்சர்யசக்தியுக்தனாய், மணாள - பெரியபிராட்டியார்க்கு வல்லபனாய், நம்பீ - குணபூர்ணனானவனே; தனிக்கடல் - அத்விதீயமான திருப்பாற்கடல், தனிச்சுடர் - அத்விதீயமான ஆதித்யமண்டலம், தனியுலகு - அத்விதீயமான பரமபதம், என்றென்று - என்றுசொல்லுகிற தேசங்கள், உனக்கு இடமாயிருக்க—, என்னை—, உனக்கு—, உரித்தாக்கினையே - சேஷமாக்கிக்கொண்டாயே! என்று ஈடுபடுகிறார்.

வ்யா.—(பனிக்கடலில் பள்ளிகோளை) ஸகலதாபஹரமான கடல். ஸம்ஸாரத்தில் (க) தாபத்ரய தப்தரானவர்களுக்குத் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளுகிறபடியை அநுஸந்திக்கப் போமென்கை. சீதளஸ்வபாவமானகடல். "பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளுஞ் சீதனை" என்று - அவனுடைய ஸ்வபாவம் இதுக்குண்டா யிருக்கிறபடி. ஸம்பந்தமடியான வாத்ஸல்யம். (பள்ளிகோளை) பள்ளிகொண்டபடி யென்னுமித்தனை, பாசுரமிடப் போகாது. "கிடந்ததோர் கிடக்கை" என்றும், "ஏரார்கோலந் திகழக்கிடந்தாய்" என்றும் சொல்லுமித்தனையிறே. "நாளும் வாய்க்க" என்கிறபாட்டில் ஒருபோலிசொல்லு மித்தனையிறே. இவர்தாமும் "வெள்ளை வெள்ளத்தின்மேல்" என்று - ஆசைப்பட்டபடியே வந்து புகுந்தானாய்த்து. (பழகவிட்டு) அங்குண்டான ஆசையை நேராக மறந்துவிட்டு.

(ஓடிவந்து) காதக்குதிரை கட்டியாய்த்து வந்தது. (என்மநக்கடலில் வாழவல்ல) அது பனிக்கடலாகையாலே குளிர்ந்திருக்கும்; இது மநக்கடலாகையாலே குளிர் கெட்டிருக்கும். அது ஊற்று மாறிலும் இது ஊற்று மாறாது. பனிக்கடலையும் தனக்குள்ளே அடக்குங்கடலிறே. "பரவைத்திரை பலமோத" இத்யாதி. இக்கடலைக் கண்டவாறே பனிக்கடல் காட்டுத்தீயோ டொத்தது. (வாழவல்ல) செருக்கரான ராஜாக்கள் பழைய படைவீட்டை விட்டு, தாங்களே காடுசீய்த்துச் சமைத்த படைவீட்டிலேயிறே ஆதரத்தோடே யிருப்பது. ஸாதந தசைபோலன்றிறே போகதசை. பனிக்கடலையும் விரும்புகைக்கடி, இவரைச் சேர்த்துக் கொள்ளுகைக்கு ✻ யோகநித்திரை சிந்தை செய்கைக்கிறே. (மநக்கடலில் வாழவல்ல) "வாழவல்ல வாசுதேவா." அக்கடலிடமெங்கும் வாழ்ச்சியிறே. கீழிற்பாட்டிலே, "வாழச்செய்தாய்" என்று - ஆழ்வாரை வாழ்வித்து அவ் வாழ்வுகண்டு தான்வாழுகிறபடி. (மாய மணாள நம்பீ) இவர் திரு

(க) தாபத்ரயதப்தர் - புத்ரேஷணவித்தேஷணதாரேஷணங்களாலே தபிக்கப்பட்டவர்கள்.

வுள்ளத்திலே புகுந்தபின்பிறே, குணங்களும், திருமேனியில் செவ்வியும் பூர்த்திபெற்றது.

(தனிக்கடலே) அத்விதீயமான கடலே. *குறைவில்தடங்கடலிறே. பெரியபிராட்டியாருக்குப் பிறந்தகமான விடமிறே. *உலகெல்லாம் நன்கொடுங்க யோகணையுங் கடலிறே. (தனிச்சுடரே) "வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த்தோன்றி" என்று - இவன் திருவவதாரம் பண்ணுகைக்கீடான குலகுருவாகையாலே வந்த அத்விதீயத்வம். (தனியுலகே) "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே" என்று - ஒருநாடாக ஒருமிதுநத்துக்கு சேஷமாகையால் வந்த அத்விதீயத்வம். "நலமந்தமில்லதோர் நாடு." (என்றென்றுனக்கிடமாயிருக்க) இப்படிக்கொத்த திருநாமங்களையுடைய தேசங்கள் உனக்கு இருப்பிடமாயிருக்க. (என்னை) என்னையுமறியாதே உன்னையுமறியாதே யிருந்த வென்னை. "அஸந்நேவ" "ஸந்தமேநம்." (உனக்கு) (க) அவாப்த ஸமஸ்தகாமனை வுனக்கு. (உரித்தாக்கினையே) ஓரிடமில்லாதானைப்போலே, என்நெஞ்சை உனக்கு வாஸஸ்தாநமாகப் பண்ணிக்கொண்டாயே. இவ்வுபகாரத்துக்குத்தோற்று அடிமைப்படுகிறார் (உனக்குரித்தாக்கினையே) என்று.

அ.—பத்தாம்பாட்டு. (தடவரையித்யாதி) கீழ்ப்பாட்டில் - உகந்தருளின நிலங்களோடொக்கத் தம் திருமேனியை விரும்பினானென்றார்; இப்பாட்டில் - அவற்றைவிட்டுத் தம்மையே விரும்பினபடியை யருளிச் செய்கிறார்.

மூ.—தடவரைவாய்மிளிர்ந்துமின்னுந்தவளநெடுங்கொடிப்போல்
சுடரொளியாய்நெஞ்சினுள்ளேதோன்றுமென்சோதிநம்பி
வடதடமும்வைகுந்தமுமதிட்டுவராவதியும்
இடவகைகளிகழ்ந்திட்டென்பாலிடவகைகொண்டனையே.

ப-ரை.—தடம் - பரப்பையுடைத்தான, வரைவாய் - மலையிலே, மிளிர்ந்து - பரகாசமுமாய், மின்னும் - தேஜஸ்ஸாலே விளங்காநிற்பதுமாய், தவளம் - பரிசுத்தமுமான, நெடு - பெரிய, கொடிப்போல் - கொடி எல்லார்க்கும் காணலாயிருக்குமாபோலே, சுடரொளியாய் - நிரவதிகதேஜஸ்ஸாய், என் நெஞ்சினுள்ளே - என் ஹ்ருதயகமலத்திலே, தோன்றும் - தோன்றாநிற்கும், சோதிநம்பீ - தேஜஸ்ஸால் பூர்ணனானவனே, வடதடமும் - வடதிசையிலுள்ள திருப்பாற்கடலும், வைகுந்தமும் - ஸ்ரீவைகுண்டமும், மதிள் - மதிளால் சூழப்பட்ட, துவராவதியும் - ஸ்ரீமத்வாரகையுமாகிற, இடவகைகள் - இப்படிக்கொத்த விடங்களையெல்லாம், இகழ்ந்திட்டு - உபேக்ஷித்து, இடவகை - இவ்விடங்களில் பண்ணும் ஆதரங்களையெல்லாம், என்பால் - என்பக்கலிலே, கொண்டனையே - பண்ணி யருளினையே! என்று ஈடுபடுகிறார்.

---

(க) அவாப்தஸமஸ்தகாமன் - விரும்பினவற்றையெல்லா மடையுமவன்.

வ்யா.—(தடவரைவாய்மிளிர்ந்து மின்னும் தவளநெடுங்கொடிப்போல்) பரப்பையுடைத்தான மலையிலே ப்ரகாசமுமாய், தேஜஸ்ஸாலே விளங்காநிற்பதுமாய், பரிசுத்தமுமான பெரியகொடி எல்லார்க்கும்காணலா யிருக்குமாபோலே, பெரிய பர்வத சிகரத்திலே அதிதவளமாய் மிளிருகிற பெரிய கொடிபோலே. மிளிருகை - திகழுகை. (சுடரொளியாய்) நிரவதிக தேஜஸ்ஸாய். (நெஞ்சினுள்ளே தோன்றும்) ஹ்ருதயகமலத்தினுள்ளே தோன்றாநிற்கும். (சோதிநம்பீ) தேஜஸ்ஸால் பூர்ணனானவனே. சுடர் - திவ்யாத்மஸ்வரூபம். ஒளி - திவ்யமங்கள விக்ரஹம். சோதி - குணங்கள். நம்பி - குறைவற்றிருக்கிறபடி. "என்" என்று - இவையெல்லாம் தமக்கு ப்ரகாசித்தபடி. தம்முடைய திருவுள்ளத்தே திவ்யமங்கள விக்ரஹத்தோடே ப்ரகாசித்தபடி. இவர் திருவுள்ளத்தே புகுந்தபின்பு திருமேனியிலே புகருண்டாய், பூர்த்தியுமுண்டானபடி. "சிக்கெனச்சிறிதோரிடமும்" இத்யாதி. இவர் சரமத்திலே இப்படி அருளிச் செய்கையாலே அநுபவித்த க்ர்ஷ்ணவிஷயம் உள்ளே பூரித்தபடி.

(வடதடமுமித்யாதி) ப்ரஹ்மாதிகளுக்கு முகங்கொடுக்கிற திருப்பாற்கடலும் * ஸதாபஶ்யந்தி * ஸதாவஶ்யந்தி யிற்படியே-நித்யஸூரிகளுக்கு முகங்கொடுக்கிற பரமபதமும், (க) ப்ரணயிகளுக்கு முகங்கொடுக்கிற ஸ்ரீமத்வாரகையும். (இடவகைகளிகழ்ந்திட்டு) இப்படிக்கொத்த விடங்களையெல்லாம், "கல்லுங் கனைகடலும் வைகுந்தவானுடும்புல்" என்கிறபடியே உபேக்ஷித்து. (என்பாலிடவகை கொண்டனையே) இவற்றில் பண்ணும் ஆதரங்களெல்லாவற்றையும் என்பக்கலிலே பண்ணினாயே!. "உனக்குரித்தாக்கினையே" "என்பாலிடவகை கொண்டனையே" என்று இப்படி செய்தாயே என்று அவன்றிருவடிகளிலே விழுந்து கூப்பிட, இவரையெடுத்து மடியிலேவைத்துத் தானும (உ) ஆச்வஸ்தனானபடியைக் கண்டு ப்ரீதராய்த் தலைக்கட்டுகிறார். "அதனில் பெரியவென்னவா"என்று, நம்மாழ்வாருக்கு பகவத் விஷயத்தில் பிறந்த அபிநிவேசமெல்லாம், இப்பெரியாழ்வார் பக்கலிலே ஈச்வரனுக்குப் பிறந்தபடி இத்திருமொழி. (தனிக்கடலே) ஈச்வரனுடைய * முனியே நான்முகன். "வடதடமும்" இத்யாதி. (௧௦)

அ.—நிகமத்தில், (வேயர்தங்கள் குலத்துதித்த)இத்திருமொழியை அதிகரித்தார்க்கு பலம், தம்மைப்போலே அநந்யார்ஹ சேஷபூதராகப் பெறுவர்களென்கிறார்.

---

(க) ப்ரணயிகள் - காமினிகள். (உ) ஆச்வஸ்தன் - ஸமாதாநம்பண்ணப்பெற்றவன்.

மூ.—வேயர்தங்கள்குலத்துதித்தவிட்டுசித்தன்மநத்தே
கோயில்கொண்டகோவலனைக்கொழுங்குளிர்முகில்வண்ணனை
ஆயரேற்றையமரர்கோவையந்தணர்தமமுதத்தினைச்
சாயைபோலப்பாடவல்லார்தாமுமணுக்கர்களே.

ப-ரை.—வேயர்தங்கள் - வேயருடைய, குலத்து - குலத்திலே, உதித்த - திருவவதரித்த, விட்டுசித்தன் - பெரியாழ்வாருடைய, மநத்தே - மநஸ்ஸிலே, கோயில்கொண்ட - கோயிலைக்கொண்ட, கோவலனை - கோவலனாய், கொழு - செவ்விபெற்று, குளிர் - குளிர்ந்திருந்துள்ள, முகில் - மேகம்போன்ற, வண்ணனை - திருநிறத்தையுடையனாய், ஆயர் - இடையரோடே கலந்து பரிமாறுகையாலே, ஏற்றை - ஏறுபோலே செருக்கியிருக்கிறவனாய், அமரர்கோவை - நித்யஸூரிகளுக்குத் தலைவனானவனாய், அந்தணர்தம்-ஸநகாதிகளுக்கு, அமுதத்தினை-நிரதிசயபோக்யபூதனானவனை, பாடவல்லார்தாம் - ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடவல்லவர்கள், சாயைபோல - நிழலைப்போலே, அணுக்கர்கள் - அந்தரங்கராகப் பெறுவர்கள்.

வ்யா.—(வேயர்தங்கள்) உதயகிரியிலே ஆதித்யனுதித்தாற்போலேயாய்த்து இக்குடியிலே இவர் வந்தவதரித்தபடி. அவன் கேவலம் அந்தகாரத்தையிறே போக்குவது; "தனிச்சுடரோ" என்று - அவ்வாதித்யனுமிங்கே யாகையாலே அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கி, ஹ்ருதயகமலத்தை அலர்த்தும் ஆதித்யனாய்த்து இவர். (விட்டுசித்தன் மநத்தே) விஷ்ணுசித்தரென்று திருநாமம். (மநத்தே) ஹ்ருதயத்திலே. விஷ்ணுசித்தர் என்று நிரூபகமாய், அவனைவிடாமை அநுஷ்டாந பர்யந்தமானபடி. (கோயில்கொண்ட கோவலனை) திருப்பல்லாண்டு துடங்கி இவ்வளவும் இவர் திருவுள்ளத்திலே யிருந்திறே க்ர்ஷ்ணன், தான் பிறந்த படியையும் வளர்ந்தபடியையும் இவரைக்கொண்டு கேட்டபடி. வால்மீகிபகவான் பாட குசலவர்களைக் கொண்டு கேட்ட சக்ரவர்த்தித்திருமகனைப் போலன்றே ஸ்ரீநந்தகோபர்திருமகன் கேட்டபடி. "வைகுந்தங் கோயில்கொண்ட குடக்கூத்தன்" என்னுமாபோலே யன்று இவர் திருவுள்ளத்திலே கோயில்கொண்டபடி;—

"திருமாலிருஞ் சோலைமலையே திருப்பாற்கடலே யென்தலையே, திருமால் வைகுந்தமே தண்டிருவேங்கடமே யெனதுடலே" என்றும், "திருக்கடித்தானமு மென்னுடைச் சிந்தையும்" என்கிறபடியே உகந்தருளின நிலங்களோடொக்கவிறே ஆழ்வார் திருவுள்ளத்தை ஆதரித்தது. "நன்கென்னுடலங்கைவிடான்" "நங்கள் குன்றங்கைவிடான்"; ஏதுக்காக?; *நண்ணுவசுரர் (க)நலிகைக்காக. உடலங் கைவிடாதது ஏதுக்காக?; திருவாய்மொழி பாடுகைக்காக.

(க) நலிகை - நாசமடைகை.

அப்படியன்றிக்கே, “இடவகைக ளிகழ்ந்திட்டு” என்கிறபடியே, அவற்றை யுபேக்ஷித்திறே இவர்திருவுள்ளத்தை இடவகையாகக் கொண்டது. க்ர்ஷ்ணன்கோயில் பெரியாழ்வார்திருவுள்ளமாய்த்து. ஆகையாலிறே “மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர்” என்றது. உள்ளிருப்பார் சொல்லும் வார்த்தை உடனிருப்பார்க்குத் தெரியுமிறே.

(கோவலனை) தாழ்ந்த குலத்திலே வந்தவதரித்து அவர்களுக்கு ஸுலபனானாற்போலே யாய்த்து இவர்க்கு ஸுலபனானபடி. (கொழுங்குளிர் முகில்வண்ணனை) இவர் திருவுள்ளத்திலே புகுந்த பின்பாய்த்து - குளிர்ந்து செவ்வியுண்டாய்த் தன் நிறம்பெற்றது திருமேனி. (முகில்வண்ணனை) இவர்க்குப் பண்ணின ஔதார்யமென்னவுமாம். இவரீடுபட்டவடிவழகென்னவுமாம். (ஆயரேற்றை) “இடையரோடே கலந்து பரிமாறப்பெற்றோம்” என்கிற திருவுள்ளத்தில் ப்ரீதியால் வந்த செருக்கோடே யிருக்குமாபோலே யாய்த்து இவர் திருவுள்ளத்திலே புகுரப்பெற்ற ப்ரீதியால் வந்த செருக்கும். “செங்கனிவா யெங்களாயர் தேவே.” (அமரர்கோவை) அநுபவம் மாறில் முடியும்படியான நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியானவனை. “அயர்வறுமமரர்களதிபதி.” (அந்தணர்தமமுதத்தினை) * தெளிவிசும்பிலே நடக்கிற வநுபவம் இவ்விபூதியிலே நடக்கும்படி யிருக்கிற ஸநகாதிகளுக்கு நிரதிசயபோக்யனா யிருக்கிறவனை. “பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளுஞ் சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியர்” என்னக்கடவதிறே. “வேதியர்முழுவேதத்தமுதத்தை.”

(சாயைபோலப்பாடவல்லார் தாமுமணுக்கர்களே) எம்பாரை ச்சிலர், “இப்பதத்துக்குப்பொருளென்?” என்றுகேட்க; “நான் உடையவர்ஸ்ரீபாதத்திலே இது கேட்டிலேன்; ஆகிலும், நீங்கள் கேட்ட வர்த்தம்போராதென்ன வொண்ணாது, இப்போதேகேட்டு உங்களுக்குச் சொல்லவொண்ணாதபடி உடையவரும் திருக்கோட்டியூர்நம்பிஸ்ரீபாதத்தேற வெழுந்தருளினார்; ஆகிலும் உங்களுக்கு இப்போதே சொன்னேனாகவேணும்” என்று உடையவர்திருவடிநிலைகளை யெடுத்துத் தம் திருமுடியிலே வைத்துக்கொண்டு, “இப்போது உடையவர் எனக்கருளிச்செய்தார்; கேட்கலாகாதோ” என்று, “பாடவல்லார் - சாயைபோல - தாமுமணுக்கர்களே” என்றருளிச்செய்தார்.

“தாமும்” என்கைக்கடி-அவர்களேற்றத்தைநினைத்து. அதாவது-ப்ரயோஜநாந்தரங்களையும், உபாயாந்தரங்களையுங் கணிசித்து

மங்களாசாஸநம்பண்ணுகையன்றிக்கே, தத்காலத்துக்கு மங்களா சாஸநம்பண்ணுகையு மன்றிக்கே, கழிந்தகாலத்துக்கும மங்களா சாஸநம் பண்ணுகையிறே ஏற்றம். இப்படிக்கொத்த தண்மை தம் முடைய வம்சத்தில் ஏழுபடிகாலில்லையென்னுமிடத்தை "ஏழாட் காலும் பழிப்பிலோம்" என்றருளிச்செய்தாரிறே. பாடுகையாவது- "உன்செவ்வடிசெவ்விதிருக்காப்பு" என்கை. சாயைபோலவென் றது - புருஷனுடையசாயை அவன்புக்கவிடத்தேபுக்குப், புறப் பட்டவிடத்தேபுறப்பட்டு ப்ரவர்த்தி நிவர்த்தி அவனிட்ட வழக்கா மாபோலே, இத்திருமொழி கற்றார்க்கும் தங்களுக்கென்ன ஒரு ப்ர வர்த்திநிவர்த்திகளின்றிக்கே ஈச்வரனுக்கு அந்தரங்கராகப் பெ றுவர்கள். "செவ்வடிசெவ்விதிருக்காப்பு" என்று பாடவல்லார், * நிழலுமடி தாறுமாகப்பெறுவர்கள். அடிதாறு - திருவடிகளில் ரேகைகள். சாயைபோலப்பாடவல்லார் - நிழலுண்டாகப் பாடவல் லார். நிழலாவது - குளிர்த்தி. "குளிரப்பாடவல்லார்" என்றுஞ் சொல்லுவர்கள். (௧௧)

பெரியாழ்வார்திருவடிகளேசரணம்.

---

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

அடிவரவு.—சென்னிபறவை எம்மனுகடல் பொன்னுன் பருப்பதமநந்தன் பனிதடவரைவேயர்மார்கழி.

---

ஆ திருமொழி ௪௩-இ பாட்டு-௪௬௧
திருப்பல்லாண்டு. பாட்டு-௧௨
ஆ திருமொழி ௪௪ - இ பாட்டு - ௪௭௩.

---

பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யாநம் முற்றிற்று.

